# கடவுளும் சமயமும்

மகாத்மா காந்தி
எழுதியது

தமிழாக்கம் :
ஜெயமணி சுப்பிரமணியம்

# பதிப்புரை

சமயமும் ஆன்மிகமும் காந்தி அவர்களின் உயிர் நாடி. 'நான் உணவில்லாமல் நெடுங்காலம் இருப்பேன்; தண்ணீர் இல்லாமலும் இருக்கலாம். ஆனல், சுவாசம் இன்றி எப்படி ஒருவன் வாழ முடியாதோ, அதுபோல் பிரார்த்தனையும், ஆண்டவனுடைய நினைவுமின்றி என்னல் வாழ முடியாது' என்று அவர் சொல்லியிருக்கிருர். அது மாத்திரமல்ல, அவருக்கு பெரும் கஷ்டங்கள் வந்த போதெல்லாம் ராம நாமம்தான் அவருக்கு சஞ்சீவியாக இருந்திருக்கிறது என்று உரைத்திருக்கிருர்.

ஆனல், சமயம் என்று அவர் கூறுவது வெறும் சடங்குகளை யல்ல. புறச் சின்னங்களும், சாதாரணமாக கோவில்களுக்குப் போவதும் மாத்திரம் சமயம் ஆகா. இவை சமய வாழ்க்கைக்கு உதவியாக இருக்கலாம். ஆனல், அவை மாத்திரம் ஆன்மிகம் ஆகாது. தூய்மையான வாழ்க்கையும், சுயநலமில்லாத சேவையும், ஏழை எளியவர்களுக்கு இரங்கி அவர்களுக்காகவே வாழ்வதும்-இவைதான் உண்மையில் சமயமாகும். இத்தகைய கோட்பாடுகளை உடையவன் கோழையாக இருக்கமாட்டான். தான் மேற்கொண்ட பணியில் அவசியமானல் உயிரை விடவும் அஞ்சமாட்டான். இவைதான் உண்மையான சமயவாதியின் குணங்கள் என்பது காந்தி அடிகளின் கருத்து. அத்தகைய மகா புருஷராக, உலகத்திற்கு எடுத்துக்காட்டாக வாழ்ந்த பெருமை காந்தி அடிகளுடையது.

பொருளையும் பணத்தையும், அதிகாரத்தையும் ஆதிக்கத்தையும் பெரிதென மதிக்கும் இக்காலத்தில், ஆன்மிக வாழ்க்கையைப் பற்றிய காந்தி அடிகளின் எண்ணங்கள் 'கடவுளும் சமயமும்' என்ற தலைப்பில் தொகுக்கப் பெற்று வெளிவருவதை, அனைவரும் வரவேற்பார்கள் என்று நம்புகிருேம்.

சென்னை,
12—4—1963

தி. சு. அவினசிலிங்கம்

# பொருளடக்கம்

பகுதி ஒன்று

## கடவுள்

பகுதி இரண்டு

## நம்பிக்கை, பகுத்தறிவு, ஒழுக்கம்

பகுதி மூன்று

## பிரார்த்தனை, வழிபாடு, அருள்நெறி

பகுதி நான்கு

## ஆன்மிக சக்தியும் தவமும்

பகுதி ஐந்து

## பிறப்பும், இறப்பும், அதற்குப் பிறகும்

பகுதி ஆறு

# அடிப்படையான ஒழுக்கங்கள்

## 1 - பிரதிக்ஞைகள்



## 2 - சத்தியம்



## 3 - அகிம்சை

பகுதி ஏழு

## சொந்த விஷயங்கள்

பகுதி எட்டு

## அரசியலும் சமயமும்



பகுதி ஒன்பது

## சமயங்களின் சமத்துவம்

பகுதி பத்து

## பிற சமயங்களிடம் சகிப்புத்தன்மை



பகுதி பதினொன்று

## மத மாற்றம்

பகுதி பதினைந்து

## புத்த சமயமும் பிரம்ம ஞானமும்



பகுதி பதினாறு

## கிறிஸ்தவ சமயமும் இஸ்லாமும்



பகுதி பதினேழு

## பசுப் பாதுகாப்பு

## பின்சேர்க்கைப் பகுதி

# படங்களின் விளக்கம்

# கடவுளும் சமயமும்

பகுதி ஒன்று

# கடவுள்

[ஆன்மிக வாழ்க்கையில் மாத்திரம் அல்லாமல் ராஜீய வாழ்க்கையிலும்கூட, தெய்வ பக்திக்கும் தெய்வ நம்பிக்கைக்கும் இடம் உண்டு என்பதை உலகம் அறியப் பிரகடனம் செய்த தனிப் பெருமை மகாத்மா காந்தி ஒருவருக்குத்தான் உண்டு. உலகத்தில் உள்ள ஒவ்வொரு மதத்தினரும் ஒவ்வொரு விதமாகக் கடவுளை வழி பட்டு வந்தாலும், சாதி, சமய, மத, வருண பேதமின்றி மனிதனின் உள்ளத்தினுள் உறையும் கடவுள் ஒருவரேதான் என்று அடிக்கடி காந்திஜி வற்புறுத்தி வந்தார். கடவுளின் மற்றொரு பெயர்தான் சத்தியம் என்று காந்திஜி கூறியதுடன், அதைத் தமது சொந்த வாழ்க்கையிலும், நடைமுறையிலும் அனுசரித்ததால்தான் சாதி, மத, பேதம் எதுவுமின்றி இந்தியரை மாத்திரமல்ல, வெளிநாட்டினரையும் கூடத் தமது சகோதரர்களாகக் கருதுவது அவருக்குச் சாத்தியமாயிற்று. கடவுளின் மகிமையைக் குறித்து காந்திஜி பேசியவையும் எழுதியவையும் இதற்கு முந்திய தொகுப்புகளில் ஆங்காங்கு வெளியாகியுள்ளன. அத்தொகுப்புகளில் வெளிவராத பிரசங்கங்கள், கட்டுரைகள், கேள்வி பதில்கள் முதலியனவே இந்தப் பத்தாவது தொகுப்பில் கொடுக்கப்பட்டுள்ளன.]

## 1

## கடவுள் இருக்கிறார்

கடவுளைப் பற்றிய கேள்விகளுக்குப் பதில் அளிக்கும்படி, கடிதம் எழுதுவோர் என்னை அடிக்கடி கேட்கின்றனர். 'எங் இந்தியா'வில் நான் கடவுள் பெயரைக் கூறி செப்படி வித்தை செய்வதாக ஓர் ஆங்கில நண்பர் கூறுகிறார். கடவுளைப்பற்றி அடிக்கடி நான் குறிப்பிடுவதற்காக, அக்கேள்விகளுக்குப் பதில் அளிக்கும் தண்டனைக்கு நான் உட்படவேண்டியவனாக இருக்கின்றேன். அத்தகைய எல்லாக் கேள்விகளையும் பற்றி இப் பத்திரிகையில் நான் பரிசீலனை செய்வது சாத்தியமல்ல. எனினும் கீழ்க் கண்ட கடிதத்திற்கு நான் பதில் அளித்துத் தீரவேண்டியவனாக இருக்கிறேன்:

"12-5-1927 'எங் இந்தியா' பத்திரிகையை (பக்கம் 149) நான் வாசித்தேன். 'இந்த உலகில் நிச்சயமானவைகளை எதிர்பார்ப்பது தவருகும்; சத்தியமாகிய கடவுளைத் தவிர மற்றவை யாவும் நிச்சயமற்றவை என்றே நான் எண்ணுகிறேன்' என்று அதில் நீங்கள் எழுதியிருக்கிறீர்கள்.

"'எங் இந்தியா' (பக்கம் 152): 'கடவுள் நீண்டகாலமாகத் துன்பத்தை அனுபவித்துக் கொண்டும், பொறுமையுடனும் இருந்துவருகிருர். கொடிய குணம் படைத்தவனுக்கு அப்போதைக்கப்போது கடுமையான எச்சரிக்கைகள் மாத்திரம் விடுத்துக்கொண்டு, அவன் தனக்குத்தானே குழி தோண்டிக்கொள்ளட்டும் என்று விட்டுவிடுகிருர்.'

"கடவுள் நிச்சயமான ஒரு பொருள் அல்ல என்று நான் பணிவுடன் கூறுகிறேன். எல்லா இடங்களிலும் உண்மையைப் பரப்புவதே அவரது கடமையாக இருக்கவேண்டும். உலகத்தில் பல்வேறு ரகமான கெட்ட மக்கள் வாழ்வதை அவர் ஏன் அனுமதிக்கின்ருர்? மனச்சாட்சியின்றி கொடுமைகளைச் செய்யும் தீயவர்கள் எங்கு பார்த்தாலும் தழைத்து வருகின்ருர்கள். அவர்கள் தொற்று நோயைப்போல் தங்களுடைய ஒழுக்கக் கேட்டையும் மோசடியையும் வருங்கால மக்களிடையேயும் பரவும்படி செய்கின்ருர்கள்.

" கடவுள் எல்லாம் வல்லவர், எல்லாவற்றையும் அறிந்தவர். எனவே எல்லாவற்றையும் அறியும் கடவுள் அக்கிரமங்கள் எங்கே நடக்கின்றன என்பதை அறிய வேண்டாமா? சர்வ வல்லமை பொருந்திய அவர் தமது அந்த சக்தியால் அக்கிரமங்களை அந்த இடத்திலேயே அப்பொழுதே ஒழித்து, அவற்றை முளையிலேயே கிள்ளி எறிவதுடன், துஷ்டர்கள் வளர்ந்து ஓங்குவதைத் தடுத்துவிட வேண்டாமா?

" கடவுள் நீண்டகாலமாக ஏன் துன்பத்திற்குள்ளாகி வரவேண்டும்? அவர் ஏன் பொறுமையாக இருந்துவரவேண்டும்? அவரே அவ்விதமாயின், அவர் என்ன செல்வாக்கை உபயோகிக்க முடியும்? உலகில் துன்மார்க்கமும், மோசடியும், கொடுமையும் இருந்து கொண்டுதான் வருகின்றன.

"ஒரு கொடியவன் தனக்குத்தானே குழி தோண்டிக்கொள்ள கடவுள் விட்டுவிடுகிருர் எனில், அவனது கொடுமைகளால் ஏழைகள் துன்பத்திற்கு உள்ளாகுமுன் அவனை அவர் ஏன் ஒழித்து விடக்கூடாது? கொடியவனை, அவன் விருப்பப்படி விளையாட அனுமதித்து விட்டு, அவனது கொடுமைகளால் ஆயிரக்கணக்கானவர்கள் ஒழுக்கம் கெட்டும் அழிந்தும் போனபின், அவன் மண்ணோடு மண்ணுகிவிட அவனை ஏன் கடவுள் அனுமதிக்கவேண்டும்?

" உலகம் எப்போதும்போல தீய வழியிலேயே தொடர்ந்து சென்று வருகிறது. தம்முடைய சக்தியால் உலகத்தை மாற்றி நல்லவர்களும் நேர்மையுள்ளவர்களுமான மனிதர்கள் அடங்கிய உலகமாக அதைச் செய்யாத அந்தக் கடவுளிடம் ஏன் நம்பிக்கை வைக்கவேண்டும்?

"தீச் செயல்கள் புரியும் துஷ்டர்கள் நீண்ட காலம் ஆரோக்கியத்துடன் வாழ்வதை நான் அறிவேன். கெட்டவர்கள் தாங்கள் செய்யும் கெட்ட காரியங்களின் விளைவாக ஏன் சீக்கிரமாக இறந்துவிடக்கூடாது?

"கடவுளிடம் நம்பிக்கை வைக்கவே நான் விரும்புகிறேன். ஆனல் எனது நம்பிக்கைக்கு ஆதாரம் இல்லை. அன்புடன் 'எங் இந்தியா' பத்திரிகைகளில் எனக்குத் துலங்கும்படி இவ் விஷயத்தை விளக்கி, எனது நம்பிக்கையின்மையை நம்பிக்கையாக மாற்றுங்கள்."

அநாதிகாலம் தொட்டு இந்த வாதம் கூறப்பட்டு வருகிறது. புதிய முறையில் இதற்கு நான் எவ்வித பதிலும் கூறுவதற்கு இல்லை. எனினும், கடவுளை நான் ஏன் நம்புகிறேன் என்பதைக் குறிப்பிடுகிறேன். அவ்விதம் குறிப்பிட நான் விரும்புவதற்குக் காரணம் என்னவெனில், எனது கருத்துக்களிலும் நடவடிக்கைகளிலும் அக்கறைகொண்ட இளைஞர்கள் இருக்கின்றார்கள் என்பதை நான் அறிவேன்.

எங்கும், எப்பொருளிலும் வியாபித்துள்ள, விவரிக்க முடியாத, அறிவுக்கு எட்டாத ஒரு மர்மமான சக்தி இருக்கிறது. அதை நான் பார்க்கமுடியாவிட்டாலும் அதை நான் உணருகிறேன். கண்ணால் காணமுடியாத இந்த சக்தியை நான் உணருகிறேன்; எனினும் அதை ருஜுப்பிக்க முடிவதில்லை. ஏனெனில், எனது புலன்களின்மூலம் நான் உணர்வதைப் போன்ற ஒரு பொருளாக அது இல்லை. அது புலன்களுக்கு அப்பாற்பட்டதாக இருக்கிறது.

எனினும், கடவுள் இருக்கிறார் என்பதை ஓர் எல்லைக்கு உட்பட்டுப் பரிசீலனை செய்வது சாத்தியமேயாகும். சாதாரண விஷயங்களில் கூட தங்களை யார் ஆட்சி புரிகின்றார், ஏன் ஆட்சி புரிகின்றார், எப்படி ஆட்சி புரிகின்றார், என்பதை மக்கள் அறியார்கள் என்பதை நாம் அறிவோம். இருந்தாலும், தங்களை நிச்சயமாக ஒரு சக்தி ஆளுகிறது என்பதை அவர்கள் அறிவார்கள். நான் சென்ற ஆண்டில் மைசூரில் பிரயாணம் செய்த போது, பல ஏழை கிராம வாசிகளைச் சந்தித்தேன். அவர்களிடம் விசாரித்தபோது, மைசூரை யார் ஆட்சி புரிகிறார்கள் என்பது அவர்களுக்குத் தெரியவில்லை என்பதைக் கண்டேன். யாரோ கடவுள் ஆட்சி புரிவதாக அவர்கள் கூறினார்கள். மைசூர் அதிபதிக்கு அந்த மக்கள் எவ்வளவு குறைந்தவர்களோ, அதைக் காட்டிலும் கடவுளுக்கு நான் எத்தனை எத்தனையோ மடங்கு குறைந்தவன். அப்படியிருக்க, தங்களை ஆட்சி புரிகிறவரைப்பற்றி இந்த ஏழை மக்களின் அறிவு இவ்வளவு குறைவாக இருக்குமாயின், மன்னர்களுக்கெல்லாம் மன்னரான கடவுள் இருப்பதை நான் உணராததைக் குறித்து ஆச்சரியப்படுவதற்கில்லை. எனினும், மைசூரைப்பற்றி அந்த ஏழை கிராமவாசிகள் உணர்ந்ததைப்போல நானும், உலகத்தில் ஒழுங்கு நிலவுகிறது என்பதையும், மாற்ற முடியாத ஒரு நியதி ஒவ்வொன்றையும், உலகில் இருக்கும் ஒவ்வொன்றையும், வாழும் ஒவ்வொன்றையும் அடக்கி ஆளுகிறது என்பதையும் உணருகிறேன். அது ஒரு குருட்டுத்தனமான சட்டம் அல்ல. கண் மூடிச் சட்டம் எதுவும் உயிருள்ளவற்றை அடக்கி ஆளமுடியாது. சர். ஜே. ஸி. போஸின் அற்புதமான ஆராய்ச்சிகளின் பலனாக, ஜடப்பொருளுக்குக்கூட உயிர் இருக்கிறது என்று இப்போது நிரூபிக்க முடியும். எனவே, உயிருள்ள எல்லாவற்றையும் ஆளும் சட்டம்தான் கடவுள். சட்டமும் சட்டத்தை விதிப்பவரும் ஒன்றே. சட்டத்தையோ,

சட்டம் விதிப்பவரையோ மறுக்க முடியாது. ஏனெனில், அதைப் பற்றியோ அல்லது அவரைப் பற்றியோ எனக்கு எதுவுமே தெரியாது. இந்த உலகத்திலுள்ள ஒரு சட்டத்தைப்பற்றிய எனது மறுப்போ அல்லது அறியாமையோ எவ்விதம் எனக்கு யாதொரு பலனையும் அளிக்காதோ அது போலவே, கடவுளையும் அவரது சட்டத்தையும் மறுப்பதால், அது செயல்படுவதிலிருந்து நான் விடுதலை அடைந்துவிட முடியாது. உலகத்தில் உள்ள ஆட்சி அதிகாரத்தை அங்கீகரிப்பதால், எவ்விதம் அதன் கீழ் வாழ்க்கை எளிதாகிறதோ, அது போலவே தெய்விக ஆட்சி முறையைப் பணிவுடனும் மௌனமாகவும் ஏற்றுக்கொள்ளுவதால் வாழ்க்கை யாத்திரை எளிதாக இருக்கும்.

என்னைச் சுற்றிலும் உள்ள ஒவ்வொன்றும் எப்போதும் மாறிக்கொண்டும், எப்போதும் அழிந்துகொண்டும் இருப்பதை நான் தெளிவற்ற முறையில் காண்கின்றேன். எனினும், இவ்வளவு மாறுதலுக்கு இடையேயும், மாறுதலற்ற ஒரு ஜீவ சக்தியையும் நான் தெளிவின்றிக் காண்கின்றேன். இந்த சக்தி எல்லாவற்றையும் ஒன்றாக இணைக்கிறது, சிருஷ்டிக்கிறது, அழிக்கிறது, மறுபடியும் சிருஷ்டிக்கிறது. உயிர்ப்பிக்கும் அந்த சக்தி அல்லது தத்துவமே கடவுள் ஆகும். புலன்களின் மூலம் மாத்திரம் நான் காணும் எதுவும் நிலைக்க முடியாது அல்லது நிலைக்காது. கடவுள் ஒருவர்தான் நித்தியமாக நிலைத்திருப்பவர்.

இந்த சக்தி அருள் சக்தியா? தீய சக்தியா? அது மாசற்ற அருள் சக்தி என்பதை நான் காண்கின்றேன். ஏன் எனில், அந்த அருள் சக்தியின் காரணமாகவே மரணத்தினிடையே உயிர் உறுதியுடன் தொடர்ந்து வருகிறது. பொய்யினிடையே உண்மை உறுதியுடன் நிலைபெற்று வருகிறது; அந்தகாரத்தினிடையே ஒளி உறுதியுடன் திகழ்ந்து வருகிறது. உயிர், உண்மை, ஒளி எல்லாம் கடவுள்தான். அவர்தான் அன்பு மயம். எல்லாவற்றையும் விட மகோன்னதமான நல்லது என்பது கடவுள்தான்.

அறிவுக்கு மாத்திரமே திருப்தி ஏற்படும்படி கடவுள் செய்பவராயின், அவர் கடவுள் அல்ல. கடவுள், கடவுளாக இருக்க வேண்டுமாயின், உள்ளத்தை அவர் ஆட்சி புரிந்து அதை அடியோடு மாற்றக் கூடியவராக இருக்க வேண்டும். அவரது பக்தரின் மிகமிகச் சிறியதான ஒவ்வொரு நடவடிக்கையிலும் கடவுள் தம்மைத் தாமே வெளிப் படுத்திக் கொள்ள வேண்டும். ஐம்புலன்களால் ஏற்படுவதைக் காட்டிலும் அதிக உண்மையான, திடமான உணர்வின் மூலம்தான் அதை அறிந்து கொள்ள முடியும். புலன்களின் உணர்வுகள் நமக்கு எவ்வளவு உண்மையானவையாகத் தோன்றினாலும், போலியாகவும், ஏமாற்றுவனவாகவும் இருக்கக்கூடும்; பெரும்பாலும் அவ்விதமே இருக்கவும் செய்கின்றன. புலன்களுக்கு அப்பாற்பட்ட உணர்வு தவறுவதில்லை என்பது ருஜுவாகியிருக்கின்றது. வெளிப்படையான

சாட்சியத்தின் மூலம் அல்ல, ஆனால் உள்ளத்தில் கடவுள் உண்மையாக இருப்பதை உணர்ந்து கொள்வோரின் நடத்தையிலும் தன்மையிலும் ஏற்படும் மாறுதலின் மூலம் அது ருஜுவாகியிருக்கிறது.

எல்லா நாடுகளிலும், எல்லாப் பிரதேசங்களிலும் இடையறாது வாழையடி வாழையாக அவதரித்துள்ள தீர்க்க தரிசிகள், ஞானிகள் முதலியோரின் அனுபவங்களில் அத்தகைய ருஜுவை நாம் காண்கின்றோம். இந்த சாட்சியத்தை நிராகரிப்பது, நம்மை நாமே மறுத்துக்கொள்வதாகும்.

இவ்விதம் கடவுளை உணருவதற்கு முன், அசைக்கமுடியாத ஒரு நம்பிக்கை இருக்கவேண்டும். கடவுள் இருக்கிறார் என்ற உண்மையை, தம்மிடத்திலேயே சோதனை செய்பவர் ஒரு ஜீவ நம்பிக்கையின் மூலம்தான் அவ்விதம் செய்ய முடியும். வெளிப்புற சாட்சியத்தைக்கொண்டு அந்த நம்பிக்கையை நிரூபிக்க முடியாது. அந்த ருஜுவைக் காண்பதற்கான மிகவும் பத்திரமான வழி என்னவெனில், உலகத்தின் தார்மிக ஆட்சி முறையிலும், ஆதலால், தார்மிக நியதி, சத்தியம், அன்பு ஆகிய நியதிகளின் உயர்விலும் நம்பிக்கை வைப்பதேயாகும். உண்மைக்கும் அன்பு நியதிக்கும் முரணான எல்லாவற்றையும் தயக்கமின்றி உடனடியாக நிராகரிக்கும் தெளிவான உறுதி எங்கே இருக்கிறதோ, அங்கேதான் நம்பிக்கையை அனுசரிப்பது மிகவும் பத்திரமான வழியாகவும் இருக்கும்.

எனினும், மேலே குறிப்பிட்டுள்ள விவரங்கள் கடிதம் எழுதியிருப்பவரின் வாதத்திற்குப் பதிலாகி விடாது. பகுத்தறிவின் மூலம் அவரைத் திருப்தி செய்வதற்கான முறையில் வாதாட என்னால் இயலவில்லை என்பதை ஒப்புக்கொள்கின்றேன். நம்பிக்கை, பகுத்தறிவிற்கு அப்பாற்பட்டது. நான் அவருக்குக் கூறும் புத்திமதி எல்லாம் என்னவெனில், அசாத்தியமானதை அவர் முயற்சிக்க வேண்டாம் என்பதுதான். உலகில் தீமை இருந்துவருவதற்கு நியாயமான காரணம் எதுவும் கூற என்னால் முடியவில்லை. அதற்குக் காரணம் கூற விரும்புவது கடவுளுடன் சமத்துவம் கொண்டாடுவதாகும். எனவே, காரணம் கூற முடியாத விதத்தில் தீமை இருந்து வருகிறது என்பதை உணர்ந்து கொள்ளும் பணிவு எனக்கு உண்டு. அவர் உலகில் தீமையை அனுமதிப்பதினாலேயே, கடவுள் நெடுங்காலமாக வேதனையுடனும் பொறுமையுடனும் இருந்து வருகிறார் என்று நான் கூறுகின்றேன்.

அவரிடத்தில் தீமை என்பதே இல்லை. எனினும் உலகில் தீமை இருக்குமாயின், இதற்குக் காரண கர்த்தா அவர்தான். இருந்தாலும், அந்தத் தீமை அவரை அணுகுவதில்லை. தீமையுடனும், உயிர் போவதாக இருந்தாலும் கூட தீமையை எதிர்த்தும் நான் போராடவில்லையெனில், நான் ஒரு காலத்திலும் கடவுளை

அறிய முடியாது என்பதையும் நான் அறிவேன். எனது பணிவான, சொற்பமான அனுபவமானது என்னிடம் அத்தகைய நம்பிக்கையை உறுதிப்படுத்தி வந்திருக்கிறது. நான் அதிகத் தூய்மையுள்ளவனாவதற்கு முயற்சிக்கும் அளவுக்கு நான் கடவுளுக்கு மிக அருகில் இருப்பவனாக உணருகிறேன். எனது நம்பிக்கை இன்று வெறும் பெயரளவில்தான் இருந்து வருகிறது. ஆனால், இந்த நம்பிக்கை இமய மலையைப்போல் அசைக்க முடியாததாகவும், அதன் சிகரங்களில் உள்ள பனிப் பாறைகளைப் போல் வெண்மையாகவும் பிரகாசமாகவும் இருக்குமாயின், கடவுளுக்கு இன்னும் எவ்வளவு சமீபத்தில் நான் இருப்பேன்! இதன் மத்தியில் அனுபவத்தின் பலனைகப் பாடிய நியூமென்னுடன் சேர்ந்து *பிரார்த்தனை செய்யும்படி கடிதம் எழுதிய அந்த நண்பரையும் அழைக்கின்றேன்.

அழைத்துச் செல்லாய் அருட்பே ரொளியே
சூழ்ந்திடும் இருளிடை அழைத்தெனைச் செல்லாய்;
இருள்மயமாகக் கிடக்கிற இரவு
எங்கோ தொலைவில் கிடக்கிற இல்லம்,
என்றனை அழைத்துச் செல்லாய் நீயே;
என்னுடைக் கால்கள் உன்னடைக்கலமாம்,
எங்கோ தொலைவில் இருக்குங் காட்சியை
எதிரே காட்டென யான் கேட்கில்லேன்
எடுத்தோரடி நான் வைத்தால் போதுமே.

'எங் இந்தியா' - 11—10—1928

# 2

# தெய்விகச் சட்டம்

'எங் இந்தியா'வில் 'கடவுள் இருக்கிறார்' என்ற தலைப்பில் வெளியாகிய கட்டுரையைப் படித்த ஒரு வாசகர், எமர்சன்† எழுதிய கீழ்வரும் அற்புதமான மேற்கோள்களை எடுத்து அனுப்பியுள்ளார்:

---

* கார்டினல் ஜான் ஹென்றி நியூமென் (1801—90) பிரிட்டனில் பிறந்து வாழ்ந்த ஒரு மதப் பெரியார். பெரும்பாலும் துறவியாக வாழ்ந்த அவர் பல கிறிஸ்தவ மத நூல்களை எழுதிப் புகழ்பெற்றார். அவர் பல அற்புதமான பிரார்த்தனைப் பாடல்களை இயற்றினார். 'Lead, Kindly Light' என்ற புகழ்பெற்ற அவரது பாடலையே காந்திஜி மேலே குறிப்பிட்டுள்ளார். இப் பாடல் காந்திஜிக்கு அதிகப் பிடித்தமான பாடல்.

† மேலே குறிப்பிட்டுள்ள ஆர். டபிள்யூ எமர்சன் (1803-1882) உலகப் புகழ்பெற்ற அமெரிக்க தத்துவ, இலக்கிய மேதாவியாவார். அவர் எழுதிய அரிய நூல்களும், வியாசங்களும் இன்னும்கூட சிறந்த இலக்கியப் பொக்கிஷங்களாகவும் ஒழுக்க விதிகளாகவும் திகழ்கின்றன.

"ஒவ்வொரு நாளும் நம்மைச் சுற்றி என்ன நிகழ்கின்றன என்பதைச் சிறிது ஆலோசித்தோமாயின், சில உண்மைகளைத் தெரிந்துகொள்ளுவோம்: நமது விருப்பத்தைக் காட்டிலும் உயர்ந்த தெய்விக நியதியே சம்பவங்களை இயக்குகின்றது; வேதனையைக் கொடுக்கும் நமது முயற்சிகள் அனாவசியமானவை, பலனற்றவை; நம்முடைய எளிதான, கள்ளங் கபடமற்ற மனப்பூர்வமான நடவடிக்கையினால் மாத்திரமே நாம் பலம் அடைகின்றோம்; தெய்விக நியதிக்கு கீழ்ப்படிந்து நடப்பதுடன் நாம் திருப்தியடைவதால் நாம் தெய்விகத் தன்மையை அடைகிறோம் என்பதையெல்லாம் நாம் தெரிந்து கொள்ளுவோம். நம்பிக்கையும் அன்பும்-நம்பும் அன்பு-கவலையாகிய ஒரு பெரும் சுமையிலிருந்து நம்மை விடுவிக்கிறது. ஓ, என் சகோதரர்களே! கடவுள் இருக்கின்றார்; இயற்கையின் மையத்தில் ஒவ்வொரு மனிதனின் விருப்பத்திற்கு மேலே, ஆன்மா ஒன்று இருக்கிறது. எனவே, நம்மில் ஒருவரும் உலகத்திற்குத் தவறு இழைக்கமுடியாது.

"நாமே கஷ்டமாக்கிக் கொண்டுள்ள நமது வாழ்க்கை, எளிதானதாகவும் எளிமையாகவும் இருக்கமுடியும்; உலகம் இப்போது இருப்பதைக்காட்டிலும் இன்னும் அதிக ஆனந்தமான இடமாக இருக்கமுடியும்; போராட்டங்களுக்கும், கொந்தளிப்புகளுக்கும், ஏக்கங்களுக்கும் இடம் ஏற்பட வேண்டிய அவசியமே இல்லை; மனக்கலக்கம் கொண்டு கைகளைப் பிசைய வேண்டாம்; ஆத்திரம் காரணமாகப் பற்களை கடிக்கவேண்டாம்; தீங்குகளை நமக்கு நாமே விபரீதமாகச் சிருஷ்டித்துக்கொள்ளுகின்றோம்; இந்தப் படிப்பினை நமக்கு நிர்ப்பந்தமாகக் கற்பிக்கப்பட்டிருக்கிறது. எல்லாம் நன்மைக்கே என்ற இயற்கையின் நம்பிக்கையில் நாம் குறுக்கிடுகிறோம்."

நம்மிடம் சிறிதளவு நம்பிக்கை இருக்குமாயின், நம்மைச் சுற்றி எங்கும் கடவுளையும் அவரது கருணையையுமே நாம் காண்போம்.

—'எங் இந்தியா' - 15—11—1928

# 3

# கடவுளைப்பற்றிய விளக்கங்கள்

"'கடவுளும் காங்கிரசும்' என்ற உங்களுடைய கட்டுரை சம்பந்தமாக நான் கீழ்க்கண்ட விவரங்களைக் கூறவிரும்புகிறேன். சார்வாக மதக்* கொள்கை முற்றிலும் லோகாயதமானது. பௌத்த மதமோ கடவுள் விஷயத்தில் மௌனம் சாதிக்கின்றது. ஈசுவரனோ அல்லது கடவுளுக்குச் சமமான இயற்கைக்கு மேலான ஒரு சக்தியோ இருப்பதை ஜைன மதம் சந்தேகிக்கிறது. எனினும், அந்த இரு மதங்களுக்கும் இந்து மதத்தைப்போல், ஆன்மாவிற்கு அழிவில்லை. உடல் அழிந்தபின் அது மற்றோர் உடலுக்குள் பிரவேசிக்கிறது என்பதிலும், கர்ம வினை என்ற இயற்கை விதியிலும் நம்பிக்கை உண்டு. (நான் குறிப்பிட்டுள்ள உங்கள் நண்பர் பேராசிரியர் தர்மானந்த கொசாம்பியையும் தாங்கள் இவ்விஷயமாகக் கலந்து கொள்ளலாம்) இந்த இரு மதங்களின் சடங்குகளில்

* சார்வாக மதம் ஆதி சங்கராச்சாரியாரின் காலத்திற்கு முன்புகூட இருந்தது. உடலைப் பேணுவதும் கண்டதே காட்சி கொண்டதே கோலம் என்றிருப்பதுமே சார்வாக மதத்தின் கொள்கை. ஆன்மா உண்டு என்பதை இந்த மதத்தினர் ஒப்புக்கொள்வதில்லை.

கர்மாவுடன் புத்தரும், கர்மாவுடன் ஜைனருமே கடவுளின் ஸ்தானத்தில் இருப்பதாகக் கூறலாம்.

"மத சம்பந்தமான நவீன இயக்கங்களுள் பஞ்சாப் தேவ சமாஜமும் ஒன்று. அது, பெரிதும் ஜீவகாருண்யத்தையும் சமூகத் தொண்டையும் அடிப்படையாகக்கொண்ட ஒரு ஸ்தாபனமாகும். அகிம்சைக் கொள்கையையும் அது உயர்வாக மதிக்கின்றது. ஆனால், அதன் கொள்கை லோகாயதமானது அல்ல, வெளிப்படையான நாத்திகமேயாகும். அதற்குக் கடவுளிடத்திலோ, தெய்வங்களிடத்திலோ நம்பிக்கை இல்லை என நான் வாசித்திருக்கிறேன். அப்படியிருந்தும், அதற்கு தேவ சமாஜம் என்ற பெயர் வழங்கிவருவது மனத்திற்குப் புலப்படாத ஒரு விசித்திரமாக இருக்கிறது.

"கடவுளை மறுக்கும் * பிராட்லாவைப்பற்றி தாங்கள் குறிப்பிடும் போது அவருக்குத் தெரிந்த வகையில் உள்ள கடவுளை அவர் மறுப்பதாகக் கூறுகிறீர்கள். நாம் எல்லோரும் கடவுளைப்பற்றிக் கூறும் விளக்கங்கள் வெவ்வேறு விதமாக இருப்பினும், அவ்விளக்கங்களுக்கு அடிப்படையில் தவறாத ஏதோ ஒரே விதமான கருத்து இருப்பதாக நீங்கள் கூறுகின்றீர்கள். கடவுளை பிராட்லா மறுப்பதிலும் இந்தக் கருத்து அடங்கி இருக்கிறதா? பிராட்லா அறிஞர்; இவ் விஷயங்களை ஊன்றிக் கவனிக்கும் சக்தியும் அவருக்குப் போதிய அளவு உண்டு. அப்படியிருக்க, அவர் கடவுள் இருப்பதை மறுக்கும்படி செய்வது எது?

"இச் சந்தர்ப்பத்தில், புத்த மதத்தைப்பற்றி 'சேம்பர்ஸ் என்சைக்ளோபீடியா'வில் உள்ள கீழ்க்கண்ட பகுதியை நீங்கள் அக்கறையுடன் கவனிப்பீர்கள் என்பதில் சந்தேகமே இல்லை: 'உலகத்தைச் சிருஷ்டிக்கும் அல்லது எந்த விதத்திலும் ஆட்சிபுரியும் ஒரு கடவுள் இருக்கிறார் என்ற கொள்கைக்கு பௌத்த மதத்தில் அணுவளவும் இடம் இல்லாமல் இருக்கிறது. கடவுள் அதில் மறுக்கப்படவில்லை; அம் மதத்தினருக்குக் கடவுளைத் தெரியாது. நாத்திகர்கள் அடங்கிய ஒரு தேசம் ஒரு காலத்திலும் இருந்ததில்லை என்று பொதுவாகவும், நம்பிக்கையுடனும் ஒரு சமயத்தில் கருதப்பட்டு வந்தது. ஆனால் அதற்கு மாறாக, பல பௌத்த மத நாடுகளும் முக்கியமாக நாத்திகக் கொள்கையுள்ளவையே என்பதை இனி யாரும் மறுப்பதற்கில்லை. தருமத்தினாலும், தவத்தினாலும், விஞ்ஞானத்தினாலும் ஒரு மனிதன் எவ்வளவு உயர்வை அடைய முடியுமோ அதைக்காட்டிலும் அதிகமான, அமானுஷ்யமான சக்தியுள்ள யாரையும் பௌத்த மத நாட்டினர் அறியார்கள். திடுக்கிடத்தக்க இந்த உண்மையை ஆச்சரியகரமான ஒரு விஷயத்திலிருந்து தெரிந்துகொள்ளலாம். அதாவது பௌத்த மத நாடுகள் சில

* பிராட்லா (1833—1891) என்ற பிரிட்டிஷ் பிரமுகர் ஒரு நாத்திகவாதி. எனினும், சமூகச் சீர்திருத்தங்களில் ஆர்வம் காட்டிவந்தார். பெண்கள் வாக்குரிமை, குடும்பக் கட்டுப்பாடு, தொழிலாளர் உரிமை முதலிய சீர்திருத்தங்களை அமலுக்குக் கொண்டுவருவதற்காக பாடுபட்டார். இவர் சோஷலிஸத்தை எதிர்த்ததால் இவரிடமிருந்து பெஸண்ட் அம்மையார் பிரிய நேர்ந்தது. ஒரு சமயம் பிராட்லா பிரிட்டிஷ் பார்லிமெண்டு அங்கத்தினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். ஒவ்வொரு பார்லிமெண்டு அங்கத்தினரும், "பைபிள் சாட்சியாக உண்மையாகத் தொண்டு செய்கின்றேன்" என்று பிரமாணம் எடுத்துக்கொண்ட பின்பே சபையில் அமரும் சம்பிரதாயம் இருந்து வருகிறது. ஆனால் பிராட்லா அவ்விதம் பிரமாணம் எடுத்துக்கொள்ள மறுத்து வழக்குத் தொடர்ந்தார். அதில் அவர் வெற்றி பெற்றதால், பார்லிமெண்டில் பைபிள் நூலை வைத்துக்கொண்டு பிரமாணம் செய்யாமலே அவர் அங்கத்தினராக இருந்தார்.

வற்றில், உதாரணமாக, சீனர்கள், மங்கோலியர்கள், திபேத் மக்கள் முதலியோருடைய பாஷையில் கடவுளைக் குறிக்கும் ஒரு சொல்கூட இல்லை! எனவே, பௌத்த மதத்தினரின் எதிர்கால விதி உலகத்தை ஆட்சிபுரியும் அதிபதியால் நிர்ணயிக்கப்படுவதில்லை; அவரது நடவடிக்கைகளின் 'கர்மா'வே அதை நிர்ணயிக்கிறது; இயற்கையின் ஒரு விதமான இயல்பால், பகுத்தறிவற்ற, தன்னிச்சையான காரண காரியங்களின் தொடர்பால் அது நிர்ணயிக்கப்படுகிறது.'

"கீழ்க் கண்ட சுலோகத்துடன் இந்தக் கடிதத்தை நான் முடிக்கிறேன்:

நமஸ்யாமோ தேவான் நனு ஹதவிதேஸ்தேபி வசகா :
விதேர்வந்த்ய: ஸோபி ப்ரதிநியத கர்மைக பலத:
பலம் கர்மாயத்தம் கிமமரகணை: கிம்ச விதினா
நமஸ்தத் கர்மப்யோ விதிரபி நயேப்ய: ப்ரபவதி

—பர்த்ருஹரி, நீதி சதகம்

"தெய்வங்களையும் தேவதைகளையும்
சேவடி தொழுது பூஜிக்கின்றோம்;
ஆனால் விதியின் அல்லல்களுக்கு
அவரும் தப்பார் என்றறி கின்றோம்;
அப்படியானால் பூசனையெல்லாம்
செப்பிடு மந்த விதிக்கே தானோ?
உண்மை உண்மை நம் வினைக்கேற்ற
பயனே அவனும் நல்கிடுகின்றான்.
நாம் செயும் செயலைப் பொறுத்தே நிற்கும்
நம்மை யுலகில் நாடும் பயனும்;
எனவே,
தெய்வம் தேவதை ஊழ் விதியெல்லாம்
சிந்தனைக் குதவாச் சில்லறை விஷயம்!
சிறிதோ பெரிதோ செய்வினை போற்றுக
விதியும் அதனை மாற்ற ஒண்ணாதே!

"–இது' பர்த்ருஹரி இயற்றிய நீதி சதகத்தில் உள்ள மேற்கண்ட சுலோகத்தின் பொதுவான எனது சொந்த மொழி பெயர்ப்பேயாகும்.

கார்வார் (வட கானரா) தங்கள்
மார்ச் 10, 1925 எஸ். டி. நட்கார்னி"

ஸ்ரீ நட்கார்னியின் சாமர்த்தியமான கடிதத்திற்கு இடம் கொடுக்க நான் மறுக்க முடியாது. எனினும், ஜைன மதமோ அல்லது பௌத்த மதமோ நாத்திக மதங்கள் அல்ல என்ற எனது அபிப்பிராயத்தில் நான் உறுதியுடன் இருக்கின்றேன். கடவுளைப் பற்றிய கீழ்க்கண்ட விளக்கங்களை நான் ஸ்ரீ நட்கார்னிக்கு எடுத்துக்கூறுகிறேன். கர்மாவின் மொத்த சாரமே கடவுள் ஆகும். நேர்மையானதைச் செய்யும்படி மனிதனை வற்புறுத்து

வது கடவுளே. உயிர் வாழும் அனைத்தின் நிறைவே கடவுள். விதியின் கைப்பொம்மையாக மனிதனை ஆட்டி வைப்பதும் கடவுள் தான். தமக்கு ஏற்பட்ட சோதனைகளையெல்லாம் தாங்கும் சக்தியை பிராட்லாவுக்கு அளித்தது கடவுளே. நாத்திக வாதிக்கு மறுப்பாக இருப்பதும் கடவுளேதான்.

'எங் இந்தியா' — 30—4—1925

# 4

# கடவுள் என்றால் என்ன ?

(லண்டனில் நடந்த வட்டமேஜை மகாநாட்டிற்காக காந்திஜி அங்கே சென்றிருந்தபோது, அவர் மற்ற ஐரோப்பிய நாடுகளுக்கும் விஜயம் செய்தார். அப்போது ஸ்விட்ஜர்லாந்தைச் சேர்ந்த வில்லனூவ் என்ற இடத்தில் யுத்த ஆட்சேபணைவாதிகளின் கூட்டம் ஒன்று நடந்தது. மனச்சாட்சி இடம் கொடுக்காததால் ராணுவத்தில் சேர ஆட்சேபிப்பவர்கள் அடங்கிய அக்கூட்டத்தில் காந்திஜி பேசிய விவரங்களைக் குறித்து ஸ்ரீ மகாதேவ தேசாய் 'எங் இந்தியா' வில் எழுதியவையே கீழே கொடுக்கப்பட்டுள்ளன.)

மனச்சாட்சி இடம் கொடுக்காததால் ராணுவத்தில் சேர ஆட்சேபிப்பவர்கள் கூட்டம் ஒன்று ஒரு கிறிஸ்தவாலயத்தில் நடந்தது. அங்கே செரஸோலும்* அவரது நண்பர்களும் காந்திஜியை வரவேற்பதற்காக அற்புதமான ஏற்பாடுகளைச் செய்திருந்தனர். அவர்கள் யாவரும் நின்றுகொண்டும் கைகோர்த்துக் கொண்டும் ஸ்விஸ் நட்பு கீதத்தைக் கோஷ்டியாகப் பாடினர். சபைத் தலைவர் அப்போது மனத்தை உருக்கும் ஓர் உபசாரப் பத்திரத்தை வாசித்துக் கொடுத்தார். அதில் குறிப்பிட்டிருந்ததாவது: 'யாரும் அறியாத சக்தி, சிறை, பொறுப்பு, மரணம் முதலியவற்றைக் கண்டு நாங்கள் அஞ்சுகிறோம். ஆனால் பயம் என்றால் என்ன என்பது உங்களுக்குத் தெரியாது. ஏசு நாதரின் மலை உபதேசத்தை நாங்கள் வாயளவில் கூறுகிறோம்: நீங்களோ, அதை உங்கள் உள்ளத்தில் பதியவைத்து அதன் படி வாழ்ந்தும் வருகிறீர்கள். எங்களிடையே உங்களை வரவேற்கின்றோம். அதிக பக்தியுடன் வாழ்க்கை நடத்தும் விதத்தை எங்களுக்கு உபதேசம் செய்யுங்கள்.'

இவ்விதமாகப் பல விஷயங்கள் உபசாரப் பத்திரத்தில் அடங்கியிருந்தன. கடவுள், உண்மை, எதிர்க்காமை முதலிய

*ஸ்விட்ஜர்லாந்தில் பிறந்த பியரி செரஸோல் அந்த நாட்டில் புகழ்பெற்ற இஞ்ஜினீரும் கணிதமேதாவியும் ஆவார். சர்வதேச அமைதியைக் குறிக்கோளாகக் கொண்டு தொண்டுபுரியும் சங்கத்தையும் சர்வதேச மக்கள் ஊழியர் சங்கத்தையும் ஸ்தாபித்தவர் அவர்தான்.

பல விஷயங்களைப்பற்றியும் கேள்விகள் கேட்கப்பட்டன. காந்திஜி கூறியதை ஸ்விஸ் மொழியில் எடுத்துக்கூறிய ஸ்ரீ பிரிவட்டினால் ஒரு கட்டத்தில் மொழிபெயர்க்க முடியாமல் போய்விட்டது. பின்னர் ஸ்விஸ் தத்துவ ஞானியான பேராசிரியர் பொவெட் அவரது ஸ்தானத்தில் மொழிபெயர்க்கத் தொடங்கினர். அப்போது கேட்கப்பட்ட ஒரு கேள்வியையும் பதிலையும் இக் கடிதத்தில் குறிப்பிடுகிறேன்.

**கேள்வி :** *சத்தியத்தை நீங்கள் ஏன் கடவுள் என்று கருதுகிறீர்கள் ?*

**பதில் :** ஹிந்து மத நூல்களில் கடவுளுக்கு ஓராயிரம் பெயர்கள் இருக்கின்றன. அந்தப் பெயர்களைத் திருப்பித் திருப்பிக் கூறும்படி சிறு வயதில் எனக்குக் கற்பித்தார்கள். கடவுளின் இந்த ஓராயிரம் பெயர்கள் முடிவானவை அல்ல. அவருக்கு இன்னும் எத்தனையோ பெயர்கள் இருக்கின்றன. உலகில் எத்தனை ஜீவஜந்துக்கள் இருக்கின்றனவோ, அத்தனை பெயர்கள் கடவுளுக்கு இருக்கின்றன. அதனால்தான், கடவுளைப் பெயரில்லாதவர் என்றும் கூறுகிறோம்; கடவுளுக்குப் பல உருவங்கள் இருப்பதால் அவர் உருவம் அற்றவர் என்றும் கருதுகிறோம்; அவர் பல மொழிகளில் நம்முடன் பேசுவதால், அவர் பேச்சில்லாத மௌனி என்றும், இப்படியே அவரைப் பல விதமாகவும் கருதுகிறோம்.

நான் இஸ்லாமை ஆராய்ச்சி செய்ய முற்பட்டபோது, இஸ்லாமிலும் கடவுளுக்குப் பல பெயர்கள் இருப்பதைக் கண்டேன். கடவுள்தான் அன்பு என்று கூறுகின்றவர்களிடம் கடவுள் அன்புதான் என்று நான் கூறுவேன். கடவுள் அன்பாக இருக்கலாம் எனினும், எல்லாவற்றையும் விட முக்கியமாக, கடவுள் சத்தியமே என்று என் உள்ளத்தின் ஆழத்தில் நான் கூறிக்கொள்வது வழக்கம். மனித பாஷையில் கடவுளைப் பூரணமாக வருணிப்பது சாத்தியமெனில், என் சம்பந்தப்பட்டவரையில், சத்தியமே கடவுள் என்ற முடிவிற்கே நான் வந்திருக்கிறேன். ஆனால், இரண்டு ஆண்டுகளுக்கு முன் நான் இன்னும் ஓர் அடி மேலே சென்று உண்மைதான் கடவுள் என்று கூறினேன். கடவுள்தான் உண்மை என்பதற்கும், உண்மைதான் கடவுள் என்பதற்கும் உள்ள நுண்ணிய வேற்றுமையை நீங்கள் காண்பீர்கள். உண்மையை நாடி எனது சோதனை சற்றேறக்குறைய ஐம்பது ஆண்டுகளுக்குமுன் ஆரம்பமாயிற்று. இடைவிடாமலும், சோர்வின்றியும் இத்தனை ஆண்டுகள் வரையில் சோதனை செய்ததன் பலனாகவே, நான் அத்தகைய முடிவிற்கு வந்துள்ளேன். எனினும் அன்பின் மூலமே சத்தியத்தை விரைவில் அடைய முடியும் என்பதையும் நான் கண்டேன். ஆங்கில மொழியில் அன்பு என்ற சொல்

லுக்குப் பல பொருள்கள் இருக்கின்றன என்பதையும் நான் கண்டேன். அச்சொல் காம இச்சையைக் குறிக்கும்போது, அது இழிவான விஷயமாகிவிடுகிறது.

உலகில் அகிம்சையாகிய அன்பைக் கடைப்பிடிப்பவர்களும் இருக்கிறார்கள். ஆனால், உண்மை சம்பந்தப்பட்ட வரையில் ஒருபோதும் இரண்டு விதமான அர்த்தத்திற்கு இடம் ஏற்பட்டதில்லை. உண்மையின் அவசியத்தையோ அல்லது சக்தியையோ நாத்திகவாதிகள்கூட சந்தேகிப்பதில்லை. ஆனால், உண்மையைக் கண்டுபிடிக்கவேண்டும் என்ற ஆர்வத்தில் நாத்திகவாதிகள், கடவுள் இருப்பதையே மறுக்கத் தயங்கியதுமில்லை. அதனாலேயே கடவுள்தான் உண்மை என்பதைக் காட்டிலும், உண்மைதான் கடவுள் என்று நான் கூறுவதே சரி என்று எண்ணினேன். சார்லஸ் பிராட்லா, தம்மை ஒரு நாத்திகவாதி என்று கூறிக் கொள்ளுவதில் ஆனந்தம் கொண்டார். எனினும், அவரைப் பற்றி எனக்குச் சிறிதளவு தெரியும். எனவே, அவரை ஒரு நாத்திகவாதியாக நான் எக்காலத்திலும் கருதமாட்டேன். அவர் கடவுளுக்குப் பயந்தவர் என்றும் நான் கூறுவேன். எனினும், இந்தக் கூற்றை அவர் நிராகரித்து விடுவார் என்பதை நான் அறிவேன். "பிராட்லா அவர்களே, நீங்கள் உண்மைக்குப் பயப்படுகின்றவரேயன்றி கடவுளுக்குப் பயப்படுகின்றவர் அல்ல" என்று நான் கூறினால் அவரது முகம் சிவந்து விடும். எனினும், உண்மைதான் கடவுள் என்று பல இளைஞர்களைச் சமாதானப்படுத்தியிருப்பது போல் அவரையும் சமாதானப்படுத்திவிடுவேன்.

லட்சக்கணக்கானவர்கள், சொல்ல முடியாத கொடுமைகளைக் கடவுளின் பெயரால் செய்திருக்கின்றார்கள். உண்மையின் பெயரால், விஞ்ஞானிகளும் அடிக்கடி கொடுமைகளைச் செய்து வருகின்றார்கள். உண்மையின் பெயராலும் விஞ்ஞானத்தின் பெயராலும் மனிதர்கள் மிருகங்களை அறுத்துச் சோதனை செய்யும்போது, மிருகங்களுக்கு மனிதத்தன்மையற்ற கொடுமைகள் இழைக்கப்படுகின்றன. நீங்கள் கடவுளை எப்படி வருணித்தாலும், கடவுளை அறிவதில் பல கஷ்டங்கள் இருக்கின்றன. எனினும், மனிதரின் மனம் ஒரு எல்லைக்குட்பட்டது. மனித சக்திக்கு அப்பாற்பட்ட ஒரு விஷயத்தை அறிந்துகொள்ள நீங்கள் பல கட்டுப்பாடுகளுக்கு உட்பட வேண்டியிருக்கிறது. ஹிந்து மத தத்துவத்தில் மற்றொரு விஷயமும் இருக்கிறது. கடவுள் மாத்திரமே இருக்கிறார், மற்றெதுவும் இல்லை என்பதே அந்தத் தத்துவம் ஆகும். அதே உண்மை இஸ்லாமின் கல்மாவிலும் வற்புறுத்தப்பட்டிருக்கிறது. கடவுள் இருக்கிறார், வேறு எதுவும் இல்லை என்பது கல்மாவில் தெளிவாகக் கூறப்பட்டிருப்பதை நீங்கள் காணலாம்.

உண்மை என்பதற்குச் சமஸ்கிருதச் சொல் 'ஸத்' என்பதே. அதற்கு 'இருக்கிறது' என்பதே பொருளாகும். இவை போன்ற பல காரணங்களைக் கொண்டே, சத்தியமே கடவுள் என்ற முடிவிற்கு நான் வந்திருக்கிறேன். அந்த முடிவுதான் எனக்கு மகத்தான ஆனந்தத்தைக் கொடுக்கிறது. நீங்கள் சத்தியத்தைக் கடவுளாகக் காண்பதற்கு விரும்பும்போதுதான், நீங்கள் தவிர்க்கமுடியாத அன்பு வழியை அதாவது அகிம்சையைப் பின்பற்றவேண்டியிருக்கிறது. லட்சியமும், அதை அடையும் மார்க்கமும் இறுதியில் ஒன்றேயாதலால், கடவுள்தான் அன்பு என்று கூற நான் தயங்கமாட்டேன்.

கே: அப்படியாயின் சத்தியம் என்பது என்ன?

ப: இது ஒரு கஷ்டமான கேள்வி. எனினும், உங்கள் இதயத்தின் குரல் என்ன கூறுகிறதோ, அதுதான் சத்தியம் என்று எனக்கு நானே தீர்மானித்துக் கொண்டுள்ளேன். அப்படியானால் பல்வேறு ஜனங்களும் வெவ்வேறான, முரணான உண்மைகளைப் பற்றி எப்படி நினைக்கின்றார்கள் என்று நீங்கள் கேட்பீர்கள். மனிதர் உள்ளம் எண்ணிக்கையற்ற வழிகளில் இயங்குகின்றது. உள்ளத்தின் மலர்ச்சியும் அபிவிருத்தியும் எல்லோருக்கும் ஒரேவிதமாக இருப்பதில்லை. இந்த நிலையில், ஒருவருக்கு உண்மையாகத் தோன்றுவது, மற்றொருவருக்கு உண்மையல்லாததாக இருக்கலாம். எனவே, இத்தகைய பரிசோதனைகளைச் செய்தவர்கள் ஒரு முடிவிற்கு வந்திருக்கிறார்கள். அதாவது, இந்தப் பரிசோதனைகளைச் செய்வோர், சில நிபந்தனைகளை அனுசரிக்கவேண்டும் என்பதேயாகும். விஞ்ஞான பரிசோதனைகளைச் செய்வதற்கு விஞ்ஞான முறையில் போதனை அத்தியாவசியமாக இருப்பது போலவே, ஆன்மிகத் துறையிலும் பரிசோதனைகளைச் செய்வதற்குத் தகுதி பெற விரும்பும் ஒருவருக்கு, கண்டிப்பான பூர்வாங்க ஒழுக்கம் அவசியமாகும். எனவே, ஒவ்வொருவரும் தமது அந்தராத்மாவின் குரலைப் பற்றிப் பேசுமுன், தமது எல்லைகளை உணர்ந்து கொள்ளவேண்டும். கடவுளாகிய சத்தியத்தை ஆராய்ச்சி செய்வோர் பல விரதங்களை அனுசரிக்கவேண்டும். உதாரணமாக, உண்மையையே கூறுவது என்ற விரதம், அகிம்சை விரதம், ஏழ்மை விரதம், உடைமைகளை வைத்துக்கொள்ளுவதில்லை என்ற விரதம் முதலியவற்றை அனுசரிக்கவேண்டும். இவற்றுடன் பிரம்மச்சரிய (தூய்மை) விரதத்தையும் அனுசரிக்கவேண்டும். ஏனெனில், சத்தியத்தினிடம் உங்களுக்குள்ள பக்தியை, கடவுளைத் தவிர வேறு யாரிடத்திலும் பகிர்ந்துகொள்ள முடியாது அல்லவா? இந்த ஐந்து விரதங்களையும் நீங்கள் எடுத்துக் கொண்டாலன்றி, இந்தப் பரிசோதனையில் நீங்கள் ஈடுபடவே கூடாது. இவ்விஷயமாக மற்றும் பல நிபந்தனைகளும்

இருக்கின்றன. எனினும், அந்த நிபந்தனைகளை எல்லாம் நான் உங்களுக்குக் கூறிக்கொண்டிருக்க வேண்டியதில்லை. ஒரே ஒரு விஷயத்தைக் கூறுவது போதுமானது. அதாவது, இந்தப் பரிசோதனையைச் செய்தவர்கள், ஒவ்வொருவரும் மனச்சாட்சியின் குரலைக் கேட்பதாகக் கூறுவது ஒழுங்கல்ல என்பதை அறிவார்கள். ஏனெனில், எவ்வித ஒழுங்குப் பயிற்சியிலும் ஈடுபடாமலேயே ஒவ்வொருவரும் தற்போது தங்கள் மனச்சாட்சியின்படி நடக்க உரிமை கோருகிறார்கள். குழம்பி நிற்கும் உலகம் பெருவாரியான பொய்களுக்குச் செவி கொடுக்கவேண்டி யிருக்கிறது. பணிவு உணர்ச்சி நிரம்பியவர்களால்தான் சத்தியத்தைக் கண்டுகொள்ள முடியும். நான் உங்களுக்கு உண்மையான பணிவுடன் இதைத்தான் கூறமுடியும். சத்தியமாகிய சமுத்திரத்தில் நீங்கள் நீந்திச் செல்லுவதாயின், உங்களை நீங்கள் சூன்யம் என்று எண்ணிக்கொள்ள வேண்டும். கவர்ச்சியான இந்தப் பாதையில் இதற்கு மேல் நான் செல்லுவது முடியாத காரியம்.

—'எங் இந்தியா'–31—12—1931

## 5

## விவரிக்கமுடியாத ஒன்று

ஒரு நண்பர் கீழ்வருமாறு எழுதுகிறார் :

"ஒரு விஷயத்தைப் பற்றி உங்களுடைய விளக்கத்தைக் கேட்க, நான் ஆர்வம் உள்ளவனாக இருக்கிறேன். அது 'கடவுள்' என்ற சொல்லைப் பற்றியதே. 'மித மிஞ்சிய படிப்பால் பார்வை மழுங்காமலும், நம்பிக்கை நலிவுறாமலும் இருக்கும் வாசகருக்கு நான் ராம நாமத்தைப் பரிசாக அளிக்கிறேன். வாழ்க்கையின் பல கட்டங்களையும் தாண்டுவதற்கு கல்வி நமக்கு உதவியளிக்கின்றது. ஆனால், ஆபத்தும், மனத்தை மயக்கும் ஆசைகளும் ஏற்படும்போது, கல்வி முற்றிலும் நம்மைக் கை விட்டுவிடுகிறது. அப்போது நம்பிக்கை மாத்திரமே நம்மைப் பாதுகாக்கின்றது' என்று நீங்கள் சமீபத்தில் 'எங் இந்தியா' வில் குறிப்பிட்டிருக்கிறீர்கள். ஒரு தேசியத் தொண்டன் என்ற முறையில் அதற்கு எதிராக நான் எதுவும் கூறமாட்டேன். அது உங்களுடைய சொந்த நம்பிக்கையை ஒப்புக்கொள்ளுவதாகும். மனச்சாட்சி இடம் கொடாததன் காரணமாக நாத்திகவாதிகளாக இருப்பவர்களை, சிற்சில சமயங்களில் புகழ்ந்து ஒரு வார்த்தை கூறவும் நீங்கள் தவறியதில்லை. இதற்கு, உங்களுடைய 'நீதி தருமம்' என்ற நூலில் உள்ள கீழ்க்கண்ட வாக்கியங்களே உதாரணமாகும்: தங்களுடைய போலி மதப்பற்றைக் குறித்துப் பெருமையடித்துக்கொண்டே துன்மார்க்கமான நடவடிக்கைகளில் ஈடுபடும் பல கொடிய மனிதர்களை நாம் சந்திக்கிறோம். மற்றொருபுறம் ஸ்ரீ பிராட்லா போன்றவர்களும் இருக்கிறார்கள். அவர்கள் தங்களை நாத்திகர்கள் என்று கூறிக்கொள்ளுவதில் பெருமையடை

கிறார்கள். எனினும், அவர்கள் மிகவும் உயர்ந்த பண்பு உடையவர்களாகவும், ஒழுக்க சீலர்களாகவும் இருக்கின்றனர்.'

"ஆபத்திலிருந்தும், மனத்தை மயக்கும் ஆசைகளிலிருந்தும் ராமநாமத்தில் உள்ள நம்பிக்கை மாத்திரமே நம்மைக் காப்பாற்றுகிறது என்று நீங்கள் கூறு கிறீர்கள். ஏசுநாதரின் பெயரில் நம்பிக்கையுடையவர்களுக்கு, அந்தப் பெயர் தான் ராமநாமம் ஆகும். அத்தகைய நம்பிக்கையுடையவர்களிடம், 1909-இல் ஸ்பெயினில் உள்ள பார்ஸிலோனுவில் பிரான்ஸிஸ்கோ பெர்ரர் என்ற பகுத் தறிவு வாதி தமது உயிரைப் பலிகொடுக்க நேர்ந்தது. மதப்போர்கள், மத விரோதிகளை எரிப்பது, அவர்களுடைய உடல் உறுப்புக்களை வெட்டுவது, மிருகங்களைச் சித்திரவதை செய்தல், பலியிடுதல், சிற்சில சமயங்களில் மனிதர் களைக் கூட பலி கொடுத்தல்-இவையெல்லாம் கடவுளின் பெயரிலும், கடவு ளின் 'மகத்துவத்திற்காகவுமே' நடைபெற்றிருக்கின்றன. இது ஒருபுற மிருக்கட்டும்.

"ஒரு தேசீயத் தொண்டன் என்ற முறையில் நான், ஸ்ரீ ............ எழுப் பிய ஆட்சேபணையைத் தாங்கள் கவனிக்க வேண்டும் என்று கருதுகிறேன். கடவுளிடம் பயம் உள்ளவர்களே உண்மையான ஒத்துழையாமை வாதிகளாக இருக்கமுடியும் என்று தாங்கள் கூறியிருந்ததைக் குறித்து அவர், பகுத்தறிவு வாதியான தமது நண்பர் ஒருவரின் சார்பில் ஆட்சேபணை எழுப்பினர். தேசீய அலுவல் திட்டத்தில் ஈடுபடுவோர் தங்களுடைய மத நம்பிக்கையைப் பிரகடனம் செய்ய வேண்டிய அவசியமில்லை என்று நீங்கள் அப்போது கூறிய உறுதிமொழியை (1921 மே 4-ஆம் தேதி 'எங் இந்தியா'வைப் பாருங்கள்) நான் உங்களுக்கு நினைவூட்டுகிறேன். அந்த ஆட்சேபணைக்கு இப்போது மிகவும் அதிக ஆதாரம் இருக்கிறது. ஏனெனில், இப்போது காங்கிரஸ் தொண்டர்கள் எடுத்துக்கொள்ளவேண்டிய பிரதிக்ஞைகள், 'கடவுள் சாட்சியாக நான்......' என்று ஆரம்பமாகின்றன. பர்மியர்களைப் போன்ற பௌத்தர்களும், ஜைனர் களும், அங்கீகரிக்கப்பட்ட புராதன மதப்பிரிவுகளைச் சேராத பல இந்தியர் களும் கடவுள் நம்பிக்கையற்றவர்களாக இருக்கிறார்கள். அவர்கள் புறக்கணிக் கும் கடவுளின் பெயரில் ஆரம்பமாகும் பிரதிக்ஞையை மனச்சாட்சிக்கு விரோதமாக ஒப்புக்கொண்டு, அவர்கள் காங்கிரஸ் தொண்டர்களாகப் பதிவு செய்து கொள்ளுவது சாத்தியமா? சாத்தியம் இல்லாவிட்டால், அவர்களுடைய மத நம்பிக்கை மாத்திரம் காரணமாக அத்தகையோரை காங்கிரஸ் தொண்டில் கலந்துகொள்ள முடியாமல் விலக்குவது நியாயமாகுமா? அத்தகையோருக்கு உதவியாக மனச்சாட்சி ஷரத்து ஒன்றைச் சேர்க்கும்படி நான் யோசனை கூற லாமா? அதாவது மனச்சாட்சியின் பெயரால் அவர்கள் பிரதிக்ஞை செய்து கொள்ளலாம். இல்லாவிடில் கடவுளைப் பற்றியே குறிப்பிடாமலும், மனச்சாட்சி யின் பெயராலும் அல்லது அல்லாமலும் எவ்வித வேற்றுமையுமின்றி எல்லோ ரும் பிரதிக்ஞை எடுத்துக் கொள்ளலாம். அந்தப் பிரதிக்ஞையின் கர்த்தா தாங்கள்தான். இப்போது தாங்கள் காங்கிரஸ் அக்கிராசனராகவும் இருக் கிறீர்கள். அதனுலேயே இவ்விஷயமாக உங்களை அணுகுகிறேன். இதற்கு முன்பும் இவ்விஷயமாக உங்களை அணுகினேன். ஆனால், அதற்குள் சரித்திரப் புகழ்பெற்ற அச்சம்பவம் நிகழ்ந்து விட்டது. அதாவது 1922-இல் தாங்கள் சாபர்மதியில் கைதியாகி விட்டீர்கள்."

காங்கிரஸ் பிரதிக்ஞையில் கடவுளைப் பற்றிக் குறிப்பிடப் பட்டிருப்பதற்கு நான்தான் கர்த்தா என்பதை நினைக்க நான்

பெருமையடைகின்றேன். மனச்சாட்சி காரணமாக எழும் ஆட்சேபணை சம்பந்தப்பட்ட வரையில், கடவுளைப் பற்றிய குறிப்பை அகற்றிவிடலாம். அச்சமயத்தில் அத்தகைய ஆட்சேபணை எழுப்பப்பட்டிருந்தால், நான் அதற்கு உடனே விட்டுக்கொடுத்திருப்பேன். இந்தியாவைப் போன்ற ஓரிடத்தில் அத்தகைய ஆட்சேபணையை நான் எதிர்பார்க்கவில்லை. சார்வக (நாத்திகம்) கொள்கை இருந்து வருகிறதெனினும் அதைப் பின்பற்றுவோர் இருக்கிறார்களா என்பது எனக்குத் தெரியாது. பௌத்தர்களும் ஜைனர்களும் நாத்திகர்கள் என்பதையோ, சந்தேகவாதிகள் என்பதையோ நான் மறுக்கிறேன். இந்த உடலுக்குப் புறம்பாக ஆன்மா இருக்கிறது என்பதையும், இந்த உடல் மறைந்தபின்பும் ஆன்மா இருக்கிறது என்பதையும் நம்பும் அவர்களை நாத்திகர் என்று கூறமுடியாது.

நாம் எல்லோரும் கடவுளைப் பற்றிப் பல்வேறு விளக்கங்கள் கூறலாம். கடவுளைப்பற்றி நாம் நமது சொந்த விளக்கங்களைக் கூற முற்படுவோமாயின், எத்தனை ஆடவர்களும் பெண்களும் இருக்கிறார்களோ விளக்கங்களின் தொகையும் அவ்வளவாகி விடும்! எனினும், பல்வேறு விளக்கங்களுக்கும் அடிப்படையில் வேறுபாடின்மையைக் கவனிக்க நாம் தவறிவிடமுடியாது. அடிப்படை ஒன்றுதான். கடவுள் வருணிக்க இயலாததொன்று. கடவுளை நாம் நேரில் அறியாவிட்டாலும், உணர்ச்சியினால் அறிகிறோம்.

சார்லஸ் பிராட்லா தம்மை ஒரு நாத்திகர் என்று கூறிக் கொண்டார் என்பதில் சந்தேகமில்லை. ஆனால், பல கிறிஸ்தவர் கள் கூட அவரை நாத்திகர் என்று கருத மறுத்துவிட்டார்கள். வாய்ப்பேச்சு கிறிஸ்தவர்களிடம் இருப்பதைக் காட்டிலும் தங்களுக்கு பிராட்லாவினிடம் அதிக உறவு உண்டு என்பதைப் பல கிறிஸ்தவர்களும் உணர்ந்தார்கள். அவர் இந்தியாவின் நல்ல நண்பராக இருந்தார். அவரது சவ அடக்கத்திற்குச் செல்லும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. அப்போது பல பாதிரிமார்களும் அங்கு வந்திருந்ததை நான் கவனித்தேன். சவ ஊர்வலத்தில் பல முஸ்லிம்களும், ஏராளமான ஹிந்துக்களும் கலந்துகொண்டனர். அவர்கள் யாவரும் கடவுளிடம் நம்பிக்கை கொண்டவர்கள். பொதுவாக வருணிக்கப்படும் கடவுளையே அவர் மறுத்தார். அப்போது வழக்கத்திலிருந்த கடவுளியலுக்கு அவரது வாழ்க்கை கடுமையான எதிர்ப்பாகத் திகழ்ந்தது. வாய்ப்பேச்சிற்கும் செய்கைக்கும் உள்ள பயங்கரமான முரண் பாட்டை அவரது வாழ்க்கை கண்டிப்பதாக இருந்தது.

என்னைப் பொறுத்தவரையில் கடவுள்தான் உண்மையும் அன்பும்; கடவுள்தான் நீதி நூலும் ஒழுக்கமும்; கடவுள்தான் அஞ்சாமையுமாகும். கடவுள்தான் ஒளிக்கும் உயிருக்கும் மூல காரணமாகும். என்றாலும், அவர் இதையெல்லாம் கடந்தவராக இருக்கின்றார். மனச்சாட்சி என்பது கடவுளே. நாத்திகரின்

நாத்திக வாதம்கூடக் கடவுள்தான். கடவுள் எல்லையற்ற கருணையுள்ளவராதலால், நாத்திகர் வாழ்வதையும் அனுமதிக்கிறார். அவர் உள்ளங்களைப் பரிசோதிப்பவர்; பேச்சிற்கும் பகுத்தறிவிற்கும் அப்பாற்பட்டவர். நம்மையும் நமது உள்ளங்களையும், நம்மைக் காட்டிலும் அவர் நன்கு அறிவார். நாம் கூறுவதை அவர் நம்பிவிடுவதில்லை. ஏனெனில், நாம் கூறுவது வாயளவில் தான் என்பதை அவர் அறிவார். நேரில் வரவேண்டும் என்ற தேவையுடையவர்களுக்கு அவர் நேரில் வருவார். அவர் தூய்மையான சாரத்தின் சாரம். நம்பிக்கையுடையவர்களுக்கு அவர் இருக்கிறார். அவர் எல்லா மனிதருக்கும் எல்லாமாக இருக்கிறார். அதே சமயம், அவர் நமக்கு மேலேயும் எட்டாத தூரத்திலும் இருக்கிறார்.

காங்கிரசிலிருந்து 'கடவுள்' என்ற சொல்லை அகற்றிவிடலாம்; ஆனால் கடவுளை அகற்ற எவருக்கும் சக்தியில்லை. கடவுளின் பெயரில் பிரதிக்ஞை செய்துகொள்ளுவதற்கும், மனப்பூர்வமாக உறுதிமொழி அளிப்பதற்கும் வேற்றுமை எதுவும் இல்லை. கடவுள் என்ற நான்கு எழுத்துக்களின் ஆழ்ந்த தத்துவத்தை விளக்க மனச்சாட்சி என்ற சொல்லை உபயோகிப்பது மிகவும் அற்பமான ஒரு விளக்கமேயாகும். கடவுளின் பெயரால் பயங்கரமான துன்மார்க்கங்களும், மனிதத் தன்மையற்ற கொடுமைகளும் நடைபெறுகின்றன என்பதற்காக, கடவுள் இல்லை என்று ஆகிவிட முடியாது. அவர் வெகுகாலமாகத் துன்பத்தை அனுபவித்து வருகின்றார். அவர் பொறுமையே உருவாக இருந்து வருகிறார். எனினும், அவர் பயங்கரமானவர். இந்த உலகத்திலும் வரப்போகும் உலகத்திலும் அவர் மிகமிகக் கண்டிப்பானவர். நமக்கு அண்டையிலிருப்பவர்கள், அவர்கள் மனிதர்களாயினும் மிருகங்களாயினும், அவர்களுக்கு நாம் என்ன செய்கிறோமோ, நாமும் அதையே அனுபவிக்கும்படி செய்கின்றார். அறியாமையால் செய்ததாகக் கூறி அவரிடம் மன்னிப்பைப் பெற முடியாது. எனினும், அதே சமயத்தில் எப்போதும் மன்னிப்பவராக இருக்கிறார். ஏனெனில், செய்துவிட்ட தவறுக்குப் பரிகாரம் செய்ய அவர் எப்போதும் நமக்குச் சந்தர்ப்பம் அளிக்கிறார். உலகம் அறிந்த வகையில் கடவுள் தான் மாபெரும் ஜனநாயகவாதி. அவர் நம்மைக் கட்டுப்படுத்துவதே இல்லை. நம் விருப்பப்படி தீயதையோ, நல்லதையோ நாம் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். கொடுங்கோலர்களை யெல்லாம்விட அவர் மிகப் பெரிய கொடுங்கோலர். ஏனெனில், நாம் வாய்க்குள் போடப் போகும் தறுவாயில் அவர் நமது உணவைத் தட்டி எறிந்து விடுவார். முற்றிலும் பற்றுக்குறையால் நாம் அவதிப்படுவது அவருக்கு வேடிக்கையாக இருக்கும். அதைத்தான் ஹிந்துமதம் கடவுளின் லீலை என்றும் மாயை என்றும் கூறுகிறது.

நாம் இல்லை, அவர் மாத்திரமே இருக்கிறார். நாம் இருக்க வேண்டுமாயின் நாம் அவரையே எப்போதும் தோத்திரம் செய்து, அவரது கட்டளைப்படி நடந்து கொள்ளவேண்டும். அவரது வீணை

வாத்தியத்தின் இசைக்குத் தகுந்தவாறு நாம் ஆடுவோமாயின், எல்லாம் சரியாகிவிடும்.

'எங் இந்தியா ' – 5—3—1925

# 6
# கடவுள் யார், எங்கே ?

பிரம்மத்தினிடம் அதாவது கடவுளிடம் கொண்டுபோய்ச் சேர்க்கும் அப்பழுக்கற்ற சரியான வாழ்க்கை முறையே பிரம்மச் சரியம் என்று நான் வரையறுத்துக் கூறியுள்ளேன். அதை யடுத்து உடனடியாக, "கடவுள் யார் அல்லது கடவுள் என்ருல் என்ன?" என்று கேள்வி எழுகிறது. இதற்கு விடை என்ன என்பதை மனிதன் அறிவானுயின், அது, கடவுளை அடைவதற் கான பாதையை அவன் கண்டுபிடிப்பதற்கு உதவி அளிக்கும்.

கடவுள் ஒரு நபர் அல்ல. மனித உருவில் அவர் அப்போதைக் கப்போது பூமியில் இறங்குகிருர் என்று கூறுவது ஓரளவுதான் உண்மையாகும். அது, அத்தகைய ஒரு நபர் கடவுளுக்கு அருகில் வசிக்கிருர் என்பதை மாத்திரமே குறிக்கிறது. கடவுள் எங்கும் நிறைந்தவரானதால், மனிதராகப் பிறந்த ஒவ்வொருவரிடத் திலும் கடவுள் இருக்கிருர். எனவே, எல்லோரையுமே அவ ருடைய அவதாரங்களாகக் கூறலாம். ஆனால், இதிலிருந்து நாம் எதுவும் நிர்ணயிப்பதற்கில்லை. ராமன், கிருஷ்ணன் முதலியோர் கடவுளின் அவதாரங்கள் என்று கூறப்படுவதற்குக் காரணம் என்னவெனில், அவர்கள் தெய்விகமான அம்சங்கள் வாய்க்கப் பெற்றவர்கள் என்று நாம் கருதுவதேயாகும். உண்மையில் அவர்கள் மனிதர்களுடைய கற்பனையின் சிருஷ்டிகளே. அவர்கள் உண்மையில் வாழ்ந்தவர்களா அல்லவா என்பது, மனிதன் மனத்தில் அவர்களைப்பற்றி உருவாகியுள்ள சித்திரத்தை எவ் விதத்திலும் பாதிக்கவில்லை. சரித்திரத்தில் காணும் ராமனையும் கிருஷ்ணனையும் உண்மை என்று நிரூபிப்பதில் பல கஷ்டங்கள் எழுகின்றன. அக்கஷ்டங்களையெல்லாம் பலவிதமான வாதங் களால் நாம் சமாளிக்க வேண்டியிருக்கிறது.

உண்மை என்னவெனில், கடவுள் என்பது சக்திதான். உயிரின் சாரமே கடவுள். அவர் தூய்மையான, களங்கப்படாத அறிவுப் பிழம்பேயாகும். அவர் ஆதி அந்தமற்றவர். அப்படி யிருந்தும் கூட, எங்கும் வியாபித்துள்ள அந்த உயிர் சக்தியின் முன் எல்லோருக்கும் பாதுகாப்பு ஏற்படுவதில்லை; எல்லோரும் பலன் அடைவதில்லை என்பது விசித்திரமேயாகும்.

மின்சாரம் வலிமை வாய்ந்த ஒரு சக்தியாக இருக்கிறது. எனினும், எல்லோரும் அதனல் பலன் அடையமுடிவதில்லை. சில விதிகளைப் பின்பற்றுவதன் மூலம்தான் அந்த சக்தியை உற்பத்தி

செய்ய முடியும். அது உயிரற்ற ஒரு சக்தியாகும். அதன் விதிகளை நன்கு அறிந்து கொள்வதற்குப் போதிய அளவு மனிதன் கடுமையாக உழைத்தால், அதை அவன் பயன்படுத்திக்கொள்ள முடியும்.

ஆனால், கடவுள் என்று நாம் கூறுவது ஜீவசக்தியாகும். அவரது விதிகளை அறிந்து அவற்றைப் பின்பற்றினால், நம்மிடத்தில் உள்ள அவரை நாம் கண்டுபிடிப்பதற்கு வழி ஏற்படும். ஆனால், கடவுளின் விதியைக் கண்டுபிடித்துப் பின்பற்றுவதற்கு, மின்சார சக்தியைக் கண்டுபிடிப்பதைக் காட்டிலும் கடுமையான உழைப்பு தேவை என்பது தெளிவாகும். அந்த விதியை ஒரே சொல்லினால் குறிப்பிட்டுவிடலாம். அதுதான் பிரம்மச்சரியம். பிரம்மச்சரியத்தில் பயிற்சி பெறுவதற்கு நேரடியான ஒரேவழி ராம நாமம்தான். இதை நான் அனுபவத்தின் மீது கூறமுடியும். இந்த ராஜ பாட்டையை, பக்தர்களும் துளசிதாசரைப் போன்ற முனிவர்களும் நமக்குக் காட்டியிருக்கிறார்கள். என்னுடைய அனுபவத்திற்கு எவரும் விசேஷ முக்கியத்துவம் அளிக்க வேண்டிய அவசியம் இல்லை. ராம நாமத்தின் மகிமையை உருளி காஞ்சனில்* நான் தெள்ளத் தெளிய அறிந்து கொண்டேன் என்று கூறுவது சரியேயாகும். நம்முடைய நோய்களுக்கெல்லாம் நிச்சயமான பரிகாரம் ராம நாமம்தான் என்று நான் அங்கேதான் உறுதியாகப் பிரகடனம் செய்தேன். அதைப் பூர்ணமாக உபயோகித்துக்கொள்ளமுடிந்தவர், வெளி முயற்சி எதுவுமின்றி மகத்தான பலன்களைக் காட்ட முடியும்.

உள்ளத்தில் ராம நாமம் இடம்பெற்றுவிடுமாயின், அதன் முன்னிலையில் பிரம்மச்சரியத்தை அனுசரிப்பதற்கான சாஸ்திரீய முறைகள் யாவும் அற்பமாகிவிடும். அப்போதுதான் ராம நாமத்தின் மகோன்னதமான அழகையும் சக்தியையும் நாம் உணர முடியும். இணையற்ற, குறிதவறாத இந்த ஆயுதத்தை அயராது தேடும் முயற்சியில், லட்சியத்திற்கும் அதை அடைவதற்கான முறைகளுக்கும் எவ்வித வேற்றுமையும் காண்பது கஷ்டமான காரியமாகும். நாம் அனுசரிக்க வேண்டிய பதினொரு விதிகள் கடவுளை நாம் அடையும்படி செய்வதற்கான முறைகளாகும். ராம நாமம்தான் லட்சியம். அது போலவே, சத்தியம்தான் லட்சியம் என்பதும் ராம நாமம்தான் அதை அடைவதற்கான வழி என்பதும் உண்மை அல்லவா?

*ஷோலாப்பூர்–புனா மார்க்கத்தில் இருக்கும் உருளிகாஞ்சன் கிராமத்தைப் பற்றியும், அக்கிராம மக்களுக்கு ராம நாமத்தின் சக்தியை காந்திஜி உபதேசம் செய்தது பற்றியும் 4–ஆவது தொகுப்பில் காணலாம். ராம நாமத்தின் மகிமையைப் பற்றிய காந்திஜியின் பிரசங்கங்களும் அவர் எழுதியுள்ள பல கட்டுரைகளும், மகாத்மா காந்தி நூல்கள் 4-ஆவது தொகுப்பில் விவரமாக வெளியாகியுள்ளன. அவை, 'இயற்கை வைத்தியமும் ராம நாமமும்' என்ற பகுதியில் 71-லிருந்து 138–ஆவது பக்கம் வரையில் பல அத்தியாயங்களாக வெளியாகி யிருப்பதைக் காணலாம். ராமநாமத்தைப் பற்றி அந்தத் தொகுப்பில் வெளிவராத விவரங்களே 10-ஆவது தொகுப்பான இந்த நூலில் கொடுக்கப்பட்டுள்ளன.

இப்போது நான் முதலில் கூறிய விஷயத்திற்கு வருகிறேன். இன விருத்தி உறுப்பை மனிதன் பூரணமாகக் கட்டுப்படுத்துவது தான் பிரம்மச்சரியத்தின் எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்பட்ட பொருளாகும். இந்த லட்சியத்தை அடைவதற்கான தங்கமான வழி ராம நாமம்தான். ராம ராமத்தின் மகிமையை நிரூபிக்க சந்தேகமின்றி விதிகள் இருக்கின்றன. சில மாதங்களுக்கு முன் ஓரளவு அவற்றைப் பற்றிக் குறிப்பிட்டேன். அவற்றை மறுபடி யும் நினைவுபடுத்திக்கொள்வது பலன் தரத்தக்கதாகவே இருக்கும்.

—'ஹரிஜன்' - 22—6—1947

# 7

# கடவுள் ஒரு நபரா அல்லது சக்தியா?

பரோடாவிலிருந்து ஒரு நண்பர் ஆங்கிலத்தில் பின் வருமாறு எழுதுகிறார் :—

"தென்னாப்பிரிக்காவில் உள்ள வெள்ளையர்களுக்கு அறிவு ஒளியை அளிக்கும் படியும், இறுதி வரையில் உறுதியுடன் நிற்பதற்கான பலத்தையும், தைரியத்தையும் இந்தியர்களுக்கு அளிக்கும்படியும் கடவுளைப் பிரார்த்திக்கும்படி நீங்கள் எங்களைக் கேட்கிறீர்கள்? ஒரு நபரை நோக்கித்தான் இத்தகைய பிரார்த்தனை செய்ய முடியும். கடவுள் எங்கும் வியாபித்த, எல்லாம் வல்ல சக்தியாக இருக்குமாயின், அவரைப் பிரார்த்திப்பதில் என்ன அர்த்தம் இருக்கிறது? என்ன நேர்ந்தாலும் கடவுள் தமது அலுவலைச் செய்து கொண்டு தான் போகிறார்."

இவ் விஷயமாக முன்பு நான் எழுதியிருக்கிறேன். ஆனால், பல்வேறு விதத்திலும் அந்தக் கேள்வி அடிக்கடி எழத்தான் செய்கிறது. எனவே, மேற்கொண்டு அதை விளக்குவதால் எவராவது பலனடையலாம்.

கடவுள் யாராலும் வெல்ல முடியாத ஒரு சக்தியாக இருக்கிறார். எல்லா சக்திகளையும் காட்டிலும் பெரிய சக்தி கடவுள் தான். ராமன், ரஹமான், அஹுர்மஸ்தா, கடவுள் அல்லது கிருஷ்ணன் என்ற பெயர்கள் எல்லாம் அந்தச் சக்தியைக் குறிப்பிட மனிதன் செய்யும் முயற்சிகளே என்பது என் அபிப்பிராயமாகும். மனிதன் குற்றம் குறையுள்ளவன். எனினும், குற்றம் குறையற்ற நிலையை எட்டிப் பிடிக்க இடைவிடாது முயற்சிக்கும் தன்மை மனிதனிடம் இயல்பாக அமைந்திருக்கிறது. அத்தகைய முயற்சியில் அவன் சிந்தனையில் ஆழ்ந்துவிடுகிறான். ஒரு குழந்தை நிற்க முயற்சித்து, அடிக்கடி கீழேவிழுந்து விடுகிறது. அப்படி பலதடவை விழுந்தபின், இறுதியில் அது நடக்கக் கற்றுக்கொள்ளுகிறது. அப்படியேதான் மனிதனும். மனிதன் எவ்வளவு அறிவு படைத்தவனாயினும், ஆதி அந்தமற்ற

கடவுளின் முன்னிலையில் அவன் ஒரு குழந்தையைப் போலவே இருக்கிறான். இது மிகைபடக் கூறுவதுபோல் தோன்றலாம். ஆனால், அது அப்படியல்ல.

மனிதன் தனது அற்ப பாஷையில்தான் கடவுளை வருணிக்க முடியும். எனினும், கடவுள் என்று நாம் கூறும் சக்தியை வருணிப்பதென்பது முடியாதகாரியம். அந்த சக்தி, கடவுளை வருணிக்க முற்படும் மனிதனின் முயற்சியை நாடி நிற்கவுமில்லை. கடவுள் எங்கும் பரவியிருப்பவராகவும், மகா சமுத்திரத்தைப் போல் எல்லையற்றவராகவும் இருப்பவராயின், அற்பமான ஒரு துளியைப் போன்ற மனிதன், கடவுள் என்றால் என்ன என்பதை எவ்விதம் கற்பனை செய்து கொள்ள முடியும்? தனது மனத்தின் சக்திக்கு உட்பட்டே மனிதன் கடவுளைக் கற்பனை செய்து கொள்ள முடியும். அவன் சமுத்திரத்தில் மூழ்கிப் பார்த்தால்தான், சமுத்திரம் எப்படி இருக்கும் என்பதை அவன் அறிய முடியும். அந்த அனுபவத்தை வருணிப்பதென்பது முடியாத காரியம்.

மனிதன் பிரார்த்தனை செய்வதன் மூலம், தன்னுடைய பெருமையையே வழிபடுகிறான் என்று பிளவாட்ஸ்கி அம்மையார்* கூறியிருக்கிறார். தன்னுள் கடவுள் இருக்கிறார் என்ற உறுதியுடையவர்தான் உண்மையிலேயே பிரார்த்தனை செய்ய முடியும். இந்த உறுதி இல்லாதவர் பிரார்த்தனை செய்ய வேண்டிய அவசியமில்லை. அதற்காகக் கடவுள் கோபித்துக்கொள்ள மாட்டார். ஆனால், யார் பிரார்த்தனை செய்யவில்லையோ அவருக்குத்தான் நிச்சயமாக நஷ்டம் என்பதை நான் அனுபவத்திலிருந்து கூற முடியும். எனவே, கடவுளை ஒரு நபர் என்று ஒருவரும், ஒரு சக்தி என்று மற்றொருவரும் வழிபடுவது ஒரு பெரிய விஷயமல்ல. தங்கள் தங்கள் அறிவிற்கு எட்டியவரையில் இருவர் செய்வதும் சரியே. பிரார்த்தனை செய்வதற்கு முற்றிலும் சரியானவழி என்ன என்பது எவருக்கும் தெரியாது, எவருக்கும் எக்காலத்திலும் தெரியப்போவதில்லை. குற்றம் குறையற்ற பரிபூரணமான லட்சியம் எப்போதும் அப்படியே இருக்க வேண்டும். கடவுள், சக்திகளுக்கெல்லாம் சக்தி என்பதை மாத்திரம் ஒருவர் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும். மற்ற சக்திகள் யாவும் லௌகிகமானவை. ஆனால், கடவுள் ஜீவ சக்தி அல்லது ஜீவதத்துவம். அது எங்கும் வியாபித்திருக்கிறது; எல்லாவற்றையும் தழுவி இருக்கிறது; எனவே, அது மனிதனின் அறிவுக்கு அப்பாற்பட்டதாக இருக்கிறது.

'ஹரிஜன்' – 18—8—1946

---

* பிளவாட்ஸ்கி அம்மையாரும் கர்னல் ஆல்காட்டும் 1875-ஆம் ஆண்டில் நியூயார்க்கில் பிரம்மஞான சங்கத்தை (Theosophical Society) ஸ்தாபித்தார்கள். அச்சங்கத்தின் தலைமை ஸ்தாபனம் சென்னையில் இருக்கிறது. இந்த உலகத்திலுள்ள ஐம்பது நாடுகளில் அச்சங்கத்திற்கு 1200-க்கு மேற்பட்ட கிளை ஸ்தாபனங்கள் இருக்கின்றன. மானிட வர்க்கத்தினிடையே சகோதரபாவ வளர்ச்சி, மதம், தத்துவஞானம், விஞ்ஞானம் முதலிய துறைகளில் ஆராய்ச்சிக்கு ஆக்கம் அளித்தல், விவரிக்கப்படாத இயற்கை நியதிகளையும், மனிதர்களிடம் மறைந்து கிடக்கும் சக்திகளையும் ஆராய்ச்சி செய்தல் முதலியனவே பிரம்மஞான சங்கத்தின் கொள்கைகளாகும்.

# 8

# மாபெரும் மர்மம் !

திங்கட்கிழமை மௌன தினமாதலால், காந்திஜி *சாஹர்ஸா என்ற இடத்தில் தங்கியிருந்தார். அப்போது சுமார் அறுபதி னாயிரம் ஜனங்கள் காந்திஜி தங்கியிருந்த பங்களாவை காலை 8 மணியிலிருந்து முற்றுகையிடத் தொடங்கினர்கள். உணவின்றி யும், தண்ணீர் இல்லாமலும், திணறடிக்கும் வெய்யிலிலும் புழுதியிலும் அவர்கள் பகல் முழுவதும் காம்பவுண்டைச் சுற்றி உட்கார்ந்திருந்தார்கள். மாலையில் அவர்களுடைய தொகை லட்சத்திற்கும் மேலாகிவிட்டது. வெட்ட வெளியில் மக்கள் குழுமியிருந்த அக் கூட்டத்தில் காந்திஜி பேசினர். "பூகம்பத்தை உண்டாக்கும் கடவுள் இரக்கமற்ற, வஞ்சம் தீர்க்கும் இயல்புள்ள தெய்வமா?" இவ்விஷயத்தை யொட்டி காந்திஜியின் பேச்சு திரும்பியது. அக் கேள்விக்குப் பதிலாக காந்திஜி கூறியதாவது :

"இல்லை, அவர் இரக்கமற்றவர் அல்ல, வஞ்சம் தீர்க்கும் இயல்பு உள்ளவரும் அல்ல; ஆனல், அவரது வழிகள் நாம் அனுச ரிக்கும் வழிகளைப் போல் இரா. கடவுள் மர்மங்களுக்கு எல்லாம் மர்மமாக விளங்குகிறர். இதை அறிந்துகொண்டுள்ள நாம், கடவுள் செய்யும் எதையும் குறித்து ஏன் கலங்கவேண்டும்? நாம் எண்ணுவதைப்போல் அவர் நடப்பவராயின், பின்னர் நாம் அவரது கருவிகளாக இருக்கமாட்டோம்; அவரும் நமது சிருஷ்டி கர்த்தாவாக இருக்கமாட்டார். நம்மைச் சூழ்ந்துள்ள ஊடுருவ முடியாத இருள், சாபத் தீடு அல்ல, கடவுளின் அருளேயாகும். நம்முன் உள்ள ஒரு படியையே பார்க்க கடவுள் நமக்குச் சக்தி யைக் கொடுத்திருக்கிறர். தெய்வ ஒளி நமக்கு அந்தப் படியைக் காட்டினலே போதுமானது. அப்போது நாமும் நியூமனுடன் சேர்ந்து "எனக்கு ஒரு படிபோதும்" என்ற கீதத்தைப் பாடலாம். அப்படியாயின் அதற்கு அடுத்தபடி எப்போதும் நம் கண்க ளுக்குத் தெரியும் என்று நாம் பழைய அனுபவத்தின் பலனைக உறுதியுடன் இருக்கலாம். மற்றொரு விதமாகக் கூறினல், ஊடுருவ முடியாத இருள் என்பது நாம் கற்பனை செய்து கொள்ளுவது போல அவ்வளவு ஊடுருவ முடியாததல்ல. நாம் பொறுமை இழந்து அந்த ஒரு படிக்கு மேல் பார்க்க விரும்பும் போதுதான் அது ஊடுருவ இயலாததுபோல் தோன்றுகிறது. கடவுள் அன்பு மயமானவர்; எனவே, அப்போதைக்கப்போது பூமியில் அவரால் ஏற்படும் ஆபத்துக்கள் மறைமுகமான அருளாகவே இருக்க வேண்டும். எனினும், அத்தகைய பேரபாயங்களைத் தற்சோதனைக் கும் சுயத்தூய்மைக்குமான ஓர் எச்சரிக்கையாகக் கருதுவோருக்கு மாத்திரமே, அவை மறைமுகமான திருவருளாக இருக்கமுடியும்."

(பியாரிலால் எழுதியது)

—'ஹரிஜன்'—20—4—1934

* சாஹர்ஸா பீகார் மாகாணத்தில் உள்ள ஓர் ஊராகும்.

# 9

## கண்களுக்கு எட்டாதவர்

மனிதராகப் பிறந்த எவருக்கும் எக் காலத்திலும் கடவுளைப் பூரணமாக வருணிக்கும் ஆற்றல் இருந்ததில்லை. கடவுள் ஒருவர் தான் எல்லாவற்றையும் உணர்ந்தவர். சதையினாலும் ரத்தத்தினாலும் ஆன மனிதர் குறைபாடுகள் உள்ளவரே யன்றி பூரணமானவர் அல்ல. கடவுள் உருவாகவே மனிதர் சிருஷ்டிக்கப் பட்டிருப்பதாக வருணிக்கப்படலாம். ஆனால், மனிதருக்கும் கடவுளுக்கும் வெகுதூரமாகும். கடவுள் காணமுடியாதவர், மனிதரின் கண்களுக்கு எட்டாத இடத்தில் இருப்பவர். எனவே, நாம் செய்யக் கூடியதெல்லாம் என்னவெனில், கடவுளின் மனிதர்கள் என்று நாம் கருதுவோரின் பேச்சுக்களையும் செயல்களையும் அறிய முயற்சிப்பதுதான். அவை நம்மிடத்தில் ஊறிவிடவேண்டும். அவை நம் உள்ளத்திற்கு உகந்தவையாக இருக்கும் அளவுக்கு அவற்றை நாம் செயலில் கொண்டுவர முயற்சிப்போமாக.

—'ஹரிஜன்' – 3—3—1946

# 10

## கடவுள் என்னும் புதிர்

ஓர் அன்பர் கீழ்வருமாறு எழுதுகிறார்; "இப்பொதெல்லாம் உங்களுடைய கீதா போதனையை நான் வாசித்து வருகிறேன். அதை நான் அறிந்து கொள்ளவும் முயற்சித்து வருகிறேன். கீதையின் 10-வது அத்தியாயத்தில் கிருஷ்ண பரமாத்மா கூறும் விஷயம் எனக்கு ஒரு புதிராக இருக்கிறது. 'பாய்ச்சிகை விளையாட்டில் நான் வெற்றி பெறும் இரட்டை எட்டாக இருக்கிறேன், என்னுடைய விருப்பமின்றி இந்த உலகத்தில் நன்மையோ அல்லது தீமையோ எதுவும் ஏற்பட முடியாது' என்று கிருஷ்ண பரமாத்மா கூறுகிறார். அப்படியானால் கடவுள் தீமையைத் தடுப்பதில்லையா? அப்படியாயின் அவர் தீமை செய்வோரை எப்படி தண்டிக்க முடியும்? இதற்காகவா கடவுள் உலகத்தைச் சிருஷ்டித்திருக்கிறார்? அப்படியாயின் மனிதவர்க்கம் அமைதியாக வாழ்வது அசாத்தியமானதா?"

இந்த உலகில் கடவுள் தீமையை அனுமதிக்கிறார் என்று கூறுவது செவிக்கு இன்பமாக இராமலிருக்கலாம். ஆனால், நன்மைக்கு அவரைப் பொறுப்பாளியாகக் கருதுவதுபோல், தீமைக்கும் அவரே பொறுப்பாளியாக இருக்கவேண்டியவராக இருக்கிறார். ராவணன் ஈடு இணையற்ற பலத்தைப் பிரகடனப் படுத்த கடவுள் அனுமதிக்க வில்லையா? ஒருவேளை இந்தக் குழப்பத்திற்கு மூலகாரணம், கடவுள் என்றால் என்ன என்பதைப் பற்றிய உண்மையான அறிவு தேவையாக இருப்பதேயாகும்.

கடவுள் ஒரு நபர் அல்ல. அவர் வருணனைக்கு அப்பாற்பட்டவர். சட்டமும், சட்டத்தை இயற்றுபவரும், அதை நிறைவேற்று பவரும் அவரே. இந்த அதிகாரங்களை மானிடர் எவரும் தனக்குத் தானே மேற்கொண்டுவிட முடியாது. அப்படி மேற்கொள்ளுவா ராயின், அவர் கலப்பற்ற சர்வாதிகாரியாகக் கருதப்படுவார். கடவுள் என்று நாம் யாரை வணங்குகிறோமோ, அவருக்கு மாத்தி ரம்தான் இந்த அதிகாரங்கள் ஏற்றவை. இதுதான் உண்மை. இதைத் தெளிவாக அறிந்துகொள்ளுவதே, கடிதம் எழுதியவர் எழுப்பியுள்ள கேள்விக்குப் பதிலாகும்.

மனித வர்க்கத்தைச் சேர்ந்தவர்கள் பரஸ்பரம் அமைதியாக வாழ்வது முடியாத காரியமா என்ற கேள்வி, மேலே குறிப்பிட்ட மேற்கோளிலிருந்து எழுவதற்கில்லை. உலகத்தில் அடங்கியுள்ள தனிநபர்கள் பரஸ்பரம் அமைதியுடன் வாழவேண்டும் என்று மனத்தை உறுதிப்படுத்திக் கொண்டால், உலகம் அமைதியாக வாழமுடியும். அவ்விதம் ஏற்படுவது முடியாத காரியம் என்று யாரும் மறுத்துவிட முடியாது. அத்தகைய நிலை எப்போது ஏற்படும் என்று யாரும் கூற முடியாது. எனவே, அத்தகைய கேள்விகள், சோம்பேறித்தனமாக நேரத்தை வீண் செலவு செய்வ தாகும். ஒரு நல்ல மனிதருக்கு, உலகம் முழுவதும் நல்லதாகவே இருக்கும். பொன்னை இந்த விதியைப் பின்பற்றுவதன் மூலம் அந்த நிருபர் எச்சந்தர்ப்பத்திலும் அமைதியாக வாழ முடியும். அவருக்கு எது சத்தியமோ அது மற்றவர்களுக்கும் சத்தியம் என்ற நம்பிக்கை அவருக்கு இருக்கவேண்டும். அதற்கு மாறாக நம்பிக்கை கொள்ளுவது, கர்வத்தையும் இறுமாப்பையுமே குறிக்கும்.

—'ஹரிஜன்' – 24—2—1946

## 11

# கடவுள் கற்பனையின் சிருஷ்டியா?

*கேள்வி:* கடவுள், மனிதனுடைய கற்பனையின் சிருஷ்டியே ஆகும். மனிதனைச் சிருஷ்டித்தது கடவுள் அல்ல; ஆனால், கடவுளைத்தான் மனிதன் சிருஷ்டித்துள்ளான். இது உண்மை அல்லவா?

*பதில்:* ஒருவருடைய கடிதத்திலிருந்து இந்தப் பகுதியை நான் எடுத்துக் குறிப்பிட்டிருக்கிறேன். அவர் கூறுவதில் ஏதோ உண்மை இருப்பதுபோல், தோன்றுகிறது. அதை எழுதிய வர், தான் அறியாமலேயே "சிருஷ்டி", "கடவுள்" என்ற இரண்டு வார்த்தைகளையும் சிலேடையாக உபயோகித்து ஒரு பிரமையை உண்டாக்கியுள்ளார். சட்டமும் சட்டத்தை இயற் றுபவரும் கடவுளே. எனவே, யாரோ அவரைச் சிருஷ்டிப்ப

தென்ற கேள்வியே எழுவதற்கில்லை. அதிலும் மனிதனைப் போன்ற அற்ப ஜீவன், கடவுளைச் சிருஷ்டிப்பதென்ற பேச்சிற்குச் சிறிதும் இடமில்லை. மனிதன் ஓர் அணைக்கட்டை நிர்மாணிக்கலாம். எனினும், அவனுல் ஒரு நதியைச் சிருஷ்டிக்க முடியாது. மனிதன் ஒரு நாற்காலியை உற்பத்தி செய்ய முடியும்; ஆனல், மரத்தைச் சிருஷ்டிக்க முடியாது. மனிதன் பல வழிகளிலும் தன் மனத்தில் கடவுளை தரிசித்துக்கொள்ள முடியும். எனினும், ஒரு நதியைக்கூட, ஒரு மரத்தைக்கூட சிருஷ்டிக்க முடியாத மனிதன், எப்படி எல்லாம் வல்ல இறைவனைச் சிருஷ்டிக்க முடியும்? எனவே, கடவுள் மனிதனைச் சிருஷ்டித்திருக்கிருர் என்பதுதான் கலப்பற்ற உண்மையாகும். அதற்கு மாருன எண்ணம் வெறும் மயக்கமேயாகும். ஆனல், எவரும், தாம் விரும்பினல், ஒரு காரியத்தைச் செய்பவரும் கடவுள் அல்ல, அதற்குக் காரணமும் கடவுள் அல்ல என்று சொல்லலாம். அதுபோலவே, எந்தக் காரியத்தையும் செய்பவர் கடவுள்தான், அதற்குக் காரணமும் கடவுள்தான் என்றும் சொல்லலாம் அல்லவா?

—'ஹரிஜன்' – 14—4—1946

# 12

# மகத்தான ஆறுதல் கடவுளே

எனது அன்பார்ந்த ஜவாஹர்லால்,

நான் திதாலில் இருக்கிறேன். இந்த இடம் ஓரளவு ஜுஹுவைப் போல் இருக்கிறது. வங்காள சோதனைக்கு என்னைத் தகுதியுள்ளவனகச் செய்துகொள்ளுவதற்காக, இங்கே நான்கு நாட்கள் ஓய்வு எடுத்துக்கொண்டு வருகிறேன். இதுவரை எனக்கு வந்துள்ள கடிதங்களுக்குப் பதில் எழுதிச் சமாளிக்க இங்கே நான் முயற்சித்து வருகிறேன். அவற்றில், "கடவுளும் காங்கிரசும்" என்ற கட்டுரையைக் குறித்து தாங்கள் எழுதியுள்ள கடிதமும் இருக்கிறது. உங்களுடைய சங்கடமான நிலைமைக்காக நான் அனுதாபப் படுகிறேன். வாழ்க்கையிலும், உலகத்திலும் உண்மையான மதம்தான் எல்லாவற்றையும் விட மகத்தானது. அதனல் தான் அது எல்லாவற்றையும் காட்டிலும் அதிகமாக துஷ்பிரயோகம் செய்யப்படுகிறது. அவ்வித துஷ் பிரயோகத்தையும், அதை சுயநல நோக்கத்துடன் உபயோகித்துக் கொள்ளுவோரையும் பார்ப்பவர்கள், உண்மையைக் காணத்தவறி விடுகிருர்கள். எனவே அவர்கள் மதத்தினிடத்திலேயே வெறுப்புக் கொள்ளுவது இயல்பேயாகும். எனினும், மதம் ஒவ்வொரு தனி நபரையும் பொறுத்த விஷயம், அதுவும் உள்ளத்தைப் பொறுத்த விஷயமாகும். உங்கள் விருப்பம்போல் அதற்கு நீங்கள் என்ன பெயரிட்டு அழைத்தாலும், மிகவும் கடுமையான தீயினல் சூழப்பட்டிருக்கையில் மகத்தான மன ஆறுதல் அளிப்பதே கடவுள். அது எப்படியாயினும், நீங்கள் சரியான பாதையிலேயே சென்று வரு

கிறீர்கள். முற்றிலும் பகுத்தறிவைக் கொண்டே பரிசீலனை செய்வதை நான் ஆட்சேபிக்கவில்லை. எனினும், அது பல சமயங்களிலும் திகைப்பை உண்டாக்குவதுடன், மூட நம்பிக்கையின் எல்லையாக உள்ள தவறான பாதைகளில் கொண்டுபோய் விட்டுவிடுகிறது.

25-4-1925 தங்கள்
பாபு

(பண்டித ஜவாஹர்லால் நேருவுக்கு காந்திஜி எழுதிய ஒரு கடிதத்தின் பகுதி)

# 13

# அறியாதவர் மறுக்கட்டும்

கேள்வி: கடவுள் ஒரு நபர் அல்ல என்றும் அவர் பரிபூர்ணமானவர் என்றும் நீங்கள் அடிக்கடி கூறிவந்திருக்கிறீர்கள். பல்வேறு உணர்ச்சிகளிலிருந்தும் குணங்களிலிருந்தும் அவர் விடுபட்டவர் என்றும் கூறியிருக்கிறீர்கள். அப்படியாயின், அவர் உலகத்தின் கர்த்தா அல்ல என்பதும், மனிதன் செய்யும் புண்ணிய, பாவங்களையொட்டி அவர் தீர்ப்புக் கூறுவதில்லை என்பதுமே அதற்கு அர்த்தமாகும். கடவுளின் சித்தம் என்றும் அடிக்கடி நீங்கள் குறிப்பிடுகிறீர்கள். எவ்வித குணமும் இல்லாத கடவுளுக்கு எவ்விதம் விருப்பம் இருக்க முடியும்? உங்கள் விருப்பத்தை அவரது விருப்பத்திற்கு இசைந்ததாக நீங்கள் எவ்விதம் செய்ய முடியம்? உங்களுடைய ஆன்மாவுக்கு அதன் விருப்பப்படி செய்ய அதிகாரம் உண்டு. அவ்விதம் செய்வதில் அது வெற்றிபெறவில்லையெனில், அதற்குக் காரணம் முற் பிறப்பின் வினையேயன்றி, கடவுளுக்கும் அதற்கும் எவ்வித சம்பந்தமும் இல்லை. எனவே, சாதாரண மக்களை ஏமாற்றுவதற்காக, நீங்கள் கடவுள் சித்தம் என்று கூறிக்கொண்டிருக்கக் கூடாது. ஏனெனில், நீங்கள் ஒரு சத்தியாக்கிரகி அல்லவா?

பதில்; கடவுளைப் பற்றி நான் என்ன நம்புகிறேனோ, அதையே ஒளிவு மறைவின்றி அப்படியே கூறுகிறேன். மக்களை ஏமாற்றி அவர்களைத் தவறான பாதையில் செலுத்தி எனக்கு நானே ஏன் பாவத்தையும் அழிவையும் தேடிக்கொள்ள வேண்டும்? அவர்களிடமிருந்து நான் எவ்வித வெகுமதியையும் நாடவில்லை. கடவுள் சிருஷ்டிக்கும் சக்தியுடையவர் என்றும், அல்லாதவர் என்றும் கூட நான் நம்புகிறேன். உண்மையின் பல அம்சங்கள் என்ற சித்தாந்தத்தை நான் அங்கீகரிப்பதன் பலனே இதுவாகும். ஜைனர்களின் ஆகமத்திலிருந்து நான், கடவுளின்சிருஷ்டிக்கும் சக்தியற்றஅம்சத்தை நிரூபிக்கிறேன். உண்மை என்னவெனில், நாம் எல்லோரும் சிந்திக்க முடியாதவரைப் பற்றி சிந்திக்கிறோம்; விவரிக்க முடியாதவரைப் பற்றி விவரிக்கிறோம்; அறிய முடியாதவரைப் பற்றி அறிய

முயற்சிக்கிறோம். அதனால்தான் நமது பேச்சில் தடுமாற்றம் ஏற்படுகிறது; அதில் குறைகள் இருக்கின்றன; பெரிதும் முன்னுக்குப் பின் முரண்பாடு உள்ளதாகவும் இருக்கிறது. அதனால்தான் வேதங்கள் பிரம்மத்தைப் பற்றிக் குறிப்பிடும் போது, 'இது அல்ல', 'இது அல்ல', என்று கூறுகின்றன. அவரோ அல்லது அதுவோ இது அல்லவாயின் அவரோ அல்லது அதுவோ இருக்கிறது என்ருகிறது. நாம் இருக்கிறோம் எனில், நமது பெற்றோர்களும் பெற்றோர்களின் பெற்றோர்களும் இருக்கிறார்கள் எனில், பின்னர் சிருஷ்டி யாவற்றிற்கும் பெற்றோர் இருக்க வேண்டும் என்று நம்புவது நியாயமேயாகும். அவர் இல்லையாயின், நாமும் இருக்கமுடியாது. அதனால்தான் நாம் எல்லோரும் ஒரே குரலில் ஒரு கடவுளை வெவ்வேறு பெயரிட்டு அழைக்கிறோம். அதாவது கடவுளை, பரமாத்மா, ஈஸ்வரன், சிவன், விஷ்ணு, ராமன், அல்லா, குதா, தாதா ஹார்முஸ்தா, ஜிஹோவா என்றும் இன்னும் எல்லையின்றிப் பல்வேறு பெயர்களிலும் அழைக்கிறோம்.

அவர் ஒருவர்; அதே சமயத்தில் அவர் பலராகவும் இருக்கிறார். அவர் அணுவைக் காட்டிலும் சிறியவராகவும், இமயமலையைக் காட்டிலும் பெரியவராகவும் இருக்கிறார். அவர் கடல் நீரில் ஒரு துளியில் கூட அடங்கி இருக்கிறார். அதேசமயம் அவர் ஏழு கடல்களிலும் அடங்க முடியாதவாறு அவ்வளவு பிரம்மாண்டமானவராக இருக்கிறார். அவரை அறிந்து கொள்ள பகுத்தறிவுக்குச் சக்தி இல்லை. அவர் பகுத்தறிவுக்கு எட்டாதவர், அதற்கு அப்பாற்பட்டவர். ஆனால், இவ்விஷயத்தை நான் விவரித்துக் கொண்டிருக்க வேண்டிய அவசியமில்லை. இவ்விஷயத்தில் நம்பிக்கை தான் முக்கியமாகும். எனது தர்க்கவாதம் எண்ணிக்கையற்ற கற்பனைகளை உண்டுபண்ணலாம்; எண்ணிக்கையற்ற கற்பனைகளைத் தவிடுபொடியாக்கியும் விடலாம். ஒரு நாத்திகர், இதன் சம்பந்தமான வாதத்தில் என்னைத் தோற்கடிக்கலாம். ஆனால், எனது பகுத்தறிவைக் காட்டிலும் எனக்குள்ள நம்பிக்கை அதிக சக்தியுள்ளது. எனவே, "கடவுள் இருக்கிறார், இருந்தார், என்றென்றும் இருப்பார்" என்று கூறி நான் உலகம் முழுவதற்கும் சவால் விடுக்க முடியும்.

எனினும், கடவுள் இருப்பதை மறுக்க விரும்புவோருக்கு அவ்விதமே செய்ய சுதந்திரம் உண்டு. கடவுள் இரக்கமும் கருணையும் உள்ளவர். அவர் பூமியில் உள்ள சாதாரண மன்னரைப் போன்றவர் அல்ல. அவரது ஆட்சி அதிகாரத்தை நாம் ஒப்புக்கொள்ளும்படி செய்ய அவருக்கு ராணுவம் எதுவும் தேவையில்லை. அவர் நமக்குச் சுதந்திரம் அளிக்கிறார். அப்படியிருந்தும் அவரது கருணையானது, அவரது விருப்பத்திற்குத் தலைவணங்கும்படி நம்மை வற்

புறுத்துகிறது. அவரது விருப்பத்திற்கு நம்மில் யாராவது தலைவணங்காவிடில், 'அப்படியே இருக்கட்டும். அதற்காக எனது சூரியன் உன்மீது குறைவாகப் பிரகாசிக்கமாட்டான்; எனது மேகங்கள் உனக்காகக் குறைவாக மழைபெய்யா; என் ஆட்சியை அங்கீகரிக்கும்படி நான் உன்னை வற்புறுத்த வேண்டிய அவசியமில்லை' என்றே கடவுள் கூறுகிறார். அத்தகைய கடவுள் இருப்பதை அறியாதவர்கள் மறுத்துக் கொண்டிருக்கட்டும். அவரிடத்தில் நம்பிக்கையுள்ள கோடிக் கணக்கானவர்களில் நானும் ஒருவன். அவருக்குத் தலை வணங்குவதிலும், அவரது மகிமையைக் குறித்துத் துதி பாடுவதிலும் நான் ஒருகாலத்திலும் அலுப்பு அடைவதில்லை.

'எங் இந்தியா' – 21–1–1921

# 14

# கடவுள் உண்டா, இல்லையா?

தென்னிந்தியாவுக்கு நான் சென்றிருந்தபோது, சில ஹரிஜனங்களையும் மற்றவர்களையும் சந்தித்தேன். கடவுளிடத்தில் தங்களுக்கு நம்பிக்கை இராததுபோல் அவர்கள் பாசாங்கு செய்தார்கள். ஓரிடத்தில் ஹரிஜனங்களின் மகாநாடு ஒன்று நடந்தது. ஹரிஜனங்கள் தங்களுடைய சொந்தப் பணத்தில் தங்களுக்கென்றே கட்டியிருந்த ஒரு கோவிலின் நிழலிலேயே அந்த மகாநாட்டு அக்கிராசனர் நாத்திகத்தை ஆதரித்து ஒரு பிரசங்கம் செய்தார். ஹரிஜனங்களை, சாதி ஹிந்துக்கள் நடத்தும் விதத்தைக் கண்டு வெறுப்படைந்த உள்ளத்திலிருந்து அந்தப் பிரசங்கம் வந்தது. எனவே, அத்தகைய கொடுமை வளர்ந்திருப்பதை அனுமதித்துள்ள காருண்ய சக்தி ஒன்று இருப்பது சந்தேகத்திற்கு இடமானது என்று அவர் தமது பிரசங்கத்தை ஆரம்பித்தார். எனவே, அவரது அந்த நம்பிக்கைக்கு ஓரளவு நியாயம் இருந்தது.

ஆனால், மற்றோரிடத்திலிருந்து வந்த மற்றொரு விதமான நம்பிக்கையின்மைக்குக் கீழ்க்கண்ட விஷயம் ஓர் உதாரணமாகும்:

"கடவுள், சத்தியம் அல்லது நிச்சயம் என்பது பற்றி நாம் முன் கூட்டியே கொண்டுள்ள ஓர் எண்ணமானது, அவ்விஷயமாக நமது ஆராய்ச்சியின் போக்கையே அடியோடு மாற்றி, அதற்கு ஒரு பெரிய தடையாகி விடலாம், அதன் விளைவாக நமது வாழ்க்கையின் லட்சியமே தோல்வியடைந்து விடலாம் என நீங்கள் நினைக்கவில்லையா? உதாரணமாக, ஒழுக்க சம்பந்தமான சில உண்மைகளை, அடிப்படையானவை என்று நீங்கள் கருதுகிறீர்கள். நாம் அதன் சம்பந்தமான ஆராய்ச்சியில் ஈடுபட்டுள்ளோம். நிச்சயமானது எது என்பதை நாம் கண்டுபிடிக்காதவரையில், குறிப்பிட்ட ஓர் ஒழுக்க விதிதான் உண்மை என்றும்

நமது ஆராய்ச்சியில் அதுதான் நமக்கு உதவியளிக்கப்போகிறது என்றும் நாம் எப்படி பெருமைப்படவோ அல்லது உறுதி கூறவோ முடியும்?''

செயல்படக்கூடிய ஏதாவது சில உத்தேசங்களின்றி, எவ்வித ஆராய்ச்சியும் முடியாத காரியம். நாம் ஒன்றையும் ஒத்துக்கொள்ளாவிடில், ஒன்றையும் கண்டுபிடிக்க முடியாது. புத்திசாலிகளும் மூடர்களும் உள்ளிட்ட இந்த உலகம் ஆரம்பமானது முதல், நாம் இருப்பது உண்மையாயின் கடவுளும் இருக்கிறார்; கடவுள் இல்லை எனில் நாமும் இல்லை என்ற உத்தேசத்தின் மீதே உலகம் இயங்கிக் கொண்டுவருகிறது. கடவுளிடத்தில் உள்ள நம்பிக்கை மானிடவர்க்கத்துடன் கலந்தே இருந்து வருவதால், சூரியன் இருக்கிறார் என்ற உண்மையைக் காட்டிலும் கடவுள் இருக்கிறார் என்ற உண்மை அதிக உறுதியுடன் விவாதிக்கப்பட்டுவருகிறது. இந்த நம்பிக்கையே, நமது துன்பங்களும் குறையும்படி செய்திருக்கிறது. வாழ்க்கையில் நமக்குக் கை கொடுத்து ஆதரிப்பதும் அதுதான். மரணத்தில் ஒரே ஒரு ஆறுதலாக இருப்பதும் அந்த நம்பிக்கையே ஆகும். இந்த நம்பிக்கை காரணமாகவே, உண்மையைப் பற்றிய ஆராய்ச்சி ருசிகரமானதாகவும், பலன் தரத்தக்கதாகவும் இருக்கிறது. எனினும், சத்தியத்தை ஆராய்ச்சி செய்வது கடவுளை ஆராய்ச்சி செய்வதேயாகும். சத்தியம்தான் கடவுள். கடவுள் இருக்கிறார். ஏனெனில், சத்தியம் இருக்கிறது. நாம் அத்தகைய ஆராய்ச்சியில் ஈடுபடுவதற்குக் காரணம் என்னவெனில், சத்தியம் இருக்கிறது என்பதை நாம் நம்புகிறோம். பிரசித்திபெற்ற, நன்கு பரீட்சித்துப்பார்க்கப்பட்ட ஆராய்ச்சி விதிகளை நுணுக்கமாக அனுசரிப்பதன் மூலமும், விடாமுயற்சியுடன் ஆராய்ச்சி செய்வதன் மூலமுமே அந்த சத்தியத்தைக் கண்டுபிடிக்கமுடியும் என்பதையும் நாம் நம்புகிறோம். அத்தகைய ஆராய்ச்சி தோல்வியடைந்ததாகச் சரித்திரத்தில் குறிப்பு எதுவும் இல்லை. கடவுளிடத்தில் நம்பிக்கை இராதவர்களைப்போல் பாசாங்கு செய்யும் நாத்திகர்கள் கூட சத்தியத்தில் நம்பிக்கையுடையவர்களாக இருக்கிறார்கள். அவர்கள் செய்யும் தந்திரம் என்னவெனில், கடவுளுக்கு மற்றொரு பெயர்,—புதிய பெயர் அல்ல,—கொடுப்பதேயாகும். கடவுளுக்கு ஏராளமான பெயர்கள் இருக்கின்றன. சத்தியம் அவற்றிற்கெல்லாம் சிகரம் போன்றது.

கடவுளைப் பற்றி எது உண்மையோ அது குறைந்த அளவில், சில மூலாதாரமான ஒழுக்கங்கள் பற்றியும் உண்மையாகும். உண்மையில் அவை, கடவுளிடத்தில் அல்லது சத்தியத்தில் உள்ள நம்பிக்கையில் உள்ளடங்கியிருக்கின்றன. அவற்றிலிருந்து விலகுவோர் துன்பத்திற்கு உள்ளாகும்படியும் நேர்ந்திருக்கிறது. அனுசரிப்பது கஷ்டம் என்பது ஒரு விஷயம்; நம்பிக்கையின்மை வேறு விஷயமாகும். எனவே, இரண்டையும் குழப்பக்கூடாது. ஓர் இமாலய ஆராய்ச்சி கோஷ்டியினர், தாங்கள் வெற்றி பெறுவதற்கு சில குறிப்பிட்ட நிபந்தனைகளை நிறைவேற்றுவதில் கஷ்டம் இருக்கிறது என்பதற்காக, அக்கோஷ்டியினரின் முயற்சி

அசாத்தியமானது என்று கூறிவிட முடியாது. அத்தகைய கஷ்டம், ஆராய்ச்சியில் அக்கறையையும் உற்சாகத்தையும் அதிக மாக்குகிறது. எனவே, கடவுள் அல்லது சத்தியத்தை ஆராய்ச்சி செய்யும் இந்தக் கோஷ்டி, இமயமலைச் சிகர ஆராய்ச்சியில் ஈடுபட்டுள்ள எண்ணிக்கையற்ற கோஷ்டிகளைக் காட்டிலும் மிகமிக அதிக முக்கியத்துவம் வாய்ந்ததாகும்; எனவே, அதிக கவர்ச்சியுள்ளதும் ஆகும். அவ்விஷயமாக நமக்கு உற்சாகம் இல்லையெனில், அதற்குக் காரணம் நமக்குள்ள நம்பிக்கையின் பலவீனமே. இந்த உலகத்தில் ஒன்றே ஒன்று மாத்திரமே நிச்சயமானது. ஆனால், நாம் நமது புறக்கண்களால் காண்பதையே நாம் அதிக உண்மையானதாகக் கருதுகிறோம். வெளித் தோற்றங்கள் ஏமாற்றும் தன்மையுள்ளவை என்பதை நாம் அறிவோம். அப்படியிருந்தும், அற்ப விஷயங்களை நாம் உண்மைகளாகக் கருகிறோம். அவை அற்ப விஷயங்கள் என்பதை நாம் உணர்ந்து கொண்டால், போராட்டத்தில் பாதி வெற்றி கிடைத்தது போலத்தான். அது சத்தியம் அல்லது கடவுளைப் பற்றிய ஆராய்ச்சியில் பாதிக்குமேல் முடிந்துவிட்டதாகும். அற்ப விஷயங்களிலிருந்து நாம் நம்மை விடுவித்துக்கொண்டாலொழிய, மகத்தான ஆராய்ச்சிக்கான ஓய்வுகூட நமக்கு இருக்க முடியாது.

—'ஹரிஜன்' – 21—9—1934

# 15

# நாத்திகர்களை மாற்றுவது எப்படி?

**கேள்வி:** கடவுளிடத்திலும் மதத்தினிடத்திலும் நம்பிக்கை உண்டாகும்படி நாத்திகர்களை எப்படி மாற்ற முடியும்?

**பதில்:** அதற்கு ஒரே ஒரு வழிதான் இருக்கிறது. கடவுளின் உண்மையாள ஊழியர் தம்முடைய தூய்மையினாலும் நன்னடத்தையினாலும் நாத்திகர்களை மாற்ற முடியும். வாதத்தினால் ஒருகாலத்திலும் அவர்களை மாற்ற முடியாது. கடவுள் இருப்பதை நிரூபிக்க எண்ணிக்கையற்ற நூல்கள் எழுதப்பட்டுள்ளன. எனவே, கடவுளை நிரூபிப்பதில் வாதம் வெற்றிபெற்றிருக்குமாயின், இன்று உலகத்தில் ஒரு நாத்திகர் கூட இருக்கமாட்டார். ஆனால், நிலைமை அதற்கு நேர் மாறாக இருக்கிறது. அவ்விஷயமாக எத்தனையோ இலக்கியங்கள் இருந்தும்கூட, நாத்திகம் அதிகமாகியே வருகிறது. எனினும், தன்னை நாத்திகன் என்று சொல்லிக்கொள்ளும் ஒருவன் பெரும்பாலும் உண்மையில் அப்படி இருப்பதில்லை. அதுபோலவே, தன்னை ஆஸ்திகன் என்று கூறிக்கொள்ளுபவன் உண்மையில் ஆஸ்திகனாக இருப்பதில்லை. "நீங்கள் கடவுளிடம் நம்பிக்கையுடையவர்களென்றால், நாங்கள் நம்பிக்

கையில்லாதவர்கள்'' என்று நாத்திகர்கள் சில சமயங்களில் கூறுகிறார்கள். அவ்விதம் கூற அவர்களுக்கு உரிமை உண்டு. ஏனெனில், தாங்கள் நம்பிக்கையுள்ளவர்கள் என்று வேஷம் போடுவோர் பெரிதும் உண்மையில் அப்படி இருப்பதில்லை. நாகரிகம் என்பதற்காகவோ அல்லது உலகத்தை ஏமாற்றுவதற்காகவோதான் பலர் கடவுளை வணங்குகிறார்கள். அத்தகைய நபர்கள் நாத்திகர்களிடையே என்ன செல்வாக்கைப் பெறமுடியும்? எனவே, தெய்வ நம்பிக்கையுடையவர்கள் ஒரு விஷயத்தை உணரவேண்டும். தாங்கள் கடவுளிடம் உண்மையான நம்பிக்கையுடனிருந்தால், தமக்கு அண்டையில் உள்ளவர்கள் இயல்பாகவே நாத்திகர்களாக இருக்க மாட்டார்கள் என்ற நம்பிக்கை அத்தகையோருக்கு இருக்க வேண்டும். உலகத்தைப்பற்றி யெல்லாம் அவர்கள் கவலைப் படவேண்டியதில்லை. கடவுளின் கருணையினால்தான் நாத்திகர்கள் வாழ்கிறார்கள் என்பதை நாம் நினைவில் வைத்துக் கொள்ளவேண்டும். பெயரளவில் மாத்திரம் கடவுளைப் பூஜை செய்வோர் தெய்வ நம்பிக்கை உடையவர்கள் அல்ல; கடவுளின் கட்டளைப்படி நடப்பவர்களே உண்மையான நம்பிக்கை உடையவர்கள் என்று கூறப்பட்டிருப்பது எவ்வளவு உண்மை!

—'ஹரிஜன்' – 1—9—1940

## 16

# கடவுளா, கடவுள்களா ?

**கா**ந்திஜியைக் கண்டு பேசிய ஒரு ரோமன் கத்தோலிக்கப் பாதிரியார் கீழ் வருமாறு ஒரு யோசனை கூறினார்: ''ஹிந்து மதம், கடவுள் ஒருவரே என்பதை ஒப்புக் கொண்டுவிடுமாயின், கிறிஸ்தவ மதமும் ஹிந்து மதமும் ஒத்துழைப்பதன் மூலம் இந்தியாவிற்குத் தொண்டு செய்ய முடியும்.

**காந்திஜி:** அத்தகைய ஒத்துழைப்பு ஏற்படுவதைக் காண நான் விழைகிறேன். ஆனால், தற்போதுள்ள கிறிஸ்தவப் பாதிரிமார் சங்கங்கள் ஹிந்து மதத்தை ஏளனம் செய்வதில் பிடிவாதமாக இருந்துவரும் வரையில், எவரும் ஹிந்து மதத்தைக் கைவிட்டு அதைக் கண்டித்தாலன்றி சுவர்க்கத்திற்குப் போக முடியாது என்று கூறும் வரையில் அவ்வித ஒத்துழைப்பு ஏற்படுவது முடியாத காரியம். ஆனால், மௌனமாகத் தொண்டு புரிந்துகொண்டும், ஹிந்து சமூகங்களின் மீது தமது வாழ்க்கையின் இனிய மணம் வீசும்படிச் செய்து கொண்டும் இருக்கும் ஒரு நல்ல கிறிஸ்தவரை நான் கற்பனை செய்துகொள்ள முடியும். தனது நறுமணம் வியாபிக்கும்படி செய்ய் ரோஜா புஷ்பம் பிரசங்கம் எதுவும் செய்ய வேண்டிய

அவசியமில்லை. அதன் நறுமணத்தை யாரும் தடுக்க முடியாது. அதுபோலவேதான் ஓர் உண்மையான தார்மிக வாழ்க்கையும் இருக்கும். அப்போது நிச்சயமாக பூமியில் அமைதியும், மனிதர்களிடையே அன்பும் நல்லெண்ணமும் நிலவும். ஆனால், போர்க்குணமுள்ள, உடல் பலத்தின் உதவியை நாடும் கிறிஸ்தவ மதத்தினால், அத்தகைய அமைதியும் நல்லெண்ணமும் ஏற்படும்படி செய்ய முடியாது. அத்தகைய கிறிஸ்தவ மதத்தை நீங்கள் பைபிளில் காண முடியாது; ஆனால், ஜெர்மனியிலும் மற்ற நாடுகளிலும் அதை நீங்கள் காணலாம்.

**பாதிரியார்:** இந்தியர்கள் ஒரே ஒரு கடவுளிடத்தில் நம்பிக்கை வைக்கத் தொடங்கி, விக்கிரக பூஜையையும் கைவிடுவார்களானால், எல்லாக் கஷ்டங்களும் தீர்ந்துவிடும் அல்லவா?

**காந்திஜி:** அத்துடன் கிறிஸ்தவர்கள் திருப்தி அடைந்துவிடுவார்களா? அவர்கள் எல்லோரும் தங்களுக்குள் ஒற்றுமையாக இருந்துவருகிறார்களா?

**பாதிரியார்:** கிறிஸ்தவர்கள் அடங்கிய பிரிவுகளிடையே எல்லோரும் ஒற்றுமையுடன் இல்லை என்பது உண்மையே.

**காந்திஜி:** அப்படியானால் நீங்கள் கற்பனையான ஒரு கேள்வியே கேட்டுக்கொண்டிருக்கிறீர்கள். உங்களை ஒன்று கேட்கலாமா? இஸ்லாமும் கிறிஸ்தவ மதமும் ஒரே கடவுளையே நம்புவதாகக் கூறப்படுகிறது. அப்படியிருந்தும் இரண்டிற்கும் ஏதாவது ஐக்கியத் தன்மை இருக்கிறதா? இந்த இரண்டிற்கும் ஐக்கிய பாவம் இல்லையெனில், நீங்கள் கூறுகிற யோசனைக்கு இணங்க கிறிஸ்தவர்களுக்கும் ஹிந்துக்களுக்கும் கூட்டுறவு எப்படி ஏற்படமுடியும்? இதற்கு என்னிடம் பரிகாரம் இருக்கிறது. ஆனால், முதலாவதாக ஹிந்துக்கள் பல கடவுள்களை நம்புகிறவர்கள் என்றும், அவர்கள் விக்கிரக பூஜை செய்கின்றவர்கள் என்றும் கூறுவதை நான் ஆட்சேபிக்கிறேன். பல கடவுள்கள் இருப்பதாக அவர்கள் கூறுகிறார்களெனினும், கடவுள்களுக்கெல்லாம் கடவுளான ஒருவர்தான் இருக்கிறார் என்றும் அணுவளவும் சந்தேகத்திற்கு இடமின்றி அவர்கள் கூறுகின்றனர். எனவே, ஹிந்துக்கள் பல கடவுள்களிடம் நம்பிக்கையுடையவர்கள் என்று கூறுவது சரியல்ல. அவர்கள் பல உலகங்களில் நம்பிக்கை உள்ளவர்கள் என்பது உண்மைதான். மனிதர்கள் வாழும் உலகமும் மிருகங்கள் வாழும் மற்றொரு உலகமும் இருப்பது போல, கடவுள்கள் என்று கூறப்படும் உயர்ந்தவர்கள் இருக்கும் உலகமும் இருக்கிறது. அவர்களை நாம் பார்க்க முடியாதெனினும், அவர்கள் இருக்கிறார்கள் என்பது உண்மையே. இந்தத் தகராறுக்கெல்லாம் காரணம், தேவன் அல்லது தேவதை என்ற சொல்லின் ஆங்கில மொழி

பெயர்ப்பே யாகும். அந்தச் சொல்லுக்கு ஆங்கிலத்தில் கடவுள் (God) என்பதைக் தவிர சிறந்த சொல் வேறு எதுவும் இல்லை. ஆனல், கடவுள் என்ருல் ஈசுவரன், தேவாதி தேவன், கடவுளுக்கெல்லாம் கடவுள் என்பதே. எனவே, பல்வேறு தெய்விக சக்தியுள்ளவர்களைக் குறிப்பிடும்போது கடவுள் என்ற சொல்லே உபயோகிக்கப்பட்டிருப்பதை நீங்கள் பார்க்கலாம். அதுதான் அத்தகைய குழப்பத்திற்கு இடம் கொடுத்துவிட்டது. நான் ஒரு பூரணமான ஹிந்து என்றே நம்புகிறேன். எனினும், நான் ஒரு காலத்திலும் பல கடவுள்களிடம் நம்பிக்கை வைத்ததில்லை. எனது குழந்தைப் பருவத்தில் கூட எனக்கு அத்தகைய நம்பிக்கை இருந்ததில்லை. அவ்வித நம்பிக்கையுடன் இருக்கும்படி யாரும் எனக்குக் கற்பித்ததுமில்லை.

—'ஹரிஜன்'-13—3—1937

# 17

# கடவுளின் சட்டம்

**கேள்வி:** *14-4-1946* ''ஹரிஜன் பந்து''வில், ''சட்டமும், சட்டம் இயற்றுபவரும் கடவுள்தான்'' என்று நீங்கள் குறிப்பிட்டிருக்கிறீர்கள். அது எனக்குப் புரியவில்லை. சட்டங்கள் மனிதனல் செய்யப்படுகின்றன. அவை, காலத்திற்கு உகந்தவாறு மாறிக்கொண்டே வருகின்றன. உதாரணமாக, திரௌபதிக்கு ஐந்து கணவர்கள் இருந்தார்கள். அப்படியிருந்தும் அவள் பதிவிரதையாகவே கருதப்பட்டாள். ஆனல், இன்று அவ்விதம் செய்யும் ஒரு பெண்ணை ஒழுக்கமற்றவள் என்றே கருதுவார்கள்.

**பதில்:** இங்கே சட்டம் என்பது கடவுளின் சட்டமாகும். மனிதன் தன் அறிவுக்குத் தகுந்தவாறு அந்தச் சட்டத்தை வியாக்கியானம் செய்கிருன். உதாரணமாக, பூமி சுற்றுவது இயற்கையின் சட்டமாகும். அது முற்றிலும் சரி என்பதை இன்று அறிந்துள்ளோம். எனினும், கலீலியோவுக்கு* முன் வானசாஸ்திர நிபுணர்கள் வேறு விதமாக நம்பிவந்தார்கள். மகாபாரதம், மறைமுகமாக நீதிகளை போதிக்கும் தத்துவக் கதையேயன்றி, அது சரித்திரம் அல்ல. திரௌபதி என்பது ஆன்மா; பஞ்ச பாண்டவர்கள் என்பது ஐம்புலன்கள். திரௌபதி பாண்டவர்களின் மனைவியாக இருந்தாள் என்ருல், ஐம்புலன்களுடன் ஆன்மா இணைந்திருந்தது என்பதே பொருளாகும்.

'ஹரிஜன்' – 4—8—1946

---

* கலீலியோ (1564—1642) உலகப் புகழ்பெற்ற இத்தாலிய வான சாஸ்திர நிபுணராக விளங்கினர். அவர் பல்வேறு இயற்கை சக்திகளைக் கண்டுபிடித்தவர். தூர தரிசினிக் கண்ணுடியைக் கண்டுபிடித்த முதல்வர்களில் அவரும் ஒருவர். அதன் மூலம் தான் கலீலியோ தமது முக்கியமான ஆராய்ச்சிகளில் வெற்றி பெற்ருர்.

# 18

# மன்னர்களுக்கெல்லாம் மன்னர்

பஞ்சகனியில் நடந்த பிரார்த்தனைக் கூட்டத்தில் காந்திஜி கூறியதாவது :

"இப்போது பாடப்பட்ட கீதத்தில்,'கடவுள் மறைந்திருக்கிறார், அதே சமயத்தில் அவர் எங்கும் இருக்கிறார்' என்று கவி கூறுகிறார். அது உண்மையே. நமது உள்ளத்தின் ஆழத்தில் மறைந்து கிடக்கும் எண்ணங்களை, நம்மைக் காட்டிலும் கடவுள் நன்கு அறிகிறார். கடவுளை நம்பியிருப்பவர்கள், பூமியிலுள்ள மிக மிகக் கொடிய அரசாங்கத்திற்கோ அல்லது அதன் அதிகாரிகளுக்கோ கூட பயப்பட மாட்டார்கள். ஏனெனில், அவர்களுக்கு மன்னர்களுக்கெல்லாம் மன்னரான கடவுளின் பாதுகாப்பு இருந்துவரும். அந்த மகாமன்னரின் கண்களுக்குத் தெரியாமல் எதையும் மறைத்து வைக்க முடியாது."

மற்றொரு பிரார்த்தனைக் கூட்டத்தில் காந்திஜி கூறியதாவது: "இன்று பாடப்பட்ட கீதம் பின்வருமாறு கூறுகிறது : 'நேர்மையான எண்ணத்தினாலும், ஒழுங்கான, புத்திசாலித்தனமான காரியங்களைச் செய்வதாலும், சரியான பேச்சினாலும் எனது உள்ளத்தைத் தூய்மையாக்கிக் கொள்ளுவதன் மூலம் உங்களை (கடவுள்) நான் நினைவு கூரக் கருணை புரியுங்கள்.' இந்த நிபந்தனைகள் யாவும் நிறைவேற்றப்பட்டாலன்றி, எவரும் கடவுளின் அருகில் செல்லலாமென்று எதிர்பார்க்க முடியாது. அந்தக் கவி மேலும் சொல்லுகிறார் : 'எங்களுக்காக நீங்கள் செய்துள்ள உதவிகளுக்கெல்லாம் நாங்கள் உங்களுக்குத் தலை வணங்குகிறோம்; உங்களுக்கு நன்றி செலுத்துகிறோம். நாங்கள் என்றும் உங்களுடைய கடனாளிகளாகவே இருந்து வருவோம்.' கடவுளுக்கு நாம் கொடுக்க வேண்டிய இந்தக் கடன் என்ன ? அதை நாம் எப்படித் திருப்பிக் கொடுக்க முடியும் ? நமது கடமையைப் பூரணமாகச் செய்வதன் மூலமே, அதை நாம் திருப்பிக் கொடுக்க முடியும். பூமியில் பிறந்த எவரும் வாழ்க்கையில் தமது கடமையைப் பூரணமாகச் செய்து விட முடியாது. எனவே, நாம் என்றென்றும் கடவுளிடம் கடன் பட்டவர்களாகவே இருந்து வருவோம்.

'ஹரிஜன் – 28—7—1946

# 19

# கடவுள் ஒருவரே அழியாதவர்

சென்ற வியாழக்கிழமை காந்திஜி பிரார்த்தனைக் கூட்டத்திற்கு வர எதிர்பாராத விதமாகச் சிறிது நேரமாகிவிட்டது. அன்று அதுவே, அவரது பேச்சிற்கு அடிப்படையான விஷயமாகியது.

முக்கியமான ஒரு பிரமுகர் வந்திருந்ததால், காந்திஜி அவருடன் பேசிக்கொண்டிருந்ததில் நேரமாகிவிட்டது. எனினும், அவர் பிரார்த்தனை மைதானத்திற்கு வந்தபோது, பிரார்த்தனை ஆரம்பமாகிவிட்டது. பிரார்த்தனை முடிந்ததும், தாம் காலம் கடந்து வந்ததற்காக காந்திஜி மன்னிப்புக் கோரினர். பிறகு காந்திஜி பேசியதாவது :

எனக்காகக் காத்துக் கொண்டிருக்காமல் ஸ்ரீ கனுகாந்தி பிரார்த்தனையை ஆரம்பித்துவிட்டதற்காக நான் மகிழ்ச்சி அடைகிறேன். இந்தப் பூமியில் எவருக்காகவும் பிரார்த்தனை தாமதப் படக்கூடாது என்பது ஒரு பொது விதியாக இருக்கவேண்டும். கடவுளின் நேரம் ஒருபோதும் நிற்பதில்லை. ஆரம்பத்திலிருந்து கடவுள் வகுத்துள்ள கால சக்கரம் இடைவிடாது சுழன்று வருகிறது. உண்மையில் அவருக்கோ அல்லது அவரது நேரத்திற்கோ ஆரம்பமில்லை. அவருக்கு ஆதியும் இல்லை, அந்தமும் இல்லை.

ஆரம்பம் என்றிருக்கும் ஒவ்வொன்றிற்கும் முடிவும் உண்டு. சூரியன், சந்திரன், பூமி யாவும் ஒரு நாள் அழிந்தே தீர வேண்டும். எண்ணிக்கையற்ற ஆண்டுகளுக்குப் பிறகு அவை அழியும் நாள் வரலாம். கடவுள் ஒருவரே நிரந்தரமானவர், அழிவில்லாதவர். அவரை வருணிப்பதற்கான சொற்களை மனிதன் எப்படிக் கண்டு பிடிக்கமுடியும்? கடவுளின் கெடியாரம் எக்காலத்திலும் நிற்காது. எனவே, அவரைப் பிரார்த்தனை செய்ய வேண்டிய நேரத்தை, எந்த மனிதராயினும் எப்படி இழக்க முடியும்?

'ஹரிஜன்' – 16—6—1946

## 20

# மூடுதிரை விலகுமா?

வங்காளத்திலிருந்துவந்த ஒரு கடிதத்திலிருந்து கீழ்க் கண்ட பகுதியை எடுத்துக் கொடுத்திருக்கிறேன் :

"'ஓர் இளைஞரின் கஷ்டம்'+ என்ற தலைப்பில் கர்ப்பத்தடையைப் பற்றித் தாங்கள் எழுதியிருந்த கட்டுரையை வாசிக்கும் வாய்ப்பு எனக்குக் கிடைத்

*'ஓர் இளைஞரின் கஷ்டம்' என்ற தலைப்பில் காந்திஜி 25—4—36-இல் எழுதிய கட்டுரையின் ஒரு பகுதியைக் கீழே காணலாம்:

வாழ்க்கையிலிருந்து கடவுளை அடியோடு தள்ளிவிடுவதே நாகரிகமாக இருந்து வருகிறது. நிரந்தரமான கடவுளிடம் நிரந்தரமான நம்பிக்கை வைக்கவேண்டும் என்ற அவசியம் இல்லாமலேயே, வாழ்க்கையின் மகோன்னத நிலையை அடைவது சாத்தியம் என்று வற்புறுத்துவதும் நாகரிகமாகியிருக்கிறது. தங்களைக் காட்டிலும் எல்லையற்ற மடங்கு அதிகமான ஒரு சக்தி இருக்கிறது என்பதில் நம்பிக்கை இராதவர்களின், அத்தகைய சக்தியின் தேவை இராதவர்களின் மனத்தில் புலனடக்க விதியின் உண்மையைப் பதியும்

தது. கர்ப்பத்தடையைப்பற்றி தாங்கள் கூறியிருப்பதை நான் முற்றிலும் அங்கீகரிக்கிறேன். ஆனால், அடுத்த கட்டுரையில் கடவுளைப் பற்றிய உங்களுடைய கருத்தை ஒரு வாக்கியத்தில் குறிப்பிட்டிருக்கிறீர்கள். கடவுள் உண்டு என்ற கொள்கையை நிராகரிப்பது இந்நாட்களில் இளைஞர்களுக்கு ஒரு நாகரிகமாகி விட்டது என்றும், நிரந்தரமான கடவுளிடம் நிரந்தரமான நம்பிக்கை அவர்களுக்கு இல்லை என்றும் நீங்கள் கூறியிருக்கிறீர்கள்.

"கடவுள் இருப்பதை நீங்கள் நிரூபிக்க முடியுமா என்று நான் உங்களைக் கேட்கலாமா? அந்த ருஜு நிச்சயமானதாகவும், ஆட்சேபிக்க முடியாததாகவும் இருக்க வேண்டும். ஈசுவரனின் உருவத்தை அல்லது நிச்சயமான தன்மையை வருணிக்கும் முயற்சியில் ஈடுபட்ட ஹிந்து தத்துவஞானிகளும், புராதன ரிஷிகளும் இறுதியில் ஒரு முடிவிற்கு வந்துள்ளனர். அதாவது கடவுள் விவரிக்க முடியாதவர், மாயையினால் மறைக்கப்பட்டவர் என்பன போன்ற முடிவிற்கு அவர்கள் வந்திருக்கிறார்கள் என்றே எனக்குத் தோன்றுகிறது. சுருங்கக் கூறினால், அவர்கள் கடவுளை ஊடுருவிப்பார்க்க முடியாத இருளில் மூடி மறைத்திருக்கிறார்கள். அதன் விளைவாக அவர்கள், கடவுள் சம்பந்தமான சிக்கலான பிரச்னையைத் தெளிவாக்குவதற்குப் பதிலாக மேலும் சிக்கலாகும் படி செய்திருக்கிறார்கள். உங்களைப் போன்ற உண்மையான மகாத்மாவோ, அரவிந்த முனிவரோ, புத்தரோ அல்லது பண்டைய சங்கராச்சாரியார்களோ அத்தகைய ஒரு கடவுள் இருப்பதை உருவகப்படுத்தி உணர்ந்து கொள்ளலாம் என்பதை மறுக்க நான் துணியவில்லை. எனினும், சாதாரண மனித அறிவிற்கு அப்பாற்பட்டவராகக் கடவுள் இருக்கிறார்.

"எங்களைப் போன்ற சாதாரண மக்கள் நுண்ணிய அறிவு படைத்தவர்களல்ல. ஆழம் கண்டுபிடிக்க முடியாத இடத்தை ஒரு போதும் அவர்கள் ஊடுருவிப்பார்க்க முடியாது. எனவே, நம்மிடையே கடவுள் இருப்பதை உணர முடியாத நாங்கள், அத்தகைய கடவுள் விஷயத்தில் என்ன செய்வது? அவர் நம் எல்லோரையும் படைப்பவராகவும், நம் எல்லோருக்கும் தந்தையாகவும் இருப்பாராயின், நமது இருதயங்களின் ஒவ்வொரு துடிப்பிலும் அவர் இருப்பதை நாம் ஏன் உணரவில்லை? தாம் இருப்பதை வலியுறுத்த முடியாத கடவுள், என் சம்பந்தப்பட்ட வரையில் கடவுள் அல்ல. நான் மேற்கொண்டு மற்றொரு கேள்வியும் கேட்க வேண்டியவனாக இருக்கிறேன். அதாவது அவர் இந்த உலகத்தின் தந்தையெனில், அவர் தமது குழந்தைகளின் துக்கங்களை உணரவில்லையா? அவர் உணர்கிறார் எனில், அவர் அழிவு வேலையில் ஈடுபட்டு, பீகாரிலும் குவெட்டாவிலும் நாசகரமான பூகம்பங்களை உண்டாக்கியதன் மூலம் தம்முடைய குழந்தைகளுக்கு அவ்வளவு துன்பங்களும், கஷ்ட நஷ்டங்களும் ஏற்படும்படி ஏன் செய்யவேண்டும்? அபிஸீனியர்கள் அடங்கிய நிரபராதியான ஒரு தேசம் அவமதிப்பிற்கு ஆளாகும்படி அவர் ஏன் செய்ய

---

படி செய்ய சக்தியற்றவனாக இருக்கிறேன் என்பதை நான் ஒப்புக்கொள்ளவேண்டும். ஒரு நிரந்தரமான சட்டத்திற்கு இணங்கவே உலகம் முழுவதும் இயங்கி வருகிறது. அந்தச் சட்டத்தில் அசைக்க முடியாத நம்பிக்கை இருந்தாலன்றி, வாழ்க்கை நிறைவு பெறுவது சாத்தியமல்ல என்பதை எனது சொந்த அனுபவத்தின் மூலம் அறிந்து கொண்டிருக்கிறேன். அத்தகைய நம்பிக்கையில்லாத ஒரு மனிதன், கடலிலிருந்து அப்பால் தெளித்த ஒரு துளி நீரைப் போல் இருக்கிற இடம் தெரியாமல் அழிந்துவிடுவான். ஆனால், கடலில் உள்ள ஒவ்வொரு துளியும் கடலின் கம்பீரத்தில் பங்கெடுத்துக் கொள்ளுவதுடன், வாழ்க்கைக்கு அவசியமான ஜீவ சத்தையும் நமக்குக் கொடுக்கிறது.

வேண்டும்? அபிஸீனியர்கள் கடவுளின் புதல்வர்கள் அல்லவா? கடவுள் எல்லாம் வல்லவர் அல்லவா? அப்படியாயின், அவர் ஏன் இந்த பேராபத்துகளை யெல்லாம் தடுக்கவில்லை? எனது இந்தியத் தாயின் சுதந்திரத்திற்காக நீங்கள் சாத்விகமான, உண்மையான இயக்கத்தை நடத்தினீர்கள். அதற்கு உதவிபுரியும்படி கடவுளையும் மன்றாடி வேண்டிக்கொண்டீர்கள். ஆனால், அந்த உதவி உங்களுக்குக் கிடைக்கவில்லை. கடவுளின் உதவியை ஒருபோதும் நம்பாத பலமான ஸ்தூல சக்தி உங்களை வெற்றி கொண்டுவிட்டது! நீங்கள் அவமதிக்கப்பட்டு, பேராபத்திலிருந்து நீங்கள் விலகிக்கொள்ளும்படியான நிர்ப்பந்தம் ஏற்பட்டு விட்டது. கடவுள் இருப்பாராயின், நிச்சயமாக அவர் உங்களுக்கு உதவி செய்திருப்பார். ஏனெனில், உங்களுடைய லட்சியம் கடவுளின் உதவி பெறுவதற்கு உரியது. இவை போன்ற உதாரணங்களை நான் விவரித்துக்கொண்டு போக வேண்டிய அவசியம் இல்லை.

"எனவே, இன்றைய இளைஞர்கள் கடவுளிடத்தில் நம்பிக்கை வைக்காததைக் குறித்து ஆச்சரியப்படுவதற்கில்லை. கடவுள் இருக்கிறார் என்று உத்தேசமாக நம்ப அவர்கள் விரும்பவில்லை. உண்மையான, உயிர்க் கடவுளை அவர்கள் விரும்புகிறார்கள்; உயிர்க் கடவுளிடம் ஜீவ நம்பிக்கை வைக்க வேண்டும் என்பது பற்றி நீங்கள் உங்களுடைய கட்டுரையில் குறிப்பிட்டிருக்கிறீர்கள். எனவே, கடவுள் இருப்பதை நிரூபிப்பதற்கான நிச்சயமான, மறுக்க முடியாத ருஜுக்களை நீங்கள் குறிப்பிட்டால், இளைஞர் உலகத்திற்கு நீங்கள் மகத்தான நன்மை செய்தவர் ஆவீர்கள்; நானும் அவ்விஷயமாக மிகவும் நன்றியுள்ளவனாக இருப்பேன். ஏற்கனவே, புரிந்துகொள்ள முடியாதவாறு மர்மமாக இருக்கும் இப்பிரச்னையை நீங்கள் மேலும் அதிகமாகக் குழப்பிவிடமாட்டீர்களென்றும், இவ்விஷயத்தைத் தெளிவுபடுத்த நீங்கள் திட்டமாக ஏதாவது செய்வீர்கள் என்றும் நம்புகிறேன்."

நான் அளிக்கப் போகும் பதில், மேற் கண்ட கடிதத்தை எழுதியிருப்பவர் குறிப்பிடும் மூடுதிரையை அகற்றாது என்றே நான் மிகவும் அஞ்சுகிறேன். உயிர்க் கடவுள் இருப்பதை நான் உணர்ந்திருக்கலாமென்று கடிதம் எழுதியவர் எண்ணுகிறார். ஆனால் நான் அத்தகைய உரிமை கொண்டாட முடியாது. விஞ்ஞானிகள் எனக்குக் கூறும் பல விஷயங்களிலும் நான் ஜீவ நம்பிக்கை கொண்டிருப்பது போல், அழிவற்ற கடவுளிடமும் நான் ஜீவ நம்பிக்கை கொண்டிருக்கிறேன். குறிப்பிட்ட விதிகளைப் பின்பற்றினால், விஞ்ஞானிகள் கூறுவதை ருஜுபிக்க முடியும் என்று யாவரும் பதில் கூறிவிடலாம். கடவுள் சம்பந்தமாக ரிஷிகளும் தீர்க்கதரிசிகளும் கூறுவதும் அதுதான். தாங்கள் சென்றுள்ள வழியைப் பின்பற்றும் எவரும் கடவுளைக் காணலாம் என்று அவர்கள் கூறுகிறார்கள். உண்மை என்னவெனில், கடவுளைக் காணும் வழியைப் பின்பற்ற நாம் விரும்பவில்லை. முக்கியமான அந்த ஒரு விஷயத்தில் கண்ணாரக் கண்டவர்கள் கூறுவதையும் நாம் ஒப்புக் கொள்ளுவதில்லை. பௌதிக சாஸ்திரங்களில் பெற்றுள்ள சாதனைகளையெல்லாம் ஒன்று சேர்த்தால் கூட, கடவுளிடம் உள்ள ஜீவ நம்பிக்கைக்கு ஈடாகாது. கடவுள் இருப்பதை நம்ப விரும்பாதவர்கள், கண்ணுக்குத் தெரியும் ஜடப் பொருளைத் தவிர வேறு எதையும் நம்புவதில்லை. மானிடவர்க்கத்

தின் முன்னேற்றத்திற்கு அத்தகைய நம்பிக்கை அவசியமில்லை என்று கருதப்படுகிறது. ஆன்மாவோ அல்லது கடவுளோ இருப்பதை நிரூபிப்பதற்கான எத்தகைய முக்கியமான வாதமும் அத்தகையோரிடம் பலன் அளிப்பதில்லை. தனது செவிகளில் பஞ்சை வைத்து கெட்டியாக அடைத்துக் கொண்டிருப்பவன், அருமையான சங்கீதத்தைக் கேட்கவோ அல்லது அனுபவிக்கவோ முடியும் என்று நீங்கள் எதிர்பார்க்க முடியாது. அது போலவே கடவுள் இருக்கிறார் என்ற உறுதியான நம்பிக்கையை விரும்பாதவர்களை, நீங்கள் சமாதானப் படுத்த முடியாது.

அதிருஷ்டவசமாக, மிகப் பெரும்பாலான ஜனங்களும் கடவுள் இருக்கிறார் என்பதில் உறுதியான நம்பிக்கை கொண்டுள்ளனர். அவ்விஷயமாக அவர்கள் வாதிக்க முடியாது, வாதிக்கவும் மாட்டார்கள். அவர்கள் சம்பந்தப்பட்டவரையில் கடவுள் இருப்பது நிச்சயந்தான். உலகத்திலுள்ள வேத நூல்கள் யாவும் மூட நம்பிக்கையுடன் கூடிய வெறும் பாட்டிக் கதைகளா? ரிஷிகள், தீர்க்கதரிசிகள் முதலியோருடைய உறுதியான பிரகடனங்கள் நிராகரிக்கப்பட வேண்டுமா? சைதன்யர், ராமகிருஷ்ண பரமஹம்ஸர், துகாராம், ஞானதேவர், ராமதாஸ், நானக், கபீர், துளசிதாஸ் முதலியோரின் வார்த்தைகள் எல்லாம் கவைக்கு உதவாதவையா? ராஜாராம் மோகன்ராய், தேவேந்திரநாத் தாகூர், விவேகானந்தர் முதலியோர் நவீன காலத்துப் பெரியார்கள் ஆவர். கல்வியில் அவர்கள் இன்றுள்ளவர்களில் எவருக்கும் குறைந்தவர்கள் அல்ல. அப்படிப்பட்டவர்களின் வார்த்தைகளுக்கு மதிப்பு இல்லையா? இப்போது ஜீவதசையில் உள்ளவர்களின் சாட்சியத்தை நான் விட்டு விடுகிறேன். அவர்களுடைய சாட்சியங்கள் அப்பழுக்கற்றவை என்று கருதப்படுகின்றன. கடவுளிடத்தில் உள்ள இந்த நம்பிக்கை, நம்பிக்கையை அடிப்படையாகக் கொண்டிருக்கிறது. அது பகுத்தறிவுக்கு அப்பாற்பட்டது. கடவுளை ஓரளவு உணருவதற்குக் கூட நம்பிக்கை அவசியமாகும். நம்பிக்கையின்றேல் கடவுளைப் பற்றிய உணர்வு நிலைக்கமுடியாது. எனவே, நம்பிக்கை இருந்து தான் தீர வேண்டும். தமது வாழ்க்கையின் எல்லைகளை யார் மீற முடியும்? உடலுடன் கூடிய இந்த வாழ்க்கையில் கடவுளைப் பூரணமாகக் காண்பது முடியாத காரியம் என்பதே எனது அபிப்பிராயமாகும். அவ்விதம் காண்பது அவசியமும் அல்ல. மனிதர்களுக்குச் சாத்தியமான, பூரணமான ஆன்மிகச் சிறப்பை அடைவதற்கு அசைக்கமுடியாத நம்பிக்கை மாத்திரமே போதுமானது. கடவுள் இந்த உடலுக்கு வெளியே இல்லை. எனவே, கடவுள் இருக்கிறார் என்பதை நிரூபிப்பதற்கு வெளிப்புற ருஜூ எதுவும் பயன்படாது. புலன்களால் அவரைப் பார்க்க முடியாது. ஏனெனில், அவர் புலன்களுக்கு அப்பாற்பட்டவர். புலன்களிலிருந்து நாம் அப்பால் விலகிக்கொள்ளுவோமாயின், நாம் கடவுளை உணர்ந்து கொள்ள முடியும். நம்முள்ளேயே இடைவிடாது தெய்விக சங்கீதம் இயங்கி வருகிறது. ஆனால் அந்த நுண்ணிய சங்கீதத்தை, சந்தடி செய்யும் புலன்கள் அமுக்கி

விடுகின்றன. புலன்களால் பார்க்கும் அல்லது கேட்கும் எதையும் காட்டிலும் சங்கீதம் எத்தனையோ மடங்கு உயர்ந்தது அல்லவா?

கடவுள் இரக்கச் சித்தமும் நீதி உணர்ச்சியும் உடையவராயின், நம்மைச் சுற்றிலும் நாம் காணும் துன்பங்களையும் அவர் ஏன் அனுமதிக்கிறார் என்பதை அறிந்து கொள்ள, கடிதம் எழுதியவர் விரும்புகிறார். இதற்கு நான் திருப்திகரமான விளக்கம் எதுவும் கூற முடியாது. எனக்குத் தோல்வியும் அவமதிப்பும் ஏற்பட்டதாக அவர் கூறுகிறார். நான் தோல்வியோ, அவமதிப்போ, சோர்வோ அடைந்துவிட்டதாக நான் கருதவில்லை. நான் ஓய்வு பெற்றிருப்பதற்கும் தோல்விக்கும் எத்தகைய சம்பந்தமும் இல்லை. நான் விலகியிருப்பது சுயத்தூய்மை முறையாகும்; தன்னைத்தானே ஆயத்தம் செய்து கொள்ளுவதற்கான ஓர் ஏற்பாடே யாகும். விஷயங்கள் பெரும்பாலும் வெளிப்படையாகத் தோன்றுவதைப் போல் இருப்பதில்லை என்பதைக் காட்டவே இதை நான் கூறுகிறேன். துக்கங்கள் என்றும் அநீதிகள் என்றும் நாம் தவறாக எண்ணுபவை, உண்மையில் அவ்விதம் இராமலிருக்கலாம். இந்த உலகத்தின் மர்மமான புதிர்களையெல்லாம் நாம் அவிழ்க்க முடியுமாயின், பின்னர் நாம் கடவுளுடன் சம நிலையிலிருப்போம். இவ்வுலகில் நமது வாழ்வு அற்ப காலமேயாகும். நமது சிறுமையை உணர்ந்தே நாம் தினந்தோறும் செய்யும் நமது காலைப் பிரார்த்தனையை கீழ்க் கண்ட வாக்கியங்களுடன் முடிக்கிறோம். "துன்பம் என்று கூறப்படுவது துன்பம் அல்ல, செல்வம் என்று கூறப்படுவது செல்வம் அல்ல. கடவுளை மறப்பதோ அல்லது மறுப்பதோதான் உண்மையான துன்பமாகும்; கடவுளை நினைவு கூர்வதோ அல்லது கடவுளிடம் நம்பிக்கை வைப்பதோதான் உண்மையான செல்வமாகும்."

'ஹரிஜன்' – 13–6–1936

# 21

# கடவுள் இல்லாத இடம்!

**கேள்வி:** ஹரிஜனங்களை அனுமதிக்காத கோவில்களில் கடவுள் தங்கியிருக்க மாட்டார் என்று நீங்கள் கூறியிருக்கிறீர்கள். உங்களுடைய இந்தக் கருத்து ஒரு தலைப்பட்சமாகவும், எனவே, தப்பெண்ணத்தை உண்டாக்கக் கூடியதாகவும் இருக்கிறது. கடவுள் கோவில்களில் தான் இருக்கிறார், கோவில்களுக்கு வெளியில் இல்லை என்பது எவ்விதம் உண்மையல்லவோ, அது போலவே ஹரிஜனங்கள் அனுமதிக்கப்படாத கோவில்களில் கடவுள் இருக்கமாட்டார் என்பதும் உண்மையல்ல என்பது எனது கருத்தாகும். கடவுளின் எங்கும் வியாபிக்கும் சக்திக்கே அது சவால்

விடுப்பதாக இருக்கிறது. அவர் எங்கும் இருக்கிறுர். அவர் இல்லாத இடமே இல்லை.

**பதில் :** உண்மையே. ஹரிஜனங்களை அனுமதிக்காத கோவில்களில் கடவுள் வசிக்கவில்லை என்று கூறுவது ஒரு தலைப்பட்சமானதே. எனவே, அவ்விதம் கூறுவது ஓரளவு தான் உண்மை. மனிதனின் பேச்சு விஷயத்திலும் அது பொருந்தும் அல்லவா? அதற்காக நாம் மனிதனுடைய பேச்சின் உபயோகத்தைக் கண்டிப்பதோ அல்லது தள்ளி விடுவதோ இல்லை. உண்மையை வெளிப்படுத்தும் கருவி என்ற முறையில் மனிதனுடைய பேச்சில் எத்தனையோ குற்றம் குறைகள் இருப்பினும், நடைமுறையில் எல்லாக் காரியங்களுக்கும் அதையே தான் நாம் நம்ப வேண்டி யிருக் கிறது. இல்லாவிடில், மனிதரிடையே எல்லாத் தொடர்பு களுக்கும் முற்றுப் புள்ளி வைத்ததாகி விடும்.

நல்லவர்களும் தூய்மையானவர்களுமான மனிதரின் உள்ளங்களில் மாத்திரமே கடவுள் வசிக்கிறுர்; கொடியவர் கள் அல்லது தீயவர்களின் உள்ளங்களில் அவர் வசிக்க வில்லை என்று ராமாயணத்தில் ராமன் கூறுவதாக துளசி தாஸ் குறிப்பிட்டிருக்கிறுர். இவ்விதம் கவி கூறியிருப்பது ஓரளவுதான் உண்மையாகும். அதற்கு நேர் மாருகக் கூறு வது, அதைக்காட்டிலும் உண்மைக்கு முரணுகவும், விஷமத் தனமாகவும் இருக்கும். அக்கூற்று இதுதான்: கொடியவர் களின் உள்ளங்களிலும் தீய மனம் படைத்தவர்களின் உள் ளங்களிலும் கூட கடவுள் வசித்துக் கொண்டு, அவர்க ளுடைய தீச் செயல்களைத் தூண்டி விடுகிறுர்.

கண்டிப்பாகவும், சாஸ்திர ரீதியாகவும் கவனிக்கு மிடத்து அவ்விதம் கூறுவது உண்மையாக இருக்கலாம். நல்லது, கெட்டது இரண்டிற்கும் அடிப்படையில் கடவுள் தான் இருக்கிறுர். ரண சிகிச்சை செய்யும் டாக்டரின் கத்தி யைப்போல் கொலையாளியின் வாளையும் இயக்குகிறவர் கடவுளே. எனினும், நல்லதும் கெட்டதும் ஒன்றுக் கொன்று நேர்மாருனவை, பரஸ்பரம் ஒவ்வாதவை. ஒளியையும் இருளை யும், கடவுளையும் சைத்தானையும், ஆர்முஜத்தையும் அஹ்ரி மனையும்* போல் நல்லதும் கெட்டதும் விளங்குகின்றன. எனவே, ஹரிஜனங்களை அனுமதிக்காத கோவில்களில் கடவுள் இல்லை என்று நான் கூறுவது சரிதான்.

— 'ஹரிஜன்' – 20—2—1937

*ஸொராஷ்டிரிய மதத்தின்படி ஆர்முஜத் என்பது நன்மையையே செய்யும் தேவன் ஆகும். அந்தத் தேவன் தூய்மையான வாழ்க்கையின் அவதாரம் என்றும், ஓய்வு ஒழிவின்றி எப்போதும் தீமையை எதிர்த்துப் போராடி வருவதாகவும் அம் மதத் தினர் நம்புகின்றனர். அது போலவே, அஹ்ரிமன் நாசகரமான தீய சக்தியின் உரு வான அரக்கப் பிறவி என்பதும் அவர்களுடைய நம்பிக்கையாகும்.

## 22

# கடவுள் நல்லவர்

கடவுள் நல்லவர். எனினும், கடவுள் நல்லவர் என்று கூறுவது 'அ' என்பர் நல்லவர் என்று கூறுவதுபோல் அல்ல. தீயவரைக் காட்டிலும் 'அ' நல்லவராக இருக்கலாம். ஆனால், கடவுளோ எள்ளளவும் தீமைக் கலப்பற்ற நல்லவர். அவரிடம் தீமை என்பதே இல்லை. கடவுள் தமது சொந்த உருவத்திலேயே மனிதனைப் படைத்தார். ஆனால் நம் துரதிருஷ்டவசமாக, மனிதன் தன் சொந்த உருவில் கடவுளை நிர்மாணித்துக் கொண்டிருக்கிறான். இந்த இறுமாப்பு, மனிதனை கஷ்டங்களாகிற கடலிலேயே அமிழ்த்தி யிருக்கிறது. கடவுள் எல்லோருக்கும் மேலான ரசாயனவாதியாவார். அவர் முன்னிலையில் இரும்பு, கழிவு உலோகங்கள் முதலிய யாவும் பொன்னாக மாறிவிடுகின்றன. அது போலவே, அவரது எதிரில் எல்லாத் தீமைகளும் நன்மையாக மாறிவிடுகின்றன.

மேலும் நம்மைப்போல் கடவுள் வாழ்வதில்லை. அவர் படைத்த உயிர்கள் யாவும் வாழ்கின்றன; ஆனால், பிறகு மாண்டு விடுகின்றன. ஆனால், கடவுளுக்கு மரணம் இல்லை. எனவே, நன்மையும், அது குறிக்கும் எல்லா விஷயங்களும் கடவுளின் இயல்போ, குணங்களோ அல்ல. நன்மையே கடவுள் தான். கடவுளை விலக்கிவிட்டு எண்ணும் நன்மையெல்லாம் வெறும் உயிரற்ற பொருளேயாகும். லாபகரமாக இருக்கும் வரையில்தான் அது செயல்படும். எல்லா ஒழுக்கங்களுமே அப்படித்தான். அந்த ஒழுக்கங்கள் நம்மிடத்தில் இருக்க வேண்டுமாயின், கடவுளுன் தொடர்பை அடிப்படையாகக் கொண்டு அவை பண்படுத்தப்படவேண்டும்.

நாம் நல்லவர்களாக முயற்சிக்கிறோம். ஏனெனில், நாம் கடவுளை அடையவும் அறியவும் விரும்புகிறோம். உலகத்தின் வரண்ட தரும சாத்திரங்கள் யாவும் கடவுளின் தொடர்பு இன்றேல் மண்ணாகிவிடுகின்றன. ஏனெனில், கடவுள் சம்பந்தமற்ற அவை உயிரற்றவை. கடவுளிடமிருந்து வருமாயின் அவை ஜீவனுடன் வருகின்றன. பின்னர் அவை நம்மிடம் ஒன்றி, நாம் உயர்ந்த நிலையை அடையச் செய்கின்றன.

அது போலவே, ஒழுக்கமின்றி கற்பனை செய்துகொள்ளும் கடவுள் உயிரற்ற கடவுளேயாகும். அத்தகைய கடவுளுக்கு நமது வீண் கற்பனையில்தான் நாம் உயிர் கொடுப்பவர்களாகிறோம்.

—'ஹரிஜன்' - 24—8—1947

# 23

# காந்திஜி இயற்றிய கீதம்

['பாபு' என்ற தலைப்பில், மிஸ் மேரி பார் ஒரு சிறிய புத்தகம் எழுதி வெளியிட்டிருக்கிறார். அவர் காந்திஜியுடன் நடத்திய கடிதப் போக்குவரத்தும், சம்பாஷணைகளும் அப்புத்தகத்தில் அடங்கியிருக்கின்றன. புத்தகம் எழுதியவரும் ஆங்காங்கு தமது கருத்துக்களை வெளியிட்டிருக்கிறார். பதினைந்து ஆண்டுகளுக்கு முன் அவருக்கு காந்திஜியிடமிருந்து ஒரு கடிதம் கிடைத்தது. காந்திஜியே இயற்றிய கீழ்க் கண்ட பிரார்த்தனையும் அக்கடிதத்துடன் இணைக்கப்பட்டிருந்தது. காந்திஜியிடமிருந்து ஒரு செய்தியை வாங்கித் தரும்படி, ஹைதராபாத் மக்கள் நல சங்கத்தில் ஊழியம் செய்து கொண்டிருந்த மிஸ் லின்போர்த் என்ற ஆங்கிலப் பெண் மிஸ் பாரைக் கேட்டுக் கொண்டிருந்தார். அதற்கு இணங்கவே காந்திஜி கீழ்க் கண்ட பிரார்த்தனையைத் தயாரித்து மிஸ் பாருக்கு எழுதிய கடிதத்துடன் அனுப்பியிருந்தார். அதை மிஸ் லின்போர்த் கண்ணாடி போட்டுத் தங்கள் சங்கத்தில் தொங்கவிட்டிருந்தார். அந்தப் பிரார்த்தனை கீதமே கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது. - ஆசிரியர்.]

பறையனின் சிறு குடிலில் எளிமையின் உருவாக
வாழ்கின்ற பரமபதியே,
கங்கையும் யமுனையும் பிரமபுத் ராநதியும்
பாயு மெழில் பூமி யெங்கும்
உன்றனை நாடியே உழைத்திட எமக்குநீ
உதவி புரிந்தருளுவாயே.

உணர்கின்ற சக்தியும் கரவிலா உள்ளமும்
உனதெளிமை யதுவுந்தாராய்,
பாரதந்தனில் வாழும் பலகோடி மக்களுடன்
ஒன்ருக வைத்து எம்மைப்
பார்க்கின்ற சக்தியும் பரிவுடைய நெஞ்சமும்
பக்குவமும் அருளுவாயே.

முற்றிலும டங்கியே ஒடுங்கிய தறிந்தபின்
முனைந்தருள் புரியுந்தேவே
சேவகரும் நண்பரும் ஆகியே மக்களிடை
சேவை செய விழையு மடியேம்
அவர் வேறு நாம் வேறு என்றெண்ணி நில்லாத
ஐக்ய நிலை தந்தருளுவாய்.

பொன்னடிதன் பெருமை யத்தனையு மறிந்திதன்
பக்தராய் நாங்கள் வாழ,

தன்னலத் தியாக மெனும் சற்குணப் பிம்பமாய்
தெய்விகம் திகழ் உருவமாய்
எளிமையே உருக்கொண்டு வந்ததெனும் வடிவமாய்
எம்மை நீ ஆக்கி அருளாய்.

—'ஹரிஜன்' - 11—9—1949

# 24

# கடவுளே உண்மை

*காந்திஜி 9-7-1932-இல் ஸ்ரீ பி. ஜி. மெத்யூவிற்கு எழுதிய கடிதத்திலிருந்து ஒரு பகுதி கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது :*

கடவுளே உண்மையாக இருக்கிருர். இங்கே, 'இருக்கிருர்' என்ருல் உண்மைக்குச் சமமானவர் என்ரூே, உண்மையானவர் என்ரூே அர்த்தமல்ல. உண்மை என்பது கடவுளேக் குறிக்கும் வெறும் அடைமொழி அல்ல; ஆனுல், கடவுளே உண்மைதான். உண்மையே அவர் இல்லே என்ருல், அவர் ஒன்றுமே இல்லே என்ருகிவிடும். உண்மை என்பது சமஸ்கிருதத்தில் 'ஸத்' என்று குறிப்பிடப்படுகிறது. 'ஸத்' என்ருல் இருக்கிறது என்பதே அர்த்தமாகும். எனவே, இருக்கிறது என்பதில் உண்மை அடங்கியிருக்கிறது. கடவுள் இருக்கிருர்; வேறு எதுவும் இல்லே. எனவே, நாம் எவ்வளவுக்கு அதிக உண்மையானவர்களாக இருக்கிரூேமோ அவ்வளவுக்கு நாம் கடவுளுக்கு சமீபத்தில் இருக்கிரூேம். நாம் உண்மையாக இருக்கும் அளவுக்கு மாத்திரமே நாம் 'இருக்கிரூேம்' என்று கூற முடியும்.

—'ஹரிஜன்' – 27—3—1949

# 25

# எப்போதும் நம்முடன் இருக்கிருர்

பலருடைய மத்தியில் இருப்பினும், தாம் தனிமையாக இருப்பது போலவே தோன்றுவதாக அன்ருெரு நாள் ஒரு நண்பர் எனக்கு எழுதினுர். அதிகாரவர்க்க உலகத்தின் வார்த்தையை நான் நம்பவில்லே என்று அவரிடம் நான் கூறியதே, அவரை அவ்விதம் குறிப்பிடும்படி செய்துவிட்டது. அவருக்கு அத்தகைய அவநம்பிக்கை இல்லே. அவரது நம்பிக்கையில் எனக்கும் பங்கிருக்கும் என அவர் எண்ணினுர். எனக்கு அதில் பங்கு இல்லே என்பதை அறிந்ததும், அவருக்கு ஏற்பட்ட ஏமாற்றத்தைப் பாருங்கள். அவரது கடிதத்தின் மறைமுகமான அர்த்தம் நான்

நினைப்பதுபோல் இராமலிருக்கலாம். அது எப்படியாயினும், அவரது கடிதத்திற்கு எனது விளக்கம் அதுதான். கடவுளின் மனிதன் என்ற முறையில், அவர் தாம் தனிமையாக இருப்பதாக ஒருபோதும் எண்ணக்கூடாது என்று நான் பதில் அளித்தேன். ஏனெனில், கடவுள் எப்போதும் அவருடன் இருக்கிறார். இந்த உலகம் முழுவதும் அவரைக் கைவிட்டுவிட்டால் கூட, அவர் ஏன் கவலைப்படவேண்டும்? நான் அதிகாரவர்க்க உலகத்தை நம்பினாலும் நம்பாவிட்டாலும், அவர் நம்பி வரட்டும். ஆனால் அந்த நம்பிக்கை அவரது உள்ளத்திலிருந்து வரவேண்டும்; அறிவினால் தூண்டப்பட்டு வருவதாக இருக்கக் கூடாது.

இவ்விஷயத்தில் எனது உணர்ச்சி வேறுவிதமாக இருந்து வருகிறது. பரஸ்பர நம்பிக்கை நம்பிக்கை அல்ல; பரஸ்பர அன்பு, அன்பு அல்ல. உங்கள் மீது துவேஷம் கொண்டுள்ளவர்களை நீங்கள் நேசிப்பதே உண்மையான அன்பாகும். உங்களுடைய அண்டை வீட்டுக்காரரை நீங்கள் நம்பாவிடினும், அவர்மீது நீங்கள் அன்பு காட்டவேண்டும். என்னுடைய அன்பு உண்மையானதாக, இருதயபூர்வமாக இருக்குமாயின், ஆங்கிலேயரை நான் நம்பாவிடினும் அவர்மீது நான் அன்பு காட்டவேண்டும். என்னுடைய நண்பரை மாத்திரமே நான் நம்புவதாக இருந்தால், என் அன்பு அர்த்தமற்றது; திருடர்கள்கூட அவ்விதம் செய்கிறார்கள். நம்பிக்கை மறைந்த அதே விநாடியில் அவர்கள் விரோதிகளாகிவிடுகிறார்கள்.

—'ஹரிஜன்' – 3—3—1946

# 26

# "கடவுளை நேரில் காணுதல்"

'ஹரிஜன்' பத்திரிகையின் சந்தாதாரர் ஒருவர், அவருக்கு புதிர் போல் தோன்றும் கீழ்க்கண்ட விஷயத்தைக் குறிப்பிட்டுள்ளார். அதற்கு நான் கீழ்வருமாறு பதிலும் அனுப்பியிருக்கிறேன் :

## அவருக்குத் தோன்றும் புதிர்

"கடவுளை நீங்கள் நேருக்கு நேராகப் பார்த்ததில்லை என்பதை அன்றொரு நாள் நீங்கள் ஒத்துக்கொண்டீர்கள். 'எனது சத்திய சோதனை' என்ற நூலின் முகவுரையில், தூரத்திலிருந்து உண்மையின் வடிவமாக நீங்கள் கடவுளைப் பார்த்திருப்பதாகக் குறிப்பிட்டிருக்கிறீர்கள். அந்த இரு அறிக்கைகளும் ஒன்றுக்கொன்று முரணாக இருப்பது போல் தோன்றுகின்றன. நான் அதைச் சரிவர அறிந்து கொள்ளுவதற்கு உதவியாக அன்புடன் தெளிவாகக் கூறுங்கள்."

## எனது பதில்

### 1

'கடவுளை நேருக்கு நேராகப் பார்ப்பது' என்பதற்கும், 'தூரத்திலிருந்து உண்மையின் வடிவத்தில் கடவுளைக் காண்பது' என்பதற்கும் ஒரு பெரிய வேற்றுமை இருக்கிறது. அந்த இரு அறிக்கைகளும் முரணுகை இல்லை என்பது மாத்திரமல்ல, ஒன்றையொன்று விளக்குவதாகவும் இருக்கிறது என்பதே எனது அபிப்பிராயமாகும். மிகவும் தொலை தூரத்திலிருந்து நாம் இமயமலையைப் பார்க்கிறோம். இமயமலையின் உச்சியில் இருக்கும் போதுதான் நாம் அதை நேருக்கு நேராகப் பார்க்கிறோம் என்று கூற வேண்டும். லட்சக்கணக்கானவர்கள் நூற்றுக்கணக்கான மைல்களுக்கப்பால் இருந்துகொண்டு இமயமலையைப் பார்க்கலாம். ஆனால், பல வருஷங்கள் யாத்திரை செய்து அதன் உச்சியை அடையும் சிலரே அதை நேருக்கு நேராகப் பார்க்க முடியும். இதைப்பற்றி 'ஹரிஜனில்' விளக்க வேண்டிய தேவையே இல்லை. இருந்தாலும் உங்களுடைய கடிதத்தையும் அதற்கு என் பதிலையும் 'ஹரிஜனில்' பிரசுரிப்பதற்காக நான் அனுப்புகிறேன். ஏனெனில், நான் கூறிய இரண்டு விஷயங்களுக்கிடையே முரண்பாடு இருப்பதாக எண்ணும் உங்களைப் போன்ற சிலர் இருக்கலாம் அல்லவா?

—'ஹரிஜன்' – 23—11—1947

### 2

பிரார்த்தனை ஆரம்பமாகுமுன், யாரோ ஒருவர் ஒரு குறிப்பை எழுதி காந்திஜிக்கு அனுப்பினர். அதை எழுதியவர், கடவுளை நேருக்கு நேராக காந்திஜி கண்டது உண்டா என்று கேட்டிருந்தார். பிரார்த்தனைக்குப் பிறகு அக்கேள்விக்கு காந்திஜி பதில் அளித்தார். அவர் கூறியதாவது: நான் கடவுளை நேருக்கு நேராகப் பார்த்ததில்லை. நான் நேரில் பார்த்திருந்தால், இப்போது நான் உங்களுடன் பேசிக்கொண்டிருக்க வேண்டிய தேவையே இல்லை. அப்போது எனக்கு, பேச்சையும் செயலையும் அனுவசியமாகச் செய்யும் அளவிற்கு எனது சிந்தனை சக்தி வாய்ந்ததாக இருக்கும். கடவுள் இருக்கிறார் என்பதில் எனக்கு அழியாத நம்பிக்கை இருந்துவருகிறது. உலக முழுவதும் உள்ள கோடிக்கணக்கானவர்கள் என்னுடன் அந்த நம்பிக்கையில் பங்கு எடுத்துக் கொண்டிருக்கிறார்கள். மிக மிகக் கற்றறிஞர்கள் கூட, எழுதப் படிக்கத் தெரியாத கோடிக்கணக்கான மக்களின் அந்த நம்பிக்கையை அசைக்கமுடியாது. கடவுளை நேருக்கு நேராகப் பார்க்கும் வழியை, பிரார்த்தனையின்போது பாடப்பட்ட பஜனைக் கீதம் விவரிக்கின்றது. அந்தப் புண்ணிய நிலையை அடைய விரும்புவோர், கோபத்தையும், ஆசையையும் விட்டுவிட வேண்டும் என்றும், புகழையோ அல்லது துஷணையையோ பொருட்படுத்தக் கூடாது என்றும் கவி கூறுகிறார்.

—'ஹரிஜன்' – 3—8—1947

3

ஓர் அன்பர் பின் வருமாறு எழுதுகிறார் :

''செயலற்ற நிலையிலும் செயல், என்ற உங்களுடைய கட்டுரையில், அந்த நிலையை நீங்கள் எட்டவில்லை என்று கூறுகிறீர்கள். அது சிக்கலற்ற எளிதான வாக்கியம் போலவே தோன்றுகிறது. எனினும், அதன் பொருளை நீங்கள் சிறிது விவரித்துக் கூறவேண்டும் என்று விரும்புகிறேன்.''

ஒரு மனிதன் தனது எண்ணங்களைப் பிரகடனம் செய்ய வேண்டியதுகூட அவசியமில்லாத ஒரு நிலை வாழ்க்கையில் ஏற்படுகிறது. அப்படியிருக்க, அவன் வெளிப்படையாகச் செயலில் தனது எண்ணங்களைக் காட்ட வேண்டும் என்ற பேச்சிற்கே இடமில்லை. வெறும் எண்ணங்களே செயலாகின்றன. அவற்றிற்கு அத்தகைய சக்தி ஏற்பட்டு விடுகின்றது. அப்போதுதான், செயலற்றதாகத் தோன்றும் அவனது நிலையே செயலாகிறது என்று கூற முடிகிறது. ஆனால், அந்த நிலைக்கு நான் வெகு தூரத்தில் இருக்கிறேன் என்பதை ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். எனினும், நான் சொல்லக் கூடியதெல்லாம், அந்த லட்சியத்தை நோக்கியே எனது முயற்சி இருந்து வருகிறது என்பதுதான்.

—' ஹரிஜன் ' – 26—10—1947

27

# கடவுளைக் காண முயற்சிக்க வேண்டும்

பிரார்த்தனைக்குப் பிறகு காந்திஜி பேசியபோது கடவுளைக் கண்டுபிடிக்கும் விஷயமாகக் கூறியதாவது: கடவுளைக்கண்டு பிடிக்க முயற்சிப்பதே மனிதனின் மகோன்னதமான கடமையாக இருக்கிறது என்பதே, இன்று மாலை பாடப்பட்ட பஜனை கீதத்தின் பொருளாகும். கோவில்களிலோ, விக்கிரகங்களிலோ அல்லது மனிதனின் கைகளால் நிர்மாணிக்கப்பட்ட தேவாலயங்களிலோ கடவுளைக் கண்டு பிடிக்க முடியாது. புலன்களை அடக்குவதாலும் அவரைக் கண்டுபிடிக்க முடியாது. அன்பினால், லோகாயதமான அன்பினால் அல்ல, தெய்விகமான அன்பினால் அதாவது பக்தியினால் மாத்திரமே கடவுளைக் கண்டு பிடிக்க முடியும். மீராபாய் அத்தகைய பக்தியுடன் வாழ்ந்து, ஒவ்வொன்றிலும் அவர் கடவுளைக் கண்டார். அவருக்கு எல்லாமே கடவுளாகத் தோன்றின.

—' ஹரிஜன் ' – 23—11—1947

## 28

# கடவுளுடன் தொடர்பு

நான் கர்மயோகியா அல்லது வேறு ஏதாவது யோகியா என்பது எனக்குத் தெரியாது. ஆனால், வேலையின்றி நான் வாழ முடியாது என்பதை அறிவேன். என் கைராட்டினத்தைச் சுழற்றிக் கொண்டிருக்கும்போது நான் மரணம் அடையவேண்டும் என்று மிகவும் ஆசைப்படுகிறேன். ஒருவர் ஏதாவது ஒரு சாதனத்தின்மூலம் கடவுளுடன் தொடர்பு வைத்துக் கொள்ள வேண்டுமாயின், ராட்டினத்தின்மூலம் ஏன் வைத்துக் கொள்ளக் கூடாது? "என்னை யார் பூஜிக்கிருனே அவனை நான் சரியான வழியில் நடத்திச் சென்று, அவனது தேவைகளையும் கவனித்துக் கொள்ளுகிறேன்"* என்று கீதையில் பகவான் கூறுகிருர்.

என் கடவுள் எண்ணிக்கையற்ற உருவம் உள்ளவர். சில சமயங்களில் அவரை நான் ராட்டினத்தில் பார்க்கிறேன்; வேறு சமயங்களில் தீண்டாமை ஒழிப்பிலும் அவரை நான் காண்கிறேன். அவ்விதமாக எனது ஆன்மா என்னை இயக்குவதற்கிணங்க நான் அவருடன் தொடர்பு வைத்துக் கொள்ளுகிறேன்.

—'ஹரிஜன்' – 8—5—1937

## 29

# கடவுளுக்குத்தொண்டு செய்வது எப்படி?

ஹரிஜனங்களின் தலைவரான ஒரு சாது ஒரு நாள் காந்திஜியிடம் வந்து விசித்திரமான கேள்வியொன்றைக் கேட்டார். "கடவுள் யார் என்பதை நாம் அறிந்து கொள்ளாதிருக்கும் போது, அவருக்கு நாம் தொண்டு செய்வது எப்படி?" என்பது தான் அக் கேள்வியாகும்.

**காந்திஜி :** நாம் கடவுளை அறியாமலிருக்கலாம். ஆனால், அவரது படைப்புகளை நாம் அறிவோம். அவர்களுக்குத் தொண்டு செய்வதே கடவுளுக்குத் தொண்டு செய்வதாகும்.

**கேள்வி :** எனினும், கடவுளால் படைக்கப்பட்டவர்களுக்கெல்லாம் நாம் எப்படி தொண்டு செய்ய முடியும்?

**காந்திஜி :** கடவுளால் படைக்கப்பட்டவர்களில் நமக்கு மிகவும் அருகில் இருப்பவர்களுக்கும், நமக்கு மிகவும்

---

* யே யதா மாம் ப்ரபத்யந்தே தாம்ஸ்ததைவ பஜாம்யஹம்

அத்தியாயம்–4, சுலோகம்–11

இதன் கருத்து: யார் என்னை எந்த விருப்பத்துடன் பூஜிக்கிருர்களோ, அவர்களுக்கு அவர்களுடைய விருப்பப்படியே நான் அருள் புரிகிறேன்.

நன்ருகத் தெரிந்தவர்களுக்கும் நாம் தொண்டு செய்ய முடியும். அண்டை வீட்டுக்காரர் விஷயத்திலிருந்து அந்தத் தொண்டை நாம் ஆரம்பிக்கலாம். நம் வீட்டிற்கு வெளிப் புறத்தைச் சுத்தமாக வைத்துக் கொள்ளுவதுடன் நாம் திருப்தியடைந்துவிடக்கூடாது; நமது அண்டை வீட்டின் வெளிப்புறமும் துப்புரவாக இருப்பதற்குத் தொண்டு செய்யலாம். ஆனல், நமது குடும்பத்தின் நலனுக்காக நாம் கிராமத்திற்குத் தீங்கு ஏற்படும்படி செய்துவிடக் கூடாது. நமது சொந்தக் கௌரவம், நமது சொந்தக் கிராமத்தைப் பாதுகாப்பதையே பொறுத்திருக்கிறது. எனினும், நம்மில் ஒவ்வொருவரும் நமது எல்லேகளை அறிந்து கொள்ள வேண்டும். நாம் வசிக்கும் இந்த உலகத்தைப்பற்றி நமக்குள்ள அறிவுக்குத் தகுந்தவாறு தொண்டு செய்வதில் நமது சக்தியின் எல்லேயும் தானகவே ஓர் எல்லேக்கு உட்பட்டதாகி விடுகிறது. இதை, நான் மிகமிகத் தெளிவான பாஷையில் கூற விரும்புகிறேன். அதாவது நம் சுயநலனேயே நாம் நினைத்துக் கொண்டிருக்கக் கூடாது. நமது அண்டை வீட்டுக்காரரின் நலனில் நாம் அதிக கவனம் செலுத்த வேண்டும். நமது வீட்டின் வெளிப்புறத்தில் உள்ள குப்பைகளை நமது அண்டைவீட்டிற்கு அருகில் குவித்து விடுவது, மனித வர்க்கத்திற்குத் தொண்டு செய்வதாகாது, தீங்கு செய்வதே ஆகும். எனவே, நமது அண்டை வீட்டுக்காரர்களுக்குத் தொண்டு செய்வதிலிருந்து நாம் தொடங்குவோமாக.

—'ஹரிஜன்' - 22—8—1936

## 30

# நம்பிக்கையும் அனுபவமும்

**கேள்வி :** பகுத்தறிவின் மூலம் கடவுளே அறிந்துகொள்ள முடியாது ; நம்பிக்கையின் மூலம்தான் அறிந்துகொள்ள முடியும். மறுஜன்மத்தில் உங்களுக்கு நம்பிக்கை உண்டா ? அல்லது நல்ல காரியங்கள், தீயகாரியங்கள் முதலியவற்றின் தத்துவத்தை ஜனங்கள் உணர்ந்து, நம்பிக்கையின் மூலம் ஓரளவு ஆறுதல் அடைவதற்காக ஹிந்து தீர்க்கதரிசிகள் மறு ஜன்மத்தைப்பற்றிக் குறிப்பிட்டிருக்கிருர்களா ?

**பதில் :** அறிவின் மூலம் கடவுளே அறிந்து கொள்ளமுடியாது. ஒருவருக்கு அறிவு ஓரளவுதான் வழிகாட்டியாக இருக்க முடியும். அதற்குமேல் அது வழிகாட்டியாக இருக்க முடியாது. கடவுளே அறிவதென்பது நம்பிக்கையையும், நம்பிக்கையிலிருந்து எழும் அனுபவத்தையும் பொறுத்ததாகும். ஒருவர் தம்மைக் காட்டிலும் சிறந்தவர்களின்

அனுபவத்தில் நம்பிக்கை வைக்கலாம்; அல்லது சொந்த அனுபவத்தைக் கொண்டு திருப்தி அடையலாம். எனினும், பூரண நம்பிக்கைக்கு அனுபவம் தேவையில்லை. நல்லது கெட்டது இவற்றிற்குள்ள வேற்றுமை, மன ஆறுதல் அளிப்ப தற்காகக் கற்பிக்கப்படவில்லை. கடவுளிடத்தில் நம்பிக்கை யும் அந்த நோக்கத்தை அடிப்படையாகக் கொண்டதல்ல. நல்லதும் கெட்டதும் உண்டு என்றும், மறு பிறப்பும் உண்டு என்றும் தீர்க்கதரிசிகள் உறுதியாகக் கூறியிருக்கிறார்கள். இந்த மறுபிறப்புக் கொள்கையை அறிவின்மூலம் அறிந்து கொள்ள முடியும் என்றே நான் நினைக்கிறேன்.

—'ஹரிஜன்' – 4—8—1946

பகுதி இரண்டு

# நம்பிக்கை, பகுத்தறிவு, ஒழுக்கம்

## 1

## திக்கற்றோருக்கு தெய்வமே துணை

மைசூர் மாணவர்கள் அடங்கிய கூட்டத்தில் காந்திஜி நிகழ்த்திய பிரசங்கத்தின் ஒரு பகுதி கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது :

சென்ற பத்து வருட காலத்தில் எனக்கு ஆயிரக்கணக்கான மாணவர்களுடன் தொடர்பு ஏற்பட்டிருக்கிறது. அவர்கள் தங்களுடைய உள்ளத்தின் ஆழத்திலுள்ள ரகசியங்களை என்னிடம் கூறியிருக்கிறார்கள். அவர்களுடைய உள்ளங்களில் இருப்பதை அறிந்துகொள்ளும் உரிமையையும் எனக்கு அவர்கள் அளித்திருக்கிறார்கள். எனவே, உங்களுடைய எல்லாக் கஷ்டங்களையும், உங்களுடைய பலவீனங்களில் ஒவ்வொன்றையும் நான் அறிவேன். உங்களுக்கு பலன் அளிக்கத்தக்க முறையில் நான் ஏதாவது உதவி செய்யமுடியுமா என்பது பற்றி எனக்குத் தெரியாது. எனினும், நான் உங்களுக்கு நண்பனாகவும் வழிகாட்டியாகவும் இருக்க முடியும்; உங்களுடைய துக்கங்களில் பங்கு எடுத்துக் கொள்ள முயற்சிக்க முடியும்; என்னுடைய அனுபவத்தை உங்களுக்கு எடுத்துக் கூறி நீங்கள் பலன் பெறும்படி செய்ய முடியும். இருந்தாலும், துணையற்றவர்களுக்கு ஒரே துணை கடவுள்தான் என்பதை நீங்கள் அறிந்து கொள்ள வேண்டும். எந்த மனிதனுக்கும், கடவுளிடத்தில் அவனுக்குள்ள நம்பிக்கை சிதறுண்டு போவதைக் காட்டிலும் பெரிய தண்டனையோ அல்லது துன்பமோ வேறெதுவும் இருக்க முடியாது.

ஆனால், அந்த நம்பிக்கை மாணவர் உலகில் இப்போது சிறிது சிறிதாக மறைந்து வருவது, எனக்கு ஆழ்ந்த துக்கத்தைக் கொடுக்கிறது என்பதை நான் ஒப்புக் கொள்ளுகிறேன். ராம நாமத்தின் உதவியை நாடும்படி நான் ஒரு ஹிந்துச் சிறுவனுக்கு யோசனை கூறினால், அவன் என்னை வெறித்துப் பார்க்கிறான். நான் கூறும் ராமன் யாராக இருக்கக் கூடுமென அவன் ஆச்சரியப்படுகிறான். குரானை வாசிக்கும்படியும் கடவுளுக்குப் பயந்து நடக்கும்படியும் நான் ஒரு முஸ்லிம் சிறுவனிடம் கூறினால், தனக்கு குரானை வாசிக்கத் தெரியாது என்று ஒத்துக் கொள்ளுவதுடன்,

அல்லா என்பது வாயளவில் வெறும் உபதேசம்தான் என்றும் அவன் கூறுகிறான். உண்மையான கல்விக்கு முதற்படி, தூய்மையான உள்ளம் என்று அத்தகைய சிறுவர்களை நான் எப்படி திருப்திப்படுத்த முடியும்? நீங்கள் பெறும் கல்வி உங்களைக் கடவுளிடமிருந்து அப்பால் திருப்பிக் கொண்டுபோய் விடுமாயின், அந்தக் கல்வி உங்களுக்கு எவ்விதம் உதவி அளிக்க முடியும், நீங்கள்தான் உலகத்திற்கு எவ்விதம் உதவி அளிக்க முடியும் என்பது எனக்குத் தெரியவில்லை. மானிட வர்க்கத்திற்குத் தொண்டு செய்வதன் மூலம் நான் கடவுளைக் காண முயற்சித்து வருகிறேன் என்று நீங்கள் உங்களுடைய உபசாரப்பத்திரத்தில் கூறியிருப்பது சரியே. ஏனெனில் கடவுள் சுவர்க்கத்திலோ அல்லது பாதாளத்திலோ இல்லை என்பதையும், அவர் ஒவ்வொருவரிடத்திலும், ஹிந்து, பிராம்மணன், க்ஷத்திரியன், வைசியன், சூத்திரன், பஞ்சமன், முஸ்லிம். கிறிஸ்தவன், ஆடவன், பெண் யாராயினும் ஒவ்வொருவரிடத்திலும் அவர் இருக்கிறார் என்பதையும் நான் அறிகிறேன்.

'எங் இந்தியா' — 4-8-1927

## 2

ரங்கூனில் நடந்த மாணவர்கள் கூட்டம் ஒன்றில் காந்திஜி பேசியதன் சாரம் கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது :

இந்தியா முழுவதும் உள்ள மாணவர்களுடன் நான் கடிதப் போக்குவரத்து நடத்திவருகிறேன். வண்டி வண்டியாகப் புத்தகங்களை வாசித்து அவற்றிலுள்ள விஷயங்களை மூளைகளில் திணித்துக் கொண்டிருப்பதன் விளைவாக மாணவர்கள் எவ்வளவு சீரழிந்து கவைக்கு உதவாதவர்களாகிவிட்டார்கள் என்பதை, அக்கடிதப் போக்குவரத்திலிருந்து நான் அறிகிறேன். அவர்களில் சிலருக்கு மூளை கலங்கிவிட்டது. வேறு சிலருக்கு பைத்தியமும் பிடித்து விட்டது. மற்றும் சிலர் திக்கற்ற, பக்குவமற்ற வாழ்க்கையை நடத்தி வருகிறார்கள். தாங்கள் எவ்வளவு முயற்சித்தாலும், தங்கள் நிலை எப்போதும் போலவே இருந்து வருவதாகவும், தங்களுடைய பேய்க் குணத்தை மாற்றிக்கொள்ளுவதில் தாங்கள் வெற்றி பெறமுடியவில்லை என்றும் அவர்கள் கூறும்போது, அவர்களுக்காக என் உள்ளம் நெகிழ்கின்றது. "எங்களிடத்தில் உள்ள பேயை எப்படி விரட்டுவது, எங்களைப் பற்றிக் கொண்டுள்ள அசுத்தத்தை நாங்கள் எப்படி ஒழிப்பது என்பதை எங்களுக்குச் சொல்லுங்கள்" என்று அவர்கள் துக்கத்துடன் கேட்கின்றனர். 'ராமநாம ஜபம் செய்யுங்கள்' என்றும், 'கடவுளின் முன்னிலையில் முழந்தாளிட்டு அவரது உதவியை நாடுங்கள்' என்றும் நான் கூறினால், "கடவுள் எங்கே இருக்கிறார் என்பது எங்களுக்குத் தெரியாது" என்று அவர்கள் என்னிடம் வந்து முறையிடுகிறார்கள். அவர்கள் அத்தகைய இழிநிலைக்கு வந்திருக்கிறார்கள். எனவே, மிகவும் விழிப்புடன் இருக்கும்படி நான் மாணவர்களைக் கேட்டுக் கொள்ளுகிறேன். புனிதமான ஒரு

காரியத்தில், தோல்வியடைந்து விட்டதாக ஒருபோதும் ஒப்புக் கொள்ளாதீர்கள். இனி நீங்கள் தூய்மையாக இருப்பதாகவும், அதற்குக் கடவுளிடமிருந்து உதவி கிடைக்கும் என்றும் நீங்கள் உங்கள் மனத்தைத் திடப்படுத்திக்கொள்ளுங்கள்.

எனினும், மமதை கொண்டவர்களின் பிரார்த்தனைகளுக்கோ, கடவுளுடன் பேரம் செய்வோரின் பிரார்த்தனைகளுக்கோ கடவுள் ஒருபோதும் பதில் அளிக்க மாட்டார். கஜேந்திர மோட்சம் என்ற கதையை நீங்கள் கேள்விப்பட்டிருக்கிறீர்களா? கவிதைகளுக்கெல்லாம் சிரேஷ்டமான, உலகத்திலேயே தெய்விகமான விஷயங்களில் ஒன்ருன அதை இங்கே உள்ள பர்மிய மாணவர்கள் அறியார்கள். எனவே, இந்திய நண்பர்களிடமிருந்து அதைத் தெரிந்து கொள்ளும்படி அவர்களை நான் கேட்டுக் கொள்ளுகிறேன். திக்கற்ருேருக்கு தெய்வமே துணை என்ற தமிழ்ப் பழமொழி எப்போதும் என் மனத்தில் பதிந்திருக்கிறது. அவருடைய உதவியை நீங்கள் நாடினல், மனத்தில் யாதொரு அப் பழுக்குமின்றி, உங்களைப்போல் வீழ்ச்சியடைந்தவர்களுக்கு அவர் எவ்வாறு உதவி அளிக்க முடியும் என்ற பீதியோ அல்லது சந்தேகமோ இல்லாமல் நீங்கள் அவரை அணுக வேண்டும். தம்மை அணுகிய லட்சக்கணக்கானவர்களுக்கு உதவிபுரிந்துள்ள அவர், உங்களைக் கைவிட்டுவிடுவாரா? அவர் யாரையும் தமது கருணைக்கு விலக்காகக் கருதுவதில்லை. அவரிடம் நீங்கள் செய்து கொள்ளும் ஒவ்வொரு பிரார்த்தனையும் நிறைவேறுவதை நீங்கள் பார்க்கலாம். மிகவும் அசுத்தமானவர்களின் பிரார்த்தனைக்குக் கூட அவர் செவி கொடுப்பார். என் சொந்த அனுபவத்தின் மீதே நான் இதைக் கூறுகிறேன். நானும் அசுத்தத் தன்மையைப் போக்கிக் கொண்டிருக்கிறேன். முதலில் கடவுளின் சாம்ராஜ்யத்தை நாடுங்கள்; உங்களுக்கு எல்லாம் கிடைத்து விடும்.

—'எங் இந்தியா' – 4—4—1929

## 2

## சத்தியாக்கிரகியின் சக்தி

எதையும், தமக்குச் சொந்தமானது என்று கூறிக்கொள்ள ஒரு சத்தியாக்கிரகிக்கு அதிகாரமில்லை. அவரிடம் இருப்பதாகத் தோன்றும் சக்தியெல்லாம் அவருக்குக் கடவுளிடமிருந்து கிடைத்ததேயாகும். எனவே, அவர் உலகத்தின் அபிப்பிராயத்தைத் தமக்கு ஆதரவாகக் கொண்டே தமது லட்சியத்தை நோக்கிச் செல்லுகிருர். கடவுளின் உதவியின்றேல் அவர் முடவராகவும், அந்தகராகவும் இருந்துகொண்டு இருளில் தடுமாறிக் கொண்டிருப்பார்.

1921-ஆம் ஆண்டிலிருந்து சுயத்தூய்மை, சுயத்தியாகம் என்ற இரண்டு சொற்களை திரும்பத் திரும்ப நான் வற்புறுத்திக் கொண்டு வருகிறேன். இந்த இரண்டும் இராதவனுக்குக் கடவுள் துணைபுரியமாட்டார். தியாகத்தினுல் உலகம் உருகிவிடுகின்றது. லட்சியத்தின் நியாய அநியாயத்தைக்கூட அது பாகுபாடுசெய்து பார்ப்பதில்லை. ஆனல், கடவுள் அப்படி அல்ல. அவர் எல்லாவற்றையும் பார்க்கிருர். லட்சியம் தூய்மையானதாக இருக்க வேண்டும் என்றும், அதை அடைவதற்குப் போதிய தியாகம் செய்தாக வேண்டும் என்றும் அவர் வற்புறுத்துகிருர்.

—'எங் இந்தியா' – 3 – 4—1930

# 3

# கடவுளின் சட்டத்திற்குக் கீழ்ப்படியுங்கள்

[காந்திஜி தமது மௌன தினத்தன்று ஹிந்துஸ்தானியில் எழுதி விடுத்த செய்தியின் மொழி பெயர்ப்பே கீழே கொடுக்கப்பட்டுள்ளது:]

எல்லாம் கடவுளிடமிருந்தே வருகின்றன என்பதில் நமக்கு நம்பிக்கை இருக்கும் வரையில், நாம் கலங்குவதற்குக் காரணம் எதுவும் ஏற்படாது. ஆனல், அதற்கு ஒரே ஒரு நிபந்தனை என்னவெனில், நாம் எதைச் செய்தாலும் கடவுளைச் சாட்சியாக வைத்துக் கொண்டு நாம் செய்யவேண்டும். ஏனெனில், உலகம் இயங்கும்படி செய்பவர் அவர்தான். நாம் நமது நடவடிக்கைகளின் பலாபலன்களையே அனுபவிக்கிறேம். ஆகையால், கடவுளின் சட்டத்திற்குக் கீழ்ப்படிந்து நடக்கவேண்டியதே நமது கடமை. அதன் பலன் என்ன என்பது பற்றி நாம் அக்கறை கொள்ளக் கூடாது.

'ஹரிஜன்' – 23—6—1936

# 4

# சரணடைந்து விடுங்கள்

சிம்லாவில் நடந்த மாலைப் பிரார்த்தனையின் போது காந்திஜி கூறியதாவது :

இம் முறை நான் சிம்லாவுக்கு வரவேண்டியிருக்கும் என்பதை நான் அறியவில்லை. கடவுளிடத்தில் நமக்கு நம்பிக்கை இருக்குமாயின், அவர் நம்மை எப்படி உபயோகித்துக் கொள்ளுகிருர்

என்பது பற்றி முன்கூட்டியே அறிந்துகொள்ள நாம் கவலைப்பட மாட்டோம். என்ன நேருவதாயினும், அதற்கு முற்றிலும் நாம் தயாராக இருந்துவருவதே போதுமானது. நாளை என்ன நேரப்போகிறது என்பதை அறியும் சக்தி நமக்கு இல்லை. நாம் தீர்க்காலோசனை செய்து சிறந்த முறையில் வகுக்கும் திட்டங்கள் யாவும் பெரும்பாலும் வீணாகிவிடுகின்றன. எனவே, எதிர்காலத்தைப்பற்றிச் சிறிதும் கவலைப்படாமல், எல்லாம் கடவுளின் சித்தப்படி நடக்கும் என்று நாம் முற்றிலும் சரணடைந்து விடுவதே மிகச் சிறந்த விவேகமாகும்.

'ஹரிஜன்' - 12—5—1946

(2)

பாகவதத்தில் முக்கியமாக விளங்கும் யானைகளுக்கெல்லாம் ராஜாவான கஜேந்திரனுக்கும் முதலைக்கும் உள்ள உவமையைப் பற்றி காந்திஜி கூறியதாவது:

தமது பக்தர்களுக்கு சோதனைக் காலம் ஏற்படும்போது கடவுள் ஒரு போதும் அவர்களைக் கைவிட்டு விடுவதில்லை என்பதே அந்தக் கதையிலிருந்து நாம் தெரிந்துகொள்ளும் படிப்பினையாகும். கடவுள் கைவிட்டு விடாமல் இருப்பதற்கான நிபந்தனை என்னவெனில், கடவுளிடம் நிரந்தரமான நம்பிக்கை இருக்க வேண்டும்; முற்றிலும் கடவுளே கதி என்ற எண்ணம் ஏற்பட வேண்டும். நமது கடமையைச் செய்த பின், கடவுள் கொடுக்கும் எதையும், மகிழ்ச்சியையும் துக்கத்தையும், நல்ல அதிருஷ்டத்தையும் துரதிருஷ்டத்தையும், எதையும் வரவேற்க நாம் தயாராக இருக்கவேண்டும். முதலாவதாக, பிரார்த்தனை செய்வோருக்குக் கஷ்டங்கள் ஏற்படாமல் கருணைவடிவான கடவுள் தவிர்த்து விடுவார். கஷ்டங்கள் வந்தாலும் அத்தகையோர் தங்களுடைய விதியை நினைத்துப் புலம்பமாட்டார்கள்; எல்லாம் கடவுள் சித்தமென்று கலக்கமற்ற அமைதியான மனத்துடனும் மகிழ்ச்சியுடனும் அவற்றைப் பொறுத்துக்கொள்ளுவார்கள்.

'ஹரிஜன்' – 7—7—1946

# 5

# பாதுகாக்கும் கவசம் கடவுளே

தாடிகெட்டில் உள்ள பிரேம வித்தியாலயத்தில் காந்திஜி இரண்டு நாட்கள் தங்கினார். அந்த வித்தியாலயம் ஒத்துழையாமை இயக்கத்தின் குழந்தையாகும். 1921–ஆம் வருடம் அது கலப்பற்ற ஒரு தேசீயக் கல்வி ஸ்தாபனமாக ஆரம்பிக்கப்பட்டது. அது சொந்தக் கட்டிடத்திலேயே இருக்கிறது. சிறிது காலமாக அது பல இடையூறுகளைச் சமாளிக்க வேண்டியிருந்தது. 16–ஆம் தேதி நடந்த அதன் வருடாந்தர வைபவத்திற்குக் காந்திஜி

தலைமை வகித்தார். கவர்ச்சிகரமான அவ்வைபவத்திற்கு, சுற்று வட்டக் கிராமங்களிலிருந்து ஏராளமான ஜனங்கள் வந்திருந்தனர். எனவே, காந்திஜி பொதுவான விஷயங்களைப் பற்றியே பேசினார். அப்போது அவர் மக்களுக்கு விடுத்த செய்தியாவது :

"நான் இங்கே வருவதற்கு முன்பே உங்களுடைய துன்பங்களைப்பற்றிக் கேள்விப் பட்டேன். எனினும், அவற்றிற்கெல்லாம் பரிகாரம் உங்களுடைய கையில்தான் இருக்கிறது. சுயத் தூய்மை என்பதே அதன் பெயராகும். நம்முடைய சுயநலமும் குறுகிய எல்லைப் பற்றுமே இன்று நம்மைக் கீழே அமுத்தி வைத்திருக்கிறது. இவற்றை நாம் உதறித்தள்ள வேண்டும். நம்முடைய குடும்பத்திற்காக எப்படி இறப்பது என்பதை நாம் அறிவோம். ஆனால், இன்னும் ஒரு படி மேற்கொண்டு செல்ல நாம் கற்றுக் கொள்ள வேண்டிய நேரம் வந்துவிட்டது. கிராமம் முழுவதையும் நாம் நேசிக்க வேண்டும். பின்னர், நமது அன்பானது கிராமத்திலிருந்து ஜில்லாவுக்கும், ஜில்லாவிலிருந்து மாகாணத்திற்கும், இவ்விதமே மேலும் மேலும் பரவி உலகம் முழுவதையும் தழுவுவதாக இருக்கவேண்டும். நீங்கள் சுய நம்பிக்கையை வளர்த்து, கடவுளை உங்களைப் பாதுகாக்கும் கவசமாகச் செய்துகொள்ள வேண்டும். அவரைக் காட்டிலும் வல்லமை வாய்ந்தவர் யாருமே இல்லை. கடவுளின் பாதங்களில் விழுந்துவிடும் ஒரு மனிதன், வேறு எவரையும் கண்டு அஞ்சுவதில்லை."

'எங் இந்தியா' - 27—6—1929

# 6

# நம்பிக்கை இழக்காதீர்கள்

திரிச்சூர் மாணவர்கள் அடங்கிய கூட்டத்தில் காந்திஜி நிகழ்த்திய ஒரு பிரசங்கத்தின் சாரம் கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது :

மாணவர்களின் ஒழுக்கத்தை உருவகப்படுத்துவதே மத, ஒழுக்க போதனையின் கருத்தாகும். எனவே, சிறுவர்களுக்கும் சிறுமிகளுக்கும் நான் கூறுவது இதுதான்: கடவுளிடத்தில் உள்ள நம்பிக்கையை ஒருபோதும் இழந்துவிடாதீர்கள். ஒரே ஒரு தீய எண்ணத்திற்கு, ஒரே ஒரு பாவமான எண்ணத்திற்கு நீங்கள் இடம் கொடுத்தாலும், உங்களுக்கு அந்த நம்பிக்கை இல்லை என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுங்கள். பொய், தயவு தாட்சாண்யமின்மை, பலாத்காரம், சிற்றின்ப ஆசை முதலியவை அந்த நம்பிக்கைக்கு முற்றிலும் முரணாகும். நமக்கு நம்மைக் காட்டிலும் பெரிய

விரோதி இந்த உலகில் இல்லை என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுங்கள். இதை, பகவத் கீதையில் உள்ள ஒவ்வொரு சுலோகமும்* பிரகடனம் செய்கிறது. ஏசுநாதரின் மலை உபதேசத்தை நான் சுருங்கக் கூறுவதாயின், அதிலிருந்தும் மேற் கண்ட விடைதான் கிடைக்கிறது. குரான் ஆராய்ச்சியின் மூலமும் நான் அதே முடிவிற்குத்தான் வந்திருக்கிறேன். நமக்கு நாமே கஷ்டத்தைத் தேடிக்கொள்ளுகிறோம். நமக்குத் துன்பத்தை விளைவிக்க நம்மைப்போல் வேறு யாராலும் முடியாது. எனவே, நீங்கள் தைரியசாலிகளான சிறுவர்களாகவும் தைரியசாலிகளான சிறுமிகளாகவும் இருந்தால், அத்தகைய கெட்ட எண்ணங்களை எதிர்த்து நீங்கள் துணிச்சலுடனும் தீரமாகவும் போராடுவீர்கள். இந்த உலகத்தில் பாவமான எண்ணத்தினல் தூண்டப்படாமல், எந்தப் பாவமான காரியமும் செய்யப்பட்டதில்லை. உங்கள் மனத்தில் பொங்கி எழும் ஒவ்வொரு எண்ணத்தையும் நீங்கள் ஜாக்கிரதையாகக் கண்காணித்து வர வேண்டும்.

சிறுவர்களும் சிறுமிகளுமான பல மாணவர்கள் என்னிடம் இவ்விதம் கூறியிருக்கிறார்கள்: நான் கூறுவது முற்றிலும் சரி என்பதை அறிவைக் கொண்டு அவர்கள் உணர்ந்து கொண்டுள் ளனர். என்றாலும், நடைமுறையில் தங்களுடைய எண்ணங்களைக் கட்டுப்படுத்துவது தங்களுக்கு அசாத்தியமாக இருப்பதாக அவர்கள் கூறுகிறார்கள். எனவே, அவர்கள் தங்களுடைய முயற்சியைக் கைவிட்டுவிட்டு மனச்சோர்வுக்கு இடம் கொடுத்து விடுகிறார்கள். பின்னர் தங்களுடைய தீய எண்ணங்களைத் தூண்டும் புத்தகங்களை வாசித்து அந்த எண்ணங்களால் ஆட் கொள்ளப்பட்டு விடுகிறார்கள். நம் உள்ளே நிகழும் இரண்டு நடவடிக்கைகளுக்குள்ள தெளிவான வேற்றுமையை நான் குறிப் பிட விரும்புகிறேன். சிறிதும் அப்பழுக்கற்றவர்களைத் தவிர மற்ற ஒவ்வொருவருடைய மனத்திலும் தீய எண்ணங்கள் எழுகின்றன. எனவே, தீய எண்ணங்களிலிருந்து நாம் விடுதலை பெறும்படி இடைவிடாது நாம் கடவுளைப் பிரார்த்திக்க வேண்டியது அவசிய மாகும். அது நமக்கு நன்மையை அளிக்கும். மற்றொரு நடவடிக்கை

---

* உத்தரேத் ஆத்மனாத்மானம் நாத்மானம் அவஸாதயேத் |
ஆத்மைவ ஹ்யாத்மனோ பந்து: ஆத்மைவ ரிபுராத்மன: ||
அத்தியாயம் – 6, சுலோகம் – 5

இதன் பொருள்: தன்னைத் தானே உயர்த்திக் கொள்ளவேண்டும். தன்னை இழிவான நிலைக்குக் கொண்டுவந்துவிடக் கூடாது. ஏனென்றால், தனக்கு தன்னைக் காட்டிலும் ஒரு நண்பனோ அல்லது பகைவனோ இந்த உலகில் இல்லை.

பந்து ராத்மாத்மனஸ்தஸ்ய யேனாத்மைவாத்மனா ஜித: |
அனாத்மனஸ்து சத்ருத்வே வர்த்தேதாத்மைவ சத்ருவத் ||
அத்தியாயம்–6, சுலோகம்-6

இதன் கருத்து: உடல், புலன்கள், மனம், புத்தி இவற்றை வென்றவன் தனக்குத் தானே சிறந்த நண்பனாகிறான். அவற்றை ஜெயிக்காமல் தீய எண்ணங்களுக்கும் தீய நடவடிக்கைகளுக்கும் இடம் கொடுப்பவன் தனக்குத் தானே பரம விரோதியாகிவிடுகிறான்.

என்னவெனில், தீய எண்ணங்களை எண்ணி, அவற்றால் ஆனந்தம் அடைவதுதான். அது மிகவும் அபாயகரமான, துன்பத்தைக் கொடுக்கக் கூடிய நடவடிக்கையாகும். உங்கள் சக்திக்கு இயன்ற வரையில் அதை நீங்கள் எதிர்த்துப் போராட வேண்டும் என்று உங்களை நான் அழைக்கிறேன்.

'எங் இந்தியா' – 27—10—1927

# 7

# ஆன்ம சக்தியின் பெருமை

இந்தியாவில் உள்ள பல்வேறு மதங்களைச் சேர்ந்த தலைவர்கள், தங்கள் தங்கள் மதத்திற்கு ஹரிஜனங்களை ஆசைகாட்டி இழுப்பதில் ஒருவருக்கொருவர் போட்டி போடுவதை நிறுத்தினால், துரதிருஷ்டம் வாய்ந்த இந்த நாட்டிற்கு நன்மையாக இருக்கும். அந்தப் போட்டியில் ஈடுபட்டிருப்பவர்கள் மதத்திற்குத் தொண்டு செய்பவர்கள் ஆகமாட்டார்கள் என்பது எனது உறுதியான அபிப்பிராயமாகும். அரசியல் அல்லது பொருளாதார நோக்குடன் அதை அணுகுவதன் மூலம், அவர்கள் மதத்தின் மதிப்பையே குறைத்து விடுகிறார்கள். அதற்கு மாறாக, மத நோக்குடன் அரசியலையும் மற்ற விஷயங்களையும் மதிப்பிடுவதே ஒழுங்காகும்.

மதம், ஆன்ம சாஸ்திரத்தைப் பற்றியது. உலகத்தில் உள்ள மற்ற சக்திகள் பெரியவையே என்றாலும், கடவுள் என்ற ஒருவர் இருப்பாராயின், ஆன்ம சக்திதான் மற்ற எல்லா சக்திகளையும் விட மகத்தானது. சக்தி எவ்வளவுக்கு அதிகமாகிறதோ, அவ்வளவுக்கு அது அதிக நுட்பமாக இருக்கிறது என்ற உண்மையை நாம் அறிகிறோம். இதுவரையில், ஸ்தூல சக்திகளுக்குள் மின்சாரமே நுட்பமானதாகக் கருதப்பட்டுவந்தது. எனினும், அதை யாரும் பார்த்ததில்லை. அதனுடைய ஆச்சரியகரமான பலன்களையே நாம் பார்க்கிறோம். மின்சாரத்தைக் காட்டிலும் அதிக நுட்பமான ஒரு சக்தியைப் பற்றி விஞ்ஞானிகள் பேசத் தொடங்கியிருக்கிறார்கள். ஆனால், ஆன்ம சக்தியைப் பற்றி நிச்சயமாக அறிந்துகொள்ளக் கூடிய கருவி எதையும் மனிதனால் இன்னும் கண்டுபிடிக்க முடியவில்லை. உண்மையான மதச் சீர்திருத்தக்காரர் இதுவரையில் அந்த ஆன்ம சக்தியையே நம்பி வந்திருக்கிறார். அந்த நம்பிக்கை ஒருபோதும் வீணானதில்லை. ஹரிஜனங்களின் நலனையும் மற்றவர்களின் நலனையும் இறுதியாகப் பாதுகாப்பது அந்த சக்தியேயாகும். இயற்கையிலேயே மிகுந்த அறிவு படைத்த மனிதர்களின் கணக்குகளைக்கூட ஆன்ம சக்தி குழப்பி விடுகிறது. எனவே, ஹிந்து மதத்திலிருந்து தீண்டாமை நோயை அகற்றும் கடமையில் ஈடுபட்டுள்ள சீர்திருத்தக்காரர், தாம் செய்ய முற்படும் எந்தக் காரியத்திற்கும் அந்த ஆன்ம சக்தியின் உதவியையே நாடவேண்டியவராக இருக்கிறார்.

—'ஹரிஜன்' – 22—8—1936

# 8

# பகவானின் வாக்குறுதி

காலைப் பிரார்த்தனையின் போது, ஆசிரமவாசிகள் அடங்கிய கூட்டத்தில் காந்திஜி கீதையைப் பற்றிப் பேசுவார். மாலையில் காந்திஜியின் பிரசங்கம் ஆசிரமவாசிகளின் தினசரி வாழ்க்கை சம்பந்தமான விஷயங்களைப் பற்றியதாக இருக்கும். காலையில் அவரது பிரசங்கம் பெரும்பாலும் கீதையிலுள்ள விஷயத்தைப் பற்றியதாகவே இருப்பது வழக்கம். அதைப் பற்றி காந்திஜி விரிவான வியாக்கியானத்தில் ஈடுபடுவதில்லை. அன்று கூறப் பட்ட கீதையின் சுலோகங்களைப்பற்றி சில வார்த்தைகளே கூறு வார். உதாரணமாக ஒரு நாள் கூறியதாவது :

துன்பத்தில் உழன்று வரும், உடல் நோய்களால் மாத்திரமல்ல, மன நோய்களாலும் துன்பத்திற்கு உள்ளாகிவரும் மனிதர் களாகிய நாம், அந்த நோய்களைத் தீர்த்து குணப்படுத்தும் ஔஷ தமானது கீதையின் 9-ஆவது அத்தியாயத்தில் விவரிக்கப்பட் டிருப்பதைக் காணலாம். தவறு செய்யும் மனிதர்களுக் கெல்லாம் பகவான் கூறியுள்ள உறுதிமொழி, அந்த அத்தியாயத்தில் அடங் கியிருக்கிறது. பாவத்திலேயே பிறந்து வளர்ந்தவர்களுக்குக்கூட பகவான் உறுதிமொழி கொடுத்துள்ளார். அதாவது, அவரிடம் பக்தி கொண்டவர்கள் துக்கப்படும்படி நேராது. கீதை உபதே சிக்கப்பட்ட பொழுது வர்ணாசிரமத்தின் புராதனத் தூய்மை மறைந்து, இன்றிருப்பது போல் உயர்ந்தவர், தாழ்ந்தவர் என்ற பிரிவு ஏற்பட்டுவிட்ட தென்பதும் அந்த அத்தியாயத்திலிருந்து தெரிகிறது. எனினும், அதை நாம் மறந்துவிடுவோம். பகவான் எல்லோருக்கும், பாவத்தில் ஆழ்ந்திருப்பவர்களுக்கும் கூட, 'அபி சேத் ஸுதுராச்சாரோ*' (ஒழுக்கமில்லாதவனாக இருப்பவனுக்குக் கூட) உறுதிமொழி கூறியுள்ளார். நாம் எல்லோருமே சற்றேறக் குறைய பாவத்தில் ஆழ்ந்திருக்கும் போது, யார்மீது யார் குற்றம் கூறத் துணியமுடியும்? 'நீ நிச்சயமாக இரு. என்னை நம்புவோர் நாசம் அடைவதில்லை'* என்கிறார் பகவான். எனினும், பாவங் களைக் களைய முயற்சிக்காமல், கடவுளை நம்புவதால் மாத்திரம்

---

* அபிசேத் ஸுதுராச்சாரோ பஜதே மாம் அனன்யபாக் |
ஸாதுரேவ ஸ மந்தவ்ய: ஸம்யக்வ்யவஸிதோ ஹிஸ:||

அத்தியாயம் -9, சுலோகம்-30

இதன் கருத்து: பல பாவச் செயல்களிலும் ஈடுபட்டு ஒழுக்கமற்றிருப்பவனும் கூட வேறு ஒன்றையும் எண்ணாமல் என்னிடம் பக்தி கொண்டிருந்தால், அவனை மேலா னவன் என்றே கருதவேண்டும். அவன் சாதுவாகி நல்ல உறுதியுள்ளவனாகிவிடுகிறான்.

† ஸத்வம் ரஜஸ் தம இதி குணா: ப்ரகிருதி ஸம்பவா:
நிபத்னந்தி மஹாபாஹோ தேஹே தேஹிநமவ்யயம்

அத்தியாயம்-14, சுலோகம்-5.

இதன் பொருள்: மகாபராக்கிரமம் பொருந்திய தோள்வலிமை பெற்ற அர்ஜுனா! இயற்கையிலிருந்து உண்டான ஸத்வம், ராஜஸம், தாமசம் என்ற மூன்று குணங்கள் அழியாத ஆன்மாவை அழியும் தேகத்துடன் பிணைக்கின்றன.

நமது பாவங்கள் தொலைந்துவிடும் என்று அதிலிருந்து பொருள் கொள்ளக் கூடாது. புலன்களின் கவர்ச்சிகரமான ஆசைகளை எதிர்த்துக் கடுமையாகப் போராடி, கண்ணீரும் கம்பலையுமாகக் கடவுளை நாடுவோர் மாத்திரமே ஆறுதல் அளிக்கப்படுவார்கள்.

மீண்டும் கீதையின் 11, 12-ஆவது அத்தியாயங்களைப் பார்ப்போம்: இங்கே காணப்படும் எண்ணிக்கையும் எல்லையுமற்ற உருவங்களுடன் கூடிய பகவானின் விசுவரூப தரிசனத்தைக் காட்டிலும், ஒருவருக்குக் கடவுள் பக்தி ஏற்படும்படி செய்யக்கூடிய அதிக சக்தி வாய்ந்தது வேறு என்ன இருக்க முடியும்? இவ்விதமாக நாம் பக்தி மார்க்கத்தில் செல்லும்படியான ஒரு நிலையை ஏற்படுத்தியபின் 12-ஆவது அத்தியாயத்தில் பகவான் பக்தியின் சாரத்தைக் கொடுக்கிறார். அது மிகவும் சுருக்கமாக இருப்பதால் அதை, எவரும், சோதனைக் காலங்களில் தமக்குத் துணையாக இருப்பதற்காக, மனப்பாடம் செய்து கொண்டுவிட முடியும்.

14-ஆவது அத்தியாயமும், மூன்று குணங்களைப் பற்றிய விவரங்களும்* ஹென்றி டிரம்மாண்ட் எழுதியுள்ள நூலை எனக்கு ஞாபகப்படுத்துகிறது. 'ஆன்ம உலகத்தில் இயற்கை விதி,' என்ற அந்த நூலை சுமார் முப்பது ஆண்டுகளுக்கு முன் நான் வாசித்தேன். அந்த விதிகள் ஏராளமாக இருக்கின்றன. எனினும், அவை மூன்று பரந்த பிரிவுகளாக பிரிக்கப்பட்டுள்ளன. மனிதனை ஆட்கொள்ளும் மூன்று குணங்கள் 14-ஆவது அத்தியாயத்தில் விவரிக்கப்பட்டுள்ளன. 15-ஆவது அத்தியாயம் புருஷோத்தமனைப் பற்றி, அதாவது அப்பழுக்கற்ற நிறை மனிதனைப் பற்றி விவரிக்கின்றது. மனிதன் எவ்வாறு உயர்வடைவது என்பதை இந்த அத்தியாயங்களிலிருந்து நாம் கற்றுக்கொள்ள வேண்டியவர்களாக இருக்கிறோம். சத்துவம், ராஜஸம், தாமசம் என்ற அந்த மூன்று குணங்களில் ஒன்றினால் மாத்திரம் எந்த மனிதனும் முற்றிலும் ஆட்கொள்ளப்பட்டு விடுவதில்லை. நம்மில் ஒவ்வொருவரும் சத்துவ குணம் மேலோங்கி நிற்கும் ஒரு நிலையை அடைய வேண்டும். பின்னர் நாம் அந்த மூன்று குணங்களையும் கடந்து அப்பழுக்கற்ற நிறை மனிதர்களாக விளங்குவோம்.

இதற்கு, ஸ்தூல உலகத்திலிருந்து நான் ஓர் உதாரணம் கூற முடியும். தண்ணீரை எடுத்துக் கொள்ளுங்கள். அது அதன் உறுதியான நிலையில் பூமியில் இருக்கிறது. அது கனம் குறைந்து நீராவியாக மாறினாலன்றி அது மேலே எழும்ப முடியாது. அதன் கனம் குறைந்து அது நீராவியாகிவிட்டால், அது ஆகாயத்தை நோக்கிச் சென்று, மேகங்களாக மாறி, இறுதியில் மழையாகப் பொழிந்து பூமி செழிக்கும்படி செய்கிறது. நாம் எல்லோருமே தண்ணீரைப் போன்றவர்கள் தான். நம்முடைய கனமும் குறைந்து விட்டால், அதாவது 'நான்' என்ற அகங்காரம் அழிந்துவிட்டால்,

* இந்த மூன்று குணங்களைப்பற்றி ஸ்ரீ கிருஷ்ண பகவான் கூறும் முழு விவரங்களையும் குணத்ரய விபாகயோகம் என்ற கீதையின் 14-வது அத்தியாயத்தில் காணலாம்.

எல்லையற்ற கடவுளுடன் நாம் கலப்போம்; அதனால் எல்லோருக்கும் நிரந்தரமான நன்மை ஏற்படும்.

—'எங் இந்தியா' – 12—1—1928

# 9

# பலவீனர்களின் பலம்

பம்பாய் காங்கிரஸ் மண்டபத்தில் நடந்த பிரார்த்தனைக் கூட்டத்தில் காந்திஜி பேசியதன் சாரமே கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது :

பம்பாயில் உள்ள பலருக்கு, கடவுள் இருக்கிறார் என்பதே சந்தேகமாக இருக்கிறது. அப்படியிருக்க, இந்நகரில் பிரார்த்தனைக் கூட்டத்தை நடத்த நான் ஏன் சம்மதித்தேன் என்று நீங்கள் ஆச்சரியப்படுவீர்கள். 'ஒவ்வொருவருடைய உள்ளத்திலும் கடவுள் வீற்றிருந்தால், யார் யாரைப் பிரார்த்திப்பது? யார் யாரை வேண்டிக்கொள்ளுவது?' என்று மற்றும் பலர் கூறுகிறார்கள். அறிவைச் சோதிக்கும் இந்தப் புதிர்களையெல்லாம் தீர்ப்பதற்காக நான் இங்கே வரவில்லை. என்னுடைய குழந்தைப் பருவத்திலிருந்தே பிரார்த்தனை எனக்கு மன ஆறுதலுக்கும் பலத்திற்கும் காரணமாக இருந்து வருகிறதென்று மாத்திரம் நான் கூற முடியும். சந்தேகத்தினாலும் சோர்வினாலும் இடிந்துபோனவர்கள் இருக்கின்றனர். அவர்களுக்குத் துணையாக கடவுளின் பெயர் இருக்கிறது. பலமின்றியும் துணையின்றியும் யார் கடவுளிடம் செல்லுகிறார்களோ, அத்தகையோருக்கு அவர் (கடவுள்) பலத்தைக் கொடுக்கிறார். 'நான் பலவீனமானவனாக இருக்கும்போதுதான் பலமுள்ளவனாக இருக்கிறேன்.' என்று கவி சூர்தாஸ் பாடியதைப் போல், ராமன் பலவீனர்களின் பலமாக விளங்குகிறார்.

ஆயுதங்களை எடுத்துக் கொள்ளுவதாலோ அல்லது மற்ற முறைகளாலோ இந்த பலத்தைப் பெற்றுவிட முடியாது. கடவுளே கதி என்று சரணடைவதால் மாத்திரமே அந்த பலத்தைப் பெறமுடியும். கடவுளின் மற்றொரு பெயர்தான் ராமன் என்பதாகும். நீங்கள் கடவுள் என்றோ, அல்லா என்றோ அல்லது வேறு எந்தப் பெயரை வேண்டுமாயினும் கூறலாம். அவர் ஒருவரையே நம்புவது என்று நீங்கள் உறுதி கொண்ட அதே விநாடியிலேயே நீங்கள் சக்தி பெறுகிறீர்கள்; உங்களது ஏமாற்றமெல்லாம் மறைந்துவிடுகின்றன. சூர்தாஸின் கீதம் கஜேந்திர மோட்சம் என்ற கதையையே குறிப்பிடுகிறது. கஜேந்திரனை முதலை பிடித்து தண்ணீருக்குள் இழுத்துவிட்டது. அந்த யானையின் உடல் எல்லாம் தண்ணீரில் மூழ்கி துதிக்கை நுனி மாத்திரமே தண்ணீருக்கு வெளியில் தெரிந்தது. அப்போது கஜேந்திரன் கடவுளின் பெயரைக் கூறவே, அது காப்பாற்றப்பட்டது. அது

உவமைக்காக கூறப்பட்ட கதையே என்பதில் ஐயமில்லை. எனினும், அதில் ஓர் உண்மை அடங்கி யிருக்கிறது. என் வாழ்க்கையில் பல தடவைகளிலும் அந்த உண்மையை நான் கண்டிருக்கிறேன். எங்கும் இருள் சூழ்ந்து மிக மிகச் சோர்வடைந்துள்ள சமயத்தில் கூட, இந்தப் பரந்த உலகில் உதவியளிப்போரும் ஆறுதல் கூறுவோரும் இல்லை என்று தோன்றும் சமயத்தில், கடவுளின் பெயர் நமக்கு சக்தியைக் கொடுத்து, சோர்வையும் சந்தேகங்களையும் வெகுதூரத்திற்கு அப்பால் விரட்டிவிடுகின்றது. இன்று வானம் எங்கும் மேகங்கள் சூழ்ந்திருக்கலாம். எனினும், மனம் உருகி அவரைப் பிரார்த்தனை செய்தால், மேகங்களெல்லாம் சிதறுண்டு போய்விடும். வாழ்க்கையில் ஏமாற்றம் என்பதையே நான் அறியேன். அதற்குக் காரணம் பிரார்த்தனைதான். நம்மிடமுள்ள அற்பத்தனத்தையும், ஈன புத்தியையும், வஞ்சகத்தையும் அகற்றி நமது உள்ளங்களைச் சுத்தம் செய்யும்படி நாம் கடவுளைப் பிரார்த்திப்போமாக. நமது பிரார்த்தனைகளுக்கு அவர் நிச்சயமாகச் செவிசாய்ப்பார்.

'ஹரிஜன்' - 1—6—1935

# 10

# சத்தியாக்கிரகியின் ஜீவ நம்பிக்கை

சம்பாரணில் (பீகார்) உள்ள பிருந்தாவனத்தில் காந்தி சேவா சங்கத்தின் 5-ஆவது வருடாந்தரக் கூட்டம் நடந்தபோது காந்திஜி, சத்தியாக்கிரகிகளுக்கு கடவுளிடம் திடமான நம்பிக்கை இருக்கவேண்டியது அத்தியாவசியம் என்பதை வற்புறுத்திப் பேசியதாவது: ஒரு சத்தியாக்கிரகிக்கு, அவருக்குள்ள உறுதியான நம்பிக்கையைத் தவிர அவருக்கு வேறு பலம் இல்லை. அந்த நம்பிக்கையின்றேல், அவர் சத்தியாக்கிரகத்தை எப்படி மேற்கொள்ள முடியும்? தங்களுக்கு அத்தகைய நம்பிக்கை இல்லையென்று கருதுவோரை, காந்தி சேவா சங்கத்திலிருந்து விலகிக் கொள்ளும்படியும், சத்தியாக்கிரகம் என்ற பெயரை மறந்துவிடும்படியும் கேட்டுக் கொள்ளுகிறேன்.

'ஹரிஜன்' - 13—5—1939

# 11

# உண்மையான நம்பிக்கை

சோதனைக் காலம் வரும்போது உங்களுடைய நம்பிக்கை குன்றி விடக்கூடாது. நல்ல காலத்தில் மாத்திரம் தடபுடலாக இருக்கும் நம்பிக்கைக்கு மதிப்பில்லை. நம்பிக்கைக்கு ஏதாவது

மதிப்பு இருக்கவேண்டுமாயின், மிகக் கடுமையான சோதனைகளுக்குப் பின்பும் அது ஒளி குன்றுமல் திகழவேண்டும். உலகம் முழுவதும் இகழ்ந்து ஏசினுல் கூட, அந்த நம்பிக்கை யாராலும் அசைக்க முடியாததாக இருக்கவேண்டும். இல்லாவிடில் அது மேற்பூச்சு பூசப்பட்ட ஒரு கல்லறைக்குச் சமமாகிவிடும்.

'எங் இந்தியா' – 25—4—1929

# 12

# நம்பிக்கைக்கு சோதனை

சட்ட மறுப்பு ஆரம்பமாவதற்கு முந்திய மாதத்தில் ஆசிரமத்தைச் சேர்ந்தவர்கள், பல சோதனைகளுக்கும் மனவேதனைகளுக்கும் உள்ளாக வேண்டியிருந்தது. "சத்தியாக்கிரக ஆசிரமம்'' என்ற புனிதமான பெயரால் அழைக்கப்படும் அந்தச் சிறிய மைதானத்தில் காலையிலும் மாலையிலும் நடந்த பிரார்த்தனைகளின்போது காந்திஜி தமது உள்ளத்தைத் திறந்து காட்டினர். அச் சிறிய பிரதேசம் பிரார்த்தனைக்கு மட்டிலுமே உபயோகிக்கப்பட்டு வந்தது. அதற்குக் காரணம், அந்த இடத்திலாவது எல்லோரும் உடல் சம்பந்தமான பந்தங்களைத் துறந்து, சத்திய, சாத்விக உணர்ச்சியுடன் ஏகமனதாகக் கடவுளைப் பிரார்த்திக்க வேண்டும் என்பதேயாகும்.

எனினும், பிரார்த்தனை மைதானத்திற்கு வெளியில் கூட சத்தியத்தையும், சாத்விகக் கொள்கையையும் பின்பற்றும் ஆர்வம் ஆசிரமத்தைச் சேர்ந்தவர்களிடையே இருந்து வந்தது. தினந்தோறும் காலையிலும் மாலையிலும் பாராயணம் செய்யும் கீதை சுலோகங்களின் உபதேசத்தை நடைமுறையில் அனுசரிக்க வேண்டும் என்ற நாட்டமும் அவர்களிடையே இருந்து வந்தது. எனினும், அவர்களுடைய அந்தரங்க சுத்தியைச் சோதிப்பதற்கான சம்பவம் எதுவும் அப்போது நிகழவில்லை. ஆனல், அந்தச் சம்பவமும் விரைவில் வைசூரி நோயின் உருவத்தில் ஏற்பட்டது. வைசூரி கண்ட நோயாளிகளை எவ்வளவோ அக்கறையுடன் கவனித்துவந்தும் கூட, அந்த நோய்க்கு ஆசிரமத்தைச் சேர்ந்த மூன்று குழந்தைகள் பலியாக நேர்ந்தது. அதற்காக துக்கம் கொண்டாடுவது, அழுவது என்ற பேச்சிற்கே இடமில்லை. அது மாத்திரமல்ல; அக் குழந்தைகளின் பெற்றோர்கள் உள்பட எல்லோரும், எவ்வித அசம்பாவிதமும் நேராதது போல் தங்களுடைய கடமைகளைச் செய்ய வேண்டியிருந்தது. அந்தச் சோதனையை எல்லோரும் சமாளித்து நின்றூர்கள். மிகவும் அத்தியாவசியமானவர்கள் மாத்திரமே மயானத்திற்குச் சென்றூர்கள். மற்றவர்கள் தினசரி செய்ய வேண்டிய கடமைகளில் எவ்விதக் குந்தகமும் ஏற்படவில்லை. இறந்த குழந்தைகளின் பெற்றோர்கள்கூடப் பிரார்த்தனையில் கலந்து

கொள்வதையோ, நூற்பு யக்ஞத்தையோ நிறுத்தவில்லை. துக்க தினத்திற்கும் சுப தினத்திற்கும் வேற்றுமை பாராட்டவும் அவர்கள் மறுத்துவிட்டனர். ஒரு சிறுவன் இறந்த இரண்டு நாட்களில் ஒரு பெண்ணின் திருமணம் நடந்தது. அது ஏற்கனவேயே நிர்ணயம் செய்யப்பட்டிருந்ததால், அதன் சம்பந்தமான எல்லா நிகழ்ச்சிகளும் திட்டப்படி நடந்தன. மரணத்தின் காருண்ய அம்சத்தைப் பற்றி காந்திஜி எவ்வளவு உற்சாகத்துடன் பேசினாரோ, அவ்வளவு உற்சாகத்துடன் விவாகத்தின் கட்டுப்பாடுகளைப் பற்றியும் பேசினார்.

எனினும், அச்சம்பவம் ஆசிரம வாசிகளைக் காட்டிலும் காந்திஜிக்குத்தான் பெரிய சோதனையாக இருந்தது. அவர் தமது உள்ளத்தைத் துருவி சோதனை செய்து கொள்ள வேண்டியிருந்தது. மற்றவர்கள் துக்கத்திற்கு இடம் கொடுக்காமல் தங்களைக் கட்டுப்படுத்திக் கொள்ள மாத்திரமே வேண்டியிருந்தது. ஆனால் காந்திஜியோ, தமது உள்ளத்தை ஊடுருவிப்பார்த்து, தமது நடவடிக்கைகள், திட்டங்கள் ஒவ்வொன்றையும் பரிசீலனை செய்ய வேண்டியிருந்தது. தமது ஆயுள் முழுவதும் காந்திஜி அம்மை குத்துவதைத் தீவிரமாக எதிர்த்து வந்திருக்கிறார். எனவே, ஆசிரம வாசிகள் தங்கள் குழந்தைகளுக்கு அம்மை குத்திக்கொள்ளும்படி அவர் கூறுவதற்கில்லை. எனினும், அவர்கள் தங்கள் விருப்பம் போல் அம்மை குத்திக் கொள்ளுவதற்கு யாதொரு தடையும் இருக்கவில்லை. அதற்கு மாறாக, அம்மை குத்திக் கொள்ளுவதற்கான எல்லா வசதிகளும் அவர்களுக்கு அளிக்கப்பட்டன.

நண்பர்களிடமிருந்தும் காந்திஜிக்குக் கண்டனங்கள் வந்தன. அபாயத்திற்கு இடம் கொடுக்க வேண்டாம் என்றும், ஆசிரம வாசிகள் யாவரும் அம்மைக் குத்திக்கொள்ளும்படி செய்ய வேண்டும் என்றும் அவர்கள் அவரை வேண்டிக்கொண்டார்கள். பிரார்த்தனைக் கூட்டத்தின் போது அவ்விஷயமாக காந்திஜி கூறியதாவது :

"என் வாழ்க்கை முழுவதும் நான் அருமையாகப் போற்றி வந்துள்ள கொள்கைகளை நான் எப்படிப் புறக்கணிக்க முடியும்? இந்தக் கொள்கைகளே இப்போது சோதனைக்கு உள்ளாகியிருக்கின்றன. அம்மை குத்துவது அருவருப்பான ஒரு காரியம் என்பதில் எனக்குச் சந்தேகமில்லை. அது இறுதியில் அபாயகரமாகவே முடிகிறது. அதற்கும் மாட்டிறைச்சி தின்பதற்கும் அதிக வேற்றுமையில்லை. எனது கருத்துக்கள் முற்றிலும் தவறாக இருக்கலாம். எனினும், ஒவ்வொரு குழந்தையாக இறந்து வருவதை நான் பார்க்கிறேன் என்பதற்காக, அவற்றிலிருந்து இப்போது நான் பின்வாங்க முடியுமா? ஆசிரமம் முழுவதுமே அழிந்து போவதாக இருந்தால்கூட, எனது கொள்கையைக் காற்றுவாக்கில் விட்டுவிட்டு அம்மை குத்திக்கொள்ளும்படி நான் வற்புறுத்தலாமா? அற்ப சோதனையைக்கூடச் சமாளிக்க முடியாமல் எனது கொள்கை மறைந்துவிடுவதாயின், உண்மையில்

எனக்குள்ள பற்றுதலுக்கும் கொள்கையில் எனக்குள்ள உறுதிக்கும் அர்த்தம் என்ன?

"கடவுள் என்னைப் பெரிய சோதனைக்கு உள்ளாக்கி வருகிறார். நமது பலத்தின் இறுதிப் பரீட்சை வரப்போகும் இச்சமயத்தில், மரண தூதனின் மூலம் கடவுள் எனக்கு எச்சரிக்கை விடுத்திருக்கிறார். பல நோயாளிகள் விஷயத்திலும் நான் நீர் சிகிச்சையும் மண் சிகிச்சையும் கையாண்டு வெற்றியும் பெற்றிருக்கிறேன். இம் மாதத்தில் அந்த சிகிச்சை தோல்வியடைந்ததைப் போல் இதற்கு முன் ஒருபோதும் தோல்வியடைந்ததில்லை. எனினும், அதற்காக நான் அச் சிகிச்சையிலும் கடவுளிடத்திலும் நம்பிக்கையை இழந்துவிட வேண்டுமா? அது போலவே, அகிம்சையின் சக்தியில் எனக்குள்ள நம்பிக்கையும் மிகக் கடுமையான சோதனைக்கு உட்படலாம். நான் ஆரம்பிக்கப் போகும் இயக்கத்தில் மூன்று பேர் அல்ல, நூற்றுக்கணக்கானவர்களும் ஆயிரக்கணக்கானவர்களும் இறப்பதை நான் பார்க்கும்படி நேரலாம். அத்தகைய பேரபாயத்தைக் கண்டு என் உள்ளம் நடுங்குவதா? அல்லது எனது நம்பிக்கையில் நான் உறுதியுடன் இருப்பதா? இந்த நோய், நமது உள்ளத்தை இரும்புபோல் உறுதிப்படுத்தி, கடவுளிடத்தில் நமக்குள்ள நம்பிக்கை இன்னும் அதிக பலத்துடனும் உறுதியுடனும் இருக்கும்படி செய்வதற்கான ஒரு சோதனையே. இது, அந்த நிலைக்கு நம்மைத் தயார் செய்கிறது என்றே கூறவேண்டும். மூன்று பேர் மரணம் அடைந்ததைக் கண்டு நான் மனம் கலங்குவேனாயின், பின்னர் கீதையில் எனக்குள்ள நம்பிக்கை வெறும் கேலிக்கூத்தாகவே முடியும். பிறப்பும் இறப்பும் ஒரே பொருளின் இரண்டு கட்டங்களேயாகும்; ஒரே நாணயத்தின் முன்புறமும் பின்புறமுமேயாகும். உண்மையில், மகிழ்ச்சியையோ அல்லது வாழ்வையோ விட துன்பமும் மரணமுமே மிகவும் மேன்மை வாயந்தவையாக எனக்குத் தோன்றுகின்றன. வாழ்வில் கடினமான சோதனைகளும் துன்பங்களும் இல்லாவிடில், வாழ்வினால் என்ன பலன்? அத்தகைய சோதனைகளுக்கும் துன்பங்களுக்கும் உள்ளானவர்கள் இல்லாவிடில், மனிதவர்க்கத்தின் சரித்திரமே வெறும் காகிதமாகிவிடும். ராமாயணம் என்றால் என்ன? ராமனும் சீதையும் அனுபவித்த சோதனைகளும், கஷ்டங்களும், செய்த தவங்களும் அடங்கிய ஒரு குறிப்புதானே? சீதையை ராவணனிடமிருந்து மீட்ட பின் ராமனின் வாழ்க்கை ஆனந்தமாக நடைபெற்றதெனினும், அதைக் குறிப்பிடும் கட்டம் ராமாயணத்தில் நூற்றில் ஒரு மடங்கு கூட இல்லை. எனவே, நீங்கள் எல்லோரும் வாழ்வைக் காட்டிலும் மரணத்தையும் துன்பத்தையுமே பொக்கிஷமாகக் கருத வேண்டும் என்றும், மனிதனைச் சுத்தம் செய்து தூய்மைப்படுத்தும் அவற்றின் தன்மையை உணர்ந்து போற்றவேண்டும் என்றும் நான் விரும்புகிறேன்."

(ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதியது)

—'எங் இந்தியா' – 12—3—1930

# 13

# சரித்திரம் போற்றும் செயல்கள்

மகத்தான செயல்களைப்பற்றிய சரித்திரமே, உலகத்தையே எதிர்த்துத் தனியாக நிற்கும் தீரம் வாய்ந்த மனிதர்களின் சரித்திரமாகும். கிருஷ்ணன் ஒருவரே, தயக்கமும் தடுமாற்றமும் கொண்டிருந்த படைகளுக்கு உற்சாகத்தை ஊட்டி அவர்கள் போரில் இறங்கும்படி செய்தார். படைகளின் அதிகத் தொகையில் அவர் நம்பிக்கை வைக்கவில்லை. எல்லோரையும் வெற்றி கொண்ட வீரர் என்று நபிநாயகத்தை அரேபியா முழுதும் போற்றிக் கொண்டாடிய போது, அவர் அவரது மகத்துவத்தின் சிகரத்தை அடையவில்லை. ஆனால், அவர் ஒருவர் மாத்திரம் தனியாகக் கடவுளின் சார்பில் மகிழ்ச்சியுடன் நின்ற போதுதான் அவரது பெருமை உச்ச நிலையை அடைந்தது. பிரதாப்* எல்லோராலும் கைவிடப்பட்டும் தனியாக நின்று போர் புரிந்தார். வெற்றி தோல்வியை லட்சியம் செய்யவில்லை. ஒரு விநாடிகூட அவர் விரோதிகளுக்கு அடிபணிய விரும்பவில்லை. சிவாஜியும் அப்படித்தான். எனவே, அவர்களுடைய பெயர்களையும் உலகம் பெருமிதத்துடன் நினைவுகூர்ந்து வருகிறது.

—'எங் இந்தியா' – 28-2-1929

## (2)

காசி ராஷ்டிரீய வித்தியா பீடத்தின் பட்டமளிப்பு விழாவின் போது காந்திஜி பேசியதன் சாரமாவது :

ஒரு மகத்தான லட்சியத்திற்காகப் போராடும் போது, அதில் ஈடுபடுவோரின் தொகை ஒரு பெரிய விஷயமல்ல. போராட்டத்தின் முடிவு அவர்களுடைய தரத்தைப் பொறுத்ததாகவே இருக்கும். உலகத்தில் மாபெரும் மனிதர்கள் எப்போதும் தனியாகவே நின்று போராடி யிருக்கிறார்கள். ஸொரோஸ்டர், புத்தர்,

---

*உதயபுரி சமஸ்தான அதிபரான மகாராணா பிரதாப், சரித்திரம் போற்றிப் புகழும் ஒளி வீசும் நட்சத்திரமாகத் திகழ்கிறார். இறுதி வரையில் சுதந்திரத்தையும் கௌரவத்தையும் விட்டுக்கொடுக்காத மாபெரும் வீரர்களில் அவரும் ஒருவர். தோல்விகளைக்கண்டு கலங்காமல் வெற்றி பெறும்வரையில் போர் புரிந்துவந்த ஸ்காட்லந்து ராபர்ட் ப்ரூஸ் மன்னரைப் போன்றவர் மகாராணா பிரதாப் என்றும் ஒரு சரித்திராசிரியர் குறிப்பிட்டுள்ளார். அக்பர் உதயபுரி ராஜ்யத்தைக் கைப்பற்றி, ரஜபுத்திர வீரர்களை அட்க்கியாள முற்பட்டபோது, ராணா பிரதாப்பும் அவரது ரஜபுத்திர வீரர்களும் செய்த சாகஸங்கள் எவரது உள்ளத்தையும் உருக்கக்கூடியவை. 1576-இல் நடந்த ஹால்டிகாட் போரில் ராணா பிரதாப் தோல்வியடைந்ததால், அவர் எல்லாவற்றையும் இழந்து ஏழை அனாதையைப் போல் வீடு வாசலின்றி அலைய நேர்ந்தது. அப்போதுகூட அவர் அக்பரின் ஆதிக்கத்திற்கு உட்பட இசையவில்லை. அந்நிலையிலும் அவர் மனச்சோர்வு அடைந்துவிடாமல் சித்தூர் இளைஞர்கள் அடங்கிய ஒரு படையை உருவாக்கி, மொகலாயப் படைகளை முறியடித்து, மீண்டும் உதயபுரி சமஸ்தானாதிபதியானார்.

ஏசுநாதர், முகமதுநபி முதலிய மற்றும் பல தீர்க்கதரிசிகளும் தனியாகவே நின்றிருக்கிறார்கள். ஆனால் அவர்களுக்குத் தங்களிடத்திலும் தங்கள் கடவுளிடத்திலும் ஜீவ நம்பிக்கை இருந்தது. கடவுள் தங்கள் பக்கத்தில் இருக்கிறார் என அவர்கள் நம்பியதால், தாங்கள் தனித்து நிற்பதாகவே அவர்களுக்குத் தோன்றவில்லை. திரளான விரோதிகள் முகமது நபியை விரட்டிச் சென்ற போது, அவருடன் ஓடிய அபு பக்கர் தங்களுடைய விதி என்ன ஆகுமோ என நடுங்கி, 'நம்மைத் துரத்திவரும் விரோதிகள் எவ்வளவு ஏராளமாக இருக்கிறார்கள் என்பதைப் பாருங்கள். இத்தனை பேர்களை எதிர்த்து நாம் இருவர் என்ன செய்யமுடியும்?' என்று நபி நாயகத்தினிடம் கேட்டார். முகமது நபி அவரை கடிந்துகொண்டு ஒரு விநாடியும் யோசிக்காமல் 'இல்லை, அபு பக்கர்; நாம் மூவர் இருக்கிறோம்; நம்முடன் கடவுளும் இருக்கிறார்' என்று பதிலளித்தார். அல்லது விபீஷணன், பிரஹ்லாதன் முதலியோரின் அசைக்க முடியாத நம்பிக்கையைப் பாருங்கள். உங்களிடத்திலும் கடவுளிடத்திலும் நீங்கள் அத்தகைய நம்பிக்கையுடையவர்களாக இருக்கவேண்டும் என்று நான் விரும்புகிறேன்.

—'எங் இந்தியா' - 10—10—1929

# 14

# கடவுளிடம் முழு நம்பிக்கை

நான் ஒத்துழையாமைக் கொடியை எவ்விதத்திலும் தணித்து விடவில்லை. எந்த ஒத்துழையாமை வாதியையும் அவரது மதத்தைப் புறக்கணித்து விடும்படி யாரும் கேட்கவில்லை. உலகத்தில் இருந்த பெரிய தீர்க்கதரிசிகள் அல்லது மத போதகர்களை உவமையாக எடுத்துக்கொண்டு கூறுவது எப்போதும் அபாயமாகும். இந்த உலகில் நம்மைச் சூழ்ந்துள்ள இருளின் இடையே ஒளியைக் காண நான் முயற்சித்து வருகிறேன். எனினும், ஒரு லட்சியத்தின் பலம் அதை அடைய முற்படுவோரின் தொகையில் இல்லை. என்னுடன் இரண்டே தோழர்கள் மாத்திரமே இருந்தாலும் அல்லது ஒருவருமே இராவிட்டாலும் கூட நான் நம்பிக்கையை இழந்து விடமாட்டேன். முற்றிலும் கடவுளையே நான் நம்பிவருகிறேன். நான் கடவுளை நம்புவதால் தான் மனிதர்களையும் நம்புகிறேன். நான் நம்பிக்கை வைப்பதற்குக் கடவுள் இல்லையாயின், *டைமனைப்போல் நான் மனித வர்க்கத்தையே வெறுப்பவனாக இருப்பேன்.

—'எங் இந்தியா' - 4—12—1924

*டைமன் என்பவர் 2500 ஆண்டுகளுக்கு முன் ஏதனில் வாழ்ந்த ஒரு பிரபல பிரபு. அவர் செல்வத்தில் திளைத்தபோது எல்லோருக்கும் வாரி வழங்கியதில் ஏழையானார். ஏழையாகிவிட்டபோது, தாம் ஆதியில் உதவிபுரிந்த பலரிடமிருந்தும்

# 15

# உண்மை, அகிம்சையின் உட்கருத்துக்கள்

மாசற்ற ஒழுக்கமுடையவன் என்ற எனது நற்பெயருக்கு யாதொரு இழுக்கும் ஏற்பட்டுவிடக்கூடாது என்பதில் அக்கறை கொண்ட, மதிப்புவாய்ந்த ஒரு நண்பர் என்னைச் சில கேள்விகள் கேட்கிறார்: "சுயராஜ்யக் கட்சியினருக்கு நீங்கள் மனப்பூர்வமான ஆதரவு அளிப்பது நியாயமே என்று நீங்கள் நம்புகிறீர்கள். அது எப்படி சரியாகும்? நீங்கள் இமாலயத் தவறுகள் செய்ததில்லையா? உங்களுடைய முரண்பாட்டைக் கண்டு மாறுதல் வேண்டாதார் திகைப்பு அடைந்திருக்கவில்லையா? மிதமிஞ்சிய நம்பிக்கை வைக்கும் குற்றத்திற்குத் தாங்கள் ஆளாகவில்லையா?"

அவ்விதக் குற்றத்திற்கு ஆளாகியிருப்பதாக நான் நினைக்கவில்லை. உண்மையில் பற்றுள்ள ஒரு மனிதன் எப்போதும் நம்பிக்கையுடையவனாக இருக்கவேண்டும். அதே சமயத்தில் அவன் பணிவு உள்ளவனாகவும் இருக்க வேண்டியது அவசியமாகும். உண்மையில் அவனுக்குள்ள பக்தி, அவன் பூரண நம்பிக்கையுடையவனாக இருக்க வேண்டும் என்பதை வலியுறுத்துகிறது. தவறுவது மனிதனின் இயல்பு என்ற அவனது உணர்வு, அவன் பணிவுடன் நடந்துகொள்ளும்படி செய்கிறது. எனவே, அவன் தன் தவறை உணர்ந்த உடனேயே, தவறான போக்கிலிருந்து பின்வாங்க அவன் தயாராகிவிடுகிறான். அவன் ஏற்கனவே இமாலயத் தவறுகள் செய்திருக்கிறான் என்பதற்காக அவனது நம்பிக்கையில் யாதொரு மாறுதலும் ஏற்பட்டுவிடுவதில்லை. தவறை அவன் ஒப்புக்கொண்டதும், அவனது பிராயச்சித்தமும் எதிர்கால நம்பிக்கைக்கு அவனை பலமுடையவனாகச் செய்துவிடுகின்றன. உண்மையில் பக்தியுள்ள ஒருவன் தன் தவறுகளைக் கண்டுபிடிப்பதன் பலனாக, விஷயங்களை நம்புவதிலும், முடிவுக்கு வருவதிலும் எதிர்காலத்தில் அதிக ஜாக்கிரதையுள்ளவனாக இருக்கிறான். எனினும், ஒரு தடவை அவன் மனத்தைத் திடப்படுத்திக் கொண்டுவிட்டால், பின்னர் அவனது நம்பிக்கை அசைக்க முடியாததாக இருக்கவேண்டும். அவனது தவறுகள், அவன் செய்யும் தீர்மானங்களில் மக்களுக்குள்ள நம்பிக்கையைச் சிதறடிப்பதாக இருக்கலாம். எனினும், அவன் ஒரு முடிவிற்கு வந்துவிட்டால், பிறகு தனது நிலைமையின்

---

உதவியை நாடினார். அவர்கள் யாவரும் அவருக்கு உதவி புரிய மறுத்துவிட்டனர். ஒருவராவது டைமன் விஷயத்தில் அனுதாபம் காட்டவில்லை. எனவே, மானிட வர்க்கத்தையே மிருகவர்க்கம் என்று எண்ணி, மனிதர் யாவரையும் அறவே வெறுத்து, காட்டிற்குச் சென்று வாழ்ந்து வந்தார். மேல்நாட்டில் ஷேக்ஸ்பியர் உள்பட பல இலக்கிய மேதாவிகளும் டைமனை கதாபாத்திரமாக வைத்து நாடகங்களும் கதைகளும் இயற்றியுள்ளனர்.

உண்மையில் அவனுக்குச் சந்தேகம் ஏற்படக் கூடாது. நான் செய்த தவறுகள் எனது மதிப்பீட்டிலும், மனிதரின் தராதரத் தைப்பற்றி அறிந்து கொள்ளுவதிலும் ஏற்பட்ட தவறுகளே யாகும்; சத்தியம், அகிம்சை இவற்றின் உண்மையான இயல்பை அறிந்து கொள்ளுவதிலோ அல்லது அவற்றை உபயோகிப்ப திலோ ஏற்பட்ட தவறுகள் அல்ல. இந்தத் தவறுகளும், இவற்றை நான் உடனே ஒப்புக் கொண்டதும், உண்மை, அகிம்சை இவற்றின் உட்கருத்தை நான் இன்னும் அதிக நிச்சய மாக அறிந்து கொள்ளும்படி செய்திருக்கிறது. அகமதாபாத், பம்பாய், ப்ர்டோலி முதலிய இடங்களில் நான் சட்ட மறுப்பை நிறுத்தியது, இந்தியாவின் விடுதலை இயக்கத்திற்கும் உலக அமைதிக்கும் அதிக ஆக்கமளித்திருக்கிறது. சட்ட மறுப்பை நான் நிறுத்தியதன் காரணமாக நாம் சுயராஜ்யத்திற்கு அருகில் வந்திருக்கிறோம்; இல்லாவிடில் இவ்வளவு அருகில் வந்திருக்க மாட்டோம் என்பது எனது உறுதியான அபிப்பிராயமாகும். அத்தகைய ஆழ்ந்த உறுதியுடனிருக்கும் நான், சுயராஜ்யக் கட்சி யினரிடத்திலும் மற்ற விஷயங்களையொட்டியும் எனது தற்போ தைய நிலைமையில் நம்பிக்கை வைக்காமல் இருக்க முடியாது. அந்த நம்பிக்கைக்கு ஒரே ஒரு காரணம்தான் உண்டு. அதாவது உண்மை, அகிம்சை இவற்றின் உட்கருத்துக்களை நான் நன்கு அறிந்து கொண்டிருப்பதுதான்.

— 'எங் இந்தியா' – 10—9—1925

## 16

# யார்மீது குற்றம் ?

கேள்வி: இளைஞர்களிடையே குற்றம் கண்டுபிடிக்கும் குணமும், நம்பிக்கையின்மையும் நிலவி வருகின்றன. அவற்றை எதிர்த்து நாம் எப்படி முன்னேற முடியும்?

பதில்: நீங்கள் என்னை அந்தக் கேள்வி கேட்கும் பொழுது, நான் சோர்வுடன் ஒரு பெருமூச்சு விடுகிறேன். உங்களுடைய மாணவர்களுக்கு நம்பிக்கையில்லை என்பதை நீங்கள் கண்டால், 'நான் நம்பிக்கையில்லாதவனாக இருக்கிறேன்' என்று உங்களுக்கு நீங்களே சொல்லிக்கொள்ள வேண்டும். என் அனுபவத்தில் நான் அதை அடிக்கடி கண்டுள்ளேன். அவ்விதம் நான் கண்டு பிடித்த ஒவ்வொரு சமயத்திலும், எனக்கு அது களைப்பைத் தீர்த்து உற்சாகமளிக்கும் ஒரு ஸ்நானத்தைப் போல் இருந்திருக்கிறது. 'உங்கள் அண்டை வீட்டுக்காரரின் கண்ணில் உள்ள தூசியைச் சுட்டிக் காட்டு முன், உங்களுடைய கண்ணை மறைக்கும் உத்தரத்தை அகற்றுங்கள்' என்ற பைபிள் பழமொழி, ஆசிரியர்-மாணவர்

விஷயத்தில் இன்னும் அதிகமாகப் பொருந்தும். தன்னிடத்தில் இருப்பதைக் காட்டிலும் சிறந்தஜொன்றைக் காணவே அவன், ஆசிரியரான உங்களிடம் வருகிருன். எனவே, 'ஓ! அவனுக்கு நம்பிக்கையில்லே. அவன் மனத்தில் நம்பிக்கை வேருன்றும்படி நான் எப்படி செய்வேன்?' என்று நீங்கள் புகார் கூறுவதை விட, உங்களுடைய ஆசிரியர் பதவியை ராஜிநாமா செய்துவிடுவதே மிகமிகச் சிறந்ததாகும்.

—'ஹரிஜன்' - 21—8—1949

# 17

# வஞ்சிக்கப்பட்டவருக்கு தோல்வி இல்லே

வெளித் தோற்றத்திற்கு முரணைகத் தோன்றினுலும், தேசீயம், சகிப்புத்தன்மை, நட்பு இவை அபிவிருத்தியடைவதற்கு விசுவாசத்தையும் நம்பிக்கையையும் தவிர வேறு வழி எதுவும் இல்லே. ஒருவர் முன்பு வஞ்சிக்கப்பட்டிருக்கலாம், அல்லது வெறும் காகித அடிப்படையில் நம்பிக்கையை உருவாக்கிக் கொண்டிருக்கலாம். நம்பிக்கைக்கு ஏதாவது மதிப்பு இருக்க வேண்டுமாயின், அது மனிதரின் உள்ளத்தில் நிரந்தரமாக எழவேண்டும். நம்பிக்கைக்கு எல்லேயே இல்லே. சந்தேகவாதிக்கும் கூட அது இடம் கொடுக்க வேண்டும். நம்பிக்கையின்மை தவறு என்ற இடத்தில், நம்பாமல் இருப்பதைக் காட்டிலும் எண்ணிக்கையற்ற தடவை ஏமாற்றமடைவது மேலாகும். பிறர் தம்மை வஞ்சிப்பதற்கு இடம் கொடுப்பவர், எக்காலத்திலும் நஷ்டம் அடைவதில்லே. இறுதியில் அவர்தான் லாபம் அடைவார்; 'வெற்றிகரமாக' வஞ்சித்தவர் லாபம் அடையமாட்டார். என்னே ஆயிரம் தடவை மோசடி செய்தால் கூட நான் வருந்தமாட்டேன். நான் எளிதில் நம்பிக்கை வைக்கும் இயல்புடையவன் என்று என்னேச் சுற்றிலும் உள்ளவர்கள் கூறுகிறுர்கள். பல கடுமையான அதிர்ச்சிகளுக்கு நான் ஆளாகும்படி நேர்ந்ததெனினும், அதைக் குறித்து நான் வருந்தும்படி நேர்ந்ததில்லே. நானும், எனது நம்பிக்கையில் பங்கு எடுத்துக் கொண்டவர்களும் எப்போதுமே லாபமே அடைந்தோம் என்று நிரூபிக்க முடியாவிட்டாலும், நாங்கள் ஒரு போதும் நஷ்டம் அடைந்ததில்லே. ஒருவன் தன் ஆன்மாவை இழந்துவிட்டால் மாத்திரமே அவன் நஷ்டம் அடைந்தவனுகிருன். பிறர் நம்மை வஞ்சிப்பதன் மூலம் எவரும் தன் ஆன்மாவை இழப்பதேயில்லே.

—'எங் இந்தியா' – 22—11—1928

# 18

## நான் கூறும் மருந்து

ஒவ்வொரு பொதுத் தொண்டரும் பின்பற்றவேண்டிய எனது ஔஷத முறை என்னவெனில், ஒவ்வொரு தொண்டரும் கூறுவதை நம்புவதுதான். அவ்விதம் நம்பக்கூடாது என்பதற்கு நிச்சயமான ருசு கிடைக்கும் வரையில், அவரை நாம் நம்பவே வேண்டும். நம்பிக்கை வைப்போர், ஏமாற்றப்பட்டாலும் வஞ்சிக்கப்பட்டாலும் ஒருபோதும் நஷ்டம் அடைவதில்லை. சந்தேகத்திற்கும் நம்பிக்கையின்மைக்கும் இடையே பொது வாழ்க்கை அசாத்தியமாகாவிட்டாலும், சகிக்கமுடியாததாகி விடுகிறது.

'எங் இந்தியா' - 17—12—1925

# 19

## வியாபாரத்தில் நேர்மை

கதர் உற்பத்தி சம்பந்தமாக அந்நிய நாட்டுச் சாயங்களை நம்பிக்கொண்டிருப்பது கூடாது என்றும், கதர் உற்பத்தியாளர்களை தரகு வியாபாரிகள் மோசடி செய்துவிடுவார்கள் என்றும், எனவே, சுதேசி சாயங்களைக் கண்டுபிடித்து உபயோகத்திற்குக் கொண்டுவர வேண்டும் என்றும் ஒருவர் கடிதம் எழுதியிருக்கிறார். சுதேசி சாயங்களைக் கண்டுபிடிக்கவேண்டும் என்பதை நான் ஒத்துக் கொள்ளுகிறேன். ஆனால், தரகர்கள் மோசடி செய்வார்கள் என்பதை நான் ஆட்சேபிக்கிறேன்.

கடிதம் எழுதியுள்ள ஸ்ரீ ஜிதலால் வருந்துவதற்கு மூல காரணம், சாய வியாபாரிகளிடம் அவருக்குள்ள நம்பிக்கையின்மையே. நடுவில் உள்ள வியாபாரிகள் மோசடி செய்வார்கள் என்று ஏன் எண்ண வேண்டும்? எல்லாத் துறைகளிலும் தூய்மை நிலவ வேண்டும் என்பதே கதர் இயக்கத்தின் நோக்கமாகும். சமூக வாழ்க்கையின் ஒவ்வொரு துறையிலும் தொடர்பை ஏற்படுத்தி, தூய்மைப் படுத்த வேண்டும் என்றே அவ்வியக்கம் கோருகிறது. தரகரிடமிருந்து அவரது தொழிலை நாம் பறித்துவிட விரும்பவில்லை; அவரது தொழிலில் ஒரு புதிய திருப்பம் ஏற்படவே, அவரது மனப்பான்மை மாறவே விரும்புகிறோம். தரகர்களிடம் நமக்கு நீடித்த நம்பிக்கை இருக்க வேண்டும். அவர்கள் வியாபார நேர்மையுடனும், தீவிர தேச பக்தியுடனும் விளங்குவார்கள் என்ற நம்பிக்கையும் நமக்கு இருக்க வேண்டும். இன்று கூட இத்தகைய நேர்மையுள்ள வியாபாரிகளுக்குக் குறைவில்லை.

'எங் இந்தியா' - 21—3—1929

# 20

## மனித இயல்பு இரும்பு போன்றதல்ல

பலவீனமான கட்சிகளை ஆதரிப்பதே எனது இயல்பாக அமைந்திருக்கிறது. பிறரை தரும சங்கடமான நிலைமைக்கு உட்படுத்தக்கூடாது என்ற எனது கொள்கை, அந்த இயல்பையே அடிப்படையாகக் கொண்டிருக்கிறது. அத்தன்மை என்னிடத்தில் வேரூன்றியிருக்கிறது. பிரிட்டிஷார் வெளியேற வேண்டும் என்ற யோசனை, இந்தியாவின் நலனைப் போல பிரிட்டிஷாரின் நலனுக்கும் கூட உகந்ததாகும். பிரிட்டன் தானாக நீதி வழங்காது என்று எண்ணுவது சரியல்ல. மனித இயல்பு எப்போதும் போல் கடினமாக இருந்துவிடாது என்பதையே, அகிம்சையின் சக்தியில் எனக்குள்ள நம்பிக்கை அறிவுறுத்துகிறது.

'எங்இந்தியா' – 7—6—1942

# 21

## நட்புக் கரத்தை நிராகரிக்காது

ஆங்கிலேயர்கள் விஷயத்தில் எனது மன நிலை பூரண நட்பையும் மரியாதையையுமே அடிப்படையாகக் கொண்டிருக்கிறது. நான் அவர்களுடைய நண்பன் என்றே கூறிக்கொள்ளுகிறேன். ஏனெனில், எந்த ஒரு தனி நபர் மீதும் அவநம்பிக்கை கொள்ளுவதோ, அல்லது உலகத்தில் உள்ள எந்த ஒரு நாடும் கடைத்தேறுவதற்கு இடமில்லை என்று நம்புவதோ எனது இயல்புக்கு முரணாகும். இந்தியாவின் நட்பைக் குறித்து இங்கிலாந்து மகிழ்ச்சி அடையும் காலம் வந்து கொண்டிருக்கிறது. இங்கிலாந்து தன்னை ஒரு காலத்தில் கொள்ளையடித்துத் துன்புறுத்தியது என்பதற்காக, இங்கிலாந்து நீட்டும் நட்புக் கரத்தை நிராகரிக்க இந்தியா விரும்பாது. எனது இந்த நம்பிக்கைக்கு ஆதாரமாக நான் எதுவும் கூறமுடியாது என்பதை நான் அறிவேன். எனினும், அது அசைக்க முடியாத நம்பிக்கையை அடிப்படையாகக் கொண்டது. ஆதாரத்தை அடிப்படையாகக் கொண்ட நம்பிக்கை, உறுதியற்ற அற்ப நம்பிக்கையேயாகும்.

'எங் இந்தியா' – 29—1—1925

# 22

# புராணங்களின் தத்துவம்

''துஷ்டர்களை அடக்கி, நேர்மையானவர்களைப் பாதுகாக்க வேண்டியது குற்றம் குறையற்ற ஒரு சிறந்த அரசாங்கத்தின், இன்னும் அதிகமாக ஒரு மகாத்மாவின் முழு முதற்கடமை என்பதை நீங்கள் ஒப்புக் கொள்ளுகிறீர்களா? அப்படியாயின், வெகு காலத்திய இந்தக் கொள்கைக்கு உங்களுடைய ராஜீய தத்துவம் எவ்விதம் பொருத்தமாக இருக்கும்? குரு க்ஷேத்திரப் போர்க்களத்தில் அர்ஜுனனுக்கு கிருஷ்ண பகவான் உபதேசித்ததன் சாரமும் இதுதான் அல்லவா?

''அவதாரங்களின் அற்புதமான கொள்கையே இதுதான் அல்லவா? அந்தக் கொள்கையே பலி சக்கரவர்த்தியை சிம்மாசனத்திலிருந்து வீழ்த்தியது; வாலியை அழித்தது; ஜராசந்தனைப் பலி வாங்கியது.

''அப்படியிருக்க, சாதாரண மனிதர்கள், அதிலும் ஏக காலத்தில் திரளான மக்கள் ஈவிரக்கமற்ற விரோதிகளின் தாக்குதல்களை எதிர்த்து நிற்காமல் இருப்பார்கள் என்று நீங்கள் எப்படி எதிர்பார்க்க முடியும்? இதிலிருந்து, தங்களுடைய போதனைகளும், உபதேசங்களும் நடைமுறையில் சாத்தியமல்ல என்றும், சாதாரண மக்கள் அவற்றை அனுசரிக்க இயலாது என்றும் நாங்கள் கருதுவது நியாயம் அல்லவா?''

இந்தக் கேள்விக்கு விவரமாக பதில் அளிக்கவேண்டிய அவசியமில்லை. வேத நூல்களில் அடங்கியுள்ள விஷயங்களை அப்படியே எடுத்துக்கொள்ளும் பெரும் தவறை நம்மில் பலரும் செய்துவிடுகிறோம். வாசகத்தைக் காட்டிலும் அதன் உட்பொருள்தான் மிகவும் முக்கியமானது என்பதை மறந்துவிடுகிறோம். மகாபாரதமும் புராணங்களும் சரித்திரங்கள் அல்ல; அவை சாதாரண மதக் கோட்பாடுகளும் அல்ல. மனிதனின் மத சம்பந்தமான சரித்திரத்தை பல்வேறு வழிகளில் சித்திரித்துக் காட்டும் நோக்கத்துடன் ஆச்சரியகரமான முறையில் எழுதப்பட்டவை அவை என்று எனக்குத் தோன்றுகிறது. அவற்றில் வருணிக்கப்பட்டுள்ள வீரர்கள் யாவரும் நம்மைப் போல் குற்றம் குறைபாடுகள் உள்ள சாதாரண மனிதர்களேயாவர். அவர்கள் செய்ததாகக் கூறப்படும் காரியங்கள் நமக்கு அப்பழுக்கற்ற வழிகாட்டியாக இருக்கமுடியாது. உலகத்தில் உண்மையே மற்ற எல்லாவற்றையும் விட மேலோங்கி நிற்கிறது என்பதை மகாபாரதத்தில் அடங்கியுள்ள உபதேசங்கள் ஆணித்தரமாக வற்புறுத்துகின்றன. தரும சாஸ்திரங்கள் என்ற பெயரில் எழுதப்பட்ட எதுவும் நியாயமானது என்று கூற நான் முற்படவில்லை. பயபக்தியுடன் அந்த நூல்களை வாசிப்பதன் மூலம் என் மனத்தில் என்ன எண்ணங்கள் எழுகின்றனவோ, அவற்றையே நான் முக்கியமாகக் கருதுகிறேன். உண்மையாக இருப்பவர்கள் யாவரும் அவ்விதம்தான் கருதவேண்டும். கடிதம் எழுதியவர் எந்த நூல்களிலிருந்து தமது புதிர்களுக்கு ஆதாரம் காட்டு

கிருரோ, அதே நூல்களிலிருந்தே உண்மையிலும் அகிம்சையிலும் எனக்கு நம்பிக்கை ஏற்பட்டுள்ளது. அதுமாத்திரம் அல்ல, எனது அந்த நம்பிக்கை இன்று என் வாழ்வின் முக்கிய அம்சமாகியிருக்கிறது. அந்த நூல்களோ அல்லது பிற நூல்களோ இருந்தாலும் இராவிட்டாலும் எனது நம்பிக்கை குன்ருது. மிகவும் மதப்பற்றுள்ள ஒரு மனிதனின் வாழ்க்கையில், அவனது நம்பிக்கை வெளி ஆதாரம் எதுவுமின்றி சுயமாகவே உறுதிபெற்று விளங்கும் ஒரு காலம் வரவேண்டும். எனவே, அவதாரங்களில் கடவுள் என்ன செய்தார் அல்லது செய்யவில்லை என்பது, என் சம்பந்தப்பட்டவரையில் ஒரு பெரிய விஷயமல்ல. மனிதனின் முழு சக்திக்கும் இயன்ற அளவு உண்மையையும் அகிம்சையையும் அனுசரிக்காவிடில், தனி நபர்களோ அல்லது தேசங்களோ அமைதியாக வாழமுடியாது என்பதே தினசரி வளர்ந்துவரும் எனது முதிர்ந்த அனுபவமாகும். எதிர்த்துத் தாக்கும் கொள்கை ஒரு போதும் வெற்றி பெற்றதில்லை. எங்கேயாவது நிகழும் ஒன்றிரண்டு எதிர்த் தாக்குதல்களை உதாரணமாகக் கொண்டு நாம் குழப்பம் அடையக்கூடாது. மோசடிகளும், பலாத்காரமும் தாற்காலிகமாக வெற்றி பெறுவதுபோல் தோன்றலாம். துவேஷத்தைக் காட்டிலும் அன்பும், பொய்யைக் காட்டிலும் உண்மையும் அதிகமாக இருப்பதால்தான் உலகம் வாழ்ந்து வருகிறது. சிந்திக்கும் சிரமத்தை எடுத்துக்கொள்ளும் ஒவ்வொருவரும் இந்த உண்மையை ருசுப்பிக்க முடியும். மோசடியும் பலாத்காரமும் நோய்கள்; உண்மையும் அகிம்சையும் ஆரோக்கியமாகும். உலகம் அழியவில்லை என்ற உண்மையானது, உலகத்தில் நோயைக்காட்டிலும் ஆரோக்கியமே அதிகமாக இருக்கிறது என்பதை நிதர்சனமாகக் காட்டுகிறது. எனவே, இதை உணர்ந்து கொள்ளுவோர் சிறிதும் சாதகமற்ற மோசமான சந்தர்ப்பங்களில் கூட ஆரோக்கிய விதிகளை அனுசரித்து நடந்துகொள்ளவேண்டும்.

எனது போதனையும் உபதேசமும் வெறும் உணர்ச்சி வசப்பட்டவையோ அல்லது நடைமுறையில் அசாத்தியமானவையோ அல்ல. நான் பண்டைய முறைகளையே உபதேசிக்கிறேன். நான் உபதேசிப்பதை செயலில் காட்டவும் முயற்சிக்கிறேன். நான் செயலில் அனுசரிப்பதை எல்லோரும் அனுசரிக்க முடியும் என்றே கூற விரும்புகிறேன். ஏனெனில், நான் ஒரு சாதாரண மனிதனே. நம்மில் மிகத் தாழ்ந்தவரிடத்தில் உள்ள பலவீனங்களும், மனத்தைப் பறிகொடுக்கும் ஆசைகளும் என்னையும் ஆட்கொள்ள முடியும்.

**'எங் இந்தியா' – 15—12—1927**

# 23

# தீயோருடன் ஏசுநாதர் ஒத்துழைத்தாரா?

''அன்பார்ந்த காந்தி அவர்களுக்கு,

''ஸ்ரீ லேல் இங்கே வந்திருந்தார். என்னைப் பற்றி தாங்கள் அன்புடன் விசாரித்ததாக அவர் என்னிடம் கூறினர். அதற்காக உங்களுக்கு வந்தனம். உங்களுடைய நடவடிக்கைகளை நான் மிகுந்த அக்கறையுடன் கவனித்து வருகிறேன். எனினும், உங்களுடைய ஒத்துழையாமை இயக்கத்தை நான் ஆதரிக்கவில்லை, ஆதரிக்கவும் முடியாது என்பதைக் கூற நான் வருந்துகிறேன். உங்களுடைய தவறை கடவுள் உங்களுக்குக் காட்டுவாராக. அவரது புனிதமான பெயரின் மகத்துவத்துக்காகவும், இந்தியா முழுவதும் உள்ள மக்களின் உண்மையான, நிரந்தரமான நலனுக்காகவும் கடவுள் உங்களையும் நம் எல்லோரையும் உபயோகித்துக் கொள்ளுவாராக. இதுதான் எனது பிரார்த்தனையாக இருந்து வருகிறது. வாதித்தும், நியாயத்தை எடுத்துக் கூறியும் ஒருவரது நெருங்கிய நண்பர்களும் உற்றார் உறவினருங்கூட தவருன வழியில் போய்க் கொண்டிருப்பார்களாயின், அவர்களுடன் தம்முடைய தொடர்பைக் கத்தரித்துக் கொள்ள வேண்டியது கடமை என்ற ஆதாரத்தின் மீது நீங்கள் உங்களுடைய இயக்கம் நியாயமானது என்று கூற முயற்சிக்கிறீர்கள் என அறிகிறேன். இல்லாவிடில் தவறு செய்வோருக்கு உடந்தையாக இருக்கும் குற்றச்சாட்டிற்கு ஆளாகும்படி நேரும் என்பதே உங்கள் கருத்தாகும்.

''ஆனல், கிறிஸ்தவ, ஹிந்து மத நூல்களின் ஒரு மூலாதாரமான கொள்கை, நிச்சயமாக முற்றிலும் வேறு விதமான வழியைக் காட்டுகிறது. இரண்டும் தெய்விக அவதாரங்களைப் பற்றிக் கூறுகின்றன. அவை சிற்சில அம்சங்களில் வேறுபாடானவையாக இருக்கின்றன என்பது உண்மையே. எனினும், இரண்டுக்கும் அடிப்படையான கொள்கை இதுதான்: அதாவது எல்லையற்ற புனிதத் தன்மை வாய்ந்த கடவுள், மனிதர்கள் பாவம் செய்ததன் வினைவாக ஆளாகும் துன்பத்தைப் பார்த்தபொழுது அவர்களிடமிருந்து அவர் விலகி நிற்கவில்லை; அவர் கருணையுடன் கீழே இறங்கி மனிதர்களுக்கு உதவி புரியவும், பாவங்களிலிருந்தும் அவற்றின் வினைவுகளிலிருந்தும அவர்களைக் காப்பாற்றவும் முற்பட்டார். புனிதரான, மாசற்ற ஏசுநாதர் பாவம் செய்த மனிதர்களுடன் சேர்ந்து தொண்டு செய்வதை மறுக்கவில்லை. அதற்கு மாருக, தீமைகளையும், எவ்வளவு பெரியவர்களாயினும் தீங்கு செய்வோரையும் வன்மையாகக் கண்டித்தாரெனினும், அதே சமயத்தில் மிகுந்த பாவிகளுடன் கூட தங்கு தடையின்றி நெருங்கிப் பழகினர். விவேகமான உபதேசங்களின் மூலமும், அன்பான உதாரணங்களின் மூலமும் கொடிய காரியங்களிலிருந்து அவர்களைத் தடுத்து, அவர்களை நேர்மையான வழிக்குக் கொண்டுவரவும் முயற்சித்தார்.

''இதிலிருந்து நான் ஊகிப்பது இதுதான்: தற்போது உண்மையான தேச பக்தர்கள் யாவருடைய தெளிவான கடமையும் என்னவெனில், பைசாசத் தன்மை வாய்ந்ததென்றும், சைத்தானைப் போன்றதென்றும் நியாயமற்ற முறையில் கண்டிக்கப்படும் ஓர் அரசாங்கத்தினிடமிருந்து ஒதுங்கித் தனித்து நிற்கக்கூடாது; அந்த அரசாங்கத்துடன் தொடர்பு வைத்துக் கொள்வதற்கான

முறைகளைக் கைக்கொள்ள வேண்டும்; அதிக நேர்மையானதென்று கருதப்படும் வழிக்கு அதைத் திருப்ப முயற்சிக்க வேண்டும். போன வருடம் சத்தியாக்கிரக சம்பந்தமாக நீங்கள் உங்களுடைய தவறை ஒப்புக்கொண்டது போல், நிலைமை எல்லை மீறிப் போகுமுன் கடவுள் உங்களுடைய கண்களைத் திறந்து, ஒத்துழையாமையிலிருந்து ஒத்துழைப்புப் பாதையில் உங்களைச் செலுத்துவார் என்ற நம்பிக்கையுடன் பிரார்த்தனை செய்துவருகிறேன்.

''என்னுடைய இந்தச் சில வார்த்தைகளை உங்கள் விருப்பப்படி நீங்கள் எப்படி வேண்டுமாயினும் உபயோகப்படுத்திக் கொள்ளலாம்.

ராஜ்கோட், உங்கள் உண்மையுள்ள
20–11–1920 ஜி. கில்லெஸ்பை''

இந்தக் கடிதத்தை நான் ஒரு வார்த்தையைக்கூட மாற்றுமல் பிரசுரித்திருக்கிறேன். இதை நான் பிரசுரிப்பதற்கு, குறிப்பாக ஒரு காரணம் உண்டு. தற்போதைய அரசாங்க முறையை நான் இடைவிடாது கண்டித்தும்கூட, ரெவரெண்ட் கில்லெஸ்பையைப் போன்ற பிரிட்டிஷாரிடம் அன்பையும் நட்பையும் பெறும் நல்ல அதிருஷ்டம் எனக்கு இருக்கிறது என்பதையே இந்தக் கடிதம் காட்டுகிறது. அவர் கூறுவதில் அவருக்குப் பூரண நம்பிக்கை இருக்கிறது என்பதை நான் அறிவேன். எனது நம்பிக்கை, நோக்கம் இவற்றின் நேர்மையையும் அவர் மதிக்கிருர். அப்படியிருந்தும், கிறிஸ்தவ, ஹிந்துமத நூல்களைப் பற்றிய எங்களது வியாக்கியானம் ஒன்றுக்கொன்று நேர்முரணுனதாக இருக்கிறது. ஹிந்துமத நூல்களைப்பற்றி நான் நம்பிக்கையுடன் எழுத முடியும். தீங்கு செய்வோருடன் தொடர்பு வைத்துக்கொள்ளக் கூடாது; அவர் செய்யும் தீய காரியங்களில் கலந்துகொள்ளக் கூடாது; அவற்றை ஆதரிக்கவும் கூடாது என்பதுதான் ஒரு ஹிந்துவின் கடமை என்று நான் துணிந்து கூற முடியும். பிரஹ்லாதன் தனது தந்தை செய்த தீய காரியங்களில் தொடர்பு வைத்துக்கொள்ளவில்லை. தெய்விகத் தன்மை வாய்ந்த சீதா பிராட்டியார், ராவணன் செய்த உபசாரங்களை நிராகரித்துவிட்டார். பரதன் தனது தாயாரைக் கடுமையாகக் கண்டித்ததுடன், தனக்காக அவள் தீய வழியில் வாங்கிக் கொடுத்த சிம்மாசனத்தையும் நிராகரித்துவிட்டான்.

ஆனுல், பைபிளைப் பற்றி நான் தயக்கத்துடன்தான் எழுத முடியும். எனினும், ஹிந்து மத நூல்களை நான் வாசித்ததன் மூலம் கொண்டுள்ள எனது அபிப்பிராயத்தை பைபிள் தெளிவான முறையில் உறுதிப்படுத்தியிருக்கிறது என்று நான் கூறமுடியும். அண்டிப்பிழைப்பவர் என்ற முறையிலோ அல்லது ரட்சகர் என்ற முறையிலோ ஏசுநாதர் பாவிகளுடன் கலந்து பழகவில்லை. அவர்களுக்குத் தொண்டு செய்து, அவர்களை உண்மையும் தூய்மையும் நிறைந்த வாழ்க்கையில் திருப்புவதற்காகவே அவர்களுடன் தொடர்பு வைத்துக் கொண்டார். எனினும், தமது வார்த்தைக்குச் செவி கொடுக்காதவர்கள் இருந்த இடத்தையே கை கழுவிவிட்டு அவர் போய்விட்டார். வெட்கக்கேடான, தீய

வாழ்க்கையில் ஈடுபட்டு தன்னைத்தானே அவமானத்திற்கு உள்ளாக்கிக் கொள்ளும் ஒரு புதல்வனின் முகத்தில் விழிக்கக் கூடாது என்பதையே நான் என் கடமையாகக் கருதுகிறேன். அன்பினால் எழும் மனவேதனையை வெளிப்படுத்துவதே, விவேகமான ஒத்துழையாமையாகும். தீமையிலிருந்து விலகி நிற்பதை, நபர்களிடமிருந்து விலகி நிற்பதுடன் கடிதம் எழுதியவர் குழப்புகிருர். அரசாங்கத்தை சைத்தான் தன்மை வாய்ந்தது என்று வர்ணிப்பது நியாமற்றதென்று ஸ்ரீ கில்லெஸ்பை எண்ணுகிருர். மோசடிகளிலும், கொலைகளிலும் ஈடுபடும் குற்றத்திற்கு ஆளான அரசாங்கத்தை சைத்தான் அரசாங்கம் என்று நான் வருணிக்காவிடில், நான் சத்தியத்திலிருந்து தவறியவன் ஆவேன். தான் புரிந்த குற்றங்களைக் குறித்து இந்த அரசாங்கம் வருந்தாததுடன், தனது குற்றத்தை மறைக்க பொய்யையும் கையாளுகிறது. எனவே, பொதுமக்களின் மதிப்பைப் பெற எவ்விதத் தகுதியுமற்ற ஓர் அரசாங்கத்தின் பொய் வேஷத்தைத் தெளிவான பாஷையில் கண்டிப்பதன் மூலம், ஒரு நண்பர் செய்ய வேண்டிய கடமையையே நான் செய்துவருகிறேன் என உண்மையில் நம்புகிறேன்.

—'எங் இந்தியா' – 19—1—1921

# 24

# நல்லதும் கெட்டதும்

"உலகத்தில் ஏன் தீமை இருந்து வருகிறது?" என்று சுவாமி யோகானந்தர் காந்திஜியை ஒரு கேள்வி கேட்டார். அதற்கு காந்திஜி பதில் அளித்ததும், சுவாமி மேலும் பல கேள்விகள் கேட்டார். அவரது கேள்விகளும் அவற்றிற்கு காந்திஜி அளித்த பதில்களும் கீழே கொடுக்கப்பட்டுள்ளன :

மேற்கண்ட முதல் கேள்விக்குப் பதிலாக காந்திஜி கூறியதாவது: உலகத்தில் ஏன் தீமை இருந்து வருகிறது என்ற கேள்விக்குப் பதில் அளிப்பது கஷ்டமாகும். இதற்கு நான் ஒரு கிராமவாசியைப் போலவேதான் பதில் கூற முடியும். உலகில் நல்லது இருக்கும்போது, கெட்டதும் இருக்கத்தான் வேண்டும். எங்கே ஒளியிருக்கிறதோ, அங்கே இருளும் இருக்கிறது அல்லவா? மனிதர்கள் சம்பந்தப்பட்டவரையில் மாத்திரமே அது உண்மையாகும். கடவுளின் முன்னிலையில் நல்லதும் இல்லை, கெட்டதும் இல்லை. உலகம் மாயை என்றும் வேதாந்தம் கூறுகிறது. அந்த விளக்கம் கூட குற்றம் குறைகள் நிறைந்த மனிதவர்க்கத்தின் பிதற்றலேயாகும். எனவே, அதைப் பற்றி என் மூளையை நான் குழப்பிக்கொள்ளப் போவதில்லை. கடவுளின் ஆழ்ந்த ரகசியத்தை எட்டிப்பார்க்க நான் அனுமதிக்கப்பட்டால்கூட, நான் அவ்விதம் செய்ய விரும்பமாட்டேன். ஏனெனில், அங்கே என்ன செய்வது

என்பது எனக்குத் தெரியாது. கடவுள் எப்போதும் நல்ல காரியங்களைச் செய்வோருக்கு ஆதரவாகவே இருக்கிறார் என்பதை அறிந்து கொள்ளுவதே நமது ஆன்மிக வளர்ச்சிக்குப் போதுமானது. இதுவும் ஒரு கிராமவாசி கூறும் விளக்கம்தான்.

சுவாமி : கடவுள் எல்லாம் வல்லவராக இருப்பாராயின்,-அவர் ஆட்சேபணையின்றி எல்லாம் வல்லவர்தான்-அவர் தீமையிலிருந்து நம்மை ஏன் விடுவிப்பதில்லை?

காந்திஜி : இந்தக் கேள்வியையும் நான் தள்ளிவிடுவேன். கடவுளும் நாமும் சமநிலையில் உள்ளவர்கள் அல்ல. சமநிலையில் உள்ளவர்கள்தான் ஒருவருக்கொருவர் அவ்விதம் கேள்வி கேட்டுக்கொள்ளலாம்; சமநிலையில் இராதவர்கள் அல்ல. பட்டணவாசிகளைப்போல் கிராமவாசிகளும் சிலகாரியங்களைச் செய்தால் நிச்சயமாக அழிந்து போய்விடுவார்கள். எனவே, பட்டணவாசிகள் ஏன் சில காரியங்களைச் செய்கிறார்கள் என்று கிராமவாசிகள் கேட்பதில்லை.

சுவாமி : நீங்கள் கூறுவதன் கருத்தை நான் நன்கு அறிகிறேன். நீங்கள் கூறுவது பலம் பொருந்திய வாதம்தான். ஆனால், கடவுளைச் சிருஷ்டித்தவர் யார்?

காந்திஜி : கடவுள் எல்லாம் வல்லவர் எனின், அவர் தம்மைத் தாமே சிருஷ்டித்துக் கொண்டிருக்க வேண்டும்.

சுவாமி : கடவுள் ஏகாதிபத்தியவாதியா அல்லது அவர் ஒரு ஜனநாயகவாதி என்று நீங்கள் நினைக்கிறீர்களா?

காந்திஜி : அவரைப் பற்றி இவ்விதமெல்லாம் நான் நினைக்கவில்லை. அவருடன் அதிகாரத்தைப் பங்கிட்டுக் கொள்ள நான் விரும்பவில்லை. எனவே, இந்தக் கேள்விகளைப்பற்றி ஆலோசிக்க நான் கடமைப்பட்டிருக்கவில்லை. என்முன் உள்ள கடமையைச் செய்வதுடன் நான் திருப்தி அடைகிறேன். விஷயங்களைப் பற்றி எங்கே, ஏன் என்றெல்லாம் கேட்டு நான் என்னை அலட்டிக் கொள்ளுவதில்லை.

சுவாமி : ஆனால், அவர் நமக்குப் பகுத்தறிவைக் கொடுத்திருக்கிறார் அல்லவா?

காந்திஜி : ஆமாம், அவர் நமக்குப் பகுத்தறிவைக் கொடுத்திருக்கிறார். ஆனால், நாம் ஆழம் கண்டுபிடிக்க முடியாத விஷயங்களைப்பற்றி பிதற்ற வேண்டாம் என்பதை அறிந்து கொள்ள அந்தப் பகுத்தறிவு நமக்கு உதவுகிறது. உண்மையான கிராமவாசிகளுக்கு ஆச்சரியகரமான அளவில் பகுத்தறிவு இருக்கிறது என்பதே எனது நம்பிக்கையாகும். எனவே, இவ்விஷயங்களையெல்லாம்பற்றி அவர்கள் ஒருபோதும் தங்களை அலட்டிக் கொள்ளுவதில்லை.

சுவாமி: அப்படியானல் இப்போது நான் வேறு விதமான ஒரு கேள்வி கேட்கிறேன். நல்லதைக் காட்டிலும் தீங்கு செய்வதும், ஏற்றத்தைக் காட்டிலும் வீழ்ச்சியும் அதிக எளிது என்று நீங்கள் நம்புகிறீர்களா?

காந்திஜி: வெளித்தோற்றத்திற்கு அது அப்படித்தான். ஆனால் உண்மையில் தீயவனாக இருப்பதைக் காட்டிலும் நல்லவனாக இருப்பதே அதிக எளிதாகும். நரகத்தில் வீழ்ச்சியடைவது எளிது என்று கவிகள் கூறியிருக்கிறார்கள் என்பது உண்மையே. ஆனால், நான் அவ்விதம் நினைக்கவில்லை. உலகில் நல்லவர்களைக் காட்டிலும் கெட்டவர்களே அதிகமாக இருக்கிறார்கள் என்றும் நான் நினைக்கவில்லை. கெட்டவர்களே அதிகமாக இருக்கிறார்கள் எனில், கடவுளே தீயவராகத்தான் இருப்பார், இப்போதிருப்பதுபோல அகிம்சையோ அல்லது அன்போ உருக்கொண்டவராக இருக்கமாட்டார்.

சுவாமி: அகிம்சைக்கு உங்கள் விளக்கம் என்ன என்பதை அறியலாமா?

காந்திஜி: எண்ணத்திலும், வார்த்தையிலும், செயலிலும், பூமியிலுள்ள எதற்கும் தீங்கு செய்யாமல் தவிர்ப்பதே அகிம்சையாகும்.

—'ஹரிஜன்' – 7-9-1935

# 25

# தீமையைக் கண்டிப்பது தவறு ?

அரசாங்கத்தைக் கண்டிப்பதில், ஒத்துழையாதார் தூஷணையான பாஷையை உபயோகிப்பதை ஆட்சேபித்து ஒருவர் காந்திஜிக்குக் கடிதம் எழுதியிருந்தார். அதற்குப் பதிலாக, 'தூஷணை என்றால் என்ன?' என்ற தலைப்பில் காந்திஜி எழுதிய ஒரு கட்டுரையின் பகுதிகளே கீழே கொடுக்கப்பட்டுள்ளன:

ஒத்துழையாதார் தூஷணையில் இறங்குவார்களாயின், அது பலாத்காரமே என்பதில் ஐயமில்லை; அது அகிம்சைப் பிரதிக்ஞையையும் மீறியதாகும். அது இருக்கட்டும்; தூஷணை என்றால் என்ன? தூற்றுவது, இழிவாகக் கூறுவது என்பதே அதன் பொருளாகும். எனவே, நாம் ஒரு திருடனை திருடன் என்றோ, ஒரு போக்கிரியை போக்கிரி என்றோ கூறினால் அது தூஷணையாகாது. ஒரு குஷ்டரோகியை குஷ்டரோகி என்று கூறினால் அவர் கோபம் அடைவதில்லை. குறிப்பிட்ட பண்புச் சொல்லை உபயோகிப்போர், அதை ருசுப்பிக்கத் தயாராக இருக்க வேண்டும். எனவே, அதை உபயோகிக்கும் போதெல்லாம் நான் அதைக் கண்டிப்பது முடியாத காரியம். கண்டனச் சொற்களை

உபயோகிப்பது எப்போதுமே பலாத்காரத்தின் அறிகுறி என்றும் கூற முடியாது. நியாயமாகவே கண்டிப்பதாயினும், கண்டிக்கப் படுவோருக்கு எதிராக அது பலாத்காரத்தைத் தூண்டுவதாக இருந்தால் அது விரும்பத்தக்கதல்ல. அதை அகிம்சை என்றும் கூறமுடியாது. ஆனால், ஒரு நபரைத் தீய பழக்கத்திலிருந்து தடுப்பதற்காகவோ அல்லது அவருடன் கூட்டத்தில் உள்ள வர்கள் தொடர்பு வைத்துக்கொள்ளக்கூடாது என்பதற்காகவோ கண்டன பாஷையை உபயோகிப்பது நியாயமாக இருக்கும். தீச் செயல்கள் புரிவோரைப் பற்றிய கண்டனங்களே ஹிந்து சாஸ்திரங்களில் நிறைந்திருக்கின்றன. இரக்கமே உருவெடுத்த துளிசிதாஸ், ராமாயணத்தில் ராமனுக்கு விரோதிகளை மிகவும் கடுமையாகக் கண்டித்துள்ளார். அவ்விதம் வேறு யாருமே கண்டித்ததில்லை. தீயவர்களின் பெயர்களே அவர்களுடைய கொடிய குணங்களைக் குறிப்பிடுவதாக இருக்கின்றன. விஷப் பாம்புகளைப் போன்ற கொடியவர்கள், வேஷதாரிகள், போலி நீதிவான்கள் முதலியோரைக் கடவுளின் கோபத்திற்கு ஆளாகும் படி ஏசுநாதரும் சபித்துள்ளார். மதத்தின் பெயரால் நிரபராதி களான ஆடுகளைக் கொன்றவர்களைத் தூற்றும் விஷயத்தில் புத்தர் பிரானும் இரக்கம் காட்டவில்லை. குரான், ஸென்ட் அவெஸ்தா முதலிய நூல்களிலும் தீயவர்கள் மிகக் கடுமையாகக் கண்டிக்கப்பட்டிருக்கிறார்கள். ஆனால், அந்த முனிவர்களும் தீர்க்கதரிசிகளும் கெட்ட எண்ணத்துடன் அவ்விதம் கண்டிக்க வில்லை. நபர்களையும் விஷயங்களையும் அவர்கள் உண்மைக்கு முரணின்றி வருணிக்க வேண்டியிருந்தது. நல்லதையும் கெட்ட தையும் நாம் சீர்தூக்கிப் பார்ப்பதற்கு உதவியாக, அவர்கள் அதனதன் தன்மையை விளக்குவதற்கு உகந்த பாஷையை உப யோகிக்க வேண்டியிருந்தது.

இவ்வளவுதூரம் கூறிய நான், அரசாங்கத்தையும் கவர்னர் களையும் வருணிப்பதில் நாம் எவ்வளவுக்குக் கடுமையான பாஷையை உபயோகிக்காமல் இருக்கிறோமோ அவ்வளவுக்கு நல்லது என்று கடிதம் எழுதியவர் கூறுவதை அங்கீகரிக்கிறேன். நம்மிடத்திலேயே கோபங்களையும் தீமையையும் வைத்துக் கொண்டிருக்கும் நாம், அடிக்கடி பிறரைக் கடுமையாகத் தூஷிப் பது சரியல்ல. இந்த அரசாங்கத்தை நான் சிறந்த முறையில் உபயோகிப்பது எவ்விதமெனில், அந்த அரசாங்கம் இருப்ப தையே சட்டை செய்யாமல் இருந்து விடுவதும், கூடியவரையில் அதை நமது வாழ்க்கையிலிருந்து ஒதுக்கி வைத்துவிடுவதும்தான்; அதனுடன் தொடர்பு வைத்துக் கொள்ளுவது, தவறான வழியில் செல்லுவதும் இழிவானதும் ஆகும் என்று நம்புவதே.

—**'எங் இந்தியா' - 17—11—1921**

# 26

# துவேஷம் யார்மீது?

ஒத்துழையாமை இயக்கத்திற்குத் தமது ஆசிகளைத் தெரிவித்து ஓர் ஆங்கில மாது காந்திஜிக்குக் கடிதம் எழுதியிருந்தார். அதைக் குறித்து காந்திஜி எழுதியதாவது: நான் தயக்கத்துடனேயே இக்கடிதத்தை வாசகர்களுடன் பகிர்ந்து கொள்ள விரும்புகிறேன். அது யாரையும் குறிப்பிடாமல் பொதுவாக எழுதப்பட்டுள்ளதெனினும், அது என்னைக் குறிப்பிட்டிருப்பது போலவே தோன்றுகிறது. எனினும், அவ்விஷயமாக என் மனத்தில் இறுமாப்பு எதுவும் இல்லை என்றே நம்புகிறேன். கடவுளிடத்திலும் அவரது சக்தியிலும் எனக்குள்ள நம்பிக்கை அசைக்க முடியாததாக இருக்கிறது. குயவன் கையில் உள்ள மண்ணைப்போல் நான் இருக்கிறேன். எனவே, கீதை கூறுகிறபடி, புகழுரைகளை கடவுளின் பாதங்களில் அர்ப்பணம் செய்கிறேன். இவை போன்ற ஆசிகள் பலமளிப்பதாக இருக்கின்றன என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். எனினும், நான் இந்தக் கடிதத்தைப் பிரசுரிப்பதன் நோக்கம் என்னவெனில், அகிம்சைப் பாதையில் சென்றுவரும் ஒவ்வொரு உண்மையான ஒத்துழையாமை வாதியையும் உற்சாகப்படுத்துவதும், போலி ஒத்துழையாமை வாதிகளை அவர்கள் பின்பற்றும் தவறான வழியிலிருந்து தடுப்பதும் தான். இது பயங்கரமான, உண்மையான ஒரு போராட்டமாகும். இது துவேஷத்தை அடிப்படையாகக் கொண்டதல்ல. எனினும், துவேஷ உணர்ச்சியுள்ளவர்கள் இதில் இருக்கிறார்கள். இப்போராட்டம் தூய்மையான, அப்பழுக்கற்ற அன்பை அடிப்படையாகக் கொண்டிருக்கிறது. ஆங்கிலேயர் மீதோ அல்லது கண்மூடித்தனமான நிர்வாகிகளுடன் கண்மூடித்தனமாகத் தொடர்பு கொண்டுள்ள மற்றவர்களின் மீதோ எனக்கு துவேஷ உணர்ச்சி இருப்பதாக நான் கருதுவேனாயின், போராட்டத்திலிருந்து விலகிவிடும் தைரியம் எனக்கு உண்டு.

கடவுளின் காருண்யமே அவரது நீதியாகும். கடவுளிடம் சிறிதளவாவது நம்பிக்கையுள்ள ஒருவர், மனிதர்கள் மீது துவேஷம் கொள்ளமாட்டார்; ஆனால், அதே சமயத்தில் அவர்களுடைய தீய வழிகளை அவர் வெறுப்பார். எனினும், தம்மிடமே தீய குணங்கள் உள்ள அவர், பிறரின் தயவையும் அன்பையும் நாடி நிற்கும் அவர், பிறரிடம் தீமையைக் காண்பதற்காக அவர்களைத் துவேஷிக்கக் கூடாது. ஆங்கிலேயர்களையும், உலகம் முழுவதையுமே நண்பர்களாக்கிக் கொள்ளுவதே போராட்டத்தின் உத்தேசமாகும். போலித்தனமான முகஸ்துதியால் அவர்களை நண்பர்களாக்கிக் கொண்டு வீடமுடியாது. இந்தியாவில் உள்ள ஆங்கிலேயர்கள் கையாளும் முறைகள் தீமையானவை என்றும், அந்த முறைகளை அவர்கள் கையாண்டு வரும்வரையில் அவர்களுடன்

நாம் ஒத்துழைக்க மாட்டோம் என்றும், அவர்களிடம் பட்டவர்த்தனமாகக் கூறுவதன் மூலமே நாம் அவ்விதம் செய்ய முடியும். நாம் அவ்விதம் நினைப்பது தவருயின், கடவுள் நம்மை மன்னிப்பார். ஏனெனில், நாம் அவர்களுக்குத் தீங்கு எதுவும் எண்ணவில்லை. அவர்கள் கையில் துன்பப்படுவதற்கும் நாம் தயாராக இருக்கிறோம். நாம் கூறுவது சரியாயின், நான் இதை எழுதிக் கொண்டிருப்பது எவ்வளவு நிச்சயமோ, நாம் படும் துன்பங்கள் இந்த ஆங்கில மாதின் கண்களைத் திறந்திருப்பதுபோல் ஆங்கிலேயர்களின் கண்களைத் திறக்கும் என்பதும் அவ்வளவு நிச்சயமாகும்.

'எங் இந்தியா' — 26—1—1922

# 27

# சிந்தித்துப் பார்க்கட்டும்

ஆங்கில நண்பர்களிடமிருந்து கடிதங்களைப் பெற நான் மகிழ்ச்சியுடையவனாக இருக்கிறேன். நேர்மையான பல ஆங்கிலேயர்கள் இருக்கிறார்கள் என்பதை நான் அறிவேன். அனுதாபத்துடனும் அக்கறையுடனும் அவர்கள் ஒத்துழையாமை இயக்கத்தைக் கவனித்து வருகிறார்கள். ஒத்துழையாமையின் தார்மிக அம்சங்களைக் குறித்து அவர்கள் மனத்திற்குத் தெளிவு ஏற்பட்டால், அவர்கள் சந்தோஷமாக நமக்கு உதவி அளிப்பார்கள். அவர்களுடைய மனநிலைக்கு இந்தக் கடிதம் ஒரு சரியான உதாரணமாகும்:

"தார்மிக சக்திக்கு முக்கியத்துவம் கொடுப்பதன் மூலம் இந்தியாவில் சுயராஜ்யத்தை ஸ்தாபிக்க நீங்கள் முயற்சித்து வருகிறீர்களென்று நான் அறிகிறேன். அந்த சக்தியைப் பெற நீங்கள் தன்னலமின்மையில் நம்பிக்கை வைத்திருக்கிறீர்கள். இந்தக் கொள்கை மிகச் சிறந்ததே. எனினும், இயக்கத்தில் ஈடுபடும் ஒவ்வொரு பகுதியினரும் முற்றிலும் தன்னலமற்ற நோக்கத்தை வளர்த்துக் கொள்ளுமுன் ஒத்துழையாமையைக் கைக்கொண்டால், அது உங்களுடைய தோல்வியிலேயே முடியுமென நீங்கள் அஞ்சவில்லையா? தார்மிக வெற்றி குறிக்கோளாக இருக்கும்போது, அதை அடைவதற்கான முறைகளும் நிச்சயமாக அதே ரீதியில் இருக்க வேண்டாமா? ஒத்துழையாமையுடன் ஒரு காரியத்தைத் தொடங்குவது உங்களுடைய தார்மிக லட்சியத்தை ரகசியமான, கீழ்த்தரமான ஸ்தூல ஆசைகளுக்கு உட்படுத்துவதாக ஆகாதா? நீங்கள் அதில் வெற்றி பெற்றால் கூட, சக மனிதர்களை இப்போதிருப்பதைக் காட்டிலும் பெரிய மிருகங்களாகச் செய்வதன் மூலம் உங்கள் விருப்பமின்றியே உங்களுடைய முயற்சியின் மிகவும் முக்கிய பகுதி வீணாகிவிட்டதாகாதா? முதலில் தன்னைத் தானே ஜெயிப்பது எப்படி என்பதைத் தெரிந்து கொள்ளுமுன் ஒரு தன்னலமற்ற தலைவரைப் பின்பற்ற முயற்சிக்கும் ஒரு தேசத்தின் ஒத்துழையாமையைக் காட்டிலும் அதிக விரைவில், தன்னலமற்ற ஒரு தேசத்தின் தன்

னலமற்ற பிரதிநிதிகளின் ஒத்துழைப்பினல் ஒரு தன்னலமற்ற அரசாங்கத்தை உருவாக்க முடியும்!

"கீழ்க்கண்ட உண்மைகளை நிதானமாக சிந்தித்துப் பாருங்கள்: நீங்கள் என்ன செய்தாலும், சகோதரர்களான மனித வர்க்கம் முழுவதற்குமே நன்மையைத் தருவதாக இருக்க வேண்டும். அற்பமாகத் தோன்றும் சம்பவங்களில் கூட தார்மிகச் சிறப்புகளுக்கு இரண்டாவது ஸ்தானமே அளிப்பதென்பது கூடாது. தார்மிகச் சிறப்புகளுக்கு முதல் ஸ்தானம் அளிக்காவிடில், பரிகாரம் நோயைக் காட்டிலும் மோசமாகிவிடும்."

இந்தக் கடிதத்தை, பூர்வபீடிகையாக உள்ள ஒரு வாக்கியத்தை மாத்திரம் விட்டுவிட்டு, அப்படியே முழுதும் பிரசுரித்திருக்கிறேன். இதை எழுதியவரின் பெயரை வெளியிடுவதன் சம்பந்தமாக அவரது அபிப்பிராயம் எனக்கு நிச்சயமாகத் தெரியாததால், அவரது பெயரை நான் வெளியிடவில்லை. அவரது தருமசங்கடமான நிலை கவனமான யோசனைக்கு உரியதே. அவரது சிந்தனைக் குழப்பமே இக்கடிதத்திற்குக் காரணம் என்பது எனது அபிப்பிராயமாகும். கௌரவமற்ற முறைகளால் கௌரவமான ஒரு லட்சியத்தை அடைய முடியாது என நான் எப்போதும் எடுத்துக் கூறிவந்திருக்கிறேன். பொதுவாக ஒத்துழையாதாரின் நோக்கத்தையே கடிதம் எழுதியவர் ஆட்சேபிக்கலாம். உண்மையில் ஆட்சேபிக்கவும் செய்கிறார். ஒத்துழையாதார்களில் எல்லோருடைய நோக்கமும் அன்பையல்ல, அர்த்தமற்ற துவேஷத்தையே அடிப்படையாகக் கொண்டது என்பதை நான் ஒத்துக்கொள்ளுகிறேன். 'அர்த்தமற்ற' என்று நான் கூறுவதற்குக் காரணம் என்னவெனில், ஒத்துழையாதார்களில் பலரும் கொண்டுள்ள துவேஷத்திற்கு ஒத்துழையாமைத் திட்டத்தில் இடமில்லை. ஒரு மனிதன் துவேஷம் காரணமாகத் தியாகம் செய்வதில்லை.* அவன் யாரை தனக்கு விரோதி என்று கருதுகிறானே, அவனுக்குத் துன்பம் விளைவிக்க வேறு வழியின்றி முயற்சிக்கிறான். ஆனல், ஒத்துழையாமையில் அடைய விரும்பும் பலன் என்னவெனில், தண்டனை விதிப்பதல்ல, நீதி கிடைக்கும்படி செய்வதேயாகும். துவேஷத்தின் முடிவு ஒருபோதும் நீதியாக இருக்கமுடியாது; அது எதிர்த்தாக்குதலாகவே இருக்க முடியும். அது கண்மூடித்தனமான ஆத்திரமேயாகும். அமிருதசரஸில் கட்டுக்கடங்காத பொது மக்களின் துவேஷமானது, நிரபராதிகளின் கொடிய கொலையில் வந்து முடிந்தது. ஆனல், ஓர் ஒத்துழையாதார் துவேஷத்தைத் தன்மீதே திருப்பிக்கொள்ளுவதால் அதன் உக்ரம் தணிந்து, அவரை அது தூய்மைப்படுத்துவதுடன், அவரது துவேஷத்திற்கும் காரணமானவரைச் சீர்திருத்தி, அவர் தமது போக்கை மாற்றிக் கொள்ளும்படியும் செய்கிறது. அவ்விதமாக

*"நிரபராதிகள் விஷயத்தில்தான் தியாகம் என்ற சொல்லை உபயோகிக்க முடியுமேயன்றி, குற்றவாளிகள் விஷயத்தில் அல்ல. குற்றம் புரிவோருக்கும் தியாகத்திற்கும் சம்பந்தம் இருக்க முடியாது" என்று காந்திஜி மற்றொரிடத்தில் கூறியிருப்பதையும் இங்கே குறிப்பிடலாம்.

ஓர் ஒத்துழையாதார் ஒரு விரோதியாகத் தொடங்கி இறுதியில் ஒரு நண்பராகிவிடுகிறார். நல்ல காரியத்தைச் செய்யும் ஒருவர், எந்த நோக்கத்துடன் அதைச் செய்தால் என்ன? கொள்கை காரணமாகச் செய்யும் ஒரு காரியம் விரும்பிய பலனைக் கொடுக்காவிடில், அதைக் கைவிட்டுவிடும் அபாயம் இருப்பதை நான் உணர்கிறேன். எனினும், அத்தகைய அபாயம் இருப்பது, அச் செயலின் நியாயத்திற்கு விரோதமான ஒரு வாதமாகிவிடாது.

கடிதம் எழுதியவர் ஓர் அசாத்தியமான பரிகார முறையைக் கூறியிருக்கிறார். ஒத்துழையாதார் அப்பழுக்கற்றவர்களாக இருக்கவேண்டும் என்று அவர் விரும்புகிறார். நாம் அப்பழுக்கற்றவர்களாக இருந்தால், ஒத்துழையாமைக்கே இடமிராது என்பதை அவர் மறந்துவிட்டார். தம்மைத்தாமே தூய்மைப்படுத்தி அல்லது தம்மிடம் உள்ள மாசுகளை அகற்றி குற்றம் குறையற்றிருக்கும்படி செய்யும் முயற்சியே ஒத்துழையாமையாகும். பெரும்பாலோரும் அறிவின் மூலம் அல்ல, நம்பிக்கையின் மூலமே தூய்மைப் பாதையைப் பின்பற்றுகிறார்கள். மற்றொரு விதமாகக் கூறுவதாயின், சுயநலம் கொண்ட ஒத்துழையாமைவாதிகள் சுயநலமற்ற தலைவரைப் பின்பற்றுவதன் மூலம் இறுதியில் நன்மையே அடைவார்கள். ஏனெனில், தன்னலமற்ற கொள்கையே ஒத்துழையாமையின் சிறப்பு என்பதை அவர்கள் உணர்ந்து கொள்ளுவார்கள் அல்லவா?

இந்தியாவில் தங்களுடைய ஆட்சி முற்றிலும் தீமையானது; முக்கியமான எல்லா அம்சங்களிலும் ஆங்கிலேயர்களின் ஆட்சி இந்தியாவை அலங்கோலமான நிலைக்குக் கொண்டுவந்து விட்டது என்பதை அவர்கள் நம்பாததே அவர்களுக்கு இடையூறாக இருக்கிறது. ஆங்கில ஆட்சியின் விளைவாக இந்தியா செல்வத்தை இழந்து ஏழ்மை நிலையை அடைந்துவிட்டது; ஆண்மை, தெய்வத்தன்மை, தங்களைப் பாதுகாத்துக்கொள்ளும் சக்தி எல்லாவற்றையும் இழந்துவிட்டது. நன்மைக்கும் தீமைக்கும், கடவுளுக்கும் சைத்தானுக்கும் தொடர்பு இருக்கமுடியுமா? நிதானித்து சிந்தனை செய்யும்படி கடிதம் எழுதியவர் எனக்கு யோசனை கூறுகிறார். சென்ற முப்பது ஆண்டுகளாக நான் அவ்விதமே செய்து வருகிறேன். அதன் பலனாக, தற்போதைய ஆங்கில ஆட்சி முறை இந்தியாவின் சாபத்தீடாக இருக்கிறது என்ற முடிவிற்கு நான் வந்திருக்கிறேன். தங்கள் கண்களுக்கு எதிரில் என்ன நிகழ்ந்து வருகிறது என்பதை ஆங்கிலேயர்கள் நிதானமாகச் சிந்தித்துப் பார்க்கட்டும். ஆராய்ச்சி தீபத்தை அவர்கள் உட்புறமாகத் திருப்பித் தங்கள் நிலையைப் பரிசீலனை செய்து கொள்ளட்டும்.

'எங் இந்தியா' – 5—1—1921

# 28

# தெய்வ நம்பிக்கை வீண் பிரமையா?

கடவுளிடம் நம்பிக்கை என்ற பிரச்னையானது, தற்போதைய தலை முறையைச் சேர்ந்த பலருடைய மனத்தையும் கலக்கி வருவதுபோல், இஸ்லாமியக் கல்லூரியைச் சேர்ந்த ஒரு பேராசிரியரின் மனத்தையும் குழப்பிவந்தது. எனவே, அவர் அவ் விஷயமாக காந்திஜியைக் கீழ்வருமாறு இரு கேள்விகள் கேட்டார்:

''தங்களுக்குக் கடவுளிடம் நம்பிக்கை இருந்தால், – தங்களுக்கு தெய்வ நம்பிக்கை உண்டு என்பது எனக்குத் தெரியும்–அந்த நம்பிக்கைக்கு அடிப்படை என்ன? அவ்விஷயமாக உங்களுடைய அனுபவம் என்ன?''

அக் கேள்விக்குப் பதிலாகக் காந்திஜி கூறியதாவது: ''இது எக்காலத்திலும் வாதத்திற்குக் காரணமான ஒரு விஷயமாக இருக்கமுடியாது. இதைப்பற்றி வாதத்தின் மூலம் மற்றவர்களை நான் திருப்தி செய்யவேண்டுமென நீங்கள் விரும்பினால், நான் தோல்வியடைந்தவனாவேன். ஆனால், இது மாத்திரம் உங்களுக்கு நான் கூற முடியும்: நீங்களும் நானும் இப்போது இந்த அறையில் உட்கார்ந்துகொண்டிருப்பது எவ்வளவு நிச்சயமோ, அதைக் காட்டிலும் கடவுள் இருக்கிறார் என்பது அதிக நிச்சயமாகும். நான் காற்று இல்லாமலும், தண்ணீர் இல்லாமலும் உயிர்வாழலாம், ஆனால் கடவுள் இல்லாமல் உயிர்வாழ முடியாது என்பதையும் நான் உறுதியாகக் கூற முடியும். என் கண்களை நீங்கள் பிடுங்கி விடலாம்; அதனால் நான் இறந்துவிடமாட்டேன். அதுபோலவே, நீங்கள் என் மூக்கை அறுத்துவிடலாம்; அதுவும் என்னைக் கொன்றுவிட முடியாது. ஆனால், கடவுளிடத்தில் எனக்குள்ள நம்பிக்கையை நீங்கள் சிதைத்துவிட்டால், நான் இறந்தவனாவேன். இதை நீங்கள் மூட நம்பிக்கை என்று கூறலாம். எனது குழந்தைப் பருவத்தில் எனக்கு ஏதாவது பயமோ அல்லது ஆபத்தோ நேருவதாக இருந்தபோது, நான் ராம நாமாவை எப்படித் தழுவிக்கொள்ளுவது வழக்கமோ, அதுபோலவே இந்த மூடநம்பிக்கையையும் நான் தழுவிக் கொண்டிருக்கிறேன் என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன்.''

**கேள்வி:** ''உங்கள் வாழ்க்கையில் அந்த மூடநம்பிக்கை அவசியமானதென்று நீங்கள் நினைக்கிறீர்களா?''

**பதில்:** ''ஆமாம், நான் உயிர் வாழ்வதற்கு அது அவசியமானது.''

**'ஹரிஜன்' – 14—5—1938**

## 29

# பகுத்தறிவுக்கு உரிய இடம் எது ?

பகுத்தறிவுக்கு இடம் உண்டுதான். எனினும், அது உள்ளத்தின் ஸ்தானத்தை அபகரிப்பதாக இருக்கக் கூடாது. நீங்கள் அறிந்தவரையில், மிகுந்த பகுத்தறிவுள்ள ஒரு மனிதரின் வாழ்க்கையில் இருபத்துநான்கு மணி நேரத்திலும் அவர் செய்யும் காரியங்களை நீங்கள் கவனித்தால், அவரது பெரும்பாலான காரியங்களும் உணர்ச்சியை அடிப்படையாகக் கொண்டிருக்குமேயன்றி, பகுத்தறிவை அடிப்படையாகக் கொண்டிரா என்பதை நீங்கள் காண்பீர்கள். இதன் தத்துவம் என்னவெனில், பகுத்தறிவு வளர்ச்சியடைந்துவிட்டால் பிறகு, அது உள்ளம் சரியான நிலையில் இருக்குமாயின், சுயேச்சையாக செயல்படத் தொடங்கி, மூட நம்பிக்கையையோ அல்லது ஒழுங்கீனமானதையோ நிராகரித்து விடுகிறது. தவருன வழியில் செல்லாமல் தடுப்பதே பகுத்தறிவாகும். அது அசையாமல் கவனத்துடன் வாயிற்காவலாக இருக்குமாயின், அது அதற்கு உரிய இடத்தில் இருக்கிறது என்றே கருத வேண்டும். வாழ்க்கை என்பது கடமை, அதாவது செயலாகும். தர்க்கத்தின் மூலம் இதைப் புறக்கணிக்கும் போது தான், பகுத்தறிவு உள்ளத்தின் செயலை அபகரிப்பதாகிவிடுகிறது. எனவே, அதற்கு இடம் கொடுக்கக்கூடாது.

[பேராசிரியர் பி. ஜி. மெத்யூசுக்கு ஒரு சமயம் காந்திஜி எழுதிய கடிதத்தின் பகுதி ]

—'ஹரிஜன்' – 12—12—1948

## 30

# நம்பிக்கைக்கு ஆதார நூல்

**கேள்வி:** உங்களுடைய நம்பிக்கைக்கு ஆதாரமான நூல் எங்கே இருக்கிறது ?

'இங்கே இருக்கிறது' என்று காந்திஜி தமது மார்பைச் சுட்டிக் காட்டினர். அவர் மேலும் கூறியதாவது: கீதை உள்பட ஒவ்வொரு தருமசாஸ்திர நூலையொட்டியும் நான் எனது பகுத்தறிவையே உபயோகிக்கிறேன். எந்த சாஸ்திர ஆதாரமும் எனது பகுத்தறிவைப் புறக்கணிப்பதற்கு நான் இடம் கொடுப்பதில்லை. முக்கியமான நூல்கள் தெய்விகமானவை என்றே நம்புகிறேன். எனினும், அவை இரட்டிப்பு மாறுதல்களுக்கு உள்ளாகிவிடுகின்றன. முதலில் அவை மானிடரான ஒரு தீர்க்கதரிசியின் மூலம் வருகிறது. பின்னர் அவற்றிற்குப் பலரும் வியாக்கியானங்கள் செய்கின்றனர். அவற்றில் எதுவும் கடவுளிடமிருந்து நேரடியாக வருவதில்லை. ஒவ்வொருவரும் ஒவ்வொருவிதமாக

வியாக்கியானம் செய்கின்றனர். தெய்விகமான அந்த நூல்களை நான் ஆதரிக்கிறேன் என்றாலும், எனது பகுத்தறிவை நான் விட்டுக்கொடுக்க முடியாது. எனது நிலையை நீங்கள் தவறாக எண்ண வேண்டாம். பகுத்தறிவு செயல்பட முடியாத விஷயங்களில், உதாரணமாக, கடவுள் இருக்கிறார் என்பதில் எனக்கு நம்பிக்கை உண்டு. எவ்வளவு தர்க்கவாதம் செய்தாலும் அந்த நம்பிக்கையிலிருந்து என்னை அசைக்க முடியாது. சிறந்த அறிவாளி தமது அறிவுத்திறனால் என்னை வாதத்தில் தோற்கடித்தால்கூட, 'நீங்கள் எவ்வளவு தூரம் மறுத்து வாதித்தாலும், கடவுள் இருக்கத்தான் செய்கிறார்' என்றே திரும்பத் திரும்பக் கூறுவேன்.

—'ஹரிஜன்' – 5—12—1936

# 31

# விஞ்ஞான வெற்றிகளும் உள்ளத் தூய்மையும்

ஒரு மனிதன் வீழ்ச்சி அடையும்போது, தன்னைக் கைதூக்கி விடும்படி அவன் கடவுளைப் பிரார்த்திக்கிறான். திக்கற்றவருக்குத் தெய்வமே துணை என்று தமிழ்ப் பழமொழியொன்று கூறுகிறது. குவெட்டாவில் ஏற்பட்ட கோரமான பூகம்பம் எவரையும் உணர்ச்சியற்றுப் போகும்படி செய்கிறது. புனருத்தாரண முயற்சி செய்வோரையெல்லாம் அது கலங்கும்படி செய்கிறது. பூகம்ப விபத்தைப் பற்றிய முழு உண்மையையும் எக்காலத்திலும் அறிந்து கொள்ள முடியாது. இறந்தவர்களைப் பிழைக்க வைக்க முடியப் போவதில்லை.

மனிதர் எப்போதும் முயற்சி செய்துதான் தீர வேண்டும். பூகம்பத்திற்குப் பலியானவர்களால் விட்டுச் செல்லப்பட்டுள்ளவர்களுக்கு உதவி அளிக்கவேண்டும். சாத்தியமான புனருத்தாரண வேலைகளையெல்லாம் கைக்கொள்ளுவார்கள் என்பதில் சந்தேகமில்லை. இதெல்லாம், இதற்குமேலும் செய்யப்பட்டால் கூட, அவையெல்லாம் பிரார்த்தனைக்கு ஈடாகா.

ஆனால், ஏன் பிரார்த்தனை செய்யவேண்டும்? கடவுள் ஒருவர் இருந்தால், குவெட்டாவில் என்ன நிகழ்ந்துளது என்பது அவருக்குத் தெரியாதா? கடவுள் தமது கடமையைச் செய்ய சாத்தியமாவதற்கு, அவர் பிரார்த்தனையை நாடி நிற்கிறாரா?

இல்லை, அவ்விஷயமாகக் கடவுளுக்கு ஞாபகப்படுத்த வேண்டிய அவசியம் இல்லை. அவர் ஒவ்வொருவருடைய உள்ளத்திலும் இருக்கிறார். அவரது அனுமதியின்றி எதுவும் நிகழ்வதில்லை. நமது பிரார்த்தனை, உள்ளத்தைச் சோதனை செய்துகொள்ளும் ஒரு முறையேயாகும். அவரது ஆதரவின்றேல் நாம் திக்கற்றவர்க

ளாகிறோம் என்பதை நமக்கு நாமே ஞாபகப்படுத்திக்கொள்ள வேண்டும். பிரார்த்தனை இல்லாமல், கடவுளின் அருள் இன்றேல், மானிடரின் எத்தகைய சிறந்த முயற்சியும் பலனற்றுப் போய்விடுகின்றது. இதைத் திட்டமாக உணராவிடில், எத்தகைய முயற்சியும் பூரணமானதாகாது. பணிவுடன் இருக்கும்படி அறைகூவுவதே பிரார்த்தனையாகும். சுயத் தூய்மையும், உள் ஆராய்ச்சியும் அவசியம் என்பதை வலியுறுத்துவதே பிரார்த்தனையாகும்.

பீகார் பூகம்பம் ஏற்பட்டபோது நான் என்ன கூறினேனோ, அதையே மீண்டும் கூறவேண்டும். ஸ்தூலமான ஒவ்வொரு பேராபத்துக்கும் பின்னால் தெய்வத்தின் சித்தம் ஒன்றிருக்கிறது. கிரகணங்களைப் பற்றி இன்று முன்னதாகவே கூறுவது போல், பூகம்பங்கள் எப்போது நேரும் என்பதை, பூரண வளர்ச்சி பெற்ற விஞ்ஞான சாஸ்திரம் முன்னதாகவே கூறும் காலம் வருவது முற்றிலும் சாத்தியமே. அது, மனிதர் அறிவின் மற்றொரு வெற்றியாகத் திகழும். எண்ணிக்கையற்ற, எல்லையற்ற அத்தகைய வெற்றிகள்கூட உள்ளத் தூய்மையை உண்டு பண்ணிவிட முடியாது. உள்ளத் தூய்மை இராவிடில், எதற்கும் எவ்வித மதிப்பும் இல்லை.

பீகார் பூகம்பத்தை நாம் மறந்துவிட்டது போல் இப்போது ஏற்பட்ட பேராபத்தையும் மறந்துவிடுவோம் என்பது உண்மைதான். உள்ளத் தூய்மையின் அவசியத்தை நன்கு உணருவோரை, பிரார்த்தனையில் கலந்து கொள்ளும்படி நான் கேட்டுக்கொள்ளுகிறேன். அப்போதுதான், இயற்கையின் அத்தகைய தண்டனைகள் சம்பந்தமாக கடவுளின் சித்தம் என்ன என்பதை நாம் அறிந்துகொள்ளலாம்; அவை நமக்குப் பணிவைக் கற்பிக்கலாம்; அழைப்பு வரும்போது நம்மைப் படைத்தவரின் எதிரில் நிற்க நம்மைப் பக்குவப் படுத்தலாம்; நமது சகமனிதர்கள் யாராயினும் அவர்களுடைய கஷ்ட நஷ்டங்களில் பங்குகொள்ள நம்மை எப்போதும் தயாராக இருக்கும்படி செய்யலாம்.

'ஹரிஜன்' - 8—6—1935

## 32

# இயற்கை ஆபத்துகளும் பிரார்த்தனைகளும்

குவெட்டா பூகம்ப சம்பந்தமாகப் பிரார்த்தனை செய்யும்படியும், தங்களுடைய பாவங்களுக்கு வருந்தும்படியும் நான் எழுதிய சில வரிகள், சிலருடன் எனக்குக் கடிதப் போக்கு வரத்திற்குக் காரணமாகியிருக்கின்றன. அவ்விதம் கடிதம் எழுதியவர்களில் ஒருவர் கேட்கிறார்:

"சாதி ஹிந்துக்கள் செய்த தீண்டாமைப் பாவத்திற்கு பீகார் பூகம்பம் உரிய தண்டனையாகும் என்று அந்தப் பூகம்பம் ஏற்பட்ட சமயத்தில் நீங்கள் கூறத் தயங்கவில்லை. அதைக் காட்டிலும் அதிக பயங்கரமான குவெட்டா பூகம்பம், எந்தப் பாவத்திற்காக ஏற்பட்டிருக்க வேண்டும்?"

இந்தக் கேள்வியைக் கேட்க, கடிதம் எழுதியவருக்கு உரிமை உண்டு. பீகார் பூகம்பத்தைப்பற்றி நிதானமாக ஆலோசித்தே அவ்வாறு கூறினேன். குவெட்டா பூகம்பத்தைப் பற்றியும் நான் நிதானமாக ஆலோசித்தே எனது அபிப்பிராயத்தைக் குறிப்பிட்டிருக்கிறேன். பிரார்த்தனை செய்யவேண்டும் என்ற இந்த அழைப்பு, ஆன்மாவின் நிச்சயமான ஆர்வமேயாகும். மனப்பூர்வமான வருத்தத்தின் அடையாளமே பிரார்த்தனையாகும். முன்னரைக் காட்டிலும் சிறப்பாகவும் அதிகத் தூய்மையுடனும் விளங்க வேண்டும் என்ற ஆர்வத்தையே அது குறிக்கிறது. பூகம்பம் போன்ற இயற்கை ஆபத்துகளை தெய்விகமான தண்டனையாகவே பிரார்த்தனையில் பற்றுள்ள மனிதன் கருதுகிறான். அது தேசங்களைப் போல் தனி நபர்களுக்கும் விதிக்கப்படும் தண்டனையாகும். எல்லாத் தண்டனைகளும் மக்களைச் சமமாக திடுக்கிடச் செய்வதில்லை. சில, தனி நபர்களை மாத்திரமே பாதிக்கின்றன. மற்றும் சில கோஷ்டிகளையும், குறைந்த அளவுக்கு தேசங்களையுமே பாதிக்கின்றன. குவெட்டாவைப்போன்ற ஆபத்துகள் நம்மை உணர்ச்சியற்றுப் போகும்படி செய்துவிடுகின்றன. ஒவ்வொரு நாளும் நிகழும் சாதாரண ஆபத்துகளைக் கண்டு நமக்குப் பழக்கம் ஏற்பட்டு விடுவதால், அவற்றையொட்டி நம் மனத்தில் அலட்சியம் உண்டாகி விடுகிறது. பூகம்பங்கள் தினசரி நிகழ்ச்சிகளாகி விடுமாயின், நாம் அவற்றைப்பற்றி அதிகமாக கவனித்துக் கொண்டிருக்க மாட்டோம். இந்த குவெட்டா பூகம்பம் கூட, பீகாரில் ஏற்பட்ட பூகம்பத்தைப்போல் நமக்கு அவ்வளவு மனக் கலக்கத்தை உண்டாக்கவில்லை.

எனினும், ஒவ்வொரு ஆபத்தும் விவேகமுள்ள ஒரு மனிதனை முழந்தாளிட்டுக் கடவுளை வணங்கும்படி செய்கிறது என்பதே உலகம் முழுவதும் உள்ள மக்களின் அனுபவமாகும். தான் செய்த பாவங்களுக்கு அது கடவுள் விதித்த தண்டனையே என்றும், இனி ஒழுங்காக நடந்து கொள்ளவேண்டும் என்றும் அவன் கருதுகிறான். அவனது பாவங்கள் அவனை மிகவும் பலவீனனாகச் செய்துவிடுவதால், அவன் தனக்கு உதவிபுரியும்படி கடவுளை நோக்கிக் கதறுகிறான். அவ்விதமாக, கோடிக்கணக்கானவர்கள் தங்களுக்கு நேர்ந்த பேராபத்துகளின் விளைவாகத் தாங்கள் திருந்தி முன்னேற்றம் அடைகிறார்கள். பேரபாயங்கள் ஆட்கொண்டபோது தேசங்களும் உதவிபுரியும்படி கடவுளை வேண்டிக்கொண்டதற்கு உதாரணங்கள் உண்டு. அந்த நாடுகள் கடவுளின் முன்னிலையில் அடிபணிந்து, பணிவுடன் வணங்கவும்,

பிரார்த்திக்கவும், தூய்மைபெறவும் குறிப்பிட்ட நாட்களை நிர்ணயிப்பது உண்டு.

எனவே, இப்போது நான் புதிதாகவோ, விசேஷமாகவோ எதுவும் கூறிவிடவில்லை. நம்பிக்கையின்மையையே நாகரிகமாகக் கருதும் இந்நாட்களில், செய்த பாவத்திற்கு வருந்தும்படி ஆடவர்களையும் பெண்களையும் கேட்டுக்கொள்ளுவதற்கு ஓரளவு தைரியம் தேவையாகும். ஆனால், எனக்குத் தைரியம் இருப்பதாக நான் கூறிக்கொள்ள முடியாது. எனது பலவீனங்களோ அல்லது விசித்திரப் போக்குகளோ எல்லோரும் அறிந்தவையே. பீகாரையும் பீகார் மக்களையும் நான் நன்கு அறிவேன். அது போல் குவெட்டாவையும் நான் நன்கு அறிந்திருந்தால் குவெட்டா மக்களின் பாவங்களை நான் நிச்சயமாகக் குறிப்பிட்டிருப்பேன். எனினும், நாம் எல்லோரும், ஆளுவோர், ஆளப்படுவோர் எல்லோரும் சொந்தமுறையிலும் தேசீய ரீதியாகவும் பல பாவங்களுக்கு பதில் சொல்ல வேண்டியவர்களாக இருக்கிறோம் என்பதை அறிவோம். இவர்கள் யாவரும் மனம் வருந்தி, பிரார்த்தனைசெய்து, பணிவை மேற்கொள்ள வேண்டும். உண்மையான பிரார்த்தனை, செயலற்றிருப்பதற்கு முதற்படி அல்ல. தன்னலமற்ற இடைவிடாத நடவடிக்கைக்கு பிரார்த்தனை ஒரு தூண்டுகோலேயாகும். சுயநலம் வாய்ந்த சோம்பேறிகள் ஒரு போதும் தூய்மையான நிலையை அடைவதில்லை; தன்னலமற்ற உழைப்பாளிகள் மாத்திரமே அந்த நிலையை எய்த முடியும்.

—'ஹரிஜன்'–15—6—1935

# 33

# பட்டதாரியின் கேள்விகள்

மாண்டலேயிலுள்ள எம். பி. பி. எஸ். பட்டதாரி ஒருவர் எழுதியுள்ள கடிதத்தில் என்னைப் பல கேள்விகள் கேட்டுள்ளார். அவற்றில், அவரது முதல் கேள்வி பின் வருமாறு:

"எங்கே பகுத்தறிவு முடிவடைகிறதோ அங்கே நம்பிக்கை ஆரம்பமாகிறது என்று நீங்கள் 'எங் இந்தியா'வில் ஒரு தடவை குறிப்பிட்டிருக்கிறீர்கள். அப்படியாயின், ஒரு நபர் காரணங்கள் கூற முடியாத ஒரு விஷயத்தில் வைத்துள்ள பற்றுதலையே நீங்கள் நம்பிக்கை என்கிறீர்கள் என்று நான் கருதுகிறேன். இதிலிருந்து, காரணமில்லாமல் நம்புவதே நம்பிக்கை என்பது தெளிவாகவில்லையா? காரணமில்லாத, நியாயமில்லாத ஒரு விஷயத்தை யாராவது நம்பினால், அதை உண்மை என்றோ அல்லது நியாயம் என்றோ கூறலாமென நீங்கள் எண்ணுகிறீர்களா? அவ்விதம் நம்புவது மடத்தனம் என்றே நான் நினைக்கிறேன். உங்களுடைய பாரிஸ்டர் அறிவு அதை எப்படிக் குறிப்பிடும் என்பது எனக்குத் தெரியாது. என்னைப்போல் நீங்களும் சிந்தித்தால், நம்பிக்கை

மடத்தனத்தைத் தவிர வேறு எதுவும் இல்லை என்று நீங்களும் கூறுவீர்கள் என்றே நம்புகிறேன்.''

மதிப்பிற்குரிய டாக்டர், நான் இவ்விதம் கூறுவதை மன்னிப்பாராயின், எனது கருத்தை அறிந்து கொள்ள அவர் தவறி விட்டார் என்பதே அவரது கேள்வியிலிருந்து தெளிவாகத் தெரிகிறது. பகுத்தறிவுக்கு அப்பாற்பட்டது எதுவோ அது நிச்சயமாக நியாயமற்றதாகாது. நியாயமற்ற நம்பிக்கை, கண்மூடித்தனமான மூட நம்பிக்கையாகும். எதற்கு ஆதாரம் காட்ட முடியுமோ, அதை ஆதாரமின்றி நம்பவேண்டுமென்று யாரை யாவது கேட்பதுதான் நியாயமற்றது. உதாரணமாக, ஒரு முக்கோணத்தின் கோணங்கள் இரண்டு நேர் கோணங்களுக்குச் சமமானவை என்பதை ஆதாரமின்றி ஒருவரை நம்பும்படி கேட்பது நியாயமற்றது. ஆனால், அனுபவம் வாய்ந்த ஒருவர், கடவுள் இருக்கிறார் என்பதை நம்பும்படி மற்றொருவரைக் கேட்பது நியாயமற்றதாகாது. அதை அவரால் ருசுப்பிக்க முடியாது. எனினும், அதை நம்பும்படி கேட்பது அவர் தமது குறைபாடுகளைப் பணிவுடன் ஒப்புக் கொள்ளுவதாகும்; தமது அனுபவத்தை அடிப்படையாகக் கொண்ட விஷயத்தில் நம்பிக்கை வைத்து அதை ஒப்புக்கொள்ளும்படி கேட்பதாகும். வாழ்க்கையில் சாதாரண விஷயங்களைப்பற்றி, நமக்கு நம்பகமானவர்கள் கூறுவதை, அவர்களால் நாம் பல தடவைகள் ஏமாற்றப்பட்டிருந்தாலும் கூட, ஒப்புக்கொள்ளுகிறோம். அப்படியிருக்க, வாழ்வதா அல்லது வீழ்வதா என்ற ஒரு விஷயத்தைப்பற்றி, உலகம் முழுவதும் உள்ள மகான்கள் கூறியிருப்பதை நாம் ஏன் ஒப்புக்கொள்ளக்கூடாது? கடவுள் இருக்கிறார் என்றும், உண்மையையும் சாத்விகத்தையும் அனுசரிப்பதன்மூலம் கடவுளைக் காணலாம் என்றுமே அந்த மகான்கள் கூறியிருக்கிறார்கள். உதாரணமாக,பல டாக்டர்களின் மருந்து எனது நோயைக்குணப்படுத்தத் தவறியிருக்கலாம். அப்போது இந்த டாக்டர் நம்பிக்கை வைத்துத் தமது மருந்தை உட்கொள்ளும்படி என்னைக் கேட்டால் அது நீதியற்றதாகுமா? அதுபோல், உலகம் முழுதும் எல்லோரும் ஒப்புக்கொண்டுள்ள ருசுவில் நம்பிக்கைவைக்கும்படி நான் அவரைக் கேட்பது நீதியற்றதாகாது. நம்பிக்கையின்றேல், இந்த உலகம் ஒரு வினாடியில் சூன்ய நிலையை அடைந்துவிடும் என்று நான் துணிந்து கூறுவேன்.

பிரார்த்தனையினாலும் தவத்தினாலும் தூய்மையாக்கப்பட்ட வாழ்க்கையை நடத்துவோர் என நாம் கருதும் மக்களின் பழுத்த அனுபவத்தை நாம் பங்கிட்டுக் கொள்ளுவதே நம்பிக்கையாகும். எனவே, பண்டைய நாட்களில் வாழ்ந்த தீர்க்கதரிசிகள், அவதார புருஷர்கள் முதலியோரிடம் நமக்குள்ள நம்பிக்கை மூடத்தனமானதல்ல; ஆனால், உள்ளத்தின் ஆழத்திலுள்ள தார்மிக விருப்பத்தைத் திருப்தி செய்து கொள்ளுவதேயாகும். எனவே, வழிகாட்டியாக இருப்பதற்காக நான் பணிவுடன் கூறும் உறுதி என்னவெனில், ஆதாரம் காட்டக்கூடிய ஒரு விஷயத்தில்

ஆதாரமில்லாமலேயே நம்பிக்கை வைக்கவேண்டும் என்பதை நிராகரித்து விடவேண்டும். சொந்த அனுபவத்தின்மூலம் அறிந்து கொள்ளுவதைத் தவிர, ஆதாரம் எதுவும் காட்டமுடியாத ஒரு விஷயத்தில் நம்பிக்கை வைப்பதை ஆட்சேபணையின்றி ஒப்புக் கொள்ள வேண்டும்.

கடிதம் எழுதியிருப்பவரின் மற்றொரு கேள்வி பின் வருமாறு:

"1926 டிசம்பர் 9-ஆம் தேதி 'எங் இந்தியா'வில் ஒரு பத்திரிகைச் செய்தி வெளியாகியிருந்தது. ஹெரால்டு பிளேஸர் என்ற டாக்டர் தம்முடைய மகளுக்கு மயக்க மருந்தைக் கொடுத்து (Chloroform) கொன்றுவிட்டார்; தமது முடிவு காலம் நெருங்கிவிட்டதென்றும் தாம் இறந்துவிட்டால் மகளைப் பராமரிக்க யாரும் இல்லையென்றும் அவர் கருதியதே அதற்குக் காரணம். அவர்மீது நடந்த வழக்கில் அவரைப் பூரணமாக விடுதலை செய்து விட்டார்கள் என்று அச்செய்தியில் குறிப்பிடப்பட்டிருந்தது. 'தமது மகள் மற்றவர்களுக்குச் சுமையாக இருக்கும்படி விட்டுவிடக் கூடாது என்றே பிளேஸர் அவ்விதம் செய்தார். எனவே, அவர் செய்தது சரியே, அது ஒழுங்குமாகும்' என்று பிளேஸரின் வக்கீல் ஸ்ரீ ஹௌரி விசாரணையின் போது வாதித்தார். ஆனல், 'டாக்டர் பிளேஸர் தமது மகளின் உயிரைப் போக்கியது தவறு; தம்மைச் சுற்றியுள்ளவர்களின் ஜீவகாருண்யத்தில் அவருக்குள்ள நம்பிக்கையின்மையையே அது காட்டுகிறது; மற்றவர்கள் தமது மகளைப் பராமரிக்க மாட்டார்கள் என்று அவர் நினைப்பதற்குக் காரணமே இல்லை' என்று நீங்கள் உங்களுடைய அபிப்பிராயத்தைத் தெரிவித்திருக்கிறீர்கள். உங்களுடைய அபிப்பிராயத்தைக் கூறுகையில், நீங்கள் ஒரு வக்கீலைப் போல் வாதிக்கவில்லை என்றே நான் கூறுவேன். இது சாதாரணமான ஒரு விஷயமல்ல. சமூகம் அந்தச் சுமையைத் தாங்கும் என்பதில் உங்களுக்குப் போதிய நம்பிக்கை இருக்கிறது என்பதற்காக நீங்கள், யாதொரு பலனுமற்ற பளுவை சமூகத்தின் மீது சுமத்துவதற்குத் தயங்கவில்லை என்பது தெளிவாகத் தெரிகிறது. உபயோகமற்ற, மிகவும் அபாயகரமான அந்த நம்பிக்கையை நாங்கள் ஒத்துக் கொள்ளாததற்காக தயவு செய்து எங்களை மன்னித்துவிடுங்கள். உங்களுடைய அத்தகைய நம்பிக்கை, இந்தியாவின் சிறந்த நலன்களுக்கே அபாயகரமானவை என்பது என்னுடைய மனப்பூர்வமான நம்பிக்கையாகும். டாக்டர் பிளேஸரின் வக்கீல் என்ன கூறினர் என்பதைத் தயவு செய்து பாருங்கள். தமது மகள் சமூகத்திற்கு ஒரு பாரமாகிவிடாமல் தடுத்ததன் மூலம் டாக்டர் பிளேஸர் செய்தது சரியே, நியாயமே என்று கூறினர். அந்தப் பெண் உயிருடன் இருந்தால், சமூகம் அவளைப் பராமரிப்பதில் அக்கறை கொண்டிருக்குமா என்பது இப்போது கேள்வியல்ல. நான் உங்களை ஒரு கேள்வி கேட்கிறேன்: இந்தியாவுக்கு நீங்கள் பல ஆண்டுகள் வரையில் விசுவாசத்துடனும் நம்பிக்கையுடனும் தொண்டு செய்தபின், நீங்கள் குருடராகவோ, ஊமையாகவோ, செவிடராகவோ ஆகிவிடுகிறீர்கள்; வேறு விதமாகக் கூறுவதாயின், உங்களால் சமூகத்திற்கு எந்தவிதமான பலனும் இல்லை என்று வைத்துக் கொள்ளுவோம். அப்போது, நீங்கள் இந்தியாவுக்கு அவ்வளவு சிறந்த தொண்டு செய்தீர்கள் என்பதற்காகவோ, அல்லது உங்கள் உடலில் இன்னும் உயிர் இருக்கிறது என்பதற்காகவோ உங்களுக்கு சமூகம் உணவளித்து உங்களைப் பராமரிக்க வேண்டும் என்று நீங்கள் விரும்புவீர்களா? அகிம்சையைப் பற்றி நீங்கள் என்ன

விசித்திரமான நோக்கம் கொண்டிருக்கிறீர்கள் என்பது எனக்குத் தெரியாது. ஆனால், அந்தக் கேள்விக்கு நான் கூறும் பதில் தெளிவாகும். நான் பல வருடங்கள் தொண்டு செய்திருந்தாலும் கூட, பிறகு என்னால் சமூகத்திற்குச் சிறிதும் உபயோகம் இராவிடில், நான் சமூகத்திற்கு ஒரு பாரமாக இருப்பதைக்காட்டிலும் கொல்லப்படுவதையே விரும்புவேன். நான் கொல்லப்படுவதன் மூலம் சமூகத்திற்கு லாபம் என்றே நான் நியாயமாக நம்புவேன். ஏனெனில், நான் நேசிக்கும் சமூகத்திற்குப் பாரமாக இருப்பதை நான் தவிர்த்து விடுகிறேன் அல்லவா? உபயோகமுள்ள மனிதர்களையும் மிருகங்களையும் பராமரிக்க வேண்டியது சமூகத்தின் கடமை என்பது வேறு விஷயமாகும்.''

டாக்டர் பிளேஸரை ஜூரிகள் விடுதலை செய்தது நியாயமே என்று நான் நம்புகிறேன். எனினும், கண்டிப்பான தார்மிக முறைப்படி கவனிக்கும்போது டாக்டர் பிளேஸர் செய்தது தவறேயாகும். எவரும் சமூகத்திற்கு உபயோகமாக இருக்க வேண்டும் என்ற உற்சாகத்தில், கடிதம் எழுதியவர் அவரது சித்தாந்தத்தின் பயங்கரமான கருத்துக்களையும் விளைவுகளையும் கவனிக்கத் தவறிவிட்டார். அவரது சித்தாந்தம், அவரது சொந்தத் தொழிலையே பொய்யாக்குவதாக இருக்கிறது. இளைஞரான ஒரு டாக்டர், ஒருவரைத் தீர்க்க முடியாத நோய்வாய்ப்பட்டவர் என்றும், அவரால் சமூகத்திற்கு உபயோகம் இல்லை என்றும் கருதி அந்த நோயாளியை மயக்கமருந்து கொடுத்துக் கொன்று விடுவதாக வைத்துக் கொள்ளுவோம். பின்னர், அனுபவம் வாய்ந்த மற்றொரு டாக்டர், அந்த நோயாளியை குணப்படுத்தியிருக்க முடியுமென நினைக்கலாம். இத்தகைய ஒரு நிலைமையில் கடிதம் எழுதியவர் என்ன கூறுவார்? இறுதியாகத் தீர்க்க முடியாத நோய் என்று எதுவுமில்லை என்பது வைத்திய சாஸ்திரத்தின் பெருமிதமான நம்பிக்கை அல்லவா? நான் உபயோகமற்று ஒரு சுமையாகி விடும்போது, அப்போது நான் உயிர்வாழ விரும்பினால், என் தேசமக்கள் என்னை ஆதரிப்பார்கள் என்றே நான் எதிர்பார்க்கிறேன். இன்னும் என்னவெனில், அத்தகைய ஒரு நிலைமை ஏற்படும்போது என் தேச மக்கள் என்னைப் பராமரிப்பார்கள் என்பதில் எனக்குப் பூரண நம்பிக்கை உண்டு. கடிதம் எழுதியவர் ஒரு நாள் திடீரென்று எல்லாக் குருடர்களுக்கும், செவிடர்களுக்கும், குஷ்டரோகிகளுக்கும் மயக்கமருந்து கொடுத்து அவர்களை நிரந்தரமான இன்பத் துயிலில் ஆழ்ந்துவிடும்படி செய்வாரா என்று தான் நான் வியப்படைகிறேன். டாமியன்* ஒரு குஷ்டரோகிதான்.

---

* டாமியன் (1840–1889) பெல்ஜிய நாட்டில் பிறந்தவர். அவர் உயர்ந்த குணங்கள் வாய்ந்த ஒரு பாதிரியார். அவர் 1864-ம் ஆண்டில் பசிபிக் மகாசமுத்திரத்தில் உள்ள ஹவாய் தீவுகளுக்குச் சென்றிருந்தார். மொலோகாய் என்பதும் அத்தீவுகளில் ஒன்றாகும். 5258 மக்களே வாழும் அந்தத் தீவின் பரப்பு 260 சதுர மைல்கள்தான். அத்தீவில் அரசாங்கத்தின் பராமரிப்பில் குஷ்டரோகிகள் விடுதி ஒன்று உண்டு. அதில் நூற்றுக்கணக்கான குஷ்டரோகிகள் படும் துன்பங்களை நேரில் கண்ட டாமியன் பாதிரியார் மனம் உருகி அவர்களுக்குத் தொண்டு செய்ய வேண்டும் என்று ஆர்வம் கொண்டு அங்கேயே ஸ்தாபித்துவிட்டார். 1889-ஆம் ஆண்டு வரையில் அதாவது இருபத்தைந்து ஆண்டுகள் இடைவிடாது அந்த துரதிருஷ்டசாலிகளுக்குத் தொண்டு செய்த டாமியன் பாதிரியாரையும் அந்த நோய் பற்றிக்கொண்டது. இறுதியில் அதற்கு அவர் பலியாகவும்.

மில்டன்* குருடராக வாழ்ந்த ஒரு கவி. இந்த உடலைக் கொண்டு மாத்திரம் மனிதன் பூரண நிலையை அடைந்துவிடுவதில்லை. எல்லையற்ற உயர்வுள்ள ஏதோ ஒன்றே மனிதனை மனிதனுக்குகிறது.'

நிருபரின் மூன்றாவது கேள்வி பின் வருமாறு:

"'எல்லோருக்கும் மகத்தான நன்மை' என்ற உங்களுடைய கட்டுரையில், ஓர் அகிம்சைத் தொண்டன் பலனை அடிப்படையாகக் கொண்ட கொள்கையை ஆதரிக்க முடியாது என்று கூறியிருக்கிறீர்கள். 'எல்லோருக்கும் மகத்தான நன்மை ஏற்படுவதற்காக அவன் பெருமுயற்சி செய்வான்; அந்த லட்சியத்தை அடையும் முயற்சியில் உயிரையும் கொடுப்பான்; மற்றவர்கள் வாழவேண்டும் என்பதற்காக, தான் இறக்கவும் அவன் விரும்புவான்' என்றும் நீங்கள் குறிப்பிட்டிருக்கிறீர்கள். அதாவது உங்களைப் பாதுகாத்துக்கொள்ளும் முயற்சியில் ஒரு விஷப் பாம்பைக் கொல்லுவதைவிட, அதனுல் கடியுண்டு மரணம் அடைவதையே நீங்கள் விரும்புகிறீர்கள் என்று நான் முடிவு செய்து கொள்ளலாமா? எனது முடிவு சரி என்ருல், விஷப் பாம்பைக் கொல்லுவதை விட்டுவிட்டு அது உங்களைக் கடிப்பதற்கு நீங்கள் அனுமதிப்பதன் மூலம் நீங்கள் பெரும் பாவம் செய்தவராவீர்கள். அம்முறையைக் கையாளுவதன் மூலம் இந்தியாவிற்குப் பெரும் தீங்கு செய்தவராவீர்கள். ஏனெனில், அபாயகரமான ஓர் உயிர் ஜந்துவை நீங்கள் காப்பாற்ற முயற்சிக்கிறீர்கள். எல்லோருக்கும் மகத்தான நன்மை என்று நீங்கள் கூறும் ஒரு கொள்கையை நிறைவேற்றுவதற்காக விருப்பத்துடன் உயிர் விடவும் தயாராக இருக்கிறீர்கள். அது தவறு என்பது உங்களுக்கு இப்போது தெளிவாகத் தெரியவில்லையா? எல்லோருக்கும் பலனைத் தரக் கூடியது என்பது பற்றிய உங்களுடைய அபிப்பிராயத்தை இப்பொழுதாவது நீங்கள் மாற்றிக் கொள்ளமாட்டீர்களா? உலகம் முழுவதற்கும் நன்மையைச் செய்ய வேண்டும் என்ற உங்களது முயற்சியால் இந்தியாவுக்குத் தீங்கு நேரும் என்றே நான் அஞ்சுகிறேன். நீங்கள் குறைபாடுகள் உள்ள மனிதரே என்பதை ஒப்புக்கொள்ளுகிறீர்களா? எனவே, நீங்கள் உலகம் முழுவதற்கும் நன்மை செய்வதென்பது முடியாத காரியம். எனவே, எல்லோருக்கும், நல்லவர், கெட்டவர், உபயோகமுள்ளவர், உபயோகமற்றவர், மனிதர், மிருகம் முதலிய சகலருக்கும் நன்மை செய்வதாகப் பாசாங்கு செய்வதைக் காட்டிலும், ஏராளமானவர்களுக்கு அதிக நன்மைகளைச் செய்வதுடன் திருப்தி அடைவதே முற்றிலும் நியாயமாகும்."

இந்தக் கேள்விக்குப் பதில் அளிக்காமல் தவிர்ப்பதையே நான் விரும்புகிறேன். அதற்குக் காரணம் நம்பிக்கையின்மை அல்ல, தைரியமின்மையே ஆகும். சோதனைக் காலம் வரும் போது நம்பிக்கைக்கு இணங்க நடப்பதற்கு எனக்குத் தைரியம் இராவிட்டாலும் கூட, நான் எனக்குள்ள நம்பிக்

நேர்ந்தது. அத்தகைய தியாகியான டாமியன் பாதிரியாரைப் பற்றியே காந்திஜி மேலே குறிப்பிட்டுள்ளார்.

*காந்திஜி குறிப்பிட்டுள்ள ஜான் மில்டன் (1608–1674) உலகப் புகழ் பெற்ற ஆங்கிலக் கவியாவார். ஆங்கில மொழியில் அவரது கவிதைகளுக்குத் தனிச் சிறப்பு உண்டு. 1652–இல் அவர் கண்பார்வையை அறவே இழந்து குருடரானுர். 1674–இல் காலமான மில்டனின் சமாதி இன்றும் லண்டனில் இருக்கிறது.

கையை மறைத்துவைக்கக் கூடாது. எனவே, மேற்கண்ட கேள்விக்கு எனது பதில் இதுதான்: ஒரு பாம்பாக இருந்தாலும்கூட அதைக் கொன்றுவிட்டு வாழ நான் விரும்பவில்லை. அதைக் கொல்லுவதைக்காட்டிலும், அதனல் கடிக்கப்பட்டு இறப்பதையே நான் விரும்புவேன். எனினும், கடவுள் என்னை அந்தக் கொடிய சோதனைக்கு உட்படுத்தி, ஒரு பாம்பு என்னைக் கடிப்பதை அனுமதிப்பாராயின், இறக்கும் தைரியம் எனக்கு ஏற்படாமல் போகலாம்; அதற்கு மாருக, என்னுள் இருக்கும் மிருகம் மேலோங்கி, அழியும் இந்த உடலைப் பாதுகாப்பதற்காக நான் அந்தப் பாம்பைக் கொல்லவும் முயற்சிக்கலாம். நான் விரும்புவது போல், பாம்புடன் நட்புக்கொள்ளும் அளவுக்கு நான் அச்சத்தையெல்லாம் உதறித்தள்ளிவிட்டேன் என்று உறுதியுடன் நான் கூறுவதற்கில்லை. அவ்வாறு கூறுவதற்கு உகந்தவாறு என் உள்ளத்தில் நம்பிக்கை ஊறி உறுதிபெற்று விடவில்லை என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன்.

நம் உள்ளத்தில் இருக்கும் விஷத்தனமான, கொடிய, தீய எண்ணங்களுக்குப் பதிலாகவே விஷப் பாம்புகள், புலிகள் முதலிய கொடிய பிராணிகளை கடவுள் படைத்திருக்கிருர் என்பதே எனது ஆழ்ந்த நம்பிக்கையாகும். பாரிஸ் தெருக்களில் நடமாடும் மனிதர்களிடத்தில் புலிகள் உருவாகிவருவதை அன்ன கிங்ஸ்போர்டு கண்டார். எல்லா உயிர்களும் ஒன்று என்பதே எனது நம்பிக்கையாகும். எண்ணங்களே திட்டமான உருவங்களைப் பெறுகின்றன. புலிகள், பாம்புகள் முதலியவற்றிற்கும் நமக்கும் உறவு உண்டு. தீய, கொடிய, காமாதுரமான எண்ணங்களைத் தவிர்க்க வேண்டும் என்பதற்கு அவை நமக்கு எச்சரிக்கையாக இருக்கின்றன. விஷமுள்ள மிருகங்களையும், பாம்பு முதலியவைகளையும் இப் பூமியிலிருந்து நான் ஒழிக்க விரும்பினல், விஷத்தன்மையுள்ள எண்ணங்களையெல்லாம் என் உள்ளத்திலிருந்து நான் ஒழிக்க வேண்டும். ஆனல், பொறுமையின்றியும் அறியாமையினலும் இந்த உடலின் வாழ்வை நீடிக்க வேண்டும் என்ற ஆர்வத்தால், விஷத்தன்மையுள்ள மிருகங்கள் என்றும், பாம்புகள் என்றும் கூறப்படுவனவற்றை நான் கொல்ல முயற்சிப்பேனுயின், விஷத்தனமான எண்ணங்களை என் உள்ளத்திலிருந்து என்னல் ஒழிக்க முடியாது. அத்தகைய அபாயகரமான மிருகங்களை எதிர்த்து என்னைப் பாதுகாத்துக் கொள்ள முயற்சிக்காமல் நான் இருப்பேனுயின், நான் மீண்டும் சிறந்த, நிறைவுள்ள மனிதனகப் பிறப்பேன். என் உள்ளத்தில் அத்தகைய நம்பிக்கை இருந்துவருகையில், பாம்பைக் கொல்ல நான் எப்படி முயற்சிக்கமுடியும்? எனினும், இது வேதாந்தமாகும். அந்த வேதாந்தத்திற்கு முரணின்றி வாழும் சக்தியை கடவுள் எனக்கு அருளுமாறு நான் பிரார்த்திக்கிறேன். இந்தப் பிரார்த்தனையில் எனது வாசகர்களும் கலந்து கொள்ளுவார்களாக. வாழ்க்கை, வேதாந்தத்துடன் இசைந்ததாக இராவிடில், அது உயிரற்ற உடலுக்கு ஒப்பாகும்.

நம்முடைய இந்த நாட்டில் போதிய வேதாந்தம் இருக்கிறது, ஆனால், அதை அனுசரிக்கும் வாழ்க்கை இல்லை என்பதை நான் அறிவேன். மனிதனின் போக்கை இயக்கும் விதிகள் இன்னும் ஆராய்ச்சி செய்யப்படவிருக்கின்றன. அவ்விதம் ஆராய்ச்சி செய்ய வேண்டியது அவசரமும், அவசியமும், மாற்ற முடியாதது மாகும். கொல்லுவதன் மூலம் அல்ல, இறப்பதன் மூலம் மாத்திரமே நாம் அவற்றை ஆராய்ச்சி செய்ய முடியும். சத்தியம், அன்பு இவ்விரண்டும் மனித உருவம் எடுத்தவைகளாக நாம் ஆகி விட வேண்டும். ஏனெனில், சத்தியமும் அன்பும் கடவுளே.

'எங் இந்தியா' – 14—4—1927

## 34

# பகுத்தறிவும் தெய்விக சக்தியும்

'சத்தியத்தை நாடுவோன்' என்று கையொப்பமிட்டு 'எங் இந்தியா' வாசகர்களில் ஒருவர் எழுதிய கடிதமும், அதற்கு காந்திஜி அளித்த பதிலும் கீழே கொடுக்கப்பட்டுள்ளன:

''ஔரங்கசீப்பைப் போன்ற 'நம்பிக்கையுடையவர்' தமது 'நம்பிக்கைக்கு' அதாவது இஸ்லாம் மதத்திற்கு விரோதமாக காசி கோயிலை அசுத்தப் படுத்தியதாகவும், இடித்ததாகவும் நீங்கள் 4-11-1926 'எங் இந்தியா'வில் குறிப்பிட்டிருக்கிறீர்கள். இது, இஸ்லாமைப்பற்றி முகமது நபியைக் காட்டிலும் கூட நீங்கள் அதிகமாகத் தெரிந்து கொண்டிருப்பதுபோல் தோன்றவில்லையா? ஔரங்கசீப்பின் பரமகுருவான முகமது நபி கூட அவரது விரோதிகளை எதிர்த்து வெற்றியுடன் மெக்காவிற்குள் பிரவேசித்தபோது விக்கிரக ஆராதனை நடைபெறும் புனித இடங்களையெல்லாம் அழித்து நாசம் செய்தார் என்பதை நீங்கள் அறிந்திருக்கவேண்டும். காபா கல்லைப்* போன்ற சில இடங்களை மாத்திரமே முகமது நபி தகர்க்கவில்லை, ஏனெனில், அவருக்கு அதில் நம்பிக்கை இருந்ததே அதற்குக் காரணம். மாபெரும் மத போதகர்கள் தங்களிடத்தில் கடவுளின் திருஉருவத்தை வெளிப்படுத்தினர்கள். எனவே, இப்போது நீங்கள், முகமது நபி தமது மதத்திற்கு முரணாக நடந்துகொண்டார் என்று கூறவேண்டும். இல்லாவிடில், உங்களுக்குப் புரியாததை அல்லது உங்களுடைய பகுத்தறிவுக்கு இசைந்ததாக இராததை நீங்கள் ஏதாவது காரணம் கூறி மழுப்புவதுபோல் இதையும் மழுப்ப வேண்டும். அல்லது, உலகம் முழுவதும் ஒப்புக்கொண்ட முகமது நபியின் வாழ்க்கைச் சரிதத்தை பொய் என்று நீங்கள் மறுக்க வேண்டும். இவற்றைத் தவிர நான்காவது வழி ஏதாவது இருந்தால் அதைத் தயவு செய்து குறிப்பிடுங்கள். ஆனால், முஸ்லிம்களின் ஒரு பிரி

---

*காபா என்பது மெக்காவில் உள்ள மாபெரும் மசூதிக்கு உள்ளே இருக்கும் புனித அறையாகும். ஆண்டுதோறும் மூன்று தடவைகளில் மாத்திரமே அந்த அறை இஸ்லாம் பக்தர்களுக்குத் திறந்து காட்டப்படுகிறது. அதன் தென் கிழக்கு மூலையில் புகழ்பெற்ற ஒரு கருப்புக் கல் இருக்கிறது. ஆதாமுடன் அது சொர்க்கத்திலிருந்து கீழே விழுந்ததாக இஸ்லாம் பக்தர்கள் கூறுகின்றனர்.

வினரும் சரித்திராசிரியர்களும் ஔரங்கசீப்பை ஒரு மகான் என்று வருணித்திருக்கின்றனர் என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுங்கள். ஔரங்கசீப் கோவில்களை நாசம் செய்ததைக் கண்டித்து அவர்கள் ஒரு வார்த்தை கூடக் கூறவில்லை; அதற்கு மாருக, அவர்களில் பலர் ஔரங்கசீப்பின் கொடுமைகளை வானளாவப் புகழ்ந்திருக்கிருர்கள். இந்த உண்மை விந்தையானதல்லவா?

"மெக்கா, மெடினு, டெயிப் முதலிய நகரங்களில் வஹாபியர் செய்த அசுத்தப்படுத்துதல், இடித்துத் தகர்த்தல், படுகொலைகள் முதலியவற்றை இஸ்லாம் மதத்திற்கு உகந்தவையென்றும், நியாயமானவை என்றும் முஸ்லிம்களில் ஒரு பிரிவினர் கூறுகின்றனர். மற்ளுெரு பிரிவினர், அவை இஸ்லாம் மதத்திற்கு நேர் முரணுனவை என்று கண்டிக்கின்றனர். ஆனுல், ஹிந்துக்களின் ஈடு இணையற்ற புனித ஸ்தலத்தில் ஔரங்கசீப் செய்த அட்டுழியங்களை முஸ்லிம்களில் ஒருவராவது இதுவரை முழு மனத்துடன் கண்டித்ததில்லை. இது சனுதனிகளின் கூற்றைப் போலவே இருக்கிறது. அதாவது இந்தியாவில் தீண்டாமையை ஒழிக்க முயற்சிக்கும் உங்களை அவர்கள் கொல்ல விரும்புவார்கள்; அதே சமயத்தில், இந்தியர்களைத் தீண்டாதவராக நடத்தும் தென்னுப்பிரிக்கா வெள்ளையர்களையும் சனுதனிகள், சாத்தியமாயின், உயிருடனேயே கொன்றுவிடவும் விரும்புவார்கள்!

"தெய்விக சக்தி இருப்பதாகப் பாசாங்கு செய்வோரின் பகுத்தறிவுக்குப் புறம்பான நம்பிக்கைகளின் இயல்பு, தகராறும் முரண்பாடும்தான் என்றே நான் எண்ண வேண்டியிருக்கிறது. அத்தகைய மதங்களை, தாராள நோக்கமும் விவேகமும் உள்ளவையாகச் செய்ய நீங்கள் எவ்வளவு முயற்சித்தாலும் அது வெற்றிபெருது. அவற்றைச் சீர்திருத்துவதற்கான ஒரே வழி, அவற்றை ஒழித்துவிடுவதுதான். இதை நான் எவ்வளவுக்கு அதிகமாகச் சிந்திக்கிறேனே, அவ்வளவுக்கு எனது அபிப்பிராயம் அதிக உறுதி பெற்றுவருகிறது."

இந்த அழகான கடிதத்தை வாசிக்க வாசகர்கள் மகிழ்ச்சியடைவர். கடிதம் எழுதியவர் என்னைத் தாக்கியிருப்பது அற்புதமாகவும் இன்பமாகவும் இருக்கிறது. எனினும், என் வாதத்திற்கு சப்பைக்கட்டாக நான் கையாளுவதாய் அவர் நினைக்கும் மூன்று வழிகளில் எதையும் நான் இப்போது கையாளப் போவதில்லை. எனக்குத் தெரிந்தவரையில், மெக்காவில் முகமது நபி விக்கிரகங்களை நாசம் செய்ததற்கும் ஔரங்கசீபின் நாச வேலைக்கும் எவ்வித சம்பந்தமும் இல்லை. சிற்சில சமயங்களில் முகமது நபி தவறு செய்திருப்பதாகத் தெரியவருமாயின், அவரும் தவறு செய்யும் இயல்பு உடையவர் என்பதையே அது காட்டும். எனினும், பெரும்பாலான சந்தர்ப்பங்களிலும் அவர் கடவுளின் பிரதிபிம்பமாகத் திகழ்ந்த ஒரு தெய்விக தீர்க்கதரிசி என்பதை வெளிப்படுத்தியிருக்கிருர். எனவே, அவரது தவறுகள் அவருடைய மகத்துவத்தை எவ்விதத்திலும் குறைத்துவிடா.

தாம் தவறே செய்யாதவர் என்று அவர் ஒருபோதும் சொல்லிக் கொண்டதும் இல்லை. அதற்கு மாருக, அவர் அடிக்கடி தமது சகாக்களைக் கலந்து ஆலோசித்தார். 'தங்களுக்குக் கடவுளுடன் நேரடியான தொடர்பு

இருப்பதால், நீங்கள் யாரையும் கலந்தாலோசிக்க வேண்டிய அவசியம் இல்லை' என்று ஒரு சமயம் முகமது நபியிடம் உமர் கூறியபோது, 'இம் முறை எனக்குக் கடவுளிடமிருந்து செய்தி வந்திருந்தால், நான் உங்களைக் கலந்து ஆலோசிக்கமாட்டேன்' என்று முகமது நபி பதில் கூறியதாகக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. எனது நம்பிக்கைக்குத் தகுந்த, உருவான ஆதாரம் இருந்தாலன்றி, நான் அதை ஸ்தாபிக்க முற்படமாட்டேன் என்று கடிதம் எழுதியவருக்கும், சம்பந்தப்பட்ட எல்லோருக்கும் நான் உறுதி கூறுகிறேன். போதிய காரணம் இருந்தாலன்றி, எதையும் போலி யென்றோ, சந்தேகமானதென்றோ நான் மறுப்பதில்லை. சத்தியத்தை நாடுவோன் என்ற முறையில், என்னுடைய தவறுகளையும், குறைபாடுகளையும் ஒப்புக்கொள்ளும் தைரியம் எனக்கு உண்டு என்றே நம்புகிறேன். எல்லா மத நூல்களிலும் உள்ள சில விஷயங்கள் எனக்குக் குழப்பத்தை உண்டுபண்ணுகின்றன. எப்போதாவது ஒருநாள் அவற்றை நான் தெளிவாகத் தெரிந்து கொள்ளலாம் என்றே நம்புகிறேன். அது வரையில் நான் பணிவையும், காத்திருப்பதற்குப் பொறுமையையும் பண்படுத்திக் கொள்ளவேண்டும். மனிதன் எல்லாவற்றையும் தெரிந்து கொண்டிருக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை.

மேற்கண்ட கடிதத்தில் உள்ள மிகவும் மோசமான பாகம், இயற்கைக்கு அப்பாற்பட்ட சக்திகளைக் கடிதம் எழுதியவர் மறுத்திருப்பதுதான். தெய்விக சக்திகளில் நம்பிக்கை வைத்திருப்பவர்களைப் போல், பகுத்தறிவு வாதிகள் கூறுவதிலும் புரியாத புதிர்களும் முரண்பாடுகளும் இருக்கத்தான் செய்கின்றன. மிகுந்த தூய்மையும் சிறப்பும் வாய்ந்தவர்களில் சிலர், தங்களுடைய நம்பிக்கையை அல்ல, அனுபவத்தை அடிப்படையாகக் கொண்டு புலன்களுக்கு அப்பாற்பட்ட பொருள் ஏதோ இருக்கிறது என்று கூறியுள்ளனர். அப்படியாயின், அவர்கள் கூறுவதெல்லாம் வெறும் மயக்கமும் ஏமாற்று வித்தையும்தானா? ஐம்புலன்களுக்கும் அப்பாற்பட்டது எதுவுமில்லை என்பது இறுமாப்பான ஒரு கூற்று அல்லவா?

பகுத்தறிவினால் ஊடுருவ முடியாத மர்மங்கள் இருக்கின்றன என்பதை உணராதவர் யார்? மனப்பூர்வமாக நம்பி கடவுளை வணங்குவோரின் நடத்தை, திடீரென்று அடிக்கடி மாறுவதைக் காண்கிறோம். இது, பகுத்தறிவினால் அறிந்து கொள்ள முடியாத அல்லது விளக்க முடியாத விஷயங்கள் உலகத்தில் இருக்கின்றன என்பதை ஆட்சேபணைக்கு இடமிராதவாறு காட்டுகிறது அல்லவா? பிறப்பு, இறப்பு இவற்றின் மர்மமே இயற்கைக்கு அப்பாற்பட்ட தெய்விக சக்தியின் நிரந்தரமான உதாரணமாக விளங்குகிறது. மனிதன் பகுத்தறிவின் மூலம் உயிர்களைச் சிருஷ்டிப்பதில் வெற்றிபெறும்போது, தெய்விக சக்தியை ஏளனம் செய்ய முற்படலாம்.

'எங் இந்தியா' – 9—12—1926

# 35

# சாஸ்திரம் நியாயவிரோதமாக இருந்தால்....

சாஸ்திரம் என்ற பெயரால் சமஸ்கிருதத்தில் எழுதப்பட்டுள்ள எதையும் கண்மூடித்தனமாக நம்புவதற்குப் பதிலாக, ஸ்ரீ எஸ். டி. நட்கர்னி கீழ்க்கண்ட சுலோகங்களை எடுத்து அனுப்பியிருக்கிறார். இந்த சுலோகங்கள் யோகவாசிஷ்டம் என்ற நூலில் நியாயப்ரகரணம் என்ற பகுதியிலிருந்து எடுக்கப்பட்டவை. இவை ஆதாரபூர்வமானவை என்பதுடன், பகுத்தறிவு தான் இறுதியான ஆதாரம் என்பதை ஆதரிப்பதாகவும் இருக்கின்றன:

**அபி பௌருஷமாதேயம் சாஸ்திரம் சேத்யுக்தி போதகம் ।**
**அன்யத்வார்ஷமபி த்யாஜ்யம் பாவ்யம் ந்யாய்யைக ஸேவினும் ॥**
**யுக்தி யுக்தமுபாதேயம் வசனம் பாலகாதபி ।**
**அன்யத்த்ருணமிவ த்யாஜ்யம் அப்யுக்தம் பத்மஜன்மனு ॥**

சுலோகங்களின் பொருள்: ஒரு சாஸ்திரம் மனிதனால் இயற்றப்பட்டதாக இருந்தாலும், அது பகுத்தறிவுக்கு உடன்பாடாக இருந்தால் அதை ஒப்புக்கொள்ளவேண்டும். பகுத்தறிவுக்கு முரணாக இருப்பது தெய்விகமானதாக இருந்தாலும்கூட அதை நிராகரித்து விடவேண்டும். இத்தகைய விஷயங்களில் நியாய புத்தியே, நமக்கு வழிகாட்டியாக இருக்கவேண்டும். ஒருகுழந்தையின் வாக்கிலிருந்து வந்ததாக இருந்தால்கூட, அது பகுத்தறிவுக்கு உகந்ததாக இருக்குமாயின், அதை ஒப்புக் கொள்ள வேண்டும். அதற்கு மாறாக இருப்பது, பிரம்ம தேவனின் வாக்கிலிருந்து வந்ததாக இருந்தால்கூட, துரும்பைப்போல் அதை ஒதுக்கித் தள்ளிவிட வேண்டும்.

மாதவ ஸ்மிருதி கூறுவதாவது :

**ஸமயச்சாபி ஸாதூனும் ப்ரமாணம் வேதவத் பவேத் ।**

இதன் பொருள்: நல்லவர்கள் அனுசரிக்கும் சம்பிரதாயம் வேதத்தில் விதிக்கப்பட்டிருப்பது போல் அவ்வளவு சிறந்ததாக இருக்கும்.

சாஸ்திரங்கள், பகுத்தறிவை ஒதுக்கிவிட்டு, அதன் ஸ்தானத்தில் இருப்பதற்காக ஒரு போதும் ஏற்பட்டவை யல்ல. பகுத்தறிவுக்குப் பக்கபலமாக இருப்பதற்காகவே ஏற்பட்டவை என்பதையும், அநீதியையும் பொய்யையும் பாதுகாப்பதற்காக ஏற்பட்டவை அல்ல என்பதையும் மேற்கண்ட சுலோகங்கள் காட்டுகின்றன.

—'எங் இந்தியா' – 8—3—1928

36

# கண்மூடித்தனமான பக்தி

இறைச்சி உணவு சாப்பிடும் குடும்பத்தில் பிறந்த ஒரு நிருபரை, அவரது பெற்றோர்கள் இறைச்சி சாப்பிடும்படி எவ்வளவோ வற்புறுத்தியும், அவர் இதுவரை அவர்களுடைய வற்புறுத்தலை வெற்றிகரமாக எதிர்த்து வந்திருக்கிறார். அவர் கூறுவதாவது: "ஆனால், என் முன் உள்ள ஒரு புத்தகத்தில் சுவாமி விவேகானந்தரின் அபிப்பிராயத்தை வாசித்ததிலிருந்து, எனது நம்பிக்கை மிகவும் நிலை குலைந்துவிட்டது. இந்தியர்களுக்கு, அவர்கள் தற்போதுள்ள நிலையில், இறைச்சி உணவு அவசியமானது என்று சுவாமி கூறுகிறார். எனவே, தாராளமாக இறைச்சி சாப்பிடும்படி அவர் தமது நண்பர்களுக்கு யோசனை கூறியுள்ளார். 'இறைச்சி சாப்பிடுவதால் ஏதாவது பாவம் ஏற்பட்டால், அதை என்மீது போட்டுவிடுங்கள்; நான் அதைத் தாங்கிக் கொள்ளுகிறேன்' என்று கூறும் அளவுக்குக் கூட சுவாமி விவேகானந்தர் சென்றுள்ளார். இப்போது நான் இறைச்சி சாப்பிடுவதா, வேண்டாமா என்ற தருமசங்கடமான நிலையில் இருக்கிறேன்."

பெரியோரிடம் இவ்விதம் மூடபக்தி வைப்பது மனத்தினுடைய பலவீனத்தின் அறிகுறியாகும். இறைச்சி சாப்பிடுவது சரியல்ல என்ற ஆழ்ந்த, உறுதியான கொள்கை நிருபருக்கு இருக்குமாயின், உலகம் முழுவதும் அதற்கு நேர்மாறான அபிப்பிராயம் இருந்தால் கூட, அவர் ஏன் மனம் தளர வேண்டும்? ஆய்ந்தோய்ந்து நிதானமாகக் கொள்கைகளை மேற்கொள்ள வேண்டும். ஆனால், ஒரு தடவை அவற்றை மேற்கொண்டுவிட்டால், பின்னர் எவ்வளவு கடுமையான இடையூறுகள் ஏற்பட்டாலும் அவற்றில் உறுதியாக நிற்க வேண்டும்.

மகான் சுவாமி விவேகானந்தரின் அபிப்பிராயம் சம்பந்தப்பட்டவரையில், அவர் அவ்விதம் எழுதியிருப்பதை நான் பார்த்ததில்லை. சுவாமி கூறியதை நிருபர் சரிவர எடுத்துக் காட்டவில்லையோ என்றும் அஞ்சுகிறேன். அவ்விஷயத்தில் எனது அபிப்பிராயம் எல்லோரும் நன்கு அறிந்ததே. சாதாரண மனிதருடைய வாழ்க்கையின் எந்தக் கட்டத்திலும், எந்த சீதோஷ்ண நிலையிலும் இறைச்சி உணவு அவசியமானது என்று நான் கருதவில்லை. நமது இனத்தினருக்கு இறைச்சி உணவு உகந்ததல்ல என்பதே எனது அபிப்பிராயமாகும். நாம் மிருகங்களைவிட மேம்பட்டவர்கள். எனவே, கீழ்த்தரமான மிருகங்களின் வழக்கத்தைப் பின்பற்றி நாம் இறைச்சி உண்பது தவறாகும். தவிர, காமம், கோபம் போன்ற மன எழுச்சிகளை அடக்க விரும்புவோருக்கு மிருக உணவு சிறிதும் தகுதியற்றது என்பதை அனுபவமானது நமக்குக் கற்பிக்கிறது. எனினும், மனிதனின் நடத்தையை உருவகப்படுத்துவதிலோ அல்லது

மிருகத் தன்மையைக் கட்டுப்படுத்துவதிலோ, உணவின் முக்கியத்துவத்திற்கு அதிக மதிப்புக் கொடுப்பது தவருகும். உணவு, அசட்டை செய்ய முடியாத ஒரு முக்கியமான அம்சமே. ஆனல், இந்தியாவில் பெரிதும் உணவை அடிப்படையாகக் கொண்டே எல்லா மதங்களும் மதிப்பிடப்படுகின்றன. அது தவருகும். அது போலவே, உணவு சம்பந்தமான கட்டுப்பாட்டையெல்லாம் புறக்கணிப்பதும், தங்கு தடை எதுவுமின்றி விருப்பப்படி எல்லாவற்றையும் உண்பதும் தவருகும். ஹிந்து மதத்தின் விலையில்லாப் பொக்கிஷங்களுள் சைவ உணவும் ஒன்ருகும். அந்தப் பொக்கிஷத்தை அலட்சியமாகக் கைவிட்டுவிடக் கூடாது. எனவே, சைவ உணவு நமது உடலையும் மனத்தையும் பலவீனப்படுத்திவிட்டது என்பதோ, நம்மைச் செயலற்றவர்களாகவும் சோம்பேறிகளாகவும் செய்துவிட்டது என்பதோ தவருகும். இந்தத் தவறைத் திருத்திக் கொள்ளவேண்டியது அவசியம். மாபெரும் ஹிந்து சீர்திருத்தக்காரர்கள் அவர்களுடைய காலத்தில் மிகமிகச் சுறுசுறுப்புள்ளவர்களாகவும், உழைப்பாளிகளாகவும் இருந்திருக்கிருர்கள். அவர்கள் யாவரும் சைவ உணவு சாப்பிடுகிறவர்களாகவே இருந்திருக்கிருர்கள். சங்கரரோ அல்லது தயானந்தரோ அவர்களுடைய காலத்தில் இருந்த சுறுசுறுப்பைக் காட்டிலும் அதிகச் சுறுசுறுப்பு உள்ளவர்களை யாராவது காட்ட முடியுமா?

எனினும், இந்த நிருபர் என்னை தமக்கு ஆதாரமாக ஒப்புக் கொள்ள வேண்டாம். ஒருவர் எந்த உணவைச் சாப்பிடுவதென்பது, நம்பிக்கையை அடிப்படையாகக் கொண்டு முடிவு செய்ய வேண்டிய ஒரு விஷயமாகும். குறிப்பாக மேநாடுகளில், சைவ உணவைப்பற்றிய இலக்கியங்கள் வளர்ந்திருக்கின்றன. சத்தியத்தை நாடுவோர் எவரும் அதை வாசித்துப் பயன் பெறலாம். வைத்தியத் துறையில் புகழ் பெற்ற பல பிரமுகர்கள் அந்த இலக்கியத்திற்கு தங்கள் கருத்துக்களை வழங்கியிருக்கிருர்கள். இங்கே இந்தியாவில், சைவ உணவிற்கு அதிகத் தூண்டுதல் தேவையில்லை. சைவ உணவு மிகவும் விரும்பத்தக்கதென்றும் கண்ணியமானதென்றும் இதுவரை இங்கே ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. நிருபரைப்போல் அவ்விஷயத்தில் நம்பிக்கை குலைந்தவர்கள், மேநாடுகளில் வளர்ந்துவரும் சைவ உணவு இயக்கத்தை ஆராய்ச்சி செய்யலாம்.

'எங் இந்தியா' – 7—10—1926



## 37

# குருட்டு நம்பிக்கையின் கதி

எனது பகுத்தறிவு என் உள்ளத்தைப் பின்பற்றிச் செல்லு கிறது. அவ்விதம் இல்லாவிடில், பகுத்தறிவு வழிதவறிச் செல் லும்படி நேர்ந்துவிடும். நம்பிக்கை என்பது உள்ளத்தின் வேலை யாகும். பகுத்தறிவின் மூலம் நம்பிக்கையை அதிக உறுதிப் படுத்திக்கொள்ள வேண்டும். சிலர் எண்ணுவதைப்போல், நம்பிக்கையும் பகுத்தறிவும் ஒன்றுக்கொன்று முரணானவையல்ல. ஒருவருடைய நம்பிக்கை எவ்வளவுக்கு தீவிரமாக இருக்கிறதோ அவ்வளவுக்கு அது பகுத்தறிவைச் சாணைபிடிப்பது போலா கிறது. எனது பகுத்தறிவை, செயலற்றிருக்கும்படி நான் ஒதுக்கி வைத்துவிட வில்லை. திறந்த, நல்லதை ஏற்றுக்கொள்ளும் மனத் துடன் எனக்கு எதிரான கண்டனங்களையெல்லாம் அக்கறையுடன் கவனமாகக் கேட்டுக் கொள்ளுகிறேன். பிறகு, அவற்றிலுள்ள சாரத்தைக் கிரகித்துக் கொண்டு, சக்கையைத் தள்ளிவிடுகிறேன். நான் எப்போதும் எனது தவறுகளைத் திருத்திக் கொள்ளத் தயா ராக இருக்கிறேன். ஒருவருடைய தவறைப் பூரணமாகவும் பட்ட வர்த்தனமாகவும் ஒப்புக்கொள்ளுவது, இனி அத்தகைய தவறு ஏற் படாமல் இருப்பதற்கான ஒரு பாதுகாப்பாகும். ஒருவர் தமது தவ றைப் பூரணமாக ஒப்புக்கொள்ளுவது, மகோன்னதமான பிராயச் சித்தமும் ஆகும். நான் கூறுவதை யெல்லாம் எல்லா சக ஊழியர் களும் தங்களுடைய பகுத்தறிவைக் கொண்டு சோதனை செய்து பார்க்க வேண்டும் என்பதே என் விருப்பம். நம்பிக்கை கண்மூடித் தனமாகும்போது, அது செத்துவிடுகிறது.

'ஹரிஜன்' – 6—4—1940

## 38

# போலி வேஷம் பொல்லாதது

**கேள்வி :** உங்களை 'காப்பி' அடிக்கும் நோக்கத்துடன் ஒருவர் இறைச்சி சாப்பிடுவதை நிறுத்தினால், அவர் செய்தது சரி என்று கூற முடியாது என நீங்கள் குறிப்பிட்டிருக்கிறீர்கள். நீங்கள் இத்தகைய அபிப்பிராயம் கொண்டிருப்பது தவறு அல்லவா?

**பதில் :** நான் அவ்விதம் கூறுவதில் தவறு எதுவும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. என்னைப் போல் நடக்கவேண்டும் என்பதற்காக ஒருவர் தமது பழைய வழக்கத்தை மாற்றிக் கொண்டால், மற்றொருவரைப் போல் நடக்க வேண்டும் என்ற விருப்பம் கொண்டு அவர் மறுபடியும் தமது பழைய வழக்கத்தை மேற்கொண்டுவிடலாம் அல்லவா? நான் கூறி

யதன் சாரம் என்னவெனில், ஆராய்ந்து பாராமலும், சிந்திக்காமலும், மன உறுதியின்றியும் எதுவும் செய்யக் கூடாது என்பதே. சிந்தனையின்றி பிறரைப் போல் வேஷம் போடுவது சின்ன புத்தி படைத்தவர்களின் திருவிளையாடல் ஆகும். அத்தகைய வேஷம் ஒருவரைப் படுகுழியில் தள்ளி, பேராபத்தான நிலைக்குக் கொண்டுவந்து விடும்.

'ஹரிஜன்' – 30—6—1946

## 39

# கீதையும் மனு சங்கிதையும்

ஒரு சமஸ்கிருத பண்டிதர் பல விஷயங்களைக் குறிப்பிட்டு காந்திஜிக்கு ஒரு கடிதம் எழுதியிருந்தார். கீதையையும், மனு சங்கிதையையும் பற்றி அவர் குறிப்பிட்டிருந்த விவரங்களும், அவற்றிற்கு காந்திஜி அளித்த பதிலும் மாத்திரமே கீழே கொடுக்கப்பட்டுள்ளன:

"கீதை ஒன்றுதான் ஆட்சேபிக்க முடியாத ஆதார நூல் என்றும், சமூக, மத, ஆன்மிக விஷயங்களை யொட்டி அந்த நூல் ஒன்றுதான் உண்மையான வழிகாட்டி என்றும் நீங்கள் கூறியிருப்பதாகத் தெரிகிறது. உங்களுடைய இந்த அபிப்பிராயம் ஏற்றுக்கொள்ளக்கூடியதல்ல. அதற்குக் காரணங்கள் வருமாறு:

"1. கீதை, வேதாந்தத்தையும் பிரம்ம வித்தையையும் விளக்கும் ஓர் அற்புத நூலாகும்; அது சமூக விதிகளைப் பற்றி எதுவும் குறிப்பிடவில்லை.

"2. கீதை, மகாபாரதம் என்ற ஒரு பெரிய நூலின் ஒரு சிறு பாகமேயாகும். அப்படியிருக்க, பெரியதை விலக்கிவிட்டு ஒரு குறிப்பிட்ட பகுதியை மாத்திரம், அது எவ்வளவு நல்லதாக இருப்பினும், ஏன் ஒப்புக்கொள்ள வேண்டும்?

"3. கீதை, மிகவும் நுண்ணிய தத்துவ சிந்தனைகளின், ஆன்ம ஞான வேட்கையின் சாரமே. எனவே, அதன் உண்மையான கருத்து உலகத்திலுள்ள சாதாரண மனிதருக்குப் புரிவதில்லை. பாக்கியசாலிகளான ஒரு சிலர் தான், கீதை போதிக்கும் மதத்தை அறிந்து கொண்டு நடைமுறையில் அனுசரிக்கவும் முடியும். எனவே, அது சமூக ஒழுங்கின் அடிப்படையாகவோ அல்லது சர்வ ஜன மதக் கொள்கையாகவோ இருக்க முடியாது.

"ஹிந்து மதத்தின் மூல காரணங்கள், மனு சங்கிதையின் முதல் அத்தியாயத்தில் விவரிக்கப்பட்டுள்ளன. அவை இடைச் செருகல்களாக இருக்குமோ என்ற வெறும் சந்தேகத்தினல் மாத்திரம் அவற்றை நிராகரிப்பது தகுந்த காரணமாகாது.

"எனவே மேலே கூறப்பட்ட தங்களுடைய கருத்தை நான் அங்கீகரிக்க முடியாது."

பண்டிதரின் மேற்கண்ட கடிதத்திற்குக் காந்திஜி அளித்த பதில் பின்வருமாறு : நான் கீதையைப் பற்றிக் கூறிய வார்த்தைகளை அப்படியே பண்டிதர் எடுத்துக் காட்டியிருப்பாராயின் மிகவும் நலமாக இருந்திருக்கும். அப்படியாயின், நான் உண்மையில் எழுதிய வார்த்தைகளுக்கும், நான் கூறியதாக அவர் குறிப்பிடும் வார்த்தைகளுக்கும் உள்ள வேற்றுமையை அவர் உடனடியாக அறிந்து கொண்டிருப்பார். சென்ற நவம்பர் மாதம் 4-ஆம் தேதி விடுத்த அறிக்கையில் நான் குறிப்பிட்டிருந்தது இதுதான் :

'வாசித்துப் பரிசீலனை செய்ய வேண்டும் என்ற அக்கறையுடன் ஒவ்வொரு ஹிந்துவும் வாசிக்கக் கூடிய தெளிவான புத்தகம் கீதைதான். மற்ற எல்லா தரும சாஸ்திர நூல்களும் எரிந்து சாம்பலாகிவிட்டால்கூட, ஹிந்து மதம் என்றால் என்ன, அதன்படி ஒருவர் எப்படி வாழமுடியும் என்பதைக் கூறுவதற்கு 700 சுலோகங்கள் அடங்கிய அழிக்க முடியாத இந்த நூல் ஒன்றே (கீதை) போதுமானது. என்னை ஒரு சனாதனி என்றே நான் கூறிக்கொள்ளுகிறேன். ஏனெனில், சென்ற நாற்பது ஆண்டுகளாக நான் முற்றிலும் கீதையின் உபதேசங்களுக்கு இணங்கவே வாழ்க்கையை நடத்த முயற்சித்து வருகிறேன். அதனுடைய முக்கியமான கொள்கைக்கு முரணாக இருக்கும் எதையும் ஹிந்து மதத்திற்கு உகந்ததல்ல என்று நான் தள்ளிவிடுகிறேன். அது எந்த சமயத்தையும், எந்த போதகரையும் நிராகரிக்கவில்லை.'

எனவே, நான் உண்மையில் கூறியதற்கும், நான் கூறியதாகக் குறிப்பிடப்படுவதற்கும் மிகுந்த வேற்றுமை இருக்கிறது என்பதைப் பண்டிதரும் வாசகர்களும் காணலாம். இந்நிலையில், நான் மேற்கொள்ளாத ஒரு நிலையை ஆதாரமற்றதென்று நிரூபிப்பதற்காகக் காட்டப்படும் காரணங்கள் பொருத்தமற்றவையாகின்றன.

அதுபோலவே, இடைச் செருகல் என்ற வெறும் சந்தேகத்தின் மீது மனு நீதி முழுவதையும் நான் ஒருபோதும் நிராகரித்ததில்லை. இடைச் செருகல்கள் என்று கூறுவதற்கு வெறும் சந்தேகம் மாத்திரம் காரணமல்ல. கீதையிலுள்ள மூலாதாரமான கொள்கைகளுக்கு, எனவே மனு நீதியின் மூலாதாரமான கொள்கைகளுக்கும் சந்தேகத்திற்கு இடமின்றி முரணாக இருப்பவைகளையெல்லாம் இடைச் செருகல்கள் என்றே நான் கருதுகிறேன்.

மதத்தைச் சோதிக்கும் உரைகல்லாக மனு கூறியுள்ள விஷயம் பின்வருமாறு :

வித்வத்பி: ஸேவித: ஸத்பி: நித்யமத்வேஷராகிபி:|
ஹ்ருதயேநாப்யனுக்ஞாத: யோ தர்மஸ்தம் நிபோதத||

—மனு

இதன் பொருள்: அறிஞர்கள், நல்லவர்கள், கோபத்திலிருந்தும் பற்றுதலிலிருந்தும் விடுதலை பெற்றவர்கள் முதலியோர் பின்பற்றுவது எதுவாயினும், உள்ளத்தில் தோன்றுவது

எதுவாயினும் அதுதான் மதம் என்று அறிந்து கொள்ள வேண்டும்.

அதே மனு நீதியில் உள்ள மற்றொரு சுலோகம் பின் வருமாறு :

த்ருதி: க்ஷமா தமோஸ்தேயம் சௌசம் இந்த்ரிய நிக்ரஹ:|
தீர்வித்யா ஸத்யமக்ரோத: தசகம் தர்மலக்ஷணம்||

இதன் பொருள்: உறுதி, மன்னிக்கும் இயல்பு, அடக்கம், திருடாமை, தூய்மை, புலன்களை அடக்குதல், புத்தி, கல்வி, உண்மை, கோபமின்மை இந்தப் பத்தும் தர்மத்தின் லட்சணம் அதாவது மதத்தின் உரைகல் ஆகும்.

எனவே, இந்த உரைகல்லுக்கு முரணான எதையும் இடைச் செருகல் என்று நிராகரித்து விட வேண்டும்.

—' ஹரிஜன் ' 25—2—1933

# 40

# தலைவர் பெரியவரா, லட்சியம் பெரிதா ?

ஓர் உபாத்தியாயர் பின் வருமாறு எழுதுகிறார்:

"எங்கள் பள்ளிக்கூடத்தில் உள்ள சிறுவர்கள் அடங்கிய ஒரு சிறு கோஷ்டியினர், சென்ற சில மாதங்களாகத் தங்கள் கையால் நூற்று, 1000 கெஜம் பூர்த்தியானதும் ஒழுங்காக அகில இந்திய நூற்போர் சங்கத்திற்கு அனுப்பி வருகிறார்கள். அவர்களுக்கு உங்கள் மீதுள்ள ஆழ்ந்த பக்தி காரணமாகவே அவர்கள் இந்தத் தொண்டைச் செய்து வருகிறார்கள். அவர்கள் அவ்விதம் ஒழுங்காக நூற்றுவருவதற்குக் காரணம் என்ன என்று யாராவது கேட்டால்,'அது மகாத்மாஜியின் கட்டளை. அதற்குக் கீழ்ப்படிந்துதான் தீரவேண்டும்' என்று அவர்கள் பதில் கூறுகிறார்கள். அத்தகைய மனப்பான்மையுள்ள சிறுவர்களை, எவ்விதத்திலும் உற்சாகப்படுத்த வேண்டும் என்பதே எனது அபிப்பிராயமாகும். தலைவர்களை வணங்குவதும், யாதொரு ஆட்சேபணையுமின்றி அவர்களுக்குக் கீழ்ப்படிவதும் அடிமைப் புத்தியிலிருந்து முற்றிலும் வேறாகும். இப்போது இந்தச் சிறுவர்கள், தங்களுக்கு உத்வேகம் அளிப்பதற்காக உங்களிடமிருந்து உங்கள் கையெழுத்தில் ஏதாவது ஒரு செய்தியை ஆர்வத்துடன் எதிர்பார்க்கிறார்கள்."

இந்தக் கடிதத்திலிருந்து வெளியாகும் மனப்பான்மை, தங்கள் மதிப்பிற்குரியவரிடம் உள்ள பக்தியா அல்லது கண்மூடித்தனமான பக்தியா என்பது எனக்குத் தெரியாது. சிற்சில சந்தர்ப்பங்களில், காரணங்களை ஆராய்வதற்காகக் காத்திராமல், மறுபேச்சின்றி கீழ்ப்படிவது அவசியமாக இருக்கக் கூடும். அது முக்கியமாக ஒரு சிப்பாய்க்கு இருக்க வேண்டிய தகுதியாகும்.

ஒரு தேசத்திலுள்ள மிகப் பெரும்பாலோரிடத்திலும் அத்தகைய யோக்கியதாம்சம் இராவிடில், அத்தேசம் உருவான முறையில் முன்னேற்றம் அடைய முடியாது. ஒழுங்காக அமைந்துள்ள எந்தச் சமூகத்திலும் அவ்விதம் கீழ்ப்படிய வேண்டிய சந்தர்ப் பங்கள் அபூர்வமாகவே ஏற்படும், ஏற்பட வேண்டும். ஒரு பள்ளிக் கூடத்திலுள்ள சிறுவர்களுக்கு ஏற்படக்கூடிய படுமோசமான ஒரு நிலை, உபாத்தியாயர் கூறும் எதற்கும் அவர்கள் கண்மூடித் தனமாகக் கீழ்ப்படியும்படி நேருவதுதான். அதற்கு மாறாக, உபாத்தியாயர்கள் தங்களுடைய மேற்பார்வையில் உள்ள சிறுவர், சிறுமிகளின் பகுத்தறியும் திறனை வளர்க்க முற்படுவார் களாயின், சிறுவர், சிறுமியர், இடைவிடாது தங்களுடைய பகுத் தறிவை உபயோகித்து தங்களுக்குத் தாங்களே சிந்திக்கும்படி அவர்கள் (உபாத்தியாயர்கள்) செய்தவர் ஆவார்கள். பகுத்தறிவு செயல்படாமல் நிற்கும் இடத்திலிருந்துதான் நம்பிக்கை ஆரம்ப மாகிறது. நியாயமான காரணங்களைக் கண்டுபிடிக்க முடியாத நடவடிக்கைகள் இவ்வுலகில் மிகச் சொற்பமாகத்தான் இருக்க முடியும். கிணற்றுத் தண்ணீர் குடிப்பதற்குத் தகுதியற்றது என்ற சந்தேகம் ஏற்பட்டுள்ள ஓரிடத்தில், தண்ணீரை வடிகட்டி காய்ச்சியே குடிக்க வேண்டும் என்று கட்டளையிடப்பட்டிருப்ப தாக வைத்துக் கொள்ளுவோம். அவ்விதம் குடிப்பதற்குக் காரணம் என்னவென்று உபாத்தியாயர் மாணவர்களைக் கேட் டால், அது ஒரு மகாத்மாவின் கட்டளை என்று மாணவர்கள் பதில் அளிப்பது சரியா? அத்தகைய பதிலை உபாத்தியாயர் சகித்துக் கொண்டிருக்கமாட்டார். அந்தப் பதிலை ஒப்புக் கொள்ளுவது தவறு எனில், நூற்பது பற்றி சிறுவர் சிறுமியர் அளித்துள்ள மேலே குறிப்பிட்ட பதிலை ஒப்புக் கொள்ளுவதும் தவறாகும்

எனக்குத் தெரிந்தவரையில், பல வீடுகளிலும் என்னை மகாத்மா பதவியிலிருந்து தள்ளிவிட்டார்கள். என்மீதிருந்த அன்பை இழந்துவிட்டதாகச் சிலர் பெருந்தன்மையுடன் பட்டவர்த்தனமாக எனக்கு அறிவித்தும் இருக்கிறார்கள். எனவே, மேற்கண்ட பள்ளிக்கூடத்திலும் என்னை மகாத்மா பதவியிலிருந்து அப்புறப்படுத்தி விடுவார்களாயின், பின்னர் அவர்கள் ராட்டினத்தையும் அழித்து விடுவார்கள் என்றே அஞ்சு கிறேன். நிச்சயமாக, மனிதரைக் காட்டிலும் லட்சியம் பெரி யது; என்னைவிட ராட்டினம் மகத்துவம் வாய்ந்தது என்பது நிச்சயம். நான் இழைக்கக் கூடிய சில மடத்தனமான தவறு களுக்காக என்மீதுள்ள பக்தி தகர்ந்துவிடுமாயின், அல்லது ஏதோ காரணத்திற்காக என்மீது ஜனங்களுக்கு ஆத்திரம் ஏற் படுமாயின், ராட்டினத்தின் சிறந்த லட்சியத்திற்கும் பாதகம் ஏற் படுவதைக் காண நான் மிகவும் துக்கமடைவேன். எனவே, சாத் தியமான வரையில் எல்லா விஷயங்களையொட்டியும் மாணவர்கள் தங்களுக்குத் தாங்களே பகுத்தறிவை உபயோகிப்பதே மிகச் சிறந்தது. முக்கியமாக, ராட்டினம் பகுத்தறிவை உபயோகித்து ஆராய வேண்டிய விஷயமாகும். அதனுடன் இந் திய மக்கள் எல்லோருடைய நலனும் இணைக்கப்பட்டிருக்கிறது.

எனவே, இந்திய மக்களின் ஆழ்ந்த வறுமையைக் குறித்து மாணவர்கள் ஓரளவு தெரிந்துகொள்ளவேண்டும். நிலைகுலைந்து தகர்ந்துவரும் சில கிராமங்களை அவர்கள் நேரில் பார்க்க வேண்டும். இந்தியாவின் ஜனத்தொகையை அவர்கள் அறிந்து கொள்ளவேண்டும். இந்த தீபகற்பத்தின் பரந்த விஸ்தீரணத்தை அவர்கள் தெரிந்து கொள்ளவேண்டும். பல கோடிக் கணக்கானவர்களும் தங்களுடைய அற்ப வருமானத்தை அதிகப் படுத்திக் கொள்ள என்ன வழி என்பதை அவர்கள் அறிய வேண்டும். இந்த நாட்டிலுள்ள ஏழைகளுடனும், தாழ்த்தப்பட்டவர்களுடனும் ஒன்றித்து வாழ அவர்கள் கற்றுக் கொள்ள வேண்டும். ஏழைகளுக்குக் கிடைக்க முடியாத சாதனங்களை சாத்தியமான வரையில் தாங்களும் உபயோகிக்க அவர்கள் மறுத்துவிட வேண்டும். அப்போதுதான் மாணவர்கள், நூற்பதன் சிறப்பையும் புண்ணியத்தையும் அறிந்து கொள்ளுவார்கள். அப்போதுதான் என்னிடத்தில் உள்ள 'மயக்கம் தெளிவது உள்பட எல்லாவித அதிர்ச்சியையும் தாங்கிக் கொள்ளுவார்கள். ராட்டினத்தில் அவர்களுக்குள்ள மதிப்பும் குறையாது.

இந்த உபாத்தியாயர் வருணித்திருப்பதைப் போல், நம்மிடையே குறிப்பிட்ட நபர்களிடத்தில் குருட்டுத்தனமான பக்தி கொள்ளும் வழக்கம் வெகுவாக இருந்துவருவதை நான் அறிவேன். தேசீயக் கல்விச் சாலைகளில் உள்ள உபாத்தியாயர்கள் எனது எச்சரிக்கையை கவனத்தில் வைத்து, பெரியவர்கள் என்று புகழ் பெற்றவர்களின் அறிக்கைகளை ஆதாரமாகக் கொண்டு சோம்பேறித்தனமான நடவடிக்கைகளில் ஈடுபடாமல் தங்களுடைய மாணவர்களைத் தடுப்பார்கள் என்று நம்புகிறேன்.

'எங் இந்தியா' – 24—6—1926

(2)

நூற்க வேண்டும் என்பது மகாத்மாஜியின் கட்டளையாதலால், எல்லோரும் அவசியம் நூற்க வேண்டும் என்று தமது மாணவர்களுக்குக் கற்பித்த ஆசிரியர் பின் வருமாறு எழுதுகிறார்:

"24—6—1926 'எங் இந்தியா'வில் நீங்கள் எழுதியுள்ள கட்டுரையை வாசித்ததிலிருந்து என் மனத்தில் பின் வரும் சந்தேகங்கள் எழுந்திருக்கின்றன:

"பகுத்தறிவுக்கு நீங்கள் முக்கிய இடம் அளித்திருக்கிறீர்கள். இங்கிலாந்து மன்னர் முற்றிலும் மந்திரிகளின் தயவில் இருப்பதுபோல் பகுத்தறிவு முற்றிலும் புலன்களின் தயவில் இருக்கின்றன என்று 'எங் இந்தியா'விலோ அல்லது 'நவஜீவனி'லோ நீங்கள் எழுதவில்லையா? பெரும்பாலும் மனிதன் புலன்கள் காட்டும் வழியில் அறிவைச் செலுத்துவதில்லையா? அப்படியிருக்க நீங்கள் பகுத்தறிவை எப்படி வழிகாட்டியாக எடுத்துக்கொள்ள முடியும்? கொள்கையைத் தொடர்ந்து வாதம் இருந்துவரும் என்று நீங்கள் கூறியிருக்கிறீர்கள் அல்லவா? எனவே, நூற்க ஒருவருக்கு மனம் இராவிடில், நூற்பதற்கு எதிராக அவர் காரணங்களைக் கண்டுபிடிப்பார். குழந்தைகள் தங்கள் பகுத்

தறிவை உபயோகிக்கும்படி செய்வது எவ்வளவு தூரம் விவேகமாகும்? கல்வித் துறையில் மாபெரும் சீர்திருத்தக்காரரான ரூஸோ, குழந்தைப் பருவத்தில் பகுத்தறிவு தூங்குகிறது என்று குறிப்பிட்டுள்ளார். எனவே, குழந்தைகளுக்கு அந்த வயதில் நல்ல பழக்கங்களை மாத்திரம் கற்பிக்க வேண்டும் என்று கூறியுள்ளார். ஒரு மகாத்மாவின் கட்டளைகளுக்குக் கீழ்ப்படிந்து நடக்கும்படி குழந்தைகளுக்குக் கற்பிப்பது,ஒரு நல்ல வழக்கம் படியும்படி செய்வதேயாகும். தவிர, அந்தக் காரியம் உடல் உழைப்பை முக்கியமாகக் கொண்டிருப்பது இன்னும் அதிக விசேஷமாகும். குழந்தைகள் பெரியவர்களாக வளரும்போது, நூற்பதற்கான காரணங்களைக் கண்டுகொள்ளுவார்கள். அதுவரையில், நீங்கள் குறிப்பிடுவது போல் ஒருவரிடம் கண்மூடித்தனமான பக்தி கொள்ளும்படி கற்பிப்பது தவறாகுமா? இப்போதெல்லாம் பகுத்தறிவுக்கு நாம் அர்த்தமற்ற முக்கியத்துவம் கொடுக்கத் தொடங்கிவிட்டோம் அல்லவா? சாதாரண சிறிய விஷயங்களைக் கூட, நீண்ட நேரம் சிரமப்பட்டு பகுத்தறிவை உபயோகித்துச் சீர்தூக்கிப்பார்க்க முற்பட்டுவிடுகிறோம். அப்படிச் செய்தும்கூட நமக்கு திருப்தி ஏற்படுவதில்லை. பகுத்தறிவுக்கு இடம் உண்டு என்பதில் சந்தேகமில்லை. எனினும், இப்போது நாம் கொடுக்கும் அளவுக்கு அதற்கு முக்கியத்துவம் கொடுக்கவேண்டியதில்லை.''

குறிப்பிட்ட நபர் எந்தச் சந்தர்ப்பதில் என்ன சொன்னார் என்பதை நிச்சயமாக அறிந்துகொண்டாலொழிய, அவர் கூறியதையே அவருக்கு விரோதமாக மேற்கோள் காட்டுவது தவறாகும். நான் கூறியதாக ஆசிரியர் குறிப்பிட்டிருப்பவையெல்லாம் உண்மையே என்பதில் சந்தேகமில்லை. ஆனால், முற்றிலும் வெவ்வேறான சந்தர்ப்பங்களில் அவை கூறப்பட்டவையாகும். குழந்தைகளுக்குக்கூட திருப்தி ஏற்படும்படி காரணம் கூறுவது முற்றிலும் சாத்தியமாக இருக்கும் சந்தர்ப்பத்தில், அவர்களுக்கு ஆதாரம் காட்டவேண்டியதோ, அதற்குக் கீழ்ப்படிந்து நடக்கும்படி அவர்களிடம் கூறவேண்டியதோ அவசியமில்லை. அவ்விதம் கூறுவது பெரும்பாலும் அவர்களுக்குத் தவறான வழிகாட்டுவதாகும். ஒவ்வொருவருக்கும் விருப்பு வெறுப்புகள் உண்டு. எவருக்காவது, தமது பெருமதிப்புக்குப் பாத்திரமான ஒருவரிடம் நம்பிக்கை ஏற்பட்டுவிட்டால், பின்னர் அவர் பகுத்தறிவை உபயோகிப்பதில்லை; தமது மதிப்புக்குப் பாத்திரமானவர் எது செய்தாலும் சரி என்று கூறும் நிலைக்கு வந்துவிடுகிறார். இதைத் தான் கண்மூடித்தனமான பக்தி என்று நான் கருதுகிறேன். சிறப்புமிக்க ஒருவரிடம் கண்மூடித்தனமான பக்திகொள்ளுவது அருமையான ஒரு குணமே. தனக்கு உதாரணமாகக் கொள்ள ஒரு வீரதீரர் இராத ஒருதேசமோ, அல்லது தனி நபரோ முன்னேற்றம் அடைய முடியாது. சிறப்புமிக்க சான்றோர், மக்களுக்கு உத்வேகம் அளிக்கும் உதாரணமாகத் திகழ்கிறார். நமது பலவீனம் காரணமாக அசாத்தியமானது என்று நாம் கருதும் ஒரு செயலை சாத்தியமாகும்படி அவர் செய்கிறார். சோர்வுச் சேற்றிலிருந்து நாம் உத்தாரணம் அடைய அவர் உதவிபுரிகிறார். அவரது உயர்ந்த செயல்களின் ஞாபகமானது, எல்லையின்றித் தியாகம் செய்யும் சக்தியை நமக்குக் கொடுக்கிறது. எனினும், அவர் நமது

தீர்மானத்தை உருக்குலைக்கவோ, நமது பகுத்தறிவை பலனற்றுப் போகும்படி செய்யவோ அனுமதிக்கக்கூடாது. நம்மில் மிகச் சிறந்தவர்களின் உபதேசங்களையும், செயல்களையும் கூட நாம் ஆழ்ந்து பரிசீலனை செய்யவேண்டும். ஏனெனில், அவர்களும் பிறப்பு இறப்புக்கு இலக்கான மானிடரேயல்லவா?

நம்மிடையே உள்ள மிகவும் பலவீனமானவர்களைப்போல் அவர்களும்தவறுகள் செய்யும் இயல்பு உடையவர்களே. அவர்கள் செய்யும் தீர்மானத்திலும், செயல்புரிய அவர்களுக்குள்ள அதிகாரத்திலுமே அவர்களுடைய பலம் அடங்கியிருக்கிறது. எனவே, அவர்கள் செய்யும் தவறுகள் பயங்கரமாகி விடுகின்றன. கண்மூடித்தனமாக வணங்கும், அவ்விதம் வணங்கப்படுவோரின் உபதேசங்களையும், செயல்களையும் அடிமைப் புத்தியுடன் ஒப்புக்கொள்ளும் தேசமோ அல்லது நபரோ அபாயத்திற்கும் துக்கத்திற்கும் உள்ளாகும்படியே நேரும். எனவே பகுத்தறிவில் கண்மூடித்தனமாக பக்தி வைப்பதைக் காட்டிலும், நபரிடம் கண்மூடித்தனமாக பக்தி வைப்பது அதிக மோசமானதாகும். பகுத்தறிவைப் பற்றி ஆசிரியர் கூறியுள்ள எச்சரிக்கை பலனளிக்கக்கூடியதே. புலன்களை, கட்டுப்பாட்டிற்கும், கண்டிப்பான ஒழுங்கிற்கும் உட்படும்படி செய்யவேண்டும். அப்போதுதான் பகுத்தறிவு அவற்றின் கீழ் திக்கற்ற அடிமையைப்போல் இருப்பதற்குப் பதிலாக, புலன்கள் பகுத்தறிவினுல் செயல்படும் சிறந்த கருவிகளாக இருப்பது சாத்தியமாகும்.

குழந்தைகளின் பகுத்தறிவு தூங்குகிறது என்பதில் சந்தேகமில்லை. எனினும், கண்காணிப்புள்ள ஆசிரியர் மெதுவாக அது விழிப்படையும்படி செய்யவேண்டும். குழந்தைகளுக்கு அவர்கள் ஒழுக்க சம்பந்தமான பழக்கங்களைக் கற்பிக்கவேண்டும். அதன் பலனுக, அவர்களுடைய பகுத்தறிவு, புலன்களின் கட்டுப்பாட்டிலிருந்து விடுதலை பெற்று, குழந்தைப் பருவத்திலிருந்தே அவர்களுக்கு வழிகாட்டியாக இருந்துவரும். சிறப்புமிக்க ஒருவரைப் பின்பற்றும்படி குழந்தைகளிடம் கூறுவது ஒழுங்கு ஆகாது. அவ்விதம் எந்த நல்ல பழக்கமும் உருவாக முடியாது. அடிமைகளைப்போல் கண்மூடித்தனமாகக் காரியங்களைச் செய்ய கற்பிக்கப்படும் குழந்தைகள் சோம்பேறிகளாகிவிடுகின்றன. ஒருவேளை பழைய ஆசிரியரின் ஸ்தானத்திற்கு மற்ருெரு ஆசிரியர் வந்து, மாணவர்களின் இருதய பீடத்தில் பழைய ஆசிரியரால் வைக்கப்பட்ட வீரரை அப்புறப்படுத்திவிடுவாராயின், மாணவர்கள் மூளை குழம்பி பிற்காலத்தில் கவைக்கு உதவாதவர்களாகிவிடுவார்கள். ஆரம்பத்திலிருந்தே, மாணவர்கள் முன்வைக்கப்படும் விஷயங்களுக்குக் காரணங்களை விளக்கவேண்டும். பிறகு அவர்களின் தீர்மானத்தைப் பலப்படுத்தவோ, அல்லது அவர்களுடைய பகுத்தறிவுக்கு ஆதாரமாகவோ, மகோன்னதமான காரியங்களைச் செய்த சான்ருேர்களின் உதாரணங்களை எடுத்துக் கூறினுல், அவர்கள் சக்திவாய்ந்த சிறந்த பிரஜைகளாக அபிவிருத்தி அடையக்கூடும். அப்போது அவர்கள், மிகவும் கஷ்டமான சந்தர்ப்பங்களிலும்

தங்களுடைய திறனைக் காட்டும் வல்லமை வாய்ந்தவர்களாக இருப்பார்கள்.

—'எங் இந்தியா'—29—7—1926

# 41
# நூற்பது யாருக்காக?

அகமதாபாத்திலுள்ள குஜராத் வித்தியா பீடத்தைச் சேர்ந்த மாணவர்களின் கூட்டத்தில் காந்திஜிக்கு ஒரு பணமுடிப்பு அளிக்கப்பட்டது. அவ்வைபவத்தில் பேசிய காந்திஜி, வித்தியா பீடப் பேராசிரியர் ஒருவரிடமிருந்து தமக்கு வந்த கடிதத்தைப்பற்றிக் குறிப்பிட்டார். காந்திஜிக்காக நூற்கவேண்டுமா அல்லது தேசத்திற்காக நூற்கவேண்டுமா என்ற விவாதம் அப்போது மாணவர்களிடையே கடுமையாக இருந்துவந்தது. அந்தப் பிரச்னையைத் தீர்க்கும்படி அவர்கள் காந்திஜியைக் கேட்டனர். அவர்களுக்குப் பதிலாக காந்திஜி கூறியதாவது :

இவ்விஷயத்தை வெவ்வேறு கோணங்களில் கவனிக்கலாம். இரு சாரார் கூறுவதும் சரி என்பதே எனது அபிப்பிராயமாகும், நான் யார்? நான் இன்று பெரிய வீரனுக இருக்கலாம்; பொது ஜனங்களிடையே எனது செல்வாக்கு குறைந்துவிட்டால், எனக்காகச் செய்யப்படும் காரியமும் நின்றுவிடும். தேசத்துடன் ஒப்பிடும்போது, என் வாழ்வு தாற்காலிகமானது; தேசமோ நிரந்தரமானது. எனவே, என்னிடமுள்ள விசுவாசம் காரணமாக ஒரு காரியத்தைச் செய்வதைக் காட்டிலும் தேச விசுவாசம் காரணமாகச் செய்வதே புத்திசாலித்தனமாகும். மற்றொருபுறம், என்மீதுள்ள அன்பு காரணமாக ஒரு காரியம் செய்யப்படுவதை நான் அறிந்துகொள்ள முடியும். எனக்காக அலுவல்களைச் செய்ய வெவ்வேருன வழிகள் இருக்கின்றன. ராட்டினத்தில் எனக்குள்ள நம்பிக்கை ஒருவருக்கு இருக்கலாம். ஆனல், அவர் நூற்க விரும்பாத சோம்பேறியாக இருக்கலாம். எனினும், எனக்காகவும் என்மீது உள்ள அன்பினலும் அவர் சோம்பேறித்தனத்தை விட்டுவிட்டு ராட்டினத்தை சுற்றத் தொடங்கலாம். என் பெயருக்காக ஒருவர் போகக்கூடிய எல்லை அவ்வளவுதான். அந்த எல்லைக்கு மேல் செல்ல அனுமதிக்கக் கூடாது.

அதற்கு மாருக, ஒருவருக்கு ராட்டினத்தில் எள்ளளவும் நம்பிக்கை இராமலிருக்கலாம். எனினும், அவர் எனக்காக ராட்டினத்தில் நூற்க இணங்கலாம். ஆனல், அவ்விதம் செய்வது ஒழுங்கல்ல. எல்லாவற்றையும்விட இப்போது நான் விரும்புவதெல்லாம், ஒவ்வொருவரும் தமக்குத் தாமே உண்மையாக நடந்துகொள்ளுவதுடன், வெளிவேஷம், பாசாங்கு இவற்றிலிருந்தும் விடுதலை பெறவேண்டும் என்பதே.

இப்பிரச்னையை மற்றொரு கோணத்திலிருந்தும் பார்க்கலாம். ஒரு கொள்கை அல்லது புனித விரதம் காரணமாக ஒரு காரியத்தைச் செய்வது என்பதும் உண்டு. தமக்கு மிகவும் நெருங்கிய உறவினர் மீதுள்ள பாசம் அல்லது அன்பு, ஒருவருக்கு வெகு தூரம் உதவியாக இருக்கலாம். இதற்கு, எனது வாழ்க்கையிலிருந்தே உதாரணம் கூறலாம். என் தந்தைமீது எனக்கு மட்டற்ற அன்பு இருந்திராவிடில், உண்மையையே கடைப்பிடிப்பதென்ற பிரதிக்ஞையை நான் எடுத்துக்கொள்ளாமல் இருந்திருக்கலாம். உண்மை பேசுவது எனது இயல்பாகிவிட்டதற்குக் காரணம், சத்தியத்தின் தத்துவத்தை நான் உணர்ந்துகொண்டதனால் அல்ல; என் தந்தைமீதுள்ள விசுவாசம் காரணமாக நான் உண்மையே பேசவேண்டும் என்று உணர்ந்துகொண்டதே யாகும். அதுபோலவே, என் தாயார்மீது எனக்கு ஆழ்ந்த பக்தி இருந்திராவிடில், இறைச்சி உணவிலிருந்தும், துன்மார்க்கமான வாழ்க்கையிலிருந்தும் நான் தப்பியிருக்கமாட்டேன். காமம் முதலிய துராசைகளுக்கு அடிமையாக இருப்பதிலிருந்து விடுதலை பெறும் முயற்சிக்கு, பிரதிக்ஞைகள் உதவியாக இருக்கும் என்பதே எனது கருத்தாகும்.

—'எங் இந்தியா'—21—8—1924

(2)

'காந்திக்காக' நூற்கவேண்டும் என்று மாணவர்களை வற்புறுத்தித் தூண்டுவது இப்போது ஒரு நாகரிகமாகிவிட்டது என்று ஒரு நண்பர் கூறுகிறார். அவ்வித வேண்டுகோள் நியாயமானதா என்றும் அவர் கேட்கிறார். நான் முற்றிலும் தேசத்தின் சார்பாக மாத்திரமே பேசுகிறேன். நான் அவ்வாறு பேசிவரும் வரையில், தேசத்தை விட்டு விட்டு எனக்காக நூற்கவேண்டும் என்று கூறுவது அவ்வளவு சரியல்ல. எனினும், தேசத்திற்காக என்பதை விட எனக்காக நூற்கவேண்டும் என்று கூறுவது மாணவர்களின் மனத்தில் நேரடியாகப் பதிய இடம் உண்டு. ஆனால், ஒவ்வொருவரும் தேசத்திற்காக நூற்பதே ஒழுங்காகும் என்பதில் ஐயமில்லை. ஒவ்வொருவரும் தனக்குத் தானே நூற்பது, இன்னும் அதிக சிறப்புடையதாகும். தேசத்திற்காக உழைக்கும் ஒவ்வொருவரும் தனக்குத் தானே உழைத்தவரும் ஆகிறார். தனக்காக மாத்திரம் உழைப்பவர், தன்னைத்தானே பாழாக்கிக் கொள்ளுபவர் ஆவார். நம்முடைய நலனும் அக்கறையும் தேசத்துடன் ஒன்றுபட்டவையாக இருக்கவேண்டும். சில சந்தர்ப்பங்களில் மாத்திரம் டம்பத்துக்காக நூற்று, பிறகு நூற்பதை நிறுத்திவிடுவோர் மோசடி செய்தவர் ஆகிறார்.

—'எங் இந்தியா'—31—7—1924

# 42

## சத்தியம், அகிம்சை, புலனடக்கம்

ஒழுக்கம், தருமம், மதம் முதலியன ஒன்றுக்கொன்று ஐக்கிய பாவம் உடையவை. மத சம்பந்தமற்ற ஒழுக்கமான வாழ்க்கை மணலில் நிர்மாணிக்கப்பட்ட ஒரு வீடு போன்றதாகும். ஒழுக்க மில்லாத மதம், தகர டப்பாவைப் போல் சந்தடி செய்வதற்கும் மண்டைகளை உடைப்பதற்கும்தான் தகுதி வாய்ந்தது. சத்தியம், அகிம்சை, புலனடக்கம் இம்மூன்றும் உள்ளடங்கியதே ஒழுக்க மாகும். இம் மூன்றும்தான் மற்ற எல்லா ஒழுக்கங்களுக்கும் மூல காரணமாக இருக்கின்றன. சத்தியத்திலிருந்துதான் அகிம்சை யும் புலனடக்கமும் பிறக்கின்றன. சத்தியம்தான் எனக்குக் கடவுளாகும்.

—'ஹரிஜன்' - 3—10—1936

# 43

## ஒழுக்க அடிப்படை

ஒழுக்க அடிப்படையை நாம் இழந்தவுடன் மதப் பற்றையும் இழந்துவிடுகிறோம். ஒழுக்கத்தைப் புறக்கணிக்கும் மதம் என்பது இல்லவே இல்லை. உண்மைக்கு மாறாகவோ, கொடுமை யாகவோ அல்லது புலனடக்கமின்றியோ நடந்துகொள்ளும் மனிதன் தன் பக்கத்தில் கடவுள் இருப்பதாகக் கூறிக்கொள்ள முடியாது.

—'எங் இந்தியா' - 24—11—1921

# 44

## எது இயற்கையானது?

இன்று, 'இயற்கையானது' என்ற சொல்லைப் போல் வேறு எந்தச் சொல்லும் அவ்வளவு அதிகமாக துஷ்பிரயோகம் செய்யப் படுவதில்லை என்று தோன்றுகிறது. உதாரணமாக, "உண்பதும் தண்ணீர் குடிப்பதும் எப்படி மனிதனுக்கு இயற்கையானதோ, அதுபோலவே கோபமும் இயற்கையானது" என்று ஒருவர் கடிதம் எழுதியுள்ளார். "உடலின் மற்ற நடவடிக்கைகள் எப்படி இயற் கையானவையோ, அது போலவே ஜனனேந்திரிய நடவடிக்கை யும் இயற்கையானது. அவ்வித மில்லையாயின், கடவுள் ஜனனேந் திரியத்தை மனிதனுக்கு அளித்திருக்க மாட்டார். துஷ்டர்களுக்கு சாபம் கொடுப்பதும், நல்லவர்களுக்கு ஆசி கூறுவதும் நமது கடமை இல்லையாயின், சபிப்பதற்கும் ஆசி கூறுவதற்கும் உள்ள திறனைக் கடவுள் நமக்கு ஏன் கொடுக்க வேண்டும்?

நமக்குள்ள திறமைகளை யெல்லாம் பூரணமாக அபிவிருத்தி செய்ய வேண்டியது நமது கடமையல்லவா? அகிம்சையைப் போல் இம்சையும் ஒருவருடைய தருமம் என்றே தோன்றுகிறது. புண்ணியமும் பாவமும் நமது கற்பனையின் சிருஷ்டிகளே. நாம் மேற்கொண்டுள்ள அகிம்சை நமது பலவீனத்தின் அறிகுறியேயாகும். அது, நமது இயல்பின் ஒரு புறத்தையே குறிப்பிடுகிறது. அதை மதத்தின் உயர்ந்த தருமமாக ஏன் கருதவேண்டும்? அதைப் பெரிய அதர்மமாக ஏன் கருதக் கூடாது? அகிம்சா பரமோ தர்ம: என்பது ஆதியில் அகிம்சா பரமோ அதர்ம: என்றிருந்தது. நாளா வட்டத்தில் அதர்ம: என்பதில் உள்ள 'அ' நழுவிப்போயிருக்க வேண்டும், அல்லது மனித வர்க்கத்தின் விரோதி எவராலாவது அது அழிக்கப்பட்டிருக்கவேண்டும். பல சந்தர்ப்பங்களிலும் அகிம்சை, அதர்மத்தின் உச்ச நிலையாக இருந்திருக்கிறது என்பதை நிரூபிக்க முடியும்.''

இது, ஒரே ஒருவரின் வாதமல்ல. பலருடைய வாதங்களையும் தொகுத்து மேலே குறிப்பிட்டிருக்கிறேன். அதர்ம: என்பதில் 'அ' நழுவிப் போயிருக்க வேண்டும் என்று ஒரு பழைய பாரிஸ்டர் நண்பர் விளையாட்டாக அல்ல, உண்மையாகவே குறிப்பிட்டிருக்கிறார். மிருகத்தைப் போல் மனிதனையும் அதே தரத்தில் நாம் வைத்துவிட்டால், பல விஷயங்களையும் இயற்கையானவை என்று நிரூபிக்க முடியும். இரு சாராரும் இரண்டு வெவ்வேறு இனங்களைச் சேர்ந்தவர்கள் எனில், மிருகத்திற்கு இயற்கையாக இருப்பதெல்லாம் மனிதனுக்கு இயற்கையாக இருக்க முடியாது. முன்னேற்றம் என்பது மனிதனின் பெருமையாகும். முன்னேற்றத்திற்கும் மிருகத்திற்கும் எவ்வித சம்பந்தமும் இல்லை. மனிதனுக்குத்தான் பகுத்தறிவும் விவேகமும் உண்டு. மிருகத்தைப் போல் மனிதன் உணவினால் மாத்திரம் வாழவில்லை. கடவுளை அறியவும் அவரை வணங்கவும் மனிதன் தன் பகுத்தறிவை உபயோகிக்கிறான். கடவுளைப் பற்றிய ஞானத்தைப் பெறுவதே வாழ்க்கையின் லட்சியம் என்று மனிதன் கருதுகிறான். கடவுளை வணங்க வேண்டும் என்ற ஆசை மிருகத்திடம் நினைக்கவும் முடியாததாகும். மனிதனே, புத்தி பூர்வமாக சைத்தானைக்கூட வணங்கமுடியும். கடவுளை அறிவதும், மனிதனின் இயற்கையாக இருக்கிறது, இருக்கவும் வேண்டும். அவன் சைத்தானை வணங்கும்போது, தனது இயல்புக்கு மாறாக அவன் நடந்து கொள்ளுகிறான். மனிதனுக்கும் மிருகத்திற்கும் வேற்றுமையைக் காணாத ஒருவருக்கு, இவ்விஷயத்தில் திருப்தி ஏற்படும்படி நான் செய்துவிட முடியாது. அவருக்கு, புண்ணியமும் பாவமும் ஒரே பொருள் உடையதாகும். கடவுளை அறியவேண்டும் என்பதையே தமது குறிக்கோளாகவும் வாழ்க்கையின் இறுதிப் பயனாகவும் கருதும் மனிதனுக்கு, சாப்பிடுவதும் தண்ணீர் குடிப்பதும்கூட ஓரளவுக்கு மாத்திரமே இயற்கையாகும். கடவுளை அறிவதே அவனது இறுதி லட்சியமானதால், அவன் சுக வாழ்க்கைக்காகச் சாப்பிடுவதில்லை; உடலில் உயிர் இருக்கவேண்டும் என்பதற்காக மாத்திரமே சாப்பிடுகிறான்.

கடவுளை அறிவதும், காண்பதும் மனிதனின் இயற்கை எனில், புலன் நுகர்ச்சி அவனது இயல்புக்கு முரணாக இருக்க வேண்டும். அதை அறவே துறந்துவிடுவதே, அவனது மேற்கண்ட லட்சியம் நிறைவேறுவதற்குச் சிறந்ததாகும். சிற்றின்ப இச்சையை முற்றிலும் துறந்தாலன்றி, கடவுளை அறிவது அசாத்தியம். தன் நடவடிக்கைகளை அப்பழுக்கற்ற முறையில் பெருக்கிக் கொள்ளவேண்டும் என்பது மனிதனின் கடமை அல்ல. கடவுளை அடைவதற்கான சக்திகளை குற்றம் குறையின்றி அபிவிருத்தி செய்து கொள்ளுவதும், அதற்கு முரணானவற்றை யெல்லாம் அடியோடு ஒழித்துவிடுவதுமே மனிதனின் கடமையாகும்.

நம் உள்ளேயே நல்ல ஆசைகளும், தீய ஆசைகளும் இருக்கின்றன. நல்ல ஆசைகளை வளர்க்க வேண்டியதும், தீய ஆசைகளை ஒழிக்க வேண்டியதும் நமது கடமையாகும். அந்தக் கடமையை நாம் நிறைவேற்றத் தவறிவிடுவோமாயின், நாம் மனிதர்களாகப் பிறந்திருந்தாலும் மிருகங்களாகவே இருக்க நேரும். மானிடராகப் பிறப்பது கிடைப்பதற்கரிய ஒரு பாக்கியமாகும், ஒரு சோதனையான நிலையாகும். அந்தச் சோதனையில் நாம் வெற்றி பெறுவிட்டால், நாம் மறுபடியும் மிருகங்களாகப் பிறக்கவேண்டியிருக்கும் என்று ஹிந்து மதம் கூறுகிறது.

உலகம் முழுவதும் இம்சையே நிறைந்திருக்கிறது. இயற்கையானது, பற்களும் கூரிய நகங்களும் ரத்தத்தினால் சிவந்திருப்பது போல் இம்சை மயமாகத் தோன்றுகிறது. எனினும், மிருகத்தைவிட மனிதன் உயர்ந்தவன் என்பதை நாம் ஞாபகத்தில் வைத்துக்கொண்டால், அந்த இயற்கையைக் காட்டிலும் மனிதன் சிரேஷ்டமானவனே ஆவான். ஒரு மனிதன், தன் உயர்ந்த பிறப்புக்கு உகந்த விதமாக தன் வாழ்க்கையின் லட்சியத்தை நிறைவேற்ற வேண்டுமாயின், அந்த லட்சியம் அகிம்சையே. இம்சையின் நடுவே நின்றுகொண்டிருக்கும் அவன் தன் உள்ளத்தின் ஆழத்திற்குச் சென்று, இம்சை நிறைந்த இந்த உலகத்தில் தனது லட்சியம் அகிம்சையே என்று தன்னைச் சூழ்ந்துள்ள உலகத்திற்குப் பிரகடனம் செய்வதுடன் அதைச் செயலிலும் காட்டுவானாயின், அகிம்சையைச் செயலில் காட்டும் அளவுக்கு அவன் தன் மனித இனத்தை அலங்கரித்தவனாகிறான். எனவே, மனிதனின் இயல்பு இம்சை அல்ல, அகிம்சையே. தான் அந்த உடல் அல்ல, ஆன்மாவே என்பதையும், ஆன்மாவை வெளியிடும், அதாவது தன்னைத்தானே அறிந்து கொள்ளும் நோக்கத்துடன் மாத்திரமே தான் இந்த உடலை உபயோகிக்க இயலும என்பதையும் அவன் அனுபவத்தின் மூலம் எடுத்துக் கூற முடியும். அந்த அனுபவத்திலிருந்தே ஆசை, கோபம், அறியாமை, துவேஷம் முதலிய மற்ற வெறிகளையும் தலைதூக்க விடாது அடக்கும் ஒழுக்கத்தை அவன் அபிவிருத்தி செய்து கொள்ளுகிறான்; பின்னர் இறுதி லட்சியத்தை அடைய சிறந்த முயற்சி செய்து இறுதியில் முழுவெற்றியை காண்கிறான்.

அவனது முயற்சிகள் அத்தகைய பூர்த்தியான நிலையை அடையும் போதுதான், அவன் வாழ்க்கையின் பயனை எட்டியதாகவும், அவனது இயல்புக்கு உகந்தவாறு நடந்து கொண்டதாகவும் கூறமுடியும். எனவே, ஒருவன் தன்னுடைய வெறிக் குணங்களை அடக்கி வெற்றி காண்பது மனித நிலைக்கு அப்பாற்பட்டதன்று; மனிதன் சாதிக்கக்கூடிய காரியமேயாகும். அகிம்சையை அனுசரிப்பது எல்லாவற்றையும்விட மகோன்னதமான தீரச் செயலே. அத்தகைய அகிம்சையில், கோழைத்தனத்திற்கோ அல்லது பலவீனத்திற்கோ இடமில்லை.

—'எங் இந்தியா' – 24—6—1926

# 45

# கடவுளின் விசேஷ சிருஷ்டி

*கேள்வி: மனிதன், கடவுளின் ஒரு விசேஷ சிருஷ்டியா?*

பதில்: கடவுளின் மற்றப் படைப்புகளிலிருந்து மனிதன் முற்றிலும் வேறானவனாக இருக்கும் அளவுக்கு, அவன் கடவுளின் விசேஷ சிருஷ்டியே.

'எங் இந்தியா' – 13—2—1930

# 46

# மனிதன் கடவுளின் உருவமா?

சென்ற மாதம் 24-ஆம் தேதி 'எங் இந்தியா'வில் 'எது இயற்கையானது?' என்ற தலைப்பில் வெளியான கட்டுரையைக் குறிப்பிட்டு ஒரு டாக்டர் பின் வருமாறு எழுதுகிறார் :

"ஜனங்களின் பலாத்கார உணர்ச்சி பாமர மக்கள் அடங்கிய கூட்டத்தில் மாத்திரமே எழுப்பப்படுகிறது. அத்தகைய சந்தர்ப்பங்களில் உடல் பலாத்காரத்தைத் தடுப்பது அநேகமாக முடியாத காரியமே. அவ்விதம் தடுப்பது விரும்பத்தக்கதா என்ற வியப்பும் எனக்கு உண்டாகிறது. அவ்விதம் தடுப்பது நிச்சயமாக மனித இயல்புக்கு விரோதமுமாகும். மனிதன் முதலாவதாக மிருகமே, அதற்கு அடுத்தபடியாகவே மனித இயல்புக்கு இடம் உண்டு. நாகரிகமற்ற ஆஸ்திரேலிய காட்டுமிராண்டியின் முன்னோர்களையும் அவர்களது காலத்தையும் நினைத்துப் பாருங்கள். அக்காலத்தில் கலையோ, இலக்கியமோ, விஞ்ஞானமோ எதுவும் இல்லை. அப்போது அவன் வேட்டையாடுபவனாக இருந்துகொண்டு, சைகைகளின் மூலமே அவனது சகாக்களுடன் பேசிவந்தான். மிருகத்தின் வெறிக்குணங்கள் இன்னும் நம்முள்ளே பதுங்கிக்கொண்டிருக்கின்றன. நமது ஒழுக்க விதிகள் அவற்றை மறைக்கும் மெல்லிய மேற்பூச்சு வேலையே. கடவுளை அறிவதோ, காண்பதோ, வணங்குவதோ மனிதனின்

இயல்பு அல்ல. இயற்கையான முறையில் வளர்க்கப்பட்ட, விருப்பு வெறுப் பின்றியும் மதச் சார்பற்ற சூழ்நிலையிலும் கல்வி கற்ற ஒரு நபருக்கு, கடவுளை வணங்கும் கொள்கையே முற்றிலும் இயற்கைக்கு விரோதமாக இருக்கும். உல கத்தில் கல்வியறிவற்ற, வயது வந்த கோடிக்கணக்கானவர்கள் சர்ச், மசூதி அல்லது கோவிலுக்குள் எக்காலத்திலும் பிரவேசித்ததில்லை. கடவுள் வணக்கம் என்பது தேடிக்கொள்ளும் ஒரு வழக்கமேயாகும். புண்ணியம், பாவம் இவற் றிற்கும் கடவுளுக்கும் எவ்வித சம்பந்தமும் இல்லை. கோஷ்டி வாழ்க்கையின் அவசியமான தேவைகள் காரணமாகவே ஒழுக்கம் ஏற்பட்டுள்ளது. மனம் போன போக்கில் மாறும் தெய்வ சித்தத்தைக் காட்டிலும் மனித சமுதாயத்தின் தேவைகளுக்காகவே ஒழுக்கம் விதிக்கப்பட்டிருக்கிறது. கடவுளின் உருவத்தில் மனிதன் சிருஷ்டிக்கப்படவில்லை; மனிதனின் உருவத்தில்தான் கடவுள் சிருஷ்டிக் கப்பட்டிருக்கிறார். வாலில்லாக் குரங்கை நீங்கள் உங்களுடைய தூர பந்துவாகக் கருதினால், உங்களுடைய ஒழுக்க விதிக்கு இழிவு எதுவும் ஏற்பட்டுவிடாது. உண்பது, நீர் அருந்துவது, புலன் நுகர்ச்சி முதலியவை மனிதனுக்கு முற்றிலும் இயல்பேயாகும். அவற்றிற்கு எல்லை உண்டு என்பது உண்மையே. என்றாலும், அவை முற்றிலும் உடலுக்கு அவசியமானவை, சம்பிரதாய மானவை. எனவே, புலன் நுகர்ச்சியை அறவே துறந்துவிடவேண்டும் என்ற சித்தாந்தத்தை நீங்கள் எப்படி உபதேசிக்க முடியும்? அந்த இச்சையைப் பூரணமாக அனுபவித்த பிறகு ஒருவேளை அதை முற்றிலும் துறக்க முடியுமே யன்றி, அதற்கு முன் 'துறக்க முடியாதென நீங்கள் நினைக்கவில்லையா?' மனிதனின் இயல்பு அகிம்சையேயன்றி இம்சையல்ல என நீங்கள் கூறுகிறீர் கள். பிரிட்டிஷ் சாமான்களை பகிஷ்கரிக்க வேண்டும் என்ற உங்களுடைய சொந்தத் திட்டம் கூட, அது வெற்றிபெற்றிருக்குமாயின், பிரிட்டிஷ் தொழி லாளர்களுக்கு இம்சையாகவே முடிந்திருக்கும். ஒரு மனிதனைத் தடியால் அடிப்பது எவ்வளவு இம்சையாகுமோ, அதுபோலவே ஒரு மனிதன் பட்டினி கிடக்கும்படி செய்வதும் இம்சையே. நீங்கள் கூறும் ஆன்ம சக்தியோ அல்லது அன்பின் சக்தியோ வெறும் கற்பனைக் கூற்றேயாகும். அகிம்சை நாகரிக மான ஒரு கொள்கையே ஒழிய, அது மனிதனின் இயல்பு அல்ல.''

டாக்டரின் மேற்கண்ட கடிதத்தை நான் மிகவும் சுருக்கிக் கொடுத்திருக்கிறேன். உறுதியுடனும் நம்பிக்கையுடனும் அக் கடிதம் எழுதப்பட்டிருப்பது, எவரையும் திகைக்கும்படி செய்வ தாக இருக்கிறது. அவர் நீண்ட காலமாக அத் தொழிலில் இருந்து வருகிறார் என்று தோன்றுகிறது. ஆங்கில பட்டதாரி யான அவர், படித்த ஏராளமானவர்களுக்குப் பிரதிநிதியாக விளங் குகிறார். எனினும், அவரது வாதங்கள் எனக்குத் திருப்தியளிக்க வில்லை என்பதை நான் ஒப்புக்கொள்ள வேண்டும். அவற்றை நாம் இப்போது பரிசீலனை செய்வோம். பாமர ஜனக் கூட்டம் அகிம்சையைக் கடைப்பிடிக்க முடியாது என்று அவர் கூறுகிறார். எனினும், மனித வர்க்கத்தின் பொதுவான அலுவல்கள் பாமர மக்களின் அந்நியோன்னிய பாவத்தினாலேயே நடைபெற்று வருகின்றன. அது அவர்களது இயல்பு போலவே தோன்று கிறது. பலாத்காரம் அவர்களுடைய இயல்பாக இருக்குமாயின், உலகம் அதிசீக்கிரத்தில் முடிவடைந்து விடும். அவர்கள் போலீஸ் அல்லது மற்ற வற்புறுத்தலின்றி இயல்பாகவே அமைதி

யுடன் இருக்கிறார்கள். அவர்களின் இயல்புக்கு மாறாக துஷ்டர்கள் கூட்டம் பலாத்காரத்தில் அவர்களைத் தூண்டிவிடும் போதுதான், பாமர மக்களின் கூட்டம் பலாத்காரத்தில் ஈடுபடுகின்றது. எனினும், அவர்கள் எவ்வளவு சீக்கிரத்தில் பலாத்காரத்தில் ஈடுபடுகிறார்களோ அவ்வளவு சீக்கிரத்தில் அதை மறந்து, துஷ்டர்களின் செல்வாக்கு மறைந்த உடனேயே மறுபடியும் அவர்களுக்கு இயல்பான அமைதியான நிலைக்குத் திரும்பிவிடுகிறார்கள்.

இதுவரை, ஓர் இனத்தை அதன் விசேஷ அம்சங்களைக் கொண்டே அறிந்துகொள்ள வேண்டுமென்று கற்பிக்கப்பட்டு வந்திருக்கிறது. எனவே, ஒரு குதிரை முதலாவதாக மிருகம், அதற்கு அடுத்தபடியாகவே அதைக் குதிரை என்று கூறவேண்டும் என்பது தவறு என்பதே எனது அபிப்பிராயமாகும். மற்ற மிருகங்களுக்குள்ள பொதுவான சில அம்சங்கள் அதற்கு இருக்கின்றன. என்றாலும், அது அதன் குதிரைத் தன்மையை இழந்துவிட்டு, அது மிருகமாக இருப்பதென்பது முடியாது. அது தன் விசேஷ குணத்தை இழந்துவிடுமாயின், பொதுவான மிருகத் தன்மையையும் அது இழந்து விடுகிறது. அது போலவே ஒரு மனிதன், மனிதன் என்ற அந்தஸ்தை இழந்து, வாலை வளர்த்துக் கொண்டு, கைகளாலும் கால்களாலும் நடக்க முற்படுவானாயின், அதற்குமேல் தன் அறிவை உபயோகிப்பதையும் இழந்து விடுவானாயின், அவன் மனிதன் என்ற நிலையையும், மிருகம் என்ற நிலையையும்கூட இழந்துவிட மாட்டானா? எருமையோ அல்லது கழுதையோ, செம்மறியாடோ அல்லது வெள்ளாடோ அவனைத் தன் இனத்தில் சேர்த்துக் கொள்ள விரும்பாது.

ஆஸ்திரேலியா காட்டுமிராண்டியைப் பற்றிக் குறிப்பிட்டிருப்பது அர்த்தமற்றது. ஆஸ்திரேலியா காட்டுமிராண்டி கூட, மூலாதாரமான அம்சங்களில் மிருகத்திலிருந்து மாறுபட்டவனே. ஏனெனில், மிருகம் எப்போதும் மிருகமாகவேதான் இருக்கும். ஆனால், காட்டுமிராண்டியிடமோ, மனிதன் அடையக்கூடிய மகோன்னத நிலையை எட்டுவதற்கான திறமை இருக்கிறது. ஆஸ்திரேலியா காட்டுமிராண்டியிடம்கூட நாம் போக வேண்டிய அவசியமில்லை. நமது இந்திய மூதாதையர்கூட ஆஸ்திரேலியர்களைப் போலவே ஒரு காலத்தில் நல்லவர்களான, உயர்ந்தவர்களான காட்டுமிராண்டிகளாகவே இருந்தார்கள் என்பதை மறுப்பதற்கில்லை. நாம் இருப்பதாகக் கூறப்படும் நாகரிக நிலையில் கூட, நமக்கும் காட்டுமிராண்டிகளுக்கும் அதிக வேற்றுமை இல்லை. நமது காட்டுமிராண்டி மூதாதையரின் நாகரிக சந்ததிகளான நாமாவது, மிருகங்களிலிருந்து வேறுபட்டவர்களாக இருக்க வேண்டும் என்பதை டாக்டர் ஒப்புக்கொள்கிறார். மிருகம் மிருகத்தனமாக நடந்து கொள்ளுவது இயல்பாகும். ஆனால், அந்த அடைமொழியை நம் விஷயத்தில் யாராவது பிரயோகித்தால், நமக்குக் கோபம் வரும்.

குரங்கை, எனது தூர பந்துவாக நான் கருதலாமென டாக்டர் கூறுகிறுர். உண்மை என்னவெனில், குரங்குடன் மாத்திரமல்ல, குதிரை, ஆடு, சிங்கம், சிறுத்தை, பாம்பு, தேள் முதலிய பிராணி களுடன் எனக்குள்ள உறவை ஒப்புக் கொள்ளும்படி என் தரும சாஸ்திரம் கூறுகிறது. ஆனல், அந்தப் பிராணிகள் அவ்விதம் என்னை அவற்றின் உறவினனுகக் கருதவேண்டிய அவசியமில்லை. என் வாழ்க்கையை ஆட் கொண்டுள்ள கண்டிப்பான தருமம் ஒரு தலைப்பட்சமான அந்தக் கடமையை என்மீது சுமத்தியுள்ளது. ஒவ்வொரு ஆடவர், பெண்ணின் வாழ்க்கையையும் அதே தருமம் ஆட்கொள்ள வேண்டும் என்பதும் எனது அபிப்பிராயமாகும். அத்தகைய கடமை சுமத்தப்பட்டிருப்பதற்குக் காரணம் என்ன வெனில், மனிதன் மாத்திரமே கடவுளின் உருவில் சிருஷ்டிக்கப் பட்டிருக்கிறுன் என்பதுதான். நம்முடைய அத்தகைய நிலையைப் பலரும் உணர்ந்து கொள்ளவில்லை என்பதால், அதன் பலனை நாம் அனுபவிக்கமுடியாது என்பதைத் தவிர, அந்த நிலையில் எவ்வித வேற்றுமையும் ஏற்பட்டுவிடாது. உதாரணமாக, ஆடு களிடையே வளர்க்கப்பட்ட சிங்கம், தனது சொந்த அந்தஸ்தை அறியாததுடன், அதன் பலன்களையும் அனுபவிக்க முடியாது அல்லவா? எனினும், அந்த அந்தஸ்து அதற்கு உண்டு. தனது அந்தஸ்தை சிங்கம் உணர்ந்த அதே சமயத்தில், அது ஆடுகளின் மீது ஆதிக்கம் செலுத்தத் தொடங்கிவிடும். ஆனல், சிங்கத்தைப் போல் வேஷம் போட்டுக்கொண்டுள்ள ஆடு, ஒரு காலத்திலும் சிங்கத்திற்கு உரிய அந்தஸ்தை அடைந்துவிட முடியாது. கடவு ளின் உருவில் மனிதன் சிருஷ்டிக்கப்பட்டிருக்கிறுன் என்ற சித் தாந்தத்தை நிரூபிப்பதற்கு, எல்லா மனிதர்களும் தங்களிடம் அந்த உருவத்தை நிச்சயமாக வெளிப்படுத்துகிறுர்கள் என்று காட்ட வேண்டிய அவசியமில்லை. ஒரே ஒருவர் மாத்திரம் அவ்விதம் காட்டுவதே போதுமானது. மனிதர்களின் மாபெரும் மதபோதகர் கள் தங்களுடைய சொந்த உருவத்தில் கடவுளின் வடிவத்தைக் காட்டியிருக்கிறுர்கள் என்பதை மறுக்க முடியுமா?

கடவுளை அறிவதும், காண்பதும் மனிதனுக்கு இயல்பு அல்ல என்றும், எனவே மனிதன் தன் உருவத்திலேயே கடவுளைச் சிருஷ்டிக்கிறுன் என்றும்கூட டாக்டர் வாதிக்கிறுர். நான் சொல்லக்கூடியதெல்லாம் என்னவெனில், கடவுளை நாடிச் செல் வோர் இதுவரையில் கொடுத்துள்ள சாட்சியம் யாவும் இந்த நிருபரின் திகைப்பூட்டும் சித்தாந்தத்தை மறுப்பதாக இருக்கின் றன என்பதே. கடவுள் வணக்கம்தான், அது எவ்வளவு பண் பற்ற முறையில் இருப்பினும்கூட, மிருகத்திலிருந்து மனிதனை வேறுபடுத்திக் காட்டுகிறது. இந்த உண்மை நாளுக்கு நாள் அதிகமாக நிரூபிக்கப்பட்டுவருகிறது. அவனிடம் இருக்கும் உபரி யான அந்த ஓர் அம்சமே, கடவுளின் சிருஷ்டிகளின் மீது அவனுக்கு மிகுந்த ஆதிக்கத்தைக் கொடுக்கிறது. கோடிக் கணக்கானவர்கள் சர்ச், மசூதி, கோவில் எதற்குள்ளும் ஒருகாலத்திலும் பிரவேசித்ததில்லை என்பது முற்றிலும் சந்தர்ப்

பத்திற்குப் பொருத்தமற்ற விஷயமாகும். கடவுளை வணங்குவதற்கு, அவ்விதம் பிரவேசிப்பது இயல்பானதல்ல, அத்தியாவசியமானதும் அல்ல. உயிரற்ற விக்கிரகங்களுக்கு முன் தலை வணங்குவோர்கூட, மந்திரங்களையோ அல்லது பிசாசுகளையோ நம்புவோர் கூட, தங்களுக்கு மேலே ஒரு சக்தி இருப்பதை ஒப்புக்கொள்ளுகிறார்கள். கடவுளை அவ்விதம் வணங்கும் முறை காட்டுமிராண்டித்தனமானது, சிறிதும் பண்பற்றது. இருந்தாலும், அது கடவுள் வணக்கமே அல்லவா? பண்படுத்தப்படாத மண் உருவத்தில் இருந்தாலும் தங்கம் தங்கமே. பண்படுத்தப்பட்டு விட்டால் அறிவில்லாதவர்கள்கூட அதைத் தங்கம் என்றே கருதுவார்கள். எனினும், எவ்வளவு சுத்தம் செய்தாலும் இரும்புக் கனிப் பொருள் தங்கமாகிவிடாது. மனிதனின் முயற்சியினாலேயே பண்பட்ட முறையில் கடவுளை வணங்குவது வழக்கத்தில் வந்திருக்கிறது என்பதில் சந்தேகமில்லை. நாகரிகமற்ற முறையில் கடவுளை வணங்குவது, ஆதாமைப்*போல் மிகப் பழமையானது.

உண்பதும், நீர் குடிப்பதும் மனிதனுக்கு எவ்விதம் இயற்கை சுபாவமோ, அதுபோலவே அவ்விதம் வணங்குவதும் இயற்கையாகும். ஒரு மனிதன் நாட்கணக்காக உணவின்றி உயிர் வாழலாம். ஆனால், ஒரு நிமிஷம் கூட கடவுளை வணங்காமல் அவன் உயிர்வாழ முடியாது. அவன் இந்த உண்மையை ஒப்புக்கொள்ளாமல் இருக்கலாம். அறியாமையில் ஆழ்ந்துள்ள ஒருவன், உடலில் சுவாசாசயங்கள் இருப்பதையும் ரத்தோட்டம், இருப்பதையும் ஒப்புக்கொள்ளாமல் இருக்கலாம் அல்லவா?

உண்பதையும் தண்ணீர் குடிப்பதையும்போல், சிற்றின்ப இச்சையைப் பூர்த்தி செய்துகொள்ளுவதையும் நிருபர் அதே நிலையில் வைத்துப் பேசுகிறார். எனது கட்டுரையை அவர் கவனமாக வாசித்திருந்தால், அவருக்கு இந்த சிந்தனைக் குழப்பம் ஏற்பட்டிராது. இன்பத்திற்காகவும், சுவைக்காகவும் சாப்பிடுவது மனிதனுக்கு இயற்கை அல்ல என்றே நான் கூறினேன்; அதையே மீண்டும் திருப்பிக் கூறுகிறேன். ஆனால், உயிர் வாழ்வதற்காகச் சாப்பிடுவது மனிதனுக்கு இயற்கையே ஆகும். ஜனனேந்திரிய சம்பந்தமான நடவடிக்கையும் அப்படித்தான். இச்சையைப் பூர்த்தி செய்துகொள்ளுவதற்காக அல்ல; இன விருத்திக்காக அந்த நடவடிக்கையில் ஈடுபடுவதே மனிதனுக்கு இயற்கையாகும்.

சிற்றின்ப இச்சையை அறவே துறந்துவிடவேண்டும் என்று என் ஆயுள் முடியும் வரையில் நான் உபதேசித்தே வருவேன். அந்த இச்சையை விருப்பப்படி பூரணமாக அனுபவித்தாலொழிய, அதை அறவே துறப்பது சாத்தியமல்ல என்று என்னிடம் கூறும் முதல் டாக்டர் இவர்தான். இதற்கு மாறாக, அந்த இச்சையை சாங்கோபாங்கமாக அனுபவிப்பது இறுதியில் துறவுக்கு வழி செய்

*உலகிலேயே ஆதாம் என்பவனே முதன் முதலாகச் சிருஷ்டிக்கப்பட்ட முதல் மனிதன் என்று பைபிள் கூறுகிறது.

யாது, நரம்புத் தளர்ச்சியிலும் சோர்விலும்தான் கொண்டுபோய் விடும் என்று வைத்திய நிபுணர்கள் எனக்குக் கூறுகிறார்கள். அந்த ஆசையை முற்றிலும் துறப்பதற்கு பெருமுயற்சி தேவை என்பதில் ஐயமில்லை. அத்தகைய உயர்ந்த லட்சியத்தை அடைவதற்குப் பெருமுயற்சி உகந்தது அல்லவா? பிரத்தியட்சமான இந்த உலகத்தின் பெருமையை நமக்குக் காட்டும் சப்தம், ஒளி, உஷ்ணம் இவற்றின் குணங்களை ஆராய்ச்சி செய்வதற்காக நிபுணர்கள் வாழ்க்கை முழுவதையும் அர்ப்பணம் செய்யவேண்டியிருக்கிறது. அப்படியிருக்க, தன்னைத்தான் அறிந்துகொள்ளவும், அல்லது மற்றொருவிதமாகக் கூறினால், கடவுளைப்பற்றி நிச்சயமாக அறிந்துகொள்ளவும் வழிகாட்டும் பூரணமான துறவை மேற்கொள்ள அதே அளவுக்கு முயற்சி செய்யவேண்டும் என்று எதிர்ப்பார்ப்பது அதிகமாகுமா?

இம்சை அல்ல, அகிம்சைதான் மனிதனை ஆட்சிபுரிகிறது, உலகத்தையேகூட ஆட்சி புரிகிறது என்பதை, துறவுப் பாதையில் நியாயமான தூரத்துக்குச் சென்றுள்ள ஒருவருக்கு எடுத்துக் கூறவேண்டிய அவசியமில்லை. எனது இம்சையை நிரூபிக்க நிருபர் கூறியுள்ள உதாரணங்கள், நான் எழுதியவற்றை அவர் வாசிக்கவில்லை என்பதையே காட்டுகின்றன. அவரது அறியாமை ஒரு பெரிய விஷயம் அல்ல. ஏனெனில், யாரும் 'எங் இந்தியா'வை வாசிக்கவேண்டும் என்ற அவசியம் இல்லை. எனினும், ஒரு மனிதரின் கருத்துக்களை அறிந்துகொள்ளாமல் அவரைக் கண்டிக்க முற்படுவது மன்னிக்க முடியாததாகும். அந்நியத் துணியை மாத்திரமே பகிஷ்கரிக்கும்படி நான் கூறிவந்துள்ளேன். பிரிட்டிஷ் ஜவுளி பகிஷ்காரம் காரணமாக வேலையை இழக்கும் பிரிட்டிஷ் தொழிலாளர்களுக்கு எனது பகிஷ்கார இயக்கம் இம்சை செய்வதாகாது. ஏனெனில், அந்நியத் துணிகளை வாங்கித் தீருவதென இந்தியா எந்த நாட்டுடனும் ஒப்பந்தம் செய்துகொள்ளவில்லை. அதற்கு மாறாக, பிரிட்டிஷார்தான் இந்தியர்களுக்கு இம்சை இழைத்து வருகிறார்கள். பிரிட்டிஷ் தொழிலாளர்களின் பெயரால் இந்தியாமீது பிரிட்டிஷ் ஜவுளி சுமத்தப்பட்டுவருகிறது. ஒரு குடிகாரன், மதுபானத்தைக் கைவிடுவதன் மூலம் மதுபானக் கடை சொந்தக்காரனுக்கு இம்சை செய்தவனாகமாட்டான். அதற்கு மாறாக, அவன் தனக்கும் மதுபானக் கடைக்காரனுக்கும் தொண்டு செய்தவனாகிறான். அதுபோலவே, இந்தியா அந்நிய ஜவுளிகளை வாங்குவதை நிறுத்திவிடுவதன் மூலம் தனக்கும் அந்நியர்களுக்கும் தொண்டு செய்ததாகிறது. அதனால் அந்நியத் தொழிலாளர்கள் பட்டினி கிடக்கமாட்டார்கள்; வேறு நல்ல தொழிலைக் கண்டுபிடித்துக்கொள்ளுவார்கள். இந்தியாவுக்காகத் துணிகள் உற்பத்தி செய்வதை பிரிட்டிஷ் தொழிலாளர்கள் தாங்களாக வலுவில் நிறுத்திக்கொள்ளுவார்களாயின், அவர்கள் ஒரு மகத்தான ஜீவகாருண்ய இயக்கத்தில் பங்கு எடுத்துக்கொண்டவர்கள் ஆவர்.

—'எங் இந்தியா'—8—7—1926

# 47

# நவீன வாதிகளின் வியாக்கியானம்

"அதிநவீன வாதிகளும், புது விதமான மனப்போக்கு உள்ளவர்களும், இளைஞர்களுமான அதிகாரிகளிடையே நான் சந்தர்ப்ப வசத்தினால் இருக்கும்படி நேர்ந்திருக்கிறது. அவர்கள் என்னைப் புரளியும், பரிகாசமும் செய்கிறார்கள். நல்லது-கெட்டது, புண்ணியம்-பாவம் முதலியவை சமுதாய விஷயங்களில் கையாளப்படும் உபாயங்களே தவிர, அவற்றிற்கு வேறு முக்கியத்துவம் இல்லை என்று அவர்கள் கருதுகிறார்கள். அவர்களுடைய கருத்தை நான் அங்கீகரிக்காததற்காக என்னை மூளையில்லாத ஒரு பேதை என்று எண்ணுகிறார்கள். அவர்கள் கூறுவது தவறு என்றும், நான் நடந்துகொள்ளுவதே சரி என்றும் என்னுள்ளிருக்கும் ஏதோ ஒன்று கூறுகிறது. 'முற்றிலும் நல்ல' என்பதை அடிப்படையாகக் கொண்ட ஓர் ஒழுங்கு விதி இருக்கிறது என்பதே இன்னும் எனது நம்பிக்கையாகும். சாராயம் குடிப்பதைப் போல், காப்பி, தேநீர் குடிப்பதும் கெட்டதாகும் என்று என் நண்பர்கள் வாதிக்கிறார்கள். ஒழுக்கமானது, ஒரு மனிதன் என்ன சாப்பிடுகிறான் அல்லது குடிக்கிறான் என்பதைப் பொறுத்ததல்ல என்று அவர்கள் வற்புறுத்திக் கூறுகிறார்கள்.

"மேலும் சமுதாய அமைப்பு சீர்குலைந்துவிடாமல் இருப்பதற்காகவே புலன் நுகர்ச்சிக்குக் கட்டுப்பாடு விதிக்கப்பட்டிருக்கிறது என்றும் அவர்கள் கூறுகிறார்கள். முக்கியமாக இவ்விஷயத்தில் நான் உங்களுடைய புத்திமதியை நாடுகிறேன். சிற்றின்ப அனுபவமானது யாருக்கும் தீங்கு விளைவிப்பதில்லை; எவ்வித சங்கடத்திற்கும் காரணமாக இருப்பதில்லை. எனவே, அது முற்றிலும் இயற்கையும் ஒழுக்கமுமேயாகும் என்பதே அவர்களுடைய வாதம். எனினும், திட்டத்திற்கு மேல் சாப்பிடுவது எவ்விதம் தீங்கை விளைவிக்கிறதோ அதுபோல், மிதமிஞ்சி சிற்றின்பத்தை அனுபவிப்பதும் தீங்கை விளைவிக்கும் என்பதைத் தவிர அதற்கு வேறு முக்கியத்துவம் இல்லை என்றும் அவர்கள் கூறுகிறார்கள். ஒரு மனைவியிடம் நியாயமாக இருக்கும் காரியம், மற்றொருவரிடம் ஒழுக்கக்கேடாக இருக்கமுடியாது என்பதும் அவர்களுடைய கூற்று. அதிகமாக அல்லது குறைவாக என்பது சந்தர்ப்பத்தைப் பொறுத்தது; எனவே அதில் அப்பழுக்கற்ற ஒழுக்க விதிகள் என்பது எதுவும் இல்லை என்று எனது நண்பர்கள் கருதுகிறார்கள்.

"இது எனது நம்பிக்கைக்கு அதிர்ச்சியைக் கொடுக்கிறதெனினும், அவர்களுடைய வாதத்தில் ஏதோ குறைபாடு இருப்பதை நான் உணருகிறேன். ஆனாலும், வாதத்தில் அவர்கள் என்னைத் திக்குமுக்காடச் செய்துவிடுகிறார்கள். எனவே, நான் எனது பகுத்தறிவின் பாதுகாப்பை நாடவேண்டியிருக்கிறது. ஆனால், அவர்கள் அதை எனது கண்மூடித்தனமான வெறுப்பு என்று கூறுகிறார்கள்.

"உண்மையில் அறிவை அடிப்படையாகக் கொண்ட எனது நிலையை அவர்கள் தகர்த்துவிட்டார்கள். எனவே, எனது நிலை நியாயமானதா என்று கூட நான் சந்தேகம்கொள்ளத் தொடங்கியிருக்கிறேன். எனினும், அவர்களுடைய கட்சியில் சேர்ந்து சொர்க்கத்திற்குச் செல்லுவதைக் காட்டிலும்

தங்களைப் போன்றவர்களுடன் சேர்ந்து நரகத்துக்குச் செல்லுவதையே விரும்புகிறேன் என்று அவர்களுக்கு நான் கூறினேன்.

"மகாத்மாஜி, ஆகையால் தயவுசெய்து உங்களுடைய கருத்தைக் கூறி, அறிவுக்கும் ஆன்மாவுக்கும் சித்திரவதையாக இருக்கும் இந்நிலையிலிருந்து என்னைக் காப்பாற்றுங்கள். நீங்கள் என்னைக் கைவிட்டுவிட மாட்டீர்கள் என்று நம்புகிறேன்."

ஓர் இளைஞரான அதிகாரி எழுதியுள்ள முழுக் கடிதமும் அநேகமாக இதுதான். மற்றும் பலரைப்போலவே அவரது நிலையும் இருக்கிறது. பரிசோதனைகள் அடங்கிய எனது புத்தகத்தை வாசித்தவர்கள், நானும் அவைபோன்ற அனுபவங்களைக் கடந்து செல்லவேண்டியிருந்தது என்பதை அறிவார்கள். அந்த நிருபரைப் போன்ற கஷ்டங்களைச் சமாளிக்கவேண்டியிருக்கும் எல்லோரையும், அந்தப் பரிசோதனைகள் அடங்கிய உரிய அத்தியாயங்களை வாசிக்கும்படி கோருகிறேன். மனத்தை மயக்கும் ஆசைகளுக்கிடையே பகுத்தறிவு பலனற்றது. அத்தகைய சந்தர்ப்பங்களில் நம்பிக்கை ஒன்றுதான் நம்மைப் பாதுகாக்க முடியும். மனம் போனவாறு குடிப்போர், காதல் புரிவோர் முதலியோருக்குப் பக்கபலமாக, பகுத்தறிவு இருப்பதுபோல் தோன்றுகிறது. உண்மை என்னவெனில், அத்தகைய சர்தர்ப்பங்களில் பகுத்தறிவு மழுங்கிவிடுகிறது. இரு கட்சிகளிலுல் உள்ள வக்கீல்கள் தங்கள் தங்கள் கட்சியிலேயே நியாயம் இருப்பதுபோல் வாதிக்கிருர்கள். எனினும், அவர்களில் ஒருவர் தவருக இருக்கலாம். எனவே, ஒருவரது தார்மிக நிலையின் நியாயத்தைத் தாக்கும் அறிவை எதிர்ப்பதற்கு, நம்பிக்கையே கோட்டையாக இருக்கிறது.

எனது நிருபரை மயக்கும் பேர்வழிகள் கூறும் வாதம் நியாயமானதுபோல் தோன்றும். எல்லாக் காலங்களிலும் அப்பழுக்கற்ற ஒழுக்கம் என்று கூறக்கூடியது எதுவுமில்லை. எனினும், குறைபாடுகள் உள்ள மனிதப் பிறவிகளாகிய நாம் அனுசரிக்க வேண்டிய ஓரளவு ஒழுக்க முறை இருக்கிறது. உதாரணமாக, ஔஷதமாகவும் டாக்டர்களின் ஆலோசனைக்கு இணங்கவும் போதை தரும் பானங்களை உபயோகிப்பதைத் தவிர, மற்றப்படி அவற்றை உபயோகிப்பது ஒழுக்கத்திற்கு முற்றிலும் முரணுகும். அதுபோலவே, தனது மனைவியைத் தவிர மற்ற எந்தப் பெண்ணையும் காமக் கண்ணுடன் பார்ப்பது முற்றிலும் தவறு. இவை பகுத்தறிவினலும் நிரூபிக்கப்பட்டவை; எனினும், இவற்றிற்கு எதிர்வாதங்கள் எப்போதுமே கூறப்பட்டு வந்துள்ளன. உலகமே வாழ்வதற்கு மூலகாரணமான கடவுள் இருப்பதைக்கூட மறந்து வாதம் செய்யப்படுகிறது. எனவே, பகுத்தறிவுக்கு அப்பாற்பட்ட நம்பிக்கைதான் யுகம் யுகமாக நமது கோட்டையாக இருந்து வருகிறது. இந்த நம்பிக்கையை, மேற்கண்ட இளம் அதிகாரியைப்போல் அதே சங்கடமான நிலையில் உள்ள எல்லோருக்கும் நான் பரிசாக அளிக்கிறேன். படுகுழிகளிலிருந்து எனது நம்பிக்கை என்னைப் பாதுகாத்திருக்கிறது, இன்னும் பாதுகாத்து

வருகிறது. அது என்னை ஒருபோதும் துரோகம் செய்ததில்லை. அது எவரையும் எக்காலத்திலும் துரோகம் செய்ததில்லை.

—'ஹரிஜன்' – 23-12-1939

# 48

# கொள்கைக்காக உயிரையும் கொடுக்க வேண்டும்

பள்ளிக்கூட ஆசிரியர்கள் அடங்கிய ஒரு கோஷ்டியினர் ஒரு நாள் காலை சேவாகிராமத்திற்கு வந்தார்கள். 'அறிவே தருமம்' என்பது உண்மையா என்று அவர்கள் காந்திஜியைக் கேட்டார்கள். "ஒரு குறிப்பிட்ட செயல்முறை தார்மிக ரீதியாகத் தவறு என்பதை நாம் நன்கு அறிந்தும்கூட, அதை நாம் தவிர்க்க முடிவதில்லை. அது ஏன்"? என்று அவர்கள் கேட்டனர். அவர்களுக்குப் பதிலாக காந்திஜி கூறியதாவது :

"பல விஷயங்களிலும் விட்டுக்கொடுப்பதே மனித வாழ்க்கையாகும். பேச்சளவில் உண்மையானது என்று நிர்ணயிக்கப்பட்ட ஒன்றை செயலில் நிறைவேற்றுவது எப்போதும் எளிதல்ல. இந்த மிகச் சாதாரண விஷயத்தை எடுத்துக்கொள்ளுங்கள். எல்லா ஜீவனும் ஒன்றே என்பதும், பாவம் செய்தவரையும் பாவம் செய்யாத முனிவரையும்கூடச் சமமாகக் கருதவேண்டும் என்பதும் சிறந்த கொள்கையாக இருந்துவருகிறது. கற்றறிந்த ஒரு பண்டிதர், ஒரு நாய், நாயின் இறைச்சியைத் தின்னும் ஒருவன் முதல் எல்லோரையும் நாம் சமநோக்குடன் பார்க்கவேண்டுமென்று கீதை* கூறுகிறது.

"இங்கே என்னை எடுத்துக் கொள்ளுங்கள். பாம்பை நான் கொல்லாவிடினும், அதைக் கொல்லுவதற்கு நான் கருவியாக இருந்திருக்கிறேன் என்பதை அறிவேன். நான் அவ்விதம் செய்திருக்கக் கூடாது என்பதையும் நான் அறிவேன். பாம்புகள் க்ஷேத்திர பாலகர்களாக (வயல்களைப் பாதுகாப்பவை) இருக்கின்றன. எனவே, அவற்றைக் கொல்ல நான் உதவி அளித்திருக்கக் கூடாது என்பதையும் உணருகிறேன். எனினும், என்னால் அதைத் தவிர்க்க முடியவில்லை. என்னால் அதைத் தவிர்க்க முடியவில்லையே

---

* வித்யாவினய ஸம்பன்னே ப்ராம்மணே கவி ஹஸ்தினி |
சுனி சைவ சுவபாகேச பண்டிதாஸ் ஸமதர்சின: ||
கீதை, 5–ஆம் அத்தியாயம், 18–ஆவது சுலோகம்.

இதன் பொருள்: கல்வியும் சிறந்த குணமான பணிவும் பொருந்திய பிராம்மணன், பசு, யானை, நாய், நாயைச் சமைத்துத் தின்னும் சண்டாளன் முதலிய யாவரையும் ஞானிகள் ஏற்றத் தாழ்வின்றி சமமாகவே கருதுகிறார்கள்.

என்று நினைப்பதால் யாதொரு பலனும் இல்லை. எல்லா ஜீவனும் ஒன்று என்ற கொள்கை எக்காலத்திலும் உண்மையாகும். அந்தக் கொள்கையை நான் கைவிட்டுவிடவில்லை. பாம்புகளிடம் எனக்கு இருக்கும் பயத்தைப் போக்கும்படியும், மற்ற வீட்டுப் பிராணிகளைப் போல் பாம்புகளையும் கையாளுவதற்கு அவசியமான அகிம்சை உணர்ச்சியை எனக்கு அளிக்கும்படியும் நான் கடவுளைப் பிரார்த்திக்கிறேன். மற்றோர் உதாரணத்தை எடுத்துக்கொள்ளுங்கள். அதுவும் மிகச் சாதாரணமானதுதான். நான் ஒரு கிராமவாசி, கிராமக் கைத்தொழில்களை அபிவிருத்தி செய்வதையே எனது கடமையாகக் கொண்டிருப்பவன் என்ற முறையில், நான் கிராமத்தில் செய்யப்பட்ட சவரக் கத்தியையே உபயோகிக்க வேண்டும். ஆனால், நான் ஓர் அந்நியநாட்டில் உற்பத்திசெய்யப்பட்ட கத்தியையே உபயோகிப்பதை நீங்கள் பார்க்கிறீர்கள். (ஆசிரியர்கள் வந்தபோது காந்திஜி சவரம் செய்து கொண்டிருந்தார்.) கிராமத்தில் செய்யப்பட்ட ஒரு சவரக் கத்தியை அனுப்பும்படி நான் நண்பர்களுக்கு எழுதியிருந்தால், அவர்கள் அவ்விதமே எனக்காக ஒன்று அனுப்பியிருப்பார்கள். எனினும், கிராம நாவிதர் எத்தகைய கத்தியை உபயோகித்தாலும் அவருக்கு உதவி செய்ய வேண்டுமென நான் நினைத்தேன். எனவே, அவரது அழுக்கு உடைகளையும், அவலட்சணமான கருவிகளையும் சகித்துக் கொண்டு அவரைத் திருத்தத் தீர்மானித்தேன். எனினும், ஒரு விஷயத்தில் மாத்திரம் நான் விட்டுக்கொடுக்க முடியவில்லை. எனக்கு என்ன நிபந்தனைகளின் மீது அவர் சவரம் செய்கிறாரோ, அதே நிபந்தனைகளின் மீது ஹரிஜனங்களுக்கும் சவரம் செய்ய அவர் மறுத்துவிட்டார். எனவே, அவரது உதவியின்றியே நான் சமாளித்துக் கொள்ள வேண்டியதாயிற்று. எனவே, இப்போது நான் ஓர் அந்நிய நாட்டு சவரக் கத்தியை உபயோகித்து வருகிறேன். நான் விரும்பினால், கிராமத்தில் செய்யப்பட்ட ஒரு கத்தியை நான் பெற்றிருக்க முடியும். இவ்விஷயத்தில் நான் விட்டுக் கொடுத்ததற்கு சமாதானம் சொல்ல முடியாதவனாக இருக்கிறேன். இருந்தாலும், அதற்கும் ஒரு காரணம் இருக்கிறது. ஓர் அன்பார்ந்த சகோதரி எனக்கு சவர உபகரணங்களைப் பரிசாகக் கொடுத்தார். அவற்றையே விட முடியாமல் நான் வைத்துக் கொண்டிருக்கிறேன். அந்தப் பரிசை என்னால் மறுக்க முடியவில்லை. அந்நிய நாட்டில் உற்பத்தியான அந்தக் கத்தியை நிராகரித்துவிட்டு கிராமத்தில் செய்யப்பட்ட ஒரு கத்தியே எனக்கு வேண்டும் என்று வற்புறுத்துவதன் மூலம், அந்தச் சகோதரியின் உணர்ச்சியைப் புண்படுத்த என்னால் முடியவில்லை. எனினும், விட்டுக்கொடுக்கும் இந்த முறையை எல்லோரும் பின்பற்றவேண்டும் என்று நான் கூறவில்லை. கொள்கைக்காக நாம் மிக்க அன்பார்ந்தவர்களின் அதிருப்திக்கு ஆளாகவும் தயாராக இருக்க வேண்டும்.

"விட்டுக்கொடுப்பதற்கே இடமிராத சில நிரந்தரமான கொள்கைகள் இருக்கின்றன. அக் கொள்கைகளைச் செயலில் காட்ட ஒருவர் தமது உயிரையும் கொடுக்கத் தயாராக இருக்க வேண்டும். யாராவது ஒருவர் உங்களிடம் வந்து உங்கள் சொந்த

மதத்தை விட்டு மற்றொரு மதத்தைத் தழுவும்படி வாள் முனையில் பயமுறுத்தினால், நீங்கள் அவ்விதமே வேறொரு மதத்தைத் தழுவுவீர்களா? மற்றும் யாராவது உங்களிடம் வந்து சாராயத்தைக் குடிக்கும்படியோ, மாட்டிறைச்சி தின்னும்படியோ அல்லது பொய் சொல்லும்படியோ உங்களை வற்புறுத்தினால், அந்த வற்புறுத்தலுக்கு இணங்குவதைக் காட்டிலும் உங்கள் உயிரையே தியாகம் செய்துவிட மாட்டீர்களா? கொள்கை என்றால் கொள்கைதான். அதைச் செயலில் காட்டத் திறனில்லை என்பதற்காக அதை ஒரு போதும் புறக்கணித்து விடக்கூடாது. நாம் அதைச் செயலில் காட்ட முயற்சிக்க வேண்டும்; மனப்பூர்வமாகவும், திட்டவட்டமாகவும், கஷ்டப்பட்டும் முயற்சிக்க வேண்டும்."

அச்சமின்றி முயற்சிப்பதே சுதந்திரத்தின் நிச்சயமான நிபந்தனையாகும் என்ற நமது கவியின் கீதம் எக்காலத்துக்கும் பொருந்தும் அல்லவா? "எங்கே மனம் அச்சமின்றி இருக்கிறதோ, எங்கே தலை கம்பீரமாக நிமிர்ந்திருக்கிறதோ, எங்கே சலியா முயற்சி நிறைவை நாடி நிற்கின்றதோ, அப்படிப்பட்ட சுதந்திர சொர்க்கத்தில், தந்தையே, எனது நாடு விழித்தெழட்டும்" என்கிறார் நமது கவி.

(ஸ்ரீ மகாதேவ தேசாயின் வாரக் கடிதத்திலிருந்து)

—'ஹரிஜன்' – 5—9—1936

## 49

# வாழ்க்கையில் விட்டுக் கொடுப்பது

உண்மையில் விட்டுக் கொடுக்கும் சம்பவங்களாலேயே வாழ்க்கை உருவாகியிருக்கிறது. மிக மிகத் தூய்மையான, தன்னலமற்ற அன்பே அகிம்சையாகும். எனவே, விட்டுக்கொடுக்க வேண்டுமென்று அது வற்புறுத்துகிறது. எனினும், அதற்கான நிபந்தனைகள் அத்தியாவசியமானவை. அதாவது அதை அனுசரிப்போரின் நடவடிக்கையில் தன்னலமோ, அச்சமோ, பொய்யோ எதுவும் இருக்கக் கூடாது. அகிம்சைக் கொள்கையை பலப்படுத்துவதற்காக அது இருக்க வேண்டும். மேலும், விட்டுக் கொடுப்பது இயற்கையானதாக இருக்க வேண்டும், வெளியிலிருந்து திணிக்கப்பட்டதாக இருக்கக் கூடாது.

—'ஹரிஜன்' – 17—10—1936

## 50

# தியாகத்துடன் விளையாடுகிறோம்!

எனது வங்காள யாத்திரையின் போது, ஒரு பொது ஸ்தாபனத்தைச் சேர்ந்தவர்கள் தங்களுடைய பெற்றோர்களின் ஸ்தாபனத்தைக் கவனியாமல், தங்களுடைய சொந்த ஸ்தாபனத்தையே

பராமரிக்க விரும்புகிறார்கள் என்ற திடுக்கிடவைக்கும் தகவலைக் கேள்வியுற்றேன். இது எனது அங்கீகாரத்தைப் பெற்றிருப்பதாகவும் கூறப்பட்டது. இப்பத்திரிகையில் நான் எழுதியுள்ள ஏதாவது அத்தகைய அபிப்பிராயத்தைக் கொடுக்குமாயின், அதற்காக நான் வாசகர்களிடம் மன்னிப்புக் கேட்டுக் கொள்ளுகிறேன். நெஞ்சறிந்து நான் அத்தகைய குற்றம் எதுவும் செய்ததாக தெரியவில்லை. நான் இன்றிருக்கும் நிலைக்கு முற்றிலும் எனது பெற்றோர்களே காரணமாவர். சிரவணன்* அவனது பெற்றோர்களிடம் எவ்வளவு அன்பு பூண்டிருந்தானோ, அது போலவே நானும் எனது பெற்றோர்களிடம் அன்பு கொண்டிருந்தேன். எனவே, மேற்கண்ட தகவலை நான் கேள்விப்பட்டபோது, என் மனத்தில் பொங்கியெழுந்த கோபத்தை மிகுந்த பிரயாசையுடனேயே நான் அடக்கிக் கொள்ள முடிந்தது. அந்த நிலையை மேற்கொண்டிருந்த இளைஞன் அதை ஒரு முக்கிய விஷயமாகவே கருதவில்லை. இப்போதெல்லாம் சில இளைஞர்கள் தாங்கள் மிகவும் உயர்ந்தவர்கள் என எண்ணுவதும், சிறிதும் குற்றம் குறையற்ற உதாரண புருஷர்களைப் போல் நடிப்பதும் நாகரிகமாகிவிட்டது. வயோதிகர்களும், தள்ளாதவர்களுமான தங்களுடைய பெற்றோர்களைப் பராமரிப்பதுதான், வயதுவந்த புதல்வர்களின் முழு முதற்கடமையாகும் என்பதே எனது அபிப்பிராயமாகும். தங்களுடைய பெற்றோர்களை ஆதரிக்க முடியாத நிலையில் உள்ள இளைஞர்கள் விவாகம் செய்து கொள்ளக்கூடாது. பெற்றோர்களைப் பராமரிக்கும் முக்கியமான கடமையை இளைஞர்கள் நிறைவேற்றினலன்றி, அவர்கள் பொதுத் தொண்டையும் மேற்கொள்ளக் கூடாது. அவர்கள் தங்களுடைய பெற்றோர்களுக்கு உணவும், உடையும் அளிப்பதற்காகத் தாங்கள் பட்டினி கிடக்கும்படி நேர்ந்தாலும் அதைப் பொருட்படுத்தக் கூடாது. எனினும், சிந்தனையற்றவர்களான அல்லது அறியாமையில் ஆழ்ந்துள்ள பெற்றோர்களின் கட்டளைகளுக்கு அவர்கள் இணங்கக் கூடாது. பெற்றோர்கள், தங்களுடைய ஜீவனத்திற்காகவன்றி போலி டம்பத்துக்காகவோ அல்லது தங்கள் புதல்விகளின் விவாகத்தையொட்டி படாடோபமான செலவுகளுக்காகவோ புதல்வர்களிடம் தொகை கேட்ட சம்பவங்கள் நிகழ்ந்துள்ளன. ஆனால், அத்தகைய கட்டளைகளுக்கு இணங்க மரியாதையுடன் மறுத்துவிட வேண்டியது பொதுநலத் தொண்டர்களின் கடமை என்பதே எனது அபிப்பிராயமாகும். உண்மையில், பொது நலத் தொண்டர் ஒருவர் கூட கொள்கைக்காக பட்டினி கிடக்கும்படி நேர்ந்ததாக எனக்கு ஞாபகமில்லை. சிலர், போதும் போதாத வாழ்க்கை

* யானை தண்ணீர் குடிப்பதாகக் கருதிய தசரத சக்கரவர்த்தியால் அம்பு எய்யப்பட்டு இறந்த சிரவணனையே காந்திஜி இங்கே குறிப்பிட்டுள்ளார். இரண்டு கண்களும் தெரியாத தனது தாய், தந்தை இருவருக்கும் சிரவணன் கண்களாக மாத்திரமல்ல, உயிராகவே இருந்து பணி செய்துவந்ததாக ராமாயணத்தில் காண்கிறோம். சிரவணன் இறந்த துக்கத்தைத் தாங்கமுடியாமல் தாங்களும் அக்னிப் பிரவேசம் செய்த அவனது பெற்றோர், தங்களைப்போலவே தசரதரும் மகனின் பிரிவாற்றாமையால் மரணமடைய வேண்டுமென்று அவருக்குச் சாபம் கொடுத்த சம்பவம் யாவரும் அறிந்ததே.

நடத்தி வருவதை நான் கண்டுள்ளேன். இன்னும் சிலருக்கு மேலும் அதிகமாகக் கிடைக்க வேண்டும் என்பதையும் நான் அறிந்து கொண்டுள்ளேன். எனினும், அவர்களுடைய வேலை அபிவிருத்தியடைந்து, அவர்களுடைய தகுதியும் தெரிந்துவிடும் போது அவர்கள் ஏழ்மையான வாழ்க்கை நடத்தும்படி இராது. கஷ்டங்களும் சோதனைகளும்தான் மனிதனை மனிதனுக்குகின்றன. ஆரோக்கியமான வளர்ச்சிக்கு அதுதான் அறிகுறியாகும். ஒவ்வோர் இளைஞனும் செல்வத்தில் புரண்டு கொண்டு, அவசியமான சாதனங்களின்றி வாழ்வது எப்படி என்பதை ஒரு போதும் அறியாவிடில், சோதனை வரும்போது அவனால் அதைச் சமாளிக்க இயலாது. தியாகம்தான் இன்பமாகும்.

எனினும், தியாகத்தை பொது மக்களின் எதிரே விளம்பரப் படுத்துவது சரியல்ல. பல தொண்டர்களும், தாங்கள் எத்தகைய தியாகமும் செய்யத் தயாராக இருப்பதாக என்னிடம் கூறினார்கள். அவர்களைக் குறுக்குக் கேள்விகள் கேட்டதிலிருந்து, பிச்சை யெடுத்து வாழ்வதுதான், அதாவது நன்கொடைகளைக் கொண்டு வாழ்வதுதான் அவர்கள் செய்துவரும் தியாகம் என்றும் என்னிடம் கூறினார்கள். பல பொதுத் தொண்டர்களும் அவ்விதமே செய்தார்கள். எனினும், தாங்கள் எதுவும் தியாகம் செய்ததாக அவர்கள் கூறிக் கொள்ளவில்லை. பல இளைஞர்கள் மிகவும் லாபகரமான உத்தியோகங்களைத் தியாகம் செய்திருக்கிறார்கள். அது, நிச்சயமாக அவர்களுக்குப் பெருமையே. புகழுரைகூட மிதமிஞ்சியதாகி விடக்கூடும் என்பதை நான் மரியாதையுடன் குறிப்பிட வேண்டும். தியாகம் செய்வது இன்பத்தைக் கொடுத்தாலொழிய, அது தியாகம் என்ற பெயருக்குத் தகுதியற்றது. தியாகமும் துக்கம் தோய்ந்த முகமும் பொருத்தமற்றவை. தமது தியாகத்திற்காக அனுதாபத்தை நாடுவோர், மானிட வர்க்கத்தின் மட்டரகமான உதாரணமாவர். புத்தர் பிரான் எல்லாவற்றையும் துறந்தார். ஏனெனில், அவரால் அவ்விதம் துறக்காமல் இருக்க முடியவில்லை. ஏதாவது உடைமையை வைத்துக் கொண்டிருப்பது அவருக்குச் சித்திரவதையாக இருந்தது. லோகமான்ய திலகர் இறுதிவரையில் ஏழையாகவே இருந்தார். ஏனெனில், செல்வத்தை வைத்துக் கொள்ளுவது அவருக்கு வேதனையாக இருந்தது. சில ரூபாய்களை வைத்துக் கொள்ளுவதைக் கூட ஆண்ட்ரூஸ் ஒரு சுமையாகக் கருதுகிறார். எனவே, அவருக்கு ஏதாவது ரூபாய் வந்தாலும், அதை இழந்து விட அவர் இடைவிடாது யுக்தி செய்கிறார்! அவர் யாருடைய மேற்பார்வையிலாவது இருக்க வேண்டியது அவசியம் என்று நான் அவரிடம் அடிக்கடி கூறுவது உண்டு. அவர் கவனித்துக் கேட்பார், சிரிப்பார், பிறகு சிறிதும் பச்சாத்தாபமின்றி முன் போலவே செய்யத் தொடங்கிவிடுவர்; அதாவது தனக்கென்று எதுவும் வைத்துக்கொள்ளமாட்டார். இந்தியத் தாய் பயங்கரமான ஒரு தேவதை. "என் குழந்தைகளே, நல்ல காரியம் செய்தீர்கள்; இப்போது நீங்கள் விடுதலை பெற்று விட்டீர்கள்"

என்று அவள் கூறுமுன், விருப்பத்துடனும், விருப்பமின்றியும் கூட பல இளைஞர்களும் இளம் பெண்களும் தியாகம் செய்து தீர வேண்டும் என்று கட்டளையிடுவாள். நாம் இன்னும் தியாகம் என்ற வார்த்தையுடன் விளையாடத்தான் செய்கிறோம். நாம் இனிமேல்தான் உண்மையான தியாகத்தில் ஈடுபடவேண்டியவர்களாக இருக்கிறோம்.

'எங் இந்தியா' - 25—6—1925

# 51

# மதமும் உணவும்

நான் ஒரு தீவிரமான உணவுச் சீர்திருத்தக்காரன். உணவுச் சீர்திருத்தத்திலும், உணவை மிக மிக எளியதாக்கிக் கொள்ள வேண்டும் என்பதிலும் நான் உற்சாக வெறி கொண்டிருப்பதாக என் நண்பர்களில் பலரும் கருதுகின்றனர். உணவுக்கும் தன்னடக்கத்திற்கும் மூலகாரணமான தொடர்பு இருக்கிறது என்பதில் சந்தேகமில்லை. எனினும், அதே சமயத்தில் உணவை முக்கியமாகக் கொண்டு மதத்தையும் நடத்தையையும் அளவிடுவது விஷமத்தனமான வழக்கமாகும். களங்கமற்ற மத உணர்ச்சி வளர்ச்சி அடைவதற்கு, அத்தகைய வழக்கம் இடையூறாகும்.

'எங் இந்தியா' – 25-11-1926

# 52

# தரும காரியத்திற்கு நிதி திரட்ட சூதாட்டம்!

கோவாவில் ஆஸ்பத்திரிகளைப் பராமரிப்பதற்காக லாட்டரிகள் நடத்த ஏற்பாடாகியிருப்பதைக் குறித்து ஒருவர் எனக்குக் கடிதம் எழுதியிருக்கிறார். அந்த லாட்டரிகளில் பிரிட்டிஷ் இந்தியாவில் உள்ள மக்கள் லட்சக் கணக்கான ரூபாய் செலவு செய்யப் போவதாகவும், யாதொரு முயற்சியுமின்றி திடீரென்று பணக்காரர்களாவதுடன், புண்ணியத்தையும் கட்டிக் கொள்ள வேண்டும் என்ற வீண் நம்பிக்கையே அதற்குக் காரணம் என்றும் அந்த நிருபர் கூறுகிறார். அதன் சம்பந்தமான விளம்பரத்தையும் அவர் எனக்கு அனுப்பியுள்ளார். அதன் விவரம் வருமாறு:

"நோயாளிகளிடம் கருணை காட்டுங்கள். ஏழைகளுக்குக் கொடுப்போர் கடவுளுக்குக் கொடுத்தவர்களாகிறார்கள். எனவே, இந்த லாட்டரியில் ஒரு ரூபாய் போட்டு நீங்கள் ஏன் ஏழைகளுக்கு உதவி அளிக்கக் கூடாது? தருமம் செய்வதற்கு இது ஒரு சிறந்த முறையாகும்."

தலை நரைத்த, வணங்குவதற்குரிய ஒரு வயோதிக கனவானுடைய படமும் அந்த விளம்பரத்துடன் வெளியாகியிருக்கிறது. அந்த லாட்டரிகளின் மூலம் கிடைக்கும் தொகையைக் கொண்டு நிர்மாணிக்கப்படும் ஆஸ்பத்திரிகளின் நிலைமை எப்படி இருக்கும் என்பதை அறிந்துகொள்ளுவது ருசிகரமான விஷயமாக இருக்கலாம். மனிதரின் பேராசையைத் தூண்டி வசூலிக்கப்படும் தொகையைக் கொண்டு தரும ஸ்தாபனங்களை அமைக்கும் விஷயம் பரிசீலனைக்கு உரியதாகும். இந்த லாட்டரியில் பணம் போடும் லட்சக் கணக்கானவர்களுக்கு பரிசு கிடைக்கப் போவதில்லை. எனவே, பரிசு பெறத் தவறுவோருக்குப் புண்ணியம் கிடைப்பதாகக் கூறுவதும் பரிசீலனைக்கு உரிய விஷயமேயாகும்.

வேலை செய்யாமலும், நல்ல நாள் வரும்வரையில் காத்திராமலும் பணக்காரர்களாகிவிட வேண்டும் என்ற அவசரம் எங்கும் நிலவி வருகிறது. குதிரைப் பந்தயத்திலோ அல்லது ஒரு லாட்டரியிலோ ஒரு ரூபாய் செலவு செய்யும் ஒவ்வொருவரும் நம்பிக்கையாகிய கோபுரத்தையே எழுப்பி விடுகிறார்கள். அவரைப் போலவே ஏராளமான ஆடவர், பெண்கள் கொண்டிருந்த நம்பிக்கை பாழாவதை அஸ்திவாரமாகக் கொண்டே அந்தக் கோபுரம் எழும்புகிறது. அவர்கள் எல்லோருக்கும் பரிசு பெற சம உரிமை உண்டு அல்லவா? மிகவும் மரியாதையுள்ளவர்களைக் கூட சூதாட்ட உணர்ச்சி ஆட் கொண்டிருக்கும் போது, லாட்டரி முறையை மாத்திரம் கண்டிக்க முற்படுவது கஷ்டமான காரியமாகும். பங்கு மார்க்கெட், சூதாட்டமாகிற ஒரு வெறி ஜுரமே. அப்படியிருந்தும், அந்த ஜுரத்திலிருந்து விடுதலை பெற்றிருப்பவர் யார்? பங்கு மார்க்கெட்டில் ஜால வித்தை செய்து ஒரே நாளில் பணக்காரராகிவிடுவோர், தம்மிடம் திடீரென்று செல்வம் குவிந்ததன் விளைவாக, எத்தனை விதவைகளின் குடும்பங்கள் பாழடைந்தன என்பதை அறிவார். நாம் கற்பனை செய்யும் பங்கு மார்க்கெட் சூதாட்ட நபரைப் போல், பங்குகள் வாங்கிய விதவைகளின் உறவினர்களும் அதே நம்பிக்கையுடன் இருந்திருப்பார்கள் அல்லவா?

பருத்தி, அரிசி, சணல் முதலியன அத்தகைய சூதாட்டத்தின் சாதனங்களாக இருப்பது விந்தையாகும். லாட்டரி முறையும் இதே சூதாட்ட உணர்ச்சியின் அநாகரிகமான ஓர் அம்சமே. லாட்டரியை மரியாதைக்கு உகந்த காரியம் அல்ல என்று கருதுவது நல்லதேயாகும். எனினும், லாட்டரிக்கும், பங்கு மார்க்கெட்டுக்கும் பொதுவான சூதாட்ட உணர்ச்சியை நன்கு உணர்ந்து, அந்த நோயின் மூல காரணத்தை வேருடன் களைந்தெறிவதே மிகச் சிறந்தது. ஆனால், அது வெகு தொலைவில் உள்ள நம்பிக்கையாகும்.

அதிலும், ஒரு தரும ஸ்தாபனத்தை யொட்டி லாட்டரி முறையைக் கைக்கொள்ளும் விஷயமாக மிகவும் ஜாக்கிரதையாக இருக்கவேண்டியது அவசியம். நியாயமான உரிமையின்றி பணக்காரனாகிவிட விரும்புவது நிச்சயமாக தீமையேயாகும். சூதாட்டத்

துடன் தருமகாரியத்தைப் பிணைப்பது நிச்சயமாகத் தவறு என்றே சொல்லவேண்டும். லாட்டரிகளில் பணத்தை வாரியிறைப்போர், சட்டவிரோதமான தங்களுடைய பேராசையைத் திருப்தி செய்து கொள்ளலாம் என்று நம்புவதும், அதே சமயத்தில் அதனுல் புண்ணியமும் உண்டு என்று எண்ணுவதும் கூடாது. ஒரே சமயத்தில் நாம் கடவுளையும் தனதேவதையையும் வணங்கக்கூடாது.

கோவா ஆஸ்பத்திரிகளின் கிறிஸ்தவ நிர்வாகிகள், மனித இயற்கையின் தீய போக்கைச் சாதகமாகக் கொண்டு மதத்தை ஏன் இழிவுபடுத்தவேண்டும்? லட்சக்கணக்கான மக்களை அதர்ம நோய்க்கு இலக்காகும்படி செய்து ஓர் ஆஸ்பத்திரியை ஆதரிக்க முயற்சிப்பதன் மூலம், தாங்கள் கடவுளை மகிழ்விக்கலாம் என்று அவர்கள் கற்பனை செய்துகொள்ளுகிருர்களா? அவர்கள் செய்வது, கடைத் தேங்காயை எடுத்து வழிப்பிள்ளையாருக்கு உடைப்பதாகாதா? ஒருசில உடல்களைக் குணப்படுத்துவதற்காக, அவற்றைப்போல் ஆயிரம் மடங்கு அதிகமான ஆன்மாக்களுக்குப் புண் உண்டாகும்படி செய்வதால் அவர்களுக்கு என்ன லாபம்?

—'எங் இந்தியா' – 24 – 5—1928

# 53

# கற்களை எறிந்து கொல்லுதல்

தேசீய காங்கிரஸ் மகாசபையின் தலைவன் என்ற முறையில் எனக்கு நீண்ட தந்தி ஒன்று வந்திருக்கிறது. ஆப்கானிஸ்தானில் அகமதிய பிரிவைச் சேர்ந்த இரண்டுபேரைக் கற்களால் அடித்துக் கொன்றதன்சம்பந்தமாக அத்தந்தியில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. காலஞ்சென்ற நியமதுல்லாகான் மீது சுமத்தப்பட்ட பயங்கரமான தண்டனையைப்பற்றி நான் வேண்டுமென்றே வியாக்கியானம் செய்யவில்லை. ஆனுல், இப்போது அறிவிக்கப்பட்டுள்ள சம்பவங்களை, குறிப்பாக, அவ்விஷயமாக எனது அபிப்பிராயத்தைத் தெரிவிக்கவேண்டும் என்று வேண்டுகோள் விடுக்கப்பட்டிருக்கும் போது, நான் அசட்டை செய்யத் துணியமாட்டேன்.

சில சந்தர்ப்பங்களில் மாத்திரமே கற்களால் அடிக்கும் முறை குரானில் விதிக்கப்பட்டிருக்கிறதென்று அறிகிறேன். ஆனுல், பிரஸ்தாப விஷயத்தைப் போன்றவை அந்த விதிக்கு உட்பட்டவை அல்ல. எனினும், கடவுளிடம் பயமுள்ள மனிதன் என்ற முறையில், எச்சந்தர்ப்பத்திலும் அந்த முறை தருமமான தல்ல என்பதே எனது உறுதியான அபிப்பிராயமாகும். நபிநாயகம் அவர்களின் வாழ்நாளிலோ, அக்காலத்திலோ எது அவசியமாகவோ அல்லது அனுமதிக்கத்தக்கதாகவோ இருந்திருப்பினும், குரானில் குறிப்பிடப்பட்டிருக்கிறது என்ற ஆதாரத்தைக் கொண்டு மாத்திரம் இத்தண்டனை முறை நியாயமானது என்று வாதிப்பது முடியாத காரியம். பகுத்தறிவை

அடிப்படையாகக் கொண்ட இக்காலத்தில், ஒவ்வொரு மதத்தின் ஒவ்வொரு விதியும் பகுத்தறிவு என்ற அக்னிப் பரீட்சைக்கு உட்பட்டுத் தீரவேண்டும், எல்லோருடைய சம்மதத்தையும் அந்த விதி பெறவேண்டுமாயின், அது உலக நீதிக்கு உகந்ததாகவும் இருக்கவேண்டும். ஒரு தவறை உலகத்தில் உள்ள நீதி நூல்கள் யாவும் ஆதரிப்பதாக இருந்தால்கூட, அதற்கு விலக்கு அளிக்கவேண்டும் என்று கூற முடியாது. அது மனிதனின் மனச்சாட்சியைப் புண்படுத்தும் ஒரு தண்டனை முறையாகும். ஒருவர் செய்த குற்றம் எவ்வளவு இழிவானதாக இருந்தாலும், அதற்காக அவரைச் சித்திரவதைக்கு உட்படுத்து வதை பகுத்தறிவோ, உள்ளமோ ஒப்புக்கொள்ள முடியாது.

—'எங் இந்தியா' – 26—2—1925

## (2)

அகமதிய அஞ்சுமான் இஷாத்-இ-இஸ்லாம் தலைவரான டாக்டர் முகமது அலி அனுப்பியுள்ள கீழ்க்கண்ட தந்தியை நான் மகிழ்ச்சியுடன் வெளியிடுகிறேன்.

"எந்தக் குற்றமாயினும், குற்றவாளியைக் கற்களால் அடித்துக் கொல்ல வேண்டும் என்று குரான் கட்டளையிடவில்லை. எனவே, உங்களுடைய குறிப்பு, இஸ்லாமுக்கும் நபி நாயகத்திற்கும் அநீதி செய்வதாகவும் இஸ்லாமுக்கு விரோதமாக உலகம் மிகுந்த தப்பெண்ணம் கொள்ளும்படி செய்வதாகவும் இருக்கிறது. இது, உங்களுடைய ஆய்ந்தோய்ந்த அபிப்பிராயம் அல்ல என்பதும், வதந்தியை அடிப்படையாகக் கொண்ட கருத்து என்பதும் எனது நிச்சயமான எண்ணமாகும். சம்பந்தப்பட்ட விஷயங்களை யொட்டி குரானின் எனது ஆங்கில மொழி பெயர்ப்பைப் பார்த்தால், உங்களுக்குத் தகவல் கொடுத்தவர்கள் தவறு செய்திருக்கிறார்கள் என்பதை நீங்கள் அறிந்து கொள்ளுவீர்கள். தயவு செய்து யோசித்து அதற்கு மறுப்பு எழுதுங்கள்."

எனது கண்டனத்தை டாக்டர் முகமது அலி தவறாகப் பொருள்கொண்டிருக்கிறார். சில சந்தர்ப்பங்களில் கற்களால் அடித்துக் கொல்லுவதை ஒரு தண்டனையாக குரான் விதித்திருக்கிறது என்று சிலர் கூறுவதை நான் அறிவேன். அத்தகைய தண்டனை குரானில் விதிக்கப்பட்டிருக்கிறதா, இல்லையா என்பது பற்றியோ, அவ்வித சம்பிரதாயத்தைப் பற்றியோ நான் எனது அபிப்பிராயத்தைக் கூறவில்லை. திருக்குரானை ஆதாரமாகக் கொண்டுகூட அத்தண்டனை நியாயமானதென்று வாதிக்க முடியாது என்றே நான் கூறினேன். கல்லெறியும் தண்டனையைக் குரான் விதிக்கவில்லை என்று டாக்டர் முகமது அலி எனக்கு உறுதி கூறுவதைக் குறித்து நான் மகிழ்ச்சி அடைகிறேன். அத்தண்டனை நியாயமானதென்று எந்த ஆதாரத்தின் மீது காபூலில் கூறுகிறார்கள்? இந்தியாவிலுள்ள முஸ்லிம்களில் ஒரு பகுதியினர் எந்த ஆதாரத்தின் மீது அதை ஆதரிக்கிறார்கள்? இதையெல்லாம் அறிந்துகொள்ள நான் விரும்புகிறேன். கல்லெறிந்து கொல்லும் தண்டனை முறையை

முஸ்லிம்கள் எல்லோரும் ஏகமனதாகக் கண்டிக்கவேண்டும் என்பதே எனது விருப்பமாகும். அவ்விதம் கண்டித்தால், இஸ்லாமிய உலகத்திலேயே இனி அத்தகைய தண்டனை விதிக்கப்படுவதை சாத்தியமற்றதாகச் செய்துவிடலாம்.

—'எங் இந்தியா' – 12—3—1925

## (3)

பஞ்சாப் கிலாபத் கமிட்டியின் தலைவர் என்ற முறையில் மௌலானா ஜாபர் அலி அனுப்பியுள்ள கீழ்க்கண்ட கடிதத்தை நான் மகிழ்ச்சியுடன் பிரசுரிக்கிறேன் :

"காபூலில் கல்லெறிந்த சம்பவங்களைப் பற்றி 'எங் இந்தியா'வில் வெளியாகியுள்ள உங்கள் அறிக்கையை நான் ஆச்சரியத்துடனும், வேதனையுடனும் வாசித்தேன். 'குரானில் குறிப்பிடப்பட்டிருக்கிறது என்பதை மாத்திரம் ஆதாரமாகக் கொண்டு அத்தண்டனை முறை நியாயமானதென்று வாதிக்க முடியாது' என்று நீங்கள் கூறுகிறீர்கள். 'பகுத்தறிவை அடிப்படையாகக் கொண்ட இக்காலத்தில் ஒவ்வொரு மதத்தின் ஒவ்வொரு விதியும் பகுத்தறிவு என்ற அக்னிப் பரீட்சைக்கு உட்பட்டுத் தீர வேண்டும். எல்லோருடைய சம்மதத்தையும் அது பெற வேண்டுமாயின், உலக நீதிக்கு உகந்ததாகவும் இருக்க வேண்டும்" என்றும் கூறியிருக்கிறீர்கள். 'ஒரு தவறை, உலகத்தில் உள்ள வேத நூல்கள் யாவும் ஆதரிப்பதாக இருந்தால் கூட, அதற்கு விலக்கு அளிக்க வெண்டும் என்று கூற முடியாது' என்று இறுதியில் நீங்கள் அடித்துக் கூறியிருக்கிறீர்கள்,

"உங்கள் பெருமைக்கு நான் எவ்விதத் தயக்கமுமின்றி எப்போதும் தலை வணங்கி வந்திருக்கிறேன். நவீன சரித்திரத்தை உருவாக்கும் ஒரு சில மனிதர்களில் தாங்களும் ஒருவர் என்றும் நான் எப்போதும் எண்ணி' வந்திருக்கிறேன். குரானுக்கு, அதைப் பின்பற்றுவோரின் வாழ்க்கையை அதன் சொந்தவழியில் ஒழுங்கு படுத்த எவ்வித உரிமையும் உண்டு. அந்த உரிமையை நீங்கள் ஆட்சேபித்திருப்பதன் மூலம், உங்களைப் பாராட்டி ஆதரிக்கும் கோடிக்கணக்கான முஸ்லிம்களுக்கு வழிகாட்டியாக இருக்க உங்களுக்குள்ள திறமையில் அவர்களுக்கு இருந்த நம்பிக்கை பாழாகும்படி செய்திருக்கிறீர்கள். இதை நான் உங்களுக்கு எடுத்துக் கூறுவிடில், நான் ஒரு முஸ்லிம் என்ற முறையில் கடமையிலிருந்து தவறியவனுவேன்.

"இஸ்லாம் மதத்திற்கு இணங்க, மத துரோகிகளைக் கற்களால் அடித்துக் கொல்லலாமா என்பது பற்றி உங்களது அபிப்பிராயத்தை ஒருவிதமாகவோ, மற்றொரு விதமாகவோ கூற உங்களுக்குப் பூரண சுதந்திரம் உண்டு. ஆனால், அத்தகைய தண்டனை முறையை குரான் ஆதரித்தால் கூட, அதை ஒரு தவறு என்றே கண்டிக்க வேண்டும் என்று கூறும் வாதம் முஸ்லிம்களின் மனத்திற்கு உகந்ததாக இருக்க முடியாது.

"தவறு என்பது பல வியாக்கியானங்களுக்கு இடம் கொடுப்பதாகும். எனவே, அதைத் தங்கள் சொந்த முறையில் வியாக்கியானம் செய்து கொள்ள முஸ்லிம்களுக்கு உரிமை உண்டு. அவர்களுக்கு, குரான் ஒன்றுதான் மாற்ற முடியாத சட்டமாகும். அடிக்கடி மாறும் கொள்கைகளுக்கும், அற்ப

மான மானிடவர்க்கத்தின் தந்திரங்களுக்கும் குரான் அப்பாற்பட்டதாகும். இந்தியாவின் தலைவர் என்ற முறையில், நீங்கள் பல விதமான அலுவல் களில் ஈடுபட வேண்டியவர்களாக இருக்கிறீர்கள். புனித குரானின் உபதேசங்களைக் கண்டிக்கும் சங்கடமான காரியத்தையும் அந்த அலுவல் களில் ஒன்ருகச் சேர்த்து கொள்ளாதிருப்பீர்களாக.''

எனது குறிப்பையொட்டி மௌலானு செய்துள்ள வியாக்கி யானம் சரியானதல்ல. புனித குரானின் உபதேசங்களுக்குப் பாதகமாகவோ அல்லது சாதகமாகவோ நான் எதுவும் கூறிவிட வில்லை. கல்லெறிந்து கொல்லும் தண்டனையை நியாயமான தென்று வாதிக்கும் உபதேசகர்கள், அதாவது விளக்கம் கூறுவோ ரையே நான் கண்டித்திருக்கிறேன். குரானையும், இஸ்லாமின் சரித்திரத்தையும் நான் போதிய அளவு அறிந்திருப்பதாகக் கூறிக் கொள்ளுகிறேன். ஏராளமான வியாக்கியான கர்த்தாக்கள் குரா னுக்கு, தாங்கள் முன் கூட்டியே கொண்டுள்ள கருத்துக்கு உகந்த வாறு தங்கள் விருப்பப்படி வியாக்கியானம் செய்திருப்பதையும் நான் அறிவேன். அத்தகைய வியாக்கியானங்களை யெல்லாம் ஒப்புக்கொண்டு விடக்கூடாது என்பதே எனது நோக்கமாகும். குரானின் உபதேசங்கள் கூட கண்டனத்திற்கு விலக்காக இருக்க முடியாது என்றே நான் கூற விரும்புகிறேன். ஒவ்வொரு உண்மையான வேத நூல்களுக்கும் கண்டனத்தினுல் லாபமே ஏற்படும். எதை தெய்வ வாக்காகக் கருதவேண்டும், எதை அவ் விதம் கருதக்கூடாது என்பதை நமக்கு எடுத்துக்காட்ட நமது பகுத்தறிவைத் தவிர வேறு எவ்விதச் சாதனமுமில்லை; தவறு என்பது அவரவர் அபிப்பிராயத்தைப் பொறுத்த விஷயம் என்றே மௌலானு கூறுவதை நான் பூரணமாக அங்கீகரிக் கிறேன். எனினும், சில விஷயங்கள் தவறு என்பது எல்லோரா லும் ஒப்புக்கொள்ளப்பட்டுள்ளன என்பதை நாம் அறிவோம். சித்திரவதை செய்து கொல்லுவது அத்தகைய தவறுகளில் ஒன்ருகும்; இஸ்லாம் சட்டப்படி மதத் துரோகிகளைச் கல்லால் அடித்துக் கொல்லலாமா என்பதுபற்றி எனது அபிப்பிராயத் தைத் தெரிவிக்க எனக்குப் பூரண உரிமை உண்டு என்ருல், இஸ்லாம் சட்டப்படி கல்லால் அடித்துக் கொல்லும் தண்டனை விதிப்பது சரியா என்பது பற்றி நான் ஏன் எனது அபிப்பிராயத் தைத் தெரிவிக்கக் கூடாது? இஸ்லாம் சம்பந்தமான எவ்விஷ யத்தை யொட்டியும் முஸ்லிம் அல்லாத ஒருவர் எவ்வித ஆட் சேபணையும் எழுப்பக் கூடாது என்று மௌலானு கூறுவது, அவர் சகிப்புத்தன்மையற்றவர் என்பதையே வெளிப்படுத்துகிறது. உயிரைப்போல் அருமையாகக் கருதும் விஷயத்தைப் பற்றிக்கூட எழும் கண்டனத்தைச் சகித்துக்கொள்ளுவதே பொதுவான கூட்டுவாழ்வின் வளர்ச்சிக்கு உகந்ததாகும். கண்டனம் நியாய மற்றதாக இருந்தால் கூட, இஸ்லாம் அதைக் கண்டு அஞ்ச வேண்டியதில்லை. காபூலில் நிகழ்ந்ததாகக் கூறப்படும் நிகழ்ச்சி களில் பயங்கரமான் பிரச்னைகள் அடங்கியிருக்கின்றன; எனவே, எனது கண்டனத்தை ஆதாரமாகக் கொண்டு மௌலானு அப்

பிரச்னைகளைத் தெளிவாக்கும் முயற்சியில் ஈடுபடவேண்டும் என்று நான் அவருக்கு யோசனை கூறுகிறேன்.

—'எங் இந்தியா' - 5—3—1925

## (4)

அகமதிய வகுப்பைச் சேர்ந்த சிலரைக் கற்களால் அடித்துக் கொல்லும்படி விதிக்கப்பட்ட தண்டனையைக் குறித்து நான் எழுதிய சுருக்கமான குறிப்பு, மிகவும் அதிகமான கடிதப் போக்குவரத்திற்குக் காரணமாகியிருக்கிறது. அக் கடிதங்கள் எல்லாவற்றையும் பிரசுரிப்பது முடியாத காரியம். எனவே, பலருடைய கருத்துக்களையும் வாசகர்கள் அறிந்து கொள்ளுவதற்குப் போதுமான சிலவற்றை மாத்திரம் வெளியிடுகிறேன். மத துரோகிகளுக்கு, கல்லால் அடித்து மரண தண்டனை விதிப்பது நியாயம் என்று மௌலானா ஜாபர் அலிகான் கூறுகிறார். "கற்களால் அடித்துக் கொல்லும் மிருகத்தனமான தண்டனையை இன்றைய மனித வர்க்கம் சகிக்க முடியாது; எனவே, தங்களுடைய கருத்துக்கள் முஸ்லிம்களின் உணர்ச்சிகளைப் புண்படுத்தவில்லை; கற்களால் அடித்துக் கொல்லும்படி குரான் கட்டளையிடவில்லை" என்று மௌலானா சப்தார் சயல்காட்டிலிருந்து எழுதியுள்ளார். வோகிங் நகரில் உள்ள (இங்கிலாந்து) முஸ்லிம் சங்கத் தலைவர் குவாஜா கமாலுதீனும், கற்களால் அடித்துக் கொல்லும் தண்டனை குரானில் விதிக்கப்படவில்லை என்று கூறியுள்ளார்.

குரானில் அத்தகைய தண்டனை விதிக்கப்படாததைக் குறித்து நான் மகிழ்ச்சி அடைகிறேன். குரானில் அவ்வித தண்டனை விதிக்கப்படவில்லை என்றாலும், இஸ்லாத்தில் அத்தண்டனைக்கு ஓர் இடம் இருக்கிறது என்று மௌலானா ஜாபர் அலிகான் கூறுகிறார். இஸ்லாம் மதத்திற்கு வெளியில் உள்ளவன் என்ற முறையில், அந்த வழக்கத்திற்கு ஆதாரம் எதுவாயினும், ஜீவ காருண்யத்திற்கு விரோதமானது என்று உலகத்தின் ஆய்ந்தோய்ந்த அபிப்பிராயம் நிராகரிக்கும் ஒரு விஷயத்தை, எனது முஸ்லிம் நண்பர்கள் சிறிதும் தயக்கமின்றிக் கண்டிக்க வேண்டும் என்பதே எனது விருப்பமாகும். எனவே, அத் தண்டனை முறையை, மௌலானா சப்தாரும், குவாஜா கமாலுதீனும் கண்டித்திருப்பதைக் குறித்து மகிழ்ச்சி அடைகிறேன். நபி நாயகம் அவர்களின் காலத்தில் அது வழக்கத்தில் இருந்திருந்தாலும், இஸ்லாமிய உலகின் தீர்ப்பு அதை ஆதரிப்பதாக இருந்தாலும்கூட, அது ஜீவகாருண்ய உணர்ச்சிக்கு முரணாக இருக்கிறது என்பதை அவ்விரு முஸ்லிம் தலைவர்களும் என்னைப்போல் கூறிவிடவேண்டும் என்பதே எனது விருப்பம்.

அந்தத் தண்டனை முறையை நான் கண்டித்தால், இஸ்லாமிய உலகில் எனக்குள்ள கௌரவத்திற்குக் குந்தகம் ஏற்பட்டுவிடுமோ என்று மௌலானா ஜாபர் அலிகான் கவலைப்படுகிறார். இஸ்லாமின்

பெயரால் நடைபெறும் காரியங்களைப் பற்றி எனது உண்மையான அபிப்பிராயத்தைத் தெரிவிப்பதால் எனது கௌரவம் போய் விடுவதாயின், அத்தகைய கௌரவம் கவைக்குதவாத கௌரவமாகும். உண்மை என்னவெனில், ஓரிடத்திலும் நான் கௌரவத்தை விரும்பவில்லை. நான் ஹிந்துக்களின் ஊழியனை இருப்பது போலவே, முஸ்லிம்கள், கிறிஸ்தவர்கள், பார்சிகள், யூதர்கள் முதலியோருடைய நண்பனுகவும் இருக்கிறேன். எனவே, என் கௌரவத்தைப் பற்றிய கவலையை, இஸ்லாம் கௌரவத்தைப் பற்றிய கவலையாக மாற்றிக் கொள்ளும்படி நான் மௌலானவைக் கேட்டுக் கொள்ளுகிறேன். அந்தக் கவலையில் நானும் பங்கு எடுத்துக் கொள்ளுவேன். நியாயமென்று நிரூபிக்க முடியாத ஒரு விஷயத்தை நியாயமென்று நிரூபிக்க முற்பட்டதன் மூலம், மௌலான தன்னையறியாமலேயே இஸ்லாமின் கௌரவத்தைக் குறைத்திருக்கிறுர் என்பது எனது அபிப்பிராயமாகும். மத துரோகத்திற்காக, கல்லாலோ அல்லது வேறுவிதமாகவோ மரண தண்டனை விதிப்பதை, எவ்வளவு குதர்க்கவாதத்தினுலும் நியாயமென்று நிரூபித்துவிட முடியாது.

எனது நிலைமை தெளிவாக இருக்கிறது. ஹிந்து மதத்தின் கௌரவத்தில் நான் எவ்வளவு அக்கறை எடுத்துக் கொள்ளுகிறேனே, அவ்வளவு இஸ்லாமைப் பற்றி நான் எழுதுகையில் இஸ்லாம் மதத்தின் கௌரவத்திலும் அக்கறை எடுத்துக் கொள்ளுகிறேன். ஹிந்து மதத்தை விளக்க நான் என்ன முறையைக் கையாளுகிறேனே, அதே முறையையே இஸ்லாம் மதத்தை விளக்கவும் நான் கையாளுகிறேன். குரானைப் போலவே, ஹிந்து மத நூலின் கட்டளை என்பதற்காக மாத்திரம் நான் ஒரு விஷயத்தைக் கூட நியாயம் என்று நிரூபிக்க முற்படுவதில்லை. ஒவ்வொரு விஷயமும் பகுத்தறிவு என்ற உரைகல்லின் சோதனைக்கு உட்பட வேண்டும். இஸ்லாம், பகுத்தறிவுக்கு இசைந்ததாக இருப்பதால், மக்களின் மனத்திற்கும் இசைந்ததாக இருக்கிறது. வேறு எந்த முறையும் கஷ்டத்தில் கொண்டு போய் விடும் என்பதை நீண்ட காலத்திற்குப் பிறகு தெரிந்து கொள்ளலாம். உலகில் பகுத்தறிவுக்கு அப்பாற்பட்ட விஷயங்கள் இருக்கின்றன என்பதில் ஐயமில்லை. அவற்றை நாம் பகுத்தறிவின் கீழ் சோதனைக்குக் கொண்டு வர மறுப்பதில்லை. எனினும், அவை அச்சோதனைக்கு உட்படமாட்டா. அவற்றின் இயல்பே, பகுத்தறிவுக்கு சவால் விடுப்பதுதான். கடவுள், பகுத்தறிவுக்கு உட்படாத அத்தகைய மர்மமாகும். அது பகுத்தறிவுக்கு முரண்பட்டதாக இல்லை; ஆனல், அதற்கு அப்பாற்பட்டதாக இருக்கிறது. கல்லால் அடித்துக் கொல்லுவது என்பது பகுத்தறிவுக்கு அப்பாற்பட்டதன்று. மத துரோகம் என்ருல், ஒருவர் தமது மதத்தைக் கைவிடுவது என்றே பொருளாகும். அது, மரண தண்டனை விதிக்கும்படியான அவ்வளவு மோசமான குற்றமா? அது அத்தகைய குற்றமெனில், இஸ்லாம் மதத்திற்கு மாறிய ஒரு ஹிந்துவைத் திரும்பவும் ஹிந்து மதத்திற்கு மாற்றுவது, மரண தண்டனைக்கு உரிய ஒரு நடவடிக்கையாகும்!

நான், காங்கிரஸ் மகாசபையின் தலைவனாகவும், முஸ்லிம்களின் நண்பனாகவும் இருப்பதால், இஸ்லாம் மதத்தைச் சேர்ந்த எந்த நடவடிக்கையையும், குரானில் கூறப்பட்டுள்ள எதையும் கண்டிக்கக் கூடாது என்று மௌலானா சாகிப் கூறுகிறார். இந்த வாதம் ஒப்புக்கொள்ள முடியாதது என நான் அஞ்சுகிறேன். நெருக்கடியான சமயத்தில் நான் எனது திட்டவட்டமான அபிப்பிராயத்தை வெளியிடாமல் மறைத்துவிட்டால், காங்கிரஸ் அக்கிராசனராக இருக்கவோ, முஸ்லிம்களின் நண்பனாக இருக்கவோ தகுதியற்றவனாகிவிடுவேன். கல்லெறி சம்பவம் ஒவ்வொரு எழுத்தாளரும் சம்பந்தப்பட்ட விஷயமாகும். அது, பொதுஜன ஒழுக்கத்தையும், பொதுவான ஜீவகாருண்யத்தையும் பொறுத்தது. அவ்விரண்டும்தான் உண்மையான எல்லா மதங்களுக்கும் அடிப்படையாகும்.

'எங் இந்தியா' – 26–3—1925

# 54

# இரக்கமற்ற செயல்

பூகா என்றால் என்ன என்பது பலருக்குத் தெரியாது. இன்னும், கல்கத்தாவில் பூகா எதிர்ப்பு சங்கம் இருக்கிறது என்பதைச் சிலரே அறிவர். மகாராஜாதிராஜா சர் விஜய சந்த் மஹதாப் பகதூரும், நீதிபதி சர் காஸ்டெல்லோவும் அச் சங்கத்தின் போஷகர்களாவர். ஸ்ரீராம்குமார் பங்கார் அதன் தலைவராக இருந்து வருகிறார். பூகா முறையைப் பற்றி அச் சங்கத்தின் காரியதரிசி கீழ் வருமாறு விவரிக்கிறார்:

"தினந்தோறும் இரண்டு தடவை ஒவ்வொரு கறவைப் பசுவினிடத்திலும் பூகா கொடுமைகள் கையாளப்படுகின்றன என்பதை உங்களுக்கு நான் தெரிவிக்க வேண்டியவனாக இருக்கிறேன். பசுவின் நான்கு கால்களையும் நான்கு பலமான கம்பங்களில் இழுத்துக் கட்டிவிடுகிறார்கள். பிறகு, அதனால் சிறிதும் அசைய முடியாதபடி இருவர் அதை இறுக்கிப் பிடித்துக்கொள்ளுகிறார்கள். பின்னர், 22 அங்குல நீளமும், 8 அங்குல சுற்றளவும் உள்ள ஒரு மூங்கில் கம்போ அல்லது குழாயோ அதன் ஜனன உறுப்பில் பலாத்காரமாகத் திணிக்கப்படுகிறது. பின்னர் அந்தக் குழாயின் வழியாக ஒருவன் வாயால் கருப்பைக்குள் காற்றைச் செலுத்துகிறான். அதன் காரணமாக கருப்பை விரிந்து கொடுக்கிறது. அதனால் பால் கொடுக்கும்படி அதிகமாக அழுத்தப் படுவதால், பால்காரன் அதிலிருந்து கடைசி சொட்டுப் பாலையும் கறந்துவிட முடிகிறது. பால் கறப்பதும் விவரிக்க முடியாதவாறு அவ்வளவு கொடுமையாக இருக்கிறது. அதனால் மாடு வலி பொறுக்கமுடியாமல் கஷ்டப்படுகிறது. மடியிலிருந்து ரத்தம் வரும் வரையில் கறந்துவிடுகிறார்கள். சிற்சில சமயங்களில் ரத்தத்தில் சில துளிகளும் பாலுடன் கலந்துவிடுகின்றன. அசையவே முடியாததால் பசு, மனிதத் தன்மையற்ற அந்த சித்திரவதையை சத்தமின்றி

சகித்துக் கொள்ளுகிறது. எனினும், அதன் உடலில் வியர்வை கொட்டுவதிலிருந்தும், கண்களிலிருந்து தாரை தாரையாக நீர் வழிவதிலிருந்தும் அதற்கு வலி தாங்க முடியவில்லை என்பதை ஊகிக்கமுடிகிறது. இவ்விதம், தினந்தோறும் ஒவ்வொரு பசுவும் இரண்டு தடவை கறக்கப்படுகிறது. பெரும்பாலும் ஒவ்வொரு தடவையிலும் கறக்கப்பட்டபின் மாடு மூர்ச்சையடைந்து விடுகிறது.''

காரியதரிசி விவரித்துள்ள அந்த முறையைக் காட்டிலும் அருவருக்கத்தக்க, கொடிய சித்திரவதையைக் கற்பனை செய்து கொள்ளுவதும் முடியாத காரியம். அத்தகைய சித்திரவதைக்கு உள்ளாகும் பசுக்களும் எருமைகளும் மலடாகி விடுகின்றன என்பதும், மேற்கண்ட சங்கக் கூட்டத்தின் நடவடிக்கைகளிலிருந்து தெரிகிறது. பூகா முறையை உபயோகித்தும் பால் கறக்காத மாடுகளை, கசாப்புக் கடைக்காரர்களிடம் அனுப்பிவிடுகிறார்கள்.

மாடுகளை அவ்விதம் சித்திரவதை செய்வோரின் மீது வழக்குத் தொடரும் பொறுப்பை சங்கம் ஏற்றுக் கொள்ளுகிறது. குற்றவாளிகளைக் கண்டுபிடிக்க அது சாதாரண உடையில் வேவுகாரர்களை நியமிக்கிறது. சங்கத்தின் நடவடிக்கை அவ்வளவில் நன்மையே ஆகும். எனினும், அது மாத்திரம் போதாது. ஒரு சில குற்றவாளிகளைத் தண்டிப்பதால் ஜீவகாருண்யமற்ற அக்கொடுமை நின்று விடாது. அந்தக் குற்றம் செய்வோரிடையே பிரசாரம் செய்ய வேண்டும்; அம் முறையின் தீமைகளை அவர்கள் அறிந்து கொள்ளும்படி செய்ய வேண்டும். அத் தீமையை வெற்றிகரமாகச் சமாளிப்பதற்கான நிச்சயமான வழி, கல்கத்தா முழுவதும் பால் விநியோகம் செய்யும் பொறுப்பை கார்ப்பொரேஷன் ஏற்றுக் கொள்ள வேண்டியதே. பால்காரர்களை அதன் சம்பள ஊழியர்களாக எடுத்துக் கொண்டுவிடலாம். பின்னர், பாலை அவ்விதம் கொடுமையான முறையில் கறக்கும் பேராசை ஏற்படாது. அப்போது அவர்கள் அதிகாரிகளின் மேற்பார்வையில் வேலை செய்வார்கள். பாலும் ஒழுங்கான கட்டுப்பாட்டின் கீழ் கறக்கப்படும். மக்களுக்கும், அவர்கள் கொடுக்கும் காசுக்கு சுத்தமான பால் கிடைக்கும் என்ற நம்பிக்கை உண்டாகும். பால் விநியோக இலாக்காவும் வருமானத்தைக் கொண்டு நடைபெறுது என்பதற்கு எள்ளளவும் காரணமில்லை. பாலின் விலையை சிறிது உயர்த்த வேண்டிய அவசியம் ஏற்பட்டாலும், அந்த அதிகப்படியான காசை மக்கள் மகிழ்ச்சியுடன் கொடுப்பார்கள். தபால் முத்திரை விற்பது அரசாங்கத்தின் ஏகபோக பாத்தியமாக இருப்பது போலவே, பால் விநியோகமும் முனிசிபாலிடியின் ஏகபோகமான உரிமையாக வேண்டும்.

—'எங் இந்தியா' – 19—6—1937

## 55

# பிராணிகளிடம் மனிதனின் கொடுமை

ஆக்ராவைச் சேர்ந்த சேத் அசல்சிங் இரண்டு மாதங்களுக்கு முன் எனக்கு ஒரு கடிதம் எழுதினர். அவரது ஆயுளில் அவர் முதல் தடவையாகத் தாம் நேரில் கண்ட ஒரு காட்சியைப் பற்றி அக்கடிதத்தில் விவரித்திருந்தார். பன்றிகளின் வாய்களைக் கட்டி விட்டு, ஹரிஜனங்கள் அவற்றை உயிரோடு தீயில் வறுத்ததை அவர் நேரில் பார்த்ததாகக் குறிப்பிட்டிருந்தார். அந்த விவரத்தைக் கேட்டு நான் நடுக்கமும் அதிர்ச்சியும் அடைந்தேன். சீக்கியர்களும், ஆந்திர தேசத்தில் உள்ள ஆயிரக்கணக்கான ஹிந்துக்களும் கூட பன்றிகளை உணவாக உபயோகிக்கிறார்கள் என்பதை நான் அறிவேன். இந்தியாவின் மற்றப் பாகங்களில் உள்ள ஹரிஜன் அல்லாதவர்களுக்கும் பன்றி இறைச்சி உணவாக இருக்கலாம். ஒன்று மாத்திரம் நிச்சயமாகக் கூறமுடியும். அதாவது சைவ உணவினரைத் தவிர்த்து மற்றவர்களில், முஸ்லிம்கள் மாத்திரம் ஒருபோதும் பன்றி இறைச்சி சாப்பிடுவதில்லை.

சிறிது இரக்கமுள்ளவர்கள், பன்றிகளை மூச்சுத் திணறும்படி செய்து கொல்லுகிறார்கள்; பிறகு அதை உடனே வறுக்க முற்படுகிறார்கள் என்று நேரில் கண்ட, வர்தாவில் உள்ள சக ஊழியர்கள் கூறுகிறார்கள். சிறிதும் இரக்கமற்றவர்கள்தான், பன்றிகளை உயிருடன் வறுக்கிறார்கள். தீயில் தள்ளப்பட்ட பன்றி வேதனை பொறுக்கமுடியாமல் துடித்துக்கொண்டு ஜ்வாலை விட்டெரியும் நெருப்பிலிருந்து அப்பால் ஓட முயற்சிக்கும்போது, சிலர் நெருப்பைச் சுற்றி நின்றுகொண்டு குண்டாந்தடிகளால் அதை அடிக்கிறார்கள்.

ஆந்திராவில் எத்தகைய வழக்கம் இருந்துவருகிறது என்பது பற்றிய தகவலை அறிவிக்கும்படி நான் ஸ்ரீ பாபிநீடுவுக்கு எழுதியிருந்தேன். அவரிடமிருந்து கிடைத்த பதில் இதுதான்:

"ஆந்திராவிலுள்ள பல்வேறு இடங்களிலும் பன்றிகளைக் கொல்ல பல்வேறு முறைகளைக் கையாளுகிறார்கள். அம்முறைகள் யாவும் மிக மிகக் கொடுமையானவையே; அவை பின்வருமாறு:

1. பன்றியைப் பிடித்து அதன் கால்களை நீண்ட கயிற்றினால் இறுகக் கட்டிவிடுகிறார்கள். அதன் மூக்கிற்கு மேல் வாயைச் சுற்றி மற்றொரு கயிற்றினால் மிகவும் இறுகக் கட்டிவிடுகிறார்கள். அதனால் பன்றி மூச்சுவிட முடியாமல் சிறிது நேரத்தில் இறந்துவிடுகிறது. இந்த வழக்கம் எங்கும் மிகவும் சாதாரணமாக இருந்து வருகிறது.

2. மேலே குறிப்பிட்டது போல் பன்றியின் கால்களை இறுகக் கட்டிவிடுகிறார்கள்; ஆனால், அதன் வாயைக் கட்டுவதில்லை. அதற்கு பதிலாக, அதைத் தண்ணீருக்குள் அமுக்கிக் கொன்றுவிடுகிறார்கள்.

3. மூன்றாவது முறை என்னவெனில், பன்றியின் கால்களைக் கட்டி, அதன் உடலில் ஓர் ஈட்டியைச் சொருகி அது இறக்கும் வரையில் ஈட்டியை

சொருகியபடியே வைத்துவிடுகிறார்கள். பன்றி பலமுள்ள கொழுத்த மிருகமாதலால், உடலில் ஈட்டி சொருகப்பட்டதன் காரணமாக நீண்ட நேரம் வலியினால் துடித்து இறக்கிறது.

4. மற்றொரு முறை என்னவெனில், பன்றியின் முன் கால்களும் பின் கால்களும் தனித்தனியாகக் கட்டப்பட்டு விடுகின்றன. பின்னர் அதைத் தலை கீழாகத் தள்ளி இருவர் அதன் கால்களை இறுக்கிப் பிடித்துக் கொள்ளுகின்றனர். மூன்றாவது நபர் அதன் மார்பில் தடியால் பல அடிகள் அடித்து அதைக் கொல்லுகிறார். மற்ற எல்லா முறைகளையும் காட்டிலும் இந்த முறையால் பன்றி அடையும் பயங்கரமான துன்பத்தை விவரிக்க முடியாது.

இப்போதெல்லாம் சிலர் பன்றியை சுட்டுக் கொன்றுவிடுவதாகக் கூறப்படுகிறது. ஆனால், இது எப்போதாவது அபூர்வமாக நிகழும் சம்பவமே யாகும்.

பன்றி இறைச்சியின் விலை அதிகமாதலால், ஹரிஜனங்கள் அதைத் தின்பது அரிதாகவே இருக்கிறது. ஆனால், கல்யாண விருந்துகளில் அது மிகவும் அத்தியாவசியமான உணவு வகையாகும். சில இடங்களில் ஹரிஜனங்கள் பன்றிக்குட்டிகளை வாங்கி, அது உணவுக்குத் தகுதியாக பெரிதாகும் வரையில் வளர்க்கிறார்கள். பின்னர், கிராமங்களில் உள்ள சகலரும் சேர்ந்து அந்தப் பன்றியை சொந்தக்காரரிடமிருந்து விலைக்கு வாங்குகிறார்கள். அதைக் கொன்றபின் அது அவர்கள் யாவருக்கும் சமமாகப் பங்கிட்டுக் கொடுக்கப்படுகிறது.''

ஸ்ரீ பாபிநீடு தமது கடிதத்துடன், பன்றிகளைக் கொல்லும் முறைகள் அடங்கிய அமெரிக்கத் துண்டுப் பிரசுரம் ஒன்றையும் அனுப்பியுள்ளார். அந்தத் துண்டுப் பிரசுரத்தை வாசிக்கும் வேதனையை நான் அனுபவித்துத் தீரவேண்டியிருந்தது. இறைச்சிக்காக பன்றிகள் எப்படி கொல்லப்படுகின்றன என்ற மிகவும் அருவருக்கத்தக்க விவரங்கள் அதில் அடங்கியிருந்தன. அவற்றில் எம்முறையைக் கைக்கொள்ளுவது என்பதற்கே இடமில்லை. எல்லா முறைகளும் கொடுமையாகவே இருக்கின்றன. இவ்விஷயத்தில், ஹரிஜன்ங்கள் தான் குறைந்த அளவு குற்றவாளிகள் என்பதைக் காட்டுவதே, நான் இதை எழுதுவதன் நோக்கமாகும். அதற்குக் காரணம் ஹரிஜனங்களின் இரக்கம் அல்ல, அவசியம் தான். எனவே, சேத் அசல்சிங் எழுப்பியுள்ள பிரச்னை, ஹரிஜனங்களின் சீர்திருத்தமல்ல, பரந்த ஜீவகாருண்யப் பிரச்னையே. இடம் கிடைக்கும்போதெல்லாம் ஹரிஜனங்களிடம் குற்றம் காணும் போக்கு நம்மிடையே இருக்கக் கூடாது.

சரி என்றும், தவறு என்றும் பாகுபாடு செய்யும் நமது உணர்ச்சி மழுங்கிவிடவில்லையாயின், மனிதர்களைப்போல் மிருகங்களுக்கும் உரிமைகள் உண்டு என்பதை நாம் உணர்ந்துகொள்ளுவோம். மனிதரின் உள்ளத்தைச் சீர்படுத்தும் இந்தக் கடமை ஜீவகாருண்ய சங்கங்களைச் சார்ந்தது. மமதைகொண்ட மனிதனின் அதிகாரத்தின் கீழ், கீழ்த்தர பிராணிகள் துடிக்கின்றன என்பதை நான் அறிவேன். மனிதன் தன்னுடைய பசியை,—அது சட்டபூர்வ

மானதாயினும் சரி, சட்டத்திற்கு விரோதமானதாயினும் சரி-திருப்தி செய்துகொள்ளுவதற்காக அருவருக்கத்தக்க எத்தகைய கொடுமையும் புரியத் தயங்குவதில்லை.

—'ஹரிஜன்' – 13—4—1935

## 56

## வாயில்லா ஆடுகள்

(29—1—1921-இல் காந்திஜி ஸ்ரீ ஸி. எப். ஆண்ட்ருசுக்கு எழுதிய கடிதத்தின் ஒரு பகுதியே கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது :)

தீண்டாதார்களைப்போல் காளிகட்ட விஷயத்திலும் நான் தீவிர உணர்ச்சியுடையவனாக இருக்கிறேன். நான் கல்கத்தாவில் இருக்கும்போதெல்லாம், காளிகட்டத்தில் ஆடுகளைப் பலி கொடுக்கிறார்கள் என்ற எண்ணமானது என்னை ஆட்கொண்டு என் மனத்திற்கு வேதனையைக் கொடுக்கிறது. அதன் காரணமாகவே கல்கத்தாவில் நிலைத்திருக்க வேண்டாமென்று நான் ஹரிலாலிடம்* கூறினேன். பறையர்கள் தங்களுடைய கஷ்டங்களை எடுத்துக் கூறமுடியும். அவர்கள் தங்கள் குறைகளைக் குறித்து விண்ணப்பம் செய்து கொள்ளலாம். அவர்கள் ஹிந்துக்களுக்கு விரோதமாக எழவும் முடியும். ஆனால், பாவம், வாயில்லா ஆடுகள்! அவைகளைப்பற்றி நினைக்கும்போது சிற்சில சமயங்களில் நான் வேதனையால் மனம் துடிக்கிறேன். எனினும், அதைப்பற்றி நான் பேசுவதோ அல்லது எழுதுவதோ இல்லை. இருந்தாலும், எனது மதத்தின் பெயரால் பலி செய்யப்படும் எனது இந்த சக பிராணிகளுக்காகத் தொண்டுபுரிய என்னை நான் தகுதியாக்கிக் கொண்டு வருகிறேன். அந்த வேலையை இந்த ஜன்மத்தில் நான் முடிக்க முடியாமற் போகலாம். அந்த வேலையை முடிக்க நான் மீண்டும் பிறப்பேன்; அல்லது எனது வேதனையை உணர்ந்த யாராவது ஒருவர் அதை முடிப்பார்.

—'ஹரிஜன்' – 29—4—1948

## 57

## மிருக பலி

தார்வாட் யுவர் சங்கக் காரியதரிசி பின்வருமாறு எழுதுகிறார் :

"தார்வாட் மக்களால் நீங்கள் மிகவும் உன்னதமாக மதிக்கப்பட்டு வருகிறீர்கள். எனவே, கீழ்க்கண்ட உண்மைகளை உங்களுக்கு எடுத்துக் கூற விரும்புகிறேன். ஏனெனில், மதிப்பு வாய்ந்த உங்கள் பத்திரிகையில் நீங்கள்

*ஹரிலால், காந்திஜியின் மூத்த மகன்.

அதைப் பற்றிக் குறிப்பிட்டு இம்சையைக் கைவிடும்படி நீங்கள் தார்வாட் மக்களைத் தூண்டலாம் அல்லவா? அந்த இம்சை, மதத்தைப் போர்வையாகக் கொண்டு இழைக்கப்பட்டு வருகிறது.

"வெகு காலமாக இந்த ஜில்லாவில் மிருக பலிகள் வழக்கத்தில் இல்லை. அப்படியிருந்தும், பத்து ஆண்டுகளுக்கு ஒருமுறை வருண தேவனைத் திருப்தி செய்வதற்காக யக்ஞங்கள் என்ற பெயரால் மிருக பலிகள் கொடுத்து வந்தனர். ஆனால் சென்ற வருஷத்திலிருந்து இந்த மயக்கம் அதிகமாக பலமடைந்து வருகிறது. சென்ற வருஷம் நடந்த யாகத்தில் நிரபராதிகளான நான்கு ஆடுகள்தான் பலியிடப்பட்டன. ஆனால், இந்த வருஷமோ, சுமார் ஒரே அடியாக 24 ஆடுகள் பலியிடப்பட்டுள்ளன. மகத்தான புண்ணியத்தைக் கொடுப்பதாகக் கூறப்படும் வாஜபேய யாகத்தை இவ்வருஷம் செய்தார்கள். சென்ற நூறு ஆண்டுகளாக இந்த யாகம் செய்யப்படவில்லை. இதற்கு, யாதொரு பாவமும் அறியாத சுமார் 24 மிருகங்கள் பலியிடப்பட்டன. காட்டுமிராண்டித்தனமானது என்ற கெட்ட பெயர் ஏற்பட்டு விட்டதாலேயே, அந்த யாகம் இவ்வளவு காலமாகச் செய்யப்படவில்லை. நூற்றுக்கணக்கான வருடங்களுக்குப் பிறகு இந்தக் கொடிய முறை தார்வாட் பிராம்மணர்களால் மறுபடியும் உயிர்ப்பிக்கப்பட்டிருக்கிறது. அவர்களில் பலர் ஒத்துழையாமை இயக்கத்தில் முக்கிய பங்கு எடுத்துக் கொண்டவர்களாவார்கள். அவர்கள் இன்றும் கதர் உடை அணிந்துகொண்டு, உங்களுடைய பெயரால் கதர் விற்பனையும் செய்கிறார்கள். இதில் மேலும் பரிதாபகரமான விஷயம் என்னவெனில், பெண்களும் சிறுமிகளும் அக்கொடிய காட்சிகளைப் பார்க்கும் பழக்கம் அடைந்து வருவதே யாகும். அங்கே ஆடுகளைக் கொல்லும் முறையும் மிகக் கொடுமையானது. அவற்றின் வாய்களை இறுகக் கட்டிவிட்டு, அவை இறக்கும் வரையில் முஷ்டிகளால் குத்துகிறார்கள். ஆடுகளைக் கொல்லும் இந்த முறையை அல்லது சித்திரவதையை, காட்டுமிராண்டித்தனமானது என்று கசாப்புக்கடைக்காரர்கள் கூடக் கண்டிப்பார்கள். எனினும், சாத்திரங்களின் பெயரால் அது நடைபெறுகிறது. சாத்திரப்படி ஆடுகள் கத்தக்கூடாதாம்! அதனாலேயே அவற்றின் வாய்களை இறுகக் கட்டிவிடுகிறார்கள்."

மேற்கண்ட கடிதத்தில் கூறப்பட்டிருப்பவையெல்லாம் உண்மையாயின், அது அதிர்ச்சி அளிக்கக்கூடிய ஒரு விஷயமாகும். அது மீண்டும் காட்டுமிராண்டிகளின் காலத்திற்குத் திரும்புவதாக இருக்கிறது என்பதில் சந்தேகமில்லை. மிருகங்களைப் பலி கொடுப்பதால் தெய்வங்கள் சாந்தியடைகின்றன என்பதை நம்புவோர், இந்த நாட்டில் கல்வியறிவு படைத்தவர்களிடையே இருப்பது ஆழ்ந்த துக்கத்திற்கும் வெட்கத்திற்கும் காரணமான ஒரு விஷயமாகும். நிரபராதிகளான ஆடுகளைக் கொல்லும் விதம் தார்வாட் யுவர் சங்கத்தின் காரியதரிசியால் சரியாக விவரிக்கப்பட்டிருக்குமாயின், அது மதத்தின் பெயரால் நடைபெறும் மனிதத்தன்மையற்ற ஒரு செய்கையே ஆகும். காரியதரிசியின் வர்ணனை மிகையாக இருக்கிறது என்றே நான் நம்புகிறேன். வங்காளத்திலிருந்தும் அத்தகைய கடிதம் ஒன்று வந்திருக்கிறது. மேன்மை பொருந்திய அந்த மாகாணத்தில், மதத்தின் பெயரால் தினந்தோறும் நடந்துவரும் மிருக பலிகளைக் கண்டிக்கும்படி, கடிதம் எழுதியவர் என்னைக் கேட்டிருக்கிறார். என்

கண்டனத்தின் பலனாக, பலியாவதிலிருந்து ஒரே ஒரு மிருகம் காப்பாற்றப்படுவதாக இருந்தால்கூட, என் முழு சக்தியையும் கொண்டு அதைக் கண்டிக்க நான் எப்போதுமே தயாராக இருக்கிறேன்.

எனினும், அத்தகைய பலிகள் கொடுக்கும் வழக்கத்திற்கு உற்சாகத்துடன் ஆதரவளிப்பதும், அவை நியாயமென்று வாதிப்பதுமே இப்போது நாகரிகமாகியிருக்கிறது என்று தோன்றுகிறது. சென்னையிலிருந்து ஒருவர் எனக்கு சில பத்திரிகைகளை அனுப்பியுள்ளார். சென்னையில் உள்ள கற்றறிஞர்களான பிராம்மணர்கள் அவ்விதம் மிருக பலி கொடுத்த விவரங்கள் அப்பத்திரிகையில் அடங்கியிருக்கின்றன. தேசமெங்கும் உள்ள யுவர் சங்கங்கள் இத்தகைய பலிகளை எதிர்த்துப் புரட்சி செய்வதுடன், அவை நடக்கமுடியாதவாறு பொதுஜன அபிப்பிராயத்தை உருவாக்கவேண்டும் என்பதே எனது விருப்பமாகும்.

மிருக பலிகள் நின்றதிலிருந்து, மக்கள் போர் வீர உணர்ச்சியை இழந்துவிட்டார்கள் என்ற வாதத்தையும் நான் கேள்விப்பட்டிருக்கிறேன். கிறிஸ்தவ மதம் ஏற்படுமுன், ஐரோப்பாவில் போதிய மிருக பலிகள் நிகழ்ந்துகொண்டிருந்தன; இழிவான, வெட்கக் கேடான மிருக பலிகள் நின்றதிலிருந்து, ஐரோப்பா போர் வீர உணர்ச்சியை இழந்துவிட்டதாகத் தோன்றவில்லை. நான் போர் வீர உணர்ச்சியை வணங்குபவன் அல்ல. எனினும், நிர்க்கதியான, சாதுவான, எதிர்க்காத வாயில்லாப் பிராணிகளைப் பயங்கரமான, கொடிய முறையைக் கைக்கொண்டு கொல்லுவதன் மூலம் போர் வீர உணர்ச்சி பயில்விக்கப்படுவதில்லை என்பதை நான் அறிவேன்.

—'எங் இந்தியா' – 21—11—1929

## (2)

கர்நாடகத்தில் நிலவிவரும் மிருக பலி வழக்கத்தைப்பற்றியும், 'எங் இந்தியா'வில் அதன் சம்பந்தமாக வெளியான விவரங்களைப் பற்றியும் ஸ்ரீ கங்காதரராவ் தேஷ்பாண்டே பின் வருமாறு எழுதுகிறார்:

சென்ற 21–ஆம் தேதி 'எங் இந்தியா'வில் 'மதத்தின் பெயரில்' என்ற தலைப்பின் கீழ் வெளியாகியிருந்த தங்களுடைய குறிப்பை வாசித்தேன். அதைக் குறித்து நான் ஆச்சரியப்படவில்லை. உங்கள் நிருபர் எழுதியுள்ள குறிப்பிட்ட சம்பவம் தார்வாடில் உண்மையாகவே நிகழ்ந்ததா என்பது எனக்குத் தெரியாது. ஆனால், அத்தகைய யாகங்கள் நடைபெறும் போதெல்லாம், அவர் விவரித்துள்ளபடி ஆடுகள் கொல்லப்படுகின்றன. கர்நாடகத்தைச் சேர்ந்த இந்தப் பக்கத்தில் அத்தகைய "பலிகளை" நானே நேரில் பார்த்திருக்கிறேன். இப்போது நான் அறிந்திருப்பதைப் போல் அப்போது நான் அகிம்சையின் தார்மிகப் பெருமையை நன்கு உணர்ந்து கொள்ளவில்லையாயினும், பயங்கரமான, மனிதத் தன்மையற்ற அம்முறை என் மனத்தில் ஆழ்ந்த உணர்ச்சியை உண்டாக்கியது. அந்தப் பலியைத் தடுக்க எனது நண்பர்

ஒருவர் தம்மால் இயன்ற அளவு முயற்சி செய்து கொண்டிருந்தார். அவர் பல நாட்கள் வரையில் உண்ணுவிரதமிருந்து, யாகத்திற்காகக் கூடியிருந்த "பண்டிதர்"களுடன் வாதித்தார். ஆனல், பகுத்தறிவை அடிப்படையாகக் கொண்ட எனது நண்பரின் வாதங்களுக்கு அவர்கள் பதில் அளிக்கவில்லை. ஆனல், அவரை அந்த இடத்திலிருந்தே தூக்கிச் சென்று அப்புறப்படுத்தி விட்டார்கள். பிறகு, மிருக பலி கொடுக்கும் குற்றம் மிகுந்த வெற்றியுடன் நிறைவேற்றப்பட்டது!

"ஆனல், மதத்தின் பெயரால் நடக்கும் இந்தக் கொடுமை பிராம்மணர் களுடன் நின்றுவிடவில்லை. பிராம்மணர்கள் எப்போதாவதுதான் யாகம் செய்கிறர்கள். ஆனல், கிராம தேவதையான காளியைத் திருப்தி செய்வதற் காக விழாக்களில் மதத்தின் பெயரால் நடக்கும் மிருகபலிகள் மிகவும் சகஜ மாக இருக்கின்றன. லிங்காயத்துகளைப் போன்று கண்டிப்பான சைவ உணவு அருந்தும் பிராம்மணரல்லாதாரும், ஜைனர்களும் கூட அந்த விழாக் களில் முக்கிய பங்கு எடுத்துக் கொள்ளுகிறர்கள். எருமைகள், ஆடுகள், சேவல்கள் முதலியவை பலியிடப்படுகின்றன. ஆடவர்கள், பெண்கள், குழந்தைகள் அடங்கிய பெரும் கூட்டத்தினர் அந்தக் காட்சியைக் கண்டு களிக் கிறர்கள். இந்த விழாக்கள் பொதுவானவை. சில இடங்களில் வருடத்திற்கு ஒரு முறை அந்த விழாக்கள் நடைபெறுகின்றன. அவை பொதுவாக பிராம்மணரல்லாதாராலேயே ஏற்பாடு செய்யப்படுகின்றன. அவற்றைத் தடுக்க பிராம்மணர்கள் எதுவும் செய்வதில்லை என்பதையும் நான் சொல்லத் தான் வேண்டும். கோரமான அந்தக் காட்சியைக் கண்டு முஸ்லிம் போலீஸ் சப் இன்ஸ்பெக்டர் ஒருவர் மூர்ச்சையடைந்து விழுந்துவிட்டார். உடனே அவரைக் கூட்டத்தினர் ஏளனம் செய்து, அவர் கோழை என்றும், தைரிய மில்லாதவர் என்றும் இகழலாயினர்.

"ஆனல், அதிர்ஷ்டவசமாக இப்போது உணர்ச்சி மாறிக்கொண்டு வருகிறது. உங்களுடைய அகிம்சை உபதேசம் தொலைவிலுள்ள கிராமங்களுக் கெல்லாம் எட்டி, அதனல் பலனும் ஏற்படத் தொடங்கியிருக்கிறது.

"எனது கிராமமான ஹூப்ளியும் அத்தகைய விழா ஒன்றை ஏற்பாடு செய்துவருகிறது. எனவே, கிராமத்திலுள்ள பஞ்சமர்கள் இயல்பாக எனது உதவியையும் யோசனையையும் நாடினர்கள். ஏனெனில், இப்போது நான் உங்களுடைய உபதேசங்களைப் பின்பற்றி வருகிறேன் என்பதை அவர்கள் அறிவார்கள். எனவே, நான் அதிகமாக விவாதிக்காமலேயே மிருக பலியை நிறுத்திவிடத் தீர்மானித்துள்ளனர். அவ்விதமே சக்கிலியர்களும் இவ்வருஷம் பலி கொடுப்பதில்லை என்று தீர்மானித்ததைக் கண்டு நான் ஆச்சரியம் அடைந்தேன். அவ்விஷயமாக இறுதிவரையில் போதிய மனபலத்தைக் கொடுக்கும்படி நான் இறைவனைப் பிரார்த்திக்கிறேன். இவ்விஷயத்தில் நமது கோரிக்கைக்கு இணங்க, நல்ல வார்த்தைகளினல் பொதுஜன அபிப்பிரா யத்தை உருவாக்கலாம் என்பது எனது நிச்சயமான கருத்தாகும்."

இரக்கமற்ற இந்தக் கொடுமை இப்போதே முற்றிலும் நிறுத் தப்படுவதற்கு உகந்தவாறு பொதுஜன அபிப்பிராயம் வேகமாக உருவாக வேண்டும் என்பதே எனது விருப்பம். சுதந்திரத்தை உயர்வாகக் கருதும் நாம், அதே சுதந்திரத்தை நமது சக பிராணி

களுக்கு அளிக்க எப்படி மறுக்க முடியும்? அவைகளுக்கு நினைக்க முடியாத கொடுமைகளை, அதிலும் மதத்தின் பெயரால் எப்படி இழைக்கமுடியும்?

—'எங் இந்தியா' – 26—12—1929

## (3)

காந்திஜி கர்நாடகப் பிரதேசத்தில் சுற்றுப் பிரயாணம் செய்தபோது ஓரிடத்தில் அவருக்கு அளிக்கப்பட்ட உபசாரப் பத்திரத்தில், அந்த ஊர் மாரியம்மன் கோவிலை ஹரிஜனங்களுக்குத் திறந்து விட்டிருப்பதாகக் குறிப்பிடப்பட்டிருந்தது. அந்தக் கோவிலில் மிருக பலிகள் நடப்பதாக காந்திஜிக்கு ஒரு கடிதமும் வந்திருந்தது. உபசாரப் பத்திரத்திற்குப் பதிலாக காந்திஜி கூறியதாவது :

ஹரிஜனங்களுக்குக் கோவிலைத் திறந்து விட்டிருப்பதைக் குறித்து, நான் அந்தக் கோவிலின் தர்மகர்த்தாக்களுக்கு வாழ்த்துக் கூறுகிறேன். எனினும், அந்தக் கோவிலில் மிருக பலிகள் கொடுக்கப்படுவதைக் கேட்க மிகவும் வருந்துகிறேன். எங்கே பலி கொடுப்பதற்காக மிருகங்களைக் கொல்லுகிறார்களோ, அத்தகைய எந்த இடத்தையும் புனிதமானதாக நான் கருதவில்லை. மற்ற நாடுகளில் உணவுக்காக கோடிக்கணக்கான பிராணிகளைக் கொல்லுகிறார்கள். ஆனால், கடவுளைத் திருப்திப் படுத்துவதற்காக அவ்விதம் செய்வதாக அந்த நாட்டினர் பாசாங்கு செய்வதில்லை. மிருகங்களைப் பலி கொடுப்பதன் மூலம் கடவுளைத் திருப்தி செய்யலாம் என்று கற்பனை செய்துகொள்ளுவது, மனிதனின் அறிவையும் உள்ளத்தையும் அவமதிப்பதாகும். தன்னலத் தியாகத்தின் மூலமும், தன்னையே பலி கொடுப்பதன் மூலமும் ஒருவர் கடவுளைத் திருப்தி செய்ய முடியும். எனவே, அந்தக் கோவிலின் தர்மகர்த்தாக்கள் கண்டிப்பான முறையைக் கைக்கொண்டு, பலி கொடுக்கும் தீய வழக்கத்தை ஒழித்து விடுவார்கள் என்று நம்புகிறேன். மிருக பலிகள் கொடுக்கப்படும் எந்தக் கோவிலுக்கும் செல்ல, ஹரிஜனங்களுக்கு உற்சாகம் அளிக்கக் கூடாது என்றும் நான் கூறுவேன்.

—'ஹரிஜன்' – 9—4—1934

## (4)

பெல்காமிலிருந்து ஒருவர் பின்வருமாறு எழுதுகிறார் :

"ஸர்ஸி என்ற இடத்தில் நடைபெறும் மாரியம்மன் திருவிழா, பம்பாய் மாகாணத்திலேயே நடைபெறும் மிகப் பெரிய விழாக்களில் ஒன்றாகும். இந்தப் பக்கத்தில் ஸர்ஸி கோவில் மிகவும் புகழ்பெற்றது. அதற்கு ஏராளமான வருமானம் கிடைக்கிறது. அத் தொகையைக் கொண்டு ஓர் உயர்தரப்பள்ளி, மருத்துவ விடுதி முதலிய பல பொதுநலப் பணிகளுக்கு உதவியளித்து வருகிறார்கள். நீங்கள் ஹரிஜன இயக்கத்தை ஆரம்பித்த போது, இந்த மாகா

ணத்திலேயே ஹரிஜனங்களுக்குத் திறந்து விடப்பட்ட முதல் கோவில் இது தான். மதத்தின் பெயரால் எருமை, ஆடு, கோழி எதையும் பலி கொடுக்கக் கூடாது என்று அப்போது நீங்கள் மக்களைக் கேட்டுக் கொண்டீர் கள். உங்கள் பிரசங்கம் கோரிய பலனை அளித்தது. கன்னட ஜில்லா ஹரி ஜன சேவா சங்கத் தலைவரும், அந்தக் கோவிலின் தர்மகர்த்தாக்களில் ஒரு வருமான ஸ்ரீ எஸ். என். கேசவனின் முயற்சியால், சில ஆண்டுகளுக்கு முன் அங்கே எருமை மாடுகளைப் பலி கொடுப்பது நின்றது. சமீபத்தில் நடந்த மாரியம்மன் திருவிழாவின்போது ஆடுகள், கோழிகள் பலி கொடுக்கப் படுவதும் நிறுத்தப்பட்டதற்கு அவரேதான் பொறுப்பாளியாவார். இவ் வாறுக, சுமார் 10,000 ஆடுகள், 15,000 கோழிகள் முதலியவற்றின் உயிர்கள் காப்பாற்றப்பட்டன. சிலருடைய கோபத்தைக்கூட லட்சியம் செய்யாமல் உற்ற சமயத்தில் தைரியமாக முன்வந்து பலிகளை நிறுத்தியதற்காக, ஜில்லா முழுவதும் அவருக்கு நன்றி செலுத்துகிறது.''

இது உண்மையில் நல்ல செய்தியாகும். ஸ்ரீ கேசவன், அவரது ஜீவகாருண்யத்திற்காக வாழ்த்துகளுக்கு உரியவராகி யிருக்கிறார். விரும்புவோர் தங்கள் இஷ்டப்படி எந்த இறைச்சி களை வேண்டுமாயினும் சாப்பிடட்டும். ஆனால், கோவில்களில் மிருக பலிகள் கொடுப்பது கடவுளையே இழிவுபடுத்துவதாகும். கடவுள் எதையாவது விரும்புகிறார் என்று கூறக் கூடுமாயின், அவர் விரும்புவதெல்லாம் பணிவும் பச்சாதாபமும் நிறைந்த உள்ளம் படைத்தவர்களின் தியாகத்தையேயாகும்.

—' ஹரிஜன் ' – 5—4—1942.

பகுதி மூன்று

# பிரார்த்தனை, வழிபாடு, அருள்நெறி

## 1

## முடிவற்ற போராட்டம்

ஒரு நண்பர் பின்வருமாறு எழுதுகிறார் :

"அக்டோபர் மாதம் 11-ஆம் தேதி 'எங் இந்தியா'வில் வெளியாகியுள்ள "அகிம்சையின் சிக்கல்" என்ற கட்டுரையில், கோழைத்தனமும் அகிம்சையும் ஒன்றுக்கொன்று முரணானவை என்று திட்டவட்டமாகக் கூறியிருக்கிறீர்கள். அதில் சந்தேகத்திற்கு இடமான வார்த்தை ஒன்றுகூட இல்லை. ஒரு மனிதனின் நடத்தையிலிருந்து கோழைத்தனத்தை எப்படி ஒழிப்பது என்பதைக் கூறும்படி உங்களை நான் கேட்டுக் கொள்ளலாமா? பழக்க வழக்கங்களே குணங்களாக மாறுவதை நான் கவனித்து வருகிறேன். எனவே, நமது பழைய பழக்கவழக்கங்களை ஒழித்துவிட்டு எவ்விதம் தைரியம், அறிவு, செயல் முதலியவற்றை முக்கியமாகக் கொண்ட புதிய வழக்கங்களை உருவாக்குவது? பழக்கவழக்கங்களை ஒழித்துவிட முடியும் என்பதிலும், சிறந்த, கண்ணியமான புதிய வழக்கங்களை உருவாக்கிக் கொண்டு ஒரு மனிதனின் நடத்தையையே புதிய முறையில் மாற்றிவிடலாம் என்பதிலும் எனக்கு ஐயமில்லை. பிரார்த்தனைகள், ஒழுங்கு ஆராய்ச்சிகள் முதலியவற்றின் மூலம் ஒரு மனிதன் இந்த ஜன்மத்திலேயே இரண்டாவது பிறப்பை அடையும் வழியைத் தாங்கள் அறிவீர்கள் என்று எனக்குத் தோன்றுகிறது. அவற்றைப்பற்றி எங்களுக்கு அன்பு கூர்ந்து நீங்கள் சொல்ல மாட்டீர்களா? 'எங் இந்தியா' இதழ் ஒன்றில் உங்கள் அறிவுரையையும் ஆலோசனையையும் கூறுங்கள். ஒரு மனிதன் தன்னை மீண்டும் புதிய மனிதனாக சிருஷ்டித்துக்கொள்ளக் கூடிய பிரார்த்தனை முறையையும், வழியையும் கூறி தயவுசெய்து எங்களுக்கு உதவி புரியுங்கள்."

முடிவில்லாத போராட்டத்தையே இந்தக் கேள்வி குறிப்பிடுகிறது. சரித்திரம் என்ற போர்வையில் மகாபாரதத்தில் இது மிகவும் அழகாகச் சித்திரிக்கப்பட்டிருக்கிறது. கோடிக்கணக்கானவர்களின் உள்ளங்களில் தினந்தோறும் அதே போராட்டம் தான் நடந்து கொண்டிருக்கிறது. பழைய பழக்கவழக்கங்களை வெற்றி கொள்ள வேண்டும்; தன்னகத்தே உள்ள தீய எண்ணங்களை அகற்ற வேண்டும்; நற்பழக்கங்களை அவற்றிற்குரிய ஸ்தானத்தில் மீண்டும் நிலைநிறுத்த வேண்டும்-இவைதான் மனிதனுக்கு விதிக்கப்பட்ட லட்சியமாகும். இந்த வெற்றியை நாம் எப்படி

அடைவது என்பதை மதம் நமக்குக் கற்பிக்கவில்லையாயின், அது நமக்கு ஒன்றுமே கற்பிக்கவில்லை என்றே ஆகும். இதில், வாழ்க்கையின் உண்மையான இம்முயற்சியில், நாம் வெற்றி அடைய ராஜபாட்டை எதுவும் இல்லை. கோழைத்தனம்தான் நம்மிடையே உள்ள மிகப் பெரிய தீமையாக இருந்து வருகிறது; அதுவே மிகப் பெரிய பலாத்காரமும் ஆகும் எனலாம். பலாத்காரம் என்ற பெயரால் நடைபெறும் ரத்தக்களரியைக் காட்டிலும் கோழைத்தனம் நிச்சயமாக எவ்வளவோ அதிக பலாத்காரமானது. கடவுளிடத்தில் நம்பிக்கையின்மையும், அவரது பெருமைகளைப் பற்றிய அறியாமையுமே கோழைத்தனத்திற்குக் காரணங்களாகும். கடிதம் எழுதிய நிருபர் கோருவதைப் போல் கோழைத்தனத்தையும், மற்ற தீமைகளையும் ஒழிப்பதற்கான 'அறிவுரையும் ஆலோசனையும்' கூறும் ஆற்றல் எனக்கு இல்லாததைக் குறித்து நான் வருந்துகிறேன். எனினும், எனது சொந்த உதாரணத்தை எடுத்துக்கூற முடியும். அதாவது, மனப்பூர்வமான பிரார்த்தனை, மனிதனிடமுள்ள மிகவும் சக்தி பொருந்திய ஒரு கருவி என்பதில் சந்தேகமே இல்லை. அந்தக் கருவியைக் கொண்டு கோழைத்தனத்தையும், மற்றுமுள்ள பழமையான சகல தீய பழக்கவழக்கங்களையும் போக்கிக் கொள்ளலாம். மனிதனுள் இருக்கும் கடவுளிடம் ஜீவநம்பிக்கையின்றி பிரார்த்தனை சாத்தியமில்லாத காரியமாகும்.

அதே விஷயத்தை, வெளியே அல்ல, உள்ளத்திற்குள் கடவுளுக்கும் சைத்தானுக்கும் நடக்கும் போராட்டமென்று கிறிஸ்தவ மதமும், இஸ்லாம் மதமும் வர்ணிக்கின்றன; அஹுரமாஜதிற்கும் (நல்ல சக்தி) அஹ்ரிமனுக்கும் (தீய சக்தி) நடக்கும் போராட்டமென ஜொராஷ்டிர மதம் வர்ணிக்கிறது; நல்ல சக்திகளுக்கும் தீய சக்திகளுக்கும் நடக்கும் போராட்டமென்று ஹிந்து மதமும் விவரிக்கிறது. எனவே, தீய சக்திகளுடன் உறவு கொள்ளுவதா அல்லது நல்ல சக்திகளுடன் உறவு கொள்ளுவதா என்பதை நாம் தீர்மானித்துக்கொள்ள வேண்டியவர்களாக இருக்கிறோம். கடவுளை பிரார்த்தனை செய்வதென்பது, கடவுளுக்கும் மனிதனுக்கும் உள்ள தெய்விகமான தொடர்பைத் தவிர வேறு எதுவுமில்லை. கடவுளைப் பிரார்த்திப்பதன் மூலமே மனிதன், அந்தகாரப் பிழம்பிலிருந்து விடுதலை அடைகிறான். எனினும், உள்ளம் கனிந்த பிரார்த்தனை என்பது வாயளவில் இறைவனைத் தோத்திரம் செய்வதல்ல; அது உள்ளத்திலிருந்து பொங்கி வருவதாகும். அத்தகைய பிரார்த்தனை மனிதனின் ஒவ்வொரு சொல்லிலும், ஒவ்வொரு செயலிலும், ஏன், ஒவ்வொரு எண்ணத்திலும்கூட பிரதிபலிப்பதாகும். பிரார்த்தனை செய்யும்போது ஒரு தீய எண்ணம் அவனை வெற்றிகரமாக ஆட்கொள்ளுமாயின், அவனது பிரார்த்தனை வாயளவில் செய்ததாக ஆகிவிடுகிறது. அதுபோலவே, ஒரு தீய சொல் அவன் வாயிலிருந்து வெளிவருமாயின், அவனால் ஒரு தீச்செயல் புரியப்படுமாயின், அவனது பிரார்த்தனை வாயளவில் செய்த பிரார்த்தனையாகிறது. உண்மையான பிரார்த்தனை, இந்த

மூன்று தீமைகளிலிருந்தும் மனிதனுக்கு ஒரு கேடயமாகவும், பூரணமான பாதுகாப்பாகவும் இருக்கிறது. அத்தகைய உண்மை யான, ஜீவனுடன் கூடிய பிரார்த்தனை எப்போதும் எடுத்த எடுப் பில் முதல் முயற்சியிலேயே வெற்றியைக் கொடுத்துவிடுவதில்லை. நமக்கு எதிராக நாமே முயற்சி செய்யவேண்டியவர்களாக இருக் கிறோம்; நமக்கு எதிராக நாமே நம்பவேண்டியவர்களாக இருக்கி றோம். ஏனெனில், மாதங்கள்தான் வருஷங்களாகின்றன. பிரார்த் தனையின் சக்தியை நாம் உணர்ந்து கொள்ளுவதற்கு நாம் எல்லை யற்ற பொறுமையைக் கைக்கொள்ள வேண்டியவர்களாக இருக் கிறோம். அந்தகாரமும் ஏமாற்றமும், அதைவிட மோசமானதும் நம்மை ஆட்கொள்ளும். எனினும், இதையெல்லாம் எதிர்த்துப் போராடுவதற்குப் போதிய தைரியம் நமக்கு இருக்கவேண்டும்; நாம் கோழைத்தனத்திற்கு உட்பட்டுவிடக் கூடாது. பிரார்த்தனை செய்யும் மனிதனுக்கு, பின் வாங்குவது என்பதே இல்லை.

நான் இங்கே கூறிவருவது வெறும் கட்டுக்கதை அல்ல. நான் எனது கற்பனையைக் கொண்டு எதுவும் சித்திரிக்கவில்லை. தங்கள் முன்னேற்றப்பாதையில் இருந்த ஒவ்வோர் இடையூறையும் பிரார்த்தனையால் சமாளித்து வெற்றி பெற்றவர்களின் சாட்சி யத்தையே நான் குறிப்பிடுகிறேன். என்னுடைய பணிவான சொந்த உதாரணத்தையும் நான் சேர்த்துக் கூறியிருக்கிறேன். என் வரையில், தெய்வ நம்பிக்கையும் பிரார்த்தனையும் எனக்கு ஒன்றுதான். நம்பிக்கைக்கும் பிரார்த்தனைக்கும் நான் எவ்வளவு தூரம் கடமைப்பட்டிருக்கிறேன் என்பதை, நான் என் வாழ்நாளில் நாளுக்கு நாள் அதிகமாக உணர்ந்துவருகிறேன். சில மணி அல் லது நாட்கள் அல்லது வாரங்கள் பெற்ற அனுபவத்தையே கூறுகி றேன். என் பங்கிற்கு எத்தனையோ ஏமாற்றங்களையும், கார் இருளையும், சோர்வடையச் செய்யும் யோசனைகளையும், எச்சரிக்கை களையும், தந்திரமான அவமதிப்புகளையும் நான் சமாளிக்கும்படி நேர்ந்தது உண்டு. ஆனால், அத்தகைய கஷ்டங்கள் ஒவ்வொன்றை யும் எனக்குள்ள நம்பிக்கை சமாளித்து இறுதியில் வெற்றி பெற்றது என்பதை நான் கூறமுடியும். அந்த நம்பிக்கை அற்ப மானதே என்பதையும், எனக்கு எவ்வளவு நம்பிக்கை இருக்க வேண்டும் என்று விரும்புகிறேனோ அவ்வளவு நம்பிக்கை இல்லை என்பதையும் நான் அறிவேன்.

நம்மிடத்தில் நமக்கு நம்பிக்கை இருக்குமாயின், நமக்கு பக்தி உள்ளம் இருக்குமாயின், கடவுளை ஆசைகாட்டி ஏமாற்ற நாம் முற் பட மாட்டோம்; அவருடன் பேரம் செய்ய மாட்டோம். அதற்கு மாறாக நம்மை நாம் சூன்யமாகச் செய்துகொள்ளவேண்டும். பரோடாடா,* அவர் இறப்பதற்கு சிறிது காலத்திற்கு முன் பொன் போன்ற சமஸ்கிருத சுலோகத்தை எனக்கு அனுப்பிவைத்தார். தெய்வ பக்தியுள்ள ஒரு மனிதன் தன்னை, தான் எதுவுமே இல்லை

* கவியரசர் ரவீந்திரநாத் தாகூரின் மூத்த சகோதரரையே பரோடாடா என்று மேலே காந்திஜி குறிப்பிட்டுள்ளார்.

என்ற சூன்ய நிலைக்குக் கொண்டுவந்துவிடுகிறான் என்பதே அந்த சுலோகத்தின் பொருளாகும். நம்மை நாம் சூன்ய நிலைக்குக் கொண்டுவந்தாலன்றி, நம்மிடத்திலுள்ள தீமையை நாம் வெற்றி கொள்ள முடியாது. உலகத்தில் உண்மையான ஒரே விடுதலைக்கு விலையாக நாம் நம்மை முற்றிலும் கடவுளிடம் அர்ப்பணம் செய்துகொண்டு விடவேண்டும். அதற்குக் குறைந்த எதுவும் கடவுளுக்குத் திருப்தி அளிக்காது. ஒரு மனிதன் அவ்விதம் அர்ப்பணம் செய்துவிட்டால், அவன் அதே விநாடியிலேயே உயிர் வாழும் எல்லாவற்றிற்கும் தான் தொண்டு செய்பவன் என்பதை உணர்ந்துகொள்ளுகிறான். அது அவனுக்கு ஆனந்தமாகவும் பொழுதுபோக்காகவும் ஆகிவிடுகிறது. அவன் ஒரு புதிய மனிதனாகிவிடுகிறான். கடவுளின் படைப்பிற்குத் தொண்டு புரிவதில் தமது காலத்தைச் செலவு செய்வதில் அவன் எக்காலத்திலும் சோர்வு அடைவதில்லை.

—'எங் இந்தியா' - 20—12—1928

# 2

# பாவத்தை ஒப்புக்கொள்ளவேண்டும்

'ஒருவர் தாம் செய்த தவறை ஒப்புக்கொள்ளாமல் சூரியன் அஸ்தமிக்கும்படி விடக்கூடாது,' என்ற பழமொழியை நான் எப்போதுமே பின்பற்றி வந்திருக்கிறேன். மனிதராகப் பிறந்த எவரும் தவறு செய்யாமல் இருக்க முடியாது. ஒருவர் செய்த தவறை மறைப்பதிலும், அதை மழுப்புவதற்காகப் பொய் சொல்லுவதிலும் தான் ஆபத்து இருக்கிறது. ஒரு புண் சீழ் பிடித்துக்கொண்டால், அதை அழுத்தி அதிலுள்ள விஷத்தை வெளிப்படுத்திவிட்டால், அது குணமடைகிறது. ஆனால், அது உள்ளூறப் பரவ விட்டுவிட்டால், அதனால் நிச்சயமாக மரணம் ஏற்படும். பல ஆண்டுகளுக்கு முன் சாபர்மதி ஆசிரமத்தில் பலருக்கும் வைசூரி நோய் கண்டது. அது கொப்பளித்துக்கொண்டவர்கள் யாவரும் உயிர்தப்பினர். ஆனால், ஒருவருக்கு மாத்திரம் வைசூரி கொப்பளிக்கவில்லை. எனவே, பாவம், அவரது உடல் முழுவதும் சிவந்தும் வீங்கியும் அவர் இறந்தார். தவறும் பாவமும் அதுபோலத்தான். தெரிந்த பின், தவறையோ அல்லது பாவத்தையோ ஒப்புக்கொள்ளுவது, அதை அகற்றுவதே யாகும்.

தம்மைச் சீர்திருத்திக்கொள்ள முடியாமல் வீழ்ச்சியடைந்தவர் யாருமே இல்லை என்று ஆங்கிலத்தில் ஒரு பழமொழி உண்டு. எனினும், சீர்திருந்தவேண்டும் என்ற உறுதி அவருக்கு இருக்க வேண்டும். பாவம் செய்த ஒருவர், பாவத்தில் எவ்வளவு தூரம் ஆழ்ந்துவிட்டாலும், அவர் கடைசி மூச்சு போகும்போதுகூட மனம் வருந்தி தனது பாவத்தை ஒப்புக்கொண்டுவிட்டால், கடவுள்

அவரை மன்னித்துவிடுவார் என்று உறுதியாகக் கூறப்பட்டிருக்கிறது. மற்றொரு ஜன்மத்திலும், பல பிறப்புகளின் மூலம் கர்ம பலன்கள் தொடருகின்றன என்பதிலும் எனக்கு நம்பிக்கை உண்டு. இங்கே நாம் விதைப்பதை மற்றோரிடத்தில் அனுபவித்தே தீர வேண்டும். அதிலிருந்து யாரும் தப்பவே முடியாது. எனினும், மரணப்படுக்கையில் இருக்கும்போது கூட, ஒருவர் தாம் செய்த பாவத்திற்காக மனம் வருந்தினால், அவரது வருத்தமானது பாவத்தை எரித்து, அதன் தீய பலன்களைச் சக்தியற்றுப் போகும்படி செய்துவிடுகிறது.

—'ஹரிஜன்' – 20—10—1946

# 3

# பிரார்த்தனை என்றால் என்ன?

ஒரு வைத்திய பட்டதாரி கீழ் வருமாறு கேள்விகள் கேட்டுள்ளார் :

"பிரார்த்தனையில் சிறந்த முறை எது? அதில் எவ்வளவு நேரத்தைச் செலவிட வேண்டும்? நீதியுடன் நடந்துகொள்ளுவதே சிறந்த பிரார்த்தனை முறை என்பது எனது அபிப்பிராயமாகும். எல்லோருக்கும் நீதி வழங்க வேண்டும் என்பதில் அந்தரங்க சுத்தியுடன் இருப்பவர்கள், பிரார்த்தனை செய்ய வேண்டிய அவசியமே இல்லை. சிலர் வெகு நேரம் சந்தியாவந்தனம் செய்கிறார்கள். ஆனால், அவர்களில் 95 சத விகிதத்தினருக்கும் தாங்கள் கூறும் மந்திரங்களுக்கு அர்த்தம் தெரியாது. எவரும் தம்முடைய தாய் மொழியிலேயே பிரார்த்தனை செய்ய வேண்டும் என்பது என் அபிப்பிராயம். அவ்விதம் செய்தால் மாத்திரமே ஆன்மாவுக்குச் சிறந்த முறையில் பலன் ஏற்பட முடியும். மனப்பூர்வமாக ஒரு நிமிஷ நேரம் பிரார்த்தனை செய்தாலும் போதுமானது என்றே நான் கூறுவேன். பாவம் செய்வதில்லை என்று கடவுளிடம் உறுதி கூறுவதற்கு அந்த நேரம் போதுமானது."

கடவுளிடமிருந்து பயபக்தியுடன் ஏதாவது கேட்பதே பிரார்த்தனையின் பொருளாகும். எனினும், பக்தியுடன் கூடிய ஏதாவது நடவடிக்கையைக் குறிப்பதற்கு அந்தச் சொல் உபயோகப்படுகிறது. கடிதம் எழுதியிருப்பவரின் மனத்தில் உள்ளதைக் குறிப்பிட வழிபாடு என்ற சொல்லை உபயோகிப்பதே சிறந்தது. இது சம்பந்தமான விளக்கம் ஒருபுறம் இருக்கட்டும். தங்களைப் படைத்த கடவுளைத் தொழுவதற்காக ஒதுக்கி வைக்கப்பட்டுள்ள நேரத்தில் கோடிக்கணக்கான ஹிந்துக்களும், முஸ்லிம்களும், கிறிஸ்தவர்களும், யூதர்களும், மற்றவர்களும் என்ன செய்கிறார்கள்? கடவுளுடன் ஒன்றிய நிலையை அடைய, கடவுளின் அருளைப் பெற, உள்ளத்தின் வேட்கையை வெளியிடுவதே பிரார்த்தனை என்று எனக்குத் தோன்றுகிறது. இந்த இடத்தில் மன நிலைதான் முக்கியமேயன்றி, வாயால் கூறும் அல்லது முணு முணுக்கும்

வார்த்தைகள் முக்கியமல்ல. வார்த்தைகளின் சேர்க்கையானது, பண்டைய காலத்திலிருந்து வாழையடி வாழையாக வந்துகொண்டிருக்கிறது. அதனுல் உண்டாகும் உணர்ச்சி, அதை ஒருவரது தாய்மொழியில் பெயர்த்துக் கூறும்போது மறைந்துவிடும். உதாரணமாக, காயத்ரி மந்திரத்தை குஜராத்தியில் மொழி பெயர்த்தால், சமஸ்கிருதத்தில் உள்ள அந்த மந்திரத்தின் வேகம் குன்ருமல் அப்படியே இருக்க முடியாது. ராமா என்ற சொல்லைக் கூறினுல், கோடிக்கணக்கான ஹிந்துக்களின் மனம் உருகுகின்றது. ஆனுல், அதே அர்த்தத்தில் கடவுள் என்ற வார்த்தையை உபயோகித்தால் அதன் பொருளை அவர்கள் புரிந்துகொள்ளுவார்கள் என்ருலும், அது அவர்களுடைய உள்ளத்தைத் தொடாது. வார்த்தைகள் நீண்டகால உபயோகத்தினுலும், அவற்றிற்குள்ள தெய்விகத் தொடர்பினுலும் ஒருவித சக்தி பெற்று விளங்குகின்றன. எனவே, பிரபலமான மந்திரங்களோ அல்லது சுலோகங்களோ சமஸ்கிருதத்தில்தான் இருக்கவேண்டும் என்பதை ஆதரித்துக் கூறுவதற்கு தகுந்த காரணத்தைக் கூற முடியும். எனினும், அவற்றின் அர்த்தத்தை எல்லோரும் அறிந்துகொள்ளவேண்டும் என்பதைச் சொல்லவேண்டிய அவசியமில்லை.

பக்தி சம்பந்தமான காரியங்களைக் கைக்கொள்ளவேண்டிய நேரம் என்ன என்பதுபற்றி நிர்ணயமான விதி எதுவும் வகுக்க முடியாது. அது, அவரவர் மனப்போக்கைப் பொறுத்ததாகும். ஒருவருடைய தினசரி வாழ்க்கையில் பொன் போன்ற தருணங்கள் ஏற்படுகின்றன. நம்மை நிதான புத்தி உள்ளவர்களாகவும், பணிவுள்ளவர்களாகவும் செய்து அவனன்றி ஓர் அணுவும் அசையாது,நாம் எல்லோரும் குயவன் கை மண்ணைபோல் இருப்பவர்கள் என்பதை உணரும்படியும் செய்வதே பிரார்த்தனைகளின் நோக்கமாகும். ஒருவர் தமது பழைய செயலைப் பரிசீலனை செய்வதும், தமது பலவீனத்தை ஒப்புக்கொள்ளுவதும், கடவுளின் மன்னிப்பையும், இனி எதிர்காலத்தில் சிறந்த முறையில் நடந்துகொள்ளுவதற்கான பலத்தையும் கோருவதுமான தருணங்கள் வாழ்க்கையில் ஏற்படுவது உண்டு. அவ்விதம் பிரார்த்தனை செய்வதற்கு ஒரே நிமிஷம்கூடச் சிலருக்குப் போதுமானது; சிலருக்கு இருபத்து நான்கு மணி நேரம் கூடச் சிறிதும் போதாது. தங்களிடத்தில் கடவுள் இருப்பதை உணர்ந்தவர்களுக்கு, உழைப்பதே பிரார்த்தனை செய்வதுதான். அவர்களுடைய வாழ்க்கை, இடைவிடாத பிரார்த்தனை அல்லது இடைவிடாத கடவுள் வழிபாடுதான். பாவச் செயல்களிலும், மனம்போனபடி காரியங்களைச் செய்விலும் ஈடுபட்டு தனக்காக மாத்திரமே வாழ்வோருக்கு எவ்வளவு நேரம் இருந்தாலும் போதாது. பொறுமையும், நம்பிக்கையும், தூய்மையும் இருக்கவேண்டும் என்ற உறுதியும் அவர்களுக்கு இருக்குமாயின் தூய்மைப்படுத்தும் கடவுள் தங்கள் உள்ளே இருப்பதாக நிச்சயமாக உணரும் வரையில் பிரார்த்தனை செய்து வருவார்கள்.

எனினும், சாதாரண மனிதர்களான நாம் அந்த இரண்டு தீவிர மான நிலைகளையும் விட்டுவிட்டு, நடுவிலுள்ள வழியில் செல்லவேண் டும். நமது செய்கைகளையெல்லாம் கடவுளுக்கே அர்ப்பணமாகச் செய்து வருகிறோம் என்ற மகோன்னத நிலையில் நாம் இருப்ப தாகக் கூறிக் கொள்ளமுடியாது; தனக்காக என்றே வாழும் இழி நிலைக்கு நாம் வந்துவிடவும் இல்லை. அதனாலேயே, எல்லா மதங் களும் பொதுவாக கடவுள் வழிபாட்டிற்கு என்றே காலங்களை ஒதுக்கி வைத்திருக்கின்றன. துரதிருஷ்டவசமாக, இவை யெல் லாம் இந்த நாட்களில், போலி வேஷமாக இராத இடங்களில், சம்பிரதாயமான, யந்திரம் போன்ற நிலைக்கு வந்திருக்கின்றன. எனவே, இன்று அவசியமாகத் தேவைப்படுவது என்ன வெனில், இந்த வழிபாடுகளுக்கு உகந்த ஒழுங்கான மன நிலை ஏற்பட வேண்டும் என்பதுதான்.

கடவுளிடம் குறிப்பிட்ட எதையோ கோரி சொந்த முறையில் பிரார்த்திப்பது நிச்சயமாக ஒருவருடைய தாய் மொழியில்தான் இருக்கவேண்டும். உலகில் வாழும் எல்லாவற்றினிடமும் நீதி யுடன் நடந்து கொள்ளும்படி நம்மைச் செய்ய வேண்டும் என்று கடவுளைப் பிரார்த்திப்பதைக் காட்டிலும் மேன்மையானது வேறு எதுவும் இருக்க முடியாது.

'எங் இந்தியா' -10—6—1926

## 4

# யாரை, எப்படிப் பிரார்த்திப்பது?

'நவஜீவன்' வாசகர் ஒருவர் கேட்பதாவது: ''கடவுளைப் பிரார்த்திக்கும்படியும், வழிபடும்படியும் நீங்கள் அடிக்கடி எங் களைக் கேட்கிறீர்கள். ஆனால், யாரை, எப்படிப் பிரார்த்திப்பது என்பதை நீங்கள் எங்களுக்கு ஒருபோதும் கூறுவதில்லை. தாங்கள் இவ்விஷயத்தை அன்புடன் எனக்குத் தெளிவாக விளக்குவீர் களா?''

கடவுளை வழிபடுவதென்பது கடவுளின் பெருமையைக் குறித்துத் தோத்திரம் செய்வதுதான். ஒருவருடைய தகுதியின் மையையும், பலவீனத்தையும் ஒப்புக்கொள்ளுவதே பிரார்த்தனை யாகும். கடவுளுக்கு ஆயிரம் பெயர்கள் உண்டு; சரியாகச் சொன் னால், கடவுள் எண்ணிக்கையற்ற பெயர்களை உடையவர். நமக்கு எந்தப் பெயர் விருப்பமோ, அதனால் அவரை வழிபடலாம், அல் லது பிரார்த்திக்கலாம். அவரைச் சிலர் ராமா என்றும், சிலர் கிருஷ்ணா என்றும், மற்றவர்கள் ரஹீம் என்றும், இன்னும் சிலர் கடவுள் என்றும் அழைக்கிறார்கள். எனினும் எல்லோரும் ஒரே தத்துவத்தையே வழிபடுகிறார்கள். ஆனால் எல்லாவித உணவு களும் எல்லோருக்கும் ஒத்துக் கொள்ளாததைப் போல, எல்லாப்

பெயர்களும் எல்லோருடைய மனத்திற்கும் இசைந்ததாக இருப்ப தில்லை. ஒவ்வொருவரும் அவரது தொடர்புகளுக்கு உகந்த பெய ரைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளுகிறார்கள். கடவுள் எல்லோரு டைய உள்ளத்திலும் இருப்பவர், எல்லாம் வல்லவர், எங்கும் நிறைந்தவர். எனவே, அவர் நமது உள்ளத்தின் ஆழத்திலுள்ள உணர்ச்சிகளை அறிந்து, அவரவரது தகுதிகளுக்குத் தகுந்தவாறு அருள் புரிகிறார்.

ஆகையால், வழிபாடோ அல்லது பிரார்த்தனையோ வாயி லிருந்து வருவதாக இருக்கக் கூடாது, உள்ளத்திலிருந்து வர வேண்டும். அதனால்தான் ஊமை, திக்குவாயன், படிப்பில்லா தவன், மூடன் முதலிய யாவரும் கடவுளைப் பிரார்த்தனை செய்ய முடிகிறது. தேனொழுகப் பேசி, இருதயம் விஷம் நிறைந்ததாக இருக்குமாயின், அத்தகையோரின் பிரார்த்தனைக்குக் கடவுள் செவி கொடுக்கமாட்டார். எனவே, பிரார்த்தனை செய்வோர், இருதயத்தைத் தூய்மையாக்கிக் கொள்ளவேண்டும். ராமன், ஹனுமானின் நாவில் மாத்திரமல்ல, இருதய பீடத்திலும் வீற் றிருந்தார். அவர், ஹனுமானுக்கு எல்லையற்ற சக்தியைக் கொடுத் தார். அந்த சக்தியினால் ஹனுமான் மலையையே தூக்கிக் கொண்டு கடலைக் கடந்து வந்தார். நம்பிக்கைதான், புயலால் கொந்தளிக் கும் கடலைக் கடப்பதற்கு உதவியாக இருக்கிறது; நம்பிக்கை தான் மலைகளை அசைக்கின்றது; நம்பிக்கைதான் கடலைத் தாண்டு வதற்கு உதவியாக இருக்கிறது. நம்பிக்கை என்பது வேறு எதுவு மில்லை; உள்ளத்தினுள் கடவுள் இருக்கிறார் என்ற ஜீவ உணர்ச்சி தான் நம்பிக்கையாகும். அத்தகைய நம்பிக்கையுள்ள ஒருவருக்கு எதிலும் ஆசை இராது. அவரது உடல் நோயுற்றிருந்தாலும், ஆன்மிக ரீதியாக அவர் ஆரோக்கியமானவர்தான்; அத்தகை யோரின் உடல் தூய்மையானது; அவர் தார்மிகச் செல்வத்தில் பூரணபவராகிறார்.

“ஆனால், இவ்வளவு தூரம் உள்ளத்தைத் தூய்மைப்படுத்திக் கொள்ளுவது எப்படி?” என்று கேட்கலாம். வாயால் பேசும் மொழி எளிதாகக் கற்பிக்கப்பட்டு விடுகிறது. ஆனால், இருதயத் தின் மொழியை யார் கற்பிக்க முடியும்? பக்தன், அதாவது கட வுளிடம் உண்மையான பற்று உடையவன் மாத்திரமே அந்த மொழியை அறிவான்; அவன் மாத்திரம்தான் அதைக் கற்பிக் கவும் முடியும்.

பக்தனைப் பற்றி மூன்று இடங்களில் கீதை விளக்குகிறது. ஆனால், அவனைப்பற்றிப் பொதுவாக ஒவ்வோரிடத்திலும் குறிப் பிடுகிறது. எனினும், பக்தனைப்பற்றிய விளக்கத்தை அறிந்து கொள்ளுவது போதுமானதொரு வழிகாட்டியாகிவிட முடியாது. இந்தப் பூமியில் அத்தகைய பக்தர்களைக் காண்பது அரிது. எனவே, தொண்டு புரியும் மதமே அதற்கான வழி என்று நான் யோசனை கூறியிருக்கிறேன். தன் சக மனிதர்களுக்குத் தொண்டு செய்பவரின் உள்ளத்தையே கடவுள் தமது இருக்கையாகக்

கொள்ளத் தாமாக முன்வருகிறார். அதனால்தான், எல்லாவற்றையும் "பார்த்து அறிந்த" நரசிம்ம மேத்தா, "பிறரது துன்பத்தைக் கண்டு மனம் நைந்து உருகுவோனே உண்மையான வைஷ்ணவன்" என்று பாடினார். அபு பென் ஆதமும் அப்படித்தான். அவர் சக மனிதர்களுக்குத் தொண்டு புரிந்தார். அதனால், கடவுளுக்குத் தொண்டு புரிந்தவர்கள் அடங்கிய பட்டியலில் அவரது பெயர் முதல் ஸ்தானத்தை அடைந்தது.

துன்பத்திற்கும் துக்கத்திற்கும் உள்ளானவர்கள் யார்? தாழ்த்தப்பட்டவர்களும் வறுமையில் ஆழ்ந்தவர்களும்தான். எனவே, இவர்கள் யாவருக்கும் ஒரு பக்தன் உடலாலும், ஆன்மாவினாலும், உள்ளத்தினாலும் தொண்டு செய்ய வேண்டும். தாழ்த்தப்பட்ட வகுப்பினரைத் தீண்டத்தகாதவர்கள் என்று கருதுவோர், அவர்களுக்கு எவ்விதம் உடலால் தொண்டு செய்ய முடியும்? ஏழைகளுக்காக நூற்பதற்குக் கூட உடல் வணங்காமல் நொண்டிச் சாக்குகளைக் கூறுவோர், தொண்டின் அர்த்தத்தை அறிந்து கொள்ள முடியாது. திடகாத்திரமுள்ள துர்ப்பாக்கியசாலிகள் பிச்சை கேட்பதற்கு உரியவர்கள் அல்ல. எனினும், தங்கள் ஜீவனத்திற்கு உழைக்கும்படி அவர்களைக் கேட்டுக் கொள்ளலாம். பிச்சை அவர்களை இழிநிலைக்குக் கொண்டு வந்து விடுகிறது. ஏழைகளின் முன்னிலையில் நூற்று, அவர்களையும் நூற்கும்படி அழைப்போர் கடவுளுக்குத் தொண்டு செய்தவராகிறார். "உண்மையான பக்தியுடன் எனக்கு ஒரு பழம், அல்லது ஒரு புஷ்பத்தைக் கொடுப்பவன், அல்லது ஓர் இலையைக் கொடுப்பவன்கூட எனது தொண்டனாகிவிடுகிறான்"* என்று பகவத்கீதையில் கிருஷ்ண பரமாத்மா கூறுகிறார். மிகவும் தாழ்த்தப்பட்ட ஏழைகளுக்காக நூற்பதுதான் மிகப் பெரிய பிரார்த்தனையும், மிகப் பெரிய தியாகமும் ஆகும்.

'எங் இந்தியா' –24—9—1925

# 5

# பிரார்த்தனையின் அர்த்தமும் அவசியமும்

உத்தியோக மந்திரைச் சேர்ந்த பிரார்த்தனை மைதானத்தில் பிரார்த்தனையின் அவசியத்தைப் பற்றி காந்திஜி பேசினார். அகமதாபாத்தில் நடந்த ஹாஸ்டல் மாணவர்கள் மகாநாட்டிற்

---

*பத்ரம் புஷ்பம் பலம் தோயம் யோ மே பக்த்யா ப்ரயச்சதி |
ததஹம் பக்த்யுபஹ்ருதம் அச்னாமி ப்ரயதாத்மந:||
பகவத்கீதை 9-ஆவது அத்தியாயம் -26-ஆவது சுலோகம்.

இதன் பொருள்: யார் எனக்கு ஓர் இலையையோ, ஒரு புஷ்பத்தையோ, ஒரு பழத்தையோ அல்லது தண்ணீரையோ பக்தியுடன் அளிக்கிறானோ, தூய மனம் படைத்த அவனது அன்பளிப்பை நான் மகிழ்ச்சியுடன் அருந்துகிறேன்.

காக, குஜராத்திலிருந்து வந்திருந்த மாணவர்கள் அடங்கிய கூட்டத்தில் காந்திஜி அவ்விஷயமாகப் பேசிய போது குறிப்பிட்டதாவது:

பிரார்த்தனையின் அர்த்தத்தையும் அவசியத்தையும் பற்றி நான் பேசவேண்டும் என்று நீங்கள் விரும்புவதற்காக மகிழ்ச்சி அடைகிறேன். மதத்தின் ஆன்மாவும் சாரமும் பிரார்த்தனைதான் என்பது எனது நம்பிக்கையாகும். எனவே, மனிதனுடைய வாழ்க்கையின் உயிர் ஸ்தானம் பிரார்த்தனையாகவே இருக்க வேண்டும். ஏனெனில், மதமின்றி எந்த மனிதனும் வாழ முடியாது. சிலர் தங்களுடைய அறிவின் மமதை காரணமாக, தங்களுக்கு மதத்துடன் எவ்வித சம்பந்தமும் இல்லை என்று பிரகடனம் செய்கிறார்கள். தான் மூச்சு விடுவதாகவும், ஆனால் தனக்கு மூக்கு இல்லை என்றும் ஒரு மனிதன் கூறுவது போலவே இதுவும் இருக்கிறது. பகுத்தறிவின் மூலமோ, இயல்பான உணர்ச்சியின் மூலமோ அல்லது மூட நம்பிக்கை காரணமாகவோ ஏதாவதொரு வகையில் மனிதன், தனக்கு தெய்விகமான தொடர்பு இருப்பதை ஒப்புக்கொள்ளுகிறான். முதல் தரமான சந்தேகவாதியோ அல்லது நாத்திகரோ கூட, ஒரு தார்மிகக் கொள்கையின் அவசியத்தை ஒப்புக் கொள்ளுகிறார்கள்; அக் கொள்கையை அனுசரிப்பதே நல்லது என்றும் அதை அனுசரிக்காமல் இருப்பது தீங்கு என்றும் கருதுகிறார்கள். பிராட்லாவின் நாத்திகம் எல்லோரும் அறிந்ததே. ஆனால் அவர்கூட, உண்மையைப் பேச வேண்டிய தன் அவசியத்தை வற்புறுத்தினர். உண்மையைப் பேசியதற்காக மிகுந்த துன்பத்திற்கும் உள்ளானர். அதனால்தான், மதத்தை மறுக்கும் ஒரு மனிதன்கூட மதமின்றி வாழ்வதில்லை, வாழ முடியாது என்று நான் கூறியுள்ளேன்.

இப்போது நான் அடுத்த விஷயத்திற்கு வருகிறேன். அதாவது, பிரார்த்தனை மனிதனுடைய வாழ்க்கையின் உயிர் நாடியாகும். அது, மதத்தின் மூலாதாரமான அம்சமே. கடவுளை வேண்டிக் கொள்ளுவதே பிரார்த்தனை; அல்லது பரந்த அர்த்தத்தில் உள்ளுக்குள் இறைவனுடன் தொடர்பு கொள்ளுவதும் பிரார்த்தனையே. எப்படியிருந்தாலும் பலன் ஒன்றுதான். வேண்டிக் கொள்ளுவதாக இருந்தால்கூட, ஆன்மாவைத் தூய்மைப் படுத்தும்படியும், அதைச் சூழ்ந்து கொண்டுள்ள அறியாமையையும், இருட் படலங்களையும் போக்கும்படியும் வேண்டிக்கொள்ளுவதாகவே இருக்கவேண்டும். தன்னிடமுள்ள தெய்விகத் தன்மை விழிப்படைய வேண்டும் என்ற ஆர்வம் உள்ளவன், பிரார்த்தனையின் உதவியை நாடித்தான் தீர வேண்டும். வெறும் சொற்களின் அலங்காரமோ அல்லது காதுகளுக்குப் பயிற்சி அளிப்பதோ பிரார்த்தனை அல்ல; அர்த்தமற்ற சூத்திரத்தைத் திரும்பத் திரும்பக் கூறுவதும் பிரார்த்தனை அல்ல.

ராமநாமத்தை எத்தனை தட்வைகள் திரும்பத் திரும்பக் கூறினும், அது ஆன்மாவைக் கிளறவில்லையாயின், அது வீணேயாகும். இருதயமற்ற வார்த்தைகளைக் காட்டிலும் வார்த்தைகளற்ற

இருதயமே பிரார்த்தனைக்குச் சிறந்தது. பசியுள்ள மனிதன் நல்ல சாப்பாட்டை மனப்பூர்வமாக ருசிப்பதுபோல, பசியுள்ள ஆன்மா மனப்பூர்வமான பிரார்த்தனையை ருசித்து அனுபவிக்கும். பிரார்த்தனையின் மந்திர சக்தியை அனுபவித்தவன் சேர்ந்தாற் போல் நாட்கணக்கில் உணவின்றி வாழ முடியும்; ஆனால் பிரார்த்தனையின்றி ஒரு விநாடிகூட வாழ முடியாது. ஏனெனில், பிரார்த்தனையின்றேல், உள்ளத்தில் அமைதி இருக்க முடியாது. எனது அனுபவத்தையும், எனது சகாக்களின் அனுபவத்தையுமே இப்போது நான் கூறியுள்ளேன்.

அது அப்படியாயின், நமது வாழ்க்கையின் ஒவ்வொரு நிமிடமும் நாம் பிரார்த்தனை செய்து கொண்டிருக்க வேண்டும் என்று சிலர் கூறலாம். அதில் சந்தேகமே இல்லை. ஆனால், தவறும் இயல்புள்ள மனிதர்களாகிய நாம், நம் உள்ளேயே அடங்கி ஒரு விநாடிகூட இறைவனுடன் தொடர்பு கொள்ளும் சக்தியற்றவர்களாக இருக்கிறோம். அப்படியிருக்க, கடவுளுடன் இடைவிடாது தொடர்பு வைத்துக்கொள்ளுவது என்பது நமக்கு அசாத்தியமாகும். ஆகையால் நாம், சிறிது நேரமாவது உலக பந்தங்களையெல்லாம் உதறித்தள்ள கடுமையான முயற்சி செய்வதற்காக சில காலங்களை நிர்ணயித்துக் கொள்ளுகிறோம்; சிறிது நேரமாவது உடலை மறந்திருக்கத் தீவிரமாக முயற்சிக்கிறோம்.

பிரார்த்தனையின் அவசியத்தைப் பற்றி நான் குறிப்பிட்டிருக்கிறேன். அதன் மூலம், பிரார்த்தனையின் சாரம் என்ன என்பதையும் கூறியிருக்கிறேன். நமது சக மனிதர்களுக்குத் தொண்டு செய்யவே நாம் பிறந்திருக்கிறோம். நாம் மிகவும் விழிப்புடன் இருந்தாலன்றி, நாம் ஒழுங்கான முறையில் தொண்டு செய்ய முடியாது. இருளின் சக்திக்கும் ஒளியின் சக்திக்கும் மனிதனின் உள்ளத்தில் நிரந்தரமான போராட்டம் நடந்து வருகிறது. பிரார்த்தனை என்ற பெரிய நங்கூரத்தின் உதவி இராதவன், இருளின் சக்திக்கு இரையாகி விடுவான். பிரார்த்தனை செய்யும் மனிதன் தனக்குள்ளும் உலகம் முழுவதுடனும் சமாதானமாகவும் அமைதியாகவும் வாழ்வான். பிரார்த்தனையில் ஈடுபடும் உள்ளம் இல்லாமல் உலக விஷயங்களில் ஈடுபடுபவன் தன்னையும் துன்பத்திற்கு உள்ளாக்கி, உலகத்தையும் கூடத் துன்பத்திற்குள்ளாகும்படி செய்வான். மரணத்திற்குப் பின் மனிதனின் நிலையில் பிரார்த்தனையின் சம்பந்தம் ஒரு புறம் இருக்க, மனிதர்கள் வாழும் இந்த உலகிலேயே பிரார்த்தனை அளவு கடந்த பலனைக் கொடுப்பதாக இருக்கிறது. நமது தினசரி நடவடிக்கைகளில் ஒழுங்கும், அமைதியும், சாந்தியும் நிலவும்படி செய்வதற்குரிய ஒரே வழி பிரார்த்தனை தான்.

ஆசிரம வாசிகளான நாங்கள் சத்தியத்தை நாடியே இங்கே வந்தோம். சத்தியத்தை வற்புறுத்துவது, பிரார்த்தனையின் சக்தியில் உள்ள நம்பிக்கையைப் பிரகடனப் படுத்துவதேயாகும். எனினும், இதுவரையில் பிரார்த்தனையை நாங்கள் மூலாதாரமான

ஓர் அலுவலாகச் செய்து கொள்ளவில்லை. மற்ற விஷயங்களில் நாங்கள் எடுத்துக்கொண்ட அக்கறையை அதிலும் எடுத்துக்கொள்ளவில்லை. ஒருநாள் நான் தூக்க மயக்கத்திலிருந்து எழுந்தபோது, பிரார்த்தனை விஷயத்தில் எனது கடமையை மோசமான விதத்தில் அலட்சியம் செய்துவிட்டதாக உணர்ந்தேன். எனவே அவ் விஷயத்தில் கண்டிப்பான ஒழுங்கு முறைகளைக் கைக்கொள்ளும்படி நான் யோசனை கூறியிருக்கிறேன். அதனால் நமது நிலைமை அதிகச் சீர்பெற்றிருக்கிறது என்றே நம்புகிறேன். மூலாதாரமான விஷயத்தில் அக்கறை கொண்டுவிட்டால் மற்ற விஷயங்கள் யாவும் தாமாகவே சீர்பட்டுவிடும். ஒரு சம சதுரத்தின் ஒரு கோணத்தைச் சரிப்படுத்திவிட்டால், மற்றக் கோணங்கள் தாமாகவே சரியாகிவிடும் அல்லவா ?

எனவே, உங்களுக்கு ஒவ்வொரு நாளும் பிரார்த்தனையுடன் ஆரம்பமாக வேண்டும். அது ஆன்ம பூர்வமாக இருந்தால், அது மாலைவரையில் நம் மனத்தில் நிலைத்து நிற்கலாம். ஒவ்வொரு நாளும் இறுதியில் படுக்கச் செல்லும்போது பிரார்த்தனை செய்யுங்கள். அப்படியாயின், கெட்ட கனவுகளும் பீதியும் இராமல் இரவை நீங்கள் அமைதியாகக் கழிக்கலாம். பிரார்த்தனை முறையைப் பற்றி நீங்கள் கவலைப்படவேண்டியதில்லை. பிரார்த்தனை எந்த விதத்தில் வேண்டுமாயினும் இருக்கட்டும். ஆனால், அது நம்மை தெய்விகத் தொடர்பு கொள்ளும்படி செய்வதாக இருக்க வேண்டும். பிரார்த்தனை முறை எப்படியாயினும், நீங்கள் வார்த்தைகளால் பிரார்த்தனை செய்யும்போது உங்களுடைய மனம் எங்கேயாவது சுற்றித் திரிந்துகொண்டிருக்கக் கூடாது.

நான் இதுவரையில் கூறியது உங்கள் மனத்தில் பதிந்திருக்குமாயின், உங்களுடைய பிரார்த்தனையில் அக்கறை எடுத்துக்கொண்டு, அதை ஒரு முக்கிய கடமையாகச் செய்யும்படி உங்களுடைய ஹாஸ்டல் அதிபர்களை நீங்கள் வற்புறுத்தி வெற்றி பெறும் வரையில் நீங்கள் சமாதானம் அடையமாட்டீர்கள். தனக்குத் தானே விதித்துக் கொள்ளும் கட்டுப்பாடு வற்புறுத்தல் ஆகாது. ஒரு மனிதன் கட்டுப்பாட்டிலிருந்து விடுதலையை விரும்புவானாயின், அதாவது தன் உணர்ச்சிகளுக்கெல்லாம் இடம் கொடுத்து விடுவானாயின், அவன் வெறி உணர்ச்சிகளுக்கு முற்றிலும் அடிமையாகிவிடுவான். விதிகளுக்கும் நிபந்தனைகளுக்கும் தன்னைத்தானே கட்டுப்படுத்திக் கொள்ளுபவன்தான் உண்மையான விடுதலை பெறுகிறான். சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள் முதலியன யாவும் சில விதிகளுக்கு உட்பட்டே இயங்குகின்றன. இந்த விதிகளின் கட்டுப்பாடு இல்லாவிடில், உலகம் ஒரு விநாடி கூட இயங்காது. உங்களுடைய சக மனிதர்களுக்குத் தொண்டு செய்வதே உங்கள் வாழ்க்கையின் லட்சியமாகும். எனவே, நீங்களே உங்களுக்கு ஏதாவதொரு வித ஒழுங்கு முறையை வகுத்துக் கொள்ளாவிடில், நீங்கள் சீர்குலைந்துபோவீர்கள். பிரார்த்தனை அவசியமான, ஆன்மிக ஒழுங்கு முறையாகும். ஒழுங்கும் கட்டுப்பாடும்தான், நம்மை மிருக வர்க்கத்திலிருந்து வேறுபடுத்து

கின்றன. நாம் மிருகங்களைப்போல் ஊர்ந்து செல்லாமல் கம்பீரமாகத் தலை நிமிர்ந்து நடக்கவேண்டுமாயின், நம்மை நாமே வலுவில் ஒழுங்கிற்கும் கட்டுப்பாட்டிற்கும் உட்படுத்திக் கொள்ள வேண்டும்.

—'எங் இந்தியா' – 23—1—1930

## 6

# பிரார்த்தனையில் நம்பிக்கையில்லை !

ஒரு தேசியக் கல்லூரியின் பிரின்ஸிபாலுக்கு ஒரு மாணவர் எழுதிய கடிதத்தில், பிரார்த்தனைக் கூட்டங்களுக்குத் தாம் வராததற்காகத் தம்மை மன்னிக்கும்படி கேட்டுக் கொண்டிருந்தார். அந்தக் கடிதம் இதுதான் :

''பிரார்த்தனையில் எனக்கு நம்பிக்கை இல்லை என்பதை நான் பணிவுடன் தெரிவித்துக் கொள்ளுகிறேன். ஏனெனில், நான் பிரார்த்தனை செய்ய வேண்டும் என்று கூறப்படும் கடவுள் என்பதில் எனக்கு நம்பிக்கை இல்லை. எனக்குக் கடவுள் ஒருவர் இருக்கிறார் என்று எண்ணும்படியான எவ்வித அவசியத்தையும் நான் ஒருபோதும் உணர்ந்ததில்லை. எனது சொந்தத் திட்டங்களை நான் அமைதியாகவும், மனப்பூர்வமாகவும் பின்பற்றி வருகையில், கடவுளைப் பற்றி நான் கவலைப்படாததால், எனக்கு என்ன நஷ்டம் ஏற்பட்டுவிடப் போகிறது?

''கூட்டமாகச் சேர்ந்து செய்யும் பிரார்த்தனை சம்பந்தப்பட்ட வரையில், அதனுல் யாதொரு பலனுமில்லை. அவ்வளவு ஏராளமான மனிதர்கள் சேர்ந்து ஒரு விஷயத்தில், அது எவ்வளவு அற்பமாக இருப்பினும், மனம் ஒன்றிக்கும்படி செய்ய முடியுமா? நமது வேத நூல்களின் நுண்ணிய கருத்துக்களிலும், கடவுள், ஆன்மா, எல்லா மனிதர்களிடையும் சமத்துவம் போன்ற மற்றும் பல தடபுடலான சொற்றொடர்களிலும், அறியாத, சஞ்சல மனம் உள்ள சிறு குழந்தைகள் கவனம் செலுத்த வேண்டுமா? குறிப்பிட்ட மனிதனுக்குக் கிடைக்கும் குறிப்பிட்ட நேரத்தில்தான் இந்த மகத்தான காரியம் செய்யப்பட வேண்டும். அப்படியிருக்க, இத்தகைய யந்திரம் போன்ற அலுவல்களால் சிறுவர்களுடைய உள்ளங்களில் கடவுள் என்பவரிடத்தில் பக்தி வேரூன்றும்படி செய்துவிட முடியுமா? வெவ்வேறு விதமான மனப்போக்கு உடைய மனிதர்களிடமிருந்து ஒரே வித நடத்தையை எதிர்பார்ப்பதைக் காட்டிலும் பகுத்தறிவுக்கு வெறுப்பை அளிக்கக்கூடிய விஷயம் வேறு எதுவும் இருக்க முடியாது. எனவே, பிரார்த்தனை செய்யும் விஷயமாக நிர்ப்பந்தம் இருக்கக் கூடாது. விருப்பம் உள்ளவர்கள் பிரார்த்தனை செய்யலாம்; விருப்பமில்லாதவர்கள் பிரார்த்தனையைத் தவிர்த்து விடலாம். உறுதியான கொள்கையின்றி எதுவும் செய்வது ஒழுக்கமற்ற, இழிவான செயலாகும்.''

இறுதியாகக் கூறப்பட்டுள்ள கருத்தின் தகுதியை முதலில் நாம் பரிசீலனை செய்வோம். ஒழுங்கின் அவசியத்தைப்பற்றி

உறுதியான கொள்கையை மேற்கொள்ளுமுன், ஒழுங்கிற்கு உட்படுவது ஒழுங்கீனமான, இழிவான ஒரு செய்கையாகுமா? பள்ளிக்கூடத்தின் பாட அட்டவணையால் பலன் உண்டு என்பதில் ஒருவருக்கு உறுதியில்லாவிடில், அட்டவணையின்படி பாடங்களைப் படிப்பது ஒழுங்கீனமானதாகவோ, இழிவானதாகவோ ஆகுமா? தன் தாய் மொழியால் தனக்குப் பலனில்லை என்று ஒரு சிறுவன் கருதுவானாயின், தாய் மொழிப் பாடத்தை அவன் கற்கவேண்டியதில்லை என்று அவனை மன்னித்துவிடலாமா? ஒரு பையனின் சொந்தக் கொள்கை எதுவாயினும், பள்ளிக்கூடத்தில் உள்ள பாட அட்டவணையின்படி அவன் பாடங்களைக் கற்றுக்கொண்டுதான் ஆகவேண்டும்; பள்ளிக்கூட ஒழுங்கு விதிகளுக்கும் உட்பட்டுத்தான் தீரவேண்டும். அவன் பள்ளிக்கூடத்தில் சேருவதிலிருந்தே, அவன் பள்ளிக்கூட விதிகளுக்கும், கட்டுப்பாடுகளுக்கும் உட்பட விரும்புகிருன் என்ருகிறது. விரும்பவில்லையாயின், அவன் பள்ளிக்கூடத்தை விட்டு வெளியேறி விடலாமேயன்றி, எதை, எப்படிக் கற்கவேண்டும் என்பது அவனது விருப்பத்தைப் பொறுத்ததல்ல.

மாணவர்களுக்கு முதலில் வெறுப்பாகவும் சுவையற்றும் தோன்றுவதை, கவர்ச்சியாகவும், புரியக் கூடியதாகவும் செய்ய வேண்டியது ஆசிரியர்களின் கடமையாகும்.

“கடவுளிடத்தில் எனக்கு நம்பிக்கையில்லை” என்று கூறிவிடுவது மிகவும் எளிதாகும். கடவுள், தம்மைப்பற்றி யாரும் எவ்விதத் தண்டனையுமின்றி எதுவும் கூற அனுமதித்து விடுகிருர். அவர் நமது செயல்களையெல்லாம் பார்த்துக் கொண்டிருக்கிருர். எனினும், கடவுளின் சட்டத்தை மீறுவோர் அதற்குரிய தண்டனையை அனுபவித்துத்தான் தீரவேண்டும். அது பழிவாங்கும் தண்டனையல்ல, தூய்மைப்படுத்தும், கட்டாயமாக உட்பட்டுத் தீரவேண்டிய தண்டனையாகும். கடவுள் இருப்பதை நிரூபிக்கமுடியாது, நிரூபிக்கவேண்டிய அவசியமும் இல்லை. கடவுள் இருக்கிருர் என்ற உணர்ச்சியின்மை ஒரு நோயே ஆகும். நாம் விரும்பினுலும் விரும்பாவிடினும் அந்த நோயை என்றைக்காவது உதறித் தள்ளிவிட வேண்டும்.

ஆனல், ஒரு பையன் விவாதிக்கக் கூடாது. அவன் படிக்கும் பள்ளிக்கூடம் பிரார்த்தனையில் கலந்துகொள்ள வேண்டுமென்று கட்டளையிடுமாயின், ஒழுக்க உணர்ச்சி காரணமாக அவன் பிரார்த்தனைக் கூட்டங்களுக்குச் செல்ல வேண்டும். அவன் தனது சந்தேகங்களை மரியாதையுடன் அவனது ஆசிரியர்களிடம் தெரிவிக்கலாம். தன் மனத்திற்குச் சமாதானத்தை அளிக்காத விஷயத்தில் அவன் நம்பிக்கை வைக்க வேண்டிய அவசியமில்லை. ஆனல், அவனுக்கு அவனது ஆசிரியர்களிடம் மரியாதை இருக்குமாயின், அவர்கள் கூறுவதில் அவனுக்கு நம்பிக்கை இராவிட்டாலும் கூட, அவர்கள் சொல்லுகிறபடியே செய்வான். அதற்குக் காரணம் அச்சமோ அல்லது மனக்கசப்போ எதுவும்

அல்ல. ஆசிரியர்கள் கூறுவதுதான் சரியாக இருக்கும் என்ற எண்ணத்துடனும், இன்று தமக்குப் புரியாமல் இருக்கும் விஷயம் பின்னர் ஒரு நாள் தெளிவாகலாம் என்ற நம்பிக்கையுடனும் அவ்விதம் செய்வான்.

பிரார்த்தனை என்பது, கடவுளை ஏதாவது கேட்பதல்ல. அது ஆன்மாவின் ஏக்கமே. அது ஒருவருடைய பலவீனத்தை தினந்தோறும் ஒப்புக்கொள்ளுவதாகும். நம்மிடையே மிகமிகப் பெரியவராக இருப்பவருக்குக் கூட, மரணம், நோய், வயோதிகம், விபத்துகள் முதலியவை, அவற்றின் முன்னிலையில் அவர் எம் மாத்திரம் என்பதை இடைவிடாது ஞாபகப்படுத்திக் கொண்டிருக்கின்றன. மரணத்தின் மத்தியிலேயே நாம் வாழ்ந்து வருகிறோம். கண் சிமிட்டும் நேரத்தில் நமது சொந்த திட்டங்கள் எல்லாம் தவிடுபொடியாகிவிடலாம்; அல்லது திடீரென்று நாமே இறக்கும்படி நேர்ந்துவிடலாம். எனவே, "கடவுளுக்காகவும் அவரது திட்டங்களுக்காகவுமே நாம் வாழ்கிறோம்" என்று நாம் உண்மையாகக் கூற முடியுமாயின், பாறைபோல் பலத்துடன் இருப்பதை நாம் உணரலாம். அதன் பின், எல்லாம் பட்டப் பகலைப்போல் தெளிவாகப் புலனாகும். பின்னர் எதுவுமே அழிவதில்லை என்பதை நாம் உணருவோம். பிறகு, மரணமும் அழிவும் ஒரு மாறுதலே என்பதும் தெரியும். ஓர் ஓவிய நிபுணர், மற்றொரு சிறந்த சித்திரத்தைச் சிருஷ்டிப்பதற்காக தமது சித்திரத்தை அழிக்கிறார். கெடிகாரத்தைப் பழுதுபார்ப்பவர், அதில் புதிய வில் விசையை வைப்பதற்காக கெட்டுப்போன பழைய வில் விசையை அப்பால் எறிந்துவிடுகிறார்.

கூட்டப் பிரார்த்தனை மிகவும் சக்தி வாய்ந்த ஒரு சாதனமாகும். நாம் பெரும்பாலும் தனியாகச் செய்யாததை பலரும் சேர்ந்து செய்கிறோம். சிறுவர்களுக்கு உறுதியான கொள்கை தேவையில்லை. அழைப்பிற்கிணங்க அவர்கள் பிரார்த்தனைக்குச் செல்லுவார்களாயின், அவர்கள் உற்சாகத்தையும் ஆனந்தத்தையும் உணருவார்கள். தங்களுடைய வாழ்க்கையின் ஆரம்பத்தில் கூட்டப் பிரார்த்தனையை ஏளனம் செய்து, பின்னர் அதன் சக்தியில் மகத்தான நம்பிக்கை கொண்டவர்களாக மாறிய சிறுவர்கள் இருக்கிறார்கள் அல்லவா? சர்ச்சுகள், கோவில்கள் அல்லது மசூதிகளுக்குச் செல்லும் எல்லோரும் ஏளனம் செய்பவர்களோ அல்லது மோசக்காரர்களோ அல்ல, அவர்கள் நேர்மையான ஆடவர்களும் பெண்களும் ஆவர். கூட்டப் பிரார்த்தனை அவர்களுக்கு தினசரி ஸ்நானத்தைப் போல், அவர்களுடைய வாழ்க்கைக்கு அவசியமான ஒன்றாகும். மக்கள் வழிபடும் அவ்விடங்கள் வெறும் சோம்பேறித்தனமான மூடநம்பிக்கைக்குக் காரணமானவை அல்ல. இதுவரை எவ்வளவோ தாக்குதல்களையெல்லாம் அவை சமாளித்திருக்கின்றன; இனியும் ஊழிக்காலம் வரையில் அவை, எவ்விதத் தாக்குதல்களையும் சமாளித்து நிலைத்து நிற்கும்.

—'எங் இந்தியா' - 23—9—1926

## (2)

"பிரார்த்தனையில் நம்பிக்கையில்லை" என்ற எனது கட்டுரையைப்பற்றி ஒருவர் பின்வருமாறு எழுதுகிறார்:

'மேற்கண்ட தலைப்பில் தாங்கள் எழுதியுள்ள கட்டுரை நீங்கள் குறிப்பிடும் 'சிறுவனுக்கோ' அல்லது பெரும் சிந்தனையாளர் என்ற உங்களுடைய அந்தஸ்திற்கோ நீதி செய்வதாக இல்லை. தங்களுக்குக் கடிதம் எழுதியிருப்பவரின் மொழி நடை அவ்வளவு திருப்திகரமாக இல்லை என்பது உண்மையே. எனினும், அவரது சிந்தனைத் தெளிவைப் பற்றி சந்தேகம் இருப்பதற்கு இடமில்லை. அவர் 'சிறுவன்' என்ற சொல்லை, எல்லோரும் அறிந்த வகையில் குறிப்பிடவில்லை என்பது மிகத் தெளிவாகும். அவர் குறிப்பிட்டுள்ள சிறுவன் இருபது வயதுக்குக் குறைந்தவனாக இருக்க முடியாது. அப்படி இருந்தால், நான் மிகவும் ஆச்சரியம் அடைவேன். அவன் இளைஞனாக இருந்தாலுங்கூட, போதிய அறிவு வளர்ச்சி அவனுக்கு ஏற்பட்டிருப்பதாகத் தோன்றுகிறது. எனவே, 'ஒரு சிறுவன் வாதிக்கக் கூடாது' என்று தள்ளிவிடுவதற்கில்லை. உங்களுக்குக் கடிதம் எழுதியிருப்பவர் பகுத்தறிவுவாதி, நீங்களோ நம்பிக்கைவாதி. இவ்விரண்டும் நீண்ட காலமாக முரண்பாடாக இருந்து வரும் நீண்ட காலக் கொள்கைகள். 'எனக்குத் திருப்தி ஏற்படும்படி செய்யுங்கள்; பின்னர் நான் அதை நம்புகிறேன்' என்பது ஒருவரது நிலையாக இருக்கிறது. 'முதலில் நம்புங்கள்; பிறகு திருப்தியும் உறுதியும் ஏற்பட்டுவிடும்' என்பது மற்றொருவரின் நிலையாக இருக்கிறது. முதலில் கூறப்பட்டவரின் வாதம் பகுத்தறிவை அடிப்படையாகக் கொண்டது; இரண்டாவதாகக் கூறப்பட்டவரின் வாதம் பிரமாண நூல்களை அடிப்படையாகக் கொண்டது. எல்லா இளைஞர்களிடையேயும் சந்தேக வாதம் தாற்காலிகமான ஒரு கட்டமே என்றும், சீக்கிரமாகவோ அல்லது நாளடைவிலோ அவர்களுக்கு நம்பிக்கை ஏற்பட்டுவிடும் என்றும் நீங்கள் எண்ணுவதுபோல் தோன்றுகிறது. எல்லோரும் அறிந்த சுவாமி விவேகானந்தரின் நிலை, உங்களது கருத்தை ஆதரிப்பதாக இருக்கிறது. எனவே, 'சிறுவனுக்கு' அவனது சொந்த நன்மைக்காகப் பிரார்த்தனையை நீங்கள் ஒரு கட்டாய மருந்தாக விதிக்கிறீர்கள்.

"அதற்கு நீங்கள் கூறும் காரணங்கள் இரண்டாகும். முதலாவதாக, நமது சிறுமையையும், எல்லாவற்றிற்கும் மேலானதென்று கூறப்படும் பரம்பொருளின் வல்லமையையும் சிறப்பையும் உணர்ந்து பிரார்த்தனை செய்வது; இரண்டாவதாக, மன ஆறுதலை விரும்புவோருக்கு அது அளிக்கும் ஆறுதலுக்காகவும் நன்மைக்காகவும் பிரார்த்தனை செய்வது. இரண்டாவதான வாதத்திற்கு நான் முதலில் பதில் அளித்து விடுகிறேன். இங்கே அது, பலவீனமானவர்களுக்கு ஒரு விதமான ஊன்று கோலாகச் சிபாரிசு செய்யப்படுகிறது. ஏராளமானவர்களுக்கு எப்போதாவது பிரார்த்தனையும் நம்பிக்கையும் அவசியமாக இருக்கின்றன. வாழ்க்கையின் சோதனைகள், மனிதரின் அறிவைக்கூடத் தகர்த்துவிடும் சக்தி வாய்ந்தவையாக இருக்கின்றன. எனவே, பிரார்த்தனையையும் நம்பிக்கையையும் மேற்கொள்ள அவர்களுக்கு உரிமை உண்டு; அவ்விதம் மேற்கொள்ளவும் அவர்கள் வரவேற்கப்படுகிறார்கள். சில உண்மையான பகுத்தறிவுவாதிகள்—அவர்கள் மிகச் சிலரேயாயினும்—இருந்திருக்கிறார்கள், இன்றும் இருக்கிறார்கள். அவர்களுக்கு, பிரார்த்தனைக்கான அவசியமோ, நம்பிக்கைக்கான அவசியமோ ஏற்பட்டதே இல்லை. மற்றும் ஒரு பிரிவினர்

இருக்கிறார்கள். அவர்கள் தீவிர சந்தேகவாதிகள் அல்லவாயினும், மதத்தில் அக்கறை கொள்ளுவதில்லை.

"எல்லா மக்களுக்கும் இறுதியாக பிரார்த்தனையின் உதவி தேவையில்லை. அதன் அவசியத்தை உணருவோர் யாதொரு தடையுமின்றி தாராளமாகப் பிரார்த்தனையை மேற்கொள்ளலாம். தேவையானபோது அவர்கள் பிரார்த்தனையை மேற்கொள்ளவும் செய்கிறார்கள். பிரார்த்தனையில் பலன் இருப்பதாகக் கூறி கட்டாயப்படுத்துவதை நியாயம் என்று கூற முடியாது. கட்டாய தேகப் பயிற்சியும் கட்டாயக் கல்வியும் அவசியமாக இருக்கலாம். கடவுளிடத்திலும், பிரார்த்தனையிலும் நம்பிக்கை, ஒழுக்க வளர்ச்சிக்கு அவசியம் அல்ல. உலகத்திலேயே தலைசிறந்த சந்தேகவாதிகள்தான் மிகவும் ஒழுக்கமுள்ளவர்களாக இருந்திருக்கிறார்கள். பணிவை வெளிப்படுத்துவதற்குப் பிரார்த்தனை அவசியம் என்று நீங்கள் கூறுகிறீர்கள். இந்தப் பணிவு எல்லை மீறி மிகைபடுத்தப்படுகிறது. அறிவு கடல் போன்றது. எனவே, மிகச் சிறந்த விஞ்ஞானிகள்கூட சிற்சில சமயங்களில் அடக்கமாக நடந்து கொள்ளுகிறார்கள். எனினும், இயற்கையை எதிர்த்து அவர்கள் பெறும் வெற்றி எவ்வளவு மகத்தானதோ, அது போலவே அவர்களுக்குத் தங்களுடைய திறமையில் உள்ள நம்பிக்கையும் மகத்தானது. அவ்விதமிராவிடில், நாம் எல்லோரும் உணவிற்காகக் கிழங்குகளை எடுக்க கைவிரல்களால் பூமியைத் தோண்டிக் கொண்டிருப்போம். இல்லை, பூமியின் மேற்பரப்பிலிருந்தே நாம் துடைக்கப்பட்டிருப்போம்.

"பனிக்கட்டி யுகத்தில், மனித வர்க்கத்தைச் சேர்ந்தவர்கள் குளிரால் மடிந்து கொண்டிருந்தபோதும், நெருப்பு முதன் முதலாகக் கண்டு பிடிக்கப்பட்டபோதும், அந்தக் காலத்திலிருந்த உங்களைப் போன்றவர், நெருப்பைக் கண்டுபிடித்தவரைப் பின்வருமாறு ஏளனம் செய்து கடிந்து கூறியிருக்க வேண்டும் என்று நினைக்கிறேன்: 'உங்களுடைய திட்டங்களால் என்ன பயன்? கடவுளின் சக்திக்கும் கோபத்திற்கும் எதிரே உங்களுடைய திட்டங்கள் எம்மாத்திரம்?'

"பணிவுள்ளவர்களுக்கு வேறு உலகில் கடவுளின் சாம்ராஜ்யம் கிட்டும் என்று உறுதி கூறப்பட்டிருக்கிறது. அவர்களுக்கு அது கிடைக்குமா என்பதை நாம் அறியோம். ஆனால், இந்தப் பூமியில் அவர்கள் விகிதத்திற்குக் கிடைப்பதெல்லாம் அடிமைத்தனம்தான். 'நம்பிக்கையை ஒப்புக்கொள்ளுங்கள்; பிறகு தானாக நம்பிக்கை ஏற்பட்டுவிடும்' என்ற உங்களுடைய கூற்று முற்றிலும் உண்மையே, பயங்கரமான உண்மையே. இந்த உலகத்தில் உள்ள பெரும் அளவு மத வெறிக்கும் இத்தகைய உபதேசமே நேரடியான காரணம் என்பதைக் காணலாம். போதிய அளவு இளைஞர்களாக இருக்கும்போதே நீங்கள் அவர்களைப் பிடித்துக் கொள்ளுவீர்களாயின், மனித வர்க்கத்தைச் சேர்ந்த மிகப் பெரும்பாலானவர்கள் எதையும் நம்பும்படி நீங்கள் செய்துவிட முடியும். உங்களுடைய வைதிக ஹிந்துக்களோ அல்லது வெறி பிடித்த முஸ்லிம்களோ அவ்விதமாகத்தான் உருவாகிறார்கள். அத்தகைய நம்பிக்கைகள் கட்டாயப்படுத்தி அவர்களின்மீது சுமத்தப்படுகின்றன. எனினும், இந்த நம்பிக்கைக்கு உட்படாத வெகு சிலர் இரு சமூகங்களிலும் இருக்கத்தான் செய்கிறார்கள். ஹிந்துக்களும் முஸ்லிம்களும் வயது வரும் வரையில் அவர்களுடைய வேத நூல்களைப் படிக்கக்கூடாது என்று நிறுத்தி வைப்பார்களாயின், அவர்கள் மதக் கொள்கைகளில் அவ்வளவு வெறி கொண்ட நம்பிக்கை உடையவர்

களாக இருக்கமாட்டார்கள்; அவற்றிற்காகச் சண்டை போடுவதையும் நிறுத்தி விடுவார்கள். மத சம்பந்தமற்ற கல்வியே. ஹிந்து-முஸ்லிம் கலகங்களைத் தடுப்பதற்கான வழியாகும். ஆனல், உங்களுடைய வழி அது அல்ல.

"இந்த நாட்டில் மக்கள் எப்போதும் அஞ்சி நடுங்கிக் கொண்டிருந்தார்கள். இதற்கு முன் எக்காலத்திலும் இராதவாறு தைரியத்திலும், செயலிலும், தியாகத்திலும் அவர்களுக்கு உதாரணமாகத் திகழ்ந்துள்ள தங்களுக்கு நாங்கள் பெரிதும் கடன்பட்டுள்ளோம். எனினும், உங்கள் தொண்டைக் குறித்து இறுதித் தீர்ப்பு கூறப்படும் போது, இந்த நாட்டின் அறிவு வளர்ச்சிக்கு உங்களுடைய செல்வாக்கு பெரும் தடையாக இருந்தது என்றே குறிப்பிடப்படும்."

இருபது வயதான இளைஞன் ஒரு சிறுவன் அல்ல என்ருல், சிறுவன் என்ற சொல்லின் பொருளை நான் அறிந்து கொள்ளவில்லை என்றே ஆகும். படிப்பதற்காகப் பள்ளிக்கூடத்திற்குச் செல்லும் எல்லோரையும், அவர்களுடைய வயது என்னவாயினும், சிறுவர்கள் என்றும் சிறுமிகள் என்றுமே நான் அழைப்பேன். சந்தேகவாதியான மாணவன் ஒரு சிறுவனுயினும் அல்லது ஒரு மனிதனுயினும், எனது வாதங்கள் எவ்விதத்திலும் பாதிக்கப்படவில்லை. ஒரு மாணவன் ஒரு சிப்பாயைப் போன்றவன். ஒரு சிப்பாய் நாற்பது வயதானவராக இருக்கலாம். சிப்பாயைப்போல் மாணவனும், ஒரு ஒழுங்கு விதிக்குக் கட்டுப்படுவதாக முன்வந்திருக்கும்போது, ஒழுங்குபற்றிய விஷயங்களையொட்டி அவன் வாதிக்கக்கூடாது. ஒரு ராணுவப் பிரிவில் இருக்கும் ஒரு சிப்பாய், அவருக்கு என்ன வேலை விதிக்கப்படுகிறதோ அதைத்தான் செய்ய வேண்டும். எந்தக் காரியத்தையும் தமது விருப்பப்படி செய்யவோ அல்லது செய்யாமல் இருக்கவோ அவருக்கு உரிமை இல்லை. அது போலவே ஒரு மாணவன், அவன் எவ்வளவு புத்திசாலியாக இருந்தாலும் சரி, அல்லது எவ்வளவு வயதானவனுக இருந்தாலும் சரி, ஒரு கல்விசாலையிலோ அல்லது கல்லூரியிலோ சேர்ந்துவிட்டால், அதன் ஒழுங்கு விதிகளை நிராகரிக்கும் உரிமையை இழந்துவிடுகிருன். அதனல் மாணவனின் அறிவைக் குறைவாக மதிப்பிடுவதாகவோ அல்லது இகழ்வதாகவோ ஆகாது. செய்வோருக்கு அதிருப்தி அளிக்கக்கூடிய ஒவ்வொரு நடவடிக்கையும் நிர்ப்பந்தமாகும் என்று கடிதம் எழுதிய நிருபர் கருதுகிருர். நிர்ப்பந்தத்தில் இரண்டு விதம் உண்டு. தனக்குத்தானே விதித்துக்கொள்ளும் நிர்ப்பந்தத்தை நாம் தன்னடக்கம் என்கிருேம். தன்னடக்கத்தில் உறுதியாக இருந்தால், நாம் வளர்ச்சி அடைகிருேம். ஆனல், நமது விருப்பத்திற்கு விரோதமாகவும், பெரிதும் நம்மை அவமதிக்கவேண்டும் என்ற நோக்கத்துடனும், நமது கௌரவத்தைக் குலைக்கவேண்டும் என்ற எண்ணத்துடனும், நம்மீது சுமத்தப்படும் நிர்ப்பந்தத்தை, நமது உயிருக்கு ஆபத்து ஏற்படுவதாக இருந்தால் கூட, உதறித்தள்ளிவிட வேண்டும். சமுதாயக் கட்டுப்பாடுகள் பொதுவாக நன்மை அளிப்பவையே. அவற்றை நாம் நிராகரிப்பதால் நமக்குத்தான் கேடு விளையும்.

ஊர்ந்து செல்லவேண்டும் என்ற உத்தரவுக்குக் கீழ்ப்படிவது மனிதத் தன்மையற்றது, கோழைத்தனமானது. ஒவ்வொரு விநாடியும் நமது வாழ்க்கையைச் சூழ்ந்துகொண்டு நம்மை அடிமைகளாக்கத் தயாராக இருக்கும் வெறிக் குணங்களுக்கு அடிபணிவது இன்னும் அதிக மோசமானது.

பகுத்தறிவுவாதிகள் வியக்கத்தக்கவர்கள்தான். எனினும், பகுத்தறிவு சர்வ வல்லமை பொருந்தியது என்று கூறும்போது அது பயங்கரமான அரக்கத்தன்மை வாய்ந்ததாகிவிடுகிறது. மரத்தையும் கல்லையும் கடவுள் என்று நம்பி வணங்குவதைப் போல், பகுத்தறிவுக்கு சர்வ வல்லமை உண்டு என்பதும் மோசமான விக்கிரக ஆராதனை போன்றதே.

பிரார்த்தனையின் உபயோகத்தை பகுத்தறிவைக் கொண்டு யார் கணக்கிட முடியும்? அதன் உபயோகம், அதை நடைமுறையில் செய்து பார்த்த பின் உணரப்படவேண்டியதாகும். உலகம் நமக்குக் காண்பிக்கும் உதாரணம் அதுதான். கார்டினல் நியூமன் தமது பகுத்தறிவை ஒரு காலத்திலும் கைவிடவில்லை. ஆனால், பிரார்த்தனைக்கு அவர் சிறப்பிடம் அளித்தார். அதனாலேயே, 'எனக்கு ஓர் அடிமுன் செல்வது போதுமானது' என்று பணிவுடன் பாடினார். பகுத்தறிவு வாதிகளிடையே ஆதிசங்கரர் மன்னராகத் திகழ்ந்தார். உலக இலக்கியத்தில், சங்கரரின் பகுத்தறிவு வாதத்தை மிஞ்சுவது எதுவுமே இல்லை. எனினும், பிரார்த்தனைக்கும் நம்பிக்கைக்கும் சங்கரர் முதல் இடம் அளித்தார்.

நம்முன் நிகழ்ந்து வரும் நிலையற்ற, கலக்கத்தைக் கொடுக்கும் சம்பவங்களை, சாதாரணமாக நிகழும் பொதுச் சம்பவங்களாகக் கருதி நிருபர் அவசரப்பட்டு தமது அபிப்பிராயத்தைக் கூறியிருக்கிறார். இப்புவியில் ஒவ்வொரு விஷயமும், துஷ்பிரயோகம் செய்யப்படுவதற்கு இடம் கொடுக்கிறது. மனிதனைப் பொறுத்த ஒவ்வொரு விஷயத்தையும் இயக்கும் நியதி இதுதான் என்று தோன்றுகிறது. சரித்திரத்திலேயே மிக்க பயங்கரமான குற்றங்களுக்கு மதம் பதில் சொல்லியாகவேண்டும் என்பதில் ஐயமில்லை. ஆனால், இது மதத்தின் குற்றம் அல்ல; மனிதனிடம் உள்ள அடக்கி ஆளமுடியாத மிருகத்தனத்தின் குற்றமேயாகும். காட்டுமிராண்டி பரம்பரையிலிருந்து வந்துள்ள மனிதன், இன்னும் அந்த பரம்பரைக் குணத்தை விட்டபாடில்லை!

சாதாரண நம்பிக்கையை அடிப்படையாகக் கொள்ளாமல், பகுத்தறிவை அடிப்படையாகக் கொண்டு தமது ஒவ்வொரு நடவடிக்கையையும் மேற்கொள்ளும் ஒரு பகுத்தறிவு வாதியைக்கூட நான் அறியேன். நம் எல்லோரையும் படைத்தவரிடம் குழந்தையைப் போன்ற நம்பிக்கை வைத்து, தங்களுடைய ஒழுங்கான வாழ்க்கை முறைகளைப் பின்பற்றிவரும் கோடிக்கணக்கானவர்களை நாம் எல்லோரும் அறிவோம். அந்த நம்பிக்கையே பிரார்த்தனையாகும்.

மத சம்பந்தமற்ற கல்வியும், இளைஞர்களின் மனத்தை ஒரு குறிப்பிட்ட விதத்தில் உருவாக்கும் முயற்சியே ஆகும். உடலுக்கும் மனத்திற்கும் பயிற்சியளித்து வழிகாட்ட வேண்டிய அவசியத்தை நிருபர் ஒத்துக் கொள்ளுகிறார். ஆனால், உடலையும் மனத்தையும் சாத்தியமானவையாகச் செய்யும் ஆன்மாவைப் பற்றி அவர் கவலைப்படவில்லை. ஒரு வேளை, ஆன்மா இருக்கிறதா என்பதே அவருக்குச் சந்தேகமாக இருக்கலாம். சிறுவர், சிறுமிகளின் உடலுக்கும் மனத்திற்கும் பயிற்சியளித்து வழிகாட்ட வேண்டும் என்று நிருபர் கூறுவதைப்போல், கடவுளிடத்தில் நம்பிக்கையுடையவர், சிறுவர், சிறுமிகளின் ஆன்மாவுக்குப் பயிற்சியளித்து வழிகாட்ட வேண்டும் என்று கூறலாம் அல்லவா? உண்மையான மத உணர்ச்சி ஏற்படுமாயின், மத போதனையிலுள்ள தீமைகள் மறைந்துவிடும். ஆனால், மத போதனையைக் கைவிடுவது, தானியம் விளையும் ஒரு வயலைத் தரிசாகக் கிடக்கும்படி விட்டுவிடுவது போலாகும். வயலை ஒழுங்கான முறையில் உபயோகிக்க உழவாளிக்குத் தெரியவில்லை என்பதற்காக, வயலில் பயனற்ற பூண்டுகள் வளரும்படி விட்டுவிடலாமா?

விஞ்ஞானத் துறையில் பல அற்புதமான விஷயங்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன என்ற வாதம், பிரஸ்தாப விஷயத்திற்குப் பொருத்தமானதல்ல. கண்டுபிடிக்கப்பட்டுள்ள விஞ்ஞான அற்புதங்களின் உபயோகத்தையோ அல்லது மகத்துவத்தையோ யாரும் ஆட்சேபிக்கவில்லை; நானும் அவற்றை ஆட்சேபிக்கவில்லை. பகுத்தறிவை உபயோகிப்பதற்கு அவைதான் சரியான துறையுமாகும். எனினும், அந்த அற்புதங்களைக் கண்டு பிடித்தவர்கள், தங்களுடைய வாழ்க்கையிலிருந்து நம்பிக்கை, பிரார்த்தனை முதலியவற்றின் ஆதிக்கத்தைப் புறக்கணித்து விடவில்லை. நம்பிக்கையும், பிரார்த்தனையும் இல்லாத தொழில்கள் மணமற்ற செயற்கை மலரைப் போன்றவை. பகுத்தறிவை அடக்கி ஒடுக்கி விடவேண்டும் என்று நான் கூறவில்லை; பகுத்தறிவையே புனிதமாக்கும் நம்மிடம் உள்ள ஒன்றை அங்கீகரிக்க வேண்டும் என்றே கூறுகிறேன்.

—'எங் இந்தியா' - 14—10—1926

## 7

# சக்தி வாய்ந்த கருவி

லண்டன் வட்ட மேஜை மகாநாட்டில் கலந்து கொள்ளுவதற்காக காந்திஜி 'ராஜபுதனா' கப்பலில் சென்றபோது, தினந்தோறும் காலையிலும் மாலையிலும் பிரார்த்தனைகள் நடந்தன. காலைப் பிரார்த்தனை விடியற்காலம் நடந்ததால் அதில் அதிகமாக எவரும் கலந்து கொள்ளவில்லை. மாலைப் பிரார்த்தனையில் ஹிந்துக்கள், முஸ்லிம்கள், பார்சிகள், சீக்கியர்கள் முதலிய நாற்பது பேரும் சில ஐரோப்பியர்களும் கலந்து கொண்டனர். அவர்

களுடைய வேண்டுகோளுக்கிணங்க, பிரார்த்தனை முடிந்தபின் காந்திஜி பதினைந்து நிமிஷ நேரம் பேசுவது வழக்கம். இறுதியில் கேட்கப்படும் ஒரு கேள்விக்கு காந்திஜி மறுநாள் பதில் அளிப்பார். பிரார்த்தனை சம்பந்தமாக தமது சொந்த உதாரணத்தைக் கூறும்படி, அதாவது பிரார்த்தனையின் பலனைக தமக்கு ஏற்பட்ட உணர்ச்சியையும், அனுபவத்தையும் குறிப்பிடும்படி ஒரு நாள் முஸ்லிம் இளைஞர் ஒருவர் காந்திஜியைக் கேட்டார். அந்தக் கேள்வியை காந்திஜி பாராட்டியதோடு, நிரம்பிய மனத்துடன் தமது அனுபவத்தை விவரித்தார். காந்திஜி கூறியதாவது:

"என் உயிரையே காப்பாற்றி வந்திருப்பது பிரார்த்தனை தான். பிரார்த்தனையின்றேல், நீண்டகாலத்திற்கு முன்பே எனக்குப் பைத்தியம் பிடித்திருக்க வேண்டும். என் பொது வாழ்க்கையிலும் சொந்த வாழ்க்கையிலும் மிகக் கசப்பான அனுபவங்கள் எனக்கு ஏற்பட்டன என்பதை என் சுய சரிதையிலிருந்து நீங்கள் அறிந்துகொள்ளலாம். அவை எனக்கு தாற்காலிகமாக மனச் சோர்வை உண்டாக்கின. எனினும், நான் அந்தச் சோர்வை அகற்றும் ஆற்றல் பெற்றிருந்தேனெனில், அதற்குக் காரணம் பிரார்த்தனைதான்.

"சத்தியம், எனது வாழ்க்கையின் ஓர் அம்சமாகவே இருந்து வந்திருக்கிறது. ஆனால், பிரார்த்தனை அவ்விதம் இல்லை. அவசியம் காரணமாகவே, என் வாழ்க்கையில் பிரார்த்தனைக்கு இடம் ஏற்பட்டது. பிரார்த்தனை இன்றேல், நான் சந்தோஷமாக இருக்க முடியாது என்ற நிலை ஏற்பட்டதே அதற்குக் காரணமாகும். எனக்குக் கடவுளிடத்தில் நம்பிக்கை எவ்வளவுக்கு அதிகமாயிற்றோ, அவ்வளவுக்கு பிரார்த்தனையில் உள்ள ஆர்வமும் அடக்க முடியாததாகியது. பிரார்த்தனை இல்லாத வாழ்வு மந்தமாகவும் சூன்யமாகவும் தோன்றியது. தென்னாப்பிரிக்காவில் கிறிஸ்தவர்களின் பிரார்த்தனைக்கு நான் சென்றிருந்தேன். ஆனால், அது என்னைக் கவரவில்லை. பிரார்த்தனையில், என்னால் அவர்களுடன் கலந்து கொள்ள முடியவில்லை. அவர்கள் கடவுளை மன்றாடிக் கேட்டுக் கொண்டார்கள். என்னால் அவ்விதம் செய்ய முடியவில்லை. அம்முயற்சியில் நான் படுதோல்வியே அடைந்தேன். கடவுளிடத்திலும் பிரார்த்தனையிலும் நம்பிக்கையின்றியே நான் வாழ்க்கையைத் தொடங்கினேன். அப்போது அதன்காரணமாக என் வாழ்க்கையில் சூன்ய நிலை எதுவும் இருப்பதாகத் தோன்றவில்லை. ஆனால், வாழ்க்கையின் பிற்பகுதியில், உடலுக்கு உணவு எவ்வளவு அவசியமோ, அவ்வளவு ஆன்மாவுக்கு பிரார்த்தனை அவசியம் என்பதை உணர்ந்தேன். உண்மையில் பிரார்த்தனை ஆன்மாவுக்கு எவ்வளவு அவசியமோ, உடலுக்கு உணவு அவ்வளவு அவசியமில்லை. ஏனெனில், உடலை ஆரோக்கியமாக வைத்துக் கொள்ளுவதற்கு அடிக்கடி பட்டினி கிடக்கவேண்டியது அவசியமாகிறது, ஆனால், பிரார்த்தனைப் பட்டினி என்று எதுவுமே இல்லை. உணவு மிதமிஞ்சிப் போவதைப் போல, பிரார்த்தனையில் மிதமிஞ்சுவது என்பதற்கே இடமில்லை.

"பிரார்த்தனையின் மூலமே தாங்கள் ஒளியைக் கண்டதாகவும், அது இல்லாமல் தாங்கள் உயிர் வாழ முடியாது என்றும் புத்தர், ஏசுநாதர், முகமது நபி இந்த மூன்று மாபெரும் மதாச்சாரியர்களும் ஆட்சேபணைக்கு இடமின்றி நிரூபித்திருக்கிறார்கள். இன்றும், கோடிக்கணக்கான ஹிந்துக்களும், முஸ்லிம்களும், கிறிஸ்தவர்களும் பிரார்த்தனை ஒன்றின் மூலமே ஆறுதல் அடைகிறார்கள். அவர்களையெல்லாம் பொய்யர்கள் என்றோ அல்லது தங்களைத் தாங்களே ஏமாற்றிக் கொள்ளுபவர்கள் என்றோ நீங்கள் கூறலாம். அப்படியாயின், சத்தியத்தை நாடுபவனான எனக்கு அந்தப் 'பொய்' தான் என் வாழ்க்கைக்கே ஓர் ஊன்றுகோலாகியிருக்கிறது என்று நான் கூறுவேன். அந்த ஊன்றுகோலின்றி ஒரு விநாடி கூட உயிர் வாழ்வதை நான் சகிக்க முடியாது. அரசியல் வானில் நம்பிக்கையற்ற நிலை என்னை எதிர்நோக்கியிருந்தும்கூட, நான் ஒருபோதும் என் மன அமைதியை இழந்துவிடவில்லை. உண்மையில், என் மன அமைதியைக் கண்டு பொறாமைப்படுவோரும் இருந்தார்கள். பிரார்த்தனையிலிருந்தே அத்தகைய அமைதி வருகிறது என்பதை உங்களுக்கு நான் கூறுகிறேன். நான் கற்றறிஞன் அல்ல; ஆனால், பிரார்த்தனையில் பூரண நம்பிக்கையுடையவன் என்பதைப் பணிவுடன் கூறிக்கொள்ளுகிறேன். பிரார்த்தனை செய்யும் முறையைப் பற்றி நான் அக்கறை கொள்ளவில்லை. அவ்விஷயத்தில், ஒவ்வொருவரும் அவரவர் இஷ்டப்படி ஒரு விதியைப் பின்பற்றலாம். எனினும், நன்றாகக் குறிப்பிடப்பட்ட சில சாலைகள் இருக்கின்றன. பண்டைய உபதேசகர்கள் சென்று பழகிய சாலைகளில் நடந்து செல்லுவதே பத்திரமானதாகும்."

மற்றொரு நாள் மாலை ஓர் இளைஞன் கேட்டதாவது: "கடவுளிடத்தில் நம்பிக்கையுடன் நீங்கள் வாழ்க்கையை ஆரம்பித்தீர்கள். நாங்களோ நம்பிக்கையின்றி வாழ்க்கையை ஆரம்பிக்கிறோம். நாங்கள் எப்படிப் பிரார்த்திப்பது?"

காந்திஜி: "நல்லது, கடவுளிடத்தில் உங்களுக்கு நம்பிக்கை ஏற்படும்படி செய்வது, என் சக்திக்கு அப்பாற்பட்டது. உலகில் சில விஷயங்கள் இருக்கின்றன. அவை சுயமாகவே நிரூபிக்கப்படுவதாக இருக்கின்றன; சிலவற்றை நிரூபிக்க முடியாது. கடவுள் இருப்பது, க்ஷேத்திர கணிதத்தின் ஒரு சூத்திரம் போன்றதல்ல. அது, நமது இருதயத்தின் பிடிக்கு அப்பாற்பட்டதாக இருக்கலாம். இவ்விஷயத்தில், அறிவை அடிப்படையாகக் கொண்ட முயற்சியே தோல்வி அடைந்துள்ளன. பகுத்தறிவை ஆதாரமாகக் கொண்ட விளக்கம், உங்களிடத்தில் கடவுள் நம்பிக்கையை உண்டாக்கிவிட முடியாது. ஏனெனில், அது பகுத்தறிவின் பிடிக்கு அப்பாற்பட்டது. உலகத்தில் தென்படும் அசாதாரணமான அற்புதங்களிலிருந்து, கடவுள் இருப்பதை அறிவினால் அறிந்துகொள்ள முடியும். அவ்விஷயத்தில், பகுத்தறிவைக்கொண்டு நான் விளக்கம் கூற முற்படுவது, உங்களுடைய புத்திசாலித்தனத்தை அவமதிப்பதாகும். எனவே, பகுத்தறிவை ஆதாரமாகக் கொண்ட விளக்கங்களையெல்லாம் நீங்கள் புறக்

கணித்துவிட்டு, கடவுளிடத்தில் குழந்தையைப் போல் நம்பிக்கை வைக்க முற்படவேண்டும். நான் இருப்பது உண்மையாயின், கடவுள் இருப்பதும் உண்மையே. கோடிக்கணக்கானவர்களுக்கு வாழ்க்கையில் அது அவசியமாக இருப்பதுபோல, எனது வாழ்க்கையிலும் அது அவசியமாக இருக்கிறது. அதைப்பற்றி அவர்கள் பேசமுடியாதவர்களாக இருக்கலாம். எனினும், அது அவர்களுடைய வாழ்க்கையின் ஓர் அம்சம் என்பதை அவர்களின் வாழ்க்கையிலிருந்து நீங்கள் தெரிந்துகொள்ளலாம். பாழாக்கப் பட்டுவிட்ட நம்பிக்கையை மீண்டும் புனருத்தாரணம் செய்ய வேண்டும் என்று மாத்திரமே நான் கேட்கிறேன். அவ்விதம் செய்ய வேண்டுமாயின், நீங்கள் கற்றுக்கொண்ட, உங்களுடைய அறிவை மயக்கி உங்களைத் தடுமாறச்செய்யும் இலக்கியங்களையெல்லாம் நீங்கள் மறந்துவிட வேண்டும். நம்பிக்கை, பணிவின் அடையாள மாகும். நமக்கு ஒன்றுமே தெரியாது என்பதையும், இந்த உலகில் நாம் அணுக்களையும்விடக் கீழானவர்கள் என்பதையும் ஒப்புக்கொள்ளுவதே நம்பிக்கையாகும். அத்தகைய நம்பிக்கையுடன் நாம் தொடங்க வேண்டும். நாம் அணுக்களையும் விடத் தாழ்ந்தவர்கள் என்று நான் ஏன் கூறுகிறேன் என்றால். அணு அதை இயற்றிய இயற்கையின் சட்டத்திற்குக் கீழ்ப்படிந்து நடக்கிறது. ஆனால் நாமோ, அறியாமையினாலும் மமதையினாலும் இயற்கையின் விதியை மறுக்கிறோம். எனினும், நம்பிக்கை இல்லாதவர்களைத் திருப்திப்படுத்தக் கூடிய விதத்தில் வாதிக்க எனக்குத் தெரியாது.

"கடவுள் இருப்பதை நீங்கள் ஒப்புக் கொண்டுவிட்டால், பிரார்த்தனையின் அவசியம் தவிர்க்க முடியாததாகிவிடும். நம்முடைய வாழ்க்கை முழுவதும் ஒரு பிரார்த்தனையே என்றும், எனவே, ஒரு குறிப்பிட்ட நேரத்தில் பிரார்த்தனை செய்வதற்காக நாம் உட்காரவேண்டிய அவசியம் இல்லை என்றும் சாதித்து நாம் எவரையும் திடுக்கிடவைக்காமல் இருப்போமாக. ஆதி அந்தமற்ற கடவுளுடன் எப்போதும் தொடர்பு கொண்டுள்ளவர்கள் கூட, தாங்கள் அவ்விதம் சாதித்திருப்பதாகக் கூறியதில்லை. அவர்களுடைய வாழ்க்கை முழுவதும் இடைவிடாத பிரார்த்தனையாகவே இருந்திருக்கிறது. எனினும், நமக்காக அவர்கள் குறிப்பிட்ட நேரத்தில் பிரார்த்தனை செய்து, ஒவ்வொரு நாளும் கடவுளிடம் விசுவாசப் பிரதிக்ஞை எடுத்துக் கொண்டுவந்தார்கள். அவ்விதம் நாம் பிரதிக்ஞை செய்துகொள்ள வேண்டும் என்று கடவுள் வற்புறுத்தவில்லை. எனினும், நமது பிரதிக்ஞையை நாம் ஒவ்வொரு நாளும் புதுப்பித்துக்கொள்ள வேண்டும். அப்படியாயின், நாம் வாழ்க்கையில் நிகழக்கூடிய எல்லாத் துன்பங்களிலிருந்தும் விடுதலை பெறுவோம் என்று உறுதி கூறுகிறேன்."

'எங் இந்தியா' –24–9–1931

# 8

# எனது பிரார்த்தனை முறை

சேவாகிராமத்தில் ஓய்வு எடுத்துக் கொண்டிருந்த காந்திஜியை ஒரு பாதிரியார் பேட்டி கண்டு, "உங்களுடைய பிரார்த்தனை முறை என்ன?" என்று கேட்டார். அதற்குப் பதிலாக காந்திஜி கூறியதாவது :

நாங்கள் காலையில் 4-20 மணிக்கும் மாலையில் 7 மணிக்கும் கோஷ்டியாகப் பிரார்த்தனை செய்கிறோம். இத்தகைய பிரார்த்தனை சென்ற பல ஆண்டுகளாக நடந்து வருகிறது. கீதையிலிருந்தும், மற்றும் ஒப்புக்கொள்ளப்பட்ட மத நூல்களிலிருந்தும், முனிவர்களின் தோத்திரங்களிலிருந்தும் சில வாக்கியங்களை, இசையுடனோ அல்லது இல்லாமலோ நாங்கள் பிரார்த்தனைக்கு எடுத்துக்கொள்ளுகிறோம். தனி நபரின் பிரார்த்தனையைச் சொற்களால் வருணிக்க முடியாது. அத்தகைய பிரார்த்தனை இடைவிடாது நடந்து வருகிறது; ஒரு சாட்சி எப்போதும் எதிரில் இருந்து கொண்டிருப்பதாக நான் உணராத விநாடியே இல்லை. அந்தச் சாட்சியின் கண்கள், ஒன்றைக்கூட விடாமல் பார்த்துக் கொண்டிருக்கின்றன. அவருடன் எப்போதும் தொடர்பு வைத்துக்கொள்ள நான் முயற்சித்து வருகிறேன். கிறிஸ்தவ நண்பர்கள் பிரார்த்திப்பதைப் போல நான் பிரார்த்திப்பதில்லை. அவர்கள் பிரார்த்திப்பதில் தவறு எதுவும் இருப்பதாக நான் கூறவில்லை. ஆனால், அவர்களைப் போல் மன்றாடிக் கேட்டுக்கொள்ளுவதற்கான வார்த்தைகள் எனக்கு வருவதில்லை. அது பழக்கத்தைப் பொறுத்த ஒரு விஷயம் என்று நான் நினைக்கிறேன்.

**பாதிரியார் :** உங்களுடைய பிரார்த்தனையில், உங்களுடைய கோரிக்கைகளைக் கெஞ்சிக் கேட்டுக்கொள்ளுவதற்கு இடம் இருக்கிறதா ?

**காந்திஜி :** இந்தக் கேள்விக்கு இருக்கிறது என்றும் இல்லை என்றுமே நான் பதில் கூறவேண்டும். நமது தேவைகளைக் கடவுள் நன்கறிவார். எனவே, நான் கெஞ்சிக் கேட்டுக் கொள்ள வேண்டும் என்று கடவுள் எதிர்பார்க்கவில்லை. ஆனால், மிகுந்த குற்றம் குறைகள் உள்ள மனிதனை நான், தந்தையின் பாதுகாப்பை ஒரு குழந்தை நாடுவதைப் போல், கடவுளின் பாதுகாப்பை நாடுகிறேன். இருந்தாலும், நான் செய்யும் எதுவும் அவரது திட்டங்களில் எவ்வித மாறுதலையும் உண்டாக்கிவிடாது என்பதை நான் அறிவேன். எல்லாவற்றிற்கும் விதிதான் காரணம் என்ற கொள்கையுடையவன் நான் என்று நீங்கள் விரும்பினால் கூறலாம்.

**பாதிரியார் :** உங்களுடைய பிரார்த்தனைக்கு ஏதாவது பதில் கிடைத்தது உண்டா ?

**காந்திஜி :** அவ்விஷயம் சம்பந்தப்பட்டவரையில் என்னை ஓர் அதிருஷ்டசாலி என்றே நான் கருதுகிறேன். பதிலளிக்க கடவுள் ஒருபோதும் தவறியதில்லை என்பதை நான் கண்டுள்ளேன். வானத்தில் மிகவும் இருள் சூழ்ந்திருந்தபோது, சிறைகளில் எனக்குச் சோதனைகள் ஏற்பட்டு நான் சங்கடமான நிலையில் இருந்தபோது, கடவுள் என் அருகிலேயே இருப்பதை நான் கண்டேன். கடவுளால் நான் கைவிடப் பட்டேன் என்ற உணர்ச்சி, என் வாழ்க்கையில் ஒரு விநாடி கூட எனக்கு ஏற்பட்டதாக நான் கூறமுடியாது.

—'ஹரிஜன்' – 24—12—1938

# 9

# ஆசிரம வாழ்க்கையில் பிரார்த்தனை

## (1)

சத்தியத்தை வற்புறுத்துவது ஆசிரமத்தின் ஆணி வேர் எனில், அந்த வேருக்கு முக்கியமான உணவு பிரார்த்தனைதான். ஒவ்வொரு நாளும் ஆசிரமவாசிகளின் நடவடிக்கைகள் விடியற் காலம் 4-15-இலிருந்து 4-45 வரையில் கோஷ்டிப் பிரார்த்தனையுடன் ஆரம்பமாகின்றன; 7-இலிருந்து 7-30 வரையில் மாலைப் பிரார்த்தனையுடன் முடிவடைகின்றன. ஆசிரமம் ஸ்தாபிக்கப்பட்டதிலிருந்து எனக்குத் தெரிந்தவரையில் பிரார்த்தனையின்றி ஒரு நாள் கூட சென்றதில்லை. பல சந்தர்ப்பங்களில் மழை காரணமாக, பொறுப்பான ஒரே ஒருவர் மாத்திரமே பிரார்த்தனை மைதானத்திற்கு வந்திருந்தார். நோய் அல்லது அது போன்ற முக்கியமான காரணம் இருந்தாலன்றி ஆசிரமவாசிகள் யாவரும் பிரார்த்தனைக்கு வரவேண்டும் என்று எதிர்பார்க்கப்படுகிறார்கள். மாலைப் பிரார்த்தனை சம்பந்தப்பட்ட வரையில் எதிர்பார்க்கிறபடி அநேகமாக எல்லோரும் வருவது உண்டு. ஆனால், காலைப் பிரார்த்தனையை யொட்டி அவ்விதம் கூறுவதற்கில்லை.

காலைப் பிரார்த்தனைக்கான நேரம் 4, 5, 6, 7 மணி என்று ஒவ்வொன்றாக சோதனை செய்து பார்க்கப்பட்டது. ஆனால், அவ்விஷயத்தில் நான் மிகவும் கண்டிப்பாக இருந்ததால், கடைசியாக பிரார்த்தனை நேரம் 4-20 என்று நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. 4 மணிக்கு முதல் மணி அடித்ததும் எல்லோரும் படுக்கையிலிருந்து எழுந்துவிடுகிறார்கள்; கைகால்களைச் சுத்தம் செய்துகொண்டு 4-20 மணிக்கு பிரார்த்தனை மைதானத்திற்கு வருகிறார்கள்.

இந்தியாவைப் போன்ற ஒரு நாட்டில் ஒருவர் எவ்வளவு சீக்கிரமாக படுக்கையிலிருந்து எழுந்திருக்கிறாரோ, அவ்வளவுக்கு அது

மிகவும் நன்மையாகும் என்பது எனது நம்பிக்கை. விவசாயி நேரம் கழித்து எழுந்தால், அவரது பயிர்களுக்குச் சேதம் உண்டாகும். கால்நடைகள் அதிகாலையில்தான் கவனிக்கப் படுகின்றன. பசுக்களையும் அதிகாலையில்தான் பால் கறக்கிருர்கள். அவ்விதமிருக்க, சத்தியத்தைப் பாதுகாக்க முற்படுவோர், மக்களின் ஊழியர்கள் அல்லது துறவிகள் முதலியோர் அதிகாலையில் 2 அல்லது 3 மணிக்கு எழுந்துவிடலாம். அவர்கள் அவ்விதம் எழுந்திராவிடில் அது ஆச்சரியப்படத்தக்கதாக இருக்கும். உலகத்தில் உள்ள எல்லா தேசங்களிலும் கடவுள் பக்தர்களும் விவசாயிகளும் அதிகாலையில் எழுந்துவிடுகிருர்கள். பக்தர்கள் அதிகாலையில் கடவுளை தோத்திரம் செய்கிருர்கள். விவசாயிகள் அவர்களுடைய வயல்களில் வேலை செய்கிருர்கள். அதனுல் அவர்களுக்கும் நன்மை, உலகத்திற்கும் நன்மை. அவ்விருவரும் பக்தர்கள் என்பதே என கருத்தாகும். பக்தர்கள் தெரிந்தே கடவுளை வணங்குகிருர்கள். விவசாயிகளோ, தங்களுடைய உழைப்பின் மூலம் தாங்கள் அறியாமலேயே கடவுளை வணங்குகிருர்கள். உலகத்திற்கு உணவு கிடைப்பதற்கு அவர்களுடைய உழைப்பு உதவியாக இருக்கிறது அல்லவா? விவசாயிகள் தங்களுடைய வயல்களில் உழைப்பதற்குப் பதிலாக இறைவனைத் தியானம் செய்ய முற்படுவார்களாயின், அவர்கள் தங்களுடைய கடமையைச் செய்யத் தவறியவர் ஆவார்கள். அதன் விளைவாக, அவர்களுக்கும் உலகத்திற்கும் அழிவு ஏற்படும்.

விவசாயியை ஒரு பக்தராக நாம் கருதலாம், அல்லது கருதாமலிருக்கலாம். ஆனல், விவசாயிகள், தொழிலாளர்கள் முதலிய மற்றவர்கள் விரும்பியோ அல்லது விரும்பாமலோ அதிகாலையில் எழுந்திருக்க வேண்டியவர்களாக இருக்கிருர்கள். அப்படியிருக்க, சத்தியத்தை வணங்குவோர் அல்லது மக்களின் ஊழியர் எப்படி காலம் கடந்து படுக்கையிலிருந்து எழுந்திருக்க முடியும்? தொண்டிற்கும், கடவுள் வழிபாட்டிற்கும் நெருங்கிய தொடர்பு இருக்கும்படியாகச் செய்ய ஆசிரமத்தில் உள்ள நாங்கள் முயற்சி செய்து வருகிறோம். எனவே, ஆசிரமத்தில் திடகாத்திரமுள்ள சகலரும், கஷ்டமாக இருந்தால்கூட, விடியற்காலம் 4 மணிக்கு எழுந்துவிடவேண்டும் என்பது எனது திடமான அபிப்பிராயமாகும். 4 மணி அதிக விடியற்காலம் அல்ல. 4 மணிக்கு முன் எழுந்திராவிட்டாலும், அதிகமாகப் போனல் 4 மணிக்காவது நாம் எழுந்து நமது அலுவல்களை ஆரம்பித்துவிட வேண்டும்.

அதன் பின்னர், சில விஷயங்களை யொட்டி நாங்கள் ஒரு தீர்மானத்திற்கு வரவேண்டியிருந்தது. எந்த இடத்தில் பிரார்த்தனை செய்ய வேண்டும்? நாங்கள் அதற்காக ஓர் ஆலயத்தை நிர்மாணிப்பதா அல்லது வெட்ட வெளியில் கூடிப் பிரார்த்திப்பதா? நாங்கள் ஒரு மேடையை அமைக்க வேண்டுமா, அல்லது மணலிலோ, புழுதியிலோ உட்கார வேண்டுமா? பிரார்த்தனை செய்யும் இடத்தில் ஏதாவது விக்கிரகங்கள் இருக்கவேண்டுமா?

கடைசியில், வானத்தையே விதானமாகக் கொண்டு மணலில் உட்காருவது என்றும், விக்கிரகம் எதுவும் வைத்துக்கொள்ளுவதில்லை என்றும் தீர்மானித்தோம். ஆசிரமம் அனுசரித்து வரும் முறை ஏழ்மையேயாகும். பட்டினி கிடக்கும் கோடிக்கணக்கான மக்களுக்குத் தொண்டு செய்வதற்காகவே ஆசிரமம் இருக்கிறது. மற்றவர்களைப்போல் ஏழைகளுக்கும் ஆசிரமத்தில் இடம் உண்டு. ஆசிரம விதிகளுக்கு உட்பட்டு நடக்க விரும்பும் எல்லோரையும் ஆசிரமம் மகிழ்ச்சியுடன் வரவேற்கின்றது. அத்தகைய ஒரு ஸ்தாபனத்தில், கடவுளை வழிபடும் இடத்தைக் கற்களாலும் சுண்ணும்பினாலும் கட்டுவது முடியாத காரியம். அதற்கு வானம்தான் கூரையாகும்; ஆசிரமவாசிகளின் விடுதிகள்தான் சுவர்களும் தூண்களுமாகும். ஒரு மேடை எழுப்பத் திட்டமிட்டோம்; ஆனால், பின்னர் அந்த யோசனை கைவிடப்பட்டது. பிரார்த்தனையில் எத்தனை பேர் கலந்து கொள்ளுவார்கள் என்பது நிர்ணயமாகத் தெரியாததே அதற்குக் காரணம். பெரிய மேடையாக எழுப்பினால், பணச் செலவு அதிகமாகும். பிரார்த்தனைக்காக ஒரு விடுதியோ அல்லது ஒரு மேடையோகூட நிர்மாணிக்காமல் இருப்பதே சிறந்த தீர்மானம் என்பதை அனுபவமானது காட்டியிருக்கிறது. ஆசிரமத்தில் நடைபெறும் பிரார்த்தனைக்கு வெளியிலிருந்தும் மக்கள் வருகிறார்கள். எனவே, சிற்சில சமயங்களில் வரும் ஜனக்கூட்டத்தைப் பார்க்கும்போது, எவ்வளவு பெரிய மேடையாக அமைத்தாலும் இடம் போதாது.

நான் செல்லும் இடங்களிலெல்லாம் காலையிலும் மாலையிலும் பிரார்த்தனைகள் நடைபெறுகின்றன. குறிப்பாக, மாலைப் பிரார்த்தனைக்கு ஏராளமான மக்கள் வருகின்றனர். எனவே, அத்தகைய சந்தர்ப்பங்களில் வெட்ட வெளியில் பிரார்த்தனையை நடத்துவது தான் சாத்தியமாகும். பிரார்த்தனை மண்டபத்தில் மாத்திரமே பிரார்த்தனையை நடத்துவது என்ற வழக்கத்தை நான் அனுசரித்து வந்திருப்பேனாயின், எனது யாத்திரைகளின்போது பொதுமக்கள் கலந்துகொள்ளும் பிரார்த்தனைகளைப் பற்றி நான் ஒருபோதும் சிந்தித்திருக்க முடியாது.

இதைத் தவிர, ஆசிரமத்தில் எல்லா மதங்களுக்கும் சமமான மரியாதை அளிக்கப்படுகிறது. சகல மதத்தினரும் அங்கு வரவேற்கப்படுகின்றனர். அவர்களுக்கு விக்கிரக ஆராதனையில் நம்பிக்கை இருந்தாலும் இராவிட்டாலும், அவர்கள் விஷயத்தில் வேற்றுமை எதுவும் பாராட்டுவதில்லை. யாருடைய உணர்ச்சியையும் புண்படுத்தக் கூடாது என்பதற்காக பிரார்த்தனைக் கூட்டத்தில் விக்கிரகம் எதையும் வைத்துக் கொள்ளுவதில்லை. எனினும், ஆசிரமவாசிகளில் யாராவது தமது அறையில் ஒரு விக்கிரகத்தை வைத்துக்கொள்ள விரும்பினால், அவர் அவ்விதமே வைத்துக்கொள்ள எவ்விதத் தடையுமில்லை.

## (2)

காலைப் பிரார்த்தனையில் நாங்கள் முதலில் ஆசிரம பஜனாவளி யில் உள்ள சுலோகங்களை வாசிக்கிறோம். பிறகு ராமநாம பஜனை செய்தபின், கீதா பாராயணம் செய்கிறோம். மாலையில் கீதையின் இரண்டாவது அத்தியாயத்தில் உள்ள கடைசி 19 சுலோகங்களைப் பாராயணம் செய்வதுடன், ராமநாம பஜனை செய்கிறோம். அதிக நேரம் ஆகக்கூடாது என்பதற்காகவோ சத்தியத்தை வணங்குவோர் அல்லது ஓர் ஹிந்து அல்லாதவர் அவற்றைக் கூறமுடியாது என்பதற்காகவோ அந்த சுலோகங்களை பாராயணம் செய்வதைக் குறித்து அடிக்கடி ஆட்சேபணைகள் எழுந்தது உண்டு. ஹிந்து சமுதாயத்தில் மாத்திரமே அந்த சுலோகங்கள் பாராயணம் செய்யப்படுகின்றன என்பதில் ஐய மில்லை. எனினும், ஹிந்து அல்லாத ஒருவர் அதில் ஏன் கலந்து கொள்ளக் கூடாது? அந்த சுலோகங்களைக் கூறிப் பிரார்த்தனை செய்யும் போது, அந்த இடத்தில் அவரும் ஏன் இருக்கக் கூடாது? அந்த சுலோகங்களைக் கேட்ட முஸ்லிம், கிறிஸ்தவ நண்பர்கள் அவற்றைக் குறித்து ஆட்சேபிக்கவில்லை. தமது சொந்த மதத்தைப்போல் பிற மதங்களுக்கும் மரியாதை காட்டும் எவருக்கும் அந்த சுலோகங்கள் மனக்கஷ்டத்தைக் கொடுக்க வேண்டிய அவசியமில்லை. அவற்றில், மற்ற மதத்தி னரை அவமதிக்கக் கூடியவை எதுவுமில்லை. ஆசிரமத்தில் உள்ள வர்களில் பெரும்பாலோர் ஹிந்துக்கள் ஆதலால், ஹிந்துக்களின் தெய்விக நூல்களிலிருந்தே சுலோகங்களைத் தேர்ந்தெடுக்க வேண்டியிருக்கிறது. ஹிந்து அல்லாத வேத நூல்களிலிருந்து எதையும் பாடுவது கிடையாது என்பதில்லை. சில சந்தர்ப்பங் களில் இமாம் சாகிப், குரானிலிருந்தும்* பிரார்த்தனை கீதங்களைப் பாடுவார். முஸ்லிம், கிறிஸ்தவ கீதங்களும் அடிக்கடி பாடப் படுவது உண்டு.

எனினும், சத்தியத்தை அடிப்படையாகக் கொண்டுதான், அந்த சுலோகங்கள் கடுமையாகத் தாக்கப்பட்டன. சரஸ்வதி, கணேசர் போன்ற தெய்வங்களை வணங்குவது, சத்தியத்திற்குப் பங்கம் விளைவிப்பதாகும் என்று ஓர் ஆசிரமவாசி அடக்கத்துட னும், ஆனால், உறுதியுடனும் வாதித்தார். வீணையைக் கையில் வைத்து வாசித்துக்கொண்டும், தாமரைப் பூவில் உட்கார்ந்து கொண்டுமிருக்கும் சரஸ்வதி, அல்லது பெரிய தொந்தியுடனும் யானைத் துதிக்கையுடனும் இருக்கும் கணேசர் முதலியோரைப் போன்ற தெய்வங்கள் இல்லை என்றும் அவர் கூறினர். அவரது வாதத்திற்குப் பதிலாக நான் குறிப்பிட்டதாவது:

“என்னை சத்தியத்தின் பக்தன் என்று கூறிக்கொள்ளுகி றேன். எனினும், சரஸ்வதி, கணேசரைப்பற்றிய தோத்திர சுலோகங்களை பாராயணம் செய்வதையோ அல்லது அவற்றைக்

* நாளாவட்டத்தில் ஆசிரமத்தின் தினசரிப் பிரார்த்தனையில் குரானிலிருந்தும் சில வாக்கியங்கள் நிரந்தரமாகச் சேர்க்கப்பட்டன.

குழந்தைகளுக்குக் கற்றுக் கொடுப்பதையோ நான் ஆட்சேபிக்கவில்லை. அந்த வாதத்தைக் காரணமாகக் கொண்டு நாம் சில சுலோகங்களைக் கண்டித்தோமாயின், அது ஹிந்து மதத்தின் அடிப்படையையே தாக்குவதற்குச் சமமாகும். ஹிந்து மதத்தில் கண்டிப்பதற்குரிய எதையும், அது எவ்வளவு பழமையாயினும், நாம் கண்டிக்கக்கூடாது என்பதல்ல. எனினும், அதை ஹிந்து மதத்தில் உள்ள பலவீனமான, கண்டிப்பதற்குரிய ஒரு விஷயமாக நான் கருதவில்லை. அதற்குமாருக, அதை நமது நம்பிக்கையின் சிறப்பு அம்சமாகவே நான் கருதுகிறேன். சரஸ்வதியும் கணேசரும் தனித்தனி தெய்வங்கள் அல்ல. அவையெல்லாம் ஒரே கடவுளின் காரணப் பெயர்களேயாகும். பரம பக்தர்களான கவிகள் அந்தந்த இடத்திற்குத் தகுந்தவாறு, கடவுளின் மகோன்னத குணங்களுக்கு உகந்தவாறு, பெயர்கள் கொடுத்திருக்கிருர்கள். அவர்கள் செய்ததில் தவறு எதுவுமில்லை. அத்தகைய சுலோகங்கள், கடவுளை வழிபடுவோரையோ அல்லது மற்றவர்களையோ ஏமாற்றுவதில்லை. மனிதராகப் பிறந்த ஒருவர், கடவுளைத் தோத்திரம் செய்யும்போது, கடவுளை அத்தகைய தோத்திரத்திற்கு உரியவராகவே கருதுகிருர். அவரது கற்பனையில் உள்ள கடவுள் அங்கே இருப்பதாகவே எண்ணுகிருர். கடவுளை உருவமற்றவராகவும் குணங்கள் அற்றவராகவும் நாம் பிரார்த்தனை செய்யும்போதுகூட, அவருக்கு குணங்களை வழங்குகிருேம். குணங்களும் உருவங்கள்தான். மூலாதாரமான விஷயம் என்னவெனில், கடவுள் சொற்களால் வருணிக்க முடியாதவர். பிறப்பு, இறப்பு உள்ள மனிதர்களாகிய நாம், கற்பனையின் உதவியை நாடியே தீரவேண்டியிருக்கிறது. கற்பனை சில சமயங்களில் நமக்கு இடையூருகவும் அமைந்துவிடுகிறது. தூய்மையான எண்ணத்துடன் கடவுளுக்கு இருப்பதாக நாம் கூறும் குண விசேஷங்கள் நம் சம்பந்தப்பட்டவரையில் உண்மையே. எனினும், அடிப்படையில் அவையெல்லாம் பொய்யே ஆகும். ஏனெனில், கடவுளை வருணிக்கும் முயற்சிகள் யாவும் தோல்வியடைந்தே தீரும். என் அறிவு இதை உணர்ந்திருக்கிறது. எனினும், கடவுளின் குணுதிசயங்களைப் பற்றி நான் சிந்திக்காமல் இருக்க முடிவதில்லை. என் அறிவு, எனது உள்ளத்தின்மீது ஆதிக்கம் செலுத்த முடியாது. பலவீனம் காரணமாக எனது உள்ளம், குணுதிசயங்களுடன் கூடிய கடவுளையே ஆர்வத்துடன் நாடுகிறது என்று நான் ஒப்புக்கொள்ளத் தயாராக இருக்கிறேன்.

"சென்ற பதினைந்து ஆண்டுகளாக நான் கூறிவரும் சுலோகங்கள் எனக்கு மன அமைதியைக் கொடுக்கின்றன; எனக்கு நன்மையாகவும் இருக்கின்றன. அவற்றில் நான் அழகையும் காவியச் சிறப்பையும் காண்கிறேன். சரஸ்வதி, கணேசர் முதலிய தெய்வங்களைக் குறித்து அறிஞர் பல கதைகள் கூறுகின்றனர். அந்தக் கதைகளால் தனிப்பட்ட பலன் உண்டு. அவற்றின் ஆழ்ந்த கருத்தை நான் அறியேன். ஏனெனில், அவற்றை நான் பரிசீலனை செய்ததில்லை. என் சம்பந்தபட்டவரையில், அவ்விதம் பரிசீலனை செய்வது அவசியமென்று தோன்றவில்லை. இவ்விஷயத்

தில் எனது அறியாமையே எனக்குப் பாதுகாப்பாக இருக்கலாம். நான் சத்தியத்தை நாடுவோன். எனவே, அந்த முறையில் மேற் கண்ட விஷயமாக ஆழ்ந்து ஆராய்ச்சி செய்யவேண்டிய அவசியம் எனக்கு ஏற்படவில்லை. எனது கடவுளை நான் அறிந்துள்ளேன் என்பதே போதுமானது. அவர் பிரத்தியட்சமாக இருப்பதை நான் இன்னும் உணரவில்லை என்றாலும், எனது அந்த லட்சியத்தை அடைவதற்கான சரியான பாதையில் நான் சென்று வருகி றேன்.''

இந்தப் பதில் ஆட்சேபணை வாதிகளுக்குத் திருப்தி அளிக்கு மென நான் எதிர்பார்க்கவில்லை. எனவே, இப்பிரச்னை முழுவதை யும் ஒரு கமிட்டி பூரணமாக ஆராய்ந்து, அந்தப் பிரார்த்தனை சுலோ கங்கள் அப்படியே இருக்கவேண்டுமென இறுதியில் சிபாரிசு செய்தது. ஏனெனில், வேறு எந்த சுலோகங்களை வைத்தாலும், யாராவது சிலர் ஆட்சேபித்துக் கொண்டுதான் இருப்பார்கள் அல்லவா?

## (3)

சுலோகங்களைக் கூறிய பிறகு ஒரு தோத்திரப் பாடல் பாடப் பட்டுவந்தது. தென்னாப்பிரிக்காவில் தோத்திரப் பாடல் மாத் திரமே பாடப்படுவது வழக்கம். இந்தியாவில்தான் பிரார்த்தனை யின்போது சுலோகங்களும் சேர்த்துக்கொள்ளப்பட்டன. பின்னர் பண்டித காரே பிரார்த்தனையின் மூன்றாவது அம்சமாக ராம பஜனை யையும் சேர்த்துக்கொள்ளும்படி செய்தார். பிறகு கீதையி லிருந்து சுலோகங்களைப் பாராயணம் செய்வது, நான்காவது அம்சமாகியது.

மாலைப் பிரார்த்தனையின்போது கீதையின் இரண்டாவது அத்தியாயத்தில் உள்ள 19 சுலோகங்களைக் கூறுகிறோம். அந்த சுலோகங்களில், ஸ்திதப்ரக்ஞனின், அதாவது நிலைத்த அறி வுடையவனின் குணவிசேஷங்கள் விவரிக்கப்பட்டிருக்கின்றன. ஒரு சத்தியாக்கிரகிக்கு அந்தக் குணங்கள் ஏற்படவேண்டும். எனவே, சத்தியாக்கிரகியின் மனத்தில் அது எப்போதும் இருந்து வரவேண்டும் என்பதற்காகவே, அந்த சுலோகங்கள் தினசரிப் பிரார்த்தனையில் சேர்க்கப்பட்டுள்ளன.

தினந்தோறும் அதே பாடலையும், பஜனையையும், சுலோகங் களையும் திருப்பித் திருப்பிக் கூறுவதால், பிரார்த்தனை யந்திரம் போலாகி பலனற்றுப் போக இடம் ஏற்படுகிறது என்று ஓர் ஆட்சேபணை எழுந்துள்ளது. அத்தகைய பிரார்த்தனை யந்திரம் போலாகிவிடுகிறது என்பது உண்மையே. நாமே யந்திரங்கள் தானே. நம்மை இயக்குபவர் கடவுள் என்பதில் நமக்கு நம்பிக்கை இருக்குமாயின், அவரது கையில் நாம் யந்திரங்களைப் போலவே நடந்துகொள்ளவேண்டும். வானத்தில் உள்ள சூரிய னும் மற்ற கிரகங்களும் யந்திரங்களைப்போல் வேலை செய்யாவிடில்,

உலகம் ஸ்தம்பித்து செயலற்றுப் போய்விடும். எனினும், யந்திரங்களைப் போல் நடந்துகொள்ளும் நாம் ஜடப்பொருளைப்போல் இருந்துவிடக்கூடாது நாம் விவேகமுள்ளவர்கள். எனவே, நாம் விவேகிகளைப்போல் சில விதிகளை அனுசரித்து நடந்துகொள்ள வேண்டும். பிரார்த்தனை கீதங்களும் சுலோகங்களும் தினந்தோறும் ஒரே விதமாக இருக்கின்றனவா அல்லது வெவ்வேறு விதமாக இருக்கின்றனவா என்பது முக்கியமல்ல. அவை ஒவ்வொருநாளும் வெவ்வேறு விதமாக இருந்தால்கூட, அவற்றினால் பலனில்லாமல் போய்விடலாம். ஹிந்துக்களிடையே காயத்ரியும், முஸ்லிம்களிடையே கல்மாவும், கிறிஸ்தவர்களிடையே மலைப் பிரசங்கமும் எத்தனையோ நூற்றாண்டுகளாக கோடிக்கணக்கானவர்களால் தினந்தோறும் கூறப்பட்டு வருகிறது. அப்படியிருந்தும் அவற்றின் சக்தி குறைந்துவிடவில்லை; ஆனால், அவற்றின் சக்தி நாளுக்கு நாள் அதிகமாகிக்கொண்டே வருகிறது. இதெல்லாம் பிரார்த்தனைக்குக் காரணமான மன நிலையையும் உணர்ச்சியையும் பொறுத்தவை. சக்திவாய்ந்த இந்த வார்த்தைகளை நம்பிக்கையில்லாத ஒருவரோ அல்லது ஒரு கிளிப் பிள்ளையோ திருப்பித் திருப்பி கூறுவதன் மூலம் யாதொரு பலனும் ஏற்படாது. அதற்கு மாறாக, நம்பிக்கை உள்ளவர் அவற்றை அடிக்கடி கூறிவருவாராயின், அவற்றின் சக்தி நாளுக்கு நாள் வளர்ச்சியடைகின்றது.

நாம் சாப்பிடும் முக்கிய உணவும் அப்படித்தான். கோதுமை சாப்பிடுவோர், கோதுமையைத் தவிர மற்ற சாதனங்களையும் சாப்பிடுவார்கள். ஆனால், இந்த உபரி சாதனங்கள் அடிக்கடி மாறும். எனினும், கோதுமை உணவு மாத்திரம் மாறாது. ஏனெனில், அதுதான் சாப்பிடுவோரின் உயிருக்கு ஆதாரமானது. எனவே, அதில் அவருக்கு ஒருபோதும் சலிப்புத்தட்டாது. அதில் அவருக்குச் சலிப்பு ஏற்படுமாயின், இந்த உலகில் அவரது காலம் நெருங்கிவிட்டதென்பதற்கே அது ஓர் அடையாளமாக இருக்கும். பிரார்த்தனை சம்பந்தமாகவும் அந்த நியதியே பொருந்தும். பிரார்த்தனையில் உள்ள முக்கிய பகுதிகள் அப்படியே இருக்கும். ஆன்மாவிற்குப் பிரார்த்தனைப் பசி இருக்குமாயின், பிரார்த்தனை ஒரே விதமாக இருப்பதை அது பொருட்படுத்தாது; அதற்கு மாறாக அதுவே, ஆன்மாவின் பசியைத் தணித்து ஊட்டம் அளிப்பதாகவும் இருக்கும். அப்போதைக்கப்போது உணவைக் கைவிட்டு பட்டினி கிடப்பது உடலுக்குப் பலன் அளிக்கக் கூடியதாக இருக்கலாம். ஆனால், ஆன்மாவுக்கு பிரார்த்தனை ஜீரணமாகவில்லை என்பது எக்காலத்திலும் கேள்விப்படாத விஷயமாகும்.

உண்மை என்னவெனில், நம்மில் பலரும் ஆன்மாவின் நாட்டம் இல்லாமலேயே பிரார்த்தனை செய்கிறோம். ஆன்மா உண்டு என்பதை நம்புவது ஒரு நாகரிகமாகியிருப்பதால், நாமும் ஆன்மா உண்டு என்று நம்புகிறோம். நம்மில் பலருடைய நிலைமையும் அவ்வளவு துக்ககரமாகியிருக்கிறது. ஆன்மா உண்டு என்பது, தங்களுடைய அறிவுக்கு உகந்ததாக இருக்கிறது என்று சிலர் திருப்தி அடைந்திருக்கிறார்கள். எனினும், அந்த

உண்மையை அவர்களுடைய உள்ளம் உணரவில்லை. எனவே, பிரார்த்தனையின் அவசியத்தை அவர்கள் அறிந்து கொள்ள முடியாதவர்களாக இருக்கிறார்கள். சமூகத்தில் தாங்கள் வாழ்வதால், அதன் நடவடிக்கைகளில் கலந்து கொள்ளவேண்டும் என்பதற்காக பலரும் பிரார்த்தனை செய்கிறார்கள். அத்தகையோர் வெவ்வேறான பொழுதுப் போக்குகளில் ஈடுபடவேண்டும் என்ற ஆர்வம் உடையவர்களே. உண்மையில், அவர்கள் பிரார்த்தனைக்காக வருவதில்லை. சங்கீதத்திற்காகவோ, வேடிக்கை பார்ப்பதற்காகவோ அல்லது பிரார்த்தனை பிரசங்கத்தைக் கேட்டு வைப்போம் என்பதற்காகவோதான் வருகிறார்கள். தங்கள் மனம் கடவுளுடன் இரண்டறக் கலக்க வேண்டும் என்பதற்காக அவர்கள் வருவதில்லை.

## (4)

பிரார்த்தனை என்ற குஜராத்தி வார்த்தைக்கு, ஏதாவது கேட்பதுஎன்பதே பொருளாகும்; அதாவது பணிவுடன் கடவுளிடம் ஏதாவது கேட்பது என்பதே. ஆனால், ஆசிரமத்தில் நடைபெறும் பிரார்த்தனை அந்த அர்த்தத்தைக் கொண்டதல்ல. இங்கே, கடவுளைத் தோத்திரம் செய்வது, வணங்குவது, தியானம் செய்வது, சுயத் தூய்மையை அடைவது போன்றவற்றிற்காகவே பிரார்த்தனை நடைபெறுகிறது.

ஆனால், கடவுள் யார்? கடவுள் நமக்கு வெளியே அல்லது உலகத்திற்கு அப்பால் உள்ள யாரோ ஒரு நபர் அல்ல. அவர் எங்கும் இருக்கிறார், எல்லாவற்றையும் அறிகிறார், எல்லாம் வல்லவராக இருக்கிறார். எவ்விதமான தோத்திரமும், விண்ணப்பங்களும் அவருக்குத் தேவையில்லை. எல்லாவற்றினுள்ளும் அவர் இருப்பதால் எல்லாவற்றையும் கேட்கிறார். நமது ஆழ்ந்த எண்ணங்களையும் அறிந்து கொள்கிறார். அவர் நமது உள்ளங்களில் உறைகிறார்; விரல்களும் நகங்களும் ஒன்றுக்கொன்று எவ்வளவு அருகில் இருக்கின்றனவோ, அவற்றைக் காட்டிலும் அவர் நமது அருகில் இருக்கிறார். எனவே, அவரிடத்தில் எதையும் கூறுவதால் என்ன பலன்?

இந்த சங்கடத்திற்காகத்தான், பிரார்த்தனைக்கு சுயத் தூய்மை என்று பொருள் கொடுக்கப்பட்டிருக்கிறது. பிரார்த்தனை காலத்தில் நாம் உரக்கக் கூறுவது கடவுளுக்குக் கேட்க வேண்டும் என்பதற்காக அல்ல, நமக்காகத்தான். சோம்பேறித்தனத்திலிருந்து நம்மைத் தட்டி எழுப்பவேண்டும் என்பதுதான் பிரார்த்தனையின் நோக்கமாகும். கடவுள் இருக்கிறார் என்பது நம்மில் சிலரது அறிவுக்கு எட்டுகிறது; ஆனால், அவ்விஷயமாகப் பலர் சந்தேகத்தில் உழன்று வருகிறார்கள். யாரும் கடவுளை நேருக்கு நேராகக் கண்டதில்லை. அவரை அறிந்து கொள்ளவும், அவருடன் ஒன்றுபடவுமே நாம் விரும்புகிறோம். அந்த விருப்பத்தைப் பிரார்த்தனையின் மூலம் நிறைவேற்றிக்கொள்ளவும் முற்படுகிறோம்.

நாம் நாடும் இந்தக் கடவுள் சத்தியமே. அதை மற்றொரு விதமாகக் கூறுவதாயின், சத்தியம்தான் கடவுள் ஆகும். நாம் உண்மையே பேசவேண்டும் என்று எதிர்பார்க்கப்படுகிறோம் அல்லவா? நான் மேலே குறிப்பிட்டுள்ள சத்தியம் இது அல்ல. இந்த உலகில் ஒன்றுதான் இருக்கிறது. அதுதான் சத்தியம். எல்லாவற்றிற்கும் அதுதான் காரணம். அது சொந்த சக்தியைக் கொண்டே நிலைத்து நிற்கிறது. அதுதான் எல்லாவற்றிற்கும் ஆதாரமாக இருக்கிறதேயன்றி, அதற்கு ஆதாரமாக எதுவும் இல்லை. சத்தியம் மாத்திரமே நிரந்தரமானது; மற்றவையெல்லாம் தாற்காலிகமானவையே. அதற்கு உருவமோ அல்லது வடிவமோ இருக்க வேண்டிய அவசியம் இல்லை. பரிசுத்தமான அறிவும், பரிசுத்தமான பேரின்பமும் அதுதான். அதையே ஈசுவரன் என்று நாம் கூறுகிறோம். ஏனெனில், அதன் விருப்பத்திற்கிணங்கவே எல்லாம் இயங்குகின்றன. அதுவும் அது பிரகடனம் செய்யும் சட்டமும் ஒன்றேயாகும். எனவே, அது கண்மூடித்தனமான ஒரு சட்டமல்ல. அது உலகம் முழுவதையும் ஆட்சி புரிகிறது. இந்த சத்தியத்தைத் திருப்தி செய்வதே பிரார்த்தனையாகும். இந்த ஆர்வம் இருபத்து நான்கு மணி நேரமும் நம்மிடத்தில் இருந்துவர வேண்டும்.

நமது ஆன்மா மந்தமாக இருப்பதால், இரவு பகலாக அந்த உணர்ச்சி நமக்கு இருப்பதில்லை. எனவே, சிறிது நேரம் மாத்திரம் பிரார்த்தனை செய்கிறோம். ஒரு காலத்தில் நமது நடத்தை முழுதும் தொடர்ச்சியான இடைவிடாத பிரார்த்தனையாக இருக்கும் என்ற நம்பிக்கையுடனேயே நாம் சிறிது நேரமாவது பிரார்த்தனை செய்கிறோம். ஆசிரமவாசிகள்கூட ஒருவித நிர்ப்பந்தத்திற்காகவே பிரார்த்தனைக்கு வருகிறார்கள் எனில், நம்மில் எவருக்கும் பிரார்த்தனையில் உண்மையான ஈடுபாடு இன்னும் ஏற்படவில்லை என்றே எண்ண வேண்டியிருக்கிறது.

மனப்பூர்வமான பிரார்த்தனையில், பிரார்த்தனை செய்வோரின் கவனம் முழுவதும் பிரார்த்தனை செய்யப்படும் பொருளில் ஈடுபட்டுவிடுகிறது. அப்போது அவருக்கு வேறு எந்த விஷயத்தைப் பற்றியும் சிந்தனை இருப்பதில்லை. அவரது மனமும் கவனமும் பிரார்த்தனை செய்யப்படும் பொருளில் லயித்துவிடுகின்றன. பக்தரை ஒரு காதலனுக்கு ஒப்பிட்டுக் கூறப்பட்டிருப்பது முற்றிலும் சரியே. காதலியின் முன்னிலையில் காதலன் உலகத்தையே மறந்துவிடுகிறான், தன்னைக்கூட மறந்துவிடுகிறான். எனவே பக்தருக்கு, கடவுளிடம் அதைக் காட்டிலும் இன்னும் அதிக ஈடுபாடு இருக்கவேண்டும். மகத்தான முயற்சிக்குப் பிறகே, தனக்குத்தானே துன்பங்களை அனுபவித்த பிறகே, அதாவது தவம் செய்த பிறகே, தன்னைக் கண்டிப்பான ஒழுங்கு விதிகளுக்கு உட்படுத்திக் கொண்ட பிறகே, அந்த நிலை ஏற்படுகிறது.

**('ஆசிரம நியமங்கள்' என்ற நூலின் இரண்டாவது அத்தியாயத்திலிருந்து எடுக்கப்பட்டது.)**

# 10

# உள்ளத்தைக் கவர்ந்த பிரார்த்தனை

ஆசிரமத்தில் பிரார்த்தனை மிகுந்த செல்வாக்கைப் பெற்று வருகிறது. யாதொரு முயற்சியுமின்றி தானாகவே அது வளர்ச்சி அடைந்து வந்திருக்கிறது. ஆசிரம பஜனாவளி நூல் பல பதிப்புகள் அச்சாகியும், இன்னும் அதன் பிரதிகள் தேவையாக இருக்கின்றன. இந்தப் பிரார்த்தனையின் பிறப்பும் வளர்ச்சியும் செயற்கையானவை அல்ல. அதில் இணைக்கப்பட்டுள்ள ஒவ்வொரு சுலோகத்திற்கும், தேர்ந்தெடுக்கப்பட்ட ஒவ்வொரு பஜனைக்கும் ஒரு வரலாறு உண்டு. இந்த பஜனாவளியில் மற்ற பஜனை கீதங்களுடன், முஸ்லிம் சூபிகள், பக்கிரிகள், குரு நானக், கிறிஸ்தவப் பாடல் புத்தகம் முதலியவற்றிலிருந்து எடுக்கப்பட்ட பஜனைப் பாடல்களும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. சீனர்கள், பர்மியர்கள், யூதர்கள், இலங்கையர்கள், முஸ்லிம்கள், பார்சிகள், ஐரோப்பியர்கள், அமெரிக்கர்கள் முதலிய பலரும் அப்போதைக்கப் போது ஆசிரமத்தில் வந்து வசித்திருக்கிறார்கள். அதுபோலவே, *1935*-இல் மகன்வாடியில் இரண்டு ஜப்பானிய சாதுக்கள் என்னிடம் வந்தார்கள். சமீபத்தில் ஜப்பானுடன் யுத்தம் ஏற்படும் வரையில் அந்த சாதுக்களில் ஒருவர் என்னுடனேயே இருந்து வந்தார். சேவாகிராமத்தில் அவர் ஓர் சிறந்த உதாரண ஆசிரம வாசியாக விளங்கிவந்தார். ஆசிரம நடவடிக்கை ஒவ்வொன்றிலும் அவர் உற்சாகத்துடன் கலந்து கொண்டார். அவர் யாருடனும் சண்டையிட்டதாக நான் ஒருபோதும் கேள்விப்பட்டதில்லை. அவர் ஒரு மௌனத் தொண்டர். அவரால் இயன்ற வரையில் அவர் ஹிந்தியும் கற்றுக்கொண்டார். அவர் தமது பிரதிக்ஞைகளைக் கண்டிப்பாக அனுசரிப்பவர். தினந்தோறும் காலையிலும் மாலையிலும் அவர் தமது பேரிகையை அடித்துக் கொண்டும் மந்திரத்தை ஜெபித்துக் கொண்டும் ஆசிரமத்தைச் சுற்றிப் போய் கொண்டிருப்பார். மாலைப் பிரார்த்தனை எப்போதும் அவருடைய மந்திரத்துடனேயே ஆரம்பமாகும். "உண்மையான மதத்தை அளித்த புத்தர் பிரானுக்குத் தலைவணங்குகிறேன்" என்பதுதான் அவரது மந்திரத்தின் பொருளாகும். அவரை ஆசிரமத்திலிருந்து கைது செய்து கொண்டு போக போலீசார் முன் அறிவிப்பு எதுவுமின்றி வந்தபோது, அவர் விரைவாகவும், ஒழுங்காகவும், சிறிதும் பற்றற்றும் போலீசாருடன் செல்லுவதற்கு ஆயத்தமானதை நான் ஒரு காலத்திலும் மறக்கமுடியாது. அவர் தமக்கு மிகவும் பிரியமான மந்திரத்தைக் கூறியபின் என்னிடமிருந்து விடைபெற்றுக் கொண்டார். அவர் தமது பேரிகையை என்னிடமே விட்டுச்சென்றார். "நீங்கள் எங்களை விட்டுச்செல்லுகிறீர்கள். ஆனால், உங்களுடைய மந்திரம் ஆசிரமப் பிரார்த்தனையின் ஒரு முக்கிய அம்சமாக எங்களுடன் எப்போதும் இருக்கும்," என்றேன். இந்த வார்த்தைகள் அவர் விடைபெற்றுச் சென்ற

போது, என்னை அறியாமல் என் வாயிலிருந்து வெளிவந்தன. அவர் எங்களிடையே இராவிட்டால்கூட, அதிலிருந்து எங்களுடைய காலைப் பிரார்த்தனையும் மாலைப் பிரார்த்தனையும் அந்த மந்திரத்துடனேயே ஆரம்பமாகி வந்திருக்கிறது. அந்த சாது கேசவரின் தூய்மையையும், தன்னலமற்ற பக்தியையும் அந்த மந்திரமானது, எப்போதும் என் நினைவில் இருக்கும்படி செய்திருக்கிறது.

சாது கேசவர் எங்களுடன் இருந்தபோது, பிபி ரெய்ஹானா தயாப்ஜியும் ஆசிரமத்தில் சில நாட்கள் வரை வசிப்பதற்காக வந்திருந்தார். அவர் பக்தியுடைய ஒரு முஸ்லிம் என்பது எனக்குத் தெரியும். ஆனால், அவரது பிரபல தந்தை இறக்கும் வரையில், பிபி ரெய்ஹானா குரான் ஷரீபையும் நன்கு படித்திருக்கிறார் என்பது எனக்குத் தெரியாது. குஜராத்தின் மாணிக்கமான தயாப்ஜி சாகிப் மரணமடைந்தபோது, அவரது அறையில் நிலவிய மௌனத்தைக் கலைக்கும் அழுகைக் குரல் எதுவும் கேட்கவே இல்லை. ஆனால், பிபி ரெய்ஹானா கணீரென்று ஓதிய குரான் வாக்கியங்களால் அந்த அறை எதிரொலித்துக்கொண்டிருந்தது. அப்பாஸ் தயாப்ஜியைப் போன்றவர்கள் இறக்க முடியாது. தேசத் தொண்டின் உதாரணமாக அவர் எப்போதும் உயிர் வாழ்ந்து வருகிறார். சிறந்த பாடகியான பிபி ரெய்ஹானா எல்லா விதமான பஜனைகளின் களஞ்சியமாக விளங்கினார். அவர் தினந்தோறும் பாடியதுடன், குரானிலிருந்து அழகான வாக்கியங்களை ஓதினார். கற்றுக்கொள்ள முடிந்த ஆசிரமவாசிகளுக்கு குரானிலிருந்து சில வாக்கியங்களைக் கற்றுக் கொடுக்கும்படி நான் அவரைக் கேட்டுக் கொண்டேன். அவரும் மகிழ்ச்சியுடன் அவ்விதமே கற்றுக்கொடுத்தார். இங்கே வரும் பலரையும் போலவே, பிபி ரெய்ஹானாவும் எங்களில் ஒருவரானார். சில நாட்களுக்குப் பிறகு அவர் சென்று விட்டாரெனினும், நறுமணம் வீசும் பாடலை அவரது ஸ்தானத்தில் விட்டுச் சென்றிருக்கிறார். அந்தப் பாடலும் ஆசிரமப் பிரார்த்தனையுடன் சேர்த்துக் கொள்ளப்பட்டிருக்கிறது. அந்த பாடலின் மொழி பெயர்ப்பு இதுதான் :

"கொடிய சைத்தானிடமிருந்து, அல்லாவினிடம் தஞ்சம் அடைகிறேன்.

"அவர் கடவுள், ஒரே கடவுள் அவரே. அவர் நிரந்தரமானவர், பரிபூரணமானவர்.

"அவருக்கு ஈடு இணை யாரும் இல்லை."

என்னைச் சாந்தமாகக் கடிந்து கொண்டுள்ள தீவிரமான ஒரு ஹிந்து நண்பருக்குப் பதிலாகவே நான் இந்தக் குறிப்பை எழுதிக்

கொண்டிருக்கிறேன். அவர் கூறியிருப்பதாவது: "ஆசிரமத்தில் இப்போது நீங்கள் கல்மாவுக்கும் இடம் அளித்திருக்கிறீர்கள். உங்களுடைய ஹிந்து சமயத்தைக் கொல்லுவதற்கு மேற்கொண்டு செய்ய வேண்டியது என்ன பாக்கி இருக்கிறது?"

எனது ஹிந்து சமயமும், ஆசிரமத்தில் உள்ள மற்ற ஹிந்துக்களின் ஹிந்து சமயமும் அந்தப் பாடலால் வளர்ச்சி பெற்றிருக்கிறது என்பதே எனது நம்பிக்கையாகும். எல்லா மதங்களிடத்திலும் நமக்கு சமமான மதிப்பு இருக்கவேண்டும். பாதுஷா கான்* ஆசிரமத்துக்கு வரும்போதெல்லாம் பிரார்த்தனையில் மிகுந்த மகிழ்ச்சியுடன் கலந்து கொள்ளுகிறார். ராமாயண கானத்தின் இசையை அவர் மிகவும் விரும்புகிறார் கீதையின் சுலோகங்களை மிகவும் அக்கறையுடன் கவனித்துக் கேட்கிறார். அதனால், அவருக்கு இஸ்லாமிலுள்ள நம்பிக்கை குன்றிவிடவில்லை. அதுபோலவே நானும், சமமான மதிப்புடனும் பக்தியுடனும் குரான் வாக்கியங்களுக்கு ஏன் செவி கொடுக்கக் கூடாது?

வினோபாவும் பியாரிலாலும் சிறையில் அராபிய மொழியையும், குரானையும் கற்றுக்கொண்டார்கள். இந்த ஆராய்ச்சியால் அவர்களுடைய ஹிந்து சமயம் வளம் பெற்றுளது. உள்ளங்களின் அத்தகைய ஐக்கியத் தன்மையினால்தான் ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமை ஏற்பட முடியும். ராமனுக்கு ஆயிரம் பெயர்கள் மாத்திரம் இல்லை. அவரது பெயர்கள் எண்ணிக்கையற்றவை. உண்மையான பக்தனின் உள்ளத்திலிருந்து வரும் அல்லா, குதா, ரஹீம், ரஸாக், உணவு அளிப்பவர் போன்ற வேறு எந்தப் பெயரில் அழைத்தாலும் அவர் ஒருவரே.

—'ஹரிஜன்' – 15—2—1942

## (2)

நான் ஸ்ரீநகரில் மூன்று நாட்கள் தங்கியிருந்தபோது, எனது ஜாகையான லாலா கிஷோரிலால் பங்களாவின் காம்பவுண்டில் பிரார்த்தனையை நடத்தினேன். அப்போது நான் பிரசங்கங்கள் எதுவும் செய்யவில்லை. டில்லியை விட்டுப் புறப்படுவதற்கு முன்பே, நான் காஷ்மீரில் பிரசங்கங்கள் செய்வதில்லை என்று அறிவித்திருந்தேன். ஆனால், சிலர் கேள்விகளை எழுதி எனக்கு அனுப்பினார்கள். அக் கேள்விகளில் ஒன்று வருமாறு:

"நேற்று மாலை உங்களுடைய பிரார்த்தனைக் கூட்டத்திற்கு நான் வந்திருந்தேன். அப்போது நீங்கள் மற்ற சமூகங்களைச் சேர்ந்த இரண்டு பிரார்த்தனை கீதங்களையும் கூறினீர்கள். அவ்விதம் செய்த உங்களுடைய நோக்கம் என்ன? சமயம் என்பதற்கு நீங்கள் கூறும் அர்த்தம் என்ன?"

* எல்லைப்புற காந்தி கான் அப்துல் கபார் கானையே பாதுஷா கான் என்று காந்திஜி அடிக்கடி குறிப்பிடுவது வழக்கம்.

ஏற்கனவே நான் குறிப்பிட்டிருப்பதுபோல், ஆசிரமத்தில் வசித்துக் கொண்டிருந்த ரெய்ஹானு தயாப்ஜி கூறிய யோசனைக்கு இணங்கவே சில வருடங்களுக்கு முன் குரானிலுள்ள வாக்கியங்களையும் பிரார்த்தனைக்குத் தேர்ந்தெடுத்தோம். டாக்டர் கில்டரின் அபிப்பிராயத்திற்கு இணங்க, பார்சிகளின் பிரார்த்தனைகளிலிருந்தும் ஒன்றைத் தேர்ந்தெடுத்துக்கொண்டோம். ஆகாகான் மாளிகையில் சிறைப்பட்டிருந்தபோது, நான் மேற்கொண்டிருந்த உண்ணுவிரதத்தை முடித்த சமயத்தில் டாக்டர் கில்டர் அந்த பார்சி பிரார்த்தனை கீதத்தைப் பாடினர். அதைச் சேர்த்துக் கொண்டதால், பிரார்த்தனைக்கு அதிக பலமே ஏற்பட்டது. முன்னரைக் காட்டிலும் அதிகமானவர்களின் உள்ளத்தை அது கவர்ந்தது. அவ்விதம் சேர்த்துக் கொண்டதால், ஹிந்து மதத்தின் தாராளமும், சகிப்புத் தன்மையும் வெளியாயின. ஜப்பானிய பாஷையில் உள்ள பௌத்தப் பிரார்த்தனையுடன் ஏன் எனது பிரார்த்தனை ஆரம்பமாகிறது என்பதையும் கேள்வி அனுப்பியவர் கேட்டிருக்க வேண்டும். ஒரு நல்ல ஜப்பானிய சந்நியாசி சேவாகிராமத்தில் வசித்துக் கொண்டிருந்த போது விடியற்காலையில் அவரது பிரார்த்தனை சேவாகிராமம் முழுவதும் ஒலித்தது. அவர் தமது மௌனமான, கண்ணியமான நடத்தையால் ஆசிரம வாசிகளின் பேரன்பைப் பெற்றிருந்தார். அந்தப் பிரார்த்தனையே முதலில் சேர்த்துக் கொள்ளப்பட்டிருக்கிறது.

—'ஹரிஜன்' – 17-8-1947

# 11

# பொதுப் பிரார்த்தனை

காந்திஜி பெங்களூரை விட்டுச் செல்லுமுன் நடந்த கடைசிப் பிரார்த்தனைக் கூட்டத்தில், "பிரார்த்தனைக் கூட்டத்திற்கு தினந்தோறும் ஒழுங்காக எத்தனைபேர் வந்து கொண்டிருக்கிறீர்கள்?" என்று அங்கு கூடியிருந்தவர்களைக் கேட்டார். பெரும்பாலோரும் கைகளைத் தூக்கினர்கள். பின்னர் காந்திஜி கூறியதாவது :

"பிரார்த்தனைக்கு நீங்கள் வந்துகொண்டிருப்பதைக் குறித்து நான் மகிழ்ச்சி அடைகிறேன். பிரார்த்தனை எனக்கு மகிழ்ச்சியைக் கொடுப்பதுடன், அதை ஒரு பாக்கியமாகவும் நான் கருதுகிறேன். மனிதனை உயர்த்தும் அதன் செல்வாக்கை நான் உணர்ந்துள்ளேன். எனவே, அதை விடாமல் நடத்தி வரும்படி உங்களை நான் கேட்டுக்கொள்ளுகிறேன். உங்களுக்கு சுலோகங்கள் தெரியாமல் இருக்கலாம் ; உங்களுக்கு சமஸ்கிருதமோ, பாடல்களோ தெரியாமல் இருக்கலாம். எனினும், ராம நாமம் எல்லோருக்கும் சொந்தமானது. அது பல்லாண்டு

பல்லாண்டுகளாக, வாழையடிவாழையாக வந்துள்ள சொத்தாகும். கூட்டமாகச் சேர்ந்து பிரார்த்தனை செய்வதைத் தொடர்ந்து வர வேண்டுமென நான் உங்களை ஏன் கேட்கிறேன் என்பதை இப்போது கூறுகிறேன். மனிதன் ஒரு தனிநபர் மாத்திரமல்ல, சமூகவாதியும் கூட. தனிநபர் என்ற முறையில் ஒருவர் விழித்துக் கொண்டிருக்கும் போதெல்லாம் தமக்குள் கடவுளைப் பிரார்த்திக்கலாம். ஆனால், சமூகத்தைச் சேர்ந்த ஒருவர் என்ற முறையில், அவர் கூட்டமாகச் சேர்ந்து செய்யப்படும் பிரார்த்தனையில் கலந்து கொள்ளவேண்டும். நான் தனியாக இருக்கும்போது, பிரார்த்தனை செய்கிறேன். எனினும், என்னுடன் அந்தப் பிரார்த்தனையில் கலந்துகொள்ள ஒரு கூட்டம் இராவிடில், நான் தன்னந்தனியாக இருப்பதுபோல் எனக்குத் தோன்றுகிறது.

உங்களில் வெகு சிலரையே எனக்குத் தெரியும். உங்கள் எல்லோரையும் நான் தெரிந்து கொள்ளவேண்டும் என்ற அவசியமில்லை. உங்களுடன் நான் மாலைப் பிரார்த்தனை நடத்துவதே போதுமானது. நான் பெங்களூரை விட்டுச்சென்றபின், இங்கே நான் பெற்ற பல அனுபவங்களும் என் உள்ளத்தில் எப்போதும் நிலைத்திருக்கும். அந்த நினைவுகளில் பிரார்த்தனைக் கூட்டங்களைப்பற்றியதுதான் முக்கியமானதாக இருக்கும். எனினும், நான் செல்லும் அடுத்த இடத்தில் கோஷ்டிப் பிரார்த்தனை நடக்குமாதலால், உங்களிடமிருந்து பிரிந்து செல்லுவதை நான் மறப்பது சாத்தியமாகும். மனிதர்கள் யாவரும் சகோதரர்கள் என்பதையும், கடவுள் தந்தை என்பதையும் ஒப்புக்கொள்ளுவோர் எங்கே சென்றாலும், அவரைப் பின்பற்றும் மக்கள் கூட்டத்தை அவர் காணலாம். எனவே, பிரிந்து செல்லவேண்டியிருக்கிறதே என்று அவர் வருந்த வேண்டிய அவசியமில்லை. ஆகையால் தயவு செய்து பிரார்த்தனையை நடத்தி வாருங்கள். உங்களுடைய சொந்த இடங்களிலேயே நீங்கள் கூட்டம் கூடி பிரார்த்தனை செய்யலாம். கடைசிபட்சமாக ஒருவர் தமது குடும்பத்தினருடன் மாத்திரமாவது பிரார்த்தனை நடத்தலாம். அதுவும் கூட்டப் பிரார்த்தனை தானே. எனவே, ஒவ்வொரு நாளும் மாலையில் இந்த நேரத்தில் கூடி சில பாடல்களையும், கீதையிலிருந்து சுலோகங்களையும் கற்றுக்கொள்ளுங்கள். சுயத் தூய்மைக்காக உங்களால் இயன்றதையெல்லாம் செய்யுங்கள்.

—'எங் இந்தியா' - 8—9—1927

## (2)

**கேள்வி :** கூட்டப் பிரார்த்தனையில் நீங்கள் நம்பிக்கை வைத்திருக்கிறீர்கள். இன்று அனுசரிக்கப்பட்டுவரும் கூட்டப் பிரார்த்தனை, உண்மையான ஒரு பிரார்த்தனையாகுமா? ஆனால், அது இழிவானது, எனவே ஆபத்தானது என்பதே எனது அபிப்பிராயமாகும். "நீங்கள் பிரார்த்தனை செய்யும்போது வேடதாரிகளைப் போல் இருக்கக் கூடாது.

ஆனல், உங்களுடைய உள் அறைக்குச் சென்று, கதவை மூடிக்கொண்டு, ரகசியமாக தந்தையை (இறைவனை) பிரார்த்திக்கவேண்டும்'' என்று ஏசுநாதர் கூறினர். கூட்டத்தில் உள்ள பலரும் கவனமில்லாமலும், சித்தத்தை ஒரே இடத்தில் செலுத்த இயலாதவர்களாகவும் இருக்கிருர்கள். அப்பொழுது பிரார்த்தனை போலி வேடமாகிவிடுகிறது. இதை யோகியானவன் உணர்ந்துள்ளான். எனவே, தங்களைத் தாங்களே பரிசோதனை செய்து கொள்ளும்படி மக்களுக்குக் கற்பிக்க வேண்டாமா? அதுதான் உண்மையான பிரார்த்தனை அல்லவா?

**பதில் :** எல்லோரும் சேர்ந்து நான் நடத்தும் கூட்டப் பிரார்த்தனை உண்மையான பிரார்த்தனையே. அதை நடத்துபவர் கடவுளிடம் நம்பிக்கை உடையவரேயன்றி வேடதாரியல்ல. அவர் வேடதாரியாயின், பிரார்த்தனை அடிப்படையிலேயே களங்கமுள்ளதாகிவிடும். அதில் கலந்துகொள்ளும் ஆடவர்களும் பெண்களும் லௌகிகமான லாபம் எதையும் பெறுவதற்காக வரவில்லை. அவர்களில் பெரும்பாலோருக்கும் எனக்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை. எனவே, அவர்கள் வெளி வேடத்திற்காக வரவில்லை என்று முடிவு செய்யலாம். பொதுப் பிரார்த்தனையில் கலந்து கொள்ளுவதால் எப்படியோ தங்களுக்கு புண்ணியம் கிடைப்பதாக அவர்கள் நம்புகிருர்கள். அதனுலேயே அவர்கள் பிரார்த்தனையில் கலந்துகொள்ளுகிருர்கள். பெரும்பாலானவரோ அல்லது சிலரோ எங்கேயோ கவனத்தைச் செலுத்திக் கொண்டோ அல்லது சித்தத்தை ஒரே இடத்தில் செலுத்த முடியாமலோ இருக்கிருர்கள் என்பது மிகவும் உண்மையே. அத்தகைய நிலை, அவர்கள் ஆரம்ப கட்டத்தில் இருக்கிருர்கள் என்பதையே காட்டுகிறது. கவனமின்மையோ, ஒன்றிலே ஊன்றிய மனமின்மையோ, வேடத்திற்கோ அல்லது போலித்தனத்திற்கோ ருசு அல்ல. அவர்கள் கவனிக்காமல் இருக்கும்போது கவனிப்பதாகப் பாசாங்கு செய்வது தான் போலித்தனமாகும். அதற்குமாருக, ஒன்றில் மனத்தை நிலை நிறுத்த முடியாததற்கு என்ன செய்வது என்று என்னைப் பலரும் அடிக்கடி கேட்டிருக்கிருர்கள்.

ஏசுநாதர் கூறியதிலிருந்து மேற்கோள் காட்டப்பட்டிருப்பது, பிரஸ்தாப விஷயத்திற்குச் சிறிதும் பொருத்தமானதல்ல. தனிநபரின் பிரார்த்தனையையும் அதன் சம்பந்தமான போலித்தனத்தையும் பற்றியே ஏசுநாதர் அவ்விதம் குறிப்பிட்டுள்ளார். கூட்டப் பிரார்த்தனைக்கு எதிராக அந்த மேற்கோளில் எதுவும் இல்லை. தனி நபரின் பிரார்த்தனையின்றேல், கூட்டப் பிரார்த்தனையால் அதிக பலன் ஏற்படாது என்று நான் அடிக்கடி கூறிவந்துள்ளேன். தனி நபரின் பிரார்த்தனை, கூட்டப் பிரார்த்தனைக்கு ஒரு பூர்

வாங்கமேயாகும். ஒரு மனிதன் மனத்திற்குள் பிரார்த்தனை செய்யும் கட்டத்தை அடையும்போது, அவன் தனிமையிலோ அல்லது கூட்டத்திலோ எப்போதும் பிரார்த்தனை செய்த வண்ணம் இருக்கிறான்.

கேள்வி கேட்டிருப்பவர் குறிப்பிட்டுள்ள யோகி என்ன செய்கிறார் அல்லது என்ன செய்யவில்லை என்பது எனக்குத் தெரியாது. ஏராளமான மக்களும் ஆதியந்தமற்ற கடவுளுடன் தொடர்பு கொள்ளும்போது, அவர்கள் இயல்பாகவே சுயப்பரிசோதனையில் ஈடுபடுகிறார்கள். உண்மையான எல்லாப் பிரார்த்தனைகளுக்கும் அதுதான் குறிக்கோளாக இருக்கவேண்டும்.

'ஹரிஜன்' - 22—9—1946

# 12

# கூட்டப் பிரார்த்தனை எப்படி வந்தது ?

[ *காந்திஜி பம்பாயில் நிகழ்த்திய ஒரு பிரசங்கத்திலிருந்து கீழ்க்கண்ட பகுதிகள் எடுத்துக் கொடுக்கப்பட்டுள்ளன.* ]

"தென்னாப்பிரிக்கா சத்தியாக்கிரகப் போராட்டம் ஆரம்பமாவதற்குச் சிறிது காலத்திற்கு முன்பே, நான் கூட்டமாகப் பிரார்த்தனை செய்யும் முறையை முதன் முதலாக ஆரம்பித்தேன். அங்கே இந்திய சமூகத்தினரை ஒரு பேராபத்து எதிர்நோக்கியிருந்தது. மனித சாத்தியமான எல்லா முறைகளையும் நாங்கள் கைக்கொண்டு பார்த்துவிட்டோம். பத்திரிகைகளின் மூலமும் மேடைகளிலிருந்து பேசுவதன் மூலமும் கிளர்ச்சி செய்தோம்; விண்ணப்பங்கள் அனுப்பியும் தூது கோஷ்டிகளை அனுப்பியும் பார்த்தோம். எங்களுடைய கஷ்டங்களுக்கு பரிகாரம் அளிக்கும்படி கோரி எல்லா முறைகளையும் முயற்சித்துப் பார்த்தோம். ஆனால், பலன் ஏற்படவில்லை. மிகப் பெரும்பாலான நீக்ரோக்களுக்கும் வெள்ளையர்களுக்கும் இடையே, எழுதப் படிக்கத் தெரியாத ஒரு சில ஒப்பந்தத் தொழிலாளர்களும், வெகு சில வர்த்தகர்களும், சில்லறை வியாபாரிகளும் அடங்கிய இந்திய சமூகம் என்ன செய்ய முடியும்? வெள்ளையர்கள் முற்றிலும் ஆயுதபாணிகளாக இருந்தார்கள். எனவே இந்தியர்கள் தங்கள் மதிப்பையும் உரிமைகளையும் பெறவேண்டுமாயின், அவர்கள் ஓர் ஆயுதத்தை உருவாக்கிக்கொள்ள வேண்டும் என்பது தெளிவாயிற்று. அந்த ஆயுதம் பெரும் அளவில் வெள்ளையர்கள் வைத்துக்கொண்டிருந்த ஆயுதங்களிலிருந்து மாறுபட்டிருப்பதுடன், அவற்றைக் காட்டிலும் மிகவும் அதிக சக்தி வாய்ந்ததாக இருக்க வேண்டும் என்பதும் தெளிவாகத் தெரிந்தது. அப்போதுதான் நான்

போனிக்ஸிலும் டால்ஸ்டாய் பண்ணையிலும் கூட்டமாகச் சேர்ந்து பிரார்த்தனை செய்யும் முறையை ஆரம்பித்தேன். சத்தியாக்கிரகம் அல்லது ஆன்ம சக்தி ஆயுதத்தை உபயோகிப்பதற்குப் பயிற்சி அளிப்பதே அந்தப் பிரார்த்தனை முறையின் நோக்கமாகும்.

''கூட்டப் பிரார்த்தனையில், ராமபஜனை செய்வதே மிகவும் முக்கியமான அம்சமாகும். கீதை சுலோகங்களையும், அராபிய, ஸெண்ட் அவெஸ்தா பிரார்த்தனைகளையும் எழுத்துப் பிழையின்றி கூறுவதோ, அறிந்து கொள்ளுவதோ லட்சக்கணக்கானவர்களுக்குக் கஷ்டமாக இருக்கலாம். ஆனால், ராம பஜனையை அல்லது கடவுளின் பெயரை கானம் செய்வதில் எல்லோரும் கலந்துகொள்ள முடியும். அது எவ்வளவு எளிமையாக இருக்கிறதோ, அவ்வளவு சக்தி வாய்ந்ததாகவும் இருக்கிறது. ஒன்று மாத்திரம் முக்கியமாகும்; அதாவது அது இதயத்திலிருந்து வருவதாக இருக்கவேண்டும். அதன் எளிமையிலேயே அதன் பெருமையும், சர்வ வியாபகமான அதன் ரகசியமும் அடங்கியிருக்கிறது. கோடிக்கணக்கான மக்கள் சேர்ந்து செய்யும் எதுவும் இணையற்ற சக்தி பொருந்தியதாகிவிடுகிறது.

''முன் பயிற்சி எதுவும் இல்லாமலேயே நீங்கள் எல்லோரும் சேர்ந்து இசையுடன் ராமபஜனை செய்வதில் பெற்ற வெற்றிக்காக உங்களுக்கு நான் வாழ்த்துக் கூறுகிறேன். எனினும், அது இன்னும் அபிவிருத்தி அடைவதற்கு இடமிருக்கிறது. நீங்கள் உங்களுடைய வீடுகளில் அதைப் பழகிக்கொள்ள வேண்டும். தாளத்துடனும் இசையுடனும் அது பாடப்பட்டு, குரல், பக்க வாத்தியங்கள், சிந்தனை முதலிய மூன்றும் ஒன்று சேரும்போது சொல்லி முடியாத இனிமையும் சக்தியும் பொருந்திய ஒரு சூழ்நிலை உருவாகின்றது. அதைச் சொற்களால் வருணிக்க முடியாது.''

— 'ஹரிஜன்' – 7—4—1946

# 13

# கூட்டப் பிரார்த்தனையின் நோக்கம்

பம்பாயில் நடந்த மாலைப் பிரார்த்தனைக் கூட்டம் ஒன்றில் காந்திஜி பேசியதன் சாரமே கீழே கொடுக்கப்பட்டுள்ளது :

ஒரு மனிதன் தன்னைப் படைத்தவரான கடவுளை இருபத்து நான்கு மணி நேரமும் நினைவு கூர்வதுதான் கண்ணியமும் நேர்மையுமாகும். அது இயலாவிடில், நாம் கடவுளுடன் தொடர்பைப் புதுப்பித்துக் கொள்ளுவதற்காக பிரார்த்தனை நேரத்திலாவது ஒன்றுகூட வேண்டும். நாம் ஹிந்துக்களாயினும், முஸ்லிம்களா

யினும், பார்சிகளாயினும், கிறிஸ்தவர்களாயினும் அல்லது சீக்கியர்களாயினும் நாம் யாவரும் ஒரே கடவுளையே வணங்கு கிறோம். பொதுவான வழிபாட்டின் மூலம் மனிதரிடையே முக்கிய மான ஒற்றுமையை ஸ்தாபிப்பதே கூட்டப் பிரார்த்தனையின் நோக்கமாகும். கூட்டமாக தாளத்துடன் ராமபஜனை செய்வது அதன் வெளிப்படையான ஓர் அம்சமே. அது வெறும் யந்திரம் போன்ற காரியமாக இருக்கக் கூடாது; அது உள்ளத் தொடர்பின் எதிரொலியாக இருக்க வேண்டும். அவ்விதம் இருக்குமாயின் அது ஒரு சக்தியையும், இனிய மணம் கமழும் ஒரு சூழ்நிலையையும் உண்டாக்கிவிடும்.

—'ஹரிஜன்' - 3—3—1946

# 14

# சிந்தனை ஒருமைப்பாடு சாத்தியமா?

**கேள்வி:** உங்களுடைய பிரார்த்தனைக் கூட்டங்களில் ஆயிரக் கணக்கானவர்கள் கலந்து கொள்ளுகிறார்கள். எனவே, அத்தகைய பிரார்த்தனையின் போது எல்லோரும் தங்கள் மனத்தைச் சிதறவிடாமல், கடவுளிடம் லயிக்கச் செய்வது சாத்தியமா?

**பதில்:** ஆம் என்றே நான் பதில் கூறமுடியும். கூட்டப் பிரார்த் தனையில் எனக்கு நம்பிக்கை இராவிடில், பொது மக்கள் அடங்கிய பிரார்த்தனைக் கூட்டங்களையே நான் நிறுத்திவிட வேண்டும். எனது அனுபவமானது எனது நம்பிக்கையை உறுதிப்படுத்துகிறது. ஆனால், அதில் வெற்றி பெறுவது, தலைவரின் தூய்மையையும் கூட்டத்தினரின் நம்பிக்கையை யுமே பொறுத்திருக்கிறது. கூட்டத்தினர் நம்பிக்கையுடைய வர்களாகவும், தலைவர் மோசக்காரராகவும் இருந்த பல சம்ப வங்களை நான் அறிவேன். அத்தகைய சம்பவங்கள் நிகழத் தான் செய்யும். எனினும், பொய்யின் அந்தகாரத்திற்கு இடையே உண்மை சூரியனைப்போல் ஒளி வீசுகின்றது. என் சம்பந்தப்பட்டவரையில், ஒருவேளை எனது மரணத்திற்குப் பிறகு முடிவு தெரியலாம்.

—'ஹரிஜன்' - 21—7—1946

# 15

# கட்டாயப் பிரார்த்தனை

**கேள்வி:** அகில இந்திய நூற்போர் சங்கத்தின் ராஜஸ்தான் கிளை ஸ்தாபனத்தில் நான் வேலை செய்து வருகிறேன். பிரார்த்தனையில் எனக்கு நம்பிக்கை உண்டு. ஆனால், என்

சகாக்களில் சிலருக்கு அதில் நம்பிக்கை இல்லை. எனினும், சங்க விதிகளுக்கிணங்க அவர்கள் பிரார்த்தனையில் கலந்து கொள்ள வேண்டியவர்களாக இருக்கிறார்கள். அதில் கலந்துகொள்ள மறுத்தால், தங்கள் வேலையை இழக்கும்படி நேரும் என்று அவர்கள் பயப்படுகிறார்கள். எட்டு மணி நேரம் வேலை செய்வதற்காகத்தான் ஊழியர்களுக்கு சங்கம் சம்பளம் கொடுக்கிறது என்பதே எனது அபிப்பிராயமாகும். அப்படியிருக்க, பிரார்த்தனையில் கலந்து கொள்ளவேண்டும் என்று அதன் ஊழியர்களைக் கட்டாயப்படுத்த அதற்கு என்ன உரிமை இருக்கிறது?

**பதில்:** கட்டாயப் பிரார்த்தனை என்று எதுவும் இருக்க முடியாது. பிரார்த்தனை பிரார்த்தனையாக இருக்க வேண்டுமாயின் அது யாருடைய நிர்ப்பந்தமுமின்றி மனப்பூர்வமானதாக இருக்கவேண்டும். ஆனால், இந்நாட்களில் கட்டாயம் என்பதுபற்றி மக்கள் விசித்திரமான கருத்து உடையவர்களாக இருக்கிறார்கள். ஒரு ஸ்தாபனத்தில் சம்பளம் பெறுபவராக இருந்தாலும் சரி, பொதுவான பிரார்த்தனையில் அந்த ஸ்தாபனத்தில் உள்ள ஒவ்வொருவரும் கலந்து கொள்ளவேண்டும் என்பது ஸ்தாபன விதியாக இருக்குமாயின், நீங்கள் அந்த ஸ்தாபனத்தின் மற்ற கடமைகளைச் செய்வதுபோல் பிரார்த்தனையிலும் கலந்து கொள்ளத்தான் வேண்டும். யாதொரு வற்புறுத்தலுமின்றி நீங்களாகத்தான் அந்த ஸ்தாபனத்தில் சேர்ந்து கொண்டிருக்கிறீர்கள். அந்த விதிகளை நீங்கள் ஏற்கனவே அறிவீர்கள் அல்லது அறிந்து கொண்டிருக்கவேண்டும். எனவே, ஸ்தாபனத்தின் மற்ற அலுவல்களைச் செய்வது போல், பிரார்த்தனையிலும் நீங்களாகவே கலந்து கொள்ள வேண்டும். சம்பளத்திற்காக மாத்திரமே நீங்கள் அதில் சேர்ந்துகொண்டிருந்தால், நீங்கள் பிரார்த்தனையில் கலந்து கொள்ள முடியாது என்று மானேஜரிடம் தெளிவாக அறிவித்திருக்க வேண்டும். அவ்விஷயத்தில் உங்களுக்கு ஆட்சேபனை இருந்தும்கூட, நீங்கள் உங்களுடைய ஆட்சேபனையைத் தெரிவிக்காமல் அதில் சேர்ந்து கொண்டிருந்தால், நீங்கள் தவறு செய்ததாகிறது. அந்தத் தவறுக்கு நீங்கள் பிராயச்சித்தம் செய்து கொள்ளவேண்டும். இதை நீங்கள் இருவழிகளில் செய்யலாம். ஒன்று, பிரார்த்தனையில் உள்ளம் ஒன்றித்து நீங்கள் அதில் கலந்து கொள்ளலாம்; அல்லது நீங்கள் ராஜிநாமா செய்து விட்டு, அந்த ஸ்தாபனத்திலிருந்து விலகிக் கொள்ளுவதன் மூலம் அதற்கு ஏற்படக்கூடிய நஷ்டத்திற்கு அவசியமான ஈடுத்தொகையைக் கொடுத்து விட்டு, நீங்கள் விலகிக் கொள்ளவேண்டும். ஒரு ஸ்தாபனத்தில் சேரும் ஒவ்வொருவரும் அப்போதைக்கப்போது நிர்வாகிகள் வகுக்கும் விதிகளுக்குக் கீழ்ப்படிந்து நடக்கக் கடமைப்பட்டிருக்கிறார்கள். அவர்கள் வகுக்கும் ஏதாவ

தொரு புதிய விதி சங்கடமானதாகத் தோன்றினல், அதை ஆட்சேபிப்பவருக்கு ஸ்தாபனத்திலிருந்து விலகிக் கொள்ள உரிமையுண்டு. ஆனால், ராஜிநாமா சம்பந்தமான விதிகளுக்கு உட்பட்டே அவர் விலகிக் கொள்ளவேண்டும். எனினும், அந்த ஸ்தாபனத்தில் இருக்கும்வரையில், அவர் அதற்குக் கீழ்ப்படியாமல் இருக்கக் கூடாது.

—'ஹரிஜன்' - 13—7—1940

## 16

# புதிய மூடநம்பிக்கையா?

*புனாவில் நடந்த பிரார்த்தனைக் கூட்டம் ஒன்றில் காந்திஜி கூறியதாவது :*

"நான் ஒரு புது விதமான மூடநம்பிக்கையைப் பிரசாரம் செய்து வருகிறேனா? கடவுள் ஒரு நபர் அல்ல; அவர் எங்கும் வியாபித்துள்ள, எல்லாம் வல்ல சக்தியே. அவரை உள்ளத்தில் வைத்திருப்போருக்கு மாபெரும் அற்புதமான சக்தி ஏற்படுகிறது. அந்தச் சக்தி, நீராவி, மின்சார சக்திகளைக் காட்டிலும் பன் மடங்கு அதிக நுட்பமானது, அதிக பலனையும் கொடுக்கக் கூடியது. ராமநாமம், ஜால வித்தை போன்றதல்ல. அது ஒரு கணித சூத்திரம் போன்றது. எத்தனையோ ஆண்டுகள்வரை ஆராய்ச்சியும் பரிசோதனையும் செய்ததன் பலனாகவே கணித சூத்திரம் உருவாகிறது. யந்திரத்தைப்போல் ராம நாமத்தை அடிக்கடி திருப்பித் திருப்பி ஜபிப்பதால் சக்தி ஏற்பட்டுவிடாது. அதன் தத்துவத்தை நன்கு அறிந்து கொள்ளவேண்டும்; அதை ஜபிப்பதற்குத் தகுதியான வாழ்க்கை முறையைப் பின்பற்றவேண்டும். கடவுள் பெயரை ஜபிக்க விரும்புவோர் தெய்விகமான முறையில் வாழ வேண்டும்."

—'ஹரிஜன்' - 14—7—1946

## 17

# எண்ணிக்கையற்ற பெயர்களில் ஒன்று

ஒரு நண்பர் தமக்கு வந்த கடிதம் ஒன்றை எனக்கு அனுப்பியுள்ளார். அதற்கு நான் பதில் எழுதவேண்டும் என்பதே அவரது நோக்கமாகும். நீண்ட அக் கடிதத்தின் முக்கிய பகுதியை மாத்திரம் கீழே குறிப்பிட்டிருக்கிறேன்:

" இந்தியா காந்திஜியின் ரத்தத்தில் ஊடுருவி யிருக்கிறது. என்றாலும், அவர் தினந்தோறும் பிரார்த்தனைக் கூட்டங்களை நடத்தியும், ஹிந்து தெய்வமான ராமனின் பெயரை எல்லோரும் ஜபிக்கும்படி செய்தும் வருவதன் மூலம், அவரது மதத்தை சேர்ந்தவரல்லாதாரிடையே ஆத்திரம் ஏற்படுவதற்கு அவர் ஏன் காரணமாக இருக்க வேண்டும்? இந்தியாவில் பல்வேறு மதங்கள் உள்ளன. ஹிந்து தெய்வங்களின் பெயரால் அவர் பேசுவதை பல பிற்போக்காளர்கள் தவறாக எண்ணிக்கொள்ளுவார்கள். இதை அவர் (காந்திஜி) உணர வேண்டும். முஸ்லிம் லீக் அவர் மீது கூறும் புகார்களில் இதுவும் ஒன்றாகும். ராமராஜ்யத்தை ஸ்தாபிப்பதே அவரது செல்வக் கொள்கைகளில் ஒன்றாக இருந்துவருகிறது. இவ்விஷயத்தில் தீவிர மத பக்தரான ஒரு முஸ்லிமின் உணர்ச்சி எப்படி இருக்கும்?''

கடவுளின் பல பெயர்களில் ராமநாமம் ஒன்று என்பதை ஆயிரமாவது தடவையாக நான் மீண்டும் கூறுகிறேன். அதே பிரார்த்தனைக் கூட்டங்களில் குரானிலிருந்தும் ஸெண்ட் அவெஸ்தாவிலிருந்தும்கூட சில பகுதிகளைப் பாடுகிறோம். ராமநாம பஜனையை, தீவிர மத பக்தர்களான முஸ்லிம்கள் ஒரு போதும் ஆட்சேபித்ததில்லை. ஆட்சேபிக்காததற்குக் காரணம் அவர்கள் தீவிர மத பக்தர்களாக இருப்பதே. ராமநாமம் வெறும் சோம்பேறித்தனமான ஒரு ஜபமல்ல. எனக்குத் தெரிந்த, கோடிக் கணக்கான ஹிந்துக்களுக்குத் தெரிந்த, எங்கும் நிறைந்த கடவுளையே அது குறிக்கிறது.

என் மதத்தை நான் பகிரங்கமாக ஒத்துக்கொள்ளுவது, முஸ்லிம் லீகையோ அல்லது மற்றவரையோ ஏன் புண்படுத்த வேண்டும்? இந்தக் கூட்டங்களில் எவரும் கலந்து கொள்ளத்தான் வேண்டும் என்பதில்லை. கலந்துகொண்டாலும் பிரார்த்தனையிலும் பஜனையிலும் கலந்து கொள்ளத்தான் வேண்டும் என்பதில்லை. ஆனால், இக் கூட்டங்களில் கலந்து கொள்ளுவோர், அவற்றின் அமைதிக்கு இடையூறாக எதுவும் செய்யாமல் இருக்க வேண்டுமென எதிர்பார்க்கப்படுகிறார்கள். பிரார்த்தனையின் எந்த அம்சத்தையாவது அவர்கள் விரும்பவில்லை யெனில், அவர்கள் அதைச் சகித்துக் கொள்ளவேண்டும்.

'ராமராஜ்யம்' என்ற சொல்லின் அர்த்தத்தை நான் பல தடவைகளிலும் விளக்கியிருக்கிறேன். அப்படியிருக்க, அது வசதியான, ஆழ்ந்த பொருளைக்குறிக்கும் ஒரு சொல்லாகும். கோடிக் கணக்கான மக்களுக்கு வேறு எந்தச் சொல்லும் ஆழ்ந்த பொருளை அவ்வளவு பூரணமாக விளக்காது. நான் எல்லைப்புற மாகாணத்திற்குப் போகும்போதோ அல்லது பெரும்பான்மையான முஸ்லிம்கள் அடங்கிய கூட்டத்தில் பேசும்போதோ 'குதாய் ராஜ்யம்' என்று கூறியும் பெரும்பாலான கிறிஸ்தவர்கள் அடங்கிய கூட்டத்தில் 'பூமியில் கடவுளின் சாம்ராஜ்யம்' என்று கூறியும் எனது கருத்தை விளக்குவேன். மற்றெந்த முறையும் என் கருத்தை நானே மறைப்பதாகவும், போலித்தனமாகவும் இருக்கும்.

— 'ஹரிஜன்' - 18—8—1946

## 18

# உண்மையான தியானம்

ஒருவர் கீழ்வருமாறு எழுதுகிறார் :

"பிரார்த்தனை செய்யும்போது, ஒவ்வொருவரும் கண்களை மூடிக் கொண்டு உட்கார்ந்துகொள்ள வேண்டும் என்றும், கடவுளைத் தவிர வேறு எதையும் நினைக்கக் கூடாது என்றும் விதி இருக்க வேண்டும் என்று நீங்கள் கூறுகிறீர்கள். எப்படி, எந்த உருவத்தில் நாம் கடவுளைச் சிந்திக்க வேண்டும் என்ற கேள்வி இதிலிருந்து எழுகிறது."

நாம் பக்தி செலுத்தும் பொருளைத் தவிர வேறு எவ்விஷயத்திலும் ஈடுபடாமல் மனக் கண்களையும் காதுகளையும் மூடிக் கொண்டுவிடுவதே உண்மையான தியானமாகும். பிரார்த்தனைகளின் போது கண்களை மூடிக்கொள்ளுவதால் மனத்தை ஒரே பொருளில் ஈடுபடும்படி செய்ய முடிகின்றது. மனிதன் கடவுளைப் பற்றி மனத்தில் கொண்டுள்ள பாவனை ஓர் வரையறைக்கு உட்பட்டிருப்பது இயல்பேயாகும். எனவே, ஒவ்வொருவரும் தமது மனத்திற்கு உகந்த சிறந்த முறையில் கடவுளை சிந்தித்துக் கொள்ளலாம். ஆனால், அந்த சிந்தனை தூய்மையானதாகவும், மனிதனை உயர்த்துவதாகவும் இருக்க வேண்டும்.

— 'ஹரிஜன்' - 18—8—1946

## 19

# கடவுளுக்கு மகிழ்ச்சியளிக்கும் வழிபாடு

கராச்சியில் தொழிலாளர்கள் படித்துப் பயன் பெற வேண்டும் என்பதற்காக நடந்த இராப் பள்ளிக்கூடத்தில் காந்திஜி பேசியதன் சாரமாவது:

ஏழைகளுக்குத் தன்னலமற்ற தொண்டு செய்வதைக் காட்டிலும் அதிகத் தூய்மையான, கடவுளுக்கு அதிக மகிழ்ச்சியளிக்கக் கூடிய வழிபாடு வேறு எதுவும் இல்லை. பணக்காரர்கள் இறுமாப்பினாலும், தாங்கள் அறிவு படைத்தவர்கள் என்ற அகந்தையினாலும் கடவுள் இருப்பதைக்கூட ஆட்சேபிக்கத் தொடங்கி விடுகிறார்கள். ஆனால், கடவுளை ஏழைகள் தங்களுடைய ஒரே அடைக்கலமாகவும் பாதுகாப்பாகவும் உறுதியாகப் பற்றிக் கொள்ளுவதால் கடவுள் ஏழைகளிடையே வசிக்கிறார். ஆகையால், ஏழைகளுக்குத் தொண்டு செய்வது கடவுளுக்குத் தொண்டு செய்வதே ஆகும்.

— 'எங் இந்தியா' - 14—2—1929

# 20

## தொண்டு வழிபாடு அல்லவா?

**கேள்வி:** கடவுளை வழிபடுவதற்கு மனிதன் செலவு செய்யும் நேரத்தை, ஏழைகளுக்குத் தொண்டு செய்வதில் செலவு செய்வது சிறந்ததல்லவா? உண்மையான தொண்டு செய்யும் மனிதனுக்கு, கடவுள் வழிபாடு அனாவசியமாகி விடுகிறது அல்லவா?

**பதில்:** மனத்தின் மந்த நிலையையும், கடவுளிடம் உள்ள சந்தேகத்தையுமே இந்தக் கேள்வி காட்டுகின்றது என ஊகிக்கிறேன். மாபெரும் கர்மயோகிகள் கூட ஒருபோதும் பக்தி கீதத்தையோ, வழிபாட்டையோ கைவிடுவதில்லை. பிறருக்குத் தொண்டு செய்வதே கடவுள் வழிபாடுதான் என்றும், எனவே அவ்விதம் தொண்டு செய்யும் பக்தர்கள் பிரார்த்தனை கீதங்கள் முதலியவற்றில் நேரத்தைச் செலவு செய்யவேண்டாம் என்றும் கொள்கையளவில் கூறலாம். ஆனால், உண்மையில், பஜனைகள் முதலியவை உண்மையான தொண்டிற்கு ஓர் உதவியாகும். அவை, பக்தனின் உள்ளத்தில் எப்போதும் கடவுள் சிந்தனை புதுமையாக இருக்கும்படி செய்கிறது.

—'ஹரிஜன்' - 13—10—1946

# 21

## மௌனத்தினால் ஏற்படும் பலன்

ஒரு மனிதன் இருபத்துநான்கு மணி நேரமும் கடவுளைப் பற்றியே சிந்திப்பதை பழக்கத்திற்குக் கொண்டுவந்துவிட்டால், பிரார்த்தனைக்கென்று தனியாக நேரத்தை ஒதுக்கிவைக்கவேண்டிய அவசியமில்லை. ஆனால், எப்போதும் கடவுளைச் சிந்திப்பது பெரும்பாலான மக்களுக்கும் சாத்தியமில்லை. கீழ்த்தர ஆசைகள் நிறைந்த அன்றாட உலகமே அவர்களை எப்போதுமே ஆட்கொண்டிருக்கிறது. அவர்களுக்குக்கூட, வெளியுலக விஷயங்களிலிருந்து தங்கள் மனத்தின் தொடர்பை அறவே கத்தரித்துக் கொள்ளுவது - அவ்விதம் செய்வது தினந்தோறும் ஒரு சில நிமிடங்களே யாயினும்-எல்லையற்ற பலனைக் கொடுக்கும்.

சந்தடிக்கும் குழப்பத்திற்குமிடையே கடவுளிடம் நீங்கள் மௌனமான தொடர்பு கொள்ளுவதால், சஞ்சலமற்ற அமைதி ஏற்படுவதுடன், கோபத்தை அடக்கிக்கொள்ளவும், பொறுமையை வளர்த்துக்கொள்ளவும் அது உங்களுக்கு உதவியாக இருக்கும். ஒருவருடைய மனத்தில் கடவுள் தத்துவம் பூரணமாக நிறைந்திருக்கும்போது, அவர் யார்மீதும் துவேஷமோ அல்லது

கெட்ட எண்ணமோ கொள்ளுவது முடியாத காரியம். அது போலவே, பகைவரும் தமது துவேஷத்தைக் கைவிட்டு நண்பராகி விடுவார். பகைவர்களை நண்பர்களாக மாற்றுவதில் எப்போதும் வெற்றிபெற்றுள்ளேன் என்று நான் கூறிக்கொள்ளவில்லை. ஆனால், பெரும்பாலான சந்தர்ப்பங்களிலும், மனத்தில் கடவுள் தத்துவம் நிறைந்துள்ளபோது துவேஷம் மறைந்துவிடுகிறது என்பதே எனது அனுபவமாகும். இதை நான் பெருமையாகக் கூறிக்கொள்ள வில்லை. உலகம் ஆரம்பமானதிலிருந்து இடையருத வரிசையில் வந்துள்ள உலக உபதேசகர்களும் அதை நிரூபித்திருக்கிறார்கள். மனத்திலிருந்து அவ்விதம் துவேஷம் மறைவது, முற்றிலும் கடவுளின் அருளேயாகும். எனவே, இந்தப் புனித வாரத்தில் மௌனமான தொடர்பின் மூலம் கடவுளின் அருளை நாம் நாடுவோமாக. பின்னர் அந்த அனுபவமானது நம் மனத்தில் என்றென்றும் நிலைத்திருக்கும்.

—'ஹரிஜன்'– 28—4—1946

# 22

# மௌனம் அவசியமாகியது

கிறிஸ்தவ யுவர் சங்க ஸ்தாபகரான டாக்டர் மாட் 1936–ஆம் ஆண்டில் காந்திஜியைப் பார்க்க வந்தபோது, மௌனத்தைப்பற்றி காந்திஜியைக் கேள்வி கேட்டார். 1928–இல் டாக்டர் மாட் அகமதாபாத்திற்கு விஜயம் செய்திருந்தபோதும், அதே கேள்வியைக் கேட்டார். அவர் 1936–இல் இந்தியாவிற்கு வந்திருந்தபோது, 'ஆன்மிக சோதனையைத் தொடர்ந்து நடத்தி வருவது அவசியமென்று இன்னும் கருதுகிறீர்களா' என்று காந்திஜியைக் கேட்டார். டாக்டர் மாட் கேள்விக்குப் பதிலாக காந்திஜி கூறியதாவது:

நான் இப்போது நிரந்தரமான மௌனத்தை அனுசரித்து வருகிறேன் என்று கூற முடியும். சற்றேறக்குறைய இரண்டு மாதங்களாக நான் முற்றிலும் மௌனமாகவே இருந்துவந்தேன். இன்று நீங்கள் வந்தபோதுதான் மௌனத்தைக் கைவிட்டேன். ஒவ்வொரு நாளும் மாலைப் பிரார்த்தனையின்போது நான் மௌனத்தை மேற்கொள்ளுகிறேன். பின்னர் என்னைக் காண வருவோருக்காக இரண்டு மணிக்கு மௌனத்தைக் கைவிடுகிறேன். இப்போது மௌனம், எனது உடலுக்கும் உள்ளத்திற்கும் அத்தியாவசியமாகியிருக்கிறது. ஆதியில், வேலைத் தொந்தரவிலிருந்து சிறிது அவகாசம் கிடைக்கவேண்டும் என்பதற்காகவே மௌனத்தை மேற்கொண்டேன். அதைத் தவிர எழுதுவதற்கும் எனக்கு நேரம் தேவையாக இருந்தது. அதை நான் சில காலம் பயிற்சி செய்து பார்த்தபின், அதன் ஆன்மிகச் சிறப்பைக் கண்டேன். கடவுளுடன் தொடர்பு வைத்துக்கொள்ள, மௌனத்தை

மேற்கொண்டுள்ள சமயம்தான் சிறந்தது என்ற எண்ணம் என் மனத்தில் திடீரென்று தோன்றியது. இப்போதோ, எனக்கு மௌனம்தான் இயல்பானதென்று தோன்றுகிறது. குழந்தைப் பருவத்திலிருந்தே நான் மௌனமாக இருப்பவன் என்பது பிரசித்தமானதுதான். நான் பள்ளிக்கூடத்தில் மௌனமாகவே இருந்தேன். லண்டனில் நான் வாசித்த நாட்களிலும் என்னை மௌனச் சோம்பேறி என்றே நண்பர்கள் எண்ணினார்கள்.

டாக்டர் மாட்: இச்சந்தர்ப்பத்தில் பைபிளில் உள்ள இரண்டு வரிகள் என் நினைவுக்கு வருகின்றன:

"என் ஆன்மாவே, கடவுளின் எதிரில் நீ மௌனமாக இரு."

"ஆண்டவனே, பேசுங்கள், உங்கள் ஊழியன் கவனத்துடன் செவிசாய்க்கின்றான்."

'ஹரிஜன்' – 16—12—1938

# 23

# ஹிந்து சமயத்தின் முக்கிய அம்சம்

கிறிஸ்தவர்களுக்கு சர்ச்சுகள் எப்படியோ அப்படியே ஹிந்துக்களுக்குக் கோயில்கள் இருந்துவருகின்றன. நாம் எல்லோருமே விக்கிரகங்களை வழிபடுகிறவர்கள் என்பதே எனது அபிப்பிராயமாகும். கோயில்களில் கற்களாலும் உலோகங்களாலும் உருவாக்கப்பட்ட விக்கிரகங்கள் இருக்கின்றன என்பதற்காக நான் ஹிந்துசமயத்தில் யாதொரு வேற்றுமையையும் காணவில்லை. உறுதியானநம்பிக்கையுடன் சர்ச்சுகளுக்குச் செல்லுவதால் கிறிஸ்தவர்கள் பெறும் ஆன்மிக பலனைப் போலவே, அதே நம்பிக்கையுடன் கோயில்களுக்குச் செல்லும் பதினாயிரக்கணக்கான ஹிந்துக்களும் அதே ஆன்மிக பலனை பெறுகிறார்கள். ஹிந்துக்களுக்கு கோயில் இல்லையாயின், வாழ்க்கையிலேயே மகோன்னதமானதாகக் கருதும் ஒரு பொக்கிஷத்தை அவர்கள் இழந்தவர்களாகிவிடுகிறார்கள். பல கோயில்களையும் சுற்றி மூட நம்பிக்கையும் தீமைகளும் வளர்ந்துள்ளன என்பது உண்மையே. அதற்குப் பரிகாரம், சீர்திருத்த முறைகளைக் கைக்கொள்ளுவதேயாகும். கோயில்கள் ஹிந்து சமயத்தின் ஒரு முக்கியமான அம்சம் என்பதே எனது உறுதியான கொள்கை.

—'ஹரிஜன்' - 11—2—1936

# 24

# விக்கிரக வழிபாடு

காந்திஜிக்கும் ஒரு கத்தோலிக்கப் பாதிரியாருக்கும் விக்கிரக வழிபாடு சம்பந்தமாக நடந்த உரையாடலே கீழே கொடுக்கப் பட்டுள்ளது:

**காந்திஜி :** ஏதாவதொரு விதத்தில் விக்கிரக வழிபாட்டை அனு சரிக்காமல் இருப்பது முடியாத காரியம். ஒரு மசூதியை ஆண்டவனின் இருப்பிடம் என்று முஸ்லிம் கூறுகிறார்; மசூதி யைப் பாதுகாப்பதற்காகத் தமது உயிரையே கொடுக்கிறார். அவர் ஏன் அப்படி செய்யவேண்டும்? ஒரு கிறிஸ்தவர் சர்ச் சுக்கு ஏன் போகிறார்? அவர் பிரமாணம் செய்ய வேண்டி யிருக்கும்போது பைபிளை வைத்துக்கொண்டு ஏன் பிரமாணம் செய்கிறார்? அவ்விதம் செய்வதை நான் ஆட்சேபிக்கவில்லை. மசூதிகளும், சமாதிகளும் கட்டுவதற்காக ஏராளமான செல் வத்தைக் கொடுப்பது விக்கிரக வழிபாடு அல்லவா? கன்னி மேரியும், மற்ற கிறிஸ்தவ மகான்களும் கல்லிலோ, ஓவியத் திலோ, திரையிலோ அல்லது கண்ணாடியிலோ உள்ள கற்பனை உருவங்களே அல்லவா? அந்த உருவங்களின் முன் ரோமன் கத்தோலிக்கர்கள் முழுந்தாளிட்டுப் பணிவது விக் கிரக வழிபாடு அல்லவா?

**கத்தோலிக்கப் பாதிரியார் :** நான் என் தாயாரின் புகைப் படத் திற்கு மரியாதையாக அதை வணங்குகிறேன். ஆனால், அதைப் பூஜிப்பதில்லை. நான் கிறிஸ்தவ மகான்களையும் பூஜிப்ப தில்லை. நான் கடவுளை வழிபடும்போது, அவர் சிருஷ்டி கர்த்தா, அவர் எந்த மானிடரையும் காட்டிலும் மேலானவர் என்ற உண்மையை ஒப்புக்கொள்ளுகிறேன்.

**காந்திஜி :** அது போலவே, நாங்கள் வழிபடுவது கல்லை அல்ல; கல்லிலும் உலோகத்திலும் செய்யப்பட்டுள்ள விக்கிரகங் களிலிருக்கும் கடவுளையே வணங்குகிறோம்.

**பாதிரியார் :** கிராமவாசிகள் கற்களையே கடவுள் என்று பூஜிக் கிறார்கள்.

**காந்திஜி :** இல்லை. அவர்கள் கடவுளை மாத்திரமே பூஜிக்கிறார்கள். கடவுளுக்குக் குறைந்த எதையும் அவர்கள் பூஜிப்பதில்லை. கன்னி மேரியின் முன்னிலையில் முழுந்தாளிட்டு வணங்கும் போது, நீங்கள் என்ன செய்கிறீர்கள்? அவர் மூலமாகக் கடவுளுடன் தொடர்பு கொள்ளவேண்டும் என்றே நீங்கள் கோருகிறீர்கள். அதுபோலவே ஒரு ஹிந்து, கல் சிலையின் மூலம் கடவுளுடன் தொடர்பு கொள்ள முற்படுகிறார். முஸ்லிம்கள் மசூதிக்குள் செல்லும்போது பயபக்தியுடனும்

மகிழ்ச்சியுடனும் செல்லுகிறுர்கள். உலகம் முழுவதுமே ஏன் ஒரு மசூதியாக இருக்கக் கூடாது? அற்புதமான பரந்த ஆகாயம் ஏன் மசூதியின் விதானமாக இருக்கக் கூடாது? எனினும், நான் முஸ்லிம்களை அறிந்து கொண்டுள்ளேன்; அவர்கள் விஷயத்தில் அனுதாபம் கொள்ளுகிறேன். கடவுளை வணங்குவதற்காக ஒரு மசூதிக்குச் செல்லுவது அவர்களுடைய வழியாகும். கடவுளை வணங்க, ஹிந்துக்கள் அவர்களுடைய சொந்த வழியைப் பின்பற்றுகிறுர்கள். நாம் கடவுளை அணுகும் வழிகள்தான் வேருனவையேயன்றி, கடவுள் வெவ்வேருனவர் அல்ல.

**பாதிரியார் :** கடவுள் தங்களுக்கு உண்மையான வழியைக் காட்டியதாக கத்தோலிக்கர்கள் நம்புகின்றனர்.

**காந்திஜி :** கடவுளின் சித்தம், பைபிள் என்ற ஒரு நூலில் மாத்திரமே குறிப்பிடப்பட்டிருக்கிறது என்றும் மற்ற நூல்களில் குறிப்பிடப்படவில்லை என்றும் நீங்கள் ஏன் கூறுகிறீர்கள்? கடவுளின் சக்தியை நீங்கள் ஏன் ஓர் எல்லைக்கு உட்படுத்துகிறீர்கள்?

**பாதிரியார் :** ஆனுல், கடவுளிடமிருந்து தமக்குத் தகவல் கிடைத்தது என்பதை, மனிதர் செய்ய முடியாத அற்புதமான செயல்களின் மூலம் ஏசுநாதர் நிரூபித்தாரே.

**காந்திஜி :** முகமது நபியும் கூட அவ்விதமேதான் கூறுகிருர். கிறிஸ்தவரின் சாட்சியத்தை நீங்கள் ஒப்புக் கொண்டால், முஸ்லிமின் சாட்சியத்தையும் ஹிந்துவின் சாட்சியத்தையும் கூட ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும்.

**பாதிரியார் :** அசாதாரணமான அற்புதங்கள் எதுவும் தம்மால் செய்யமுடியாதென்று முகமது நபி கூறினுர்.

**காந்திஜி :** இல்லை; கடவுள் இருப்பதை அசாதாரண அற்புதங்களின் மூலம் நிரூபிக்க அவர் விரும்பவில்லை. எனினும், கடவுளிடமிருந்து தமக்குச் செய்திகள் வருவதாக அவர் கூறிக் கொண்டார்.

—'ஹரிஜன்' – 13—3—1937

# 25

# மரங்களை வழிபடுதல்

ஓர் அன்பர் பின்வருமாறு எழுதுகிறார்:

" இந்த நாட்டில் ஆடவர்களும் பெண்களும் கற்களையும் மரங்களையும் வழிபடுவது, சாதாரணமாக எல்லோரும் காணும் காட்சியாகும். எனினும், உற்சாகம் வாய்ந்த சமூக ஊழியர்களின் குடும்பங்களைச் சேர்ந்த படித்த பெண்கள் கூட, இந்த வழக்கத்தைப் பின்பற்றுவதைக் கண்டு நான் ஆச்சரிய மடைகிறேன். இவ்வழக்கமானது, இயற்கையின் தெய்வத் தன்மையில் உள்ள தூய்மையான பக்தியை அடிப்படையாகக் கொண்டிருப்பதாலேயே, தாங்கள் அதைப் பின்பற்றுவதாக அவர்களில் சில சகோதரர்களும் சகோதரிகளும் கூறுகிறார்கள். அது போலி நம்பிக்கைகளை அடிப்படையாகக் கொண்டதல்ல வாதலால், அதை மூடநம்பிக்கை என்று கூறமுடியாதென்று அவர்கள் கருது கிறார்கள். சத்தியவான், சாவித்திரியின் ஞாபகார்த்தமாகவே அவ்வித வழி பாடுகள் செய்வதாகவும் அவர்கள் கூறுகிறார்கள். அவர்களுடைய வாதம் எனக்குத் திருப்தியைக் கொடுக்கவில்லை. இவ்விஷயத்தைத் தாங்கள் விளக்க வேண்டுமென்று நான் கேட்டுக் கொள்ளுகிறேன்."

இந்தக் கேள்வியை நான் விரும்புகிறேன். இது, மிகமிகப் பழமையான விக்கிரக வழிபாட்டுப் பிரச்னையை எழுப்புகிறது. விக்கிரக வழிபாட்டை நான் ஆதரிக்கிறேன்; எதிர்க்கவும் செய் கிறேன். போலி நம்பிக்கைகளால் மாசுபட்டு அது இழி நிலையை அடையும் போது, விக்கிரக வழிபாடு மோசமான ஒரு சமூகத் தீமையாகிவிடுகிறது. அப்போது அதை எதிர்க்க வேண்டியது அவசியமாகிவிடுகிறது. அதற்கு மாறாக, தனது கொள்கைக்கு ஸ்தூலமான ஓர் உருவம் கொடுக்கவேண்டுமென்ற எண்ணத்தால் விக்கிரக வழிபாடு செய்வது, மனிதனின் இயல்புக்கு உகந்ததே யாகும். அத்தகைய வழிபாடு, பக்தி வளர்வதற்குக் கூட உதவியாக இருக்கிறது. புனிதமானதாகவும் தெய்விகமானதாக வும் நாம் கருதும் ஒரு நூலுக்கு நாம் மரியாதை செலுத்தும் போது, ஓர் உருவத்தையே நாம் வணங்குவதாகிறது. பக்தியுட னும் வணக்கத்துடனும் நாம் ஒரு கோவிலுக்கோ அல்லது மசூதிக்கோ செல்லும்போது, நாம் ஓர் உருவத்தையே வணங்குகிறோம். இதிலெல்லாம் எத்தகைய அபாயமும் இருப் பதாக எனக்குத் தெரியவில்லை. அதற்கு மாறாக, மனிதன் வேறு எதுவும் செய்ய முடியாது. ஏனெனில், அவனது அறிவு ஓர் எல்லைக்கு உட்பட்டதேயாகும். எனவே, மரத்தை வழிபடுவதில் தீமையோ, அபாயமோ எதுவும் இருப்பதாக நான் கருதவில்லை. அதில், மனத்தை உருக்கும் ஆழ்ந்த கருத்தும், கற்பனை அழகுமே நிறைந்திருக்கின்றன. தாவர வர்க்கத்தினிடம் நமக்குள்ள உண்மையான பக்தியையே அது குறிப்பிடுகிறது. அழகான உருவங்களும் வடிவங்களும் வாய்ந்த பரந்த தாவர வர்க்கத்தின்

முடிவற்ற கண்கொள்ளாக் காட்சியானது, கடவுளுடைய பெருமையையும் மகிமையையும் லட்சம் நாவுகளால் பிரகடனம் செய்வது போலிருக்கிறது. தாவர வர்க்கம் இராவிடில், இப் புவியில் உயிர்கள் ஒரு விநாடிகூட வாழ முடியாது. எனவே, மரங்கள் குறைவாக உள்ள ஒரு நாட்டில், மரத்தை வழிபடுவது ஆழ்ந்த பொருளாதார தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டிருக்கிறது.

எனவே, மர வழிபாட்டை எதிர்த்துப் போராட்டம் நடத்த வேண்டிய அவசியம் எதையும் நான் காணவில்லை. மரத்தை வழிபடும் எளிய மனம் படைத்த பெண்கள், தங்கள் செய்கையில் உள்ள இந்த ஆழ்ந்த கருத்துக்களையெல்லாம் உணரவில்லை என்பது உண்மையே. தாங்கள் ஏன் அவ்விதம் வழிபடுகிறோம் என்பதுபற்றி அவர்களைக் கேட்டால், அதற்கு அவர்களால் சரியான விளக்கம் கூற முடியாது. அவர்களுடைய தூய்மையான, எளிமையான நம்பிக்கையே அவர்களின் செயலுக்குக் காரணம். அத்தகைய நம்பிக்கை வெறுக்கத்தக்கதல்ல. அது, பொக்கிஷத்தைப் போல் நாம் பாதுகாக்க வேண்டிய ஒரு மாபெரும் சக்தியாகும். எனினும், தன்னல நோக்கத்துடன் பிரார்த்தனை செய்வதையோ, விக்கிரகங்களை அல்லது மரங்களை வழிபடுவதையோ நான் ஆதரிக்கவில்லை. பொதுவாக மர வழிபாட்டை நான் ஆதரித்துப் பேசவில்லை. பக்தி மார்க்கத்திற்கு அது அவசியம் என்றே கருதுகிறேன். இந்த உலகில் கடவுள் எண்ணிக்கையற்ற பல்வேறு உருவங்களில் காட்சி தருகிறார். அத்தகைய ஒவ்வொரு காட்சியையும் மனப்பூர்வமாக வணங்க நான் கடமைப்பட்டுள்ளேன்.

—'எங் இந்தியா' – 26—9—1929

# 26

# மரங்கள் நமது சகோதரர்களே

இரவு நேரமானாலும், படுக்கச் செல்லுமுன் காந்திஜி கொஞ்சம் பஞ்சடித்துப் பட்டை போட விரும்பினார். அதற்கான வில் முதலிய சாதனங்களைத் தயாராக வைப்பதற்காக நான் சென்றேன். எனக்கு அவசர அலுவல்கள் இருந்ததால், கருவேல மரத்திலிருந்து சில இலைகளைப் பறித்துவருவதற்காக ஒரு தொண்டரை அனுப்பினேன். வில்லின் நரம்பிற்குப் போட அது தேவையாக இருந்தது.

தொண்டர் ஒரு பெரிய கிளையை முறித்துக் கொண்டுவந்து என்னிடம் கொடுத்தார். அதில் உள்ள சிறிய இலைகள் இறுக மூடிக்கொண்டிருப்பதைப் பார்க்க எனக்கு ஆச்சரியமாக இருந்தது.

அவற்றை நான் காந்திஜியின் அறைக்கு எடுத்துச் சென்றேன். "பாபு, இதைப் பார்த்தீர்களா? இந்தச் சிறிய இலைகள் யாவும் தூங்குகின்றன" என்றேன்.

உடனே காந்திஜி கோபத்துடன் பார்த்து, கண்களில் இரக்கம் ததும்பக் கூறியதாவது: "ஆமாம், நம்மைப் போலவே மரங்களும் உயிருள்ளவையே. அவை உயிர் வாழ்கின்றன; மூச்சு விடுகின்றன; நம்மைப் போலவே அவை உணவு உட்கொள்ளுகின்றன; தண்ணீர் குடிக்கின்றன; நம்மைப் போலவே அவற்றிற்குத் தூக்கமும் அவசியமாகும். இரவில் அவை ஓய்வு எடுத்துக் கொண்டிருக்கும்போது, இலைகளைப் பிய்த்துக்கொண்டு வருவது இழிவான, துக்ககரமான காரியமாகும். இவ்வளவு ஏராளமான இலைகளை நீங்கள் ஏன் பறித்து வந்தீர்கள்? ஒரு சில இலைகளே போதுமானவை. நிர்க்கதியான புஷ்பங்களைப் பற்றி நேற்று நான் கூட்டத்தில் சொன்னேன். மென்மையான புஷ்பங்களை ஏராளமாகப் பறித்து என் முகத்தின்மீது எறிவதும், என் கழுத்தைச் சுற்றி மாலை போடுவதும் எனக்கு எவ்வளவு ஆழ்ந்த வேதனையைக் கொடுக்கின்றன என்பதையும் குறிப்பிட்டேன். நான் கூறியதை நீங்கள் நிச்சயமாகக் கேட்டிருப்பீர்கள். இலைகள் எல்லாம் மூடிக் கொண்டு தூங்கும் இந்த காலம்கடந்த நேரத்தில் யாரோ ஒருவரை அனுப்பி மரத்திற்குத் தொல்லை கொடுத்து வேதனையை உண்டாக்குவது யோசனையற்ற ஒரு காரியம் அல்லவா? நமக்கும் ஜீவனுள்ள மற்ற சிருஷ்டிகளுக்குமிடையே அதிக உயிர்த் தொடர்பு இருப்பதை நாம் உணரவேண்டும்."

"ஆமாம், பாபு, எனக்குத் தெரிகிறது. நீங்கள் கூறுவதை நான் உணர்ந்துகொண்டேன். அது நான் செய்த சிறிதும் யோசனையற்ற காரியமேயாகும். இனி எப்போதும் நானே நேரில் செல்லுகிறேன். இனி இருண்ட பிறகு அமைதியாகத் தூங்கும் மரத்தின் இலைகளைப் பறித்து அதற்கு அனாவசியமாக ஒருபோதும் தொந்தரவு கொடுக்க மாட்டேன்" என்று வெட்கத்தினால் தலைகுனிந்த வண்ணம் கூறினேன்.

நான் இரண்டுமடங்கு வெட்கம் அடைந்தேன். ஏனெனில், பல தடவைகளிலும் நான் நமது காட்டு சகோதரர்களான மரங்களிடமிருந்து ஆறுதலும் ஆதரவும் பெற்றிருக்கிறேன். நான் பல தடவைகளிலும் ஒரு பழைய, மாபெரும் மரத்தின் அடிமரத்தை அணைத்துக் கொண்டு, விவேகமும் சாந்தியும் நிறைந்த மௌனமான அதன் பாஷைக்குச் செவி கொடுத்திருக்கிறேன். நான் அவ்வளவு இதயமற்றவளாக எப்படி இருக்க முடிந்தது!

மீரா

மீராபாயின் இந்த வார்த்தைகளை வெறும் பிதற்றல் என்று வாசகர்கள் கூறுதிருப்பார்களாக. பேச்சிற்கும் செயலுக்கும் படுமோசமான முரண்பாடு இருப்பதாக என்மீதோ அல்லது மீராபாய் மீதோ வாசகர்கள் குற்றம் சாட்டவும் வேண்டாம். அதாவது நாங்கள் வண்டிவண்டியாகக் கறிகாய்களைச் சாப்பிடு

கிறேம்; ஆனல், இரவில் ஓய்வு எடுத்துக்கொண்டிருக்கும் மரத்தின் ஓர் இலையைப் பறிக்கக்கூட கூசுகிறேம் என்று அவர்கள் கூறவேண்டாம். ஒரு கசாப்புக் கடைக்காரன் கூட ஓரளவு ஜீவகாருண்யம் உள்ளவனுக இருக்கலாம். ஏனெனில், மனிதன் ஆட்டிறைச்சியைச் சாப்பிடுகிருன் என்பதற்தாக, ஆடுகள் தூங்கிக் கொண்டிருக்கும்போது அவன் கூட்டமாக ஆடுகளைக் கொல்லுவதில்லை. மிருகங்களாக இருந்தாலும், தாவர வர்க்கமாக இருந்தாலும், எல்லா ஜீவன்களிடத்தும் தயை காட்டுவதே மனிதத்தன்மையின் முக்கிய அம்சமாகும். இன்பத்தை நாடும் முயற்சியில் மற்றவர்களிடம் தயை தாட்சண்யம் காட்டாதவன், மனிதனைக் காட்டிலும் குறைந்தவனே. அவன் யோசனையற்றவனே.

மோ. க. கா.

'எங் இந்தியா' – 5—12—1929

# 27

# மரங்களுக்குப் பாதுகாப்பு

மனித அபிலாஷைக்கு அல்லது மனிதனின் தேவைக்கு இணங்கவே எல்லா மதங்களும் இருக்கின்றன. மதம், கட்டுப்படுத்தும் ஒரு சக்தியே ஆகும். அந்த சக்தி எதிர்த்து நிற்க முடியாதது. பசு மிகமிக முக்கியமான தேவையாக இருக்கிறது. எனவே, இந்தியாவில் பசுவைப் பாதுகாத்து வந்தோம். தண்ணீர்ப் பஞ்சம் உள்ள இடத்தில் கிணறுகளை வெட்டுவது சமயமாகும். தண்ணீர் வற்ருமல் கிடைக்கும் இடத்தில் கிணறுகள் வெட்டுவது நகைக்கத்தக்கது. அதுபோலவே, மரங்கள் அபரிமிதமாக உள்ள திருவாங்கூரில் மரங்களைப் பயிராக்குவது அவசியமில்லாத காரியமாக இருக்கும். ஆனல் இந்தியாவின் சில பாகங்களில் மரங்களை வைத்து வளர்க்க வேண்டியது மிகவும் அத்தியாவசியமாக இருக்கிறது. அத்தகைய இடங்களில் ஒன்று கச் என்பதில் ஐயமில்லை. அது சிறந்த சீதோஷ்ண நிலையைப் பெற்றிருக்கிறது. எனினும், அங்குள்ள சில இடங்களில் ஒழுங்காக மழை பெய்தாலன்றி, அவை பாழான கட்டாந்தரையாகிவிடுமோ என்று அஞ்சவேண்டிய நிலை ஏற்பட்டிருக்கிறது. காடுகளை அழிப்பதன் மூலமோ அல்லது காடுகளை வளர்ப்பதன் மூலமோ மழை பெய்வதை ஒழுங்கு படுத்தமுடியும். கச்சில் ஒவ்வொரு மரத்தையும் ஒவ்வொரு செடியையும் பாதுகாக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டிருக்கிறது. எனவே, மரங்களை நடும் வைபவத்தையும், மரம் வளர்ப்பு, பாதுகாப்பு சங்கத்தையும் அங்கே ஆரம்பித்து வைக்கும்படி என்னைக் கேட்டுக்கொண்டது எனக்கு மட்டற்ற மகிழ்ச்சியைக் கொடுத்தது. ஜயகிருஷ்ண இந்திரஜித்தின் மேதையே அம்முயற்சிக்குக்

காரணமாகும். குஜராத்தில் அத்துறையில் உள்ள சில விசேஷ நிபுணர்களில் ஜயகிருஷ்ணரும் ஒருவர். அவர் தாவர வர்க் கத்தை நேசிப்பவர். போர்பந்தர் சமஸ்தானத்தில் உள்ள பர்தா மலையில் இருக்கும் தாவர வர்க்கத்தையும் பிராணி வர்க்கத் தையும் பற்றி தவறில்லாத, திட்டவட்டமான புள்ளி விவரங் களுடன் எழுதப்பட்டுள்ள சிறந்த நூலின் ஆசிரியரே ஸ்ரீ ஜய கிருஷ்ணர். அவர் இப்போது கச்சில் காட்டிலாக்கா அதிகாரியாக இருக்கிறார். காடுகளை வளர்ப்பதில் கச் மக்களுக்கும் அரசாங் கத்திற்கும் அக்கறை ஏற்படும்படி செய்ய அவர் முயற்சித்து வருகிறார். புத்திசாலித்தனமான முறையில் மரங்களை வைத்து வளர்த்தால், கச் பிரதேசத்தில் பாலும் தேனும் வழிந்தோடும்படி செய்ய முடியும் என்று அவர் நம்புகிறார். கச்சில் காற்றினால் பலவிடங்கள் மணல் மேடுகளாகிப் பாழாகின்றன. ஆனால், அங்குள்ள மக்கள் பசுக்களை வாங்கிப் பராமரிப்பதுபோல், ஒவ் வொருவரும் வருடந்தோறும் இத்தனை மரங்களை வைத்து வளர்ப்பதென்று பிரதிக்ஞை செய்து கொள்ளுவார்களாயின், பாழான இடங்களையெல்லாம் நந்தவனங்களாகச் செய்துவிட முடியும் என்று அவர் நம்புகிறார். நானும் அதை ஒப்புக்கொள்ளு கிறேன். மனத்தைக் கவரும் அவரது உறுதிமொழிகளையெல் லாம் நிறைவேற்ற முடிந்தாலும் முடியாவிட்டாலும், கச்சில் ஏராளமாக மரங்களை வைத்து வளர்க்க வேண்டியது அவசியம் என்பதில் சந்தேகமில்லை. அங்கே விறகுக்காக ஒரே ஒரு மரத்தை வெட்டுவது கூட கொடுமையான அழிவு வேலையாகும். கச்சுக்குத் தேவையான விறகுகள் அல்லது கரியை இறக்குமதி செய்து கொள்ள வேண்டும். கச்சைப் பற்றி நான் கூறியிருப்பது அதைப் போன்ற மற்ற இடங்களுக்கும் பொருந்தும்.

**'எங் இந்தியா' – 19—11—1925**

# 28

# கடவுளின் சித்தம்

**கேள்வி :** கடவுளின் சித்தத்திற்கும் தமது சொந்த சித்தத் திற்கும் உள்ள வேற்றுமையை ஒரு சாதாரண மனிதர் எவ் விதம் அறிந்துகொள்ள முடியும்?

**பதில் :** கடவுளின் சித்தம் என்பதற்கு நிச்சயமான ருசு இருந்தாலொழிய அவர் எதையும் கடவுளின் சித்தம் என்று கருதக் கூடாது. கடவுளின் சித்தத்தை எல்லோரும் அறிந்து கொண்டு விட முடியாது. ஆண்டவனின் சித்தத்தை அறியும் சக்தியைப் பெறுவதற்கு, ஒழுங்கான பயிற்சி அவசியமாகும்.

**—'ஹரிஜன்' • 27—4—1940**

# 29

# கடவுளும் அற்புதங்களும்

அமானுஷ்யமான அற்புதங்களில் காந்திஜிக்கு நம்பிக்கை உண்டா என்று ஓர் ஆங்கில நண்பர் கேட்டதற்குப் பதிலாகக் காந்திஜி கூறியதாவது:

"நான் அவற்றை நம்புகிறேன், நம்பவுமில்லை. அமானுஷ்யமான அற்புதங்களின்மூலம் கடவுள் தமது வேலையைச் செய்வதில்லை. எனினும், கடவுளின் சித்தம் திடீரென்று மின்னல்போல் தெரிகின்றது. அது, மனித அசாத்தியமான அற்புதம்போல் மனிதனுக்குத் தோன்றுகிறது. நாம் கடவுளை அறியோம். கடவுளின் சட்டம் இயங்குவதன் மூலமே அவரை நாம் அறிகிறோம். கடவுளும் அவரது சட்டமும் ஒன்றுதான். அவரது சட்டத்திற்கு அப்பாற்பட்டது எதுவுமே இல்லை. அவரது சித்தமின்றி பூகம்பங்கள், பெரும் புயல்கள்கூட ஏற்படுவதில்லை. அவரது விருப்பமின்றி அணுவும் அசைவதில்லை; ஒரு சிறு புல்லும் வளருவதில்லை. அவரது அனுமதியினால்தான் சைத்தான் கூட இங்கே இருக்கிறது. கடவுளுக்குத் தெரியாமல் சைத்தான் இங்கே இருக்க முடியாது."

—'ஹரிஜன்' - 7—4—1946

# 30

# தீர்க்கதரிசனத் தோற்றம்

காந்திஜி எல்லைப் புற மாகாணத்தில் யாத்திரை செய்து கொண்டிருந்தபோது, பிஷாவரில் உள்ள இஸ்லாமியா கல்லூரிப் பேராசிரியர் அவரைக் கண்டு பேசுவதற்காக வந்திருந்தார். காந்திஜிக்கு தீர்க்கதரிசனத் தோற்றம் ஏதாவது தெரிந்தது உண்டா என்று அவர் கேட்டதற்குப் பதிலாகக் காந்திஜி கூறியதாவது:

"தீர்க்கதரிசனம் என்றும், தோற்றம் என்றும் நீங்கள் எதைக் குறிப்பிடுகிறீர்கள் என்பது எனக்குத் தெரியவில்லை. ஆனால், என் வாழ்க்கையில் ஏற்பட்ட ஓர் அனுபவத்தை உங்களுக்கு நான் கூறுகிறேன். சிறையில் நான் 21 நாட்கள் உண்ணாவிரதம் இருக்கப் போவதை அறிவித்தபோது, அதன் சாதக பாதகங்களைப் பற்றி நான் சிந்திக்கவில்லை. முதல் நாள் இரவு நான் படுக்கச் சென்றபோது, மறு நாள் காலையில் 21 நாட்கள் உண்ணாவிரதத்தைப் பற்றி நான் அறிவிக்கப் போகிறேன் என்ற எண்ணமே எனக்கில்லை. எனினும், நடுநிசியில் ஒரு குரல் என்னை எழுப்பி 'உண்ணாவிரதம் இரு' என்று கூறியது. 'எத்தனை நாட்கள்?' என்று நான்

கேட்டேன்.' '21 நாட்கள்' என்று பதில் வந்தது. உண்ணாவிரதம் இருப்பதற்கு அப்போது நான் தயாராக இல்லை; அதில் அப்போது எனக்கு நாட்டமும் இல்லை. ஆனால், நான் உண்ணாவிரதம் இருக்கும்படி கூறிய அந்தக் குரல் தெளிவாக எனக்குக் கேட்டது.

"இன்னும் ஒரு விஷயத்தையும் கூறி நான் முடித்து விடுகிறேன். வாழ்க்கையில் நான் செய்த குறிப்பிடத்தக்க காரியங்கள் எதுவாயினும், அதை நான் பகுத்தறிவால் தூண்டப்பட்டு செய்யவில்லை; என் உணர்வினால் தூண்டப்பட்டே செய்தேன். அந்த உணர்வை நான் கடவுள் என்றே கூறுவேன். 1930-இல் நிகழ்ந்த தண்டி உப்புச் சத்தியாக்கிரகத்தை எடுத்துக் கொள்ளுங்கள். உப்புச் சட்டத்தை மீறுவதால் என்ன பலன் ஏற்படும் என்பது பற்றி எனக்கு எதுவுமே தெரியவில்லை. பண்டித மேதிலால் ஜியும் மற்ற நண்பர்களும் கோபமடைந்தார்கள். நான் என்ன செய்யப் போகிறேன் என்பதை அவர்களால் அறிந்து கொள்ள முடியவில்லை. அவர்களுக்கு நானும் எதுவும் கூற முடியவில்லை, ஏனெனில், எனக்கே அதைப்பற்றி எதுவும் தெரியாது. எனினும், அந்த எண்ணமானது-என் மனத்தில் மின்னல் போல் தோன்றியது. பின்னர் உப்புச் சத்தியாக்கிரகம், ஒரு கோடியிலிருந்து மற்றொரு கோடி வரையில் தேசம் முழுவதையுமே உலுக்கிவிட்டதென்பது உங்களுக்குத் தெரியும்.

"கடைசியாக, இன்னும் ஒரு விஷயத்தைக் கூறிவிடுகிறேன். 1919 ஏப்ரல் 6-ஆம் தேதியை உண்ணாவிரத தினமாகவும் பிரார்த்தனை தினமாகவும் அனுசரிக்க வேண்டும் என்று அறிவிப்பதுபற்றி கடைசி தினம் வரையில் எனக்கு எதுவுமே தெரியாது, ஆனால், அதைப்பற்றி நான் கனவு கண்டேன். 1930-இல் நிகழ்ந்ததுபோல் குரலோ, தோற்றமோ எதுவுமில்லை. அவ்விதம் தான் செய்ய வேண்டும் என்று தோன்றியது. அவ்வளவுதான். மறுநாள் காலையில் அதை ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியாரிடம் கூறினேன். பிறகு அதை தேசத்திற்கும் அறிவித்தேன். அதற்கு மக்கள் எவ்வளவு ஆச்சரியகரமான விதத்தில் ஆதரவு அளித்தார்கள் என்பதை நீங்கள் அறிவீர்கள்."

—'ஹரிஜன்' – 14—5—1938

# 31

# ஆனந்தத்தைக் கொடுப்பது எது?

**டாக்டர் மாட்:** கஷ்டங்கள், சந்தேகங்கள், கேள்விகள் முதலியன ஏற்பட்டு உங்களுக்கு மனவேதனை உண்டாகும்போது, உங்களுடைய ஆன்மாவுக்கு ஆழ்ந்த ஆனந்தத்தைக் கொடுப்பது எது?

**காந்திஜி:** கடவுளிடம் உள்ள ஜீவ நம்பிக்கைதான்.

**டாக்டர்:** உங்களுடைய வாழ்க்கையிலும் அனுபவங்களிலும் சந்தேகத்திற்கு இடமின்றி உங்களுக்குக் கடவுள் தோன்றியது எப்போது?

**காந்திஜி:** கடவுள் ஒரு போதும் உங்கள் எதிரில் நேராக வந்து தோன்ற மாட்டார். உங்கள் வாழ்க்கையில் காரிருள் சூழ்ந்த சமயத்தில் நீங்கள் மீட்கப்படுவீர்கள். அதிலிருந்தே கடவுளின் அருளை நீங்கள் அறிந்து கொள்ளவேண்டும்.

**டாக்டர்:** கடவுளின் அருளின்றி ஏற்பட முடியாத விஷயங்களைப் பற்றி நீங்கள் குறிப்பிடுகிறீர்கள் அல்லவா?

**காந்திஜி:** ஆமாம். அவை திடீரென்றும் யாருக்கும் தெரியாமலும் ஏற்படுகிறது. ஒரே ஓர் அனுபவம் மட்டும் என் மனத்தில் இன்றும் தெளிவாக இருந்துவருகிறது. அது, தீண்டாமை ஒழிப்பு சம்பந்தமாக நான் 21 நாட்கள் உண்ணாவிரதம் இருந்ததைப் பற்றியதே. மறுநாள் உண்ணாவிரதத்தைப் பிரகடனம் செய்ய வேண்டியிருக்கும் என்ற உத்தேசம் நான் முதல் நாள் படுக்கச் சென்றபோது எனக்குச் சிறிதும் இல்லை. அன்றிரவு சுமார் 12 மணிக்கு 'நீ உண்ணாவிரதம் இருக்கவேண்டும்' என்று ஒரு குரல் மெதுவாகக் கூறுகிறது. அந்தக் குரல் என் உள்ளேயிருந்து வந்ததா அல்லது வெளியிலிருந்து வந்ததா எனபதை நான் கூறமுடியாது. 'எத்தனை நாட்கள்?' என்று நான் கேட்கிறேன். '21 நாட்கள்' என்று அந்தக் குரல் கூறுகிறது. 'உண்ணாவிரதத்தை எப்போது ஆரம்பிக்க வேண்டும்?' என்று நான் கேட்கிறேன். 'நாளைக்கே ஆரம்பித்துவிடு' என்கிறது அந்தக் குரல். அப்படியே மறுநாள் உண்ணாவிரதத்தை ஆரம்பிப்பதென்ற தீர்மானத்துடன் நான் அமைதியாகப் படுக்கச் சென்றுவிட்டேன். காலைப் பிரார்த்தனைக்குப் பிறகுதான் அவ்விஷயத்தை எனது சகாக்களிடம் கூறினேன். எனது தீர்மானத்தைத் தெரிவித்ததும், அது எவ்விதத்திலும் மாற்ற முடியாத தீர்மானமாதலால், அதைப் பற்றி என்னுடன் விவாதிக்க வேண்டாமென்றும் ஒரு துண்டுக் காகிதத்தில் எழுதி நான் அவர்களுடைய கையில் கொடுத்தேன். உண்ணாவிரதத்தை நான் தாங்க முடியாதென்றும், உண்ணாவிரதம் இருந்தால் என் உயிருக்கு அபாயம் ஏற்படும் என்றும் டாக்டர்கள் எண்ணினர். ஆனால், நான் உண்ணாவிரதத்தைச் சமாளித்துவிடுவேன் என்றும், உண்ணாவிரதத்தை மேற்கொண்டு நான் முன்செல்ல வேண்டும் என்றும் என்னுள் ஏதோ ஒன்று கூறியது. அதற்கு முன்னரோ அல்லது பின்னரோ என் வாழ்க்கையில் அத்தகைய அனுபவம் எனக்கு ஒருபோதும் ஏற்பட்டதில்லை.

**டாக்டர்:** அத்தகைய ஓர் அனுபவத்திற்கு, தீமையான ஓர் அடிப்படை காரணமாக இருக்க முடியாதென்று நீங்கள் நிச்சயமாகக் கூற முடியுமா?

**காந்திஜி:** நிச்சயமாக, தீய அடிப்படை காரணமாக இருக்க முடியாது. அந்த உண்ணாவிரதம் தவறானது என்ற எண்ணம் எனக்கு ஒருபோதும் ஏற்பட்டதில்லை. எனது வாழ்க்கையில் ஆன்மிக சம்பந்தமான உண்ணாவிரதம் ஒன்று இருந்திருக்குமாயின், அது இதுதான். உடலுக்குத் திருப்தியைக் கொடுக்க மறுப்பதில் ஏதோ ஒரு தத்துவம் இருக்கிறது. நீங்கள் உடலைத் துன்புறுத்திக் கொண்டாலொழிய, கடவுளை நேருக்கு நேராகக் காண்பது சாத்தியமல்ல. கடவுளின் ஆலயம் என்ற முறையில் உடலுக்குச் சொந்தமான காரியங்களைச் செய்வது ஒரு விஷயமாகும்; மாமிசம் நிறைந்த உடல் என்ற முறையில் அதற்கு சொந்தமான காரியங்களைச் செய்ய மறுப்பது மற்றொரு விஷயமாகும்.

—'ஹரிஜன்' – 10–12–1939

# 32

# அந்தராத்மாவின் குரல்

**கேள்வி:** "அந்தராத்மாவின் குரல்" என்பதற்கு கடவுளிடமிருந்து வரும் செய்தி என்று அர்த்தமா?

**பதில்:** "அந்தராத்மாவின் குரல்" என்பது கடவுளிடமிருந்தோ அல்லது சைத்தானிடமிருந்தோ வரும் செய்தியாக இருக்கலாம். ஏனெனில், மானிடரின் உள்ளத்தில் அந்த இரண்டும் போராடிக் கொண்டிருக்கின்றன. அந்தக் குரலின் தன்மையைச் செயல்களே நிரூபிக்கின்றன.

—'எங் இந்தியா' – 13–2–1930

# 33

# விளக்க முடியாத நடவடிக்கைகள்

ஒரு சத்தியாக்கிரகி என்ற முறையில் சங்கடமான ஒவ்வொரு சமயத்திலும், சரியாகவோ தவறாகவோ, கடவுளின் துணையைத்தவிர வேறு ஒன்றும் இல்லை என்பதை நான் அறிவேன். விளக்கிக் கூற முடியாதவையாகத் தோன்றும் எனது நடவடிக்கைகள், உண்மையில் அந்தராத்மாவினால் தூண்டப்பட்டவைகளே என்று எல்லோரும் நம்பவேண்டும் என்பதே எனது விருப்பமாகும்.

—'ஹரிஜன்' – 11—3—1939

## 34

# மனச்சாட்சியின் கட்டளை

சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டம் 1942 ஆகஸ்டு மாதம் 8-ஆம் தேதி பம்பாயில் நடந்தபோது "இந்தியாவை விட்டு வெளியேறுக" என்ற தீர்மானத்தை யொட்டி காந்திஜி நிகழ்த்திய பிரசங்கத்தின் ஒரு பகுதியே கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது:

என்னுள்ளிருந்து வரும் குரலை, அதை நீங்கள் 'மனச்சாட்சி' என்று கூறினாலும் சரி, 'எனது அடிப்படையான இயல்பினால் தூண்டப்பட்டது' என்று கூறினாலும் சரி, வெளிக்குத் தெரியாமல் நான் அமுக்கிவிடக் கூடாது. என்னுள்ளிருக்கும் ஏதோ ஒன்று, எனது வேதனையை உரக்கக் கதறித் தீர்க்கும்படி என்னை வற்புறுத்தித் தூண்டுகிறது. மானிட வர்க்கத்தை நான் அறிவேன். மனோதத்துவ நூல்கள் பலவற்றை நான் படித்ததில்லை. என்றாலும், அந்த தத்துவத்தைப் பற்றி சிறிது ஆராய்ச்சி செய்துள்ளேன். அத்தகைய ஒருவன் அது என்ன என்பதைத் திட்டமாக அறிவான். ஒருபோதும் என்னை ஏமாற்றித் தவறான பாதையில் செலுத்தாத என்னுள்ளிருக்கும் ஏதோ ஒன்று, இப்போது என்னிடம் இவ்விதம் கூறுகிறது: 'நீ தனியாக நிற்கும்படி நேர்ந்தாலும் நீ உலகம் முழுவதையுமே எதிர்த்து நிற்கவேண்டும். ரத்தம் சுரந்த கண்களுடன் உலகமே கோபத்துடன் உன்னை நோக்கினாலும் கூட, நீ நிர்ப்பயமாக உலகத்தை எதிர்நோக்க வேண்டும். அஞ்சாதே. உள்ளத்தில் உறையும் அந்தச் சிறிய பொருளை நம்பு. நண்பர்கள், மனைவி எல்லோரையும் துறந்துவிடு. எதற்காக நீ வாழ்ந்தாயோ, எதற்காக நீ இறக்கவேண்டியவனாக இருக்கிறாயோ, அதை உறுதிப்படுத்து.

## 35

# மனச் சாட்சியின் போர்வையில்

ஒருவர் எழுதியுள்ள கடிதத்தின் சாரம் பின்வருமாறு:

"மனச்சாட்சி, மனச்சாட்சி என்று நீங்கள் இடைவிடாது கூறிக்கொண்டிருப்பதால் ஏற்பட்டுள்ள விபரீதத்தை நீங்கள் அறிவீர்களா? இளைஞர்களும் வயதுவந்தவர்களும் மனச்சாட்சியின் போர்வையில் முற்றிலும் அறிவீனமாகப் பேசிவருவதை நான் காண்கிறேன். இதைக் காட்டிலும் அதிக விபரீதம் என்னவெனில், இளைஞர்கள் அடங்காப்பிடாரிகளாகி விட்டார்கள்; வயது வந்தவர்கள் நியாய அநியாய உணர்ச்சியற்றுப் போய்விட்டார்கள். இந்த விஷமத்தைத் தாங்கள் தடுக்கமுடியாதா? உங்களால் தடுக்க முடியவில்லையெனில், மனச்சாட்சி என்ற வார்த்தையை உபயோகிப்பதை விட்டு

விடுங்கள். அது புனிதமான, ஆனல், மிகவும் துஷ்பிரயோகம் செய்யப்பட்டு வரும் வார்த்தையாக இருக்கிறது. எனவே, அதை உபயோகிப்பதை விட்டு விட்டு, அதன் பெயரால் கூறப்பட்டுவரும் அறிவுகெட்ட பிதற்றலுக்கு முற்றுப்புள்ளி வையுங்கள். யாருக்கு மனச்சாட்சி இருக்கிறது என்பதைத் தயவுசெய்து எங்களுக்குச் சொல்லுங்கள். எல்லோருக்கும் மனச்சாட்சி இருக்கிறதா? பாவம், எலிகளையும் சுண்டெலிகளையும் வேட்டையாடிக் கொல்லும் பூனைகளுக்கு மனச்சாட்சி உண்டா?''

இந்தக் குற்றச்சாட்டுக்கு ஆதாரம் இல்லாமலில்லை என்பதை நான் ஒப்புக்கொள்ளவேண்டும். இருந்தாலும் கெட்டதை மாத்திரமே அவர் குறிப்பிட்டுள்ளார். ஒவ்வொரு நற்செயலும் பொல்லாதவர்களால் துஷ்பிரயோகம் செய்யப்படுவது எல்லோரும் அறிந்ததே. அதற்காக நாம் நற்செயலைக் கைவிட்டுவிடுவதில்லை. அது துஷ்பிரயோகம் செய்யப்படாமல் நாம் பாதுகாப்புகளை ஏற்படுத்திக்கொள்ள முடியும். மக்கள் தங்களுக்குத் தாங்களே சிந்தனை செய்வதை நிறுத்தி, அவர்களுக்காக ஒவ்வொரு விஷயமும் ஒழுங்குபடுத்தப்படும்போது, பொதுஜன அபிப்பிராயத்தை எதிர்த்தோ அல்லது பொதுஜன அபிப்பிராயத்திற்கு மற்றொரு பெயரான சட்டத்தை எதிர்த்தோ நடந்துகொள்ளும் உரிமையைத் தனி நபர்கள் சிற்சில சமயங்களில் வற்புறுத்தவேண்டியது அவசியமாகிறது. தனி நபர்கள் அத்தகைய நடவடிக்கைகளில் ஈடுபடும்போது, அவர்கள் தங்களுடைய மனச்சாட்சியின்படி நடப்பதாகக் கூறிக்கொள்ளுகிறார்கள். இளைஞர்கள் தங்களுக்கு மனச்சாட்சி இருப்பதாகப் பாசாங்கு செய்யக் கூடாது என்று அக்கடிதம் எழுதியவர் கூறுவதை நான் முற்றிலும் ஒப்புக்கொள்ளுகிறேன். மிகவும் கஷ்டப்பட்டுப் பயிற்சி செய்தே அந்தத் தகுதியை அல்லது அந்த நிலையை அடைய முடியும். அடங்காப் பிடாரித்தனம் மனச்சாட்சி அல்ல. ஒரு குழந்தைக்கு மனச்சாட்சி கிடையாது. அன்பர் குறிப்பிடும் பூனை, மனச்சாட்சியின் கட்டளைக்கு இணங்க எலியைப் பிடிப்பதில்லை. தனது இயற்கையான குணத்தை அனுசரித்தே அது எலியை வேட்டையாடுகிறது. கண்டிப்பான ஒழுங்குடனும் கட்டுதிட்டத்துடனும் இருப்பதனல் ஏற்படும் முதிர்ந்த பலனே மனச்சாட்சியாகும். யாருக்கும் ஒரு காலத்திலும் கீழ்ப்படியாத பொறுப்பற்ற இளைஞர்களுக்கு மனச்சாட்சி இருப்பதாகவும் கூறமுடியாது. உதாரணமாக, காட்டுமிராண்டிகளுக்கு மனச்சாட்சி இல்லை. மென்மையான முறையில் பக்குவமடைந்துள்ள உள்ளத்தில் மாத்திரமே மனச்சாட்சி இடம் பெற்றிருக்க முடியும். தனி நபர்களுக்குத்தான் மனச்சாட்சி இருக்க முடியுமேயன்றி, மக்களின் மனச்சாட்சி என்று எதுவும் இல்லை. எனவே, ஒரு மனிதன் ஒவ்வொரு விஷயத்தையும் மனச்சாட்சியைப் பொறுத்ததென்று கூற முற்படுவானயின், அவனுக்கும் மனச்சாட்சிக்கும் சம்பந்தமில்லை என்று சொல்லிவிடலாம். 'மனச்சாட்சி நம் எல்லோரையும் கோழைகளாகச் செய்துவிடுகிறது' என்ற பழமொழி உண்மையே யாகும். மனச்சாட்சியின்படி நடக்கும் இயல்புள்ள ஒரு மனிதன், தான் கொண்டதே கோலம் என்பதை ஸ்தாபிக்கத் தயங்குவான். அவன் எப்போதும் பணி

வுடனேயே இருப்பான்; ஒருபோதும் உரக்கக் கத்தி அட்டகாசம் செய்யமாட்டான். எப்போதும் சமரசமாகப் போவதையே விரும்புவான்; பிறர் கூறுவதற்கு எப்போதும் செவிசாய்க்கத் தயாராக இருப்பான்; எப்போதும் தன் தவறுகளை ஒப்புக்கொள்ளத் துடிப்பான்.

கடிதம் எழுதியவர் அனாவசியமாக மனத்தை அலட்டிக் கொள்ளுகிறார். மனச்சாட்சி காரணமாக தாங்கள் அலுவல்களைச் செய்வதாகவோ அல்லது தவிர்ப்பதாகவோ ஐம்பதாயிரம்பேர் கூறினால்தான் என்ன? மனச்சாட்சிக்கும், மமதையினாலோ அல்லது அறியாமையினாலோ மனச்சாட்சியின்படி நடப்பதாகக் கூறிக் கொள்ளுவதற்கும் உள்ள வேற்றுமையை உலகம் அறிந்து கொள்ளுவதில் கஷ்டம் எதுவும் இராது. அத்தகையோர் அதே போன்ற சந்தர்ப்பங்களில் மனச்சாட்சி என்ற போர்வையின் கீழ் எப்படி நடந்துகொள்ளுகிறார்களோ, அதுபோலவேதான் சாதாரணமாகவும் நடந்துகொள்ளுவார்கள். நமது பொதுவாழ்க்கையில் மனச்சாட்சியைப் புகுத்தியிருப்பது வரவேற்கத்தக்கதாகும். அது, பெரும் கஷ்டங்களை எதிர்த்து மனிதனின் கண்ணியத்தையும் உரிமைகளையும் பாதுகாக்க நம்மில் ஒரு சிலருக்குக் கற்பித்திருந்தால்கூடப் போதுமானது. இத்தகைய நடவடிக்கைகள் என்றென்றும் அழியாமல் இருந்துவரும். ஆனால், ஏமாற்றும் நோக்கத்துடன் கைக்கொள்ளும் போலி நடவடிக்கைகள் நீர்க்குமிழிகளைப்போல் விநாடியில் தோன்றி மறைந்துவிடும்.

—'எங் இந்தியா' - 21—8—1924

பகுதி நான்கு

# ஆன்மிக சக்தியும் தவமும்

## 1

## ஆன்மிக முன்னேற்றம் எது?

"ஆன்மிக உணர்ச்சியையும், ஹரிஜனங்களின் ஆன்மிக முன்னேற்றத்தையும் பற்றி நீங்கள் எழுதும்போது என்ன கருத்துடன் எழுதுகிறீர்கள்? ஹரிஜனங்களின் ஆன்மிக முன்னேற்றம் தடைப்படுவதற்காக, உலகத்தின் ஆன்மிக முன்னேற்றம் ஏன் தடைப்படவேண்டும்? ஹரிஜனங்கள் ஆலயத்திற்குள் அனுமதிக்கப்படாவிடில், அவர்களுடைய ஆன்மிக முன்னேற்றம் ஏன் தடைப்படவேண்டும்?"

இவ்விதமாக ஒருவர் வற்புறுத்திக் கேட்டுக் கடிதம் எழுதியிருக்கிறார். அவர் மற்றும் பல கேள்விகள் கேட்டுள்ளார். அவற்றைப்பற்றி இப்போது நாம் கவனிக்கவேண்டிய அவசியம் இல்லை. மனித உடலுக்கு உயிர் கொடுப்பதும் அழிவற்றதுமான ஆன்மா, தார்மிக தத்துவமாகும். அழிவற்ற அந்த சாதாரண தத்துவத்தை உணர்ந்துகொள்ள ஆக்கம் அளிப்பதே ஆன்மிக முன்னேற்றமாகும். என் அயலாரின் முன்னேற்றத்தை எது தடுக்கிறதோ அது, எனது முன்னேற்றத்தையும் தடுத்துத்தான் தீரும். உலகத்தின் மற்றப் பாகங்களுக்கு இந்தியா ஒரு பெரிய அண்டை நாடாக இருக்கிறது. 4 கோடி ஹரிஜனங்களின் முன்னேற்றம் தடைப்பட்டால், 30 கோடி ஹிந்துக்களின் முன்னேற்றம் தடைப்படும். 30 கோடி ஹிந்துக்களின் முன்னேற்றம் தடைப்படும்போது, இந்தியாவின் முன்னேற்றம் தடைப்படாமல் இருக்க முடியாது.

ஆன்மிக தத்துவம், பகுத்தறிவுக்கு அப்பாற்பட்டது. அது, நம்பிக்கையைப் பொறுத்த விஷயமாகும். அதுபோலவே, ஆலயங்களும் இறுதியாக நம்பிக்கையைப் பொறுத்தவையே.

'ஹரிஜன்'–11—3—1933

# 2

# யாருக்கும் அஞ்ச வேண்டாம்

காந்திஜி பர்மாவுக்கு விஜயம் செய்தபோது, பர்மாவில் உள்ள சாத்தியர்கள் (பௌத்த மதத்தலைவர்கள்) அவரைக் கண்டு பேசினார்கள். தங்கள் நாடு (பர்மா) பலன் தரத்தக்க முறையில் நடவடிக்கைகளில் ஈடுபடும்படி செய்வதற்கான ஒரு தலைமை ஸ்தாபனம் பர்மாவில் இல்லை என்று அவர்கள் காந்திஜியிடம் புகார் கூறினார்கள். அவர்களுக்கு அப்போது காந்திஜி விடுத்த செய்தி கீழே கொடுக்கப்பட்டுள்ளது:

அதற்குப் பரிகாரம் உங்கள் கையிலேயே இருக்கிறது. நீங்கள் உங்கள் கடமையைச் சரிவரச் செய்ய வேண்டியதே அந்தப் பரிகாரமாகும். இது, சந்நியாசிகளும் மடங்களும் நிறைந்த ஒரு நாடு. இங்கே பெண்கள், ஆடவர்களுக்குச் சமமான சுதந்திரத்தையும் அந்தஸ்தையும் பெற்றிருக்கிறார்கள். இங்கே மக்கள் கபடமற்ற மனம் படைத்தவர்களாகவும், ஆச்சரியமான நம்பிக்கையுடையவர்களாகவும் இருந்துவருகிறார்கள். பூங்கிகளான நீங்கள் உங்களுடைய சோம்பேறித்தனத்தையும், உணர்ச்சியற்ற தன்மையையும் உதறித்தள்ளி விடுவீர்களாயின், இந்த மக்களிடையே நீங்கள் பல அற்புதமான காரியங்களைச் சாதிக்க முடியும். உங்களுடைய ஆன்மிக தத்துவம், வெறும் சோம்பேறித்தனமான தியானத்தில் ஈடுபட்டு வீணாகிவிடுவதாக இருக்கக்கூடாது. அது தீவிரமாக செயல்படக் கூடிய ஒரு சக்தியாக இருக்கவேண்டும்; தீரத்துடன் பகைவர்களை எதிர்க்கக் கூடியதாக இருக்க வேண்டும்; இந்த நாட்டின் ஒரு கோடியிலிருந்து மற்றொரு கோடிவரையில் உணர்ச்சித் தீ ஜ்வாலை விடும்படி செய்வதாக இருக்க வேண்டும்; அது உங்களிடத்தில் உள்ள சோம்பேறித்தனத்தையும், உங்கள் சுற்றுவட்டத்திலுள்ள அசுத்தங்களையும் எரித்துச் சாம்பலாக்கி விடுவதாக இருக்க வேண்டும். நீங்கள் இன்று ஓர் ஈயைக் கூடத் துன்புறுத்தமாட்டீர்கள். உங்களுடைய சுபாவம் அவ்வளவு சாந்தமானது. ஆனால், அது போதாது. ஒரு பூங்கி ஓர் ஈ துன்பத்திற்கு உள்ளாகும்போது தானே துன்பத்திற்கு உள்ளாவது போல் கருதுவதுடன், தன் பாதையை விட்டு விலகிச் சென்றும் கூட அதைக் காப்பாற்ற முற்படவேண்டும். அவ்விதம் செய்யாதவருக்கு, பூங்கி உடை தரித்துக் கொள்ள உரிமை இல்லை.

நீங்கள் இந்த உலகைத் துறந்து, சந்நியாசி வாழ்க்கையை மேற்கொண்டிருக்கிறீர்கள். உங்களுடைய நிலையில் உள்ள ஒருவர் மன்னர்களையோ, சக்கரவர்த்திகளையோ அல்லது பொது மக்களையோகூட கண்டு அஞ்சமாட்டார். அவருக்கு உணவோ அல்லது உடையோ கூட கிடைத்தால் என்ன, கிடைக்காவிட்டால்தான் என்ன? கடவுளின் ஒளியை எப்போதும் பின்பற்றி நடந்து கொண்டும், சத்தியத்தில் உள்ள பற்றுதலில் உறுதி

யுடன் இருந்துகொண்டும், அவர் எத்தகைய அநீதியையும், அசுத்தத்தையும், தவறையும் எங்கே கண்டாலும் அவற்றைத் தயவு தாட்சண்யமின்றி எதிர்த்து நிற்கவேண்டும். நீங்கள் அத்தகைய உள்பலத்தை வளர்த்துக்கொள்ள வேண்டும் என்று நான் விரும்புகிறேன்.

—'எங் இந்தியா' – 28—3—1929

## 3

# மன அமைதி

**கேள்வி:** மனம் பரிபூரண அமைதி நிலையை அடைவதற்கு முன், முன்னேற்றகரமான வெவ்வேறு கட்டங்களினூடே மனம் செல்ல வேண்டியது அவசியமா? ஒருவர் விழித்துக் கொண்டும் மிகவும் அமைதியுடனும் இருக்கும்போது கூட கனவில் கலக்கமடைவதுபோல் மனம் ஏன் கலக்கமடைகிறது? உண்மையான் வாழ்க்கையில் எண்ணுதை அல்லது பார்க்காத பல விஷயங்கள், பார்த்ததுபோல் தெளிவாகவோ அல்லது தெளிவில்லாமலோ மனத்தில் தோன்றுவதேன்?

**பதில்:** பரிபூரண அமைதியை அடைவதற்கு முன் ஒவ்வொருவரும் முன்னேற்றகரமான கட்டங்களினூடே செல்ல வேண்டியது அவசியமாகும். எனினும், முற்பிறப்பில் இடைவிடாது முயற்சிசெய்து பூரண வெற்றிபெருதவர்கள் இதற்கு விலக்காவர். அவர்கள் இந்தப் பிறப்பில் பாவங்களுக்குப் பிராயச்சித்தம் செய்து கொள்ளவேண்டியதில்லை. அமைதியாகத் தோன்றும் மனம், கனவு நிலையில் இருப்பதுபோல் கலக்கம் அடையுமாயின், அது வெளிக்குத் தோன்றும் அமைதியே யன்றி உள் அமைதி அல்ல. ஒருவருடைய வாழ்க்கையின் அனுபவத்தில் எவ்விதத் தொடர்பும் இல்லாமலிருந்தும் கூட எவை மனத்தைக் கலக்குகின்றனவோ அவை, நமக்கு நினைவில் இல்லாவிட்டாலும் நம்முடன் தொடர்புள்ளவையே என்பதுதான் எனது கருத்தாகும்.

—'ஹரிஜன்' - 17—2—1946

## 4

# எளிய வாழ்க்கையும் உயரிய சிந்தனையும்

"உழைப்பு மிகவும் குறைவாக இருக்க வேண்டும். ஆனல், தேவைகளோ நாளுக்கு நாள் அதிகமாகிக் கொண்டிருக்க வேண்டும். ஒவ்வொரு தனிநபரும் அத்தகைய ஒரு வாழ்க்

கையை நடத்துவது எங்கே சாத்தியமாக இருக்கிறதோ, அது தான் பூரணத்துவம் வாய்ந்த, தலைசிறந்த ஒரு சமூகமாகும்.''

இவ்விதம் அகமதாபாத்திலிருந்து ஒரு நண்பர் எழுதுகிறார். அத்தகைய சித்தாந்தம் கேட்பதற்கு ஆனந்தமாக இருக்கிறது. நியாயம் போல் தோன்றும் வாதமும் அதற்குப் பக்கபலமாக இருக்கிறது. எனவே, அதைப் பலரும் ஒப்புக்கொண்டுவிட லாம். காங்கிரசின் யோசனையை* வைஸ்ராய் நிராகரித்துவிடு வார் என்று அக்கடிதத்தை எழுதியவர் ஜோஸ்யம் கூறி னார். தனி நபரின் சுதந்திரத்தில் அவருக்கு நம்பிக்கை யில்லை. எனவே, காங்கிரசின் யோசனையை வைஸ்ராய் நிரா கரிப்பது நியாயம்தான் என்று அபிப்பிராயப்படுகிறார். அவரது ஜோஸ்யம் உண்மையாகிவிட்டதால், அவர் தாம் கூறிய வாதம் நியாயமானதே என்று எண்ணிவிடலாம். ''நான் அப்போதே கூறினேன் அல்லவா?'' என்று பின்னர் அவர் கூற முற்படலாம். ஆகையால், அக்கடிதத்திற்கு நான் பதில் அளிக்க வேண்டியது அவசியமாகும்.

காங்கிரசின் யோசனையை வைஸ்ராய் நிராகரித்து விட்ட தைக் குறித்து, கடிதம் எழுதியவர் திருப்தி அடைய வேண்டாம். ஏனெனில், வைஸ்ராய் நிராகரித்து விடுவார் என்பதை என் சகாக்கள் யாவரும் முன்பே கூறிவிட்டார்கள். வைஸ்ராய் ஒப்புக் கொள்ளுவார் என்று எதிர்பார்த்து நானும் அவ்விதம் செய்ய வில்லை. அந்த முயற்சி தோல்வியுற்றால், இன்னும் அதிக பலம் ஏற்படும் என்றே அவ்விதம் செய்தேன். காங்கிரசின் யோசனையை வைஸ்ராய் நிராகரித்ததிலிருந்து, தனி நபர் சுதந்திரத்தில் அவருக்கு நம்பிக்கையில்லை என்றாகிவிடாது. பிரிட்டன் இன்னும் அவ்வளவு மோசமாகப் போய்விடவில்லை. தனி நபர் சுதந்திரத்தை மறுக்கும் ஒரு புதிய கட்டத்தில் ஐரோப்பா பிரவேசித்துள்ளது என்பதில் சந்தேகமில்லை. தனி நபரின் சுதந்திரம் போய்விடு மாயின், பின்னர் எல்லாமே போய்விட்டதாகும். ஏனெனில், தனி நபரைக் கணக்கில் எடுத்துக் கொள்ளாவிடில், சமூகத்தில் பாக்கி யிருப்பது என்ன? ஒரு மனிதன் தானாக முன் வந்து, சமூகத் திற்குத் தொண்டு செய்ய தன்னை அர்ப்பணம் செய்யும்படி

---

* 1942 ஆகஸ்டு மாதம் முதல் வாரத்தில் காங்கிரஸ் காரியக் கமிட்டி பம்பாயில் கூடிய போதுதான் பிரசித்தி பெற்ற "இந்தியாவிலிருந்து வெளியேறுக" என்ற தீர்மா னம் நிறைவேறியது. இந்திய மக்களிடம் பிரிட்டிஷார் அரசாங்க அதிகாரத்தை ஒப்பு வித்துவிட வேண்டும் என்பதும், சுதந்திர இந்தியாவின் தாற்காலிக அரசாங்கம் உடனடி யாக ஏற்பட வேண்டும் என்பதுமே அத்தீர்மானத்தின் சாரமாகும். அப்போதுதான், 'செய்வது அல்லது சாவது' என்ற மந்திரத்தை காந்திஜி இந்திய மக்களுக்கு உபதேசித் தார். "நாம் ஒன்று இந்தியாவை விடுதலை செய்யவேண்டும்; இல்லாவிடில் அம்முயற்சி யில் உயிர் துறக்க வேண்டும். நமது அடிமைத்தனம் நீடிப்பதைப் பார்ப்பதற்காக நாம் உயிர் வாழ வேண்டாம்'' என்று காந்திஜி கர்ஜித்தார். ஆனால், இந்தியா வைஸ்ராய் காங்கிரஸ் காரியக் கமிட்டியின் தீர்மானத்தை ஒப்புக்கொள்ள மறுத்து, காந்திஜி உள்பட எல்லாத் தலைவர்களையும் சிறைப்படுத்தும்படி உத்தரவிட்டார். மேற்கண்ட கடிதத்திலும் காந்திஜியின் பதிலிலும் இச்சம்பவமே பிரஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது.

தூண்டவல்லது தனி நபர் சுதந்திரம் ஒன்றுதான். அந்தச் சுதந்திரத்தை அவரிடமிருந்து பறித்துவிட்டால், பின்னர் அவர் ஓர் யந்திரம் போலாகி, சமூகம் சீரழிந்துவிடும். தனி நபருக்குச் சுதந்திரம் அளிக்க மறுப்பதை அடிப்படையாகக் கொண்டு எந்தச் சமூகத்தையும் நிர்மாணிக்க முடியாது. அது மனித இயல்புக்கே முற்றிலும் முரணானது. ஒரு மனிதன் கொம்புகளையோ அல்லது வாலையோ எப்படி வளர்த்துக் கொள்ள முடியாதோ, அதுபோலவே தன் மனத்திற்கு உகந்தவாறு நடந்து கொள்ள முடியாத ஒருவன் மனிதனாக வாழ முடியாது. உண்மையில், தனி நபர் சுதந்திரத்தில் நம்பிக்கை இராதவர்கள் கூட, தங்களுடைய சொந்த சுதந்திரத்தில் நம்பிக்கையுடையவர்களாகவே இருக்கிறார்கள்! நவீன செங்கிஸ்-கான்கள் * தங்களுடைய சொந்த சுதந்திரத்தைக் கைவிட்டு விடுவதில்லை!

தனி நபர் சுதந்திரத்தைப் பற்றி கடிதம் எழுதியவரின் கருத்துக்கள் எவ்விதம் அசாத்தியமானவையோ, அவற்றைப் போலவே அவரது மற்ற சித்தாந்தமும் அமலுக்கு வருவது முடியாத காரியம். ஓர் ஊசியினுடைய காதின் வழியாக ஒட்டகம் செல்லுவதை எதிர்பார்ப்பது எவ்விதம் வீண் கற்பனையாகுமோ அது போலவே, இந்த உலகிலுள்ள ஒவ்வொருவரும், குறைந்த அளவு உழைப்புடன் மிகவும் உயர்ந்த அந்தஸ்தை அடிப்படையாகக் கொண்ட வாழ்க்கையை நடத்துவதென்பது வீண் கற்பனையேயாகும். அதிகத் தேவைகளுடன் கூடிய வாழ்க்கை என்று கடிதம் எழுதியவர் குறிப்பிட்டிருப்பது, ஆடம்பரமான போக வாழ்க்கை என்றே தோன்றுகிறது. சமூகம் முழுவதும் அத்தகைய வாழ்க்கையை நடத்துவதென்பது சாத்தியமில்லாத ஒரு விஷயமாகும். தவிர, ஆடம்பர வாழ்க்கை எல்லையின்றிப் போகும் போது, அதற்கு முற்றுப்புள்ளி வைப்பது எங்கே? ஆனால் உலகத்தில் உள்ள எல்லா அறநெறி நூல்களும் அதற்கு நேர் மாறான வாழ்க்கையையே உபதேசிக்கின்றன. நம் முன் வைக்கப்

---

* மங்கோலியாவில் பிறந்த, தமது வாழ்நாளில் எழுதவும் படிக்கவும் தெரியாத செங்கிஸ் கான் (1155–1227) கிழக்கே பசிபிக் மகா சமுத்திரத்திலிருந்து மேற்கே கருங்கடல் வரையில் ஒரு சாம்ராஜ்யத்தை ஸ்தாபித்தவன். செங்கிஸ் கான் படையெடுத்து வெற்றி பெற்று ஒவ்வொரு பிரதேசமாக ஆக்கிரமித்துக் கொண்டபோது, அவனும் அவனது படைகளும் இழைத்த காட்டுமிராண்டித் தனமான கொடுமைகள் ஏட்டிலும் எழுத்திலும் அடங்கா. இந்தியாவில் ஆப்கன் மன்னர்கள் செய்த அட்டூழியங்களைக் காட்டிலும் செங்கிஸ் கான் புரிந்த அட்டூழியங்கள் எத்தனையோ மடங்கு அதிகமாகும். ஆசியாவிலும் ஐரோப்பாவிலும் அவனது படையெடுப்புக்கள் பெரிய பூகம்பங்களைப் போல் மக்களுக்குச் சொல்லொணாக் கஷ்ட நஷ்டங்களையும் உயிர்ச் சேதங்களையும் உண்டாக்கின. அவனும் அவனது படைகளும், அக்காலத்தில் மிகப் புகழ் பெற்று விளங்கிய பாக்தாத் நகரை அழித்தும் எரித்தும் தரை மட்டமாக்கிய போது, அந்நகரில் இருந்த இருபது லட்சம் மக்களில் பெரும்பாலோரும் மாண்டனர். பிற நாடுகளின் சுதந்திரத்தையும், பிற மக்களின் சுதந்திரத்தையும் சூறையாடிய செங்கிஸ் கான்' தன் சுதந்திரத்தை இழக்க விரும்பவில்லை என்பதையே காந்திஜி மேலே குறிப்பிட்டுள்ளார்!

பட்டுள்ள கொள்கை, எளிய வாழ்க்கையும் உயரிய சிந்தனையுமே. மிகப் பெரும்பாலோரும் அதன் உண்மையை உணர்ந்துள்ளனர்; ஆனல், மனித வர்க்கத்தின் பலவீனம் காரணமாக அந்த உபதேசத்தை நடைமுறையில் நிறைவேற்ற அவர்கள் முடியாதவர்களாக இருக்கிருர்கள். அத்தகைய ஒரு வாழ்க்கையை அனுசரிப்பது முற்றிலும் சாத்தியமேயாகும். இந்தியாவில் உள்ள கோடிக்கணக்கானவர்களுக்கு, குறிப்பிட்ட ஒரு வருமானம் கிடைக்க உத்தரவாதம் அளிக்க வேண்டும் என்பது முற்றிலும் நியாயமே. அந்த லட்சியத்தை அடைவதற்கு பெரும் அளவில் யந்திரம் இருக்க வேண்டியது அவசியம் அல்ல என்பதுடன், அது நாசகரமானதும் ஆகும்.

தனது தினசரித் தேவைகளை மனிதன் பெருக்கிக்கொள்ள முற்படும் அந்த விநாடியிலேயே, எளிய வாழ்க்கையும் உயரிய சிந்தனையும் என்ற லட்சியத்திலிருந்து அவன் கீழே விழுந்து விடுகிருன். அதற்கு, சரித்திரத்தில் ஏராளமான ருஜுக்கள் உள்ளன. இருப்பதைக்கொண்டு திருப்தி அடைவதிலேயே, உண்மையில் மனிதனின் சந்தோஷம் அடங்கியிருக்கிறது. எவ்வளவு அதிகமாக இருந்தாலும், அதைக்கொண்டு திருப்தி அடையாத மனிதன், தனது ஆசைகளுக்கு அடிமையாகிவிடுகிருன். ஒரு மனிதன் தனக்குத்தானே பரம விரோதியாகவோ அல்லது அத்தியந்த நண்பனுகவோ இருக்க முடியும் என ரிஷிகள் யாவரும் உலகம் அறியப் பிரகடனம் செய்திருக்கிருர்கள். ஒவ்வொருவருமே சுதந்திரமாக இருப்பதோ அல்லது அடிமையாக இருப்பதோ அவரவர் கையிலேயே இருக்கிறது. தனி நபர் விஷயத்தில் எது உண்மையோ அதுவே சமூகத்தின் விஷயத்திலும் உண்மையாகும்.

—'ஹரிஜன்' - 1—2—1942

# 5

# சந்நியாசி தனித்து நிற்க வேண்டுமா?

"சிறிது காலமாக நான், உங்களுடைய கட்டுரைகளையும் பிரசங்கங்களையும் வாசித்துவருகிறேன். எனது அற்ப அறிவுக்கு எட்டியவரையில், உங்களுடைய கருத்துக்களில் ஒரு பெரிய முரண்பாடு இருப்பதை நான் காண்கிறேன். ஒருபுறம், ஒரு சந்நியாசியின் கொள்கையையே மனிதன் பின்பற்ற வேண்டும் என்று நீங்கள் கூறுகிறீர்கள். சந்நியாசி உலகபந்தங்களை யெல்லாம் துறக்கவேண்டியதும், கடவுளிடம் பக்தியுடன் இருக்கவேண்டியதும் அவசியமாகும். மற்ருெரு புறம், இந்தியாவுக்கு சுயராஜ்யம் பெற நீங்கள் பெரு முயற்சி செய்து வருகிறீர்கள். ஒரு சந்நியாசி அத்தகைய முயற்சியில் ஈடுபட வேண்டிய அவசியமே இல்லை. இந்த இரண்டு கொள்கைகளும் ஒன்றுக்கொன்று எவ்விதம் பொருந்தும் என்பதை என்னல் அறிந்துகொள்ள முடியவில்லை. ஒரு சந்நியாசி, அவரது தேசத்தின் அரசியல் நிலையைப் பற்றி ஏன்

கவலைப்படவேண்டும்? அதற்கு மாருக, அவர் அவ்வளவு கீழ்த்தரமான விஷயங்களில் மனத்தைச் செலுத்துவாராயின்,—சுயராஜ்யம் கூட சந்நியாசிக்கு அற்பமானதுதான்—அவர் உண்மையான சந்நியாசியாக இருக்கமுடியாது. ஏனெனில், உலகாயதமான லாபங்களில் அவருக்குப் பற்றுதல் எதுவும் இல்லை. அவர் சம்பந்தப்பட்ட வரையில், சுயராஜ்யம் அவசியமில்லை. மற்றவர்களுக்காக அவர் சுயராஜ்யத்தை விரும்பினுல்கூட அது தவறுதான். ஏனெனில், அத்தகைய ஆர்வமுள்ள சந்நியாசியின் மனம் பூரணமாகப் பக்குவம் அடையவில்லை என்றே கூறவேண்டும். ஒரு போலி லட்சியத்தை நோக்கி மக்களைச் செலுத்துவதால் என்ன நன்மை ஏற்பட முடியும்?''

ஒருவர் மேற்கண்ட விதம் எழுதியுள்ளார். ஒரு சந்நியாசியின் கொள்கையை எவரும் பின்பற்றவேண்டும் என்று நான் கூறியதாக எனக்கு ஞாபகமில்லை. அதற்கு மாருக, சுயராஜயம் என்ற கொள்கையையே நான் இந்திய மக்களிடம் இடைவிடாது வற்புறுத்தி வந்திருக்கிறேன். அப்போது, எளிய வாழ்க்கை முறையை மேற்கொள்ளவேண்டும் என்று நான் கூறிவந்திருக்கிறேன் என்பது உண்மையே. தெய்வ பக்தியுடன் இருக்கவேண்டும் என்றும் நான் கூறிவந்திருக்கிறேன். ஆனுல், தெய்வபக்தி, எளிய வாழ்க்கை முதலிய குணங்கள் சந்நியாசிகளின் ஏகபோக சொத்தோ அல்லது உரிமையோ அல்ல. தவிர, ஒரு சந்நியாசி உலகம் எக்கேடுகெட்டால் என்ன என்று ஏகாந்த வாழ்க்கையில் ஈடுபடுவதை நான் ஒப்புக்கொள்ளவில்லை. தனக்காகச் சிறிதும் கவலைப்படாமல், மற்றவர்களுக்காக இடைவிடாது கவலைப்படுபவரே சந்நியாசியாவார். அவர் சுயநலனையெல்லாம் அடியோடு துறந்துள்ளார். எனினும், கடவுள் தூங்காமலும் சுயநலமில்லாமலும் எப்போதும் சுறுசுறுப்பாக இருப்பதுபோலவே, சந்நியாசியும் சுயநலமின்றி எப்போதும் சுறுசுறுப்பாக நடவடிக்கைகளில் ஈடுபடவேண்டும். எனவே, ஒரு சந்நியாசி தமது துறவுக் கொள்கையை உண்மையாக அனுசரிப்பவராயின், சுயராஜ்யம் பெறுவதில் அவர் அக்கறை கொள்ளவேண்டும். தன் சொந்த நலனுக்காக அல்ல (அவர்தான் சுயராஜ்யம் பெற்றவராயிற்றே); ஆனுல், மற்றவர்களுக்காக அவர் அதில் அக்கறை கொள்ளவேண்டும். அவருக்கு உலகத்தில் சொந்த ஆசை எதுவும் இல்லை. அதற்காக அவர், மற்றவர்கள் உலகத்தில் தங்கள் நிலையை அறிந்துகொள்ள உதவி அளிக்கக் கூடாது என்று அர்த்தமில்லை. பண்டைக்காலத்திய சந்நியாசிகள் சமூகத்தின் ராஜீய வாழ்க்கையைப் பற்றி தங்களுடைய மூளையைக் குழப்பிக்கொள்ளாததற்குக் காரணம் என்னவெனில், அப்போது சமூகத்தின் அமைப்பே வேறுவிதமாக இருந்தது. ஆனல், இன்ருே நமது வாழ்க்கையின் ஒவ்வொரு சிறு விஷயமும் ராஜீய விவகாரத்தின் ஆதிக்கத்திற்கு உட்பட்டே இயங்கவேண்டியிருக்கிறது. நாம் விரும்பினுலும், விரும்பாவிட்டாலும், நூற்றுக்கணக்கான சந்தர்ப்பங்களில் நாம் அரசாங்கத்துடன் தொடர்பு வைத்துக்கொள்ள வேண்டியவர்களாக இருக்கிருேம். அரசாங்கம் நமது தார்மிக நிலையையே பாதிப்பதாக இருக்கிறது. எனவே, சமூகத்தின் நலனைக் கோருபவர், சமூகத்தின் உத்தமமான தொண்டர் என்ற முறையில் ஒரு

சந்நியாசி, அரசாங்கத்துடன் மக்களுக்கு உள்ள தொடர்பைப் பற்றி கவலைப்பட்டே தீரவேண்டும். அதாவது, சுயராஜ்யத்தை அடைய மக்களுக்கு அவர் வழிகாட்டவேண்டும். எனவே, அத்தகைய சுயராஜ்யம் எவருக்கும் ஒரு போலி லட்சியமாக இருக்க முடியாது. நம்மில் மிகமிகத் தாழ்ந்தவர்கூட, 'சுயராஜ்யம் எனது பிறப்புரிமை' என்று கூறுவதற்கு லோகமான்ய திலகர் கற்றுக் கொடுத்தார். அதுதான் அவர் தேசத்திற்கு எடுத்துக்கூறிய மகத்தான உண்மையாகும். ஏற்கனவே தனக்கு சுயராஜ்யத்தைத் தேடிக்கொண்டுள்ள ஒரு சந்நியாசியே, சுயராஜ்யம் பெற நமக்கு வழிகாட்டுவதற்கு மிகுந்த தகுதிவாய்ந்தவர். சாதாரண மக்களைப்போலவே ஒரு சந்நியாசியும் வாழ்க்கையின் முக்கிய அலுவல்களைச் செய்கிறார். ஆனால், அவ்விஷயங்களில் அவரது மனநிலைதான் வேறாகும். நாம் பற்றுதலுடன் செய்யும் காரியங்களை, அவர் பற்றற்ற முறையில் செய்கிறார். நாம் ஒவ்வொருவரும் பற்றின்மையைப் பயிற்சி செய்துகொள்ள முடியும். அது நிச்சயமாக எல்லோருக்கும் சிறந்த ஒரு குறிக்கோளாகும்.

—'எங் இந்தியா' – 21—5—1925

# 6

# க்ஷேத்திர சந்நியாசி

ஒரிஸா மாகாணத்தைச் சேர்ந்த ஸ்ரீ கோபபந்து தாஸிடம் காந்திஜி கூறியதாவது:

உங்களை நீங்களே புதையுண்டு கிடக்கும்படி செய்து கொள்ளுங்கள்; ஆனால், உயிருடன் புதையுண்டு கிடக்கவேண்டும். அதாவது க்ஷேத்திர சந்நியாசத்தை மேற்கொள்ளுங்கள். வெள்ளம் வந்து முழுகிப்போவதாக இருந்தால் கூட, ஓர் அங்குலம் கூட நீங்கள் இருக்கும் இடத்தைவிட்டு நகர்ந்து கொடுக்கக் கூடாது. ஜனக மகாராஜாவின் தூய்மையான உதாரணத்தை நீங்கள் அறிவீர்கள். மிதிலாபுரி தீப்பற்றி எரிந்தால் கூட தாம் கவலைப்படப் போவதில்லை என்றார் அவர். உங்களுடைய எல்லைகளை நீங்கள் ஒப்புக்கொண்டு, உங்களுக்கான வேலை முறையை வகுத்துக் கொள்ளுங்கள்; ஒருபோதும் அந்த எல்லைக்கு அப்பால் போகாதீர்கள். அது ஒரு கஷ்டமான காரியம் என்பதை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். மிகவும் உழைப்பாளிகளும் கடவுளுக்குப் பயந்து நடப்பவர்களும்தான் அத்தகைய ஒரு நிலையை மேற்கொள்ள முடியும். அவ்விதமில்லாவிடில் அவர்கள் ஜனகர்களாக இருக்க முடியாது; நீரோக்களாகவே* இருக்க முடியும்.

—'எங் இந்தியா' – 29—12—1927

* கொடுங்கோல் ஆட்சியிலும் தீச் செயல்களிலும் ஈடுபட்டு மக்களால் அறவே வெறுக்கப்பட்ட கிளாடியஸ் சீசர் நீரோ (கி. பி. 37–68) ரோம் சக்கரவர்த்தியாக இருந்த போது, ரோம் நகர் பற்றி எரிவதைக் கண்டு ஆனந்தம் கொண்டு பிடில் வாசித்ததாகக் கூறப்படுகிறது.

# 7

# ஜெர்மன் நண்பரின் சோகக் கடிதம்

கவி ரவீந்திரநாத் தாகூரின் மூத்த சகோதரருக்கு ஜெர்மனியி லிருந்துவந்த ஒரு கடிதத்திலிருந்து கீழ்க்கண்ட பகுதியைக் கொடுத்துள்ளேன்:

"எங்கும் ஊழல் மயமாக இருக்கிறது. கெட்ட மனிதர்கள் யாவரும் செல்வத்தில் புரண்டு கொண்டிருக்கிறார்கள். நல்ல மனிதர்கள் யாவரும் வாழ்க்கையை நடத்த கடுமையான போராட்டத்தில் ஈடுபட வேண்டியிருக் கிறது. எல்லோரையும் காட்டிலும் பரம ஏழைகள் நகர குமாஸ்தாக்களான நாங்கள்தான். எங்களுக்கு மாதச் சம்பளம் 35 டாலர். எனவே, நாங்கள் முடிவற்ற பட்டினி வாழ்க்கையையே நடத்திவருகிறோம்.

"அங்கே வந்து இந்தியாவைப் பார்க்கவும் ஸ்ரீ காந்தியின் காலடியில் உட்காரவும் வேண்டும் என்ற பேரார்வம் எனக்கு அடிக்கடி உண்டாகிறது. நான் தனியாகத்தான் இருக்கிறேன். எனக்கு மனைவியோ, குழந்தைகளோ இல்லை. ஏழையும் நோயாளியுமான என் சகோதரரின் மகள் மாத்திரம் என் வீட்டைக் கவனித்துக் கொள்ளுகிறாள். அவளுக்கு என்னைத்தவிர வேறு யாரும் இல்லை. இந்தப் பெண் இல்லாவிட்டால், நான் ஒரு பாதிரியாகி யிருப்பேன். அவளை, கஷ்டமான இந்த நிலையில் விட்டுவிட்டு நான் போக முடியாது. நான் கல்லூரியில் வாசித்தவன். இலக்கியங்களையும், நவீன அந்நிய மொழிகளையும் நான் ஆராய்ச்சி செய்துள்ளேன். கடவுளுடன் நேரடியாகத் தொடர்பு கொள்ளும் முறையையும், பௌத்த மதத்தையும் நான் ஆராய்ச்சி செய்திருக்கிறேன். இதைக் காட்டிலும் மேலான உத்தியோகத்தையோ அல்லது அதிக சம்பளத்தையோ அடைவது என்றால் முடியாத காரியம். இன்றைய ஜெர்மனி அப்படி இருக்கிறது.

"பதினைந்து ஆண்டுகளுக்கு முன். பயங்கரமான யுத்தத்திற்கு முன் நான் சுதந்திர மனிதனாக, ஓர் ஆராய்ச்சியாளனாக இருந்தேன். எங்களுடைய நாணய மதிப்பு பயங்கரமாக வீழ்ச்சியடைந்தபின், ஜெர்மனியில் கற்றறிஞர்க ளான ஆயிரக்கணக்கானவர்களைப் போல் நானும் ஒரு பிச்சைக்காரனாகி விட்டேன். இப்போது எனக்கு 45 வயதாகிறது. நான் எவ்வளவு நம்பிக்கை யற்றவனாகவும், துணிந்துவிட்டவனாகவும் இருக்கிறேன் என்பதை உங்களால் நினைக்கவும் முடியாது. இங்கே மனிதர்களுக்கு ஆன்மாவே இல்லை; அவர்கள் ஒருவரையொருவர் விழுங்கும் மிருகங்களாக இருக்கிறார்கள். நான் இந்தியா வுக்கு வந்துவிடலாமா? நான் ஓர் இந்திய தத்துவ நிபுணனாக முடியுமா? இந்தியாவினிடத்தில் எனக்கு நம்பிக்கை இருக்கிறது. இந்தியா எங்களைக் காப்பாற்றும் என்று நம்புகிறேன்."

இக்கடிதத்தின் ஆரம்பவார்த்தைகளை ஓர் இந்திய குமாஸ்தா எழுதியிருந்தால் கூட, அது முற்றிலும் பொருத்தமாக இருந்திருக் கும். ஏனெனில், இந்திய குமாஸ்தாவின் நிலை ஜெர்மன் குமாஸ்தா வின் நிலையைக்காட்டிலும் மேலாதனல்ல. இந்தியாவிலும், 'கெட்டவர்கள் செல்வத்தில் புரளுகிறார்கள்; நல்லவர்கள் கடுமை

யான வாழ்க்கைப் போராட்டத்தில் ஈடுபடவேண்டியிருக்கிறது. எனவே, அக்கடிதம் 'தூரத்துப் பச்சை கண்ணுக்குக் குளிர்ச்சி' என்பதற்கு உதாரணமாக இருக்கிறது. ஜெர்மனியைவிட, அல்லது மற்றெந்த நாட்டையும்விட இந்தியா மேலானதென்று கருதவேண்டாம் என இந்த ஜெர்மன் எழுத்தாளரைப்போன்ற நண்பர்களை எச்சரிக்கவேண்டியது அவசியமாகும். செல்வம், நற்குணத்தின் உரைகல் அல்ல என்பதை அவர் உணரவேண்டும். பெரும்பாலும் வறுமைதான் நற்குணத்தின் உரைகல் ஆகும். ஒரு நல்ல மனிதன் தானாகவே வலுவில் வறுமையை மேற்கொள்ளுகிறான். இந்த ஜெர்மானியர் ஒரு காலத்தில் சகல வசதிகளுடனும் வாழ்ந்துவந்தார் எனில், அப்போது ஜெர்மனி மற்ற நாடுகளைச் சுரண்டிவந்தது. இதற்குப் பரிகாரம், ஒவ்வொரு நாட்டிலும் உள்ள ஒவ்வொரு தனி நபரின் கையிலேயே இருக்கிறது. ஒவ்வொருவரும் தம்முள்ளேயே அமைதியான வாழ்வைத் தேடிகொள்ளவேண்டியவர்களாக இருக்கிறார்கள். அமைதி உண்மையானதாக இருக்கவேண்டுமாயின், அது வெளியில் உள்ள நிலைமையினால் பாதிக்கப்படுவதாக இருக்கக் கூடாது. அவரது உறவினரான அந்த ஏழைப் பெண் இராவிடில், அவர் ஒரு பாதிரியாரின் வாழ்க்கையை மேற்கொண்டிருப்பார் என்று அவர் கூறுகிறார். இது ஒரு தவறான போக்காக எனக்குத் தோன்றுகிறது. அவரது தற்போதைய நிலை, அவரது கற்பனையில் உள்ள ஒரு பாதிரியாரின் நிலையைக் காட்டிலும் சிறந்ததென்றே கூறவேண்டும். ஏனெனில், இப்போது அவர் ஒரே ஓர் ஏழையைத்தான் பராமரிக்கவேண்டியிருக்கிறது. பாதிரியாராக இருந்தால், ஒருவரைக்கூட பராமரிக்கவேண்டிய பொறுப்பு இராது என்று அவர் எண்ணுவதாகத் தோன்றுகிறது. ஆனால் உண்மை என்னவெனில், உண்மையான ஒரு பாதிரி என்ற முறையில் அவர் நூற்றுக்கணக்கான பெண்களையும், ஆடவர்களையும் பராமரிக்கவேண்டியிருக்கும். ஒரு பாதிரியார் என்ற முறையில், அவரது பொறுப்பின் எல்லை, இந்த உலகத்தைப்போல் அவ்வளவு பரந்ததாக இருக்கும். இப்போது அவர் தமக்காகவும், தமது உறவினரான அந்தப் பெண்ணுக்காகவும் மாத்திரம் அடிமையாக உழைக்கவேண்டியிருக்கிறது. ஆனால், ஒரு பாதிரியார் என்ற முறையிலே, அவர் துன்பத்திற்கு உள்ளான மானிட வர்க்கம் முழுவதற்குமே அடிமையாக உழைக்கவேண்டியிருக்கும். எனவே, இந்த நண்பருக்கும் இவரைப்போன்ற மற்றவர்களுக்கும் நான் யோசனை கூறத் துணிவது என்னவெனில், பாதிரி உடை உடுத்திக் கொள்ளாமல் இவர்கள் துன்பத்திற்குள்ளான எல்லோருடனும் ஒருமித்து உழைக்கவேண்டும் என்பதுதான். அப்போது அவர்களுக்கு பாதிரிமார் தொழிலுக்குரிய எல்லா அனுகூலங்களும் கிடைப்பதுடன், அத் தொழிலில் உள்ள பயங்கரமான கவர்ச்சிகளுக்கு அவர்கள் ஆளாகாமலும் இருக்கலாம்.

ஜெர்மன் நண்பர், இந்திய தத்துவ நிபுணராவதற்கு விரும்புகிறார். தத்துவ ஞானத்திற்கு எல்லை வேற்றுமைகள் எதுவும் இல்லை என்று அவருக்கு நான் உறுதி கூறுகிறேன். ஓர் இந்திய

தத்துவ நிபுணர், ஓர் ஐரோப்பிய தத்துவ நிபுணரைப் போல் நல்லவராகவும் இருக்கலாம், கெட்டவராகவும் இருக்கலாம்.

இந்த ஜெர்மானியர் ஒரு விஷயத்தை ஓரளவு சரியாக ஊகித்திருக்கிறார் என்பதே எனது அபிப்பிராயமாகும். இங்கேயும் இந்தியாவின் பங்கிற்கு மூர்க்கத்தனமுள்ள, ஆன்மா இல்லாத இரண்டு கால் மிருகங்கள் இருக்கின்றன. என்றாலும், அத்தகைய மிருகங்களை ஒதுக்கித்தள்ளவேண்டும் என்பதே சராசரி இந்தியரின் மனப்போக்காக இருந்து வருகிறது. 1921-ஆம் ஆண்டில் தேர்ந்தெடுத்துக் கொண்ட வழியில் இந்தியா நிலைத்து நிற்குமாயின், ஐரோப்பா இந்தியா மீது மிகுந்த நம்பிக்கை வைப்பதற்குக் காரணம் இருக்கிறது என்பதே எனது உறுதியான கருத்தாகும். அப்போது இந்தியா மிகுந்த தீர்க்காலோசனையுடன் சத்தியத்தையும் சமாதானத்தையும் அடிப்படையாகக் கொண்ட வழியைத் தேர்ந்தெடுத்துக் கொண்டது. ராட்டினத்தையும், எவ்விதத் தீமையையும் எதிர்த்து ஒத்துழையாமையையும் இந்தியா அங்கீகரித்ததன் மூலம் அக்கொள்கைக்கு உருவமும் அளித்தது. இந்தியாவைப் பற்றி நான் தெரிந்து கொண்டவரையில், அது அக்கொள்கையை இன்னும் நிராகரித்துவிட வில்லை, இனியும் நிராகரிக்காது.

—'எங் இந்தியா' - 19—11—1925

## 8

# உடலை வருத்துதல்

ஒரு கிராமத் தொழிலாளி, தினந்தோறும் மூன்று அணா செலவுக்கு மேற்படாத ஒரு கிராமவாசியின் உணவையே உட்கொள்ள வேண்டும் என்று காந்திஜி வற்புறுத்துகிறார். எனினும், அத்தொழிலாளி அதற்காக பட்டினி கிடப்பதற்குச் சமமான மிகக் குறைந்த அளவு உணவை உட்கொள்ளவேண்டும் என்றோ, அல்லது உடலை வருத்திக் கொள்ளவேண்டும் என்றோ காந்திஜி கூறவில்லை. ஒரு தொழிலாளி, தினந்தோறும் ஒருவேளை மாத்திரமே சாப்பிடுவதென்று தனக்குத் தானே கட்டுப்பாடு விதித்துக் கொண்டிருந்தார். அதாவது 15 தோலா எடையுள்ள பச்சை அரிசிச் சோறு, பருப்புடன் கறிகாய், மோர் முதலியவற்றிற்கு அதிகமாக அவர் எதுவும் சாப்பிடுவதில்லை. அந்த உணவின் விலை ஓர் அணாதான். இதைக் குறித்து காந்திஜி எழுதியதாவது:

நீங்கள் சாப்பிடும் உணவு மிகவும் சொற்பமானது. அது பட்டினி உணவேயாகும். கடவுள் உங்களுக்கு அளித்துள்ள கருவியை, அதாவது திறமையை நீங்கள் சரிவர உபயோகிக்கவில்லை என்பதே எனது அபிப்பிராயமாகும். தன் திறமையை

உபயோகித்துக் கொள்ளத் தெரியாதவனிடமிருந்தும், தெரிந்தும் அதை உபயோகிக்காதவனிடமிருந்தும் அவனது திறமை அபகரிக்கப்படும் என்ற கதையை* நீங்கள் அறிந்திருக்கலாம்.

உடல் ஒருவருக்கு அடங்காமல் மூர்க்கத்தனம் செய்யும் போதுதான் அதை வருத்திக் கொள்ளவேண்டியது அவசியம். ஆனால், உடல் கட்டுப்பாட்டுக்கு அடங்கி, தொண்டு செய்வதற்கு ஒரு கருவியாக அதை உபயோகித்துக் கொள்ளுவது சாத்தியமாகும்போது, அதை வருத்துவது ஒரு பாவமாகும். இதை மற்றொருவிதமாகக் கூறுவதாயின், உடலை வருத்திக் கொள்ளுவதில் புண்ணியம் எதுவும் இல்லை.

— 'ஹரிஜன்' – 2—11—1935

# 9

# யோகமும் அகிம்சையும்

கேள்வி: *யோகத்திலும் அகிம்சையிலும் நன்கு பயிற்சிபெற்ற நமது ரிஷிகள் ஆக்கவும் அழிக்கவும் சக்தி பெற்றிருந்தார்கள் என்பதை நீங்கள் நம்பவில்லையா? அப்படியாயின், அவர்களால் வகுக்கப்பட்டும், பின்பற்றப்பட்டும் உள்ள அந்த இரு முறைகளையும் தாங்கள் மேற்கொண்டு இன்னும் அதிக பலன்கள் ஏற்படும்படி செய்யமுடியாதா? இப்போது நம் நாட்டில் உள்ள பலரையும் காட்டிலும் நீங்கள் தான் அவற்றைப் பின்பற்ற அதிக ஆர்வத்துடன் இருந்து வருகிறீர்கள்.*

பதில்: *யோகம், அகிம்சை இவற்றைப் பயிற்சி செய்வதால் ஏற்படும் பலன்கள் சம்பந்தப்பட்டவரையில், அவற்றைப் பயின்ற உபதேசகர்களால் கூறப்படும் சாதனைகளை நான் ஒப்புக்கொள்ள முடியாது. அவர்களில் மிகவும் மேலானவர்கள் கூட, தவிர்க்க முடியாத, மாற்ற முடியாத இயற்கை*

---

* பைபிளில் உள்ள ஒரு கதையையே இங்கே காந்திஜி குறிப்பிட்டுள்ளார். ஆண்டவன் தமது வேலைக்காரர்களில் ஒருவனுக்கு 5 தாலந்துகளும், (ஒரு தாலந்து என்பது குறிப்பிட்ட எடை தங்கம் அல்லது வெள்ளி) மற்றொருவனுக்கு 2 தாலந்துகளும், வேறொருவனுக்கு 1 தாலந்தும் கொடுத்தார். வெகு காலம் கழித்து அவர் வந்து பார்த்தபோது, 5 தாலந்துகளைப் பெற்றவன் தனது திறமையினாலும் உழைப்பினாலும் அவற்றை பத்து தாலந்துகளாகப் பெருக்கியிருந்தான். 2 தாலந்துகளைப் பெற்றவன் 4 ஆகப் பெருக்கியிருந்தான். ஒரு தாலந்தைப் பெற்றவன் சோம்பேறித்தனத்தினாலும் கெட்ட எண்ணத்தினாலும் அதைப் பெருக்காமல் பூமியில் புதைத்து வைத்திருந்தான். அதை அவர் கோபத்துடன் வாங்கி, பத்து தாலந்துகளாகப் பெருக்கி வைத்தவனிடம் கொடுத்தார். இருக்கிறவன் இன்னும் அதிகமாகப் பெற்று சுபிட்சம் அடைவான்; இராதவனிடமிருந்து, அற்ப சொற்பமாக இருப்பதும் அபகரித்துக் கொள்ளப்படும் என்றார். சோம்பேறியான வேலைக்காரன் அவரது சாபத்துக்கும் உள்ளானான்.

விதிகளை மீறிச் செல்லுவது முடியாத காரியம். நம்மைப் போலவே அவர்களும் அவற்றிற்குக் கட்டுப்பட்டுத்தான் தீர வேண்டும். தாம் இயற்றிய சட்டங்களை மாற்றும் உரிமை கடவுள் ஒருவருக்குத்தான் உண்டு. ஆனால், அவருக்கு அவ்விதம் மாற்றவேண்டிய அவசியமில்லை. அவர் எல்லாம் வல்லவர், எல்லாம் அறிந்தவர். அவர் யாதொரு முயற்சியும் செய்யாமலேயே ஏக காலத்தில் சென்ற காலத்தையும், நிகழ் காலத்தையும், எதிர்காலத்தையும் அறிகிறார். எனவே, அவர் புனராலோசனை செய்வதற்கு எதுவுமில்லை, மாற்றுவதற்கு எதுவுமில்லை, திருத்துவதற்கு எதுவுமில்லை, சீர் படுத்துவதற்கு எதுவுமில்லை. அகிம்சாவாதிகளும், யோகிகளும் சில சக்திகளை வளர்த்துக் கொண்டிருக்கிறார்கள் என்பதில் ஐயமில்லை. எனினும், அவர்கள் யாவரும் உலக நியதியின் ஆதிக்கத்துக்கு உட்பட்டவர்களே. யோகப் பயிற்சி எதிலும் நான் ஈடுபடாததற்குக் காரணம் என்னவெனில், முதலாவதாக அது இல்லாமலேயே என்னுள் அமைதி நிலவிவருகிறது. (தற்போதைய எனது நிலையில் நான் திருப்தியடைவது தவறாக இருக்கலாம்.) இரண்டாவதாக, நான் பூரண நம்பிக்கை வைக்கக் கூடிய ஒழுங்கான யோகப் பயிற்சிகளை கற்றுக்கொடுக்கும் திறமை வாய்ந்த ஒருவரை நான் கண்டுபிடிக்க இயலவில்லை.

—'எங் இந்தியா' - 25—11—1926

# 10

# கண்மூடித்தனமான தவம்

சத்தியத்தை நாடுவதில் மிக்க ஆர்வம் உடையவரான ஓர் அன்பார்ந்த நண்பர் காந்திஜிக்கு எழுதியுள்ள கடிதத்தில், தாம் இப்போது 12 ஆண்டுகளுக்கு மௌன விரதத்தை மேற்கொண்டிருப்பதாகக் குறிப்பிட்டுள்ளார். இது போதாதென்று, தமது உதடுகளை மெல்லிய கம்பியால் தைத்துக் கொள்ள உத்தேசித்திருப்பதாயும், அப்போதைக்கப்போது இரண்டு வாரம் உண்ணாவிரதம் இருந்துவருவதாயும், இப்போது தண்ணீரில் ஊறவைத்த பச்சை மாவை மாத்திரமே உணவாகக் கொண்டுவருவதாகவும் எழுதியுள்ளார்! இந்த நண்பர் இதுவரை பல தடவை உண்ணாவிரதம் இருந்துள்ளார். சத்தியத்தை நாடி யாத்திரை செய்வதும், சாதுக்களை சந்திப்பதும், உடலை வருத்திக் கொள்ளுவதுமாக இவர் காலம் கழித்துவந்துள்ளார். அவரது கடிதத்திற்குக் காந்திஜி அனுப்பியுள்ள பதில் பின்வருமாறு :

பல மாதங்களுக்குப் பிறகு தங்களுடைய கடிதத்தைக் கண்டு மிக்க மகிழ்ச்சியடைந்தேன். அதே சமயத்தில் அது எனக்கு

மனவேதனையையும் கொடுத்தது. தன்னைத்தானே அறிந்து கொள்ள தாங்கள் கைக்கொண்டுவரும் முறைகள் சரியானவை அல்ல. வாயைத் தைத்துக் கொள்ளுவதன் மூலம் அனுசரிக்கும் மௌனம், மௌனமே அல்ல. ஒருவர் தமது நாக்கை வெட்டி எறிந்துவிடுவதன் மூலம் மௌனமாக இருக்கலாம். ஆனால், அதுவும் உண்மையான மௌனம் அல்ல. பேசும் ஆற்றல் இருந்தும்கூட அனுவசியமாகப் பேசாமல் இருப்பவரே உண்மை யான மௌனியாவார். நீங்கள் மேற்கொண்டுள்ள தவம் கீதை யில் விவரிக்கப்பட்டுள்ள 'தமஸி தவம்' ஆகும், அதாவது கண் மூடித்தனமான தவம் ஆகும். பச்சை மாவைத் தின்பது, உணவு சம்பந்தமான எல்லா விதிகளுக்கும் விரோதமாகும்; மதமும் அவ்விதம் கட்டளை யிடவில்லை என்பது நிச்சயம். சமைக்காத உணவை நீங்கள் உட்கொள்ளவேண்டுமாயின், நீங்கள் பழங்களை யும் வாதாம் கொட்டை போன்ற கொட்டைகளையும் சாப்பிட வேண்டும். அவற்றுடன் நீங்கள் பாலையும் சேர்த்துக் கொள்ளலாம். இவையெல்லாம் சிறந்த உணவுப் பொருட்க ளாகும். தன்னைத்தானே சித்திரவதைக்கு உட்படுத்திக் கொள்ளு வதை நீங்கள் விட்டுவிடவேண்டும் என்பதே எனது விருப்ப மாகும். கபீர்தாஸின் கீழ்க்கண்ட பாடலைச் சிந்தித்துப் பாருங்கள்.

"நல்லோய்! இயல்பான தொடர்பே சிறந்தது. கடவுள் அருளால் அத்தொடர்பு ஏற்பட்டதிலிருந்து, அது வளர்ந்துவருகிறது. நான் எங்கே திரிந்தாலும் அது கடவுளைச் சுற்றி வருவதாகவே இருக்கிறது. நான் என்ன செய்தாலும் அது தொண்டாகவே இருக்கிறது. நான் எப்போது கீழே படுத் தாலும் அது கடவுள் முன்னிலையில் விழுந்து வணங்குவதாகவே இருக்கிறது. என் வாயிலிருந்து வரும் பேச்செல்லாம் கடவுளின் நாமமாகவே இருக்கிறது. நான் கேட்பதெல்லாம் கடவுளைப் பற்றிய நினைவாகவே இருக்கிறது. உண்ப தும், தண்ணீர் குடிப்பதும் எனக்குக் கடவுள் வணக்கமாகவே இருக்கிறது. காட்டில் வசிப்பதோ அல்லது வீட்டில் வசிப்பதோ, எனக்கு எல்லாம் ஒன்று தான். நான் கண்களை மூடிக் கொள்ளுவதில்லை; காதுகளை அடைத்துக் கொள்ளுவதில்லை; நான் என்னை எவ்விதமான சித்திரவதைக்கும் உட்படுத்திக் கொள்ளுவதில்லை. கண்களைத் திறந்தால் எனக்கு எந்தவிடத்திலும் கடவுளின் அருட் காட்சியாகவே தோன்றுகிறது. அந்தக் காட்சிகள் என்னை வரவேற்று, எனக்கு ஆனந்தத்தைக் கொடுக்கின்றன. என் மனம் எப்போதும் இறைவ னையே நாடுகிறது. கெட்ட எண்ணமெல்லாம் என்னை விட்டு அகன்றுவிட்டன. எப்போதும் நான் அவரையே சிந்தித்துக்கொண்டிருப்பதால், என் மனத்தில் வேறு எதற்குமே இடமில்லை. மௌனமாக அனுபவித்து மகிழும் நிலை இது தான். எனினும், நான் அதைப்பற்றிப் பாடத் துணிந்திருக்கிறேன். அது துக்கம், சுகம் எல்லாவற்றையும் கடந்த நிலையாகும். அந்த நிலையில் நான் லயித்துள்ளேன்."

—'ஹரிஜன்' - 24—6—1933

# 11

## யக்ஞம்—பழையதும் புதியதும்

யக்ஞம் என்பது அழகும் சக்தியும் நிறைந்த ஒரு சொல்லாகும். அறிவும் அனுபவமும் வளர்ச்சி பெறுவதற்கு உற்றவாறு, காலம் மாறுவதற்கு உற்றவாறு, அதன் பொருளும் வளருவதற்கும் மாறுவதற்கும் இடம் இருக்கிறது. யக்ஞம் என்பதற்கு நேர் பொருள் வழிபாடு என்பதே, அதாவது தியாகம் என்பதுதான். எவ்விதத் தியாகமும், எவ்விதத் தொண்டும் யக்ஞம்தான். யக்ஞத்தினால், அதாவது தியாகத்தினால்தான் மனிதவர்க்கமே வாழ்கின்றது. எனினும், சாஸ்திரங்களில் விவரிக்கப்படும் எல்லா யக்ஞங்களையும் மீண்டும் உயிர்ப்பிக்க முடியாது, உயிர்ப்பிக்கவும் வேண்டாம். அந்தப் பெயரில் நடக்கும் சில சடங்குகளை நியாயமானவை என்று நிரூபிக்க முடியாது. இன்று அந்தச் சடங்குகளில் சிலவற்றிற்குக் கூறப்படும் பொருள், வேதகாலத்தில் எப்போதாவது கூறப்பட்டதா என்பது எனக்குச் சந்தேகமாகவே இருக்கிறது. அவ்விஷயத்தில் சந்தேகத்திற்கு இடமில்லை என்றாலும்கூட, அவற்றில் சில பகுத்தறிவு அல்லது தருமம் என்ற சோதனைக்கு நிற்க முடியாது. பண்டைய காலத்தில் நமது மூதாதையர் நரபலிகள் கொடுத்ததாக, வேத நூல்களை நன்கு ஆராய்ந்த நிபுணர்கள் கூறுகின்றனர். இன்று அவை சாத்தியமா? இன்று அசுவ பலி கொடுப்பதென்பது நகைக்கத் தக்கதாகும். யக்ஞங்கள் ஆகாயத்தைச் சுத்தம் செய்கின்றனவா என்பதையும் ஆராய வேண்டிய அவசியம் இல்லை. ஏனெனில், அத்தகைய ஓர் அற்ப சாதனையைக் கொண்டு யக்ஞம் என்ற பெரிய சடங்கின் பெருமையை அளவிட முடியாது. ஆகாயத்தைச் சுத்தம் செய்வதற்கான வழிகளைக் கண்டுபிடிப்பதற்கு, நவீன விஞ்ஞான சாத்திரம் நமக்கு அதிக உதவியாக இருக்கும். சமயத்தின் கொள்கைகள் ஒரு விஷயம்; ஆனால், அவற்றை அடிப்படையாகக் கொண்ட வழக்கங்கள் வேறு விஷயமாகும். இடம், காலம் எவையாலும் பாதிக்கப்படாமல் கொள்கைகள் என்றென்றும் நிலைத்திருப்பவை. ஆனால், இடம், காலம் இவற்றிற்கு உகந்தவாறு வழக்கங்கள் மாறுகின்றன.

—'எங் இந்தியா' – 13—5—1926

# 12

## யக்ஞம்—அதன் ஆழ்ந்த கருத்து

பிரார்த்தனை செய்வது எளிதாகும். எனினும், தூய்மையான, தன் தவறுகளுக்காக வருந்தும் உள்ளத்துடன் பிரார்த்தனை செய்தாலொழிய, அது இறைவனின் செவிகளில் விழாது.

ஹோமத் தீயில் நெய்யையும் மற்றச் சாதனங்களையும் கொட்டு வதைக் காட்டிலும் யக்ஞத்திற்கு ஆழ்ந்த அர்த்தம் உண்டென்று உங்களுக்கு நான் கூற விரும்புகிறேன். மானிட வர்க்கத்திற்காக எல்லாவற்றையும் தியாகம் செய்வதே யக்ஞமாகும். என் சம் பந்தப்பட்ட வரையில், இந்த ஆஹுதிகளுக்கு* குறிப்பான அர்த்தம் உண்டு. தூய்மைப்படுத்தும் அக்னியில் நமது பலவீனங் களையும், நமது வெறிக் குணங்களையும், நமது குறுகிய புத்தி யையும் எரித்து, நாம் நம்மைச் சுத்தம் செய்து கொள்ளவேண்டி யவர்களாக இருக்கிறோம். அப்போது தான், அப்போது மாத்திரமே நமது பிரார்த்தனைகளுக்கு இறைவன் செவி சாய்ப்பார்.

பிரார்த்தனையின் மற்றொரு நிலையை இப்போது நான் உங்களுக்குக் கூறுகிறேன். உங்களுடைய ஆசைகள் நிறைவேறு வதற்காகவே இங்கே நீங்கள் கூடியிருக்கிறீர்கள். அதே நோக் கத்துடனேயே யக்ஞம் செய்யப்படுகிறது. ஆசைகள் கெட்டவை யாகவும் இருக்கலாம், நல்லவையாகவும் இருக்கலாம். நம்மில் ஒவ்வொருவரும் அவரது ஆசைகளில் எது நல்லது, தூய்மை யானது அல்லது எது கெட்டது, தூய்மையற்றது என்பதை அறிவதில்லை. நமது சிந்தனைகளின், செயல்களின் மீது ஆதிக்கம் செலுத்தும் கடவுளே அதன் தராதரத்தை அறிகிறார். நல்ல வையும் தூய்மையானவையுமான எனது ஆசைகளை மாத்திரமே நிறைவேற்றவேண்டும் என்றும், தூய்மையற்ற அல்லது வெட்கப் படத்தக்க ஆசைகளைக் கோரும் பிரார்த்தனைகளை நிராகரித்துவிட வேண்டும் என்றுமே நான் இறைவனை எப்போதும் பிரார்த்திக் கிறேன்.

கடைசியாக ஒரு விஷயம். அமைதிக்காக பிரார்த்தனை செய்வது தூய்மையான ஒரு பிரார்த்தனை என்றே எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்பட்டுளது. கடுமையான பகைமையும், கொடிய ரத்தக்களரியும் தாண்டவமாடிவரும் இந்நாட்களில், அமைதிக் காக நாம் பிரார்த்தனைகள் செய்வது நன்மையே யாகும்.

வேதத்தில் உள்ள ஒரு பெரிய பிரார்த்தனையை இச் சந்தர்ப் பத்தில் எடுத்துக் கூற விரும்புகிறேன். இதில் நீங்கள் எல்லோரும் கலந்து கொள்ளுவீர்கள் என்பது எனது நிச்சயமான அபிப்பிராயம்.

**யதிஹ கோரம் யதிஹ க்ரூரம் யதிஹ பாபம்|**
**தச்சாந்தம் தச்சிவம் ஸர்வமேவ சமஸ்து ந:||**

(இதன் பொருள் : அரக்கத்தனமான, கொடிய, பாவமான எல்லாம் சாந்தமடைந்து அடங்கட்டும்; எல்லாம் நமக்கு நன்மை யாகவும், அமைதியாகவும், மங்களகரமாகவும் இருக்கட்டும்.)

—'ஹரிஜன்' - 3—5—1942

*ஹோமத்தீயில் நெய் முதலிய சாதனங்களை அர்ப்பணம் செய்வது.

## 13

# தவறை உணரும் தவம்

**கேள்வி:** ஒரு தவறை உணர்ந்து, அதை இனி எக்காலத்திலும் செய்வதில்லை என்று உறுதியாகத் தீர்மானம் செய்து கொள்ளுவதே ஒரு தவம் அல்லவா? மேற்கொண்டு ஏதாவது தவம் அவசியமா?

**பதில்:** ஒரு தவறை உணர்ந்து கொள்ளுவதே, இனி எக்காலத்திலும் அதை மீண்டும் செய்வதில்லை என்ற உறுதியான தீர்மானத்திற்குச் சமமானதாகும். ஒரு பாம்பு, தன் தோலை அப்பால் உதறித் தள்ளிவிடுவதைப் போலவே, ஒருவர் தமது தீய பழக்கங்களை உதறித் தள்ளிவிட்டுத் தம்மைத் தூய்மையாக்கிக் கொள்ளவேண்டும். அத்தகைய சுயத் தூய்மையை அடைவதே பூரணமான தவமாகும். எனினும், தவறுகள் செய்யும் வழக்கத்தில் ஈடுபட்டவர் அவற்றை எளிதில் உதறித் தள்ளிவிட முடியாது. அத்தகையோர் விவேகத்துடன் தவத்தை மேற்கொள்ளுவார்களாயின், அது அவர்களுக்குப் பேருதவியாக இருக்கும்.

—'ஹரிஜன்' – 15—9—1940

## 14

# தவத்தின் பலன்

கோழை உள்ளம் படைத்தவர்களுக்கு, எக்காலத்திலும் தன்னடக்கம் ஏற்படுவது முடியாத காரியம். பிரார்த்தனை செய்தும், உண்ணாவிரதத்தைக் கடைப்பிடித்தும், மிகுந்த கண்காணிப்புடனும், இடைவிடாத முயற்சியுடனும் இருப்போருக்குக் கிடைக்கும் அற்புதமான பலனே தன்னடக்கமாகும். பிரார்த்தனை, கடவுளின் நாமத்தை வாயளவில் திரும்பத் திரும்பக் கூறுவதல்ல. உண்ணாவிரதம், உடலைப் பட்டினி போடுவதும் அல்ல. பிரார்த்தனை கடவுளிடம் நம்பிக்கையுள்ள உள்ளத்திலிருந்து எழவேண்டும். தீய, பாதகத்தை உண்டுபண்ணும் சிந்தனை, நடவடிக்கை அல்லது உணவு முதலியவற்றைத் தவிர்த்து உண்ணாவிரதத்தை மேற்கொள்ளவேண்டும். ஏராளமான சுவையான உணவுப் பண்டங்களை மனத்தில் நினைத்தவண்ணம் உடலைப் பட்டினி போடுவது, எள்ளளவும் பலனற்ற காரியமாகும்.

—'ஹரிஜன்' – 10—4—1937

# 15

# உண்ணுவிரதத்தின் தத்துவம்

ஒரு நண்பர் பின்வருமாறு எழுதுகிருர் :

"உங்களுடைய உயிரை அபாயத்திற்கு உள்ளாக்குவது, உங்களுக்கு இறுதியான, இயற்கையான பரிகாரமாகிவிட்டது போல் தோன்றுகிறது. அது எப்படியாயினும், நிச்சயமாக இறக்கப்போகும் ஒரு நோயாளியின் உயிர் போய் விடாமல் இருப்பதற்காக அவர் உடலில் ஊசி மருந்துகளைச் செலுத்துவது போலவோ அல்லது அவருக்குப் பிராணவாயு சிகிச்சை செய்வது போலவோ இருக்கிறது உங்களுடைய பரிகார முறையும்! இவ்விதம் நான் நினைக்காம லிருக்க முடியவில்லை."

மேற்கண்ட சிந்தனை, என்மீது அன்பு காரணமாக வேதனை யுறும் உள்ளத்திலிருந்து எழுந்துளது. இருந்தாலும், அதை எழுதியிருப்பவர் தமது ஆட்சேபணையைக் குறித்து அதிகமாகச் சிந்தித்துப் பார்க்கவில்லை என்றே நான் கூறவேண்டும். எனது நன்மையை நாடும் மற்றும் பலரும் அவசரப்பட்டு அதேபோல அபிப்பிராயம் கொண்டிருக்கலாம். அதனுலேயே அவ்விஷயத்தை இவ்விதம் பகிரங்கமாக விவாதிக்க முற்பட்டுள்ளேன். நண்பரின் உவமை பொருந்தாதது. ஊசி மருந்துகள் போடுவதோ அல்லது பிராணவாயு சிகிச்சை செய்வதோ வெளிப்புறப் பரிகாரங்களா கும். உடலில் உயிர் நீடிப்பதற்காக மாத்திரமே அவை உபயோகிக்கப்படுகின்றன. எனவே, அவற்றினுல் ஏற்படும் பலன் நிலையற்றது என்று வருணிக்கப்படுவது நியாயமே. அந்தப் பரிகாரங்களைச் செய்யாவிட்டால், நஷ்டம் எதுவும் ஏற்பட்டு விடாது. இந்தப் பூத உடல் அழிவற்றதல்ல. வைத்திய நிபுணர்கள் செய்யக்கூடிய தெல்லாம், அதன் வாழ்வைச் சிறிது காலத்திற்கு நீடித்துவைப்பதே. அவ்விதம் தாற்காலிகமாக நீடிப்பதால், நிலையான பலன் எதுவும் ஏற்பட்டுவிடுவதில்லை.

அதற்கு மாருக, மற்றெருவரின் உடலைப் பாதிப்பதற்காக உண்ணுவிரதம் எக்காலத்திலும் கைக்கொள்ளப்படுவதில்லை. அது அவரது உள்ளத்தைத் தொடுவதாக இருக்கவேண்டும். அது ஆன்மாவுடன் தொடர்பு கொண்டதாகும். எனவே, அது தாற்காலிகமான பலனை மாத்திரமே கொடுக்கக் கூடியதென்று சொல்லிவிட முடியாது. அதனுல் ஏற்படக்கூடிய பலன் நிரந்தர மான தன்மையுடையது. உண்ணுவிரதம் இருப்பவர் அந்தக் கடமையை மேற்கொள்ளுவதற்குத் தகுதியானவரா என்பதும், அந்தப் பரிகார முறையை அவர் ஒழுங்கான விதத்தில் கையாண்டு இருக்கிருரா என்பதும் தற்போதைய விவாதத்திற்குப் பொருந் தாத வேறு விஷயங்களாகும்.

என் ஞாபகத்திற்கு எட்டியவரையில், நான் மேற்கொண்ட உண்ணுவிரதங்களுள் தாகூர் சாகிபிற்கு எதிராக ராஜ்கோட்டில்

மேற்கொண்ட உண்ணுவிரதம்தான் தவருக முடிந்தது. வெளிப் புறக் காரணங்களுக்குப் பரிகாரமாக அதைக் கைக்கொண்ட தால், அது கலப்படமாகிவிட்டது. இந்தத் தவறு தவிர்க்கப் பட்டிருந்தால், மற்ற உண்ணுவிரதங்களினுல் ஏற்பட்டதைப் போல் அதனுலும் இயல்பான, அனுகூலமான பலன் ஏற்பட்டிருக் கும். அந்தத் தவறை நான் கண்டதும் அதிலிருந்து பின்வாங்கி, ஆபத்தான ஒரு நெருக்கடியைத் தவிர்த்தேன். கடைசியாக நான் கல்கத்தாவில் இருந்த உண்ணுவிரதத்தில் கோரிய பலன் கிடைத்தது. அதனுல் ஏற்பட்டுள்ள பலன் நிரந்தரமாக இருக்குமா அல்லது இராதா என்பதைக் காலம்தான் நிரூபிக்கும். அது உண்ணுவிரதம் இருப்பவரின் தூய்மையையும், உண்ணுவிரதத் திட்டத்தின் பிழையின்மையையும் பொறுத்தது. அதைப் பற்றி ஆராய்ச்சி செய்ய இது சமயமல்ல. தவிர, அது பற்றிய ஆராய்ச்சியில் ஈடுபட உண்ணுவிரதம் இருந்தவருக்குத் தகுதி இல்லை. எனது மரணத்திற்குப் பிறகு பாரபட்சமற்ற ஒருவர்தான் அதைப்பற்றி ஆராய்ச்சி செய்ய வேண்டும்.

— 'ஹரிஜன்' – 5—10—1947

## 16

# பொய் கூறியதற்குப் பிராயச்சித்தம்

ஆசிரமத்தில் யாராவது பொய் கூறியதாகக் கண்டு பிடிக்கப்பட்ட போதெல்லாம், அந்நிலைமையைச் சமாளிப்பதற்குத் தகுந்த, பலன் தரத்தக்க முறைகளை எடுத்துக் கொண்டோம். பொய் சொல்லுவது, ஒரு கடுமையான நோயின் அறிகுறியாகவே கருதப்பட்டது. தவறு செய்தவர்களைத் தண்டிப்பதில் ஆசிரம வாசிகளுக்கு நம்பிக்கை இல்லை. எனவே, ஆசிரமத்தை விட்டு வெளியேறும்படி அவர்களைக் கேட்கக்கூடத் தயங்கினேம். ஆகையால், பொய் சொல்லுவதைத் தடுப்பதற்காக மூன்று விதமான நடவடிக்கைகளைக் கைக்கொண்டோம்.

முதலாவதாக, ஆசிரமத்தை மேற்பார்வையிடும் முக்கியத் தொண்டர்கள் தூய்மையுள்ளவர்களாக இருக்கவேண்டும் என்பதே. அவர்கள் குற்றமற்றவர்களாக இருந்தால், ஆசிரமத் தின் சூழ்நிலையும் தூய்மையடைந்தே தீரும் என்று கருதினேம். சூரிய வெளிச்சத்தின் முன்னிலையில் எப்படி இருள் நிற்க முடியாதோ, அது போலவே உண்மையின் முன்னிலையில் பொய் நிற்க முடியாது.

இரண்டாவதாக, தவறை ஒத்துக்கொள்ள வேண்டும் என்ற விதியை அனுசரித்தோம். யாராவது பொய் கூறிவருவதாகத் தெரிந்தால், அந்த உண்மையைப் பிரார்த்தனைக் கூட்டத்தில் அறி

விக்க வேண்டும். இதை நேர்மையான விதத்தில் உபயோகித்தால், இது மிகவும் பலன் தரத்தக்க ஒரு முறையாகும். எனினும், அதன் சம்பந்தமாக இரண்டு விஷயங்களில் ஜாக்கிரதையாக இருக்கவேண்டும். பகிரங்கமாக ஒத்துக்கொள்ளும்படி செய்வதில் எள்ளளவும் வற்புறுத்தல் இருக்கக் கூடாது. தமது பொய்யை ஒத்துக்கொள்ளுவதன் மூலம், அவர் வெட்கத்தை அடியோடு விட்டுவிடும்படியான நிலைமை ஏற்பட்டுவிடக் கூடாது. அதை ஒத்துக்கொள்ளுவதன் மூலம் தமது பாவத்தைக் களைந்து கொண்டுவிட்டதாக அவர் நம்புவாராயின், அவர் அதைப்பற்றி வெட்கப்பட மாட்டார். அற்பமான பொய்கூட அபாயகரமானது என்ற உண்மை அவரது மனத்தில் எப்போதும் இடம் பெற்றிருக்க வேண்டும்.

மூன்றாவதாக, ஆசிரமத்தின் மேற்பார்வையாளரான தொண்டரும், தவறு செய்தவரும், பிராயச்சித்தமாக உண்ணாவிரதம் இருக்கவேண்டும். உண்ணாவிரதம் இருப்பதா, வேண்டாமா என்பதை முடிவு செய்துகொள்ளும் பொறுப்பு தவறு செய்தவரையே சார்ந்தது. தொண்டர் சம்பந்தப்பட்ட வரையில், தமது ஸ்தாபனத்தில் அறிந்தோ, அறியாமலோ தவறு நடந்தாலும் அதற்கு அவரும் பொறுப்பாளியாகிறார். விஷப் புகையைக் காட்டிலும் பொய் அதிக விஷத் தன்மையுள்ளது, கண்ணுக்குத் தெரியாதது. ஒரு ஸ்தாபனத்தின் தலைவர் மிகுந்த விழிப்புடன் இருந்தால், பொய் விஷம் அந்த இடத்தில் பிரவேசிக்கத் துணியாது. ஒருவேளை அது பிரவேசித்துவிட்டால், தலைவருக்கு அது ஓர் எச்சரிக்கையாகும். இந்தத் தொத்து நோய்க்கு, தமது பங்கிற்கு உள்ள பொறுப்பை அவர் ஏற்கவேண்டும். நமக்கு நாமே கண்டிப்பாக இராததால்தான், பொய் தனது ஆயுட்காலத்தை நீடித்துக்கொள்ளுவது சாத்தியமாகிறது. பின்னர் நாம், பொய் தவிர்க்க முடியாதது என்ற துக்ககரமான முடிவிற்கு வந்து விடுகிறோம். தவிர்க்க முடியாதது, பின்னர் அவசியமாகி விடுகிறது! அதன் விளைவாக உண்மை அல்ல, பொய்யே தன் மதிப்பை பெருக்கிக் கொண்டுவிடுகிறது!

எனவே, ஆசிரமத்தில் பொய் கண்டுபிடிக்கப்பட்டபோது, அந்தக் குற்றத்திற்குப் பொறுப்பை நானே ஏற்றுக்கொண்டேன். என்னால் விவரிக்கப்பட்டுள்ள சத்திய நிலையை நானே இன்னும் அடையவில்லை. அதற்குக் காரணம் அறியாமையாக இருக்கலாம். சத்தியத்தைப் பற்றி நானே இன்னும் பூரணமாக அறிந்து கொள்ளவில்லை; அதைப் பற்றி முற்றிலும் சிந்திக்கவும் இல்லை; அதை நடைமுறையில் கொண்டுவரவும் இல்லை. அதற்காக நான் ஆசிரமத்தைவிட்டு வெளியேறி, இமயமலையில் உள்ள ஏதாவதொரு குகைக்குச் சென்று மௌன விரதத்தை மேற்கொள்ளுவதா? அவ்விதம் செய்வது கோழைத்தனமாகும். ஒரு குகையில் இருந்து கொண்டு சத்தியத்தை நாடமுடியாது. பேச வேண்டியது அவசியமாக இருக்கும் இடத்தில் மௌனமாக இருப்பது அர்த்தமற்றதாகும். சில குறிப்பிட்ட சந்தர்ப்பங்களில் ஒருவர்

குகைக்குச் சென்று வாழலாம். ஆனல், சாதாரண மனிதனைச் சமூகத்தில்தான் சோதனை செய்ய வேண்டும்.

எனவே, பொய்யை ஒழிக்க எந்தப் பரிகாரமுறையை முயற்சித்துப் பார்ப்பது? உண்ணுவிரதம் போன்ற உடல் சம்பந்தமான தவத்தை மேற்கொள்ளுவதுதான் அக்கேள்விக்குப் பதில் என்று எனக்குத் தோன்றுகிறது. எனினும், அத்தகைய தவம் குறிக்கோள் அல்ல, குறிக்கோளை அடைவதற்கான ஒரு முறையேயாகும். அதுவே தவறு செய்யும் மனிதனை நேர்மையான வழிக்குக் கொண்டு வந்துவிட முடியாது.

மனிதன், தன் உடலுக்கு அடிமையாகிவிடும் தன்மையுடையவனுக இருக்கிறுன். உடலின் இன்பத்திற்காக அவன் பல நடவடிக்கைகளில் ஈடுபடுகிறுன்; பல பாவங்களைச் செய்கிறுன். எனவே, அவன் பாவம் செய்த போதெல்லாம் உடலைத் துன்பத்திற்கு உள்ளாக்கிக் கொள்ள வேண்டும். உடல் இன்பத்தில் நாட்டம் கொண்ட ஒருவன், வீண் பிரமைக்கு உட்பட்டவனுக இருக்கிறுன். உடல் இன்பங்களில் உண்பதும் ஒன்ருகும். எனவே, அந்த இன்பத்தை அவன் சிறிதளவு துறந்தாலும், அவனது மனப் பிரமையின் சக்தியைத் தகர்ப்பதற்கு அது உதவியாக இருக்கும். ஆகையால், இத்தகைய பலன் ஏற்படுவதற்காகவே உண்ணுவிரதத்தை மேற்கொள்ள வேண்டும். அப்போது, தன்னைத் தானே அல்லது பிறரைத் தூய்மைப்படுத்துவதற்காக எல்லாப் புலன்களையும் கட்டுப்படுத்திக்கொள்ளவேண்டும். உணவைக் கைவிடுவது மாத்திரம் உண்ணுவிரதம் ஆகிவிடாது. ஆரோக்கியத்திற்காக சாப்பிடாமல் இருப்பதும் உண்ணுவிரதம் ஆகாது.

அடிக்கடி உண்ணுவிரதம் இருப்பதால் அந்த விரதத்தின் சக்திபோய் விடுகிறது என்பதையும் நான் கண்டுகொண்டிருக்கிறேன். அப்போது அது யாதொரு சிந்தனையுமற்ற வெறும் யந்திரத்தைப் போன்ற ஒரு நடவடிக்கையாகிவிடுகிறது. எனவே, ஒவ்வோர் உண்ணுவிரதமும் தீர்க்காலோசனையின் மீதே மேற்கொள்ளப்படவேண்டும்.

எனது உண்ணுவிரதத்தினுல் ஏற்பட்ட ஒரு விசேஷ நிலையை நான் கவனித்திருக்கிறேன். நான் அடிக்கடி உண்ணுவிரதம் இருந்திருக்கிறேன். எனவே, என் சக ஊழியர்கள் கலக்கம் அடைந்திருக்கிருர்கள். நான் மேற்கொண்டு ஓர் உண்ணுவிரதத்தை அனுசரிப்பதால், என் உயிருக்கு அபாயம் ஏற்படலாமென அவர்கள் அஞ்சுகிருர்கள். இந்த அச்சம் காரணமாக அவர்கள் சில விதிகளை அனுசரிக்கிருர்கள். இதை, உண்ணுவிரதத்தின் விரும்பத்தகாத ஒரு விளைவு என்றே நான் கருதுகிறேன். அத்தகைய பயம் காரணமாக தன்னடக்கத்தை அனுசரிப்பதில் எவ்வித அபாயமும் இருப்பதாக நான் எண்ணவில்லை. இந்த அச்சம் அன்பின் காரணமாக ஏற்பட்டது. எனவே, அத்தகைய பயத்தினுலாவது ஒருவர் தவறு செய்வதை தவிர்த்துக்கொள்ளுவது நல்லதுதான். எனினும், தீர்க்காலோசனையின் மீது வலுவில் தானுகச்

சீர்திருந்துவதுதான் மிகவும் விரும்பத்தக்கதாகும். மற்றவர்களுக்கு மனவேதனை ஏற்படும் என்பதற்காக ஒருவர் பாவம் செய்வதைத் தவிர்ப்பது வரவேற்கத்தக்கதே. முக்கியமாக, தங்களுக்கு மிகவும் நெருங்கியவர்களைத் திருப்தி செய்வதற்காக மேற்கொள்ளப்பட்ட பல சீர்திருத்தங்கள், மனிதரின் வாழக்கையில் நிரந்தரமாக நிலைத்துவிட்ட சம்பவங்களும் நிகழ்ந்துள்ளன.

உண்ணாவிரதத்தினால் ஏற்படும் ஒரு வருந்தத்தக்க விளைவையும் நாம் கவனிக்க வேண்டும். அதாவது சில சமயங்களில் சிலர் பாவத்தைத் தவிர்ப்பதில்லை; தமது தவறு தெரிந்துவிட்டால் யாரோ ஒருவர் உண்ணாவிரதம் இருப்பாரே என்ற அச்சத்தினால் அதை மறைக்க முயற்சிப்பதுதான் அந்த விளைவாகும்.

சில சந்தர்ப்பங்களில் உண்ணாவிரதத் தவம் அவசியம் என்பதும், அதனால் மொத்தத்தில் ஆசிரமத்திற்கு நன்மை ஏற்பட்டிருக்கிறது என்பதுமே எனது அபிப்பிராயமாகும். தண்டனை, ஒழுங்கு நடவடிக்கை முதலியன வெளித் தோற்றத்திற்கு ஒழுங்கையும், முன்னேற்றத்தையும் நிலை நிறுத்துவதுபோல் தோன்றலாம். ஆனால், ஒரு ஸ்தாபனம் உள்ளும் புறமும் தூய்மையுடனும், நாளுக்கு நாள் உறுதிபெற்றும் விளங்குவதற்குத் தவம்தான் அவசியமாகும்.

(நடை முறையில் ஆசிரம விதிகள்–அத்தியாயம்-1)

# 17

# காந்திஜியின் முதல் தவம்

**கா**ந்திஜி பல சந்தர்ப்பங்களிலும் மேற்கொண்ட உண்ணாவிரதங்களைப்பற்றி, சென்ற ஞாயிற்றுக்கிழமை, கிராமத் தொண்டர்கள் பயிற்சிப் பள்ளி மாணவர்கள் கேள்வி கேட்டனர். பொது மக்களுக்கு இழைக்கப்பட்ட தவறுகளுக்குப் பிராயச்சித்தமாக காந்திஜி உண்ணாவிரதங்கள் இருந்துள்ளார். நெருங்கிய உறவினர் அல்லது நெருங்கிய சக ஊழியர் முதலியோரின் மனச் சாட்சியைத் தூண்டவும், அல்லது சுயத்தூய்மைக்காகவும் அவர் மேற்கொண்ட உண்ணாவிரதங்களும் உண்டு. இவற்றில் சில எல்லோரும் அறிந்தவை. 1918-இல் அகமதாபாத்தில் நடந்த மில் தொழிலாளர் வேலை நிறுத்தத்தின் போது காந்திஜி உண்ணாவிரதத்தை மேற்கொண்டார். 1919-இல் அகமதாபாத்தில் நடந்த கலகங்களுக்குப் பின்னரும், 1924-இல் ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமைக்காகவும், 1932, 1933, 1934-ஆம் ஆண்டுகளில் ஹரிஜனங்களின் உரிமைகளுக்காகவும் உண்ணாவிரதங்கள் இருந்தார். இவற்றை எல்லாம் நான் இங்கே விவரிக்க வேண்டிய அவசியம் இல்லை. ஆனால், காந்திஜி மேற்கொண்ட ஒரே ஒரு உண்ணாவிரதத்தைப் பற்றி வாசகர்கள் அறிந்திருக்க முடியாது. அதைப் பற்றி எனக்கும் நினைவில்லை. எனக்குத்

தெரிந்தவரையில் அச்சம்பவம் எங்கேயும் குறிப்பிடப்படவுமில்லை. பொது இயக்கத்தை யொட்டி காந்திஜி தம்மைத் தாமே துன்பத்திற்கு உள்ளாக்கிக்கொண்ட முதல் சம்பவம் அதுதான். அதை விவரித்து சென்ற ஞாயிற்றுக்கிழமை காலையில் பயிற்சிப் பள்ளி மாணவர்கள் அடங்கிய கூட்டத்தில் காந்திஜி பின் வருமாறு கூறினார்:

"இது 1913-இல் நிகழ்ந்தது. நேட்டால் தென் கடற்கரையில் டர்பனிலிருந்து இசிபிங் வரையில் உள்ள இந்தியத் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்தனர். சுரங்கத் தொழிலாளரின் வேலை நிறுத்தத்தையும், அணிவகுத்துச் சென்றவர்கள் சிறைப்பட்டதையும் குறித்து தங்களுடைய அனுதாபத்தைத் தெரிவிக்கும் நோக்கத்துடனேயே அவர்கள் வேலை நிறுத்தம் செய்தார்கள். மூன்று பவுன் வருடாந்திர ஆள் வரியிலிருந்து தாங்கள் விடுதலை பெறுவதற்காகவே போராட்டம் ஆரம்பமாகி வளர்ச்சி பெற்றுள்ளது என்பதை அவர்கள் யாவரும் அறிவர். ஆனால், வேலை நிறுத்தம் செய்யும்படி அவர்களை யாரும் கேட்டுக்கொள்ளவில்லை. அவ்விதம் நான் கேட்டுக்கொள்ளாததற்கு இரண்டு காரணங்கள் உண்டு. முதலாவதாக, தென் கடற்கரையில் உள்ள தொழிலாளர்களுடன் எனக்கு நெருங்கிய பழக்கம் ஏற்பட்டிருக்கவில்லை. இரண்டாவதாக, ஆயிரக்கணக்கான தொழிலாளர்களைப் பராமரிப்பது சாத்தியமில்லாத காரியம்; அமைதிக்குப் பங்கம் விளையாமல் பாதுகாப்பதும் மிகவும் கஷ்டமாகும். எனினும், தேசத்தின் ஒரு பகுதியிலும், சிறைகளிலும் இந்தியர்கள் துன்பத்திற்குள்ளாகி யிருக்கிறார்கள் என்ற செய்தி காட்டுத் தீயைப் போல் எங்கும் பரவிவிட்டதால், அந்தத் தொழிலாளர்களை வேலை நிறுத்தம் செய்ய வேண்டாம் என்று தடுக்க முடியவில்லை. அவர்களை அடக்க அரசாங்கத்தினர் மிகவும் கடுமையான முறைகளைக் கைக்கொண்டனர். அவர்கள் திரும்பவும் வேலைக்கு வருமாறு செய்வதற்காக எல்லாவிதமான நிர்ப்பந்தங்களையும் பிரயோகித்தனர். தொழிலாளர்கள் சிறிது எதிர்த்தாலும், அவர்கள் துப்பாக்கிப் பிரயோகத்திற்கு இலக்காக வேண்டியிருந்தது. இச்சம்பவங்களைத் தொடர்ந்து ஒரு விசாரணையும் நடந்தது. எனது தண்டனைக் காலம் முடிவடைவதற்கு முன்பே நான் சிறையிலிருந்து விடுதலை செய்யப்பட்டேன். அச்சம்பவங்களைப் பற்றி நான் தெரிந்து கொண்டதும், எனக்கு நானே மூன்று பிரதிக்ஞைகள் செய்துகொண்டேன்: 1. தொழிலாளரைப் போலவே உடை அணிந்துகொள்ளுவது, (அதாவது தலையில் தொப்பி, தலைப்பாகை எதுவும் வைத்துக் கொள்ளுவதில்லை; இடுப்பில் ஒரு வேஷ்டியும் ஒரே ஒரு சட்டையும் மாத்திரமே அணிந்து கொள்ளுவது); 2. பாதரட்சை எதுவுமின்றி வெறும் கால்களால் நடப்பது; 3. பகலில் ஒரே ஒரு வேளை மாத்திரமே சாப்பிடுவது-அடுப்பில் சமைக்கப்படாத உணவை அதாவது பழங்களை மாத்திரமே சாப்பிடுவது என்று விரதம் எடுத்துக் கொண்டேன். இந்தத் தவம் சில மாதங்கள் வரையில் நீடித்தது. கடைசியில் ஒப்பந்தம் ஏற்பட்டு, ஆள் வரி ரத்து செய்யப்பட்டது. நான் மனப்பூர்வமாக எடுத்துக் கொண்டு

மகிழ்ச்சியுடன் நிறைவேற்றிய பிரதிக்ஞைக்கும் மேற்கண்ட ஒப்பந்தத்திற்கும் சம்பந்தம் உண்டு என்பதில் எனக்கு ஐயமில்லை. தென்னாப்பிரிக்கா யூனியன் அரசாங்கத்தின் மனம் மாறியதற்கு என்து பிரதிக்ஞையே நேரடியான காரணம் என்று நான் கூறவில்லை. உண்மையான எல்லாத் தவங்களும் கண்ணுக்குத் தெரியாத, ஆனல் நிச்சயமான பலன்களைக் கொடுக்கின்றன என்பது எனது உறுதியான நம்பிக்கையாகும். சுயத் தூய்மைக்காகவும், வேலை நிறுத்தம் செய்த தொழிலாளர்களின் கஷ்டங்களில் பணிவுடன் பங்கு எடுத்துக் கொள்ளுவதற்காகவுமே அந்தத் தவம் மேற்கொள்ளப்பட்டது. கடவுளைப் பிரார்த்தனை செய்து வேண்டிக்கொள்ளுவதற்கு அந்த ஒரு வழிதான் எனக்கு இருந்தது.''

(ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதியது)

—'ஹரிஜன்' – 12—12—1936

# 18

# உண்ணாவிரதத்தின் துஷ்பிரயோகம்

உண்ணாவிரதத்தை துஷ்பிரயோகம் செய்யும் நிகழ்ச்சிகள் சமீப காலமாக என் கவனத்திற்கு வந்துள்ளன. எனது கையெழுத்தை அனுப்பாவிடில் தாம் உண்ணாவிரதம் இருக்கப் போவதாகப் பயமுறுத்தி ஒருவர் எழுதியிருந்தார். மற்றும் மூவர், எனது யாத்திரையின் போது அவர்களுடைய ஊர்களுக்கு நான் போகாவிட்டால் உண்ணாவிரதம் இருக்கப்போவதாக எழுதியிருந்தார்கள். கதர், ஹரிஜன் முன்னேற்றம் முதலிய ஆக்க வேலைகளுக்காகத் தமது கிராம மக்கள் ரூ. 5000 கொடுக்காவிடில் உண்ணாவிரதத்தை மேற்கொள்ளப்போவதாக மற்றொருவர் எழுதியிருந்தார். உண்ணாவிரதம் துஷ்பிரயோகம் செய்யப்படுவதற்கு இவையெல்லாம் உதாரணங்கள் என்பதில் ஐயமில்லை. உண்ணாவிரதம் இருப்பதாக ஒருவர் பயமுறுத்துவதற்காக நான் ஏன் என் கையெழுத்தைக் கொடுக்க வேண்டும்? தொண்டர்கள் அவ்விதம் பயமுறுத்தி ஏன் பணம் வசூல் செய்ய வேண்டும்? பொது மக்களின் நலனை உத்தேசித்தோ அல்லது யாருக்காவது தொண்டு செய்யும் நோக்கத்துடனேதான் உண்ணாவிரதத்தை மேற்கொள்ள வேண்டும். உண்ணாவிரதத்தின் உபயோகத்திற்கும் துஷ்பிரயோகத்திற்கும் நடுவே உள்ள எல்லையை நிர்ணயிப்பது சிறிது கஷ்டம்தான் என்பதை நான் அறிந்திருக்கிறேன். எனவே, அதைக் கண்டுபிடிப்பதற்கான சோதனை என்னவெனில், உண்ணாவிரதத்தை மேற்கொள்ளும் நபர் மற்றவர்களுடைய நடத்தையில் மாறுதலை உண்டுபண்ணுவதற்கான, உண்ணாவிரதங்களை மேற்கொள்ளுவதற்குத் தேவையான ஒழுங்கு முறைகளில் பயிற்சி பெற்றிருக்கிறாரா என்று பார்ப்பதேயாகும். மேற்கண்டவர்களுக்கு அத்தகைய தகுதி சிறிதும் இருப்பதாகத் தெரியவில்லை.

நியாயமான உண்ணாவிரதங்களை அடிக்கடி மேற்கொண்டால் அவற்ருல் பலன் கிடைக்கும். ஆயிரம் பேர் எனது கையெழுத்தைக் கேட்டாலோ, ஆயிரம் கிராமங்களில் உள்ள ஆயிரம் தொண்டர்கள் அவரவர் ஊர்களுக்கு வரவேண்டும் என்று என்னைக் கேட்டுக்கொண்டாலோ, அல்லது ஒரு தொண்டர் தாம் கோரும் தொகையை ஏழை மக்களிடமிருந்து வசூல் செய்ய முற்பட்டாலோ, அத்தகைய முயற்சி வெற்றி பெறுவது சாத்தியமே அல்ல என்பது தெளிவாகும்.

'ஹரிஜன்' – 22—12—1933

# 19

# தார்மிக அடிப்படை இல்லாத உண்ணாவிரதம்

ஒரு காங்கிரஸ்வாதி ஏதோ ஒரு காரணத்தை யொட்டி உண்ணாவிரதம் இருந்தார். அவருக்கும் அவரது மனைவிக்கும் காந்திஜி அனுப்பிய தந்தியில் பின்வருமாறு கூறியிருந்தார் :

"இந்த உண்ணாவிரதத்திற்கு தார்மிக அடிப்படை எதுவும் இல்லை. கற்பனையான அல்லது உண்மையான காரணங்களுக்காக மக்கள் உண்ணாவிரதம் இருக்கத் தொடங்கினாலும், அத்தகைய உண்ணாவிரதம் காரணமாக விட்டுக் கொடுப்பதென்று ஏற்பட்டுவிட்டாலும், சமூகம் சீர்குலைந்துவிடும்."

—'ஹரிஜன்' – 21—5—1938

# 20

# உண்ணாவிரதத்திற்கு உரியது

தம்மை ஹரிஜன் தொண்டர் என்று கூறிக்கொள்ளும் ஒருவர் நீண்ட கடிதம் ஒன்று எழுதியுள்ளார். அதன் சாரத்தைக் கீழே கொடுத்துள்ளேன் :

"உள்ளூர் ஹரிஜன் சேவா சங்கத் தலைவருடனும் ஒரு சகோதரியுடனும் நான் அன்றெரு நாள் ஒரு கிராமத்திற்குச் சென்றிருந்தேன். நாங்கள் ஒரு மாட்டு வண்டியில் சென்றேம். வழியில் தலைவரும் சகோதரியும் பேசிக்கொண்டும், ஒருவரையொருவர் கேலி செய்துகொண்டும் இருந்தார்கள். சகோதரி, தாம் களைப்பாக இருப்பதாகக் கூறி தலைவரின் மடியில் படுத்துக்கொண்டார். இந்த உறவு என்னைத் திடுக்கிடச் செய்தது. திரும்பிவரும்போது நாங்கள் எங்கேயிருந்து புறப்பட்டோமோ அந்த நகருக்கு ரெயிலில் திரும்பிச் செல்லவேண்டியிருந்தது. ரெயில் வண்டி வருவதற்காக ஸ்டேஷனில் நாங்கள் சில மணி நேரம் காத்திருக்க நேர்ந்தது. தலைவரும் சகோதரியும் ஒரு

பெஞ்சியில் உட்கார்ந்திருந்தார்கள். நான் பிளாட்பாரத்தில் தரையில் உட்கார்ந்திருந்தேன். அப்போது நிலவு வெளிச்சம் இருந்தது. அவர்கள் பரஸ்பரம் பழகிய விதம் எனக்குச் சந்தேகத்தை உண்டாக்கியதால், அவர்களை நான் சோதிக்க விரும்பினேன். எனவே, நான் எனக்குத் தூக்கம் வருகிறது என்று பாசாங்கு செய்தேன். 'ரெயில் வண்டி வர இன்னும் நேரமிருக்கிறது. எனக்குக் களைப்பாக இருப்பதால், நான் தூங்குகிறேன். வண்டி வரும்போது என்னை எழுப்புகிறீர்களா?' என்று தலைவரிடம் நான் கூறவே, அவர் மகிழ்ச்சியுடன் நான் தூங்குவதற்கு உடனே அனுமதி கொடுத்துவிட்டார். நான் கீழே படுத்து அயர்ந்து தூங்குவதுபோல் பாசாங்கு செய்தேன். நான் தூங்குகிறேனு என்பதை நிச்சயம் செய்துகொள்ளுவதற்காக, அவர் என்னைக் கூப்பிட்டார். என்னிடமிருந்து பதில் இல்லாததால், அவர் அந்த சகோதரியிடம் தம் விருப்பப்படியெல்லாம் நடந்துகொண்டார். பின்னர் அவர்கள் மெதுவாக சமீபத்தில் இருந்த அடர்த்தியான மரங்களுக்கிடையே சென்றனர். சிறிது நேரம் சென்றபின் அவர்கள் திரும்பிவந்தனர். வண்டி வரும் நேரம் நெருங்கியதும் அவர் என்னை எழுப்பினர். தலைவருக்கும் சகோதரிக்கும் இடையே இந்த ஆபாசமான நடத்தையைக் கண்டு எனக்கு அருவருப்பு ஏற்பட்டது. நீங்கள் 21 நாட்கள் உண்ணாவிரதம் இருந்ததும், அதற்குத் தாங்கள் கூறிய காரணங்களும் என் நினைவிற்கு வந்தன. இவ்விஷயத்தை சில சக ஊழியர்களிடம் அந்தரங்கமாகக் கூறினேன். அவர்கள் அவரைக் கேட்கத் தொடங்கினர். அவர் தாம் ஆபாசமாக நடந்துகொள்ளவில்லை என்று கூசாமல் துணிந்து கூறிவிட்டார் அது மாத்திரமல்ல; நான் பொறாமையால் அவ்விதம் கூறுவதாகவும், உள்ளூர் ஸ்தாபனத்தின் தலைமைப் பதவிக்கு வர நான் தந்திரம் செய்வதாகவும் என்மீது குற்றம் சாட்டியுள்ளார். இந்த நிலைமையில் நான் என்ன செய்வது?''

கடிதத்தில் உள்ள அவசியமில்லாத விவரங்களை நான் விட்டுவிட்டேன். பாத்திரங்களின் பெயர்களையும், துக்ககரமான அக்காட்சி நடந்த இடத்தையும் வாசகர்கள் ஊகிக்க முற்படவேண்டாம். இந்தக் கடிதம், ஹரிஜன் தொண்டர்களுக்கெல்லாம் ஓர் எச்சரிக்கையாக இருக்கவேண்டும் என்பதற்காகவே இதை எல்லோருடைய பார்வைக்கும் கொண்டு வந்துள்ளேன். எனவே, இதை நாம் இப்போது பரிசீலனை செய்வோம்.

முதலாவதாக, கடிதம் எழுதியவர் தமது சகாக்களைச் சோதனை செய்ய விரும்பி, சிற்றின்ப மயக்கத்திற்கு அவர்கள் இலக்காகும்படி செய்தது தவறாகும். சக ஊழியர்களை வேவு பார்ப்பது எப்போதுமே ஒரு கெட்ட காரியமாகும். நாம் கண்டுபிடிக்க வேண்டுமென்று விரும்பாமலேயே, அவர்களிடம் ஒழுக்கத் தவறையோ அல்லது வேறு தவறுகளையோ நாம் கண்டால், அவற்றைப் பற்றி நாம் வம்பளக்கக் கூடாது; ஆனால், உடனே நாம் சாந்தமான முறையில் அவற்றை நண்பர்களிடம் எடுத்துக் கூறவேண்டும். கடிதம் எழுதியுள்ள அன்பர் கூறுவது உண்மையாயின், அபாயத்தின் அறிகுறி முதலில் தென்பட்ட உடனேயே தலைவரை அன்பர் எச்சரிக்கை செய்திருந்தால், அவரைத் தவறிலிருந்து காப்பாற்றியிருப்பார். ஆனால், நேரடியான அந்த

முறையை விட்டுவிட்டு, அன்பர் அவ்விருவரையும் சோதனை செய்யும் கோணல் வழியைப் பின்பற்றினார். நாம் யாவரும் தவறு செய்யும் இயல்புள்ள மனிதர்களே; ஆசாபாசங்களுக்கு உட்பட்டவர்களே. வெளித் தடைகள் குறுக்கிடாவிடில், வெகு சிலர்தான் கவர்ச்சிகளுக்குப் பலியாகாமல் தப்பியிருக்க முடியும். தலைவரைப் போல் அந்த நிருபரும் அத்தகைய நிலையில் இருந்திருந்தால், அவர் வீழ்ச்சியுறாமல் தப்பியிருப்பார் என்பது நிச்சயமில்லை. அவர் சிறிது சிந்தித்திருந்தால், அவரது நண்பர்கள் விஷயத்தில் அவர் சிறிது அனுதாபம் காட்டியிருந்தால், தூங்குவது போல் பாசாங்கு செய்யாமல் அவர்களை எச்சரித்திருந்தால், அவர்கள் முற்றிலும் வீழ்ச்சியடையாமல் தடுத்திருக்க முடியும். அத்தகைய எச்சரிக்கைகளால் சிலர் காப்பாற்றப்பட்ட சம்பவங்களை நான் அறிவேன். இந்த ஹரிஜன் தொண்டர் தமது நண்பர் விஷயத்திலும், சக ஊழியர்கள் விஷயத்திலும் தாம் செய்ய வேண்டிய கடமையிலிருந்து அறவே தவறிவிட்டார்.

இந்த நிலைமையில் தாம் என்ன செய்வது என்று அவர் கேட்டிருக்கிறார். இந்தக் கேள்விக்கு நான் அவரது கோணத்திலிருந்து பதிலளிக்க உத்தேசிக்கவில்லை. அவர்கள், தாங்கள் செய்த தவறுக்கு வருந்தும்படி எப்படிச் செய்வது என்பதை அறிய தொண்டர் ஆர்வத்துடன் இல்லை. தம்மீது சாட்டப்பட்டுள்ள குற்றம் ஆதாரமற்றது என்பதை நிரூபித்து, அவர்கள் செய்த குற்றத்தைப் பகிரங்கப்படுத்துவது எப்படி என்பதே இந்தத் தொண்டரின் கவலையாகும். தாம் தூங்குவதைப் போல் பாசாங்கு செய்து அவர்கள் வீழ்ச்சியுறும்படி செய்தது எப்படி அவரது அலுவல் அல்லவோ அது போலவே, அவர்கள் செய்த குற்றத்தைப் பகிரங்கப்படுத்துவதும் அவரது அலுவல் அல்ல. தலைவர் தமது குற்றத்தை ஒப்புக்கொள்ளும் வரையில் தாம் உண்ணாவிரதம் இருக்க நேரும் என்று தொண்டர் தலைவருக்கு அறிவிக்க வேண்டும். அவ்விதம் செய்ய இயலாவிடில், சம்பந்தப்பட்டவர்கள் தாங்கள் செய்த குற்றத்தை உணர்ந்து கொள்ளும்படி செய்வதற்காக தொண்டர் நீண்டகால உண்ணா விரதத்தை மேற்கொள்ள வேண்டும். ஆனால், பகிரங்கமாக உண்ணாவிரதத்தை மேற்கொள்ளக் கூடாது. தலைவரும் சகோதரியும் தாங்கள் கடுமையான குற்றம் செய்துவிட்டோம் என்பதை உணர்ந்து கொள்ள இடமிருக்கிறது. அவர்கள் தங்கள் மனத்தை கல்லாக்கிக் கொண்டு, உண்ணாவிரதத்தை பொருட்படுத்தாமலும் இருந்துவிடலாம். ஆனால், தொண்டர் அதைப்பற்றி யெல்லாம் கவலைப்பட வேண்டியதில்லை. தமது நண்பரை வேவு பார்த்ததற்காக தொண்டர் இந்தத் தவத்தை மேற்கொள்ள வேண்டும். ஹரிஜன் தொண்டர் உண்ணாவிரதத்தை மேற்கொள்ளும் விஷயமாக, இங்கே ஓர் உண்மையை வற்புறுத்த வேண்டிய அவசியமில்லை. அதாவது, உண்ணாவிரதத்தின் அவசியத்திலும் சக்தியிலும் அவருக்கு நம்பிக்கை இருந்தால் மாத்திரமே, தூய உள்ளத்துடன் அவர் உண்ணாவிரதத்தை மேற்கொள்ள முடிந்தால் மாத்திரமே, அவர் உண்ணாவிரதத்தைக் கைக்கொள்ள வேண்டும்.

தொண்டரால் குற்றம் சாட்டப்பட்டுள்ளவர்கள், உண்மையில் குற்றம் செய்தவர்களாக இருக்கலாம். அவர்கள் குற்றம் செய்யவில்லை என்றே நாம் நம்புவோமாக. ஆனால், இதற்கு முன் அத்தகைய தவறுகள் நிகழ்ந்திருப்பதை நான் அறிவேன். இச் சம்பவம் எல்லாத் தொண்டர்களுக்கும் ஓர் எச்சரிக்கையாக இருக்கவேண்டும். இது உண்ணாவிரதம் இருப்பதற்கு உரிய ஒரு சம்பவம் என்பதே எனது அபிப்பிராயமாகும். ஹரிஜன் தொண்டு என்பது வேலையற்ற ஒரு வேலையல்ல. அது, கோடிக்கணக்கான மக்களின் மனப் போக்கை புரட்சிகரமாக மாற்றுவதற்கான ஓர் இயக்கமாகும். அது வாள் முனையில் நடப்பதைப் போன்றது. எனவே, தொண்டர்கள் அதில் மிகவும் கண்காணிப்புடன் இருக்க வேண்டியது அவசியமாகும்.

—'ஹரிஜன்' – 27–10–1933

# 21

# பட்டதாரியின் விபரீத யோசனை

சொந்த நாட்டின் மீது அன்பு காட்டுவதும், அதற்காக கஷ்டப்படுவதும் போற்றத் தக்க, பலனைக் கொடுக்கக் கூடிய உணர்ச்சியே யாகும். ஆனால், மடத்தனமான, பலனற்ற உணர்ச்சியும் உண்டு. கீழ்க்கண்ட கடிதம், இரண்டவதாகக் குறிப்பிட்டுள்ள ரகத்தையே சேர்ந்ததாக இருக்கிறது :

"நான் இருதலைக் கொள்ளி எறும்பைப் போன்ற நிலையில் இருக்கிறேன். ஆதரவற்ற என் தாயாரையும் சகோதரர்களையும் நான் காப்பாற்றவேண்டுமாயின், நான் ஏதாவதொரு விதத்தில் அரசாங்கத்துடன் ஒத்துழைத்துத் தான் தீரவேண்டும். அரசாங்கத்துடன் ஒத்துழைப்பதென்பது நான் கனவிலும் நினைக்கமுடியாத விஷயமாகும். மற்றொரு புறம், நான் சாத்விக ஒத்துழையாமைக் கொள்கையை உறுதியுடன் கடைப்பிடித்து, தேசத் தொண்டில் என்னை அர்ப்பணம் செய்துகொள்ளுவேனாயின், எனது உறவினர்கள் பட்டினியால் சாவதை என் கண்களாலேயே நான் பார்க்கவேண்டியிருக்கும். மிகவும் தீர்க்காலோசனை செய்தபின் நான் ஒரு முடிவுக்கு வந்துள்ளேன். ஒத்துழையாமையைக் கைவிடுவதில்லை; ஆதரவற்ற என் குடும்பத்தை அதன் விதிப்படி நடக்கட்டும் என்றும் விட்டுவிடுவதில்லை என்பதே அம்முடிவாகும். எனவே எனது தாய்நாட்டின் கதிமோட்சத்தையும், என் குடும்பத்தின் நலனையும் உத்தேசித்து, நெருக்கடியான சமயத்தில் உண்ணாவிரதமிருந்து மரணம் அடைவது ஒன்றுதான் எனக்குள்ள வழியாகும். இந்தவிதமான மரணத்தை சமயம் அனுமதிக்கின்றதா? அத்தகைய மரணத்தை நீங்கள் அங்கீகரிக்கின்றீர்களா? என் சம்பந்தப்பட்ட வரையில், சத்தியத்தைத் தியாகம் செய்வதைக் காட்டிலும் அத்தகைய மரணத்தையே நான் விரும்புகின்றேன். எனது குடும்பத்தைப் பராமரிக்கவேண்டியது எனது புனிதமான கடமை என்பதை நான் அறிகிறேன். அதே சமயத்தில், தாய்நாட்டிற்காக நான் மேற்கொண்டுள்ள ஒத்துழையாமைப் பிரதிக்ஞையை நிறைவேற்ற வேண்டியதும் மிகப்

புனிதமான கடமையேயாகும். எங்களுக்கு நல்ல காலம் உதயமாகும் என்று என் உள்ளத்தில் தோன்றுகிறது. ஆனல், எப்போது என்பது எனக்குத் தெரியவில்லை. எனினும், என் ஆயுட்காலத்தில் சுயராஜ்யம் கிடைக்காவிட்டால், இந்த அரசாங்கத்துடன் நான் எக்காலத்திலும் ஒத்துழைக்கமாட்டேன்.

"1921-இல் ஏற்பட்ட தேசீயக் கல்விசாலைகளில் சிலவற்றைத் தவிர மற்றவை யெல்லாம் மறைந்துவிட்டன. கதருக்கு இன்னும் மக்களின் ஆதரவு கிடைக்கவில்லை. தேசீயக் கல்லூரியில் பட்டம் பெற்ற என்னைப் போன்றவர்கள் வெறுப்பிற்கும் ஏளனத்திற்கும் ஆளாகவேண்டி யிருக்கிறது. நான் மோசமாக நடத்தப்படுவதைப் பற்றி நான் கவலைப்படவில்லை. ஆனல், என் குடும்பம் சகிக்கமுடியாத கஷ்டத்திற்கு உள்ளாகியிருப்பது, என்னைத் துடிக்கும்படி செய்திருக்கிறது. அன்புடன் எனக்குத் தெளிவான வழியைக் காட்டுவீர்களா?"

இந்த இளம் பட்டதாரியைக் குறித்து நான் அனுதாபப்படுகிறேன். எனினும், அவர் கூறும் யோசனையான தற்கொலை ஒரு குற்றமாகும். எல்லா உண்ணுவிரதங்களும் போற்றத்தக்கவை அல்ல. அவர் தமது தற்கொலையால் சுயராஜ்யம் பெற உதவி செய்தவராக மாட்டார். அத்துடன் அதற்கு நிச்சயமாக முட்டுக்கட்டை போட்டவருமாவார். அவரது போக்கு அவரது சுய நம்பிக்கையின்மையையே காட்டுகிறது. அரசாங்கத்தின் கீழ் உத்தியோகத்தை நாடுவதில்லை என்ற அவரது உறுதிக்கு நான் மதிப்புக் கொடுக்கிறேன். அதற்கு அடுத்தபடியாக, அவருக்கு தற்கொலையைத் தவிர வேறு வழி இல்லையா? அவர் குறிப்பிட்டுள்ள தேசீயக் கல்லூரி அவரை ஆதரிக்காவிடில், யோக்கியப் பொறுப்பான முறையில் சம்பாதித்து அவரது தாயாரையும் சகோதரர்களையும் பராமரிப்பதற்கு அவருக்கு எத்தனையோ சந்தர்ப்பங்கள் இருக்கின்றன. உடலால் உழைப்பதற்கான உறுதி அவருக்கு இருக்கிறதா? விரும்பி வேலை செய்யும், யோக்கியப் பொறுப்புள்ள ஒரு தொழிலாளிகூட தகுந்த வேலை கிடைக்காமல் கஷ்டப்படுவதாக எனக்குத் தெரியவில்லை. அத்தகைய ஒரு தொழிலாளிக்கு தேசீய ஸ்தாபனத்திலோ அல்லது தனி நபருக்குச் சொந்தமான வியாபார ஸ்தாபனத்திலோ வேலை கிடைத்துத்தான் தீரும். யோக்கியப் பொறுப்பும், உழைப்பும், விருப்பமும் உள்ள இளைஞர்களான ஆடவர்களும் பெண்களும் தேசீய அலுவல்களுக்குத் தேவையாக இருக்கிருர்கள். தேசீய அலுவல்கள் பூரணமாக வளர்ச்சி அடைவதற்கு, சம்பளம் பெறும் அத்தகைய இளைஞர்களின் உழைப்பு அவசியமாகும். ஓர் இளைஞர் ஒரு நெசவாளியாகவோ அல்லது தச்சு வேலை செய்பவராகவோ அமர்ந்து, நியாயமான ஊதியத்தைப் பெற முடியும். அவர் கதர் சங்கத்திற்கு விண்ணப்பம் செய்துகொள்ளலாம். அதற்குத் தேவையான தகுதிகள் அவரிடம் இருந்தால், அவருக்கு அங்கே வேலை கிடைக்கும். ஓர் இளைஞர் ஒரு காலத்திலும் மனச் சோர்வுக்கு இடம் கொடுத்துவிடக் கூடாது. உண்மையான யோக்கியதைக்கு வெகுமதி கிடைக்காமல் போய்விடாது என்பதை அறிந்துகொள்ளும் அளவுக்கு, அவருக்கு சுய நம்பிக்கை இருக்கவேண்டும்.

—'எங் இந்தியா' – 28—5—1925

# 22

# இறக்கும் வரை உண்ணாவிரதம் தற்கொலையா?

ஸ்ரீ சி. எப். ஆண்ட்ரூஸும் நானும் எங்கள் உள்ளத்திலுள்ள கருத்துக்களை பரிமாறிக்கொள்ளுவது வழக்கம். உதாரணமாக, அவரது கடிதங்கள் ஒன்றிலிருந்து பின்வரும் பகுதியைக் கொடுத்துள்ளேன்:

"ஒரு நண்பர் எழுதியுள்ள கடிதத்தை இத்துடன் அனுப்பியுள்ளேன். 'இறக்கும்வரை உண்ணாவிரதம்' என்ற கொள்கையை இங்கே எவ்வளவு தூரம் வெறுக்கிறார்கள் என்பதையும் அதற்கு எவ்வளவு பலமான எதிர்ப்பு இருக்கிறது என்பதையும் நீங்கள் உணர்ந்திருக்கிறீர்கள் என நான் நினைக்கவில்லை. இந்த வெறுப்பில், ஒரு கிறிஸ்தவன் என்ற முறையில் எனக்கும் பங்கு உண்டு என்பதை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். எல்லாச் சந்தர்ப்பங்களிலும் அக்கொள்கை நியாயந்தான் என்று மிகுந்த கஷ்டத்துடனேயே நான் வாதிப்பது சாத்தியமாகிறது. சென்ற வருடம் அறவே நம்பிக்கையிழந்த நிலையில் வேறு ஒரு வழியும் தோன்றவில்லை. உண்ணாவிரதம் என்ற ஒரு கதவுதான் மூடப்படாமல் இருப்பதுபோல் தோன்றியது. அப்போது கூட, அது எனக்கு மிகுந்த வேதனையையே கொடுத்தது. இருந்தாலும், கடவுளின் சித்தம் எத்தகைய விசித்திரமான உருவத்தில் வந்தாலும் அதற்குத் தலைவணங்க வேண்டும் என்பதை நான் அறிவேன். கடந்த காலத்தில் ஹிந்து சமயத்தில் அதற்கு இடம் இருந்திருக்கிறது என்பதையும் நான் அறிவேன். அவ்விஷயமாக ஒரு ஹிந்துவின் திட்டவட்டமான கருத்து என்ன என்பதையும் அறிந்துகொள்ள நான் முயற்சிக்க வேண்டியவனாக இருக்கிறேன். இதையெல்லாம் பற்றிச் சிந்திக்க நான் முயற்சித்து வருகிறேன். எனினும், அவ்விஷயமாக நான் தெளிவாக எதையும் அறிந்துகொள்ள முடியவில்லை.

"இப்போது உடனடியாகத் தாங்கள் எத்தகைய உண்ணாவிரதத்தையும் மேற்கொள்ளப் போவதில்லை. எனவே, இதையெல்லாம் பற்றி இச்சந்தர்ப்பத்தில் உங்களுக்கு எடுத்துக் கூறுவதுதான் நல்லது என்று எனக்குத் தோன்றியது. சென்ற தடவை நீங்கள் மேற்கொண்ட உண்ணாவிரதம் நியாயமானது என்பதை இங்கே உள்ள ஆட்சேபவாதிகளுக்கு நான் அடிக்கடி எடுத்துக் கூறவேண்டியவனாக இருக்கிறேன். அது நியாயமானது என்பதை நிரூபிக்க, அதனால் உண்டான பலன்களையும் எடுத்துக் காட்டியுள்ளேன். மிருதுவான மனச்சாட்சி படைத்த குருதேவர் கூட, அந்த உண்ணாவிரதத்தின் பெருமையையும் உயர்வையும் குறித்துப் பாராட்டியதையும் எடுத்துக் கூறியிருக்கிறேன். உங்கள் நாட்டை விடுதலை செய்வதில் உங்களுக்கு விரோதமாக இல்லாமல் உங்களுக்குச் சாதகமாக ஆங்கிலேயர்களின் மனத்தை மாற்ற நீங்கள் பெருமுயற்சி செய்து வருகிறீர்கள். ஆங்கிலேயர்களிடம் உங்களுக்கு அன்பும் மதிப்பும் உண்டு. அவர்கள் சம்பந்தப்பட்ட வரையில் கீழ்க்கண்ட நிலையே உண்மையாகும்:



1948 ஜனவரி 20-ந் தேதி, உண்ணாவிரதத்திற்குப் பிறகு களைப்புற்றிருந்த காந்திஜியை பிரார்த்தனைக் கூட்டத்திற்கு தூக்கிச் செல்லுகின்றனர்.



1946 மே—சிம்லாவில் பிரார்த்தனைக் கூட்டத்திலிருக்கிறார் காந்திஜி.

1. "தீண்டாமையை ஒழிப்பதன்மூலம் அவர்களுடைய அனுதாபத்தைப் பெறுவது எளிதாகும். இவ்விஷயமாக உங்களுடைய முயற்சி ஆங்கிலேயர்களின் உள்ளத்தை உண்மையிலேயே உருக்கியிருக்கிறது.

2. "இறக்கும் வரையில் உண்ணுவிரதமிருந்து தற்கொலை செய்து கொள்ளும் நோக்கத்தின் மூலம் அவர்களுடைய அனுதாபத்தைப் பெறுவது எளிதல்ல. இவ்விஷயமாக அவர்களுக்கு ஏற்பட்டுள்ள திகிலும் வெறுப்பும் மிகவும் அதிகமாகும். அவ்விதமான வெறும் மிரட்டல் கூட, அவர்களுடைய மனச்சாட்சியைத் தட்டி யெழுப்புவதற்குப் பதிலாக, அதை உணர்ச்சியற்றுப் போகும்படி செய்துவிடுகிறது.

"இதையெல்லாம் இப்போது உங்களுக்கு நான் எடுத்துக் கூறுவதை நீங்கள் விரும்புவீர்கள் என்பது எனக்குத் தெரியும். இதையெல்லாம் முன்பே நான் உங்களிடம் கூருததற்குக் காரணம் என்னவெனில், இது இப்போது உடனடியான ஒரு பிரச்னையாக இராததால் நான் அமைதியாக உங்களுக்கு எழுத முடியும் அல்லவா?"

இந்தக் கடிதம், நான் பகிரங்கமாக பதில் அளிப்பதற்கு உரியது. அதனுலேயே இதைப் பிரசுரித்துள்ளேன். ஹிந்து சமயத்தைத் தூய்மைப்படுத்தும் மிகவும் கஷ்டமான, கலக்கத்தைக் கொடுக்கும் வேலையில், நான் உலகத்தின் ஒவ்வொரு பாகத்திலும் உள்ள மக்களின் உண்மையான அனுதாபத்தை நாடுகிறேன். ஹிந்து சமயத்தைத் தூய்மைப்படுத்துவது ஒருவிதத்தில் மனித குடும்பம் முழுவதையுமே தூய்மைப்படுத்துவதாகும்.

மத சம்பந்தமான காரணங்களுக்காக உண்ணுவிரதம் இருப்பதை, குறிப்பாக 'இறக்கும் வரையில் உண்ணுவிரதம்' என்பதை ஆங்கிலேயர்கள் வெறுக்கிருர்கள். இதை நான் அறிவேன். தீனபந்து ஆண்ட்ரூஸ்கூட வேண்டா வெறுப்புடன் ஒப்புக்கொண்ட எனது உண்ணுவிரதத்தினுல், இந்தியாவில் விபரீதமான பலன்களே ஏற்பட்டன என்பதை நான் ஒப்புக்கொள்ள விரும்புகிறேன். ஹிந்துக்கள் பரபரப்படைந்து செய்த காரியங்களை, நிதான நிலையை அடைந்தபின் மாற்றிக்கொண்டுவிட்டார்கள். நான் உண்ணுவிரதம் இருந்தபோது, அவர்கள் கோவில்களையும் கிணறுகளையும் யாதொரு தடையுமின்றி ஹரிஜனங்களுக்குத் திறந்துவிட்டார்கள். ஆனுல், உண்ணுவிரதம் முடிந்தபின், அவற்றில் சிலவற்றை மூடிவிட்டார்கள். எனது உண்ணுவிரதத்தின் நிர்ப்பந்தம் காரணமாகவே சில மாகாணங்கள் எராவ்டா ஒப்பந்தத்திற்கு இசைந்தன என்பதை நான் அறிவேன். நான் உண்ணுவிரதத்தை ஆரம்பித்தபோது, இதையெல்லாம் நிச்சயமாக எதிர்பார்க்கவில்லை. எனினும், உண்ணுவிரதத்தைக் குறித்து நான் வருந்தவில்லை. முதலாவதாக, உண்ணுவிரதம் நானுக மேற்கொண்டதல்ல. இரண்டாவதாக, உண்ணுவிரத நிர்ப்பந்தம் காரணமாக அந்தக் காரியங்கள் செய்யப்பட்டன என்ருலும், அவை தீமையான செயல்கள் அல்ல. அவை தீச் செயல்களாக இருந்தால், அவற்றை மாற்ற நானே என்னுல் இயன்றதையெல்லாம் செய்திருப்பேன்.

இப்போது எனது நோக்கம் உண்ணாவிரதத்தின் பலன்களைப் பரிசீலனை செய்வதல்ல; தெய்விகத் திட்டத்தின் ஒரு முக்கிய மான அம்சம் என்ற முறையில் உண்ணாவிரதத்தையே பரிசீலனை செய்வதுதான். அது அத்தகைய ஓர் அம்சம் எனில், உண்ணா விரதம் கைக்கொள்ளப்படும் ஒவ்வொரு தடவையிலும், அதைப் பற்றி விரிவான விளக்கம் கூறிக்கொண்டிருக்கவேண்டிய அவசி யம் இல்லை.

உண்ணாவிரதத்திற்காக சனாதனிகள் என்னைக் கடிந்து கொள்ளுகிறார்கள். எனது உண்ணாவிரதத்தைக் குறித்து ஹிந்து சக ஊழியர்களும் வருந்தலாம். எனினும், இன்றைய ஹிந்து மதத் தில்கூட உண்ணாவிரதம் ஒரு முக்கியமான அம்சம் என்பதை அவர் கள் எல்லோரும் அறிவார்கள். எனவே உண்ணாவிரதத்தைக் குறித்து அவர்கள் திகில் அடைவதாகப் பாசாங்கு செய்ய முடி யாது. ஹிந்து மத இலக்கியங்களில் உண்ணாவிரதத்திற்கு எத்த னையோ ஆதாரங்கள் இருக்கின்றன. இன்றுகூட, ஆயிரக்கணக் கான ஹிந்துக்கள் அற்ப காரணத்திற்காகவும் உண்ணாவிரதம் இருக்கிறார்கள். தீங்கு இல்லாத ஒரு முறை அதுதான். எத்த னையோ நல்ல காரியங்களைப்போல் உண்ணாவிரதங்களும் துஷ்பிர யோகம் செய்யப்படுகின்றன என்பதில் ஐயமில்லை. அதைத் தவிர்க்க முடியாது. சிற்சில சமயங்களில் நன்மையின் பெயரால் தீங்கு செய்யப்படுகிறது என்பதற்காக, ஒருவர் நன்மையே செய்யாமல் இருந்துவிட முடியுமா?

இவ்விஷயமாக, எனது கிறிஸ்தவ ப்ராடெஸ்டெண்ட் நண்பர்களைச் சமாதானப்படுத்துவதுதான் எனக்குக் கஷ்டமாக இருக்கிறது. அவர்களிடையே எனக்கு ஏராளமான நண்பர்கள் இருக்கிறார்கள். அவர்களுடைய நட்பில் எனக்குள்ள மதிப்பை அளவிட முடியாது. முதன் முதலாக அவர்களுடன் எனக்குத் தொடர்பு ஏற்பட்டபோதே, உண்ணாவிரதங்களில் அவர்களுக் குள்ள வெறுப்பை நான் அறிவேன். எனினும், அந்த வெறுப்பிற் குக் காரணத்தை அறிந்துகொள்ள என்னால் இயலவேயில்லை என்பதை நான் அவர்களிடம் ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும்.

உடலை வருத்திக்கொள்ளுவது, ஆன்மிக முன்னேற்றத்தின் ஓர் அம்சம் என்பது, உலகம் முழுவதும் ஒப்புக்கொள்ளப்பட்ட விஷயமாகும். உண்ணாவிரதமில்லாத பிரார்த்தனையே இல்லை. பூரணமான உண்ணாவிரதம் பூரணமான தன்மறுப்பே ஆகும். அது தான் மிகமிக உண்மையான பிரார்த்தனை. "எனது உயிரையே எடுத்துக்கொள்ளுங்கள், எல்லாம் தங்களுக்கே அர்ப்பணம்"* என்பது வெறும் வாய்ப் பேச்சோ அல்லது அலங்காரப் பேச்சோ அல்ல. சிறிதும் தயக்கமோ தடுமாற்றமோ இன்றி எல்லாவற்றை யும் மகிழ்ச்சியுடன் அர்ப்பணம் செய்யவேண்டும். உண்ணுமல் இருப்பதும், தண்ணீர்கூட அருந்தாமல் இருப்பதும், எல்லா வற்றையும் அர்ப்பணம் செய்வதற்கு முதற்படியே ஆகும்.

---

* இது பைபிளிலிருந்து எடுக்கப்பட்ட ஒரு மேற்கோளாகும்.

இக்கட்டுரையை எழுதுவதற்காக நான் சிந்தனை செய்து கொண்டிருந்தபோது, கிறிஸ்தவர்களால் எழுதப்பட்ட ஒரு துண்டுப் பிரசுரம் என் கைக்கு வந்தது. இதில், உபதேசத்தைக் காட்டிலும் உதாரணத்தின் அவசியத்தைப் பற்றிய ஓர் அத்தியாயம் அடங்கியுள்ளது. இதில் பைபிளிலிருந்து ஒரு மேற்கோள் கொடுக்கப்பட்டிருக்கிறது. தீர்க்கதரிசி, தாம் நினிவே மாநகருக்குள் பிரவேசித்ததும் நாற்பதாவது நாளில் அந்நகர் அழிக்கப்பட்டுவிடும் என்று ஜோஸ்யம் கூறினார்.

பைபிளில் யோனா 3-ஆம் அத்தியாயத்தில் உள்ள அந்த விவரம் பின்வருமாறு:

"கடவுளிடம் நம்பிக்கையுள்ள நினிவே நகர் மக்கள், தங்கள் நகர் அழிக்கப்படும் என்ற செய்தியைக் கேட்டு தாங்கள் உண்ணாவிரதம் இருக்கப் போவதாகப் பிரகடனம் செய்தார்கள். அவர்களில் மிகப் பெரியவர்கள் முதல் மிகச் சிறியவர்கள் வரையில் எல்லோரும் முரட்டுக் கித்தான் துணிகளை உடுத்திக்கொண்டார்கள். இந்தச் செய்தி நினிவே மன்னனுக்கு எட்டிய போது, அவன் சிம்மாசனத்திலிருந்து எழுந்துவந்து தனது ராஜ உடைகளைக் களைந்துவிட்டு, கித்தான் துணிகளைக் கட்டிக்கொண்டும் சாம்பலைப் பூசிக்கொண்டும் உட்கார்ந்தான். எல்லோருக்கும், அவனும் அவனது பிரதானிகளும் விடுத்த கீழ்க்கண்ட கட்டளையையும் பிரகடனப்படுத்தும்படி செய்தான். 'நினிவேயில் உள்ள மனிதர்கள், மிருகங்கள், மாடுகள், ஆடுகள் யாரும் எதையும் ருசி பார்க்கக்கூடாது; எதையும் உண்ணக்கூடாது; தண்ணீர் குடிக்கக்கூடாது. ஆனால், மனிதர்களும் மிருகங்களும் கோணித்துணிகளை உடுத்திக்கொண்டு, கடவுளை நோக்கி உரக்கக் கதறவேண்டும். அவர்களில் எவரும் தீய வழியிலிருந்து விலகிவிடவேண்டும். அவர்கள் பலாத்காரத்தையும் கொடுமையையும் விட்டுவிடவேண்டும். யாருக்குத் தெரியும்? இவ்விதமெல்லாம் செய்தால் கடவுள் இரங்கி, தமது கடுமையான கோபத்தை விட்டுவிடலாம். நாம் எல்லோரும் அழிந்துவிடாமல் தப்பலாம்.'' அவர்களுடைய செயல்களையும் அவர்கள் தீய வழியை விட்டுவிட்டதையும் கடவுள் கண்டார். எனவே, அவர் கோபம் தணிந்து நினிவே நகர் அழிந்துவிடாமல் இருக்க அருள் புரிந்தார்.''

இதுதான் இறக்கும்வரை உண்ணாவிரதமாகும். எனினும், இறக்கும் வரை உண்ணாவிரதம் ஒவ்வொன்றும் தற்கொலையாகி விடாது. நினிவே மக்களும் மன்னரும் மேற்கொண்ட இந்த உண்ணாவிரதம், தங்களைக் காப்பாற்றும்படி இறைவனிடம் செய்து கொண்ட மகத்தான, பணிவான பிரார்த்தனையே. சாபத்திலிருந்து தங்களுக்கு விடுதலையா அல்லது மரணமா என்பதை அவர்கள் முடிவு செய்துகொள்ள வேண்டியிருந்தது. எனது உண்ணாவிரதம் அது போன்றதேயாகும். பைபிளில் உள்ள இந்த அத்தியாயம், ராமாயணத்தில் உள்ள ஒரு சம்பவம் போல் இருக்கிறது அல்லவா?

எனது அடிப்படையான நிலையை நண்பர்கள் அறிந்து கொள்ள வேண்டும். அந்தரங்கமானதும், பகிரங்கமானதுமான உண்ணாவிரத முறையில் எனக்கு ஆழ்ந்த நம்பிக்கை உண்டு.

எனக்குக்கூட எச்சரிக்கையின்றி, மீண்டும் உண்ணாவிரதம் இருக்கும்படியான நிலைமை எந்தச் சமயத்திலும் ஏற்படலாம். அத்தகைய நிலைமை ஏற்படுமாயின், அதை ஒரு பெரும் வாய்ப்பாகவும், மகிழ்ச்சியை அளிக்கக் கூடிய ஒரு விஷயமாகவுமே நான் கருதி அதை வரவேற்பேன்.

தீண்டாமை ஒரு மகா பாவமாகும். பல ஊழியர்கள் ரத்தம் சிந்தினாலன்றி அந்தப் பாவத்தைக் கழுவ முடியாது. ஆனால், அத்தகைய ஊழியர்கள் அந்தப் பாவத்தை ஒழிப்பதற்குத் தகுதி வாய்ந்த கருவிகளாக இருக்கவேண்டும். அத்தகைய தியாகத்திற்கு நான் தகுதி வாய்ந்தவனாக இருப்பேனாயின், எனக்குச் சந்தர்ப்பம் வரும். அத்தகைய சந்தர்ப்பம் வந்தால், அதைக் குறித்து எனது நண்பர்கள் ஆனந்தமடைய வேண்டும் என்பதே எனது விருப்பமாகும். அதை அவர்கள் எதிர்க்கவோ அல்லது அதைக் குறித்துக் கலக்கம் அடையவோ கூடாது.

—'ஹரிஜன்' – 15—4—1933

# 23

# யதீந்திரநாத் தாஸின் உண்ணாவிரதம்

நாட்டைக் கலக்கி வரும் ஏதாவதொரு பிரச்னையைக் குறித்து நான் மௌனமாக இருந்தால், தேசத்தின் நன்மையை உத்தேசித்தும், அது போன்ற வேறு தகுந்த காரணங்களுக்காகவுமே மௌனமாக இருப்பேன் என்பதை, எனக்குக் கடிதம் எழுதும் அன்பர்கள் இதற்குள் உணர்ந்து கொண்டிருப்பார்கள் என்று நான் நம்பியிருந்தேன். எனவே, யதீந்திரநாத் தாஸின்*

*1929-ஆம் ஆண்டில், ஐக்கிய மாகாணம், வங்காளம், பஞ்சாப் முதலிய இடங்களில் புரட்சிக் கட்சியினரின் நடவடிக்கைகள் அதிகமாயின. பலவிடங்களில் சதி வழக்குகள் தொடரப்பட்டன. பயங்கர சதியில் கலந்துகொண்டதாக பகத் சிங், பூதகேசுவர தத் முதலிய பல இளைஞர்கள் மீதும் பிரிட்டிஷ் அதிகாரிகள் வழக்குத் தொடர்ந்தனர். அதுதான் பிரசித்திபெற்ற லாகூர் சதி வழக்காகும். அவ்வழக்கில் கோர்ட்டிலும், சிறையிலும் போலீஸ் அதிகாரிகள் செய்த அட்டகாசங்களைக் கண்டித்து, தேசியக் கைதிகள் உண்ணாவிரதமிருந்தனர். பல நாட்கள் வரையில் தொடர்ந்து நடந்த அந்த உண்ணாவிரதம், தேச மக்களிடையே கவலையையும் கலக்கத்தையும் உண்டாக்கியது. உண்ணாவிரதம் இருந்த கைதிகளின் நிலைமை மிகவும் பலவீனமாக இருந்ததால் அவர்களால் கோர்ட்டிற்கு வர இயலவில்லை. எனவே, வழக்கு நடவடிக்கைகளை அடிக்கடி ஒத்திவைக்க நேர்ந்தது. பின்னர் அதிகாரிகள் உண்ணாவிரத சட்டம் ஒன்றைத் தயாரித்தார்கள். கைதிகளும் கைதிகளின் வக்கீல்களும் கோர்ட்டுக்கு வராவிட்டால் கூட, வழக்குகளை விசாரித்து முடிவு செய்யலாம் என்பதே அந்த அக்கிரமமான சட்டத்தின் நோக்கமாகும். பகத் சிங், தத், யதீந்திரநாத் தாஸ் முதலியோரின் உண்ணாவிரதம் இரண்டு மாதங்களுக்கு மேல் நீடித்தது. 61 நாட்கள் வரையில் உண்ணாவிரதம் இருந்த யதீந்திரநாத் தாஸ் 1929 செப்டம்பர் 13-ஆம் தேதி உயிர் நீத்தார். அதனால் ஆத்திரமடைந்த மக்களின் பொதுக்கூட்டங்களும் ஊர்வலங்களும் இந்தியாவெங்கும் நிகழ்ந்தன. அவ்வருடத்தில் நடந்த காங்கிரஸ் தேசீய மகாசபைக் கூட்டத்திலும் யதீந்திரநாத் தாஸின் உயிர்த்தியாகத்தைப் பாராட்டித் தீர்மானம் நிறைவேறியது.

ஆன்மத் தியாகத்தைப் பற்றியும், பொதுவாக பட்டினி கிடப்பவர்களின் பிரச்னையைப் பற்றியும் ஏராளமாகக் கேள்விகளும் கண்டனங்களும் அனுப்பி என்னைத் திக்குமுக்காடச் செய்யமாட்டார்கள் என்றும் நான் நம்பியிருந்தேன். கோரக்பூரில் எனக்கு அளிக்கப்பட்ட உபசாரப் பத்திரங்கள் ஒன்றில், நேரடியாக என்னிடம் இந்தக் கேள்வி கேட்கப்பட்டது. எனவே, அக்கேள்விக்கு நான் விடையளிப்பதுதான் மரியாதையாகும். முற்றிலும் தேச நலனை உத்தேசித்தே நான் மௌனமாக இருந்தேன் என்பதுதான் எனது விடையாகும். அவ்விஷயமாக என் அபிப்பிராயத்தைக் கூறுவது, எந்த லட்சியத்திற்காக யதீந்திரநாத் உண்ணுவிரதம் இருந்து உயிர் நீத்தாரோ, அந்த லட்சியத்திற்கு அதிகத் தீமையை உண்டாக்குமென்று நான் கருதினேன். சிற்சில சந்தர்ப்பங்களில் மௌனமாக இருப்பதே விவேகமாகும். இது, அத்தகைய சந்தர்ப்பங்களில் ஒன்று என்பதே எனது அபிப்பிராயம். தேசத்தைப் பாதிக்கக் கூடிய பல முக்கியமான பிரச்னைகளையொட்டியும் எனக்கு உறுதியான அபிப்பிராயங்கள் உண்டு. அப்படியிருந்தும் அவற்றையொட்டி நான் முற்றிலும் மௌனமாகவே இருக்கிறேன் என்பதை வாசகர்களுக்குக் கூற விரும்புகிறேன். மக்களிடையே செல்வாக்கை இழக்கும்படி நேரினும், இன்னும் மோசமான நிலைக்கு உள்ளாகும்படி நேர்ந்தாலும் கூட, பல சமயங்களில் மௌனமாக இருக்கவேண்டியது பொதுத் தொண்டில் ஈடுபட்ட ஒவ்வொருவருடைய கடமையும் ஆகும். அது போலவே, தமது மனத்தை விட்டுப் பேச வேண்டிய சந்தர்ப்பம் ஏற்படும்போது, தமது உயிருக்கே அபாயம் நேருவதாக இருந்தாலும்கூட பேச வேண்டியது அத்தியாவசியமாகிறது.

உண்ணுவிரத தத்துவம் சம்பந்தப்பட்டவரையில், இந்தப் பத்திரிகையில் பல தடவைகளில் எனது பொதுவான கருத்துக்களைப் பூரணமாகக் குறிப்பிட்டிருக்கிறேன். எனவே, அதை நான் மேற்கொண்டும் விளக்குவது அனாவசியமாகும். இவ்விஷயமாகக் கடிதம் எழுதியுள்ள ஏராளமானவர்களுக்கும் இதைக் காட்டிலும் அதிகத் திருப்தி அளிக்க முடியாததற்காக வருந்துகிறேன். யதீந்திரநாத்தின் குற்றம் அல்லது குற்றமின்மைக்கும் எனது மௌனத்திற்கும் யாதொரு தொடர்பும் இல்லை என்று மாத்திரம் நான் உறுதி கூற முடியும். 'கிரிமினல்' குற்றவாளியைக் கூட நாகரிகமாக நடத்தவேண்டியதும், அவருக்கு நாகரிகமான உணவு அளிக்க வேண்டியதும் அவசியமாகும். அவர் அவற்றிற்கு உரியவரே. விசாரணையில் உள்ள கைதி, பொது மக்கள் சம்பந்தப்பட்டவரையில் நிரபராதி என்றே கருதப்பட வேண்டும். யதீந்திரநாத்தைப் பற்றி நான் கேள்விப்பட்ட வரையில், அவரை எல்லோரும் புகழ்ந்தே கூறுகிறார்கள். நான் எவ்விதம் பலாத்கார நடவடிக்கைகளில் ஈடுபட முடியாதோ அது போலவே யதீந்திரநாத்தும் பலாத்காரச் செயல்களில் ஈடுபடவோ, அவற்றைப்பற்றி நினைக்கவோ முடியாதென்று என்னிடம் பலரும் உறுதியாகக் கூறியிருக்கிறார்கள்.

'எங் இந்தியா' - 17—10—1929

## 24

# எனது சங்கடமான நிலை

ஓர் அன்பர் பின்வருமாறு எழுதுகிறார்:

"உங்களுடைய உண்ணாவிரதங்களிலும், மற்றத் தவங்களிலும், பிரார்த்தனைகளிலும் ஏதோ குறை இருக்கிறது. அதனால்தான், அவை சரியான பலன்களைக் கொடுப்பதில்லை. இந்தத் தியாகங்கள் பலன் தரத்தக்கவையாக இருக்க வேண்டுமாயின், அவற்றைப் பற்றித் தம்பட்டம் அடிக்கக் கூடாது. ஆனால், அவை மௌனமாகவும் ரகசியமாகவும் அனுசரிக்கப்பட வேண்டும். புண்ணியத்தை மறைவாகச் செய்யவேண்டும் என்றும், பாவத்தை ரகசியமாக வைக்காமல் வெளிப்படுத்திவிட வேண்டும் என்றும் சாத்திரங்கள் கூறுகின்றன."

இந்த அன்பர் கூறுவதில் மிகுந்த உண்மை இருக்கிறது. எனது உண்ணாவிரதங்கள், தவங்கள், பிரார்த்தனைகள் முதலியவற்றில் சில, ஏதோ பொதுக் காரணங்களுக்காக அனுசரிக்கப்பட்டனவாதலால், அவை பகிரங்கமாக இருக்கவேண்டியது அவசியமாயிற்று. நான் மிகவும் சங்கடமான ஒரு நிலையில் இருக்கிறேன். பொது மக்களுக்குத் தெரியாமல் இருக்கவேண்டும் என்று நான் விரும்பும் ஒரு விஷயம் கூட, அவ்விதம் இருக்க அனுமதிக்கப்படுவதில்லை. எனவே, நான் பணிவுடன் என் வழியில் செல்லவேண்டியவனாகவும், இந்நிலையில் என் தவங்களின் மூலம் எவ்வளவுக்கு சாத்தியமோ அவ்வளவுக்கு மனஆறுதலைப்பெறவேண்டியவனாகவும் இருக்கிறேன். சொந்த தவங்களைப் பகிரங்கப்படுத்த நான் விரும்பவில்லை என்று நான் உறுதி கூறுவதே போதுமானது. எனது பகிரங்கமான தவங்கள் சம்பந்தப்பட்டவரையில், அவற்றின் இயல்பான சிறப்பைப் பற்றி எனக்கு எவ்விதமான ஐயமும் இல்லை. அவை எப்போதுமே உடனடியாக பலன்களைக் கொடுத்து விடுவதில்லை என்பதைக் குறித்து நான் கவலைப்படவில்லை. நல்லதோ அல்லது கெட்டதோ, ஒவ்வொரு செயலும் கண்களுக்குத் தெரியக் கூடிய, உடனடியான பலனைக் கொடுக்க வேண்டுமென நினைப்பதாயின், பின்னர் நம்பிக்கை என்பது ஓர் அற்ப விஷயமாகிவிடும். பலன் உண்டா அல்லது இல்லையா என்பது நிச்சயமாகத் தெரியாமல் இருப்பதுதான், ஒருவரைப் பெருமுயற்சி செய்யும்படி தூண்டுவதுடன், அவரைப் பணிவுடன் இருக்கும்படியும் செய்யும்; அது, அவரது நம்பிக்கைக்கும் நேர்மைக்கும் ஒரு சோதனையாகவும் அமையும்.

'எங் இந்தியா' – 24—12—1925

# 25

# உடலும் உண்ணுவிரதமும்

சிற்சில சமயங்களில் உண்ணுவிரதத்தின் மூலம் நோயைக் குணப்படுத்துவதில் நம்பிக்கையுள்ள ஒரு வைத்திய நண்பர், நான்கண்டறிந்தவரையில்உண்ணுவிரதத்திஞல்உடலில் ஏற்படும் பலாபலன்களைக் குறிப்பிடும்படி என்னைக் கேட்டுக் கொண்டிருக்கிருர். அதனுல் ஏற்படும் பலாபலன்கள் மிகவும் அதிகம். உண்ணுவிரதம் இருந்த பலர் அபாயத்திற்கு உள்ளானதையும் நான் அறிவேன். எனவே, வைத்திய நண்பரின் கோரிக்கைக்கு நான் மகிழ்ச்சியுடன் இணங்குகிறேன்.

அநேகமாக எனது உண்ணுவிரதங்கள் யாவும் தார்மிக நோக்கத்திற்காகவே மேற்கொள்ளப்பட்டன. எனினும், அவற்றினுல் உடலுக்கு ஏற்படும் சாதக பாதகங்களைக் கவனிக்க நான் தவறிவிடவில்லை. அதற்குக் காரணம் என்னவெனில், நான் பிடிவாதமுள்ள ஓர் உணவு சீர்திருத்தக்காரன் என்பதுடன், மருந்துகளுக்குக் கட்டுப்படாத பல நோய்களும் உண்ணுவிரதத்திஞல் தீரக்கூடும் என்பதில் நம்பிக்கையுள்ளவன் என்பதுமேயாகும். இருந்தாலும், உண்ணுவிரதத்திஞல் ஏற்படக்கூடிய திட்டவட்டமான பலன்களை நான் குறித்து வைத்துக் கொள்ளவில்லை என்பதை ஒப்புக்கொள்ள வேண்டும். இதற்குக் காரணம் சாதாரணமானதே. அதாவது சரீர சம்பந்தமான பலன், தார்மிக பலன் இரண்டையும் சேர்த்துக் கவனிப்பது சாத்தியமானதல்ல. உடலில் ஏற்படக் கூடிய பலாபலன்களை நான் கவனிக்க இயலாதபடி என் கவனம் முழுதும் தார்மிக பவன்களிலேயே இருந்தது. எனவே, உடல் சம்பந்தமான பலாபலன்களைப்பற்றி நான் பொதுவாகவே கூறமுடியும். அவற்றைப்பற்றிய திட்டவட்டமான கருத்துக்களை அறிய விரும்புவோர். டாக்டர்அன்சாரியிடமிருந்தும், அப்துர் ரஹ்மானிடமிருந்தும் அவற்றைத் தெரிந்து கொள்ளலாம். சென்ற வருடம் நான் மேற்கொண்ட உண்ணுவிரதத்தின் போது, அவ்விருவரும்தான் எனக்கு வைத்திய பரிசோதகர்களாகவும் வழிகாட்டிகளாகவும் இருந்தார்கள். அவர்கள் மிகுந்த சிரமம் எடுத்துக் கொண்டு, எப்போதும் என் படுக்கைக்கு அருகிலேயே இருந்தனர். என்னைக் கவனித்துக் கொள்ளுவதில் அவர்கள் காட்டிய மனப்பூர்வமான அக்கறை மகத்தானது.

*1914*-இல் தென்னுப்பிரிக்காவில் நான் 14 நாட்கள் உண்ணுவிரதம் இருந்தேன். அதுதான் எனது இரண்டாவதான நீண்டகால உண்ணுவிரதமாகும். அதனுல் நான் ஓர் அபாயத்திற்கு உள்ளானேன் என்பதை முதலிலேயே கூறிவிடுகிறேன். அப்போது உண்ணுவிரதத்தை முடித்ததும், இரண்டாவது நாளே மும்முரமாக நடக்க ஆரம்பித்துவிட்டேன். அதனுல் எவ்வித

அபாயமும் ஏற்படாதென்றே கருதினேன். நான் சற்றேறக் குறைய மூன்று மைல்கள் வரை நடந்தேன். இரண்டாவது அல்லது மூன்ருவது நாள் கணுக்காலில் சகிக்க முடியாத வலி உண்டாயிற்று. அதற்குக் காரணம் என்ன என்பதை நான் அறியவில்லை. எனவே, வலி தணிந்ததும் நான் மீண்டும் விடாப் பிடியாக நடக்கத் தொடங்கினேன். இந்த நிலையில்தான் நான் தென்னுப்பிரிக்காவிலிருந்து லண்டனுக்குப் போய்ச் சேர்ந்தேன். அங்கே டாக்டர் ஜீவராஜ் மேத்தா என்னைப் பரிசோதனை செய்தார். நான் நடப்பதில் பிடிவாதம் காட்டினல், நான் ஆயுள் முழுவதும் ஒரு முடவனுகக் காலம் கழிக்க நேரும் என்றும், எனவே நான் குறைந்தது இரண்டு வாரங்களுக்காவது படுத்த படுக்கையில் இருக்க வேண்டும் என்றும் கூறினர். எனினும், அவர் அவ்விதம் எச்சரிக்கை செய்தபோது காலம் கடந்து விட்டது. அதற்குள்ளேயே, பொதுவாக எனது ஆரோக்கிய நிலை சீர்கெட்டுவிட்டது. அதற்கு முன், அதிகக் களைப்பின்றி நான் ஒரு நாளைக்கு நாற்பது மைல் கூட நடக்கும் ஆற்றல் பெற்றிருந்தேன். அந்த நாட்களில் ஒரு நாளைக்கு இருபது மைல்கள் நடப்பது எனக்குப் பெரிய காரியமல்ல. ஆனல், நான் அறியாமையினல் என் உடலுக்கு அதிகக் கஷ்டத்தைக் கொடுத்து, நல்ல ஆரோக்கியமான உடலை நிரந்தரமாகக் கெடுத்துக் கொண்டேன். அதன் விளைவாக சூலை நோயால் நான் கடுமையாகக் கஷ்டப்பட நேர்ந்தது. என் வாழ்க்கையிலேயே கடுமையான ஒரு நோய்க்கு நான் உட்பட்டது அதுதான் முதல் தடவையாகும். மிகுந்த கஷ்டத்திற்குக் காரணமான இந்தப் பரிசோதனையிலிருந்து நான் ஒரு விஷயத்தைக் கற்றுக்கொண்டேன். அதாவது உண்ணுவிரதத்தின்போதும், உண்ணுவிரதம் இருந்த கால அளவுக்குத் தகுந்தவாறு அதன் பிறகும், முற்றிலும் ஓய்வு எடுத்துக் கொள்ள வேண்டியது அவசியம் என்பதும், இந்த சாதாரண விதியை அனுசரித்து நடந்தால், உண்ணுவிரதத்தின் விளைவாகத் தீங்கு ஏற்படுமோவென அஞ்சவேண்டியதில்லை என்பதுமே நான் கற்றுக் கொண்டதாகும். உண்மையில், ஒழுங்கான கட்டுப்பாடுடன் அனுசரிக்கப்பட்ட உண்ணுவிரதத்தினல் உடலுக்கு நன்மை ஏற்படுகிறது என்பதும் எனது உறுதியான அபிப்பிராயமாகும். ஏனெனில், உண்ணுவிரதத்தின்போது, உடலில் உள்ள பல அசுத்தங்களும் வெளியாகிவிடுகின்றன. இந்த வருடத்தைப்போல் சென்ற வருடம் நான் மேற்கொண்ட உண்ணுவிரதத்தின் போதும் தண்ணீருடன் சோடாவும் உப்பும் கலந்து சாப்பிட்டேன். ஆனல், அதற்கு முந்திய உண்ணுவிரதத்தின்போது அவ்விதம் நான் சாப்பிடவில்லை. உண்ணுவிரதங்கள் இருக்கும்போது, எனக்கு தண்ணீரின் மீது எப்படியோ வெறுப்பு ஏற்பட்டுவிடுகிறது. சோடாவும் உப்பும் கலந்தால் அவ்வளவு வெறுப்பு இருப்பதில்லை. நிறைய தண்ணீர் குடித்ததால் உள்ளேயுள்ள பாகங்கள் சுத்தமாயின. வாயும் உலர்ந்து விடாமல் ஈரமாக இருந்தது. ஆறிலிருந்து எட்டு அவுன்ஸ் தண்ணீரில் ஐந்து குன்றுமணிகள் அளவு உப்பும் அதே அளவு

சோடாவும் சேர்க்கப்பட்டன. பகலில் 8 தடவையாக 40-லிருந்து 48 அவுன்ஸ் வரையில் தண்ணீர் குடித்தேன். ஒவ்வொரு நாளும் தவருமல் 'எனிமா' எடுத்துக் கொண்டேன். அதற்காக ஒன்பது அவுன்ஸ் தண்ணீரில் சற்றேறக்குறைய நாற்பது குன்று மணிகள் அளவுள்ள உப்பையும், அநேகமாக அதே அளவு சோடாவையும் சேர்த்துக் கொண்டேன். தண்ணீர் எப்போதும் வெதுவெதுப்பாகவே இருந்தது. ஒவ்வொரு நாளும் படுக்கையில் இருந்தவண்ணம் எனக்கு கடற்பஞ்சு ஸ்நானம் கொடுக்கப் பட்டது. இந்த ஆண்டிலும் சென்ற ஆண்டிலும் நான் உண்ணுவிரதம் இருந்தபோது, இரவில் சுகமாகத் தூங்கினேன். பகலிலும் குறைந்தது ஒரு மணிநேரமாவது தூங்கினேன். சென்ற உண்ணுவிரதத்தின் போது, மூன்றரை நாட்கள் வரையில் நான் காலை 4 மணியிலிருந்து இரவு 8 மணிவரையில் வேலை செய்தேன். உண்ணுவிரதப் பிரச்னை சம்பந்தமாக வாதித்தேன்; எனது கடிதப் போக்கு வரத்தைக் கவனித்தேன்; பத்திரிகாசிரியர் அலுவல்களையும் செய்தேன். நான்காவது நாள் எனக்கு கடுமையான தலைவலி உண்டாயிற்று. வேலை செய்ய முடியவில்லை. நான்காவது நாள் மாலையில் நான் எல்லா வேலைகளையும் நிறுத்திவிட்டேன். மறுநாள் எனக்குத் தெம்பாக இருந்தது; களைப்பு உணர்ச்சி போய்விட்டது; தலைவலியும் அநேகமாகத் தணிந்துவிட்டது. ஆருவது நாள் எனக்கு மேலும் அதிகத் தெம்பாக இருந்தது. ஏழாவது நாள் எனது மௌன தினமாகும். அன்று எனக்கு மிகுந்த ஆரோக்கியமாகவும் தெம்பாகவும் இருந்ததால், கை நடுக்கமின்றி உண்ணுவிரதத்தைப் பற்றி எனது கட்டுரையை என்னுல் எழுத முடிந்தது.

உண்ணுவிரதம் இருந்தபோது பசியினுல் ஒருபோதும் நான் வேதனைக்கு உள்ளாகும்படி நேரவில்லை. உண்ணுவிரதத்தை முடித்த தினத்தில் கூட நான் அவசரப்படவில்லை. முடிக்க வேண்டிய நேரத்தைக் காட்டிலும் அரை மணிநேரம் தாமதித்தே அதை முடித்தேன். உண்ணுவிரதத்தின்போது நூற்பதற்கும் கஷ்டமாக இல்லை. தினந்தோறும் தலையணையில் சாய்ந்து உட்கார்ந்துகொண்டே அரைமணி நேரத்திற்குமேல், அநேகமாக என்னுடைய வழக்கமான வேகத்தில், என்னுல் நூற்கவும் முடிந்தது. தினசரி நடந்த மூன்று பிரார்த்தனைக் கூட்டங்களில் ஒன்றைக் கூட நான் விடவில்லை. கடைசி நான்கு நாட்களில் கூட்டங்களுக்கு என்னைக் கட்டிலில் தூக்கிச் செல்ல வேண்டியிருந்தது. அக் கூட்டங்களில் சிறிது சிரமப்பட்டு என்னுல் உட்காரவும் முடிந்தது. எனினும், உட்கார்ந்துகொண்டு எனது சக்தியை இழக்க நான் விரும்பவில்லை. உண்ணுவிரதத்தின் போது எனக்கு உடலில் வலி இருந்ததாகவும் தெரியவில்லை. நான் அடைந்த ஒரே ஒரு வேதனை மாத்திரம் என் நினைவில் இருக்கிறது. அதாவது எனக்கு அடிக்கடி குமட்டல் ஏற்பட்டு சிறிது வேதனை உண்டாயிற்று. எனினும், குமட்டல் ஏற்பட்ட

போதெல்லாம் சிறிதளவு தண்ணீரைக் குடித்தால் அது நின்றுவிடும்.

சுமார் 6 அவுன்ஸ் ஆரஞ்சு ரசமும் திராட்சைப் பழ ரசமும் சாப்பிட்டு நான் உண்ணுவிரதத்தை முடித்தேன். ஆரஞ்சு சுளையையும் தின்றேன். இரண்டு மணிநேரம் சென்ற பின் மீண்டும் அவ்விதமே சாப்பிட்டேன். தோலைத் துப்பிவிட்டு பத்து திராட்சைப் பழங்களையும் சாப்பிட்டேன். அன்று மத்தியானம் 'எனிமா' எடுத்துக் கொண்டபின் இரண்டு அவுன்ஸ் தண்ணீருடன் ஆறு அவுன்ஸ் ஆட்டுப்பாலைச் சாப்பிட்டேன். அதைத் தொடர்ந்து ஒரு ஆரஞ்சும் பத்து திராட்சைப் பழங்களும் சாப்பிட்டேன். பாலும் தண்ணீரும் காய்ச்சப்பட்டவையே. மீண்டும் மாலையில் அதே அளவு பாலும், தண்ணீரும், பழமும் சாப்பிட்டேன். மறுநாள் பாலின் அளவை பதினெட்டு அவுன்ஸாக அதிகப்படுத்திக்கொண்டேன். பின்னர் ஒவ்வொரு நாளும் ஆறு அவுன்ஸ் வீதம் பாலை அதிகமாகச் சாப்பிட்டு வந்தேன். நாற்பத்தெட்டு அவுன்ஸ் பால் சாப்பிடத் தொடங்கியபோது கூட அதனுடன் தண்ணீர் கலந்தே சாப்பிட்டேன். ஒன்றரை நாள் தண்ணீர் கலக்காமல் பால் மாத்திரம் சாப்பிட்டபோது எனக்கு உடல் கனப்பது போன்றிருந்ததைக் கவனித்தேன். தண்ணீர் கலக்காத பாலே அதற்குக் காரணமென எண்ணி, மீண்டும் தண்ணீர் கலந்த பாலையே சாப்பிட முற்பட்டேன்.

இந்தக் குறிப்புகளை நான் எழுதும்போது எனது உண்ணுவிரதம் முடிந்து பன்னிரண்டு நாட்கள் சென்றிருக்கின்றன. நான் இன்னும் கெட்டியான உணவு உட்கொள்ள முற்படவில்லை. நான் சாப்பிடும் பழங்களில் சிலவற்றை இன்னும் சாருகவே பிழிந்து சாப்பிடுகிறேன். சென்ற மூன்று நாட்களாக திராட்சை, ஆரஞ்சுப் பழங்களுடன் பப்பாளி அல்லது மாதுளங்கனியையும் சேர்த்துக் கொண்டிருக்கிறேன். நான் அதிகபட்சமாக ஒரு நாள் சாப்பிட்ட பால் அறுபத்து நான்கு அவுன்ஸாகும். எனினும், சராசரி நாற்பத்தெட்டு அவுன்ஸ் பால் சாப்பிட்டுவருகிறேன். சிற்சில சமயங்களில் நான் சுடப்பட்ட ரொட்டி அல்லது மெல்லிய சப்பாத்தி சாப்பிடுகிறேன். மாதக் கணக்காக நான் பாலும் பழங்களும் சாப்பிட்டே உயிர் வாழ்ந்துவருகிறேன். அதன் பலனை எனது ஆரோக்கியமும் நன்ருக இருக்கிறது.

சிறையிலிருந்து நான் விடுதலை அடைந்தபின் எனது அதிகபட்சமான எடை 112 பவுண்டுகளாகும். 7 நாள் உண்ணுவிரதத்தின்போது என் எடையில் 9 பவுண்டுகள் குறைந்துவிட்டன. இழந்த எடையை இப்போது நான் மீண்டும் பெற்றுவிட்டேன். சென்ற மூன்று நாட்களாக நான் காலையிலும் மாலையிலும் ஒழுங்காக தேகப்பயிற்சி செய்துவருகிறேன். அதனுல் எனக்குச் சிறிதும் களைப்பு ஏற்படவில்லை. சமமான தரையில் நடப்பதும் எனக்குக் கஷ்டமாக இல்லை. படிகளில் ஏறும்போதும் இறங்கும்

போதும் மாத்திரம் இன்னும் ஆயாசமாக இருக்கிறது. வயிறு இளக்கம் ஒழுங்காக இருப்பதுடன், நான் என் விருப்பப்படி தூங்கவும் செய்கிறேன்.

21 நாட்கள் உண்ணாவிரதத்திலோ அல்லது கடைசியாக மேற்கொண்ட 7 நாட்கள் உண்ணாவிரதத்திலோ என் உடலுக்குப் பாதகம் எதுவும் ஏற்பட்டுவிடவில்லை என்பதே எனது அபிப்பிராயமாகும். 7 நாட்கள் உண்ணாவிரதம் இருந்தபோது, அபாயமான அளவுக்கு என் எடை குறைந்தது. ஆனால், அதற்குக் காரணம் என்னவெனில், முதல் மூன்றரை நாட்கள் வரையில் நான் கடுமையாக வேலை செய்ததேயாகும். இன்னும் சிறிதுகாலம் ஓய்வு எடுத்துக்கொள்ளுவேனாயின், உண்ணாவிரதத்தை ஆரம்பித்தபோது எனக்கு இருந்த சக்தியை நான் மீண்டும் பெற்று விடுவேன்.

சாதாரண மனிதன் என்ற முறையிலும், உடல் சம்பந்தமான விவரங்கள் சம்பந்தப்பட்டவரையிலும், உண்ணாவிரதம் இருக்க விரும்புவோருக்கெல்லாம் நான் கீழ்க்கண்ட விதிகளை எடுத்துக் கூறவேண்டும்:

1. உண்ணாவிரதம் ஆரம்பிக்கப்பட்டதிலிருந்தே உடலின் சக்தியையும் மனத்தின் சக்தியையும் வீணாக்கிவிடாமல் பாதுகாத்து வாருங்கள்.

2. உண்ணாவிரதம் இருக்கும்போது உணவைப்பற்றிச் சிந்திப்பதையே நீங்கள் விட்டுவிடவேண்டும்.

3. சோடாவும், உப்பும் சேர்த்தோ அல்லது சேர்க்காமலோ உங்களால் முடிந்த அளவுக்கு நிறைய தண்ணீர் குடியுங்கள். ஆனால், ஒவ்வொரு தடவையும் சிறிது சிறிதாகவே தண்ணீர் குடிக்கவேண்டும். (தண்ணீரை நன்றாகக் காய்ச்சி, வடிகட்டி, ஆற்றிவிடவேண்டும்.) உப்பையும் சோடாவையும் பற்றி பயப்படாதீர்கள். ஏனெனில், பெரும்பாலான இடங்களிலும் தண்ணீரில் இவ்விரண்டும் அடங்கியிருக்கின்றன.

4. தினந்தோறும் வெதுவெதுப்பான தண்ணீரில் கடற்பஞ்சை நனைத்துத் துடைக்க வேண்டும்.

5. உண்ணாவிரதத்தின்போது ஒழுங்காக எனிமா எடுத்துக் கொள்ளுங்கள். தினந்தோறும் வெளியாகும் அசுத்தங்களைக் கண்டு நீங்கள் ஆச்சரியப்படுவீர்கள்.

6. வெட்டவெளியில் எவ்வளவு நேரம் தூங்க முடியுமோ அவ்வளவு நேரம் தூங்குங்கள்.

7. காலை வெய்யிலில் ஸ்நானம் செய்யுங்கள். தண்ணீரில் ஸ்நானம் செய்வதைப்போல் வெய்யிலிலும் காற்றிலும் 'ஸ்நானம்' செய்வதும், உடலைச் சுத்தமாக வைத்துக்கொள்ளுவதற்கு அத்தியாவசியமாகும்.

8. உண்ணுவிரதத்தைத் தவிர வேறு எதைப்பற்றி வேண்டுமானுலும் சிந்தியுங்கள்.

9. எந்த நோக்குடன் நீங்கள் உண்ணுவிரதம் இருந்தாலும், பொன் போன்ற அச்சமயத்தில், உங்களேப் படைத்த கடவுளேயும், அவரிடம் உங்களுக்குள்ள தொடர்பையும், அவரது மற்ற சிருஷ்டிகளேயும் பற்றிச் சிந்தித்துப் பாருங்கள். அதற்கு முன் கனவிலும் நீங்கள் நினேக்காத பல அதிசயங்களே நீங்கள் கண்டு கொள்ளலாம்.

கீழே நான் கூறும் விஷயங்களேக் குறித்து வைத்திய நண்பர்கள் மன்னிப்பார்களாக. நிறைந்த என் சொந்த அனுபவத்திலிருந்தும், என்னேப்போன்ற அரைப் பைத்தியக்காரர்களின் அனுபவத்திலிருந்தும் சிறிதும் தயக்கமின்றி நான் கூறுவதாவது: உங்களுக்கு அஜீர்ணம் ஏற்பட்டால், உங்களுக்கு ரத்த சோகை இருந்தால், உங்களுக்கு ஜுரம் இருந்தால், உங்களுக்கு மலச்சிக்கல் இருந்தால், உங்களுக்குத் தலேவலி ஏற்பட்டால், நீங்கள் வாத ரோகத்திற்கு உள்ளாகியிருந்தால், நீங்கள் கோபத்துடனும் சிடுசிடுப்பாகவும் இருந்தால், நீங்கள் சோர்வுற்றிருந்தால், உங்களுக்கு மகிழ்ச்சி அளவுக்கு மீறிப்போனுல், நீங்கள் உண்ணுவிரதம் இருங்கள்; வைத்தியர்களிடம் போவதையும் மருந்துகள் சாப்பிடுவதையும் தவிர்த்துவிடுங்கள்.

பசியாக இருக்கும்போதும், உங்கள் உணவுக்காக நீங்கள் உழைத்தபோதும் மாத்திரமே சாப்பிடுங்கள்.

—'எங் இந்தியா' - 17—12—1925

பகுதி ஐந்து

# பிறப்பும், இறப்பும், அதற்குப் பிறகும்

## 1

## உலகம் உண்மையா, பொய்யா?

பஞ்சகனியில் நடந்த முதல் நாள் பிரார்த்தனைக் கூட்டத்தில் காந்திஜி கூறியதாவது:

இப்போது பாடப்பட்ட கீதத்தில், இந்த உலகமானது துக்கமும் துன்பமும் நிறைந்த படுபள்ளமாகும் என்று பொருத்தமாக வருணிக்கப்பட்டிருக்கிறது. அதைத் துணிந்து கடந்து செல்லும் ஆற்றலைக் கடவுள் ஒருவர்தான் நமக்கு அளிக்கவல்லவர். இந்த உலகம் ஒரு வெறும் பிரமை என்றும், ஒரு கனவு என்றும் கவி கூறுகிறார். மகிழ்ச்சியோ, அல்லது மனிதர் குறிப்பிடும் ஆனந்தமோ தாற்காலிகமான, தோன்றி மறையும் ஒரு கனவாகவே இருக்கிறது. உலகில் ஒவ்வொன்றும் தோன்றி மறையும் மாய உருவமாகவே இருக்கிறது. எனினும், நமது சக மனிதர்களின் கஷ்டங்கள் உண்மையானவை அல்ல என்று நாம் கூறி அவற்றைத் தள்ளிவிட முடியாது; அவ்விதம் சமாதானம் கூறி நமது பொறுப்பையும் தட்டிக் கழித்துவிட முடியாது. கனவுகள் கூட, அவை கலையும் வரையில் உண்மையாகவே இருக்கின்றன. அது போலவே, கஷ்டத்திற்கு உள்ளாவோருக்கு அந்தக் கஷ்டம் பயங்கரமான உண்மையாக இருக்கிறது. அது எப்படியாயினும், உலகம் உண்மையாயினும் பொய்யாயினும், நாம் வாழ்க்கையில் சில கடமைகளைச் செய்யவேண்டியவர்களாக இருக்கிறோம். எனவே, நாம் இந்த உலகத்தில் இருக்கும்வரையில் அக்கடமைகளை ஏற்று, அவற்றை நன்கு அறிந்து, நிறைவேற்றவும் வேண்டும்.

—'ஹரிஜன்'. 21—7—1946

# 2

# எதிரி மீதும் அன்பு

**கேள்வி:** நீங்கள் அத்வைதத்தில்* நம்பிக்கையுடையவர்களாக இருக்கிறீர்கள். எனினும், உலகம் ஆதி அந்தம் இல்லாத தென்றும், உண்மையானதென்றும் கூடக் கூறுகிறீர்கள். நீங்கள் த்வைதி† அல்ல; ஏனெனில், உங்களுக்கு ஆன்ம விடுதலையில் நம்பிக்கை இருக்கிறது. எனவே உங்களை அநேகாந்தவாதி (அதாவது உண்மைப் பொருள் ஒன்றும் அல்ல. இரண்டும் அல்ல, பலவாகும்) என்று அழைப்பது பொருத்தமாக இராதா?

**பதில்:** நான் ஓர் அத்வைதியே. எனினும், த்வைதக் கொள்கைக்கு நான் ஆதரவளிக்க முடியும். உலகம் ஒவ்வொரு விநாடியும் மாறிவருகிறது. எனவே, அது உண்மை யல்ல. அதற்கு நிரந்தரமான வாழ்வும் இல்லை. அது இடைவிடாது மாறி வருகிற தெனினும், அதில் நிலைத்து நிற்கும் பொருள் ஏதோ ஒன்று இருக்கிறது. எனவே, அந்த அளவுக்கு அது உண்மையே. ஆகையால், அது உண்மை என்றும், உண்மை யற்றது என்றும் கூறப்படுவதை நான் ஆட்சேபிக்கவில்லை. என்னை அநேகாந்தவாதி என்று கூறுவதையும் நான் ஆட்சேபிக்கவில்லை. ஆனால், என்னுடைய அநேகாந்தவாதம் பண்டிதர்களின் அநேகாந்தவாதம் அல்ல; அது எனக்கே உரித்தான சொந்தக் கொள்கையாகும். அவர்களுடன் நான் விவாதிக்க முடியாது. எனது கோணத்திலிருந்து பார்க்கும் போது, நான் கூறுவது எப்போதுமே உண்மை என்பதே எனது அனுபவமாகும். என் கருத்துக்களை, விதண்டா வாதத்திற்காக அல்லாமல் நேர்மையான நோக்கத்துடன் ஆட்சேபிக்கிறவர்களின் கோணத்திலிருந்து பார்க்கும் போது நான் கூறுவது தவறேயாகும். அவரவர் கோணத்திலிருந்து பார்க்கும்போது எங்களில் இருசாராரும் கூறுவது சரியே என்பதை நான் அறிவேன். இந்த அறிவுதான், எனது எதிரிகளுக்கோ அல்லது ஆட்சேபவாதிகளுக்கோ நான் ரகசிய நோக்கம் எதுவும் கற்பிக்க முற்பட்டுவிடாமல் என்னைக் காப்பாற்றுகிறது. யானையைப் பற்றி ஏழு அந்தகர்கள் கூறிய வெவ்வேறான வருணனையும் அவரவர் கோணத்திலிருந்து பார்க்கும் போது சரியே. ஆனால், யானையை நன்கு அறிந்த ஒரு மனிதனின் கோணத்திலிருந்து பார்க்கும் போது அது தவறே யாகும். உண்மையில் பலதரப்பட்ட தன்மை என்ற இந்தக் கொள்கையை நான் மிகவும் விரும்புகிறேன். இந்தக் கொள்கைதான், முஸ்லிம், கிறிஸ்தவர்

---

*ஹிந்து சமய வேதாந்தக் கொள்கையின்படி பரமாத்மாவும் ஜீவாத்மாவும் ஒன்றே, வெவ்வேறல்ல என்பதே அத்வைதமாகும்.

†பரமாத்மா வேறு, ஜீவாத்மா வேறு என்பதே த்வைதமாகும்.

முதலியோரை அவரவர் கோணத்திலிருந்து பார்க்கும்படி எனக்குக் கற்பித்திருக்கிறது. முன்பெல்லாம் என் எதிராளிகளின் அறியாமையைக் கண்டு நான் கோபம் கொள்ளுவது வழக்கம். ஆனால், இன்று என் எதிராளிகள் மீதும் நான் அன்பு செலுத்துகிறேன். ஏனெனில் மற்றவர்கள் என்னைப் பார்ப்பது போல் நானே என்னைப் பார்த்துக் கொள்ளவும், என்னை நான் பார்ப்பதுபோல் மற்றவர்களை நான் பார்க்கவும் ஆற்றல் வாய்க்கப் பெற்றவனாக இருக்கிறேன். என் அன்பின் அரவணைப்பில் உலகம் முழுவதையும் கொண்டுவர வேண்டும் என்பதே எனது விருப்பமாகும். எனது அநேகாந்தவாதம், சத்தியம், அகிம்சை என்ற இரட்டைக் கொள்கையின் பலனேயாகும்.

'எங் இந்தியா' – 21—1—1926

# 3

# 125 வயது வாழ விருப்பம்

**125** வயது வரையில் வாழ வேண்டும் என்ற விருப்பத்தைப் பற்றி நான் சிந்தனையின்றிப் பேசிவரவில்லை. அதில் ஆழ்ந்த கருத்து இருக்கிறது. ஈசோபநிடதத்தில் உள்ள மூன்றாவது மந்திரமே, எனது விருப்பத்திற்கு அடிப்படையாகும். ஒரு மனிதன், பற்றுதலின்றித் தொண்டு செய்து கொண்டு 100 வருடங்கள் வரையில் வாழ விரும்பவேண்டும் என்பதே அதன் பொருள். இங்கே 100 என்பது உண்மையில் 125 வயதையே குறிக்கிறது என்று ஒரு வியாக்கியானம் கூறுகிறது.

அது எப்படியாயினும், 100 என்பதற்குப் பொருள் என்ன என்பது எனது வாதத்திற்கு அவசியமில்லை. எனது நோக்கமெல்லாம் என்னவெனில், அந்த விருப்பம் பூர்த்தியாவதற்கான அவசியமான நிலைமையைக் குறிப்பிடுவதேயாகும். பற்றுதலின்றித் தொண்டுபுரிய வேண்டும் என்பதையே அது குறிக்கிறது. அதாவது, தொண்டின் பலனில் எள்ளளவும் ஆசை இருக்கக் கூடாது. அந்த ஆசை இருப்பவர் 125 ஆண்டுகள் வாழ விரும்பக் கூடாது. ஈசோபநிடதத்தின் மந்திரத்திற்கு நான் கூறும் பொருள் இதுதான். அத்தகைய பற்றற்ற நிலையை அடையாவிடில், 125 வயதாகும் வரையில் உயிர் வாழ்வது அசாத்தியம் என்பதில் எனக்குச் சந்தேகமில்லை. 125 வயது வாழ்வது என்பதற்கு, உறவினருக்கும் சமூகத்திற்கும் பளுவாக இருந்துகொண்டு நடைப்பிணமாக வாழ்வது என்பது அர்த்தமாக இருக்க முடியாது. அத்தகைய நிலையில், தமது ஆயுளை நீடிக்காமல் விரைவில் இந்த உலகத்திலிருந்து விடுதலை அளிக்க வேண்டும் என்று கடவுளைப் பிரார்த்திப்பதே ஒருவருடைய மிக மிக முக்கியமான கடமையாக இருக்கும்.

மனித உடல் தொண்டிற்காக ஏற்பட்டதேயன்றி, போகங்களில் திளைப்பதற்காக அல்ல. துறவிலேயே ஆனந்த வாழ்வின் ரகசியம் அடங்கியிருக்கிறது. துறவுதான் வாழ்வாகும்; போகங்களுக்கு இடங்கொடுப்பது மரணமேயாகும். எனவே, பலனில் கண்ணோட்டம் செலுத்தாமல், 125 வருடங்கள் உயிர் வாழ வேண்டும் என்று விரும்ப ஒவ்வொருவருக்கும் உரிமை உண்டு. அத்தகைய வாழ்க்கை முற்றிலும் தொண்டு செய்வதற்கே அர்ப்பணிக்கப்பட்டிருக்க வேண்டும். அத்தகைய தொண்டிற்காக போக வாழ்வைத் துறப்பது மட்டற்ற மகிழ்ச்சியைக் கொடுப்பதாகும். அத்தகைய ஆனந்தத்தை யாரும் அபகரிக்க முடியாது. அந்த அமிருதம் உள்ளேயிருந்து ஊற்றெடுத்து உயிரைக் காப்பாற்றுகிறது. இந்த விஷயத்தில் கவலைக்கோ அல்லது பொறுமையின்மைக்கோ இடமில்லை. இந்த ஆனந்தமின்றேல், நீண்ட கால வாழ்வு சாத்தியமற்றது; சாத்தியமாகவே இருந்தாலும் கூட, அதனல் யாதொரு பலனும் இல்லை.

வெளி உதவியைக் கொண்டு 125 வயது வரையில் ஆயுளை நீடிப்பது சாத்தியமா என்பதைப் பரிசீலனை செய்வது, இந்த வாதத்திற்கு அப்பாற்பட்டதாகும்.

—'ஹரிஜன்' – 24—2—1946

## 4

# உடல் நிலையும் மன நிலையும்

ஒரு சமயம் காந்திஜிக்கும் ஓர் ஆங்கில நண்பருக்கும் உரையாடல் நடந்தபோது, காந்திஜிக்கு மிகவும் பிடித்தமான விஷயத்தை யொட்டி பேச்சு திரும்பியது. 125 வயது வரையில் உயிர் வாழ வேண்டும் என்பது காந்திஜிக்குப் பிடித்தமான ஒரு விஷயமாகும். காந்திஜி தமது உடலை சோர்வு, நோய் எதுவுமின்றி சரியான நிலையில் எப்படி வைத்துக்கொள்ள முடிகிறது என்று ஆங்கில நண்பர் கேட்டார். அதற்குப் பதிலாகக் காந்திஜி கூறியதாவது :

''உண்பது, தண்ணீர் குடிப்பது, தூங்குவது முதலியவற்றைக் குறிப்பிட்ட நேரத்தில் ஒழுங்காகச் செய்து வருவதாலேயே எனது உடல் நிலை ஆரோக்கியமாக இருந்து வருகிறது. இயற்கை வைத்திய முறைகளில் எனக்கு உள்ள பற்றுதலும் இந்த நிலைக்கு ஒரு காரணமாகும். 1901-ஆம் ஆண்டிலிருந்து இயற்கை வைத்திய முறைகளை நான் கண்டிப்பாக அனுசரித்து வருகிறேன். என் உடல் தகுதியான நிலையில் இருப்பதற்கு வெளிக்காரணங்கள் இவைதான். 1901 வரையில் நான் மருந்துப் புட்டிகளை உபயோகித்து வந்தேன். அதற்குப் பிறகு மருந்துகளை நான் தொடுவதே இல்லை. சென்ற நாற்பத்தைந்து வருடங்

களாக சற்றேறக்குறைய இயற்கை வைத்திய முறைகளின்படியே நான் வாழ்ந்து வருகிறேன்.

"எனது நல்ல உடல் நிலைக்கு அதிக முக்கியமான காரணம், பற்றற்ற மன நிலையை நான் அனுசரித்து வருவதுதான். ஒருவர், தமது செய்கையால் பலன் ஏற்பட்டாலும், ஏற்படாவிட்டாலும் சிறிதும் கவலைப்படக்கூடாது. இதைத்தான் பற்றற்ற நிலை என்று நான் குறிப்பிடுகிறேன். எனினும், நமது செயல்களின் நோக்கம் தூய்மையானதாகவும், முறைகள் சரியானவையாகவும் இருக்க வேண்டும். நீங்கள் சரியான முறைகளைக் கைக்கொண்டு மற்றவைகளைக் கடவுளிடம் விட்டுவிட்டால், முடிவில் எல்லாம் ஒழுங்காக வந்துவிடும். என்னுடைய இந்த நம்பிக்கை பகவத் கீதையை அடிப்படையாகக் கொண்டது. அதுதான் எனது "செயல் அகராதி"யாக இருந்து வருகிறது."

"எனினும், உடல் நிலைக்கு வெளிப்படையான காரணங்களும் முக்கியமானவை அல்லவா?" என்று கேட்டார் ஆங்கில நண்பர்.

அக் கேள்விக்குப் பதிலாகக் காந்திஜி கூறியதாவது:

"ஆமாம். இருந்தாலும் மனத்தை யொட்டிய காரணங்களையே நான் அதிக முக்கியமானவையாகக் கருதுகிறேன். நீங்கள் நினைக்கிறபடியே ஆகிறீர்கள். சிந்தனை, செயலில் வந்தாலன்றி அது ஒரு போதும் பூர்த்தியாவதில்லை. செயல் உங்களுடைய சிந்தனையைக் கட்டுப்படுத்துகிறது. சிந்தனைக்கும் செயலுக்கும் பூரண ஒற்றுமை ஏற்படும் போதுதான், வாழ்க்கை நிறைவுள்ளதாகவும் இயல்பானதாகவும் இருக்கிறது."

—'ஹரிஜன்' – 7—4—1946

# 5

# எது இன்ப வாழ்க்கை?

காந்திஜியைச் சந்திப்பதற்காக வந்த ஓர் அமெரிக்கப் பத்திரிகையாளர், அவரைக் கண்டு இரண்டு கேள்விகள் கேட்டார்:

"நீங்கள் வாழ்க்கையின் இன்பத்தைப் பூரணமாக அனுபவிக்கின்றீர்களா? நீங்கள் எதற்காக 125 வயது வரையில் உயிர் வாழ விரும்புகிறீர்கள்?"

இந்தக் கேள்விகளுக்கு காந்திஜி அளித்த பதில் அந்த அமெரிக்கருக்கு ஆச்சரியத்தை உண்டாக்கியது. காந்திஜி கூறியதாவது:

"வாழ்க்கையை அனுபவிப்பதற்காக அல்ல, தொண்டு செய்வதற்காகவே நான் 125 வயது வரை வாழ விரும்புகிறேன். தொண்

டும் இன்ப வாழ்க்கையும் ஒன்றல்ல. வாழ்க்கையின் இன்பங்களைத் துறப்பதன் மூலம் இன்பம் பெறும் கொள்கையையே நான் விரும்புகிறேன்.''

இந்தப் பதில் அமெரிக்கருக்கு ஒரு புதிராக இருந்தது. ஈசோபநிடதத்தில் கூறப்பட்டுள்ள அக் கொள்கையை காந்திஜி அவருக்கு விளக்க முற்பட்டார்.

''வாழ்க்கையில் உண்மையான இன்பம் உங்களுக்கு எப்போது ஏற்பட்டது?'' என்று கேட்டார் அந்த நண்பர்.

காந்திஜி: நான் பிறந்தபோது.

**கேள்வி:** அதை நான் கேட்கவில்லை. எப்போதும் தொண்டு செய்வதே இன்பம் என்று கூறினீர்கள் அல்லவா? நீங்கள் கூறும் அத்தகைய வாழ்க்கை எப்போது ஆரம்பமாயிற்று.

**பதில்:** வாழ்க்கையின் உட்பொருளை நான் அறிந்து கொண்டபோது.

**கேள்வி:** அது இந்தியாவின் விஷேச அம்சமா?

**பதில்:** அமெரிக்காவின் செல்வப் பகட்டு அதன் விசேஷ அம்சமாக இருப்பது போலவே, இந்தியாவின் ஏழ்மை அதன் விசேஷ அம்சமாக இருக்கிறது.

(ஸ்ரீ பியாரிலால் எழுதியது)

—'ஹரிஜன்'—6—10—1946

# 6

# 'எனக்கு இடமில்லை'

''இன்று உருவாகிவரும் நான் காணும் இந்தியாவில், எனக்கு இடமில்லை. எனவே, 125 வயது வரையில் வாழும் நம்பிக்கையை நான் கை விட்டு விட்டேன். நான் இன்னும் ஒன்று அல்லது இரண்டு வருடங்கள் இருக்கலாம். அது வேறு விஷயமாகும். இன்றுள்ள நிலையைப் பார்த்தால் பலாத்காரமாகிற பிரளயத்தில் இந்தியா மூழ்கிவிடும்போல் தோன்றுகிறது. அவ்விதமாயின், இந்தியாவில் உயிர் வாழ நான் விரும்பவில்லை. இங்கே வகுப்பு வெறி தாண்டவமாடி வருகிறது. ராணுவ மயமாக்குவது பற்றியும், தொழில் மயமாக்குவது பற்றியும் பேசி வருகிறார்கள். இந்தியா, முதல் தரமான ராணுவ வல்லரசாகவும், தொழில் துறைகளில் மிகமிக முன்னேற்றம் அடைந்துள்ள நாடாகவும் விளங்கலாம். எனினும். அத்தகைய இந்தியாவில், அகிம்சையின் அறிகுறிகளான கிராமக் கைத் தொழில்களுக்கோ அல்லது கதருக்கோ எங்கே இடம் இருக்கிறது?''

காந்திஜியின் மனம் எவ்வாறு சோர்வுக்கும் நம்பிக்கைக்கும் இடையே ஊசலாடிக் கொண்டிருந்தது என்பதை இதே கட்டுரையில் காணப்படும் கீழ்க்கண்ட விவரங்களிலிருந்து தெரிந்து கொள்ளலாம்.

சீன ஸ்தானீகரான டாக்டர் லோ சியா லூயன் பண்டித ஜவாஹர்லால் நேருவுடன் காந்திஜியைக் காண்பதற்காக வந்தார். "இந்தியாவில் விஷயங்கள் எப்படி உருவாகுமென்று நீங்கள் எண்ணுகிறீர்கள்? எதிர்காலத்தைப் பற்றி உங்கள் ஜோஸ்யம் என்ன?" என்று சீன ஸ்தானீகர் காந்திஜியைக் கேட்டார்.

அதற்குப் பதிலாகக் காந்திஜி கூறியதாவது: "நான் தளரா நம்பிக்கையுடையவன். வங்காளம், பீகார், பஞ்சாப் முதலிய இடங்களில் நடந்துவரும் மூடத்தனமான ரத்தக் களரியைப் பார்க்கும் போது, நாங்கள் காட்டுமிராண்டிகளாகி வருகிறோமோ என்று தோன்றுகிறது. நாங்கள் இத்தனை வருடங்களாக வாழ்ந்து கஷ்டப் பட்டது இதற்காக அல்ல. அந்நிய நுகத்தடியை நாங்கள் உதறித் தள்ளிவருகிறோம் என்பதற்கே இது ஓர் அறிகுறியாகும். அதன் காரணமாக சேறு, சகதிகள், நுரை எல்லாம் மேல் மட்டத்திற்கு வந்துகொண்டிருக்கின்றன. கங்கையில் வெள்ளம் வரும் போது தண்ணீர் அழுக்காகவும் கலங்கியும் இருக்கிறது. அசுத்தங்கள் மேல் மட்டத்திற்கு வருகின்றன. வெள்ளம் தணிந்ததும், கண்களுக்குக் குளிர்ச்சியான, தெளிவான தண்ணீரை நீங்கள் காண முடிகின்றது. இவ்விதமே நான் நம்பி, அதற்காகவே உயிர் வாழ்ந்துவருகிறேன். இந்திய மக்கள் காட்டுமிராண்டிகளாவதை பார்த்துக்கொண்டு வாழ நான் விரும்பவில்லை.

"எதிர்காலத்தைப்பற்றி யார் ஜோஸ்யம் கூற முடியும்? பட்லர் எழுதியுள்ள 'பரஸ்பரத் தொடர்பு' (Analogy) என்ற நூலைப் பல ஆண்டுகளுக்கு முன் நான் வாசித்தேன். 'ஓரளவு நமது சென்ற காலத்தின் பலனே எதிர்காலமாக இருக்கிறது' என்று நான் அந்த நூலில் வாசித்தேன். இந்த சிந்தனை என் மனத்தை விட்டு அகலவேயில்லை. ஏனெனில், அது இந்தியர்களான எங்களுடைய நம்பிக்கைக்குப் பொருத்தமாக இருக்கிறது. நாமே தான் நமது விதியை உருவாக்கிக் கொள்ளுகிறோம். நிகழ்காலத்தை நம்மால் சீர்படுத்திக் கொள்ளவோ அல்லது கெடுத்துக் கொள்ளவோ முடியும். நாம் என்ன செய்கிறோம் என்பதையே நமது எதிர்காலம் பொறுத்திருக்கிறது."

அவ்விதம் காந்திஜி கூறியதைக் கேட்ட சீன ஸ்தானீகர் சிறிது சிந்தனையில் ஆழ்ந்திருந்தார். பிறகு அவர் கூறியதாவது:

"சில சமயங்களில் சரித்திர சம்பவங்கள் மறுபடியும் நிகழ்கின்றன. ஏனெனில், சரித்திரத்தின் படிப்பினையை நாம் தெரிந்து கொள்ளுவதில்லை."

காந்திஜி: "அவ்விதம் கூறுவது பாதி உண்மைதான். இன்று சரித்திர சம்பவங்கள் மீண்டும் நிகழ்வது போல் தோன்றலாம். உலகில் எதுவும் ஸ்தம்பித்து ஒரே நிலையில் இருப்பதில்லை. மனித இயல்பு, ஒன்று மேலே போகிறது அல்லது கீழே போகிறது. இந்தியாவில் அந்த இயல்பு மேலே போகிறதென்றே நம்புவோமாக. இல்லாவிடில், இந்தியாவும் ஒருவேளை உலகமும் பிரளயத்திற்கு உள்ளாவதைத் தவிர வேறு வழி எதுவும் இல்லை."

—'ஹரிஜன்' – 8—6—1947

# 7

# பகை நிறைந்த சமூகம்

மேலே கண்ட கட்டுரையைக் குறித்து, அமெரிக்காவிலிருந்து ஸ்ரீ ரிச்சர்டு கிரெக் காந்திஜிக்கு எழுதிய கடிதத்தின் விவரம் பின் வருமாறு:

"புது டில்லியிலிருந்து வந்த செய்தியொன்று இன்றைய நியூயார்க் பத்திரிகையில் வெளியாகியிருக்கிறது. 125 வயது வரையில் வாழும் நம்பிக்கையை நீங்கள் கைவிட்டு விட்டதாகவும், பலாத்காரப் பிரளயம் காரணமாக இந்தியாவில் உங்களுக்கு இடமில்லை என்றும் அதில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இச்செய்தி உண்மையாயின், உங்கள் நிலையைப் புனராலோசனை செய்யும்படி நான் உங்களைக் கெஞ்சிக் கேட்டுக்கொள்ளுகிறேன். இந்தியாவில் தற்போது தாண்டவமாடிவரும் பலாத்காரம் பதினைந்து ஆண்டுகள் வரையில் நீடித்திருந்தால்கூட, நீங்கள் இருக்க வேண்டியது அவசியமாகும். அதற்கு இன்னும் அதிக முக்கிய காரணங்கள் இருக்கின்றன.

"உலகத்தில் மிகவும் ஆழ்ந்த, மிக்க சக்தி வாய்ந்த ஆன்ம பரிசீலனைக்கும் பண்பாட்டிற்கும் இந்தியாதான் ஊற்றுக்காலாக இருந்து வருகிறது. எல்லாவற்றையும்விட நிரந்தரமாக இருப்பதும் அதுதான். மதப் பற்று குறைந்து விட்டதாலும், மத சம்பந்தமற்ற அரசியல் கொள்கைகள் உள்ள மேனாடுகளுடன் தொடர்பு ஏற்பட்டதாலும் ஹிந்து சமயப் பண்பாட்டிற்கு மிகுந்த பாதகம் விளைந்தும்கூட, அது இன்றும் மகோன்னதமாகவே விளங்கி வருகிறது. பலாத்காரம், பேராசை, நாத்திகம் முதலியவை காரணமாக உலகத்தில் பெரும் பகுதியும் கூடிய சீக்கிரத்தில் அழிந்துவிடும். அந்நிலையிலும் கூட இந்தியாவில் ஒரு சிறு பகுதியாவது ஆன்மிகச் சிறப்பு மறைந்துவிடாமல் பாதுகாத்து வருமென்றும், நம்பிக்கைக்கும், நுண்ணிய ஆன்மிக பரிசீலனைக்கும் ஒரு தீவு போல் இருந்து வருமென்றும் நம்பியிருக்கிறேன். வீழ்ச்சியடைந்த உலகிற்கு அது மீண்டும் உயிரளித்து, புத்தி சுவாதீனத்தையும் அளிக்கும் ஊற்றுக்காலாக இருக்கலாம்.

"மற்றெவரையும் காட்டிலும் அதிகமாக நீங்கள்தான் ஹிந்து சமயப் பண்பாட்டின் பிரதிநிதியாக இருந்துவருகிறீர்கள். எனவே, உங்கள் ஆயுள் நீடிப்பது உலகப் முழுவதற்கும் மிகவும் முக்கியமாகும். நீங்கள் கூறுவதற்கு இணங்கி, அகிம்சை வழியை உண்மையாகப் பின்பற்றுவோரின் தொகை தாற்

காலிகமாக விரல் விட்டு எண்ணக் கூடிய ஒரு சிலராகக் குறைந்து விட்டாலும் கூட, அந்தச் சிறு தொகையே அவர்களின் தரமும், ஆன்மிக சக்தியும் அதிகமாவதற்கு உதவியாக இருக்கும். பின்னர்தான் கஷ்ட நஷ்டங்களின் பலனை மனித வர்க்கத்திற்குப் புத்திவரும். கஷ்ட நஷ்டங்கள்தான் பெரும்பாலோருக்கும் சிறந்த படிப்பினையாக அமைகின்றன. அப்போதுதான் அவர்கள் மீண்டும் ஆன்மிக அடிப்படைகளை நாடுவார்கள். நமது நம்பிக்கைக்கு இணங்க ஒரு குறிப்பிட்ட காலத்திற்குள் பலாத்காரம் நிற்காவிடில், உயிர் வாழ்வது உள்பட நம்மால் இயன்றதை யெல்லாம் செய்யாமல் நிறுத்தி விடுகிறோம் என்று நாம் கடவுளிடம் கூறிவிட முடியாது. நான் உங்களுக்குக் கூறத் துணிவது இதுதான். ஏனெனில், எங்களுடன் நீங்கள் இந்த உலகில் இருக்க வேண்டுமென நான் மிகவும் விரும்புகிறேன்.

"இதை இன்னும் சற்று அதிக விரிவாகக் கூறுகிறேன். பொருளாதாரத் துறையில் நீண்ட காலத்திற்கு வெகு கவனமாக ஆராய்ச்சி செய்ததன் பலனை, அதில் ஏற்படும் பலவிதமான ஏற்றத்தாழ்வுகளும், சுழல்களும் வெளியாகியிருக்கின்றன. அவையாவன: மொத்த விலைகள் 54 ஆண்டுகளுக்கு ஒரே விதமாக இருக்கின்றன; பின்னர் 9 வருடங்களுக்கு மற்றொரு விதமான நிலை ஏற்படுகிறது; பிறகு 3½ வருடங்களுக்கு வேறொருவிதமான நிலை உண்டாகிறது. இந்த விதிகளுக்கு உட்பட்டே மகா மோசமான பொருளாதார மந்தங்கள் எல்லாம் நிகழ்ந்திருக்கின்றன. இந்தச் சுழல்களெல்லாம் 1951—52-இல் மிக மிகத் தாழ்ந்த முனையை அடையும். தொழிலில் வளர்ச்சி பெற்றுள்ள நாடுகள் இதுவரை அனுபவித்திராத மிகக் கடுமையான பொருளாதார மந்த கட்டத்தில் இப்போது நாம் பிரவேசித்துக் கொண்டிருக்கிறோம். தற்போது அமெரிக்காவிலிருந்து கிடைக்கும் பொருளாதார உதவியையே பிரிட்டன் நம்பிக்கொண்டிருக்கிறது. அந்த உதவி நீடித்து இராது என்பது நிச்சயம். அந்த உதவி நின்றுவிடும்போது, பிரிட்டன் இந்தியா விஷயத்தில் தலையிடுவதும் நின்றுவிடும் என்பது எனது நம்பிக்கையாகும். அமெரிக்காவுக்கும் ருஷ்யாவுக்கும் யுத்தம் ஏற்படலாம் என்று இப்போது தோன்றுகிறது. அவ்விதம் மற்றொரு யுத்தம் ஏற்படுமாயின், தற்போதைய மேநாட்டு நாகரிகமும், உலகத்தில் வெள்ளையர்களின் ஆதிக்கமும் முடிவடைந்துவிடும். அந்த அழிவிலிருந்து உலகத்தை ஹிந்து இந்தியாதான் உத்தாரணம் செய்து அதற்கு வழிகாட்ட முடியுமென நான் நினைக்கிறேன். அது எனது நம்பிக்கையாகும். எனவே, 125 வயது வரையில் உயிர் வாழ தயவுசெய்து முயற்சிக்கும்படி உங்களை நான் மன்றாடிக் கேட்டுக்கொள்ளுகிறேன். வரப்போகும் மிகவும் முக்கியமான அந்தக் காலத்தில் கடவுளின் ஊழியர் என்ற முறையில் நீங்கள் உங்களுடைய கடமையைச் செய்யலாம். இப்போதைக் காட்டிலும் அதிகமாக அப்போது இந்தியாவும் உலகமும் உங்களை நாடவேண்டியிருக்கும். இது கடவுளின் சட்டங்களால் இயங்கப்படும் தார்மிக உலகமாகும். இந்தச் சட்டங்களை, தொடர்ந்து பல நூற்றாண்டுகளாக மீறியதற்காக மனித வர்க்கம் கஷ்டப்பட்டுத்தான் தீரவேண்டும். முக்கியமாக, உலக நாடுகளின் அரசாங்கங்களே அந்தச் சட்டங்களை மீறியிருக்கின்றன. வரப்போகும் கஷ்டங்களை நினைக்கவே பயங்கரமாக இருக்கிறது. அந்தக் கஷ்டங்கள் வருமாயின், இந்த உலகம் தார்மிக உலகம்தான் என்பதற்கு அவை அறிகுறிகளாக இருக்கும். எனவே, நாம் கஷ்டத்திற்கு உள்ளாவதும் நமக்குள்ள நம்பிக்கைக்கு ஒரு

ருசுவாகும். அதாவது, இறுதியில் கடவுளின் சட்டங்கள்தான் அமலுக்கு வந்து தீரும் என்பதிலும், பூமியின் ஆகர்ஷண சக்தியை எவ்விதம் மனிதர் மீற முடியாதோ, அதுபோலவே கடவுளின் சட்டங்களையும் மீறுவதில் வெற்றி பெற முடியாது என்பதிலும் நமக்குள்ள நம்பிக்கைக்கே ருசுவாகும்.

''கடவுள் தங்களுக்கு அருள் புரிந்து தாங்கள் நீண்ட காலம் வாழும்படி செய்யவேண்டும். தயவு செய்து, நீங்கள் மனச் சோர்வுக்கு இடம் கொடுக்காமல், இந்தியாவுக்காகவும், உலகத்தின் மற்ற நாடுகளுக்காகவும் உயிர்வாழ்ந்து வாருங்கள். சென்ற கடிதத்தில் தங்களுக்கு நான் எழுதியதைப் போல், தேசங்களுக்கிடையேயும், கோஷ்டிகளுக்கிடையேயும் அரசியல் அதிகாரம் மாற்றப்படும்போதும், மாற்றப்பட்ட பிறகும் பலாத்காரம் ஏற்பட்டுத்தான் தீரும். 1776-இல் பதின்மூன்று அமெரிக்க காலனிகள் பிரிட்டனிலிருந்து கத்தரித்துக் கொண்டபோது, எங்களிடையே கலகங்களும் போர்களும் ஏற்படத்தான் செய்தன. மேனாடுகளின் சரித்திரம் முழுவதும் அத்தகைய நிகழ்ச்சிகள் மலிந்துள்ளன. போதிய அளவு மேனாட்டுக் கொள்கைகள் இந்தியாவிலும் பரவிவிட்டதால், இந்தியாவும் அந்த நாடுகளைப் பின்பற்றியுள்ளது. எனினும், அடுத்த யுத்தம் வரும்போது அத்தகைய நிலைமை மறைந்து, மத விரோதமான மேனாட்டுப் பண்பாடு எங்கே கொண்டு போய்ச் சேர்க்கும் என்பதை இந்தியர்கள் சந்தேகத்துக்கு இடமின்றி கண்டு கொள்ளுவார்கள்.''

நான் இன்னும் போதிய அளவு பற்றற்ற நிலையை அடையவில்லை, கோப தாபங்களையும் உணர்ச்சிகளையும் கட்டுப்படுத்தவில்லை. இதை நான் அறிந்துகொண்டிருப்பதே எனது நம்பிக்கையின்மைக்குக் காரணமாகும். தேவையான பற்றற்ற நிலையை நான் அடையவில்லை என்பதை ஒரு நாள் நான் உணர்ந்து கொண்டேன். தொண்டு செய்வதாக வாழ்க்கை இருக்க வேண்டும். அவ்விதம் இருந்தாலொழிய எவருக்கும் வாழ உரிமை இல்லை. கீதையில் உபதேசித்துள்ளவாறு பற்றற்ற நிலையை அடையாத ஒரு மனிதன் பூரணமான தொண்டு செய்ய முடியாது.

ஒருவர் தமது குற்றம் குறைகளை மனப்பூர்வமாக ஒப்புக் கொள்ளுவது ஆன்மாவுக்கு நன்மையாகும். அவ்விதம் ஒப்புக் கொள்ளுவதன் மூலம் அக் குற்றம் குறைகளைக் களைந்து கொள்ளுவது சாத்தியமாகிறது. அத்தகைய குற்றம் குறைகளை அகற்றி, இழந்த நம்பிக்கையை மீண்டும் பெற நான் எல்லா முயற்சியும் செய்து வருகிறேன் என்பதை 'ஹரிஜன்' வாசகர்கள் அறிந்து கொள்ளட்டும். தமது சக மனிதர்களுக்காகத் தொண்டு புரியத் தமது வாழ்க்கையை அர்ப்பணம் செய்யும் ஒவ்வொருவரும், அவ்வித நம்பிக்கைக்கு உரியவர்கள் என்பதை இச் சந்தர்ப்பத்தில் நான் மீண்டும் கூற வேண்டும். அதை, கவைக்கு உதவாத ஒரு வெறும் கனவு என்று ஏளனமாகத் தள்ளிவிடக் கூடாது.

அமைதியை விரும்பும் ஒரு மனிதனுக்கு, பகையும் துவேஷமும் நிறைந்த சமூகத்தில் இடம் இருக்க முடியாது என்பது தெளிவாகும். எனினும், அவன் பூரண ஆயுளான 125 வயது

வரையில் வாழலாம். தமக்கு சமூகத்தில் ஓர் இடத்தை ஏற்படுத்திக் கொள்ள இடைவிடாது முயற்சிப்பதன் மூலம் அவன் அவ்வளவு காலம் வாழ முடியுமென நம்பலாம். எனது இரண்டாவது அறிக்கையின் கருத்து இது தான். எனது அறிக்கை, பகை நிறைந்த சமூகத்தைப் பற்றிய எனது கண்டனத்தைத் தெரிவிப்பதாகும்.

சென்ற முப்பது ஆண்டுகளாகச் செய்து வந்த அகிம்சை முயற்சி வீணாகி விட்டதா? பலாத்காரம், இந்தியாவின் கிராமங்களிலும் ஊடுருவி விடவில்லை என நம்புவோமாக.

—'ஹரிஜன்' 29—6—1947

# 8

# எனது திக்கற்ற நிலை

எனது பிறந்த தினத்தை யொட்டி வந்த வாழ்த்துச் செய்திகளில் இதுவும் ஒன்றாகும்:

"தற்போதைய நிலைமை உங்களுக்கு மனச் சோர்வை உண்டாக்க வேண்டாம் என நான் யோசனை கூறலாமா? அகிம்சையின் மூலம் உலகத்தின் துன்பத்தைப் போக்க இந்தியா வகுத்துள்ள தெய்விகமான திட்டத்தை வீணாக்குவதற்காகத் தீய சக்திகள் செய்யும் இறுதியான முயற்சியே இது என்பது எனது அபிப்பிராயமாகும். அந்த தெய்விக நோக்கத்தை நிறைவேற்றுவதற்கான ஒரே கருவி இந்த உலகில் நீங்கள் ஒருவர் தான்."

விஷயத்தை நன்கு அறிந்து கொண்டல்ல, என் மீதுள்ள அன்பினாலேயே இந்தத் தந்தி அனுப்பப்பட்டுள்ளது.

என்னுடைய தற்போதைய மன நிலையை, மனச்சோர்வு என்று வர்ணிப்பது தவறாகும். நான் உண்மையையே எடுத்துக் கூறியிருக்கிறேன். என் ஒருவன் மூலம்தான் தெய்விக நோக்கம் நிறைவேற முடியும் என்று நினைக்கும் அளவுக்கு நான் அவ்வளவு மமதை கொண்டவன் அல்ல. அந்த நோக்கத்தை நிறைவேற்ற என்னைக் காட்டிலும் அதிகத் தகுதி வாய்ந்த கருவி உபயோகிக்கப்படலாம். நான், பலவீனமான ஒரு தேசத்தின் பிரதிநிதியே யொழிய, பலம் வாய்ந்த ஒரு நாட்டின் பிரதிநிதி அல்ல. அந்த இறுதி நோக்கத்தை நிறைவேற்ற, என்னைக் காட்டிலும் அதிகத் தூய்மையான, அதிக தைரியம் வாய்ந்த, அதிக தீர்க்க தரிசன சக்தியுள்ள ஒருவர் தேவையாக இருக்கலாம் அல்லவா? இதெல்லாம் வீண் கற்பனையான எண்ணம்தான். கடவுள் சித்தத்தை நிர்ணயிக்க யாருக்கும் சக்தி இல்லை. கருணை வடிவமான அந்த மகா சமுத்திரத்தில் நாம் சில துளிகளே ஆவோம்.

சந்தேகமின்றி மிகவும் உயர்ந்த காரியம் என்னவெனில், 125 வயதுவரை வாழவோ அல்லது இப்போதே இறந்துவிடவோ விரும்பாமல் இருப்பதேயாகும். எல்லாம் கடவுள் சித்தப்படி நடக்கும் என்று பரிபூரணமாக சரணம் அடைந்து விடுவதே எனது நிலையாக இருக்கவேண்டும். 125 வயது வரை வாழ விரும்புவதாக நான் பகிரங்கமாகவும், அதிகப் பிரசங்கித்தன மாகவும் பிரகடனம் செய்திருப்பேனுயின், இன்றுள்ள மாறுதலான நிலையில், அந்த விருப்பத்தை பகிரங்கமாகக் கைவிடும் பணிவும் எனக்கு இருக்கவேண்டும். நான் இதைத்தான் செய்திருக் கிறேன். சோர்வு உணர்ச்சி காரணமாக இவ்விதம் நான் செய்யவில்லை. இதை திக்கற்ற நிலை என்று கூறுவதே அதிகப் பொருத்தமாக இருக்கும். ஒருவர் தன்னை ஒரு முஸ்லிம் என்ரோ அல்லது ஹிந்து என்ரோ எப்படிக் கூறிக்கொள்ளத் துணிந் தாலும் சரி, அவர் காட்டுமிராண்டியாக மாறி படுகொலை செய்யும் பாதகத்தைத் திக்கற்றவனுகப் பார்த்துக் கொண்டிருப்பதைக் காட்டிலும், இந்தக் கண்ணீர்க் கடலிலிருந்து என்னைக் கொண்டு போய்விடும்படி எல்லாம் வல்ல இறைவனை நான் பிரார்த்திக் கிறேன். அப்போது கூட, "என் சித்தப்படி அல்ல, தங்கள் சித்தப்படி மாத்திரமே நடக்கட்டும்" என்றுதான் நான் கதறு கிறேன். நான் இங்கே இருக்கவேண்டும் என்பது அவரது விருப்பமாயின், இந்தப் பூமியில் இன்னும் சிறிது காலத்திற்கு அவர் என்னை வைத்திருப்பார்.

—'ஹரிஜன்' – 12—10—1947

# 9

# கடவுளின் கையில் இருக்கிறேன்

எனக்கு வாழ்த்துக் கூறியிருக்கும் அன்புள்ள ஒரு பிரஞ்சுக்காரர், என்னுடைய அலுவல்களைப் பூர்த்தி செய்வதற் காக நான் 125 வயது வரை வாழ விரும்பும்படி செய்ய முயற்சித் துள்ளார். நான் எவ்வளவோ சாதித்திருப்பதாயும், ஒவ்வொரு நிகழ்ச்சிக்கும் கடவுள் பொறுப்பாளியாயின், தீமையிலிருந்தும் நன்மையே ஏற்படும்படி அவர் செய்வார் என்றும், நான் வருந் தவோ அல்லது மனச் சோர்வு அடையவோ கூடாது என்றும் அந்த நண்பர் கூறியுள்ளார். அன்பான வார்த்தைகளால் என்னை நானே ஏமாற்றிக் கொண்டுவிட முடியாது. முன்பு என்னுல் ஏதாவது சாதனைகள் நிறைவேற்றப்பட்டிருந்தாலும், இன்று அவற்றை நான் மறந்து விடவேண்டும் என்று கருதுகிறேன். பழைய சாதனைகளின்மீது யாரும் வாழ முடியாது. மக்களுக்கு என்னுல் தொண்டு செய்ய முடியும் என்று நான் கருதினுல் மாத்திரமே நான் உயிர்வாழ்வதற்கு விரும்ப இயலும். அதாவது, மக்கள் தங்களுடைய வழிகளின் தவறை உணர்ந்து, எனது

வார்த்தைகளுக்குச் செவி சாய்க்க வேண்டும் என்பதே நான் கூறுவதன் பொருளாகும். நான் கடவுளின் கையில் இருக்கிறேன். என்னிடமிருந்து மேற்கொண்டு வேலைவாங்க வேண்டும் என்பது கடவுளின் விருப்பமாயின், அவர் அவ்விதமே செய்வார். ஆனால், இன்று என் வார்த்தைகளுக்கு மதிப்பில்லை என்பதை நான் நிச்சயமாக உணருகிறேன். மேலும் அதிகத் தொண்டு செய்வது எனக்குச் சாத்தியமில்லையாயின், கடவுள் என்னைக் கொண்டு போய்விடுவதே சிறந்ததாகும்.

'ஹரிஜன்' - 12—10—1947

# 10

# பிறப்பும் இறப்பும்

## (1)

எனது வண்டி* சேற்றில் மாட்டிக் கொண்டு விட்டது. இன்று அது சேற்றில் அகப்பட்டுக் கொண்டிருக்கிறது. நானே, அதைப் பழுது பார்த்துச் சீர்திருத்தவே முடியாமற்போய்விடலாம். பிறகு என்ன? பிறந்த ஒவ்வொருவரும் இறக்கவேண்டும் என்றும், இறந்த ஒவ்வொருவரும் மீண்டும் பிறக்கவேண்டும் என்றும் கீதை† பிரகடனம் செய்கிறது. ஒவ்வொருவரும் வருகிறார்; அவரது கடனின் ஒரு பகுதியைத் திருப்பிக் கொடுக்கிறார்; பிறகு அவர் வழியே போய் விடுகிறார். உள்ளே கோப தாபங்கள் இல்லையாயின், நோய் இல்லை என்பதே எனது நிச்சயமான அபிப்பிராயமாகும். கோப தாபமற்றவர் கூட இறந்துதான் தீர வேண்டும். எனினும், அவர் நோய் நொடியின்றி, ஒரு தலைவலி கூட இல்லாமல், மரத்திலிருந்து பழுத்த பழம் வீழ்வது போல் உதிர்ந்து விடுகிறார். அத்தகைய முடிவையே நான் விரும்புகிறேன்; அவ்விதமே எனக்கு ஏற்படுமென நம்புகிறேன். எனினும், கோப தாபங்கள் இன்னும் மறையவில்லை. அவற்றிலிருந்து விடுதலை பெறுவது தொலைவில் உள்ள ஒரு லட்சியமாகவே தோன்றுகிறது.

'எங் இந்தியா' - 14—4—1927

## (2)

பிறப்பும், அதன் பிறகு உள்ள காலமும் மெதுவான, உறுதியான வளர்ச்சியாக இருப்பதுபோல், நிரந்தரமான, உண்மையான மரணம் அக்காலத்தின் முடிவாக இருக்கிறது. ஒரு

* மிகவும் கடுமையான பிரயாணத் திட்டம் காரணமாக காந்திஜி நோய்வாய்ப்பட நேர்ந்தது. எனவே, தமது உடலையே 'எனது வண்டி' என்று காந்திஜி மேலே குறிப்பிட்டுள்ளார்.

† ஜாதஸ்ய ஹி த்ருவோ ம்ருத்யு: த்ருவம் ஜன்ம ம்ருதஸ்யச|
கீதை-அத்தியாயம்—2. சுலோகம்—27

இதன் பொருள்: பிறந்தவன் இறப்பதும் இறந்தவன் மீண்டும் பிறப்பதும் நிச்சயம்.

மனிதனின் வளர்ச்சிக்கு வாழ்வைப் போலவே மரணமும் அவசியமாகும்.

'எங் இந்தியா' – 2—2—1 22

(3)

பிறப்பும் இறப்பும் இரண்டு வெவ்வேறான நிலைகள் அல்ல; ஆனால், ஒரே நிலையின் இரண்டு வெவ்வேறான அம்சங்களேயாகும். எனவே, பிறப்பைக் குறித்து சந்தோஷப்படுவதற்கோ, இறப்பைக் குறித்து வருந்துவதற்கோ சிறிதும் காரணமில்லை.

'எங் இந்தியா' - ( — 11 — 1?2

(4)

வாழ்வும் மரணமும் ஒரே பொருளின் இரண்டு அம்சங்களே; ஒரே நாணயத்தின் முன்புறமும் பின்புறமும் போன்றவை. உண்மையில், சந்தோஷத்தையும் வாழ்வையும் காட்டிலும் துன்பங்களும் மரணமும் மிகவும் சிறப்புவாய்ந்தவையாக எனக்குத் தோன்றுகின்றன. சோதனைகளும் துன்பங்களும் வாழ்க்கையின் சாரமாகும். அவையின்றேல், வாழ்க்கைக்கு என்ன சிறப்பு இருக்கிறது? ராமன், சீதை இவ்விருவருக்கும் ஏற்பட்ட சோதனைகள், கஷ்டங்கள், அவர்களுடைய தவங்கள் இவற்றைத் தவிர ராமாயணத்தில் வேறு என்ன இருக்கின்றன? வாழ்வைக் காட்டிலும் மரணத்தையும் துன்பத்தையுமே நீங்கள் பொக்கிஷமாகக் கருதவேண்டும் என்பதும், அவற்றின் தூய்மையான தன்மையை உணர்ந்துகொள்ள வேண்டும் என்பதுமே எனது விருப்பமாகும்.

'ஹரிஜன்' – 15—2—1948

# 11

# வாழ்வதும் வீழ்வதும் ஒரு கலை

சத்தியாக்கிரகத்தின் ஆணிவேர் பிரார்த்தனையில்தான் இருக்கிறது. மிருக பலத்தின் கொடுமையிலிருந்து தம்மைக் காப்பாற்றிக்கொள்ள ஒரு சத்தியாக்கிரகி கடவுளையே நம்ப வேண்டும். எனவே, உங்களை யாராவது ஒருவர் மோசடி செய்வதற்காக நீங்கள் ஏன் பயப்படவேண்டும்? உங்களை யாராவது மோசடி செய்தால், நஷ்டம் அடைபவர் அவர்தான். சத்தியாக்கிரகப் போர், மனத்தில் உறுதியும் பலமும் இருப்பவருக்குத்தான் உகந்தது, சந்தேகவாதிக்கும் கோழைக்கும் உகந்ததல்ல. சத்தியாக்கிரகம்தான் நமக்கு வாழும் கலையையும் இறக்கும் கலையையும் கற்பிக்கிறது. பிறப்பும் இறப்பும் மனிதரால் தவிர்க்க முடியாதவை. மிருகத்திலிருந்து மனிதனை வேறுபடுத்துவது, உள்ளேயுள்ள ஆன்மாவை உணர வேண்டும் என்ற அவனது

நெஞ்சறிந்த முயற்சியேயாகும். பிரார்த்தனையில் கூறப்படும் கீதையின் இரண்டாவது அத்தியாயத்தில் உள்ள கடைசி பதினெட்டு சுலோகங்கள், *வாழ்க்கைக் கலையின் ரகசியத்தைச் சாரமாகக் கொடுக்கின்றன.

வாழும் கலையிலிருந்து அதற்கு அனுசரணையாக இறக்கும் கலையும் தொடருகிறது. மரணம் எல்லோருக்கும் வந்துதான் தீரவேண்டும். ஒரு மனிதன் இடிவிழுந்தோ, மாரடைப்பு காரண மாகவோ அல்லது மூச்சு நின்றோ சாகலாம். ஆனால், சத்தியாக் கிரகி தான் அடைய விரும்பும் அல்லது பிரார்த்திக்கும் மரணம் அது அல்ல. தமது கடமையைச் செய்வதில் மகிழ்ச்சியுடன் மரணத்தை வரவேற்பதே ஒரு சத்தியாக்கிரகிக்கு இறக்கும் கலை யாகும். விரோதிக்குக் காயத்தை உண்டாக்கவோ அல்லது அவரது உயிரைப் போக்கவோ விரும்பாமல் இருப்பது மாத்திரம் போதாது. உங்கள் விரோதி கொலை செய்யப்படும்போது, நீங்கள் மௌனமாகவோ, செயலற்றோ பார்த்துக் கொண்டிருந் தால் நீங்கள் சத்தியாக்கிரகிகள் அல்ல. உங்கள் உயிரைக் கொடுத்தாவது உங்களுடைய விரோதியை நீங்கள் காப்பாற்ற வேண்டும். ஆயிரக்கணக்கான இந்தியர்கள் அந்தக் கலையைக் கற்றுக் கொண்டுவிட்டால், பின்னர் இந்தியாவின் நிலைமையே மாறிவிடும். பின்னர் இந்தியாவின் அகிம்சைக் கொள்கை, பலவீனத்தை மறைக்கும் ஒரு போர்வையாக இருக்கிறதென யாரும் இழிவாகச் சுட்டிக் காட்ட முடியாது.

நமது சரித்திரத்திலேயே நெருக்கடியான ஒரு கட்டத்தை நாம் இப்போது கடந்து வருகிறோம். நம்மை நாலா பக்கங்களிலும் அபாயம் சூழ்ந்துகொண்டிருக்கிறது. இந்தப் பூமியில் சத்தியாக் கிரகத்தைக் காட்டிலும் அதிக சக்தி வாய்ந்தது எதுவுமே இல்லை. எனவே, சத்தியாக்கிரகத்தின் சக்தியை நாம் உணர்ந்து கொண்டுவிட்டால், இப்போது நம்மைச் சூழ்ந்து கொண்டுள்ள அபாயத்தையே நாம் நமக்குக் கிடைத்த சந்தர்ப்பமாக மாற்றிக் கொண்டுவிடலாம்.

'ஹரிஜன்' – 7—4—1946

## 12

# ஒரு ஜோஸ்யம்

**1928** மார்ச் மாதம் 12-ஆம் தேதி தமக்கு மரணம் நேரு மென்று காந்திஜி ஜோஸ்யம் கூறியிருப்பதாகவும், எனவே, அவர் மனம் இடிந்த நிலையில் இருக்கிறார் என்றும் பத்திரிகைகளில் வெளியான வதந்தியைக் குறித்து காந்திஜி கூறியதாவது :

---

* பகவத் கீதையில் இரண்டாவது அத்தியாயமான ஸாங்கிய யோகத்தில் கூறப் பட்டிருக்கும் சுலோகங்களில் 54 முதல் 72 வரையில் உள்ள சுலோகங்களையே காந்திஜி மேலே குறிப்பிட்டுள்ளார். இந்தப் பதினெட்டு சுலோகங்களின் பொருளை, மகாத்மா காந்தி நூல்கள் 9-ஆம் தொகுப்பு 523, 524 பக்கங்களில் விவரமாகக் காணலாம்.

நான் ஒரு ஜோஸ்யன் அல்ல என்பதை நண்பர்கள் தெரிந்து கொள்ளவேண்டும் என்பதற்காக இதைக் கூறுகிறேன். ஜோஸ்ய சாத்திரத்தைப்பற்றி எனக்கு ஒன்றுமே தெரியாது. அது ஒரு சாத்திரமெனில், சந்தேகமான மதிப்பு வாய்ந்த ஒரு சாத்திர மாகவே அதை நான் கருதுகிறேன். கடவுளிடம் ஏதாவது நம்பிக்கையுடையவர்கள் அதைக் கண்டிப்பாக அறவே ஒதுக்கி விடவேண்டும்.

'எங் இந்தியா' - 23—2—1928

# 13

# மரணம் ஒரு நண்பன்

கிழக்கு பாகிஸ்தானிலிருந்து ஏராளமான ஹிந்துக்கள் வெளியேறி இந்தியாவிற்கு வருவதைப்பற்றி ஒரு வங்காளி நண்பர் நீண்ட கடிதம் ஒன்று எழுதியுள்ளார். வீரத்தனமான மரணத்திற்கும் கோழைத்தனமான மரணத்திற்கும் உள்ள வேற்று மையையும், அவ்விஷயமாக எனது வாதத்தையும் அவரைப் போன்ற ஊழியர்கள் அறிந்துகொண்டுள்ளனர் என்ருலும், நான் விடுத்துள்ள அறிக்கையில் வெளியேறுவதை ஆதரிக்கும் ஓர ளவு மறைமுகமான யோசனையே அடங்கியிருப்பதாக சாதாரண மனிதர் கருதுவதாக அவர் குறிப்பிட்டுள்ளார். "மரணத்திற்கு உள்ளாக வேண்டிய நிலே ஏற்பட்டுவிடுமாயின், பின்னர் தைரியத் திஞல் என்ன பலன்? மரணத்திலிருந்து தப்புவதற்காகவே மனி தன் வாழ்கிருன்" என்று அவர் கூறுகிருர்.

மனிதன், மரணத்திலிருந்து தப்புவதற்காக வாழ்வதில்லே. அவ்விதம் வாழ்வாஞயின், அது கூடாது என்பதே எனது யோசனையாகும். வாழ்வைக் காட்டிலும் அதிகமாக மரணத்தை அவன் நேசிக்காவிட்டாலும், வாழ்வைப் போலவே மரணத்தையும் அவன் நேசிக்க வேண்டும். இது ஒரு கடினமான புத்திமதி என்றும், அதன்படி நடப்பது இன்னும் அதிகக் கடினம் என்றும் கூறலாம். சிறப்பு மிக்க செயல் எதுவும் கஷ்டமானதே. ஏறுவது எப்போதுமே கஷ்டமாகும்; இறங்குவது எளிது, பெரிதும் வழுக்கிவிடக் கூடியது. மரணத்தை ஒரு விரோதியாக அல்ல, நண்பனுக நடத்தும் அளவுக்கு மாத்திரமே உயிர், வாழ்வதற்கு உரியதாகிறது. வாழ்க்கையின் கவர்ச்சிகளுக்கு உட்படாமல் வெற்றி பெறவேண்டுமாயின், மரணத்தை உங்களுக்கு உதவியாக அழையுங்கள். மரணத்தைத் தள்ளிவைப்பதற்காக மானம், மனைவி, புதல்வி எல்லாவற்றையும் ஒரு கோழை விட்டுவிடுகிருன். தைரியசாலியோ, தன்மானத்தை இழப்பதைவிட மரணத்தையே விரும்புகிருன். காலம் வரும்போது, எனது யோசனை திட்ட வட்டமான செயலில் காண்பிக்கப்படும். இன்று எனது யோசனையை ஒரே ஒருவர் பின்பற்றிஞலும், அல்லது ஒருவர்

கூடப் பின்பற்ருமற் போனாலும் அதன் மதிப்பு குன்றிவிடாது. எந்த நல்ல காரியத்தையும் பெரும்பாலும் ஒரு சிலரேதான் ஆரம்பிப்பது வழக்கம்; ஒரே ஒருவர் மாத்திரம்கூட ஆரம்பிப்பதும் உண்டு.

'ஹரிஜன்' – 30—11—1947

# 14

# மரண பயம்

குழந்தைகளோ, இளைஞர்களோ அல்லது கிழவர்களோ மாண்டால் நாம் ஏன் நிலைகுலைய வேண்டும்? இந்த உலகில் ஒவ்வொரு விநாடியும் யாராவது பிறந்துகொண்டும், யாராவது இறந்து கொண்டும்தான் இருக்கிறார்கள்? யாராவது பிறந்தால் சந்தோஷப்படும், யாராவது இறந்தால் புலம்பும் மடத்தனத்தை நாம் உணர வேண்டும். ஆன்மாவில் நம்பிக்கை உடையவர்கள், ஆன்மா எக்காலத்திலும் மரணம் அடைவதில்லை என்பதை அறிவார்கள். ஹிந்துவாயினும், முஸ்லிமாயினும் அல்லது பார்சியாயினும் யாருக்குத்தான் ஆன்மாவில் நம்பிக்கையில்லை? வாழ்பவர்களின் ஆன்மாக்களும், இறந்தவர்களின் ஆன்மாக்களும் எல்லாம் ஒன்றுதான். சிருஷ்டி, அழிவு இவ்விரண்டும் இடைவிடாது நிரந்தரமாக நடைபெற்று வருகின்றன. நாம் மகிழ்ச்சிக்கோ அல்லது துக்கத்திற்கோ இடம் கொடுப்பதற்கு அதில் எதுவும் இல்லை. நம் தேச மக்களிடம் மாத்திரமே நாம் உறவுத் தொடர்பு கொண்டு, நம் நாட்டில் பிறப்பவர்களை நமது குடும்பத்தில் பிறப்பதாக எண்ணினால், நாம் எத்தனை பேரின் பிறப்புகளைக் கொண்டாட வேண்டியிருக்கும்? அதுபோலவே, நம் நாட்டில் ஏற்படும் மரணங்களைக் குறித்து நாம் அழ முற்படுவோமாயின், நம் கண்களில் எக்காலத்திலும் கண்ணீர் வற்ருமல் இருந்துவர வேண்டியதுதான்! இவ்விதமான சிந்தனை, மரண பயத்தை நாம் அறவே அகற்றுவதற்கு உதவியாக இருக்கும்.

இந்தியா, தத்துவ ஞானிகள் அடங்கிய ஒரு நாடு என்று கூறுகிறார்கள். அந்தப் புகழுரையை நாம் ஏற்றுக்கொள்ள விரும்பாமலும் இல்லை. அப்படியிருந்தும், மரணத்தின் எதிரில் நம்மைப்போல் திக்கற்றவர்களாக வேறு எந்த நாட்டினரும் இருப்பதில்லை. அதிலும் இந்தியாவில், மரணம் ஏற்படும்போது ஹிந்து சமூகத்தினரைப்போல் வேறு எவரும் அவ்வளவு திக்கற்றவர்களாகத் தோன்றுவதில்லை. நகைக்கத் தக்கவாறு நம்மை மகிழ்ச்சியில் ஆழ்த்துவதற்கு ஒரே ஒருவர் நம் குடும்பத்தில் பிறப்பது போதுமானது. அதுபோலவே ஒரே ஒரு மரணமானது நம்மை உரக்க பிரலாபித்து வெறி கொள்ளும்படி செய்து விடுகிறது. இதன் விளைவாக, அண்டை வீட்டுக்காரர்களை இரவு முழுவதும் தூங்க முடியாமற் செய்துவிடுகிறோம். நாம் சுயராஜ்யம்

அடையவேண்டுமாயின், சுயராஜ்யம் அடைந்தபின், நாம் பெருமைப்படத் தக்கவாறு அது செயல்பட நாம் விரும்புவோமாயின், இந்த அவலட்சணமான மரண பயத்தை நாம் முற்றிலும் ஒழித்துவிடவேண்டும்.

தைரியசாலிகள் புன்முறுவலுடன் மரணத்தை வரவேற்கிறார்கள். எனினும், அவர்களும் ஜாக்கிரதையாகத்தான் நடந்து கொள்ளுகிறார்கள். இந்த சாத்விகப் போரில் மூடத்தனமான துணிச்சலுக்கு இடமில்லை. ஒழுங்கீனமான நடவடிக்கை காரணமாக நாம் சிறைக்குச் செல்லவோ அல்லது இறக்கவோ விரும்பவில்லை. இந்த அரசாங்கத்தின் கொடிய சட்டங்களை எதிர்த்த வண்ணம் நாம் தூக்கு மேடைகளில் ஏறவேண்டும்.

'எங் இந்தியா' – 13—10—1921

# 15

# வரவேற்கத் தக்க ஒரு நண்பன்

மரணத்தைப் பற்றி நினைப்பது, எவ்வளவு ஆறுதல் அளிக்கும் ஒரு சிந்தனையாக இருக்கிறது? இயற்கையின் நிர்வாக முறையில் மரணம் எத்தகைய புத்திசாலித்தனமான ஒரு திட்டமாகும்! நமது வாழ்வின் இந்தச் சட்டத்தை நாம் உணர்ந்துகொண்டு, மரணத்தை வரவேற்கத்தக்க ஒரு நண்பனாகவும், நம்மைத் துன்பங்களிலிருந்து விடுவிப்பவனாகவும் எண்ணி அதற்கு நாம் தயாராக இருப்போமாயின், உயிர் வாழ்வதற்காக வெறிபிடித்த போராட்டத்தில் ஈடுபடுவதை நாம் நிறுத்திவிடுவோம்; மற்ற உயிர்களை அழித்தும், ஜீவகாருண்ய உணர்ச்சிகளையெல்லாம் உதறித்தள்ளிவிட்டும் வாழ விரும்புவதை நாம் நிறுத்திக்கொண்டு விடுவோம். எனினும், வாயளவில் வேதாந்தம் பேசுவது ஒரு விஷயமாகும்; நேரம் வரும்போது அந்த வேதாந்தத்தின் உண்மையை உணர்ந்து நடப்பது முற்றிலும் வேறு விஷயமாகும். உடலின் திட்டவட்டமான, மோசமான எல்லைகளை நன்கு உணராமலும், கடவுளிடத்திலும் அவரது மாற்ற முடியாத கர்மாவின் சட்டத்திலும் ஆழ்ந்த நம்பிக்கையின்றியும் வேதாந்தத்தின் உண்மையை உணர்ந்துகொள்ளுவது சாத்தியமில்லை.

'எங் இந்தியா' - 12—5—1927

# 16

# மரணம் ஓய்வேயாகும்

எனக்கு வரும் ஏராளமான கடிதங்களும் என்னைத் திக்கு முக்காடச் செய்கின்றன. அக்கடிதங்களின் ஒவ்வொரு வரியிலும் மரண பயமும், அகிம்சையைப் பற்றிய கேலிக் கூத்துமே அடங்கி

யிருக்கின்றன. இந்நிலையில், மகன்லால் காந்தியின் மரணத்தைப்பற்றி ஒரு நண்பர் அனுப்பியுள்ள கடிதம் மனத்திற்கு ஆறுதலும் சாந்தியும் அளிப்பதாக இருக்கிறது. அதில் கீழ்க்கண்ட உரையாடல் அடங்கியிருப்பதே அதற்குக் காரணமாகும்:

''குருவே, நான் களைத்துப் போய்விட்டேன். எனக்கு ஓய்வு கிடைத்தால் சந்தோஷமாக இருக்கும்'' என்று கன்பூஷியஸிடம்* அவரது சீடரான ஜுகங் கூறினர்.

அதற்குப் பதிலாக கன்பூஷியஸ் கூறியதாவது: வாழ்க்கையில் ஓய்வுக்கு இடமே இல்லை.

சீடர்: அப்படியானல் எனக்கு ஒரு காலத்திலும் ஓய்வு கிடைக்காதா?

கன்பூஷியஸ்: உனக்கு ஓய்வு கிடைக்கும். சுற்றியுள்ள சமாதிகளைப் பார். அவற்றில் சில கம்பீரமாக இருக்கின்றன; சில எளிமையாக இருக்கின்றன. இவற்றுள் ஒன்றில் நீ ஓய்வு பெறுவாய்.

சீடர்: மரணம் எவ்வளவு விசித்திரமானதாக இருக்கிறது? விவேகம் உள்ளவன் அதில் ஓய்வு பெறுகிறான். உலகாயத மனிதன் அதற்குள் மறைந்துவிடுகிறான்.

கன்பூஷியஸ்: அப்பா, மகனே, நீ நன்கு புரிந்து கொண்டிருக்கிறாய். மற்றவர்கள் வாழ்க்கையை ஒரு வரப் பிரசாதமாகவே கருதுகிறார்கள். அது கேடு விளைவிப்பதென்பதை அவர்கள் அறிவதில்லை. வயோதிகம், பலவீனமான ஒரு நிலை என்றே அவர்கள் உணர்ந்திருக்கிறார்கள்; அது சௌக்கியமாக இருக்கும் ஒரு நிலை என்பதை அவர்கள் உணரவில்லை. மரணம் பயங்கரமானது என்று மாத்திரம் அறிவார்கள்; அது ஓய்வு நிலை என்பதை அவர்கள் உணருவதில்லை.

சீடர்: மரணம் என்ற பழைய சம்பிரதாயம் எவ்வளவு அற்புதமானது!...புண்ணியவான்கள் மரணத்தில் ஓய்வைக் காண்கின்றனர்; கொடியவர்கள் அதில் மண்ணோடு மண்ணாக மறைந்துவிடுகின்றனர். மரணத்தின் மூலம் ஒருவர் தாம் எந்த இடத்திலிருந்து வந்தாரோ அந்த இடத்திற்குத் திரும்பவும் சென்றுவிடுகிறார். பண்டைக் காலத்தவர்கள், வாழ்க்கையை தாம் வீட்டிலிருந்து வெளியே வந்திருப்பது போலவும், மரணத்தை மீண்டும் தங்கள் வீட்டிற்குத் திரும்பிச் செல்லுவது போலவும் கருதினர்கள். தமது வீட்டை மறந்த ஒருவர் ஜாதி ப்ரஷ்டம் செய்யப்படுவதுடன், தமது தலைமுறையில் பழிப்புச் சொல்லுக்கும் ஆளாகிறார்.

* கன்பூஷியஸ் (கி. மு. 551–479) உலகப் புகழ்பெற்ற சீன தத்துவ ஞானியாவார். கன்பூஷிய மதத்தையும் ஸ்தாபித்தவர். அவரது உபதேசங்கள் தெய்வத்தன்மை வாய்ந்தவை என்று எண்ணி இன்றும் சீனர்கள் அவற்றைப் பின்பற்றுகின்றனர். மனித சக்திக்கு அப்பாற்பட்ட அற்புதங்களைப் பற்றி கன்பூஷியஸ் கவலைப்படவில்லை. பகுத்தறிவுக்கு உகந்ததாக இருப்பவைகளை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்றே அவர் உபதேசித்தார். சக மனிதர்களிடத்தில் அன்புடனும், பேராசையின்மை, தருமம், மன்னிக்கும் குணம், தவறுக்கு வருந்துவது முதலிய குணங்களுடனும் மனிதன் விளங்க வேண்டும் என்பதே அவரது உபதேசமாகும்.

மரண தண்டனை விதிக்கப்படுவதை ஆதரிப்பதற்காக மேற்கண்ட விவரங்கள் கொடுக்கப்படவில்லை. மரணம் பயங்கரமானது என்று பலரும் கடிதங்கள் எழுதியிருக்கிருர்கள். எல்லாச் சந்தர்ப்பங்களிலும் மரணம் பயங்கரமானதல்ல என்பதைக் காட்டவே, அவ்விவரங்களைக் குறிப்பிட்டிருக்கிறேன். சிற்சில சந்தர்ப்பங்களில் மரணம் விடுதலை அளிப்பதாகவும் இருக்கலாம். குறிப்பாக, தண்டனை என்ற முறையில் மரணம் வராமல் அது குணப்படுத்தும் ஓர் ஔஷதம் என்ற முறையில் வரும்போது அது துன்பங்களிலிருந்து விடுதலை அளிக்கிறது. 'மரணம், எல்லாவற்றையும் மறந்துவிடும் ஒரு தூக்கமே' என்று ஓர் ஆங்கிலக் கவி கூறுகிருர். ஒருவர் இந்த வாழ்க்கையில் தாம் செய்த தீச் செயல்களுக்காக மரணத்திற்குப் பின் நரகவேதனையளிக்கும் சித்திரவதையைக் கற்பனை செய்துகொள்ளவேண்டாம். அது போலவே, நற்காரியங்கள் செய்ததற்காகவே, மரணத்திற்குப் பின் வெகுமதி கிடைப்பதாகவும் கற்பனை செய்துகொள்ள வேண்டாம். புண்ணியச் செயல்களுக்கு நாம் அவ்விதம் சப்பைக் கட்டு கட்டவேண்டிய அவசியம் இல்லை. நமக்குத் தோன்றுவது போல் இயற்கை அவ்வளவு கொடியதல்ல. பல சமயங்களிலும் நாம்தான் கொடியவர்களாக இருக்கிறேம். நம் உள்ளேயே சொர்க்கமும் நரகமும் இருக்கின்றன. மரணத்திற்குப் பின் வாழ்வு இருக்கத்தான் செய்கிறது. ஆனல், அது இந்த வாழ்க்கையில் உள்ள அனுபவங்களைப்போல் இராது. அது நம்மை நடுங்கும்படி செய்யக்கூடியதாகவோ அல்லது மகிழ்ச்சி வெறியில் ஆழ்த்தக்கூடியதாகவோ இராது. மகிழ்ச்சியையும் துக்கத்தையும் சமமாக எண்ணும் உயர் நிலையை அடைவோனே உறுதியான அறிவு படைத்தவன் என்று கீதை கூறுகிறது. புத்திசாலிகள், மரணத்தினலோ அல்லது வாழ்வினலோ பாதிக்கப்படுவதில்லை. இவ்விரண்டும், ஒரு நாணயத்தின் இரண்டு புறங்களேயாகும்.

—'எங் இந்தியா' – 25—10—1928

## 17

# மரணம் பேய் அல்ல, நண்பனே

ஒரு வீரன் நோய்வாய்ப்பட்டு இறப்பதை விரும்புவதில்லை; போர்க்களத்தில் இறப்பதையே விரும்புகிருன். மரணம் எப்போதுமே ஆனந்தமானது; அதிலும் தனது லட்சியத்திற்காக அதாவது உண்மைக்காக இறக்கும் வீரனுக்கு அது இரட்டிப்பு ஆனந்தத்தைக் கொடுக்கிறது. மரணம் ஒரு பேய் அல்ல, அது மிக மிக உண்மையான நண்பன். அவன் நம்மை வேதனையிலிருந்து விடுதலை பெறும்படி செய்கிருன். நமக்கு நாமே விரோதியாக இருக்கும் நமக்கு அவன் உதவிபுரிகிருன். அவன் எப்போதும் நமக்குப் புதிய சந்தர்ப்பங்களும், புதிய நம்பிக்கைகளும் அளிக்கி

ருன். தூக்கத்தைப்போல் அவனும் நமது சோர்வைப் போக்கி இனிமையான புதிய பலத்தைக் கொடுக்கிருன். அப்படியிருந்தும், ஒரு நண்பன் இறக்கும்போது துக்கப்படுவது வழக்கமாக இருக்கிறது. எனினும், ஒரு வீரத்தியாகி மரணம் அடையும் போது, துக்கப்படும் அந்த வழக்கத்திற்கு இடம் இராமற் போய்விடுகிறது.

—'எங் இந்தியா' – 30—12—1926

(2)

(4-12-1940-இல் ஸ்ரீ ஆர்தர் மூருக்கு எழுதிய கடிதத்திலிருந்து)

ஒரு வீரத்தியாகியின் மரணமானது, அவரது தியாகத்திற்கு நிச்சயமாகக் கடைசி முத்திரையாக ஆவதுடன், வெற்றிக்கும் ஒரு முன்னேடியாகிவிடுகிறது.

—'ஹரிஜன்' - 2—5—1948

(3)

மற்றவர்களைக் கொல்லும் செயலில் ஈடுபட்டு மரணம் அடையும் பத்து லட்சம் பேரின் தியாகத்தைக் காட்டிலும், ஒரு நிரபராதியின் உயிர்த் தியாகம் பத்து லட்சம் மடங்கு அதிக சக்தி வாய்ந்தது. கடவுளாலோ அல்லது மனிதனுலோ இதுவரை கற்பனை செய்யப்பட்டிராத இறுமாப்புக்கும் கொடுங்கோன்மைக்கும் மிகவும் சக்தி வாய்ந்த பதில் என்னவெனில், நிரபராதியின் மனப்பூர்வமான தியாகமேயாகும்.

—'எங் இந்தியா' – 12—2—1925

(4)

பூசாரிமாரை வளைக்கும் அளவுக்கு புத்தருடைய மகிமை வாய்ந்த பேரன்புக்குச் சக்தி இருந்திராவிடில், அவர் (புத்தர்) பூசாரிமாரை எதிர்த்த வண்ணம் இறந்திருப்பார். ஒரு சாம்ராஜ்யத்தின் முழு வல்லமையையும் எதிர்த்த வண்ணம், தலையில் முட்கள் நிறைந்த கிரீடத்துடன் ஏசு நாதர் சிலுவையில் மாண்டார். எனவே, அகிம்சைத் தன்மை வாய்ந்த எதிர்ப்பை நான் உருவாக்குகிறேன் எனில், அத்தகைய மாபெரும் உபதேசகர்களின் அடிச்சுவடுகளையே நான் கள்ளம் கபடமின்றியும் பணிவுடனும் பின்பற்றுகிறேன்.

'சத்தியாக்கிரகம்' – பக்கம் 111

(5)

ஆடவரோ, பெண்ணே ஒவ்வொருவரும் இறுதியான, மகோன்னதமான தியாகம் செய்ய இடைவிடாது முயற்சிக்க வேண்டும். அதற்கான என் தகுதி இன்னும் உரை கல்லில்தான் இருக்கிறது. எவரும் அவரது மரணத்திற்கு முன் ஆனந்தமாக இருந்ததாகக் கருத முடியாது என்று ஸொலோன்* கூறியிருப்பது எவ்வளவு உண்மையாகும்?

'ஐக்கிய ஆசியா'

* ஸொலோன் (கி. மு. 638–558) கிரீஸில் இருந்த ஏழு ஞானிகளில் ஒருவர். அவர் புகழ் பெற்ற கவியாகவும் பிரபல சட்ட நிபுணராகவும் திகழ்ந்தார். அவர் இயற்றிய சட்டங்கள் மிகவும் மதிப்பு வாய்ந்தவை.

(6)

என்னைப் படைத்தவருக்கு நான் உண்மையானவனாக நடந்து கொள்ள வேண்டும். இந்த வாழ்க்கை எனக்கு சகிக்க முடியாததாகப் போய் விடுமாயின், அந்த விநாடியே என் மீது குறை கூறும்படி நான் வைத்துக் கொள்ளமாட்டேன். ஆதரவைப் பெறுவது நின்றுவிட்ட, உண்மையான வழியைக் கண்டு பிடிப்பதற்குத் தடையாக இருக்கக் கூடிய இந்த உடலை மனப் பூர்வமாகத் தியாகம் செய்வதைக் காட்டிலும், நான் செய்யக் கூடிய சிறந்த ஈடு வேறு என்ன இருக்க முடியும்?

'ஐக்கிய ஆசியா'

(7)

நான் கொல்லப்பட்டால் கூட, ராமா என்றும் ரஹீம் என்றும் திரும்பத் திரும்பக் கூறுவதை நான் விட்டுவிட மாட்டேன். எனக்கு, அந்த இரு பெயர்களும் ஒரே கடவுளையே குறிப்பதாகும். இந்தப் பெயர்களைக் கூறிக் கொண்டே நான் மகிழ்ச்சியுடன் இறப்பேன்.*

'ஐக்கிய ஆசியா'

# 18

# காட்டுமிராண்டித்தனமான வழக்கம்

நாட்டூர் மகாராஜா கடுமையான நோய்வாய்ப்பட்டு மரணப் படுக்கையிலிருந்தபோது பக்கத்திலிருந்த ஒரு நண்பர், அந்த இறுதிக் காட்சியைப் பற்றிப் பின்வருமாறு கூறுகிறார்:

"மகாராணி ஆச்சரியகரமாக சகித்துக்கொண்டு வருகிறார். எவருக்கும் மகாராணியை ஒரு தடவை பார்ப்பது நன்மை பயப்பதாகும்! அவ்வளவு விவேகமும் கண்ணியமும் வாய்ந்த ஓர் அருமையான பெண்மணி! மகாராஜா மரணம் அடைவதற்கு முன் நான்கு நாட்கள் வரையில் அவரது படுக்கைக்குப் பக்கத்தில் மகாராணி உட்கார்ந்தார். அவர் அங்கேயிருந்து அசையவில்லை. அவர் உணவின்றி, தூக்கமின்றி மகாராஜாவுக்குத் தொண்டு புரிந்து வந்தார். அவர் எல்லாவற்றையும் தமது கைகளாலேயே செய்தார். கடைசி நேரத்தில் மகாராஜாவின் காதில் அவர் பிரார்த்தனை மந்திரங்களைக் கூறி, மகாராஜா காலமான பின் அவரது கண்களைத் தாமே மூடினார். அவர் அழவில்லை; வேறு யாரும் அழுவதற்கும் அவர் விடவில்லை. அவர் தமது கடமைகளையெல்லாம் செய்துகொண்டு, ஒரு நிழலைப்போல் வீட்டைச் சுற்றி வந்துகொண்டு தமது அலுவல்களைக் கவனித்து வருகிறார்! துக்க காலத்திலும் இவ்வளவு சீரிய முறையிலும் கண்ணியமாகவும் நடந்துகொள்ளும் ராஜ குடும்பத்தை நான் பார்த்ததே இல்லை."

* காந்திஜி அவ்விதம் கூறியது ஒரு தீர்க்கதரிசனமாகவே அமைந்தது. யாரும் மறக்கமுடியாத 1948 ஜனவரி மாதம் 30-ஆம் தேதி மாலை ஒரு கொலைகாரன் காந்திஜியைச் சுட்டபோது, காந்திஜி "ஹே ராமா, ராமா" என்று கூறியவண்ணமே கீழே சாய்ந்தார். இந்த உலகில் நம் தேசத் தந்தை கூறிய கடைசி வார்த்தைகள் அவை தான்.

அத்தகைய பக்தியும், கண்ணியமும், தவிர்க்க முடியாததைப் பொறுமையுடன் அனுபவிக்கும் மனப்பான்மையும் எல்லோரும் பின்பற்றுவதற்கு உரியவை. ஒருவர் மாண்டதற்காக அழுது புலம்புவதை, நமது சமய நூல்கள் கண்டிப்பாகத் தடுக்கின்றன. அப்படியிருந்தும் கூட, ஹிந்து குடும்பங்களில் அருவருக்கத்தக்க முறையில் அழுது புலம்புவதும், பற்களைக் கடித்துக் கொள்ளுவதும் அதிகமாக இருக்கின்றன. இறந்தவருக்காக அழுவது பல இடங்களில் ஒரு நாகரிகமாகியிருக்கிறது. தன்னையறியாமல் அழுகை வராத இடங்களில், அழுவதுபோல் பாசாங்கு செய்வதும் வழக்கமாயிருக்கிறது. அது காட்டுமிராண்டித்தனமான, தெய்வ பக்தியற்ற ஒரு வழக்கமாகும். எனவே, அவ்வழக்கத்தைத் தடுத்துவிடவேண்டும். கடவுளிடத்தில் நம்பிக்கையுள்ளவர்கள், மரணத்தை துன்பங்களிலிருந்து விடுதலையளிப்பதாகக் கருதி வரவேற்கவேண்டும். இளைஞர்களாகி, பின்னர் வயோதிகர்களாக மாறுவது எவ்வளவு நிச்சயமோ, மரணமும் அவ்வளவு நிச்சயமாகும். வயோதிகம் வந்துவிட்டதே என்று யாரும் அழுவதில்லை. அதைப் போலவே மரணம் வருவதைக் குறித்தும் துக்கப்பட வேண்டிய அவசியமில்லை.

'எங் இந்தியா' – 21—1—1926

## 19

# தற்கொலை ஒரு பாவமா ?

**கேள்வி :** உயிர் வாழ விரும்புவது அறிவுக்கு முரண்பட்டது என்று கூறப்படுகிறது. உயிரின் மீதுள்ள தவறான பாசமே அத்தகைய விருப்பத்திற்குக் காரணமாகும். அப்படியிருக்க, தற்கொலை ஏன் ஒரு பாவமாகக் கருதப்படுகிறது?

**பதில் :** உயிர் வாழ விரும்புவது அறிவுக்கு முரண்பட்டதல்ல. அது இயற்கையானதே. உயிரின் மீதுள்ள பாசம் ஒரு வீண் மயக்கமல்ல, மிகவும் உண்மையானதே. உயிர் வாழ்வதில் ஒரு லட்சியம் இருக்கிறது. அந்த லட்சியத்தைத் தகர்க்க முற்படுவதுதான் பாவமாகும். எனவே, தற்கொலை ஒரு பாவமாகக் கருதப்படுவது முற்றிலும் நியாயமே.

—'ஹரிஜன்' — 1—6—1940

## 20

# ஓர் ஆறுதல் கடிதம்

மகளை இழந்த ஒரு தந்தைக்கு ஆறுதல் வார்த்தைகள் கூறி, எராவ்டா மத்திய சிறையிலிருந்து காந்திஜி ஒரு கடிதம் எழுதியிருந்தார். அந்தக் கடிதம் பின் வருமாறு:

அன்பார்ந்த நண்பருக்கு,

சென்ற மாதம் 28-ஆம் தேதி தாங்கள் எழுதிய உருக்கமான கடிதம் கிடைத்தது. துக்கத்தில் ஆழ்ந்துள்ள தங்களுக்கு எனது அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். இந்தக் கடிதம் உங்களுக்கு ஏதாவது ஆறுதல் அளிக்குமாயின், நான் மகிழ்ச்சி அடைவேன்.

உங்கள் மீது எவ்விதக் குற்றமும் இல்லை என்பதே எனது அபிப்பிராயமாகும். உங்களுக்குக் கிடைத்த பெண் டாக்டரை நீங்கள் நம்பியது முற்றிலும் சரியே. டாக்டர்களை அடிக்கடி மாற்றுவதில் எனக்கு நம்பிக்கை இல்லை. நமக்கு யார் கிடைக்கிறார்களோ அவர்களை நம்பவேண்டும். அவர்களுக்கு வேறு டாக்டர்களின் உதவி தேவையா அல்லது நோயைக் கண்டு பிடிக்கும் விஷயத்தில் அவர்களுக்கு சந்தேகம் இருக்கிறதா என்பதை அவர்கள் நமக்குச் சொல்ல வேண்டும். சிற்சில சமயங்களில் நாம் நம்பியது தவறாக முடிகின்றது. எனினும், வாழ்க்கையில் இத்தகைய அபாயங்கள் தவிர்க்க முடியாதவை. ஆகையால், நீங்கள் ஏதோ அசட்டையாக இருந்துவிட்டதாகக் கருதி, உங்கள் மனத்தை அலட்டிக்கொள்ள மாட்டீர்கள் என்று நம்புகிறேன். நீங்கள் வேண்டுமென்று அலட்சியமாக இருந்துவிடவில்லை என்பதை நீங்கள் அறிவீர்கள். இதைக் காட்டிலும் அதிகமாக எவரும் செய்ய முடியாது.

இப்போது உங்களுடைய கேள்விகளுக்கு விடையளிக்கிறேன் :

1. நீங்கள் பிராயச்சித்தம் எதுவும் செய்யவேண்டிய அவசியமில்லை. ஏனென்றால், நீங்கள் அக்கறை காட்டாமல் இருந்துவிடவில்லை.

2. யாரும் மற்றொரு ஆன்மாவுக்கு சாந்தி அளித்துவிட முடியாது. உங்கள் மகளுக்கு சாந்தி அவரிடமிருந்தேதான் கிடைக்கவேண்டும்.

3. மற்ற உதவி கிடைத்திருக்குமாயின் என்ன நேர்ந்திருக்கும் என்பதைக் கூறுவது முடியாத காரியமாகும். சிறந்த நிபுணர்களான டாக்டர்களின் உதவி இருந்தும்கூட, மன்னர்கள் மாண்டு விடுகிறார்கள்.

4. தவிர்க்க முடியாத ஒரு சம்பவத்தைக் குறித்து துக்கமோ அல்லது பரபரப்போ இருக்க வேண்டிய அவசியமில்லை. கடவுளால் படைக்கப்பட்ட ஒவ்வொன்றும் மரணம் அடைந்துதான் தீரவேண்டும். எனவே, அதை துக்ககரமான ஒரு சம்பவமாகக் கருத வேண்டிய அவசியமில்லை. உண்மையில் மரணமானது விடுதலை அளிப்பதாகும்.

5. உடலை உதறித்தள்ளிய பின் ஆன்மா என்ன செய்கிறது என்பது கற்பனை செய்துகொள்ள வேண்டிய விஷயமாகும்.

எனினும், ஒன்று மாத்திரம் நிச்சயம். அதாவது உடலுடன் ஆன்மா அழிந்துவிடுவதில்லை. மற்றவை சம்பந்தப்பட்டவரையில், நாம் கடவுளின் சட்டங்களையோ அல்லது இயற்கையையோ நம்பவேண்டியதுதான்.

6. பிறப்புக்கு முன்பும், இறந்த பிறகும் உள்ள நிலைகள் கண்களுக்குத் தெரியாதவை என்று கீதை திட்டமாகக் கூறுகிறது; அதை அனுபவமும் உறுதிப்படுத்துகிறது. இறப்புக்குப் பிறகு உள்ள நிலை, தற்போதைய நிலையின் திருத்தப்பட்ட இரண்டாம் பதிப்பாக இருக்கக் கூடும் என்று நாம் ஊகிக்கலாம்.

7. இவ்வுலகத்தை நீத்த உற்ருர் உறவினருக்கு நாம் நிச்சயமாக உதவி செய்ய முடியும். அதாவது அவர்களிடம் இருந்த நற்குணங்களை நமது வாழ்க்கையில் நாம் பின்பற்றுவதே அவர்களுக்குச் செய்யும் உதவியாகும். இங்கே நடப்பதைப் பற்றி அவர்களுக்கு ஏதாவது தெரியுமாயின், அவர்களிடம் இருந்த சிறந்த குணங்களை நாம் பின்பற்றுவதன் மூலம் அவர்களுடைய நினைவை நாம் பொக்கிஷம்போல் பேணிவருகிருேம் என்ற எண்ணம் அவர்களுக்கு நிச்சயமாக ஆறுதலைக் கொடுக்கும்.

*19—11—1930* தங்கள் உண்மையுள்ள,
எராவ்டா மத்திய சிறை **மோ. க. காந்தி.**

உங்கள் கேள்விகளில் ஒன்றை தவறுதலாக விட்டுவிட்டேன். கடவுள் ஒரு காலத்திலும் சக்தியற்றவராகிவிடுவதில்லை. ஆனல், அவரது சட்டங்கள் மாற்ற முடியாதவை. நாம் அவற்றை அறியோம். குறிப்பிட்ட சந்தர்ப்பத்தில் அவரது சித்தம் எப்படி இருக்கும் என்பதையும் நாம் அறியோம். எனவே, ஓர் எல்லைக்கு உட்பட்டு, நமக்கு எவை சிறந்தவை என்று தோன்றுகின்றனவோ அத்தகைய பரிகாரங்களை நாம் கைக்கொள்ளுகிருேம். பிரார்த்தனை நம்முள் இருக்கும் கடவுளுக்கேயாகும். எனினும், அது கடவுள் தமது சித்தத்தை மாற்றிக் கொள்ளும்படி செய்வதில்லை; ஆனல், கடவுள் சித்தம் என்ன என்பதை நாம் அறிந்து கொள்ளும்படி செய்கிறது. நாம் விரும்புவதெல்லாம் அதுதானே.

**மோ. க. கா.**

—'ஹரிஜன்' – 15—2—1948

# 21

# மற்ருேர் ஆறுதல் கடிதம்

காந்திஜி இந்த உலகத்தை நீத்துச் செல்லுவதற்கு முதல் நாள் அதாவது *29-1-1948*-இல் ஸ்ரீ மஷ்ருவாலாவுக்கு எழுதியிருந்த கடிதத்தில், அன்று தாம் ஸ்ரீ சங்கரனுக்கும் ஒரு கடிதம்

எழுதியிருப்பதாக குறிப்பிட்டிருந்தார். தமது மகளை இழந்த ஸ்ரீ சங்கரனுக்கு ஆறுதல் கூறி அக் கடிதத்தில் காந்திஜி சில வார்த்தைகள் கூறியிருந்தார்.

ஹிந்துஸ்தானி தாலிமி சங்கத்தைச் சேர்ந்த ஸ்ரீ சங்கரனுக்கு காந்திஜி எழுதிய அக்கடிதத்தின் விவரம் பின் வருமாறு:

சகோதரர் சங்கரனுக்கு,

உங்களுடைய புதல்வி சுலோசனாவின் மரணத்தைப்பற்றிய செய்தியை சி. கிஷோர்லால்தான் எனக்கு அறிவித்தார். அதைப் பற்றி எனக்கு ஒன்றுமே தெரியாது. இச் சமயத்தில் நான் உங்களுக்கு என்ன எழுத முடியும்? நான் உங்களுக்கு என்ன ஆறுதல் அளிக்க முடியும்? மரணம் ஓர் உண்மையான நண்பன். நமது அறியாமையினாலேயே, மரணத்தினால் நமக்குத் துக்கம் ஏற்படுகிறது. சுலோசனாவின் ஆன்மா நேற்று இருந்தது, இன்று இருக்கிறது, நாளைக்கும் இருக்கும். உடல் இறந்துதான் தீர வேண்டும். சுலோசனா தன்னுடைய குறைகளைத்தான் தன்னுடன் எடுத்துச் சென்றிருக்கிறாள்; தனது நற்பண்புகளை இங்கேயே விட்டுச் சென்றிருக்கிறாள். நாம் அவற்றையோ அல்லது அவளையோ மறக்கக்கூடாது. உங்களுடைய கடமையை நிறை வேற்றுவதில் இன்னும் அதிக உண்மையாக நடந்துகொள் ளுங்கள்.

எனது ஆசிகள்,
பாபு

—'ஹரிஜன்' - 22—2—1948

# 22

# மகத்தான ஜீவசக்தி

**கேள்வி:** ஒவ்வொரு நபரின் மரணத்தைப்பற்றிய நேரம், இடம், விதம் முதலியவை எல்லாம்வல்ல இறைவனால் முன் கூட்டியே நிர்ணயிக்கப்படுகின்றனவா? அப்படியாயின், நாம் நோயுற்றிருந்தால்கூட நாம் எதற்காகக் கவலைப்பட வேண்டும்?

**பதில்:** மரணம் ஏற்படும் விதம், இடம், நேரம் முதலியவை முன்னதாகவே நிர்ணயிக்கப்படுகின்றனவா என்பது எனக் குத் தெரியாது. 'அவன் சித்தமின்றி ஓர் அணுவும் அசை யாது' என்பது மாத்திரம் எனக்குத் தெரியும். இதுகூட தெளிவாக எனக்குத் தெரியவில்லை. பிரார்த்தனை செய்து பக்தியுடன் காத்திருந்தால், இன்று மங்கலாகத் தெரிவது நாளைக்கோ அல்லது அதற்கு மறு நாளோ தெளிவாகத் தெரியும். எல்லாம் வல்ல இறைவன் நம்மைப்போல் ஒரு நபர் அல்ல. அவரோ அல்லது அதுவோ உலகத்திலேயே

ஈடு இணையற்ற மகத்தான ஒரு ஜீவசக்தியோ அல்லது சட்டமோதான். எனவே, அவர் இப்போது ஒரு விதமாகவும், பிறகு வேறொரு விதமாகவும் விருப்பம்போல் நடந்துகொள்ளுவதில்லை. கடவுளின் சட்டத்திலும் திருத்துவதற்கோ அல்லது அபிவிருத்தி செய்வதற்கோ எதுவுமில்லை. அவரது சித்தம் நிலைத்தது, மாறுதல் இல்லாதது, மற்றதெல்லாம் ஒவ்வொரு விநாடியும் மாறும் தன்மையுடையது. முன்னதாகவே எல்லாம் நிர்ணயிக்கப்பட்டுள்ளன என்ற கொள்கையிலிருந்து, நாம் நோய்வாய்ப்பட்டிருந்தால் கூட நம்மைப்பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை என்று ஏற்பட்டுவிடாது. நோய்க்கு இலக்காவதைக் காட்டிலும், நோய் வந்தபோது அசட்டை செய்வது ஒரு பெரிய குற்றமாகும். நேற்று செய்ததைக் காட்டிலும் இன்று இன்னும் நன்றாகச் செய்ய வேண்டும் என்ற முயற்சிக்கு முடிவே இல்லை. நாம் கவலைப்படுவதுடன், நாம் ஏன் நோய்க்கு உள்ளானோம் என்பதையும் கண்டு பிடிக்கவேண்டும். ஆரோக்கியம்தான் இயற்கையின் நியதியாகும். நோய் இயற்கை நியதியல்ல. எனவே, நாம் இயற்கை நியதியை ஆராய்ந்து, அதற்குக் கீழ்ப்படிந்து நடப்போமாக. அவ்விதமாயின், நாம் நோய்க்கு இலக்காகமாட்டோம்; நோய்வாய்ப்பட்டாலும் குணம் அடைந்துவிடுவோம்.

—'ஹரிஜன்' – 28—7—1946

# 23

# விதியை வெல்ல முடியுமா?

விதியைப்பற்றி ஓர் அமெரிக்கப் பத்திரிகையாளர் காந்திஜியின் அபிப்பிராயத்தைக் கேட்டபோது அவர் கூறியதாவது:

"அது மிகவும் துஷ்பிரயோகம் செய்யப்பட்ட ஒரு சொல்லாகும். நாம் கற்பனைசெய்து கொள்ளுவதுபோல், அவ்விஷயத்தில் நாம் அவ்வளவு சுதந்திரம் உள்ளவர்கள் அல்ல என்பது உண்மையே. நமது சென்ற காலம் நம்மைப் பற்றிக் கொண்டிருக்கிறது.

**கேள்வி:** விதி என்பது உண்மையாகும். எனவே, ஒருவருடைய விதியின் விபரீதமான பலன்களை எப்படிச் சமாளித்து வெற்றி பெற முடியும்?

**பதில்:** விதியின் நற்பலன்களையும் தீய பலன்களையும் முற்றிலும் பற்றற்ற முறையில் ஏற்றுக் கொள்ளுவதுதான். சப்பாத்திக் கள்ளியில் உள்ள முட்களை அகற்றிவிட்டு அவற்றைப்

புத்திசாலித்தனமாகத் தேர்ந்தெடுப்பதன் மூலம் விவசாயத் திற்கும் கால்நடைகளின் தீவனத்திற்கும் உபயோகிப்பது போல், தீமைகளின் கூர்மையை அகற்றி அவற்றைப் பலனற்றுப் போகும்படி செய்துவிடவேண்டும்.

'ஹரிஜன்' -6—10—1946

## 24

# பூணூலும் புனர்ஜன்மமும்

உபநயனச் சடங்கு சம்பந்தப்பட்ட வரையில், அதை நான் புறக்கணித்து விட்டேன். என்ருலும், அதில் ஆழ்ந்த பொருள் இருக்கிறது என்பதில் சந்தேகமில்லை. புதிய பிறப் பின், அதாவது புனர்ஜன்மத்தின் அடையாளமே பூணூலாகும். பூணூல் போட்டுக் கொள்ளுவதற்கு முன் உள்ள ஒரு பிறப்பு உடல் சம்பந்தமானது. பூணூல் போட்டுக் கொள்ளுவது இரண் டாவது பிறப்பின், அதாவது ஆன்ம சம்பந்தமான பிறப்பின் அடை யாளமாகும்; கடவுளிடம் தன்னை அர்ப்பணம் செய்து கொள்ளும் ஒரு புதிய வாழ்க்கையின் அடையாளமாகும். வாழ்க்கையில் அதி கப் பொறுப்பு வாய்ந்த உயர் நிலையையே அது குறிக்கிறது. எனி னும், ஒருவருக்கு அது அவரது அண்டை வீட்டுக்காரரைக் காட் டிலும் அதிக அந்தஸ்தைக் குறிக்கவில்லை. பூணூல் போட்டுக் கொண்டதிலிருந்து ஒருவர் மிக மிக ஏழையின், மிக மிகத் தாழ்ந்தவரின் ஊழியராகிருர் என்பதை உணர வேண்டும். பூணூல் போட்டுக்கொள்ளும் வரையில் எல்லோரும் சூத்திரர்களே என்ற கொள்கையானது அற்புதமானது, உயர்ந்தது. ஆனல், துரதிருஷ்டவசமாக, மனிதர்களின் கடமைகளை வற்புறுத்துவதற் காக ஏற்பட்ட இந்தச் சடங்குகள், பிறரைச் சுரண்டுவதற்கும் சூறையாடுவதற்கும் துஷ்பிரயோகம் செய்யப்படுகின்றன.

—'ஹரிஜன்' – 22—4—1933

## 25

# ஆன்மா அழிவற்றது

ஆன்மா அழிவற்றது என்பதில் எனக்கு நம்பிக்கை உண்டு. இவ் விஷயத்தை யொட்டி சமுத்திரத்தை உவமையாகக் கூற நான் விரும்புகிறேன். தண்ணீர்த் துளிகள் சேர்ந்தே சமுத்திர மாகின்றது. ஒவ்வொரு துளியும் தனி அம்சம்; அப்படியிருந்தும் அது சமுத்திரததின் ஓர் அம்சமாகவும் இருக்கிறது. அதாவது, 'ஒன்ருகவும் பலவாகவும்' இருக்கிறது. வாழ்க்கையாகிற இந்த

மகா சமுத்திரத்தில் நாம் சிறு துளிகளே ஆவோம். எனது சித்தாந்தத்தின் பொருள் என்னவெனில், நான் வாழ்க்கையுடனும், உயிர் வாழும் எல்லாவற்றுடனும் ஒன்றுபட வேண்டும். கடவுளின் சந்நிதியில் நான் வாழ்க்கையின் மகத்துவத்தில் பங்கெடுத்துக்கொள்ள வேண்டும். இந்த வாழ்க்கையின் இறுதி நிலை கடவுளேயாகும்.

'ஹரிஜன்' - 15—2—1948

## 26

# உயிரும் ஆன்மாவும் வேறா?

**கேள்வி :** ஆன்மா, உயிரிலிருந்து வேறான பொருளா?

**பதில் :** உயிரிலிருந்து ஆன்மா வேறானதே. உயிர் உடலை ஆதாரமாகக்கொண்டிருக்கிறது. ஆன்மா அப்படியில்லை.

'எங் இந்தியா' – 13—2—1930

## 27

# ஆன்மாக்களின் உண்மையான ஐக்கியம்

ஸ்ரீ ஆனந்த ஹிங்கோரானியின் மனைவி இறந்ததைக் குறித்து, அவருக்கு காந்திஜி 20—6—1944-இல் எழுதிய கடிதத்தின் விவரம் பின்வருமாறு:

வித்தியாவின் மரணத்தைப் பற்றியே நீங்கள் எப்போதும் நினைத்துக்கொண்டிருக்கவோ, நிலைகுலையவோ வேண்டாம். அவர் உயிருடன் இருந்தபோது உங்களுக்கு உற்சாகமும் உத்வேகமும் அளித்துவந்திருப்பாராயின், அவர் ஓய்வு பெறும் இடத்திற்குச் சென்ற பின் இன்னும் அதிக உற்சாகமும் உத்வேகமும் அளிப்பவராக இருக்கவேண்டும். ஆன்மாக்களின் உண்மையான ஐக்கியத்தின் அர்த்தம் அதுதான் என்பது என் கருத்தாகும். அதற்கு மிகச் சிறந்த உதாரணம் ஏசுநாதரே யாவார். நவீன காலத்தில் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர் அதற்கு உதாரணமாகத் திகழ்கிறார். அவர்களுடைய மரணத்திற்குப் பிறகுதான் அவர்களின் செல்வாக்கு அதிகமாயிற்று. அவர்களுடைய ஆன்மா இறந்துவிட வில்லை. அது போலவே வித்தியாவின் ஆன்மா இறந்துவிடவில்லை. ஆகையால் நீங்கள் துக்கப்படுவதை விட்டுவிட்டு, உங்கள் முன்னுள்ள கடமையைப் பற்றிச் சிந்தியுங்கள்.

'ஹரிஜன்' – 18—7—1948

# 28

# இறந்தவர்களுடன் தொடர்பு

"இறந்தவர்களின் ஆவிகளிடமிருந்து உங்களுக்கு ஏதாவது தகவல்கள் வருகின்றனவா அல்லது இல்லையா? அவ்விதம் தகவல்கள் வருவது சாத்தியம் என்பதில் உங்களுக்கு நம்பிக்கை உண்டா? நம்பிக்கை உண்டெனில், அவற்றை நீங்கள் ஆதரிக்கின்றீர்களா?"

இவ்விதமெல்லாம் கேள்விகள் கேட்டுப் பல அன்பர்கள் எனக்குக் கடிதங்கள் எழுதியுள்ளனர். கடைசியாக ஒருவர் பின் வருமாறு எழுதிக் கேட்டுள்ளார்:

"சென்ற இரண்டு வார காலத்தில், பம்பாயில் உள்ள இந்திய ஆவி உலகத் தொடர்பு சங்கத்தையும், அதன் வெளியீடுகளையும் பற்றி ஓரளவு அறிந்துகொள்ளும் சந்தர்ப்பம் எனக்குக் கிடைத்தது. இந்தச் சங்கம் ஏராள மானவர்களின் மனத்தைக் கவர்ந்திருக்கிறதென்று அறிகிறேன். அதன் பலனுக, அவர்களில் பலரும் தங்களுக்கு நெருங்கிய உறவினரின் ஆவிகளுடன் தொடர்பு வைத்துக்கொண்டனர். அதன் காரணமாக, திருப்திகரமான பலன்களும் கிடைத்திருக்கின்றன. புனுவிலுள்ள திலகர் டாங்கியில் சமீபத்தில் ஒரு சிறுவன் மூழ்கி இறந்தான்; அந்தச் சிறுவனின் பெற்றோர்கள், அந்தப் பையனின் ஆவியுடன் தொடர்பு வைத்துக் கொள்ளுவதற்காக இந்தச் சங்கத்தின் உதவியை நாடினர்கள். பையனின் ஆவி அவர்களுடன் பேசியதாக எனக்குத் தகவல் கிடைத்திருக்கிறது. அச் சங்கத்தின் நிர்வாகியான ஸ்ரீ வி. டி. ரிஷி, 'சுபத்ரா அல்லது மரணத்துக்குப் பின் வாழ்க்கை' என்று ஒரு புத்தகம் எழுதியுள்ளார். தமது மனைவியின் ஆவியும், மற்றவர்களின் ஆவியும் தம்முடன் பேசிய விவரங்களைப் பற்றி அதில் அவர் குறிப்பிட்டுள்ளார். ஆவிகள் இப் பூமியில் உள்ள தங்களுடைய உறவினர்களுடனும் நண்பர்களுடனும் பேசுவதில் மிகுந்த ஆனந்தம் அடைகின்றன என்றும், அது ஆவிகளுக்கு ஒரு விதமான ஆறுதலாக இருக்கிறது என்றும் அவர் தமது புத்தகத்தில் குறிப்பிட்டிருக்கிறுர். ஆவிகளுடன் பேசும் சாத்திரத்தைப் பரப்பி தங்களுக்கு நன்மை செய்து வருவதற்காக அவருக்கு ஆவிகள் அடிக்கடி நன்றி செலுத்தியிருக்கின்றன என்றும் அவர் கூறுகிறுர். விஞ்ஞான சாத்திரத்தின் இந்தப் பகுதியில் விஞ்ஞானிகள் அக்கறை காட்டவில்லை என்றும், மரணத்திற்குப் பின் வாழ்க்கை எப்படி இருக்கிறது என்பதை அறிந்துகொள்ள முயற்சிக்க வேண்டியது அவசியம் என்றும் ஸ்ரீ ரிஷி கருதுகிறுர்.

"இதுவரை நான் அச்சங்கத்துடன் எவ்விதத் தொடர்பும் வைத்துக் கொள்ளாமல் விலகியே இருந்து வந்திருக்கிறேன். இவ்விஷயத்தில் மேற்கண்டவற்றிற்கு விரோதமாக ஏதாவது திருப்திகரமான வாதங்கள் கூறி உங்களுடைய கருத்து என்ன என்பதை (நீங்கள் விரும்பினுல் பகிரங்கமாக) நீங்கள் அன்புடன் வெளியிட முடியாதா? அவ்விதம் செய்வது ஆவிகளுடன் தொடர்பு வைத்துக்கொண்டுள்ள பலருக்கும், இனிமேல் தொடர்பு வைத்துக்கொள்ள விரும்பும் பலருக்கும், எனக்கும்கூட பலன் தரத்தக்கதாக இருக்கும். ஆவிக

ளுடன் தொடர்பு வைத்துக் கொள்ளுவது விரும்பத்தக்கதல்ல எனில், ஆவிகளிடமிருந்து ஸ்ரீ ரிஷிக்கு வந்துள்ள செய்திகளுக்கு என்ன காரணம் கூற முடியும்?''

இவ்விஷயமாக எனது பதில் திட்டவட்டமாக இருக்கவேண்டும். மாண்டவர்களின் ஆவிகளிடமிருந்து எனக்கு ஒருகாலத்திலும் செய்திகள் வந்ததில்லை. அத்தகைய செய்திகள் வருவதற்கு சாத்தியக்கூறு உண்டு என்பதை நம்பாமல் இருக்கவும் என்னிடம் சாட்சியம் எதுவும் இல்லை. எனினும், அத்தகைய தொடர்பு வைத்துக்கொள்ளுவதையோ அல்லது வைத்துக்கொள்ள முயற்சிப்பதையோ நான் பலமாகக் கண்டிக்கிறேன். பெரும்பாலும் அத்தகைய செய்திகள் ஏமாற்றுபவையாகவும், கற்பனைச் சரக்குகளாகவுமே இருக்கின்றன. அத்தகைய செய்தித் தொடர்புகள் சாத்தியம் என்றே வைத்துக்கொண்டாலும் கூட, அவ்விதம் வைத்துக்கொள்ளுவது ஆவிகளுக்கும் நடுவில் உள்ள தூதர்களுக்கும் அபாயகரமானதேயாகும். அத்தகைய வழக்கம், நடுவில் உள்ளவரால் அழைக்கப்படும் ஆவிக்கு மீண்டும் பூமியில் பிணைப்பு ஏற்படும்படி செய்கிறது. இதற்குமாறாக, அது பூமியிலுள்ள பந்தங்களிலிருந்து விடுபட்டு, உயர் நிலையை அடைவதாக இருக்கவேண்டும். ஆவிக்கு உடல் இல்லை என்பதற்காக, அது அதிகத் தூய்மையுள்ளதாக இருக்கவேண்டும் என்ற அவசியமில்லை. பூமியில் இருந்தபோது அதனிடம் என்ன குற்றம் குறைகள் உண்டோ, அவையெல்லாம் ஆவி உலகத்திலும் அதனிடம் இருக்கின்றன. எனவே, அதனால் கொடுக்கப்படும் தகவலோ அல்லது ஆலோசனையோ உண்மையாகவோ அல்லது சிறந்ததாகவோ இருக்கும் என்பதற்கில்லை. பூமியில் உள்ளவர்களிடம் தொடர்பு கொள்ள ஆவி விரும்புகிறது என்பது மகிழ்ச்சியை அளிக்கக்கூடிய ஒரு விஷயம் அல்ல. அதற்கு மாறாக, அத்தகைய சட்டவிரோதமான பற்றுதலிலிருந்து ஆவி தடுக்கப்படவேண்டும்.

ஆவிக்குத் தீமை ஏற்படுகிறது என்பது அவ்வளவோடு இருக்கட்டும். நடுவில் உள்ளவருக்கு ஏற்படக்கூடிய தீமையைப் பற்றி இப்போது கவனிப்போம். ஆவிகளுடன் தொடர்பு வைத்துக்கொண்டிருப்பதாக எண்ணும் யாவரும் சித்த சுவாதீனம் இராதவர்களாகவும், மூளைக் கோளாறு உள்ளவர்களாகவும், எவ்வித உருவான வேலையும் செய்வதற்குத் தகுதியற்றவர்களாகவுமே இருக்கிறார்கள் என்பது நான் நிச்சயமாகத் தெரிந்துகொண்ட ஒரு விஷயமாகும். எனது நண்பர்களில் எவரும் அத்தகைய தொடர்பு வைத்துக்கொண்டு எவ்விதத்திலும் பலன் அடைந்ததாக எனக்குத் தெரியவில்லை.

'எங் இந்தியா' – 12–9–1929

## 2

உயிருடன் இருப்போரின் நடத்தை மாண்டவர்களின் ஆன்மாவை எவ்விதத்திலாவது பாதிக்கிறதா என்று ஸ்ரீ ஹிங்கோ

ராணி, காந்திஜியைக் கேட்டிருந்தார். அந்தக் கேள்விக்குப் பதிலாகக் காந்திஜி கூறியதாவது:

இறந்தவர்கள் உயிருடன் இருப்பவர்களோடு தொடர்பு வைத்துக் கொள்ளுகிறார்களென நாம் கூற முடியாது. ஆனால், உயிருடன் இருப்பவர்கள் மாண்டவர்கள் விஷயத்தில் நன்மையோ, தீமையோ செய்யமுடியும் என்பது உண்மை. இதில் அணுவளவும் சந்தேகமில்லை. அதனால்தான் மாண்டவர்களுக்காக நாம் அழக்கூடாது.

(ஆனந்த் ஹிங்கோராணி எழுதிய 'பாபு எனது ரட்சகர்-2' என்ற நூலிலிருந்து எடுக்கப்பட்டது.)

'ஹரிஜன்' – 25—7—1948

# 29

# மரணத்திற்குப் பின் தொண்டு

காந்திஜி 31-5-1927-இல் ஸ்ரீ ஜி. டி. பிர்லாவுக்கு எழுதிய கடிதத்திலிருந்து ஒரு பகுதியே கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது:

ஒரு நல்ல மனிதரின் தொண்டு உண்மையில் அவரது மரணத்திற்குப் பிறகே ஆரம்பமாகிறது என நான் நம்புகிறேன். "மனிதரின் தீச் செயல்கள் அவர்கள் மாண்ட பிறகு வாழ்கின்றன; அவர்கள் புரிந்த நற் செயல்களோ பெரும்பாலும் அவர்களுடைய எலும்புகளுடன் புதைக்கப்பட்டுவிடுகின்றன" என்று ஷேக்ஸ்பியர்* கூறியிருப்பது சரியல்ல.

தீமை ஒருபோதும் நீண்ட காலம் நீடித்திருப்பதில்லை. ராமன் உயிருடன் இருக்கிறார். அவரது பெயரைத் திரும்பத் திரும்ப உச்சரிப்பதன் மூலம் நாம் நம்மைத் தூய்மைப்படுத்திக் கொள்ளுகிறோம். ராவணனே போய்விட்டான்; அவனது தீச் செயல்களும் அவனுடன் ஒழிந்து விட்டன. ஒரு கொடிய மனிதன்கூட ராவணனை நினைவுகூர்வதில்லை. அக் காலத்தில் வாழ்ந்த உண்மையான ராமனை எவரும் அறியார். ராமன், அவரது காலத்தில் கூட, குற்றச்சாட்டுகளுக்கு ஆளாகவேண்டியிருந்ததென கவி நமக்குக் கூறுகிறார். ஆனால், ராமனின் குறைகள் யாவும் அவரது உடலுடன் எரிந்துவிட்டன. இன்று நாம் ராமனை ஒரு தெய்வமாகவே வணங்குகிறோம். இப்போது இருப்பதைப் போல், ராமன் உயிருடன் இருந்த போது ராமராஜ்யம் இவ்வளவு பெரிதாக இருந்திருக்கவில்லை என்பது நிச்சயம். இதை ஒரு மகத்தான தத்துவம் என்ற முறையிலோ அல்லது ஆறுதல் அளிக்கும் சமாதானம் என்ற முறையிலோ நான் எழுதவில்லை. புனிதத் தன்மை வாய்ந்தவர் என்று நாம் கருதும் ஒருவருடைய மரணத்தைக் குறித்து நாம் துக்கப்படவே கூடாது என்பதையே

* வில்லியம் ஷேக்ஸ்பியர் (1564—1616) இங்கிலாந்தில் பிறந்தவர். உலகம் முழுவதும் புகழ்பெற்ற ஆங்கில நாடகாசிரியரும் கவியுமாவார்.

வற்புறுத்திக் கூற விரும்புகிறேன். அவரது மரணத்திற்குட் பிறகே அவரது உண்மையான வேலை ஆரம்பமாகிறது, அல்லது அவரது தொண்டு உண்மையான பலனைக் கொடுக்கத் தொடங்கு கிறது என்பதில் நமக்கு உறுதியான நம்பிக்கை வேண்டும். அவரது ஆயுள் காலத்தில் அவர் செய்த மகத்தான சாதனைகள் என்று எவற்றை நாம் கருதுகிறோமோ, அவை அவர் மாண்ட பின் செய்யும் சாதனைகளுக்குச் சிறிதும் ஈடாகா. எனவே, நாம் யாரைப் புனித ஞானிகள் என்று வணங்குகிறோமோ அவரது அடிச்சுவடுகளை, நமது சக்திக்கு இயன்றவரையில் நாம் பின் பற்ற வேண்டியது கடமையாகும்.

—'ஹரிஜன்' - 5—8—1950

# 30

# மறு பிறப்பு

இதுவரை அடைந்துள்ள முன்னேற்றமானது, என் மனத்தில் பூரண நம்பிக்கையை உண்டாக்கியிருக்கிறது. இந்த நம்பிக்கை நிறைவேறு முன் நான் உடலை விட்டுவிட்டாலும் கூட, நான் தோல்வியடைந்துவிட்டதாகக் கருதமாட்டேன். தற்போதைய என் உடலை நான் நம்புவது போலவே, மறுபிறப்பிலும் எனக்கு நம்பிக்கை இருக்கிறது. எனவே, சிறிதளவு முயற்சியும் வீணாவதில்லை என்பதை நான் அறிவேன்.

—'ஹரிஜன்' - 15—2—1948

## 2

நான் மீண்டும் பிறக்க விரும்பவில்லை. ஆனால், நான் மீண்டும் பிறந்துதான் தீர வேண்டும் என்றிருந்தால், நான் தீண்டாதார் வகுப்பைச் சேர்ந்த ஒருவனாகவே பிறக்கவேண்டும். அவ்விதம் பிறந்தால்தான், அவர்களுடைய துக்கங்களிலும், கஷ்டங்களிலும், அவர்களுக்கு இழைக்கப்படும் அவமதிப்புகளிலும் நான் பங்கு எடுத்துக் கொண்டு, என்னையும் அவர்களையும் அத்தகைய பரிதாபகரமான நிலையிலிருந்து விடுவிடுக்க முயற்சி செய்ய முடியும்.

—'ஹரிஜன்' - 22—2—1948

# 31

# எனது மூத்த மகன்

**கேள்வி:** உங்களுடைய சொந்த மகனைக் கூட உங்கள் வழியைப் பின்பற்றும்படி செய்ய உங்களால் இயலவில்லை. அவன் தவறான வழியில் போய் விட்டான். எனவே, உங்களுடைய

சொந்தக் குடும்பத்தை ஒழுங்கான முறையில் வைத்துக் கொள்ளுவதுடன் நீங்கள் திருப்தியடைவது சிறந்ததல்லவா?

பதில்: இக் கேள்வி என்னை நையாண்டி செய்வதாக இருக்கலாம். ஆனால், அதை நான் அப்படி எடுத்துக் கொள்ளவில்லை. இக் கேள்வி மற்ற எவருடைய மனத்திலும் எழுமுன், என் மனத்தில் எழுந்தது உண்டு. முந்திய பிறப்புகளிலும் மறு பிறப்புகளிலும் நான் நம்பிக்கை உடையவன். நமது முற்பிறப்புகளிலிருந்து நமது நல்வினைகளும் தீவினைகளும் நம்மைத் தொடருகின்றன. அவற்றின் பலனே நமது உறவுகளுக்கெல்லாம் காரணமாகும். கடவுளின் சட்டங்கள் நமது அறிவுக்கு எட்டாதவை; முடிவற்ற ஆராய்ச்சிக்குக் காரணமானவை. அவற்றை யாரும் ஆழம் கண்டு கொண்டுவிட முடியாது.

என் மகன் விஷயத்தை நான் இந்த முறையில்தான் கருதுகிறேன். அதாவது சென்ற காலத்தில் நான் செய்த தீவினையின் பலனே எனக்கு ஒரு கெட்ட மகன் பிறப்பதற்குக் காரணம் என்று நான் கருதுகிறேன். அந்தத் தீவினை, இந்தப் பிறப்பிலோ அல்லது முற்பிறப்பிலோ நான் செய்ததாக இருக்கலாம். நான் சிற்றின்ப மயக்கத்தில் ஈடுபட்டிருந்தபோது, எனது முதல் மகன் பிறந்தான். அதைத் தவிர, நானே வளர்ச்சியடைந்து வருகையில், எனக்கு விவரமே தெரியாமலிருக்கும் போது, அவனும் வளர்ந்து வந்தான். இன்னும் கூட பூரணமாக எதையும் அறிந்து கொண்டுவிட்டதாக நான் கூறிக்கொள்ளவில்லை. எனினும், அப்போதைக் காட்டிலும் இப்போது நான் அதிக விஷயங்களைத் தெரிந்து கொண்டிருக்கிறேன் என்பது நிச்சயம். பல வருடங்கள் வரையில் அவன் என் பராமரிப்பில் இல்லை. அதனால்தான் அவன் எந்த அலுவலிலும் ஈடுபடவில்லை. பொது மக்களின் நன்மை என்று நான் தவருகக் கருதும் பலிபீடத்தில் அவனையும் அவனது சகோதரர்களையும் நான் பலிகொடுத்துவிட்டேன் என்பதே எப்போதும் அவன் என் மீது கூறும் புகாராகும். எனது மற்ற புதல்வர்களும் என்மீது அதே புகார் கூறினர்கள். ஆனல், அவர்கள் பெருந்தன்மையுடன் என்னை மன்னித்துவிட்டார்கள்.

எனது மூத்த மகன், எனது பரிசோதனைகளின், எனது வாழ்க்கையில் ஏற்பட்ட புரட்சிகரமான மாறுதல்களின் விளைவாக நேரடியான துன்பத்திற்கு உள்ளானவன். எனவே, எனது மடத்தனமான தவறுகள் என்று அவன் எவற்றைக் கருதுகிருனே அவற்றை அவனல் மறக்க முடியவில்லை. இந் நிலையில், அவனை இழந்து விட்டதற்கு நான்தான் பொறுப்பாளி என்று நம்புகிறேன். எனவே, அதை நான் பொறுமையுடன் சகித்துக் கொள்ளக் கற்றுக்கொண்டிருக்கிறேன். எனினும், அவனை நான் இழந்துவிட்டதாகக்

கூறுவது முற்றிலும் சரியல்ல. அவன் தனது தவறான வழிகளை உணரும்படியும், அவனைப் பராமரிக்கும் விஷயத்தில் என்னிடம் குறைகளிருந்தால் அவற்றை மன்னிக்கும்படியும் கடவுள் அருள் புரியவேண்டும் என்பதே எனது இடைவிடாத பிரார்த்தனையாகும். உயர்ந்த நிலையை அடைவதே மனிதனின் இயல்பு என்பது எனது உறுதியான நம்பிக்கை. எனவே, அவன் ஏதாவது ஒரு நாள் அறியாமையாகிற தூக்கத்திலிருந்து விழித்தெழுவான் என்ற நம்பிக்கையை நான் இழந்துவிடவில்லை. அகிம்சையில் நான் செய்துவரும் பரிசோதனைத் துறையில் இவ்விதமாக அவனும் ஓர் அம்சமாக இருந்துவருகிறான். அவ்விஷயத்தில் நான் வெற்றி பெறுவேனா, எப்போது வெற்றி பெறுவேன் என்பதையெல்லாம் அறிந்து கொள்ளுவதில் நான் அக்கறை கொள்ளுவதில்லை. எனக்குத் திருப்தி ஏற்படுவதற்கு, எனது கடமையென்று நான் கருதுவதைச் செய்ய எனது முயற்சிகளை நான் தளரவிடவில்லை என்பதே போதுமானது. "பணி செய்து கிடப்பதே உனது உரிமை; அதன் பலனை நாடுவது ஒருகாலத்திலும் உனது உரிமை இல்லை" என்பது, கீதையின் பொன்னான உபதேசங்களில் ஒன்றாகும்.

—'ஹரிஜன்' - 18—8—1940



மகாத்மா பிரார்த்தனையில் ஆழ்ந்திருக்கும் நேரத்தில் எடுத்த படம்.

பகுதி ஆறு

# அடிப்படையான ஒழுக்கங்கள்

## 1—பிரதிக்ஞைகள்

## 1

## வாழ்க்கை இடைவிடாத முயற்சியே

ஒருவருடைய பிரதிக்ஞையை நிறைவேற்றுவதற்கு ஒரு போராட்டம் அவசியமா? இவ்விஷயமாக காந்திஜியின் ஆலோசனையை நாடுவதற்காக ஒருவர் அவரைக் காணவந்தார். அவருக்குக் காந்திஜி அளித்த பதிலே கீழே கொடுக்கப்பட்டுள்ளது:

இயற்கை உலகின் விதி போராட்டம்தான் அல்லவா? அது அப்படியாயின், ஆன்மிக உலகில் அது இன்னும் அதிக அளவில் உண்மையாகும். இயற்கை உலகில் ஆன்மிகச் சட்டம் ஒன்று இருக்கிறது; ஆன்மிக உலகில் இயற்கைச் சட்டம் ஒன்று இருக்கிறது. இடைவிடாது முயற்சிப்பதே வாழ்க்கையாகும். நம்முள் எப்போதுமே சூறாவளி உக்ரமாக அடித்துவருகிறது; கவர்ச்சிகளை எதிர்த்துப் போராடவேண்டியது நிரந்தரமான கடமையாக இருக்கிறது. என் நினைவுக்கு எட்டியவரையில் இது, கீதையில் மூன்று இடங்களில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. எதற்கும் மன உறுதி வேண்டும். அது இருந்தால், ஆங்கிலப் பழமொழிக்கு இணங்க, வழி பிறந்துவிடும். பைபிளில் உள்ள பின்வரும் பழமொழிகளும் குறிப்பிடத்தக்கவை. "கேளுங்கள், அது கொடுக்கப்படும்"; "நாடிச் சென்றால், நீங்கள் கண்டுகொள்ளலாம்;" "இடியுங்கள், கதவு திறக்கப்படும்".

—'ஹரிஜன்' - 8—7—1933

## 2

## பிரதிக்ஞைகளின் அவசியம்

எராவ்டா மத்திய சிறையிலிருந்து 1930-இல் சாபர்மதி ஆசிரமத்தில் உள்ளவர்களுக்கு காந்திஜி வாரந்தோறும் கடிதம் எழுதுவது வழக்கம். அக்கடிதங்கள் ஒன்றில், பிரதிக்ஞைகளின் முக்கியத்தைப்பற்றி காந்திஜி குறிப்பிட்டிருந்தார். அதன் விவரம் பின்வருமாறு:

இக்கடிதங்களின் வரிசையில், பிரதிக்ஞைகளின் முக்கியத்தைப்பற்றி நான் மேலெழுந்தவாரியாகக் குறிப்பிட்டிருக்கிறேன். அவற்றிற்கும் தெய்வ பக்தியுடன் கூடிய வாழ்க்கைக்கும் உள்ள தொடர்பைக் குறித்து, விவரமாக ஆலோசிக்கவேண்டியது அவசியமாகியிருக்கிறது. சில விதிகளை அனுசரிக்க வேண்டியது தான் நேர்மையும் நியாயமுமாகும் என்பதை ஒப்புக்கொள்ளும் சிந்தனையாளர்களின் ஆற்றல் மிக்க ஒரு குழுவினர் இருக்கிறார்கள். ஆனால், பிரதிக்ஞைகளின் அவசியத்தை அவர்கள் ஒப்புக்கொள்ளுவதில்லை. பிரதிக்ஞைகள் செய்வது பலவீனத்தின் அறிகுறி என்றும், அவை அபாயகரமானவையாகவும் முடியலாம் என்றும் கூறும் அளவுக்கு அவர்கள் போய்விடுகிறார்கள். ஒரு விதி அசௌகரியமானதாகவோ அல்லது பாவமானதாகவோ இருக்கிறது என்பது பின்னர் கண்டுபிடிக்கப்பட்டால், அதற்குப் பிறகும்கூட அதைப் பற்றிக்கொண்டிருப்பது நிச்சயமான தவறாகும் என்றும் அவர்கள் வாதிக்கிறார்கள். அவர்கள் கூறுவதாவது: 'மதுபானத்தைத் தவிர்ப்பது நல்லதுதான்; எப்போதாவது, உதாரணமாக வைத்திய சம்பந்தமான காரணங்களுக்காக அதை உபயோகிப்பதில் என்ன அபாயம் இருக்கிறது? பூரண மதுவிலக்கை அனுசரிப்பதாகப் பிரதிக்ஞை செய்வது அனாவசியமான ஓர் இடையூறாகும். மதுபானத்தைப்போலவே மற்ற விஷயங்களுக்கும் இந்த வாதம் பொருந்தும்.'

ஒரு பிரதிக்ஞை, பின்வாங்காத, உறுதியான தீர்மானமே. நாம் கவர்ச்சிகளுக்கு இலக்காகிவிடாமல், அது நமக்கு உதவி புரிகிறது. அசௌகரியத்தின் முன்னிலையில் உறுதி தளர்ந்துவிடுமாயின், அத்தகைய உறுதி கவைக்குதவாதது. மாற்ற முடியாத உறுதியின்றி முன்னேற்றம் ஏற்படுவது சாத்தியமல்ல. இந்தக் கருத்துக்கு, உலகம் முழுவதும் மானிட வர்க்கத்தின் அனுபவமானது ஆதரவளிப்பதாக இருக்கிறது. ஒரு பாவத்தைச் செய்வதற்கென்று ஒரு பிரதிக்ஞை இருக்க முடியாது. தெளிவற்ற, சந்தேகமான விஷயங்களையொட்டி யாரும் பிரதிக்ஞைகள் எடுத்துக் கொள்ளுவதில்லை, எடுத்துக்கொள்ளவும் கூடாது. எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்பட்ட கொள்கைகள் சம்பந்தமாக மாத்திரமே பிரதிக்ஞைகளை எடுத்துக்கொள்ள முடியும். அத்தகைய சந்தர்ப்பங்களில் பாவம் ஏற்படக் கூடும் என்பது கற்பனையேயாகும். உண்மையில் பற்றுதல் உள்ளவர், தாம் உண்மையைக் கூறுவதன் மூலம் யாருக்காவது துன்பம் ஏற்படாதா என்று யோசித்துக்கொண்டிருக்க முடியாது. ஏனெனில், சத்தியம் எக்காலத்திலும் அபாயத்தை விளைவிக்காது என்பதில் அவர் நம்பிக்கை உடையவராக இருக்கிறார். பூரண மதுவிலக்கும் அப்படியேதான். மதுவிலக்கைக் கைக்கொள்ளுவோர், மருந்துக்காக மாத்திரம் அதை உபயோகிப்பதென்ற விலக்கை ஏற்படுத்திக் கொள்ளலாம்; அல்லது தமது முழுப் பிரதிக்ஞையையும் நிறைவேற்றுவதில் தமது உயிரையும் பணயம் வைக்கத் தயாராக இருக்கலாம். பூரண மதுவிலக்குப் பிரதிக்ஞையை நிறைவேற்று

வதன் மூலம் நமது உயிரை இழக்கும்படி நேர்ந்தால் என்ன குடி முழுகிப் போய்விடும்? மதுவினுல் நமது உயிரை நீடிக்க வைக்கலாம் என்பதற்கு உத்தரவாதம் இருக்கமுடியும். எனினும், இந்த விநாடி அவ்விதம் உயிர் நீடிக்கப்பட்டாலும் கூட, அடுத்த விநாடி வேறு ஏதாவது காரணத்தினுல் உயிருக்கு முடிவு ஏற்பட்டுவிடலாம். அதற்கு மாருக, தமது பிரதிக்ஞையைக் கைவிடுவதைக் காட்டிலும் உயிரை விட்டுவிடும் ஒரு மனிதனின் உதாரணம், மதுபான வழக்கத்திலிருந்து குடிகாரர்களைத் தடுக்கக்கூடும். அவ்விதமாக அவரது உதாரணம், உலகத்திற்கு நன்மை செய்வதற்கான பெரும் சக்தியாகிவிடலாம். தங்களுடைய உயிர் போவதாக இருந்தால் கூட, தங்களுடைய நம்பிக்கையில் உறுதியாக நிற்கும் உயர்ந்த குணம் படைத்தவர்கள் மாத்திரமே, எப்போதாவது கடவுளைக் காணலாம் என்ற நம்பிக்கையுடன் இருக்க முடியும்.

பிரதிக்ஞைகளை எடுத்துக்கொள்ளுவது பலவீனத்தின் அறிகுறியல்ல, பலத்தின் அறிகுறியே. ஒருவர் தாம் செய்யவேண்டிய கடமையை, என்ன நேர்ந்தாலும் செய்தே தீருவதென்று உறுதி கொள்ளுவதே பிரதிக்ஞையாகும். அது பலத்தின் அரண். ஒருவர் ஏதோ ஒன்றைத் தம்மால், ‘இயன்றவரையில்’ செய்வதாகக் கூறினுல், அது அவரது கர்வத்தையோ அல்லது பலவீனத்தையோ தன்னை அறியாமலேயே வெளிப்படுத்துவதாகிறது. என் விஷயத்திலும், மற்றவர்கள் விஷயத்திலும் நான் ஒன்றைக் கவனித்து வந்திருக்கிறேன். அதாவது ‘இயன்றவரையில்’ என எல்லை வகுப்பது, அந்தப் பிரதிக்ஞையிலிருந்து தப்புவதற்கு நிச்சயமான வழியேயாகும். நாம் சத்தியத்தை ‘இயன்றவரையில்’ கடைப்பிடிப்பதில் அர்த்தமில்லை. குறிப்பிட்ட ஒரு தேதியில் குறிப்பிட்ட தொகையை ‘சாத்தியமான வரையில்’ கொடுப்பதாக உறுதி கூறி ஒருவர் கொடுக்கும் கைச்சாத்தை எந்த வியாபாரியும் ஏற்றெடுத்தும் பார்க்க மாட்டார். அதுபோலவே, சாத்தியமான வரையில் சத்தியத்தைக் கடைப்பிடிக்கும் மனிதனின் உறுதிப் பத்திரத்தைக் கடவுள் ஒப்புக்கொள்ளமாட்டார்.

பிரதிக்ஞையின் உருவே கடவுள் ஆவார். கடவுள் தாம் விதித்துள்ள சட்டங்களிலிருந்து ஒரு மயிரிழை வழுவினுல் கூட கடவுளாக இருக்கும் தன்மையை இழந்துவிடுவார். சூரியன், தமது கடமைகளிலிருந்தும் அனுஷ்டானங்களிலிருந்தும் சிறிதும் தவருதவர். அதனுலேயே, அவரை மூலாதாரமாகக் கொண்டு நேரத்தைக் கணக்கிடுவதும், பஞ்சாங்கங்களை கணிப்பதும் சாத்தியமாகின்றன. எல்லா அலுவல்களும், மனிதர் தங்களுடைய உறுதிமொழிகளை நிறைவேற்றுவதையே பொறுத்திருக்கின்றன. அப்படியிருக்க, நன்னடத்தையை உருவகப்படுத்துவதற்கோ அல்லது தன்னைத்தானே அறிந்துகொள்ளுவதற்கோ அத்தகைய பிரதிக்ஞைகள் அவ்வளவு அவசியம் அல்ல என்று கூறிவிட முடியுமா? சுயத்தூய்மைக்கும், தன்னைத்தான் அறிந்துகொள்ள

வும் பிரதிக்ஞைகள் அவசியம் என்பதில் நமக்கு ஒருபோதும் சந்தேகம் எழக் கூடாது.

('எராவ்டா மந்திர்', 13-ஆவது அத்தியாயம்)

## 3

## விசுவாசப் பிரமாணம்

நம்மில் மிகவும் சக்தி வாய்ந்தவர்களுக்கு வாக்குறுதிகள் அல்லது பிரதிக்ஞைகள் அவசியமானவை. என்னுடைய சொந்த அபிப்பிராயமும், மற்றும் பலருடைய அபிப்பிராயமும் இதுதான். ஒரு வாக்குறுதி ஒரு நேர் கோணத்தைப் போன்றது. அது சற்றேறக்குறைய அல்ல, இம்மியளவும் ஏற்றத் தாழ்வின்றி 90 டிகிரி இருக்க வேண்டும். தானாக வலுவில் கூறும் உறுதிமொழி, ஒரு தூக்கு நூற் குண்டைப் போல ஒரு மனிதனை நேர் பாதையில் செலுத்துகிறது. அவன் தவறாகப் போகும்போது அது அவனை எச்சரிக்கின்றது. ஒரு தனி நபரின் பிரதிக்ஞையைப் போல் பொதுவான விதிகள் அதே பலனைக் கொடுப்பதில்லை. அதனால் தான் பெரிய, சிறந்த முறையில் நடத்தப்படும் ஸ்தாபனங்களில் விசுவாசப் பிரமாணங்கள் எடுத்துக் கொள்ளும் முறையைக் காண்கிறோம். வைஸ்ராய், விசுவாசப் பிரமாணம் எடுத்துக் கொள்ள வேண்டியிருக்கிறது. உலகம் எங்கும் சட்டசபைகளின் உறுப்பினர்களும் அவ்விதமே பிரமாணம் எடுத்துக் கொள்ளுகிறார்கள். ராணுவத்தில் சேரும் சிப்பாயும் அவ்விதமே செய்ய வேண்டியிருக்கிறது. தவிர, எழுத்து மூலம் அளிக்கப்படும் வாக்குறுதி, எதைச் செய்வதாக வாக்குறுதி அளித்தோம் என்பதை அவர்களுக்கு நினைவூட்டுகிறது. நினைவு மிகவும் பலவீனமான ஒரு பொருளாகும். ஆனால், எழுத்தில் உள்ள வார்த்தை அழிவற்றதாக இருக்கிறது.

—'எங் இந்தியா' –1—10—1925

## 4

## பிரதிக்ஞைகளின் சக்தி

ஒருவர் பின்வருமாறு ஒரு கடிதம் எழுதியுள்ளார். அவர், 'நவஜீவன்' பத்திரிகையை ஒழுங்காகவும், அக்கறையுடனும் வாசிப்பவர் என்று தோன்றுகிறது. அவர் எழுதுவதாவது:

"நான் ஒழுங்காக நூற்று வருகிறேன். ஒரு பிரதிக்ஞையின் மூலம் என்னை நானே கட்டுப்படுத்திக் கொள்ள வேண்டுமா, வேண்டாமா என்பதே இப்போது கேள்வியாகும். தினந்தோறும் ஒரு மணி நேரம் ஒழுங்காக நூற்க வேண்டுமென்று நான் பிரதிக்ஞை எடுத்துக் கொள்ளுவேனாயின், நான்

தவருமல் யோக்கியமாக ஒரு மணி நேரம் நூற்ருகவேண்டும். பிரதிக்ஞை எடுத்துக்கொண்ட பின், நான் நீண்ட தூரம் பிரயாணம் செய்யவேண்டி யிருக்கிறதென்று வைத்துக் கொள்ளுவோம். அப்போது நான் நூற்கும் விஷயமாக எனது பிரதிக்ஞையை எப்படி நிறைவேற்ற முடியும்? அல்லது நான் கடுமையாக நோயுற்ருலும், அப்போதுகூட நான் நூற்றுத் தீரவேண்டும். இல்லாவிடில், மனிதனுக்கும் கடவுளுக்கும் முன்னிலையில் நான் செய்துகொண்ட பிரதிக்ஞையை மீறிய குற்றத்திற்கு ஆளாக நேரும். மற்ருெரு புறம் நான் பிரதிக்ஞை எடுத்துக் கொள்ளாவிடில், எனது உறுதி தளர்ந்து நெருக்கடி யான சமயத்தில் என்னை வஞ்சித்து விடாது என்பதற்கு என்ன உத்தரவாதம் இருக்கிறது?

"ஒருவரது உறுதி அசைக்க முடியாததாக இருக்க வேண்டுமென ஒரு வேளை நீங்கள் கூறலாம். எல்லோராலும் ஒப்புக் கொள்ளப்பட்ட சிறந்த தலைவர்களே தங்கள் வாக்குறுதிகளை அடிக்கடி மீறும்போது, என்னைப் போன்ற சாதாரணமானவர்களிடமிருந்து என்ன எதிர்பார்க்க முடியும்? தாங்கள் அன்பு கூர்ந்து எனது குழப்பத்தைத் தீர்ப்பீர்களா?"

குழந்தைப் பருவத்திலிருந்தே பிரதிக்ஞைகள் செய்து கொள்ளும் வழக்கத்தை நான் கையாண்டு வந்திருக்கிறேன். எனவே, என் மனப்போக்கு அவ்வழக்கத்தைத் தீவிரமாக ஆத ரிப்பதாகவே இருக்கும் என்பதை நான் ஒப்புக் கொள்ளுகிறேன். பல நெருக்கடியான சமயங்களிலும் அதுதான் என்னைக் காப் பாற்றியிருக்கிறது. படுகுழிகள் எதிலும் விழுந்துவிடாமல் மற்றவர் களையும் அது காப்பாற்றியதை நான் பார்த்திருக்கிறேன். பிரதிக் ஞைகள் இல்லாத வாழ்க்கை நங்கூரம் இல்லாத கப்பலைப் போன்றது; உறுதியான பாறையின் மீது இல்லாமல், சறுக்கும் மணலின் மீது கட்டப்பட்ட ஒரு கட்டிடத்தைப் போன்றது. ஒரு வருடைய நடத்தைக்கு உறுதியையும், அடித்தளத்தையும், மாருத நிலையையும் அளிப்பது பிரதிக்ஞைதான். இந்த அவசிய மான தகுதிகள் இல்லாத ஒருவரிடம் என்ன நம்பிக்கை வைக்க முடியும்? ஓர் ஒப்பந்தம் என்பது பரஸ்பரம் செய்து கொள்ளும் பிரதிக்ஞைகளேயன்றி, வேறு எதுவும் அல்ல. ஒருவர் மற்ருெரு வருக்கு உறுதி கூறினல், அது பிரதிக்ஞை செய்து கொள்ளுவதே யாகும்.

பண்டைய நாட்களில், புகழ் பெற்ற பெரிய மனிதர்கள் வாயால் ஏதாவது சொன்னல், அது ஓர் உறுதிப்பத்திரமாகவே கருதப்பட்டுவந்தது. லட்சக்கணக்கான தொகைகள் சம்பந்தப் பட்ட விவகாரங்களை அவர்கள் வாய் ஒப்பந்தகளின் மூலமே முடிவு செய்து கொண்டார்கள். உண்மையில், நமது சமூக அமைப்பு உறுதிமொழியின் புனிதத் தன்மையையே அடிப்படை யாகக் கொண்டிருக்கிறது. செய்து கொள்ளும் ஒப்பந்தங்களில் இத்தகைய அறுதியும் உறுதியும் இல்லாவிடில், உலகம் சீர் குலைந்துவிடும். இமயமலை அதன் இடத்தில் என்றென்றும் அசை யாமல் இருந்து வருகிறது. இமயமலையின் உறுதிக்குப் பங்கம் விளையுமாயின், பின்னர் இந்தியாவே அழிந்து விடும். சூரியன், சந்திரன் முதலிய தெய்விக கிரஹங்கள் இம்மியளவும் தவறின்றி

ஒழுங்காக இயங்குகின்றன. அவை அவ்விதம் இயங்காவிடில், மனிதரின் விவகாரங்கள் ஸ்தம்பித்து நின்றுவிடும். எண்ணிக்கை யற்ற யுகங்களாக சூரியன் குறித்த நேரத்தில் ஒரு விநாடி கூடத் தவறாமல் ஒழுங்காக உதயமாகிவருகிறது, எதிர்காலத்திலும் அவ் விதமே உதயமாகி வரும். குளிர்ந்த சந்திரனும் எத்தனையோ யுகங்களாக மிகவும் ஒழுங்காகவும் குறித்த நேரத்திலும் வளர்ந் தும் தேய்ந்தும் வருவதுபோல் இனியும் தொடர்ந்து அப்படியே மாறிமாறிவரும். அதனால் தான் நமது விவகாரங்களில் சூரியனை யும் சந்திரனையும் சாட்சிகளாகக் குறிப்பிடுகிறோம். அவை இயங் குவதை அடிப்படையாகக் கொண்டே நாம் நமது பஞ்சாங்கங்களை உருவாக்குகிறோம். சூரிய சந்திரனின் உதயத்தையும் அஸ்த மனத்தையும் அடிப்படையாகக் கொண்டே நமது நேரத்தை ஒழுங்கு செய்து கொள்ளுகிறோம்.

இந்தத் தெய்விக கிரஹங்களை இயக்கும் சட்டமே மனிதர் களையும் இயக்குகின்றது. பிரதிக்ஞைகளால் கட்டுப்படுத்தப் படாத ஒரு நபரை, எக்காலத்திலும் முற்றிலும் நம்பிவிட முடி யாது. "இது எனக்கு இயல்பேயாகும். எனவே, பிரதிக்ஞை களால் என்னை நானே நிரந்தரமாக ஏன் கட்டுப்படுத்திக் கொள்ள வேண்டும்? நெருக்கடியான சமயத்தில் நான் என்னை ஜாக்கிரதையாகப் பாதுகாத்துக் கொள்ள முடியும். அறவே சாராயம் குடிப்பதில்லை என்று நான் எதற்காகப் பிரதிக்ஞை செய்து கொள்ள வேண்டும்? நான் ஒருபோதும் மிதமிஞ்சிக் குடிப் பதில்லை. எப்போதாவது ஒரு கோப்பை சாராயத்தைக் குடிப் பதால் உண்டாகும் ஆனந்தத்தை நான் யாதொரு காரணமுமின்றி எதற்காக இழக்கவேண்டும்?" இவ்வாறு ஒருவர் கூறுவாராயின், அது அவரது கர்வத்தையே காட்டுவதாகும். இவ்விதம் கூறுப வரை, குடி வழக்கத்திலிருந்து எக்காலத்திலும் தடுக்க முடி யாது.

பிரதிக்ஞை செய்து கொள்ளுவதிலிருந்து நழுவுவோர், தங்க ளுடைய உறுதியின்மையையும், சஞ்சல புத்தியையுமே பிரகட னம் செய்து கொள்ளுகிறார்கள். உறுதியற்ற ஒருவர், இந்த உல கில் ஒருபோதும் நிரந்தரமாக எதையும் சாதிக்கமுடியாது. "என் னால் முடிந்தவரையில் பாதுகாத்துவருவேன்" என்று கூறும் ஒரு தளபதி அல்லது சிப்பாயின் உறுதியிலும் தீர்மானத்திலும் நீங் கள் என்ன நம்பிக்கை வைக்க முடியும்? தன்னால் இயன்றவரை யில் காவல் புரிவதாக காவற்காரன் ஒரு வீட்டுக்காரரிடம் கூறி னால், அவர் ஒரு காலத்திலும் அமைதியாகத் தூங்க முடியாது, 'தன்னால் முடிந்தவரையில் கண்காணிப்புடன் இருக்கும்' கொள் கையைப் பின்பற்றியதன் மூலம், எந்தத் தளபதியும் எக்காலத் திலும் வெற்றிபெற்றதில்லை.

தங்கள் விருப்பப்படி நூற்போரின் எண்ணிக்கையற்ற உதா ரணங்கள் என்னிடம் உள்ளன. அவர்களில் ஒவ்வொருவரும் சீக் கிரமாகவோ அல்லது சிறிது காலம் கழித்தோ சங்கடத்திற்கு,

உள்ளாகும்படியே நேர்ந்துள்ளது. அதற்கு மாருக, நூற்பதைத் தமது புனித கடமையாகக் கொண்டவர்களின் வாழ்க்கை அடியோடு மாறியிருக்கிறது. அவர்களால் சேமித்து வைக்கப்பட்டுள்ள மலைபோன்ற நூற்குவியல்களே அவர்களுடைய கதையைக் கூறுவதாக இருக்கின்றன. ஒரு பிரதிக்ஞை ஒரு நேர் கோணத்தைப் போன்றது; ஒரு பிரம்மாண்டமான கட்டிடத்தின் அவலட்சணமோ அல்லது அழகோ, உறுதியான தன்மையோ அல்லது உறுதியற்ற நிலையோ ஓர் அற்பமான நேர் கோணத்தையே பொறுத்திருக்கிறது. அது போலவே, ஒருவருடைய வாழ்க்கையின் உறுதியோ அல்லது தடுமாற்றமோ, தூய்மையோ அல்லது அசுத்தமோ, பிரதிக்ஞை எடுத்துக் கொள்ளுவதையே பொறுத்ததாக இருக்கலாம்.

கட்டு திட்டமும், நிதான புத்தியுமே பிரதிக்ஞையின் சாரமான அம்சங்களாகும். சாத்தியமில்லாத அல்லது ஒருவருடைய சக்தியை மீறிய பிரதிக்ஞைகளை எடுத்துக் கொள்ளுவது, சிந்தனையற்ற தன்மையையும், நிதானமின்மையையுமே காட்டுவதாகும். அது போலவே, சில நிபந்தனைகளின் மீது பிரதிக்ஞை எடுத்துக் கொள்ள முடியும். அதனால், பிரதிக்ஞையின் சக்தியோ அல்லது புனிதத்தன்மையோ குறைந்துவிடாது. உதாரணமாக, பிரயாணத்தின்போதும் நோயுற்றிருக்கும் போதும் தவிர மற்ற நாட்களில், தினந்தோறும் குறைந்த பட்சம் ஒரு மணிநேரமும் 200 கெஜத்திற்குக் குறையாமலும் நூற்பதென்று பிரதிக்ஞை செய்து கொள்ளுவதில் தவறு எதுவும் இல்லை. அத்தகைய பிரதிக்ஞை முற்றிலும் ஒழுங்காக இருக்கும் என்பதுடன், அனுசரிப்பதற்கு எளிதாகவும் இருக்கும். ஒரு பிரதிக்ஞையின் சாரம், அது செயல்படுவதில் உள்ள கஷ்டத்தில் இல்லை; எவ்வளவு கஷ்டங்கள் நேர்ந்தாலும் பின் வாங்காமல் அதை நிறைவேற்றித் தீருவது என்ற உறுதியிலேயே இருக்கிறது.

தன்னடக்கமே, பிரதிக்ஞை எடுத்துக் கொள்ளுவதன் தத்துவமாகும். உதாரணமாக, தன் விருப்பம் போல் சாப்பிடுவதற்காகவும், குடிப்பதற்காகவும் சந்தோஷமாக இருப்பதற்காகவும், மொத்தத்தில் தன் மனம் போனபடி செய்வதற்காக ஒருவர் பிரதிக்ஞை எடுத்துக் கொள்ள முடியாது. இந்த எச்சரிக்கை அவசியமாகும். ஏனெனில், ஆட்சேபகரமான விஷயங்களை மூடி மறைக்க பிரதிக்ஞைகளை உபயோகிக்கும் முயற்சிகள் நடைபெற்றதை நான் அறிவேன். "அரசாங்கத்திற்கு ஊதியம் செய்வதாக அத்துடன் ஒப்பந்தம் செய்து கொண்டிருக்கும் நான், சர்க்கார் உத்தியோகத்திலிருந்து எப்படி ராஜிநாமா செய்ய முடியும்?" "கள்ளுக்கடையை ஐந்து வருஷகாலத்துக்கு நடத்துவதாக நான் ஒப்பந்தம் செய்து கொண்டிருக்கையில், நான் அதற்குக் கட்டுப்படாமல் எப்படி என் கள்ளுக் கடையை மூட முடியும்?" ஒத்துழையாமை இயக்கம் உச்சநிலையில் இருந்த போது இப்படியெல்லாம் ஆட்சேபணைகள் எழுந்தன. சிற்சில

சமயங்களில் அத்தகைய கேள்விகள் புதிர்களைப் போல் தோன்றலாம். எனினும், அதை ஆழ்ந்து சிந்தித்தால், ஒழுங்கீனமான ஒரு செயலை ஆதரிக்கவோ அல்லது அதை நியாயமென்று ஸ்தாபிக்கவோ ஒரு பிரதிக்ஞையை எக்காலத்திலும் உபயோகிக்கக் கூடாதென்பதைத் தெரிந்து கொள்ளலாம். ஒரு பிரதிக்ஞை, ஒருவரை மேலே உயர்த்துவதாக இருக்கவேண்டும்; எக்காலத்திலும் அது கீழே அழிவுப் பாதையில் செலுத்துவதாக இருக்கக் கூடாது.

"எல்லோராலும் ஒப்புக் கொள்ளப்பட்ட தேசத் தலைவர்களின்" பலவீனத்தை அன்பர் சுட்டிக்காட்டி, தமது வாதம் நியாயமானதென்று நிரூபிக்க முற்பட்டுள்ளார். இத்தகைய வாதம் பலவீனத்தையே காட்டுகிறது. எவரும், தங்களுடைய தலைவர்களின் உயர்ந்த குணங்களைத்தான் உதாரணமாகக் கொண்டு நடக்கவேண்டும்; ஒரு போதும் அவர்களுடைய குற்றங் குறைகளை உதாரணமாகக் கொள்ளக் கூடாது. நமது தேசீயத் தலைவர்கள், தாங்கள் சிறிதும் குற்றம் குறையற்ற உத்தமர்கள் என்று சொல்லிக் கொள்ளவில்லை; சில தகுதிகளின் காரணமாகவே அவர்கள் பொது வாழ்க்கையில் உயர்ந்த பதவிகளை வகிக்கிறார்கள். அந்தத் தகுதிகளை நாமும் அடைய முயற்சிக்க வேண்டுமேயல்லாது, அவர்களுடைய குறைகளைப் பற்றிச் சிந்திக்கவும் கூடாது. தன் தந்தையின் குறைகளை மாத்திரம் கிரகித்துக் கொண்டுள்ள ஒரு மகனை உத்தமமான பிள்ளை என்று கூற முடியாது. ஒருவனுடைய உண்மையான பிதுரார்ஜித சொத்து, அவனது பெற்றோர்களின் அரும் குணங்களே யன்றி, குற்றம் குறைகள் அல்ல. தனது பெற்றோர்கள் பட்ட கடன்களை மேலும் பெருக்கிக் கொள்ளுபவன் உண்மையான மகன் ஆகமாட்டான். தனது பெற்றோர் பட்ட கடன்களைத் தீர்ப்பதுடன், அவர்களால் விட்டுச் செல்லப்பட்ட சொத்துக்களை பெருக்கிக் கொள்ளுபவனே ஒரு சிறந்த மகனாவான்.

'எங் இந்தியா' - 22—8—1929

## 5

# ஆன்மாவுக்கு 'டானிக்'

**கேள்வி:** பிரார்த்தனைகளை யந்திரத்தைப்போல் திருப்பித் திருப்பிக் கூறுவதால் எள்ளளவும் பலனில்லை என்பதை எல்லோரும் ஒப்புக் கொள்ளுகின்றனர். மயக்க மருந்தைப் போல் அது ஆன்மாவை உணர்ச்சியற்றுப் போகும்படி செய்கிறது. அப்படியிருக்க, தினந்தோறும் காலையிலும் மாலையிலும் மாமூலாக பதினோரு மகத்தான பிரதிக்ஞைகளைத் திருப்பித் திருப்பிக் கூறும்படி நீங்கள் தூண்டுவது எனக்கு

ஆச்சரியமாக இருக்கிறது. இது, நமது இளைஞர்களின் தார்மிக உணர்ச்சி மழுங்கும்படி செய்து விடாதா? இந்தப் பிரதிக்ஞைகளை வற்புறுத்துவதற்கு வேறு சிறந்த வழி இல்லையா?

பதில்: யந்திரம் போன்ற ரீதியில் இராவிடில், திரும்பத் திரும்பக் கூறுவதால் அற்புதமான பலன்கள் உண்டாகின்றன. உதாரணமாக, ஜப மாலையை மூடபக்திக்கு அடையாள மென்று நான் கருதுவதில்லை. நிலையின்றி சுற்றித்திரியும் மனைக்குச் சாந்தியைக் கொடுக்கக் கூடிய ஒரு சாதனமே ஜப மாலையாகும். பிரதிக்ஞைகளைத் தினந்தோறும் திரும்பத் திரும்பக் கூறுவதில் வெவ்வேறு தரங்கள் உண்டு. அக்கறை யுடன் சத்தியத்தை நாடுவோர் காலையில் எழுந்திருக்கும் போதும் இரவில் தூங்கச் செல்லும் போதும், தமது பிரதிக்ஞைகளுக்கு இணங்க தமது நடத்தையை ஒழுங்குடன் கட்டுப்படுத்திக் கொள்ள வேண்டியவராக இருக்கிறார் என்பதை, பிரார்த்தனை தினந்தோறும் அவருக்கு நினை வூட்டுகிறது. பிரதிக்ஞைகளை, யந்திரத்தைப் போல் திரும்பத் திரும்பக் கூறுவதால் மாத்திரமே தமக்குப் புண்ணியம் கிடைத்துவிடும் என்ற மயக்கத்தினால் அவ்விதம் செய்வாராயின், அதனால் பலன் ஏற்படாது என்பதில் சந்தேகமில்லை. 'நீங்கள் பிரதிக்ஞைகள் எடுத்துக் கொண்டிருப்பதையும், அவற்றைப் பின்பற்ற வேண்டுமென நீங்கள் எதிர்பார்க்கப்படுவதையும் அறிவீர்கள். அப்படி யிருக்க பிரதிக்ஞைகளை ஏன் திரும்பத் திரும்பக் கூற வேண்டும்?' என நீங்கள் கேட்கலாம். அத்தகைய வாதத்தில் பொருள் இருக்கிறது. எனினும், மனமொப்பி அவ்விதம் திரும்பத் திரும்பக் கூறுவது, உங்களுடைய தீர்மானத்திற்கு ஒரு தூண்டுகோலாக இருக்கிறது. இது அனுபவத்தின் மூலம் தெரிந்த விஷயமாகும். பலவீனமான உடலுக்கு 'டானிக்கு'கள் எப்படியோ அப்படியே, பலவீனமான மனத் திற்கும் ஆன்மாவுக்கும் பிரதிக்ஞைகள் அவசியமாக இருக்கின்றன. ஆரோக்கியமான உடலுக்கு 'டானிக்கு'கள் அவசியமில்லை. அதுபோலவே, பிரதிக்ஞைகளோ, தினசரி நினைவூட்டும் வேலையோ இல்லாமலேயே உறுதியான மனம் தனது ஆரோக்கியத்தைக் காப்பாற்றிக் கொள்ளுகிறது. எனினும், நம்மில் பெரும்பாலோரும் பலவீனர்களாகவும், பிரதிக்ஞைகளின் உதவியை நாடித் தீரவேண்டியவர் களாகவுமே இருக்கிறோம். இந்த உண்மையை, பிரதிக்ஞை களைப் பரிசீலனை செய்வதன் மூலம் தெரிந்து கொள்ளலாம்.

—'ஹரிஜன்' – 6—4—1940

## 2. சத்தியம்

## 1

# கடவுளும் சத்தியமும்

சாபர்மதி ஆசிரமவாசிகளுக்கு எராவ்டா மத்திய சிறையி லிருந்து காந்திஜி 1930-ஆம் ஆண்டில் எழுதிய வாரக் கடித மொன்றில் சத்தியம் அல்லது உண்மை என்பதை விளக்கியிருந் தார். அதன் விவரம் வருமாறு:

முதலாவதாக, சத்தியம் என்பதைப் பற்றி நான் விளக்கிக் கூறுகிறேன். ஏனெனில் சத்தியத்தை நாடுவது, சத்தியத்தை கடைப்பிடிக்க முயற்சிப்பது இவ்விரண்டையுமே அடிப்படை யாகக் கொண்டு சத்தியாக்கிரக ஆசிரமம் அமைக்கப்பட்டிருக் கிறது.

'சத்தியம்' (உண்மை) என்ற சொல், 'சத்' என்பதிலிருந்து வந்ததாகும். 'இருக்கிறது' என்பதே அதன் பொருள். உண்மை யைத் தவிர வேறு எதுவும் இருப்பதில்லை. அதனால்தான் சத் அல்லது உண்மை, கடவுளின் மிக மிக முக்கியமான பெயராக இருக்கிறது. கடவுளை சத்தியம் என்று கூறுவதை விட, சத்தியத்தை கடவுள் என்று கூறுவதே அதிக உண்மையும் பொருத்தமுமாகும். ஒரு மன்னரோ அல்லது தளபதியோ இன்றி நாம் காலம் தள்ள முடியாது. எனவே, கடவுளை, மன்னர் களுக்கெல்லாம் மன்னர் என்றும், எல்லாம் வல்லவர் என்றும் கூறுவது பொதுவாக வழக்கத்தில் இருந்துவருகிறது, இனியும் இருந்துவரும். எனினும், ஆழ்ந்து யோசித்தால், சத் அல்லது சத்தியம்தான் கடவுளின் குறிப்பிடத்தக்க, முற்றிலும் சரியான பெயர் என்பதை உணர்ந்து கொள்ளலாம்.

எங்கே சத்தியம் இருக்கிறதோ, அங்கேதான் உண்மையான அறிவு இருக்கிறது. எங்கே சத்தியம் இல்லையோ அங்கே உண்மையான அறிவு இருக்க முடியாது. அதனால்தான் 'சித்' அல்லது அறிவு என்ற சொல் கடவுளின் பெயருடன் சம்பந்தப் பட்டிருக்கிறது. உண்மையான அறிவு எங்கே இருக்கிறதோ, அங்கே தான் ஆனந்தம் இருக்கிறது. அங்கே, துக்கத்திற்கு இடமில்லை. சத்தியம், நிரந்தரமாக இருப்பது போலவே, அதிலிருந்து வந்த ஆனந்தமும் நிரந்தரமானது. அதனாலேயே, கடவுளை சத்-சித்-ஆனந்தம் (சச்சிதானந்தம்) என்று கூறுகிறோம். சத்தியம், அறிவு, ஆனந்தம் முதலியவற்றின் உருவே கடவுள்.

இந்த சத்தியத்தில் பக்தி இருந்தால் மாத்திரமே, நாம் இந்த உலகில் வாழ்வதற்கு நியாயம் உண்டு. நமது நடவடிக்கைகள் யாவும் சத்தியத்தை மையமாகக் கொண்டிருக்க வேண்டும். சத்தியமே நமது மூச்சுக் காற்றாக இருக்க வேண்டும். நமது

முன்னேற்றத்தில் நாம் இந்த நிலையை அடைந்துவிட்டால், ஒழுங்கான வாழ்க்கையின் மற்ற விதிகளை அனுசரிப்பது இயல்பான காரியமாகிவிடும். ஆனால், சத்தியம் இல்லாவிடில் வாழ்க்கையில் எந்தக் கொள்கைகளையும் விதிகளையும் அனுசரிப்பது சாத்தியமில்லாமற் போய்விடும்.

பொதுவாகப் பேசும் போது, சத்தியம் என்ற விதியை அனுசரிப்பது என்றால், நாம் உண்மை பேசவேண்டும் என்றே அர்த்தம் செய்து கொள்ளப்படுகிறது. ஆனால், ஆசிரமத்தில் உள்ள நாம் சத்தியம் அல்லது உண்மை என்ற சொல்லின் பரந்த அர்த்தத்தை அறிந்துகொள்ள வேண்டும். நமது சிந்தனையிலும், பேச்சிலும், செயலிலும் சத்தியம் இருக்க வேண்டும். இந்த சத்தியத்தின் பூரண அர்த்தத்தையும் உணர்ந்து கொண்ட ஒருவருக்குத் தெரிய வேண்டியது வேறு எதுவும் இல்லை. ஏனென்றால், எல்லா அறிவும் நிச்சயமாக அதில் அடங்கியிருக்கிறது. அதில் அடங்காதது பொய்தான், அதாவது போலி அறிவுதான். உண்மையான அறிவின்றேல் மன அமைதி இருப்பதும் முடியாத காரியம். ஒரு காலத்திலும் தவறாத சத்தியம் என்ற இந்த சோதனையைக் கையாள நாம் கற்றுக்கொண்டு விட்டால், பின்னர் எது செய்வதற்குத் தகுதி வாய்ந்தது, எது பார்ப்பதற்குத் தகுதி வாய்ந்தது, எது வாசிப்பதற்குத் தகுதி வாய்ந்தது என்பதையெல்லாம் நாம் உடனே கண்டு கொள்ளும் ஆற்றல் வாய்ந்தவர்களாக இருப்போம்.

ஒருவர் இந்த சத்தியத்தை அறிந்து கொள்ளுவது எப்படி? இந்த சத்தியத்தை, ஒரு மந்திரக் கல்லுக்கோ அல்லது காமதேனுவுக்கோ ஒப்பிடலாம். இதில் மாத்திரமே மனத்தைச் செலுத்துவதாலும் (அப்பியாசம்), வாழ்க்கையில் வேறு எதிலும் பற்றுதல் வைக்காமல் இருப்பதாலும் (வைராக்கியம்), இந்த சத்தியத்தை அறிந்து கொள்ளலாம் என்று பகவத் கீதை கூறுகிறது. இத்தகைய ஒரு முகமான பற்று இருந்தாலும், ஒருவருக்கு உண்மையாகத் தோன்றுவது மற்றொருவருக்கு உண்மையற்றதாகத் தோன்றலாம். எனினும், அதையெல்லாம் பற்றி சத்தியத்தை நாடுவோர் தங்களை அலட்டிக் கொள்ள வேண்டியதில்லை. வெவ்வேறாகத் தோன்றும் உண்மைகள், ஒரே மரத்தில் எண்ணிக்கையின்றியும் வெவ்வேறாகவும் தோன்றும் இலைகளைப் போன்றவை. இந்த உண்மையை நேர்மையாக முயற்சி செய்வோர் உணர்ந்து கொள்ளலாம். வெவ்வேறு நபர்களுக்கு கடவுளே வெவ்வேறு விதமாகத் தோன்றவில்லையா? இருந்தாலும், கடவுள் ஒருவரே என்பதை நாம் அறிவோம். எனினும், சத்தியம்தான் கடவுளின் சரியான பெயராகும். எனவே, ஒவ்வொருவரும் அவரவருடைய அறிவுக்கு உகந்தவாறு சத்தியத்தை பின்பற்றுவதில் தவறு எதுவும் இல்லை. உண்மையில் அவ்வாறு செய்வது அவரது கடமையாகும். அவ்விதம் சத்தியத்தை பின்பற்றுவோர் யாரிடமாவது தவறு இருக்குமாயின், அது தானாகவே சரியாகி விடும். சத்தியத்தை நாடுவதற்குத் தவம் வேண்டும், துன்பத்திற்குள்

ளாக வேண்டும். சத்தியத்தை நாடுவோர் சில சமயங்களில் மரணத்தையும் வரவேற்க வேண்டியிருக்கும். அதில் சுயநலத்தின் அறிகுறிகூட இருப்பதற்கு இடமில்லை. அவ்விதம் தன்னலமற்ற சத்தியத்தை நாடுவதில், எவரும் அதிக காலம் தமது நிதானத்தை இழந்துவிட மாட்டார். அவர் தவறான வழியில் செல்லத் தொடங்கிய உடனேயே அவருக்கு இடறு ஏற்பட்டு, மீண்டும் அவர் நேர் பாதையில் செல்ல முற்பட்டு விடுவார். எனவே, சத்தியத்தை நாடுவதுதான் உண்மையான பக்தியாகும். அந்த வழிதான் கடவுளிடம் கொண்டு போய்ச் சேர்க்கக் கூடியது. அதில் கோழைத்தனத்திற்கு இடமில்லை, தோல்விக்கு இடமில்லை. அது, ஒரு மந்திரப் பாதுகாப்பாகும். அதன் பலனாக, மரணம் கூட சாவற்ற வாழ்க்கைக்கு வாயிற்படியாகி விடுகிறது!

இச் சந்தர்ப்பத்தில், ஹரிச்சந்திரன், பிரஹ்லாதன், ராம பிரான், இமாம் ஹாசன், கிறிஸ்தவ மகான்கள் முதலியோரின் உதாரணங்களையும் வாழ்க்கைகளையும் சிந்தித்துப் பார்ப்பது நன்மை பயப்பதாகும். நாம் எல்லோரும், இளைஞர்களும் வயோதிகர்களும், ஆடவர்களும் பெண்களும், நாம் விழித்துக்கொண்டிருக்கும் நேரமெல்லாம், வேலை செய்யும் போதும், சாப்பிடும் போதும், தண்ணீர் குடிக்கும் போதும், விளையாடும் போதும், உடல் மறைந்து சத்தியத்துடன் ஒன்றாகக் கலக்கும் வரையில் முற்றிலும் சத்தியத்திலேயே ஈடுபட்டிருப்போமாயின் எவ்வளவு அற்புதமாகவும் அழகாகவும் இருக்கும்? சத்தியம் என்ற கடவுள் எனக்கு விலை மதிக்க முடியாத ஒரு பொக்கிஷமாகும். நம்மில் ஒவ்வொருவருக்கும் அவர் அத்தகைய பொக்கிஷமாக இருப்பாராக.

'எராவ்டா மந்திர்' – முதலாவது அத்தியாயம்

## 2

# சத்தியத்தை அடைவது எப்படி?

போலந்தைச் சேர்ந்த ஒரு பேராசிரியர் பின் வருமாறு எழுதுகிறார்:

"'எங் இந்தியா'வில் வெளியாகும் உங்களுடைய அற்புதமான, மனத்தைக் கவரும் கட்டுரைகளை நான் பேரானந்தத்துடன் வாசித்து வருகிறேன். உங்களுடைய சொந்த நாட்டிற்கு மாத்திரமல்ல, உலகத்திற்கே சக்தியைக் கொடுக்கும் ஊற்றாக அக் கட்டுரைகள் இருந்து வருகின்றன. இந்த உண்மையை உங்களுக்கு நான் வற்புறுத்திக் கூற விரும்புகிறேன். உங்களுக்கு ஆன்மிகத் துறையில் மிகவும் பரந்த அனுபவம் இருப்பதால், நான் உங்களை ஒரு கேள்வி கேட்கலாமா? அதற்குத் தாங்கள் 'எங் இந்தியா'வில் பதில் அளிப்பீர்களா? அது மிகவும் முக்கியமான, மூலாதாரமான ஒரு கேள்வியாகும். அதற்கு உங்களிடமிருந்து கிடைக்கும் பதில் மிகவும் அதிக மதிப்பு வாய்ந்ததாக இருக்கும். மனிதரின் சிந்தனையில் சர்வ நிச்சயமானது என்று ஏதோ இருக்கிறது என்பதை நீங்கள் ஒத்துக் கொள்ளுகிறீர்களா? அதற்கு உதாரணமாக, கடவுளையும் பிரார்த்தனையையும் கூறலாம். அவை, நாம்

எட்டியுள்ள, மாற்ற முடியாத, அப்பழுக்கற்ற உண்மை எனலாம். ஏதாவது குறிப்பிட்ட அனுபவமானது, முதலில் நீங்கள் கொண்டிருந்த அபிப்பிராயத்தை, உதாரணமாக, சில அபாயகரமான மிருகங்களைக் கொல்லும் உரிமை சம்பந்தமாக உங்களுடைய கருத்தை மாற்றிக் கொள்ளும்படி செய்திருக்கிறதா?' இதை நீங்கள் ஒத்துக் கொள்ளுகிறீர்களா? இப்போது எனது மூலாதாரமான கேள்வி இதுதான்: குறிப்பிட்ட எந்த விஷயங்களை யொட்டி நீங்கள் உங்களுடைய அபிப்பிராயத்தை மாற்றிக் கொள்ளுகிறீர்கள்? இந்த மாறுதல்களைப்போல், அசைக்க முடியாத உண்மை சம்பந்தமாகவும் மாறுதல் ஏற்படாது என்பதற்கு என்ன உத்தரவாதம் இருக்கிறது? சர்வ நிச்சயமான பொருளின் நிரந்தரத் தன்மைக்கும், சமயத்திற்குத் தகுந்தாற்போல் அபிப்பிராயத்தை மாற்றிக் கொள்ளுவதற்கும் உள்ள வேற்றுமையை எப்படிக் கண்டுபிடிப்பது? எந்த விஷயங்களில் நாம் அபிப்பிராயத்தை மாற்றிக் கொள்ளலாம் என்பது பற்றியும், எந்த விஷயங்கள் மாறுமல் நிரந்தரமாக இருக்கின்றன என்பது பற்றியும் நீங்கள் விளக்கிக் கூற முடியுமா?''

கடிதம் எழுதியிருப்பவரின் கருத்து இன்னும் அதிகத் தெளிவாக விளங்குவதற்காக, இந்தக் கடிதத்தில் உள்ள சில வார்த்தைகளை மாற்றும் உரிமையை நான் மேற்கொண்டேன். எனக்கு ஏதோ சக்திகள் இருப்பதாக அவர் கூறுவதை நான் எவ்விதத்திலும் ஒப்புக்கொள்ளவில்லை. எனினும், அவரது கேள்விகளுக்கு நான் பணிவுடன் விடையளிக்க முயற்சிக்கிறேன். என்னைப்பற்றி நான் மனமறிந்து கூறுவது மிகவும் சாதாரணமானது, ஆனல், உறுதியானது. நான் தாழ்மையுடன், ஆனல் மிகுந்த அக்கறையுடன் சத்தியத்தை நாடுபவன். சத்தியத்தைப் பற்றிய எனது ஆராய்ச்சியில், அதே முயற்சியில் ஈடுபட்டுள்ள சகாக்களிடம் நான் பூரண நம்பிக்கை வைத்து ஒளிவு மறைவின்றிப் பேசுவது வழக்கம். அப்படியானல் தான் எனது தவறுகளை நான் அறிந்து கொண்டு அவர்களையும் திருத்தமுடியும். எனது மதிப்பீடுகளிலும், நான் செய்த முடிவுகளிலும் நான் பல தடவைகளில் பிழை செய்திருக்கிறேன் என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். உதாரணமாக, கேடா மக்கள் சட்ட மறுப்புக்குத் தயாராக இருக்கிருர்கள் என்று அரைகுறையான ஆதாரங்களை வைத்துக்கொண்டு நான் எண்ணிவிட்டேன். பின்னர்தான் நான் இமாலயத் தவறு செய்துவிட்டதைத் திடீரென்று கண்டுகொண்டேன். தொல்லையானவை, ஆனல் ஒழுங்கீனமல்லாதவை என்று கருதப்படும் சட்டங்களுக்கும் மனம் விரும்பி கீழ்ப்படியவேண்டும். இதை அறிந்துகொள்ளாத கேடா மக்கள் சட்டமறுப்புச் செய்யமுடியாது என்பதை நான் உணர்ந்துகொண்டேன். இதை நான் கண்டுகொண்ட உடனேயே, நான் இயக்கத்தை நிறுத்திப் பின்வாங்கி விட்டேன். பர்டோலி இறுதி எச்சரிக்கையை* நான் விடுத்தபோதும், அது போன்ற தவறு என்னல் செய்யப்பட்டது. தேசமக்கள் விழிப்

* பர்டோலி சத்தியாக்கிரக சம்பந்தமாக அரசாங்கத்திற்கு விடுக்கப்பட்ட இறுதி எச்சரிக்கையையே காந்திஜி இங்கே குறிப்பிட்டிருக்கிருர். இதன் சம்பந்தமான முழு விவரங்களையும் மகாத்மா காந்தி நூல்கள் 8-ஆம் தொகுப்பின் 388–409 பக்கங்களில் காணலாம்.

படைந்து உள்ளனர் என்றும், அவர்கள் அகிம்சையின் சக்தியை அறிந்துகொண்டிருக்கிறார்கள் என்றும் நான் நம்பினேன். ஆனால், எச்சரிக்கை விடுத்த இருபத்து நான்கு மணி நேரத்திற்குள் எனது தவறை நான் கண்டுகொண்டு, பின் வாங்கிவிட்டேன். நான் பின்வாங்கிய ஒவ்வொரு சமயத்திலும், நிரந்தரமான அபாயம் எதுவும் நேர்ந்துவிடவில்லை. அதற்கு மாறாக, அகிம்சையின் மூலாதாரமான உண்மையை அதற்கு முன் இராதவாறு மக்கள் அதிகத் தெளிவாக அறிந்துகொண்டனர். அதனால் நாட்டிற்கு நிரந்தரமான தீங்கு எதுவும் ஏற்பட்டு விடவில்லை.

எனது கட்டுரைகளில் திட்டவட்டமாகக் குறிப்பிட்டுள்ளபடி, சில சந்தர்ப்பங்களில், சில அபாயகரமான மிருகங்களைக் கொல்ல வேண்டிய அவசியத்தைக் குறித்து எனது அபிப்பிராயத்தை மாற்றிக்கொண்டதாக எனக்கு நினைவில்லை. அக்கட்டுரைகளில் குறிப்பிடப்பட்டிருப்பதே எப்போதும் எனது அபிப்பிராயமாக இருந்துவருகிறது. எனினும், அந்த அபிப்பிராயம் மாற்றிக் கொள்ளக் கூடாததல்ல. நான் தவறுவதே இல்லை என்று நான் கூறவில்லை. எனது அனுபவத்தில் நான் கண்டவரையில், தமக்குத் தவறே ஏற்படாதென்று மனிதராகப் பிறந்த எவரும் கூறிக்கொள்ள முடியாது. அவ்விதம் கூறுவது ஆபத்தாகும். எனினும், இதிலிருந்து நமக்கு வழிகாட்டியாக யாருமே இல்லை என்று கூறிவிடமுடியாது. உலகத்திலுள்ள மகான்களுடைய அனுபவங்களின் சாரம் நமக்கு உதாரணமாக இருந்துவருகிறது, இனி எக்காலத்திலும் உதாரணமாக இருந்துவரும். தவிர, உலகில் பல மூலாதாரமான உண்மைகள் இல்லை, ஒரே ஒரு மூலாதாரமான உண்மைதான் இருக்கிறது. அதுதான் சத்தியம் அல்லது அகிம்சையாகும். முடிவற்ற சத்தியத்தையும் அன்பையும், முடிவுள்ள மனிதர்கள் பூரணமாக எக்காலத்திலும் அறிந்துகொள்ள முடியாது. எனினும், நமக்கு வழிகாட்டியாக இருப்பதற்குப் போதிய அளவு அவற்றைப் பற்றி அறிவோம். அதை அனுசரிப்பதில் நாம் தவறு செய்யலாம்; சில சமயங்களில் மோசமான தவறும் செய்துவிடுகிறோம். மனிதன் தன்னைத் தானே ஆட்சி புரிபவன். தவறு செய்வதற்கும், எத்தனை தடவை தவறு செய்தாலும் அதைத் திருத்திக் கொள்ளுவதற்குமான அதிகாரமும் அடங்கியதே சுயாட்சியாகும். கடிதம் எழுதியவருக்கு, இந்தப் பதில் திருப்தி அளிக்குமா என்பது எனக்குத் தெரியாது. இது திருப்தி அளித்தாலும் அளிக்கா விட்டாலும், இதைக் காட்டிலும் அதிகமான திருப்தி அளிக்கக் கூடிய பதிலைக் கூறும் சக்தி என்னிடத்தில் இல்லை. ஒவ்வொருவரும் தமக்குத்தாமே சட்டம் விதித்துக் கொள்ள வேண்டும். ஆனால், அதற்கு மாறுதலற்ற ஒரே நிபந்தனை என்னவெனில், அத்தகையோர் கடவுளிடம் பய பக்தியுடன் நடந்து கொள்ள வேண்டும்; அவ்விதமாக இடைவிடாது தமது உள்ளத்தைத் தூய்மைப்படுத்திக் கொள்ள வேண்டும்.

'எங் இந்தியா' - 21—4—1927

## 3
# எல்லோரும் ஒன்றே

லௌகிகமான அல்லது அதற்கு அப்பாற்பட்ட எல்லா விஷயங்களையும் காட்டிலும் அகிம்சையில் எனக்குள்ள பற்றுதல் மிகவும் மேலானதாகும். அது சத்தியத்தில் எனக்குள்ள பற்றுதலுக்குச் சமமானது. எனக்கு, சத்தியமும் அகிம்சையும் ஒன்றேயாகும். அகிம்சையின் மூலம்தான் நான் சத்தியத்தை பார்க்கவும் அடையவும் முடியும். இந்தியாவில் பல்வேறு சமயத்தினரிடையே நான் யாதொரு வேற்றுமையையும் காணாதது போலவே, பல்வேறு நிறத்தினரிடையும் நான் யாதொரு வேற்றுமையையும் காணவில்லை. எனக்கு எல்லா மனிதரும் ஒன்றுதான். இந்தியர்களிடம் எனக்கு எவ்வளவு அன்பு உண்டோ, அதுபோலவே ஆங்கிலேயர்களிடமும் எனக்கு அன்பு இருப்பதால்தான் நான் இந்த இயக்கத்தை ஆரம்பிக்கிறேன்.* சுயமாகத் துன்பத்தை மேற்கொள்ளுவதன் மூலம் ஆங்கிலேயரின் மனத்தை மாற்ற நான் முயற்சிக்கிறேனேயன்றி, அவரை அழித்துவிட முயற்சிக்கவில்லை.

'எங் இந்தியா' - 20--2—1930

## 4
# எல்லாம் அடங்கிய சத்தியம்

*1922-இல் காந்திஜியை அதிகாரிகள் கைது செய்த உடனே, சாபர்மதி மத்திய சிறையிலிருந்து அவர் ஜம்னாலால் பஜாஜுக்கு எழுதிய ஒரு கடிதத்தின் விவரம் பின்வருமாறு:*

*சாபர்மதி மத்திய சிறை*
*17-3-1922*

*எனது அன்பார்ந்த ஜம்னாலாலுக்கு,*

எவ்வளவுக்கு சத்தியத்தை நான் அதிகமாகப் பரிசீலனை செய்கிறேனோ அவ்வளவுக்கு, அதில் எல்லாம் அடங்கியிருக்கின்றன என்பதை நான் அதிகமாக உணருகிறேன். அகிம்சையில் சத்தியம் அடங்கியிருக்கவில்லை. ஆனால், சத்தியத்தில் அகிம்சை அடங்கியிருக்கிறது என்பதை அடிக்கடி நான் அனுபவத்தில் தெரிந்து கொண்டுள்ளேன். தூய்மையான உள்ளம் உண்மையை உணர்ந்து, அதில் உறுதியாக இருப்பதன் மூலம் அப்பழுக்கற்ற சத்தியத்தை அடைய முடியும். இதில் கடமைக்கோ அல்லது

---

*உப்புச் சட்டத்தை மீறி தாம் ஆரம்பித்த சட்ட மறுப்பு இயக்கத்தையே காந்திஜி மேலே குறிப்பிட்டுள்ளார்.

மனச்சாட்சிக்கோ முரண்பாடான விஷயம் எதுவும் இல்லை. எனினும், அகிம்சை என்றால் என்ன என்பதை நிர்ணயிப்பதில்தான் அடிக்கடி சங்கடங்கள் ஏற்படுகின்றன. கிருமிகளை அழிக்கும் திராவகத்தை உபயோகிப்பது கூட இம்சையே. பலாத்கார மயமாக இருக்கும் இந்த உலகில், ஒருவர் சத்தியத்தில் உறுதியாக நின்றால் மாத்திரமே அகிம்சை முறையில் வாழ முடியும். எனவே, சத்தியத்திலிருந்து நான் அகிம்சையை அடைய முடியும். சத்தியத்திலிருந்தே பொறுமையும் எழுகின்றது. உண்மையான ஒரு சத்தியாக்கிரகி (அதாவது சாத்விக எதிர்ப்பாளர்) மிகவும் பணிவுடன் இருக்க வேண்டியது அவசியமாகும். சத்தியத்தில் அவருக்கு அதிகப் பற்றுதல் ஏற்படுவதற்கு உகந்தவாறு, அவருக்கு அதிகமான பணிவும் ஏற்படுகிறது. இது ஒவ்வொரு விநாடியும் நான் அடைந்துவரும் அனுபவமாகும். இப்போதிருப்பதைப் போல் ஒரு வருடத்துக்கு முன் சத்தியத்தை நான் அவ்வளவாக அறிந்து கொள்ளவில்லை. இப்போதிருப்பது போல் இவ்வளவு பணிவு ஒரு வருடத்திற்கு முன் எனக்கு ஏற்படவில்லை.

"கடவுள்தான் சத்தியம்; உலகம் ஒரு மாயையே". இந்த வாக்கியத்தின் அற்புதமான கருத்தை, நான் நாளுக்கு நாள் அதிகமாக உணர்ந்து வருகிறேன்.

எனவே, நாம் எப்போதும் பொறுமையாக இருந்து வருவோமாக. பொறுமையாக இருப்பதன் மூலம், நமது உள்ளங்களின் கடினத் தன்மை ஒழிந்துவிடும். கடினத் தன்மை இராவிடில், அகிம்சை உணர்ச்சி வளரும். அப்போது நமக்கு, நமது சொந்தத் தவறுகள் மலைபோலவும், உலகத்தில் உள்ள மற்றவர்களின் தவறுகள் அற்பமாகவும் தோன்றும். 'நான்' என்ற அகந்தையின் காரணமாகவே உடல் இருப்பது சாத்தியமாகிறது. உடலை முற்றிலும் உதறித் தள்ளிவிடுவதே மோட்சமாகும், அல்லது தன்னைத் தான் அறிந்துகொள்ளுவதாகும். அந்த அகந்தையை முற்றிலும் ஒழித்துவிடுபவன், சத்தியமே உருக்கொண்டவனாகி விடுகிறான். அவனை, கடவுள் என்றுகூடக் கூறுவதால் தீங்கு எதுவும் நேர்ந்துவிடாது. அதனால்தான் கடவுள் என்ற அழகான பெயர், "ஊழியர்களுக் கெல்லாம் ஊழியர்" என்பதாக இருக்கிறது. மனைவி, மகன், நண்பன், உடைமைகள் இவையெல்லாம் சத்தியத்தின் ஆதிக்கத்திற்கு உட்பட்டவையாகவே இருக்க வேண்டும். சத்தியத்தை நாடும் நமது முயற்சியில், இவற்றையெல்லாம் அடியோடு தியாகம் செய்ய நாம் தயாராக இருந்தால் தான், நாம் சத்தியாக்கிரகிகளாகத் திகழ முடியும். இந்த நடவடிக்கையிலேயே நான் தற்போது ஈடுபட்டிருக்கிறேன். உங்களைப் போன்றவர்களைக் கூடத் தியாகம் செய்ய நான் தயங்குவதில்லை. ஏனெனில், இந்தக் கடமையை அனுசரிப்பது ஒவ்வொருவருக்கும் இயல்பாக இருக்கவேண்டும் என்பதே எனது விருப்பமாகும். இந்தக் கடமையின் வெளிப்படையான முறை இந்தியாவின் சுயாட்சியே; இதன் உண்மையான முறை ஒவ்வொரு தனி நபரின் சுயாட்சி ஆகும். இந்த நிலை உண்டாவதற்குத் தற்போது

தாமதம் ஏற்பட்டு வருகிறது. ஏனெனில், இதுவரையில் அத்தகைய உண்மையான சத்தியாக்கிரகி ஒருவர்கூட உருவாகவில்லை. எனினும், கலக்கம் அடைவதற்குக் காரணமில்லை. இன்னும் அதிக முயற்சிகள் செய்வதற்கே அது காரணமாக இருக்க வேண்டும்.

நீங்கள் உங்களை என்னுடைய ஐந்தாவது மகனுகக் கருதி வருகிறீர்கள். நானும் அதற்குத் தகுதி வாய்ந்தவனுக இருக்க முயற்சி செய்து வருகிறேன். ஒரு மகனை சுவீகாரம் எடுத்துக் கொள்ளுவோரின் பொறுப்பு சாதாரணமானதல்ல. கடவுள் எனக்கு உதவி புரிவாராக. இன்றைய தினத்திலிருந்தாவது நான் அதற்குத் தகுதி வாய்ந்தவனுக இருக்க முற்படுவேனுக!

பாபுவின் ஆசிகள்

'ஹரிஜன்' – 27—11—1949

## 2

சிறையிலிருந்து காந்திஜி சேத் ஜம்னுலால் பஜாஜுக்கு எழுதிய மற்ருெரு கடிதத்தின் சாரம் பின்வருமாறு:

தூய்மையற்ற எண்ணங்களிலிருந்து விடுதலை பெறுவதே மோட்சமாகும். இடைவிடாத தவமின்றி, தூய்மையற்ற எண்ணங்களை அடியோடு ஒழிப்பது முடியாத காரியம். இதைச் சாதிப்பதற்கு ஒரே ஒருவழிதான் உண்டு. தூய்மையற்ற எண்ணம் எழுந்த அதே விநாடியில், தூய்மையான எண்ணத்தினுல் அதை எதிர்த்துச் சமாளிக்க முற்படுங்கள். அவ்விதம் செய்வது கடவுளின் அருளினுல்தான் சாத்தியமாகும். இடைவிடாது கடவுளுடன் தொடர்பு கொள்ளுவதன் மூலமும், பூரணமாக சரண் அடைந்துவிடுவதன் மூலமுமே இறைவனின் அருள் கிடைக்கும். ஆரம்பத்தில் இந்தத் தொடர்பு வாயளவில் இறைவனின் பெயரைத் திருப்பித் திருப்பிக் கூறுவதாகவே இருக்கலாம். அப்போது தூய்மையற்ற எண்ணங்களாலும் நமது மனம் கலையலாம். ஆனுல், இறுதியில், வெறும் வாயளவில் இருப்பது உள்ளத்தையும் ஆட்கொள்ளும். மற்ருெரு விஷயத்தையும் மனத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். மனம் ஓரிடத்தில் நிலையாக இல்லாமல் திரியலாம்; ஆனுல், புலன்களும் அத்துடன் திரியத் தொடங்கிவிடக் கூடாது. ஒருவரது மனம் போன வழிக்கு அவரது புலன்களும் செல்லத் தொடங்கிவிட்டால், அவரது கதி அதோகதிதான். சரீர சம்பந்தமான புலன்களைக் கட்டுப்படுத்துவோர், தூய்மையற்ற எண்ணங்களைக் கட்டுப்படுத்தும் ஆற்றலையும் ஒரு நாள் பெறுவார். தூய்மையற்ற எண்ணங்களைக் கண்டு நீங்கள் அஞ்சவேண்டிய அவசியமில்லை. நாம் முயற்சி என்ற ராஜ்யத்தின் மன்னர்கள். கடவுளோ, பலன் என்ற சாம்ராஜ்யத்தின் ஏகசக்கரவர்த்தி. உங்களைச் சுற்றித் தூய்மையான சூழ்நிலையை உண்டு பண்ணுவதற்கு என்ன செய்ய வேண்டும் என்பதை நீங்கள் அறிவீர்கள். மிதமான உணவையே

உட்கொள்ளவேண்டும்; பார்வை பூமியை நோக்கிய வண்ணம் இருக்கவேண்டும்; கண் தவருன வழியில் சென்ருல், அதைப் பிடுங்கிவிடும் அளவுக்குப் பொறுமையின்மை வேண்டும்.

'ஹரிஜன்' – 22—2—1942

## 5

# உண்மையான துரதிருஷ்டம்

இன்று பாடப்பட்ட கீதத்தில் பக்தர் இவ்விதம் கூறுகிருர் :

'எனது உள்ளம் தூய்மையாக இருக்கும்படி செய்யுங்கள். உண்மை வழியில் என்னைச் செலுத்துங்கள். சத்தியத்தில் உறுதியுடன் இருப்பதன் மூலம் எழும் உண்மையான ஆனந்தத்தை, எனக்குக் கொடுங்கள். சத்தியத்தைக் கைவிடுவதன் மூலம் ஏற்படும் துன்பத்தைப் போக்கி விடுங்கள்'.

சத்திய வழியைக் கைவிடுவது ஒன்றுதான் உண்மையான துரதிருஷ்டமாகும். 60 ஆண்டுகளாக நான் பெற்ற சொந்த அனுபவத்திலிருந்தே இதைக் கூறுகிறேன் என்பதை நம்புங்கள். இதை மாத்திரம் நீங்கள் உணர்ந்து கொண்டால், சத்தியத்தைக் கடைப்பிடிப்பதில் எத்தனை சோதனைகளும் கஷ்டங்களும் நேர்ந்தாலும் பின்வாங்காமல், எப்போதும் அவற்றைச் சகித்துக் கொள்ளும் சக்தியைக் கொடுக்கவேண்டும் என்பது ஒன்றே கடவுளிடம் உங்களுடைய பிரார்த்தனையாக இருக்கும்.

'ஹரிஜன்' – 28—7—1946

## 6

# ஆபத்தானதல்ல

பொருத்தமான சமயத்தில் உண்மையைக் கூறித்தான் தீர வேண்டும். மனத்திற்குப் பிடிக்காதது என்பதற்காக உண்மையைக் கூருமல் இருக்கக் கூடாது. பொருத்தமற்றது ஒருபோதும் உண்மையாக இருக்க முடியாது. எனவே, அதை எக்காலத்திலும் கூறக்கூடாது. ஒருவர் தமது குற்றத்தை ஒப்புக் கொள்ளுவதால் தூய்மையும் உயர்வும் அடைகிருர். அதை மறைப்பதுதான் இழிவானது. அந்த இழி நிலையைத் தவிர்க்க வேண்டும்.

'ஹரிஜன்' – 21—12—1947

## 7

# திருப்பித் திருப்பிக் கூறவேண்டும்

சத்தியத்தை எல்லோரும் அறிந்து கொள்ளாவிடில், அதை லட்சக்கணக்கான தடவை திருப்பித் திருப்பிக் கூறவேண்டும். உண்மையை ஒரே ஒரு தடவை மாத்திரம் கூறுவது போதுமாயின், இதற்குள் எல்லோரும் கடவுளிடம் நம்பிக்கையுடையவர்களாகியிருக்க வேண்டும். உண்மை என்னவெனில், கடவுள் ஒருவரே என்பதை இதுவரை லட்சக்கணக்கான தடவை கூறியாகிவிட்டது. ஆனால், ஒரு சிலரது உள்ளங்கள்தான் அதை ஏற்றுக்கொண்டுள்ளன.

'எங் இந்தியா' – 24—2—1927

## 8

# கசப்பும் இனிப்பும்

சமீபத்தில் ஒருவர் அனுப்பியிருந்த கடிதத்திலிருந்து சில பகுதிகளை நான் அகற்றியதைக் குறித்து அவர் புகார் கூறியுள்ளார். அவர் எழுதுவதாவது :

"என் கடிதத்திலுள்ள மாசுகளைக் களைவதுபோல் சில பகுதிகளை அகற்றுவதுதான் சரி என்று தாங்கள் எண்ணிவிட்டீர்கள். இருந்தாலும், என்னுடைய கடிதங்களில் எல்லாம், குறிப்பாக வகுப்பு வாதப் பிரச்னைகள் சம்பந்தப்பட்ட கடிதங்களில், கசப்பான உண்மையைக் கூறக் கூடாது என்ற 'புத்திசாலித்தனமான' கொள்கையை நான் பின்பற்றவில்லை என்பதைக் கூறிவிடுகிறேன். 'ஸத்யம் ப்ருயாத் ப்ரியம் ப்ருயாத் நப்ருயாத் ஸத்யமப்ரியம்.'* இவ்விதம், கசப்பான உண்மையைக் கூறக் கூடாதென்பது, மனு ஸ்மிருதியில் வற்புறுத்தப்பட்டிருக்கிறது. ஆனால், அடிமைகளுக்கு விடுதலை அளித்த அமெரிக்கப் பிரமுகரான வில்லியம் லாயிட் காரிசனின் பொன்மொழியையே நான் பின்பற்றியுள்ளேன். அந்த மொழி பல ஆண்டுகள் வரையில் பம்பாய் "இந்தியன் ஸோஷல் ரிபார்மர்" பத்திரிகையின் கொள்கையாக அதன் மகுடத்தில் வெளியாகி வந்தது. அது இதுதான்: 'நான் உண்மையைப் போல் கசப்பாக இருப்பேன், நீதியைப் போல் தயவு தாட்சண்யமின்றி இருப்பேன்.' "

கசப்பான உண்மையைப் பற்றி நான் கவலைப்படவில்லை. ஆனால், ஜோடிக்கப்பட்ட உண்மையையே நான் ஆட்சேபிக்கிறேன். ஆரோக்கியமான வயிற்றிற்கு காரமான மிளகாய்

---

* இந்த சுலோகத்தின் பொருள்: உண்மையைக் கூறவேண்டும்; பிரியத்தைக் கொடுப்பதையே கூறவேண்டும்; உண்மையாயினும், கசப்பாக இருப்பதைக் கூறக் கூடாது.

எவ்விதம் பொருந்தாதோ அவ்விதமே, அலங்கார பாஷை உண்மைக்குப் பொருந்தாது. மேற்கண்ட கடிதத்திலிருந்து நான் அகற்றிய பகுதிகள், அதை எழுதியவரின் கருத்தை விளக்குவதற்கு அவசியமானவையல்ல, உபயோகமானவையுமல்ல; அவை மரியாதைக் குறைவாக இருக்கின்றன. உண்மையைக் கூற வேண்டுமாயின், கடுமையான பாஷையை உபயோகித்துத் தீரவேண்டும் என்று எண்ணுவது ஒரு நாகரிகமாகியிருப்பதாகத் தோன்றுகிறது. ஆனால், கடுமையாகக் கூறுவதால் உண்மையின் தரம் குறைந்துவிடுகிறது. உண்மை பூரணமான பலம் வாய்ந்தது. அப்படியிருக்க அதற்கு பலம் கொடுப்பதற்குக் கடுமையான பாஷையை உபயோகிக்க முற்படும்போது, உண்மையை அவமதித்ததாகிறது. கடிதம் எழுதியவர் மேற்கோள் காட்டியுள்ள சமஸ்கிருத சுலோகத்திற்கும் காரிசனின் கொள்கைக்கும் யாதொரு முரண்பாடும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. என் அபிப்பிராயத்தில், உண்மையை சாந்தமாகக் கூறவேண்டும் என்பதே அந்த சுலோகத்தின் கருத்தாகும். சாந்தமான முறையில் உண்மையைக் கூற முடியாவிடில், அதைக் கூருமல் இருந்துவிடுவதே நல்லது. அதாவது, தன் நாவை அடக்கிப் பேசாத ஒருவனிடத்தில் உண்மைக்கு இடமில்லை என்பதே அதன் பொருளாகும். அதை வேறு விதமாகக் கூறினல், அகிம்சை இல்லாத உண்மை உண்மையல்ல, பொய்யே ஆகும்.

காரிசன் கூறியிருப்பதற்கு, அவரது வாழ்க்கையை உதாரணமாகக் கொண்டு பொருள் கூறவேண்டும். அவரது காலத்தில் அவர் சாந்தமே உருவாகத் திகழ்ந்தார். அவரது பாஷையைக் கவனியுங்கள். உண்மையைப் போல் தாம் அவ்வளவு கடுமையாக இருப்பதாகக் கூறுகிருர். உண்மை ஒரு காலத்திலும் கடுமையாக இருப்பதில்லை. அது எப்போதும் சாந்தமாகவும் பலனைக் கொடுக்கக் கூடியதாகவுமே இருக்கிறது. எனவே, உண்மையைப் போல், அதற்கு அதிகமாக அல்ல, காரிசன் சாந்தமாக இருப்பார் என்பதே அவர் கூறியிருப்பதன் அர்த்தமாக இருக்க முடியும். அந்த இரண்டு வாக்கியங்களும், பேசியவரின் அல்லது எழுதியவரின் மன நிலையைப் பொறுத்தவை; மற்றவர்களின் மனத்தில் என்ன எண்ணங்களை உண்டாக்குகின்றன என்பதைப் பொறுத்தவையல்ல. பார்க்கப்போனல், முழு உண்மையையும் அறிந்தவர் யார்? எனக்கு உண்மையாக இருப்பது, எனது மற்ற சகாக்களுக்கு உண்மையாக இருக்கவேண்டும் என்ற அவசியம் இல்லை. நாம் எல்லோரும், யானையைத் தொட்டுப் பார்த்து பல்வேறு அபிப்பிராயங்களைக் கூறிய குருடர்களைப் போல் இருக்கிறோம். அவரவருக்குத் தெரிந்தவரையில், அவர்கள் கூறியது உண்மைதான்; அவர்களுடைய புத்திக்கு எட்டியவரையில் அவர்கள் கூறியது சரியே. ஆனல், அவர்கள் எல்லோருடைய கூற்றும் தவறு என்பதை நாம் அறிவோம். அவர்களில் ஒவ்வொருவரும் கூறியதற்கும் உண்மைக்கும் வெகு தூரம். எனவே, எவரும் மனக்கசப்புக்கு இடம் கொடுக்காமல் இருக்க வேண்டியது அவசியமாகும். மனக்கசப்பு அறிவை மழுங்கச் செய்து, கதையில்

உள்ள குருடர்களுக்குச் சாத்தியமான அளவுகூட சாதாரண உண்மையை நாம் பார்க்க முடியாமற் செய்துவிடுகிறது.

—'எங் இந்தியா' – 17—9—1925

# 9

# வேடதாரி

தன்னிடம் இராத ஒரு குணத்தை இருப்பது போல் பாசாங்கு செய்பவர் ஒரு வேடதாரியாவார்; அவ்விதப் பாசாங்கு செய்யாதவர் வேடதாரி அல்ல. ஒருவர் ரகசியமாக மதுபானம் செய்து கொண்டு, தாம் மதுவை அறவே வெறுப்பவர் போல் அண்டையிலுள்ளவர்களை நம்பும்படி செய்பவர் வேடதாரியாவார். அவருடன் தொடர்பு வைத்துக்கொள்ளக் கூடாது. தாம் குடிக்கும் வழக்கத்தை மறைக்காத ஒருவர், பல பேர் இருக்கும் இடத்திலோ அல்லது தம்முடைய நண்பர்களுக்கு மரியாதையாகவோ குடிக்காமல் இருந்தால், அவரை வேடதாரி என்று கூறமுடியாது. அவர் விவேகமும் பிறரது உணர்ச்சியை மதித்து நடக்கும் தன்மையும் உள்ளவராவார். மதுபான வழக்கத்தை அவர் விட்டு விடும்படி செய்ய முடியும் என்று நம்புவதற்கு இடம் இருக்கிறது.

—'எங் இந்தியா - 3—9—1925

## (2)

நமக்கு இரண்டு விரோதிகள் இருக்கிறார்கள். அவர்களிடமிருந்து நம்மை நாம் பாதுகாத்துக் கொள்ள வேண்டும். பொய், தூய்மையின்மை, இந்த இரண்டுமே நம்முடைய விரோதிகள். எல்லா விரதங்களையும் அனுசரிப்பதற்கு மனத் தூய்மை அவசியமானது. மனம் தூய்மையாக இராவிடில், உடல் கட்டுப்பாடு எவ்வளவு இருந்தாலும் பயனில்லை. கர்மேந்திரியங்களைக் கட்டுப்படுத்திக் கொண்டு, மனத்தை அடக்காமல் இஷ்டப்படி திரிய விடுபவன் ஒரு வேடதாரியே* என்று கீதை கூறுகிறது. நாம், மனத்தை அடக்கும் விஷயத்தில் தோல்வி அடையலாம். எனினும் நாம் வேடதாரிகளாக இருக்கக் கூடாது. மனத்தை அடக்க நம்மால் முடியவில்லையாயின், நாம் அதை ஒப்புக் கொண்டு விடுவதுதான் நல்லது. அதை விட்டுவிட்டு, பொய் சொல்லுவதும், மனத்தைக் கட்டுப்படுத்த முடியாததுமான இரட்டைப் பாவம் செய்த குற்றத்திற்கு நாம் ஆளாக வேண்டாம். பொய் சொல்லுவது மாத்திரம் பொய் அல்ல; குற்றம் செய்துவிட்டு

---

* கர்மேந்த்ரியாணி ஸம்யம்ய ய ஆஸ்தே மனஸா ஸ்மரன்|
இந்த்ரியார்த்தான் விமூடாத்மா மித்யாசார: ஸ உச்யதே||
கீதை–அத்தியாயம்—3, சுலோகம்—6.

இதன் பொருள்: கர்மேந்திரியங்களை அதாவது செயல்படும் புலன்களை அடக்கிக் கொண்டு, புலன்களுக்கு இலக்கான விஷயங்களை மனத்தில் நினைத்தவண்ணம் இருப்பவன் மூடனும், வேடதாரியும் ஆவான்-

மௌனமாக இருப்பதோ அல்லது ஒருவரது மன நிலையை மறைப்பதோகூடப் பொய்யே ஆகும்.

—'ஹரிஜன்' - 17—8—1934

# 10
# 'நியாயமான பொய்' உண்டா?

**கேள்வி:** பர்ட்ரெண்ட் ரஸ்ஸெல் கீழ் வருமாறு கூறியிருக்கிறார். அதற்குத் தாங்கள் என்ன சொல்லுகிறீர்கள்?: "ஒரு கிராமப் புறத்தில் நான் உலாவச் சென்றிருந்தபோது, மிகவும் களைத்துப் போய் ஓட முடியாமல் ஓடிக்கொண்டிருந்த ஒரு நரியைப் பார்த்தேன். சில நிமிடங்களுக்குப் பிறகு வேட்டையாடுவதற்காக அதை விரட்டியவர்களும் வந்து சேர்ந்தார்கள். அந்த வழியாக வந்த நரியை நான் பார்த்தேனா என்று அவர்கள் கேட்டார்கள். பார்த்ததாக அவர்களிடம் சொன்னேன். அது எந்த வழியாக ஓடியது என்று அவர்கள் கேட்டார்கள். அவர்களிடம் நான் பொய் சொன்னேன். அவர்களிடம் நான் உண்மையைக் கூறியிருந்தால், நான் ஒரு சிறந்த மனிதனாகியிருக்க மாட்டேன் என எண்ணுகிறேன்."

**பதில்:** பர்ட்ரெண்ட ரஸ்ஸெல் ஒரு பெரிய எழுத்தாளரும், தத்துவ ஞானியும் ஆவார். அவரிடம் எனக்கு மிகுந்த மரியாதை உண்டு. எனினும், அவர் கூறியதாகச் சொல்லப்படும் மேற்கண்ட கருத்தை நான் ஒப்புக் கொள்ளமுடியாது. தாம் நரியைப் பார்த்ததாக ஒப்புக் கொண்டது அவர் செய்த முதல் தவறாகும். வேட்டையாடிக் கொண்டு வந்தவர்களின் முதல் கேள்விக்குப் பதில் அளிக்க அவர் கடமைப்பட்டிருக்கவில்லை. விரட்டி வந்தவர்களை வேண்டுமென்று ஏமாற்ற அவர் விரும்பினாலன்றி, இரண்டாவது கேள்விக்கு அவர் பதில் அளிக்கக்கூட மறுத்திருக்கலாம். ஒருவர் தம்மிடம் கேட்கப்படும் கேள்விகளுக்குப் பதில் அளித்துத் தீர வேண்டும் என்பதில்லை என்று நான் அடிக்கடி கூறிவந்திருக்கிறேன். உண்மை பேசும் விஷயத்தில் விதிவிலக்குகள் கிடையாது.

—'ஹரிஜன்' - 9—6—1946

# 11
# சத்தியப் பிரசாரம்

பீகாரைச் சேர்ந்த சம்பாரணில் உள்ள பிருந்தாவனத்தில் காந்தி சேவா சங்கத்தின் ஐந்தாவது வருடக் கூட்டம் நடந்தது. அப்போது காந்திஜி நிகழ்த்திய பிரசங்கத்தின் சாரம் கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது:

"காந்தீய"க் கொள்கை என்று கூறப்படுவதையும், அதைப் பிரசாரம் செய்யும் முறைகளையும் பற்றி இப்போது நான் கூறுகிறேன். சத்தியத்தையும், அகிம்சையையும் பிரசாரம் செய்ய, வாழ்க்கையில் அக்கொள்கைகளை அனுசரிப்பதைக் காட்டிலும் புத்தகங்களின் உதவி குறைவேயாகும். உண்மையாக வாழும் வாழ்க்கையே புத்தகங்களைக் காட்டிலும் அதிகமாகும். நாம் புத்தகங்களையும், பத்திரிகைகளையும் வெளியிடக் கூடாது என்று நான் கூறவில்லை. அவை அத்தியாவசியமானவை அல்ல என்று மாத்திரமே கூறுகிறேன். சத்தியத்திலும், அகிம்சையிலும் நாம் உண்மையான பக்தியுடையவர்களாக இருந்தால், பிரச்னைகளைத் தீர்ப்பதற்கு அவசியமான அறிவை ஆண்டவன் நமக்கு அருள்வார். அத்தகைய பக்தி ஏற்படுமுன், எதிராளிகளின் கருத்துக்களை அறிந்துகொள்ளும் விருப்பம் நமக்கு இருக்க வேண்டும். எதிராளியின் உள்ளத்தைப் புரிந்து கொள்ளவும், அவரது கருத்தை அறிந்து கொள்ளவும் நாம் அந்தரங்க சுத்தியுடன் முயற்சி எடுத்துக் கொள்ளவேண்டும். பலாத்காரத்தின் வாய்க்குள் அகிம்சை நேரடியாகப் பிரவேசிக்க வேண்டும் என்பதன் அர்த்தம் அதுதான். அந்த மன நிலையுடன் நாம் ஆயத்தமாக இருந்தால், அகிம்சைக் கொள்கைகளைப் பிரசாரம் செய்வதில் நாம் நம்பிக்கை கொள்ளலாம். அது இல்லாமல், புத்தகங்கள், பத்திரிகைகள் முதலியவற்றின் பிரசாரத்தினல் யாதொரு பலனும் ஏற்படாது. எவ்வளவு அசிரத்தையுடன் நான் 'எங் இந்தியா'வை நடத்தி வந்தேன் என்பது உங்களுக்குத் தெரியாது. அப்பத்திரிகையை நிறுத்தும்படி நேர்ந்த போது, நான் ஒரு சொட்டுக் கண்ணீர் கூட விடவில்லை. சத்தியாக்கிரகத்திற்கு உதவியாக இருக்கவேண்டும் என்பதற்காகவே 'எங் இந்தியா' நடந்து வந்தது. எனினும், அது நின்றதால் சத்தியாக்கிரகத்திற்குத் தீங்கு ஏற்பட்டுவிடவில்லை. ஏனெனில், சத்தியாக்கிரகம் வெளி உதவியை நாடி நிற்கவில்லை; அது, உள்ளுக்குள்ளிருந்தே அதன் சக்தியையெல்லாம் பெறுகின்றது.

—'ஹரிஜன்' - 13—5—1939

# 12
# சத்தியத்தின் வழி

'நலனை விரும்பும்' ஓர் அன்பர், எனது ஆலோசனைக்காக பின்வரும் கேள்விகளை அனுப்பியுள்ளார் :

"பைபிள் 566 பாஷைகளில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. உபநிடதங்களும் கீதையும் எத்தனை பாஷைகளில் மொழிபெயர்க்கப்பட்டிருக்கின்றன?

"குஷ்டரோகிகள், தாழ்த்தப்பட்டவர்கள், நோயாளிகள் முதலியோருக்காகப் பாதிரிமார் எத்தனை விடுதிகளை நடத்திவருகிறார்கள்? நீங்கள் எத்தனை விடுதிகளை நடத்தி வருகிறீர்கள்?"

இத்தகைய கேள்விகள் எனக்கு வருவது சகஜமாகும். பாதிரி மார்களிடத்திலும், அவர்களுடைய உற்சாகத்திலும், சுயத்தியா கத்திலும் எனக்கு மிகுந்த மதிப்பு உண்டு. ஆனல், அவர் களுடைய உற்சாகமும், தியாகமும் அடிக்கடி துஷ்பிரயோகம் செய்யப்படுவதைச் சுட்டிக்காட்ட நான் தயங்கியதில்லை. உலகத்திலுள்ள ஒவ்வொரு பாஷையிலும் பைபிள் மொழி பெயர்க் கப்பட்டால்தான் என்ன? உபநிடதங்களைக் காட்டிலும் அதிக மொழிகளில் ஒரு மருந்து விளம்பரப்படுத்தப்படுகிறது என்பதற் காக, அது உபநிடதங்களைக் காட்டிலும் சிறந்ததாகி விடுமா? திரும்பத் திரும்ப பல தடவை பிரசாரம் செய்வதன் காரணமாக ஒரு தவறு உண்மையாகிவிடுவதில்லை. ஒருவரும் கவனிக்க வில்லை என்பதற்காக உண்மையும் தவருகிவிடுவதில்லை. பைபிள் இன்றிருப்பதைக் காட்டிலும் ஆரம்ப காலத்தில் பாதிரிமார் பிரசாரம் செய்தபோது அதிக சக்திவாய்ந்ததாக இருந்தது. உபநிடதங்களைக் காட்டிலும் அதிக பாஷைகளில் பைபிள் மொழி பெயர்க்கப்பட்டிருப்பது அதன் உயர்வுக்கு ஒரு ருசு எனில், சத் தியம் இயங்கும் வழியைக் கேள்வி கேட்டவர் அறிந்துகொள்ள வில்லை என்றே கூறவேண்டும். சத்தியத்திஞல் பலன் ஏற்பட வேண்டுமாயின், அது வாழ்க்கையில் அனுசரிக்கப்படவேண்டும். கேள்வி கேட்டிருப்பவருக்கு எனது பதில் ஏதாவது திருப்தி யளிக்குமாயின், உபநிடதங்களும் கீதையும் பைபிளைக் காட்டிலும் மிகக் குறைந்த பாஷைகளிலேயே மொழிபெயர்க்கப்பட்டுள்ளன என்பதை நான் மகிழ்ச்சியுடன் அவருக்குக் கூறுகிறேன். அவை எத்தனை பாஷைகளில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன என்பதை அறிய நான் ஒருபோதும் ஆர்வம் கொண்டதில்லை.

இரண்டாவது கேள்வி சம்பந்தப்பட்டவரையில், குஷ்ட ரோகி விடுதிகளைப்போல் பல ஸ்தாபனங்களைப் பாதிரிமார் நிறுவி யிருக்கிறார்கள் என்பதை நான் ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். நான் ஒன்றைக்கூட நிறுவியதில்லை. எனினும், அதற்காக எனது நிலையை மாற்றிக் கொள்ளுவதற்கில்லை. அத்தகைய விஷயங் களில் பாதிரிமாருடனே அல்லது வேறு யாருடனே நான் போட்டி போடவில்லை. கடவுள் எனக்கு வழி காட்டுவதற்கிணங்க, மானிட வர்க்கத்திற்குத் தொண்டு புரியவே நான் பணிவுடன் முயற்சித்து வருகிறேன்.

மானிடவர்க்கத்திற்குத் தொண்டு செய்யும் பல வழிகளில் குஷ்ட ரோகி விடுதிகளை ஸ்தாபிப்பதும் ஒன்ருகும். எனினும், எல்லாவற்றையும்விட அது ஒரு சிறந்த வழி அல்ல. அதன் அந்தரங்க நோக்கம் மத மாற்றமாக இருக்கும்போது, அத்தகைய உயர்ந்த தொண்டு உயர்வைப் பெரிதும் இழந்து விடுகிறது. தொண்டிற்காகத் தொண்டு செய்வதுதான் மகோன்னதமான தொண்டாகும். எனினும், நான் கூறுவதைக் குறித்துத் தப்பெண்ணம் கொள்ள வேண்டாம். அத்தகைய விடுதிகளில் தன்னலமின்றி ஊழியம் செய்யும் பாதிரியார்களுக்கு நான் மரியாதை செலுத்துகிறேன். உலகத்தில் உள்ள திக்கற்றவர்

களும் அனாதைகளும் ஒரு புறம் இருக்கட்டும்; இந்தியாவில் உள்ள இத்தகையோர் விஷயத்தில்கூட அக்கறை காட்டாத அளவுக்கு ஹிந்துக்கள் அவ்வளவு இரக்கமற்றவர்களாகி விட்டதை ஒப்புக்கொள்ள நான் வெட்கமடைகிறேன்.

—'எங் இந்தியா' – 26—2—1925

## 3. அகிம்சை

### 1

# வாழ்க்கையில் அகிம்சையின் எல்லை

'எங் இந்தியா'வில் ஸ்ரீ ஆண்ட்ரூஸ் ஒரு கட்டுரை எழுதியிருந்தார். அதை வாசித்த ஓர் அன்பர் அவருக்குக் கீழ்க் கண்ட கேள்விகள் கேட்டு எழுதியிருந்த கடிதத்தை, அக்கேள்விகளுக்கு நான் பதில் அளிக்கவேண்டும் என்பதற்காக ஸ்ரீ ஆண்ட்ரூஸ் சில மாதங்களுக்கு முன் என்னிடம் கொடுத்தார். தமது கடிதத்தில் அந்த அன்பர் பின்வருமாறு எழுதியுள்ளார் :

"நான் ஒரு கிராமத்தில் பிறந்து வளர்ந்தவன். எனது தந்தை மத சம்பந்தமான விஷயங்களைப் பற்றி அவரது நண்பர்களுடன் பேசிக்கொண்டிருக்கும்போது, 'அகிம்சா பரமோ தர்ம:' என்ற வாக்கியத்தை அடிக்கடி கூறுவது வழக்கம். அத்வைதம் என்ற மூல உண்மையின் ஓர் அம்சமே அகிம்சையாகும். அதிலுள்ள உண்மையை நான் பெரிதும் ஒப்புக்கொள்ளுகிறேன். எல்லா ஆன்மாக்களும் ஒன்று என்பதை மாத்திரம் அத்வைதம் குறிக்கவில்லை; எவ்வித விலக்குமின்றி உலகத்தில் உள்ள எல்லாப் பொருள்களும் ஒன்று என்பதையே அது குறிக்கிறது. தங்களுடைய கருத்தும் இதுதான் என்றே தோன்றுகிறது.

"ஒருவர், அத்வைதத்தைத் தமது வழிகாட்டியாகக் கொள்ளும் தகுதி பெற்ற அந்த விநாடியிலேயே, அவரது முன்னேற்றம் நிச்சயமாகிவிடுகிறது. அந் நிலையில் எல்லா வேற்றுமைகளும் மறைந்துவிட வேண்டும். அப்போது நாம் எல்லோரும் ஒருவராகிவிடுகிறோம். எனவே, யாரைத் துன்புறுத்தினாலும், அது என்னை நானே துன்புறுத்திக் கொள்ளுவதாகிறது. அவ்விதம் துன்புறுத்துவது எப்படி நியாயமாகும்? ஆனால், இந்த இடத்தில்தான் சந்தேகங்கள் எழுகின்றன. அகிம்சைக் கொள்கையை, அதன் இறுதி எல்லை வரையில் பின்பற்றலாமா? அவ்விதம் இறுதிவரையில் பின்பற்றினால், அது ஒரு தருமமாக இருக்குமா?

"என் தந்தை, 'அகிம்சா பரமோ தர்ம:' என்று திருப்பித் திருப்பிக் கூறுவது வழக்கம். எனினும், எங்கள் வீட்டு எருமை மாடு பால் கறக்கும் போது அசையாமல் நிற்பதற்காக, அவர் அதைக் கம்பால் அடித்து அது சாதுவாக நின்று பால் கறக்கும்படி செய்வார். ஏனெனில், அவரது குழந்தைகளுக்குப் பால் வேண்டும் அல்லவா? அந்த மாட்டை அவர் அடித்தது சரியா?

"ராம அவதாரத்தை தரும அவதாரம் என்று ஹிந்துக்கள் கூறுகிறார்கள். ராமன் ராவணனைக் கொன்றார். அது தவறான செய்கையா? ராமன் வாலியைக் கொன்றார். அது தருமம் அல்ல என்றான் வாலி. அதற்கு ராமன் இவ்வாறு பதில் அளித்தார்:

* அனுஜவதூ பகினீ ஸுதநாரீ
ஸுனு ஸட யே கன்யா ஸம சாரீ
இன்ஹை. குதிர்ஷ்டி விலோகஹி ஜோயீ
தேஹி வதே கசு பாப ந ஹோயீ

"அக்கிரமம் செய்தவர்களைக் கொல்லுவது கொலையாகாது என்ற கொள்கை, தரும அவதார மூர்த்தியின் வாயிலிருந்தே வந்ததாகக் கூறப்படுகிறது.

"நாம் இன்னும் கீழே இறங்கி கிருஷ்ண பரமாத்மாவின் காலத்திற்கு வரலாம். இந்தக் காலத்தில்தான் நமக்கு பகவத் கீதை கிடைத்தது. தனது நெருங்கிய உறவினர்களைக் கொல்ல அர்ஜுனன் விரும்பவில்லை. போராடிக் கொல்லும்படி கிருஷ்ண பரமாத்மா அர்ஜுனனை வற்புறுத்துகிறார். இவ்விதமாக அகிம்சைக் கொள்கை பின்னணியில் ஒதுக்கப்பட்டுவிட்டது.

"எனவே, அகிம்சையை அனுசரிப்பதற்கு எல்லை உண்டா என்று விசாரிக்கவேண்டியிருக்கிறது. ஒரு பெண்ணை மானபங்கம் செய்ய துஷ்டன் ஒருவன் முயற்சிக்கிறான். அந்தப் பிசாசின் பிடியிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்ளுவதற்காக அந்தப் பெண் அவனைக் கொன்றுவிடுவது நியாயமாகாதா? அப்போது கூட அவள் அகிம்சையைக் கைக்கொள்ள வேண்டுமா?

"மீன் பிடிப்பது இம்சையே. காய்கறிகளுக்காகச் செடிகளை வெட்டுவது இம்சையே. நோய்க் கிருமிகளை ஒழிக்க மருந்தை உபயோகிப்பது இம்சையே. அப்படியாயின், எப்படி உயிர் வாழ்வது?

—ஒரு பிராம்மணன்"

பால் கொடுக்க மறுக்கும் எருமை மாட்டை தந்தை கறக்காவிடில், உலகத்திற்கு நஷ்டம் எதுவும் ஏற்பட்டுவிடாது. ராமன் கூறியதாகப் பல விஷயங்களைத் துளசிதாஸ் கூறியிருக்கிறார். அவற்றை என்னால் அறிந்து கொள்ள முடியவில்லை. வாலியைப் பற்றிய கட்டம் முழுதும் இந்த வகையைச் சேர்ந்தது. துளசிதாஸ் ராமனைப்பற்றிக் கூறியுள்ள விஷயங்களை அப்படியே நடைமுறையில் ஒருவர் அனுஷ்டித்தால், அவர் தூக்கு மேடையில் ஏறும்படி நேராவிடினும், நிச்சயமாகத் துன்பத்திற்குள்ளாவார். ராமாயணத்திலோ அல்லது மகாபாரதத்திலோ ஒவ்வொரு வீரரையும் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ள ஒவ்வொரு விவரத்தையும் உள்ளது உள்ளபடி அப்படியே நான் எடுத்துக் கொள்ளுவதில்லை; இந்த நூல்களை நான் உண்மையான சரித்திர

* இந்தப் பாடல் துளஸிதாஸ் ராமாயணத்தில் உள்ளது- இதன் பொருள் பின் வருமாறு: தம்பியின் மனைவி, சகோதரி, மகனின் மனைவி முதலியவர்களைத் தன் மகளைப் போல் கருதவேண்டும். அதற்கு மாறாக, அவர்களைக் கெட்ட நோக்கத்துடன் பார்ப்பவனைக் கொல்லுவதால் யாதொரு பாவமும் ஏற்படாது.

சம்பவங்கள் அடங்கியவை என்றும் கருதுவதில்லை. அவை வேறு வழிகளில் நமக்கு அவசியமான உண்மைகளை வெளியிடுகின்றன. அந்த இரண்டு காவியங்களிலும் வருணித்துள்ளபடி ராமனையும் கிருஷ்ணனையும் தவறே செய்யாதவர்கள் என்றும் நான் கருதுவதில்லை. அவர்கள் அவர்களுடைய காலத்தில் வழங்கிய சிந்தனைகளையும் அபிலாஷைகளையும் பிரதிபலிக்கிறார்கள். தவறே செய்யாதவர்களின் வாழ்க்கைகளை, தவறே செய்யாத ஒருவர்தான் நியாயமான முறையில் சித்திரிக்க முடியும். எனவே, இந்த மாபெரும் நூல்களின் கருத்தை மாத்திரமே வழிகாட்டியாகக் கொள்ள வேண்டும். கருத்தை விட்டுவிட்டு வார்த்தைகளின் பொருளை அப்படியே பின்பற்றினால். அது நம்மை திக்குமுக்காடச் செய்துவிடும்; வளர்ச்சிக்கே முட்டுக்கட்டையாகிவிடும்

கீதை சம்பந்தப்பட்டவரையில், அதையும் சரித்திர பூர்வமான ஓர் உபதேசமாக நான் கருதவில்லை. ஓர் ஆன்மிக உண்மையை நம் மனத்தில் பதியும்படி செய்வதற்காக, அது ஒரு ஸ்தூலமான உதாரணமாக அமைந்திருக்கிறது. அது, ஒன்றுவிட்ட சகோதரர்களிடையே நிகழ்ந்த யுத்தத்தைப் பற்றிய வருணனை அல்ல; நம்மிடத்தில் உள்ள நல்ல இயல்புக்கும் தீய இயல்புக்கும் இடையே நிகழும் போராட்டத்தின் வருணனையே ஆகும். மேற்கண்ட கடிதத்தை எழுதியவர், அவர் மேற்கோள் காட்டும் சம்பவங்களை விட்டுவிட்டு, அகிம்சைக் கொள்கையைப் பரிசீலனை செய்ய வேண்டும். 'அகிம்சா பரமோ தர்ம:' என்பது வாழ்க்கையின் மகோன்னதமான உண்மைகளில் ஒன்றாகும். அதிலிருந்து தவறுவதை ஒரு வீழ்ச்சியாகவே கருத வேண்டும்.

செடிகளைப் பிடுங்குவது கூட ஒரு தீச் செயலேயாகும். ரோஜா புஷ்பத்தைச் செடியிலிருந்து பறிக்கும்போது யாருக்குத்தான் வேதனை உண்டாவதில்லை? பயனற்ற பூண்டுகளைப் பிடுங்கும்போது நமக்கு வேதனை உண்டாவதில்லை என்பது மேற்கண்ட கொள்கையைப் பாதிக்காது. இயற்கையில் பூண்டுகளின் ஸ்தானத்தை நாம் அறிந்துகொள்ளவில்லை என்பதையே அது காட்டுகிறது. எனவே, துன்பமிழைத்தல் யாவும் அகிம்சைக் கொள்கைக்கு முரணானதே. அகிம்சையை அப்பழுக்கின்றி பரிபூரணமாகக் கைக்கொள்ளுவது, வாழ்க்கையை அசாத்தியமானதாகச் செய்கிறது என்பது உண்மையே. அப்படியாயின், நாம் எல்லோரும் அழிவதாக இருந்தாலும், சத்தியம் நிலைத்து நிற்கட்டும். பண்டைக்கால உபதேசகர்கள் அகிம்சைக் கொள்கையை அதன் இறுதியான எல்லைவரையில் கொண்டு சென்று, ஸ்தூல வாழ்வு தீமையானதென்றும், குழப்பத்தையும் தடுமாற்றத்தையும் கொடுக்கக் கூடியதென்றும் நிர்ணயித்திருக்கிறார்கள்.

மோட்சம்தான், உடலற்ற, உடலுக்கு அப்பாற்பட்ட ஒரு நிலையாகும். அந்த நிலையில் சாப்பிடுவதோ, தண்ணீர் குடிப்பதோ எதுவும் இராது; எனவே, எருமை மாட்டைக் கறக்க வேண்டிய அவசியமோ அல்லது பூண்டுகளைக் களைய வேண்டிய

அவசியமோ இல்லை. சத்தியத்தை அறிந்துகொள்ளுவதோ அல்லது அதன் பெருமையை உணர்வதோ நமக்குக் கஷ்டமாக இருக்கலாம். அதற்கிணங்க வாழ்க்கையை நடத்துவது அசாத்தியமானதாக இருக்கலாம், அசாத்தியமானதாகவே இருக்கிறது. இருந்தாலும், அது உண்மையே என்பதில் எனக்குச் சந்தேகமில்லை. அதற்கிணங்கவும் நமது திறமைக்கு எட்டிய வரையிலும் நமது வாழ்க்கையை ஒழுங்கு செய்துகொள்ளுவதிலேயே தருமம் அடங்கியிருக்கிறது. அற்புதமான அக்கொள்கையை நடை முறையில் நாம் எவ்வளவுக்குப் பின்பற்றுகிறோமோ அவ்வளவுக்கு, வாழ்க்கை வாழக் கூடியதாகவும் இன்பமாகவும் திகழ்கிறது. அப்போதுதான் நாம் உடலுக்கு இடைவிடாத அடிமைகளாக இராமல், உடலை நமது அடிமையாக்கிக் கொள்ளுகிறோம்.

'எங் இந்தியா' – 19—3—1925

# 2
# புரட்சி எல்லையில்

ஓர் அன்பர் பல கேள்விகள் கேட்டபின், தமது கடிதத்தை இவ்வாறு முடித்திருக்கிறார் :

"நான் மேலே கூறியுள்ள சந்தேகங்களை விளக்குவீர்கள் என்றும், நான் அர்த்தமில்லாமல் உளருதிருக்கும் வரையில் என்னுடன் தொடர்ந்து விவாதிப்பீர்கள் என்றும் நம்புகிறேன். நான் உங்களுடைய சீடன். உங்களுடைய தலைமையிலும் மேற்பார்வையிலும் நான் சிறைக்குச் சென்றிருக்கிறேன். உங்களுக்கு நான் வெகு அருகில் இருந்தபோதும், ஏராளமான சந்தர்ப்பங்கள் கிடைத்த போதும்கூட நான் உங்களுடன் ஒருபோதும் பேசியதில்லை. ஏனெனில், உங்களுடைய நேரத்தை வீணக்க நான் விரும்பவில்லை. நான் உங்களுடைய பாதங்களைக் கூடத் தொட்டதில்லை. உங்களுடைய தர்க்கவாதங்களாலும், ராஜீயக் கொள்கைகளாலும் எனது நம்பிக்கை மிகவும் ஆட்டம் கண்டுவிட்டதென்று இப்போது நான் உணருகிறேன். நான் ஒரு புரட்சிக்காரன் அல்ல. எனினும், புரட்சிக்காரனுக மாறும் தறுவாயில் இருந்துவருகிறேன். இந்தக் கேள்விகளுக்குத் தாங்கள் திருப்திகரமாக பதில் அளித்தால், என்னை நீங்கள் காப்பாற்றலாம்."

இப்போது நான் அவரது கேள்விகளை ஒன்றன்பின் ஒன்றுகக் குறிப்பிடுகிறேன்.

1. அகிம்சை என்றால் என்ன? அது மனத்தின் ஒரு நிலையா அல்லது உயிர்களை அழிக்காமல் இருப்பதா? அது பின்னதாக இருக்குமாயின், அதை நடைமுறையில் அனுசரிப்பதும், இறுதிவரையில் அதைப் பூரணமாக அமலுக் கொண்டு வருவதும் சாத்தியமா? நாம் தினசரி உணவு உட்கொள்ளும் போதும், மற்ற சமயங்களிலும் எண்ணிக்கையற்ற உயிர்களை அழிக்கவில்லையா? அகிம்சையைப் பூரணமாக அனுசரிப்பதெனில், நாம் காய்கறிகளைக் கூடத் தின்ன முடியாது.

அகிம்சை, மன நிலையை மாத்திரமல்ல, அதன் காரணமாக ஏற்படும் செயலையும் குறிப்பதாகும். கறிகாய்களுக்கு உயிர் உண்டு என்பதில் ஐயமில்லை. எனினும், கறிகாய்களைச் சாப்பிடுவது தவிர்க்க முடியாதது. இருந்தாலும், அதுவும் உயிரை அழிக்கும் வேலையே. ஆனால், அதை மன்னிக்கக் கூடிய ஒரு விஷயம் என்று கருதலாம்.

இரண்டாவது கேள்வி :

2. உயிர்களை அழிப்பதை நாம் தவிர்க்க முடியாது எனில், அதற்காக நாம் கண்மூடித்தனமாக உயிர்களை அழிக்க முற்பட்டுவிடக் கூடாது. தவிர்க்க முடியாதது என்று நிரூபிக்கப்பட்ட இடங்களில், கொள்கையை அடிப்படையாகக் கொண்டு அவற்றை ஆட்சேபிக்க முடியாது; ஆனால், சுயநலமானது என்று கூறி அவற்றை ஆட்சேபிக்கலாம்.

தவிர்க்க முடியாதது அல்லது அவசியமானது என்று நிரூபிக்கப்பட்ட இடங்களில் கூட, கொள்கையை அடிப்படையாகக் கொண்டு இம்சையை நியாயமானது என்று வாதிக்க முடியாது. சுயநல அடிப்படையில் அது நியாயமானது என்று கூறி வாதிக்கலாம்.

மூன்றாவது கேள்வி :

3. உயிரை அழிக்காமல் இருப்பதே அகிம்சையாயின், ஒரு லட்சியம் எவ்வளவு புனிதமானதாயினும், நீதியானதாயினும், அதற்காக உயிரைத் தியாகம் செய்யும்படி யாரையும் நீங்கள் கேட்பது முரண்பாடானதல்லவா? அவ்விதம் உயிர்த் தியாகம் செய்வது தனக்குத்தானே இம்சை செய்வதாகும் அல்லவா?

ஒரு லட்சியத்திற்காக உயிரைத் தியாகம் செய்யும்படி நான் ஒருவரைக் கேட்கலாம். அவ்விதம் கேட்பது அகிம்சைக்கு முரணானதல்ல. ஏனெனில், பிறருக்கு இம்சை செய்யக் கூடாது என்பதே அகிம்சையின் பொருளாகும்.

நான்காவது கேள்வி :

4. ஒவ்வொருவரும் தன் சொந்த உயிர்மீது அன்பு காட்டுவது மனித இயல்பேயாகும். தன் தேசத்திற்கும், தேச மக்களுக்கும் அவசியமானபோது ஒருவர் தன் சொந்த உயிரைத் தியாகம் செய்ய வேண்டுமாயின், அதே அவசியம் நேரும்போது பிறரது உயிர்களையும் ஏன் தியாகம் செய்யக் கூடாது? ஆனால், அது அவசியமானது தானா என்பதை நாம் நிரூபிக்க வேண்டும்.

'யார், தன் சொந்த உயிரின் மீது ஆசை கொள்ளுகிறானோ, அவன் அதை இழந்து விடுகிறான்; யார், தன் சொந்த உயிரை இழக்கிறானோ, அவன் அதைக் காப்பாற்றிக் கொள்ளுகிறான்'. அவசியம் என்ற காரணத்தினால் பிறரது உயிர்களைப் பலி கொடுப்பது நியாயமாகாது. ஏனெனில், அவசியம் என்பதை நிரூபிப்பது அசாத்தியமானது. அவ்விஷயத்தில் நாம் நீதிபதிகளாக இருக்க முடியாது. நாம் யாருடைய உயிர்களைப் பலிகொடுக்க விரும்புகிறோமோ, அவர்கள் மாத்திரமே அவ்விஷயத்தில் நீதிபதி

களாக இருக்க வேண்டும். நமது தீர்ப்பு தவறிவிடக் கூடியது என்பதே, நாம் அகிம்சையைப் பின்பற்ற வேண்டும் என்பதற்குச் சிறந்த காரணமாகும். கிறிஸ்தவ மத விசாரணைக் கோர்ட்டார் (Inquisitors)* தங்களுடைய நடவடிக்கைகள் நீதியானவை என்று முற்றிலும் நம்பினர்கள். ஆனல், அவர்கள் செய்தது முற்றிலும் தவறு என்பதை இப்போது நாம் அறிகிறேம்.

ஐந்தாவது கேள்வி :

5. *தியாகத்திற்கும் கொலைக்கும் வேற்றுமை என்ன?*

மற்றவர்களின் நன்மைக்காக, தான் துன்பத்திற்கு உள்ளாவதே தியாகமாகும். மற்றவர்களின் உயிரைப் போக்குவதே கொலை. கொலை செய்பவனே அல்லது யாருக்காகக் கொலை செய்கிறனே அவர்களோ லாபம் அடைவதற்காக மற்றவர்களைக் கொல்லுவதே கொலையாகும்.

ஆருவது கேள்வி :

6. *உங்களுக்கு ரண சிகிச்சை செய்யும் ஒரு டாக்டர் கண்டனத்திற்கு உரியவரா? தாற்காலிகமாக உங்களுக்கு அவர் துன்பத்தைக் கொடுப்பதால் அவர் இம்சையில் இறங்கி விட்டதாகக் கூற முடியுமா? அதற்காக அவரை நாம் பாராட்ட வேண்டாமா? இம்சையைக் கொடுக்கும் அவரது செயலைக் காட்டிலும், நோயாளியின் கஷ்டத்தைத் தீர்க்க வேண்டும் என்ற அவரது மன நிலையை நாம் கவனிக்க வேண்டாமா?*

இது இம்சை என்ற சொல்லை துஷ்பிரயோகம் செய்வதாகும். மற்றெருவருக்கு, அவரது சம்மதமின்றியோ அல்லது அவருக்கு எவ்வித நன்மையும் இல்லாமலோ துன்பம் ஏற்படும்படி செய்வதுதான் இம்சை என்பதன் பொருள். என் விஷயத்தில், எழுத்து மூலம் எனது சம்மதத்தைப் பெற்றும், என் விருப்பத்திற்கு இணங்கவும், முற்றிலும் எனது நன்மைக்காகவுமே சர்ஜன் எனக்குத் தாற்காலிகமாக உடலில் வேதனை ஏற்படும்படி செய்தார். ஒரு புரட்சிக்காரர், தம்மிடம் அகப்பட்டுக் கொண்டவரின் நன்மைக்காக அவரைக் கொல்லுவதோ அல்லது கொள்ளையிடுவதோ இல்லை. 'சமூகத்தின் நன்மைக்'காக, எதிராளி துன்பத்திற் குள்ளாவது நியாயமே என்றும் அவர் கருதுகிறர்.

---

* காந்திஜி மேலே குறிப்பிட்டுள்ள கிறிஸ்தவ மத விசாரணைக் கோர்ட் 13-ஆம் நூற்றுண்டில் ஐரோப்பாவில் கிறிஸ்தவ மதத்தின் ஒரு பயங்கரமான கருவியாகத் திகழ்ந்தது. மத விரோதமான குற்றங்களை விசாரிப்பதே ரோமன் கத்தோலிக்க மத விசாரணைக் கோர்ட்டின் கடமையாக இருந்தது. ஐரோப்பா முழுவதும் அக் கோர்ட்டுகள் செயல்பட்டு வந்தன. அவைகளால் ஏராளமானவர்கள் மிகக் கொடிய தண்டனைகளுக்கு உள்ளாயினர். 18—ஆம் நூற்றுண்டில்தான் அவற்றின் செல்வாக்கு குறையத் தொடங்கியது. இன்றும் ரோம் நகரில் அந்த விசாரணைக் கோர்ட் இருக்கிறது. எனினும், மத விரோதமான இலக்கியங்களைத் தடை செய்ய மாத்திரமே இன்று அதற்கு அதிகாரம் உண்டு.

ஏழாவது கேள்வி :

7. *மற்ற சக்திகளைப் போல் உடல் பலமும் வாழ்க்கையின் ஒரு முக்கியமான அம்சம் அல்லவா? கோழைகள் தங்களுடைய கோழைத்தனத்தை மறைத்துக் கொள்ளும் ஒரு போர்வையாக அகிம்சையை மேற்கொள்ளலாம் அல்லவா? அது போலவே, காட்டுமிராண்டிகளும் கொடியவர்களும் இம்சையையும் துஷ்பிரயோகம் செய்ய முடியும். எனினும் அதற்காக, இம்சையே கெட்டது என்று ருஜுவாகிவிடாது.*

உடல் சக்தி, வாழ்க்கையின் ஒரு முக்கியமான அம்சம் என்பதில் ஐயமில்லை. இம்சை முறையைக் கொடியவர்கள் துஷ்பிரயோகம் செய்திருக்கிறார்கள் என்பதும் நிச்சயம்தான். ஆனால், நான் விவரித்துள்ள இம்சையின் உபயோகம் கற்பனைக்கு எட்டாதது. அதைப்பற்றிய விளக்கத்தை, முந்திய கேள்விக்கு அளித்துள்ள பதிலில் பார்த்துக் கொள்ளுங்கள்.

எட்டாவது கேள்வி :

8. *சமூகத்திற்குத் தொல்லையாக இருக்கும் பைத்தியக்காரர்களையும், அபாயகரமான குற்றவாளிகளையும் சிறைகளில் வைப்பதை நீங்கள் அனுமதிப்பீர்கள் அல்லவா?*

பைத்தியம் பிடித்தவர்களையும், அபாயகரமான அல்லது அபாயமற்ற குற்றவாளிகளையும் தண்டிக்கும் நோக்கத்துடன் சிறைகளில் வைப்பது சரி என்று நான் நிச்சயமாகக் கூறுவதற்கில்லை. பைத்தியக்காரர்களை இப்போது கூட சிறைகளில் வைப்பதில்லை. குற்றவாளிகளைக்கூட, தண்டிப்பதற்காக அல்ல, அவர்கள் இறுதியில் சீர்திருந்த வேண்டும் என்ற நோக்கத்துடன் கட்டுப்பாட்டில் வைக்கும் காலத்தை நாம் எட்டிக்கொண்டிருக்கிறோம்.

ஒன்பதாவது கேள்வி :

9. *அதிக ஜீவகாருண்ய மற்றதும், இம்சையானதும் எது? 33 கோடி மக்கள் துன்பத்திற்குள்ளாகி, வளர்ச்சியற்று கொஞ்சம் கொஞ்சமாகச் சாவதா? அல்லது அவர்களுடைய நன்மைக்காக ஒரு சில ஆயிரக்கணக்கானவர்கள் கொல்லப்படுவதா? நீங்கள் எதை விரும்புவீர்கள்? எனினும் ஒரு சில ஆயிரக்கணக்கானவர்கள் கொல்லப்படுவது, 33 கோடி மக்கள் சீரழிவதைத் தடுக்கும் என்பது நிச்சயமாக ருஜுப்பிக்கப்பட வேண்டும். அவ்விதம் ருஜுவானால், கொள்கையளவில் இம்சையை நீங்கள் ஆட்சேபிப்பீர்களா?*

முற்றிலும் நன்மைக்கான விஷயமாக இராவிடில், அது கொள்கை என்ற பெயருக்கே தகுதியற்றது. அகிம்சைக் கொள்கையில் நான் விடாப்பிடியாக இருப்பதற்குக் காரணம் என்னவெனில், அது ஒன்றுதான் மனித வர்க்கத்திற்கே இணையற்ற நன்மை பயக்கக் கூடியது; மறு உலகத்தில் மாத்திரமல்ல, இந்த உலகத்தில்கூட பயன் தரக்கூடியது. இம்சையை நான் ஆட்சேபிப்பதற்குக் காரணம் என்னவெனில், அது நன்மையளிப்பதாகத் தோன்றும்போது அந்த நன்மை தாற்காலிகமானதாக.

மாத்திரமே இருக்கிறது; அதனல் ஏற்படும் தீமை நிரந்தரமாகி விடுகிறது. எல்லா ஆங்கிலேயர்களையும் கொன்றுவிட்டால் கூட அதனுல் இந்தியாவுக்குச் சிறிதளவு நன்மையாவது ஏற்படுமென நான் நம்பவில்லை. ஒவ்வோர் ஆங்கிலேயரையும் கொல்வது நாளைக்கே சாத்தியமாகிவிட்டால்கூட, கோடிக்கணக்கான இந்தியர்களின் நிலை இன்றைக்கு இருப்பதுபோலவே மோசமாகத் தான் இருக்கும். இன்றுள்ள நிலைமைக்கு, ஆங்கிலேயர்களைக் காட்டிலும் நாமே அதிகப் பொறுப்பாளியாவோம். நாம் நன்மையே செய்தால், தீங்கு செய்வதற்கு ஆங்கிலேயர்கள் சக்தியற்றுவிடுவார்கள். அதனுல்தான், நம்முள் இருந்தே சீர்திருத்தம் ஆரம்பமாக வேண்டும் என்று நான் இடைவிடாது வற்புறுத்தி வருகிறேன்.

மகோன்னதமான தார்மிக நிலையை முக்கியமாகக் கொண்டல்ல, தரக் குறைவான யுக்தி வாதத்தைக் காரணமாகக் கொண்டே புரட்சிக்காரர்களும் அகிம்சையையே மேற்கொள்ள வேண்டுமென நான் வற்புறுத்திவருகிறேன். புரட்சி முறை இந்தியாவில் வெற்றிபெருது என்பதே எனது வாதமாகும். பகிரங்கமான போராட்டம் சாத்தியமாயின், மற்ற நாடுகளைப் போல் நாமும் இம்சைப் பாதையில் சென்று, போர்க்களத்தில் வெளியாகும் இணையற்ற வீரம் போன்ற போர்க் குணங்களையாவது உருவாக்கிக் கொள்ளலாம்.

எனினும், நம் அறிவுக்கு எட்டிய வரையில், யுத்தத்தின் மூலம் சுயராஜ்யத்தை அடைவது எக்காலத்திலும் சாத்தியமல்ல என்பதே எனது உறுதியான அபிப்பிராயமாகும். யுத்தத்தின் மூலம் ஆங்கிலேய ஆட்சிக்குப் பதிலாக வேருெரு ஆட்சி ஏற்படலாம்; ஆனல், பாமர மக்களுக்கு நன்மை பயக்கும் சுயாட்சி ஏற்படாது. சுயராஜ்ய யாத்திரை, மலையில் கஷ்டப்பட்டு ஏறுவதைப் போன்றது. அதற்கு, நுண்ணிய விவரங்களை யொட்டியும் கவனம் செலுத்த வேண்டும்; இயக்கங்களை உருவாக்கும் திறன் வேண்டும்; கிராமவாசிகளுக்குத் தொண்டு செய்வதற்காக கிராமங்களில் ஊடுருவிச் செல்லவேண்டும். மற்ருெரு விதமாகச் சொல்லுவதாயின், தேசீயக் கல்வியில் அதாவது பாமர மக்களின் கல்வியில் கவனம் செலுத்த வேண்டும்; பாமர மக்களிடையே தேசீய உணர்ச்சி பொங்கி யெழவேண்டும். மந்திரவாதி மாங்காயை வரவழைப்பதுபோல் அது திடீரென்று முளைத்துவிடாது. அது ஆலமரத்தைப் போல் கொஞ்சம் கொஞ்சமாக வளர வேண்டும். இதை ரத்தக்களரிப் புரட்சியினல் ஒருகாலத்திலும் சாதிக்க முடியாது. இவ்விஷயத்தில் அவசரப்படுவது நிச்சயமாக வீண் நஷ்டமாகவே முடியும். கற்பனைக்கு எட்டிய வரையில் ராட்டினம் சுற்றுவதுதான், அதிவேகமான புரட்சியாகும்.

கீழ்க்கண்ட பத்தாவது கேள்விதான் அவரது இறுதியான கேள்வியாகும்:

10. வாழ்க்கையின் மூலாதாரமான நலன்கள் சம்பந்தப்பட்ட வரையில், நியாயமும் தர்க்கவாதமும் நிராகரிக்கப்படுகின்றன அல்லவா? சுயநலமும், பிடிவாதமும், கொடிய குணமும் உள்ள ஒரு சிலர் நியாயத்திற்குச் செவி சாய்க்க மறுத்து, ஆட்சியைத் தொடர்ந்து வருவதும், பெரும்பாலான மக்களுக்கு அநீதி இழைப்பதும், அவர்களைக் கொடுமைக்கு உள்ளாக்குவதும் உண்மை அல்லவா? பாண்டவர்களுக்கும் பிடிவாதக்காரர்களான கௌரவர்களுக்கும் இடையே அமைதியாகச் சமரசம் ஏற்படும்படி செய்யும் முயற்சியில் கிருஷ்ண பரமாத்மா வெற்றி பெறவில்லை. மகாபாரதம் ஒரு கட்டுக் கதையாக இருக்கலாம். பாவம், கிருஷ்ணனின் ஆன்மிக சக்தி குறைவானதாக இருக்கலாம். உங்கள் வழக்கை விசாரித்த நீதிபதியைக் கூட அவரது பதவியை ராஜிநாமா செய்யும்படியும், உங்களுக்குத் தண்டனை விதிக்காமல் இருக்கும்படியும் செய்ய உங்களால் முடியவில்லை.* நீங்கள் நிரபராதி என்று மற்றவர்களைப் போல் அந்த நீதிபதியும் கருதினர். அப்படியிருக்க அத்தகைய சந்தர்ப்பங்களில் சுயத் தியாகத்தின் மூலம் மனத்தை மாற்றுவது என்பது எவ்விதம் வெற்றியடைய முடியும்?

தங்களுடைய சொந்த நலன்களைப் பற்றிய பிரச்னை எழும் போது, தர்க்க வாதமும் நியாயமும் புறக்கணிக்கப்பட்டுவிடுகின்றன என்பது துக்ககரமான உண்மையே. கொடுங்கோலர்கள் பிடிவாதமுள்ளவர்களாகவே இருக்கிருர்கள். அதிலும் ஆங்கிலேயர்களான கொடுங்கோலர்கள் பிடிவாதமே உருவானவர்கள். அவர்கள் பல தலைகள் உள்ள அரக்கர்களைப் போன்றவர்கள். அவர்களைக் கொல்ல முடியாது. அவர்களுடைய கருவிகளைக் கொண்டே அவர்களைச் சமாளிக்கலாம் என்ருல், அவர்கள் நமக்காக எதையும் பாக்கிவைக்கவில்லை. எனினும், அவர்களால் திருட

* காந்திஜியைக் கேள்விகள் கேட்டிருப்பவர் மேற்கண்ட பத்தாவது கேள்வியில் 1922-ஆம் ஆண்டில் காந்திஜிமீது நடந்த பிரசித்தி பெற்ற வழக்கு விசாரணையையே குறிப்பிட்டுள்ளார். 'எங் இந்தியா'வில் காந்திஜி எழுதியிருந்த சில கட்டுரைகளுக்காகவே அவர்மீது அரசாங்கம் வழக்குத் தொடர்ந்தது. அகமதாபாத் ஜில்லா செஷன்ஸ் நீதிபதி ஸ்ரீ ஸி, என். ப்ரூம்பீல்டு, ஐ. ஸி. எஸ்., அவ்வழக்கை விசாரித்தார். விசாரணையின் போது காந்திஜி தாம் கொடுத்த வாக்குமூலத்தில் இறுதியாகப் பின் வருமாறு கூறியிருந்தார்: "தீமையுடன் ஒத்துழைக்க மறுப்பதே ஒத்துழையாமை இயக்கத்தின் நோக்கமாகும். நீங்கள் நிறைவேற்ற வேண்டியிருக்கும் சட்டம் தீமையானது என்றும், நான் நிரபராதி என்றும் நீங்கள் கருதினுல், நீதிபதியும், அசெஸர்களுமான நீங்கள் உங்கள் பதவிகளை ராஜிநாமா செய்வதே உங்கள் முன் உள்ள ஒரே வழியாகும். அந்தச் சட்டம் இந்த நாட்டு மக்களுக்கு நன்மை பயக்கக் கூடியது என்றும், எனது நடவடிக்கை பொதுமக்களின் நலனுக்குத் தீங்கு விளைவிக்கக் கூடியது என்றும் நீங்கள் கருதினுல், எனக்கு நீங்கள் கடுமையான தண்டனை விதியுங்கள்.''

ஏற்கனவே, அதே குற்றத்திற்காக லோகமான்ய திலகருக்கு ஆறு வருஷம் வெறும் காவல் தண்டனை விதிக்கப்பட்டிருந்தது. அதைப் பின்பற்றி காந்திஜிக்கும் நீதிபதி ஆறு வருஷம் சிறைத் தண்டனை விதித்தார். எனினும், நீதிபதி காந்திஜிக்கு வேண்டா வெறுப்புடனும், மன வருத்தத்துடனுமே தண்டனை விதித்தார் என்பது அவரது தீர்ப்பின் தொனியிலிருந்து நன்கு வெளியாயிற்று. "மேற்கண்ட தண்டனையைக் குறைத்து அரசாங்கம் காந்திஜியை விடுதலை செய்தால், அதைக் குறித்து வேறெவரையும் விட எனக்குத்தான் அதிக மகிழ்ச்சி ஏற்படும்'' என்றும் நீதிபதி தமது தீர்ப்பின் இறுதியில் குறிப்பிட்டிருந்தார்!

முடியாத ஒரு கருவி நம்மிடம் இருக்கிறது. அவர்கள் உற்பத்தி செய்த எந்தக் கருவியையும் காட்டிலும் இது உயர்ந்ததாகும். அதுதான் அகிம்சை; அதன் சின்னமே ராட்டினமாகும். எனவே, பூரண நம்பிக்கையுடன் நான் அந்தக் கருவியை தேசமக்களுக்குப் பரிசாக அளித்திருக்கிறேன். கிருஷ்ண பரமாத்மா, தாம் விரும்பியதையெல்லாம் செய்து முடித்தார், ஒன்றிலாவது தோல்வி அடையவில்லை என்று மகாபாரதம் கூறுகிறது. கிருஷ்ண பரமாத்மா எல்லாம் வல்லவர். வாதத்திற்காக, மகோன்னத நிலையிலிருந்து அவரைக் கீழே இழுப்பது பலனற்ற வேலையாகும். சாதாரண மனிதரைப் போல் அவரைக் கருதி அவர் செய்த காரியங்களையொட்டித் தீர்மானம் செய்வதாயின், அவரது நிலை சங்கடமாகிவிடும் என்றே அஞ்சுகிறேன். மகாபாரதம் சரித்திரமும் அல்ல, கட்டுக் கதையும் அல்ல. அது, மனித ஆன்மாவைப் பற்றிய சரித்திரமே ஆகும். கிருஷ்ண பரமாத்மா அதில் முக்கிய நடிகராகத் திகழ்ந்தார். எனது அற்ப அறிவுக்கு எட்டாத பல விஷயங்கள் அதில் இருக்கின்றன. அதில் உள்ள மற்றும் பல விஷயங்கள் இடைச் செருகல்கள் என்பதும் தெளிவாகும். அது ஓர் அற்புதமான சுரங்கம், அதை ஆழமாகத் தோண்டி ஆராய்ச்சி செய்ய வேண்டும்; அதிகமாக உள்ள அந்நிய பதார்த்தங்களை அகற்றி விட்டு அதில் உள்ள வைரங்களை எடுக்க வேண்டும். எனவே, பூமியிலேயே உறுதியாக நிற்கும்படியும், பாரதத்தில் உள்ள அர்ஜுனனையும் மற்ற வீரர்களையும் போல் இமயமலைச் சிகரங்களைத் தாண்ட முயற்சிக்க வேண்டாம் என்றும் எனது நண்பர்களையும், முழுப் புரட்சிக்காரர்களையும், புரட்சிக்காரர்களாக உருவாகி வருபவர்களையும், புரட்சியின் எல்லையில் இருப்பவர்களையும் வற்புறுத்திக் கேட்டுக் கொள்ளுகிறேன். இமயமலையைத் தாண்ட முயற்சிப்பதற்குக் கூட நான் மரியாதையுடன் மறுத்து விடவேண்டும். ஹிந்துஸ்தானில் உள்ள சமவெளிகளே எனக்குப் போதிய நன்மை பயக்கக்கூடியவை.

இப்போது கீழே இறங்கி சமவெளிகளுக்கு வருவோம். நான் நிரபராதி என்று நீதிபதிக்கு எடுத்துக் கூறி அவர் மனத்தை மாற்றுவதற்காக நான் கோர்ட்டுக்குச் செல்லவில்லை என்பதை, கேள்வி கேட்டிருப்பவர் அறிந்து கொள்ள வேண்டும். ஆனால் அதற்குமாறாக, நான் முழுக் குற்றவாளி என்று கூறி எனக்கு அதிக பட்சமான தண்டனை கொடுக்க வேண்டும் என்று வாதாடவே நான் சென்றேன். ஏனெனில், மனிதனால் விதிக்கப்பட்ட சட்டத்தை நான் நன்கறிந்து, வேண்டுமென்றே அதை மீறினேன். எனவே, நான் நிரபராதி என்று நீதிபதி நம்பவில்லை, நம்பவும் முடியாது. நான் சிறைத் தண்டனையை அனுபவித்ததில் அதிகத் தியாகம் எதுவும் இல்லை. உண்மையான தியாகம் அவ்வளவு எளிதானதல்ல; அது விட்டுக் கொடுக்காத கண்டிப்பும், உறுதியும் வாய்ந்த கடினமான சரக்காகும்.

அகிம்சையில் உள்ள நுணுக்கங்களை எனது நண்பர் அறிந்து கொள்ள வேண்டும். அது ஒரு மனமாற்ற நடவடிக்கையாகும். எத்தனையோ மிரட்டல்களையும், இம்சை நடவடிக்கைகளையும்

காட்டிலும் எனது கலப்பற்ற அகிம்சை அதிக ஆங்கிலேயர்களின் மனத்தை மாற்றியிருக்கிறது என்பது எனது திடமான அபிப் பிராயம். நெஞ்சறிந்த அகிம்சை இந்தியாவில் பொதுவான கொள்கையாகி விடும்போது, சுயராஜ்யம் அதிக தூரத்தில் இராது என்பதை நான் அறிந்துள்ளேன்.

—'எங் இந்தியா' - 21—5—1925

## 3

# விவசாயத்தில் இம்சை

'நவஜீவன்' பத்திரிகையை இடைவிடாது வாசித்துவரும் ஓர் அன்பர் கேட்பதாவது:

"விவசாயம், தூய்மையான ஓர் யக்ஞம் (தியாகம்) என்றும், மனிதனுக்குச் செய்யும் உண்மையான தொண்டு என்றும் நான் 'நவஜீவனி'ல் வாசித்தேன்,

"ஒருவர் தவறுதலாக ஒரு சிறிய எறும்பை மிதித்துவிட்டால் கூட மிகவும் வருந்துகிறுர். ஆனல், விவசாயியின் நிலைமை என்ன? அவரது விவசாய நடவடிக்கைகளின் காரணமாக ஆயிரக்கணக்கான அத்தகைய பிராணிகள் கொல்லப்படுவதை அவர் பார்க்கிறுர். தினந்தோறும் இவ்விதம் பிராணிகள் கொல்லப்படுவதைப் பார்த்துப் பார்த்து அவர் இரக்கமற்றவராகி விடுகிறுர் அல்லவா? எனவே, ஓர் எறும்பு சாவதைக் கூடச் சகிக்கமுடியாத ஒருவர் எப்படி விவசாயத்தில் ஈடுபட முடியும்? விவசாயத்தில் இயல்பாகவே இம்சைக்கு அதிக இடமிருக்கிறது. எனவே, அத்தகைய இம்சையைத் தவிர்ப்பதற்காக அவர் பிச்சை எடுத்தோ, அல்லது வேறு ஏதாவது தொழிலில் ஈடுபட்டோ தமது ஜீவனத்தை நடத்துவது சரி அல்லவா? எனினும், பிச்சையெடுப்பது மிகவும் வெறுக்கத்தக்க ஒரு தொழிலாகும் என்பதை நான் அறிவேன். விவசாயத்தை மேற்கொள்ளுவதில் எனக்கு மிகுந்த ஆர்வம் இருக்கிறது. ஆனல், அதில் அடங்கியுள்ள இம்சையும், மாடுகளை விரட்டுவதற்காக உபயோகிக்கப்படும் தார்க் குச்சிகளும் என்னை அஞ்சி அப்பால் ஓடும்படி செய்கின்றன."

விவசாயத்திஞல் எண்ணிக்கையற்ற சிறிய பிராணிகள் அழிகின்றன என்பது உண்மையே. உயிருடன் இருப்பதற்கான நடவடிக்கைகூட, அதாவது மூச்சு விடுவதுகூட, எத்தனையோ ஜந்துக்கள் அழிவதற்குக் காரணமாக இருக்கிறது. நீங்கள் தற்கொலை செய்து கொள்ளுவதன் மூலம் உங்கள் உடலை அழித்து விடுவதில்லை. அதுபோலவே, விவசாயத்தைக் கைவிட்டு நீங்கள் அப்பால் ஓடிவிடுவதன் மூலம் நீங்கள் விவசாயத்தை அழித்துவிட முடியாது. மனிதன், ஒரு மண் உருவமே. மண்ணினல்தான் அவனது உடல் உருவாகின்றது. மண்ணிலிருந்துதான் அவனது ஜீவனத்திற்கும் வழி ஏற்படுகிறது. விவசாயத்தின் விளைவாக ஏற்படும் தீமைகளிலிருந்து தப்பித்துக்கொள்ள ஒருவர் பிச்சையெடுத்து

ஜீவனம் செய்ய முற்பட்டால், அவர் இரட்டிப்புத் தவறு செய்து குற்றத்திற்கு ஆளாகிறார். விவசாயத்தில் அடங்கியுள்ள இம்சைக் குற்றத்திற்கும் அவர் ஆளாகிறார். ஏனெனில், அவர் யாசிக்கும் உணவு யாரோ ஒரு விவசாயத் தொழிலாளியினால் உற்பத்தி செய்யப்பட்டதுதானே. இரண்டாவது தவறு, அறியாமையும், அதைத் தொடர்ந்து பிச்சையெடுத்து வாழும் மனிதனின் சோம்பேறித்தனமுமாகும்.

இம்சை காரணமாக ஒருவர் விவசாயத்தில் ஈடுபடக்கூடாது எனில், மற்றவர்களும் அதில் ஈடுபடக்கூடாது அல்லவா? பலரும் பிச்சையெடுத்துப் பிழைக்கத் தொடங்கினால், விவசாயிகள் தாங்கவேண்டிய சுமை பெரிதாகிவிடும். ஏனெனில், பிச்சையெடுக்கும் பலருக்கும் உணவு அளிக்கவேண்டிய பெரும் பொறுப்பு விவசாயிகளின் தலையில் விடியும். அவ்விதம் விவசாயிகளுக்குக் கஷ்டத்தை கொடுக்கும் பாவத்திற்கு அவர்கள் (பிச்சையெடுத்துப் பிழைப்போர்) ஆளாகமாட்டார்களா?

விவசாயத்திலும், அதுபோன்ற மற்ற அவசியமான தொழில்களிலும் இம்சை அடங்கியிருக்கிறது. நம் உடலைப் பாதுகாப்பதில்கூட இம்சை அடங்கியிருக்கிறது. இதெல்லாம் தவிர்க்க முடியாதவை. தவிர்க்க முடியாதவை என்பதற்காக, அவை இம்சையல்ல என்று சொல்லிவிட முடியாது. எனினும், அவற்றால் ஏற்படும் குற்றம் குறைவானதே. அந்தக் குற்றத்திலிருந்து மனிதன் தன்னைத்தான் விடுவித்துக்கொள்ளலாம். அதாவது ஞானம், பக்தி போன்ற மற்ற ஆன்மிக முறைகளின் மூலம் அக்குற்றத்திலிருந்து மனிதன் விடுதலை பெற்று, இறுதியில் மோட்சத்தை அடையலாம்.

மனிதனுடைய உடலின் விசேஷம் இதுதான்: அது, அவனை அடிமையாக்கும் ஒரு சாதனமாகவும் இருக்கிறது; அவனுக்கு விடுதலை அளிக்கும் ஒரு சாதனமாகவும் இருக்கிறது. உதாரணமாக, தாம் ஒரு லட்சப் பிரபுவாகிவிடவேண்டும் என்ற நோக்கத்துடன் விவசாயத்தில் ஈடுபடும் ஒருவர் அதை, தம்மை அடிமையாக்கும் ஒரு சாதனமாக மாற்றிக் கொண்டுவிடுகிறார். தமது ஜீவனத்திற்காக மாத்திரமே விவசாயத்தை உபயோகிப்போர், அதை தமக்கு விடுதலை அளிக்கும் ஒரு கருவியாகச் செய்து கொள்ளுகிறார். எல்லாக் கர்மாக்களிலும், எல்லா நடவடிக்கைகளிலும், எல்லாத் தொழில்களிலும் ஏதாவது ஒரு விதத்தில் இம்சை அடங்கியிருக்கிறது. எல்லா அவசியமான தொழில்களிலும் ஓரளவு இம்சை இருக்கிறது. முத்துச் சிப்பி எடுத்தல், பட்டு உற்பத்தி, தங்கம் உற்பத்தி முதலியவற்றில் விவசாயத்தைக் காட்டிலும் அதிக இம்சை அடங்கியிருக்கிறது. அவை வாழ்க்கைக்கு அவசியமான தொழில்களும் அல்ல. எனவே, நம்மைச் சுற்றியுள்ள குழப்பமான இம்சையாகிற குப்பை மேட்டிலிருந்து அகிம்சை மதமான மாணிக்கத்தைக் கண்டெடுத்த முனிவரை, நம் இதயமானது வணங்கி வழிபடுகின்றது.

ஓர் எறும்புக்குக்கூடத் துன்பம் ஏற்படாமல் நடமாடுவதே முழு முதற் கடமையாகும். ஏராளமான புழு பூச்சிகளையும், மற்றும் உள்ள ஜீவராசிகளையும் லட்சியம் செய்யாமல் மமதையுடன் அவற்றை மிதித்துக்கொண்டு செல்லும் ஒரு மனிதன் நெஞ்சறிந்து பாவம் செய்தவனாகிறான்; அவன் அவ்விதம் நரகத்திற்கு வழிகோலிக்கொள்ளுகிறான். நிரபராதியான விவசாயியுடன் அவனை ஒப்பிட முடியாது. அத்தகைய நூற்றுக் கணக்கான விவசாயிகள், தங்கள் வழியில் வரும் எறும்புகளையும் மற்ற ஜந்துக்களையும் மிகுந்த அக்கறையுடன் காப்பாற்றுகிறார்கள். அந்த விவசாயிகளுக்கு மமதை இல்லை; அவர்கள் அடக்கம் உள்ளவர்கள். அவர்கள்தான் பூமியின் சாரமாகத் திகழ்கிறார்கள். உலக ஜனத்தொகையில் பத்தில் ஒன்பது பேர் விகிதம் விவசாயத்திலேயே ஈடுபட்டிருக்கிறார்கள். அது, பூமியை நல்வாழ்வுக்கு உகந்தவாறு செய்கிறது. விவசாயத்தில் ஈடுபட்டிருப்போரின் தியாகம் தூய்மையானது. எனவே, அனாவசியமான தொழில்களையெல்லாம் விட்டுவிட்டு மனத் தூய்மையுடன் விவசாயத்தில் ஈடுபடுவோர் புண்ணியத்தைச் சம்பாதித்துக் கொள்ளுகிறார்கள்.

தார்க்குச்சிகளைப் பற்றிய ஆட்சேபணை, எல்லா விவசாயிகளுக்கும் பொருந்தாது. ஏனெனில், பல விவசாயிகளும் தங்களிடமுள்ள கால்நடைகளை தங்கள் சொந்த குடும்பத்தினரைப் போலவே கருதுகிறார்கள்; தங்கள் குழந்தைகளை எவ்வளவு அன்புடனும் அக்கறையுடனும் பராமரிக்கிறார்களோ அது போலவே அந்த மிருகங்களையும் பராமரிக்கிறார்கள்.

—'எங் இந்தியா' – 24—9—1925

## 4 அஞ்சாமை

## 1

# தைரியத்திற்கு முதல் இடம்

கீதையின் 16-ஆவது அத்தியாயத்தில் தெய்விகமான குணங்களைப் பற்றிக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. அக்குணங்களின் ஜாப்தாவில் பயமின்மைக்குத்* தான் முதல் ஸ்தானம் கொடுக்கப்

* அபயம் ஸத்வ ஸம்சுத்திர் ஞானயோக வ்யவஸ்திதி: |
தானம் தமச்ச யக்ஞச்ச ஸ்வாத்யாயஸ்தப ஆர்ஜவம் ||
அஹிம்ஸா ஸத்யமக்ரோதஸ்த்யாக: சாந்திரபைசுனம் |
தயா பூதேஷ்வலோ லுப்த்வம் மார்த்தவம் ஹ்ரீரசாபலம் ||
தேஜ: க்ஷமா த்ருதி: சௌசமத்ரோஹோ நாதிமானிதா |
பவந்தி ஸம்பதம் தைவீம் அபிஜாதஸ்ய பாரத ||
கீதை–16–ஆவது அத்தியாயம்— 1, 2, 3-ஆம் சுலோகங்கள்.

பட்டிருக்கிறது. கீதையை வாசிக்கும் ஒவ்வொருவரும் இதை அறிவார். சுலோகங்களில் சந்தத்திற்காக அஞ்சாமை என்ற வார்த்தை முதல் இடம் கொடுக்கப்பட்டிருக்கிறதா, அல்லது அஞ்சாமையின் பெருமையை வலியுறுத்துவதற்காக வேண்டுமென்றே அவ்விதம் செய்யப்பட்டிருக்கிறதா என்பதை என்னல் சொல்ல முடியாது. அஞ்சாமைக்கு முதல் ஸ்தானம் முற்றிலும் தகுதியானதே என்பதுதான் எனது அபிப்பிராயமாகும். ஏனெனில், மற்ற உயர்ந்த குணங்களின் வளர்ச்சிக்கு அஞ்சாமை அத்தியாவசியமானது. அஞ்சாமை இராவிடில், ஒருவர் எவ்விதம் சத்தியத்தை நாட முடியும்? அல்லது அன்பு உள்ளம் படைத்தவராக இருக்க முடியும்? 'ஹரியை (இறைவனை) அடையும் வழி தைரியசாலிகளுக்கேயன்றி, கோழைகளுக்கு அல்ல' என்று பிரிதம் கூறுகிருர். இங்கே 'ஹரி' என்பதற்கு சத்தியம் என்பதே பொருளாகும். அஞ்சாமையை ஆயுதமாகக் கொண்டவர்களே தைரியசாலிகள் ஆவர், பட்டாக்கத்தியையோ, துப்பாக்கியையோ, இவை போன்ற வேறு எதையோ ஆயுதமாகக்கொண்டவர்கள் அல்ல. பயத்தினுல் ஆட்கொண்டிருப்பவர்களே, கத்தி, துப்பாக்கி போன்ற ஆயுதங்களை எடுத்துக்கொள்ளுவார்கள்.

எல்லாவிதமான வெளிப்படையான பயத்திலிருந்தும் விடுதலை அடைவதையே அஞ்சாமை குறிக்கின்றது. அதாவது, நோய், உடலுக்குத் தீங்கு, மரணம், உடைமைகளை இழத்தல், நெருங்கிய உற்ருர் உறவினரை இழப்பது, நற்பெயரை இழப்பது, பிறர் மனம் புண்படுமோ என்ற பயம் முதலிய பல்வேறு பயத்திலிருந்தும் விடுதலை அடைவதே அஞ்சாமையாகும். மரண பயத்தை வென்றவர், மற்றெல்லாப் பயங்களையும் வென்றுவிடுவார் என்று பொதுவாக, ஆனுல் தவருகக் கருதப்படுகிறது. நம்மில் சிலர் மரணத்தைக் குறித்து அஞ்சுவதில்லை; ஆனுல், வாழ்க்கையின் சில்லறை அபாயங்களையும், நோய்களையும் கண்டு ஓட்டம் பிடிக்கிருேம். சிலர் தாங்கள் இறக்கத் தயாராக இருக்கிருர்கள்; ஆனுல், தங்களுடைய அன்பார்ந்தவர்களைப் பறி கொடுக்கச் சகியார்கள். சில கருமிகள் எல்லாவற்றையும் சகித்துக் கொள்ளுவார்கள்; தங்கள் உயிரைக்கூட கொடுப்பார்கள்; ஆனுல் தங்களுடைய சொத்தைக் கொடுக்கமாட்டார்கள். மற்றவர்கள் தங்களுடைய 'கௌரவ'த்தைக் காப்பாற்றிக்கொள்ளுவ

---

சுலோகங்களின் பொருள்: அஞ்சாமை, மனத் தூய்மை, ஞானத்திலும் யோகத்திலும் நிலைத்திருத்தல், ஈகை, புலன்களை அடக்குதல், யாகம், சாஸ்திரம் படித்தல், தவம், நேர்மை,

2. அகிம்சை, உண்மை, கோபமின்மை, தியாகம், சாந்தம், கோள் சொல்லாமை, உயிர்களிடத்தில் இரக்கம், பிறர் பொருளை விரும்பாதிருத்தல், இனிமை, நாணம், சபலமின்மை,

3. தேஜஸ், பொறுமை, மன உறுதி, சுத்தம், வஞ்சகமின்மை, செருக்கின்மை ஆகிய குணங்கள் எல்லாம் கடவுளின் அருளுடன் பிறந்தவனுக்கு இயல்பாக அமைகின்றன.

தற்காக எத்தனை கொடிய செய்கைகளிலும் ஈடுபடுவார்கள். உலகத்தார் வெறுப்பார்களே என்பதற்காக சிலர், தங்கள் முன் உள்ள தெளிவான, நேரடியான பாதையிலிருந்து வழுவி விடுவார்கள்.

சத்தியத்தை நாடுவோர், இந்தப் பயத்தை யெல்லாம் எதிர்த்து வெற்றி பெறவேண்டும். ஹரிச்சந்திரனைப் போல், சத்தியத்தை நிறைவேற்றுவதற்காக அவர் எல்லாவற்றையும் தியாகம் செய்யத் தயாராக இருக்கவேண்டும். ஹரிச்சந்திரன் கதை வெறும் நீதிக் கதையாக இருக்கலாம். எனினும், அக் கதையில் உள்ள உண்மையை, சத்தியத்தை நாடும் ஒவ்வொரு வரும் தமது சொந்த அனுபவத்திலிருந்து அறிந்துகொள்ளலாம். எனவே, சரித்திர உண்மையைப் போல் அந்தக் கதை அவ்வளவு பெருமையும், மதிப்பும் வாய்ந்ததாகும். எல்லாவற்றிற்கும் மேலான சக்தியான கடவுளை உணர்ந்தவர்தான் அஞ்சாமையின் பரிபூரண நிலையை அடையமுடியும். ஏனெனில், மாயைகளி லிருந்து விடுதலை அடைந்திருப்பதையே அத்தகைய நிலை குறிக் கிறது. உறுதியான, இடைவிடாத முயற்சியின் மூலம்தான், சுயநம்பிக்கையை வளர்த்துக்கொள்ளுவதன் மூலம்தான் ஒருவர் அந்த லட்சியத்தை அடையமுடியும்.

நான் ஆரம்பத்திலேயே கூறியதைப் போல், வெளிப்படை யான காரணங்களால் ஏற்படும் பீதியை யெல்லாம் நாம் ஒழித்து விடவேண்டும். ஆனால், உள்ளேயிருக்கும் பகைவர்களைக் கண்டு நாம் எப்போதும் அஞ்சவேண்டும். காம வெறி, கோபம் முதலிய வற்றைக் கண்டு நாம் பீதியடைவது நியாயமே. நம் உள்ளே யுள்ள துரோகிகளை நாம் வென்றுவிட்டால், வெளிப்படையான காரணங்களால் ஏற்படும் பயமெல்லாம் தாமாகவே மறைந்து விடும். உடலை மையமாக வைத்துக்கொண்டே அத்தகைய பீதி யெல்லாம் சுற்றி வருகின்றன. எனவே, உடலில் உள்ள பற்றுதலை நாம் விட்டுவிட்டால், அத்தகைய பயமெல்லாம் மறைந்துவிடும். இவ்விதமாக, வெளிப் பயமெல்லாம் நமது சொந்தக் கற்பனையி லிருந்து உருவான ஆதாரமற்ற சரக்கே என்பதை நாம் காண் கிறோம். செல்வம், குடும்பம், உடல் முதலியவற்றில் உள்ள பாசத்தை நாம் உதறித் தள்ளிவிடும்போது, நமது இதயங்களில் அச்சத்திற்கு இடம் இராமற் போய்விடுகிறது. 'பூமியில் உள்ள சாதனங்களைத் துறந்துவிடுவதன் மூலம், நாம் அவற்றை அனு பவிக்கும் ஆனந்தத்தை அடைகிறோம்'* என்பது உயர்ந்த ஓர் உபதேசமாகும். செல்வம், குடும்பம், உடல் முதலியன இருந்த விடத்திலேயேதான் இருக்கும். அவற்றினிடத்தில் நமக்குள்ள மனப் போக்கைத்தான் நாம் மாற்றிக்கொள்ள வேண்டியவர்களாக இருக்கிறோம். இவையெல்லாம் நம்முடையவை அல்ல, கடவுளு டையவை. இந்த உலகத்தில் உள்ள எதுவும் நம்முடையது

* ஈசோபநிடதத்தில் உள்ள 'தேன த்யக்தேன புஞ்சீதா :' என்ற வாக்கியத் தின் பொருளையே காந்திஜி மேலே குறிப்பிட்டுள்ளார்.

அல்ல. நாமே கூட இறைவனுக்குச் சொந்தமானவர்களே. அப்படியிருக்க, நாம் ஏன் எவ்வித பயத்திற்கும் ஆளாகவேண்டும்? எனவே, 'நாம் பல சாதனங்களையும் அனுபவிக்கும்போது, அவற்றில் உள்ள பற்றுதலை நாம் விட்டுவிட வேண்டும்' என்று உபநிடதம் நமக்கு வழி காட்டுகிறது. அதாவது, அந்தச் சாதனங்கள் விஷயத்தில் நாம் சொந்தம் கொண்டாடக் கூடாது; அவை நமது மேற்பார்வையில் விடப்பட்டிருப்பதாக மாத்திரமே கருதவேண்டும். யாருடைய சார்பில் நாம் அவற்றை வைத்துக் கொண்டிருக்கிறோமோ, அவற்றை அபகரிக்க முற்படுவோரை எதிர்த்து அந்தச் சாதனங்களைக் காப்பாற்றுவதற்குத் தேவையான பலத்தையும், ஆயுதங்களையும் அவர் நமக்குக் கொடுப்பார். இவ்விதமாக, நாம் எஜமானர்களாக இருப்பதை விட்டுவிட்டு, நம்மை ஊழியர்களின் நிலைக்குத் தாழ்த்திக் கொண்டுவிட்டால், நம் காலடியில் உள்ள தூசியையும் காட்டிலும் நாம் தாழ்ந்தவர்கள் என்ற பணிவு நமக்கு ஏற்பட்டுவிட்டால், பின்னர் எல்லாப் பயமும் பனியைப்போல் இருந்த இடம் தெரியாமல் மறைந்துவிடும். பிறகு நாம் விவரிக்க முடியாத மன அமைதியை அடைந்து, சத்திய நாராயணனை (சத்தியமாகிய கடவுளை) நேருக்கு நேராகக் காண்போம்.

'எராவ்டா மந்திர்' – 7-ஆம் அத்தியாயம்

## 2

# ஆன்மாவைக் கொல்லும் பயம்

ஒரிஸ்ஸாவில் அதிகார வர்க்கத்தினரின் அட்டகாசங்களைக் கண்டு நடுங்கிக் கொண்டிருந்த விவசாயிகள் அடங்கிய கூட்டத்தில் காந்திஜி பேசியதன் சாரம் பின்வருமாறு:

நோயைக் காட்டிலும் பயம் அதிகக் கொடுமையானது. மனிதனைக் கண்டு அஞ்சும் மனிதன், மனிதன் என்ற நிலையிலிருந்தே வீழ்ச்சியடைந்து விடுகிறான். கடவுளிடம் மாத்திரமே பயப்படுங்கள்.

மலேரியா அல்லது மற்ற கொடிய நோய்களைக் காட்டிலும் பயம் மோசமானது. ஏனெனில், அந்த நோய்கள் உடலையே கொல்லுகின்றன; ஆனால் பயமோ, ஆன்மாவையே கொன்றுவிடுகிறது. பயத்தினால் பீடிக்கப்பட்ட ஒரு மனிதன் எக்காலத்திலும் கடவுளை அறிய முடியாது. கடவுளை அறிந்த ஒருவர், இறக்கும் தன்மையுள்ள மனிதனைக் கண்டு ஒருபோதும் அஞ்சமாட்டார். உங்களுடைய வாழ்விற்கே அபாயத்தை உண்டாக்குவதாக இருக்கும் பயத்திலிருந்து உங்களை விடுவித்துக் கொள்ளுங்கள்.

'எங் இந்தியா' – 22—12—1927

# 3

# பிரார்த்தனை ஒரு காமதேனு

[லண்டன் வட்டமேஜை மகாநாடு தோல்வியுற்ற பின், இங்கிலாந்தி லிருந்து திரும்பிய காந்திஜி பம்பாயிலேயே தங்கியிருந்தார். அரசாங்கத் துடன் கௌரவமான முறையில் சமரசம் செய்துகொள்ள மேலும் முயற்சிக்க வேண்டும் என்பதே காந்திஜியின் நோக்கமாகும். ஆனால், அவரது சமரச முயற்சியை வைஸ்ராய் நிராகரித்ததுடன், 1932 ஜனவரி 4-ஆம் தேதி காந்திஜியைக் கைது செய்யும்படியும் உத்தரவிட்டார். தாம் கைதியாவதற்கு முதல் நாள், அதாவது 3-ஆம் தேதி விடியற்காலம் 4 மணிக்கு நடந்த பிரார்த் தனைக் கூட்டத்தில், காந்திஜி மக்களுக்கு உருக்கமான செய்தியொன்றை விடுத்தார். அந்த நெருக்கடியான கட்டத்தில் மக்கள் செய்ய வேண்டிய புனித கடமையை காந்திஜி தமது செய்தியில் விளக்கியிருந்தார். அதன் விவரமே கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது:]

சில தினங்களாக இந்தப் பிரார்த்தனைகளில் நீங்கள் எனது சகாக்களாக இருந்து வருகிறீர்கள். இப்போது போராட்டம் மீண்டும் ஆரம்பிக்கப்பட்டுவிட்டதால், என்னை எந்த விநாடி யிலும் அதிகாரிகள் சிறைப்படுத்தி விடலாம். நான் சிறைக்குச் சென்றுவிட்டாலும், நீங்கள் தினந்தோறும் காலையிலும் மாலை யிலும் ஒழுங்காகப் பிரார்த்தனைகளைத் தொடர்ந்து வருவீர்கள் என்று நம்புகிறேன். தினந்தோறும் நீங்கள் செய்து தீரவேண் டிய ஒரு சடங்காக பிரார்த்தனை இருந்து வரட்டும். சுயத் தூய்மை யக்ஞத்தில் பிரார்த்தனைக்கு அதிகமான பங்கு உண்டு. அது உங்களுக்கு உண்மையில் ஒரு காமதேனுவாக இருந்து கொண்டு, உங்களுக்குத் தெளிவான வழி காட்டுவதை நீங்கள் காண்பீர்கள். எவ்வளவுக்கு நீங்கள் அதில் அதிகமாக ஈடுபடு கிறீர்களோ, அவ்வளவுக்கு நீங்கள் தினசரி வாழ்க்கையில் அதிக அஞ்சாமையைக் கைக்கொள்ளும் ஆற்றலைப் பெறுவீர்கள். சுயத் தூய்மைப் பாதையின் அறிகுறியே அஞ்சாமையாகும். சுயத் தூய்மைப் பாதையில் செல்லும் ஓர் ஆடவரையோ அல்லது பெண் ணையோ பயம் ஆட்கொண்டிருப்பதை நான் பார்த்ததில்லை. பொதுவாக மனிதரின் மனத்தை இரண்டு விதமான பயம் ஆட் கொள்ளுகிறது - மரண பயமும், ஸ்தூல உடைமைகளை இழக்க நேருமோ என்ற பயமும்தான். பிரார்த்தனையில் ஈடுபடும், சுயத் தூய்மை உள்ள ஒரு மனிதன் மரண பயத்தை அறவே ஒழித்துவிடுவான்; தனக்கு வரப்பிரசாதமளிக்கும் ஒரு நண் பனைப் போல் மரணத்தைத் தழுவுவான். லௌகிக உடைமை களையெல்லாம் நீர்க்குமிழிகளைப் போல் தோன்றி உடனே மறை பவை என்று கருதுவான். துன்பமும் வறுமையும் நாட்டு மக் களைச் சூழ்ந்து கொண்டிருக்கையில், உணவுக்கு வழியின்றி கோடிக்கணக்கான மக்கள் தவித்துவருகையில், செல்வத்தை வைத்துக்கொள்ள தனக்கு உரிமையில்லை என்று அவன் கருது வான். இந்த இரண்டு விதமான பயத்தையும் ஒழித்தவனை,

உலகத்தில் உள்ள எந்த சக்தியும் ஜயிக்க முடியாது. ஆனால், அத்தகைய நிலை ஒருவனுக்கு ஏற்பட வேண்டுமாயின், அவன் வெளிப் பகட்டுக்காகப் பிரார்த்தனை செய்யக் கூடாது, இதய பூர்வமாகப் பிரார்த்தனை செய்ய வேண்டும். அந்தப் பிரார்த்தனை நம்மை நாளுக்கு நாள் கடவுளுக்கு அதிக அருகில் கொண்டு செல்லுவதாக இருக்க வேண்டும். பிரார்த்தனையில் ஈடுபாடுள்ள ஒரு மனிதனின் மனத்தில் உள்ள ஆசை நிறைவேறுவது நிச்சயமாகும். அவன் மனத்தில் ஒழுங்கீனமான ஆசை ஒரு காலத்திலும் ஏற்படாது. இந்தச் சடங்கை நீங்கள் தொடர்ந்து வாருங்கள். நீங்கள் உங்களுடைய நகரில் மாத்திரமல்ல, தேசம் முழுவதுமே ஒளிவீசும்படி செய்வீர்கள். இந்தச் சுருக்கமான பிரார்த்தனை உங்கள் இதயத்தில் நிலைத்து நிற்குமென நம்புகிறேன்.

'எங் இந்தியா' – 7—1—1932

## 4
## தைரியமற்ற கல்வி

தைரியமற்ற கல்வி ஓர் அரக்குப் பொம்மைக்குச் சமமாகும். அது பார்ப்பதற்கு மிகவும் அழகாக இருக்கும். ஆனால், அதன் மீது சிறிது உஷ்ணம் பட்டாலும் அது உருகிவிடும்.

—'எங் இந்தியா' – 12—7—1929

## 5
## பிரம்மச்சரியமும் கற்பும்

[ பிரம்மச்சரியம், கற்பு, புலனடக்கம், புலன் நுகர்ச்சி, பிரஜோற்பத்திக் கட்டுப்பாடு, கருத்தடை முதலிய பல விஷயங்களைப் பற்றியும் காந்திஜியின் பிரசங்கங்களும், கட்டுரைகளும் மகாத்மா காந்தி நூல்கள் 4–ஆம் தொகுப்பில் 280-இலிருந்து 517–ஆம் பக்கம் வரையில் விவரமாகக் கொடுக்கப்பட்டுள்ளன. அப்பழுக்கற்ற காந்திஜியைப் பற்றிக்கூட சிலர் பொய் வதந்திகளைப் பத்திரிகைகளில் பிரசுரிக்கத் தயங்கவில்லை. காந்திஜி சிற்றின்ப வாழ்க்கையில் ஆர்வம் உள்ளவர் என்றும் சில பத்திரிகைகள் துஷ்பிரசாரம் செய்யலாயின. அத்தகைய பொய்க் கூற்றுகளுக்கு இடம் கொடுக்கக் கூடாது என்று பல அன்பர்கள் காந்திஜியை வற்புறுத்திக் கேட்டுக்கொண்டதற்கிணங்க, அக் குற்றச்சாட்டுகளையெல்லாம் மறுத்து 'எனது வாழ்க்கை' என்ற மகுடத்தின் கீழ் காந்திஜி எழுதிய கட்டுரையே இங்கே கொடுக்கப்பட்டிருக்கிறது. ]

'பம்பாய் கிரானிகிள்' பத்திரிகையின் அலகாபாத் நிருபர் அப்பத்திரிகைக்குக் கீழ்வரும் செய்திகளை அனுப்பியுள்ளார்:

"காந்திஜியைப் பற்றி பார்லிமெண்டு வட்டாரங்களில் நடந்துவரும் பேச்சுக்களைப் பற்றிய திடுக்கிடும் தகவல்கள் வெளியாகியுள்ளன. பிரிட்டிஷ் சரித்திராசிரியரான ஸ்ரீ எட்வர்ட் தாம்ஸன் சமீபத்தில் அலகாபாத்திற்கு விஜயம் செய்திருந்தார். காந்திஜியைப் பற்றி இங்கிலாந்தில் நிலவிவரும் விசித்திரமான மனப்போக்கைக் குறித்து அவர் சில தகவல்களை வெளியிட்டார். இங்கு தாம் சந்தித்த சில தலைவர்களிடமும் ஸ்ரீ தாம்சன் அவ்விவரங்களைக் கூறினர்.

"அதில் ஒன்று, காந்திஜியின் 'சிற்றின்ப வாழ்க்கையை'ப் பற்றியதாகும். அவ்விஷயமாகப் பல கதைகள் கூறப்படுகின்றன. இனிமேல் காந்திஜியை ஒரு மகான் என்று யாரும் கருத முடியாது என்பதே அக் கதைகளின் விளைவாகும்

காந்திஜியின் 'சிற்றின்ப வாழ்க்கையை'ப் பற்றிய கருத்துக்கள், சில மராத்திப் பத்திரிகைகளில் வெளியான விவரங்களையே அடிப்படையாகக் கொண்டுள்ளன என்பது ஸ்ரீ தாம்சனின் எண்ணமாகும். இவ்விஷயமாக அவர் சர் தேஜ் பகதூர் சாப்ரு, பண்டித ஜவாஹர்லால் நேரு, ஸ்ரீ பி. என். சாப்ரு முதலியவர்களிடம் பேசியதாகத் தெரிகிறது. அவ்விவரங்களை அவர்கள் கடுமையாகக் கண்டித்து மறுத்துவிட்டார்கள்.

"ஸ்ரீ தாம்சன் இங்கிலாந்திலிருந்து புறப்படுமுன் பார்லிமெண்டு அங்கத்தினர்கள் பலரைச் சந்தித்ததாகத் தெரிகிறது. ஸ்ரீ தாம்சன் அலகாபாத்திலிருந்து புறப்பட்டுச் செல்லுமுன், பண்டித நேருவின் யோசனைக்கு இணங்க பார்லிமெண்டு அங்கத்தினரான ஸ்ரீ கிரீன்உட்டிற்கு ஒரு கடிதம் எழுதியுள்ளார். காந்திஜியைப் பற்றிய கதைகள் முற்றிலும் ஆதாரமற்றவை என்று அக்கடிதத்தில் அவர் குறிப்பிட்டுள்ளார்."

ஸ்ரீ தாம்சன் அன்பு கூர்ந்து சேவா கிராமத்திற்கு விஜயம் செய்தார். அந்த நிருபர் கூறியுள்ள விவரங்கள் எல்லாம் அநேகமாக சரிதான் என்றும் அவர் உறுதிப்படுத்தினர்.

அந்தக் குற்றச்சாட்டிற்குத் தெளிவாகப் பதில் கூற வேண்டியது அவசியமாகும். இரண்டு நாட்களுக்கு முன் நான்கு அல்லது ஐந்து குஜராத்தியர்கள் கையெழுத்திட்டு எனக்கு ஒரு கடிதம் அனுப்பியிருந்தனர். அவர்கள் தங்களுடைய கடிதத்துடன் ஒரு பத்திரிகையையும் அனுப்பியுள்ளனர். என்னை எவ்வளவு இழிவான முறையில் சித்திரிக்க முடியுமோ அவ்வளவு தூரம் சித்திரிப்பதொன்றே அப்பத்திரிகையின் லட்சியம் என்று தோன்றுகிறது. அதன் மகுடத்திலிருந்து அது ஹிந்துக்களின் ஸ்தாபனத்திற்காக உழைக்கும் பத்திரிகை என்பது தெரிகிறது. எனக்கு விரோதமாகக் கூறப்பட்டுள்ள குற்றச்சாட்டுகள், நான் ஏற்கனவே ஒப்புக் கொண்டுள்ளவற்றிலிருந்தே பெரிதும் எடுக்கப்பட்டுள்ளன. எனினும், நான் கூறிய நிலையிலிருந்து அவை திரிக்கப்பட்டுள்ளன. என்மீது சாட்டப்பட்டுள்ள பல்வேறு குற்றச்சாட்டுகளிலும் நான் சிற்றின்ப இச்சையுள்ளவன் என்பது தான் மிகவும் குறிப்பிடத்தக்கதாக இருக்கிறது. எனது சிற்றின்ப இச்சையை மறைக்கும் ஒரு போர்வையாக, எனது பிரம்மச்சரியம் இருந்து வருகிறதாம். உடம்பைப் பிடித்துவிடுவதிலும், வைத்திய

ஸ்நானம் கொடுப்பதிலும் டாக்டர் சுசீலா நய்யார் இங்கே இருப்பவர்களிலேயே மிகவும் தேர்ச்சி பெற்றவர். எனக்கு அவர், அவ்விரண்டு கைங்கர்யங்களும் செய்துவரும் 'குற்றத்திற்காக', பாவம், அவரது பெயரைச் சந்தியில் இழுத்திருக்கிறார்கள். இதையெல்லாம் அறிந்து கொண்டுதான் தீரவேண்டும் என்ற ஆசையுடையவர்கள், மேற்கண்ட காரியங்களில் ரகசியம் எதுவும் இல்லை என்பதைத் தெரிந்துகொள்ள வேண்டும். அவற்றைச் செய்து முடிக்க ஒன்றரை மணிக்கு மேலாகின்றது. அப்போது கூட நான் மகாதேவ், பியாரிலால் அல்லது எனது சக ஊழியர்களுடன் எனது அலுவல்களைக் கவனித்துக் கொண்டுதான் இருக்கிறேன்.

எனக்குத் தெரிந்தவரையில், நான் தீண்டாமை ஒழிப்பு இயக்கத்தில் தீவிரமாக ஈடுபட்டதிலிருந்தே, இந்தக் குற்றச்சாட்டுகள் ஆரம்பமாயின. தீண்டாமை இயக்கம் காங்கிரஸ் அலுவல் திட்டத்தில் சேர்க்கப்பட்டு, அவ்விஷயமாக நான் கூட்டங்களில் பேசத் தொடங்கியதிலிருந்தும், கூட்டங்களிலும், ஆசிரமத்திலும் ஹரிஜனங்கள் இருக்கவேண்டும் என்று வற்புறுத்தியதிலிருந்துமே அந்தக் குற்றச்சாட்டுகள் ஆரம்பமாயின. அதுவரையில் என்னுடன் நட்புக் கொண்டு எனக்கு உதவியாக இருந்துவந்த சில சனாதனிகள், நான் ஹரிஜன் இயக்கத்தில் ஈடுபட்டதிலிருந்து பிய்த்துக்கொண்டு என்னைத் தூற்றத் தொடங்கினார்கள். தூற்றும் இந்தக் கோஷ்டியுடன் பின்னர் ஓர் ஆங்கிலேயரும் சேர்ந்துகொண்டார். நான் பெண்களுடன் களங்கமின்றி சகஜமாகப் பழகுவதை அந்த ஆங்கிலேயர் சுட்டிக் காட்டி, நான் 'மகாத்மா' அல்ல என்றும், துராத்மா என்றும் தூற்ற முற்பட்டார். இந்தக் 'கோஷ்டி கான'த்தில் ஒன்றிரண்டு பிரபல இந்தியர்களும் கலந்து கொண்டார்கள். லண்டன் வட்டமேஜை மகாநாடு நடந்தபோது அமெரிக்கப் பத்திரிகைகள் என்னைப்பற்றிக் கொடுமையான கேலிக் கூத்துகளை வெளியிட்டன. எனது சௌகரியங்களைக் கவனித்து வந்த மீராபாய் அப் பத்திரிகைகளின் அத்தகைய தாக்குதல்களுக்கு இலக்காக நேர்ந்தது. இந்தக் குற்றச்சாட்டுகளுக்குப் பின்னணியில் இருப்பவர்கள் யார் என்பதை ஸ்ரீ தாம்சன் அறிவார். சாபர்மதி ஆசிரமத்தைச் சேர்ந்தவர்களில் ஒருவரான பிரேமபென் கண்டக்கிற்கு நான் எழுதிய கடிதங்களும் எனது 'துன்மார்க்கத்தை' நிரூபிப்பதற்கு உபயோகப்படுத்தப்பட்டுள்ளன. அப்பெண் ஒரு பட்டதாரியாவார்; அவர் அப்பழுக்கற்றவர் என்று நிரூபிக்கப்பட்ட தொண்டர். பிரம்மச்சரியத்தைப் பற்றியும், மற்ற விஷயங்களைப் பற்றியும் அவர் கேள்விகள் கேட்பது வழக்கம். அவருக்கு நான் விவரமாகப் பதில்கள் அனுப்பினேன். அந்தப் பதில்கள் பொதுவாக எல்லோருக்கும் உபயோகமாக இருக்கும் என்று அவர் நினைத்தார்; என் அனுமதி பெற்று அவற்றைப் பிரசுரித்தார். அவை சிறிதும் மாசற்றவை என்பதும் தூய்மையானவை என்பதுமே என் அபிப்பிராயமாகும்.

இதுவரையில் இந்தக் குற்றச்சாட்டுகளை யெல்லாம் நான் பொருட்படுத்தவில்லை. தாம்சனுக்கும் எனக்கும் நடந்த பேச்சும், குஜராத்தி அன்பர்களின் வேண்டுகோளும், அக் குற்றச்சாட்டுகளை மறுக்கும்படி என்னைத் தூண்டியிருக்கின்றன. என்னைப்பற்றி எத்தனையோ அவதூறுகள் கூறப்படுகின்றன என்றும், உதாரணத்திற்காகவே ஒரு பத்திரிகையை அனுப்பியிருப்பதாகவும் குஜராத்தி அன்பர்கள் கூறுகின்றனர்.

இந்த வாழ்க்கையில் என் சம்பந்தமான ரகசியங்கள் எதுவுமே இல்லை. எனது பலவீனங்களை நான் ஒப்புக்கொண்டிருக்கிறேன். எனக்கு சிற்றின்ப ஆசை இருக்குமாயின், அதை நான் தைரியமாக ஒப்புக்கொண்டிருப்பேன். என் சொந்த மனைவியுடன்கூட நான் சிற்றின்பத் தொடர்பை வெறுக்கத் தொடங்கி, என்னை நான் நன்கு சோதனை செய்த பிறகுதான் 1906-இல் நான் பிரம்மச்சரிய விரதம் எடுத்துக்கொண்டேன். அதுவும், தேசத்திற்கு மேலும் சிறந்த முறையில் தொண்டு செய்ய வேண்டும் என்பதற்காகவே அந்த விரதத்தை மேற்கொண்டேன். அன்றிருந்தே எனது பகிரங்க வாழ்க்கை ஆரம்பமாயிற்று. 'எங் இந்தியா'விலும், 'நவஜீவனி'லும் நான் குறிப்பிட்டுள்ள சந்தர்ப்பங்களைத் தவிர, மற்றப்படி நான் கதவைத் தாளிட்டுக்கொண்டு ஓரிடத்தில் என் மனைவியுடனோ அல்லது மற்றப் பெண்களுடனோ தூங்கியதாகவோ அல்லது தங்கியிருந்ததாகவோ எனக்கு ஞாபகமில்லை. பத்திரிகைகளில் நான் குறிப்பிட்ட அந்த இரவுகள் என் சம்பந்தப்பட்டவரையில் பயங்கரமான இரவுகளாகும். நான் அடிக்கடி கூறியிருப்பதைப் போல், என்னையும் மீறி கடவுள் என்னைக் காப்பாற்றினர். என்னிடம் நல்லொழுக்கம் இருப்பதாக நான் பெருமைப்பட்டுக் கொள்ளவில்லை. கடவுள் எனக்கு நல்லதையெல்லாம் கொடுத்து, அவருக்குத் தொண்டு புரிவதற்காக என்னைக் காப்பாற்றியுள்ளார்.

நான் பிரம்மச்சரிய விரதத்தை மேற்கொண்டதிலிருந்து எங்களுடைய விடுதலை ஆரம்பமாயிற்று. எனது மனைவி சுதந்திரம் அடைந்தாள், அதாவது அவளது கணவனும் எஜமானனுமான என் ஆதிக்கத்திலிருந்து அவள் விடுதலை பெற்றாள். என் இச்சைக்கு நான் அடிமையாக இருந்தேன். அந்த இச்சையை அவள் திருப்தி செய்ய வேண்டியிருந்தது. அத்தகைய அடிமைத் தனத்திலிருந்து நானும் விடுதலை அடைந்தேன். என் மனைவியினிடத்தில் எனக்கு எவ்வளவு கவர்ச்சி இருந்ததோ அதே கவர்ச்சி, வேறு எந்தப் பெண்ணிடத்திலும் எனக்கு இல்லை. அவளது கணவன் என்ற முறையில் நான் அவளிடம் உண்மையாகவும் விசுவாசத்துடனும் இருந்தேன். மற்ற எந்தப் பெண்ணிடமும் நான் அடிமையாகமாட்டேன் என்று என் தாயாரின் முன்னிலையில் நான் செய்த பிரதிக்ஞையையும் உண்மையுடன் பின்பற்றினேன். எனது பிரம்மச்சரியமானது, நான் ஒவ்வொரு பெண்ணையும் தாயாகவே கருதும்படி செய்தது. பெண்ணை நான் தெய்விகமாகக் கருதியதால், சிற்றின்ப ஆசைக்கே இடமில்லை.

எனவே, ஒவ்வொரு பெண்ணையும் நான் சகோதரியாகவோ அல்லது மகளாகவோ கருதலானேன்.

போனிக்ஸில் என் பக்கத்தில் நிறைய பெண்கள் இருந்தனர். அவர்களில் பலர் என் சொந்தக்காரர்களாவர். 'ஆசை வார்த்தைகள்' கூறி அவர்களையெல்லாம் நான் தென்னாப்பிரிக்காவுக்கு அழைத்துச் சென்றிருந்தேன். மற்றவர்கள் என் சக ஊழியர்களின் மனைவிகள் அல்லது உறவினர்கள். அவர்களுள், வெஸ்ட் குடும்பத்தினரும் மற்றும் பலரும் இருந்தனர். வெஸ்ட், அவரது சகோதரி, அவரது மனைவி, அவரது மாமியார் முதலியவர்களே வெஸ்டு குடும்பத்தைச் சேர்ந்தவர்களாவர்.

புதிய நல்ல விஷயம் எதையும் நான் எனக்கு மாத்திரம் ஏகபோகமாக வைத்துக்கொள்ள முடியாது. அது என் வழக்கமாகும். எனவே, போனிக்ஸில் குடியேறியவர்கள் யாவருக்கும் அவர்களுடைய அங்கீகாரத்திற்காக பிரம்மச்சரியத்தை சமர்ப்பித்தேன். அவர்கள் யாவரும் அதை அங்கீகரித்தார்கள். சிலர் அந்த விரதத்தை எடுத்துக் கொண்டு, உண்மையாகவும் இருந்தார்கள். என் பிரம்மச்சரியம் வைதிக சட்டங்களுக்கு உட்பட்டதல்ல. அவசியமான சந்தர்ப்பங்களில், நானே எனது சொந்த விதிகளை வகுத்துக்கொண்டேன். பிரம்மச்சரியத்தை ஒழுங்காக அனுஷ்டிப்பதற்கு, பெண்ணுடன் எல்லாத் தொடர்பையும் தவிர்க்கவேண்டும் என்பதை நான் ஒருபோதும் நம்பியதில்லை. பெண்ணிடம் எவ்வளவு களங்கமற்றிருந்தாலும் கூட, எல்லாத் தொடர்பையும் தவிர்க்க வேண்டும் என்ற கட்டுப்பாடு, இயற்கைக்கு விரோதமான ஒரு விஷயமாகும். அத்தகைய கட்டுப்பாடு மதிப்பிற்கு உரியதல்ல. எனவே, தொண்டிற்காக அவர்களுடன் இயற்கையான தொடர்புகள் வைத்துக் கொள்ளுவது, ஒருபோதும் தடுக்கப்படவில்லை.

தென்னாப்பிரிக்காவில், ஐரோப்பியர்களும் இந்தியர்களுமான பல சகோதரிகளின் நம்பிக்கைக்கு நான் பாத்திரனாக இருந்தேன். சட்ட மறுப்பு இயக்கத்தில் கலந்துகொள்ளும்படி தென்னாப்பிரிக்காவில் உள்ள இந்திய சகோதரிகளை நான் அழைத்தபோது, நானும் அவர்களுள் ஒருவனாகவே இருந்தேன். அதன் பலனாக, பெண் குலத்திற்குத் தொண்டு செய்ய நான் விசேஷத் தகுதி வாய்ந்தவன் என்பதையும் நான் கண்டு கொண்டேன். அதிகம் கூறுவானேன்? நான் இந்தியாவிற்குத் திரும்பி வந்த பின், அதிக சீக்கிரத்தில் இந்தியப் பெண்களிடையே நானும் ஒருவனானேன். அவர்கள் இதய பூர்வமாக என்னை எளிதில் நம்பியது, எனக்கு மகிழ்ச்சியையும் ஆச்சரியத்தையும் கொடுத்தது. தென்னாப்பிரிக்காவில் முஸ்லிம் சகோதரிகள் என் முன் ஒருபோதும் முகமூடியுடன் இருந்ததில்லை. இங்கேயுள்ள முஸ்லிம் சகோதரிகளும் என் முன் முகங்களை மூடிக்கொண்டதில்லை. ஆசிரமத்தில் என்னைச் சுற்றிப் பெண்கள் இருக்கும் போதே நான் தூங்குகிறேன். நான் இருக்குமிடத்தில், எல்லா

விதத்திலும் தாங்கள் பத்திரமாக இருப்பதாகவே அவர்கள் கருதுகிறார்கள். சேவாகிராம ஆசிரமத்தில் ரகசியம் என்பதே இல்லை என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும்.

பெண்கள் விஷயத்தில் எனக்கு சிற்றின்பக் கவர்ச்சி இருக்குமாயின், இந்த வயதில்கூட, நான் பலதார மணத்தில் ஈடுபடும் தைரியம் எனக்கு உண்டு. ரகசியமாகவோ அல்லது பகிரங்கமாகவோ மனம் போனபடி காதல் கொள்ளுவதில் எனக்கு நம்பிக்கை இல்லை. மனம் போனபடி பகிரங்கமாகக் காதல் கொள்ளுவதை, நாயின் காதலைப் போலவே நான் கருது கிறேன். தவிர, ரகசியக் காதல் கோழைத்தனமானது.

எனது அகிம்சையை சனாதனி ஹிந்துக்கள் வெறுக்கலாம். என்னுடைய செல்வாக்கின் கீழ் உள்ள ஹிந்துக்கள் கோழை களாகிவிடுவார்கள் என்று அவர்களில் பலரும் கருதுகிறார்கள் என்பதை நான் அறிவேன். என் செல்வாக்கிற்கு உட்பட்ட எந்த மனிதனும் கோழையாகிவிட மாட்டான் என்பதை நான் அறிவேன். எவ்வளவு விருப்பமோ அவ்வளவு தூரம் அவர்கள் எனது அகிம்சையைத் தூற்றலாம். ஆனால், கலப்பற்ற பொய் களைக் கூறுவதன் மூலம், அவர்கள் தங்களுக்கோ அல்லது ஹிந்து சமயத்திற்கோ நன்மை செய்பவராக மாட்டார்கள்.

'ஹரிஜன்' - 4—11—1939

## 5. வயிற்றைக் கட்டுதல்

### 1

# ருசி பார்க்க வேண்டாம்

1930-இல் எராவ்டா மத்திய சிறையிலிருந்து சாபர்மதி ஆசிரமவாசிகளுக்கு காந்திஜி எழுதிய வாரக் கடிதத்தின் விவரம் பின் வருமாறு:

*பிரம்மச்சரியத்தை அனுசரிப்பதற்கும் நாவின் ருசியைக் கட்டுப்படுத்துவதற்கும் நெருங்கிய சம்பந்தம் உண்டு. ஒருவர் நாவின் ருசியை அடக்குவதில் வெற்றி பெற்றுவிட்டால், அவருக்கு பிரம்மச்சரியத்தை மேற்கொள்ளுவது எளிதாகிவிடுகிறது என் பதை நான் அனுபவத்தில் கண்டு கொண்டுள்ளேன். பண்டைய காலத்திலிருந்து அங்கீகரிக்கப்பட்ட மதிப்பு வாய்ந்த விதிகளில், வயிற்றைக்கட்டுப்படுத்தல் காணப்படவில்லை. எனவே, பெரிய ரிஷிகள் கூட பிரம்மச்சரியத்தில் வெற்றிபெறுவது கடினமாக இருந்ததற்கு அது ஒரு காரணமாக இருந்திருக்கக்கூடும் அல்லவா? ஆனால் சத்தியாக்கிரக ஆசிரமத்தில் வயிற்றைக் கட்டுப்படுத்துவதை தனிப்பெரும் ஒரு விதியாக நிர்ணயித்*

தோம். எனவே, அதைப்பற்றித் தனியாகவே ஆலோசிக்க வேண்டும்.

நாம் மருந்தை உட்கொள்ளுவதைப் போலவே உணவை உட்கொள்ள வேண்டும். அதாவது உணவு நாவுக்கு ருசியாக இருக்கிறதா அல்லது இல்லையா என்பதைப்பற்றி சிந்திக்காமலேயே உட்கொள்ள வேண்டும்; உடலுக்கு எவ்வளவு தேவையோ அவ்வளவு மாத்திரமே சாப்பிட வேண்டும். மருந்தை மிகக் குறைவாகச் சாப்பிட்டால் அதனால் பலன் ஏற்படாமலே போகிறது அல்லது பூரண பலன் ஏற்படுவதில்லை; மிகவும் அதிகமாக உட்கொண்டால், உடலுக்குத் தீங்கு நேருகிறது. உணவு விஷயமும் அதுபோலவேதான். எனவே, நாவுக்கு ருசியாக இருக்கிறது என்பதற்காக ஒன்றைச் சாப்பிடுவது அந்த விதியை மீறுவதாகும். அது போலவே, நாவுக்கு ருசியாக இருப்பதை மிதமிஞ்சி சாப்பிடுவதும் அவ்விதிக்கு முரணாகும். உணவின் ருசியை அதிகப்படுத்துவதற்காகவோ, அல்லது அது 'சப்'பென்று இருந்துவிடக் கூடாது என்பதற்காகவோ உணவில் உப்பு சேர்த்துக் கொள்ளுவதும் விதியை மீறுவதாகும் என்பதைச் சொல்லவேண்டியதில்லை. எனினும், ஆரோக்கியத்திற்கு அவசியமாக இருக்கும்போது உணவுடன் ஓரளவு உப்பைச் சேர்த்துக் கொள்ளுவது விதியை மீறுவதாகாது. ஆரோக்கியத்திற்கு அவசியம் என்று கூறிக் கொண்டு, உப்பையோ அல்லது வேறு சாதனத்தையோ உணவுடன் சேர்த்துக் கொள்ளுவது கலப்பற்ற பாசாங்கேயாகும்.

இதே ரீதியில் நாம் ஆலோசித்துப் பார்த்தால், நாம் இதுவரையில் கொண்டாட்டத்துடன் உபயோகித்து வந்த பல உணவுச் சாதனங்களையும் கைவிடவேண்டியிருக்கும். ஏனெனில், உடலின் ஊட்டத்திற்கு அவையெல்லாம் அவசியமில்லை. உண்பதற்கான பல பல சாதனங்களையும் ஒருவர் அவ்விதம் கைவிட்டுவிட்டால், அவருக்கு இயல்பாகவே தன்னடக்கம் ஏற்பட்டுவிடும். இவ்விஷயத்தில் அற்ப கவனமே செலுத்தப்பட்டு வந்திருப்பதால், மேற்கண்ட விதிக்கு இணங்க உணவை உட்கொள்ளுவது மிகவும் கஷ்டமான ஒரு விஷயமாகி யிருக்கிறது.

பெற்றோர்கள் தங்களுடைய குழந்தைகளின் மீதுள்ள அன்பை விபரீதமான முறையில் காட்ட முற்படுகிறார்கள். அதாவது பல்வேறு தினுசான உணவுகளைக் குழந்தைகளுக்குக் கொடுத்து அவர்களுடைய உடல் நிலையை நாசப்படுத்துவதுடன், அவர்களுக்கு செயற்கையான ருசிகளையும் உண்டாக்கிவிடுகிறார்கள். எனவே, அவர்கள் பெரியவர்களாகும் போது நோயுற்ற உடல்களையும், விபரீதமான ருசிகளையும் உடையவர்களாகிவிடுகிறார்கள். சிறுவயதில் விருப்பப்படி பல்வேறு உணவுகளையும் சாப்பிடுவதன் விபரீத விளைவினால், நாம் பிறகு அடிக்கடி தொல்லைகளுக்கு உள்ளாகிறோம். நாம் அவ்விஷயமாகப் பெருந்தொகையை வீணாக்குவதுடன், வைத்தியருக்கும் எளிதில் இரையாகி விடுகிறோம்.

நம்மில் பெரும்பாலோரும், புலன்களைக் கட்டுப்படுத்தி வைப்பதற்குப் பதிலாக அவற்றிற்கு அடிமைகளாகிவிடுகிறோம். ஆரோக்கியமான ஒரு மனிதரை தாம் ஒருபோதும் பார்த்ததில்லை என்று, அனுபவம் வாய்ந்த டாக்டர் ஒரு தடவை கூறினர். திட்டத்திற்கு மேல் சாப்பிட்ட ஒவ்வொரு தடவையிலும் உடலுக்குத் தீங்கு நேருகிறது. அவ்விதம் நேரும் தீங்கிற்கு, உண்ணாவிரதத்தின்மூலம் மாத்திரமே ஓரளவு பரிகாரம் செய்து கொள்ள முடியும்.

நான் இவ்விதம் கூறியிருப்பதையெல்லாம் கண்டு யாரும் திகிலடையத் தேவையில்லை; அல்லது மனம் சோர்வுற்று தங்களுடைய முயற்சியைக் கைவிட்டுவிட வேண்டியதுமில்லை. ஒரு பிரதிக்ஞையை எடுத்துக் கொண்டால், ஆரம்பத்திலேயே அதைப் பூரணமாக நிறைவேற்றுவதற்கு நமக்கு ஆற்றல் இருக்க வேண்டும் என்பதில்லை. அதைப் பூரணமாக நிறைவேற்ற மனத்திலும், வார்த்தையிலும், செயலிலும் நாம் இடைவிடாது யோக்கியப் பொறுப்புடன் முயற்சிக்க வேண்டும் என்பதே அதன் அர்த்தமாகும். ஏதோ பாசாங்கு செய்து கொண்டு நம்மை நாமே ஏமாற்றிக்கொள்ளும் பழக்கத்தை நாம் மேற்கொண்டு விடக் கூடாது. நம்முடைய வசதிக்காக ஒரு லட்சியத்தை இழிவு படுத்துவதோ அல்லது அதன் மதிப்பைக் குறைப்பதோ, உண்மைக்கு மாருன வழக்கம் என்பதுடன், அது நம்மை நாமே இழிவு படுத்திக் கொள்ளுவதுமாகும். ஒரு லட்சியத்தை நன்கறிந்து, பின்னர் எவ்வளவு கஷ்டமாக இருப்பினும், அதை அடைய மகத்தான முயற்சி செய்வதே புருஷார்த்தமாகும். ஆண்மையுடன் கூடிய முயற்சி அதுதான். முக்கியமான விதிகளை எப்போதும் எள்ளளவும் குற்றம் குறையின்றி பூரணமாக நிறைவேற்றுபவருக்கு, இந்த உலகில் செய்ய வேண்டிய வேறு அலுவல் எதுவும் இல்லை. அவர்தான் பகவான், அப்பழுக்கற்ற நிறை மனிதன்; அவர்தான் யோகி.

பணிவுடன் சத்தியத்தை நாடும் நாம் மெதுவாகவும், ஆனல் உறுதியாகவும் முயற்சி செய்யவேண்டும். காலம் செல்லச் செல்ல கடவுளின் அருளினல் அந்த முயற்சி வெற்றி பெறுவது நிச்சயம். எல்லாவற்றிற்கும் மேலான பரம்பொருளை உணர்ந்த பின், செயற்கை ருசிகள் எல்லாம் மறைந்துவிடும்.

இருபத்துநான்கு மணி நேரமும் நாம் உணவையே நினைத்துக் கொண்டிருக்கக் கூடாது. நாம் இடைவிடாது கண்காணிப்புடன் இருந்தால், நாம் மிதமிஞ்சி எப்போது சாப்பிடுகிறோம், உடலைப் பாதுகாப்பதற்காக மாத்திரம் எப்போது சாப்பிடுகிறோம் என்பதை விரைவில் அறிந்து கொள்ளுவோம். இதைக் கண்டு கொண்ட பின், நாம் திட்டத்திற்கு மேல் சாப்பிடுவதில்லை என்று திடமான உறுதி கொள்ள வேண்டும். இந்தக் கொள்கையை அனுசரிப்பதற்கு, பொதுவான சமையல் அறை மிகவும் உதவியாக இருக்கும். சமையல் பொதுவாக இருந்தால் ஒவ்வொரு

நாளும் சமையல் திட்டத்தைப் பற்றி யோசிக்க வேண்டிய அவசியம் நமக்கு இராது அல்லவா? அத்துடன், மனத் திருப்தியுடனும் நன்றியுடனும் மிதமான உணவை மாத்திரம் நாம் சாப்பிடலாம். பொதுச் சமையல் அறை நிர்வாகிகள் நமது பளுவைக் குறைத்து, நாம் மிதமான உணவு உட்கொள்ளும் விதியை மீறிவிடாமல் கண்காணிப்பவர்களாகவும் இருக்கிறார்கள். அவர்கள் நமக்கு உபசாரம் செய்ய மாட்டார்கள். நாம் நமது உடலை, தொண்டு புரிவதற்குரிய தகுந்த கருவியாக வைத்துக் கொள்ளுவதற்கு உதவியளிக்கும் உணவை மாத்திரமே அவர்கள் தயாரிப்பார்கள். இந்தத் துறையில் நாம் உன்னத லட்சியத்தை அடையும்போது சூரியனே நமது சமையற்காரராக இருப்பார். ஆனால், அந்த ஆனந்தமான நிலை நமக்கு இன்னும் வெகு, வெகு தொலைவில் இருக்கிறது என்பதை நான் அறிவேன்.

**'எராவ்டா மந்திர்' — 4-ஆம் அத்தியாயம்**

## 6. திருடாமையும் உடைமைகளைத் துறத்தலும்

### 1

## திருடாமை

**1930**-இல் எராவ்டா சிறையிலிருந்து சாபர்மதி ஆசிரமவாசிகளுக்குக் காந்திஜி எழுதிய வாரக் கடிதத்தின் விவரம் பின்வருமாறு :

இப்போது நாம் திருடாமை விரதத்திற்கு வருகிறோம். முந்திய இரண்டு விரதங்களைப் போல் இதுவும் சத்தியத்தில் அடங்கி யிருக்கிறது. சத்தியமும் அன்பும் ஒன்றே தான். எனினும், சத்தியத்தில் நான் அதிக ஈடுபாடு உள்ளவனாக இருக்கிறேன். மகோன்னதமான சத்தியம் தனியாக நிற்கவல்லது. சத்தியம் தான் இறுதி லட்சியமாகும்; அன்பு, அந்த லட்சியத்தை அடைவதற்கான வழியே. அன்பு விதியை நாம் பின்பற்றுவது கஷ்டமாக இருப்பினும், அன்பு அல்லது அகிம்சை என்றால் என்ன என்பதை நாம் அறிவோம். ஆனால், சத்தியம் சம்பந்தப்பட்டவரையில் அதன் மிகச் சிறியதொரு பகுதியையே நாம் அறிவோம். அகிம்சையை அப்பழுக்கற்ற முறையில் மனிதன் அனுசரிப்பது எவ்வளவு கஷ்டமோ அது போலவே, சத்தியத்தைப் பூரணமாக அறிந்து அனுசரிப்பதும் கஷ்டமாகும்.

திருடும் ஒரு நபர், அதே சமயத்தில், தாம் சத்தியத்தை அறிந்து கொண்டிருப்பதாகவோ அல்லது தம் மனத்தில் அன்பு இருப்பதாகவோ கூறிக்கொள்ளுவது சாத்தியமல்ல. எனினும், நம்மில் ஒவ்வொருவரும் அறிந்தோ, அறியாமலோ சற்றேறக்

குறைய திருட்டுக் குற்றம் செய்தவர்களாக இருக்கிறோம். மற்றவர்களுக்குச் சொந்தமானதை மாத்திரமல்ல, நமக்கே சொந்தமானதைக் கூட நாம் திருடலாம். உதாரணமாக, ஒரு தந்தை தனது குழந்தைகளுக்குத் தெரியாமல் ரகசியமாக எதையாவது தின்றால், அது திருட்டுக் குற்றமே.

ஆசிரமத்தில் உள்ள சமையல் பண்டகசாலை நம் எல்லோருக்கும் பொதுவான சொத்தாகும். அதிலிருந்து ஒரு சிறிய கட்டி சர்க்கரையை ரகசியமாக அப்புறப்படுத்தியவர் கூட, தமக்குத் தாமே திருடன் என்ற முத்திரையை வைத்துக் கொண்டவராகிறார். மற்றொருவருக்குச் சொந்தமானதை, அவரது அனுமதியின்றி நாம் எடுப்பது திருட்டேயாகும். குறிப்பிட்ட எவருக்கும் சொந்தமானதல்ல என்ற நம்பிக்கையின் மீது ஏதோ ஒரு சாதனத்தை நாம் எடுத்துக் கொள்ளுவதும் திருட்டுத்தான். சாலையில் கண்டெடுக்கப்பட்ட சாதனங்கள், ராஜாவுக்கோ அல்லது உள்ளூர் அதிகாரவர்க்கத்திற்கோ சொந்தமானவை. ஆசிரமத்திற்கு அருகில் ஏதாவது கண்டெடுக்கப்பட்டால், அதை ஆசிரமக் காரியதரிசியிடம் ஒப்படைத்துவிட வேண்டும். அது ஆசிரமத்திற்குச் சொந்தமானதாக இராவிட்டால், அதை அவர் போலீசாரிடம் ஒப்புவித்துவிடுவார்.

இதுவரையில் நான் கூறியவையெல்லாம் எளிதாகவே தோன்றுகின்றன. ஆனால், திருடாமை சம்பந்தமான விதி இத்துடன் முடிவடைந்துவிடவில்லை. நமக்கு உண்மையில் தேவையில்லாத ஒரு பொருளை, அதன் சொந்தக்காரரிடமிருந்து அவரது அனுமதி பெற்றும்கூட வாங்கிக் கொள்ளுவது திருட்டேயாகும். நமக்குத் தேவையில்லாத ஒரு பொருளைக்கூட நாம் பிறரிடமிருந்து வாங்கிக் கொள்ளக் கூடாது. பொதுவாக உணவுப் பொருட்களே இவ்விதமான திருட்டுக்குக் காரணமாக இருக்கின்றன. எனக்குத் தேவையில்லாத, அல்லது தேவைக்கு மேல் அதிகமாக பழங்களை எடுத்துக் கொள்ளுவது திருட்டுத்தனமே. நமக்கு உண்மையான தேவைகள் என்ன என்பதை நாம் பெரிதும் அறிவதில்லை. நம்மில் பலரும் ஒழுங்கற்ற முறையில் நமது தேவைகளைப் பெருக்கிக் கொண்டு, நாம் அறியாமலேயே நம்மைத் திருடர்களாக்கிக் கொள்ளுகிறோம். இவ்விஷயத்தில் நாம் சிறிது சிந்தனையைச் செலுத்துவோமாயின், நமது தேவைகளில் பலவற்றையும் நாம் கைவிட்டுவிட முடியும் என்பதைக் கண்டு கொள்ளலாம். திருடாமை சம்பந்தமான விதிகளைப் பின்பற்றும் ஒருவர், தமது தேவைகளைச் சிறிது சிறிதாகக் குறைத்துக்கொள்ள முடியும். இந்த விதிகளை மீறுவதே, பெரிதும் இந்த உலகத்தின் துக்ககரமான வறுமைக்குக் காரணமாகும்.

இதுவரையில் நாம் பரிசீலனை செய்த திருட்டை, வெளிப்படையான அல்லது ஸ்தூலமான திருட்டு எனலாம். இதைத் தவிர, கண்ணுக்குத் தெரியாத, ஆன்மாவை அதிகமாக இழிவுபடுத்தக் கூடிய மற்றொரு விதத் திருட்டும் இருக்கிறது. மற்றொருவருக்குச் சொந்தமானதைத் தாம் எடுத்துக் கொள்ள வேண்டு

மென்று மனத்தில் ஆசைப்படுவதோ அல்லது பேராசையுடன் அதில் கண்ணேட்டம் செலுத்துவதோ திருட்டேயாகும். வெளிப்படையாக உணவு உட்கொள்ளாதவரை, உண்ணுவிரதம் இருக்கிருர் என்று பொதுவாகக் கூறுகிரேம். ஆனல், மற்றவர் கள் சாப்பிடும் போது அது ருசியான சாப்பாடுதான் என்று அவர் மனத்தில் ஆசை கொள்ளுவாராயின், அவர் திருட்டுக் குற் றம் செய்தவராகிருர். அதுபோலவே, ஒருவர் உண்ணுவிரதம் இருக்கும்போது, உண்ணுவிரதம் முடிந்த பின் பலவிதமான உணவு வகைகளைச் சாப்பிட வேண்டும் என்று இடைவிடாது மனத்தில் திட்டம் போட்டு வருவாராயின், அவரும் திருட்டுக் குற்றம் செய்தவராகிருர்.

திருடாமைக் கொள்கையை அனுசரிக்கும் ஒருவர், எதிர் காலத்தில் தாம் சம்பாதிக்க வேண்டிய பொருள்களைப்பற்றிக் கவ லைப்படமாட்டார். எதிர்காலத்தைப் பற்றிய இந்தத் தீய ஆசையே பல திருட்டுகளுக்கும் மூல காரணமாக இருப்பதைக் காணலாம். இன்று நாம் ஒரு சாதனத்தை அடைய மாத்திரமே விரும்புகிரேம். நாளை அந்தச் சாதனத்தை அடைவதற்கான முறைகளைக் கைக் கொள்ளத் தொடங்குகிரேம். சாத்தியமாயின் நேர்மையான முறைகளையும், அவசியமாயின் கோணல் வழிகளையும் மேற் கொள்ள முற்பட்டுவிடுகிரேம்.

ஸ்தூல சாதனங்களைப் போல், கொள்கைகளும் களவாடப் படலாம். ஏதோ ஒரு நல்ல கொள்கையைத் தாம் கண்டு பிடித்த தாக ஒருவர் அகங்காரத்துடன் கூறலாம். ஆனல், உண்மையில் அந்தக் கொள்கைக்குக் கர்த்தா வேருெருவராக இருப்பாராயின், அதைத் தாம் கண்டுபிடித்ததாகப் பொய் கூறியவர் கொள்கை களைத் திருடும் குற்றத்திற்கு ஆளாகிருர். உலக சரித்திரத்தில் பல படித்த அறிஞர்கள் அத்தகைய திருட்டுக் குற்றம் செய்திருக் கிருர்கள். பிறர் எழுதியவற்றைத் திருடும் வழக்கம் இன்றுகூட அபூர்வமாக நடைபெறும் விஷயமல்ல. உதாரணமாக, ஆந்திரா வில் நான் ஒரு புதுவிதமான ராட்டினத்தைப் பார்த்ததாக வைத் துக்கொள்ளுவோம். அதே போன்ற ராட்டினத்தை ஆசிரமத்தில் உற்பத்தி செய்து, அதை நான் கண்டு பிடித்ததாகக் கூறுவேனு யின், நான் பொய்யனுவதுடன், மற்ருெருவர் கண்டுபிடித்ததைத் திருடிய குற்றத்திற்கும் நிச்சயமாக ஆளாகிறேன்.

எனவே, திருடாமை விதியை மேற்கொள்ளுவோர் பணிவுட னும், சிந்திக்கும் ஆற்றலுடனும், கண்காணிப்புடனும், எளிய பழக்கவழக்கங்களுடனும் இருக்கவேண்டும்.

'எராவ்டா மந்திர்' – 5-ஆம் அத்தியாயம்

# 2

# எளிய வாழ்க்கையின் அவசியம்

உடைமைகளை வைத்துக் கொள்ளாமல் இருப்பதற்கும் திருடாமைக்கும் தொடர்பு உண்டு. களவாடப்படாத ஒரு பொருளைத் தேவையின்றி நாம் வைத்துக் கொண்டிருப்போமாயின், அதைத் திருட்டுப் பொருளாகவே கருதவேண்டும். உடைமை என்பது எதிர்காலத் தேவைக்காக வைத்துக் கொள்ளப்படும் பொருளேயாகும். சத்தியத்தை நாடுவோர், அன்பு விதியைப் பின்பற்றுவோர், நாளைக்கு வேண்டும் என்பதற்காக எதையும் வைத்துக்கொள்ளக் கூடாது.

கடவுள் ஒருபோதும் நாளைக்கு என்று எதுவும் சேமித்து வைத்துக் கொள்ளுவதில்லை. அந்த விநாடிக்குக் கண்டிப்பான தேவையாக இருப்பதைக் காட்டிலும் அதிகமாக அவர் ஒருபோதும் சிருஷ்டிப்பதில்லை. எனவே, தெய்வ கடாட்சத்தில் நமக்கு நம்பிக்கை இருக்குமாயின், தினசரி உணவை, அதாவது தினந்தோறும் நமக்குத் தேவையான எதையும் அவர் கொடுப்பார் என்ற உறுதி நமக்கு இருக்கவேண்டும். அத்தகைய நம்பிக்கையுடன் வாழ்ந்த முனிவர்களும், பக்தர்களும் தங்களுடைய அனுபவத்திலிருந்து அத்தகைய நம்பிக்கை நியாயமானதே என்பதை அறிந்துகொண்டனர். ஒரு மனிதனுக்கு அன்றாடம் தேவையான உணவை மாத்திரமே, அதற்கு மேல் அல்ல, தெய்விகச் சட்டம் அளிக்கிறது. அதை நாம் அறியாததோ அல்லது அதை அலட்சியம் செய்வதோதான் ஏற்றத் தாழ்வுகளுக்குக் காரணமாகியிருக்கிறது. அதன் விளைவாக எல்லாவிதத் துன்பங்களும் ஏற்பட்டுள்ளன.

பணக்காரர்கள் மிதமிஞ்சிய சாதனங்களைச் சேமித்து வைத்துள்ளனர். அவை அவர்களுக்குத் தேவையில்லை. எனவே, அவற்றை அவர்கள் அலட்சியம் செய்து வீணுக்குகிறார்கள். மற்றொரு புறம் போதிய உணவின்றி கோடிக்கணக்கான மக்கள் பட்டினி கிடந்து மடிகின்றனர்கள். ஒவ்வொருவரும் தனக்குத் தேவையானதை மாத்திரம் வைத்துக் கொள்ளுவாராயின், யாரும் வறுமையால் கஷ்டப்பட மாட்டார்கள்; எல்லோரும் போதுமென்ற மனத்துடன் திருப்தியாக வாழ்வார்கள். ஆனால், இப்போதோ, ஏழைகளுக்கு மனத்திருப்தி இல்லை, பணக்காரர்களுக்கும் இல்லை. ஏழை, லட்சப் பிரபுவாக ஆவதற்கு ஆசைப்படுகிறான்; பணக்காரனோ, கோடீசுவரனாக ஆவதற்கு விரும்புகிறான். பணக்காரர்கள் தான், போதுமென்ற திருப்தி உணர்ச்சி எங்கும் பரவ வேண்டும் என்ற நோக்கத்துடன், தங்களுடைய உடைமைகளைக் கைவிட முதலில் முயற்சியெடுத்துக் கொள்ள வேண்டும். அவர்கள் நியாயமான அளவுக்கு தங்களுடைய சொந்த சொத்துக்களைக் குறைத்துக் கொள்ளுவார்களாயின், பட்டினி

கிடப்போருக்கு எளிதில் உணவளிக்க முடியும். அவர்களும் பணக்காரர்களைத் தொடர்ந்து போதுமென்ற திருப்தியைக் கொடுக்கும் பாடத்தைக் கற்றுக்கொள்ளுவார்கள்.

உடைமைகளை வைத்துக் கொள்ளுவதில்லை என்ற கொள்கையைக் குற்றம் குறையின்றிப் பூரணமாக நிறைவேற்றுவதாயின், மனிதன் பட்சிகளைப்போல் வீடுவாசல்களின்றியும், நாளைக்குத் தேவையான உடைகளையோ, உணவுப் பொருட்களையோ சேமித்து வைத்துக் கொள்ளாமலும் இருக்கவேண்டும். எனினும், தினசரி உணவு அவனுக்குத் தேவையாக இருக்கும் அல்லவா? தனக்கு அந்த உணவு கிடைக்கும்படி செய்வது அவனது கடமையல்ல, கடவுளின் கடமையாகும். ஆனால், இந்த உயர்ந்த நிலையை மிக மிகச் சிலர்தான் அடைவது சாத்தியமாகும். எனினும், சாதாரண நிலையிலுள்ள நாம், அசாத்தியமாகத் தோன்றும் அதைக் கண்டு அஞ்சவேண்டியதில்லை. அந்த லட்சியத்தை இடைவிடாது கவனத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். அதை அடிப்படையாகக் கொண்டு நமது உடைமைகளைப் பரிசீலனை செய்து, அவற்றைக் குறைத்துக் கொள்ள முயற்சிக்கவேண்டும். உண்மையான நாகரிகம், நமது தேவைகளைப் பெருக்கிக் கொள்ளுவதில் இல்லை; நாமாக வலுவில் அவற்றைக் குறைத்துக் கொள்ளுவதிலேயே இருக்கிறது. இதுதான், மகிழ்ச்சியும் மனத்திருப்தியும் வளர்வதற்கும், தொண்டு புரிவதற்கான திறமையை அதிகப்படுத்துவதற்கும் உதவியாக இருக்கும். இதை முக்கியமாகக் கொண்டு பார்த்தால், ஆசிரமத்தில் நம்மிடம் தேவைக்கு அதிகமாகப் பல பொருள்கள் இருப்பதைக் காண்கிறோம். அந்தப் பொருள்கள் அவசியமானவை என்று நிரூபிக்க முடியாது. எனவே, அண்டையில் உள்ளவர்களுக்கு அவற்றைத் திருட வேண்டுமென்ற ஆசை உண்டாகும்படி செய்து விடுகிறோம்.

இந்த உடல் கூட ஓர் உடைமை என்பதே கலப்பற்ற உண்மையாகும். பல பொருட்களையும் அனுபவிக்க வேண்டும் என்ற ஆசையே, ஆன்மாவுக்காக உடல்களைச் சிருஷ்டிக்கின்றது. இந்த ஆசை ஒழிந்துவிடுமாயின், பின்னர் உடல் இருக்க வேண்டிய தேவையே இல்லை. அப்போது மனிதன் பிறப்பு, இறப்பு என்ற கொடிய சுழலிலிருந்து விடுதலை அடைகிறான். ஆன்மா எங்கும் நிறைந்ததாகும். எனவே, அது எதற்காக சிறைக் கூண்டு போன்ற இந்த உடலுக்குள் அடைபட்டுக் கிடக்க வேண்டும்? அந்தக் கூண்டிற்காக, கொலை உள்பட பல தீச் செயல்களையும் ஏன் புரியவேண்டும்?

இவ்வாறாக, நாம் முற்றும் துறந்த ஒரு நிலைக்கு வருகிறோம். உடல் இருக்கும் வரையில் பொதுஜனத் தொண்டிற்கு உடலை உபயோகிக்கவேண்டும் என்பதைக் கற்றுக்கொள்ளுகிறோம். அப்போது, நமக்கு உணவு அல்ல, தொண்டே வாழ்க்கையின் ஊன்றுகோலாகிறது; தொண்டிற்காக மாத்திரமே நாம் சாப்பிடுகிறோம், தண்ணீர் குடிக்கிறோம், தூங்குகிறோம், விழித்துக்

கொள்ளுகிறோம். அத்தகைய மன நிலையே நமக்கு உண்மையான ஆனந்தத்தையும், காலக்கிரமத்தில் பேரின்ப நிலையையும் கொடுக்கிறது. இந்தக் கோணத்திலிருந்து நம்மை நாம் பரிசீலனை செய்து கொள்ளுவோமாக.

பொருட்களைப் போல், சிந்தனைகள் விஷயத்திலும் இந்தக் கொள்கை பொருந்தும். கவைக்குதவாத அறிவினால் தன் மூளையை நிரப்பிக்கொள்ளும் மனிதன், மதிப்பிடுவதற்கரிய இந்தக் கொள்கையை மீறியவனாகிறான். கடவுளிடமிருந்து நம் கவனத்தை அப்பால் திருப்பும் அல்லது கடவுளை நோக்கி நம் கவனத்தைத் திருப்பாத சிந்தனைகள், நமது வாழ்க்கைப் பாதையில் முட்டுக்கட்டைகளாக அமைந்துவிடுகின்றன.

இச்சந்தர்ப்பத்தில், கீதையில் 13-ஆவது அத்தியாயத்தில் அடங்கியுள்ள அறிவைப்பற்றிய விளக்கத்தை நாம் ஆலோசிக்க வேண்டும். பணிவு அதாவது தற்பெருமையின்மைதான் (அமானித்வம்) உண்மையான அறிவு, மற்றவையெல்லாம் அறியாமை என்று அந்த அத்தியாயத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இது உண்மையாயின்-இது உண்மை என்பதில் ஐயமில்லை-இன்று நாம் அறிவு என்று தழுவிக் கொண்டிருப்பதில் பெரும் பகுதி கலப்பற்ற அறியாமையே. அதனால் நமக்கு பலன் ஏற்படுவதற்குப் பதிலாக, தீங்கே உண்டாகிறது. அது, நமது மனம் நிலைத்திராமல் கண்டபடியெல்லாம் திரியும்படி செய்வதுடன், அதைச் சூன்ய நிலைக்கும் கொண்டுவந்துவிடுகிறது. பின்னர் அதிருப்தி ஏற்பட்டு, முடிவற்ற தீங்கிற்குக் காரணமாகிவிடுகிறது. மனத்திற்கு வேலை கொடுக்காமல் சோம்பேறித்தனமாக இருக்கக் கூடாது என்பதைக் கூறத் தேவையில்லை. நமது வாழ்க்கையின் ஒவ்வொரு விநாடியிலும், மனம் அல்லது உடல் சம்பந்தமான அலுவலில் நாம் ஈடுபடவேண்டும். தொண்டிற்காக வாழ்க்கையை அர்ப்பணம் செய்யும் ஒருவர், ஒரு விநாடிகூட சோம்பேறித்தனமாக இருக்கமுடியாது. எனினும், நல்ல அலுவலுக்கும் தீய அலுவலுக்கும் உள்ள வேற்றுமையை நாம் அறிந்து கொள்ள வேண்டும். தொண்டில் முழு கவனத்தையும் செலுத்தும்போது, பாகுபாடு செய்துகொள்ளும் இந்த அறிவு இயற்கையாகவே ஏற்பட்டுவிடுகிறது.

**'எராவ்டா மந்திர்' — 6-ஆம் அத்தியாயம்**

# 3

# மதத்தின் உயர்ந்த கொள்கை

எனக்குச் சொந்தமான சொத்து இருக்கும் வரையில், நீதிமன்றங்களின் அதிகாரத்தைக் கொண்டோ அல்லது என் சொந்த உடல் பலத்தைக் கொண்டோ அதை நான் காப்பாற்ற

வேண்டும். அவ்விரு நடவடிக்கைகளும் அநேகமாக ஒன்றுதான். நமது தேசீய ஒத்துழையாமை, ஒரு முறையை எதிர்ப்பதேயாகும். அரசாங்கத்தை எதிர்க்கும் நமக்குள் அதாவது மக்களுக்குள் பொதுவாக ஒத்துழைப்பு இருக்கவேண்டும் என்பதே அதன் கருத்தாகும். நமக்குள்ளேயே நாம் ஒத்துழையாமையைக் கைக் கொள்ளுவோமாயின், பின்னர் அரசாங்க முறையை எதிர்த்து தேசீய ஒத்துழையாமையை மேற்கொள்ளுவதென்பது வீண் கற்பனைதான். நமக்குச் சொந்தமாக ஓர் அடி பூமிகூட இரா விட்டால்தான், தனி நபர் ஒத்துழையாமை சாத்தியமாகும். அதாவது, அத்தகைய ஒத்துழையாமை ஒரு சந்நியாசிக்கு மாத்திரமே சாத்தியம். எனவே, உடைமைகளை அடியோடு கைவிட்டுவிடுவதே, மதத்தின் மகோன்னதமான கொள்கையை நிறைவேற்றுவதாகும். நம்முடைய சக்திக்கு இயன்றவரையில். அதற்கு மேற்கொண்டு அல்ல, நமது உடைமைகளை நாம் குறைத்துக் கொள்ள முற்படவேண்டும். அதுதான் நடுத்தரமான வழியாகும்.

ஒருவரது சொத்துக்களை திருடிக்கொண்டு போக ஒரு கொள்ளைக்காரன் வருகிறான். சொந்தக்காரர் அவனைத் தன் ரத்த சகோதரனைக் கருதுவராயின், அவர் தன் சொத்துக்களை அவனிடம் கொடுத்துவிட முடியும். ஆனால், அவரால் அவ்விதம் கருத முடியாமல் அவர் அவனைக் கண்டு நடுங்குவாராயின், சமீபத்தில் உள்ள யாராவது அவனை அடித்து வீழ்த்திவிடமாட் டாரா என்று அவர் விரும்புவாராயின், அவரே அவனை வீழ்த்த முயற்சித்து அதனால் ஏற்படும் பலாபலனை அனுபவிக்கத் தயாராக இருக்கவேண்டும். கொள்ளைக்காரனை வீழ்த்த வேண் டும் என்ற ஆசை அவருக்கு இருந்து, அவனை எதிர்த்துப் போரா டும் சக்தி இராவிடில், அவர் கொள்ளைக்காரனிடம் சொத்துக் களைப் பறிகொடுத்துவிட்டு, பின்னர் இழந்த சொத்துக்களை மீண்டும் பெறுவதற்காக அவர் நீதிமன்றங்களின் உதவியை நாட லாம். இந்த இரு வழிகளில் அவர் எதைப் பின்பற்றினாலும், சொத்துக்களை மீண்டும் பெறுவதற்கோ அல்லது இழந்துவிடு வதற்கோ காரணம் இருக்கிறது. என்னைப் போல் அவரும் நிதான புத்தி உடையவராயின், என்னைப் போன்ற ஒரு முடி விற்கே அவரும் வருவார். அதாவது, உண்மையில் ஆனந்தமாக இருக்க வேண்டுமாயின், அவர் சொந்தமாக யாதொரு உடைமை யையும் வைத்துக் கொள்ளக் கூடாது; அல்லது அண்டை யில் உள்ளவர்கள் அனுமதிக்கும் சாதனங்கள் மாத்திரமே அவ ருக்குச் சொந்தமானவையாக இருக்கவேண்டும். நாம் உடல் பலத்தைக் கொண்டு வாழவில்லை. பொறுமையினாலும், சகிப்புத் தன்மையினாலுமே வாழ்கிறோம். எனவே, நாம் மிகப் பணிவுடன் இருக்க வேண்டியதும், கடவுளிடம் நம்பிக்கை வைக்க வேண்டிய தும் அவசியமாகும். ஆன்ம சக்தியினால் வாழ்வதென்பது இது தான்.

இந்தச் சட்டத்தை நாம் மனத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். அதை வெறும் வாதத்திற்கு உகந்த, கவர்ச்சிகர மான ஒரு விஷயமாகக் கருதக் கூடாது. அது, நமது வாழ்க்கை யின் இன்றியமையாத சட்டம் என்று கருதி, அதை அனுசரித்து நடக்க இடைவிடாது முயற்சிக்க வேண்டும். அந்தச் சட்டத் திற்கு இணங்க நமது நடவடிக்கைகளேயும், அவற்றின்படி நடந்து கொள்ளும் திறமையையும் உருவாக்கிக் கொள்ளுவோமாக.

'எங் இந்தியா' – 5—2—1925

## 4

# ஏழைமையின் சிறப்பு

பஞ்சகனியில் நடந்த பிரார்த்தனைக் கூட்டத்தில் காந்திஜி பேசியதன் சாரமாவது :

இப்போது பாடப்பட்ட கீதத்தில், கடவுள் ஏழையின் நண்பர் என்று கூறப்பட்டிருக்கிறது. நமது நாட்டில், ஏழைமை கண்ணியம் வாய்ந்ததாக இருக்கிறது. ஏழை தமது வறுமை யைக் குறித்து வெட்கம் அடைவதில்லை. பணக்காரரின் மாளி கையைக் காட்டிலும் தமது குடிசையையே ஏழை விரும்புகிறார். அதைக் குறித்து அவர் பெருமையும் அடைகிறார். ஸ்தூல சாத னங்களில் அவர் ஏழையாக இருப்பினும், மன பலத்தில் ஏழை யல்ல. மனத் திருப்திதான் அவரது பொக்கிஷமாகும். "நாம் எல்லோரும் பணக்காரர்களாகவும், சொந்த மாளிகை உடைய வர்களாகவும் ஆக முடியாது. எனவே, பணக்காரர்களின் மாளிகைகளையாவது நாம் இடித்துத் தகர்த்து, அவர்களை நமது நிலைக்குக் கொண்டு வருவோம்" என்று ஏழை தனக்குத் தானே கூறிக் கொள்ளலாம். அவ்விதம் செய்வதால் அவர்களுக்கோ அல்லது வேறு எவருக்கோ, மகிழ்ச்சியோ அல்லது மன அமை தியோ ஏற்பட முடியாது. அத்தகைய ஏழைக்குக் கடவுள் நண் பராகவோ, உதவி அளிப்பவராகவோ இருக்கமாட்டார் என்பது நிச்சயம். ஸ்தூல சாதனங்களில் சமத்துவமின்மை என்ற முறை யில் ஏழைமை, உலகத்தில் உள்ள ஒவ்வொரு பாகத்திலும் இருக் கத்தான் செய்கிறது. ஓரளவுக்கு அது தவிர்க்க முடியாதது. தங்களுடைய திறமையிலோ அல்லது தங்களுடைய தேவை களின் அளவிலோ எல்லோரும் சம நிலையில் இல்லை அல்லவா? செல்வத்தில் புரளும், கடவுளின் ஸ்தானத்தை பணம் ஆக்கிர மித்துக் கொண்டிருக்கும் அமெரிக்காவில்கூட, பல ஏழைகள் இருக்கிறார்கள்.

ஷா ஆலமின் உறவினர்களில் சிலர் ரங்கூன் தெருக்களில் பிச்சையெடுத்துக் கொண்டிருந்ததை கவி மலபாரி கண்டார். அதைப் பற்றி அவர் அழகான ஒரு கவிதை இயற்றியுள்ளார்.

அச்சம்பவம் அவரது இதயத்தில் ஆழமாகப் பதிந்து விட்டது. கடவுள் யாருக்கு நண்பராகவும் உதவியளிப்பவராகவும் இருக்கிறரோ அவரை மாத்திரமே பணக்காரர் என்று கூற வேண்டும் என்பதே அந்தக் கவிதையின் சாரமாகும்.

இந்தியாவில் ஒருவித மனிதர் இருக்கிறர். தமது தேவைகளை எவ்வளவு குறைத்துக் கொள்ள முடியுமோ அவ்வளவு குறைத்துக் கொள்ளுவதிலேயே அவர் ஆனந்தமடைகிறர். அவர் ஒரு துண்டில் கொஞ்சம் மாவு, உப்பு, மிளகாய்கள் முதலியவற்றைக் கட்டி எடுத்துச் செல்லுகிறர். கிணற்றிலிருந்து தண்ணீர் எடுக்க அவரிடம் ஒரு லோட்டாவும், கயிறும் இருக்கின்றன. அவருக்கு வேறு எதுவும் இல்லை. அவர் தினந்தோறும் சுமார் 12 மைல்கள் தூரம் நடக்கிறர். அவர் மாவைப் பிசைந்து, வழியில் கிடக்கும் குச்சிகளைப் பொறுக்கித் தீ மூட்டி, அதில் மாவை வறுத்து, அதை உணவாகக் கொள்ளுகிறர். அது அவருக்கு மிகவும் ருசியாக இருக்கிறது. ருசி என்பது உணவில் இல்லை, நமக்கு ஏற்படும் பசியிலும், நேர்மையான உழைப்பிலும், மனத் திருப்தியிலும்தான் இருக்கிறது. அத்தகைய மனிதருக்குக் கடவுள்தான் சகாவாகவும் நண்பராகவும் இருக்கிறர். மன்னரையோ அல்லது சக்கரவர்த்தியையோவிட தாம் அதிக செல்வந்தராக அவருக்குத் தோன்றுகிறது. கடவுள், மற்றவருடைய செல்வத்திற்கு உள்ளூற பேராசைப்படுவோரின் நண்பர் அல்ல. அந்த மனிதரின் உதாரணத்தை ஒவ்வொருவரும் பின்பற்ற முடியும்; அதன் பலனை ஒவ்வொருவரும் விவரிக்க முடியாத மன அமைதியையும் ஆனந்தத்தையும் அனுபவித்து, அவற்றைப் பிறரும் அனுபவிக்கும்படி செய்ய முடியும். அதற்கு மாறுக, ஒருவர் செல்வம் திரட்டுவதிலேயே நாட்டம் கொண்டால், அவர் பிறரைச் சுரண்டும்படி நேரும். அப்போதும்கூட லட்சப் பிரபுக்கள் கோடீசுவர்களாகிவிட முடியாது. எனவே, போதுமென்ற மனத் திருப்தியிலும், கடவுளிடம் மாத்திரமே பக்தியுடன் இருப்பதிலும் தான் உண்மையான ஆனந்தம் அடங்கியிருக்கிறது.

—'ஹரிஜன்' – 21—7—1946

# 5

# தானைக் மேற்கொள்ளும் ஏழைமை

**1931** செப்டம்பர் 23-ஆம் தேதி காந்திஜி லண்டன் கில்ட் ஹவுஸில் நிகழ்த்திய சொற்பொழிவிலிருந்து ஒரு பகுதியே கீழே கொடுக்கப்பட்டுள்ளது :

ராஜீய விவகாரங்களாகிய சுழலில் நான் சிக்குண்டபோது என்னை நானே இவ்விதம் கேட்டுக் கொண்டேன் : 'துன்மார்க்

கம், பொய், ராஜீய விவகாரங்களில் சொந்த லாபம் முதலிய தீமைகள் என்னைச் சிறிதும் அணுகாமல் இருப்பதற்கு முக்கிய வழி என்ன?' அதன் சம்பந்தமான விவரங்கள் என் சம்பந்தப் பட்டவரையில் ருசிகரமானவை, புனிதமானவை. இருந்தாலும் அந்த விவரங்களையெல்லாம் இப்போது நான் உங்களுக்குக் கூறிக் கொண்டிருக்கப் போவதில்லை. ஆரம்பத்தில் அது மிகவும் கஷ்டமான ஒரு போராட்டமாக இருந்தது என்று மாத்திரம் உங்களுக்கு நான் கூற முடியும். மேற்கண்ட தீமைகள் என்னை அணுகாமல் இருக்கும்படி செய்வதற்காக நான் என் மனைவியுட னும், என் குழந்தைகளுடனும் கூட போராட வேண்டியிருந்தது இன்றும் எனக்கு தெளிவாக நினைவில் இருக்கிறது. அது எப்படி யாயினும், நான் மக்களுக்குத் தொண்டு செய்ய வேண்டுமாயின், நான் எல்லாச் செல்வத்தையும், எல்லா உடைமைகளையும் துறந்து விடவேண்டும் என்ற திட்டவட்டமான முடிவிற்கு வந்தேன். மக்களிடையே, மக்களில் ஒருவனாக நான் வாழ்க்கை நடத்த வேண்டும் என்பது விதியின் கட்டளையாகியது. தினந் தோறும் மக்களின் கஷ்டங்களை நான் நேரில் காணும்படியும் நேரிட்டது.

அவ்வித முடிவிற்கு நான் வந்த உடனடியாக நான் எல்லா வற்றையும் துறந்துவிட்டேன் என்று நான் உங்களிடம் கூறமுடி யாது. ஏனெனில், அவ்விதம் கூறுவது உண்மையாக இராது. அவ்விஷயமாக, முதலில் மெதுவாகவே அபிவிருத்தி ஏற்படலா யிற்று என்பதை நான் உங்களிடம் ஒத்துக்கொள்ள வேண்டும். அந்தப் போராட்ட நாட்களை நான் நினைவு படுத்திக் கொள்ளும் போது, முதலில் அவ்விதம் உடைமைகளைத் துறப்பது மனத் திற்கு வேதனையாக இருந்தது என்பது இப்போது என் ஞாபகத்திற்கு வருகிறது. எனினும், நாட்கள் செல்லச் செல்ல, எனக்குச் சொந்தமானவை என்று நான் எண்ணிய பல பொருட் களையும் நான் துறந்துவிட வேண்டும் என்பதை உணர்ந்தேன். சிறிதும் தயக்கமின்றி அந்தப் பொருட்களை மகிழ்ச்சியுடன் கைவிடும் காலமும் என் வாழ்க்கையில் வந்தது. அச்சாதனங்கள் ஒன்றன் பின் ஒன்றாக என்னிடமிருந்து நழுவத் தொடங்கின. அவ்விதம் நான் என் உடைமைகளைக் கைவிட்டதன் மூலம், என் மீதிருந்த ஒரு பெரும் சுமையே கீழே இறங்கிவிட்டது போல் தோன்றியது. அதன் பலனாக கஷ்டமின்றி நடக்கவும், மிகுந்த வசதியுடனும், இன்னும் அதிக மகிழ்ச்சியுடனும் என் சக மனிதர்களுக்குத் தொண்டு செய்யவும் என்னால் இயன்றது. அதன் பிறகு, ஏதாவது உடைமைகளை வைத்துக் கொள்ளுவதே தொல்லையாகவும் ஒரு சுமையாகவும் ஆகிவிட்டது!

அத்தகைய மகிழ்ச்சிக்குக் காரணம் என்ன என்பதைப் பரிசீலனை செய்தேன். எனக்குச் சொந்தமானது என்று நான் எதையாவது வைத்துக் கொண்டால், உலகம் முழுவதையும் எதிர்த்து அதை நான் பாதுகாத்துக் கொள்ள வேண்டியிருந்தது. பலரும், ஒரு குறிப்பிட்ட பொருளை விரும்பினாலும் அது அவர்

களுக்குக் கிடைப்பதில்லை என்பதையும் நான் கண்டேன். நான் ஒரு பொருளை வைத்துக் கொண்டிருந்தால், அதைப் பாதுகாக்க போலீஸ் உதவியையும் நாடவேண்டியிருக்கும். ஏனெனில், பசியுள்ள, பஞ்சத்திஞல் அடிபட்ட மக்கள், நான் தனிமையான இடத்தில் இருப்பதைப் பார்த்தால் அந்தப் பொருளை அவர்கள் என்னுடன் பங்கு போட்டுக் கொள்ளுவதற்கு மாத்திரமல்ல, என்னிடமிருந்து அதை அடியோடு அபகரித்துக் கொண்டுபோக வும் விரும்பலாம் அல்லவா? எனினும், நான் எனக்குள்ளேயே இவ்விதம் சொல்லிக் கொண்டேன்: 'அவர்கள் விரும்பி அதை எடுத்துக் கொண்டால், துவேஷ நோக்கம் காரணமாக அவர்கள் அதை எடுத்துக் கொள்ள மாட்டார்கள்; என்னைக் காட்டிலும் அவர்களுக்கு அந்தப் பொருள் அதிகத் தேவையாக இருப்பதே அவர்கள் அதை எடுத்துக் கொள்ளுவதற்குக் காரணம்.'

மேலும் நான் எனக்குள் இவ்விதம் சொல்லிக் கொண்டேன்: "உடைமைகளை வைத்துக் கொள்ளுவது ஒரு குற்றம் என்று எனக்குத் தோன்றுகிறது. மற்றவர்களும் அவர்கள் விரும்பும் சில பொருட்களை வைத்துக்கொள்ளுவது சாத்தியமாக இருக்கும் போது மாத்திரமே, நான் அந்தப் பொருட்களை வைத்துக் கொள்ள முடியும். எனினும், அத்தகைய ஒரு நிலை சாத்தியமல்ல என்பதை நம்மில் ஒவ்வொருவரும் அனுபவத்தின் மூலம் அறி வோம். ஆகையால், எல்லோரும் வைத்துக் கொள்ளக் கூடிய உடைமை என்னவெனில், அறவே உடைமை எதுவும் வைத்துக் கொள்ளாமல் இருப்பதுதான். மற்ருெரு விதமாகக் கூறுவதா யின், மனம் ஒப்பி எல்லாவற்றையும் துறந்துவிடுவதுதான்.'

நீங்கள் பிறகு என்னிடம் இவ்விதம் கூறலாம்: 'ஆனல் தாஞக மேற்கொள்ளும் வறுமையைப் பற்றியும், உடைமைகள் எதுவும் வைத்துக் கொள்ளக் கூடாது என்றும் நீங்கள் பேசிக் கொண் டிருக்கும் பொழுதே, உங்களுடைய உடலில் பல பொருட்கள் இருக்கின்றனவே.'

நான் கூறுவதன் அர்த்தத்தை நீங்கள் மேலெழுந்தவாரி யாகவே அறிந்து கொண்டிருந்தால் அவ்விதம் நீங்கள் குத்திக் காட்டுவது சரியாகவும் இருக்கும். எனினும், உண்மையில் நான் கூறுவதன் உட்பொருளையே கவனிக்கவேண்டும். உங்கள் உடல் இருக்கும் வரையில், நீங்கள் உடலுக்கு மேல் ஏதாவது உடை உடுத்திக் கொண்டுதான் தீர வேண்டும். அதற்காக நீங்கள் உங்களுக்குக் கிடைக்கக் கூடியதையெல்லாம் உடுத்திக் கொள்ள முற்படக்கூடாது; குறைந்த பட்சம் எவ்வளவு முடியுமோ, அவ் வளவே உடுத்திக் கொள்ளவேண்டும். மாளிகை போன்ற பெரும் வீட்டை நீங்கள் வைத்துக் கொள்ளக் கூடாது. எவ்வளவு சிறிய வீட்டில் இருக்க முடியுமோ, அவ்வளவு சிறிய வீட்டில் இருக்க வேண்டும். உங்களுடைய உணவு விஷயத்திலும் அவ்விதமே இருக்கவேண்டும.

நாகரிக நிலை என்று எல்லோரும் கருதுவதற்கும், நான் சித்திரிக்கும் பேரானந்தமான, விரும்பத்தக்க நிலைக்கும் தினந்தோறும் போராட்டம் இருந்து வருவதை நீங்கள் காண லாம். உங்களுடைய தேவைகளையெல்லாம் பன்மடங்கு பெருக்கிக் கொள்ளுவதே, நாகரிகத்தின் அடிப்படை என்று கருதப்படு கிறது. உங்களுக்கு ஓர் அறை இருந்தால், நீங்கள் மேற்கொண்டு இரண்டு மூன்று அறைகள் வைத்துக் கொள்ள ஆசைப்படு கிறீர்கள். எவ்வளவுக்கு அறைகளின் தொகை அதிகமாகிறதோ அவ்வளவுக்கு உல்லாசமும் மகிழ்ச்சியும் ஏற்படுகின்றன. அது போலவே, உங்கள் வீட்டில் எவ்வளவுக்கு அதிகமான மேஜை, நாற்காலி முதலிய சாதனங்களை வைத்துக் கொள்ள முடியுமோ, அவ்வளவு அதிகமாக வைத்துக்கொள்ள ஆசைப்படுவீர்கள். இவ்விதமே ஆசை முடிவின்றிப் போய்க்கொண்டே இருக்கும். உங்களுக்கு உடைமைகள் எவ்வளவுக்கு அதிகமாக இருக்கின் றனவோ அவ்வளவுக்கு, நீங்கள் சிறந்த பண்பாட்டின் பிரதிநிதி என்று கருதப்படுவீர்கள். நாகரிகத்தின் சார்பில் பேசுவோரைப் போல், இதையெல்லாம் பற்றி நான் கூறுவது அவ்வளவு இனிமை யாக இராது. எனினும், நான் அறிந்த விதத்தில் இதையெல்லாம் உங்களுக்கு எடுத்துக் கூறுகிறேன்.

அதற்கு மாறாக, உங்களது உடைமைகள் எவ்வளவுக்குக் குறைவாக இருக்கின்றனவோ, நீங்கள் எவ்வளவு குறைவான சாதனங்களை விரும்புகிறீர்களோ, அவ்வளவுக்கு நீங்கள் சிறந்த வர்களாக இருக்கிறீர்கள். எந்த விதத்தில் சிறந்தவர்கள்? இந்த வாழ்க்கையை நன்கு அனுபவிப்பதில் அல்ல, சக மனிதர் களுக்குத் தொண்டு செய்யும் இன்பத்தை அனுபவிப்பதில் சிறந்தவர்களாக விளங்குவீர்கள். அத்தகைய தொண்டிற்காக நீங்கள் உங்களையும், உங்களுடைய உடல், ஆன்மா, மனம் எல்லா வற்றையும் அர்ப்பணம் செய்ய வேண்டும். இந்த உடல் கூட உங்களுக்குச் சொந்தமானதல்ல. அது, தாற்காலிக உடைமை யாக உங்களுக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. அந்த உடலை உங்களுக்குக் கொடுத்த கடவுளால் அதை எடுத்துக் கொண்டு விடவும் முடியும்.

முற்றிலும் உறுதியான அத்தகைய கொள்கையுடைய எனக்கு, கடவுள் சித்தப்படி இந்த உடலை எச்சமயத்திலும் அர்ப் பணம் செய்துவிட வேண்டும் என்பதே, இடைவிடாத ஆர்வமாக இருந்து வரவேண்டும். இந்த உடல் என் வசம் இருந்துவரும் வரையில், அதை நான் வீணான முறையில் உபயோகித்துச் சீரழிய விட்டுவிடக் கூடாது; மனம் போனபடியும், சில்லறை இன்பங் களைத் துய்ப்பதற்கும் உபயோகிக்கக் கூடாது; தொண்டிற்காக மாத்திரமே, விழித்துக் கொண்டிருக்கும் நேரமெல்லாம் தொண்டு செய்வதற்காக மாத்திரமே உபயோகிக்கவேண்டும். உடல் சம் பந்தப்பட்டவரையில் இது உண்மையாயின், உடைகள் முதலிய மற்றச் சாதனங்கள் சம்பந்தப்பட்டவரையில் இது இன்னும் எவ்வளவு அதிக உண்மையாகும்?

தானைகை மேற்கொள்ளும் இந்த ஏழைமை விரதத்தை உண்மையில் இயன்ற வரையில் பின்பற்றுவோர் (இதில் பூரணத்துவம் பெறுவது முடியாத காரியம். மனிதருக்கு எவ்வளவு அதிகமாக சாத்தியமோ அவ்வளவு தூரம் பின்பற்றுவோர்), அத்தகைய உயர்ந்த நிலையை எட்டியவர்கள் ஓர் உண்மையை உறுதியாகக் கூற முடியும். அதாவது உங்களுக்குச் சொந்தமான எல்லா உடைமைகளையும் நீங்கள் கைவிடும்போது, உலகில் உள்ள பொக்கிஷங்கள் யாவும் உண்மையில் உங்களுக்குச் சொந்தமாகின்றன; அதாவது, உண்மையில் உங்களுக்கு அவசியமான எல்லாம், ஒன்று கூட பாக்கியின்றி எல்லாம் உங்களுக்குக் கிடைக்கின்றன. உங்களுக்கு உணவு அவசியமாயின், உணவு உங்களுக்கு வந்துசேரும்.

ஆடவர்களும் பெண்களுமான உங்களில் பலரும் பிரார்த்தனையில் நம்பிக்கையுடையவர்களாக இருக்கிறீர்கள். பிரார்த்தனைக்கு விடையாகவே தங்களுக்கு உணவு கிடைக்கிறது என்றும், பிரார்த்தனைக்கு விடையாகவே தங்களுக்கு எல்லாம் கிடைக்கின்றன என்றும் பல கிறிஸ்தவர்கள் கூற நான் கேட்டிருக்கிறேன். அவர்கள் கூறுவதை நான் நம்பவும் செய்கிறேன். இவ்விஷயத்தில் நீங்கள் என்னுடன் இன்னும் ஒரு படி மேலே வர வேண்டும் என்று விரும்புகிறேன். அதாவது இந்த உடல் உள்பட இந்த உலகத்தில் உள்ள எல்லாவற்றையும் தானைக வலுவில் துறந்துவிடுவோருக்கு, அதாவது எல்லாவற்றையும் துறந்துவிடத் தயாராக இருப்போருக்கு, பற்றுக் குறை என்பது ஒரு காலத்திலும் இராது; எந்தப் பொருளாயினும், தேவை என்ற நிலை அவர்களுக்கு ஒருபோதும் ஏற்படாது.

தேவை என்று கூறும் போது, அதை அப்பட்டமாக அப்படியே எடுத்துக் கொண்டுவிடக் கூடாது. இந்த உலகில் கடவுளைப் போல் கடினமாக வேலை வாங்குவோர் வேறுயாருமில்லை. அவர் உங்களை இறுதிவரையில் சோதிக்கிறார். உங்களுடைய நம்பிக்கை உங்களைக் கைவிடுவதாகவும், நீங்கள் அடியோடு மூழ்குவதாகவும் உங்களுக்குத் தோன்றும்போது, எப்படியோ அவர் உங்களுக்குத் துணையாக வந்துவிடுகிறார்; நீங்கள் நம்பிக்கையை இழக்க வேண்டாம் என்பதையும், அவர் எப்போதும் உங்களுடைய அழைப்பை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார் என்பதையும் ருசுப்பிக்கிறார். எனினும், உங்களுடைய நிபந்தனைகளுக்கு இணங்க அவர் உங்களுக்கு உதவி புரிய வர மாட்டார்; அவரது நிபந்தனைகளின்படியே அவர் உதவிபுரிய வருவார். இப்படித்தான் நான் கண்டிருக்கிறேன். கடைசி விநாடியில் அவர் என்னைக் கைவிட்ட ஒரு சம்பவத்தைக்கூட நான் உண்மையில் குறிப்பிட முடியாது.

# 7. உணவுக்காக உழைத்தல்

## 1

## உணவுக்காக சந்நியாசி உழைக்க வேண்டுமா?

காந்திஜி மௌனமாக இருக்கும்போது, வெகு சிலரே ஆசிரமத்திற்கு விஜயம் செய்வார்கள். அவ்விதம் வருவோரும் காந்திஜிக்குச் சிரமத்தைக் கொடுக்கமாட்டார்கள். ஆனல், வருவோருக்கு காந்திஜி சில சமயங்களில் பேட்டிகள் அளித்துத் தீர வேண்டியிருக்கும். வருவோரைக்கூட காந்திஜி சில சமயங்களில் பேட்டி கண்டு கேள்விகள் கேட்கும் சந்தர்ப்பம் நேருவதும் உண்டு. ஆசிரமத்தில் இருந்தவரும் பழைய சக ஊழியருமான ஒருவர் ஆசிரமத்திற்கு வந்தபோது, அத்தகைய சந்தர்ப்பம் நேர்ந்தது. அவர் அப்போது சந்நியாசியாகியிருந்தார். ஒத்துழையாமை உச்ச நிலையில் இருந்தபோது, பம்பாய் சர்வகலாசாலைப் பட்டதாரியான அவர் காந்திஜியைப் பார்ப்பதற்காக வந்திருந்தார். அப்போது அவர் மிகுந்த உற்சாகத்துடனும், அறிவு வளர்ச்சியில் மிக்க ஆர்வத்துடனும் இருந்தார். ஆராய்ச்சித் துறையில் அளிக்கப்பட்ட உபகாரச் சம்பளத்தை அவர் உதறித் தள்ளிவிட்டு, தேசீயக் கல்லூரியில் பேராசிரியர் பதவியேற்ருர். அவர் சிறைக்குச் சென்ருரெனினும், ஆன்மிகத் துறையில் தீவிர ஆர்வம் கொண்டவராக சிறையிலிருந்து வெளியே வந்தார். அவரது சிறிய தந்தையான காலஞ்சென்ற சியாம்ஜி கிருஷ்ண வர்மா, தமக்குப் பின் அவர் தமது பதவிக்கு வர வேண்டும் என்பதற்காக அவரை ஐரோப்பாவுக்கு அனுப்பினுர். அவரும் ஐரோப்பாவுக்குச் சென்றதன் பலனுக, மேல் நாடுகளில் உள்ள எல்லாவற்றிலும் அவருக்கு வெறுப்பு ஏற்பட்டுவிட்டது! திரும்பி வந்ததும் அவர் ஆன்மிக ஆராய்ச்சி சம்பந்தமான தமது சோதனைகளை ஆரம்பித்தார்.

அவர் சில ஆண்டுகள் வரையில் எங்களிடையே தங்கியிருந்தார். அப்போதைக் கப்போது அவர் பல நாட்கள் வரையில் உண்ணுவிரதம் இருந்தார். கடைசியாக அவர் இருந்த உண்ணுவிரதம் 55 நாட்களாகும். பின்னர் ஒரு நாள் இங்கே எல்லாவற்றினிடமும் வெறுப்படைந்து எங்களைவிட்டுச் சென்றுவிட்டார், அவர், தமது உடலை வருத்திக்கொள்ளுவதில், தமது உதடுகளைத் தைத்துக்கொள்ளும் அளவுக்குச் சென்றுவிட்டார். இடுப்பைச் சுற்றி ஓர் இரும்பு பெல்டைத் தவிர அவர் வேறு எதுவும் அணிந்துகொள்ளுவதில்லை. அவர் உணவுக்காக வீடு வீடாகச் சென்று யாசகம் செய்தார்.

சில மாதங்களுக்கு முன், காந்திஜி தமது ஹரிஜன யாத்திரையின் போது அவரைச் சந்தித்தார். அப்போது அவர் பல வருடங்

களாக மௌன விரதத்தை அனுசரித்து வந்ததால், காந்திஜி யுடன் அவர் பேசவில்லை. எனினும், காந்திஜிக்கும் தமக்கும் முன்னரைக் காட்டிலும் ஆன்மிகத் தொடர்பு அதிக பலமடைந் திருப்பதாக அவர் ஒப்புக்கொண்டார்.

மூன்று அல்லது நான்கு மாதங்களுக்கு முன் அவர் காந்தி ஜிக்கு ஒரு கடிதம் எழுதியிருந்தார். காந்திஜியைப் பார்க்க தாம் நடந்து வருவதாகவும், நடந்து வந்து சேருவதற்குச் சில மாதங் கள் செல்லும் என்றும், காந்திஜியுடன் பேசுவதற்காக மாத்தி ரமே தாம் மௌனத்தைக் கைவிடப் போவதாகவும் அவர் குறிப் பிட்டிருந்தார். காந்திஜியின் யாத்திரைத் திட்டங்கள் நிச்சய மற்றவையாக இருந்ததால், அவ்விருவரும் ஒரு காலத்திலும் சந்திக்கப் போவதில்லை என்று என் போன்ற சந்தேகவாதிகள் அஞ்சினோம். ஆனால், சந்நியாசி பன்ஸாலிக்கு அத்தகைய சந்தே கம் எதுவும் இல்லை. அவர் மேலே உடையின்றியும், வெறும் காலுடனும் வந்தார். அவர் சில மாதங்கள்வரையில் நடந்து வந்து சேர்ந்தார். அவருக்கு இந்த உலகில் தமக்குச் சொந்தம் என்று சொல்லக்கூடிய பொருள் எதுவும் இல்லை. அவர் மீண் டும் எங்களில் ஒருவராக எங்களிடையே வந்து உட்கார்ந்தார். அதே சமயத்தில் அவர் கேள்விகள் எதுவும் கேட்கவில்லை; விஷ யங்களைத் துருவிக் கேட்டுத் தெரிந்துகொள்ள வேண்டும் என்ற ஆவலும் அவருக்கு இல்லை. நாங்கள்தான் அவரைக் கேள்விகள் கேட்க விரும்பினோம்; அவரிடம் பல விஷயங்களையும் கேட்கும் ஆர்வம் எங்களுக்குத்தான் இருந்தது. யாராவது அவரிடம் தண்ணீருடன் கலந்து சோள மாவையும், வேப்பிலைகளையும் கொடுத்தால் அவர் சாப்பிடுவார். அவர் ஆசிரமத்தின் ஒரு மூலை யில் உட்கார்ந்து கொண்டிருந்தார். அவர் யாருக்கும் தொந் தரவு கொடுக்கவில்லை; அவருக்கும் யாரும் தொந்தரவு கொடுக்க வில்லை. துருவிக் கேள்விகள் கேட்கும் ஆவல் அவருக்கு இல்லை யெனினும் எங்களுக்கு இருந்தது, காந்திஜிக்கும் இருந்தது. அந்த ஆவலை அடக்குவதில் பன்ஸாலி வெற்றி பெற்றிருந்தார் எனில், நாங்கள் அதில் வெற்றி பெற்றிருக்கவில்லை.

மாலைப் பிரார்த்தனைக்குப் பின் காந்திஜி, கூட்டத்திற்கு வந்து தமது கேள்விகளுக்குப் பதில் அளிக்கும்படி இரண்டு தடவை அவருக்குச் சொல்லி அனுப்பினர். சந்நியாசி பன்ஸாலி மூன்று ஆண்டுகளுக்குப் பிறகு முதன் முதலாக வாயைத் திறந்தார்.

**காந்திஜி :** இந்த உணவு உங்களுக்கு ஒத்துக்கொள்ளுகிறதா?

**சந்நியாசி :** முற்றிலும் ஒத்துக் கொள்ளுகிறது.

**காந்திஜி :** வேப்பிலைகள் உங்களுக்குப் பேருதவியாக இருக்கின் றன அல்லவா?

**சந்நியாசி :** சந்தேகமில்லாமல். ஆனால், கீல் வாத நோய்கள் ஏற்படக்கூடுமாதலால், மழை காலத்தில் அவற்றை நான் கைவிட வேண்டியிருக்கிறது.

**காந்திஜி :** வேப்பிலைகள் உங்களுக்கு மிகவும் கசப்பாக இல்லையா ?

அவர் சிரித்துவிட்டுக் கூறியதாவது : "வேப்ப மரங்களிலும், பல வகைகள் இருக்கின்றன. சில மரங்களின் இலைகள் மிகவும் கசப்பாக இருக்கின்றன; மற்றும் சில மரங்களின் இலைகள் கசப்பாக இருப்பதில்லை. நாவிற்கு இந்த உணவு பழக்கமாகிவிடும் போது, அது ருசியாக இருக்கிறது. இங்கேதான் ருசியைக் கட்டுப்படுத்தும் பிரச்னையும் எழுகின்றது.''

**காந்திஜி :** நீங்கள் எங்கே தூங்குகிறீர்கள் ? கீழே போட்டுக் கொள்ளவோ அல்லது போர்த்துக்கொள்ளவோ உங்களிடம் ஒன்றும் இல்லையே?

**சந்நியாசி :** எங்கே சந்தர்ப்பம் நேருகிறதோ, அங்கே தூங்குவேன். எது கிடைக்கிறதோ அதைச் சந்தர்ப்பம் போல் உபயோகித்துக் கொள்ளுவேன்.

**காந்திஜி :** ஒரு பாய், ஒரு விரிப்பு, ஒரு போர்வை முதலியவற்றைக் கொடுத்தால் நீங்கள் அவற்றை மறுத்துவிடுவீர்களா?

**சந்நியாசி :** மாட்டேன். பெரிதும் மரங்களின் கீழும், வெறும் தரையில் வானத்தின் கீழும், பல சமயங்களில் சுடுகாட்டிலும் கூடநான் படுத்துத் தூங்கியிருக்கிறேன்.

**காந்திஜி:** அபாயகரமான விஷப் பூச்சிகளாலோ அல்லது மிருகங்களாலோ நீங்கள் எப்போதாவது கஷ்டத்திற்கு உள்ளானது உண்டா?

**சந்நியாசி:** ஒரு போதுமில்லை. ஒரு தடவை என்னை ஒரு தேள் கொட்டி விட்டது. எனினும், அது ஒரு சாதாரண பூச்சி கடித்தது போலவே இருந்தது. என் வழியில் பாம்புகள் வந்தது உண்டு. ஒரு சமயம் ஒரு சிறுத்தையும் வந்தது. எனினும், அவற்றினால் எனக்கு அபாயம் எதுவும் நேரவில்லை. அவற்றைக் கண்டு எனக்குப் பயமும் ஏற்படவில்லை,

**காந்திஜி:** சுடுகாட்டில் நீங்கள் தூங்கியபோது விசித்திரமான அனுபவங்கள் ஏதாவது ஏற்பட்டது உண்டா?

**சந்நியாசி:** உடலற்ற ஒரு விதமான ஜீவன்கள் இருக்கின்றன என்பதை நான் ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். எனினும், எவரும் அவற்றில் நம்பிக்கை வைக்கவேண்டிய அவசியமில்லை. நான் அவைகளைச் சந்தித்திருக்கிறேன். சிற்சில சமயங்களில் அந்த பயம்தான் என் மனத்தில் எழுகின்றது. எனினும், உடனே அதை நான் சமாளித்துக் கொள்ளுகிறேன்.

**காந்திஜி:** நீங்கள், உங்களுக்குத் தேவையான மாவை யாசிப் பதற்காகவாவது பேசுவது உண்டா?

**சந்நியாசி:** இல்லை.

**காந்திஜி:** உங்களுக்கு எப்போதும் மாவு கிடைக்கிறதா?

**சந்நியாசி:** இல்லை. நான் அடிக்கடி உணவின்றியே காலம் கழிக்க வேண்டியிருக்கிறது. ஒரு தடவை சேர்ந்தாற்போல் மூன்று நாட்கள் வரையில் எனக்கு உணவு கிடைக்கவில்லை. சிலர் விருப்பத்துடன் எனக்கு உணவு அளிப்பார்கள். சிலர், நான் உண்மையான சந்நியாசியா என்று சந்தேகப்படுவார்கள். சிலர், என்னை மோசக்காரன் என்று எண்ணுவதும் உண்டு. நான் ரகசிய போலீசைச் சேர்ந்த ஆள் என்றுகூட சிலர் கருதுவது உண்டு.

**காந்திஜி:** உங்களுடைய கவலைக்குக் காரணமாக இருந்த உங்களு டைய பழைய நண்பர்கள் அல்லது உறவினர்கள் யரையா வது நீங்கள் நினைப்பது உண்டா?

**சந்நியாசி:** ஒருபோதுமில்லை. அவர்களைப் பற்றிய ஞாபகமே போய் விட்டது.

**காந்திஜி:** கிராம மக்களை வாட்டிவதைக்கும் வறுமை உங்கள் மனத்தைத் துன்புறுத்துவது உண்டா?

**சந்நியாசி:** ஆமாம். அது, அவர்களைப் பற்றி நீங்கள் எழுதியிருப் பதையெல்லாம் எனக்கு ஞாபகப்படுத்துகிறது. அவ்விஷ யமாக நீங்கள் 'எங் இந்தியா' வில் எழுதியுள்ள 'மரண நடனம்' போன்ற மனத்தை உருக்கும் கட்டுரைகளை நான் நினைவு படுத்திக் கொள்ளுவது உண்டு. தயவு தாட்சண்ய மின்றி 'மரண நடனம்' நிகழ்ந்து கொண்டுதான் இருக்கிறது. அதன் காரணமாக, இந்த பிடி மாவைச் சாப்பிடக் கூட எனக்கு உரிமையில்லை என்று நான் கருதுகிறேன். இப்போ தெல்லாம் அவர்களுடைய உணவை நான் அபகரிப்பதில்லை என்பதைக் குறித்து மகிழ்ச்சி அடைகிறேன். இதைக் காட் டிலும் சுடுகாட்டில் உள்ள மரணத்தின் நடமாட்டம் ஓரளவு ஆறுதல் அளிப்பதாக இருக்கிறது.

**காந்திஜி:** அப்படியானல், நீங்கள் திரும்பவும் என்னிடத்தில் வந்து, உங்களைப் பற்றி நான் கண்டுவந்த அருமையான கனவை நிறைவேற்றிவைப்பீர்கள் அல்லவா?

**சந்நியாசி:** 'ஆம்' என்று சொல்லவேண்டும் என்பதுதான் எனது விருப்பம். அவ்விதம் நிறைவேற்றிவைப்பேன என்பது எனக்குத் தெரியாது, கடவுளுக்குத்தான் தெரியும். அதற் கான சந்தர்ப்பம் எப்போதோ ஏற்படலாம்.

**காந்திஜி:** நாள் முழுதும் நீங்கள் எதைப் பற்றி சிந்திக்கிறீர்கள்?

**சந்நியாசி:** எனக்கு மந்திரங்கள் தெரியும். அவற்றை இடைவிடாது திரும்பத் திரும்ப ஜபிக்கிறேன். எதுவும் என்னைக் கலங்கவைப்பதில்லை, எதுவும் எனக்குத் தொல்லையைக் கொடுப்பதில்லை.

**காந்திஜி:** அப்படியானால், உங்களுக்குப் பயம் என்பதே இல்லையா?

**சந்நியாசி:** இல்லை. நான் அமைதிக் கடலில் நீந்திவருகிறேன். அதற்கெல்லாம் நீங்கள்தான் காரணம். நீங்கள்தான் இதையெல்லாம் எனக்குக் கற்பித்தீர்கள். எனது பழைய நிலையில் பெரும் பகுதியையும் நான் மறந்துவிட்டேன். ஆனால், கீதையைப் பற்றியோ அல்லது 'யாத்திரிகரின் முன்னேற்றத்தை'ப் பற்றியோ* நீங்கள் செய்த பிரசங்கங்களை நான் மறக்கவில்லை. கலைக்க முடியாத மனச் சாந்தியே எனது பாக்கியமாகும். கனவுகளின் தொல்லையே இல்லாமல் நான் தூங்குகிறேன். பற்பல சமயங்களிலும் என்னைப் பற்றிக் கேலியாகவும் வெறுப்பாகவும் பேசுகிறார்கள். அது எனக்கு ஆனந்தத்தையே கொடுக்கிறது. அவ்விதமே என்னைப் பற்றி எல்லோரும் பேசவேண்டுமென விழைகிறேன். அவ்விதம் ஆசைப்படுவதும் கூடாது. அந்த ஆசையையும் ஒழித்துவிட வேண்டும் என்பதே இப்போது எனது விருப்பமாகும். என்னைப் பற்றிப் பிறர் புகழ்வதைக் குறித்து நான் மகிழ்ச்சி அடைவதில்லை. அப்படியிருக்க, என்னைக் கேலி செய்வதைக் குறித்து நான் ஏன் மகிழ்ச்சி அடைய வேண்டும்? நான் விரும்புவது களங்கமற்ற மனச் சாந்தியே யாகும். அதாவது புகழையும் குற்றச்சாட்டையும், உஷ்ணத்தையும் குளிர்ச்சியையும் சமமாகக் கருதவேண்டும். சாத்தியமாயின், துன்பத்தில் கூட இன்பமடையாமல் இருக்கவேண்டும் என்பதே எனது விருப்பமாகும். பாபு, நான் எவ்வளவு பகட்டுக்காரனாக இருந்தேன்! அந்த நாட்களை நினைத்தால்! நரகத்தை சுவர்க்கமாகச் செய்வதும், சுவர்க்கத்தை நரகமாகச் செய்வதும் மனம்தான். இப்போது என் மனச் சாந்திக்கு எல்லையே இல்லை. இருந்தாலும், ஒரு காலத்தில் நான் எவ்வளவு ஆடம்பரப் பிரியனாக இருந்தேன்?

இவ்விதம் கூறிவிட்டு சந்நியாசி மனம் விட்டுச் சிரித்தார்.

**காந்திஜி:** நாள் முழுதும் நீங்கள் எங்கே உட்காருகிறீர்கள்.

---

* 'யாத்திரிகரின் முன்னேற்றம்' (Pilgrim's Progress) என்பது உவமைக் கதை உருவான உலகப் புகழ்பெற்ற காவியமாகும். அதை இயற்றிய ஜான் பன்யன் (1628–1688) பிரசித்தி பெற்ற ஆங்கிலக் கவியாவார். அவர் பெட்போர்ட் (இங்கிலாந்து) சிறையில் ராஜீயக் கைதியாக இருந்தபோது அதை எழுதினார். அதில் அடங்கியுள்ள வாழ்க்கைத் தத்துவத்தை காந்திஜி தமது பிரசங்கங்களில் விளக்குவது உண்டு. இதையே சந்நியாசி பன்ஸாலி மேலே குறிப்பிட்டுள்ளார்.

**சந்நியாசி:** மாடியில் அல்ல, கீழே உள்ள அறையில் உட்கார்ந்திருக்கிறேன். நன்பர்கள் வருகிறார்கள், போகிறார்கள். அதையெல்லாம் கண்டு என் மனம் சஞ்சலம் அடைவதில்லை. நான் அமைதியாகவே இருக்கிறேன். யார் வருகிறார், யார் போகிறார் என்பது கூட எனக்குத் தெரியாது.

**காந்திஜி:** அத்தகைய சாதனை உண்மையான வெற்றியே ஆகும்.

யாத்திரிகரான எங்கள் சகோதரரை நாங்கள் இத்துடன் விட்டுச் சென்றோம். அவர் அடைந்துள்ள உன்னத நிலைக்கு நாங்கள் மானசிகமாக யாத்திரை சென்றோம். நமது அறிவுக்கு அப்பாற்பட்ட மனச் சாந்தி அவருக்கு ஏற்பட்டிருக்கிறதா என்பது எங்களுக்குத் தெரியாது. எனினும், புகழ் பெற்ற யாத்திரிகரான ஜான் பன்யனைப் போல், சந்நியாசியும் கீழ்க் கண்ட தத்துவத்தை உணர்ந்து மனச் சாந்தியை அடைந்துள்ளார் என்பதில் ஐயமில்லை.

"அடித்தளத்தில் இருப்பவன், விழுந்துவிடுவோமோ என்று பீதி அடைய வேண்டியதில்லை; அடக்கம் உள்ளவன் அகங்காரம் ஏற்பட்டுவிடுமோ என்று பயப்படவேண்டியதில்லை; பணிவு உள்ளவனுக்கு கடவுள் எப்போதும் வழிகாட்டியாக இருப்பார்."

—'ஹரிஜன்' - 13—4—1935

## (2)

இப்போது எங்களிடையே உள்ள சந்நியாசி நண்பரைப் பற்றிச் சென்ற வாரம் விவரமாகச் சித்திரித்திருந்தேன். அக் கதையையே இப்போது நான் மீண்டும் தொடர வேண்டும். அந்த சந்நியாசி வருடக் கணக்காக மௌனமாக இருந்துவருகிறார். காந்திஜியுடன் பேசுவதற்காகவே அவர் மௌனத்தைக் கைவிட்டார். அவரைத் துருவிக் கேள்விகள் கேட்டு அவரைப் பற்றிய விவரங்களை அறிந்து கொள்ளவேண்டும் என்ற ஆர்வத்தினால் காந்திஜி அவரை ஏராளமான கேள்விகள் கேட்கவில்லை. அவர் மீது காந்திஜிக்கு உள்ள மிதமிஞ்சிய அன்பே, காந்திஜி கேட்ட பல கேள்விகளுக்கும் காரணமாகும்.

**காந்திஜி:** நீங்கள் தியானத்தில் உட்கார்ந்திருக்கும்போது, அதற்குப் புறம்பான எண்ணங்களால் உங்களுடைய மனம் கலங்குவது உண்டா?

**சந்நியாசி:** ஒருபோதும் கலங்குவதில்லை.

**காந்திஜி:** பகலில் ஒருபோதும் கலங்குவதில்லையா?

**சந்நியாசி:** அப்படியல்ல. நான் தியானத்தில் ஈடுபடாதபோது, நமக்குள் நடந்த பேச்சுகளைப் பற்றி நான் எண்ணுகிறேன். உங்களுடைய கேள்விகளை எனக்குள் நானே அடிக்கடி கேட்டுக்கொள்ளுகிறேன்.

**காந்திஜி :** நீங்கள் கேட்டுக்கொள்ளுகிறீர்கள் அல்லவா? நல்லது, உங்களைச் சூழ்ந்துள்ள மக்களின் துன்பத்தை நீங்கள் பார்க்கும்போது, நீங்கள் மிகவும் மனச் சஞ்சலம் அடைவதாக அன்று கூறினீர்கள். அந்தத் துன்பத்தைக் குறைக்க சிறிதளவு உங்கள் பங்கைச் செய்ய வேண்டுமென உங்களுக்குத் தோன்றவில்லையா?

**சந்நியாசி :** தோன்றவில்லை; இவ்வாறு நான் கூறுவது விசித்திரமாக இருக்கலாம்.

**காந்திஜி :** அப்படியாயின், நீங்கள் மனச் சஞ்சலம் அடைவதன் அர்த்தமென்ன?

**சந்நியாசி :** மக்களின் துன்பத்தை நான் நன்கு உணருகிறேன். ஆனால், அவ்விஷயத்தில் எதுவும் செய்ய நான் சக்தியற்றவனாக இருப்பதையும் உணருகிறேன்.

**காந்திஜி :** உங்கள் காலில் ஒரு முள் தைத்தால், நீங்கள் அதை வெளியே எடுத்து எறிகிறீர்கள் அல்லவா?

**சந்நியாசி :** ஆமாம்.

**காந்திஜி :** உங்களுக்குப் பசி வந்தால், நீங்கள் சாப்பிடுகிறீர்கள் அல்லவா?

**சந்நியாசி :** ஆமாம், சாப்பிடுகிறேன்.

**காந்திஜி :** அப்படியாயின், மற்றொருவருடைய காலில் முள் தைத்தால், அதை வெளியே எடுக்க நீங்கள் உதவி புரிய வேண்டாமா? யாராவது ஒருவர் பசியால் துடித்துக்கொண்டிருந்தால், நீங்கள் அவருக்கு உணவு அளிக்க வேண்டாமா?

**சந்நியாசி :** சாத்தியமாயின் நான் அப்படியே செய்வேன்.

**காந்திஜி :** ஒருவர் நோயினால் சொல்லொணாத வேதனையை அனுபவிக்கிறார். அவருக்கு உபசரணை செய்ய உங்களைத் தவிர வேறு யாரும் இல்லை. அந் நிலையில் அவருக்கு நீங்கள் உதவி புரியமாட்டீர்களா?

**சந்நியாசி :** நான் உதவி புரிவேன்; ஆனால், அவருக்கு உதவியாக நான் அதிகம் எதுவும் செய்ய முடியாது. எனது திக்கற்ற நிலைமையை நான் ஒப்புக்கொள்ள வேண்டும்.

**காந்திஜி :** நிச்சயமாக, உங்களைப் போன்ற ஒருவர் அவ்வளவு எளிதாகப் பொறுப்பைத் தட்டிக் கழித்துக் கொண்டுவிட முடியாது.

இதற்குப் பதிலாக சந்நியாசி கவர்ச்சியாகப் புன்முறுவல் செய்தார்.

**காந்திஜி:** உங்களைச் சுற்றியுள்ளவர்களின் துன்பம் உங்கள் மனத்தை வாட்டுகிறது என்பதிலிருந்தே நாம் ஆரம்பித்தோம். உண்மையான, மிகவும் கோரமான மரண நடனத்தை நீங்கள் பார்த்ததாக நீங்களே கூறினீர்கள்.

**சந்நியாசி:** ஆமாம், நான் கூறினேன். ஆனால், அவ்விஷயத்தில் நான் எதுவும் செய்ய சக்தியற்றவனாக இருக்கிறேன்.

**காந்திஜி:** எல்லா முயற்சிகளையும் செய்து பார்த்த ஒருவர் மாத்திரமே, தாம் அதற்குமேல் எதுவும் செய்ய இயலாது என்று கூறலாம். முடமான ஒருவரை அவர் கவனிக்க வேண்டியிருந்தால், தமது சக்தி முழுவதையும் உபயோகித்து அவரைச் சரிவர கவனிக்க வேண்டும். இந்த ஒரு தொண்டு மானிட வர்க்கத்திற்கே செய்யும் தொண்டாகும்.

**சந்நியாசி:** கஷ்டப்படுவோரின் துன்பத்தைத் துடைக்கும் விஷயமாக மாத்திரம் எனது முழு கவனத்தையும் செலுத்துவதென்பது முடியாத காரியமாகும். அவ்விஷயமாக சிறிதளவு என்னால் இயன்றதைச் செய்வேன். எனினும், சீக்கிரத்தில் நான் சக்தியற்றவன் என்ற எண்ணம் எனக்கு ஏற்பட்டுவிடும்.

**காந்திஜி:** தியாகத்தினாலும் தொண்டினாலுமே இந்த உலகம் பாதுகாக்கப்பட்டு வருகிறது. கீதை கூறுவதுபோல், 'ஆண்டவன் ஜீவன்களைச் சிருஷ்டித்து, தியாகம் என்ற கடமையை அவர்கள் நிறைவேற்ற வேண்டும் என்றும் விதித்துள்ளார்.'

**சந்நியாசி:** அதை நான் அறிவேன். ஆனால், தியானமும் கடவுள் வழிபாடும்கூட மிகப் புனிதமான ஒரு கடமை அல்லவா?

**காந்திஜி:** தியானமும் வழிபாடும், நகைகளைப்போல் இரும்புப் பெட்டியில் வைத்துப் பூட்ட வேண்டிய பிரத்தியேகமான பொருள்கள் அல்ல. நம்முடைய ஒவ்வொரு செயலிலும் அவை மிளிரவேண்டும். எனினும், இதற்கு இன்று பதிலளிக்க வேண்டாம். இன்று நான் உங்களை வற்புறுத்தமாட்டேன். இதைப் பற்றி நீங்கள் சிந்திக்கத் தொடங்க வேண்டும் என்றே நான் விரும்புகிறேன். நீங்கள் எப்போதும் என் சிந்தனையில் இருந்து வருகிறீர்கள் என்பதை நீங்கள் அறிவீர்கள்.

காந்திஜிதான் எப்போதும் அந்த நண்பரைப் பார்க்கச் செல்லுவார். ஆனால், இதற்கு மாறாக, மறுநாள் காலையில் அந்த நண்பர் காந்திஜியைக் காண வந்தார். தம்மைப்பற்றி காந்திஜி கவலைப்படும்படி தாம் நடந்து கொள்ளுவதைக் குறித்து வேதனை அடைவதாகவும், எனினும் தமது வழியை மாற்றிக்கொள்ளும் சக்தி தமக்கு இல்லை என்றும் அவர் காந்திஜியிடம் கூறினார்.

காந்திஜி : நான் தங்களைப் பற்றிச் சிறிதும் கவலைப்படவில்லை. எனது உணர்ச்சிகளை உங்களுடன் பகிர்ந்துகொள்ளவேண்டும் என்று எண்ணியே, உங்களை நான் அக் கேள்விகள் கேட்டேன்.

சந்நியாசி : என்னைக் கைவிட்டுவிட வேண்டுமென தயவுசெய்து நினைக்காதீர்கள்.

காந்திஜி : உங்களைக் கைவிட வேண்டுமென எண்ணமாட்டேன். உங்கள் இதயம் ஒப்புக்கொள்ளாத எதையும் நீங்கள் செய்யக்கூடாது என்பதே எனது விருப்பமாகும். அதே சமயத்தில், அதைச் செய்யும்படி நான் உங்களை மன்றாடிக் கேட்டுக்கொள்ளலாம் அல்லவா? எனினும், நீங்கள் தனிமையாக ஒரு குகையில் இருந்தாலும் அல்லது கூட்டத்தின் மத்தியில் இருந்தாலும், உங்கள் சம்பந்தப்பட்டவரையில் எல்லாம் சரியாகவே இருக்கும் என்பது எனது நிச்சயமான அபிப்பிராயம்.

மறுநாள் மாலையிலும், காந்திஜிக்கும் சந்நியாசிக்கும் தொடர்ந்து சம்பாஷணை நடந்தது.

காந்திஜி : நான் கூறியவையெல்லாம் உங்கள் உறுதியை மாற்றவில்லை என்று நீங்கள் கூறிவிட்டீர்கள். எனினும், மீண்டும் அதே விஷயத்தைப் பற்றியே மேற்கொண்டு சிறிது நேரம் பேச நீங்கள் என்னைத் தயவு செய்து அனுமதிக்கவேண்டும்.

சந்நியாசி : அவ்விதம் பேச உங்களுக்குப் பூரண உரிமையுண்டு, பாபு. என் மனம் எந்த வழியில் போய்க் கொண்டிருக்கிறது என்பதை உங்களுக்குச் சொல்லலாம் என்றே நான் எண்ணினேன்.

காந்திஜி : ஆமாம், உங்கள் மனத்தை நான் அறிவேன். உங்களுடைய மனத்தை அறிந்திருந்தும்கூட, உங்களுடைய உதாரணத்தைப் பின்பற்ற வேண்டும் என்ற எண்ணம் எனக்கு ஏன் ஏற்படவில்லை? தேசத்தின் ஒரு கோடியிலிருந்து மற்றொரு கோடி வரையில் உங்களைப் போல் கால்நடையாக நடந்து செல்ல வேண்டும் என்பதே எனது ஆவலாகும். இன்னும், எனது உடல் இடம் கொடுத்தால், பச்சை மாவையும் வேப்பிலையையும் தின்று வாழ வேண்டும் என்பதும் எனது விருப்பமாகும். எனினும், உங்கள் வாழ்க்கை முறையில் ஒரு பெரும் குறையை நான் காண்கிறேன். சத்தியத்தை நாடுவோன் என்ற முறையில், உங்களுடையதுதான் உண்மையான வழி என நான் காண்பேனாயின், அதை ஏற்றுக்கொள்ளுவதே எனது கடமையாக இருக்கும். அதற்கு மாறாக, அதில் ஏதோ பெரும் தவறு இருப்பதாக நான் கருதுவேனாயின், அதை உங்களுடைய கவனத்திற்குக் கொண்டு வருவதே எனது கடமையாகும். நான் உங்களிடம் கூறியதைப் போல், உங்களுடைய உணவான மாவைப்

பற்றியோ, வேப்பிலைகளைப் பற்றியோ நான் ஆட்சேபிக்க வில்லை. நமது வாழ்க்கையின் மூலாதாரமான நிபந்தனையை, அதாவது நம்முடன் பிறந்த தியாகக் கொள்கையை நீங்கள் அலட்சியம் செய்வதைத்தான் என்னால் அறிந்துகொள்ள முடியவில்லை.

**சந்நியாசி:** அதை நீங்கள் இன்னும் சிறிது தெளிவாக விளக்க வேண்டுமென விரும்புகிறேன்.

**காந்திஜி:** 'தினசரி தியாகம் செய்யாமல் சாப்பிடுகிறவன் தனது உணவைத் திருடியவனாகிறான்' என்று கீதை கூறுவதை நீங்கள் அறிவீர்கள்.* உணவுக்காக யாசகம் செய்வது நல்லதுதான். எனினும், தியாகம் செய்த பின்தான் உணவைச் சாப்பிடவேண்டும்.

**சந்நியாசி:** நான் அதைக் கேட்டிருக்கிறேன். அன்றொரு நாள் நீங்கள் கூறியவற்றைப் பற்றியே நாள் முழுவதும் சிந்தித்துக் கொண்டிருந்தேன். நான் யாதொரு வேலையும் செய்யாததால், மாவையும் வேப்பிலைகளையும் உண்ண எனக்கு உரிமை உண்டா என்ற வியப்பு எனக்கு ஏற்பட்டது.

**காந்திஜி:** நீங்கள் அதைக் கேள்விப்பட்டிருக்கிறீர்கள். ஆனால், உலகம் அக் கொள்கையை ஒப்புக்கொண்டு, அதை நடைமுறையில் அனுசரித்தும் வருகிறது. ஜைன முனிவர்களும் சந்நியாசிகளும் அப்படித்தான். அவர்கள் பிட்சை வாங்கியே வாழ்கிறார்கள். தாங்கள் மக்களுக்குக் கற்பிப்பதன் மூலம் போதிய தியாகம் செய்வதாக எண்ணி, அவர்கள் தாங்கள் பெறும் உணவைச் சாப்பிடுகிறார்கள். ஆனால், அவர்கள் அவ்விதம் கருதுவது தவறு என்பதே எனது அபிப்பிராயம். ஆன்மிகக் கல்வி அளிக்கவேண்டியது அவர்களுடைய கடமையாகும். அதே சமயத்தில் அவர்கள் உடலால் உழைத்தும் தியாகம் செய்ய வேண்டும். தங்களுடைய தியாகத்திற்கு வெகுமதியாக அவர்கள் உணவை எதிர்பார்க்கக் கூடாது. உண்மையான பிராம்மணர்களைப் போலவே அவர்களும் மக்கள் தருமமாக அளிக்கும் பிட்சையைக் கொண்டு வாழ வேண்டும். எனவே, நான் உங்களுக்கு மீண்டும் கூறுவதெல்லாம் என்னவெனில், இப்போது உங்களுக்குள்ள வீண் பிரமையை உதறித் தள்ளிவிடவேண்டும். யாதொரு வேலையும் செய்யாமல் இருப்பது துறவு ஆகாது. அது சோம்பேறித்தனமே யாகும். உலகத்தின் அனுபவமும் இவ்விஷயமாக நான் எழுதியவற்றிற்கு ஆதரவாகவே இருக்

---

* தைர் தத்தான் அப்ரதாயைப்ய: யோ புங்தே ஸ்தேன ஏவ ஸ:

கீதை அத்தியாயம் – 3, சுலோகம் - 12

இதன் கருத்து:— கடவுளின் அருளாலேயே உணவு கிடைக்கிறது. இந்த உணவைக் கடவுளுக்கு அர்ப்பணம் செய்யாமல் சாப்பிடுகிறவன் திருடனாகிறான்.

கிறது. அதற்கு, என் சொந்த வாழ்க்கையும் சிறந்த உதாரணமாகும். என் மீது உள்ள அன்பினாலேயே நீங்கள் உங்களுடைய யாத்திரையை முடித்துக்கொண்டு இங்கே வந்தீர்கள். கடவுளே உங்களை இங்கே அனுப்பினார். உங்களுடைய அன்பை நான் சிறந்த முறையில் எப்படி ஈடு செய்வது? உங்களுக்கு நல்ல உணவு அளிப்பதன் மூலம் அல்ல. உங்களுக்கு நல்ல உணவு அளிக்க நான் விரும்ப மாட்டேன். அளித்தாலும் நீங்கள் அதை லட்சியம் செய்ய மாட்டீர்கள். அப்பழுக்கற்ற தூய்மையான அன்பு எதைக் கொடுக்கும்படி இதயத்திற்குக் கட்டளையிடுகிறதோ, அதையே நான் உங்களுக்கு வாரிக் கொடுக்கவேண்டும்.

**சந்நியாசி:** நான் தங்களுக்கு மிகவும் நன்றியுள்ளவனாக இருக்கிறேன். நீங்கள் கூறியதையெல்லாம் நான் சிந்தனை செய்து பார்க்கவேண்டும்.

மறுபடியும் அவர்களுக்குள் ஓர் உரையாடல் நடந்தது. இதைத் தாற்காலிகமாக அவர்களுக்குள் நடந்த இறுதிச் சம்பாஷணையாகக் கருதலாம்.

**காந்திஜி:** நல்லது, நான் கூறியதைச் சிந்தனை செய்து பார்த்தீர்களா?

**சந்நியாசி:** சிந்தனை செய்து பார்த்தேன். எனினும், யாதொரு பலனும் இல்லை என்பதை நான் ஒப்புக்கொள்ள வேண்டும். உண்மை என்னவெனில், சென்ற பத்து ஆண்டுகளாக எனது கருத்துக்கள் இதே ரீதியில் சென்று கொண்டிருக்கின்றன. நான் இங்கிலாந்தில் இருந்தபோது கூட, திரும்பி வந்ததும் சந்நியாசத்தை மேற்கொள்ளவேண்டுமென எனக்கு நானே சொல்லிக் கொண்டேன். அதன் பின் இத்தனை ஆண்டுகளாக பழைய கொள்கை இன்னும் அதிக உறுதியே அடைந்திருக்கிறது.

**காந்திஜி:** நீங்கள் நீண்ட காலமாக அத்தகைய உறுதியுடன் இருந்து வருவதை நான் அறிவேன்.

**சந்நியாசி:** ஆமாம். அதை நான் மாற்றிக்கொள்ளுவதற்கு யாதொரு காரணமும் ஏற்படவில்லை. இவ்விதம் நான் கூறுவது மரியாதைக் குறைவாக இருந்தால், என்னை மன்னிக்கக் கோருகிறேன்.

**காந்திஜி:** மரியாதைக் குறைவு என்ற பேச்சே இல்லை. மனம் விட்டுப் பேசுவது மரியாதைக்குறைவெனில், என்னிடம் அந்தக் குணம் ததும்பி நிற்கின்றது. இல்லை, மனம் விட்டு நீங்கள் பட்டவர்த்தனமாகப் பேசிக் கொண்டிருப்பதைக் குறித்து நான் மகிழ்ச்சியடைகிறேன். எனினும், இத்துடன் உங்களை விட்டுவிடுகிறேன். மேற்கொண்டு உங்களைத் தொல்லைப் படுத்த நான் விரும்பவில்லை.

—'ஹரிஜன்' – 20–4–1935

# 8. பணிவு

## 1

## மகாசமுத்திரத்தில் ஒரு துளி

1930-இல் எராவ்டா மத்திய சிறையிலிருந்து சாபர்மதி ஆசிரம வாசிகளுக்கு காந்திஜி எழுதிய வாரக்கடிதம் வருமாறு :

பணிவை, தனியாக அனுசரிப்பதென்பது முடியாத காரியம். ஏனெனில், தீர்க்காலோசனையுடன் பயிற்சி செய்து கொள்ளுவதற்கு அது இடம் அளிப்பதில்லை. எனினும் அகிம்சைக்கு, பணிவு இன்றியமையாத ஒரு சோதனையாகும். அகிம்சையை மேற்கொண்டுள்ள ஒருவரிடத்தில் பணிவு, அவரது இயல்பின் ஓர் அம்சமாகிவிடுகிறது.

சத்தியாக்கிரக ஆசிரமத்தின் விதிகளும், கட்டுப்பாடுகளும் அடங்கிய பூர்வாங்க நகல்கள், காலஞ் சென்ற குருதாஸ் பானர்ஜி உள்பட நண்பர்களுக்கெல்லாம் அனுப்பப்பட்டன. ஆசிரம வாசிகள் அனுசரிக்கவேண்டிய விதிகளில் பணிவிற்கு ஓர் இடம் அளிக்கவேண்டும் என்று அவர் யோசனை கூறினர். அப்போது இந்த யோசனையை அங்கீகரிக்க முடியவில்லை. மேலே நான் கூறியிருப்பதே அதற்குக் காரணம்.

அனுசரிக்கவேண்டிய ஆசிரம விதிகளில் பணிவும் ஒன்றல்ல. எனினும், மற்ற எந்த விதியையும் போல், மற்ற எந்த விதியையும் காட்டிலும்கூட பணிவு அதிக முக்கியமானது என்பதில் ஐயமில்லை. ஆனல், பயிற்சியின் பலனக யாருக்கும் எக்காலத்திலும் பணிவு ஏற்பட்டதில்லை. சத்தியத்தையும், அன்பையும் பயிற்சி செய்துகொள்ள முடியும். பணிவைப் பயிற்சி செய்து கொள்ளுவது கபட வேடத்தைப் பயிற்சி செய்வது போன்றதே. இங்கே பணிவு என்பதை, பிறருடன் பழகும் விதம் அல்லது மரியாதை இவற்றுடன் குழப்பிக்கொள்ளக் கூடாது. சிற்சில சமயங்களில் ஒருவர் மற்ரெருவருடைய முன்னிலையில் சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கலாம். அவ்விதம் வணங்குகிறவரின் இதயத்தில் மற்றவர் மீது துவேஷம் ததும்பிக்கொண்டிருக்கும். எனவே, அது பணிவு அல்ல, தந்திரமேயாகும். ஒருவர் ராம நாமத்தை ஜபிக்கலாம் அல்லது நாள் முழுவதும் ஜபமாலையை உருட்டிக் கொண்டிருக்கலாம்; சமூகத்தில் ஒரு ரிஷியைப்போல் நடமாடலாம். ஆனல், அவரது உள்ளத்தில் சுயநலம் இருந்தால், அவர் பணிவு உள்ளவர் அல்ல, பாசாங்கு செய்யும் வேடதாரியே ஆவார்.

ஓர் அடக்கமான மனிதருக்கு, தாம் பணிவுள்ளவராக இருக்கிரேம் என்பதே தெரியாது. சத்தியம் முதலியவற்றை அளவிடலாம். ஆனல், பணிவை அளவிடமுடியாது. உடன் பிறந்த பணிவை ஒரு காலத்திலும் மறைத்துவைக்க முடியாது. எனினும்,

பணிவு உள்ளவர் தம்மிடம் பணிவு இருப்பதை அறிய மாட்டார். இதற்கு உதாரணமாக, வசிஷ்டரையும் விசுவாமித்திரரையும் பற்றிய கதையைக் கூறலாம். பணிவு, தமக்கு எவ்விதத் தகுதியும் இல்லை என்பதை ஒருவர் உணரும்படி செய்ய வேண்டும். நம்மிடம் ஏதோ தகுதி இருக்கிறது என்று நாம் கற்பனை செய்து கொள்ள முற்பட்ட உடனேயே, அது அகங்கார மாகி விடுகிறது. விதிகளைப் பின்பற்றி நடக்கும் ஒருவர், அதைக் குறித்துப் பெருமை அடைவாராயின், அதன் மதிப்பு எல்லாம் போகாவிட்டாலும், பெரும் அளவு போய்விடுகிறது. தமது உயர்ந்த குணத்தைக் குறித்துப் பெருமை அடைபவர், பெரிதும் சமூகத்திற்கே ஒரு சாபத்தீடாகிவிடுகிறார். அத்தகைய தற் பெருமையைச் சமூகம் பாராட்டாது; அவருக்கும் அதனால் லாபம் எதுவும் ஏற்படாது. இந்த உலகத்தில் உள்ள எல்லா ஜீவராசி களும் கேவலம் ஓர் அணுவைப் போன்றவையே என்பதை, சிறிது சிந்தித்துப் பார்த்தால் நாம் நிச்சயமாக உணர்ந்து கொள்ளலாம். இந்த உடலில் நமது வாழ்க்கை தாற்காலிகமானதே. ஆம், ஆதி அந்தமற்ற காலத்தினிடையே நூறு ஆண்டுகள் எம்மாத்திரம்? எனினும், அகங்காரமாகிய சங்கிலியை நாம் தகர்த்து, மானிட வர்க்கமாகிய மகாசமுத்திரத்தில் கலந்து கொண்டு விட்டால், அதன் சிறப்பில் நாமும் பங்கு பெறுகிறோம். நமக்கும் கொஞ்சம் தகுதி உண்டு என்று நாம் கருதுவது, கடவுளுக்கும் நமக்கும் இடையே ஒரு தடையை ஏற்படுத்திக் கொள்ளுவதாகும். ஓரளவு தகுதியுடையவர்தான் என்ற எண்ணத்தை ஒழித்துவிட்டால், நாம் கடவுளுடன் ஒன்றாகிவிடுகிறோம். சமுத்திரத்தில் உள்ள ஒரு துளி, சமுத்திரத்தின் பெருமையில் பங்கு எடுத்துக் கொள்ளுகிறது. ஆனால், சமுத்திரத்திற்கு அப்பால் உள்ள தரையில் ஒரு துளி விழுமாயின் அதன் தனி வாழ்வு நீடிப்ப தில்லை, அது உடனே காய்ந்துவிடுகிறது. இந்த உலக வாழ்க்கை வெறும் நீர்க்குமிழி போன்றதே என்று நாம் கூறுவது, மிகை படக் கூறுவதல்ல.

தொண்டு செய்யும் ஒரு வாழ்க்கை பணிவுடன் கூடியதாக இருக்கவேண்டும். பிறருக்காகத் தமது உயிரைத் தியாகம் செய்பவருக்கு, இந்த உலகில் தமக்கென்று ஓரிடத்தை ஒதுக்கி வைத்துக்கொள்ள நேரம் இருக்காது. ஒன்றும் செய்யாமல் இருப்பதுதான் பணிவு என்று ஹிந்து மதத்தில் தவறாகக் கருதப் படுகிறது. முற்றிலும் மானிட வர்க்கத்தின் நலனுக்காக இடை விடாமலும் மிகக் கடினமாகவும் உழைப்பதே உண்மையான பணிவாகும். கடவுள் ஒரு விநாடிகூட ஓய்வின்றி இடைவிடாது செயலில் ஈடுபட்டிருக்கிறார். நாம் கடவுளுக்குத் தொண்டு செய்வ தாயின், அல்லது கடவுளுடன் ஒன்றுபடுவதாயின், அவரைப் போலவே நாமும் அலுப்புச் சலிப்பின்றி இடைவிடாது செயலில் ஈடுபடவேண்டும். சமுத்திரத்திலிருந்து தனியாகப் பிரிக்கப்பட்ட துளிக்கு ஒரு விநாடி ஓய்வு கிடைக்கலாம்; ஆனால், சமுத்திரத் தில் உள்ள துளிக்கு ஓய்வு என்பதே கிடையாது. நமது நிலையும்

அதுவேதான். கடவுளின் உருவத்தில் இருக்கும் மகா சமுத்தி ரத்தில் நாம் ஒன்ருகக் கலந்த உடனேயே, நமக்கு ஓய்வு என்பதே இராமற்போய்விடுகிறது; அந் நிலையில் நமக்கு ஓய்வு எடுத்துக் கொள்ளவேண்டிய தேவையும் இல்லை. அப்போது நமது தூக்கம் கூட செயலாகிவிடுகிறது. ஏனெனில், நமது இதயத்தில் கடவுளைப் பற்றிய சிந்தனையுடன் நாம் தூங்குகிருேம் அல்லவா? இந்த ஓய்வற்ற தன்மையே உண்மையான ஓய்வாக உருவாகிறது. ஒருபோதும் நிற்காத இந்தக் கிளர்ச்சியே, வருணிக்க முடியாத மனச் சாந்திக்கு சாவியாக அமைகிறது. முற்றிலும் சரணுகதி என்ற இந்த மகோன்னத நிலையை வருணிப் பது கடினமாகும். எனினும், அது மானிடரின் அனுபவத்திற்கு அப்பாற்பட்டது அல்ல. ஆன்மாவைக் கடவுளிடம் அர்ப்பணம் செய்த பலர், அந்த நிலையை அடைந்திருக்கிருர்கள். எனவே, நாமும் அந்த நிலையை அடையலாம். ஆசிரம வாசிகளாகிய நாம், இந்த லட்சியத்தையே நம் முன் வைத்துக் கொள்ளவேண்டிய வர்களாக இருக்கிருேம். நமது எல்லா விதிகளும், செயல்களும் நாம் அந்த லட்சியத்தை அடைவதற்கு உதவி செய்வதாக இருக் கின்றன. நம்மிடத்தில் சத்தியம் இருந்தால், நம்மை அறியாம லேயே நாம் ஒரு நாள் அந்த லட்சியத்தை அடைந்துவிடுவோம்.

'எராவ்டா மந்திர்' - 12—ஆம் அத்தியாயம்.

# 2

# ஒரு சாபத்தீடு

'நான்', 'என்னுடையது' என்ற அகங்காரமே நமக்கு ஒரு சாபத்தீடாக இருந்துவருகிறது. மதம், அரசியல், பொருளா தாரம் முதலிய துறைகளில் 'நான்' என்பதையும், 'என்னுடை யது' என்பதையும் அகற்றிவிட்டால், நாம் சீக்கிரத்தில் விடுதலை பெற்று, சொர்க்கத்தை பூமிக்குக் கொண்டு வந்துவிடுவோம்.

—'எங் இந்தியா'—23—9—1926

# 3

# பணிவை மேற்கொள்க

வங்காளத்தில் உள்ள பொதுத் தொண்டர்களுடன் நான் பேசிக் கொண்டிருந்தபோது, ஓர் இளைஞரையும் சந்திக்க நேர்ந் தது. பொதுத் தொண்டராக அங்கீகரிக்கப்பட வேண்டும் என் பதற்கான அவரது சாதனைகளுள், அவரும் அவரது சக ஊழியர் களும் அனுசரித்துவரும் பிரம்மச்சரியத்தையும் அவர் எடுத்துக் குறிப்பிட்டிருந்தார். அந்த சாதனைகளை அவர் எடுத்துக் கூறிய

விதமும், நிச்சயமாகவும் துணிச்சலுடனும் அவர் பேசியதும் எனக்கு வெறுப்பை உண்டாக்கின. தாம் அறியாத விஷயங் களைப் பற்றியே அவர் பேசுவதாக நான் கருதினேன். அவருடைய சாதனைகளை அவரது சக ஊழியர்களே மறுத்துவிட்டார்கள். அந்த இளைஞரை நான் குறுக்குக் கேள்விகள் கேட்டபோது, தமது சாதனைகளை ருசுப்படுத்த முடியாது என்பதை அவரே ஒப்புக்கொண்டார். ஒருவர் தமது உடலினால் பாவம் செய்யா விட்டாலும்கூட, அறிந்தே மனத்தினால் பாவம் செய்பவர் பிரம் மச்சாரி அல்ல. மிகவும் அழகான பெண்ணைப் பார்க்கும்போது தமது மனம் விகாரமடையாமல் இருக்க முடியாதவரும் பிரம்மச் சாரி அல்ல. ஒருவர் முற்றிலும் நிர்ப்பந்தம் காரணமாக தமது உடலைக் கட்டுப்பாட்டிற்குள் வைத்துக் கொள்ளலாம். அவ்விதம் செய்வது நல்லதே; எனினும் அவரும் பிரம்மச்சாரியாக மாட் டார். மனம் போனபடி உபயோகிப்பதன் மூலம் புனிதமான சொற்களை நாம் இழிவுபடுத்தக் கூடாது. உண்மையான பிரம்மச் சரியம், ருசுப்பிக்கக் கூடிய முக்கியமான பலன்களைக் கொடுக்கும். அந்த ஒழுக்கத்தை நடைமுறையில் அனுசரிப்பது கஷ்டமாகும்.

பலர், அதைப் பின்பற்ற முயற்சிக்கிறார்கள்; ஆனால், வெகு சிலரே அதில் வெற்றி பெறுகிறார்கள். சந்நியாசிகளின் உடையில் நாட்டைச் சுற்றிவருவோர் பெரும்பாலும், நடமாடும் சாதாரண மனிதரைப்போலவே உண்மையில் பிரம்மச்சாரிகளாக இருப்ப தில்லை. அத்தகைய சந்நியாசிகளைக் காட்டிலும் தெருவில் நட மாடும் சாதாரண மனிதர் சிறந்தவராவார். ஏனெனில், அவர் சந்நியாசிகளைப்போல் தாம் பிரம்மச்சாரி என்று பாசாங்கு செய்வ தில்லை அல்லவா? தம்முடைய சோதனைகளையும், தீய ஆசை களுக்குத் தாம் மயங்கிவிடுவதையும், அந்த ஆசைகளை எதிர்த்து நிற்பதில் தாம் பல தடவைகளில் வெற்றிபெற்றிருப்பதையும், தாம் வீரத்தனமாக முயற்சிசெய்தும்கூட தாம் அடைந்த சில வீழ்ச்சிகளையும் தம்மைப் படைத்தவர் அறிகிறார் என்ற திருப்தி சாதாரண மனிதருக்கு இருக்கிறது. தமது வீழ்ச்சிகளையும் கவனித்து உலகம் தம்மைப்பற்றித் தீர்மானித்தால் போதும் என்ற திருப்தியும் அவருக்கு இருக்கிறது. ஆனால், அவர் ஆசை களை எதிர்த்து நின்று தாம் பெற்ற வெற்றிகளை, ஒரு கருமி தமது செல்வத்தை வைத்துக் கொள்ளுவதுபோல், பொக்கிஷங்களைப் போல் ரகசியமாக வைத்துக்கொள்ளுகிறார். அவர் மிகவும் அடக்கம் உள்ளவரானதால், அதை எல்லோரும் அறிய அவர் விளம்பரப் படுத்திக் கொள்ளுவதில்லை. அத்தகைய ஒருவருக்கு விமோசனம் ஏற்படும் என்ற நம்பிக்கை இருக்கிறது. கட்டு திட்டம் என்பதன் அரிச்சுவடியையும் அறியாத, தனக்குத்தானே திருப்தியடைந்துள்ள சந்நியாசிகளுக்கு விமோசனம் ஏற்படும் என்ற நம்பிக்கைக்கு இடமில்லை. சந்நியாசி உடை அணியாத, ஆனால், தியாகம் என்றும் பிரம்மச்சரியம் என்றும் பிதற்றித் திரியும் பொதுத் தொண்டர்களால் ஆபத்து ஏற்படக்கூடும். அவர்கள் அத்தகைய நடவடிக்கையால் தங்களைத் தாங்களே

இழிவுபடுத்திக்கொள்ளுவதுடன், தங்களுடைய தொண்டின் லட்சியத்திற்கும் அவமதிப்பு உண்டாகும்படி செய்து விடுகின்றனர்.

சாபர்மதி ஆசிரம வாசிகளுக்கு வழிகாட்டியாக இருப்பதற்காக நான் கட்டுதிட்ட விதிகளைத் தயாரித்தபோது, அதன் நகல்களை நண்பர்களுக்கு அனுப்பினேன். அவற்றையொட்டி அவர்களுடைய ஆலோசனையையும், ஆட்சேபணையையும் கேட்டிருந்தேன். காலஞ்சென்ற சர் குருதாஸ் பானர்ஜிக்கும் அதன் நகல் ஒன்று அனுப்பப்பட்டிருந்தது. நகல் வந்து சேர்ந்ததாக அவர் எழுதியிருந்த கடிதத்தில், விதிகளில் குறிப்பிடப்பட்டிருந்த பிரதிக்ஞைகளில் பணிவையும் சேர்த்துக் கொள்ளும்படி அவர் ஆலோசனை கூறியிருந்தார். இளம் தொண்டர்களுக்கு பணிவு தேவையாக இருக்கிறது என்று அவர் தமது கடிதத்தில் குறிப்பிட்டிருந்தார். அவரது ஆலோசனையை நான் மதிக்கிறேன்; பணிவு அவசியமானது என்பதை நான் பூரணமாக உணர்ந்துள்ளேன்; எனினும், அதை ஒரு பிரதிக்ஞையாகக் குறிப்பிடுவது அதன் சிறப்பை இழிவுபடுத்துவதாகும் என்று அவருக்கு நான் எடுத்துக் கூறினேன். சத்தியம், அகிம்சை, பிரம்மச்சரியம் முதலியவற்றைப் பயிற்சி செய்வோர் பணிவுடன் இருக்கவேண்டும் என்பதைச் சொல்ல வேண்டியதில்லை. பணிவு இல்லாத சத்தியம் இறுமாப்பான கேலிக் கூத்தேயாகும். சத்தியத்தைப் பயிற்சி செய்துகொள்ள விரும்புவோர், அது எவ்வளவு கடினமானது என்பதை அறிவார். அவரது 'வெற்றிகளை' உலகம் போற்றிப் பாராட்டலாம். ஆனல், அவரது வீழ்ச்சிகளைப் பற்றி உலகத்திற்கு ஒன்றுமே தெரியாது. உண்மையுள்ள ஒரு மனிதர் பண்படுத்தப்பட்ட ஒரு நபராவார். எனவே, அவர் பணிவுடன் இருக்கவேண்டியது அவசியமாகும். தனது விரோதி என்றுதான் கூறும் நபர் உள்பட உலகம் முழுவதையும் நேசிக்க விரும்பும் ஒருவர், தம்முடைய சுய பலத்தினல் அவ்விதம் செய்வது சாத்தியமல்ல என்பதை அறிவார். அகிம்சையின் தத்துவங்களை அவர் அறிந்து கொள்ளுமுன், அவர் தம்மை வெறும் தூசிக்குச் சமமாகக் கருதவேண்டும். இல்லாவிடில், அவரது நிலை சூன்யமாகி விடும். கண்களை நேர்மையான வழியில் செலுத்துபவரும், ஒவ்வொரு பெண்ணையும் தமது சொந்த சகோதரியையோ அல்லது தாயையோ போல் கருதுபவருமான ஒருவர், தம்மை தூசியைக் காட்டிலும் கேவலமாக எண்ண வேண்டும். அவர் செங்குத்தான ஒரு பாறையின் உச்சியில் நிற்கிருர். அவர் தலையைக் கடுகளவு அசைத்தாலும், பாதாளத்தில் விழுந்துவிடுவார். அவர், தனது நேர்மையை தனக்குள்ளே கூடக் கூறிக் கொள்ளத் துணியமாட்டார். ஏனெனில், அடுத்த விநாடி தனக்கு என்ன நேரக்கூடும் என்பது அவருக்குத் தெரியாது அல்லவா? தற்பெருமை நாசத்திற்கும், அகங்காரம் வீழ்ச்சிக்கும் அறிகுறி என்பதை அவர் அறிவார். யாரிடத்தில் 'நான்' என்ற அகங்காரம் இருக்கிறதோ, அவர் கடவுளை நேருக்கு நேராகக் காண முடியாது.

ஒருவர் கடவுளைக் காண வேண்டுமாயின், தான் பூஜ்யமாகிவிட வேண்டும். சூறாவளியால் ஆட்டிவைக்கப்படும் இந்த உலகில், 'நான் வெற்றி பெற்றுள்ளேன்' என்று யார்தான் துணிந்து கூற முடியும்? ஒருபோதும் நாம் வெற்றிபெறுவதில்லை; நம்மிடத்தில் உள்ள கடவுளே வெற்றி பெறுகிறார்.

எனவே, இந்த தார்மிகச் சிறப்புகளின் மதிப்பை நாம் குறைத்துவிடாமல் இருப்போமாக. அதன் பலனாக, நாம் எல்லோருமே அந்தச் சிறப்புகளுக்கு உரியவர்களாகும் ஆற்றலைப் பெறலாம். ஸ்தூல உலகில் எது உண்மையோ அது ஆன்மிக உலகிலும் உண்மையாகும். உலகாயதமான ஓர் யுத்தத்தில் வெற்றி பெறுவதற்காக ஐரோப்பா, சென்ற யுத்தத்தின்போது பல லட்சக்கணக்கான உயிர்களைப் பலி கொடுத்தது. தாற்காலிகமான ஒரு காரியத்திற்காக அத்தனை உயிர்களைப் பலி கொடுத்திருக்கும்போது, ஆன்மிகப் போரில் பல லட்சக்கணக்கானவர்கள் அழிய வேண்டும் என்பதில் என்ன ஆச்சரியம் இருக்கிறது? அதன் பலனாக, குற்றம் குறையற்ற பூரணமான ஓர் உதாரணம் உலகத்திற்குக் கிடைக்கும் அல்லவா? மிக மிகப் பணிவுடன் அவ்விதம் முயற்சி செய்வது மாத்திரமே நமது கடமையாகும்.

இந்த உயர்ந்த தார்மிகச் சிறப்புகளைப் பயிற்சி செய்து கொள்ளுவதே நாம் அடையும் வெகுமதியாகும். அவற்றில் ஏதாவதொன்றைக் கொண்டு பணம் திரட்ட முற்படுபவர், தமது ஆன்மாவை இழந்தவராகிறார். தார்மிகச் சிறப்புகள் வியாபாரம் செய்யும் பொருள்கள் அல்ல. எனது சத்தியம், எனது அகிம்சை, எனது பிரம்மச்சரியம் முதலியன, எனக்கும் என்னைப் படைத்தவருக்கும் இடையே உள்ள விஷயங்கள் ஆகும். அவை வர்த்தகப் பொருட்கள் அல்ல. அவற்றைக் கொண்டு வியாபாரம் செய்யத் துணியும் எந்த இளைஞரும் ஆபத்திற்கு உள்ளாவார். இவற்றையெல்லாம் சீர்தூக்கிப்பார்க்கும் தராசோ, சாதனங்களோ உலகத்தில் இல்லை. அவை ஆராய்ச்சிக்கும் பரிசீலனைக்கும் உட்படா. எனவே, தொண்டர்களான நாம் அவற்றை நம்முடைய சொந்தத் தூய்மைக்காகப் பயிற்சி செய்து கொள்ளவேண்டும். நமது தொண்டைக் கொண்டு மாத்திரம் நம்மை நிர்ணயம் செய்து கொள்ளும்படி உலகத்தைக் கேட்கவேண்டும்.

பொது மக்களின் ஆதரவைக் கோரும் ஒரு ஸ்தாபனமோ அல்லது ஓர் ஆசிரமமோ, ஒரு ஆஸ்பத்திரி, ஒரு பள்ளிக்கூடம், நூற்றல், கதர் பிரசாரம் முதலிய ஏதாவதொரு ஸ்தூலமான நோக்கத்தை உடையதாக இருக்கவேண்டும். இந்த நடவடிக்கைகளின் தகுதியை அறிந்து கொள்ள பொது மக்களுக்கு உரிமை உண்டு. அதை அவர்கள் அங்கீகரிப்பார்களாயின், பின்னர் அந்த நடவடிக்கைகளுக்கு அவர்கள் ஆதரவு அளிக்கலாம். ஆனால், அவற்றின் சம்பந்தமான நிபந்தனைகள் தெளிவானவை. அவற்றை நிர்வகிப்பவர்களுக்கு யோக்கியப் பொறுப்பும் திறமையும் இருக்கவேண்டும். உபாத்திமைத் தொழிலைப் பற்றி எதுவுமே

தெரியாத நேர்மையான ஒருவர், தான் ஓர் உபாத்தியாயர் என்ற முறையில் பொதுஜன ஆதரவைக் கோருவதற்கில்லை. இந்தப் பொது ஸ்தாபனங்கள் ஒழுங்காகவும், அதிகாரிகளால் பரிசோதிக்கப்படும் கணக்குகளை வைத்துக் கொள்ளவேண்டும். அவற்றைப் பொது மக்கள் பரிசோதனை செய்வதற்கும் இடம் இருக்க வேண்டும். இந்தச் சோதனைகளில் நிர்வாகிகள் திருப்தி அளிக்கக் கூடியவர்களாக இருக்கவேண்டும். பாராட்டுதலுக்காகவோ அல்லது ஆதரவுக்காகவோ அவர்களுடைய சொந்த நடத்தை பொது மக்களின் கவனத்தை ஈர்ப்பதற்காகத் தலை காட்டக் கூடாது.

—'எங் இந்தியா' – 25—6—1925

# 4

# காந்திஜியின் புத்தாண்டு வாழ்த்துக்கள்

சம்பாரணிலிருந்து காந்திஜி, ஸ்ரீ மகன்லால் காந்திக்குப்* புத்தாண்டு வாழ்த்துக்கள் கூறி ஒரு கடிதம் எழுதியிருந்தார். அப்போது ஸ்ரீ மகன்லால் காந்தி சாபர்மதி சத்தியாக்கிரக ஆசிரமத்தில் இருந்தார். அக் கடிதம், குஜராத்தியில் மகாதேவ தேசாய் எழுதியுள்ள 'மகாதேவபாயின் குறிப்பு' என்ற நூலிலிருந்து எடுத்துக் கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

புது வருடப் பிறப்பு, 1974 (விக்ரம்)
மோதிஹாரி (பீகாரி)

இந்தச் சுபதினத்தில் நான் உனக்கு என்ன கொடுக்கப் போகிறேன்? உனக்கும், எனக்கும், மற்றும் பலருக்கும் இராத ஒன்றை உனக்கு அனுப்ப நான் முயற்சித்து வருகிறேன். அது உனக்குக் கிடைத்துவிட்டால், உனக்கு எல்லாம் கிடைத்துவிட்டதாகும். எனினும், ஒருவரிடம் இருந்தால்தான் கொடுக்கமுடியும் என்ற விதியை நான் பின்பற்றுவேனாயின், உனக்கு நான் என்ன கொடுக்க முடியும்? இருந்தாலும், அதைப் பெறுவதற்காக நாம் சேர்ந்து பிரார்த்தனை செய்வோமாக.

"மனிதர்களையும் தேவர்களையும் போல் நான் பேசினாலும்கூட, என்னிடம் அன்பு இல்லாவிடில் நான் சத்தமிடும் வெறும் வெண்கலத்தைப் போலவும், ஓசையிடும் வெறும் கைத்தாளத்தைப் போலவும் ஆகிவிடுவேன். எனக்கு தீர்க்கதரிசன சக்தி இருந்தாலும், எல்லா ரகசியங்களையும் நான் அறிந்திருந்தாலும், எனக்கு எல்லா விதமான அறிவும் இருந்தாலும், மலைகளைப் பெயர்க்கக் கூடிய ஆற்றல் இருந்தாலும், என்னிடம் அன்பு இராவிட்டால் நான் சூன்யமானவன்தான். ஏழைகள் பட்டினி கிடக்காமல் சாப்பிடுவதற்காக எனது உடைமைகளையெல்லாம் நான் அர்ப்பணம் செய்தாலும், எரிக்கப்படுவதற்காக எனது உடலை நான் தியாகம் செய்தாலும், என்னிடம் அன்பு இல்லையாயின், எனக்கு எவ்விதப் பலனும் ஏற்படாது.

*ஸ்ரீ மகன்லால் காந்தி காந்திஜியின் சகோதரருடைய புதல்வராவார்.



944 மே மாதம், ஜுகுவில் மகாத்மா. பிரார்த்தனைக் கூட்டத்தில் 'கையெழுத்துப் புத்தக'த்தில் மகாத்மா கையெழுத்திடுகிறார்.



1944 செப்டம்பர், பம்பாயில் பிரார்த்தனைக் கூட்டத்தில் பிரார்த்தனையிலிருந்தபோது மகாத்மா.

"நீண்ட காலம் துன்பத்தைச் சகித்துக் கொள்ளும் சக்தி அன்புக்கு உண்டு; அன்புக்கு இரக்கம் உண்டு; பொறுமை இல்லை. அன்பு தற்பெருமை யடித்துக் கொள்ளாது, இறுமாப்பு அடையாது, அவலட்சணமாக நடந்து கொள்ளாது, சுயநலனை நாடாது, எளிதில் கோபம் அடையாது, தீங்கு என்னுது, அக்கிரமத்தைக் கண்டு ஆனந்தம் அடையாது, ஆனால், சத்தியத்தைக் கண்டு சந்தோஷம் அடையும். அன்பு எல்லாவற்றையும் தாங்கும், எல்லாவற்றையும் நம்பும், எல்லாவற்றினிடமும் விசுவாசம் வைக்கும், எல்லாவற்றையும் சகித்துக் கொள்ளும். தீர்க்க தரிசனங்கள் தோல்வி அடையும்; பேச்சுக்கள் ஓய்ந்து விடும்; அறிவும் மறைந்துவிடும்; ஆனால் அன்பு ஒரு காலத்திலும் தோல்வி அடைவதில்லை.

"நான் குழந்தையாக இருந்தபோது, குழந்தையைப்போல் பேசினேன், குழந்தையைப் போல் விஷயங்களை அறிந்துகொண்டேன், குழந்தையைப் போல் சிந்தித்தேன். ஆனால், நான் மனிதனான பிறகு குழந்தைத்தனமான காரியங்களை ஒதுக்கிவிட்டேன். இப்போது நான் கண்ணாடியின் மூலம் மங்கலாகப் பார்க்கிறேன். அப்போதோ நேருக்கு நேராகப் பார்த்தேன். இப்போது விசுவாசம், நம்பிக்கை, அன்பு இம்மூன்றும் நிலைத்திருக்கின்றன. இவற்றில் அன்பே எல்லாவற்றையும் விட மிகச் சிறந்தது."

இதைப் படி, இதைப் பற்றிச் சிந்தனை செய். இதை மறுபடியும் வாசி. இதை, பைபிளிலிருந்து ஆங்கிலத்தில் வாசித்து, ஹிந்தியில் மொழி பெயர்த்துக் கொள். இதைப்பற்றி நிதானமாகச் சிந்தித்துப் பார்த்து, அன்பின் பரந்த ஒளியை ஒரு விநாடியாவது பார்க்க முயற்சி செய். மீரா அதைப் பார்த்து, அதனால் எழும் வேதனைகளை உணர்ந்தார். நாமும் அதைப் பார்த்து, அதனால் ஏற்படும் வேதனைகளை உணருவோமாயின், மற்றவர்களும் அவற்றை உணரும்படி செய்யும் சக்தி நமக்கு இருக்குமாயின், நாம் இந்த உலகத்தையே உருகும்படி செய்ய முடியும். அன்பு என்னுள் இருப்பினும், ஒவ்வொரு விநாடியும் அது எனக்குப் பெரிதும் தேவையாக இருப்பதுபோல் தோன்றுகிறது.

அதனால் நானும் சில சமயங்களில் 'வெறும் சத்தம் போடும் வெண்கலத்தைப் போலவும் ஓசை உண்டாக்கும் கைத்தாளத்தைப் போலவும்' இருப்பதாகத் தோன்றுகிறது. நேற்றுத்தான் என்னைப் பார்க்கவேண்டுமென சிலர் விரும்பினார்கள். அவர்களைப் பார்க்க எனக்கு நேரம் கிடைக்கவில்லை. அவர்களைப் பார்க்க முடியாதது, எனக்குச் சித்திரவதையாக இருந்தது. அவ்விதம் பார்க்காதது, அன்பின் அறிகுறியல்ல. "வெறும் சத்தம் போடும் வெண்கலத்தைப் போலவோ அல்லது கைத்தாளத்தைப் போலவோ" நான் இருந்தேன்.

இந்தப் புத்தாண்டு உனக்கு பலன் தரத்தக்கதாக இருக்குமாக. உன் உடல், மன, ஆன்மிக சக்திகள் வளர்ந்துகொண்டு போகுமாக. உன் அன்பு காரணமாக அந்த சக்திகளையெல்லாம் நீ பாரதத் தாயின் பாதங்களில் அர்ப்பணம் செய்வாயாக. இது தான் எனது விருப்பம். இவைதான் எனது ஆசிகள்.

பாபுவின் ஆசீர்வாதம்

—'ஹரிஜன்' – 11—11—1950

பகுதி ஏழு

# சொந்த விஷயங்கள்

## 1

## நான் யார்?

**நா**ன் யார்? கடவுள் எனக்குக் கொடுத்திருப்பதைத் தவிர, வேறு எவ்வித சக்தியும் எனக்கு இல்லை. என் தேச மக்களிடம் தார்மிகமான உரிமையைத் தவிர வேறு எவ்வித அதிகாரமும் எனக்கு இல்லை. பயங்கரமான இம்சை உலகத்தை தற்போது ஆட்சிபுரிந்து வருகிறது. அதன் ஸ்தானத்தில் அகிம்சை பரவும் படி செய்வதற்கான ஒரு தூய்மையான கருவியாக நான் இருக்க வேண்டும் என்பது கடவுளின் சித்தமாயின், அவர் எனக்கு சக்தியை அளித்து வழியையும் காட்டுவார். மௌனமான பிரார்த் தனையே எனது மகத்தான ஆயுதமாகும். எனவே, சமாதான லட்சியம் கடவுளின் உத்தமமான கைகளில் இருக்கிறது. அவரது சித்தமின்றி எதுவும் நடைபெறாது. நிரந்தரமான, மாறுதலற்ற அவரது சட்டப்படியே எல்லாம் நடக்கும். சட்டம் என்பது அவர் தான். அவரையோ, அவரது சட்டத்தையோ நாம் அறியோம். இருண்ட கண்ணாடியின்மூலம் மாத்திரமே அவரையோ, அவரது சட்டத்தையோ அணுவளவு அறிய முடியும். மங்கலாகத் தெரியும் அந்தச் சட்டமே எதிர் காலத்தையொட்டி என் மனத்தில் ஆனந்தத்தையும், நம்பிக்கையையும், விசுவாசத்தையும் பூரணமாக உண்டாக்குவதற்குப் போதுமானது.

—'ஹரிஜன்' – 9—12—1939

## 2

## கடவுளின் தூதன்!

**ப**த்திரிகையிலிருந்து கத்தரிக்கப்பட்ட செய்தி ஒன்று எனக்குக் கிடைத்திருக்கிறது. நான் கடவுளின் ஒரு தூதன் என்று அதில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. கடவுளிடமிருந்து எனக்கு ஏதாவது விசேஷச் செய்தி கிடைத்ததாக நான் கூற முடியுமா என்று கேட்டிருக்கிறார்கள். நான் செய்ததாகக் கூறப் படும் அற்புதங்களைப்பற்றி ஏற்கனவே எழுதியுள்ளேன். கடைசி யாக வந்துள்ள இந்தக் குற்றச்சாட்டையும் நான் நிராகரித்துவிட வேண்டும். ஒவ்வொரு நல்ல ஹிந்துவையும்போல், நான் பிரார்த்

திக்கிறேன். மனிதனைக் கண்டு அஞ்சுவதை நாம் விட்டுவிட்டு, கடவுளின் சத்தியத்தை மாத்திரம் நாடுவோமாயின் நாம் எல்லோருமே கடவுளின் தூதர்களாகிவிட முடியும் என்பதே எனது நம்பிக்கையாகும். மனிதனிடம் எனக்கு இருந்த அச்சமெல்லாம் போய்விட்டது என்றும், கடவுளின் சத்தியத்தையே நான் நாடுகிறேன் என்றுமே உறுதியாக நம்புகிறேன். எனவே, ஒத்துழையாமை இயக்கத்திற்குக் கடவுள் துணையாக இருக்கிறார் என்றே கருதுகிறேன். கடவுளின் சித்தத்தைப்பற்றி எனக்கு விசேஷச் செய்தி எதுவும் கிடைத்ததில்லை. மனிதராகப் பிறந்த ஒவ்வொருவரிடத்திலும் கடவுள் தம்மைத் தாமே தினந்தோறும் வெளிப்படுத்திக் கொள்ளுகிறார். ஆனால், அமைதியான அந்தச் சிறு குரலைக் கேட்காமல் நாம் காதுகளை அடைத்துக் கொண்டுவிடுகிறோம். நம்முன் உள்ள ஜோதி ஸ்தம்பத்தைப் பார்க்காமல் நாம் நமது கண்களை மூடிக் கொண்டுவிடுகிறோம். கடவுள் சர்வ வியாபியாக இருப்பதை நான் உணருகிறேன். கடிதம் எழுதியிருப்பவரும் அவ்விதமே உணர முடியும்.

—'எங் இந்தியா' - 26—5—1921

# 3

# திகைக்கவைக்கும் தப்பெண்ணங்கள்

குஜராத்தியில் ஒரு சாதாரண பழமொழி உண்டு. 'ஒரு பிரபல பாங்கர் பணத்தைச் சேர்த்துக் கொண்டே போகிறான், ஒரு பெயர் போன திருடன் தகாத முறையில் அடிக்கடி குற்றம் சாட்டப்படுகிறான்.' இதுதான் அந்தப் பழமொழி. என்னை ஒரு சீர்திருத்தக்காரனாகக் கருதினாலும் சரி, அல்லது ஒரு குற்றவாளியாகக் கருதினாலும் சரி, மிகவும் விசித்திரமான, தரும சங்கடமான நிலைமைகளில் நான் சிக்கிக்கொள்ளுகிறேன். எனக்கு தெய்விகமான அற்புத சக்திகள் இருப்பதாக மக்கள் கூறுகின்றனர். சத்தியத்தில் எனக்குள்ள பெருமதிப்பு, தடுக்க முடியாத உழைப்பு, எதிராளிகளிடம் நியாயமாக நடந்துகொள்ளுதல், எப்போதும் தவறுகளை ஒப்புக்கொள்ளும் ஆர்வம், பகுத்தறிவுக்கு இணங்க நடந்துகொள்ள வேண்டுமென்று மக்களை இடைவிடாது கேட்டுக் கொள்ளுதல் முதலியவற்றின் மூலம் நான் பெறும் சக்திகளைத் தவிர, எனக்கு வேறு எவ்வித சக்தியும் இல்லை. எனக்கு அசாதாரண சக்திகள் இல்லை என்று நான் கூறுவதை, கபடமற்ற பாமர மக்கள் நம்ப மறுக்கிறார்கள். அது போலவே ராஜீய விஷயங்களில் முற்றிலும் யோக்கியப் பொறுப்பான நடவடிக்கைகளைக் கண்டறியாதவர்கள், என் மீது எல்லா விதமான குற்றங்களையும் சுமத்துவதில் விடாப்பிடியாக இருந்து வருகிறார்கள்.

—'எங் இந்தியா' - 13—4—1921

# 4

# நான் மதபோதகன் அல்ல

என்னை நான் ஒரு மத போதகன் என்று ஒரு காலத்திலும் கருதியதில்லை. அகிம்சையையோ அல்லது என்னுடைய உபதேசத்தையோ ஒப்புக்கொள்ளவேண்டும் என்பதற்காக எக்காலத்திலும், யாரையும், அவரது சொந்த மதத்தை நிராகரிக்க வேண்டுமென நான் கேட்டதுமில்லை. நான் அறிந்தவரையில், எந்த மதமும் இம்சையை அனுசரிக்க வேண்டுமென வற்புறுத்தவில்லை. ஆனல், அகிம்சை சாத்தியமாக இராத இடத்தில், பெரும்பாலான மதங்களும் இம்சையை அனுமதித்திருக்கின்றன. எனினும், மற்ற மதங்களைப்பற்றித் தீர்மானிக்க எனக்கு உரிமை இல்லை. எல்லா மதங்களிடத்திலும் எனக்கு சமமான மரியாதை உண்டு. மற்றவர்கள் எனது மதத்திற்கு மரியாதை காட்ட வேண்டுமென நான் எதிர்பார்த்தால், நானும் மற்ற மதங்களுக்கு மரியாதை காட்டவேண்டும்.

—'ஹரிஜன்' – 5 –7—1942

# 5

# நான் சாதாரண மனிதனே

சத்தியத்தை நாடுவதில் பைத்தியம் உள்ளவனை அசாதாரண மனிதன் என்று கூறுவதாக இருந்தாலொழிய, நான் ஓர் அசாதாரண மனிதன் அல்ல என்று அடிக்கடி கூறி வந்திருக்கிறேன். யோக்கியமான ஒவ்வொரு மனிதனும் பைத்தியமாகத்தான் இருக்கவேண்டும். அந்த முறையில் நானும் நிச்சயமான ஒரு பைத்தியமே. முனிவர் என்ற பட்டத்தை நான் நிராகரித்துள்ளேன். ஏனெனில், எனது எல்லைகளையும், குற்றம்குறைகளையும் நான் பூரணமாக உணர்ந்து கொண்டிருக்கிறேன். நான் இந்தியாவின் ஊழியன், அதன்மூலம் மானிடவர்க்கத்தின் ஊழியன் என்றே கூறிக் கொள்ளுகிறேன்.

—'எங் இந்தியா' – 19-3-1925

# 6

# எனக்குப் பிடிக்கவில்லை

ஜனங்கள் எனக்குக் கொடுத்துள்ள 'மகாத்மா' என்ற பட்டம் எனக்குப் பிடிக்கவில்லை. அந்தப் பட்டத்திற்கு நான் தகுதியற்றவன். எனினும், எனக்கு நானே ஒரு பட்டம் கொடுத்திருக்கிறேன். அந்தப் பட்டத்தைக் குறித்து நான் பெருமை

அடைகிறேன். அதாவது, என்னை நான் ஒரு சத்தியாக்கிரகி என்று கூறிக்கொள்ளுகிறேன். அந்தப் பட்டத்திற்கு நான் தகுதியான வனாக இருக்கவேண்டும் அல்லவா? எனவே, சந்தர்ப்பம் ஏற்பட்டபோதெல்லாம் நான் கசப்பான உண்மையைக் கூறாமல் இருக்கமுடியாது.

—'எங் இந்தியா' – 19—3—1931

# 7

# 'நீங்கள் மகாத்மாவா?'

ஒத்துழையாமை இயக்கத்தைப்பற்றி ஒருவர் காந்திஜிக்குச் சரமாரியான கேள்விகள் அனுப்பியிருந்தார். அவற்றில் சில கேள்விகளையும் அவற்றிற்கு காந்திஜி அளித்த பதில்களையும் கீழே காணலாம் :

**கேள்வி:** நீங்கள் உண்மையில் ஒரு மகாத்மாவா?

**பதில்:** நான் ஒரு மகாத்மாவாக இருப்பதற்கு விரும்பவில்லை. கடவுளால் சிருஷ்டிக்கப்பட்ட ஜீவராசிகளுள் நான் மிகமிகத் தாழ்ந்தவன் என்பதை நான் அறிவேன்.

**கேள்வி:** அப்படியாயின், 'மகாத்மா' என்ற சொல்லைத் தாங்கள் விளக்க முடியுமா?

**பதில்:** எந்த ஒரு மகாத்மாவுடனும் எனக்கு அறிமுகம் இல்லாததால், நான் அதைப்பற்றி எவ்வித விளக்கமும் கூற முடியாது.

**கேள்வி:** நீங்கள் ஒரு மகாத்மா இல்லையாயின், அதை நீங்கள் உங்களைப் பின்பற்றுவோருக்கு எப்போதாவது கூறினீர்களா?

**பதில்:** நான் எவ்வளவுக்கு அதை அதிகமாக மறுக்கிறேனோ அவ்வளவுக்கு அது அதிகமாக உபயோகிக்கப்பட்டு வருகிறது.

**கேள்வி:** உங்களுக்கும் டால்ஸ்டாய்க்கும் உள்ள தொடர்பு எத்தகையது?

**பதில்:** அவரிடம் எனக்கு பக்தியுடன் கூடிய மதிப்பு உண்டு. வாழ்க்கையில் பல விஷயங்களையும் நான் அவரது உபதேசங்களிலிருந்தே தெரிந்து கொண்டேன்.

—'எங் இந்தியா' – 27—10—1921

# 8

# சங்கடமான கேள்விகள்

'எங் இந்தியா' வாசகர்களில் தொல்லை கொடுக்கும் சிலர் இருக்கிறார்கள். அவர்கள் அடிக்கடி சங்கடமான கேள்விகளைக் கேட்கிறார்கள். எனினும், அவ்விதம் கேட்பது அவர்களுக்கு

மகிழ்ச்சியளிப்பதால், அந்தச் சங்கடத்தை நான் பொறுத்துக் கொண்டு, அவர்களுடைய கேள்விகள் எவ்வளவு தொல்லையாக இருப்பினும், அவற்றிற்கு நான் பதில் அளிக்க வேண்டும். ஒருவர் இவ்விதம் முதல் வெடி வெடித்துள்ளார்:

"அகில இந்திய நூற்போர் சங்க நிர்வாக அங்கத்தினர்களின் ஜாபிதா அக்டோபர் 1-ஆம் தேதி 'எங் இந்தியா'வில் வெளியாகியிருக்கிறது. அந்த ஜாபிதாவில் உங்களுடைய பெயருக்கு முன் "மகாத்மா" என்ற சொல்லை உபயோகித்திருப்பதற்கு யார் பொறுப்பாளி?"

அந்தச் சொல் உபயோகிக்கப்பட்டிருப்பதற்கு இப் பத்திரிகையின் ஆசிரியர் பொறுப்பாளி அல்ல என்பதை கடிதம் எழுதியிருப்பவர் அறிந்து கொள்ளலாம். சங்க அமைப்பை நிறைவேற்றியவர்களே நிச்சயமாக அதற்குப் பொறுப்பாளியாவர். அதற்கு எதிராக நான் சத்தியாக்கிரகத்தை மேற்கொண்டால், அந்தச் சொல் வெளியாகாமல் இருந்திருக்கலாம். ஆனால், அந்தப் பயங்கரமான ஆயுதத்தை உபயோகிக்கும் அளவிற்கு அதை அவ்வளவு க்டுமையான குற்றமாக நான் கருதவில்லை. துரதிருஷ்டமான விபரீதம் ஏதாவது ஏற்பட்டாலன்றி, என் பெயருடன் அருவருக்கத்தக்க அந்தச் சொல்லை எப்போதும் சம்பந்தப்படுத்தத்தான் செய்வார்கள். எனவே என்னைப் போலவே பொறுமையுள்ள ஆட்சேபவாதிகளும் அதைச் சகித்துக் கொள்ளத்தான் வேண்டும்.

'எங் இந்தியா' – 5—11—1925

## 9

# சகிக்க முடியவில்லை

ஷோலாப்பூரில் காந்திஜி நிகழ்த்திய ஒரு பிரசங்கத்தின் சாரமே கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது:

நான் ஒரு மகாத்மா அல்ல. நான் ஒரு மகாத்மாவாக இருந்தால், அது ஏதோ ஒரு சக்தியின் தோற்றமேயாகும். எனவே, எனக்காக எதுவும் செய்ய வேண்டாமென்று கேட்டுக் கொள்ளுகிறேன். நான் மௌனமாக இருந்தாலும், எல்லோருக்கும் தரிசனம் அளிக்க நான் வெளியே வரவேண்டுமென யாரோ ஒருவர் கூறியபோது நான் நடு நடுங்கிவிட்டேன். துர்நாற்றத்தைப்போல், தரிசனம், மகாத்மா என்ற சொற்களை என்னால் சகிக்க முடியவில்லை. தரிசனம் கொடுக்கக்கூடிய யோக்கியதை எனக்கு இல்லை. உங்களைப் போலவே, நானும் ஒரு மண் பாண்டமே ஆவேன். உடலுக்கு உண்டான ஆசாபாசங்கள் எல்லாம் எனக்கும் உண்டு. எனவே, உங்களுக்கு தரிசனம் அளிக்க எனக்கு எப்படித் தகுதி ஏற்பட முடியும்? ஒருவரை, ஒரே ஒருவரை மாத்திரமே தரிசிக்க வேண்டியது அவசியமாகும். அவர்தான், பெயர் இல்லாதவர், உருவம் அற்றவர், விவரிக்க முடியாதவர், பரிபூரணமானவர்.

அவரை ஒவ்வோரிடத்திலும் காண முயற்சி செய்யுங்கள். மாளிகையைப் போல் ஏழையின் குடிசையிலும், கோவிலைப் போல் கொல்லைப் புறத்திலும் அவரைக் காண முயற்சி செய்யுங்கள். அநித்தியமான காந்தியின் உடலை உங்கள் மனத்திலிருந்து அகற்றிவிடுங்கள். அந்த உடலைத் தரிசிப்பதால் யாதொரு பலனும் ஏற்படாது.

—'எங் இந்தியா' – 10—3—1927

## (2)

மகாத்மாவை, விதிப்படி நடக்கட்டும் என்று நான் விட்டுவிடவேண்டும். நான் ஓர் ஒத்துழையாமைவாதியாயினும், என்னை மகாத்மா என்று கூப்பிடுவதையும், என் கால்களைத் தொடுவதையும் ஒரு குற்றம் என்று விதிக்கும் சட்டத்தை நான் மகிழ்ச்சியுடன் ஆதரிப்பேன். ஆசிரமத்தில் மாத்திரம் அத்தகைய சட்டத்தை விதிக்க என்னால் இயலும். எனவே ஆசிரமத்தில் அது அமலில் இருந்துவருகிறது. ஆசிரமத்தில் என்னை மகாத்மா என்று கூப்பிடும் அல்லது என் கால்களைத் தொடும் வழக்கம் குற்றமேயாகும்.

'எங் இந்தியா' – 17 – 3—1927

# 10
# எனக்குச் சொத்து இருக்கிறதா?

**ப**லரிடமிருந்தும் எனக்கு விசித்திரமான கேள்விகள் வருவது உண்டு. குண்டூர் ஜில்லாவிலிருந்து ஒருவர் என்னை அத்தகைய கேள்விகள் கேட்டுள்ளார். அவையாவன:

"காந்திஜி எதைக் கூறுகிறாரோ அதைச் செயலில் காட்டுவதில்லை என்று ஜனங்கள் சொல்லுகிறார்கள். அவர் சொத்து வைத்துக்கொண்டிருக்கிறார். மற்றவர்கள் ஏழையாக வேண்டும் என்று அவர் விரும்புகிறார். ஆனால், அவர் ஏழை அல்ல. எளிய சிக்கனமான வாழ்க்கை நடத்த வேண்டும் என்று அவர் உபதேசம் செய்கிறார்; ஆனால், அவரது வாழ்க்கைச் செலவு மிகவும் அதிகமாக இருக்கிறது. இவ்விதமெல்லாம் மக்கள் கூறுகிறார்கள். எனவே, கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதில் கூறுங்கள்: உங்களுடைய வாழ்க்கைச் செலவுக்காகவும், பிரயாணச் செலவுக்காகவும் நீங்கள் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியிலிருந்தோ அல்லது குஜராத் காங்கிரஸ் கமிட்டியிலிருந்தோ ஏதாவது தொகை எடுத்துக்கொள்ளுகிறீர்களா? அப்படி எடுத்துக் கொள்ளுவதாயின் அந்தத் தொகை எவ்வளவு? நீங்கள் தொகை எதுவும் எடுத்துக்கொள்ளுவதில்லை எனில், உங்களுடைய நீண்ட பிரயாணங்களுக்கும், உங்கள் உணவு, உடை முதலியவற்றிற்கும் ஏற்படும் செலவுகளை எவ்விதம் சமாளிக்கிறீர்கள்? மக்கள் நினைப்பதுபோல் நீங்கள் சொத்து எதுவும் இல்லாதவராயின், அந்தச் செலவுகளுக்கு என்ன செய்கிறீர்கள்?"

அக்கடிதத்தில் இதே போன்ற மற்றும் பல விஷயங்கள் உள்ளன. எனினும், முக்கியமானவற்றை மாத்திரம் மேலே கொடுத்திருக்கிறேன்.

நான் உபதேசிக்கின்றபடியே செய்கையிலும் காட்ட முயற்சிப்பதாகவே கூறிக்கொள்ளுகிறேன். எனினும், நான் விரும்புவது போல் நான் சிக்கனமாக இல்லை என்பதை ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். நான் நோய்வாய்ப்பட்டதிலிருந்து, எனது உணவுச் செலவு எவ்வளவு ஆகவேண்டுமோ அதைக்காட்டிலும் அதிகமாக ஆகிறது. அதை, ஒரு ஏழை மனிதனின் சாப்பாடு என்று நான் கூறவே முடியாது. நான் நோய்வாய்ப்பட்டபின் எனது பிரயாணச் செலவுகளும் அதிகமாகியிருக்கின்றன. இப்போதெல்லாம் மூன்ருவது வகுப்பில் என்ருல் நீண்டதூரப் பிரயாணம் செய்ய முடிவதில்லை. முன்னரைப் போல் துணைக்கு ஒருவர்கூட இல்லாமலும் நான் பிரயாணம் செய்வதில்லை. இதெல்லாம் எளிமை அல்ல, ஏழ்மையும் அல்ல; ஆனல், அவற்றிற்கு நேர் மாருகும். அ. இ. கா. கமிட்டியிலிருந்தோ அல்லது குஜராத் காங்கிரஸ் கமிட்டியிலிருந்தோ நான் யாதொரு தொகையும் பெறுவதில்லை. ஆனல், உணவு, உடை உள்பட என் பிரயாணச் செலவுகளை நண்பர்கள் கவனித்துக் கொள்ளுகிருர்கள். பெரும்பாலும் எனது பிரயாணங்களின்போது, என்னை யார் அழைக்கின்ருர்களோ அவர்கள் ரயில் டிக்கெட்டுகளை வாங்கிவிடுகிருர்கள். ஒவ்வோரிடத்திலும் என்னை உபசரிப்பவர் மிகவும் அன்புடன் என்னைக் கவனித்துக் கொள்ளுகிருர். பல சமயங்களிலும் அது எனக்கு தரும சங்கடமாகவும் இருக்கிறது. எனது பிரயாணத்தின் போது, எனது தேவையைக் காட்டிலும் அதிகமாக மக்கள் எனக்கு கதர்த் துணிகளை இனமாக அளிக்கிருர்கள். என் தேவை போக மீதியுள்ள துணிகள், தேவையான மற்றவர்களுக்குப் போய்ச் சேருகின்றன; அல்லது அவை ஆசிரமத்தில் சேமித்து வைக்கப்படுகின்றன. பொது மக்களின் நலனுக்காகவே அவை சேமித்து வைக்கப்படுகின்றன.

எனக்குச் சொந்தமாக சொத்து எதுவும் இல்லை. எனினும், உலகத்திலேயே எல்லோரையும் காட்டிலும் நான் மிகப் பெரிய பணக்காரன் போல் எனக்குத் தோன்றுகிறது. ஏனெனில் எனக்கோ, அல்லது எனது பொது ஸ்தாபனங்களுக்கோ ஒருபோதும் பணமுடை ஏற்பட்டதில்லை. எப்போதுமே கடவுள் குறித்தகாலத்தில் உதவி புரிந்துள்ளார். எனது பொது நடவடிக்கைகளுக்காக, கடைசி பைசாவும் செலவழிந்துபோன பல சந்தர்ப்பங்களை நான் நினைவுகூர முடியும். அப்போது எதிர்பாராத இடங்களிலிருந்து தொகைகள் வந்து சேர்ந்தன. அத்தகைய உதவிகள் என்னைப் பணிவுள்ளவனுகச் செய்திருக்கின்றன; கடவுளிடத்தும் அவரது காருண்யத்திலும் பூரண நம்பிக்கை ஏற்படும்படி செய்திருக்கின்றன. என் வாழ்க்கையில் எப்போதாவது துன்பம் ஏற்படவேண்டும் என்பது என் விதியாக இருக்குமாயின், அதைத் தாங்குவதற்கு அந்த நம்பிக்கை எனக்கு சக்தியை அளிக்கும். நான் எல்லா

சொத்துக்களையும் கைவிட்டிருப்பதைக் குறித்து உலகம் என்னை ஏளனம் செய்யலாம். ஆனால், என் சம்பந்தப்பட்டவரையில் அவ்விதம் சொத்துக்களைக் கைவிட்டது எனக்கு நிச்சயமான லாபமே. எனக்குள்ள இந்த மனத்திருப்தியை அடைய எல்லோரும் என்னுடன் போட்டிபோட வேண்டும் என்பதே எனது விருப்பமாகும். அந்த திருப்திதான், எனக்குச் சொந்தமான, விலை மதிக்க முடியாத பொக்கிஷமாகும். எனவே, நான் ஏழ்மையை உபதேசித்தாலும் நான் பணக்காரனே என்று கூறுவது சரிதான்!

—'எங் இந்தியா' – 30—4—1925

# 11

## நான் நடத்தும் வாழ்க்கை

ஒரு நண்பர் பின் வருமாறு எழுதுகிறார்:

"நீங்கள் உங்களை ஒரு சந்நியாசி என்று சொல்லிக் கொள்ளுவதாகவும், அப்படியிருந்தும் நீங்களும் உங்களை அண்டியிருப்பவர்களும் சுகமாக வாழ்க்கை நடத்துவதுடன், உங்கள் சொத்துக்கள் அடங்கிய ஒரு 'டிரஸ்டை' நீங்கள் ஏற்படுத்தியிருப்பதாகவும் கூறப்படுகிறது. அந்த சொத்துக்களின் பெறுமானம் பதினைன்கு லட்சம் ரூபாயாம். நீங்கள் யாதொரு கவலையுமின்றியும், வசதியாகவும் வாழ்க்கை நடத்தி வருவதாகவும் கூறுகிறார்கள். இதைக் கேட்க எங்களில் சிலர் திடுக்கிட்டுவிட்டோம். இவ்விஷயத்தை பொது மக்களுக்கு அன்புடன் விளக்கிக் கூறுவீர்களா? என் சம்பந்தப்பட்டவரையில் அச்செய்தியை நான் நம்பவில்லை."

இந்தக் கேள்வி கேட்டுள்ள நண்பர் யோக்கியமானவர். அவரை நான் அறிவேன். இல்லாவிடில், இந்தக் கேள்வியை நான் பொருட்படுத்தியிருக்க மாட்டேன். தவிர, என் சொந்தச் செலவுகளைப் பற்றிச் சில மாதங்களுக்கு முன் கேட்கப்பட்ட ஒரு கேள்விக்கு என் சொந்த விவகாரங்களைக் குறிப்பிட்டு நான் பதில் எழுதிவிட்டேன். எனக்குச் சொந்தமாக என்னிடம் ஒரு காலத்திலும் பதினைன்கு லட்சம் ரூபாய் இருந்ததில்லை. என்னிடம் இருந்த சொத்தை, எல்லா சொத்துக்களையும் நான் துறந்தபோது, ஒரு 'டிரஸ்டாக'ச் செய்தேன். எனினும், அது பொதுக்காரியங்களுக்காக ஏற்படுத்தப்பட்ட டிரஸ்டேயாகும். அந்த சொத்தில் எனக்கென்று நான் எதையும் வைத்துக்கொள்ளவில்லை.

எனினும், என்னை ஒரு சந்நியாசி என்று நான் ஒருபோதும் கூறிக் கொண்டதில்லை. சந்நியாசம் கடினமானது. என்னை நான் அடக்கமான தொண்டு வாழ்க்கை நடத்தும் ஒரு கிரகஸ்தனாகவே கருதுகிறேன். என் சக ஊழியர்களைப் போல் நானும் நண்பர்களின் தருமத்தினால் வாழ்ந்துவருகிறேன். சாபர்மதியில் உள்ள சத்தியாக்கிரக ஆசிரமத்தின் செலவுகளை அந்த நண்பர்

களே கொடுத்துவருகிறார்கள். அந்த ஆசிரமத்தை ஸ்தாபித்தவர்களில் நானும் ஒருவன். கவலையின்மையும் சுகமும் மன நிலையைப் பொறுத்ததாயின், நான் நிச்சயமாக சிறிதும் கவலையற்ற, மிகவும் சுகமான வாழ்க்கையையே நடத்திவருகிறேன். எனக்குச் சொந்தமாகப் பொக்கிஷங்களை வைத்துக்கொள்ளும் கவலை சிறிதும் இல்லாமலேயே, எனக்குத் தேவையானதெல்லாம் கிடைக்கின்றன. இடைவிடாத ஊழியத்திற்கிடையே என் வாழ்க்கை மகிழ்ச்சியினால் நிறைந்திருக்கிறது. நாளை என்ன நேருமென்று சிந்திக்க வேண்டிய அவசியமே எனக்கு இல்லை. எனவே, நான் ஒரு பட்சியைப்போல் சுதந்திரமாக இருக்கிறேன். உண்மையில் தற்போது, நான் சொகுசான வாழ்க்கை நடத்திவருவதாகக்கூட கூறலாம்.

அன்றொரு நாள், கயா ஸ்டேஷனில் ரெயில் வண்டி நின்று கொண்டிருந்தபோது ஓர் ஆங்கில மாது என்னைப் பார்ப்பதற்காக வந்தார். "ஜன நெருக்கமான மூன்றாவது வகுப்பு வண்டியில்தான் உங்களைக் காணலாமென்று நான் எண்ணிக்கொண்டிருந்தேன். ஆனால், நீங்களோ பலரும் உங்களைச் சூழ்ந்து கொண்டிருக்க யாதொரு அசௌகரியமுமின்றி சுகமாக இரண்டாவது வகுப்பில் பிரயாணம் செய்து கொண்டிருக்கிறீர்களே, அது எப்படி? ஏழைகளைப் போல் வாழவிரும்புவதாக நீங்கள் கூறவில்லையா? இரண்டாவது வகுப்பில் சுகமாகப் பிரயாணம் செய்ய ஏழைகளுக்குப் பண வசதி இருப்பதாக நீங்கள் எண்ணுகிறீர்களா? உங்கள் வாய்ப்பேச்சுக்கும் செயலுக்கும் முரணுகை இல்லையா?" இவ்விதம் அந்த ஆங்கில மாது என்னைக் கேட்டார்.

நான் உடனே குற்றத்தை ஒப்புக்கொண்டேன். இடைவிடாது மூன்றாவது வகுப்பில் பிரயாணம் செய்வதால் ஏற்படக்கூடிய களைப்பைத் தாங்கும் சக்தி என் உடலுக்கு இல்லை என்றும், என் உடல் அவ்வளவு மோசமாகிவிட்டது என்றும், அந்தப் பெண்மணியிடம் கூற நான் தயங்கவில்லை. எனினும், உடல் பலவீனத்தை ஒரு சமாதானமாகக் கூற முடியாது என்பதே என் கருத்தாகும். என்னைக் காட்டிலும் உடல் பலவீனமுள்ள பதினாயிரக்கணக்கான ஆடவர்களும் பெண்களும் மூன்றாவது வகுப்பில் பிரயாணம் செய்கிறார்கள் என்ற உண்மையை நான் அறிவேன். இது எனக்கு மன வேதனையையே உண்டாக்குகிறது. இரண்டாவது வகுப்பில் பிரயாணம் செய்யும் செலவைக் கொடுப்பதற்கு, அவர்களுக்கு நண்பர்கள் இராததே அதற்குக் காரணம். ஏழைகளைப் போலவே நான் வாழ்வதாகக் கூறுவதற்கும், எனது செயலுக்கும் முரண்பாடு இருக்கிறது என்பதில் சந்தேகமில்லை. வாழ்க்கையின் துக்ககரமான நிலை அத்தகையது. அவ்வித நிலைமைக்கு மத்தியிலும், நான் எனக்குள்ள ஆனந்தத்தை விட்டுக்கொடுக்க மறுக்கிறேன். அந்த நல்ல மாது, என்னிடம் உள்ள முரண்பாட்டைக் காணத் தவறவில்லையாயினும், என் உடலின் தேவைகளை எதிர்த்து நான் இடை

விடாமலும், யோக்கியமாகவும் போராடி வருகிறேன் என்ற எண்ணமானது எனக்கு பலமளித்து என்னைத் தாங்கிவருகிறது.

—'எங் இந்தியா' – 1—10—1925

## 12

# சில ஆட்சேபணைகளுக்குப் பதில்

(ஓர் அன்பர் 'நவஜீவன்' பத்திரிகைக்கு ஒரு பயங்கரமான கடிதம் அனுப்பியுள்ளார். அதில் அவர் எனது சித்தாந்தங்களில் பெரும்பாலானவற்றையும், பொதுவாக எனது வாழ்க்கை முறையையும் ஆட்சேபித்திருக்கிறார். அதற்கு நான் அளித்துள்ள பதிலை, "எங் இந்தியா' வாசகர்களின் நலனுக்காக ஒரு நண்பர் மொழி பெயர்த்தார். நான் அளித்துள்ள பதிலிலிருந்தே நண்பரின் ஆட்சேபணைகளை வாசகர்கள் அறிந்து கொள்ள முடியும். எனவே, கடிதத்தின் மொழி பெயர்ப்பு இங்கே கொடுக்கப்படவில்லை.

—மோ. க. கா.)

நேர்மையான நடத்தை யூக்ளிடின்* நேர் கோட்டைப் போன்றதல்ல. அது ஓர் அழகிய மரத்தைப் போன்றது. மரத்தில் லட்சக்கணக்கான இலைகள் இருக்கின்றன. ஆனால், அவை ஒன்றைப்போல் மற்றொன்று ஒரே அளவாக இருப்பதில்லை. அந்த இலைகள் ஒரே விதையிலிருந்து வந்தவையே; ஒரே மரத்தையும் சேர்ந்தவையே. இருப்பினும், மரத்தின் எந்தப் பாகமும் க்ஷேத்திர கணிதக் கோடுகளைப்போல் ஒரே விதமாக இருப்பதில்லை. எனினும், விதை, கிளைகள், இலைகள் எல்லாம் ஒன்றே என்பதை நாம் அறிவோம். அழகிலும் கம்பீரத்திலும் பூரண வளர்ச்சி பெற்ற ஒரு மரத்திற்கு எந்த க்ஷேத்திர கணிதச் சித்திரமும் ஈடாகாது என்பதையும் நாம் அறிவோம்.

கடிதம் எழுதியவர் எங்கே முரண்பாட்டைக் காண்கிறாரோ அங்கே எனக்கு எவ்வித முரண்பாடும் தென்படவில்லை; என் வாழ்க்கையில் பைத்தியக்காரத்தனமாக நான் நடந்து கொள்ளுவதாகவும் எனக்குத் தெரியவில்லை. ஒரு மனிதன் தன் முதுகுப் புறத்தைப் பார்க்க முடியாது என்பது உண்மையே. அது போலவே, அவன் தன் தவறுகளையோ அல்லது பைத்தியக்காரத் தனத்தையோ பார்க்க முடியாது. எனினும், மத பக்தியுள்ள ஒரு மனிதனை ரிஷிகள் அடிக்கடி பைத்தியக்காரனுடன் ஒப்பிட்டுக் கூறியிருக்கிறார்கள். ஆனால், நான் பைத்தியக்காரனாக இராமலிருக்கலாம், உண்மையான சமய பக்தியுடையவனாகவும் இருக்கலாம் என்ற நம்பிக்கையை நான் தழுவிவருகிறேன். என் சம்பந்

* யூக்ளிட், கிரேக்க நாட்டில் பிறந்த பிரபல கணித மேதை. அவர் கி. மு. மூன்றாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர்; குறிப்பாக, க்ஷேத்திர கணிதத்தில் அவர் மேதையாகத் திகழ்ந்தார்.

தப்பட்டவரையில், அந்த இரண்டில் எது உண்மை என்பது எனது மரணத்திற்குப் பிறகுதான் தீர்மானிக்கப்படும்.

ஜபமாலைக்குப் பதிலாக ராட்டினத்தை மேற்கொள்ள வேண்டும் என்று, நான் பேசிய கூட்டங்களில் மக்களை ஒரு போதும் கேட்டதில்லை. நாராயணு என்ற நாமத்தைக் கூறிக் கொண்டே ராட்டினத்தில் நூற்றுக் கொண்டு போகலாம் என்று மாத்திரமே நான் யோசனை கூறினேன். இன்று தேசம் முழுவதும் தீ வியாபித்திருக்கிறது. எனவே, ராட்டினமாகிய வாளிகளில் நூலாகிற தண்ணீரை நிரப்பி, நாராயணு என்ற நாமத்தை வாயால் உச்சரித்துக் கொண்டே அந்தத் தீயை அணைக்க வேண்டியது நம் எல்லோருடைய கடமையுமாகும் என்று நான் நினைக்கிறேன்.

எந்த இடத்திலும் ராட்டினத்தைப் பார்க்கவே நான் விரும்பு கிறேன். ஏனெனில், எங்கு பார்த்தாலும் வறுமை தாண்டவமாடு வதை நான் பார்க்கிறேன். இந்தியாவில் எலும்புக் கூடுகளைப் போலிருக்கும் ஏழைகள் யாவருக்கும் உணவும் உடைகளும் அளித்தாலொழிய, அவர்கள் சம்பந்தப்பட்டவரையில் சமயத் திற்கு அர்த்தமே இல்லை. அவர்கள் இன்று ஆடுமாடுகளைப்போல் வாழ்ந்து வருகிறுர்கள். அதற்கு நாம்தான் பொறுப்பாளி யாவோம். எனவே, அதற்கு ராட்டினம் தான் நமது பிராயச்சித்த மாகும்.

திக்கற்றவர்களுக்குத் தொண்டு செய்வதே சமயம். திக்கற்ற வர்களின், துன்பத்திற்குள்ளானவர்களின் உருவத்திலேயே கடவுள் நமக்குக் காட்சி தருகிறுர். நமது நெற்றியில் நாம், கடவுள் பக்திக்கு அறிகுறியாக திலகங்கள் இட்டுக் கொண்டிருந்தாலும், திக்கற்றவர்களையும் துன்பத்திற்குள்ளானவர்களையும், அதாவது கடவுளை நாம் கவனிப்பதில்லை. வேதங்களில் கடவுள் இருக் கிறுர், இல்லவும் இல்லை. வேதங்களின் தத்துவத்தைக் கவனிப் போர் அவற்றில் கடவுளைக் காண்கிறுர்கள். வேதங்களின் எழுத் துக்களை மாத்திரம் இறுகப் பற்றிக் கொண்டிருப்போர் ஒரு வேதியர்; அதாவது வேத புத்தக பக்தியுள்ளவராவார்; அதிலுள்ள தத்துவத்தை உணர்ந்துகொண்டவராக மாட்டார்.

ஜபமாலையைப் புகழ்ந்து நரசிம்ம மேத்தா* பாடியிருக் கிறுர் என்பது உண்மையே. அந்தப் புகழ் முற்றிலும் தகுதி வாய்ந்ததே. ஆனால், அதே நரசிம்ம மேத்தா ஓரிடத்தில் பின் வருமாறு பாடியுள்ளார்:

"திலகத்தினுலும் துளசியினுலும் என்ன பலன்? ஜப மாலையினுலும், கடவுளின் நாமாவை உச்சரிப்பதாலும் என்ன பலன்? வேதத்தை இலக்கணத் துடன் வியாக்கியானம் செய்வதால் என்ன பலன்? இவையெல்லாம் வயிற்

---

* காந்திஜி தமது உயிரைக்காட்டிலும் மேலானதாகக் கருதிய 'வைஷ்ணவ ஜனதோ' என்ற பாடலை இயற்றியவர்தான் கவி நரசிம்ம மேத்தா. அவர் இன்னும் பல அருமையான பக்தி கீதங்களை இயற்றியுள்ளார். நரசிம்ம மேத்தா சிறந்த கவியாக விளங்கியதுடன், பரம பக்தராகவும் இருந்தார்

றுப் பிழைப்புக்கான தந்திரங்களே. பரப்பிரம்மத்தை அறிவதற்கு அவை உதவியாக இராவிட்டால், அவற்றினல் யாதொரு பலனும் இல்லை.''

முஸ்லிம் தமது ஜப மாலையை உருட்டுகிறர்; கிறிஸ்தவரும் அவரது ஜப மாலையை உருட்டுகிறர். உதாரணமாக, ஒருவர் பாம்பினல் கடிக்கப்பட்டுத் துடிக்கும்போது அவருக்கு உதவி யளிக்கச் செல்லுவதற்கு, முஸ்லிமின் ஜபமாலையோ அல்லது கிறிஸ்தவரின் ஜப மாலையோ தடையாக இருக்குமாயின், அவ் விருவரும் தங்கள் தங்கள் மதத்திலிருந்து வீழ்ச்சி அடைந்தவர் களேயாவர். வேதங்களை நன்கு அறிவதால் மாத்திரம் நமது பிராம்மணர்கள் ஆன்மிக போதகர்களாகிவிட முடியாது. அவ் விதம் ஆக முடியுமாயின், வேதங்களை வியாக்கியானம் செய்துள்ள மாக்ஸ் முல்லர் ஆன்மிக குருவாகியிருப்பார். இன்றைய மதத்தை நன்கு அறிந்து கொண்டுள்ள ஒரு பிராம்மணர், நிச்சயமாக வேதத்திற்கு இரண்டாவது ஸ்தானமே கொடுப்பார்; ராட்டின மதத்தையே பிரசாரம் செய்வார்; பட்டினி கிடக்கும் கோடிக் கணக்கான தன் தேச மக்களின் பசியைத் தீர்ப்பார். அப்போது தான்—அதுவரையில் அல்ல – அவர் வேத ஆராய்ச்சியில் முழு மனத்துடன் ஈடுபட முடியும்.

பட்டப் பெயர்களுடன் விளங்கும் சமயங்களை அனுசரிப்ப தைக் காட்டிலும், நூற்பதையே நான் நிச்சயமாகச் சிறந்த தென்று கருதுகிறேன். எனினும், சமயங்களைக் கைவிட்டுவிட வேண்டும் என்பது அதன் அர்த்தமல்ல. எல்லா சமயங்களையும் பின்பற்றுவோரால் அனுசரிக்கப்பட வேண்டிய ஒரு தரும மானது, சமயங்களைக் காட்டிலும் மேலானது என்றே நான் கூறு கிறேன். எனவே, தொண்டு உணர்ச்சியுடன் ராட்டினத்தைச் சுற்றும் ஒரு பிராம்மணர் சிறந்த பிராம்மணராகவும், ஒரு முஸ்லிம் சிறந்த முஸ்லிமாகவும், ஒரு வைஷ்ணவர் சிறந்த வைஷ்ணவராக வும் திகழ்கிறர் என்றே நான் கூறுகிறேன்.

எனது முடிவு நெருங்கிவிட்டது என்ற உணர்ச்சி காரணமாக, நான் 'ராம' என்ற தெய்விகமான மந்திரத்தை ஜபிக்கவோ அல்லது ஜப மாலையை உருட்டவோ இல்லை. நான் அப்போது ராட்டினத்தைச் சுற்ற முடியாத அளவுக்கு அவ்வளவு பலவீனமாக இருந்தேன். ராம நாமத்தில் என் மனத்தை நிலைபெறச் செய் வதற்கு உதவியாக இருக்கும் போதெல்லாம் நான் ஜப மாலையை எடுத்துக்கொள்ளுகிறேன் என் மனம் ராம நாமத்தில் முற்றிலும் ஈடுபட்டிருக்கும்போது, ஜப மாலை உதவியாக இருப்பதைவிட அதிகமாக ஒருதடையாக இருக்குமாயின், ஜப மாலையை அப்பால் வைத்துவிடுகிறேன். படுக்கையில் படுத்தபடியே ராட்டினத்தைச் சுற்றுவது எனக்குச் சாத்தியமாயின், கடவுளிடம் என் மனத்தை ஈடுபடுத்துவதற்கு அது உதவியாக இருக்குமென்று நான் கருது வேனயின், நான் நிச்சயமாக ஜப மாலையை அப்பால் வைத்து விட்டு ராட்டினத்தைச் சுற்றத் தொடங்குவேன். ராட்டினத்தைச் சுற்றும் பலம் எனக்கு உண்டாகிவிடுமாயின், ஜப மாலையை உருட்டுவதா அல்லது ராட்டினத்தைச் சுற்றுவதா என்பதை

நிர்ணயம் செய்ய வேண்டிய சந்தர்ப்பம் எனக்கு ஏற்படுமாயின், வறுமையும் பட்டினியும் தேசமக்களை வாட்டிவரும் வரையில், நான் ராட்டினத்தையே எனது ஜப மாலையாகக் கருதி அதைச் சுற்றத் தொடங்குவேன் என்பது நிச்சயம்.

ராம நாமத்தை ஜபிப்பது கூட இடையூருக இருக்கக் கூடிய ஒரு காலத்தை நான் ஆர்வத்துடன் எதிர்பார்க்கிறேன். ராமன் பேச்சிற்கும் அப்பாற்பட்டவராக இருக்கிருர் என்பதை நான் உணரும்போது, நான் ராம நாம ஜபம் செய்ய வேண்டிய அவசியம் இல்லை. ராட்டினம், ஜபமாலை, ராம நாமம் முதலியவை எல்லாம் எனக்கு ஒன்றேயாகும். அவையெல்லாம் ஒரே லட்சியத்தையே அடைய உதவியாக இருக்கின்றன. அவை தொண்டு புரியும் மதத்தை எனக்குக் கற்பிக்கின்றன. தொண்டு புரியும் சமயத்தை அனுசரிக்காமல் நான் அகிம்சையை மேற்கொள்ள முடியாது; அகிம்சை மதத்தை அனுசரிக்காமல் நான் சத்தியத்தைக் கண்டு பிடிக்கவும் முடியாது. சத்தியத்தைக் காட்டிலும் வேறு சமயம் ஒன்றும் இல்லை. ராமன், நாராயணன், ஈசுவரன், குதா, அல்லா, கடவுள் எல்லாம் சத்தியம்தான். "தங்கம் பல்வேறு உருவங்களில் அடிக்கப்படுவதால், பல்வேறு பெயர்களுக்கும், வடிவங்களுக்கும் அது காரணமாகிறது; எனினும், இறுதியில் அதெல்லாம் தங்கம்தானே" என்று நரசிம்ம மேத்தா கூறுகிருர்.

நான் 'இந்திய சுயராஜ்யத்'தில் யந்திரங்களைப்பற்றி கூறியிருந்ததில், நான் வாபஸ் செய்து கொள்ளும்படியாக எதுவும் இல்லை. அதைப் பார்த்தால், யந்திரங்களில் அச்சு யந்திரத்தையும் நான் சேர்த்துக் கொண்டிருக்கிறேன் என்பது தெரியும். அந்தப் புத்தகத்தில் சித்திரிக்கப்பட்டுள்ள இந்திய சுயராஜ்ய ஆட்சி முறையை நான் இந்தியாவின் முன்வைக்கவில்லை என்பது நினைவில் இருக்கவேண்டும். நான் தேசத்தின் முன்வைக்கும் முறை பார்லிமெண்டு ஆட்சி, அதாவது ஜனநாயக சுயராஜ்யமே ஆகும்.

நான் இன்று கூறும் யோசனை, எல்லா யந்திரங்களையும் அழித்துவிட வேண்டும் என்பதல்ல. யந்திரங்களுக்கெல்லாம் முதல் ஸ்தானத்தில் ராட்டினம் இருக்க வேண்டும் என்றே கூறுகிறேன். 'இந்திய சுயராஜ்யம்' குற்றம் குறையற்ற ஒரு லட்சிய ஆட்சி முறையையே சித்திரிக்கிறது. அந்த லட்சியத்தை நான் எட்ட முடியாது என்ற உண்மை, எனது பலவீனத்தையே காட்டுகிறது. அகிம்சையைக் காட்டிலும் மேலான சமயம் இல்லை என்பது எனது நம்பிக்கையாகும். அப்படியிருந்தும் இம்சையை நான் தவிர்க்க முடியவில்லை. உண்பதிலும், தண்ணீர் குடிப்பதிலும் கூட இம்சை அடங்கியிருக்கிறது அல்லவா? எனினும், அகிம்சை லட்சியம் என் முன் எப்போதும் இருக்கிறது. எனவே, உண்பது போன்ற நடவடிக்கைகளில் என்னை நான் கட்டுப்படுத்திக்கொள்ள முயற்சிக்கிறேன். அந்த நடவடிக்கைகளைக் கூட,

குறைந்த பட்ச அளவுக்குக் குறைத்துக் கொள்ள நான் முயற்சித்து வருகிறேன்.

ஆஸ்பத்திரிகளைப்பற்றி நான் கூறியிருப்பதும் உண்மையே. இருந்தாலும், சட்ட பூர்வமானவை என்று நான் கருதும் சில மருந்துகளை உபயோகிக்கலாமென நான் நினைக்கிறேன். அப்போது கூட எனக்கு உடலில் மிக மிகக் குறைந்த பற்றுதலே இருக்க வேண்டும். நான் கைதியாக இருந்தபோது ஆஸ்பத்திரிக்குச் சென்றேன். எனினும், நான் விடுதலை அடைந்த உடனேயே, ஆஸ்பத்திரியிலிருந்து ஓடிவிடவில்லை. ஏனெனில், எனக்கு மரியாதையுடனும் அன்புடனும் சிகிச்சை செய்தவர்களின் மேற்பார்வையில் நான் தங்கியிருக்க வேண்டியது எனது கடமையென்று எண்ணினேன்.

இருந்தாலும், நான் நோய்க்கு இலக்கானதைக் குறித்து வெட்கம் அடைகிறேன். ஏனெனில், ஒரு மனிதன் ஒருபோதும் நோய்வாய்ப்படக் கூடாது என்பதே எனது கொள்கையாகும். மருந்து எதுவும் சாப்பிடுவது எனக்கு அவமானமாக இருக்கிறது. என்னை ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போகும் அவசியம் ஏற்பட்டது, எனக்கு இன்னும் அதிக அவமானமாக இருக்கிறது.

ஒரு திருடனைக் கொல்ல நான் ஒரு போதும் விரும்பியதில்லை. அன்பினால் அவன் மனத்தை மாற்ற வேண்டும் என்பதே எப்போதும் எனது கருத்தாகும். எனினும், அத்தகைய செயலுக்குத் தேவையான அன்பு ஒருவருக்கு ஏற்படவில்லையாயின், அத்தகைய அன்பு நிலையை ஒருவர் எட்ட முடியவில்லையாயின், திருடனைக் கொல்லுவதன் மூலமாவது தம்மை அண்டியிருப்பவர்களையும், தம்முடைய சொத்துக்களையும் காப்பாற்றிக் கொள்ள அவருக்கு உரிமை உண்டு.

ஆங்கிலேயர்களை, திருடர்களுடன் ஒப்பிட்டுக் கூறுவது பெரும் தவறாகும். திருடர்கள் பட்டவர்த்தனமான பலாத்காரத்தினால் உங்களிடம் கொள்ளையடிக்கிறார்கள். ஆனால் ஆங்கிலேயர்களோ, முக்கியமாக நம்மை ஏய்த்துவிட்டுக் கொள்ளையடிக்கிறார்கள். எனவே, அவ்விரு சாராரும் கையாளும் முறையில் பெரிதும் வேற்றுமை இருக்கிறது. கள்ளுக்கடைக்காரர், எனக்குக் கள்ளை விற்பதன்மூலம் என்னுடைய ஆன்மாவைக் கொள்ளையிடுகிறார். எனவே, அவரைக் கொல்ல வேண்டுமென நான் யோசனை கூறுவதா அல்லது அவருடன் ஒத்துழைக்கக் கூடாது என்று கூறுவதா? ஆனால், ஓர் ஆங்கிலேயர் மிருகத்தனமாக உங்களை அடிப்பதாகவோ அல்லது ஒரு கள்ளுக் கடைக்காரர் பலாத்காரமாக உங்கள் வாய்க்குள் கள்ளை ஊற்ற முயற்சிப்பதாகவோ வைத்துக் கொள்ளுவோம். அவர்களுடைய போக்கை நீங்கள் அன்பினால் மாற்ற முடியாவிடில், அப்போது அவர்களுடன் ஆயுதப் போரில் ஈடுபட உங்களுக்கு உரிமை உண்டு. உங்களைத் தாக்குவோர் ஒருவராகவோ அல்லது பலராகவோ இருந்தாலும், பலவீனமானவராகவோ அல்லது பலமுள்ளவராகவோ இருந்தாலும், அதனால் எவ்வித வேற்றுமையும் ஏற்படுவதற்கில்லை.

—'எங் இந்தியா' – 14—8—1924

# 13

# எனது தத்துவம்

டால்ஸ்டாய், புத்தர் இவர்களுடைய கொள்கைகளின் அரை குறையான கலப்படமே 'எனது தத்துவம்' என்பதை நான் நம்ப வில்லை. நான் எது சத்தியம் என்று கருதுகிறேனே அதைத் தவிர, எனது தத்துவம் என்பது என்ன என்றே எனக்குத் தெரியாது. அந்த சத்தியமே என்னைத் தாங்கிவருகிறது. டால்ஸ்டாயிடமிருந்தும் புத்தர் பிரானிடமிருந்தும் நான் எவ்வளவோ தெரிந்து கொண்டுள்ளேன். இருந்தாலும், கீதோபதேசங்களின் உண்மையான பொருளை 'எனது தத்துவம்' பிரதிபலிக்கிறது என்பதே எனது எண்ணமாகும். என்னுடைய இந்தக் கருத்து முற்றிலும் தவருக இருக்கலாம். அத்தகைய தவறினல் எனக்கோ அல்லது வேறு எவருக்கோ எவ்வித அபாயமும் ஏற்பட்டுவிடாது. எனது உறுதியான கொள்கை கலப்பற்ற சத்தியமாக இருக்குமாயின், அந்த உத்வேகத்திற்கு மூலகாரணம் எது என்பது முக்கிய விஷயம் அல்ல.

எந்தத் தத்துவத்திற்கு நான் பிரதிநிதியாக இருக்கிறேனே, அது அதன் சொந்த தகுதிகளைக் கொண்டு பரிசோதனை செய்யப்படட்டும். ஆயுதக் கலகத்தைக் கண்டு உலகம் அலுத்து விட்டது என்பதே எனது அபிப்பிராயமாகும். மற்ற நாடுகள் சம்பந்தப்பட்டவரையில் எது உண்மையாயினும், இந்தியாவில் ரத்தப் புரட்சி வெற்றி பெருது என்பதும் எனது அபிப்பிராயமாகும். அதை, பெரும்பாலான மக்கள் ஆதரிக்கமாட்டார்கள். பாமர மக்கள் தீவிரமான பங்கு எடுத்துக் கொள்ளாத எந்த இயக்கமும் அவர்களுக்கு நன்மை அளிக்க முடியாது. ரத்தப் புரட்சி வெற்றிகரமாக இருக்குமாயின், அதனல் பொதுமக்களுக்கு மேற்கொண்டு துன்பமும் கஷ்ட நஷ்டங்களுமே ஏற்படும். அப்போது கூட அவர்கள் சம்பந்தப்பட்டவரையில் அது அந்நிய ஆட்சியாகவே இருக்கும். நான் காட்டும் அகிம்சை, பலம் வாய்ந்தவர்களின் தீவிர அகிம்சையேயாகும். மிகவும் பலவீனமானவர்கூட மேற்கொண்டு பலவீனம் அடையாமல் அதில் பங்கு எடுத்துக் கொள்ள முடியும். அதில் பங்கு எடுத்துக் கொள்ளுவதால், அவர்கள் அதிக பலத்தை அடைய முடியும். பொதுமக்கள் முன்னர் எக்காலத்திலும் இராதவாறு அவ்வளவு அதிக தைரியசாலிகளாக இருக்கிருர்கள். ஓர் அகிம்சைப் போராட்டத்தினல், பரந்த அளவில் ஆக்க வேலைகளுக்கும் இடம் ஏற்படுகிறது. தமோ குணத்திற்கோ,* அந்தகாரத்திற்கோ அல்லது சோம்

---

* இங்கே காந்திஜி குறிப்பிட்டுள்ள தமோ குணத்தைப் பற்றி கீதையில் உள்ள கீழ்க்கண்ட சுலோகத்திலிருந்து தெரிந்து கொள்ளலாம்:

தமஸ்த்வக்ஞானஜம் வித்தி மோஹனம் ஸர்வதேஹினும்|
ப்ரமாதாலஸ்ய நித்ராபி: தன்னிபத்னுதி பாரத||

—கீதை, அத்தியாயம்-14, சுலோகம்-8

பேறித்தனத்திற்கோ அது வழிகாட்டியாக இருக்கமுடியாது. அதனால் தேசிய வாழ்விற்கே தூண்டுதலும் வேகமும் ஏற்படும். அந்த இயக்கம் மௌனமாகவும், கண்ணுக்குத் தெரியாமலும், அதே சமயம் நிச்சயமாகவும் இயங்கிவருகிறது.

புரட்சிக்காரரின் வீரத்தனத்தையும், தியாகத்தையும் நான் மறுக்கவில்லை. எனினும், ஒரு கெட்ட லட்சியத்திற்காகக் காட்டப்படும் வீரத்தனமும், செய்யப்படும் தியாகமும் அவ்வளவு அற்புதமான சக்தியை வீணடிப்பதேயாகும். அவை, நல்ல லட்சியத்திற்கும் தீங்கை உண்டாக்குகின்றன. ஏனெனில், ஒரு தீய லட்சியத்திற்காக வீரத்தனத்தையும் தியாக உணர்ச்சியையும் துஷ்பிரயோகம் செய்யும் பகட்டில் மக்களின் கவனம் சென்றுவிடுகிறது.

தன்னையே தியாகம் செய்யும் வீரத்தனமுள்ள புரட்சிக்காரரின் முன்னிலையில் நான் தலை நிமிர்ந்து நிற்க வெட்கப்படவில்லை. ஏனெனில், அதே அளவுக்கு நானும் அகிம்சைவாதிகளின் வீரத்தனத்தையும் தியாகத்தையும் காட்ட முடியும். தவிர, இவர்களின் வீரத்தனம் நிரபராதிகளின் ரத்தத்தினால் கறை படாததாகும். பிறரைக் கொல்லும் நடவடிக்கையில் உயிர் துறக்கும் லட்சக்கணக்கான மனிதர்களின் தியாகத்தைக் காட்டிலும், நிரபராதியான ஒரு தனி மனிதனின் உயிர்த்தியாகம் லட்சக்கணக்கான மடங்கு அதிக சக்தி வாய்ந்தது. நிரபராதி மனம் விரும்பி செய்யும் தியாகம், கடவுளோ அல்லது மனிதனோ உருவாக்கக்கூடிய இறுமாப்புடன் கூடிய கொடுங்கோன்மைக்கு மிக மிகச் சக்திவாய்ந்த ஓர் எதிர்ப்பாகும்.

சுயராஜ்யத்திற்குத் தடையாக மூன்று பெரிய முட்டுக்கட்டைகள் இருப்பதைக் கவனிக்கும்படி நான் புரட்சிக்காரர்களை அழைக்கிறேன். ராட்டினம் பூரணமாகப் பரவாததும், ஹிந்து-முஸ்லிம் வேற்றுமையும், தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கு விதிக்கப்பட்டுள்ள மானிடத் தன்மையற்ற தடையுமே மூன்று பெரும் முட்டுக்கட்டைகளாகும். எனவே, அமைதியான இந்த ஆக்க வேலைகளில் பொறுமையுடன் போதிய பங்கு எடுத்துக் கொள்ளும்படி புரட்சிக்காரர்களை நான் கேட்டுக்கொள்ளுகிறேன். அவ்வேலைகள் பகட்டாக இராமலிருக்கலாம். அதன் காரணமாகவே அவற்றிற்கு வீரத்தனமும், பொறுமையும், மௌனமான, நீடித்த முயற்சியும், தன்னலத்தை அறவே மறந்துவிடும் இயல்பும் தேவையாக இருக்கின்றன. தன்னலத்தை அறவே மறந்து பணி புரியும் ஆற்றல் புரட்சிக்காரர்களுக்கு உண்டு. பொறுமையின்மை, புரட்சிக்காரர்களுடைய விவேகத்தை மழுங்கச் செய்து, அவர்கள் வழிதவறிப் போகும்படியும் செய்துவிடும். போலிப்

---

இதன் பொருள். அஞ்ஞான இருளிலிருந்து உண்டாவதே தமோ குணம். இது உயிர்களையெல்லாம் மயக்கும் தன்மையுடையது. அசட்டை, சோம்பல், உறக்கம் முதலியவற்றால் எல்லோரையும் கட்டுண்டவர்களாக இது செய்து விடுகிறது.

பெருமைக்காக தூக்கு மேடையேறி இறப்பதைக் காட்டிலும், பட்டினி கிடக்கும் பொதுமக்களிடையே தனக்குத் தானே வலுவில் பட்டினி விரதத்தை மேற்கொண்டு சிறிது சிறிதாகவும் யாராலும் கவனிக்கப்படாமலும் வாடி வதங்குவது, அதிக வீரத் தனம் வாய்ந்தது என்பதில் ஐயமில்லை.

குற்றம் குறைகளை எடுத்துக் கூறுவதெல்லாம் சகிப்புத் தன்மையற்ற காரியம் என்று கூறிவிட முடியாது. புரட்சிக்காரர்களின் நடவடிக்கைகளை நான் ஆட்சேபித்திருப்பதற்குக் காரணம், அவர்களுக்காக நான் வருந்துவதேயாகும். அவர்கள் செய்வது தவறு என்று நான் நம்புவது போலவே, எனது கொள்கையும் தவறு என்று நினைக்க அவர்களுக்கு அதே உரிமை உண்டு.

'எங் இந்தியா' –12—2—1925

(2)

எனது தத்துவம் என ஏதாவது ஒன்று இருக்குமாயின் அது, ஒருவருடைய லட்சியத்திற்கு வெளியாரால் எத்தகைய அபாயமும் ஏற்படுவது சாத்தியமில்லை என்பதையே வலியுறுத்துகிறது. லட்சியமே கெட்டதாக இருந்தால் மாத்திரமே அதற்கு அபாயம் நேரும், அவ்விதம் நேருவது நியாயமாகவும் இருக்கும்; அல்லது அந்த லட்சியத்தை ஆதரிப்பவர்கள் உண்மையில்லாதவர்களாகவோ கோழைகளாகவோ அல்லது தூய்மையற்றவர்களாகவோ இருந்தாலும் லட்சியத்திற்கு அபாயம் ஏற்படும்.

'ஹரிஜன்' – 25—7—1936

# 14

# எனது வாழ்க்கையில் சமயம்

ஸ்ரீ வில் டுராண்ட் கேட்ட கேள்விகளும் அவற்றிற்கு காந்திஜி அளித்த பதில்களும் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

**கேள்வி:** உங்கள் சம்பந்தப்பட்டவரையில் வாழ்வின் பொருள் என்ன?

**பதில்:** வாழ்வை தெய்விகமான ஓர் ஒளி என்று நான் நம்புவதால், அது என் சம்பந்தப்பட்டவரையில் உண்மையானதே.

**கே:** உங்களை பலத்துடன் வைத்திருப்பது எது?

**ப:** வாழ்வின் லட்சியத்தைப் பூரணமாக அறிந்துகொள்ளவேண்டும் என்ற முயற்சியே என்னை பலத்துடன் வைத்திருக்கிறது.

**கே:** சமயம் உங்களுக்கு ஏதாவது உதவி அளிக்குமாயின், என்ன உதவி அளிக்கும்?

**ப:** சமயம், சம்பிரதாயமான முறையில் அல்ல, பரந்த முறையில் தெய்விக சக்தியின் சாரமான அம்சத்தை எட்டிப்பார்க்க உதவுகிறது. தார்மிக உணர்ச்சி பூரண அபிவிருத்தியடைந்தாலன்றி, அந்த சக்தியின் சாரமான அம்சத்தை எட்டிப்பார்ப்பது முடியாத காரியம். எனவே, என் சம்பந்தப்பட்டவரையில் சமயமும், தருமமும் ஒன்றுதான்.

**கே:** உங்களுடைய உத்வேகத்திற்கும், உங்களுடைய சக்திக்கும் மூலகாரணங்கள் என்ன?

**ப:** எந்தவிதமான உத்வேகமும் சக்தியும் எனக்கு இருந்தாலும், அவற்றிற்கு மூலகாரணம் இந்தப் பெருமுயற்சியேயாகும்.

**கே:** எதில் நீங்கள் மன ஆறுதலும், ஆனந்தமும் காண்கிறீர்கள்? கடைசியாக, நீங்கள் எதை விலையிலாப் பொக்கிஷமாகக் கருதுகிறீர்கள்?

**ப:** உயிர் வாழும் எல்லாவற்றிற்கும் தொண்டு செய்வதிலேயே நான் ஆறுதலையும் ஆனந்தத்தையும் காண்கின்றேன். ஏனெனில், தெய்விக அம்சமே எல்லா உயிர்களுடையவும் இறுதி நிலையாகும். அந்தகாரத்தையும், தீய சக்திகள் யாவற்றையும் எதிர்த்துப் போராடுவதையே நான் பொக்கிஷமாகக் கருதுகிறேன்.

(ஸ்ரீ வில் டுராண்ட் எழுதிய 'வாழ்வின் பொருள்' என்ற நூலிலிருந்து எடுத்தது)

## 15

# எனது வாழ்க்கையின் அடிப்படை

கத்தோலிக்க இந்தியர் சங்கத்தின் காரியதரிசி பதவியை வகிக்கும் ஒரு ரோமன் கத்தோலிக்கர், எனக்கு நீண்ட கடிதம் ஒன்று எழுதியுள்ளார். அதன் சுருக்கமான பகுதிகளைக் கீழே கொடுத்துள்ளேன்:

"தேசீயப் பத்திரிகைகளில் தடபுடலான தலைப்புகளுடன் கடிதங்கள் வெளியாவதை நான் அடிக்கடி பார்த்திருக்கிறேன். அந்தக் கடிதங்களில், உங்களுடைய வாழ்க்கையையும் நடவடிக்கைகளையும் ஏசுநாதரின் வாழ்க்கை, நடவடிக்கைகளுடன் ஒப்பிட்டு எழுதியிருக்கிறார்கள். இந்தக் கடிதங்களை எழுதியவர்கள், தங்களுடைய இந்தச் சாதனையுடன் திருப்தியடையாமல் மேலும் ஒருபடி முன் சென்று 'காந்திஜியை', 'நவீன ஏசுநாதர்!' என்றும் இந்திய மக்களுக்கு எடுத்துக் கூறியிருக்கிறார்கள். அவர்கள் இன்னும் மேற்

கொண்டு எவ்வளவு தூரம் போவார்களோ என்று நான் ஆச்சரியப்பட்டுக் கொண்டிருந்தேன். நீங்கள் சிறைப்பட்டிருந்தபோது பத்திரிகைகளில் இத்தகைய கடிதங்கள் ஏராளமாக வெளிவந்தன. பிறகு சிறிது காலம் அவை நின்றிருந்தன. நீங்கள் விடுதலை அடைந்த பிறகு, மீண்டும் அவை வெளியாகத் தொடங்கிவிட்டன. அவற்றிற்கு அனுப்பிய மறுப்புகளால் யாதொரு பலனும் ஏற்படவில்லை. அதனாலேயே, இந்தக் கடிதத்தை உங்களுக்கு எழுதுகிறேன்.

''மக்களின் பைத்தியக்காரத்தனமான இந்த பக்தியையும் விசுவாசத்தையும் தாங்கள் சாந்தமாகப் பார்த்துக் கொண்டிருக்க முடியுமா? உங்களுடைய போக்கில், நீங்கள் பெரிய மனிதர் என்பதை யாரும் மறுக்கவில்லை. உங்களுடைய எதிராளிகளும் அதை ஒப்புக்கொள்ளுகிறார்கள். எனினும், நீங்கள் கடவுள் அல்ல. இதுவரையில் நீங்களும், உங்களிடம் தெய்விக அம்சம் இருப்பதாகக் கூறிக் கொண்டதில்லை. நீங்கள் ராஜீய விஷயங்களை உபதேசித்து வருகிறீர்களேயன்றி, சமயத்தை அல்ல. அதைத்தவிர, நீங்கள் விவாகமானவர்; மனைவியுடனும், குழந்தைகளுடனும் இருக்கிறீர்கள். அப்படியிருக்க, உங்களுடைய வாழ்க்கையிலும், தொண்டிலும் நீங்கள் ஏசுநாதரைப் போல் இருப்பதாக இந்தக் குருட்டு பக்தர்கள் கூறுவது எப்படி சாத்தியமாகும்? நீங்கள் அகிம்சைக் கொள்கையின் உயர்ந்த உபதேசகராக இருக்கிறீர்கள் அல்லவா? ஒரு வேளை, அதனால்தான் உங்களை அவர்கள் ஏசுநாதருடன் ஒப்பிட்டார்களோ என நான் நினைத்தேன். எனினும், இங்கேயும் நீங்கள் ராஜீய விஷயங்களிலேயே அகிம்சையை உபதேசிக்கும் தீவிர தேசீயவாதியாக இருக்கிறீர்கள். லட்சியத்தை அடையும் ஒரு முறையாகவே அகிம்சையைக் கருதுகிறீர்கள். ஆனால் ஏசுநாதரோ, ராஜீய விஷயங்களில் ஆழ்ந்துவிட மறுத்துவிட்டது மாத்திரமல்ல, மானிட வர்க்கத்திற்காகவே வாழ்ந்தார், கஷ்டப்பட்டார், பேசினார். வர்ணம், தேசம் இவற்றின் குறுகிய, கட்டுப்படுத்தும் எல்லைகளுக்கு உட்படுவது அவரது இயல்பு அல்ல. எனவே, ஏசுநாதர் அவற்றிற்கு அப்பால் சென்றார். நேர்மையான லட்சியத்திற்காக 'ஸ்தூல' பலத்தை உபயோகிப்பது, அவர் உபதேசித்த மகத்துவம் வாய்ந்த கொள்கைகளுக்குப் பொருந்தாதவை அல்ல என்பதையும் அவர் சந்தேகத்திற்கு இடமின்றிக் காட்டினார். எனவே இங்கேயும், உங்களைப்பற்றிப் பெருமையாகக் கூறப்படும் உவமைக்கு இடமில்லை.

''ஆகையால், இவர்களெல்லாம் உங்களைக் குறித்து எழுதியுள்ள கடிதங்களைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள் என்று உங்களை நான் கேட்பது இயல்பேயாகும்.''

மேற்கண்ட உவமையைக் குறித்து கடிதம் எழுதியிருப்பவரின் மன வேதனை தெளிவானது. அவரது கேள்விக்குப் பதிலாக, நான் ஏற்கெனவே கூறியிருப்பதையே திருப்பிக் கூறலாம். அதாவது இத்தகைய உவமைகளை நான் சிறிதும் விரும்பவில்லை என்று முன்பே கூறியிருக்கிறேன். அவ்வித உவமைகளால் யாதொரு பலனும் ஏற்படுவதில்லை. மற்றும், என்னுடைய வாழ்க்கையை எந்தப் பெரியார்களுடன் ஒப்பிடுகிறார்களோ, அவர்களுடைய பக்தர்களின் உணர்ச்சிகள் அவற்றால் அனாவசியமாகப் புண்படுத்தப்படுகின்றன.

என்னிடத்தில் தனித்த தெய்வாம்சம் எதுவும் இல்லை. என்னை நான் ஒரு தீர்க்கதரிசி என்று கூறிக்கொள்ளவுமில்லை. நான் சத்தியத்தைப் பணிவுடன் நாடும் ஒருவனே. சத்தியத்தைக் காண நான் உறுதி கொண்டிருக்கிறேன். கடவுளை நேருக்கு நேர் காண்பதற்காக, நான் எத்தகைய தியாகத்தையும் பெரிதாகக் கருதவில்லை. எனது அலுவல்கள் யாவும், அவை சமுதாயம், அரசியல், ஜீவகாருண்யம், ஒழுக்கம் முதலிய எவை சம்பந்தமாக இருந்தாலும், மேற்கண்ட லட்சியத்தை மனத்திற் கொண்டே செய்யப்படுகின்றன. அவரது சிருஷ்டிகளில் உயர்ந்தவர்களையும், வல்லமை பொருந்தியவர்களையும்விட மிக மிகத் தாழ்ந்தவர்களிடத்திலேயே பெரும்பாலும் கடவுளைக் காண முடியும் என்பதை நான் அறிவேன். எனவே, அத்தகையோரின் அந்தஸ்தை அடையவே நான் கஷ்டப்பட்டு வருகிறேன். அவர்களுக்குத் தொண்டு செய்யாமல் நான் கடவுளைக் காணமுடியாது. அதனாலேயே, ஒடுக்கப்பட்ட வகுப்பினருக்குத் தொண்டு செய்வதில் நான் பேரார்வம் கொண்டுள்ளேன். ராஜீய விஷயங்களில் பிரவேசிக்காமல் நான் அவர்களுக்குத் தொண்டு செய்ய முடியாது. அதனால்தான் நான் ராஜீய விஷயங்களில் கலந்து கொண்டுள்ளேன். எனவே, நான் மகத்துவம் வாய்ந்தவன் அல்ல. நான் கஷ்டப்படுவதையும், தவறு செய்வதையும் இயல்பாகக்கொண்ட இந்தியாவின் பணிவுள்ள ஊழியனே. இந்தியாவுக்குத் தொண்டு செய்வதன் மூலம் மானிட வர்க்கத்திற்குத் தொண்டுபுரியவே நான் விரும்புகிறேன்.

—'எங் இந்தியா' – 11—9—1924

# 16

# எனது லட்சியம்

[அகில இந்தியா உதவி 'சர்ஜன்கள் சங்கத்தின் பஞ்சாப் கிளைத் தலைவரான பண்டித ஜி. ராம், காந்திஜிக்கு ஒரு கடிதம் எழுதியிருந்தார். அக்கடிதத்திற்குப் பதிலாக காந்திஜி எழுதிய கட்டுரையில், வாழ்க்கையில் அவரது லட்சியத்தைப் பற்றி எழுந்த சில தப்பெண்ணங்களை அகற்றியுள்ளார். அந்தக் கட்டுரையைக் கீழே காணலாம்.]

முறைகளைக் கண்டிப்பது மனிதர்களைக் கண்டிப்பதாகும் என்று எண்ணுவது, பொதுவான தவறாக இருந்துவருகிறது. மருந்து பெரிதும் நோயாளியின் ஆன்மாவை உணர்ச்சியற்றுப் போகும்படி செய்துவிடுகிறது. எனவே, அதை ஒரு தீமை என்று கருதலாம். எனினும், வைத்தியர்களையும் அவ்விதம் கருத வேண்டுமென்ற அவசியம் இல்லை. எனக்கு அருமையான வைத்திய நண்பர்கள் இருக்கிறார்கள். நான் குறிப்பிட்ட புத்தகத்தை எழுதியபோது, அவசியம் நேர்ந்த சமயத்தில் அவர்க

ளுடைய ஆலோசனையை நாடவும் நான் தயங்கவில்லை. அவ்விதம் நாடியது, மருந்தின் உபயோகத்தைப் பற்றி எனக்குள்ள நம்பிக்கைக்கு முரணாகும் என்பதே கடிதம் எழுதியவரின் கருத்தாகும். மற்றும் பல நண்பர்களும் அதே கருத்தையே என்னிடம் கூறியிருக்கிறார்கள். அந்தக் குற்றச்சாட்டை நான் ஒப்புக்கொள்ளுவது, நான் குற்றம் குறையற்ற பூரணமனிதன் அல்ல என்பதையே ஒப்புக்கொள்ளுவதாகும். துரதிருஷ்டவசமாக, நான் குறைகள் உள்ளவனே. குற்றம் குறையற்ற நிலையை அடைய நான் பணிவுடன் முயற்சித்துவருகிறேன். அதை அடையும் வழியையும் நான் அறிவேன். எனினும், வழியை அறிவது, லட்சியத்தை அடைவதாகிவிடாது. நான் குற்றம் குறையற்றவனாக இருந்தால், எண்ணத்தில்கூட வெறிக் குணங்களைக் கட்டுப்படுத்தும் சக்தியை நான் பெற்றிருந்தால், என் உடல் நிலையும் குற்றம் குறையற்றதாக இருக்கவேண்டும். எனது எண்ணங்களைக் கட்டுப்படுத்துவதற்காக, தினந்தோறும் நான் மனத்தின் சக்தியைப் பெரும் அளவு செலவழிக்க வேண்டியவனாக இருக்கிறேன் என்பதைத் தடையின்றி ஒப்புக்கொள்ளுகிறேன். அதில் நான் வெற்றி பெற்றால், எத்தகைய சக்திக் களஞ்சியத்தை நான் தொண்டிற்காகச் செலவு செய்ய முடியும் என்பதை எண்ணிப்பாருங்கள்!

எண்ணத்திலோ அல்லது மனத்திலோ ஏற்படும் பலவீனம் காரணமாகவே குடல் நோய் உண்டாகிறது என்பது எனது அபிப்பிராயமாகும். அது போலவேயே, ரணசிகிச்சைக்கு நான் உடன்பட்டது, மேற்கொண்டு என் மனத்தின் பலவீனமே என்பதையும் ஒப்புக்கொள்ளுகிறேன். 'நான்' என்ற அபிமானத்திலிருந்து நான் முற்றிலும் விடுதலை பெற்றிருந்தால், நடப்பது நடந்தே தீரும் என்று ஒழிவடைந்திருப்பேன். ஆனால், தற்போதைய உடலில் வாழ நான் விரும்பினேன்.

பூரணமான பற்றுதலின்மை, யந்திரம் போன்ற ஒரு நடவடிக்கை யல்ல. ஒருவர் பொறுமையான உழைப்பினாலும் பிரார்த்தனையினாலும் அதை வளர்த்துக்கொள்ள வேண்டும். கர்னல் மாடாக்கும் அவரது சிப்பந்திகளும் என் மீது சொரிந்த அன்பிற்காக, அவர்களுக்கு எனது நன்றியை ஒரு தடவைக்கு மேலாகவே நான் பகிரங்கமாகத் தெரிவித்திருக்கிறேன். கர்னல் மாடாக் என்னை மிக்க அன்புடன் நடத்தினார். எனினும், அதற்கும் நான் கண்டிக்கும் அரசாங்க முறைக்கும் எவ்வித சம்பந்தமும் இல்லை. டயரிஸம்* சம்பந்தமாக எனது கருத்துக்களை நான் மாற்றிக்கொண்டால், கர்னல் மாடாக்கே என்னைப் பற்றி இழிவாக நினைப்பார். ஏனெனில், கர்னல் மாடாக் திறமை மிக்க ஒரு சர்ஜன். அந்த முறையில் அவர் தமது கடமையையே செய்தார். நான் சிறந்த முறையில் ரண சிகிச்சை பெற உதவியதற்காகவோ அல்லது கெடு முடிவதற்குள் என்னை விடுதலை செய்ததற்காகவோ நான் அரசாங்கத்திற்கு நன்றி செலுத்தவேண்டிய காரணம்

* அமிருதசரஸில் பாமர மக்களைப் படுகொலை செய்த டயரின் கொள்கையையே 'டயரிஸம்' என்று காந்திஜி குறிப்பிட்டுள்ளார்.

எதுவும் இல்லை. ஒவ்வொரு கைதிக்கும் அத்தகைய உதவி அளிக்க அவர்கள் கடமைப்பட்டிருக்கிறார்கள். கெடு முடிவதற்குள் அவர்கள் என்னை விடுதலை செய்தது, எனக்கு தரும சங்கடமாகி யிருக்கிறது. ஆரோக்கியமாக இருந்தாலும் அல்லது நோயுற் றிருந்தாலும் சிறையில் நான் அனுசரிக்க வேண்டிய வழியை அறிவேன். சிறைக்கு வெளியிலோ, நான் மெதுவாக மீண்டும் ஆரோக்கியமடைந்து வருகிறேன். என்றாலும், எனது திட்டத்தை எப்படி உருவாக்கிக்கொள்ளுவது என்பதை நிச்சயமாக நான் அறிந்துகொள்ள முடியாதவனாக இருக்கிறேன்.

கடிதத்தின் முக்கியமான பாகத்தை இப்போது கவனிக் கலாம். அவர் குறிப்பிட்டுள்ள தீர்க்கதரிசிகளின் அலுவல்களைப் பற்றி அவர் கொண்டுள்ள தப்பெண்ணமே அவரது மனக் குழப் பத்திற்குக் காரணமாகும். அவர் என்னை அந்த தீர்க்கதரிசிக ளுடன் ஒப்பிட்டிருப்பது எனக்கு சங்கடமாக இருக்கிறது. புத்தர் தமது லட்சியத்தை நிறைவேற்றவில்லை என்பது எனக்குத் தெரியாது. அவரது லட்சியம் நிர்வாண* நிலையை அடைவதே. அதை அவர் அடைந்ததாகவே, பரம்பரையாக வந்துள்ள வரலாறு கூறுகிறது. மற்றவர்களையும் தமது கொள்கைக்கு மாற்றுவதென்பது சில்லறை விஷயமாகும். 'அலுவல் முடிந்து விட்டது' என்று ஏசு நாதர், தாம் சிலுவையில் அறையப்பட்ட போது கூறியதாக கிறிஸ்தவ வேத நூல்கள் குறிப்பிடுகின்றன. அவர்களுடைய அன்புத் தொண்டு அவர்களுக்குப் பிறகு செத்து விடவில்லை. அத் தொண்டின் மிக்க உண்மையான அம்சம் என்றென்றும் இருந்துவரும். அவர்கள் தொண்டுபுரிந்து இன்று இரண்டு அல்லது மூவாயிரம் ஆண்டுகள் சென்றுவிட்டன. எனினும், அவை பரந்த கால சக்கரத்தில் ஓர் அணுவேயாகும்.

தீர்க்கதரிசிகளைப் பற்றிக் குறிப்பிடும் அதே மூச்சில் என்னைப் பற்றியும் குறிப்பிடுவதற்கு நான் தகுதிவாய்ந்தவன் என்று நான் கருதவில்லை. நான் பணிவுடன் சத்தியத்தை நாடும் ஒருவனே. என்னை நான் அறிந்துகொள்ளவும், இந்த ஜன்மத்திலேயே மோட் சத்தை அடையவும் நான் துடித்துக் கொண்டிருக்கிறேன். உடலின் அடிமைத்தனத்திலிருந்து ஆன்மாவை விடுவிப்பதற்காக நான் பெற்றுவரும் பயிற்சியின் ஓர் அம்சமே எனது தேசீயத் தொண்டாகும். இவ்விதமாக யோசித்தால், எனது தொண்டு கலப்பற்ற தன்னலமாகவே கருதப்படும். பூமியில் அழியக்கூடிய சாம்ராஜ்யத்திற்காக நான் ஆசைப்படவில்லை; மோட்ச சாம்ராஜ்யத்தை அடையவே நான் பெருமுயற்சி செய்து வருகிறேன். எனது லட்சியத்தை அடைவதற்கு, நான் ஒரு குகையின் ஆதரவை நாடவேண்டும் என்ற அவசியம் இல்லை. குகையில் வசிக்கும் ஒருவர் ஆகாசக் கோட்டைகள் கட்டமுடியும். ஆனால், ஜனகரைப் போல் மாளிகையில் வசிப்பவர் கோட்டைகள்

* நிர்வாணம் என்பது முக்தியே யாகும். அது, மறுபிறப்பற்ற மகோன்னதமான ஆனந்த நிலையையே குறிப்பிடுகிறது.

கட்டுவதற்கில்லை. எண்ணங்களாகிய இறகுகளைக் கொண்டு உலகத்தைச் சுற்றித் திரியும் குகைவாசிக்கு மன அமைதி இருக்க முடியாது. ஆனால், ஒரு ஜனகரோ, ஆடம்பரங்களுக்கும் செல்வத்திற்கும் இடையே, நமது அறிவுக்கு எட்டாத அமைதியுடன் இருக்கலாம். என் தேசத்திற்காகவும், அதன் மூலம் மானிடவர்க்கத்திற்காகவும் இடைவிடாது உழைப்பதே, நான் மோட்சம் அடைவதற்கான வழியாகும். உயிர் வாழும் சகல ஜீவராசிகளுடனும் நான் நெருங்கிய தொடர்புகொள்ளவே விரும்புகிறேன். எனவே, ஒரு முஸ்லிமோ, கிறிஸ்தவரோ அல்லது ஒரு ஹிந்துவோ என்னை வெறுத்தாலும், என் மீது துவேஷம் கொண்டாலும், நான் அவர்களுக்கு அன்புடன் தொண்டுபுரியவே விரும்புகிறேன். அவர்கள் என்னை துவேஷித்தாலும், என் மனைவியையோ அல்லது மகனையோ நேசிப்பதுபோலவே அவர்களையும் நான் நேசிப்பேன். எனவே, நிரந்தரமான விடுதலையும் நிரந்தரமான அமைதியும் உள்ள இடத்திற்கு நான் மேற்கொண்டுள்ள யாத்திரையில் எனது தேசபக்தி ஒரு கட்டமேயாகும். என் சம்பந்தப்பட்டவரையில், சமய சம்பந்தமற்ற அரசியல் அலுவல்களுக்கு இடமேயில்லை. அவை சமயத்திற்கு உள்ளடங்கியவையே. சமயத் தொடர்பு இல்லாத அரசியல் ஒரு மரணப் பொறியேயாகும். ஏனெனில், அது ஆன்மாவைக் கொன்றுவிடுகிறது.

—'எங் இந்தியா'—3—4—1924

# 17

# எனது லட்சியம்—2

காந்திஜி ரங்கூனுக்கு விஜயம் செய்தபோது, அந்நகரவாசிகள் அவருக்கு ஓர் உபசாரப் பத்திரம் வாசித்துக் கொடுத்தனர். அதற்கு காந்திஜி அளித்த பதிலின் சாரத்தைக் கீழே காணலாம்:

இந்த மனப்பூர்வமான வரவேற்பிற்காகவும், உபசாரப் பத்திரத்தில் கண்டுள்ள அன்பான வார்த்தைகளுக்காகவும் நான் உங்களுக்கு நன்றி செலுத்துகிறேன். அந்தப் புகழுரைகளுக்கு நான் தகுதியானவன் என்று கூறி, அவற்றைத் தற்போது ஏற்றுக்கொள்ள முடியாதவனாக இருக்கிறேன். எனினும், நீங்கள் அன்புடன் குறிப்பிட்டுள்ளவற்றில் இரண்டு விஷயங்களைக் குறித்து நான் நிச்சயமாக உரிமை கொண்டாட முடியும். முதலாவதாக, எனது லட்சியம் இந்திய மக்களிடையே சகோதர உணர்ச்சி நிலவவேண்டும் என்பது மாத்திரமல்ல; எனது லட்சியம் இந்தியாவின் விடுதலை மாத்திரமல்ல. எனினும், அப்பிரச்னை என் வாழ்க்கை முழுவதையும், என் நேரம் முழுவதையும் இன்று ஆட்கொண்டிருக்கிறது என்பதில் சந்தேகமில்லை. இந்தியாவின்

விடுதலையைப் பெறுவதன் மூலம், மானிட வர்க்க சகோதரத்துவ லட்சியத்தையே அடையலாமென நான் நம்புகிறேன்.

எனது தேசாபிமானம் எல்லைக்கு உட்பட்ட தனித்த விஷயம் அல்ல; அது எல்லாவற்றையும் தழுவியதாக இருக்கிறது. மற்ற தேசமக்களின் துன்பங்களைச் சாதகமாகக் கொண்டோ அல்லது அவர்களைச் சுரண்டியோ உயர்ந்த வாழ்வை நாடும் தேசபக்தியை நான் நிராகரிக்கிறேன். மானிட வர்க்கத்தின் பரந்த நன்மைக்கு முரணின்றியே எனது தேசபக்தி உருவாக்கப் பட்டிருக்கிறது. இதற்கு விதிவிலக்கு என்பதே இல்லை. அவ் விதமில்லாவிடில், என் தேசபக்தி வெறும் பூஜ்யமாகிவிடும். அது மாத்திரமல்ல; எனது சமயமும், எனது சமயத்திலிருந்து வந்த எனது தேசபக்தியும் எல்லா உயிர்களையும் தழுவியதாகும். மானிடர் என்று சொல்லப்படும் ஜீவன்களுடன் மாத்திரமல்ல, எல்லா ஜீவன்களுடனும், பூமியில் ஊர்ந்துசெல்லும் ஜீவன்களுட னும் கூட சகோதரத்துவ உறவையும் ஒருமைப்பாட்டையும் அடையவே நான் விரும்புகிறேன். நான் கூறுவது உங்களுக்கு அதிர்ச்சியைக் கொடுக்கவில்லையெனில், பூமியில் ஊர்ந்து செல் லும் பிராணிகளுடன் கூட நான் நெருங்கிய உறவை ஏற்படுத்திக் கொள்ள விரும்புகின்றேன். ஏனெனில், சகல ஜீவராசிகளும் உட்பட நாம் கடவுளிடமிருந்து வந்திருப்பதாகக் கூறிக்கொள்ளு கிறோம். எனவே, எல்லா உயிர்களும், அவை எந்த உருவத்தில் தோன்றினாலும், முக்கிய அம்சங்களில் ஒன்றாகவே இருக்கவேண் டும். எனவே, மனிதரிடையே சகோதர பாவத்தை உண்டாக்கும் எனது லட்சியத்தைக் குறித்து உங்களுடைய பாராட்டுதலுக்கு, நான் முற்றிலும் தகுதியானவன் என்று உரிமை கொண்டாட முடியும்.

—'எங் இந்தியா' - 4—4—1929

# 18

# என் வாழ்க்கையில் ரகசியம் இல்லை

எனது கொள்கை சம்பந்தப்பட்டவரையில், என் வாழ்க்கை ஒரு திறந்த புத்தகமாகும். அதில் ரகசியம் எதுவும் இல்லை. நான் என்னை எல்லாப் பண்பாடுகளுக்கும் பிரதிநிதி என்று கூறிக் கொள்ளுகிறேன். ஏனெனில், என்னுடைய சமயம், அதை எந்தப் பெயரால் குறிப்பிட்டாலும் சரி, எல்லாப் பண்பாடுகளும் நிறைந்த வனாக நான் இருக்கவேண்டும் என்றே கோருகிறது. நான் எங்கே சென்றாலும், என் வீட்டில் இருப்பதுபோலவே இருக்கிறேன். என் சொந்த சமயத்தைப்போல் எல்லா சமயங்களுக்கும் நான் அதே மரியாதை செலுத்துவதே அதற்குக் காரணமாகும்.

—'ஹரிஜன்' – 13—4—1940

# 19

# ஒரு குடும்ப அத்தியாயம்

(காந்திஜியின் மூத்த மகனை ஹரிலால் "அகில இந்தியா ஸ்டோர்ஸ் லிமிடெட்" என்ற பெயரில் ஒரு போலி கம்பெனியை ஆரம்பித்தார். அவர், ஒரு முஸ்லிமை ஏமாற்றி அந்தக் கம்பெனியில் பங்குகள் எடுத்துக் கொள்ளும்படியும் செய்தார். அவ்விஷயமாக, அந்த முஸ்லிமின் வக்கீல் எழுதிய கடிதத்திற்கு காந்திஜி அளித்த பதில், "ஒரு குடும்ப அத்தியாயம்" என்ற தலைப்பின் கீழ் 'எங் இந்தியா'வில் வெளியாகியது. அக்கட்டுரையின் சாரமே கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது:)

எனக்கு, சத்தியாக்கிரக விதி, அதாவது அன்பு விதி மாற்ற முடியாத ஒரு நிரந்தரமான கொள்கையாகும். எல்லா நல்ல விஷயங்களுடனும் நான் ஒத்துழைக்கிறேன். எல்லாத் தீமைகளுடனும், அவை என் மனைவி, மகன் அல்லது என் சம்பந்தப்பட்டவையாக இருப்பினும், ஒத்துழையாமையை மேற்கொள்ளவே விரும்புகிறேன். அவர்களுடைய குற்றம் குறைகளை மறைக்க நான் விரும்பவில்லை. எங்களிடத்தில் உள்ள எல்லாத் தீமைகளையும் உலகம் அறிந்துகொள்ளுவதையே நான் விரும்புவேன். கண்ணியத்திற்குக் குறைவின்றி என்னால் இயன்றவரையில், குடும்ப ரகசியங்கள் என்று கூறப்படும் எல்லா விஷயங்களையும் நான் உலகம் அறியும்படி செய்திருக்கிறேன். அவற்றை நான் ஒருபோதும் எள்ளளவும் மறைக்க முயற்சித்ததில்லை. அவ்விதம் மறைப்பதால் எங்களுக்குத்தான் தீங்கு நேரும் என்பதையும் நான் அறிவேன்.

ஹரிலாலின் வாழ்க்கையில் நான் வெறுக்கும் பல விஷயங்கள் இருக்கின்றன. அவனிடம் இவ்வளவு குற்றம் குறைகளிருந்தும் கூட, அவனிடம் எனக்கு அன்பு இருக்கத்தான் செய்கிறது. என்னை அவன் நாடினால், அவனை நான் அன்புடன் ஏற்றுக் கொள்ளுவேன். ஒரு தந்தையின் இதயத்தில் அவனுக்கு இடம் இருக்கிறது. ஆனால், தற்போது அவன் தனக்குத் தடையாக தானே கதவை அடைத்துக்கொண்டிருக்கிறான். அவன் இன்னும் திசை தெரியாமல் திரிந்துகொண்டிருக்கவேண்டியதுதான். என்போன்ற மானிடனை ஒரு தந்தையின் பாதுகாப்பிற்கு நிச்சயமான எல்லைகள் உண்டு. எனினும், தெய்வத் தந்தையின் எல்லையில்லாத பாதுகாப்பு அவனுக்கு எப்போதும் இருக்கிறது. அதை அவன் நாடினால், அந்தப் பாதுகாப்பு அவனுக்குக் கிடைக்கும்.

'எங் இந்தியா' - 18—6—1925

# 20

# எனது எல்லை

நான் எல்லாம் வல்லவன் அல்ல. குறிப்பிட்ட எல்லைக்கு உட்பட்டு மாத்திரமே நான் வேலை செய்ய முடியும். என்னிடம் வரும் அலுவல்களையே நான் செய்ய முற்படுகிறேன். நான் தேவைப்படும் இடத்திற்கு மாத்திரமே, என்னால் ஏதாவது சிறிது தொண்டு எங்கே செய்ய முடியுமோ அவ்விடத்திற்கு மாத்திரமே நான் செல்லுகிறேன்.

'எங் இந்தியா' – 25—11—1926

# 21

# சமயமும் சமூக வாழ்க்கையும்

(சர் எஸ். ராதாகிருஷ்ணன் கேட்ட சில கேள்விகளுக்கு காந்திஜி அளித்த பதில், காந்திஜி எழுதிய "நம்பிக்கைகளின் நல்லுறவும் சமயங்களின் ஐக்கியமும்" என்ற நூலில் வெளியாகியிருக்கின்றன. அதிலிருந்தே கீழ்க் கண்ட விவரம் கொடுக்கப்பட்டிருக்கிறது:)

கீழ்க்கண்ட மூன்று கேள்விகளுக்குப் பதில் அளிக்கும்படி சர் எஸ் ராதாகிருஷ்ணன் என்னைக் கேட்டிருக்கிறார் :

1. உங்களுடைய சமயம் என்ன?

2. அதில் நீங்கள் எப்படி இழுத்துச் செல்லப்பட்டிருக் கிறீர்கள்?

3. அதற்கும் சமூக வாழ்க்கைக்கும் உள்ள தொடர்பு என்ன?

ஹிந்து மதமே எனது சமயமாகும். அதை மானிட வர்க்கத் தின் சமயமாகவே நான் கருதுகிறேன். எனக்குத் தெரிந்த எல்லா சமயங்களிலும் உள்ள சிறந்த அம்சங்கள் ஹிந்து சமயத்தில் இருக்கின்றன.

இரண்டாவது கேள்வி சென்ற காலத்தைக் குறிப்பிடுவதாக இருக்கவேண்டும். ஆனால், வேண்டுமென்றே நிகழ்காலத்தில் குறிப்பிடப்பட்டிருக்கிறதென நான் நினைக்கிறேன். சத்தியம், அகிம்சை இவற்றின்மூலம், அதாவது பரந்த முறையில் அன்பின் மூலம் நான் எனது சமயத்தில் இழுத்துச் செல்லப்பட்டிருக்கிறேன். எனது சமயத்தை நான் அடிக்கடி சத்தியமாகிய மதம் என்றே குறிப்பிடுகிறேன். கடவுள்தான் சத்தியம் என்று நான் கூறி வருகிறேன். எனது சமயத்தை மேற்கொண்டு பூரணமாக விளக்கவே நான் அவ்விதம் கூறிவருகிறேன். ஒரு காலத்தில்

நான் கடவுளின் ஆயிரம் பெயர்களையும் மனப்பாடமாகத் தெரிந்து கொண்டிருந்தேன். ஹிந்து சமயத்தின் ஒரு நூலில் அந்தப் பெயர்கள் முழுவதும் சுலோகங்களாக இருக்கின்றன. ஒருவேளை பதினாயிரக்கணக்கானவர்கள் அவற்றை தினந்தோறும் பாராயணம் செய்துவரக்கூடும். எனினும், இந் நாட்களில் சத்தியம் என்ற சொல்லைப்போல் கடவுளைப் பூரணமாக வர்ணிக்கக் கூடியது வேறு எதுவுமில்லை. கடவுள் இல்லை என்று மறுக்கப் படுவதை நாம் அறிவோம். ஆனால், நாம் அறிந்தவரையில் சத்தியத்தை யாரும் மறுத்ததில்லை. மனிதவர்க்கத்தினிடையே மிகுந்த அறியாமையில் ஆழ்ந்திருப்பவர்களிடத்தில் கூட சிறிதளவு சத்தியம் இருக்கிறது. நாம் யாவரும் சத்தியத்தின் பொறிகளே யாவோம். இந்தப் பொறிகள் யாவும் சேர்ந்தது என்ன என்பது வர்ணிக்கமுடியாத, இதுவரை யாரும் அறிந்துகொள்ளாத சத்தியமே ஆகும். அதுதான் கடவுள். இடைவிடாத பிரார்த்தனையின் மூலம் நான் நாளுக்கு நாள் அதன் அருகில் செலுத்தப்பட்டு வருகிறேன்.

சமூகத்தில் இந்த சமயத்தின் தொடர்பை, தினசரி சமூக உறவுகளிலிருந்து தெரிந்துகொள்ளலாம். அத்தகைய சமயத்திற்கு உண்மையாக நடந்து கொள்ளுவதாயின், எல்லா ஜீவன்களுக்கும் இடைவிடாமல் தொடர்ந்து தொண்டு செய்வதில் ஒருவர் தம்மையே முற்றிலும் அர்ப்பணம் செய்து கொண்டுவிட வேண்டும். எல்லையற்ற சமுத்திரமாகிய வாழ்க்கையில் பூரணமாக ஐக்கியம் அடைந்தாலன்றி, சத்தியத்தை உணர்ந்து கொள்ளுவது முடியாத காரியம் ஆகும். எனவே, சமூகத் தொண்டிலிருந்து நான் தப்புவதற்கு வழியில்லை. அதற்குப் புறம்பாகவோ அல்லது அதற்கு அப்பாற்பட்டோ பூமியில் ஆனந்தம் எதுவும் இல்லை. இங்கே சமூகத் தொண்டு என்பது, வாழ்க்கையின் எல்லாப் பகுதிகளும் உட்பட்டதேயாகும். இந்தத் திட்டத்தில் தாழ்ந்த தென்றும் உயர்ந்ததென்றும் எதுவும் இல்லை. ஏனெனில், நாம் பலராகத் தோன்றினாலும், எல்லோரும் ஒன்றே.

# 22

# என் முழத் துண்டு

## 1

டில்லியில் நடந்த வர்த்தக சங்க பெடரேஷன் கூட்டத்தில் நான் பேசியபோது, மேற்கத்திய நாடுகளின் நாகரிகமானது இந்திய நாகரிகத்தைத் துடைத்து ஒழித்துவிட அனுமதிக்கக் கூடாது என்று நான் கூறினேன். இவ்விதம் நான் கூறியதை ஒருவர் கடுமையாகத் தாக்கியிருக்கிறார். அவர், நான் கட்டிக் கொண்டிருக்கும் முழத் துண்டை இந்திய நாகரிகத்துடன் குழப்பி, அதைக் கண்டித்திருக்கிறார்.

எனது இடுப்புத் துண்டை, ஸ்ரீ சர்ச்சில் அன்பு கூர்ந்து உலகம் முழுவதும் இலவசமாக விளம்பரப்படுத்தியிருக்கிறார்! இந்த கண்டனவாதியைப்போல், எனது இடுப்புத் துண்டைப்பற்றி ஏளனம் செய்வது இப்போது நாகரிகமாகியிருக்கிறது. எனவே, அதன் கருத்து என்ன என்பதை விளக்கிக் கூறுகிறேன்.

1921-இல் மௌலானா முகமது அலி வால்டேரில் கைது செய்யப்பட்டார். அப்போது அவரும் நானும் தென்னிந்தியாவுக்கு யாத்திரை செய்து கொண்டிருந்தோம். எங்களுடன் பீகம் முகமது அலியும் பிரயாணம் செய்து கொண்டிருந்தார். அவரிடமிருந்து பிரித்து மௌலானாவை அதிகாரிகள் கைது செய்தார்கள். அதைக் கண்டு என் மனம் மிகவும் உருகியது. ஆனால், பீகம் அலி பிரிவை தைரியமாக சமாளித்துக் கொண்டு, சென்னையில் நடந்த கூட்டங்களுக்கும் வந்திருந்தார். அவரை நான் சென்னையிலேயே விட்டுவிட்டு மதுரைவரையில் சென்றேன். வழியில் எங்களுடைய வண்டியில் ஜனக்கூட்டம் இருந்தது. அங்கே நிகழ்ந்த சம்பவத்தைப்பற்றி அந்த ஜனங்கள் சிறிதும் கவலைப்படவில்லை. அநேகமாக வண்டியில் இருந்த எல்லோரும் சிறந்த அந்நிய உடைகளால் தங்களை அலங்காரம் செய்துகொண்டிருந்தனர். அவர்களில் சிலருடன் நான் பேசத் தொடங்கினேன். கதர் உடுத்திக் கொள்ளும்படி அவர்களைக் கேட்டுக் கொண்டேன். ஏனெனில், அலி சகோதரர்கள் விடுதலை பெறும்படி செய்வதற்கு எனக்கு கதரைத் தவிர வேறு ஒருவழியுமில்லை. "நாங்கள் கதர் உடை வாங்க முடியாதபடி அவ்வளவு ஏழைகள். கதரின் விலை அதிகமாக இருக்கிறது" என்று வண்டியிலிருந்த ஜனங்கள் கூறினார்கள். அவர்கள் அவ்விதம் கூறியதில் உள்ள அடிப்படை உண்மையை நான் உணர்ந்தேன். நான் அப்போது சட்டை, குல்லாய், பெரிய வேஷ்டி முதலியன உடுத்திக் கொண்டிருந்தேன். அவர்கள் கூறியது ஓரளவே உண்மையாகும். ஆனால், நான்கு அங்குல அகலமும், சில அடிகள் நீளமும் உள்ள கோவணத்தை மாத்திரம் கட்டிக் கொண்டிருப்பதைத் தவிர வேறு வழியில்லாத லட்சக்கணக்கான மக்களின் திறந்த உடம்பின்மூலம் நான் முழு உண்மையையும் தெரிந்து கொண்டேன். என் உடலிலிருந்த துணிகளில் கண்ணியமான அளவுக்கு நான் எவற்றைக் களைய முடியுமோ, அவற்றையெல்லாம் களைந்துவிடுவதைக் காட்டிலும், அவர்களுக்கு நான் என்ன சரியான பதில் கூற முடியும்? அவ்விதம் செய்வதன்மூலம் உடைப் பஞ்சத்தினால் கஷ்டப்படும் பாமர மக்களுக்குச் சமமான நிலையை நானும் அடைய விரும்பினேன். மதுரைக் கூட்டத்திற்குப் பிறகு மறுநாள் காலையிலேயே நான் அவ்விதம் செய்தும் விட்டேன்.

எனவே, இடுப்புத் துண்டு நாகரிகம் என்ற பிரச்னையே இங்கே எழவில்லை. இடுப்புத் துண்டை மாத்திரம் உடுத்துவது எனக்கு அத்தியாவசியமாகிவிட்டது. எனினும், இடுப்புத் துண்டு எளிய வாழ்க்கையைக் குறிப்பிடுவதால், அந்த அளவுக்கு அது இந்தியாவின் நாகரிகமாகவே இருக்கட்டுமே. பல்வேறு சமயங்

களின் பண்பாடுகள் கலந்ததே இந்திய நாகரிகமாகும். பூகோள ரீதியாகவும் மற்ற சூழ்நிலை காரணமாகவும் அந்தப் பண் பாடுகள் மாறுதலை அடைந்திருக்கின்றன. உதாரணமாக, அரேபியா, துருக்கி, எகிப்து, இந்தியா முதலிய இடங்களில் இஸ்லாமியப் பண்பாடு ஒரே விதமாக இல்லை; அந்தந்த தேசங் களின் நிலைமைகளுக்குத் தகுந்தவாறு அது மாறுபட்டிருக்கிறது. எனவே, இந்தியப் பண்பாடு என்பது இந்தியாவுக்குச் சொந்த மானது. அதை முற்றிலும் ஹிந்து, இஸ்லாமிய அல்லது வேறு சமயங்களின் பண்பாடு என்று கூற முடியாது, அது எல்லாம் கலந்தது, முக்கியமாக கீழ்த்திசை நாடுகளைச் சார்ந்தது. எனவே, தன்னை இந்தியர் என்று கூறிக்கொள்ளும் ஒவ்வொரு ஆடவரும் அல்லது ஒவ்வொரு பெண்ணும் இந்தப் பண்பாட்டைப் பொக்கி ஷத்தைப்போல் பாதுகாக்கக் கடமைப்பட்டிருக்கிறார்கள்; அதன் மேற்பார்வையாளராக இருந்து, அதன் மீது எவ்விதத் தாக்கு தலையும் எதிர்க்கக் கடமைப்பட்டிருக்கிறார்கள்.

ஐரோப்பிய நாகரிகம் ஐரோப்பியர்களுக்கு உகந்தது என் பதில் ஐயமில்லை. ஆனால், அதை நாம் 'காப்பி' அடிக்க முற்படு வோமாயின், இந்தியாவுக்கு அழிவே ஏற்படும். எனினும், அந்த நாகரிகத்தில் உள்ள நல்ல அம்சங்களை நாம் பின்பற்றக் கூடாது என்பதில்லை. அதுபோலவே அதில் படிந்துள்ள தீய அம்சங்களை ஐரோப்பியர்கள் விட்டுவிடக் கூடாது என்பதும் இல்லை. இடை விடாது ஸ்தூல வசதிகளைத் துருவி, அவற்றைப் பெருக்கிக் கொண்டே போவது பெரும் தீமையாகும். ஸ்தூல வசதிகளுக்கு ஐரோப்பியர்கள் அடிமைகளாகி வருகிறார்கள். அந்த வசதிகளின் பளுவினால் அவர்கள் அழிந்து போகாமல் இருக்கவேண்டுமாயின், அவர்கள் தங்களுடைய போக்கைச் சீர்திருத்திக் கொள்ள வேண்டியது அவசியமாகும்.

இவ்விஷயமாக, எனது கருத்து தவறாக இருக்கலாம். இந்தியா ஆடம்பரமான வாழ்க்கையை மேற்கொள்ளுவது, மரணத்தை நிச்சயமாக வரவேற்பதாகும். 'எளிய வாழ்க்கையும் உயர்ந்த சிந்தனையும்' என்று ஒரு மேல் நாட்டு தத்துவ ஞானி கூறிய முதுரையை நாம் நமது இதயத்தில் பதியவைத்துக் கொள்ளுவோமாக. இன்று லட்சக்கணக்கானவர்கள் ஆடம்பர வாழ்க்கையை நடத்த முடியாது என்பது நிச்சயம். பாமர மக்களின் நலனுக்காக சிந்திப்பதாய்க் கூறிக்கொள்ளும் சிலரான நாம், ஆடம்பரமான உயர்ந்த வாழ்க்கையை நாடிச் செல்லு வதால், உயர்ந்த சிந்தனையை இழந்துவிட வேண்டியவர்களாக இருக்கிறோம்.

'எங் இந்தியா' – 30—4—1931

**2**

**(லண்டன் வட்டமேஜை மகாநாட்டை யொட்டி காந்திஜி இங்கிலாந்துக் குச் செல்லவிருந்தபோது, இங்கிலாந்தில் அவர் என்ன உடை உடுத்திக்**

கொள்ளவேண்டும் என்பது பற்றி விவாதம் நடந்தது. அப்போது பலரிட மிருந்தும் காந்திஜிக்கு உடை விஷயமாக ஆலோசனைகள் வந்து குவிந்தன. அவ் விஷயமாக காந்திஜி எழுதிய ஒரு கட்டுரையே சுருக்கமாகக் கீழே கொடுக்கப் பட்டிருக்கிறது.)

நான் இங்கிலாந்துக்குச் செல்லும்போது உடுத்திக்கொள்ள வேண்டிய உடை விஷயமாகப் பலரும் பல ஆலோசனைகளைக் கூறியிருக்கிறார்கள். இச்சந்தர்ப்பத்திலும் எனது நிலைமை தெளி வாகும். நான் இங்கிலாந்துக்குச் சென்றால், இந்தியாவின் பிரதிநிதி என்ற முறையிலேயே செல்லுகிறேன். அதைக் காட் டிலும் அதிக அந்தஸ்தோ அல்லது குறைந்த அந்தஸ்தோ எனக்கு இல்லை. எனவே, ஆங்கிலேயர்களின் விருப்பப்படி நான் உடை உடுத்திக்கொள்ள முடியாது; எனது பிரதிநிதித் துவத் தன்மைக்கு உகந்த உடையையே நான் உடுத்திக்கொள்ள வேண்டும். நான் காங்கிரசின் பிரதிநிதியாகவே செல்லுகிறேன். அரைப் பட்டினி கிடப்பவரும், அரை நிர்வாணமாக இருப்பவரும், கிராமவாசியுமான தரித்திர நாராயணனின் பிரதிநிதி ஸ்தாபன மாகவே காங்கிரஸ் இருக்கிறது. நிலச் சொந்தக்காரர்கள், செல் வந்தர்கள் அல்லது கல்வி யறிவுள்ள இந்தியர்களின் பிரதிநிதி யாகவும் நான் இருக்கிறேன் எனில், அவர்களும் தரித்திர நாராய ணனுடன் நெருங்கிய தொடர்பு கொண்டு அவரது நலன்களை அபிவிருத்தி செய்ய விரும்புகிறார்கள் என்பதற்காகவே மேலே குறிப்பிட்டவர்களின் பிரதிநிதியாகவும் இருக்கிறேன். எனவே, நான் ஆங்கிலேயரின் உடையிலோ அல்லது நாசூக்கான நேருக் களின் உடைகளிலேயோ செல்லுவது முடியாத காரியம். எனக்கும் பண்டித மோதிலால்ஜிக்கும் நெருங்கிய நட்பும் தொடர்பும் இருப்பினும், நான் பண்டித மோதிலால்ஜியைப் போல் உடை உடுத்திக்கொள்ளுவதோ அல்லது பண்டித மோதி லால்ஜி என்னைப் போல் உடை உடுத்திக்கொள்ளுவதோ நகைக் கத்தக்கதாக இருக்கும். எனது இடுப்புத் துண்டுக் கொள்கை என் வாழ்க்கையில் இயல்பாக மலர்ச்சி பெற்றதாகும். யாதொரு முயற்சியுமின்றி, எவ்வித முன் ஆலோசனையுமின்றி அது இயல் பாக ஏற்பட்டதாகும். எனவே, நான் லண்டனுக்குச் செல்லு வதில் வெற்றிபெறுவேனாயின், இடுப்புத் துணியைத் தவிர அதிக மாக வேறு எதுவும் நான் உடுத்திக் கொள்ளப் போவதில்லை. இதுதான் எனது கடமை என்று நான் கருதுகிறேன். அதைத் தவிர, சீதோஷ்ண நிலைக்கு அத்தியாவசியமான உடையை நான் உடுத்திக்கொள்ளலாம். நான் எப்போதும் எந்த உடையுடன் இருக்கிறேனோ, அப்படியே நான் ஆங்கிலேயர்களின் முன்னிலை யிலும் இருக்கவேண்டும். அதைவிட்டுவிட்டு, ஆங்கிலேயர்களின் விருப்பம் என்னவென்று நான் நினைக்கிறேனோ அல்லது எனது நண்பர்கள் நினைக்கிறார்களோ அந்த உடையுடன் அவர்களின் (ஆங்கிலேயர்களின்) முன் தோன்றுவதால், நான் அவர்களுக்கு அவமரியாதை செய்த குற்றத்திற்கு ஆளாவேன். ஆரம்பத் திலேயே நான் ஏமாற்றுவித்தையில் ஈடுபடுவேனாயின், எனது லட்சியத்திலும் நான் ஆரம்பத்திலேயே தோல்வி அடைவேன்.

தாற்காலிகமாக அது திருப்தி அளிக்கலாம். எனினும், இறுதியில் அது அவர்களுக்கு அதிருப்தியையே கொடுக்கும். நான் அவர்களுடைய இதயத்தை எனக்குச் சாதகமாக மாற்றவே விரும்புகிறேன். எனவே நான் நூறு சத விகிதம் உண்மையாக நடந்து கொண்டால்தான், அவர்களுடைய மனத்தை அவ்விதம் மாற்ற முடியும். சத்தியம் சூரியனைப் போன்றது. நம்பிக்கையின்மையும் சந்தேகமுமாகிய பனி மலையை, சத்தியமாகிய சூரியன்தான் உருக வைக்க முடியும்.

'எங் இந்தியா' – 9—7—1931

# 23

# கிருஷ்ண பரமாத்மா வழி காட்டுகிருர்

எனது இருபத்து நான்கு மணி நேரத்தையும் நான், ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவுக்குத் தொண்டு செய்வதில் அர்ப்பணம் செய்கிறேன். அவர் எப்போதும் என்னுடன் இருக்கிருர், எனக்கு வழிகாட்டுகிருர். எனக்கு அவசியமானதையெல்லாம் செய்யும்படி அவரை நான் எப்போதும் பிரார்த்திக்கிறேன். அவசியமாயின், அவர் எனக்காக பதில் அளிப்பார். எனது சமயம் தபஸ்சர்யமாகும், அதாவது, தரும நூல்களாலும் துளசி தாசராலும் கற்பிக்கப்பட்ட தவத்தின் வழியே எனது சமயமாகும். எனது வாழ்க்கையின் கட்டளை அவ்விதமாதலால், நான் வேறு எதுவும் செய்ய முடியாது. நானே அல்லது எனது சமயமோ அபாயத்தில் இருக்கும்போதெல்லாம் சுயத் தூய்மையைக் கடைப்பிடிக்கும்படி கீதையும் துளசி ராமாயணமும் எனக்குக் கற்பிக்கின்றன. என் சம்பந்தப்பட்டவரையில் எது உண்மையோ, அது எல்லோருக்கும் உண்மையாகும். எனது வாழ்க்கையில் இருபத்து நான்கு மணி நேரமும் நான் சுயத் தூய்மை முறையை அனுசரித்து வருகிறேன்.

பார்வதிக்கு, பயங்கரமான தோற்றமுடைய ஒரு கணவன் வருவார் என்று நாரதர் ஜோசியம் கூறியிருந்தார். சிவன் எவ்வளவு பயங்கரமாக இருக்கிருரோ அவ்வளவு மங்களகரமானவர் என்பதும் பார்வதிக்குத் தெரியும். எனவே, சிவனைக் கணவனாக அடைவதற்காக அவள் தவம் செய்து, அவரை அடைந்தாள். எனவே, தவத்தின் படிப்பினையும் சுயத் தூய்மை முறையும் நமது தரும நூல்களில் பல இடங்களிலும் தெளிவாகக் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. அதற்கு இமய மலைகள் உயிர்ச் சாட்சிகளாக இருக்கின்றன. சுயத் தூய்மையை அடைவதற்காக அங்கேதான் எண்ணிக்கையற்ற ரிஷிகள் தங்களுடைய உடல்களை வருத்தி மண்ணோடு மண்ணாகும்படி செய்துகொண்டார்கள். வேதங்களை, காகிதங்களில் எழுதப்பட்ட வெறும் நூல்களாக நான் கருதவில்லை. அவை என் மனச்சாட்சியும் என்னுள் உறைபவையுமாகும்.

யம, நியமங்களை* அனுசரிக்கும்படி அவை எனக்குக் கூறு கின்றன; எதற்கும் கிருஷ்ண பரமாத்மாவையே நம்பும்படியும் அவை எனக்குக் கூறுகின்றன. எனது அலுவல்கள் யாவும் ஹிந்து சமயத் தொண்டிற்கு இயைந்தவை என்று நான் முழுப் பணிவுடன் கூறிக்கொள்ளுகிறேன். ஹிந்து என்ற முறையில் நான் வேறு எதுவும் செய்ய முடியாது. எனினும், அதை நான் செய்யும் விதம் என் சொந்த வழியேயாகும்.

'எங் இந்தியா' – 3—3—1927

# 24
# என் மூச்சுக் காற்று

ஒரு குஜராத்தி அன்பர் பின்வருமாறு ஒரு கடிதம் எழுதி யுள்ளார் :

''ஆகஸ்டு 27–ஆம் தேதி 'ஹரிஜன பந்து'வில் தாங்கள் எழுதியுள்ள கட்டுரையை நான் வாசித்தேன். 'தினசரி உணவு இல்லாமலாவது நான் சில நாட்கள் உயிர் வாழ முடியும்; ஆனால், ஒரு விநாடி கூட ஹரிஜனங்களுக்குத் தொண்டு செய்யாமல் நான் உயிர்வாழ முடியாது' என்று அதில் நீங்கள் குறிப் பிட்டிருக்கிறீர்கள். நீங்கள் எழுதியுள்ள பலவற்றிலும் மிகைபடக் கூறுதலை நான் கவனித்திருக்கிறேன். இது போன்ற பேச்சுகளால் மக்கள் அடிக்கடி குழப்பம் அடைகிறார்கள். உங்கள் வாழ்க்கையில் ஒவ்வொரு விநாடியும் நீங்கள் ஹரிஜனத் தொண்டில் ஈடுபட்டிருப்பீர்களாயின், மற்ற நடவடிக்கைகளுக்கு உங்களுக்கு எங்கே நேரம் இருக்கும்?

''ஒரே சமயத்தில் நீங்கள் இரண்டு எஜமானர்களுக்குத் தொண்டு செய்ய முடியாது. உங்களுடைய வாழ்க்கை பிரிக்க முடியாதது. உங்களுடைய நடவடிக்கைகள் அதில் பல்வேறு கட்டங்களேயாகும். ஆனால், இதையெல்லாம் பாமர மக்கள் உணர்ந்துகொள்ளுவது இயலாத காரியம். எனவே, நீங்கள் உங்கள் வாழ்க்கையில் மீதியுள்ள காலத்தை முற்றிலும் 'ஹரிஜன்' தொண்டிற் காக அர்ப்பணம் செய்யப் போகிறீர்கள் என்றே மேற்கண்ட வாக்கியத்தி லிருந்து மக்கள் இயல்பாக ஊகித்துக்கொள்ளுவர். ஆனால், அவ்விதம் ஊகித் துக்கொள்ளுவது சரியல்ல. ஏனெனில், சந்தர்ப்பம் கிடைக்கும்போது நீங்கள் மற்ற நடவடிக்கைகளிலும் ஈடுபடுவீர்கள் என்பதில் ஐயமில்லை. ஏற்கனவேயும் நீங்கள் மிகைபடக் கூறியதால், மக்களின் மனத்தில் குழப்பம் ஏற்பட்டது உண்டு. ஆகையால், உங்களுடைய பேச்சிலும் எழுத்திலும் நீங்கள் அளவுக்கு மீறிப் போகாதிருந்தால், தப்பெண்ணத்திற்கான சந்தர்ப்பங்கள் குறையும். உங்கள் மீது எனக்குள்ள மதிப்பு காரணமாகவே, நான் இக்கடிதத்தை எழுதி

---

* யோக சாஸ்திரப்படி யமங்கள்; அதாவது மூலாதாரமான ஒழுக்கங்களாவன: அகிம்சை, சத்தியம், திருடாமை, பிரம்மச்சரியம், உடைமையின்மை.

நியமங்கள்; அதாவது அன்றாட ஒழுக்கங்களாவன: உடல்பரிசுத்தம், போது மென்ற மனம், பொறுமை, வேத பாராயணம், எல்லாம் கடவுள் சித்தப்படியே நடக்கும் என்ற உறுதி.

யிருக்கிறேன். அதிகப்பிரசங்கித்தனமாக நான் ஏதாவது கூறியிருந்தால் என்னை மன்னிக்கும்படி கேட்டுக் கொள்ளுகிறேன்.''

எனது 'மிகைபடக் கூறுதலால்' இக்கடிதம் எழுதியிருப்பவரே குழப்பம் அடைந்திருக்கிறாரா, அல்லது மற்றவர்களின் குழப்பத்தை மாத்திரம் அவர் எடுத்துக் கூறியிருக்கிறாரா என்பது எனக்கு தெளிவாகத் தெரியவில்லை. எனது எழுத்துக்களால் பலரும் குழப்பம் அடைந்திருக்கிறார்கள் என்பது உண்மையாயின், என் மனம் வேதனை அடையும். ஏனெனில், எதையும் சீர்தூக்கிப் பார்க்கும் தன்மை எனக்கு உண்டு என்றே நான் நம்புகிறேன். நான் சத்தியத்தை வணங்குபவன். எனவே, மிகைபடக் கூறுதலையெல்லாம் நான் தவிர்க்க வேண்டும். ஹரிஜனத் தொண்டைப்பற்றி நான் எழுதியதெல்லாம் அப்படியே உண்மை என நம்புகிறேன். ஆனால், ஹரிஜனத் தொண்டு மற்ற தொண்டுகளையெல்லாம் தவிர்க்கவில்லை. ஒன்றுக் கொன்று தொடர்புள்ள பல விஷயங்களிலும் ஒருவர் ஏககாலத்தில் தமது கவனத்தைச் செலுத்த முடியும். உதாரணமாக, ஹரிஜனத் தொண்டைக் குறித்து நான் என்ன கூறினேனே அதையே தரித்திர நாராயணத் தொண்டைக் குறித்தும் நான் கூறலாம். அவ்விதம் கூறுவது உண்மையாகவே இருக்கும். அந்தத் தொண்டிற்கும் ஹரிஜனத் தொண்டிற்கும் முரண்பாடு எதுவும் இல்லை. மானிடரின் வாழ்க்கை வெறும் யந்திரம் போன்றதல்ல. நம்மில் ஒவ்வொருவருக்கும் சில விஷயங்கள் உயிரைப் போல் அவ்வளவு அருமையானவையாக இருக்கின்றன. அவையின்றி வாழ்க்கை சாத்தியமே அல்ல என்று சொல்லிவிடலாம். எனவே, அத்தகைய அறிக்கைகள் எவ்வளவுக்கு உண்மை என்பது, அக்கொள்கைகளில் ஒருவருக்குள்ள பக்தியின் தீவிரத்தைப் பொறுத்தது. உயிரைப்போல் அவ்வளவு அருமையான கொள்கையிலிருந்து விலகுவதால் சிலர் இறந்துவிடமாட்டார்கள். எனினும், அதே நிலை சிலர் சம்பந்தப்பட்டவரையில் ஒரு மரண தண்டனையாகவே இருக்கும்.

ஒவ்வொரு விநாடியும் அதன் சம்பந்தமான வெளிப்படையான நடவடிக்கையே ஒரு கொள்கையில் உள்ள பக்தியைக் குறிப்பிடுவதாகும் என்று கருதுவது தவறு. சந்தர்ப்பம் நேர்ந்தபோதெல்லாம் நிச்சயமாக வெளிப்படையான நடவடிக்கை எடுத்துக்கொள்ளத்தான் வேண்டும். பூமியில் நாம் விதைக்கும் விதை உடனே முளை விட்டுவிடுவதில்லை. அந்த விதை செத்துவிடாதிருந்தால், அது ஒவ்வொரு நிமிடமும் வளர்ந்துகொண்டேயிருக்கும். எனினும், பல நாட்களோ, மாதங்களோ கழித்துத்தான், அதை ஒரு செடியாகவோ அல்லது மரமாகவோ நாம் பார்க்கிறோம். ஸ்தூல உலகில் நாம் காணும் வளர்ச்சியைப் போல், அறிவு உலகிலும் ஆன்மிக உலகிலும் வளர்ச்சி ஏற்படுவதை நாம் எதிர்பார்க்கவேண்டும்.

ஹரிஜனத் தொண்டு சம்பந்தமாக எனது அறிக்கையின் உண்மையை எனது மரணத்திற்குப் பிறகுதான் அளவிடமுடியும்.

அதன் முழு அளவும், எல்லாம் அறிந்த கடவுளுக்குத்தான் தெரியும். ஏனெனில், நமது நோக்கங்களை அவர் ஒருவரே அறிவார். எனவே, இக்கடிதம் எழுதியவருக்கும், அவரைப்போல் எண்ணும் மற்றவர்களுக்கும், ஹரிஜனத் தொண்டு எனது மூச்சு என்றும், அது இராமல் நான் ஒரு விநாடி கூட உயிர் வாழ முடியாது என்றும் நான் கூறியதில், மிகைபடக் கூறுதல் எதுவும் இல்லை என்று மீண்டும் கூறுவதன் மூலமே அவர்களைத் திருப்தி செய்ய நான் முயற்சிக்க முடியும்.

—'ஹரிஜன்' – 30—9—1933

# 25

## எனது தளரா நம்பிக்கை

நான் நிலைகுலையாத நம்பிக்கை உடையவன். எனக்கு என்னிடத்தில் நம்பிக்கை இருப்பதே அதற்குக் காரணம். மிகவும் மமதை காரணமாக நான் இவ்விதம் கூறுவதாகத் தோன்றுகிறது அல்லவா? எனினும், பணிவு நிறைந்த என் உள்ளத்தின் ஆழத்திலிருந்தே அவ்விதம் கூறுகிறேன். கடவுளின் ஈடு இணையில்லாத மகோன்னத சக்தியில் நான் நம்பிக்கை உடையவன்; நான் சத்தியத்தில் நம்பிக்கை உடையவன். எனவே, இந்த நாட்டின் எதிர்காலத்திலோ அல்லது மானிட வர்க்கத்தின் எதிர்காலத்திலோ எனக்கு சந்தேகம் எதுவும் இல்லை. எல்லாப் பொறுப்பையும் நான் கடவுளிடம் விட்டிருக்கிறேன். மனிதனின் அறிவைக் குழப்பி அவன் திக்குமுக்காடும்படி செய்வது எப்படி என்பதை அவர் அறிவார். அவர் ஒரு பலே ஜாதுகர்*. எனவே, நான் என்னையே அவரிடம் அர்ப்பணம் செய்துகொண்டிருக்கிறேன். நம்மிடம் வேலை வாங்குவதில் அவர் தயவு தாட்சண்யம் இல்லாதவர். உங்களுடைய முழுத் திறமையையும் உபயோகித்து நீங்கள் வேலை செய்யவேண்டும். அதற்குக் குறைந்த எதையும் அவர் அங்கீகரிக்கமாட்டார். நான் நம்பிக்கை உடையவனாக இருப்பதற்குக் காரணம் என்னவெனில், என்னிடமிருந்தே நான் பல விஷயங்களை எதிர்பார்க்கிறேன். அவை என்னிடம் இல்லை என்பது எனக்குத் தெரியும். நான் இன்னும் அப்பழுக்கு இல்லாதவன் அல்ல. நான் அப்பழுக்கற்றவனாக இருந்தால், எனக்கு உங்களுடன் வாதிக்கவேண்டிய அவசியமே இல்லை. நான் குற்றம் குறையற்றவனாக இருக்கும்போது, நான் ஒரே ஒரு வார்த்தை சொல்லவேண்டியதுதான் தாமதம், அதற்கு தேசம் முழுவதும் செவிசாய்க்கும். தொண்டின் மூலம் அத்தகைய குற்றம் குறையற்ற நிலையை அடையவே நான் விரும்புகிறேன்.

—'எங் இந்தியா' – 13—8—1925

* ஹிந்தி மொழியில் ஜாதுகர் என்பதற்கு மந்திரவாதி என்று பொருள்.

# 26

# மன அமைதிக்குக் காரணம்

[அமெரிக்காவில் கல்வித்துறை நிபுணரான டாக்டர் டாட் ஒரு சமயம் காந்திஜியைக் கண்டு பல கேள்விகள் கேட்டார். அவற்றில் மிகவும் முக்கிய மான கேள்விகளும், அவற்றிற்கு காந்திஜி அளித்த பதில்களும் கீழே கொடுக் கப்பட்டுள்ளன:]

டாக்டர்: இளைஞர்களான பல ஆடவர்களுடனும், பெண்களுட னும் பேசும் வாய்ப்பு எனக்கு இருக்கிறது. எனவே, உங்கள் வாழ்க்கையில் மிகவும் திருப்திகரமான சாதனை என்று எதை நீங்கள் கருதுகிறீர்களோ அதை என்னிடம் கூறும்படி கேட்டுக் கொள்ளுகிறேன். உங்களுடைய மகத் தான சாதனை எது என்று நான் கேட்கமாட்டேன். ஏனெனில், அவ்விதம் கேட்பது உங்களுக்கு தருமசங்கட மாக இருக்கும். அதை வேறொரு விதமாகக் கூறுவதாயின், வாழ்க்கையில் ஆர்வத்துடன் நாடவேண்டிய பொருள் என்ன என்று நான் இளைஞர்களுக்குக் கூறவேண்டும்?

காந்திஜி: இது கஷ்டமான ஒரு கேள்வியாகும். இதற்கு என்ன பதில் கூறுவது என்றே எனக்குத் தெரியவில்லை. நான் இதுதான் கூறமுடியும்: அவமானத்திற்கும், தோல்விக்கும், சூறாவளி வாழ்க்கைக்கும் இடையே நான் என் மன அமைதி யைப் பாதுகாக்கும் ஆற்றல் பெற்றவனாக இருக்கிறேன். இதை ஒரு சாதனை என்றோ, அல்லது இல்லை என்றோ நீங்கள் எவ்விதம் கூறுவீர்கள் என்பது எனக்குத் தெரி யாது. அவ்வாறு நான் மனச் சாந்தியுடன் இருப்பதற்குக் காரணம், கடவுளிடத்தில் அதாவது சத்தியத்தில் எனக்கு உள்ள நிரந்தரமான நம்பிக்கையே. கடவுளை நாம் லட்சக் கணக்கான பொருட்களாக வருணிக்க முடியும். ஆனால், என் சம்பந்தப்பட்ட வரையில் அவ்விஷயமாக நான் எளிய ஒரு முறையை அனுசரித்திருக்கிறேன். அதாவது, "சத்தியமே கடவுள்" என்பதுதான்.

டாக்டர்: ஆமாம், நானும் அதைக் கவனித்துள்ளேன். குழப்ப மும், கலகமும், சந்தடியும் நிறைந்த இந்த உலகில் நீங்கள் மனச் சாந்தியைப் பெற்றிருக்கிறீர்கள்.

காந்திஜி: 'உங்களுக்கு ஏசு நாதரிடத்தில் நம்பிக்கை இருந்தா லன்றி, உங்களுக்கு மனச் சாந்தி ஏற்படுவது முடியாத காரியம்' என்று பல அமெரிக்க நண்பர்கள் என்னிடம் கூறுகிறார்கள். ஏசு நாதர் ஒருவர்தான் கடவுளின் புதல்வர் என்பதில் எனக்கு நம்பிக்கை இராவிட்டாலும்கூட, எனக்கு மன அமைதி ஏற்பட்டிருக்கிறது என்பதை உங்களுக்கு நான் சொல்லுகிறேன்.

**டாக்டர் :** நீங்கள் அவ்விதம் கூறியதைக் குறித்து நான் மகிழ்ச்சி அடைகிறேன். ஏசு நாதரைப் பற்றி உங்களுடைய கருத்து என்ன என்பதை நான் அறிந்து கொள்ளலாமா?

**காந்திஜி :** அவரை ஒரு சரித்திர புருஷராகவே நான் கருதுகிறேன். மனித வர்க்கத்தின் மாபெரும் உபதேசகர்களில் அவரும் ஒருவர். என்னால் இயன்றவரையில் பிரார்த்தனை உள்ளத்துடனும், ஒரு கிறிஸ்தவருக்கு உள்ள பக்தியுடனும் அவரது உபதேசங்களை நான் ஆராய்ச்சி செய்தேன். அவற்றில் பொதிந்து கிடக்கும் உண்மையைக் காணவேண்டும் என்ற நோக்கத்துடனேயே அவற்றை நான் படித்தேன். மற்ற உபதேசகர்களின் உபதேசங்களைப் போலவே அவற்றையும் நான் வாசித்தேன்.

**டாக்டர் :** இச் சந்தர்ப்பத்தில், இந்தியாவில் பாதிரிமார்களின் அலுவல்களைப் பற்றி உங்களுடைய அபிப்பிராயத்தை நான் கேட்கலாமா? அவர்கள் இந்தியாவுக்குத் தவறு இழைத்திருக்கிறார்களா?

**காந்திஜி :** வேண்டுமென்றே அவர்கள் இந்தியாவுக்குத் தவறு இழைத்திருக்கிறார்கள் என்று நான் கூற முடியாது. ஆனால், அவர்கள் கண்டனவாதிகளாக இங்கே வருகிறார்கள்; எங்களுடைய சமூகத் தீமைகளை அவர்கள் மிகைப்படுத்திக் கூறுகிறார்கள்; எங்களுடைய மதத்தை அவர்கள் கண்டிக்கிறார்கள். இருந்தாலும், அதனால் பாதகம் எதுவுமில்லை. ஏனெனில், அவர்களுடைய கண்டனங்கள் எல்லாம், எங்களுடைய பலவீனங்களை நாங்கள் அதிகமாக உணர்ந்து கொள்ளும்படியும், எங்களுடைய கடமைகளில் அதிக அக்கறை கொள்ளும்படியும் செய்திருக்கின்றன.

**டாக்டர் :** ஆனால், தனி நபர்களான பாதிரியைப் பற்றியே நீங்கள் அவ்விதம் கூறுகிறீர்கள் என்றும், பாதிரிமார் சங்கங்களைப் பற்றி நீங்கள் அவ்விதம் கூறவில்லை என்றுமே நான் நினைக்கிறேன்.

**காந்திஜி :** அவ்விஷயத்தில் நான் வேற்றுமை எதையும் காணவில்லை. ஏனெனில், பாதிரிமார் சங்கங்கள், எங்கள் சமூகத்தைப்பற்றியும், சமயத்தைப்பற்றியும் முன்கூட்டியே சில எண்ணங்கள் கொண்டிருக்கின்றன. அச் சங்கங்களின் அங்கத்தினர்கள் அவற்றைப் பிரசாரம் செய்கிறார்கள். உதாரணமாக, முப்பத்தைந்து ஆண்டுகளுக்குமுன் நான் ஜான்ஸிபார் (கிழக்கு ஆப்பிரிக்கா) வழியாகச் சென்று கொண்டிருந்தபோது ஒரு பைபிள் பிரதியை வாங்குவதற்காக ஒரு பைபிள் சங்கத்திற்குள் சென்றேன். ஒரு பைபிள் நூலுடன், அங்கேயுள்ள ஒரு பாதிரிமார் சங்கம் செய்த அலுவல்களைப் பற்றிய ஓர் அறிக்கையையும் சேர்த்து என்னிடம் கொடுத்தார்கள். அதைப் பார்த்ததும் நான் திகைத்துப் போய்

விட்டேன். அதாவது, பாதிரிமாரின் அலுவல்கள் பணத்தை அடிப்படையாகக் கொண்டிருந்தன. ஒரு பாதிரியார், வேறு சமயத்தைச் சேர்ந்த ஒருவரை கிறிஸ்தவ சமயத்திற்கு மாற்றினுல், அவருக்கு குறிப்பிட்டதொகை கிடைக்கும். அதாவது, ஏதோ ஒரு காரியத்திற்காக ஆள் சேர்க்கும் ஏஜண்டிற்கு, அவர் சேர்க்கும் ஒரு நபருக்கு இவ்வளவு தொகை என்று கொடுப்பது போலவே, மத மாற்றத்திற்கு ஆள் சேர்க்கும் பாதிரிமாருக்குக் கொடுக்கப்படுவதை அந்த அறிக்கையிலிருந்து தெரிந்து கொண்டேன். ஒரு சமயத்தின் பெருமையை, அதில் சேர்ந்துள்ளவர்களின் தொகையைக் கொண்டு கணக்கிட முடியாது.

**டாக்டர்:** உங்கள் வாழ்க்கையில் ஏற்பட்ட மிகப் பெரிய ஏமாற்றம் எது?

**காந்திஜி:** எனக்கு ஏமாற்றமே ஏற்பட்டதில்லை. ஆனுல் சிற்சில சமயங்களில் என்னைக் குறித்தே நான் ஏமாற்றம் அடைகிறேன். ஏனெனில், அதிவேகமாகத் தோன்றி மறையும் எண்ணங்களை என் விருப்பம்போல் என்னுல் கட்டுப்படுத்த முடியவில்லை. அதுதான் எனது ஏமாற்றமாகும்.

—'ஹரிஜன்'–14—9—1934

# 27
# வேரும் பழமும்

ஓர் ஆங்கிலப் பத்திரிகையாளர் அன்றொரு நாள் காந்திஜியைக் காண்பதற்காக வந்தார். அன்று காந்திஜிக்குப் பல அலுவல்கள் இருந்தன என்றுலும், அவர் அந்த ஆங்கில நண்பருக்காகச் சில நிமிடங்கள் ஒதுக்கிவைக்க முடிந்தது. ஆனுல், அந்தச் சில நிமிடங்களுக்குள் ஒரு முக்கிய பிரச்னை எழுப்பப்பட்டு அதையொட்டி விவாதமும் நடந்தது. அந்த விவாதங்களை நான் வாசகர்களுடன் பகிர்ந்து கொள்ள மிகவும் விரும்புகிறேன். பரந்த சமூக, அரசியல் துறைகளிலிருந்து முற்றிலும் சொந்தமான மிகச் சிறிய விஷயங்கள் வரையில் காந்திஜியின் நடவடிக்கைகள் வியாபித்திருந்தும் கூட, அவர் எப்படி ஆச்சரியகரமான விதத்தில் பற்றற்ற நிலையை அனுசரிக்க முடிகின்றது? இவ்விதமாக ஆங்கில நண்பர் காந்திஜியை ஒரு கேள்வி கேட்டார்.

அதற்குப் பதிலாக காந்திஜி கூறியதாவது: "நான் ஒரு போதும் தடுமாற்றம் அடைந்து நிலைகுலைந்ததில்லை என்று கூறுவது உண்மையல்ல. ஆனுல், அத்தகைய சந்தர்ப்பங்கள் எப்போதாவது அபூர்வமாகவே நிகழ்ந்தன. இருந்தாலும் சுயக் கட்டுப்பாடை நான் நீண்டகாலமாகப் பயிற்சி செய்துவருவ

தாலும், கடவுளின் அருளாலும் நான் கோபத்தை மிகக் குறுகிய எல்லைக்குள் அடக்கிவைப்பது சாத்தியமாயிற்று.''

காந்திஜியைப் பேட்டி கண்ட ஆங்கில நண்பர் மற்ருெரு முக்கிய கேள்வியையும் எழுப்பினர். காந்திஜியின் கட்டுரைகளை வாசித்ததன் பலனுக, ஆங்கில நண்பர் ஓர் அபிப்பிராயம் கொண்டிருந்தார். அதாவது, காந்திஜியின் நடவடிக்கைகளுக்கெல்லாம் ஆணிவேர், மோட்சத்தில், உலக பந்தங்களிலிருந்து விடுதலை பெறுவதில் அவருக்குள்ள ஆர்வமே என்று அந்த நண்பர் ஊகித்துக் கொண்டிருந்தார். ஆனல், இந்த அம்சத்தை அவர் ஏன் போதிய அளவு வற்புறுத்திக் கூறவில்லை என்று நண்பர் கேட்டார்.

இந்தக் கேள்விக்குப் பதிலாக காந்திஜி ஓர் உவமையை எடுத்துக் காட்டினர். அவர் கூறியதாவது :

''மோட்சத்தில் ஆர்வம் இருக்கத்தான் செய்கிறது. எனினும், அது ஒரு நபரைத் தவிர மற்றவர்களைப் பொறுத்த விஷயம் அல்ல. உலகம் பழங்களில்தான் அக்கறை கொண்டிருக்கிறது; வேரில் அல்ல. மரத்திற்கு முக்கிய கவலை பழங்கள் அல்ல, வேராகத்தான் இருக்கவேண்டும். தனி நபர் தன் நெஞ்சின் ஆழத்திலேயே முழு கவனத்தையும் செலுத்தவேண்டியவராக இருக்கிருர். அவரது உழைப்பும் அவர் படும் கஷ்டங்களும்தான் தண்ணீர். அதைக் கொண்டு அவர் தன் உள்ளத்தை வளர்த்துக் கொள்ளவேண்டும். அவரது முக்கிய கவலை வேரைப்பற்றியது தான். ஆனல், சமூகத்தின் கவலையோ பழத்தைப் பற்றியதாக இருக்கிறது. பழங்களைக் கொண்டுதான் அது முடிவு செய்து கொள்ளவேண்டும். ஒரு மரத்தின் தராதரத்தை, அதன் பழங்களைக் கொண்டே நிர்ணயிக்கிருேம் அல்லவா?''

காந்திஜி வேரைப்பற்றிக் கவலை கொண்டாரேயன்றி, பழத்தைப்பற்றி கவலை கொள்ளவில்லை. காந்திஜியின் இந்தப் பற்றின்மையையே ஆங்கில நண்பர் கவனித்து, மேற்கண்ட கேள்வியைக் கேட்டார். காந்திஜி மேலும் கூறியதாவது :

''பற்றற்ற அந்த நிலையை நான் இன்னும் பூரணமாக அடையவில்லை என்பதே எனது அபிப்பிராயமாகும். என் ஆன்மா இன்னும் பூரண விடுதலையையே ஆர்வத்துடன் நாடிக்கொண்டிருக்கிறது. ஆனல், அந்த லட்சியத்தை அடைவதில் எப்போதும் தோல்வியே அடைந்து வருகிறது. எனவே, பெரிதாயினும் சிறிதாயினும், உடனடியாகச் செய்ய வேண்டிய கடமையில் நான் விருப்பு வெறுப்போ, மனக் கவலைகளோ எதுவுமின்றி மிகுந்த கவனத்துடன் அக்கறை எடுத்துக் கொள்ள இயலுமாயின், அதுவே எனக்குப் போதுமானது.

(என். கே. போஸ் எழுதியது)

—'ஹரிஜன்' - 28—9—1947

# 28

# மக்களுடன் தொடர்பில் கடவுளைக் காண்கிறேன்

என் விருப்பப்படி நடந்து கொள்ளவும், அதே சமயத்தில் தன்னலமறுப்பை அனுசரிக்கவும் இந்த வருடத்தில் எனக்குச் சந்தர்ப்பம் கிடைத்திருக்கிறது. ஆசிரமத்தில் உள்ள சிறுவர்கள், சிறுமிகள், சக ஊழியர்கள் முதலியோருடன் தங்கியிருக்க வேண்டும் என்பது எனது நீண்டகால ஆர்வமாகும். இப்போது இந்த ஆர்வத்தைப் பூர்த்தி செய்து கொள்ளலாமென நம்பு கிறேன். தன்னலமறுப்பு என்னவெனில், பல்வேறு மாகாணங்களி லும் உள்ள பல நண்பர்களுடனும் இருப்பதும், பாமர மக்களின் அன்புக்குப் பாத்திரமாக இருப்பதும் எனக்கு மகிழ்ச்சியை அளிக்கக் கூடிய விஷயமாகும். மக்களுக்கும் எனக்கும் இடையே நெருங்கிய பாசம் இருக்கிறது. அது விவரிக்க முடியாதது. எனினும், அந்த பாசத்தை நானும் அவர்களும் ஒரே விதமாக உணர்ந்திருக்கிறோம். அவர்களுடன் எனக்குள்ள நட்பில், நான் வணங்கும் கடவுளைக் காண்கிறேன். அந்த நட்பிலிருந்தே நான் எனக்குள்ள ஆறுதலையும், நம்பிக்கையையும், சக்தியையும் பூரணமாகப் பெறுகிறேன். தென்னப்பிரிக்காவில் முப்பது ஆண்டுகளுக்கு முன் அத்தகைய பாசத்தை நான் உணர்ந்து கொண்டிராவிடில், என் வாழ்க்கை வாழத் தகுதியற்றதாகி யிருக்கும். ஆனால், நான் ஆசிரமத்தில் இருந்தாலும், மக்களின் மத்தியில் இருந்தாலும், அவர்களுக்காகவே நான் தொண்டு செய் கிறேன்; அவர்களுக்காகவே நான் சிந்திக்கிறேன்; அவர்களுக் காகவே நான் பிரார்த்திக்கிறேன் என்பதை அறிவேன்.

—'எங் இந்தியா' – 7—1—1926

# 29

# ஏழைகளிடம் அன்பு

"ஏழை மக்களிடம் உங்களுக்கு எப்போதிருந்து இவ்வளவு அன்பு ஏற்படத் தொடங்கியது? எக்காலத்தில், எச்சந்தர்ப் பத்தில் ஏற்பட்டது என்பதை நீங்கள் கூற முடியுமா?"

இவ்விதம் ஒரு பாதிரியார் கேட்ட கேள்விக்குப் பதிலாக காந்திஜி கூறியதாவது :

"என் வாழ்க்கை முழுவதும் எனக்கு ஏழைகளிடத்தில் எப்போதும் மட்டற்ற அன்பு உண்டு. அந்த அன்பு என்னுடன் கூடப் பிறந்தது என்பதைக் காட்ட, என் சென்ற கால வாழ்க் கையிலிருந்து பற்பல உதாரணங்களை நான் கூறமுடியும்.

ஏழைகளுக்கும் எனக்கும் எவ்வித வேற்றுமையும் இருப்பதாக எனக்கு எக்காலத்திலும் தோன்றியதில்லை. ஏழைகளை, நான் எப்போதும் என் உற்றார் உறவினராகவே கருதிவந்திருக்கிறேன்.''

—'ஹரிஜன்' – 11—5—1935

# 30
# பத்திரிகைத் தொழிலில் ஈடுபட்ட காரணம்

பத்திரிகைத் தொழிலில் உள்ள விருப்பம் காரணமாக அதில் நான் ஈடுபடவில்லை. வாழ்க்கையில் நான் கொண்டுள்ள லட்சியத்திற்கு உதவியாக இருப்பதற்காக மாத்திரமே, இந்தத் தொழிலில் நான் ஈடுபட்டிருக்கிறேன். கண்டிப்பான கட்டுப்பாட்டின் கீழ் சத்தியாக்கிரகம் என்ற இணையற்ற ஆயுதத்தின் உபயோகத்தை உபதேசத்தின் மூலமும், உதாரணத்தின் மூலமும் மக்களுக்குக் கற்பிப்பதே எனது லட்சியமாகும். அகிம்சை, சத்தியம் இவற்றுடன் சத்தியாக்கிரகம் நேரடியான தொடர்பு உடையதாகும். வாழ்க்கையில் ஏற்படும் பல துன்பங்களுக்கும் அகிம்சையைத் தவிர வேறு பரிகார முறை எதுவும் இல்லை என்பதை நிரூபிக்கவே நான் ஆர்வத்துடனும், பொறுமையற்றவனாகவும் இருந்துவருகிறேன். அதுதான், கல் நெஞ்சத்தையும் கரைத்துவிடும் சக்திவாய்ந்தது. எனவே, எனது நம்பிக்கையில் நான் உண்மையாக இருக்கவேண்டுமாயின், நான் கோபத்துடனோ, துவேஷத்துடனோ எதுவும் எழுதக்கூடாது; ஆதாரமின்றியும் நான் எதுவும் எழுதக்கூடாது; கோபவெறியைத் தூண்டுவதற்காகவும் நான் எதுவும் எழுதக் கூடாது. விஷயங்களைத் தேர்ந்தெடுப்பதிலும், நான் உபயோகிக்கும் வார்த்தைகளிலும் வாரந்தோறும் நான் எவ்வளவு கட்டுப்பாட்டை மேற்கொள்ள வேண்டியவனாக இருக்கிறேன் என்பதை வாசகர்கள் அறிந்துகொள்ள முடியாது.

அது எனக்கு ஒரு பயிற்சியே ஆகும். அதன் பயனாக, என்னை நானே துருவிப் பார்ப்பதற்கும், எனது பலவீனங்களைக் கண்டுபிடிப்பதற்கும் வாய்ப்பு ஏற்படுகிறது. பல சமயங்களிலும், கடுமையாக எழுதும்படி எனது மமதையும், இரக்கமற்ற அடைமொழிகளை உபயோகிக்கும்படி எனது கோபமும் என்னைத் தூண்டுகின்றன. அது ஒரு பயங்கரமான சோதனையே. எனினும் அது, பயனற்ற அந்தப் பூண்டுகளை அப்புறப்படுத்துவதற்கான ஓர் அருமையான பயிற்சியும் ஆகும். 'எங் இந்தியா'வின் பக்கங்கள் கூடியவரையில் குற்றம் குறைகளின்றி விளங்குவதை வாசகர்கள் பார்க்கலாம். ரொமெயின் ரோலண்டைப் போல்

அவர்களும், 'இவர் ஓர் அருமையான கிழவராகத்தான் இருக்க வேண்டும்' என்று கூற விரும்பலாம். ஆனால், அத்தகைய அருமையான நிலைமைக்குக் காரணம், கண்காணிப்புடனும், பிரார்த்தனையுடனும் கூடிய பயிற்சியே என்பதை உலகம் அறிந்துகொள்ள வேண்டும். அருமையானதென்று நான் மதிக்கும் சிலருடைய அபிப்பிராயத்தில் அது ஒப்புக்கொள்ளக் கூடியதாக இருக்குமாயின், வாசகர்கள் ஒரு விஷயத்தை அறிந்துகொள்ள வேண்டும். அதாவது, அத்தகைய அருமையான நிலைமை முற்றிலும் இயல்பாகவே வந்துவிடுமாயின், தீங்கு செய்ய எனக்கு இயலாமல் போய்விடுமாயின், தாற்காலிகமாகக்கூட எனது சிந்தனை உலகத்தை கொடுமையான அல்லது இறுமாப்பான எண்ணம் ஆக்கிரமித்துக்கொள்ளவில்லையாயின், அப்போதுதான் எனது அகிம்சையானது உலகம் முழுவதும் உள்ள எல்லோருடைய உள்ளங்களையும் உருக்கவல்லதாக இருக்கும். எனினும், அதுவரையில் எனது அகிம்சைக்கு அத்தகைய சக்தி ஏற்படுவது முடியாத காரியம்.

என் முன்னிலையிலும், வாசகர்களின் முன்னிலையிலும் அசாத்தியமான ஒரு கொள்கையையோ அல்லது சோதனையையோ நான் வைக்கவில்லை. அது மனிதனின் விசேஷ உரிமையும் பிறப்புரிமையும் ஆகும். சொர்க்கத்தைப் போன்ற ஆனந்த நிலையை நாம் இழந்தது, அதை மீண்டும் பெறுவதற்காகத்தான். அத்தகைய நிலை ஏற்படுவதற்குக் காலம் செல்லுமாயின், பூரணமான காலச் சக்கரத்தில் அது ஒரு சிறு புள்ளிக்குச் சமமேயாகும். அதை அறிந்தே, 'நம்முடைய நாட்களில் பல கோடிகள் சேர்ந்தது, பிரம்மாவுக்கு ஒரு நாள்தான்'* என்று தெய்விக கீதாச்சாரியார் கூறியுள்ளார். எனவே, நாம் பொறுமையை இழந்துவிடாமல் இருப்போமாக. நமது பலவீனம் காரணமாக, அகிம்சையை பைத்தியக்காரத்தனத்திற்கு அறிகுறி என்று எண்ணாமல் இருப்போமாக. அகிம்சை, பைத்தியக்காரத்தனத்தின் அறிகுறி அல்ல.

—'எங் இந்தியா' – 2—7—1925

# 31

# வாழ்க்கையில் சங்கீதம்

அகமதாபாத் தேசீய சங்கீத சங்கத்தின் இரண்டாவது வருட வைபவத்தின்போது காந்திஜி நிகழ்த்திய ருசிகரமான பிரசங்கத்தின் விவரம் பின்வருமாறு :

---

*ஸஹஸ்ரயுக பர்யந்தம் அஹர்யத் ப்ரம்மணோ விது:|
ராத்ரிம் யுக ஸஹஸ்ராந்தாம் தேஹோராத்ரவிதோ ஜனா: ||
கீதை, அத்தியாயம்-8, சுலோகம்-17

இதன் பொருள்: ஆயிரம் யுகம் பிரம்மாவுக்கு ஒரு பகல் என்றும், ஆயிரம் யுகம் அவருக்கு ஓர் இரவு என்றும் அறிபவர், இராப்பகலின் தத்துவத்தை அறிபவர் ஆகின்றனர்.

'எந்த மனிதனிடத்தில் சங்கீதம் இல்லையோ அவன் ஒன்று துறவியாக இருக்கவேண்டும், அல்லது ஒரு மிருகமாக இருக்கவேண்டும்' என்று புகழ் பெற்ற சிறந்த ஒரு பழமொழி உண்டு. நாம் துறவிகளாவதற்கு வெகு தொலைவில் இருக்கிறோம். எனவே, எவ்வளவுக்கு நம்மிடத்தில் சங்கீதம் இல்லையோ அவ்வளவுக்கு நாம் மிருகங்களுக்கு அருகில் இருக்கிறோம் என்பதே சரியாக இருக்கும். சங்கீதத்தை அறிவது என்பது, அதை வாழ்க்கையில் கொண்டு வருவதேயாகும். இன்று நம்மிடையே நிலவிவரும் முரண்பாடு, நமது துக்ககரமான நிலைமைக்கு ஓர் அடையாளமாகும். எங்கே இனிமையும், அந்நியோன்னிய பாவமும், சங்கீதமும் இல்லையோ அங்கே சுயராஜ்யம் இருக்க முடியாது.

எங்கே ஐக்கியத் தன்மை இல்லையோ, எங்கே ஒவ்வொருவரும் தங்களுக்குத் தோன்றிய விதம் அபஸ்வரத்தை எழுப்புகிறார்களோ, அங்கே கெட்ட அரசாங்கமோ அல்லது அராஜகமோ தான் இருக்கும். நம்மிடத்தில் சங்கீதம் இராததால்தான், சுயராஜ்யத் தொண்டு நம் மனத்தைக் கவரவில்லை. நம்மிடையே கோடிக்கணக்கானவர்கள் ஐக்கியத்துடனும் இன்னிசையுடனும் பாடும்போது அல்லது எல்லோரும் ஒரே குரலாக கடவுளின் பெயரை இன்னிசையுடன் கூறும்போது, நாம் சுயராஜ்யத்திற்கு முதலாவது அடி எடுத்து வைத்தவர்களாவோம். இந்த சாதாரண விஷயத்தைக் கூட நாம் சாதிக்காவிடில், நாம் எப்படி சுயராஜ்யத்தைப் பெற முடியும்?

அகமதாபாத்தில் சென்ற மூன்று ஆண்டுகளாக இலவசமாக சங்கீத வகுப்புகள் நடைபெற்று வருகின்றன. சங்கீத நிபுணரான ஒருவரே அதை நடத்திவருகிறார். அப்படியிருந்தும் இன்று சங்கீத வகுப்பில் பத்து நபர்களுடைய பெயர்கள்தான் இருக்கின்றன. ஆனால், சங்கீத வகுப்பிற்கு ஒழுங்காக வருவோர் நால்வர்தான்! இதைக் கொண்டு நாம் திருப்தி அடைய வேண்டியவர்களாக இருக்கிறோம்! இது அதிக ஆறுதலை அளிக்கக் கூடிய விஷயம் அல்ல. எனினும், நாம் நம்பிக்கையில் வாழ்ந்து வருகிறோம். அகமதாபாத்தில் உள்ள நூற்றுக்கணக்கான வெட்ட வெளிப் பிரதேசங்களில் ஒன்றே ஒன்று சுத்தமாகவும் குப்பைகளின்றியும் இருந்தால்கூட, அதை நம்பிக்கையளிக்கும் ஓர் ஒளியாக டாக்டர் ஹரிப்ரசாத் கருதுகிறார். அதுபோலவே, நம்மிடையே சங்கீத வகுப்பிற்கு ஒழுங்காக வரும் நான்கு நபர்களாவது இருக்கிறார்களே என்று அவர் திருப்தி அடையலாம்.

எங்கே அழுக்கும், அசுத்தமும், துன்பமும் இருக்கின்றனவோ அங்கே சங்கீதம் இருக்கமுடியாது. அதற்கு நேர்மாறான சூழ்நிலையே சங்கீதத்திற்கு உகந்ததாகும். சங்கீதத்தை நாம் பரந்த முறையில் வியாக்கியானம் செய்வோமாயின், அதாவது ஐக்கியம், அந்நியோன்னியம், பரஸ்பர உதவி முதலியவற்றையே சங்கீதம் குறிக்குமாயின், வாழ்க்கையின் எந்தப் பகுதியிலிருந்தும் அதை நாம் விலக்கிவைக்க முடியாது எனலாம்.

ஒரு பெண் சாரீரப் பயிற்சி செய்து கொள்ளுவதே சங்கீதம் என்ற இழிநிலைக்கு அதை நாம் கொண்டு வந்திருக்கிறோம். நமது சகோதரிகளையும் புதல்விகளையும் சங்கீதப் பள்ளிக்கூடங்களுக்கு அனுப்புவதற்குக் கூச்சப்படுகிறோம். அவர்களுடைய குரலில் இனிமை சூன்யமாக இருக்கும் போதுதான், அது சிறந்ததாக இருக்கிறது என்ற மூடநம்பிக்கை இருந்துவருகிறது. அதனால்தான், பத்து மாணவர்கள் இருந்தால்கூட போதும் என்ற திருப்தி டாக்டர் ஹரிப்ரசாத்திற்கு ஏற்பட்டிருக்கிறது.

சங்கீதம் உண்மையில் புராதனமான, தெய்விகமான ஒரு கலை. ஸாமவேதம் ஒரு சங்கீதச் சுரங்கமேயாகும். குரானையும் இன்னிசையின்றி ஓத முடியாது. பைபிளில் உள்ள டேவிட்டின் ஆகமங்கள் நம்மைப் பரவசப்படுத்தி, சாம வேத கானத்தையும் நமக்கு நினைவூட்டுகின்றன. எனவே, இந்தக் கலையை மீண்டும் நாம் உயிர்ப்பிக்க வேண்டும்; சங்கீதப் பள்ளிக்கூடங்களுக்கும் ஆதரவு அளிக்கவேண்டும்.

ஹிந்து, முஸ்லிம் சங்கீத வித்துவான்கள், ஒருவர் பக்கத்தில் மற்றொருவர் உட்கார்ந்து கொண்டு சங்கீதக் கச்சேரிகளில் பங்கு எடுத்துக் கொள்ளுவதை நாம் பார்க்கிறோம். அதுபோலவே, வாழ்க்கையின் மற்ற விஷயங்களிலும் ஹிந்து, முஸ்லிம்களிடையே அதே சகோதர உறவு நிலவுவதை நாம் எப்போது காணப் போகிறோமோ! அப்போதுதான் நாம் ஒரே சமயத்தில் ராமா என்ற பெயரையும், ரஹ்மான் என்ற பெயரையும் உச்சரிக்க முடியும்.

இங்கேயுள்ள உங்களில் சிலர் சங்கீத போஷகர்களாக இருந்துவருவதைக் குறித்து மகிழ்ச்சியடைகிறேன். மேற்கொண்டும் பலர் தங்களுடைய குழந்தைகளை சங்கீத வகுப்பிற்கு அனுப்பினால், அவர்கள் தேசீய முன்னேற்றத்திற்குத் தங்களுடைய பங்கைச் செய்தவர் ஆவார்கள்.

இன்னும் மேற்கொண்டு ஓர் அடி செல்லவேண்டும். கோடிக் கணக்கான நம்முடைய ஏழைகளின் வீடுகளில் நாம் சங்கீதத்தைக் காணவேண்டுமாயின், நாம் எல்லோரும் கதர் உடுத்தவும் நூற்கவும் வேண்டும். இன்று நாம் கேட்ட சங்கீதம் இனிமையாக இருந்தது. எனினும், அது அதிருஷ்டசாலிகளான சிலருக்குத்தான் கிடைப்பதாக இருக்கிறது. ஆனால், ராட்டினத்தின் சங்கீதம் எல்லோருக்கும் இலவசமாகக் கிடைக்க முடியும். எனவே, அது இன்னும் அதிக இனிமையாக இருக்கிறது; அது கோடிக்கணக்கான மக்களுக்கு ஆறுதலாகவும், நம்பிக்கையளிப்பதாகவும், மூலாதாரமாகவும் இருக்கிறது. எனவே, எனக்கு அதுதான் உண்மையான நல்ல சங்கீதமாகும்.

— 'யங் இந்தியா' – 15—4—1926

# 32

# சங்கீதத்தின் செல்வாக்கு

குஜராத் வித்தியா பீடத்தைச் சேர்ந்த ஒரு மாணவர் பின் வருமாறு ஒரு கேள்வி கேட்டுள்ளார் :

"உங்களுடைய வாழ்க்கையில் சங்கீதத்தின் செல்வாக்கினுல் ஏற்பட்ட பலன் என்ன ?"

சங்கீதம், எனக்கு அமைதியைக் கொடுத்திருக்கிறது. சில விஷயங்களையொட்டி நான் பரபரப்பு அடைந்து கலங்கியபோது, சங்கீதம் உடனடியாக எனக்கு மனச் சாந்தியைக் கொடுத்த சம்பவங்கள் என் நினைவில் இருக்கின்றன. கோபத்தை அடக்குவதில் வெற்றி பெறவும் சங்கீதம் எனக்கு உதவியாக இருந்திருக்கிறது. ஒரு கீதம் என் மனத்தில் ஆழ்ந்து பதிந்த சந்தர்ப்பங்களை நான் ஞாபகப்படுத்திக் கொள்ள முடியும். அதே விஷயம் வசன நடையில் கூறப்பட்டபோது, அது என் உள்ளத்தைத் தொடவில்லை. அபஸ்வரமாகப் பாடப்படும் கீதங்களின் பொருளும் என் உள்ளத்தில் பதிவதில்லை. ஆனல், ஒழுங்கான முறையில் பாடப்படுமாயின், அவை என் மனத்தில் ஆழ்ந்து பதிந்துவிடுகின்றன. கீதை சுலோகங்களை இனிமையான குரலில் பாடினுல், அவற்றைக் கேட்பதில் எனக்கு ஒரு போதும் சலிப்பே ஏற்படுவதில்லை. அவற்றை எவ்வளவுக்கு அதிகமாக நான் கேட்கிறேனே அவ்வளவுக்கு அவற்றின் அர்த்தங்கள் என் மனத்தில் ஆழப் பதிகின்றன. ராமாயணம் இனிமையாகப் பாராயணம் செய்யப்படுவதை, எனது குழந்தைப் பருவத்தில் நான் கேட்டேன். என் மனத்தில் ஆழப் பதிந்த அது, பல வருடங்களாகியும் மறையவில்லை, மழுங்கவுமில்லை. "கடவுளின் வழி தைரியசாலிகளுக்காக ஏற்பட்டதேயன்றி, கோழைகளுக்காக அல்ல" என்ற கீதத்தை ஒரு சமயம் ஒருவர் மிக மிக இனிமையான ராகத்தில் பாடினர். அதற்குமுன் ஒருபோதும் இராதவாறு அந்த கீதம் என் மனத்தை உருக்கிவிட்டது. அச்சம்பவம் இன்றும் எனக்கு நன்ருக நினைவில் இருக்கிறது. 1907-இல் நான் திரான்ஸ்வாலில் இருந்தபோது, என்னை அடித்து, எனக்குக் கடுமையான காயம் ஏற்படும்படி செய்துவிட்டார்கள். நான் கேட்டுக் கொண்டதற்கிணங்க, "ஒளியே, அன்புடன் வழிகாட்டு" என்ற ஆங்கில கீதத்தை ஆலிவ் டோக் சாந்தமாகப் பாடியதால், காயங்களினுல் உண்டான வலி குறைந்துவிட்டது.

இதிலிருந்து, எனக்கு சங்கீதம் தெரியும் என்று யாரும் ஊகித்துக்கொள்ள வேண்டாம். அதற்கு மாருக, சங்கீதத்தில் எனக்குள்ள ஞானம் மிகமிகக் குறைவு என்று கூறுவதே சரியாகும். சங்கீதத்தின் தராதரம் தெரிந்து நான் எதுவும் கூற முடியாது. ஆனல், நல்ல சங்கீதத்தை ரசிக்கும் தன்மை எனக்கு இயல்பாக உண்டு என்று மாத்திரமே நான் கூறமுடியும்.

என் சம்பந்தப்பட்ட வரையில், சங்கீதத்தின் செல்வாக்கினல் எனக்கு நன்மையே ஏற்பட்டிருப்பதுபோல், மற்றவர்களுக்கும் ஏற்படவேண்டும் என்று நான் கூறவில்லை. அதற்கு மாருக, பலர் தங்களுடைய சிற்றின்ப வெறியைத் தூண்டுவதற்காக சங்கீதத்தை உபயோகிக்கிருர்கள் என்பதை நான் அறிவேன். எனவே, கடைசியாக, ஒவ்வொருவருடைய தன்மைக்கும் தகுந்த வாறு சங்கீதத்தினல் வெவ்வேருன பலன் ஏற்படுகிறது என்று நாம் கூறலாம்.

துளசிதாஸ் ராமாயணத்தில் பின் வருமாறு பாடியிருக்கிருர் :

"இந்த உலகத்தில் நன்மையும் தீமையும் கலந்ததாகவே ஒவ்வொன்றையும் சிருஷ்டி கர்த்தா படைத்திருக்கிருர். பாலும் தண்ணீரும் கலந்திருந்தால், அன்ன பட்சி பாலை மாத்திரம் அருந்திவிட்டு தண்ணீரை விட்டுவிடுவதைப் போலவே, ஒரு நல்ல மனிதர் நல்லதைத் தேர்ந்தெடுத்துக் கொண்டு கெட்டதை நிராகரித்துவிடுகிருர்."

—'எங் இந்தியா' - 10—1—1929

# 33

# உடல் தேவைகளுக்கு எல்லை உண்டு

வேறு எவரும் அல்ல, எனக்கு நானே தொண்டு செய்து கொள்ளவே நான் இங்கே இருக்கிறேன். இந்த கிராமவாசிகளுக்குத் தொண்டு புரிவதன்மூலம் என்னை நான் அறிந்து கொள்ளவே விரும்புகிறேன். மனிதரின் இறுதி நோக்கம், கடவுளை அறிந்து கொள்ளுவதே. அவரது சமூக, ராஜீய, சமய நடவடிக்கைகள் யாவும் கடவுளைக் காணும் இறுதி நோக்கத்திற்காகவே மேற்கொள்ளப்படவேண்டும். மானிடராகப் பிறந்த எல்லோருக்கும் உடனடியாகத் தொண்டு செய்வதே, அத்தகைய முயற்சியின் அத்தியாவசியமான ஓர் அம்சமாகிறது. ஏனெனில், கடவுளைக் காண்பதற்கான ஒரே வழி, அவரது படைப்புகளில் அவரைக் காண்பதும், அவற்றுடன் ஒன்றுபடுவதும்தான். எல்லோருக்கும் தொண்டு செய்வதன்மூலம் நான் இவ்விதம் செய்ய முடியும்.

எனினும், ஒருவர் தம்முடைய தேசத்தின் மூலமாக மாத்திரமே அத்தகைய தொண்டு செய்வது சாத்தியமாகும். மானிட வர்க்கத்தில் நானும் ஓர் அம்சமே. மானிட வர்க்கத்தைச் சேர்ந்த மற்றவர்களைத் தவிர்த்துவிட்டு நான் அவரைக் காண முடியாது. எனக்கு, எனது தேச மக்கள்தான் என் அண்டைவீட்டுக்காரர்களாவர். அவர்கள் திக்கற்றவர்களாகவும், ஆதரவற்றவர்களாகவும், உணர்ச்சியற்றும் இருந்துவருகிருர்கள். எனவே, அவர்களுக்குத் தொண்டு செய்வதில்தான் என் முழு கவனத்தையும் செலுத்த வேண்டும். இமாலயத்தில் உள்ள ஒரு குகையில் கடவுளை நான்

காண முடியுமென என்னை நானே திருப்தி செய்துகொள்ள முடியுமாயின், நான் உடனடியாக இமயமலைக்குச் சென்றுவிடுவேன். ஆனால், மானிட வர்க்கத்திற்கு அப்பால் நான் அவரைக் காண முடியாது என்பதை அறிவேன்.

மனிதனின் ஆன்மிக முன்னேற்றத்திற்கும்கூட சில வசதிகள் அவசியமானவை. கிராமவாசிகளின் வசதிக்குறைவிலும், அசுத்தத்திலும் பங்கு எடுத்துக் கொள்ளுவதன் மூலம் எவரும் முன்னேற்றம் அடைய முடியாது. உடலுக்கு திருப்தியும் வசதியும் ஓரளவுக்கு அவசியமானவையே. எனினும், ஓரளவுக்குமேல் அவை, வசதியாக இருப்பதற்குப் பதிலாக உபத்திரவமாகிவிடுகின்றன. எனவே, எல்லையின்றித் தேவைகளைச் சிருஷ்டித்துக் கொள்ளுவதும், அவற்றை அனுபவித்துத் திருப்தி அடைவதும், ஒரு மாயையும், நம்மைச் சிக்கவைக்கும் ஒரு வலையுமேயாகும். ஒருவருடைய உடல் தேவைகளைத் திருப்தி செய்யவேண்டியது அவசியம்தான். அறிவுத் தேவைகளைக்கூட குறுகிய அளவுக்கு திருப்தி செய்ய வேண்டியதுதான். எனினும், இவையெல்லாம் ஒரு குறிப்பிட்ட அளவில் முற்றிலும் நின்றுவிட வேண்டும். இல்லாவிடில், அது எல்லையற்ற உடல் இன்பத்தையும், அறிவுப் பசியையும் திருப்தி செய்யும் அளவுக்குக் கீழ்த்தரமானவையாகிவிடும். எனவே, மனிதனின் உடல் தேவைகளும், பண்பாடுகளும், மானிட வர்க்கத்திற்குத் தொண்டு செய்ய இடையூறாக அமைந்துவிடாமல் பார்த்துக்கொள்ள வேண்டும். மானிட வர்க்கத்திற்குத் தொண்டு செய்யவே, அவன் தனது சக்தி முழுவதையும் உபயோகிக்க வேண்டும்.

— 'ஹரிஜன்' - 29—8—1936

# 34

# மறக்க முடியாத காட்சி

சென்ற ஞாயிற்றுக்கிழமை பம்பாய் எக்ஸெல்ஸியர் தியேட்டரில் நடந்த கூட்டம் ஒன்றில் என்னைப் பற்றிய புகழுரைகளை நான் கேட்டுக் கொண்டிருந்தேன். தென்னிந்தியாவில் துன்பத்திற்குள்ளான மக்களுக்கு உதவியாக ஸ்ரீ பரூச்சா அத்தகைய நாடகத்தை நடத்துகிறார் என்று எனக்குத் தோன்றியது. ஆனால், அப்போது நிகழ்ந்த ஒரு சம்பவம் எனக்கு மிகவும் சங்கடமான நிலைமையை உண்டாக்கிவிட்டது. பல்வேறு அரசியல் கட்சிகளையும் சேர்ந்தவர்கள் அந்த மேடையில் பேசுவதற்காக ஸ்ரீ பரூச்சா ஏற்பாடு செய்தார். அவர்களில் ஸ்ரீ ஜம்னுதாஸ் துவாரகதாஸும் ஒருவர். ஸ்ரீ ஜம்னுதாஸ் என்னைப் பற்றிப் பேசிய போது, என்னை 'மகாத்மா' என்று குறிப்பிடுவதற்குப் பதிலாக காந்திஜி என்றே குறிப்பிட்டார். காந்திஜி என்று கூறி என்னை அவர் 'அவமதித்ததை', கூட்டத்திலிருந்த இரண்டு, மூன்று பேர்

ஆட்சேபித்து, என்னை 'மகாத்மா' என்று கூறும்படி அவரை வற்புறுத்தினர்கள். ஆனால், ஸ்ரீ ஜம்னதாஸ் தைரியத்துடனும், மரியாதையுடனும் என்னை மீண்டும் காந்திஜி என்றே குறிப்பிட்டு வந்தார். தமக்கு என்னிடம் உள்ள மதிப்பும் அன்பும் கூட்டத்திலுள்ள மற்றவர்களைவிட எவ்விதத்திலும் குறைந்ததல்ல என்று அவர் கூறினர். காந்திஜி என்று கூறுவதே தமக்கு அதிக திருப்தியைக் கொடுப்பதாகவும் அவர் குறிப்பிட்டார். எனினும், அவர்கள் கடைசிவரையில் இடைமறித்த வண்ணம் இருந்தனர். ஆனல், ஸ்ரீ ஜம்னதாஸுக்கு எதிராக எழும்பிய கூக்குரலில், கூட்டத்தில் இருந்த மற்றவர்கள் கலந்து கொள்ளாதது போற்றத் தக்கதாகும். ஸ்ரீ ஜம்னதாஸ் யாதொரு கஷ்டமுமின்றி கடைசி வரையில் பேச முடிந்ததெனினும், அவ்விதம் சிலர் இடைமறித்தது எனக்கு வேதனையைக் கொடுத்தது. என் மீது பக்தியுள்ளவர்கள், என்னைச் சரிவரப் புரிந்து கொள்ளாமல், என்னை அவமதித்துவிட்டனர் என்பதை நான் கண்டேன். ஆனல், எனது ராஜீயக் கொள்கைகளை யொட்டி தமது ஆட்சேபணையை மரியாதையுடனும், ஆனல் உறுதியுடனும் தெரிவித்து, சிலருடைய கட்டளைக்காக என்னை 'மகாத்மா' என்று குறிப்பிட மறுத்ததன் மூலம் ஸ்ரீ ஜம்னதாஸ் என்னைப் பற்றிச் சரியாக அறிந்து கொண்டிருப்பதுடன், என்னைக் கௌரவித்திருக்கிறார் என்பதையும் கண்டேன். எனவே, அவரிடம் அவமரியாதையாக நடந்துகொண்ட நண்பர்களை, பகிரங்கமாக மன்னிப்புக் கேட்டுக்கொள்ளும்படி நான் கூறினேன். எதிராளிகளிடத்திலும்கூட மரியாதையாக நடந்து கொள்ளுவதே பொதுக் கூட்டங்களின் விதியாகும் என்ற உண்மையைக் கவனிக்கும்படி அவர்களிடம் சொன்னேன்.

அகிம்சையை மேற்கொண்ட ஒத்துழையாமைவாதிகள் இன்னும் அதிக மரியாதையுடன் நடந்து கொள்ளவேண்டும். தங்களுடைய நண்பர்களிடத்தில் மரியாதையாக நடந்து கொள்ளுவதைப் போலவே, தங்களுடைய எதிரிகளிடத்திலும் மரியாதையாக நடந்துகொள்ள வேண்டியது அவசியம். ஒத்துழையாமைவாதிகளின் அகிம்சை போதிப்பது இதுதான். இன்னும் யாரைக், கௌரவிப்பதற்காகக் கூடுகிறார்களோ, அவர்களுடைய உணர்ச்சிகளுக்கு கூட்டத்தில் உள்ளவர்கள் மரியாதை கொடுக்க வேண்டும். 'மகாத்மா' என்று என்னைக் கூறுவது எனக்கு மிகவும் அருவருப்பாக இருக்கிறதென்று நான் அடிக்கடி குறிப்பிட்டிருக்கிறேன். கூட்டத்தில் இடை மறித்தவர்கள் இதை உணர்ந்திருக்க வேண்டும். உதாரணமாக, 1921-இல் நடந்த பம்பாய் கலகத்தின்போது, என்னை 'மகாத்மா' என்று கூறுவதை நான் வெறுத்தேன். ஆசிரமத்தில் 'மகாத்மா' என்ற அடைமொழியை உபயோகிப்பது தடுக்கப்பட்டிருக்கிறது. எனவே, எனக்கு விருப்பமான காரியத்தையே ஸ்ரீ ஜம்னதாஸ் செய்தார்.

இவ்விதம் நான் கூறிவிட்டு, இடைமறித்தவர்கள் மன்னிப்புக் கேட்டுக் கொள்ள வேண்டும் என்பதற்காக என் பேச்சை சிறிது நேரம் நிறுத்தினேன். கூட்டத்தில் இருந்தவர்களும் நான் கூறி

யதை ஆதரித்து, அவர்கள் மன்னிப்புக் கேட்டுக் கொள்ள வேண்டும் என்று புத்திமதி கூறினர். உடனே, இடைமறித்தவர்கள் தைரியமாக எழுந்து நின்று, கைகூப்பிய வண்ணம் மன்னிப்புக் கேட்டுக்கொண்டனர். அந்தக் காட்சியை நான் எளிதில் மறக்க முடியாது.

பின்னர் நான் எனது பேச்சைத் தொடர்ந்து, மன்னிப்புக் கேட்டுக் கொண்டவர்களுக்கு எனது நன்றியைத் தெரிவித்துக் கொண்டேன். நாவன்மையான பல பல பிரசங்கங்கள், விவாதங்கள், சட்டசபைகளில் வோட்டுகள், இவற்றையெல்லாம் காட்டிலும், அத்தகைய உண்மையான, கண்ணியம் வாய்ந்த நடத்தையிலேயே சுயராஜ்ய விதை அடங்கியிருக்கிறது என்று என்னால் குறிப்பிடாமல் இருக்க முடியவில்லை. செய்துவிட்ட தவறுக்காக, பட்டவர்த்தனமாகவும், பயமின்றியும் வருத்தம் தெரிவித்ததன் மூலம், கூட்டத்தில் இருந்த அவர்கள் சுயராஜ்யத்தை அருகில் கொண்டுவந்துள்ளனர்.

சத்தியாக்கிரகத்தின் மிகமிகச் சிறந்த தத்துவம் என்னவெனில், முற்றிலும் தன்னைத்தானே அர்ப்பணம் செய்து கொண்டுவிடுவதுதான். அதில் எதிர்ப்பு என்பது கொள்கையைப் பற்றிய விஷயமாகவே இருக்கும். சத்தியாக்கிரகத்தை ஒரு சாத்திரம் என்று கூறலாம் எனில், அது குடும்பத் துறையில் நீண்டகால அனுபவத்தின் மீது உருவாக்கப்பட்டதாகும் என்று அக் கூட்டத்தினருக்கு நான் எடுத்துக் கூறினேன். என் சொந்த மனைவி, மகன், காலஞ்சென்ற சகோதரர் முதலியோர் விஷயத்தில் நான் சத்தியாக்கிரகத்தை மேற்கொள்ள வேண்டியிருந்தது. அதன் விளைவாக அவர்களுடைய மனஸ்தாபத்திற்கு நான் ஆளாக வேண்டியிருந்தது. எனினும், அதெல்லாம் ஆழ்ந்த அன்பு காரணமாகவே எழுந்ததாகும். எனக்கு மிகவும் நெருங்கிய அன்பார்ந்த உறவினர்களைப் போலவே, கடவுளின் மற்ற சிருஷ்டிகளிடத்திலும் ஆழ்ந்த அன்பு காட்டும் குணம் எனக்கு உண்டு என்றே நம்புகிறேன். சிற்சில சமயங்களில் அன்பின் வேதனையானது, அன்பு காட்டப்படுவோரின் மனத்தில் ஆழ்ந்த தழும்புகள் ஏற்படுவதற்குக் காரணமாகிவிடுகின்றன; எனினும், அன்பு காட்டுவோரின் மனத்தில் அவற்றைக் காட்டிலும் அதிகமான ஆழ்ந்த தழும்பை உண்டாக்கி விடுகிறது.

ஆங்கிலேயர் மீது எனக்குப் பகை எதுவும் இல்லை. அவர்களில் சிலர் எனது சிறந்த நண்பர்களாகவும் இருக்கிறார்கள். எனினும், இவ்விதம் அவர்களிடம் நான் கூற வேண்டிய காலம் வந்தது :

"எனது தேசத்தை நீங்கள் சுரண்டக்கூடாது. அவ்விதம் சுரண்டியதால், எங்கள் தேசத்திற்கு அளவிட முடியாத கஷ்டங்கள் ஏற்பட்டிருக்கின்றன. உங்களில் சிலருக்கு அதன் நலனில் அக்கறையில்லை. உங்களில் சிலர், இந்த நாட்டை உங்களால்

இயன்ற அளவுக்கு நசுக்கிப் பிழிந்து வருகிறீர்கள். இந்தியாவின் சொந்த நன்மைக்காகவே இந்தியாவில் ஆங்கிலேயர்களின் ஆட்சி இருந்து வருகிறது என்றும், நீங்கள் இந்தியாவின் தருமகர்த்தாக்கள் என்றும் உங்களில் சிலர் அறியாமை காரண மாக நம்புகிறீர்கள். இந்தக் கூற்றுக்கு முற்றுப் புள்ளி வைத்து விடவேண்டும். அதுவும் சீக்கிரமாக வைத்துவிட வேண்டும்.'' நான் இவ்விதம் கூறும்போது, எனது முழு ஆன்மாவும் அதை ஆதரிக்கின்றது. எனது இந்த முயற்சியானது, சத்தியாக்கிரகத் தின் அனுகூலமான சிறந்த அம்சத்தை அல்ல, அதன் பயங்கர மான அம்சத்தை முன்னணிக்குக் கொண்டு வருவதில் முடிந்திருக் கிறது. அந்நியர்கள் சுரண்டுவதை அது ஒரு முடிவிற்குக் கொண்டு வரவில்லை; ஆனால், அதன் பலனாக நம்மிடையே தான் பிளவு ஏற்பட்டிருக்கிறது. எனவே, சத்தியாக்கிரகத்தின் காருண்ய அம்சத்தை வெளிப்படுத்துவதிலேயே நான் எனது முழு சக்தியையும் உபயோகிக்க வேண்டும். வற்புறுத்துவதன் மூலம் அந்த அம்சத்தை நான் வெளிப்படுத்த முடியாது. விட்டுக் கொடுப்பதன் மூலம்தான் வெளிப்படுத்த முடியும். நான் அதில் வெற்றி பெறாவிடில், அதற்கு அந்த சாத்திரத்தின் பலவீனம் காரணமாக இருக்க முடியாது; அந்த சாத்திரத்தின் உண்மை யான கொள்கைகளைத் தன் அளவில் வற்புறுத்த முடியாதவரின் பலவீனம்தான் காரணமாக இருக்கமுடியும்.

நான் ஒரு மகாத்மா அல்ல என்பதை அறிவேன். நான் ஓர் அற்பாத்மா என்பதும் எனக்குத் தெரியும். அன்புக்கு எல்லை இல்லை. அது யாதொரு விலக்குமின்றி எல்லோரையும் வெற்றி கொள்ளக் கூடியது. மிகக் கடினமான கன்னெஞ்சத்தையும் அது உருக்கக் கூடியது. அதற்கு தன்னலம் என்பதே இல்லை. எனக்குக்கூடத் தெரியாமல் என் மனத்தில் கோபமோ அல்லது துவேஷமோ பதுங்கியிராது என்பதை யார் அறிவார்? எனினும், நான் தயங்கக்கூடாது. நான் என்னையே வெற்றிகொள்ள முயற் சிப்பதன் மூலம், நம்மிடையே நான் காணும் பிளவுகளைச் சீர் படுத்த வேண்டும். அவ்விதம் செய்வதற்கான பலம் எனக்கு ஏற்படுவதற்காகப் பிரார்த்தனை செய்யுங்கள்.

—'எங் இந்தியா' – 4—9—1924

# 35

# என் பெயர் முக்கியமல்ல, கொள்கைகளே முக்கியம்

பெல்காம் ஜில்லாவைச் சேர்ந்த ஹூட்லியில் நடந்த காந்தி சேவா சங்கத்தின் வருடாந்தரக் கூட்டத்தில் காந்திஜி பேசிய போது பின்வருமாறு குறிப்பிட்டார்:

உங்களுடைய சங்கமானது ஒரு தனி இனமாகிவிடும் அபாயம் இருக்கிறது. உங்களுக்கு ஏதாவது சங்கடம் ஏற்படும் போதெல்லாம், 'எங் இந்தியா'விலும், 'ஹரிஜனி'லும் நான் எழுதியுள்ளவற்றைத் திருப்பிப் பார்த்து, அவற்றின்படி நடக்க உறுதி கொள்ளுங்கள். உண்மையில், எனது கட்டுரைகள் என் உடலோடு எரிக்கப்பட்டுவிட வேண்டும். நான் கூறியவையோ அல்லது எழுதியவையோ அல்ல, நான் செயலில் காட்டியவை தான் நிரந்தரமாக இருக்கும். நமது வேத நூல்கள் யாவும் அழிந்துவிட்டால்கூட, ஹிந்து சமயத்தின் சாரத்தைப் பிரகடனம் செய்ய ஈசோபநிடதத்தில் உள்ள ஒரு மந்திரமே போதுமானது என்று நான் சமீபகாலமாக அடிக்கடி கூறி வந்திருக்கிறேன். எனினும், அந்த ஒரு சுலோகத்தின்படி ஒருவரும் வாழாவிட்டால் அதுவும் பயனற்றதாகிவிடும். நான் பேசியிருப்பதும், எழுதியிருப்பதும் அது போலவேதான். மகத்தான கொள்கைகளான சத்தியத்தையும் அகிம்சையையும் நீங்கள் மேற்கொள்ளுவதற்கு எனது பேச்சுகளும், எழுத்துகளும் உதவியாக இருக்கும் அளவுக்கு மாத்திரமே அவை பலனளிப்பவையாக இருக்கும். அக்கொள்கைகளை நீங்கள் அனுசரிக்காவிடில், அவற்றினால் உங்களுக்கு யாதொரு பலனும் இல்லை. ஒரு சத்தியாக்கிரகி என்ற முறையில் நான் இவ்விதம் கூறும் ஒவ்வொரு வார்த்தையும் உண்மையாகும்.

எனவே, இவ்வாரம் உங்கள் யோசனைக்கு வரும் பிரச்னைகளை, நான் கூறியவற்றை அடிப்படையாகக் கொண்டு நீங்கள் தீர்மானிக்க வேண்டும் என்பதே எனது விருப்பம். சத்தியத்திலும், அகிம்சையிலும் எனக்குள்ள நம்பிக்கை இடைவிடாது வளர்ந்து வருகிறது. எனது வாழ்க்கையிலேயே அவற்றை செயலில் காட்ட நான் முயற்சி செய்வதற்கு உகந்தவாறு ஒவ்வொரு விநாடியும் நானும் முன்னேற்றம் அடைந்து வருகிறேன்; அவற்றையொட்டி புதிய அர்த்தங்களையும் நான் காண்கிறேன். ஒவ்வொரு நாளும் அவற்றை நான் ஒரு புதிய ஒளியில் பார்க்கிறேன். அதனால்தான், நூற்போர் சங்கம், ஹரிஜன சேவா சங்கம், கிராமக் கைத்தொழில்கள் சங்கம் முதலியவற்றின் முன்னிலையில் நான் அடிக்கடி புதிய ஆலோசனைகளைச் சமர்ப்பித்து வருகிறேன். அதிலிருந்து நான் நிலையற்றும், மனத் தடுமாற்றத்துடனும் இருந்து வருவதாக எண்ணுவதற்கில்லை. அதன் அர்த்தம் என்னவெனில், அந்த ஸ்தாபனங்கள் ஜீவ சக்தி உள்ளவை என்பதும், ஒரு மரம் எப்போதும் வளர்ந்து கொண்டிருப்பதைப் போலவே அந்த ஸ்தாபனங்களும் வளரவேண்டும் என்பதும்தான். என்னுடன் நீங்களும் வளர்ச்சி பெறவேண்டும் என்பதே எனது விருப்பமாகும். நான் போன பிறகு என்ன நேரும் என்பதைப் பற்றி நான் கவலைப்படக் கூடாது. எனினும், உங்களுடைய ஸ்தாபனம் ஒரு காலத்திலும் தண்ணீர் தேங்கி நிற்கும் ஒரு குட்டையைப் போல இருக்கக் கூடாது; ஆனால், எப்போதும் வளர்ந்து கொண்டிருக்கும் ஒரு மரத்தைப் போல் இருக்க வேண்டும் என்பதே எனது ஆர்வமாகும்.

எனவே, என்னை மறந்து விடுங்கள். சங்கத்தின் பெயருடன் என் பெயரைச் சேர்த்துக் கொண்டிருப்பது அனாவசியமானது. ஆகையால், என் பெயரைத் தொத்திக் கொண்டிராதீர்கள், கொள்கைகளையே பற்றிக்கொண்டிருங்கள். கொள்கைகளை முக்கியமாகக் கொண்டு உங்களுடைய நடவடிக்கைகளை அளவிடுங்கள். எழும் ஒவ்வொரு பிரச்னையையும் அச்சமின்றி சமாளித்துக் கொள்ளுங்கள்.

—'ஹரிஜன்' - 1—5—1937

## 36

# குறுகிய பிரிவினைப் புத்தி வேண்டாம்

கிழக்கு வங்காளத்தைச் சேர்ந்த மாலிகண்டாவில் நடந்த காந்தி சேவா சங்க வருடாந்தர மகாநாட்டில் காந்திஜி பேசியதன் சாரத்தைக் கீழே காணலாம்:

காந்தீயக் கொள்கை தவறான அடிப்படையைக் கொண்டிருக்குமாயின், அதை அழித்துவிட வேண்டும். எனினும், சத்தியத்தையும் அகிம்சையையும் ஒரு காலத்திலும் அழிக்க முடியாது. ஆனால், குறுகிய பிரிவினைக் கொள்கை என்பது காந்தீயத்தின் மற்றொரு பெயர் எனில், அது அழிக்கப்படுவதற்கே உரியது. நான் எதற்காக வாழ்ந்தேனோ அது குறுகிய பிரிவினைக் கொள்கையாகத் தாழ்ந்துவிட்டது என்பதை மரணத்திற்குப் பிறகு அறிவேனாயின், நான் ஆழ்ந்த வேதனைக்கு உள்ளாவேன். நாம் மௌனமாகத் தொண்டு புரிய வேண்டியவர்களாக இருக்கிறோம். 'அவர் காந்தியின் சீடர்' என்று யாரும் சொல்லவேண்டாம். எனக்கு நானே சீடனாக இருப்பது போதுமானது. நான் எனக்கே தகுதி வாய்ந்த ஒரு சீடன் அல்ல என்பதை நான் அறிவேன். ஏனெனில், நான் எந்தக் கொள்கைகளை ஆதரிக்கிறேனோ அந்தக் கொள்கைகளின்படி நானே நடக்க முடியவில்லை. நீங்கள் என்னுடைய சீடர்கள் அல்ல, ஆனால், சக மாணவர்கள், சக யாத்திரீகர்கள், சத்தியத்தை நாடுவதில் சக பாடிகள், சக ஊழியர்கள்.

—'ஹரிஜன்' – 2—3—1940

## 37

# காந்தீயத்திற்கு இடமில்லை

**கேள்வி:** காந்தீயம் என்று எதுவும் இல்லை என்றும், உங்களுடைய கொள்கையில் புதிதாக ஒரு விஷயமும் இல்லை என்றும் நீங்கள் கூறுகிறீர்கள். நான் ஒரு முஸ்லிம்.

இஸ்லாமிய மகத்துவத்தின் ஒளிகளை நான் காந்தீயத்தில் காண்கிறேன். ஹிந்து சமயத்தின் கம்பீரத்தையும் கிறிஸ்தவ சமயத்தின் சக்தியையும், சமய சாத்திர ஆராய்ச்சி மாணவன் என்ற முறையில், நான் காந்தீயத்தில் தெளிவாகக் காண்கிறேன். கீழ்த்திசை நாடுகள் முழுவதும் உள்ள பரிசுத்தமான தத்துவமும் பெரும் அளவுக்கு காந்தீயத்தில் அடங்கியிருக்கிறது. இந்தியாவின் பழைய சரித்திரத்தின் பக்கங்களை யெல்லாம் நான் துருவிப் பார்த்தும் அதில் உங்களுடைய சித்தாந்தத்தை நான் காணவில்லை. எனவே, காந்தீயத்தை ஒரு புதிய தத்துவம் என்று ஏன் கூறக்கூடாது? உங்களிடத்திலும், எனவே காந்தீயக் கொள்கையிலும் நம்பிக்கையுள்ள எங்களைப் போன்றவர்கள் அதை காந்தீயம் என்று ஏன் கூறக்கூடாது?

பதில்: இந்த 'ஈயங்களை'க் கண்டாலே, அதிலும் அவை நபர்களுடைய பெயர்களுடன் இணைக்கப்பட்டிருப்பதைக் கண்டாலே எனக்கு நடுக்கமாக இருக்கிறது. என்னைப் பற்றி நீங்கள் கூறுவதெல்லாம் உண்மையாகவே இருந்தால்கூட, அதை ஒரு புதிய பிரிவாகக் கருதுவதற்கில்லை. புதிய பிரிவுகளைத் தவிர்ப்பது மாத்திரமல்ல, பழையவைகளையும் தேவைக்கு அதிகமாக இருப்பவைகளையும்கூட ஒழித்து விடவே நான் முயற்சித்து வருகிறேன். பிரிவினைகளை அகிம்சை வெறுக்கின்றது. அகிம்சை, ஐக்கியப்படுத்தும் ஒரு சக்தியாகும். அது, வேற்றுமையில் ஒற்றுமையைக் காண்கின்றது. நீங்கள் கூறியவையெல்லாம் அகிம்சையிலிருந்தே கிடைக்கின்றன. சமயத்தில் ஒரு புதிய பிரிவைச் சிருஷ்டிப்பது அகிம்சைக் கொள்கைக்கும், நான் செய்து வரும் பரிசோதனைக்குமே முரணாகும். எனவே, காந்தீயத்திற்கு இடமில்லை என்பதை நீங்கள் அறிந்து கொள்ளுவீர்கள் என்று நம்புகிறேன்.

—'ஹரிஜன்' – 16—3—1940

## 38

# சத்தியத்திற்கு முதல் ஸ்தானம்

சாவ்லியில் காந்தி சேவா சங்கத்தின் முதல் வருடக் கூட்டம் நடந்தபோது, காந்திஜியின் உபதேசங்களைப் பிரசாரம் செய்யும் பிரச்னையைப் பற்றி விவாதம் நடந்தது. இவ்விஷயமாக காந்திஜியின் கருத்து என்னவென்பதை ஸ்ரீ மகாதேவ தேசாய் தமது வாரக் கடிதத்தில் குறிப்பிட்டிருந்தார். அக் கடிதத்தின் விவரம் பின்வருமாறு:

காந்திஜியின் உபதேசங்களைப் பரப்புவதற்கு உதவியாக, ஏதாவதொரு விதத்தில் கட்டுக்கோப்பான பிரசாரம் செய்ய

வேண்டியதன் அவசியத்தைப் பற்றி காந்தி சேவா சங்க அங்கத்தினர்களிடையே பேச்சு நடந்தது. எல்லா விதமான யோசனைகளும் விவாதிக்கப்பட்டன. அத்தகைய பிரசாரத்தின் இயல்பை நிர்ணயிப்பதற்காக ஒரு கமிட்டியும் அமைக்கப்பட்டது. அவ்விதப் பிரசாரத்தின் அவசியத்தை ஓர் அங்கத்தினர் ஆட்சேபித்தார். அதன் பலனாக, அவ்விஷயத்தை யொட்டி காந்திஜியின் அபிப்பிராயம் என்ன என்பது தெரிய வந்தது. காந்திஜி கூறியதாவது :

''காந்தீயம் என்று எதுவும் இல்லை. எனக்குப் பிறகு காந்தீயக் கொள்கையுடைய ஒரு பிரிவை ஏற்படுத்திவிட்டுச் செல்ல நான் விரும்பவில்லை. நான் ஏதாவதொரு புதிய கொள்கையையோ அல்லது சித்தாந்தத்தையோ சிருஷ்டித்திருப்பதாக நான் கூறிக்கொள்ளவில்லை. நமது தினசரி வாழ்க்கையிலும், பிரச்னைகளிலும், எனது சொந்த வழியில் நிரந்தரமான உண்மைகளை அமலுக்குக் கொண்டுவரவே நான் முயற்சித்திருக்கிறேன். எனவே, மனுவைப்போல் நானும் ஏதாவது விதிகளை ஏற்படுத்திவிட்டுச் செல்லலாம் என்ற கேள்விக்கே இடமில்லை. சட்டங்களை இயற்றிய மகாபுருஷரான மனுவுக்கு என்னை உவமையாகக் கூறமுடியாது. நான் கொண்டுள்ள அபிப்பிராயங்களும், நான் செய்துள்ள முடிவுகளும் இறுதியானவை அல்ல. நாளைக்கே நான் அவற்றை மாற்றிக்கொண்டு விடலாம். உலகத்திற்குப் புதிதாக உபதேசிக்க என்னிடம் எதுவும் இல்லை. சத்தியமும் அகிம்சையும் மலைகளைப் போல் மிக மிகப் புராதனமானவை. நான் செய்திருப்பதெல்லாம் என்னவெனில், சத்தியத்தையும் அகிம்சையையும் ஒட்டி பரந்த முறையில் பரிசோதனைகள் செய்ய முயற்சித்ததேயாகும். அவ்வித முயற்சியில் நான் சிற்சில சமயங்களில் தவறு செய்திருக்கிறேன்; தவறுகளின் மூலம் நான் கற்றுக்கொண்டும் இருக்கிறேன். அவ்விதமாக வாழ்க்கையும் அதன் பிரச்னைகளும், சத்தியத்தையும் அகிம்சையையும் அனுசரிப்பதில் எனக்கு பல பரிசோதனைகளாகியுள்ளன. நான் இயற்கையிலேயே உண்மைவாதி, அகிம்சைவாதி அல்ல. ஒரு சமயம் ஒரு ஜைன முனி சரியாகக் கூறியதைப் போல, என்னை அகிம்சையின் பக்தன் என்று கூறுவதைக் காட்டிலும், சத்தியத்தின் பக்தன் என்று கூறுவதே அதிகப் பொருத்தமாக இருக்கும்.

''சத்தியத்திற்குத்தான் நான் முதல் ஸ்தானம் கொடுக்கிறேன்; அகிம்சைக்கு நான் கொடுப்பது இரண்டாவது ஸ்தானமே. ஏனெனில், அவர் கூறியதைப் போல, சத்தியத்திற்காக அகிம்சையை நான் தியாகம் செய்துவிடக் கூடியவன். உண்மையில், சத்தியத்தை நாடி நான் சென்றுகொண்டிருந்த போதுதான், அகிம்சையைக் கண்டுபிடித்தேன். சத்தியத்தைக் காட்டிலும் உயர்ந்த தருமம் வேறு எதுவுமில்லை என்று வேத நூல்கள் பிரகடனம் செய்கின்றன. ஆனல், அகிம்சை ஒரு மகோன்னதமான கடமை என்றே அவை கூறுகின்றன. தருமம்

என்ற சொல்லுக்கே இரண்டு வெவ்வேறான வியாக்கியானங்கள் இருக்கின்றன என்பதே எனது அபிப்பிராயமாகும்.

"எனது தத்துவம் என்று டம்பமாகக் குறிப்பிடுவதாயின், அந்த தத்துவமெல்லாம் நான் இதுவரையில் கூறியதில் அடங்கி யிருக்கிறது. நீங்கள் அதை 'காந்தீயம்' என்று கூறவேண்டாம். அவ்விஷயமாக விவரமான இலக்கியமோ அல்லது பிரசாரமோ தேவையில்லை. எனது நிலைக்கு எதிராக வேத நூல்களிலிருந் தெல்லாம் மேற்கோள்கள் காட்டப்படுகின்றன. இருந்தாலும், எனது கொள்கையை முன்னரைக் காட்டிலும் அதிக உறுதியுடன் நான் பற்றிக்கொண்டிருக்கிறேன். அதாவது, எதற்காகவும் சத்தியத்தை தியாகம் செய்துவிடக் கூடாது என்பதே எனது கொள்கையாகும். நான் விவரித்துள்ள சாதாரண உண்மைகளில் நம்பிக்கை உடையவர்கள், அவற்றைத் தங்களுடைய வாழ்க்கை யில் மேற்கொள்ளுவதன் மூலம் மாத்திரமே அவர்கள் அவற்றைப் பிரசாரம் செய்யமுடியும்.

"எனது ராட்டினத்தை மக்கள் எள்ளி நகையாடியிருக்கிறார் கள். ராட்டினம் மிகவும் இழிநிலையை அடையும் என்றும், எனவே, நான் இறக்கும்போது ராட்டினங்கள் என் உடலை எரிக் கும் கட்டையாக மாத்திரமே உதவும் என்றும் ஒரு தீவிர கண்டன வாதி ஒரு சமயம் கூறினார். எனினும், ராட்டினத்தில் எனக்குள்ள நம்பிக்கையை அத்தகைய கண்டனங்களால் அசைக்க முடிய வில்லை. என்னுடைய ஆக்கத் திட்டம் யாவும் அகிம்சையில் வேரூன்றியிருக்கிறது என்று புத்தகங்களின் மூலம் நான் உலகத் திற்கு எவ்விதம் திருப்தி உண்டாகும்படி செய்யமுடியும்? எனது வாழ்க்கைதான் அதை ருசுப்பிக்க முடியும்.

"கண்டனவாதிகளுக்குப் பதில் கூறத் தொண்டர்களுக்கு உதவியாக இருப்பதற்காக புத்தகங்களும் பத்திரிகைகளும் அவசியமாக இருக்கின்றன என்று நீங்கள் கூறலாம். எனது கொள்கைகளை விளக்குவதற்கு எவ்வளவு அவசியமோ அவ்வளவு நான் எழுதுகிறேன். கண்டனவாதிகளுக்குப் பதில் கூறுவதில் நீங்கள் தவறிவிட்டாலுங்கூட, அதைப் பற்றி ஏன் கவலைப்பட வேண்டும்? உங்களுடைய ராட்டினங்கள், துடைப்பங்கள், வாளி கள் முதலியவற்றுடன் கிராமவாசிகளுக்குத் தொண்டு செய்யவே அவர்களிடையே இருப்பதாக நீங்கள் கிராம ஜனங்களிடம் கூறுங்கள். அவர்கள் விரும்பினால் உங்களுடைய தொண்டை அங்கீகரிக்கட்டும். இல்லாவிட்டால் நீங்கள் கண்டனவாதி களுக்கு பதில் கூற முடியவில்லை என்பதற்காக அதை நிராகரித்து விடட்டும்!

"கண்டனவாதிகளைப் பற்றிக் கவலைப்படாமலேயே நாங்கள் மௌனமாக வேலை செய்ய வேண்டுமா என்று நீங்கள் கேட்பீர் கள். ஆமாம், நீங்கள் மௌன விரதத்தை மேற்கொண்டால்கூட நான் கவலைப்படமாட்டேன். எழுதாமல் இருக்க உங்களால்

முடியாது என்று நீங்கள் கருதினால், எழுதுங்கள். நீங்கள் புத்தகங்களைப் பிரசுரிக்க முடியவில்லை என்பதற்காக உங்களுடைய தொண்டுக்குத் தடை ஏற்பட்டுவிடக் கூடாது; மக்களின் உற்சாகம் வீணாகிவிடக் கூடாது.''

'ஹரிஜன்' - 28—3—1936

# 39

# எனது சிலை

இருபத்தையாயிரம் ரூபாய் செலவில் காங்கிரஸ் மைதானத்தில் வைப்பதற்காக 'மகாத்மா'வின் சிலை நிர்மாணிக்கப்பட்டு வருகிறது என்று கூறப்படுகிறது. அதைக் கண்டித்து எனக்கு கடிதங்கள் வந்து குவிந்து கொண்டிருக்கின்றன. இந்தச் சிலையைப்பற்றி எனக்கு எதுவுமே தெரியாது. அதைப்பற்றி நான் விசாரித்திருக்கிறேன். எனினும், அதை உறுதிப்படுத்தி தகவல் வரும் வரையில் நான் காத்திருக்கக்கூடாது. அத்தகைய ஒரு சிலை நிர்மாணிக்கப்பட்டு வருவது உண்மையாயின், எனக்குக் கடிதம் எழுதியிருப்போரின் கண்டனத்தை நான் பலமாக ஆதரிக்கிறேன். நானே மண்ணாலான ஒரு மனிதன். ஒரு கைக்காப்பை ஜாக்கிரதையாக வைத்துக் கொண்டால் கூட, ஆயிரம் வருடங்கள் வரையில் அது அப்படியே இருக்கும். நானோ அதைவிட மிகவும் மெலிந்தவன். மனிதனின் உடல் நாள் தோறும் தேய்ந்து, ஆயுள் முடிந்ததும் சின்னபின்ன மாகிவிடுகிறது. எனவே, இத்தகைய ஒரு மனிதனைப் போல் ஒரு மண் அல்லது உலோக சிலையை ரூ 25,000 செலவு செய்து நிர்மாணிப்பது அருமையான பணத்தை வீணாக்குவதாகும் என்று அவர்கள் கூறுவதை நான் ஒப்புக்கொள்ளுகிறேன்.

எனது வாழ்க்கையின் சிறந்த பகுதியை, நான் என் முஸ்லிம் நண்பர்களிடையே கழித்திருக்கிறேன். என் புகைப்படங்களையும் என் உருவச் சிலைகளையும் நான் வெறுப்பது அவர்களிடமிருந்து நான் கற்றுக்கொண்டதுதான். எனவே, மேற்கண்ட தகவல் உண்மையாயின், துரதிருஷ்டகரமான அந்தக் காரியத்தைத் தவிர்க்கும்படி நான் வரவேற்புக் கமிட்டியைக் கேட்டுக் கொள்ளுகிறேன். அவர்கள் இயன்றவரையில் பணத்தைச் சேமித்து வைக்கட்டும். அது வெறும் வதந்தியாயின், என் சிலைகளை நிர்மாணிக்கவும், என் படங்களை வைக்கவும் விரும்புவோருக்கு நான் கூறியுள்ள இவ்வார்த்தைகள் ஓர் எச்சரிக்கையாக இருக்கட்டும். இந்தக் காட்சிகளையெல்லாம் நான் முற்றிலும் வெறுக்கிறேன். என்னிடத்தில் நம்பிக்கை உடையவர்கள், நான் எந்த நடவடிக்கைகளை முக்கியமாகக் கொண்டிருக்கிறேனோ அந்த நடவடிக்கைகள் வளர்ச்சியடைவதற்கு உதவி புரிந்தால், அதை நான் எனக்கு அளிக்கப்பட்ட

பெரும் கௌரவமாகக் கருதுவேன். அவ்விதம் செய்யாவிடில் சிலைகளுக்காகவும் படங்களுக்காகவும் அவர்கள் செலவு செய்யும் தொகையையாவது ஹரிஜன் சேவா சங்கம், அகில இந்திய நூற்போர் சங்கம், அகில இந்திய கிராமக் கைதொழில்கள் சங்கம் அல்லது ஹிந்துஸ்தானி தாலிமி சங்கம் முதலியவற்றின் அலுவல்களுக்கு அவர்கள் கொடுத்து உதவுவார்களாக.

—'ஹரிஜன்' 11—2—1939

## (2)

ஒரு பொது இடத்தில் என் சிலையை வைப்பதற்காக பத்து லட்சம் ரூபாய் செலவு செய்யப் போகிறார்கள் என்று பம்பாயில் ஒரு பேச்சு இருந்துவருகிறது. அந்த யோசனையை மிகவும் கடுமையாகக் கண்டித்தும் எனக்குப் பல கடிதங்கள் வந்திருக்கின்றன. ஊதாரித்தனமான அத்தகைய யோசனைக்கு ஏதோ நான் தான் பொறுப்பாளிபோல அவர்கள் அதைக் கண்டித்திருக்கிறார்கள். அணுவை மலையாக மிகைபடுத்துவது மனித இயல்பாக இருக்கலாம். புத்திசாலிகள்தான் உமியிலிருந்து அரிசியைச் சலித்து எடுக்கிறார்கள். ஆனால் மேற்கண்ட கண்டனத்திற்கு ஏதோ மூல காரணம் இருப்பதாகத் தெரிகிறது. என்னைப் புகைப் படம் எடுப்பதைக் கூட நான் விரும்பவில்லை என்பதை நான் கூறத்தான் வேண்டும். அப்படியிருந்தும், என்னைப் புகைப்படம் எடுக்கத்தான் செய்கிறார்கள். என் உருவத்தை எடுத்துக்கொள்ள நான் சிற்ப நிபுணர்களை அனுமதித்திருக்கிறேன். இந்த முரண்பாடு ஒரு புறமிருப்பினும், என் சிலையைத் தயார் செய்ய தொகை எதுவும் செலவு செய்வதை நான் பலமாக ஆட்சேபிக்கத்தான் வேண்டும். அதிலும் குறிப்பாக, மக்கள் போதிய உணவும் உடையும் இராமல் கஷ்டப்படும் சமயத்தில், சிலைக்காகப் பணம் செலவு செய்வதை நான் ஒப்புக்கொள்ளவே முடியாது.

அழகான பம்பாய் நகரில், ஆரோக்கிய மற்ற நிலைமை தாண்டவமாடுகின்றது. ஜன நெருக்கம் மிகவும் அதிகமாக இருக்கிறது. ஏழை மக்கள் புளி மூட்டைகளைப் போல் அடைந்து கிடக்கிறார்கள். எனவே, ஏதாவது பொதுஜன நன்மைக்கான முறையில் அந்தப் பத்து லட்சம் ரூபாயைச் செலவு செய்வதே புத்திசாலித்தனமாகும். அதுதான் எனக்காக நிர்மாணிக்கப்படும் சிறந்த சிலையாக இருக்கும். அவ்விதம் புத்திசாலித்தனமாக பணத்தைச் செலவு செய்வதால் லாபம் உண்டு. அதிக உணவுப் பயிர்களைச் சாகுபடி செய்வதற்காக அந்தத் தொகையைச் செலவழித்தால், பசியால் தவிக்கும் எத்தனை பேருடைய வயிறுகளை நிரப்பலாம் என்பதைக் கற்பனை செய்து பாருங்கள்!

—'ஹரிஜன்' — 21—9—1947

# 40

## "காந்திஜிக்கு ஒரு கோவில்"

இந்த விசித்திரமான தலைப்பின் கீழ் ஒரு பத்திரிகையில் வெளியாகியுள்ள செய்தியைக் கத்தரித்து ஓர் அன்பர் அனுப்பி யிருப்பதை நான் வாசித்தேன். எனக்காக ஒரு கோவிலைக் கட்டியிருக்கிறார்கள் என்பதும், அதில் என் உருவத்தை வைத்து வழிபட்டு வருகிறார்கள் என்பதுமே அச் செய்தியாகும். இதை ஒரு மோசமான விக்கிரக வழிபாட்டு முறையாக நான் கருது கிறேன். அக் கோவிலை நிர்மாணித்தவர், தமது செல்வத்தை துஷ்பிரயோகம் செய்து வீணாக்கியிருக்கிறார்; அங்கே வரும் மக் கள் தவறான வழியில் செலுத்தப்பட்டிருக்கிறார்கள்; நானும் அவ மதிக்கப்பட்டிருக்கிறேன். அந்தக் கோவிலில் என் வாழ்க்கை முழுவதுமே கேலிக்கூத்தாகச் செய்யப்பட்டிருக்கிறது. வழி பாட்டிற்கு நான் கொடுத்துள்ள அர்த்தமானது, இவ்விதமாகச் சிதைக்கப்பட்டிருக்கிறது. ஜீவனத்திற்காகவோ அல்லது சுய ராஜ்யத்திற்காகத் தியாகம் செய்ய வேண்டும் என்ற எண்ணத் துடனே ராட்டினத்தைச் சுற்றுவதுதான் அதை வழிபடுவதாகும். கீதையைக் கிளிப் பிள்ளையைப் போல திரும்பத் திரும்ப பாரா யணம் செய்வது, அதை வழி படுவதாகாது. அதன் உபதேசத் தைப் பின்பற்றுவதுதான் உண்மையில் அதை வழிபடுவதாகும். கீதையின் உபதேசத்திற்கிணங்க நடைமுறையில் காட்டுவது தான், கீதையை சிறந்த முறையிலும் ஒழுங்காகவும் பாராயணம் செய்வதாகும். ஒரு மனிதரின் உபதேசங்களைப் பின்பற்றி நடக்கும் அளவுக்குத்தான் அவரை வழிபட வேண்டும். அவரது பலவீன மான நடவடிக்கைகளையல்ல, பலம் வாய்ந்த சிறந்த நடவடிக்கை களையே பின்பற்ற வேண்டும்.

உயிருள்ள ஒருவரை வழிபடுவது, ஹிந்து சமயத்தையே இழிவுபடுத்துவதாகும். எந்த மனிதரையும், அவரது மரணத் திற்கு முன் நல்லவர் என்று கூற முடியாது. மரணத்திற்குப் பிறகு கூட, அவரிடம் இருப்பதாகக் கூறப்பட்ட நல்ல அம்சங்கள் அவ ரிடம் இருந்ததாக யார் நம்புகிறார்களோ, அவர்களுக்குத்தான் அவர் நல்லவர். உண்மையில், ஒரு மனிதரின் உள்ளத்தை கட வுள் ஒருவரால் மாத்திரமே அறிந்து கொள்ள முடியும். எனவே, அபாயமில்லாத சிறந்த வழி என்னவெனில், உயிருடன் இருக் கும் அல்லது இறந்துவிட்ட எவரையும் வழிபடாமல் இருப்பது தான். அப்பழுக்கற்ற பரிபூரண நிலை கடவுள் ஒருவரிடத்தில் தான் உண்டு. கடவுள்தான் சத்தியம். எனவே, அவர் ஒரு வரை மாத்திரமே பூஜிக்க வேண்டும்.

பின்னர், புகைப்படங்களை வைத்துக்கொள்ளுவது புண்ணி யம் எதுவும் இல்லாத ஒரு விதமான வழிபாடு அல்லவா என்ற கேள்வி நிச்சயமாக எழுகின்றது. இதற்கு முன் நான் எழுதிய

வற்றிலும் அவ்விதம் குறிப்பிட்டிருக்கிறேன். அப்படியிருந்தும் கூட, அது அதிக செலவாகும் ஒரு நாகரிகமாயினும், அது குற்ற மற்ற ஒரு வழக்கமாதலால் நான் அதைச் சகித்து வந்திருக் கிறேன். எனினும், மேலே குறிப்பிடப்பட்ட வழக்கத்திற்கு நேர் முகமாகவோ அல்லது மறைமுகமாகவோ நான் எள்ளளவு ஆத ரவு அளித்தாலும், இந்த சகிப்புத்தன்மை நகைக்கத்தக்கதாக வும், அபாயகரமாகவும் முடியும். எனவே, இந்தக் கோவிலின் சொந்தக்காரர் அங்கேயுள்ள எனது உருவத்தை அகற்றிவிட்டு, அந்தக் கட்டிடத்தை நூற்கும் ஒரு ஸ்தாபனமாக மாற்றுவாரா யின், அது எனக்கு ஆறுதலாகவும் வரவேற்கத்தக்கதாகவும் இருக்கும். அங்கே ஏழை மக்கள் ஊதியத்திற்காக பட்டை போட்டு நூற்கலாம்; மற்றவர்கள் தியாகத்திற்காக அவ்விதமே செய்யலாம்; அவர்கள் யாவரும் கதர் கட்டிக்கொள்ளலாம். நடைமுறையில் கீதையின் உபதேசத்தை பின்பற்றுவது இது தான்; ராட்டினத்தையும் என்னையும் உண்மையாக வழிபடுவதும் இதுதான்.

—'ஹரிஜன்' — 24—3—1946

# 41

# என்னை தெய்வமாக்கும் விபரீதம்

தூங்கர்காத் ஸ்டேஷனில் என்னை ஒரு முஸ்லிம் நண்பர் சந் தித்து, என்னை தெய்வமாக்கும் கைங்கர்யம் எப்போதும் போல் உல்லாசமாக நடந்து வருகிறது என்று கூறினர். இத்தகைய வழிபாட்டைக் குறித்து நான் பல தடவைகளிலும் எனது பீதி யையும் பலமான ஆட்சேபணையையும் தெரிவித்திருக்கிறேன். நான் பிறப்பு, இறப்புக்கு உட்பட்ட ஒரு சாதாரண மனிதனே. மனித உடலுக்கு உள்ள எல்லா பலவீனங்களும் எனக்கு உண்டு. அர்த்தமின்றி என்னை தெய்வமாகக் கொண்டாடுவதைக் காட்டி லும், எனது தெளிவான செய்தியின் பொருளை மக்கள் அறிந்து கொண்டால், மிகவும் சிறப்பாக இருக்கும். என்னை தெய்வ மாகக் கொண்டாடுவதால் அவர்களுக்கு நன்மையில்லை, எனக் கும் நன்மையில்லை. அதன் விளைவாக, மக்களின் மூட நம்பிக்கை இன்னும் அதிக பலமடையும். எனவே, இந்தத் தவறை மக்கள் அறிந்து கொள்ளும்படி செய்ய வேண்டிய அவசியமான வேலையில் ஒவ்வொரு காங்கிரஸ்வாதியின் உதவியையும் நான் கோருகிறேன்.

—'எங் இந்தியா' - 7—5—1925

# 42

# ஆட்சேபகரமான வழிபாடு

வெகு தொலைவில் உள்ள கன்னியாகுமரியிலிருந்து ஓர் அன்பர் பின்வருமாறு எழுதுகிறார்:

"இப் பிரதேசங்களில் நடைபெற்றுவரும் விந்தையான சில விஷயங்களை உங்களுக்கு எடுத்துக் கூற விரும்புகிறேன். அவற்றைப் பற்றி நீங்கள் எதுவுமே அறிந்திருக்கமாட்டீர்கள்; மனத்தால் எண்ணிக் கூட இருக்கமாட்டீர்கள். இங்கே நடைபெறும் ரதோற்சவங்களில் கடவுள் விக்கிரகத்தை ரதத்தில் வைத்து ஊர்வலம் செல்லுகிறார்கள். அந்த விக்கிரகத்தின் பக்கத்தில் உங்களுடைய படத்தையும் வைத்து ஊர்வலம் செல்ல வேண்டும் என்று ஒரு பிரிவினர் விரும்புகிறார்கள். உங்களையும் கடவுளைப்போல் நினைத்து நடந்துகொள்ளுவதை நீங்கள் விரும்பமாட்டீர்கள் என்று மனப் பக்குவம் அடைந்த மற்றொரு பிரிவினர் கூறுகின்றனர். இந்த இரண்டு போட்டிக் கட்சிகளும் போராட்டத்திற்கு ஆயத்தமாகி வருகின்றன. கன்னியாகுமரி ரதோற்சவம் இன்னும் பத்து நாட்களுக்குப் பிறகு வருகிறது. எனவே, அந்தக் கட்சிகளுக்கு புத்திமதியாக ஒரு வார்த்தை கூறவேண்டுமென உங்களை வேண்டிக்கொள்ளுகிறோம்."

மற்றோர் அன்பர் மதுரையிலிருந்து ஒரு பயங்கரமான படத்தை அனுப்பியிருக்கிறார். ஆயிரம் தலைகள் உள்ள ஆதிசேஷனின் மடியில் நான் படுத்துக் கொண்டிருப்பதாக அந்தப் படத்தில் சித்திரிக்கப்பட்டிருக்கிறது. என்னுடைய ஒரு கையில் ஒத்துழையாமைச் சுருள் இருக்கிறது. மற்றொரு கையில் ராட்டினம் தொங்கவிடப் பட்டிருக்கிறது. பாவம், என் மனைவி எனது கால்களை பிடித்துக் கொண்டிருக்கிறாள். அந்தப் படத்தில் மற்றப் பிரமுகர்களையும் கொண்டுவந்து விட்டிருக்கிறார்கள். அதில் உள்ள மற்ற அம்சங்களையும் விவரித்து வாசகர்களின் உணர்ச்சிகளைப் புண்படுத்த நான் விரும்பவில்லை. சேஷநாகத்தின் உடலில் விஷ்ணு சயனம் செய்து கொண்டிருப்பதாக வைஷ்ணவ சம்பிரதாயம் உண்டு அல்லவா? அந்த ஸ்தானத்தில் என்னை வைத்து கேலிக்கூத்தான இந்தப் படத்தை வரைந்திருக்கிறார்கள். அந்தப் படத்தை வாபஸ் செய்து கொள்ளுமாறு பிரசுரகர்களுக்கு நல்ல வார்த்தை கூறும்படி, அந்தப் படத்தை அனுப்பிய அன்பர் என்னைக் கேட்டுக்கொண்டிருக்கிறார். வைதிகர்களான வைஷ்ணவர்கள் அதையொட்டி தங்களுடைய கோபத்தைப் பகிரங்கமாகத் தெரிவிக்க முன்வராமல் இருக்கலாம். என்றாலும், அந்தப் படம் அவர்களுடைய உணர்ச்சிகளைப் புண்படுத்தும் என்பது நிச்சயமென அந்த அன்பர் கூறுகிறார். அவர் கூறுவது சரிதான். மேற்கண்ட இரண்டு அன்பர்களுடைய உணர்ச்சிகளையும் நான் மனப்பூர்வமாக ஆதரிக்கிறேன். கன்னியாகுமரியிலும், மதுரையிலும் அவ்வாறு செய்பவர்களின் நோக்கம் நல்லதாக இருக்கலாம். எனினும், ஒரு மனி

தரை இவ்விதமாக வணங்க முற்படுவது, ஆட்சேபகரமான விக்கிரக வழிபாட்டின் எல்லையை எட்டுவதாக இருக்கிறது. அது, வைதிக நோக்கமுள்ள மக்களின் உணர்ச்சிகளை யாதொரு காரணமுமின்றி புண்படுத்துவதாகவும் இருக்கிறது. என்மீது கண்மூடித்தனமாக பக்தி கொண்டுள்ளவர்களின் நோக்கமே, அத்தகைய எல்லை மீறிய காரியங்களால் தோல்வியடையும். எனது உணர்ச்சிகளுக்கு அவர்கள் மரியாதை காட்ட விரும்பினால், ரதோற்சவத்தின் போது ரதத்தில் என் படத்தை வைக்க விரும்புவோரும், மனத்தைப் புண்படுத்தும் படத்தின் பிரசுரகர்களும் அத்தகைய நடவடிக்கைகளைத் தவிர்ப்பார்களாக. தேசபக்தி உணர்ச்சியைக் காட்டவும், வளர்க்கவும் ஆட்சேபிக்க முடியாத வேறு பல சிறந்த வழிகள் இருக்கின்றன.

—'எங் இந்தியா' – 4—6—1931

# 43

# மூட நம்பிக்கை

சமீபத்தில் எனக்கு வந்த ஒரு கடிதத்தில் உள்ள விஷயங்கள் எனக்கு மனவேதனையைக் கொடுத்ததுபோல், வாசகர்களுக்கும் வேதனையைக் கொடுக்கும். அந்தக் கடிதத்தின் சுருக்கம் பின்வருமாறு :

"நான் மத்திய மாகாணத்தைச் சேர்ந்த காட்டில் உள்ள கிராமங்களின் மத்தியில் இருந்து வருகிறேன். 'கோந்த்' பிரிவைச் சேர்ந்த 90 சதவிகித மக்கள் இங்கே வசிக்கிறார்கள். நான் யாத்திரை செய்து வருகையில், சிலாகட்டா என்ற ஒரு கிராமத்திற்குச் செல்ல நேர்ந்தது. சென்ற ஞாயிற்றுக்கிழமை அங்கே ஒரு பெரிய கூட்டம் நடந்தது. சுற்றுப் புறங்களில் உள்ள கிராமங்களிலிருந்து அதற்கு ஏராளமானவர்கள் வந்திருந்தனர். பதினைந்து மைல்களுக்கும் அப்பால் இருந்துகூட பலர் வந்திருந்தனர். அங்கே மக்கள் கூடியிருப்பதற்குக் காரணம் என்ன என்று நான் கேட்டேன். ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையையும் அவர்கள் காந்தி தினமாகக் கொண்டாடுகிறார்கள் என்பது தெரிந்தது. சென்ற இரண்டு வருடங்களாக ஒவ்வொரு ஞாயிற்றுக் கிழமையிலும் அவர்கள் காந்தி தினம் கொண்டாடி வருகிறார்கள். அன்றைய தினத்தில் அவர்கள் வேலையே செய்வதில்லை. கூட்டத்தில் உள்ள சில ஆடவர்களுக்கோ அல்லது பெண்களுக்கோ ஆவேசம் வருவதாகவும் கூறப்படுகிறது. உங்களுடைய ஆவி அவர்களிடம் பிரவேசிப்பதாலேயே அவர்களுக்கு ஆவேசம் வருகிறதாம்! அப்போது அவர்கள் ஜோசியம் கூறவும், மலட்டுப் பெண்களுக்கு எப்போது குழந்தைகள் பிறக்கும் என்பதைக் கூறவும் முற்படுகிறார்கள். இந்தச் செய்தி உங்களுக்கு வேதனையைக் கொடுக்கும் என்பதை அறிவேன். இந்த வழக்கத்தை நிறுத்த நீங்கள் உங்களுடைய தொண்டர்களில் ஒருவரை அனுப்ப முடியாதா? உங்களை வழிபடும் இந்த வழக்கத்தை இப்போது நீங்கள் நிறுத்தாவிடில், ஒரு கோவிலில் உங்க

னுடைய விக்கிரகத்தை வைத்து அவர்கள் பூஜை செய்யத் தொடங்கும் நாள் அதிக தூரத்தில் இல்லை என்றே நான் எண்ணுகிறேன்.''

ஏற்கனவே நமது தேசத்தில் போதிய அளவு மூட நம்பிக்கை நிலவி வருகிறது. எனவே, காந்தி வழிபாட்டையும் அந்த மூட நம்பிக்கைகளில் ஒன்றாகச் சேர்ப்பதை எதிர்க்க எல்லா முயற்சியும் செய்ய வேண்டும். மனிதனை வழிபடும் முறைகள் யாவும் எனக்கு நடுக்கத்தை உண்டாக்குகின்றன. ஒரு நபரை அல்ல, அவரிடம் உள்ள தரும குணத்தை வழிபடுவதில் எனக்கு நம்பிக்கை உண்டு. அதுவும், அவரது மரணத்திற்குப் பிறகுதான் அக் குணத்தை வழிபட வேண்டும். உடல் அழியக் கூடியது. தருமத்திற்கு அழிவில்லை. அது ஒருவரிடத்திலோ அல்லது மற்றொருவரிடத்திலோ உருப்பெற்று விடுகிறது. பாவம், அந்த மக்களுக்கு என்னைப் பற்றியோ அல்லது எனது லட்சியத்தைப் பற்றியோ எதுவுமே தெரியாது. யாருக்கும் எதுவும் கொடுக்கும் சக்தி எனக்கு இல்லை என்பதை நான் அறிவேன். எனது ஆவி பிரவேசித்ததன் காரணமாக ஒருவருக்கு ஆவேசம் வருகிறது என்ற எண்ணமே எனக்கு மிகுந்த அருவருப்பைக் கொடுக்கிறது. இந்த வழக்கம் அபாயகரமானது, மோசடியில் கொண்டு போய்விடக் கூடியது. அன்பர் குறிப்பிட்டிருக்கும் வழிபாட்டைக் கண்டித்து நிறுத்தும் படி, என் சக ஊழியர்களை நான் வற்புறுத்துகிறேன். கோந்த் பிரிவினரைப் போன்ற கள்ளங் கபடமற்ற மக்களுக்கு, மூடநம்பிக்கையுள்ள ஒரு வழக்கத்தைப் பின்பற்ற உற்சாகம் அளிப்பது ஒரு பாவமாகும்.

'எங் இந்தியா' – 20—11—1924

## 44

# குருவைத் தேடுகிறேன்

எனக்கு ஒரு குருநாதரை நான் இன்னும் தேடிக் கொண்டிருக்கிறேன் என்று, எனது சத்தியசோதனையில் இரண்டாவது பாகம், முதலாவது அத்தியாயத்தில்* கூறியிருந்தேன். அவ்விஷயமாக ஹிந்துக்கள், முஸ்லிம்கள், கிறிஸ்தவர்கள் முதலிய பல சமயத்தினரும் எனக்கு நீண்ட கடிதங்கள் எழுதியுள்ளனர். ஒரு குருவை எப்படிக் கண்டு பிடிப்பது என்பது பற்றி அவர்கள் அக்கடிதங்களில் எனக்கு யோசனை கூறியுள்ளனர். அவ்விஷயமாக இன்னும் மேற்கொண்டு எனக்கு ஏராளமான கடிதங்கள் வந்துகொண்டிருக்கின்றன. குருவைத் தேட எங்கே செல்ல வேண்டும், யாரைப் பார்க்கவேண்டும் என்பது பற்றியும் சிலர் எனக்கு அறிவித்திருக்

* காந்திஜி குறிப்பிட்டுள்ள மேற்கண்ட விவரத்தை மகாத்மா காந்தி நூல்கள், 3-ம் தொகுப்பில் 'ராய்ச்சந்திர பாய்' என்ற அத்தியாயத்தில் (பக்கங்கள் 123–127) காணலாம்.

கிறார்கள். சில இலக்கியங்களை வாசிக்கும்படி சிலர் கூறியிருக்கிறார்கள். எனது நலனில் அவர்களுக்குள்ள அக்கறைக்காக அவர்களுக்கு நான் நன்றி செலுத்துகிறேன். ஆனால், இவ்விஷயத்தில் எனக்குள்ள கஷ்டம் மூலாதாரமானது என்பதை அவர்களும் மற்றவர்களும் உணரவேண்டும். எனினும், அதைக் குறித்து நான் கவலைப்படவில்லை. எனக்குள்ள கஷ்டம் மூலாதாரமானது என்று நான் கூறுவதற்குக் காரணம் என்னவெனில், நான் கற்பனை செய்துகொண்டுள்ள குரு சாதாரணமானவர் அல்ல. அப்பழுக்கற்றும், பரிபூரணமாகவும் இருப்பவரைத் தவிர வேறு எவரும் எனக்குத் திருப்தியளிக்க முடியாது. எனது குரு, மனித உடலில் இருப்பவராயினும், பரிசுத்தமானவராக இருக்க வேண்டும்; ஆசை, கோப தாபங்கள் முதலியவற்றிற்கு அவர் சிறிதும் இடம் கொடாதவராக இருக்கவேண்டும்; சாதக பாதகங்களை அவர் சமமாகக் கருதுபவராக இருக்கவேண்டும்; அவர் சத்தியமும் அகிம்சையும் உருக்கொண்டவராக இருக்கவேண்டும்; அவர் யாரையும் கண்டு அஞ்சக் கூடாது; யாருக்கும் அவரைக் கண்டு அச்சம் ஏற்படக் கூடாது.

ஒருவர் தமது தகுதிக்கும், முயற்சிக்கும் உகந்த குருவை அடைகிறார். எனவே, நான் விரும்பும் குருவைக் கண்டு பிடிப்பதில் உள்ள கஷ்டம் தெளிவானது. அதைக் குறித்து நான் என்னை அலட்டிக் கொள்ளவில்லை.

நான் மேலே கூறியதிலிருந்து ஒரு விஷயம் தெளிவாகிறது. அதாவது அத்தகைய ஒரு குருவை நான் சந்திக்குமுன் என்னை நான் எள்ளளவும் குற்றம் குறை இராதவனாகச் செய்துகொள்ள முயற்சிக்க வேண்டும். அது வரையில், அவரை நான் மனத்தில் தான் உருவாக்கிக் கொள்ளவேண்டும். அவ்விஷயமாக நான் இடைவிடாமலும், பணிவுடனும், உண்மையாகவும் முயற்சி செய்வதையே எனது வெற்றி பொறுத்திருக்கிறது. அதற்கான பாதையை நான் அறிவேன். அது நேராகவும், குறுகலாகவும் இருக்கிறது. அது, பட்டாக்கத்தியின் முனையைப்போல் இருக்கிறது. எனினும், அதன்மீது நடப்பதற்கு எனக்கு ஆனந்தமாக இருக்கிறது. அது வழுக்கிவிடும்போது நான் கண்ணீர் விடுகின்றேன்.

"யார் முயற்சி செய்கிறானோ, அவன் ஒருபோதும் அழிவதில்லை" என்பது கடவுளின் அருள்மொழியாகும். அந்த வாக்குறுதியில் எனக்கு தளரா நம்பிக்கை உண்டு. எனது பலவீனம் காரணமாக நான் ஆயிரம் தடவை தோல்வியடைந்தாலும், நான் நம்பிக்கையை இழந்துவிடமாட்டேன்; நான் ஒளியைக் காண்பேன் என்று நம்புகிறேன். இந்த உடல் எப்போதாவது ஒருநாள் என் கட்டுப்பாட்டில் அடங்கித்தான் தீரவேண்டும். என் உடல் அத்தகைய கட்டுப்பாட்டிற்கு உட்படும்போது, நான் ஒளியைக் காண்பேன். எனக்கு அன்புடன் கடிதங்கள் எழுதியிருப்போர் எனது நிலைமையை இப்போதாவது உணர்ந்து என்னைப் பற்றிக் கவலைப்படாமல் இருப்பார்களா? கடவுளை அவர்கள் கண்டுவிட்டதாக

அவர்களுக்கு திருப்தி ஏற்பட்டாலொழிய, கடவுளைத் தேடுவதில் என்னுடன் அவர்களும் கலந்து கொள்ளுவார்களா?

'எங் இந்தியா' – 17–6–1926

# 45

# உண்மையான குரு

நான் தேடும் குருவைப் பற்றி விளக்கம் கூறியும், நான் எழுதிய குறிப்பை உறுதிப்படுத்தியும் ஓர் அன்பர் பின்கண்ட சுவையான தகவலை அனுப்பியுள்ளார்:

"குருவைப் பற்றி நீங்கள் கொடுத்த விளக்கமானது, கவியும் முனிவருமான ராமதாஸின் அழகான கவிதையை எனக்கு நினைவூட்டியிருக்கிறது. அவர் கூறியிருப்பதாவது:

விவேகா ஐஸா குரு| சித்தா ஐஸா சிஷ்ய சதுரு||
ஜீவா ஐஸா மித்ர உதாரு| புவனத்ரயீம் மிலேனு||

"இதன் பொருள்: 'விவேகத்தை விட, அல்லது பொய்யிலிருந்து உண்மையையும், தவறிலிருந்து நியாயத்தையும், தீமையிலிருந்து நல்லதையும் பாகுபடுத்தி அறியும் சக்தியைக் காட்டிலும் வேறு சிறந்த ஒரு குருவை நீ காண முடியாது. சித்தம் அல்லது மனத்தைக் காட்டிலும் வேறு சிறந்த ஒரு சீடன் இல்லை. ஒருவருடைய ஜீவன் அல்லது ஆன்மாவைக் காட்டிலும் வேறு உயர்ந்த நண்பர் இல்லை'.

"உண்மையில், ஒரு குருவைத் தேடி மனிதன் தனக்கு வெளியே செல்ல வேண்டியதில்லை என்றே ராமதாஸ் சுட்டிக் காட்டியிருக்கிறார். 'உங்களுடைய பகுத்தறிவின் சக்தியே உங்களுக்கு வழிகாட்டியாக இருக்கவேண்டும். கடவுளிடத்தில் உங்களுக்குள்ள உறுதியான நம்பிக்கையிலிருந்தே பகுத்தறிவு ஏற்படுகிறது. அத்தகைய சக்தியின் கட்டுப்பாட்டிற்குள் உங்களுடைய மனத்தை வைத்துக்கொள்ளுங்கள். பெருந்தன்மையுடன் தன்னலத்தைத் தியாகம் செய்யுங்கள்!' இதுதான், அந்த மகாராஷ்டிர முனிவர் கூறியுள்ள புத்திமதியின் சாரமாகும்".

'எங் இந்தியா' – 24–6–1926

# 46

# ஒரு சிறந்த தீர்க்கதரிசி

கவி ராஜசந்திரர், கத்தியவாடைச் சேர்ந்த வாவேனியா என்ற ஊரில் பிறந்தவர். *1891*-இல் நான் லண்டனிலிருந்து என்று திரும்பிவந்தேனோ அன்றுதான், பம்பாயில் டாக்டர் பி.

ஜே. மேத்தாவின் ஜாகையில் அவரைச் சந்தித்தேன். அவர் டாக்டர் மேத்தாவுக்கு நெருங்கிய உறவினர். நான் அவரை கவி என்றே கூப்பிடுவது வழக்கம். அவரை எனக்கு அறிமுகம் செய்து வைத்தபோது, அவர் ஒரு சதாவதானி, அதாவது ஒரே சமயத்தில் நூறு விஷயங்களை ஞாபகத்தில் வைத்துக்கொள்ளக் கூடியவர் என்று என்னிடம் கூறினார்கள். கவி அப்போது மிகவும் இளைஞராக இருந்தார். அப்போது எனக்கு 21 வயது. கவி என்னைக் காட்டிலும் அதிக வயதானவர் அல்ல. அவர் தமக்குள்ள சக்திகளை பகிரங்கமாகக் காட்டிக்கொள்ளும் வழக்கத்தைக் கைவிட்டுவிட்டார். முற்றிலும் சமய சம்பந்தமான துறைகளில் தமது கவனத்தைச் செலுத்திவந்தார். அவரது எளிமையையும், எதையும் சுதந்திரமாகத் தீர்மானிக்கும் இயல்பையும் கண்டு நான் பிரமித்துவிட்டேன். குருட்டு வைதிகத்தின் அறிகுறியே அவரிடத்தில் இல்லை. எனக்கு இன்னும் அதிக ஆச்சரியத்தைக் கொடுத்தது என்னவெனில், அவர் நடைமுறையில் சமயப் பற்றுடன் வியாபாரத்தையும் அனுசரித்து வந்ததுதான். அவர் சமய தத்துவ மாணவர். தமக்கு எதில் நம்பிக்கை உண்டோ அதன்படி செயலில் காட்டவும் அவர் முயற்சித்து வந்தார். அவர் ஒரு ஜைனராக இருந்தும், மற்ற சமயங்களிடத்தில் அவருக்கு இருந்த சகிப்புத்தன்மை போற்றத்தக்கது. மேல் படிப்பிற்காக இங்கிலாந்துக்குச் செல்லும் சந்தர்ப்பம் அவருக்குக் கிடைத்தது; எனினும், அவர் செல்ல மறுத்துவிட்டார். ஆங்கிலம் கற்றுக் கொள்ளுவதில் அவருக்கு விருப்பமில்லை. அவரது கல்வி ஆரம்ப கட்டத்துடன் நின்றுவிட்டது. எனினும், அவர் ஒரு மேதை. சமஸ்கிருதம், மகதி முதலிய பாஷைகள் அவருக்குத் தெரியும். பாலி மொழியும் அவருக்குத் தெரியும் என நம்புகிறேன். அவர் சமய சம்பந்தமான குஜராத்தி இலக்கியங்களை இடைவிடாது வாசித்து, இஸ்லாம், கிறிஸ்தவ, ஜோரோஷ்டிர சமயங்களைப் பற்றி அவரது தேவைக்குப் போதுமான அளவு தெரிந்துகொண்டிருந்தார். சமய சம்பந்தமான விஷயங்களில் அவர் என் மனத்தைக் கவர்ந்தது போல் மற்றெந்த மனிதரும் கவரவில்லை. எனது ஆன்ம வாழ்க்கையை உருவாக்குவதில் டால்ஸ்டாய், ரஸ்கின் முதலியோருடன் கவியும் போட்டியிட்டார் என நான் மற்றோரிடத்தில் குறிப்பிட்டிருக்கிறேன். எனினும், என் விஷயத்தில் கவியின் செல்வாக்குதான் மிகவும் அதிகம் என்பதில் சந்தேகமில்லை. அவருடன் நான் அதிகமாக நெருங்கிய தொடர்பு கொண்டிருந்ததே அதற்குக் காரணமாக இருக்கலாம். பெரும்பாலான சந்தர்ப்பங்களிலும் அவரது முடிவுதான் எனது தார்மிக உணர்ச்சிக்கு உகந்ததாக இருந்தது. அவரது சமயத்தின் மூலாதாரமான கொள்கை ஐயமின்றி அகிம்சையே. கிழட்டுக் கால்நடைகளையும், புழு பூச்சிகளையும் காப்பாற்றுவதில் மாத்திரமே தங்கள் கவனத்தைச் செலுத்தும் அகிம்சை பக்தர்களை இன்று நாம் காண்கிறோம். ஆனால் கவியின் அகிம்சை, அவ்விதம் பக்குவமடையாத அரைகுறை அகிம்சை அல்ல. அவரது அகிம்சையில் மிக மிகச் சிறிய பூச்சியின் நலன் அடங்கி

யிருந்தது போல் மானிட வர்க்கம் முழுவதன் நலனும் அடங்கி யிருந்தது.

இவ்வளவெல்லாம் இருந்தும், கவியை குற்றம் குறையே இல்லாத நிறை மனிதராக ஒருபோதும் நான் கருத முடியவில்லை. எனினும், எனக்குத் தெரிந்த எல்லோரையும் காட்டிலும் அவர் தான் அத்தகைய நிறை மனிதருக்குச் சமீபத்தில் இருப்பதாக எனக்குத் தோன்றியது. அந்தோ, அவர் மிகவும் இளம் வயதிலேயே (முப்பத்து மூன்று வயது) காலமாகிவிட்டார். சத்தியத்தை நிச்சயமாய் நேருக்கு நேராகப் பார்க்கப் போவதாக அவர் எண்ணியபோது அவரது காலம் முடிந்துவிட்டது! அவரை வழிபடும் ஏராளமானவர்களை அவர் விட்டுச் சென்றிருக்கிறார். ஆனால், அவரைப் பின்பற்றுவோரின் தொகை அவ்வளவு இராது. அவர் எழுதிய விஷயங்களைச் சேகரித்துப் பிரசுரித்திருக்கிறார்கள். அவை பெரிதும், கேள்வி கேட்டவர்களுக்கு அவர் எழுதிய ஆன்மபூர்வமான கடிதங்களேயாகும். அவற்றை ஹிந்தியில் மொழி பெயர்க்க முயற்சி செய்யப்பட்டு வருகிறது. அவை, ஆங்கிலத்திலும் மொழி பெயர்ப்பதற்குத் தகுதி வாய்ந்தவை என்பதை நான் அறிவேன். அவை பெரும்பாலும் அந்தராத்மாவின் அனுபவங்களை அடிப்படையாகக் கொண்டிருக்கின்றன.

தாபா, 18—3—1930 'மாடர்ன் ரிவ்யூ', ஜூன் 1930

பகுதி எட்டு

# அரசியலும் சமயமும்

## 1

## தார்மிகக் கட்டுப்பாடு

**கேள்வி :** *சமயத்திற்குப் புறம்பாக அரசியலைப் பற்றி நீங்கள் நினைக்கவே முடியாது என்று உங்களுடைய சுய சரிதையில் கூறியிருக்கிறீர்கள். நீங்கள் இன்னும் அதே கருத்துடன் இருந்து வருகிறீர்களா? அப்படியாயின், இந்தியாவைப் போன்ற பல்வேறு சமயங்கள் உள்ள ஒரு தேசத்தில், ஒரு பொதுவான அரசியல் கொள்கையை மேற்கொள்ளலாமென நீங்கள் எதிர்பார்ப்பது எப்படி சாத்தியமாகும்?*

**பதில் :** ஆமாம். சமயத்திலிருந்து வேறுபட்ட அரசியலை நான் கற்பனை செய்துகொள்ள முடியாது என்ற அதே அபிப்பிராயமே இன்னும் எனக்கு இருந்து வருகிறது. உண்மையில், நம்முடைய நடவடிக்கைகள் ஒவ்வொன்றிலும் சமயம் ஊடுருவியிருக்க வேண்டும். இங்கே சமயம் என்பதற்கு, சமய வெறி என்று அர்த்தமில்லை. உலகத்தின் ஒழுங்கான தார்மிகக் கட்டுப்பாட்டில் நம்பிக்கை என்பதே அதன் அர்த்தமாகும். அது கண்களுக்குத் தெரியாததாக இருக்கிறது என்பதற்காக அது உண்மையல்ல என்று ஆகிவிடாது. இந்த சமயம், ஹிந்து, இஸ்லாம், கிறிஸ்தவ சமயங்களுக்கு அப்பாற்பட்டது. எனினும், அது அவற்றின் ஸ்தானத்தை ஆக்கிரமிக்கவில்லை; அது அவற்றுடன் இணைந்து, அவற்றிற்கு உண்மை உருவத்தைக் கொடுக்கிறது.

—'ஹரிஜன்' – 10—2—1940

## 2

## சமயத் தொடர்பற்ற அரசியல்

என் சம்பந்தப்பட்டவரையில், சமயத் தொடர்பற்ற அரசியல் என்பதே இல்லை. மூடநம்பிக்கையுடன் கூடிய கண்மூடித்தனமான சமயம் அல்ல, துவேஷத்தையும் போராட்டங்களையும் அடிப்படையாகக் கொண்ட சமயமும் அல்ல; ஆனல் சகிப்புத்தன்மையை அடிப்படையாகக் கொண்ட அகில உலக

சமயமாகும். ஒழுக்கமற்ற அரசியலை, ஒதுக்கித்தள்ள வேண்டிய ஒரு பொருளைப் போல் கருதவேண்டும். "அப்படியானல் நான் எல்லாப் பொது அலுவல்களிலிருந்தும் விலகிவிட வேண்டியதுதான்" என்று ஆட்சேபவாதி கூறுகிறார். எனினும், எனது அனுபவம் அத்தகையது அல்ல. நான் சமூகத்தினிடையே வாழ முயற்சிக்க வேண்டும்; அதே சமயத்தில் அதன் படுகுழிகளில் விழுந்துவிடாமல் ஒதுங்கி நிற்கவேண்டும்.

—'எங் இந்தியா' – 27–11–1

## 3

# அரசியல் வாழ்க்கையில் எதுவும் நியாயமாகுமா?

"காங்கிரசில் அரசியல் சீர்திருத்தத் தீர்மானம்" என்ற தலைப்பின் கீழ் காந்திஜி 'எங் இந்தியா'வில் எழுதிய கட்டுரையின் சாரம் பின்வருமாறு :

லோகமான்ய திலகர், திட்டவட்டமான கருத்துள்ள ஒரு பிரிவைச் சேர்ந்தவர். அதை அவர் மறைப்பதில்லை. அரசியலில் எதுவும் நியாயமென்று அவர் கருதுகிறார். அரசியல் வாழ்க்கையில் அத்தகைய சித்தாந்தத்தை நான் ஆட்சேபிக்கிறேன். மேல்நாட்டினரின் தந்திரங்களையும் முறைகளையும் நாம் பின்பற்றினல், இந்த நாட்டின் அரசியல் வாழ்க்கை முற்றிலும் ஊழல் மயமாகிவிடும் என்பது எனது கருத்தாகும். நேர்மை, நியாயம், தருமம் முதலியவற்றை மிகவும் கண்டிப்பாக அனுசரித்தால்தான், இந்த நாட்டின் உண்மையான நலன்கள் அபிவிருத்தி அடைய முடியும் என்பதே எனது நம்பிக்கை. எனினும், நான் குறிப்பிட்டுள்ள இந்தக் கருத்து வேற்றுமை காரணமாக, லோகமான்ய திலகர் திருத்தத்தை ஒப்புக் கொண்டதற்கு அந்தரங்க நோக்கம் இருக்க வேண்டும் என்பதை நான் நம்ப முடியாது. சாத்தியமானவரையில் எதிராளிகளின் கருத்துகளுக்கு இணங்க வேண்டும் என்பதற்காகவே அவர் திருத்தத்தை ஒப்புக்கொண்டிருக்க வேண்டும்.

—'எங் இந்தியா' – 14—1—1920

## 4

# சாதுவைப் பற்றிய விளக்கம்

மேற்கண்ட கட்டுரைக்குப் பதிலாக, 18-1-1920-இல் புனவிலிருந்து பால கங்காதர லோகமான்ய திலகர் காந்திஜிக்கு எழுதிய கடிதம் பின்வருமாறு :

"சென்ற 'எங் இந்தியா' இதழில் அரசியல் சீர்திருத்தத் தீர்மானத்தை யொட்டி தாங்கள் எழுதிய கட்டுரையில் 'அரசியலில் எந்தச் செயலும் நியாயமே' என்பதுதான் எனது அபிப்பிராயம் என்று குறிப்பிட்டிருக் கிறீர்கள். அதைக் கண்டு நான் வருந்துகிறேன். அக் கட்டுரையில் எனது கருத்து சரிவர எடுத்துக் கூறப்படவில்லை என்பதைத் தெரிவிக்கவே தங்க ளுக்கு இந்தக் கடிதம் எழுதுகிறேன். அரசியல் உலகாயதமான மக்களின் விளையாட்டே யன்றி சாதுக்களின் விளையாட்டு அல்ல. 'கோபமின்மையால் கோபத்தை ஜயிக்க வேண்டும்' என்று புத்தர் உபதேசித்துள்ளார். அதைக் காட்டிலும், 'யே யதா மாம் ப்ரபத்யந்தே தாம்ஸ் ததைவ பஜாம்யஹம்'* என்ற கிருஷ்ண பரமாத்மாவின் உபதேசத்திலேயே அதிக நம்பிக்கை வைக்க நான் விரும்புகிறேன். இது வேற்றுமையை விளக்குவதுடன், 'பரஸ்பர ஒத் துழைப்பு' என்ற எனது அடைமொழியின் பொருளையும் தெளிவாக்குகிறது. அவ்விரண்டு முறைகளும் நேர்மையானவை, நீதியானவை. எனினும், ஒன்று மற்றொன்றைக் காட்டிலும் இந்த உலகத்திற்கு அதிகப் பொருத்தமானது. மேற்கொண்டு இதை யொட்டிய விளக்கத்தை எனது 'கீதா ரகசிய'த்தில் காணலாம்."

சமய நூல்களை யொட்டிய வியாக்கியானங்கள் சம்பந்தப் பட்ட விஷயங்களில், லோகமான்யர் கூறியதை மறுத்து விவாதிக்க நான் இயல்பாகவே மிகவும் தயங்குகிறேன். எனினும், சில விஷ யங்களில் வியாக்கியானத்தைக் காட்டிலும் இயற்கை அறிவே மேலானதாக இருக்கிறது. லோகமான்யர் மேற்கோள் காட்டி யுள்ள இரண்டு உபதேசங்களுக்குள், நான் எவ்வித முரண்பாட் டையும் காணவில்லை. புத்தரின் உபதேசம் ஆதி அந்தமற்ற நிரந்தரமான ஒரு கொள்கையாகும். துவேஷத்தை அன்பினாலும், பொய்யை சத்தியத்தினாலும் வெற்றி கொள்ளும் கொள்கையை எப்படி நடைமுறையில் அனுசரிக்க முடியும், அனுசரிக்க வேண் டும் என்பதை பகவத் கீதை எனக்குக் காட்டுகிறது.

நாம் மற்றவர்கள் விஷயத்தில் எப்படி நடந்து கொள்ளு கிறோமோ அதற்குத் தகுந்தாற்போலவே கடவுள் நமக்குப் படி அளக்கிறார் என்பது உண்மையானால், அதைத் தொடர்ந்து ஒரு விஷயம் தெளிவாகிறது. அதாவது நாம் தெய்வ தண்டனையி லிருந்து தப்ப வேண்டுமாயின், கோபத்திற்குப் பதிலாக நாமும் கோபத்தைக் காட்டக்கூடாது; ஆனால், கோபத்தைக் கூட சாந்த மாகவே எதிர்க்கவேண்டும் என்று ஏற்படுகிறது. இந்த விதி, உலகத்தொடர்பற்றவர்களுக்காக இருக்கவில்லை. ஆனால், முக்கிய மாக உலக சம்பந்தம் உள்ளவர்களுக்காகத்தான் இருக்கிறது. லோகமான்யரிடம் மரியாதையுடன் ஒன்று கூறத் துணிகிறேன். இந்த உலகம் சாதுக்களுக்காக அல்ல என்று கூறுவது, மனத் தின் மந்த நிலையையே வெளிப்படுத்துகிறது. சகல சமயங்களின் சாரமும், புருஷார்த்தத்தை வளர்ப்பதுதான். புருஷார்த்தம் என்

* இது கீதை 4–ஆவது அத்தியாயத்தில் உள்ள 11-ஆம் சுலோகமாகும். 'யார் என்னை எப்படி பூஜிக்கிறார்களோ அப்படியே அவர்களுக்கு நான் அருள் புரிகிறேன்' என்பதே இதன் பொருள். பக்தர்கள் எதை நாடுகின்றார்களோ, அதை அவர்களுக்குக் கடவுள் அருள்கின்றார் என்பதே இதன் கருத்தாகும்.

ருல், சாதுவாகத் திகழ்வதற்கான துணிகரமான முயற்சியே யன்றி வேறு எதுவும் இல்லை. சாது என்ருல், எல்லா அம்சங்களி லும் கண்ணியம் வாய்ந்த ஒரு கனவாளுக இருப்பதே.

'எங் இந்தியா' – 28—1—1920

# 5

# வாழ்க்கை அமைப்பின் அடிப்படை

ஒருவர் மூன்று கேள்விகள் கேட்டுள்ளார். அவற்றில், நான் பதிலளிக்கவேண்டிய ஒரு கேள்வி பின் வருமாறு:

"சமயக் கல்வியைக் காட்டிலும் அரசியல் கல்வி மிகமிக உயர்ந்தது அல்லவா?"

சிறந்த சமய அடிப்படையின் ஆதரவின்றேல், அரசியல் கல்வி முற்றிலும் தகுதியற்றதாகிவிடும் என்பதே எனது அபிப்பிராய மாகும். சமயப் பற்று இல்லாத மனிதன், வேர் இல்லாத மரத் துக்குச் சமமாவான். ஆகையால், சமயத்தை அடிப்படையாக வைத்துக்கொண்டுதான், வாழ்க்கை அமைப்பே உருவாக்கப்பட வேண்டும். அப்போதுதான் வாழ்க்கை உண்மையானதாக இருக்கும்.

—'ஹரிஜன்' - 21—7—1946

# 6

# அரசியலும் தார்மிக முன்னேற்றமும்

ஓர் அமெரிக்கப் பத்திரிகையாளர் காந்திஜியை ஒரு கேள்வி கேட்டார்:

"அரசியல் துறையில் உங்களுடைய நடவடிக்கைகளுக்கு ஒரு காலத்தில் இடமே இராமற் போய்விடலாம் என்பது சாத்தியம் அல்லவா?"

**காந்திஜி:** "அரசியல் தொடர்பின்றி நான் சமூகத் தொண்டு கூட செய்ய முடியாது என்பதைக் கண்டேன். அதனல்தான், அரசியல் துறையில் நான் பிரவேசிக்கும்படியான நிர்ப்பந்தம் ஏற்பட்டது என்பது உங்களுக்குத் தெரியாது. சமூக, தார்மிக முன்னேற்றத்தை அளவு கோலாகக் கொண்டுதான் அரசியல் தொண்டை நிர்ணயிக்க வேண்டும் என்று எனக்குத் தோன்று கிறது. ஜனநாயகத்தில் அரசியல் தொடர்பு இல்லாத அம்சம் வாழ்க்கையில் எதுவுமே இல்லை. பிரிட்டிஷ் ஆட்சியின் கீழ்

நீங்கள் அரசியலிலிருந்து தப்ப முடியாது. அது வாழ்க்கை முழுவதையுமே ஆக்கிரமித்துக்கொண்டிருக்கிறது. இந்தியாவில் மூச்சு விடுவோர் ஒவ்வொருவரும் ஒரு வரி கொடுத்துத் தீர வேண்டும். இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சியின் லட்சணம் அது தான். உதாரணமாக, உப்பு வரியை எடுத்துக்கொள்ளுங்கள். அது ஒவ்வொருவரையும் பாதிக்கிறது. இந்தியக் கிராமங்களில் உள்ள கோடிக்கணக்கான மக்கள் சம்பந்தப்பட்ட வரையில், நிலவரி கலெக்டரும் போலீஸ்காரரும்தான் பிரிட்டிஷ் ஆட்சியின் அறிகுறிகளாக இருந்து வருகிறார்கள். எனினும், மக்கள் கொள்ளையடிக்கப்பட்டு வருகையில், அதை யாரும் மௌனமாகப் பார்த்துக்கொண்டு உட்கார்ந்திருக்க முடியாது."

"அப்படியானால் உங்கள் வேலை ஒரு காலத்திலும் முடிவடையாது" என்றார் அந்த நண்பர்.

அதற்குப் பதிலாக காந்திஜி கூறியதாவது: "என் மரணத்தின் போதுதான் அது முடிவடையும். நான் உண்மையான ஒரு சமூக சீர்திருத்தக்காரனாக இருந்தால், ஆட்சி அதிகாரத்தில் இருப்பது அந்நிய அரசாங்கமாயினும், சுதேச அரசாங்கமாயினும், நான் கண்காணிப்புடன் இருந்து வரவேண்டும். இது எல்லோருக்கும் பொருந்தும்."

—'ஹரிஜன்' - 6—10—1946

## 7

## 'அரசியலிலிருந்து விலகுவீர்களா?'

**கேள்வி:** *1947 ஆகஸ்டு மாதம் 15-ஆம் தேதி இந்தியா விடுதலை பெற்ற பின், அரசியலிலிருந்து நீங்கள் விலகி விடுவீர்களா?*

**பதில்:** முதலாவதாக, கோடிக் கணக்கான மக்களின் வாழ்க்கை தான் எனது அரசியலாகும். எனவே, அதிலிருந்து என்னை விடுவித்துக்கொள்ள நான் துணியமாட்டேன். அவ்விதம் விடுதலை பெற முயற்சிப்பது, என் ஆயுட்கால லட்சியத்தையும் கடவுளையும் மறுப்பதாகும். எனினும், அந்தத் தேதிக்குப் பிறகு எனது அரசியல் அலுவல்கள் வேறு பாதையில் செல்லுவது சாத்தியமே. அது சந்தர்ப்பங்களால் நிர்ணயிக்கப்படும்.

—'ஹரிஜன்' - 17—8—1947

# 8

# எனது ராஜகுரு

பெங்களூரில் *1915*-ஆம் ஆண்டு மே மாதம் கோபால கிருஷ்ண கோகலேயின் உருவப்படத்தை காந்திஜி திறந்து வைத்தபோது பேசியதன் சாரம் பின் வருமாறு :

*இந்த வைபவத்தை நடத்தி வைக்குமுன் நான் உங்களுக்கு ஒன்று கூற விரும்புகிறேன். இந்த மாபெரும் வைபவத்தில் எனக்கு நீங்கள் ஒரு பெரிய சந்தர்ப்பத்தையும் பாக்கியத்தையும் அளித்திருக்கிறீர்கள். இன்று யாருடைய உருவப் படத்தைத் திறந்து வைக்கும்படி நீங்கள் கேட்டுக்கொண்டிருக்கிறீர்களோ, அவரை அரசியல் துறையில் எனது குரு என்று நான் முன்பே பிரகடனம் செய்திருக்கிறேன். அவர் எனக்கு ராஜகுரு ஆவார். 1896-இல் அவ்விதம் நான் பிரகடனம் செய்தேன். அவ்விதம் செய்ததைக் குறித்து நான் பின்னர் ஒருபோதும் வருந்தவே இல்லை.*

*தனது நாட்டின் மீது பக்தி இருப்பதாகக் கூறும் ஒவ்வோர் இந்தியரும் காணும் கனவு இந்தியாவைப்பற்றி பெருமையடித்துக் கொள்ளுவதாக இருக்கக் கூடாது; தேசத்தின் அரசியல் வாழ்க்கையையும், தேசத்தின் அரசியல் ஸ்தாபனங்களையும் தெய்விக மணம் கமழும்படி செய்வதாக இருக்கவேண்டும். எனது வாழ்க்கைக்கு அவர்தான் உத்வேகம் அளித்தார், இன்னும் அளித்து வருகிறார். அதன் பலனாகவே நான் என்னைத் தூய்மைப்படுத்திக் கொள்ளவும், ஆன்மிகச் சிறப்பை அடையவும் விரும்புகிறேன். அந்த லட்சியத்தைக் குறித்தே என்னை நான் அர்ப்பணம் செய்து கொண்டிருக்கிறேன். நான் அம்முயற்சியில் தோல்வி அடைந்துவிடலாம். எந்த அளவுக்கு நான் தோல்வி அடைகிறேனோ, அந்த அளவுக்கு நான் எனது குருவுக்குத் தகுந்த சீடன் அல்ல என்றே கூறுவேன். ஒருவரது அரசியல் வாழ்க்கை, அவரது சொந்த வாழ்க்கையின் எதிரொலியாகவே இருக்க வேண்டும். அவ்விரண்டிற்கும் எத்தகைய வேறுபாடும் இருக்க முடியாது.*

*அந்த தெய்விக அரசியல்வாதியின் ஆயுட்காலம் முடியும் வரையில் அவரது பக்கத்திலேயே நான் இருந்தேன். 'நான்' என்ற அகந்தையே அவரிடத்தில் இல்லை. உங்களிடத்தில் அத்தகைய அகந்தை இல்லையா என்று உங்களைக் கேட்கிறேன். அவர் தாம் சிறந்து விளங்கவேண்டும் என்று விரும்பினார் எனில், தமது நாட்டின் அரசியல் துறையில் தாம் ஒளியுடன் விளங்கவேண்டும் என்று அவர் விரும்பினார் எனில், தாம் பொது மக்களின் கர கோஷத்தைப் பெறவேண்டும் என்பதற்காக அல்ல, தமது நாடு நலன் பெறவேண்டும் என்பதற்காகவே அவ்விதம் விரும்பினார்.*

உலகத்தில் தாம் புகழ் பெறுவதற்காக அல்ல, தமது நாடு நலன் அடைய வேண்டும் என்பதற்காகவே ஒவ்வொரு குறிப்பிட்ட துறையிலும் தமக்குள்ள திறமையை அவர் அபிவிருத்தி செய்து கொண்டார். பொதுமக்களின் புகழுரைகளை அவர் நாடவில்லை. ஆனால், பொது மக்களே தமது புகழுரைகளை அவர் மீது சொரிந்தனர். தமது தேசம் சிறந்து விளங்க வேண்டும் என்று அவர் விரும்பினார். எல்லோருக்கும் உத்வேகத்தையும் உற்சாகத்தையும் அளிக்கக்கூடிய அந்த அம்சம் அவரிடம் இருந்தது. எனவே, நீங்கள் கேட்டுக்கொண்டதற்கிணங்க, கோகலேயின் உருவப் படத்தை இங்கே நான் மனப்பூர்வமாகத் திறந்து வைக்கிறேன்.

(ஜி. ஏ. நடேசன் கம்பெனியாரால் பிரசுரிக்கப்பட்ட 'மகாத்மா காந்தியின் பிரசங்கங்களும் கட்டுரைகளும்' என்ற நூலிலிருந்து எடுக்கப்பட்டது.)

# 9

# எனது அரசியல்

**கேள்வி :** இந்தியாவில் இப்போது நீங்கள் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்? அரசியல் தலைமைப் பதவியையும், அரசியலையும் தாங்கள் விட்டுவிட்டீர்களா?

**பதில் :** தற்போது நான் ஆனந்தமாக ஓய்வெடுத்துக் கொண்டிருக்கிறேன். அதற்கு நான் முற்றிலும் உரியவனே. அதே சமயத்தில், அகில இந்திய நூற்போர் சங்கத்தின் வேலை முறையையும் அபிவிருத்தி செய்துகொண்டிருக்கிறேன். தற்போது என் கவனத்தையெல்லாம் கவர்ந்துள்ள ஒரே அகில இந்திய அலுவல் திட்டம் அதுதான். நான் காங்கிரஸ் அக்கிராசனராக இருந்த இந்த வருடம் முடிவடைந்ததோடு, சம்பிரதாயப்படி எனது அரசியல் தலைமைப் பதவி முடிந்துவிட்டது. ஆனால் உண்மையில், நான் சிறைப்பட்ட போதே எனது தலைமைப் பதவி முடிந்துவிட்டது. நான் கொண்டுள்ள அர்த்தத்தின்படி நான் அரசியலை விட்டுவிடவில்லை. ஆனால் நான், எக்காலத்திலும், வேறு எந்த அர்த்தத்திலும் ஓர் அரசியல் வாதியாக இருந்ததில்லை. எனது அரசியல் உள் வளர்ச்சியையே முக்கியமாகக் கொண்டிருக்கிறது. எனினும், அது சர்வ வியாபகமான இயல்பு உடையது. எனவே, அது மிகவும் பலன் தரத்தக்கமுறையில் வெளி வளர்ச்சிக்கும் காரணமாக இருக்கிறது.

—'எங் இந்தியா' - 25—2—1926

# 10

# எல்லாம் கடவுளுக்காக

ஓர் அன்பார்ந்த தமிழ் நண்பர், எனது மௌன தினத் தன்று நான் வாசிப்பதற்காக சில மேற்கோள்களை அனுப்பி யுள்ளார். அதை வாசிப்பது ஆன்மாவுக்கு மிகுந்த பலன் அளிப் பதாக இருக்கிறது. ஏதாவது தொடர்போ அல்லது சந்தர்ப்பப் பொருத்தமோ இருந்தாலொழிய 'எங் இந்தியா' வில் நான் மேற் கோள்களைப் பிரசுரிப்பதில்லை. இந்த நண்பர் அனுப்பியுள்ள தொகுதியில் ஜார்ஜ் ஹர்பர்ட் எழுதியுள்ள மிகவும் பொருத்த மான பின்கண்ட கவிதையும் அடங்கியிருக்கிறது:

''என் மன்னரும் கடவுளுமான தாங்கள், எல்லாவற்றிலும் தங்களையே காண எனக்குக் கற்பியுங்கள். நான் எதைச் செய்தாலும் தங்களுக்காகவே செய்வதாக இருக்க வேண்டும். இந்த விதியைக்கொண்ட ஓர் ஊழியனுக்கு அடிமைத்தனம்கூட தெய்வத்தன்மை பொருந்தியதாகி விடுகிறது. தங்க ளுடைய சட்டங்களுக்கு உட்படுவதாக எண்ணி யார் ஓர் அறையைப் பெருக்கி சுத்தம் செய்கிறானோ, அவனது அந்தச் செயலும், அந்த அறையும் புனிதமாகின்றன.''

இதைப் போன்ற மற்றொரு பொருத்தமான மேற்கோளையும் கீழே கொடுக்கிறேன். அது ரஸ்கின் எழுதியவற்றிலிருந்து எடுக் கப்பட்டது:

''நாம் எதை நிர்மாணித்தாலும், அத்தகைய ஒரு பணி நமது சந்ததிகள் நமக்கு நன்றி செலுத்தக் கூடியதாக இருக்கவேண்டும். கற்களை ஒன்றன்மீது ஒன்றாக நாம் அடுக்கும்போது, நமது கைகள் அவற்றில்பட்டதால் அவை புனிதமானவை என்று கருதப்படும் காலம் வரும். பிற்காலத்தில் அவற்றை நிமிர்ந்து பார்ப்போர், 'என்ன ஆச்சரியம் பாருங்கள்! நமக்காக நமது மூதாதையர் இதை நிர்மாணித்துள்ளனர்' என்று வியந்து கூறுவார்கள்.''

நமக்காக இல்லாமல் சந்ததிகளுக்காக, மன்னர்களுக்கெல் லாம் மன்னரான கடவுளின் பெயரால் நாம் ஒவ்வொன்றையும் செய்வோமாயின், பொதுவாழ்க்கை இப்போது இருப்ப தைக் காட்டிலும் அதிகத் தூய்மையானதாக இருக்கும்.

—'எங் இந்தியா' – 11—11—1926

# 11

# புதிய சரித்திரத்தை உருவாக்க வேண்டும்

அமெரிக்காவிலிருந்து ஓர் அன்பர் கேட்ட சில கேள்வி களுக்கு, சிறிது காலத்திற்கு முன் நான் பதில் அளித்தேன். அவர்

இப்போது விடாப்பிடியாக மீண்டும் பல கேள்விகள் கேட்டுள்ளார். அவரது முதல் கேள்வி பின்வருமாறு:

"நீங்கள் நேசிக்கும் சாதனங்களை, தைரியமும் அஞ்சாமையும் வாய்ந்த மனத்தினால் காப்பாற்ற முடியாவிடில், அதனால் என்ன நன்மை? இறப்பதற்கு நீங்கள் பயப்படாமல் இருக்கலாம். எனினும், நீங்கள் இறுதிவரையில் சாத்விகமாக இருப்பீர்களாயின், நீங்கள் அரிய பொக்கிஷம்போல் கருதும் சாதனத்தை உங்களிடமிருந்து ஒரு கொள்ளைக் கூட்டத்தினர் எடுத்துக்கொண்டு போய்விடாமல் தடுப்பது எப்படி? ஒரு கொள்ளைக்காரனின் கையில் சிக்குவோர் பலாத்காரமான எதிர்ப்பை மேற்கொள்ளாவிடில், அத்தகையோரிடமிருந்து கொள்ளையடித்துச் செல்வது கொள்ளைக்காரர்களுக்கு மிகவும் எளிதாகிவிடும். கொள்ளை எப்போதும் நடந்துகொண்டுதான் வருகிறது. கொள்ளை கொடுக்கும் அப்பாவிகள் எளிதில் கிடைக்கும் வரையில், இனியும் உலகில் கொள்ளை நடந்துகொண்டுதான் வரும். எதிர்த்தாலும் எதிர்க்காவிட்டாலும், பலம் வாய்ந்தவர்கள் மெலிந்தவர்களைக் கொள்ளையடிக்கத்தான் செய்வார்கள். எனவே, பலவீனமாக இருப்பது ஒரு பாவமே. எவ்விதத்திலும், இந்த பலவீனத்தை ஒழிக்க ஆயத்தம் செய்யாமல் இருப்பது ஒரு குற்றமாகும்."

எதிர்த்துத் தாக்குதல் எப்போதுமே வெற்றிபெறுது என்பதை, கடிதம் எழுதியுள்ள அன்பர் மறந்துவிடுகிறார். கொள்ளைக்காரன் அதிக பலம் உள்ளவனாக இருந்தால், பாதுகாப்பாளரை தோல்வியுறச் செய்யலாம். துரதிருஷ்டசாலியான அப்பாவியின் எதிர்ப்பினால் ஆத்திரமடைந்து அவர் மீது கொள்ளைக்காரன் தனது ஆவேசத்தைப் பிரயோகிக்கலாம். அதன் காரணமாக அவரது நிலைமை மேற்கொண்டும் மோசமாகிவிடக்கூடும். தமது பராமரிப்பில் இருப்பவரின் சார்பில் தம்மால் இயன்றதையெல்லாம் செய்ததாக பாதுகாப்பாளர் திருப்தியடையலாம் என்பது உண்மையே. சாத்விகக் கொள்கையுள்ள பாதுகாப்பாளருக்கும் அதே திருப்தி ஏற்படலாம் அல்லவா? துன்பத்திற்குள்ளானவரை விடுவிக்கும் முயற்சியில் சாத்விக எதிர்ப்பாளரும் இறந்துவிடலாம். இன்னும் என்னவெனில், தமது வேண்டுகோளால் கொள்ளைக்காரனின் கல் நெஞ்சம் கரையும்படி செய்ய நாம் முயற்சித்தோம் என்ற திருப்தியும் அவருக்கு ஏற்படும். சாத்விகப் பாதுகாப்பாளர் திக்கற்றவராகவும் செயலற்றவராகவும் கொள்ளையைப் பார்த்துக் கொண்டிருப்பார் என்று கடிதம் எழுதிய அன்பர் எண்ணிக் கொள்ளுவதுதான் அவரது சங்கடத்திற்குக் காரணமாகும். உண்மையில், எனது திட்டப்படி மிருக பலத்தைக் காட்டிலும் அன்புதான் அதிக தீவிரமானது, அதிக சக்தி வாய்ந்தது. அன்பு இல்லாமல் செயலற்றிருப்பவன்தான் கோழையாவான். அவன் மனிதனும் அல்ல, மிருகமும் அல்ல. பாதுகாப்பு அளிப்பதற்கு தான் தகுதியற்றவன் என்பதையும் அவன் நிரூபிக்கிறான்.

எதிராளியின் மீது சாத்விக எதிர்ப்பிற்கு உள்ள மகத்தான சக்தியை நான் உணர்ந்திருப்பதுபோல் இந்த அன்பர் உணர்ந்-

திருக்க முடியாது. சாத்விக எதிர்ப்பு என்பது, ஒருவருடைய மனோபலத்தை மற்றொருவருடைய மனோபலம் எதிர்ப்பதேயாகும். மிருக பலத்தில் உள்ள நம்பிக்கையிலிருந்து விடுதலை பெற்றால் மாத்திரமே, சாத்விக எதிர்ப்பு சாத்தியமாகும். மிருக பலத்தில் நம்பிக்கை வைப்பது, அந்த பலம் தீர்ந்ததும் சரண் அடைந்து விடும் தன்மையைக் குறிக்கிறது. நெஞ்சுறுதியுள்ள ஒரு பெண், தன்னைக் கற்பழிக்க முற்படுவோன் எவ்வளவு பலம் வாய்ந்தவனாக இருந்தாலும் சரி, அவனை வெற்றிகரமாக எதிர்த்து நிற்க முடியும் என்பதை இந்த அன்பர் அறிவாரா?

பலம் வாய்ந்தவர்கள் பலவீனர்களைக் கொள்ளையடிப்பார்கள் என்பதையும், பலவீனமாக இருப்பது பாவம் என்பதையும் நான் ஒப்புக்கொள்ளுகிறேன். எனினும், இது மனிதனின் ஆன்மாவைப் பற்றிக் குறிப்பிடுகிறதேயொழிய, உடலைப்பற்றி அல்ல. உடலைப் பற்றி அவ்விதம் கூறப்படுமாயின், பலவீனம் என்ற பாவத்திலிருந்து நாம் எக்காலத்திலும் விடுதலை பெறமுடியாது. ஆனால், ஆன்மாவின் பலத்தை எதிர்த்து உலகம் முழுவதும் போர்க்கோலம் பூண்டு எழுந்தால் கூட, ஆன்ம பலம் அதற்கு சவால் விடுக்க முடியும். உடல் மிக மிக பலவீனமாக இருப்பவர்களுக்குக் கூட அத்தகைய ஆன்ம பலம் இருக்க முடியும். நெஞ்சுறுதி இல்லாத ஒரு ஜூலு,* பூதத்தைப் போல் உடல் பலம் உள்ளவராக இருந்தாலும், வெள்ளையரின் ஒரு சிறிய குழந்தையிடம் அஞ்சி அடி பணிந்து விடுகிறார். உடல் பலம் வாய்ந்த துஷ்டர்கள், மெலிந்த அவர்களுடைய தாய்மாரிடம் பயந்து கொண்டிருப்பதை யார்தான் பார்க்கவில்லை? மகனிடம் உள்ள மிருக பலத்தை அன்பு வென்றுவிடுகிறது. மகனுக்கும் தாயாருக்கும் இடையே நிலவும் இந்த நியதி, உலகம் முழுவதற்கும் பொருந்தும் அல்லவா? அன்பு பரஸ்பரம் இருக்க வேண்டும் என்ற அவசியமில்லை. பல தாய்மார்கள், தவறு செய்யும் அடங்காப் பிடாரிகளான குழந்தைகளைத் தங்களுடைய அன்பினால் சாதுவாகும்படி செய்திருக்கிறார்கள். அன்பு காட்டுவதில் போட்டி இருப்பது சமூகத்தின் சீரிய நிலைக்கு உகந்தது. மிருக பலத்தை உபயோகிப்பதில் சக்தி பெற்று விளங்குவதற்காக உலகம் பல யுகங்களாக முயற்சி செய்து வந்திருக்கிறது; அதில் பரிதாபகரமாக தோல்வியும் அடைந்திருக்கிறது. மிருக பலத்தைச் சிருஷ்டிப்பதில் போட்டி போடுவது, மனித வர்க்கம் தற்கொலை செய்து கொள்ளுவதாகும்.

கடிதம் எழுதியிருப்பவர் மேலும் கூறுவதாவது:

"உங்களுக்கு எவ்வளவு ஆன்ம சக்தி இருக்கிறதோ அவ்வளவு ஆன்ம சக்தி பிரிட்டிஷ் ஆட்சியாளர்களிடமும் இருக்கிறது என்றே தோன்றுகிறது. ஆனால், அவர்களிடம் ராணுவ பலமும், அதைத் தவிர மனித இயல்பைப் பற்றிய அனுபவ பூர்வமான அறிவும் இருக்கின்றன. அவற்றின் பலன் என்ன என்பது தெளிவாகத் தெரிந்த விஷயமாகும்."

---

* தென்னாப்பிரிக்காவில் உள்ள சுதேசிகளில் ஒரு பிரிவைச் சேர்ந்தவர்.

ராணுவ பலம், ஆன்ம பலத்திற்கு முரண்பாடானது. கொடுமை, பலவீனர்களைச் சுரண்டுதல், ஒழுங்கீனமான லாபங்கள், உடல் சம்பந்தமான இன்பங்களை அனுபவிப்பதில் தீராத ஆசை முதலியன ஆன்ம பலத்திற்கு முற்றிலும் முரணானவை. எனவே, பிரிட்டிஷ் ஆட்சியாளர்களின் ஆன்ம பலம் முற்றிலும் தூக்கத்தில் ஆழ்ந்துவிடவில்லை எனில், அது அவர்களுடைய மிருக பலத்திற்கு உட்பட்டதாகவே இருக்கிறது.

அன்பர் அடுத்தபடியாக, என்றென்றும் இருந்துவரும் ஒரு புதிரை எடுத்துக் கூறியுள்ளார்:

"உலகத்தில் பேராசை பிடித்த சில நபர்கள் இருக்கிறார்கள். அவர்கள் தான் விஷமம் செய்து வருகிறார்கள். அவர்களின் கையில் அதிகாரம் இருக்கிறது. அவர்கள் பைத்திய வெறி பிடித்தவர்களாக இருக்கலாம். இருந்தாலும் அவர்கள் மிகுந்த பாதகத்தை விளைவித்து வருகிறார்கள். எனவே, நாம் கையைக் கட்டிக்கொண்டு பேசாமல் நிற்பதும், அவர்கள் தங்களுடைய பைசாச வேலைகளைச் செய்துகொண்டு போகவிடுவதும் சரியல்ல. சாத்விகத்திற்கு ஆபத்து வருவதாக இருந்தால்கூட, நாம் அவர்களிடமிருந்து அதிகாரத்தைக் கைப்பற்றிக்கொண்டு விடவேண்டும். ஏனெனில், அவர்கள் மேற்கொண்டு தீங்கு செய்யாமல் இருக்கவேண்டும் அல்லவா?"

மிருக பலத்தை உபயோகித்து பேராசைக்காரர்களை விரட்டியவர்கள் உண்டு. அவர்கள் நேர்மையான நோக்கத்துடனேயே அவ்விதம் செய்தார்கள் என்பதில் சந்தேகமில்லை. எனினும், வெற்றிபெற்ற அவர்களே பின்னர் பேராசை நோய்க்கு இலக்காகி விட்டார்கள் என்பதைச் சரித்திரம் நமக்குக் கற்பிக்கின்றது.

அடிமைகளை விரட்டும் கொடியவர்களாக இருப்பதைக் காட்டிலும் அடிமைகளாகவே இருப்பது சிறந்ததாயின், கொடியவர்கள் அவர்கள் விருப்பப்படி எது வேண்டுமாயினும் செய்துகொள்ளட்டும் என்று நாம் இருந்துவிடுவது எளிதாகும். அவர்களுடன், மனித இயல்புக்கே தகுதியற்ற மிருகத்தனமான போட்டிப் போராட்டத்தில் ஈடுபடுவதை நாம் தவிர்க்கவேண்டும்; ஏழைகளைச் சுரண்டும் பேராசைக்காரர்கள் முதலியோரின் மிருக பலத்தை ஆன்ம பலத்தினால் எதிர்ப்பதற்கான சாத்தியக் கூறுகளை ஆராய முயற்சிக்கவேண்டும்.

ஆனால் கடிதம் எழுதியுள்ள அன்பர், அப்பரிசோதனையில் ஆரம்பத்திலேயே பின் வரும் சங்கடத்திற்கு உள்ளாகிறார்:

"மகாத்மாஜி, உங்களுடைய சித்தாந்தத்தை இந்திய மக்கள் பின்பற்றவில்லை என்பதை நீங்கள் ஒப்புக்கொள்ளுகிறீர்கள். அதற்குக் காரணம் என்ன என்பதை நீங்கள் உணர்ந்துகொண்டதாகத் தெரியவில்லை. உண்மை என்னவெனில், உலகில் உள்ள ஒவ்வொரு சராசரி நபரும் ஒரு மகாத்மா அல்ல. இந்த உண்மையை, சந்தேகத்திற்கு இடமின்றி சரித்திரம் நிரூபிக்கிறது. இந்தியாவிலும் மற்றவிடங்களிலும் விதிவிலக்காக ஒரு சில மகாத்மாக்கள்

இருக்கிறார்கள். இதிலிருந்தே எல்லோரும் மகாத்மாக்களாக இருக்கமுடியாது என்பது தெரிகிறது. நீங்கள் உங்களுடைய நடவடிக்கைகளுக்கு அந்த விதி விலக்குகளை அடிப்படையாகக் கொண்டுவிடக்கூடாது.''

நம்மை நாமே எப்படி ஏமாற்றிக் கொள்ளுகிறோம் என்பது விசித்திரமாக இருக்கிறது. அழியக்கூடிய இந்த உடலை ஜயிக்க முடியாது என்று நாம் கற்பனை செய்து கொள்ளுகிறோம். மறைந்து கிடக்கும் ஆன்ம சக்திகளை வெளிப்படுத்துவது சாத்திய மற்ற காரியம் என்றும் நாம் எண்ணுகிறோம். ஆனால், அந்த சக்திகளில் ஏதாவது என்னிடம் இருக்கிறதா என்பதைக் காட்ட நான் முயற்சித்து வருகிறேன். நம்மில் எவரையும்போல் நானும் பலவீனமான, இறக்கவேண்டிய ஒரு மனிதனே. என்னிடம் ஒரு காலத்திலும் விசேஷ சக்தி எதுவும் இருந்ததில்லை. இன்றும் எனக்கு அத்தகைய சக்தி எதுவும் இல்லை. நான் ஓர் எளிய மனிதனே. மற்ற சக மனிதரைப்போல் நானும் தவறும் இயல்புள்ள எளிய மனிதனே. எனினும், எனது தவறுகளை ஒப்புக்கொண்டு அவற்றிலிருந்து பின்வாங்குவதற்குப் போதிய பணிவு என்னிடத்தில் இருக்கிறது. கடவுளிடத்திலும், அவரது மகத்துவத்திலும் எனக்குள்ள அசைக்க முடியாத நம்பிக்கையையும், சத்தியம், அன்பு இவற்றில் எனக்குள்ள சிதைக்கமுடியாத பேரார்வத்தையும் நான் ஒப்புக்கொள்ளுகிறேன். எனினும், ஒவ்வொருவரிடத்திலும் அத்தகைய நம்பிக்கையும், பேரார்வமும் மறைந்து கிடக்கின்றன அல்லவா?

நாம் முன்னேற்றம் அடைய வேண்டுமானால், சரித்திர சம்பவங்கள் திரும்பத் திரும்ப நேரும்படி நாம் செய்யக்கூடாது; ஆனால் புதிய சரித்திரத்தையே உருவாக்க வேண்டும். நமது மூதாதையர் விட்டுச் சென்றுள்ள சொத்துக்களை நாம் பெருக்கிக் கொள்ளவேண்டும். பிரத்தியட்ச உலகில் புதிய அற்புதங்களையும் புதிய யுக்திகளையும் நாம் கண்டுபிடிக்கலாம் எனில், ஆன்மிக உலகிலும் எத்தனையோ அற்புதங்களை நாம் கண்டுபிடிக்கமுடியும். அவ்விதம் செய்ய முயற்சிக்காமல், ஆன்மிக உலகில் நமக்குள்ள அறிவு சூன்யம்தான் என்று பிரகடனம் செய்யவேண்டுமா? விதி விலக்குகளைப் பெருக்கி எல்லோருமே அதை அனுசரிக்கும்படி செய்வது அசாத்தியமான காரியமா? மனிதன் முதலில் மிருகமாகவும், அடுத்தபடியாகத்தான் மனிதனாகவும் இருக்க வேண்டுமா?

'எங் இந்தியா – 6—5—1926

## 12

# புத்த சந்நியாசிகளும் அரசியலும்

ரங்கூனில் உள்ள பிரபல சுவேதகான் ஆலயத்தில் நடந்த ஒரு கூட்டத்திற்கு ஏராளமான பூங்கிகளும் (பர்மிய சந்நியாசிகள்) சாதாரண மக்களும் விஜயம் செய்திருந்தனர். அப்போது காந்திஜி பேசியதன் சாரமாவது:

"தெய்விகமான இந்த இடத்தில் ஏராளமான சந்நியாசிகளும், மாபெரும் மக்கள் கூட்டமும் கூடியிருப்பது மனத்திற்கு மிகுந்த உற்சாகமளிக்கும் காட்சியாகும். உலகத்தில் மற்ற இடங்களில் உள்ள குருக்கள்மாரைப் போல் நீங்களும் மக்களால் துருவி மதிப்பிடப்பட்டு வருகிறீர்கள் என்பதை பூங்கிகளான நண்பர்களுக்கு நான் கூற விரும்புகிறேன். பர்மாவில் அரசியல் போராட்டத்தை மேற்கொண்டிருப்பதன் மூலம், நீங்கள் மகத்தான ஒரு பொறுப்பை ஏற்றுக் கொண்டிருக்கிறீர்கள். அரசியல் விஷயங்களில் மானிட வர்க்கத்திற்கு உதவியாக சமய குருக்கள்மார் ஒருபோதும் தலையிடுவதில்லை என்பதையே சரித்திரம் காட்டுகிறது. நியாய அநியாய உணர்ச்சியற்ற நபர்கள், இழிவான பேராசை காரணமாக அரசியலில் பங்கு எடுத்துக் கொள்ளுவது போலவே, பெரும்பாலும் உலகத்தில் உள்ள சமய குருக்கள்மாரும் அரசியலில் பங்கு எடுத்துக் கொண்டு வந்திருக்கிறார்கள்.

"உலகத்தில் உள்ள அழகான நாடுகளில் பர்மாவும் ஒன்றாகும். அப்படிப்பட்ட இந்த நாட்டில் பூங்கிகளான நீங்கள் இப்போது அரசியல் இயக்கத்தை நடத்த விரும்பினால், நீங்கள் மகத்தான பொறுப்பை வகிக்கவேண்டும். நீங்கள் சந்தேகத்திற்கு இடமின்றி தூய்மையாக இருக்கவேண்டும். இது மாத்திரமல்ல, களங்கமற்ற தூய்மையுடன், நீங்கள் மிகுந்த விவேகத்துடனும் மிகத் திறமையுடனும்கூட நடந்துகொள்ள வேண்டுமென உங்களை நான் கேட்டுக்கொள்ளுகிறேன். மிகவும் முக்கியமான இந்த நிபந்தனை பூர்த்தியாகிவிட்டால், பர்மா முழுவதும் உங்களுடைய கட்டளையை சிரமேற்கொண்டு உங்களைப் பின்பற்றுவதை நீங்கள் காண்பீர்கள். மகான் புத்தரின் நிழலில் இப்போது நாம் கூடியிருக்கிறோம். இந்த இயக்கத்தில் கலந்து கொண்டுள்ள ஒவ்வொருவரையும் புத்தர் பிரானின் ஆன்மா நடத்திச் செல்லுமாக."

'எங் இந்தியா' – 28—3 –1929

# 13

# அரசியலில் சமயத்தின் ஆக்கிரமிப்பு

டில்லி மாகாண காங்கிரஸ் கமிட்டித் தலைவரான ஆசப் அலி சாகிப் பின்வருமாறு எழுதுகிறார் :

"இக்கடிதத்துடன் இணைக்கப்பட்டுள்ள புகார், முதலில் டில்லி மாகாண காங்கிரஸ் கமிட்டியின் முன்னிலையில் கொண்டுவரப்பட்டது. அதை எழுதியவரை இப்போது இரண்டு பேர் ஆதரித்திருக்கிறார்கள். அவரை நான் நன்கு அறிவேன். அவர் உண்மையான, விருப்பு வெறுப்பற்ற ஒரு தேசீயவாதி. அவரது வார்த்தையை நான் நம்புகிறேன்.

"ராஷ்டிரீய சுயம் சேவா சங்கத்தைப் பற்றியும், அதன் நடவடிக்கை களைப் பற்றியும் நான் கேள்விப்பட்டிருக்கிறேன். அது ஒரு வகுப்புவாத ஸ்தாபனம் என்பதையும் நான் அறிவேன். புகார் செய்யப்பட்டுள்ள அவர் களது கோஷங்களும், பிரசங்கங்களும் முதல் தடவையாக என் பார்வைக்கு வந்தன. அவற்றை உங்களுக்கு அறிவிப்பதைத் தவிர, அவற்றை எதிர்த்துச் சமாளிப்பதற்கான முறைகள் எவையும் பற்றி நான் சிந்திக்கமுடியவில்லை. ஒருவேளை இவ்விஷயமாக 'ஹரிஜனி'ல் நீங்கள் ஏதாவது குறிப்பிடலாம்."

மேற்கண்ட கடிதத்துடன் இணைக்கப்பட்டுள்ள புகார் உருது மொழியில் இருக்கிறது. ஆசப் அலியின் கடிதத்தில் குறிப்பிடப் பட்டுள்ள ஸ்தாபனத்தில் 3000 உறுப்பினர்கள் இருக்கின்றனர். அவர்கள் எல்லோரும் தினந்தோறும் தடிகளுடன் சிலம்பப் பயிற்சி செய்து வருகிறார்கள். பிறகு அவர்கள், 'ஹிந்துஸ்தான் ஹிந்துக்களுக்குச் சொந்தமேயன்றி, வேறு யாருக்கும் சொந்த மல்ல' என்று கோஷம் செய்கிறார்கள். அதன் பின்னர் கூட்டம் நடைபெறுகிறது. கூட்டத்தில் பிரசங்கிகள், 'முதலில் ஆங்கிலேயர் களை விரட்டுவோம், பிறகு நாம் முஸ்லிம்களை அடக்குவோம்; அவர்கள் கீழ்ப்படியாவிடில் அவர்களைக் கொல்லுவோம்' என்று கூறுகிறார்கள். அத்தகைய கோஷம் தவறாகும்; பிரசங்கிகள் அவ்விதம் பேசுவது இன்னும் அதிக மோசமான தவறாகும். அந்த கோஷத்திற்கு ஸ்தாபனத்தின் ஆதரவு இராதென்றும், மேற்கண்ட விதம் பேசுவோர் பொறுப்புள்ள நபர்கள் அல்லவென்றும் நம்பு கிறேன்.

மேலே குறிப்பிட்ட கோஷம் தவறும், நகைக்கத்தக்கது மாகும். ஹிந்துஸ்தான், இந்தியாவில் பிறந்து வளர்ந்த எல்லோ ருக்கும், வேறு தேசத்தின் ஆதரவு எதுவும் இல்லாதவர்களுக்கும் சொந்தமாகும். எனவே ஹிந்துக்களைப்போல் பார்சிகள், இந்திய கிறிஸ்தவர்கள், முஸ்லிம்கள், மற்றுமுள்ள ஹிந்து அல்லாதவர்கள் எல்லோருக்கும் இந்நாடு சொந்தமே. சுதந்திர இந்தியா, ஹிந்து ராஜ்யமாக இராது; இந்தியர்களின் ராஜ்யமாகவே இருக்கும். பெரும்பாலோரான எந்த சமயப் பிரிவினரையோ அல்லது சமூகத்தினரையோ அந்த ராஜ்யம் அடிப்படையாகக் கொண்டிராது; சமய வேற்றுமை எதுவுமின்றி சகல பொதுமக்க ளுடையவும் பிரதிநிதிகளை அடிப்படையாகக் கொண்டே இருக்கும். பல பிரிவினரும் அடங்கிய பெரும்பான்மையோருக்கு முன்னிலையில் ஹிந்துக்கள் சிறுபான்மையோராகவும் இருக்க நேர லாம். அவர்களுடைய தொண்டையும் தகுதிகளையும் முக்கிய மாகக் கொண்டே அவர்கள் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். மதம் சொந்த விஷயமாகும். அரசியலில் அதற்கு இடம் இருக்கக் கூடாது. அந்நியர் ஆதிக்கம் காரணமாக இந்த நாட்டில் இயற் கைக்கு முரணான நிலைமை இருந்தபோது, மதங்களை முக்கிய மாகக் கொண்டு இயற்கைக்கு விரோதமான பிளவுகளும் இருந் தன. அந்நிய ஆதிக்கம் போய்விட்டால், போலிக் கொள்கை களையும் போலி கோஷங்களையும் பற்றிக்கொண்டிருக்கும் நமது மடத்தனத்தைக் குறித்து நாமே நகைப்போம்.

அந்தப் புகாரில் குறிப்பிடப்பட்டுள்ள பிரசங்கமானது நிச்சயமாக ஆபாசமானது. ஆங்கிலேயர்களை 'வெளியே விரட்டுவது' என்ற பேச்சிற்கே இடமில்லை. அவர்களைக் காட்டிலும் மேலான பலாத்காரத்தைக் கைக்கொண்டாலன்றி, அவர்களை விரட்ட முடியாது. முஸ்லிம்கள் அடங்கியிராவிடில் அவர்களைக் கொல்லுவதென்ற கொள்கை, பண்டைய நாட்களில் நியாயமாக இருந்திருக்கலாம். இன்று அதற்கு அர்த்தமே இல்லை. ஆங்கிலேயர்களுக்குப் பதிலாக இங்கே ஹிந்துக்களுடைய ஆதிக்கமோ அல்லது வேறு யாருடைய ஆதிக்கமோ ஏற்படுவதாயின், ஆங்கிலேயர்களை விரட்டவேண்டும் என்ற கூக்குரலுக்கு அர்த்தமே இல்லை. அத்தகைய ஆதிக்கம் ஏற்படுவது சுயராஜ்யமே இல்லை. சுயாட்சி என்பது, சுதந்திரமான, அறிவுள்ள மக்களின் விருப்பத்தை முக்கியமாகக் கொண்ட அரசாங்கமேயாகும். 'அறிவுள்ள மக்களின்' என்று நான் குறிப்பிட்டிருப்பதற்குக் காரணம் என்னவெனில், இந்தியா பெரிதும் அகிம்சைக் கொள்கையையே மேற்கொண்டிருக்கும் என்பது எனது நம்பிக்கை. அகிம்சையை அடிப்படையாகக் கொண்ட சமூகத்தைச் சேர்ந்தவர்கள் யாவருக்கும், தாங்களே சிந்திக்கவும், செயலில் ஈடுபடவும் ஆற்றல் ஏற்படும்படியான முறையில் கல்வி அளிக்க வேண்டும். ஒரு கயிற்றை நூறு பேர் சேர்ந்து ஒரே புறமாக இழுக்கும்போது அவர்களுடைய எண்ணமும் செயலும் ஒன்றாக இருக்கும் அல்லவா? அதுபோலவே, அகிம்சையை அடிப்படையாகக் கொண்டவர்களின் எண்ணமும் செயலும் ஒரேவிதமாக இருக்கவேண்டும். ஏனெனில், அவர்களுடைய பொதுவான லட்சியமும், அவர்கள் அடையக்கூடிய பொதுவான பலனும் ஒரே விதமாக இருக்கும் அல்லவா?

சுயம் சேவா சங்க நிர்வாகிகள் மேற்கண்ட புகாரை விசாரித்து, அவசியமான பரிகார முறைகளைக் கைக்கொள்ளுவார்கள் என்று நம்புகிறேன்.

—'ஹரிஜன்' – 9—8—1942

# 14

# சட்டமறுப்புக்கு ஆட்சேபணை

யாரோ ஓர் ஆங்கில நண்பர் அவரது நாட்டிலிருந்து எனக்குத் தந்தி கொடுக்கவேண்டியது அவசியமென எண்ணி, ஒரு தந்தி அனுப்பியுள்ளார். சட்டமறுப்பு இயக்கத்தை நான் ஆரம்பித்ததன் மூலம் ஏசுநாதரின் உபதேசங்களுக்கு விரோதமாக நான் நடந்துகொண்டு விட்டதாக அவர் தந்தியில் குறிப்பிட்டுள்ளார். எனது செய்கை, 'சீசருக்குச் சொந்தமானதை சீசரிடம்

கொடுத்துவிடு' என்ற ஏசுநாதரின் உபதேசத்திற்கு முரணுக இருக்கிறதாம். இந்திய கிறிஸ்தவரான மற்ருெரு நண்பரும் பஞ்சாபிலிருந்து அதே தோரணையில் எனக்குக் கடிதம் எழுதியுள்ளார். எனது செய்கைக்காக இந்த நண்பர் சிறிதும் இரக்கமின்றி என் தலையில் வசைமாரி அபிஷேகம் செய்துள்ளார். என்னை நல்ல மனிதன் என்று ஏற்கனவே அவர் எண்ணிவந்ததாகவும், இப்போது அவருக்கு அந்த மயக்கம் முற்றிலும் தீர்ந்துவிட்டதாகவும் அவர் கூறுகிருர். நான் சம்பந்தப்பட்ட வரையில் சட்டமறுப்பு ஒரு புதிய விஷயம் அல்ல என்று இந்த நண்பருக்கு நான் உறுதி கூறமுடியும். 1906–ஆம் ஆண்டிலேயே நான் சட்டமறுப்பை உபதேசிக்கவும், செயலில் காட்டவும் ஆரம்பித்தேன். இப்போது அவர் என்னை வெறுப்பது புத்திசாலித்தனமாயின், ஏற்கனவே அவர் என் மீது மதிப்பு வைத்திருந்தது அறியாமையாகும். எனினும், பைபிளில் புதிய ஏற்பாட்டிலிருந்தும் மற்ற நூல்களிலிருந்தும் நான் கற்றுக்கொண்டிருப்பது என்னவெனில், ஒருவர் கடவுளுக்குப் பயந்து நடக்க விரும்பினுல், அவர் பொது மக்களின் போற்றுதலையோ அல்லது தூற்றுதலையோ பொருட்படுத்தக் கூடாது என்பதே.

இப்போது விஷயத்துக்கு வருவோம். எனது நடத்தை முற்றிலும் சர்வ மத சம்மந்தமானது என்பதே எனது அபிப்பிராயமாகும். புதிய ஏற்பாட்டிலும்* எனக்கு மிகுந்த மதிப்பு உண்டு. எனவே, ஏசுநாதரின் உபதேசத்திற்கு முரணுக நான் நடந்து வருகிறேன் என்று யாரும் கூறுவதை நான் விரும்பவில்லை. பைபிளில் உள்ள இந்த வாக்கியத்தை இதற்கு முன்னரும் எனக்கு எதிராக மேற்கோள் காட்டியிருக்கிருர்கள். அந்த வாக்கியத்திற்கு அவர்கள் கூறும் பொருள் வேறு, நான் காணும் பொருள் வேறு. ஏசுநாதர், தம்மை அவர்களுடைய வலையில் சிக்கவைக்க விரும்பியவர்களின் நேரடியான கேள்விக்கே அவ்விதம் தந்திரமாக பதில் அளித்தார். அந்தக் கேள்விக்கு பதில் அளிக்க அவர் கடமைப்பட்டிருக்கவில்லை. எனவே, வரி கொடுக்க வேண்டிய நாணயங்களைப் பார்க்கும்படி அவர் அவர்களைக் கேட்டார். பின்னர் அவர் ஏளனமாகப் பின்வருமாறு கூறினுர்; 'சீசரின் நாணயங்களைக் கொண்டு வியாபாரம் செய்து, சீசரின் ஆட்சியால் லாபம் அடைவதாகக் கருதும் நீங்கள் வரிகளைச் செலுத்த எப்படி மறுக்கமுடியும்?' எனவே, ஏசுநாதரின் உபதேசமும் செயல்முறையும் சந்தேகத்திற்கு இடமின்றி அவரது ஒத்துழையாமையையே காட்டுகின்றன. அவரது ஒத்துழையாமையில் வரிமறுப்பும் அடங்கியிருக்கிறது. கடவுளின் அதிகாரத்திற்குப் புறம்பான மனிதனின் அதிகாரத்தை அவர் ஒருபோதும் அங்கீகரிக்கவில்லை. அக்காலத்தில் சமய குருக்கள்மார், மன்னர்களைக் காட்டிலும் உயர்ந்தவர்களாகத் திகழ்ந்தார்கள். அப்படி

* பைபிள் நூல் 'பழைய ஏற்பாடு' என்றும் 'புதிய ஏற்பாடு' என்றும் இரண்டு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது.

யிருந்தும் ஏசுநாதர், சமய குருக்கள்மாரின் கூட்டத்தையே லட்சியம் செய்யவில்லை. அவசியம் ஏற்பட்டிருந்தால், அவர் வல்லமை வாய்ந்த சக்கரவர்த்திகளைக் கூடத் துச்சமாக மதிக்கத் தயங்கியிருக்கமாட்டார். அவர்மீது நடந்த போலி வழக்கு விசாரணை நாடகத்தை அவர் வெறுத்து, அதை சட்டை செய்ய வில்லை அல்லவா? எனவே, வாக்கியங்களின் உட்கருத்தை விட்டு விட்டு, சொற்களை மாத்திரம் வியாக்கியானம் செய்ய முற்பட வேண்டாமென நேர்மையுள்ள நண்பர்களை நான் எச்சரிக்கை செய்கிறேன்.

'எங் இந்தியா' - 27—3—1930

# 15

# மதத்திற்கு பாதுகாப்பு தேவையில்லை

சில நண்பர்கள் அடங்கிய ஒரு கோஷ்டியினர் காந்திஜி யைப் பார்க்க வந்தபோது பின்வருமாறு ஒரு கேள்வி கேட்டனர்:

"சுதந்திர இந்தியாவில், மத மாற்ற உரிமைக்கு சட்ட பூர்வ மாக உத்தரவாதம் அளிக்கப்படுமா? அவ்விதம் அளிக்கப்படும் என்று தாங்கள் உறுதி கூற முடியுமா?"

இந்தக் கேள்விக்குப் பதிலாக காந்திஜி கூறியதாவது: "சுதந்திரக் கொள்கையில் உங்களுக்கு உண்மையாகவே நம்பிக்கை உண்டா? அல்லது பிரதிபலனை உத்தேசித்து மாத்திரமே நீங்கள் சுதந்திரக் கொள்கையை ஆதரிக்கிறீர்களா? பின்னால் கூறப்பட்டது உங்களுடைய நிலையாக இருக்குமாயின், சுதந்திரத்திலோ அல்லது சமயத்திலோ உங்களுக்கு நம்பிக்கை யில்லை என்றுதான் நான் கூறுவேன். ஒருவரது உள்ளத்தில் சத்தியம் நிறைந்திருக்குமாயின், சத்தியத்தின் குரலை யாரால் அமுக்கிவைக்க முடியும்? சத்தியத்திற்கு சாட்சியாக உள்ளே உத்வேகத் தீ இல்லாவிடில், சட்ட பூர்வமான உத்தரவாதத்தி னால் என்ன பலன் ஏற்பட முடியும்?"

"சத்தியத்தின் குரலை யாரும் அமுக்க முடியாது என்பது உண்மைதான். எனினும். அதை அமுக்க யாதொரு முயற்சியும் செய்யப்பட மாட்டாது என்று நீங்கள் உத்தரவாதம் அளிக்க வேண்டும் என விரும்புகிறோம்" என்று அவர்களில் ஒருவர் இடை மறித்துக் கூறினார்.

அதற்கு காந்திஜி கூறியதாவது: "நான் அவ்விதம் உத்தர வாதம் அளிக்க முடியாது. ஏனெனில், எனக்கு அதிகாரம் இல்லை. உலகாயதமான அதிகாரம் அதன் ஆன்மாவை இழந்து விடாமல் பாதுகாப்பதே சமயத்தின் கடமையாகும். பாது

காப்பிற்காக சமயம் அந்த அதிகாரத்தை நம்பிக்கொண்டிருக்கவில்லை. இதற்கு உதாரணமாக, கடவுளின் ஊழியரான டேனியலை எடுத்துக் கொள்ளுங்கள். அவர் கதவைத் தாளிட்டுக்கொண்டு பிரார்த்தனை செய்வது வழக்கம். ஆனால், தன்னைத் தவிர வேறு கடவுளையோ அல்லது மனிதனையோ வழிபடக்கூடாது என்றும், வழிபட்டால் தண்டனைக்கு உள்ளாகவேண்டியிருக்கும் என்றும் டேரியஸ் மன்னர் தடையுத்தரவு பிறப்பித்து ஒரு பிரகடனத்தை வெளியிட்டார். அதைக் கேட்டதும் டேனியல் பகிரங்கமாகக் கடவுளைப் பிரார்த்தனை செய்ய ஆரம்பித்தார்; தாம் பிரார்த்தனை செய்வதை எல்லோரும் பார்க்கக் கூடியவாறு தமது அறையின் ஜன்னல்களை யெல்லாம் திறந்து வைத்துக்கொண்டார். அதற்காக அவரை, பசியுள்ள சிங்கத்தின் கூண்டில் தள்ளிவிட்டார்கள். எனினும், அவர் எவ்வித ஆபத்துமின்றி வெளியே வந்துவிட்டார். அதன் பலனாக, மன்னர் முதலில் விடுத்த 'மாற்ற முடியாத' பிரகடனத்தை ரத்து செய்தார்! 'டேனியல்தான் உயிருள்ள கடவுள். அவர் முன்னிலையில் மனிதர் நடுங்கவேண்டும்' என்று மற்றொரு பிரகடனம் விடுத்தார்! எனவே, டேரியஸ் மன்னரின் ஆட்சியிலும், சைரஸ் மன்னரின் ஆட்சியிலும் டேனியல் சுபிட்சமாகவும் சௌக்கியமாகவும் இருந்தார். அதுதான் உண்மையான மதமாற்ற வழியாகும். மதமாற்றத்திற்கு சட்ட பூர்வமாகவோ, அவ்விதம் அல்லாமலோ யாதொரு உத்தரவாதமும் தேவையில்லை. நமது காலத்திய சரித்திர நிகழ்ச்சி ஒன்றையும் எடுத்துக்கொள்ளுவோம். லார்டு சாலிஸ்பரி அதிகாரத்தில் இருந்தபோது பாதிரிமார் அடங்கிய ஒரு தூதுகோஷ்டியினர், சீனாவில் மதமாற்ற அலுவல்களில் ஈடுபடும் விஷயமாக அவரைப் பேட்டி கண்டார்கள். பாதிரிமார் தங்களுடைய லட்சியத்தை நிறைவேற்றுவதற்கு பிரிட்டிஷ் துப்பாக்கிகளின் உதவியை நாடுவார்களாயின், அவர்கள் மட்ட ரகமானவர்களாக இருக்க வேண்டும் என்று லார்டு சாலிஸ்பரி அவர்களுக்குப் பதில் அளித்தார். எனவே, சாலிஸ்பரியின் அந்த வார்த்தைகள் உங்களுக்கு நினைவில் இருக்கட்டும்."

—'ஹரிஜன்' - 28—4—1946

# 16

# சமயப் பற்றுள்ள அரசாங்கம் கூடாது

சாதி, சமயம், வர்ணம் முதலிய எவ்வித வேற்றுமையுமின்றி எல்லோரும் சுதந்திரத்துடனும், சம அந்தஸ்துடனும் விளங்க வேண்டும். அவ்விதம் சமத்துவம் இல்லாத சுதந்திரத்தை காங்கிரஸ் ஏற்றெடுத்தும் பார்க்காது. மற்றொரு விதமாகக்

* லார்டு ராபர்ட் ஆர்தர் சாலிஸ்பரி (1830—1903) பதினைந்து ஆண்டுகள் பிரிட்டிஷ் பிரதம மந்திரியாக இருந்தவர். பிரிட்டிஷ் வெளிநாட்டு மந்திரியாகவும் இருந்து உலகப் புகழ் பெற்றவர்.

கூறுவதாயின், காங்கிரசோ அல்லது காங்கிரசின் பிரதிநிதியான அரசாங்கமோ கலப்பற்ற ஜனநாயகமாகவும், பொதுமக்களின் ஸ்தாபனமாகவும் திகழவேண்டும். அதில் ஒவ்வொரு தனி நபரும் அரசாங்கத்தின் தலையீடு எதுவுமின்றி, தமது மனத்திற்குச் சிறந்தது என்று தோன்றும் ஒரு சமயத்தைப் பின்பற்ற உரிமை பெற்றிருக்கவேண்டும். மனிதனுக்கும் மனிதனுக்கும் இடையே பொதுவான விஷயங்கள் எத்தனையோ இருக்கின்றன. அப்படியிருக்க, சமயத்தை ஆதாரமாகக் கொண்டு அவர்களுக்கிடையே சச்சரவு இருக்கவேண்டிய அவசியமே இல்லை. எனினும், அவ்வித சச்சரவு இருந்துவருவது விந்தையாகவே இருக்கிறது. ஒரே விதமான வழக்கத்தைப் பின்பற்றும்படி மற்றவர்களை வற்புறுத்தும் சித்தாந்தத்தை, பெயரளவில் மாத்திரமே சமயம் என்று கூற வேண்டும். மதம், அந்தப் பெயருக்குத் தகுதியாக இருக்க வேண்டுமாயின், எவ்வித வற்புறுத்தலையும் அனுமதிக்காது. நிர்ப்பந்தம் காரணமாக ஏற்படும் எதனுடைய வாழ்வும் அற்பாயுளாகவே இருக்கும். நாம் நான்கு அணா செலுத்தி காங்கிரஸ் உறுப்பினராக இருந்தாலும் இராவிட்டாலும், நம்மிடையே இணையற்ற ஒரு ஸ்தாபனமான காங்கிரஸ் இருப்பது நாம் பெருமை அடையவேண்டிய விஷயமாகும். இந்தியாவில் சமயப் பற்றுள்ள ஓர் அரசாங்கம் ஏற்படுவதை காங்கிரஸ் வெறுக்கிறது; அது உருவகப்படுத்த விரும்பும் அரசாங்கமானது சமயச் சார்பற்றதாகவும் ஜனநாயக முறையை அடிப்படையாகக் கொண்டதாகவும் இருக்கவேண்டும் என்று காங்கிரஸ் எப்போதும் நம்பிவருகிறது; அந்த நம்பிக்கையை நடைமுறையிலும் அனுசரித்து வருகிறது. அரசாங்கத்தின் வெவ்வேறு பகுதியினரிடையும் பூரணமான அந்நியோன்னியம் நிலவி வரவேண்டும் என்பதும் காங்கிரசின் விருப்பமாகும்.

—'ஹரிஜன்' - 23—11—1947

# 17

## தேச பக்தியும் சமயமும்

தேச பக்திக்கும் சமயத்திற்கும் இடையே தேச பக்திதான் சிறந்தது என்று ஓர் அபிப்பிராயம் நிலவிவருகிறது. அத்தகைய அபிப்பிராயத்தில் எனக்கும் பங்கு உண்டா என்று ஒரு நண்பர் அன்றொரு நாள் என்னைக் கேட்டார். அவ்விரண்டும் வெவ்வேறானவை என்றும், எனவே அவ்விரண்டையும் ஒப்பிட்டுப் பார்ப்பது முடியாத காரியம் என்றும் நான் அவரிடம் கூறினேன். ஒவ்வொன்றும் அதனதன் ஸ்தானத்தில் முக்கியமானதே. சமயப் பற்றும் தேசபக்தியும் உள்ள ஒருவர், அவற்றில் ஒன்றுக்காக மற்றொன்றை விட்டுவிட முடியாது. அவருக்கு இரண்டும் அருமையானவையே. அவர் சீசருக்குக் கொடுக்கவேண்டியதை

சீசருக்கும், கடவுளுக்குக் கொடுக்கவேண்டியதைக் கடவுளுக்கும் கொடுக்கிறுர்.

ஒரு குடும்ப உதாரணத்தை எடுத்துக்கொள்ளுங்கள். எனக்கு தாயாரும், மனைவியும், மகளும் இருக்கிறுர்கள் என்று வைத்துக்கொள்ளுங்கள். அந்த மூவர்மீதும் எனக்கு சமமான அன்பு உண்டு. மூவரும் அவரவர் ஸ்தானத்தில் முக்கியமானவர் களே. எனது மனைவிக்காக தாயாரையும் மகளையும் கைவிட எனக்கு உரிமை உண்டென்று கூறுவது இழிவான தவருகும். அதுபோலவே, தாயாருக்காகவும் மகளுக்காகவும் என் மனைவியை யும் கைவிடத் துணியமாட்டேன். இந்த மூவரில் யாராவது ஒருவர் தனது எல்லையை மீறிச் செல்லுவாராயின், அப்போதுதான் எனக்கு சத்தியாக்கிரகத்தின் உதவி தேவையாக இருக்கிறது. சத்தியாக்கிரகத்தின் மூலம்தான் இந்த மூன்று சக்திகளிடையே யும் சகஜ நிலையை ஏற்படுத்துவது சாத்தியமாகும்.

—'ஹரிஜன்' - 7—12—1947

# 18
# சமயம் ஒரு சொந்த விஷயம்

சமீபத்தில் காந்திஜியைப் பார்க்கவந்த ஒரு பாதிரி நண்பர் பின்வருமாறு ஒரு கேள்வி கேட்டார்: "சுதந்திர இந்தியாவில் பூரணமான மத சுதந்திரம் இருக்குமா? அரசாங்கத்திலிருந்து மதம் தனியாக இருக்குமா?"

**காந்திஜி கூறியதாவது :** "நான் ஒரு சர்வாதிகாரியாக இருந்தால், சமயமும் அரசாங்கமும் வெவ்வேருகவே இருக்கும். எனது சமயத்தில் நான் உறுதியான நம்பிக்கை கொண்டிருப்பேன். அதற்காக நான் உயிரையும் விடுவேன். இருந்தாலும் அது என்னுடைய சொந்த விஷயமாகும். அதற்கும் அரசாங்கத் திற்கும் எவ்வித சம்பந்தமும் இல்லை. உங்களுடைய லௌகிக நலன்கள், ஆரோக்கியம், போக்குவரத்து, வெளி நாடுகளுடன் தொடர்பு, நாணய முறை போன்ற விஷயங் களைத்தான் அரசாங்கம் மேற்பார்வையிடும்; உங்களுடைய சமயத்திலோ அல்லது எனது சமயத்திலோ அரசாங்கம் அக்கறை கொள்ளாது. சமயம், அவரவருடைய சொந்த விஷயமாகும். என் அபிப்பிராயத்தில் சமயம் என்ருல் என்ன என்பதை நீங்கள் அறிந்துகொள்ள விரும்பினல், எனது வாழ்க்கையை நீங்கள் உன்னிப்பாக கவனிக்க வேண்டும். நான் எவ்விதம் வாழ்கிறேன், சாப்பிடுகிறேன், உட்காருகிறேன், பேசுகிறேன், பொதுவாக எவ்வித நம்பிக்கையுடையவனுக இருக்கிறேன் என்பதையெல்லாம்

நீங்கள் கவனிக்கவேண்டும். அவையெல்லாம் எனது சமயத்தையே காட்டுகின்றன.

**கேள்வி:** நாளைய உலகில் மகத்தான செல்வாக்குடன் விளங்கக் கூடிய இயக்கம் எது? பெண்களின் இயக்கமா? அரசியல் இயக்கமா, விஞ்ஞான அல்லது சமய சம்பந்தமான இயக்கமா? இதிலிருந்து ஐம்பது ஆண்டுகளுக்குப் பிறகு உலக விஷயங்களில் அவற்றில் எதனுடைய செல்வாக்கு மிக மிக அதிகமாக இருக்கும்? எது, மானிடவர்க்கத்திற்கு மற்ற எல்லாவற்றையும் காட்டிலும் அதிக நன்மை பயக்கக் கூடியதாக இருக்கும்?

**பதில்:** மற்றவைகளுடன் சமய இயக்கத்தை ஒன்று சேர்ப்பது தவருகும். எல்லாவற்றையும் விட சமய இயக்கமே எதிர்காலத்தில் ஆதிக்கம் பெற்று விளங்கும். இன்றுகூட அது ஆதிக்கம் செலுத்தலாம். ஆனல், அவ்விதம் ஆதிக்கம் செலுத்தவில்லை. அதற்குக் காரணம் என்னவெனில், சனிக்கிழமை அல்லது ஞாயிற்றுக்கிழமைப் பொழுதுபோக்காக சமயம் தாழ்ந்துவிட்டதேயாகும். வாழ்க்கையின் ஒவ்வொரு விநாடியிலும் சமயம் இடம் பெற்றிருக்க வேண்டும். அத்தகைய சமயம் அமலுக்கு வரும்போது, அதன் செல்வாக்குத்தான் முழுவதும் மேலோங்கி நிற்கும்.

—'ஹரிஜன்' – 22—9—1946

# 19

# பொதுஜனத் தொண்டுக்கு வெகுமதி

**கா**ந்திஜி 1915 மே மாதம் பெங்களூருக்கு விஜயம் செய்தபோது, அந்நகர மகாஜனங்கள் அவருக்கு ஓர் உபசாரப் பத்திரம் வாசித்துக் கொடுத்தனர். அதற்குப் பதிலாக காந்திஜி பேசியதாவது:

“வண்டியில் வைத்து என்னை இழுப்பதை நான் விரும்பவில்லை. அவ்விதம் செய்வதில் அர்த்தமில்லை. பொதுத் தொண்டில் ஈடுபட்டுள்ளவர்களை இவ்விதம் வண்டியில் வைத்து இழுத்துக் கெடுத்துவிடாதீர்கள். மௌனமாக வேலை செய்ய அவர்களை விடுங்கள். தொண்டு செய்வோர் இவ்விதமெல்லாம் கௌரவிக்கப்படுவார்கள் என்ற எண்ணத்தை நாம் தூண்டிவிடக் கூடாது. பொதுஜனத் தொண்டர்கள் கல்லால் அடிக்கப்பட்டாலும், அலட்சியம் செய்யப்பட்டாலும் கூட அவர்களுக்கு தேசபக்தி குன்றிவிடக் கூடாது. தொண்டுக்கு வெகுமதி தொண்டு செய்வதுதான்.

" ஒரு தேச இனம் என்ற முறையில் நாம் வெளிப்படையான ஆர்ப்பாட்டக்காரர்கள் என்றும், காரியத்தில் கண்ணுகை இருக்கும் தன்மை நம்மிடையே மிகக் குறைவு என்றும் நம்மீது குற்றம் சாட்டப்பட்டுள்ளது. நாம் அந்தக் குற்றச்சாட்டை ஒப்புக் கொள்ளுகிறோம். நாம் நவீன நடவடிக்கைகளைப் பின்பற்றுவதா அல்லது பல பல அதிர்ச்சிகளையும் தாங்கி வந்துள்ள புராதன நாகரிகத்தைப் பின்பற்றுவதா? நீங்களும் நானும், ஆன்மிக கோணத்திலிருந்து அரசியல் மேடை நடவடிக்கைகளில் ஈடுபட வேண்டியவர்களாக இருக்கிறோம். நாம் அவ்விதம் செய்வோமாயின், நம்மை வெற்றிகொண்டவர்களை நாம் வெற்றிகொள்ள முடியும். ஓர் ஆங்கிலேயரை, நம்மைப்போல் அவரும் ஒரு பிரஜை யென நாம் கருதும் நாள் அப்போதுதான் உதயமாகும். அந்த நாள் சீக்கிரத்தில் வரும் என்றாலும், எப்போது வரும் என்பதைக் கூறுவது கஷ்டமாக இருக்கலாம். ஒழுக்கமும், ஈடுபாடும், பெருந் தன்மையும், செல்வாக்கும் உள்ள ஆங்கிலேயர்களுடன் தொடர்பு கொள்ளும் விசேஷமான சந்தர்ப்பங்கள் எனக்குக் கிடைத்தது உண்டு. எனவே, தற்போதைய நிலை கடந்து, இதைக்காட்டிலும் உயர்ந்ததான ஒரு புதிய நாகரிகம் சீக்கிரத்தில் வந்துகொண்டிருக்கிறதென உங்களுக்கு நான் உறுதி கூற முடியும்.

"இந்தியா பிறரின் ஆதிக்கத்தில் உள்ள ஒரு பெரிய தேசம். மைசூர் பெரியதொரு சுதேச சமஸ்தானம். எனவே, பிரிட்டிஷ் கவர்னர்களுக்கும் பிரிட்டிஷ் ராஜதந்திரிகளுக்கும் நீங்கள் இந்தச் செய்தியை அறிவிக்க முடியும். அந்தச் செய்தி இதுதான்: 'மைசூரில் ஒரு ராமராஜ்யத்தை ஏற்படுத்துங்கள். மக்களின் மதிப்பிற்கும் மரியாதைக்கும் பாத்திரரான ஒரு வசிஷ்டிரை உங்களுடைய மந்திரியாக நியமனம் செய்யுங்கள்.'

"அவ்விதம் செய்தால், உங்களை வெற்றி கொண்ட ஆங்கிலேயர்களுக்கு நீங்கள் நிபந்தனைகள் விதிக்க முடியும்."

## 20

# பொதுவாழ்க்கையில் ஒழுக்கம்

ஒரு பொதுஜனத் தொண்டர், நிர்வாக யந்திரத்தின் ஒரு பகுதி என்ற முறையில் திறமையுடன் வேலை செய்யும் வரையில், அவரது ஒழுக்கத்தைப் பற்றிக் கவனிக்க வேண்டியதில்லை என்ற ஒரு மனப்போக்கு இன்றைய பொது வாழ்க்கையில் இருந்துவருகிறது. ஒவ்வொருவருடைய ஒழுக்கமும் அவரவருடைய சொந்த விஷயம் என்றும் கூறப்படுகிறது. இந்தக் கருத்து பெரிதும் நிலவி வருவதை நான் அறிந்திருக்கிறேன். எனினும், அதை ஒருபோதும் பாராட்ட என்னல் முடியவில்லை. அப்படியிருக்க, அதை நான் ஏற்

றுக் கொள்ளுவது என்பது ஒரு காலத்திலும் முடியாத காரியம். சொந்த ஒழுக்கத்தை ஒரு பெரிய விஷயமாகக் கணக்கில் எடுத்துக் கொள்ளாத ஸ்தாபனங்கள், மோசமான விளைவுகளுக்கு இலக்காகிவிட்டதை நான் அறிந்திருக்கிறேன். எனினும், இந்த சித்தாந்தத்தை நான் உடனடியாக ஹரிஜன் சேவா சங்கம் போன்ற ஸ்தாபனங்களின் விஷயத்தில் மாத்திரமே மேற்கொண்டிருக்கிறேன் என்பதை வாசகர்கள் கவனித்திருக்கலாம். வாயில்லாத கோடிக்கணக்கான மக்களின் நலன்களைப் பாதுகாக்கும் தருமகர்த்தாக்களின் நிலையில் அந்த ஸ்தாபனங்கள் இருந்து வருகின்றன. அத்தகைய தொண்டிற்கு அப்பழுக்கற்ற ஒழுக்கமானது அத்தியாவசியமான தேவை என்பதில் எனக்கு எள்ளளவும் ஐயமில்லை. ஹரிஜனத் தொண்டு, கதர் அல்லது கிராமக் கைத்தொழில்கள் முதலியவற்றில் ஈடுபடும் ஊழியர்கள், சிறிதும் கள்ளம் கபடமற்ற, சாதுக்களான, அறியாமையில் ஆழ்ந்துள்ள ஆடவர்களுடனும் பெண்களுடனும் நெருங்கிப் பழக வேண்டியவர்களாக இருக்கிறார்கள். அறிவில் அந்த ஆடவர்களையும் பெண்களையும் ஒன்றுமறியாத குழந்தைகளுக்கு ஒப்பிடலாம். எனவே, ஊழியர்களுக்கு ஒழுக்கம் இல்லாவிடில், அவர்கள் இறுதியில் நிச்சயமாகத் தோல்வியே அடைவார்கள்; அவர்களை நன்கு அறிந்தவர்கள் அடங்கிய சுற்றுப்புறங்களில் லட்சியத்தையும் நிரந்தரமாகப் பாழாக்கியவர் ஆவார்கள். அத்தகைய சம்பவங்களைப் பற்றிய அனுபவத்திலிருந்தே இதை நான் எழுதுகிறேன். எனினும், அத் தொண்டுகளில் ஈடுபட்டுள்ளவர்களின் தொகையைப் பார்க்கும்போது, அதிருஷ்டவசமாக அத்தகைய சம்பவங்கள் மிகவும் குறைவுதான். என்றாலும், அவ்விதத் தொண்டுகளில் ஈடுபட்டுள்ள ஸ்தாபனங்களையும் ஊழியர்களையும் ஜாக்கிரதையாக இருக்கும்படி பகிரங்கமாக எச்சரிக்க வேண்டிய அளவுக்கு அவை அடிக்கடி நிகழ்கின்றன. எனவே அவர்கள் மிகவும் கண்காணிப்புடனும், மிகவும் கண்டிப்பாகவும் இருக்கவேண்டியது அவசியமாகும்.

—'ஹரிஜன்' – 27—11—1936

## 21

# சமூகத்தைச் சீர்திருத்துவது எப்படி?

உயர்தரக் கல்வியில் தேர்ச்சி பெற்ற ஒரு நீக்ரோ பிரமுகர், தென்னாப்பிரிக்காவிலிருந்து காந்திஜியைப் பார்ப்பதற்காக வந்திருந்தார். அவர் காந்திஜியைப் பின் வருமாறு ஒரு கேள்வி கேட்டார்: 'இன்றைய உண்மையான பிரச்னைகளுக்கும் சுயத் தூய்மை நடவடிக்கைகளுக்கும் இடையே உள்ள தொடர்பின் தன்மை எத்தகையது? சுயத் தூய்மை நடவடிக்கைகளை மேற்கொள்ளுவது எப்படி?'

காந்திஜி: அதற்கு முதல் படி என்னவெனில், ஆராய்ச்சி தீபத்தை உட்புறமாகத் திருப்பிக் கொண்டு, உங்களுடைய குற்றம் குறைகளை உங்களிடமும் உலகத்தினிடமும் நீங்கள் பகிரங்கமாகப் பறைசாற்ற வேண்டும். உங்களுடைய பலவீனத்தை மறைத்துக் கொள்ளுவதையும், உங்களிடம் இல்லாத பலத்தை இருப்பது போல் காட்டிக் கொள்ளுவதையும் காட்டிலும் இழிவான, ஒழுக்கக் கேடான காரியம் வேறு எதுவும் இல்லை. இரண்டாவதாக, பொது வாழ்க்கையைத் தூய்மைப் படுத்த தைரியமாகவும் அஞ்சாநெஞ்சத்துடனும் முன்வர வேண்டும். துரதிருஷ்டவசமாக இன்று ஒருவித நம்பிக்கை நிலவிவருகிறது. அதாவது, ஒருவரது சொந்த ஒழுக்கத்திற்கும் அவரது பொது நடவடிக்கைகளுக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை என்பதே அந்த நம்பிக்கையாகும். மூடத்தனமான இந்த நம்பிக்கை ஒழிய வேண்டும். நமது பொது ஜனத் தொண்டர்கள், முதலில் தங்களைச் சீர்திருத்திக் கொண்டு, பிறகு சமூகத்தைச் சீர்திருத்தும் கடமையை மேற்கொள்ள வேண்டும். சுயத் தூய்மை என்ற இந்த ஆன்மிக ஆயுதம் கண்களுக்குப் புலப்படாதது போல் தோன்றுகிறது. எனினும், ஒருவரது சூழ்நிலையில் புரட்சிகரமான மாறுதலை உண்டாக்குவதற்கும், வெளிப்படையான தடைகளைத் தகர்ப்பதற்கும் அது மிகவும் சக்திவாய்ந்த ஒரு சாதனமாக இருக்கிறது. அது நுணுக்கமாகவும் கண்ணுக்குத் தெரியாமலும் வேலை செய்கிறது. அது ஒரு தீவிர நடவடிக்கையேயாகும். அது பெரிதும் சலிப்பை உண்டாக்கும் நீண்ட கால ஒரு நடவடிக்கை போல் தோன்றலாம். எனினும், விடுதலைக்கு அதுதான் நேரடியான, நிச்சயமான, துரிதமான வழியாகும். எனவே, அவ்விஷயமாக எவ்வளவு முயற்சி செய்தாலும் பெரிதல்ல. அதற்குத் தேவையானது நம்பிக்கைதான். எதிலிருந்தும் அஞ்சிப் பின்வாங்காத, அசைக்க முடியாத, மலைபோன்ற நம்பிக்கைதான் தேவையாகும்.

—'எங் இந்தியா'– 28—3—1929

## 22

# எதிராளியைச் சமாளிப்பது எப்படி?

ஒரு நண்பர் பின்வருமாறு எழுதுகிறார் :

"உங்களைப் பின்பற்றுவோர் ஓர் அரசியல் விவாதத்தில் ஈடுபட வேண்டியிருந்தால், அவர்கள் எவ்விதம் நடந்துகொள்ளுவது? அவர்களுக்கு வழி காட்டியாக நீங்கள் ஏதாவது யோசனை கூறினால், அது மிகவும் உதவியாக இருக்கும். குறிப்பாக, கீழ்க்கண்ட விஷயங்களை யொட்டி உங்களுடைய யோசனைகள் தேவையாக இருக்கின்றன :

(அ) எதிராளியின் மீது பொது மக்களுக்கு உள்ள மதிப்பைக் குறைக்கும் நோக்கத்துடன் அவரைத் தூற்றுவது.

(ஆ) எதிராளியை எவ்விதம் கண்டிப்பது அனுமதிக்கத்தக்கது?

(இ) எதிர்ப்பை நீடிக்க வேண்டிய எல்லை.

(ஈ) பதவியையும் அதிகாரத்தையும் பெற முயற்சி செய்ய வேண்டுமா ?"

என்னைப் பின்பற்றுவோர் இருப்பதாக நான் கூறிக்கொள்ளவில்லையென இந்தப் பத்திரிகையில் நான் முன்பே குறிப்பிட்டிருக்கிறேன். என்னை நான் பின்பற்றி நடப்பதே எனக்குப் போதுமானது. அதுவே எனக்குப் போதிய அளவு சங்கடத்தைக் கொடுக்கக் கூடிய ஒரு விஷயமாகும். எனினும், என்னைப் பின்பற்றி நடப்பதாகக் கூறிக்கொள்ளும் பலர் இருக்கின்றனர் என்பதை நான் அறிவேன். எனவே, அவர்களுக்காக நான் மேற்கண்ட கேள்விகளுக்குப் பதில் அளிக்க வேண்டும். அவர்கள், என்னைப் பின்பற்றுமல் எனது கொள்கைகளைப் பின்பற்றுவார்களாயின், கீழ்க்கண்ட பதில்கள் சத்தியத்தையும் அகிம்சையையும் அடிப்படையாகக் கொண்டவை என்பதை அறிந்துகொள்ளுவார்கள்:

(அ) எதிராளியை ஒரு போதும் தூற்றக்கூடாது. எனினும், அவரது நடவடிக்கைகளைப் பற்றிய உண்மையை எடுத்துக் கூறலாம். ஒருவர் நம்மை எதிர்க்கிருர் என்பதற்காக அவரைக் கெட்ட மனிதர் என்று கூறிவிட முடியாது. நாம் நம்மைப்பற்றிக் கூறிக்கொள்ளுவதைப் போல் அவரும் கௌரவம் வாய்ந்தவராக இருக்கலாம். இருந்தாலும், அவருக்கும் நமக்கும் மூலாதாரமான வேற்றுமைகள் இருக்கக் கூடும்.

(ஆ) எனவே, அவர் பொய் சொல்லும் குற்றத்திற்கு ஆளானுல், அவரது பொய்யை சத்தியத்தினுலும், அவரது மரியாதையின்மையை மரியாதையினுலும், அவரது கொடுமையை அமைதியான தைரியத்தினுலும், அவரது பலாத்காரத்தை துன்பத்தை அனுபவிப்பதன் மூலமும், அவரது இறுமாப்பை பணிவின் மூலமும், அவர் செய்யும் தீமையை நன்மையின் மூலமும் நாம் சமாளிக்கவேண்டும். 'என்னைப் பின்பற்றுவோர்' எதிராளியைக் கண்டிக்க முற்படக்கூடாது; அவரது மனத்தை மாற்றவே முயற்சிக்கவேண்டும்.

(இ) எதிர்ப்பிற்கு எல்லை என்ற பேச்சிற்கே இடமில்லை. நபர்கள் விஷயத்தில் யாதொரு எதிர்ப்பும் இருக்கக் கூடாது. ஒழுக்கத்திற்கோ, தருமத்திற்கோ அல்லது சமூகத்தின் நலனுக்கோ முரணை நடவடிக்கைகளையே எதிர்க்கவேண்டும்.

(ஈ) பதவியையும் அதிகாரத்தையும் தவிர்க்கவேண்டும். எனினும், அவற்றின் மூலம் அதிகத் தொண்டு செய்வதற்கு வாய்ப்பு இருந்தால், அவற்றை ஏற்றுக்கொள்ளலாம்.

—'எங் இந்தியா' – 7—5—1931

# 23

# எல்லாத் தீமைகளுக்கும் அரசாங்கம் காரணமல்ல

ஓர் அன்பர் எழுதிய கடிதத்திற்குப் பதிலாக காந்திஜி கூறியதாவது:

கடிதம் எழுதியுள்ள அன்பரின் வாதத்தில் ஓரளவு உண்மை இருக்கிறது. ஆனால், எல்லாத் தீமைகளுக்கும் அரசாங்கம்தான் காரணம் என்று அவர் கூறுவது முற்றிலும் தவறாகும். மக்களின் யோக்கியதைக்குத் தகுந்தவாறே அவர்களுக்கு அரசாங்கமும் அமைகின்றது என்ற பழமொழியில் மிகுந்த உண்மை இருக்கிறது அல்லவா? இந்திய மக்களை ஏமாற்றி வஞ்சிப்பதும், அடக்கி ஒடுக்குவதும் எளிதாகும். அவ்விதமில்லாவிடில், கிழக்கு இந்தியா கம்பெனியின் பகட்டுகளுக்கும், பலாத்காரத்திற்கும் நாம் அடிபணிந்திருக்க மாட்டோம்; கையால் நூற்பதையோ அல்லது கதரையோ கைவிட்டிருக்கமாட்டோம். ஹிந்துக்களும் முஸ்லிம்களும் சகோதரர்களைப்போல் வாழ்ந்து வந்தால், பிரிட்டிஷ் அதிகாரிகளால் நம்மிடையே பிளவேற்படும்படி செய்திருக்க முடியாது. தீண்டாமை இந்த நாட்டில் இருந்து வருவதற்காக அரசாங்கத்தின் மீது குற்றம் சாட்டுவது அவதூறாகும். ஒருவேளை வைதிகர்கள் புரட்சி செய்வார்கள் என்ற அச்சம் அரசாங்கத்திற்கு இல்லாவிடில், வெகுகாலத்திற்கு முன்பே அதிகாரிகள் தீண்டாமையை ஒழித்துக் கட்டியிருப்பார்கள். அந்தச் சீர்திருத்தத்திற்குத் தடையாக அரசாங்கம் எதுவுமே செய்ததில்லை என்பதை நான் அறிவேன். வைக்கம்* நிகழ்ச்சிக்காக பிரிட்டிஷ் அரசாங்கத்தின் மீது குற்றம் சாட்டுவது தவறாகும். முற்றிலும் சுதேச சமஸ்தான சர்க்காரின் கோழைத்தனம்தான் அதற்குக் காரணம். தற்போதுள்ள அரசாங்க முறையை நான் விரும்பவில்லை. எனினும், எனது ஆத்திரம் காரணமாக விருப்பு வெறுப்பின்றி பாகுபாடு செய்யும் ஆற்றலை நான் இழந்துவிடுவேனாயின், நான் அந்த அரசாங்க முறையை அழிப்பதில் தோல்வி அடைந்துவிடுவேன். 'பிசாசாக இருப்பினும் அதற்குரிய பாகத்தைக் கொடுக்கவேண்டும்' என்ற சிறந்த பழமொழியை நாம் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும்.

---

* திருவாங்கூரைச் சேர்ந்த வைக்கம் என்ற ஊரில் நடந்த தீண்டாதாரின் உரிமைப் போராட்டத்தைப் பற்றியே காந்திஜி மேலே குறிப்பிட்டுள்ளார். அந்தப் போராட்டத்தைப் பற்றிய முழு விவரங்களையும் மகாத்மா காந்தி நூல்கள் 7-ஆவது தொகுப்பு 234 – 272 பக்கங்களிலும், 8–ஆவது தொகுப்பு 413 – 418 பக்கங்களிலும் காணலாம்.

கடிதம் எழுதியுள்ள அன்பரின் தவறுக்குக் காரணம், அரசாங்கத்தின் கடமையைப்பற்றி அவர் தவறான எண்ணம் கொண்டிருப்பதுதான். நமக்காக எல்லாவற்றையும் செய்து முடிக்கும் அரசாங்கம்தான் லட்சிய அரசாங்கம் என்று அவர் எண்ணுவதாகத் தோன்றுகிறது. அத்தகைய அரசாங்கத்தின் கீழ் நமக்கு சிந்திக்கக் கூடத் தேவையில்லை! ஆனால், மக்கள் செய்வதற்கு எதையும் விட்டுவைக்காத அரசாங்கத்திற்கும் சுயாட்சிக்கும் சம்பந்தமில்லை. நம்முடைய பலவீனங்களுக்கெல்லாம் தற்போதைய அரசாங்கம்தான் காரணம் என்று நாம் குற்றம் சாட்டுவோமாயின், நமது பலவீனங்களை நாம் எக்காலத்திலும் உதறித்தள்ள முடியாது.

—'எங் இந்தியா' – 27—8—1925

பகுதி ஒன்பது

# சமயங்களின் சமத்துவம்

## 1

## எல்லா சமயங்களும் உண்மையே

*திருச்சினுப்பள்ளியில் 10-2-1934-ல் நடந்த பொதுக் கூட்டம் ஒன்றில் காந்திஜி பேசியதன் சாரமே கீழே கொடுக்கப் பட்டிருக்கிறது:*

உலகத்தில் இருக்கும் மகத்தான எல்லா சமயங்களிலும் உள்ள மூலாதாரமான உண்மையில் எனக்கு நம்பிக்கை உண்டு. அவையெல்லாம் கடவுளால் கொடுக்கப்பட்டவை என்பதிலும் எனக்கு நம்பிக்கை உண்டு. கடவுளின் அருளால் ஏற்பட்டுள்ள இந்த சமயங்கள் யாவும் மக்களுக்கு அவசியமானவை என்றும் நான் நம்புகிறேன். பல்வேறு சமயங்களேயும் பின்பற்றுவோரின் கோணத்திலிருந்து வெவ்வேறு சமயங்களின் வேத நூல்களேயும் நாம் எல்லோரும் வாசிக்க முற்படவேண்டும். அவ்விதம் வாசித்தால் அடிப்படையில் எல்லா சமயங்களும் ஒன்றுதான் என்பதையும், அவையெல்லாம் ஒன்றுக்கொன்று துணையாக இருக்கின்றன என்பதையும் நாம் கண்டுகொள்ள முடியும் என்பதும் எனது நம்பிக்கையாகும்.

—'ஹரிஜன்' – 16—2—1934

## 2

## எனது விடாமுயற்சி

*காந்திஜி குன்னூருக்கு விஜயம் செய்தபோது அங்குள்ள ஜைனர்கள் அவருக்கு ஓர் உபசாரப் பத்திரம் வாசித்துக் கொடுத்தனர். அதற்குப் பதிலாக காந்திஜி கூறியதாவது:*

உலகத்தில் உள்ள எல்லா சமயங்களும் உண்மை என்பதில் நான் நம்பிக்கையுடையவனுக இருக்கிறேன். உலகத்தில் உள்ள சகல சமயங்களிலும் அடங்கியுள்ள உண்மையை அறிந்துகொள்ள வேண்டும் என்பதே, இளமைப் பருவத்திலிருந்து எனது பணிவான, ஆனுல் விடாப்பிடியான முயற்சியாக இருந்துவருகிறது. அந்த சமயங்களில் நான் காணும் மிகச் சிறந்த அம்சங்களே

எனது சிந்தனையிலும், பேச்சிலும், செயலிலும் கொண்டுவரவேண்டும் என்பதும் எனது விடாமுயற்சியாகும். நான் எனக்கு இருப்பதாகப் பிரகடனம் செய்யும் நம்பிக்கை, அவ்விதம் நடந்து கொள்ள என்னை அனுமதிப்பதுடன், எந்த இடத்திலிருந்தாலும் அதிலுள்ள சிறந்த அம்சங்களைக் கைக்கொள்ளவேண்டியதை எனது கடமையாகவும் செய்திருக்கிறது.

## 3

## பல்வேறு அழகான மலர்கள்

என் சம்பந்தப்பட்டவரையில், பல்வேறு சமயங்களும் ஒரே தோட்டத்தில் உள்ள பல்வேறு அழகான மலர்களேயாகும்; அல்லது அவை கம்பீரமான ஒரே மரத்தின் பல்வேறு கிளைகளே. எனவே, அவையெல்லாம் உண்மையே. அவற்றையொட்டி மனிதர் செய்யும் வியாக்கியானங்களில்தான் குற்றம் குறைகள் இருக்கின்றன. இந்தியாவிலும் மற்ற இடங்களிலும் கையாளப் பட்டு வரும் மத மாற்ற முறையை நான் ஒப்புக்கொள்ளுவது சிறிதும் முடியாத காரியம். அந்த முறை தவறாகும். சமாதானத்தை நாடி உலகம் முன்னேறுவதற்கு அதுதான் பெரிய முட்டுக்கட்டையாக இருக்கிறது. 'போர்க்கோலம் பூண்டுள்ள சமயங்கள்' என்று கூறுவது அபசாரமான ஒரு கூற்றாகும். எனினும், அது இந்தியாவில் உள்ள நிலைமையைப் பற்றிய உண்மையான வர்ணனையே.

சமயங்களுக்கெல்லாம் இந்தியா தாயாக விளங்குகிறது என்பதே எனது நம்பிக்கை. இந்தியா உண்மையிலேயே சமயங்களுக்கெல்லாம் தாயாக இருப்பின், அந்தத் தாய்க்கு இப்போது சோதனைக் காலமாகும். ஒரு கிறிஸ்தவர் ஓர் ஹிந்துவை கிறிஸ்தவ சமயத்திற்கோ அல்லது ஓர் ஹிந்து ஒரு கிறிஸ்தவரை ஹிந்து சமயத்திற்கோ மாற்ற ஏன் விரும்புகிறார்? ஓர் ஹிந்து நல்ல மனிதராகவோ அல்லது தெய்வபக்தி உடையவராகவோ இருப்பதைக்கொண்டு ஒரு கிறிஸ்தவர் ஏன் திருப்தி அடையக்கூடாது? ஒரு மனிதனுடைய ஒழுக்கம் அக்கறை எடுத்துக் கொள்ளவேண்டிய முக்கிய விஷயம் அல்லவெனில், ஒரு சர்ச்சிலோ, ஒரு மசூதியிலோ அல்லது ஒரு கோவிலிலோ கடவுளை வழிபடும் ஒரு குறிப்பிட்ட முறை அர்த்தமற்ற ஒரு வெறும் சடங்கேயாகும். தனி நபர் அல்லது சமூக வளர்ச்சிக்குக் கூட அது ஒரு தடையாக இருக்கலாம். ஒரு குறிப்பிட்ட வழிபாட்டு முறையையோ அல்லது ஒரு தோத்திரத்தைத் திருப்பித் திருப்பிக் கூறவேண்டும் என்பதையோ வற்புறுத்துவது கடுமையான சச்சரவுகளுக்குக் காரணமாகி, ரத்தக்களரியிலும், முற்றிலும்

சமயத்தில் அதாவது கடவுளிடம் நம்பிக்கையின்மையிலும் வந்து முடியலாம்.

—'ஹரிஜன்' – 30—1—1937

# 4

# ஒரு மரத்தின் பல கிளைகள்

அன்றொரு நாள் ஒரு பிரபல முஸ்லிம் என்னைப் பல கேள்விகள் கேட்டார். அந்தக் கேள்விகள் எனக்கு விசித்திரமாகத் தோன்றின. அவர் என்னை அறிவார். என்னை அறிந்து கொண்டுள்ள ஒவ்வொரு முஸ்லிமும் அந்தக் கேள்விகளுக்குப் பதில் அளிக்க முடியும் என நான் எண்ணினேன். அவருக்கும் எனக்கும் நடந்த உரையாடலை இங்கே குறிப்பிட்டுள்ளேன்.

**கேள்வி :** தென்னுப்பிரிக்காவில் நீங்கள் முஸ்லிம்களின் நண்பராகவும், தந்தையாகவும், வழிகாட்டியாகவும் இருந்தீர்கள். இன்றும் நீங்கள் முஸ்லிம்களிடம் அவ்விதமாகவே இருந்து வருகிறீர்களா ?

**பதில் :** தென்னுப்பிரிக்காவில் முஸ்லிம்களுக்கோ அல்லது மற்றெவருக்கோ தந்தையாக இருந்தேன் என்று நான் எக்காலத்திலும் கூறிக்கொண்டதில்லை. எனினும், நிச்சயமாக நான் அவர்களுடைய நண்பனுகவும் வழிகாட்டியாகவும் இருந்தேன். [அவர்களும் மற்றவர்களும் என்னை பாயி (சகோதரர்) என்றே குறிப்பிட்டார்கள் என்பதையும் இச்சந்தர்ப்பத்தில் நான் குறிப்பிடலாம்.] இருபத்துநான்கு ஆண்டுகளுக்கு முன் நான் தென்னுப்பிரிக்காவில் எப்படி இருந்தேனே, முற்றிலும் அதுபோலவேதான் இன்றும் இருக்கிறேன். மற்ற இந்தியர்களைப் போலவே முஸ்லிம்களையும் நான் கூடப்பிறந்த சகோதரர்களாகவே கருதுகிறேன். மற்றவர்களைப்போல் அவர்களும் சமமான உரிமைகளுக்கும் வாய்ப்புகளுக்கும் உரியவர்கள் என்றே நான் கருதுகிறேன்.

**கேள்வி :** உங்களுடைய சொந்த ஹிந்து கலாச்சாரத்தைப் போல் முஸ்லிம்களுடைய கலாச்சாரத்தையும் நீங்கள் பேணி வளர்ப்பீர்களா ?

**பதில் :** நிச்சயமாக அதை நான் பேணி வளர்ப்பேன். நான் வேறுவிதமாக இருக்கவே முடியாது. ஏனெனில், என் சொந்த சமயத்தைப்போல் இஸ்லாமையும் மற்ற பிரபல சமயங்களையும் உண்மையானவை என்றே நான் நம்புகிறேன். இஸ்லாமும், கிறிஸ்தவ சமயமும் இங்கே கொண்டுவந்த கலாச்சாரங்களின் பயனுக இந்தியா அதிகச் சிறப்பை

அடைந்திருக்கிறது. தற்போதைய விரோதங்களை, தாற்காலிகமானவையாகவே நான் கருதுகிறேன்.

**கேள்வி :** நான் ஒளிவு மறைவின்றி பேச விரும்புகிறேன். அக்பர்* கண்ட கனவில் எனக்கு நம்பிக்கையில்லை. எல்லா சமயங்களையும் ஒன்றாக இணைத்து, ஒரு புதிய சமயத்தை அமைக்கவேண்டும் என்பதே அக்பரின் நோக்கமாகும். அது போன்ற நோக்கம் உங்களுக்கு ஏதாவது உண்டா?

**பதில் :** அக்பர் என்ன கனவு கண்டார் என்பதுபற்றி எனக்கு, எதுவும் தெரியாது. சமயங்களை ஐக்கியப்படுத்தவேண்டும் என்ற எத்தகைய நோக்கமும் எனக்கு இல்லை. மானிட வர்க்கத்தின் மலர்ச்சிக்கு ஒவ்வொரு சமயமும் அதனதன் பங்கைச் செய்ய முடியும். உலகத்திலுள்ள சிறந்த சமயங்களை, ஒரு மரத்தின் பல கிளைகளாகவே நான் கருதுகிறேன். அவற்றிற்கு அடிப்படை ஒன்றாயினும், ஒவ்வொன்றும் மற்றொன்றிலிருந்து வேறாக இருக்கிறது.

—'ஹரிஜன்' – 28—1—1939

## 5

# இலைகளும் சமயங்களும்

டில்லியில் ரீடிங் சாலையில் உள்ள நகர சுத்தித் தொழிலாளர் காலனியில் நடந்த பிரார்த்தனைக் கூட்டத்தில் காந்திஜி கூறியதாவது:

பிரார்த்தனைகள் யாவும், எந்த சமயத்தைச் சார்ந்தவையாயினும், எந்த மொழியில் இருந்தாலும் அவையெல்லாம் ஒரே கடவுளைப்பற்றிய தோத்திரமேயாகும். யாவரும் ஒரே குடும்பத்தைச் சேர்ந்தவர்களே என்றும், எல்லோரும் ஒருவர்மீது ஒருவர் அன்பு காட்டவேண்டும் என்றுமே, பிரார்த்தனைகள் மானிட வர்க்கத்திற்குக் கற்பிக்கின்றன. பிரார்த்தனை முடிந்தபின் பாதுஷா கான் கூறியதைப்போல், ஒருவர் தமது சொந்த சமயம் தான் சிறந்தது என்றும், மற்றவையெல்லாம் கீழ்த்தரமானவை என்றும் கருதுவது உண்மையான மதத்திற்கே முரண்பாடானது. எல்லா இடங்களிலும் வியாபித்துள்ள ஒரே கடவுளை வழிபட வேண்டும் என்றே எல்லா சமயங்களும் கட்டளையிடுகின்றன. ஒரு

* சாதி, சமய பேதமின்றி ஒரு தேசீய அரசாங்கத்தை அமைக்கவேண்டுமென அக்பர் கனவு கண்டார். அவ்விதம் செய்து நாட்டில் மக்களிடையே ஐக்கிய மனப்பான்மையை ஏற்படுத்தவேண்டும் என்பதும் அவரது கனவாகும். அதில் அக்பர் ஓரளவு வெற்றியும் பெற்றார். என்றாலும், வெறிபிடித்த ஒளரங்கசீப் பட்டத்திற்கு வந்தபின், அக்பரின் கனவு வீணாகியது. அக்பரால் நிர்மாணிக்கப்பட்ட சிறந்த சாம்ராஜ்யம் வீழ்ச்சி அடைவதற்கும் ஒளரங்கசீப் காரணமாக இருந்தார்.

சிறு தண்ணீர்த் துளியிலும், தூசியின் ஓர் அணுவிலும் கூட கடவுள் இருக்கிறார். கற்சிலைகளை வழிபடுவோர் கூட, சிலை உருவமாக உள்ள கற்களை வழிபடுவதில்லை. அந்தக் கற்களில் உள்ள கடவுளைக் காணவே அவர்கள் முயற்சிக்கிறார்கள். அதுபோலவே, பார்சிகளை நெருப்பை வழிபடுவோர் என்றோ அல்லது சூரியனை வழிபடுவோர் என்றோ கூறுவது அவதூறாகும். டாக்டர் தின்ஷா மேத்தா பாடிய பார்சி கீதம், ஹிந்துக்களின் காயத்ரியைப்போல இருக்கிறது. தூய்மையான கடவுள் வழிபாடு என்பதைத் தவிர அது வேறு எதுவுமில்லை. பல்வேறு சமயங்களும், ஒரு மரத்தின் மீதுள்ள இலைகள் போன்றவையே. அவற்றில் ஓர் இலையைப் போல் மற்றொன்று இருப்பதில்லை. எனினும், அவற்றிற்கிடையே யும், அவை வளர்ந்திருக்கும் கிளைகளுக்கிடையேயும் விரோதம் எதுவும் இல்லை. அதுபோலவே, கடவுளின் சிருஷ்டியில் நாம் காணும் வேறுபாட்டில் அடிப்படையான ஒருமைப்பாடும் இருந்துவருகிறது.

—'ஹரிஜன்' – 26—5—1946

# 6

# உயர்ந்ததுமில்லை, தாழ்ந்ததுமில்லை

ஒரு நாள் காந்திஜியைப் பார்ப்பதற்காக ஸ்ரீ கெய்தான் சென்றிருந்தார். "எல்லா சமயங்களும் உண்மையானவை மாத்திரமல்ல, சமமானவையும் கூட" என்று காந்திஜி கூறியதன் கருத்து என்ன என்பதைத் தெளிவாக அறிந்துகொள்ள வேண்டும் என்பது அவரது விருப்பம். எல்லா சமயங்களும் சம மானவை என்று கூறுவது சாத்திர ரீதியாக சரியல்ல என்பதே அவரது அபிப்பிராயமாகும். எனவே, அவ்விஷயமாக ஸ்ரீ கெய் தான் காந்திஜியைக் கேட்டதாவது:

"சமயங்களை ஒப்பிட்டுப் பேசுவதால் யாதொரு பலனுமில்லை என்றே நான் கூறுவேன். வெவ்வேறு சமயங்களும் வெவ்வேறான வழிகளாகும். இவ்விஷயத்தைப் பல்வேறுவிதமாக நாம் விளக்க முடியும் என்று நீங்கள் எண்ணுகிறீர்களா?"

காந்திஜி: "சமயங்களை ஒப்பிட்டுப் பேசுவது சாத்தியமில் லாத காரியம் என்று நீங்கள் கூறுவது சரியே. எனினும், அதி லிருந்து சமயங்கள் சமமானவை என்றே நாம் ஊகிக்க வேண்டிய தாக இருக்கிறது. எல்லா மனிதர்களும் சுதந்திரமாகவும் சமத்துவ மாகவுமே பிறக்கிறார்கள். எனினும், உடல் பலத்திலும் மனபலத்தி லும் ஒருவர் மற்றொருவரைக் காட்டிலும் உயர்ந்தவராகவோ அல் லது குறைந்தவராகவோ இருக்கிறார். இவ்விருவருக்கும் வெளிப் படையான சமத்துவம் எதுவும் இல்லை. ஆனால், முக்கியமான அம்

சத்தில் இருவருக்கும் சமத்துவம் இருக்கிறது. கடவுளின் முன்னிலையில் எல்லோரும் சமமே. என்னை காந்தி என்றும், உங்களை கெய்தான் என்றும் கடவுள் வேற்றுமை பாராட்டமாட்டார். மகாசக்தி வாய்ந்த இந்த உலகில் நாம் எம்மாத்திரம்? நாம் அணுக்களையும் விடத் தாழ்ந்தவர்கள். அணுக்களுக்குள் எது பெரியது, எது சிறியது என்று கேட்பதில் அர்த்தமில்லை. இயற்கையாகவே நாம் எல்லோரும் சமமானவர்களே. எனினும், குலம், தோலின் நிறம், மனம், உடல், சீதோஷ்ண நிலை, தேச இனம் முதலிய வேற்றுமைகள் எல்லாம் நிலையற்றவை.

"அதுபோலவே, முக்கியமான அடிப்படையில் எல்லா சமயங்களும் சமமானவையே. நீங்கள் குரானை வாசித்தால், ஒரு முஸ்லிமைப்போல் வாசிக்கவேண்டும். நீங்கள் பைபிளை வாசித்தால், ஒரு கிறிஸ்தவரைப்போல் அதை வாசிக்கவேண்டும். நீங்கள் கீதையை வாசித்தால், ஒரு ஹிந்துவைப்போல் வாசிக்கவேண்டும். ஒரு சமயத்தில் உள்ள சில்லறை விவரங்களைத் துருவித் தேடிக் கண்டுபிடித்து, பிறகு அந்த சமயத்தை ஏளனம் செய்வதால் என்ன பலன்?

"பைபிளில் மத்யூ ஆதியாகமம் அல்லது முதலாவது அத்தியாயத்தை எடுத்துக்கொள்ளுங்கள். அதில் ஒரு நீண்ட வம்சாவளியை நாம் வாசிக்கிறோம். கடைசியாக ஒரு கன்னியின் வயிற்றில் ஏசு பிறந்ததாகக் கூறப்படுகிறது. ஏசுவுடன் அந்த வம்சம் முடிந்துவிடுகிறது. இதையெல்லாம் நான் கிறிஸ்தவரின் கோணத்திலிருந்து வாசிக்கவேண்டும்."

**கெய்தான் :** எங்கள் பைபிளில் கூட மோஸஸ் என்றும் ஏசு என்றும் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. ஆனால், அவர்களை நாம் சமமாகவே கருதவேண்டும்.

**காந்திஜி :** எல்லா தீர்க்கதரிசிகளும் சமமானவர்களே. அவர்கள் யாவரும் சமமான பீடத்தில் இருப்பவர்களே. அதனால்தான் எல்லா சமயங்களும் சம நிலையில் உண்மையானவை என்றும், சமநிலையில் குறைகள் உடையவை என்றும் நான் கூறுகிறேன். சமயம் என்ற மரம் ஒரே விதமாகவே இருக்கிறது. கிளைகள் வெளிப்பார்வைக்குத்தான் வெவ்வேறாகத் தோன்றுகின்றன. அவையெல்லாம் வளர்ந்து வருகின்றன. வளர்ச்சி பெற்றுவரும் கிளையைச் சேர்ந்த ஒருவர், 'என்னுடைய கிளை தான் சிறந்தது' என்று பெருமையும் மகிழ்ச்சியும் அடையக் கூடாது. எந்த ஒரு சமயமும் மற்றொரு சமயத்தைக் காட்டிலும் உயர்ந்தது அல்ல, தாழ்வானதும் அல்ல.

—'ஹரிஜன்' 13—3—1937

## 7

# ஒரே சமயம்தான் இருக்கவேண்டுமா?

**கேள்வி :** கடவுள் ஒருவர்தான் எனில், சமயமும் ஒன்றே ஒன்ருகத்தான் இருக்கவேண்டும் அல்லவா?

**பதில் :** இது ஒரு விசித்திரமான கேள்வியாகும். ஒரு மரத்தில் லட்சக்கணக்கான இலைகள் இருக்கின்றன. அதுபோல, கடவுள் ஒருவரேயாயினும் உலகில் எத்தனை ஆடவர்களும் பெண்களும் இருக்கிருர்களோ அத்தனை சமயங்களும் இருக்கின்றன. எனினும், இவற்றிற்கெல்லாம் ஆணிவேராக ஒரே கடவுள்தான் இருக்கிருர். இந்தத் தெளிவான உண்மை அவர்களுடைய கண்களுக்குப் புலப்படுவதில்லை. ஏனெனில், அவர்கள் எல்லோரும் பல்வேறு தீர்க்கதரிசிகளைப் பின்பற்றுவோராக இருக்கிருர்கள். எத்தனை தீர்க்கதரிசிகள் இருக்கின்றனரோ, அத்தனை சமயங்கள் இருக்கின்றன என்றும் அவர்கள் கூறுகிருர்கள். உண்மையில், நான் என்னை ஓர் ஹிந்து என்றே நம்புகிறேன். எனினும், அவர்களில் ஒருவரைப் போலவோ அல்லது எல்லோரையும் போலவோ நான் கடவுளை வழிபடுவதில்லை என்பதை அறிவேன்.

—'ஹரிஜன்' - 16—3—1947

## 8

# எல்லாம் அடங்கிய ஹிந்து சமயம்

எனது ஹிந்து சமயம் ஒரு தனி இனப்பற்று உடையதல்ல. இஸ்லாம், கிறிஸ்தவ, பௌத்த, ஜோரோஷ்டிரிய சமயங்களில் நான் அறிந்த எல்லா சிறந்த அம்சங்களும் ஹிந்து சமயத்தில் அடங்கியிருக்கின்றன. மற்ற விஷயங்களைப்போல் அரசியலையும் நான் சமய உணர்ச்சியுடனேயே அணுகுகிறேன். சத்தியம்தான் எனது சமயமாகும். அதைப் பூரணமாக அறிந்து மேற்கொள்ளுவதற்குரிய ஒரே வழி அகிம்சைதான்.

—'ஹரிஜன்' – 30—4—1938

## 9

# எல்லா தீர்க்கதரிசிகளையும் நம்புகிறேன்

நான் ஜின்னு சாகிபின் அடிமையாகிவிட்டதாகவும், நான் ஒரு ஐந்தாம் படைப் பேர்வழி என்றும் என் மீது குற்றம் சாட்டி எனக்குக் கடிதங்கள் தொடர்ந்து வந்துகொண்டிருக்கின்றன.

அத்தகைய கண்டன மாரிகளைக் கண்டு நான் எள்ளளவும் கலங்க வில்லை. தினந்தோறும் நீங்கள் கேட்கும் கீதையின் சுலோகங் களே எப்போதும் எனக்கு ஆதரவாக இருந்துவருகின்றன. என்னைக் குற்றஞ் சாட்டுவோர் அந்த சுலோகங்களின் அர்த் தத்தை அறிந்துகொள்ளவில்லை என்பது எனது நிச்சயமான அபிப்பிராயமாகும். நான் ஒரு சனாதனி ஹிந்துவாக இருப்பதால் தான், என்னை நான் ஒரு கிறிஸ்தவன் என்றும், ஒரு முஸ்லிம் என்றும், பௌத்த சமயத்தைச் சேர்ந்த ஒருவன் என்றும் கூறிக் கொள்ளுகிறேன். குரானிலிருந்து அராபிய வாக்கியங்களை வாசிக்க எனக்கு உரிமையில்லை என்று சில முஸ்லிம் நண்பர்கள் கருதுகிறார்கள். ஆனால், உண்மையான சமயமானது பாஷைக்கும், வேத நூல்களுக்கும் அப்பாற்பட்டது என்பதை அத்தகையோர் அறிந்துகொள்ளவில்லை. கல்மாவை நான் ஏன் ஓதக்கூடாது? அல்லாவை நான் ஏன் புகழக் கூடாது? முகமது நபியை ஏன் தீர்க்கதரிசி என்று நான் பிரகடனம் செய்யக்கூடாது? ஒவ்வொரு சமயத்தையும் சேர்ந்த மாபெரும் தீர்க்கதரிசிகள், முனிவர்கள் எல்லோரிடமும் எனக்கு நம்பிக்கை உண்டு. என்மீது குற்றஞ் சாட்டுவோரிடம் கோபம் கொள்ளாமல் இருப்பதற்கான சக்தியை எனக்கு அருளும்படியும், அவர்களுக்கு எவ்விதத் தீங்கும் நினைக் காமல் அவர்களுடைய கையினால் இறப்பதற்குக் கூடத் தயாராக இருக்கும்படியான மனபலத்தை எனக்குக் கொடுக்கும்படியும் நான் கடவுளைத் தொடர்ந்து பிரார்த்தித்து வருவேன். ஹிந்து சமயம் எல்லாத் தத்துவங்களும் அடங்கியதாகும். எனது உறுதி யான கொள்கைகளை வழுவின்றி நான் பின்பற்றி வருவேனாயின், நான் ஹிந்து சமயத்திற்கு மாத்திரமல்ல, இஸ்லாமுக்கும் கூடத் தொண்டு புரிந்தவனாவேன்.

—'ஹரிஜன்' - 27—4—1947

## 10

## ஏசுநாதரின் உபதேசங்கள்

இன்று (25-12-1946) ஏசு நாதரின் பிறந்த தினமாதலால் இன்று நடந்த காந்திஜியின் பிரார்த்தனைக் கூட்டத்தில் பைபிள் நூலிலிருந்து சில பகுதிகளை வாசிப்பதே ஒரு விசேஷமாகத் திகழ்ந்தது. அப்போது காந்திஜி கூறியதாவது:

"சகிப்புத்தன்மையில் நான் நம்பிக்கை வைத்துள்ளேன். எல்லா சமயங்களும் ஏற்றத் தாழ்வின்றி சமமானவை என்று நான் கூறுவது சகிப்புத்தன்மையே ஆகும். ஏசுநாதர், கிறிஸ்தவர் களுக்கு மாத்திரமே சொந்தமானவர் என்று கருதப்படலாம். ஆனால், அவர் உண்மையில் எந்தச் சமூகத்திற்கும் சொந்தமான

வர் அல்ல. அவரது உபதேசங்கள் உலகம் முழுவதற்கும் சொந்தமானவையாக இருப்பதே அதற்குக் காரணமாகும்.

—'ஹரிஜன்' - 26—1—1947

## 11

# பக்தியுடன் அணுகவேண்டும்

சர் அப்துல்லா சுஹ்ரவார்தி மொழி பெயர்த்துத் தொகுத்த 'முகமது நபியின் உபதேசங்கள்' என்ற நூலுக்கு காந்திஜி ஒரு முகவுரை எழுதியிருந்தார். அதன் விவரம் பின்வருமாறு:

தீர்க்கதரிசியின் உபதேசங்களைத் தொகுத்து சர் அப்துல்லா சுஹ்ரவார்தி வெளியிட்டுள்ள நூலை நான் மிகுந்த அக்கறையுடன் வாசித்தேன். அதனால் மிகுந்த பலனையும் அடைந்தேன். அது முஸ்லிம்களுக்கு மாத்திரமல்ல, மானிட வர்க்கத்திற்கே சிறந்ததொரு பொக்கிஷமாகும்.

உலகத்தில் உள்ள சிறந்த எல்லா சமயங்களும் உண்மையானவை என்பதில் நான் நம்பிக்கையுள்ளவன். நமது சொந்த சமயத்தைப்போல் மற்ற சமயங்களையும் சகித்துக்கொள்ள நாம் கற்றுக்கொள்ளவேண்டும். அது மாத்திரமல்ல, மற்ற சமயங்களுக்கு மரியாதை காட்டவும் நாம் கற்றுக்கொள்ளவேண்டும். அவ்விதம் நாம் கற்றுக்கொண்டாலன்றி, உலகில் நிரந்தரமான அமைதி ஏற்படுவது முடியாத காரியம். மானிட வர்க்கத்தின் வெவ்வேறு சமய போதகர்களின் உபதேசங்களை பக்தியுடன் நாம் அணுகி ஆராய்ச்சி செய்வதே, சமயங்களிடையே பரஸ்பரம் மதிப்பு ஏற்படுவதற்கான தகுந்த வழியாகும்.

## 12

# எனது உரிமையும் கடமையும்

ஒரு முஸ்லிம் நண்பர் எனக்கு நீண்ட கடிதம் ஒன்று எழுதியுள்ளார். அதன் சாரம் பின்வருமாறு:

"முகமது நபியை கடவுளின் ஒரு தீர்க்கதரிசி என்று நீங்கள் கருதுகிறீர்கள். அவரிடம் நீங்கள் மிகுந்த மதிப்பு வைத்திருக்கிறீர்கள். அவரை நீங்கள் பிரமாதமாகப் புகழ்ந்து பகிரங்கமாகவும் பேசியிருக்கிறீர்கள். நீங்கள் குரானையே ஆராய்ச்சி செய்திருப்பதாக நான் கேள்விப்பட்டிருக்கிறேன்.

அதன் சம்பந்தமான செய்திகளைக்கூட நான் வாசித்திருக்கிறேன். இதெல்லாம் எனக்கு ஒரு புதிர்போல் இருக்கின்றன என்பதை நான் ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். நீங்கள் சத்தியத்திலும் நீதியிலும் பேரார்வமும் உறுதியான பற்றுதலும் கொண்டிருக்கிறீர்கள். ஹிந்து சமயத்தில் உள்ள ஒரு குறையைக்கூட எடுத்துக் காட்ட நீங்கள் ஒருபோதும் தவறியதில்லை. ஹிந்து சமயம் என்ற போர்வையில் ஒளிந்து கொண்டிருக்கும் ஏராளமான ஊழல்களையும் சிறிதும் ஆதாரமற்றவை என்று மறுக்கவும் நீங்கள் தவறியதில்லை. அப்படிப்பட்ட நீங்கள் குரானில் உள்ள எல்லாவற்றையும் யாதொரு ஆட்சேபணையுமின்றி ஒப்புக்கொள்ளுவதை என்னால் நம்ப முடியவில்லை. இஸ்லாமில் உள்ள அநீதியான கட்டளைகள் எதையும் நீங்கள் எக்காலத்திலும் ஆட்சேபித்ததாகவோ அல்லது கண்டித்ததாகவோ எனக்கு ஞாபகமில்லை. நான் 18 அல்லது 20 வயதான இளைஞனாக இருக்கும்போதே, அந்தக் கட்டளைகளில் சில எனக்கு மிகுந்த வெறுப்பை உண்டாக்கின. அதன் பின் இவ்வளவு காலமாகியும் அந்த வெறுப்பு உணர்ச்சி பலம் அடைந்திருக்கிறதேயன்றி குன்றவில்லை.''

இஸ்லாமைப்பற்றி நான் எழுதியுள்ள ஒவ்வொரு வார்த்தையையும் உறுதிப்படுத்துகிறேன். குரானிலோ அல்லது உலகத்தில் உள்ள வேறு எந்த நூலிலோ காணப்படும் ஒவ்வொரு சொல்லையும் நான் அப்படியே நம்புவதாக எந்த இடத்திலும் சொல்லவில்லை. எனினும், மற்ற சமயங்களின் வேத நூல்களைக் கண்டிப்பதோ அல்லது அவற்றில் உள்ள குறைகளைச் சுட்டிக்காட்டுவதோ எனது வேலையல்ல. அவற்றில் இருக்கக் கூடிய உண்மைகளைப் பிரகடனம் செய்து, அவற்றை நடைமுறையில் அனுசரிப்பதே எனது உரிமையாக இருக்கிறது, இருக்கவும் வேண்டும்.

எனவே, குரானிலோ அல்லது முகமது நபியின் வாழ்க்கையிலோ என்னால் அறிந்துகொள்ள முடியாத விஷயங்களை நான் ஆட்சேபிக்கவோ அல்லது கண்டிக்கவோ கூடாது. அவரது வாழ்க்கையில், நான் நன்கு உணர்ந்து பாராட்டக்கூடிய அம்சங்களைப் புகழ்ந்து பாராட்டுவதற்கான ஒவ்வொரு சந்தர்ப்பத்தையும் நான் வரவேற்கிறேன். அதில் புரியாத கஷ்டமான இடங்களை, பயபக்தியுள்ள முஸ்லிம் நண்பர்களின் கோணத்திலிருந்து பார்ப்பதுடன் நான் திருப்தி அடைகிறேன். இஸ்லாமை விளக்கும் பிரபல முஸ்லிம்களின் வியாக்கியானங்களின் உதவியைக் கொண்டும் அவற்றை நான் அறிந்துகொள்ள முயற்சிக்கிறேன். என் சமயமல்லாத மற்ற சமயங்களை நான் அவ்விதம் பயபக்தியுடன் அணுகினால் மாத்திரமே, எல்லா சமயங்களும் சமமானவை என்ற கொள்கையை நான் நன்கு உணர்ந்து அனுசரிக்க முடியும்.

அதே சமயத்தில், ஹிந்து சமயத்தில் உள்ள குறைகளைச் சுட்டிக் காட்டவேண்டியது எனது உரிமையும் கடமையுமாகும். ஹிந்து மதத்தைத் தூய்மைப்படுத்துவதற்காகவும், அது எப்போதும் தூய்மையாக இருக்கும்படி செய்வதற்காகவுமே நான் அதில் உள்ள குறைகளைச் சுட்டிக் காட்டுகிறேன். ஹிந்து

அல்லாத ஒருவர் ஹிந்து சமயத்தைக் கண்டித்து, அதில் உள்ள குறைகளை வரிசையாகக் கூற முற்படும்போதுதான், அவர் ஹிந்து மதத்தைப் பற்றிய தமது அறியாமையைப் பிரகடனம் செய்துகொள்ளுகிறார். அத்துடன், ஹிந்துக்களின் கோணத்தி லிருந்து அதைப் பார்க்கும் ஆற்றல் தமக்கு இல்லை என்பதையும் அவர் வெளிப்படுத்துகிறார். அவ்விதம் செய்வது, அத்தகையோ ருடைய தீர்ப்பையும் குற்றம் குறைகள் உள்ளதாகச் செய்துவிடு கிறது. இவ்விதமாக, ஹிந்து சமயத்தைக் கண்டிக்கும் ஹிந்து அல்லாதாரைப் பற்றிய எனது சொந்த அனுபவமானது எனது எல்லைகளை நான் உணரும்படி செய்வதுடன், இஸ்லாம் அல்லது கிறிஸ்தவ சமயங்களையும், அவற்றை ஸ்தாபித்தவர்களையும் கண்டிக்க முற்பட்டுவிடாமல் எச்சரிக்கையாக இருக்கும்படி எனக்குக் கற்பிக்கின்றது.

—'ஹரிஜன்' – 13—3—1937

## 13

# சமயங்களிடத்தில் சமமான மரியாதை

[டில்லியில் பிர்லா சகோதரர்களால் நிர்மாணிக்கப்பட்ட லக்ஷ்மிநாரா யணன் கோவிலையும், புத்த விஹாரையும் சென்ற 18-ஆம் தேதி காந்திஜி திறந்து வைத்தார். அந்தத் திறப்பு விழாவிற்கு, கட்டுக்கு அடங்காதவாறு திரளான மக்கள் வந்திருந்ததால் காந்திஜியினால் கோவில் மதில்களுக்கு உள்ளே செல்ல முடியவில்லை. ஒலி பெருக்கி ஏற்பாடுகளும் சீர்குலைந்தன. எனவே, காந்திஜியால் அக்கூட்டத்தில் பேச முடியவில்லை. லக்ஷ்மிநாரா யணன் கோவிலுக்கும், புத்த விஹாருக்கும் உள்ளே வழிபடுவதற்காக ஜைனர் கள், சீக்கியர்கள் உள்பட ஹிந்துக்கள் யாவரும் யாதொரு வேற்றுமையுமின் றிச் செல்லலாம். அக்கூட்டத்தில் காந்திஜி தாம் பேச வேண்டிய விஷயங் களைப் பத்திரிகைகளின் மூலம் வெளியிட்டார். அவ்விவரங்களே கீழே கொடுக்கப்பட்டுள்ளன.]

பண்டித மதன் மோகன் மாளவியாவின் தூண்டுதல் காரண மாகவே இந்த இரண்டு கோவில்களும் நிர்மாணிக்கப்பட்டுள்ளன. பிர்லா குடும்பத்தினரின், குறிப்பாக, இதுபோன்ற காரியங்களில் மிகுந்த ஈடுபாடுள்ள ஸ்ரீ ஜுகால் கிஷோர் பிர்லாவின் தாராளமான நன்கொடையின் பலனாகவே. இந்தக் கோவில்கள் நிர்மாணிக்கப் பட்டிருக்கின்றன. எனவே, இந்தத் திறப்பு விழாவை மாளவியாஜி நடத்தியிருந்தால், அது மிகவும் பொருத்தமாக இருந்திருக்கும். ஆனால், அவர் இங்கே இராததால், இந்த விழாவை நடத்தும் பொறுப்பு எனக்கு ஏற்பட்டது.

பக்தர்களின் சமய உணர்ச்சியை வளர்ப்பதற்கு இந்தக் கோவில்கள் விசேஷ உதவியாக இருக்குமென நான் நம்புகிறேன்.

புத்தர் ஆலயம் தீண்டாமையை அனுமதிப்பதில்லை. கிருஷ்ணன் கோவிலில் கூட தீண்டாமையும், உயர்ந்தவர்-தாழ்ந்தவர் என்ற வேற்றுமையும் தடுக்கப்பட்டுள்ளன. என் சம்பந்தப்பட்ட வரையில், தீண்டாமைக்கும், உயர்ந்தவர்-தாழ்ந்தவர் என்ற பேதத்திற்கும் ஹிந்து சமயத்தில் இடமில்லை. ஹிந்து சமயத்தில் வர்ணங்கள் இருக்கின்றன என்றாலும், எந்த ஒரு வர்ணமும் மற்றொன்றைக் காட்டிலும் உயர்ந்ததல்ல. வர்ணம் உயர்வைக் குறிப்பதல்ல; அது பல்வேறு தொழில்களையும் கடமைகளையுமே குறிக்கின்றன. லௌகிக அல்லது ஆன்மிக சாதனங்கள் யாரிடம் அதிகமாக இருந்தாலும், அத்தகையோர் சமூகத்திற்கு அதிகத் தொண்டு புரியவும், அதிகப் பணிவுடன் இருக்கவும் கடமைப்பட்டுள்ளனர். தீண்டாமையும், உயர்ந்தவர்-தாழ்ந்தவர் என்ற எண்ணமும் ஹிந்து சமயத்தில் புகுந்ததிலிருந்துதான் அதன் பெருமை குன்றத் தொடங்கியது. சத்தியத்தையும், அகிம்சையையும் ஹிந்து சமயம் உறுதியான அடிப்படையாகக் கொண்டிருக்கிறது. எனவே, அதில் மற்ற சமயங்களுடன் முரண்பாட்டிற்கான இடம் எதுவுமில்லை.

உலகத்தில் உள்ள முக்கியமான ஒவ்வொரு சமயமும் மானிட வர்க்கம் முழுவதற்கும் தொண்டு புரிய வேண்டும் என்பதே, ஹிந்து சமயத்தில் பற்றுள்ள ஒவ்வொருவருடையவும் தினசரிப் பிரார்த்தனையாக இருக்கவேண்டும். எல்லா சமயங்களுக்கும் சமமான மரியாதை காட்ட வேண்டும் என்ற கொள்கையைப் பிரசாரம் செய்வதற்கும், வகுப்பு வேற்றுமையையும், பொறாமையையும், பகையையும் பழங் கதையாகச் செய்வதற்கும் இந்தக் கோவில்கள் உதவியாக இருக்கும் என நம்புகிறேன்.

—'ஹரிஜன்' – 25—3—1939

# 14

# சமய ஒருமைப்பாடு சாத்தியமா?

ஸ்விட்ஜர்லந்திலிருந்து வந்த பிரபல ஜீவ வர்க்க ஆராய்ச்சி நிபுணரான பேராசிரியர் ரஹமுடன் சர் சி. வி. ராமன் ஒரு நாள் காந்திஜியைப் பார்ப்பதற்காகச் சென்றிருந்தார். அவரை காந்திஜிக்கு அறிமுகப்படுத்தி வைத்து சர் ராமன் கூறியதாவது: "உணவும் தண்ணீருமின்றி 12 வருடங்கள் உயிர் வாழும் ஒரு பூச்சியை பேராசிரியர் ரஹம் கண்டுபிடித்திருக்கிறார். ஜீவ வர்க்க சாத்திரத்தில் மேற்கொண்டு ஆராய்ச்சி செய்வதற்காக அவர் இந்தியாவிற்கு வந்துள்ளார்."

"அவ்விதம் அது உயிர் வாழும் ரகசியத்தை நீங்கள் கண்டு பிடிக்கும் போது, அதன் சம்பந்தமான விவரங்களை எனக்கும் தெரியப்படுத்துங்கள்" என்றார் காந்திஜி.

அதற்குப் பதிலாக நிபுணர் கூறியதாவது: "நான் ஒரு விஞ்ஞானி, ஒரு துறவியும்கூட. உங்களுக்கு மரியாதை செலுத்த நான் வரவேண்டுமென தீர்மானித்தபோது, உங்களை ஒன்றிரண்டு கேள்விகள் கேட்க வேண்டும் என்று நான் நினைத்தேன். நான் கேள்விகள் கேட்கலாமா?"

"பேஷாக கேளுங்கள். எனக்கு அது மகிழ்ச்சியையே கொடுக்கும்" என்ருர் காந்திஜி.

"உலகத்தில் போராடும் பல சமயங்கள் இருப்பதைக் கண்டு நான் கலக்கம் அடைகிறேன். இந்த முரண்பாடு தீருவதற்கு வழி இல்லையா என்றுதான் நான் ஆச்சரியப்படுகிறேன்" என்ருர் பேராசிரியர்.

அவருக்குப் பதிலாக காந்திஜி கூறியதாவது: "முரண்பாடு தீருவதற்கு வழி ஏற்படுவது, கிறிஸ்தவர்களையே பொறுத்திருக்கிறது. மற்றவர்களுடன் ஒன்று சேர அவர்கள் முடிவு செய்தால், வழி உண்டாகும்! ஆனல், அவர்கள் அவ்விதம் செய்யமாட்டார்கள். அவர்கள் கூறும் வழி என்னவெனில், கிறிஸ்தவ சமயத்தை உலகம் முழுவதும் அங்கீகரிக்க வேண்டும் என்பதுதான். ஹிந்து சமயம் ஒரு சாபத்தீடு என்றும், எனவே நான் கிறிஸ்தவ சமயத்தை அங்கீகரிக்க வேண்டும் என்றும் ஓர் ஆங்கில நண்பர் என்னை சென்ற முப்பது வருடங்களாக வற்புறுத்தி வந்துள்ளார். நான் சிறையில் இருந்தபோது, வெவ்வேருன மூன்று இடங்களிலிருந்து 'சகோதரி தெரசாவின் வாழ்க்கை' என்ற நூலின் மூன்று பிரதிகள் எனக்கு வந்தன. சகோதரி தெரசாவைப் போல் நானும், ஏசுநாதரை கடவுளின் புதல்வர் என்றும், எனது ரட்சகர் என்றும் ஒப்புக்கொள்ளவேண்டும் என்ற நம்பிக்கையுடனேயே அந்தப் பிரதிகளை எனக்கு அனுப்பியிருந்தனர். மிகுந்த பக்தி சிரத்தையுடன் அந்த நூலை வாசித்தேன். செயின்ட் தெரசாவின் சாட்சியத்தைக்கூட நான் ஒப்புக்கொள்ள முடியவில்லை.

"இன்று நான் வைதிக கிறிஸ்தவ சமயத்தை எதிர்க்கிறேன். ஏனெனில், அது ஏசுநாதரின் உபதேசத்தையே திரித்து சிதைத்திருக்கிறது என்பது எனது உறுதியான அபிப்பிராயமாகும். ஏசுநாதர் ஆசியாவைச் சேர்ந்தவர். அவரது உபதேசம் பல பிரதிநிதிகளின் மூலம் பரப்பப்பட்டது. ரோமன் சக்கரவர்த்திகளில் ஒருவர் அதற்கு ஆதரவு அளித்ததால், அது ஓர் ஏகாதிபத்தியத்தின் சமயமாகிவிட்டது. இன்று வரையில் அது அப்படியேதான் இருந்துவருகிறது. எனினும், அதற்கு விலக்காக ஆண்ட்ரூஸ், எல்வின் போன்றவர்கள் இருக்கிருர்கள். ஆனல், பொதுவான போக்கு நான் மேலே கூறியவிதமாகவே இருக்கிறது.

"அன்றொரு நாள் பம்பாயில் சமயங்களின் பார்லிமெண்டு நடந்தது. எல்லா சமயங்களையும் சமமான அடிப்படையில் அங்கீகரிக்க மறுப்பதும், சமயங்களிடையே பரஸ்பர மதிப்பு இராததுமே, சமயங்களின் உண்மையான பார்லிமெண்டுக்கு பெரும் முட்டுக்கட்டையாக இருந்து வருகிறது. அது சமயப் பற்றுள்ள சிலர் அடங்கிய கூட்டம் அல்ல என்பதையும், அது சமயங்களின் பார்லிமெண்டு என்பதையும் நாம் மறந்துவிடக் கூடாது. அங்கே கிறிஸ்தவ சமயத்தினர், மற்ற சமயத்தினரைத் தங்களுக்குச் சரிசமானமாகக் கருதுகிறார்களா? கிறிஸ்தவ சமயத்திலும் பல கடவுள்கள் இருந்தும்கூட, நாங்கள் பல கடவுள்களை வணங்குவதாக பகிரங்கமாகவும் ஒளிவு மறைவாகவும் கண்டிக்கிறார்கள்."

காந்திஜி மேற்கண்ட விதம் கூறுவார் என்று டாக்டர் ரஹம் எதிர்பார்க்கவில்லை. எனவே, அவர் ஒன்றும் பதில் கூறவில்லை. ஆனால், அவர் காந்திஜியை மற்றொரு கேள்வி கேட்டார்.

"நாம் ஒன்றுபடாவிட்டால் நாளுக்கு நாள் அதிகமாகிவரும் நாத்திகத்தை எதிர்த்து நாம் போராட முடியாதா?"

டாக்டர் ரஹமுக்கும் காந்திஜிக்கும் நடந்த சம்பாஷணையை இதுவரையில் பக்கத்தில் உட்கார்ந்து மௌனமாகக் கேட்டுக் கொண்டிருந்த சர் சி.வி. ராமன், டாக்டர் ரஹம் கேட்ட கேள்விக்குப் பதிலாகக் கூறியதாவது : "உங்களுடைய கேள்விக்கு நான் பதில் கூறுகிறேன். கடவுள் ஒருவர் இருக்கிறார் எனில், இந்த உலகத்திலேயே அவரை நாம் தேடவேண்டும். இந்த உலகத்தில் அவர் இராவிடில், அவர் நாம் தேடுவதற்குத் தகுதியற்றவர். என்னை ஒரு நாத்திகன் என்றே பல இடங்களிலும் கருதிவருகிறார்கள். ஆனால், நான் நாத்திகன் அல்ல. வான சாத்திரத்திலும், பௌதிக சாத்திரத்திலும் புதிது புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்டுள்ள விஷயங்கள், மேலும் மேலும் கடவுளை வெளிப்படுத்துவதாகவே எனக்குத் தோன்றுகின்றன. மகாத்மாஜி! சமயங்கள் ஒன்றுபட முடியாது. பரஸ்பரம் பூரண நட்பு ஏற்படுவதற்கு விஞ்ஞானம் சிறந்த சந்தர்ப்பத்தை அளிக்கிறது. விஞ்ஞானிகள் யாவரும் சகோதரர்களே."

**காந்திஜி :** அதற்கு நேர்மாறான நிலை என்ன? விஞ்ஞானிகள் அல்லாதார் யாவரும் சகோதரர்கள் இல்லையா?

**சர் ராமன் :** எல்லோரும் விஞ்ஞானிகளாக முடியும்.

**காந்திஜி :** இஸ்லாம் ஒரு கல்மாவைத் தயாரித்திருப்பது போல், எல்லோரும் விஞ்ஞானிகளாவதற்கு நீங்களும் விஞ்ஞான சம்பந்தமான ஒரு கல்மாவைத் தயாரிக்க வேண்டியதுதான்!

**சர் ராமன் :** விஞ்ஞானம் என்பது வேறொன்றும் இல்லை, சத்தியத்தைத் தேடுவதுதான்; ஸ்தூல உலகில் மாத்திரமல்ல,

தர்க்கம், மனேதத்துவம், நடத்தை முதலிய எல்லாத் துறைகளிலும் சத்தியத்தைத் தேடுவதே. உண்மையான விஞ்ஞான மனப் போக்கின் பெருமை என்ன வெனில், போலிகளேயும், பொய்களேயும் நிராகரித்துவிடத் தயாராக இருப்பதுதான். பொய்யை விடாப்பிடியாகப் பற்றிக் கொண்டிருப்பதில் பெருமை எதுவும் இல்லை என்பதை, உலகம் அறிய விஞ்ஞானம் பிரகடனப் படுத்துகிறது. கடைசியாக இப்போது கண்டு பிடிக்கப்பட்டுள்ள ஜீவ வர்க்க சம்பந்தமான உண்மை இதுதான். ஒரு மனிதனின் உயிருக்கும் மனிதனைக் காட்டிலும் தாழ்ந்த சிருஷ்டியின் உயிருக்கும் மூலாதாரமான வேற்றுமை எதுவும் இல்லை. இனம் என்றென்றும் நீடித்திருப்பதற்கான இயற்கை உணர்ச்சியை, அதாவது இன அபிவிருத்திக்காக தனி நபர் தியாகம் செய்யும் உணர்ச்சியை, அப்பழுக்கற்ற முறையில் வளர்த்துக்கொள்ளுவதன் மூலமே கதிமோட்சம் ஏற்பட முடியும்.

சர் சி. வி. ராமன் கூறியதைப் போலவே சமயப் பற்றுள்ள பிரபல விஞ்ஞானியான டாக்டர் ஹென்ரி டிரம்மண்ட் பல வருடங்களுக்கு முன் குறிப்பிட்டுள்ளார். அவர் எழுதியுள்ள 'ஆன்மிக உலகில் இயற்கை விதி' என்ற நூலில் அவ்விதம் குறிப்பிட்டிருக்கிருர். கீதையும் அவ்விதமே உபதேசிக்கவில்லையா? கடவுள், தியாகத்தினுல்தான் மனிதனைச் சிருஷ்டித்தார் என்றும், வளர்ச்சியை நாடுவதற்கான வழி அதே தியாகம்தான் என்று அவனுக்குக் கட்டளையிட்டார் என்றும் கீதை பிரகடனம் செய்யவில்லையா?

(ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதியது)

—'ஹரிஜன்' – 30—5—1936

# 15

# வேற்றுமையில் ஒற்றுமை

எல்லா சமயங்களுக்கும் இடையே அந்நியோன்னியம் நிலவ வேண்டும் என்பதில் நான் நம்பிக்கை உள்ளவன். அத்தகைய நிலைமை ஏற்படவேண்டும் என்பதற்காகவே, நான் தாழ்மையான என் சொந்த வழியில் தொண்டு செய்து வருகிறேன். ஒரே கடவுளிடத்தில் உள்ள நம்பிக்கையே எல்லா சமயங்களுக்கும் அஸ்திவாரமாகும். எனினும், உலகில் ஒரே ஒரு சமயம் மாத்திரமே நடைமுறையில் இருக்கும் காலம் என் அறிவுக்கு எட்டிய வரையில் எனக்குத் தென்படவில்லை. பேச்சளவில், ஒரே ஒரு கடவுள்தான் உண்டு என்ருல், சமயம் ஒன்றே ஒன்ருகத் தான் இருக்க முடியும். எனினும், எனக்குத் தெரிந்தவரையில் கடவுளைப் பற்றிய ஒவ்வொருவரின் எண்ணமும் ஒவ்வொரு வித

மாக இருக்கிறது. எனவே, வெவ்வேறன் மனப்போக்கு உடைய வர்களுக்கும், சீதோஷ்ண நிலைகளுக்கும் தகுந்தவாறு வெவ் வேறன சமயங்களும் எப்போதும் இருந்துகொண்டுதான் வரும். எனினும், பல்வேறு சமயங்களையும் சேர்ந்த மக்கள் தங்களுடைய சொந்த மதத்தினிடம் எவ்வளவு மதிப்பு வைத்திருக்கிறர்களோ, அதுபோலவே பிற சமயங்களையும் மதித்து நடக்கும் காலம் வந்து கொண்டிருக்கிறது என்பது எனக்கு தெளிவாகத் தெரிகிறது. நாம் வேற்றுமையில் ஒற்றுமையைக் காணவேண்டியவர்களாக இருக்கிறோம் என நான் நினைக்கிறேன். நாம் எல்லோரும் ஒரே கடவுளின் குழந்தைகள்; எனவே, எல்லோரும் சமமான வர்களே.

—'ஹரிஜன்' – 2—2—1934

# 16

# குறைகள் இல்லாத மதமே இல்லை

அமெரிக்காவில் மிகப் பிரபல பாதிரியாரான டாக்டர் கிரேன், அன்றொரு நாள் காந்திஜியைப் பார்ப்பதற்காக இங்கே வந்திருந் தார். அவர் ராணுவ சம்பிரதாயத்தில் ஊறித் திளைத்தவர். சென்ற மகா யுத்தத்தின் போது போர்முனையில் தொண்டு செய்தவர். நடு யுத்தத்தில் அவர் ராணுவத்தை விட்டுவிட்டு வந்துவிட்டார். யுத்தத்தில் ஒரு சகோதரன் மற்றொரு சகோத ரனைக் கொல்லும் கோரக் காட்சியைக் காண சகிக்கமுடியாத தாலேயே அவர் வந்துவிட்டார். அதன் விளைவாக, அவரை சாமாதானவாதி என்று பலரும் கண்டித்துத் தொந்தரவு செய் தார்கள். டாக்டர் ஜான் ஹேய்னஸ் ஹோம்சும் தமது கருத்தை மாற்றிக் கொண்டுவிட்டார். யுத்தத்தை, கிறிஸ்தவ சமயத்திற்கு முரணனதென்று அவர் கண்டித்து வந்துள்ளார்.

பக்ரீத் பண்டிகை யன்று டாக்டர் கிரேன் பம்பாயில் இருந்த போது, பசுக்கள் பகிரங்கமாகப் படுகொலை செய்யப்படுவதை நேரில் பார்த்தார். அவர் 'துகாராம்' என்ற சினிமா படத்தையும் பார்த்தார். அந்தப் படத்தில் காட்டப்படும் தெய்விகமான அற்புதங்களைக் கண்டு ஏராளமான ஹிந்துக்கள் சந்தோஷ ஆரவாரம் செய்ததையும் பார்த்தார். கற்றறிஞரான ஒரு ஹிந்து வுடன் அவர் பிரயாணம் செய்தபோது, அத்தகைய அற்புதங்கள் நிகழக்கூடியவை என்பதில் தமக்கு நம்பிக்கை உண்டு என அந்த ஹிந்து டாக்டர் கிரேனிடம் கூறினராம். இவையெல்லாம் டாக்டர் கிரேனுக்கு புரிந்துகொள்ள முடியாத புதிராகவும், குழப்பமா கவும் இருந்தன. இஸ்லாம், ஹிந்து, கிறிஸ்தவ சமயங்கள் அடிப் படையில் ஒன்றுக இருக்கின்றன அல்லவா? எனினும், ஒவ்வொரு சமயத்தின் பிரதிநிதிகளும் ஒவ்வொரு படியிலும்

அவற்றிற்கு நேர் முரணாக நடந்துகொண்டு வருகிறார்கள் அல்லவா?

எனவே, கிறிஸ்தவ சமயத்தை யொட்டி காந்திஜியின் நிலை என்ன என்பதை டாக்டர் கிரேன் அறிந்துகொள்ள விரும்பினார். அவ்விஷயமாக பல்வேறு விதமாகக் கூறப்படுவதை அவர் கேள்விப்பட்டிருந்ததால், உண்மையான விவரத்தை காந்திஜியி டமிருந்தே நேரில் அறிந்துகொள்ள அவர் ஆர்வம் கொண்டார். மற்றும், பொதுவாக சமயங்களைப் பற்றி காந்திஜியின் நிலை என்ன என்பதையும் காந்திஜியிடமிருந்து தெளிவாக அறிந்து கொள்ள அவர் விரும்பினார்.

அவருக்குப் பதிலாக காந்திஜி கூறியதாவது: "கிறிஸ்தவ சமயத்தின் விஷயத்தில் எனது நிலை என்ன என்பதை, சிறிதும் ஆட்சேபணையின்றி உங்களுக்கு நான் கூறுகிறேன். நான் பதினெட்டு வயது இளைஞனாக இருந்தபோது கூட, லண்டனில் உள்ள நல்ல கிறிஸ்தவர்களுடன் எனக்குத் தொடர்பு ஏற்பட்டது. அதற்கு முன்னரே, 'மாட்டிறைச்சி, பீர் புட்டி கிறிஸ்தவ சமயம்' என்று நான் கூறிவந்த அந்தச் சமயத்துடன் எனக்குத் தொடர்பு உண்டாயிற்று. ஏனெனில், அப்போது ஒருவர் கிறிஸ்தவராவதற்கு அச்சாதனங்கள் அத்தியாவசியமானவை என்று கருதப்பட்டு வந்தன! ஒரு கிறிஸ்தவருக்கு அந்த இரண்டு சாதனங்களைத் தவிர மூன்றாவதாக ஒரு சாதனமும் அத்தியாவசியமானதாக இருந்தது. அதுதான், ஐரோப்பியரைப் போல் உடை உடுத்திக்கொள்ளுவதாகும். 'எதையும் அசுத்தமானது என்று கூறாதே' என்பது செயின்ட் பாலின் உபதேசம் அல்லவா? அந்த உபதேசத்தை அக்காலத்தில் கிறிஸ்தவர்கள் அவ்விதம் கேலிக் கூத்தாக்கி வந்தார்கள்.

"எனவே, கிறிஸ்தவ சமயத்திற்கு விரோதமான அத்தகைய தப்பெண்ணத்துடன் நான் லண்டனுக்குச் சென்றேன். அங்கே நல்ல கிறிஸ்தவர்களுடன் எனக்குத் தொடர்பு ஏற்பட்டது. நான் வாசிப்பதற்காக பைபிள் நூலை அவர்கள் என்னிடம் கொடுத்தார்கள். பின்னர் தென்னாப்பிரிக்காவிலும் நான் ஏராளமான கிறிஸ்தவர்களைச் சந்தித்தேன். அதிலிருந்து, என் சொந்த சமயத்தைப் போல் கிறிஸ்தவ சமயமும் சிறந்தது, உண்மையானது என்ற நம்பிக்கை என் மனத்தில் வளர்ச்சி பெற்று வந்திருக்கிறது. 'நான் அறிந்த மதங்களில் எது உண்மையான மதம்?' இந்தக் கேள்வியுடன் சிறிது காலம் நான் போராடிக் கொண்டிருந்தேன். எனினும், தீர்க்காலோசனை செய்த பின் இறுதியாக, ஒரே ஒரு சமயம் தான் உண்மையானது, மற்றவையெல்லாம் போலியானவை என்ற பேச்சிற்கே இடமில்லை என்ற உறுதியான முடிவிற்கு வந்தேன். சிறிதும் குற்றம் குறையில்லாத சமயமே இல்லை. எல்லா சமயங்களும் குற்றம் குறைகள் உள்ளவையே, அல்லது எல்லாம் சற்றேறக்குறைய அப்பழுக்கற்றவையே. எனவே, என் சொந்த சமயத்தைப் போல் கிறிஸ்தவ சமயமும் உண்மையானது என்ற

முடிவிற்கு நான் வந்தேன். அது போலவே, இஸ்லாம், ஜொரோஷ்டிரிய சமயம், யூதர் சமயம் எல்லாம் உண்மையானவையே.

"ஆகையால், ஏசு நாதர் ஒருவர்தான் கடவுளின் புதல்வர் என்பதை நான் அப்படியே உண்மையென்று எடுத்துக் கொள்ளுவதில்லை. கடவுள் பிரத்தியேகமாக ஒருவருக்கு மாத்திரம் தந்தையாக இருக்க முடியாது. எனவே, ஏசு நாதருக்கு மாத்திரம் தனித்த தெய்வத் தன்மை இருப்பதாக நான் கூற முடியாது. கிருஷ்ணன், ராமன், முகமது அல்லது ஜொரோஷ்டர் முதலியவர்களைப் போலவே ஏசு நாதரும் தெய்வத்தன்மை பொருந்தியவர் என்பதே எனது அபிப்பிராயமாகும். வேதங்கள் அல்லது குரானில் உள்ள ஒவ்வொரு வார்த்தையையும் கடவுள் வாக்காக நான் கருதவில்லை. அது போலவேயே, பைபிளில் உள்ள ஒவ்வொரு வார்த்தையும் கடவுளின் மூலம் வந்த வார்த்தை என்றும் நான் கருதவில்லை. மொத்தத்தில் அந்த நூல்கள் தெய்வத்தன்மை பொருந்தியவையே. எனினும், அவற்றில் உள்ள பல விஷயங்களையும் தனியாகக் கவனிக்கும்போது அவற்றில் தெய்வத்தன்மை எதையும் நான் காணமுடியவில்லை. என் சம்பந்தப்பட்ட வரையில் கீதை, குரான் முதலியவற்றைப்போல் பைபிளும் ஒரு சமய நூலேயாகும்.

"உங்களை கிறிஸ்தவ சமயத்திலிருந்து தடுத்து, ஹிந்து சமயத்தை மேற்கொள்ளும்படி செய்வதில் எனக்கு அக்கறையில்லை. அது போலவே, கிறிஸ்தவ சமயத்திற்கு என்னை மாற்ற வேண்டும் என்ற நோக்கம் உங்களுக்கு இருக்குமாயின், அதையும் நான் விரும்பமாட்டேன். கிறிஸ்தவ சமயம் ஒன்றுதான் உண்மையான சமயம் என்று நீங்கள் கூறுவதையும் நான் எதிர்ப்பேன். அதுவும் உண்மையான, கண்ணியமான, உயர்ந்த ஒரு சமயமேயாகும். மானிட வர்க்கத்தின் ஒழுக்கம் உயர்நிலையை அடைய, மற்ற சமயங்களைப் போல் கிறிஸ்தவ சமயமும் தன் பங்கைச் செய்திருக்கிறது. எனினும், அவ்விஷயமாக கிறிஸ்தவ சமயம் தனது மகத்தான பங்கை இனிமேல்தான் செய்ய வேண்டும். பார்க்கப் போனால், ஒரு சமயத்தின் ஆயுட்காலத்தில் 2000 ஆண்டுகள் எம்மாத்திரம்? இப்போது கிறிஸ்தவ சமயமானது, ஆர்வத்துடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் மனித வர்க்கத்திற்கு களங்கத்துடன் கூடிய ஒரு நிலையில் வந்திருக்கிறது. பாருங்களேன், கிறிஸ்தவ சமயத்தின் பெயரால் பாதிரிமார் கூட படுகொலைகளை ஆதரித்து வருகிறார்களே!"

## முரண்பாடான உபதேசங்கள்

**டாக்டர் கிரேன்:** எல்லா சமயங்களும் சமமானவை என்று நீங்கள் கூறுகிறீர்கள். ஆனால், அவற்றின் உபதேசங்கள் ஒன்றுக்கொன்று முரணாக இருக்கும் போது நீங்கள் என்ன செய்வீர்கள்?

**காந்திஜி:** அவற்றில் எது உண்மை என்று கண்டுபிடிப்பதில் எனக்கு கஷ்டம் எதுவுமில்லை. ஏனெனில், மூலாதாரமான சில சித்தாந்தங்களை நான் அனுசரித்து வருகிறேன். உதாரணமாக, எல்லாவற்றையும் காட்டிலும் சத்தியம் மேலானது. எனவே, அதற்கு முரணாக இருப்பதையெல்லாம் நான் நிராகரித்துவிடுகிறேன். அது போலவே, அகிம்சைக்கு முரணாக இருப்பதையும் நிராகரித்துவிடவேண்டும். பகுத்தறிவைக் கொண்டு தீர்மானிக்க வேண்டிய விஷயங்கள் பகுத்தறிவுக்கு முரணாக இருக்குமாயின், அவற்றையும் நிராகரித்துவிட வேண்டும்.

**டாக்டர் கிரேன்:** பகுத்தறிவைக் கொண்டு தீர்மானிக்க வேண்டிய விஷயங்களா?

**காந்திஜி:** ஆம். பகுத்தறிவினால் தீர்மானிக்க முடியாத விஷயங்கள் இருக்கின்றன. நம்பிக்கையின் மீது அவற்றை நாம் அங்கீகரிக்க வேண்டும். அப்போது நம்பிக்கை பகுத்தறிவுக்கு முரணாக இருப்பதில்லை, பகுத்தறிவுக்கு அப்பாற்பட்டதாக இருக்கிறது. நம்பிக்கையை ஐம்புலன்களுக்கு மேற்பட்ட ஆருவது புலன் எனலாம். பகுத்தறிவின் எல்லைக்கு அப்பாற்பட்ட விஷயங்களை, ஆருவது புலனை அதாவது நம்பிக்கையைக் கொண்டுதான் தீர்மானிக்க வேண்டும். இந்த மூன்று ஆதாரங்களை அடிப்படையாகக் கொண்டு சமய சம்பந்தமான விஷயங்களைப் பரிசீலனை செய்வதில் எனக்குக் கஷ்டம் எதுவும் இருக்க முடியாது. எனவே, கடவுளின் ஒரே புதல்வர் ஏசு நாதர் தான் என்பதை நம்புவது என் பகுத்தறிவுக்கு முரணாக இருக்கிறது. ஏனெனில், கடவுள் விவாகம் செய்து கொண்டு குழந்தைகளைப் பெற்றிருக்க முடியாது. ‘புதல்வன்’ என்ற சொல் அங்கே சிலேடையாகவே குறிப்பிடப்பட்டிருக்க முடியும். அவ்விதமாகப் பார்த்தால், ஏசு நாதரின் நிலையில் உள்ள ஒவ்வொருவரும் கடவுளின் புதல்வரே ஆவார். ஒரு மனிதர் ஆன்மிகத் துறையில் நம்மைக் காட்டிலும் எத்தனையோ மடங்கு அதிக உயர்வானவராக இருந்தால், அவரை நாம் கடவுளின் புதல்வர் என்று கூறலாம். நாம் எல்லோரும் கடவுளின் குழந்தைகளே என்றாலும், அத்தகைய ஆன்மிகச் சிறப்பு உடையவர்களை கடவுளின் விசேஷமான குழந்தைகள் எனலாம்.

## தெய்வத்தன்மையில் அளவு உண்டா?

**டாக்டர் கிரேன்:** அப்படியாயின், தெய்வத் தன்மையில் குறைந்த அளவு, அதிக அளவு என்பதை நீங்கள் அங்கீகரிக்கிறீர்கள். அந்நிலையில் ஏசு நாதர் மிகவும் அதிகமான தெய்வத் தன்மை வாய்ந்தவர் என்று நீங்கள் கூறலாம் அல்லவா?

**காந்திஜி:** முடியாது. ஏனெனில், அவ்விதம் கூறுவதற்கான ஆதாரங்கள் நம்மிடம் இல்லை. சரித்திர அடிப்படையில், மற்ற எவரையும் காட்டிலும் முகமது நபியைப் பற்றிய ஆதாரங்கள் தான் நம்மிடம் அதிகமாக இருக்கின்றன. ஏனெனில், முகமது நபி சமீப காலத்தில் இருந்தவர். ஏசு நாதர் சம்பந்தமாக அத்தனை அதிக ஆதாரங்கள் இல்லை. ராமன், புத்தர், கிருஷ்ணன் சம்பந்தமான ஆதாரங்கள் இன்னும் மிகக் குறைவாகும். அவர்களைப்பற்றி நாம் வெகு குறைவாக அறிந்து கொண்டிருக்கும்போது, அவர்களில் ஒருவரைக் காட்டிலும் மற்றொருவர் அதிக தெய்வத்தன்மை வாய்ந்தவர் என்று கூறுவது மிகவும் விபரீதமான காரியம் அல்லவா? அவ்விஷயமாக ஏராளமான ஆதாரங்கள் இருந்தால் கூட, அவற்றை ஆராய்ச்சி செய்யும் பணுவை யாரும் மேற்கொள்ள முடியாது. ஏனெனில், மிகவும் ஆன்மிகச் சிறப்புவாய்ந்த ஒருவர்தான் அவர்களுடைய தெய்வத் தன்மையின் அளவை நிர்ணயிக்க முடியும். ஏசு நாதர் 99 சத விகிதமும், முகமது 50 சத விகிதமும், கிருஷ்ணன் 10 சத விகிதமும் தெய்வத் தன்மை வாய்ந்தவர்கள் என்று கூறுவது எவருடைய கடமையும் அல்ல. எனவே, தங்களுக்கு இராத ஒரு கடமையை ஒருவர் மேற்கொள்ளுவது அகங்காரமேயாகும்.

**டாக்டர் கிரேன் :** ஆனல், வாதிக்கக்கூடிய ஒரு விஷயத்தை எடுத்துக்கொள்ளுவோம். பலாத்காரம் நியாயமானதா, அல்லவா என்பதைப்பற்றி நான் விவாதித்துக்கொண்டிருப்பதாக வைத்துக்கொள்ளுவோம். அப்போது இஸ்லாம் சமயம் ஒன்றைக் கூறலாம்; கிறிஸ்தவ சமயம் மற்றொன்றைக் கூறலாம்.

**காந்திஜி :** அப்படியாயின், நான் மேலே குறிப்பிட்ட சோதனைகளின் உதவியைக் கொண்டு அதைத் தீர்மானம் செய்ய வேண்டும்.

**டாக்டர் கிரேன் :** சிற்சில சந்தர்ப்பங்களில் வாளை உபயோகிக்கலாமென முகமது நபி விதித்திருக்கிறுர் அல்லவா ?

**காந்திஜி :** பெரும்பாலான முஸ்லிம்களும் அதை ஒப்புக்கொள்ளுவார்கள் என்றே நான் நினைக்கிறேன். எனினும், சமயத்தைப் பற்றி நான் வாசித்தது வேறு விதமாகும். கான்சாகிப் அப்துல் கபார்கானுக்கு அகிம்சையில் நம்பிக்கை இருக்கிறது. குரானிலிருந்தே அவருக்கு அந்த நம்பிக்கை ஏற்பட்டுள்ளது. லண்டன் பிஷப்பிற்கு பலாத்காரத்தில் உள்ள நம்பிக்கைக்குக் காரணம் பைபிளேயாகும். கீதையிலிருந்தே எனக்கு அகிம்சையில் நம்பிக்கை ஏற்பட்டுள்ளது. கீதையில் பலாத்காரமே உபதேசிக்கப்பட்டிருக்கிறது என்று கருதுவோரும் இருக்கிறுர்கள். பலாத்காரத்தை குரான் உபதேசிக்கிறது என்ற முடிவிற்கு நான் வந்தால் கூட, அப்போதும் நான்

பலாத்காரத்தை நிராகரித்துவிடுவேன். எனினும், குரானைக் காட்டிலும் பைபிள் உயர்ந்தது என்றோ, அல்லது ஏசுநாதரை விட முகமது நபி தாழ்மையானவர் என்றோ நான் கூறமாட்டேன். முகமது நபியையும் ஏசு நாதரையும் பற்றி நிர்ணயித்துக் கூறுவது எனது கடமை அல்ல. எனது அகிம்சை, வேத நூல்களின் அனுமதியை எதிர்பார்க்கவில்லை. எனினும், உண்மை என்னவெனில் மற்ற நூல்களைக்காட்டிலும் சமய நூல்கள் மானிட வர்க்கத்தின் மனத்தை அதிகமாகக் கவர்ந்துள்ளன. மார்க் ட்வெயின்* அல்லது எமர்சன் நூல்களை விட சமய நூல்கள் என் மனத்தில் ஆழ்ந்து பதிந்துள்ளன. எமர்சன் ஒரு சிந்தனையாளர். ஏசு நாதரும் முகமது நபியும் தங்களுடைய உபதேசங்களை முற்றிலும் செயலில் காட்டியவர்கள். எமர்சன் ஒரு காலத்திலும் அவர்களைப்போல் இருந்திருக்க முடியாது. அவர்களுடைய சக்தி, அவர்களுக்குக் கடவுளிடத்தில் உள்ள நம்பிக்கையிலிருந்து கிடைத்ததாகும்.

**டாக்டர் கிரேன் :** என் கருத்தை விளக்க நான் உருவான ஓர் உதாரணத்தை எடுத்துக் காட்டுகிறேன். சென்ற திங்கட் கிழமையன்று நான் கண்ட காட்சி எனக்கு பயங்கரமான அதிர்ச்சியை உண்டாக்கியது. சமயத்தின் பெயராலும், ஹிந்துக்களின் உணர்ச்சிகளைப் புண்படுத்தும் விதத்திலும் முஸ்லிம்கள் தெருக்களில் 37 பசுக்களைக் கொன்றதை நான் எண்ணினேன். முஸ்லிம்கள் ஏன் அவ்விதம் செய்தார்கள் என்று, என்னுடன் பிரயாணம் செய்த ஹிந்து நண்பரை நான் கேட்டேன். அது அவர்களுடைய சமயத்தின் ஓர் அம்சமாகுமென்று அவர் கூறினர். 'அது அவர்களுடைய ஆன்மிக வளர்ச்சியின் ஒரு பகுதியா?' என்று அவரைக் கேட்டேன். 'ஆமாம்' என்று அவர் பதில் அளித்தார். நான் சந்தித்த ஒரு முஸ்லிமைக் கேட்டபோது, 'நாங்கள் ஒரே சமயத்தில் கடவுளையும் திருப்திப்படுத்துகிறோம், எங்களையும் திருப்தி செய்துகொள்ளுகிறோம்' என்று அவர் கூறினர். இவ்விதம் ஒரு முஸ்லிம் உங்கள் மனமும் என் மனமும் கொதிக்கும்படியான ஒரு காரியத்தைச் செய்வதில் ஆனந்தம் அடைகிறார். இவையெல்லாம் குரானுக்கு முரணானவை என்று நீங்கள் நினைக்கிறீர்களா?

**காந்திஜி :** ஆமாம், நான் அவ்விதம்தான் நினைக்கிறேன். இவ் விஷயமாக சென்ற வாரம்தான் ஒரு கட்டுரை எழுதினேன். தீண்டாமையைப் போன்ற சில வழக்கங்களை ஹிந்துக்கள் அனுசரித்துவருகிறார்கள். தீண்டாமை, ஹிந்து சமயத்தின்

---

* மார்க் ட்வெயின் என்ற கிளமென்ஸ் சாமுவல் லாங்ஹார்னும் (1835–1910), எமர்சனும் (1803–1882) உலகப் புகழ்பெற்ற மேநாட்டு இலக்கிய மேதைகளாவர்.

ஓர் அம்சம் அல்ல. பசு வதை இஸ்லாமின் ஓர் அம்சம் அல்ல; எனினும் அதை இஸ்லாமின் ஓர் அம்சமாகக் கருதும் முஸ்லிம்களை நான் எதிர்ப்பதில்லை.

## இந்தப் பாழும் மதமாற்றங்கள்!

**டாக்டர் கிரேன் :** *மத மாற்ற முயற்சிகளைப் பற்றி நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்?*

**காந்திஜி :** முற்றிலும் அறியாமையில் ஆழ்ந்துள்ள மக்களுக்கு, ஆசைகள் காட்டி, அவர்கள் மதம் மாறும்படி செய்வதை நான் பலமாகக் கண்டிக்கிறேன். என்னிடமும் அவ்வித முயற்சிகள் நடைபெறுகின்றன. அத்தகைய முயற்சிகளை நான் அறிந்துகொள்ள முடியும். ஏனெனில், அவ்விஷயமாக அவர்கள் என்னுடன் வாதிக்க முடியும்; நானும் அவர்களுடன் வாதிக்க முடியும். ஆனால், ஹரிஜனங்களிடம் செய்யப்படும் அம்முயற்சிகள் எனக்கு நிச்சயமாகக் கோபத்தையே உண்டாக்குகின்றன. ஒரு கிறிஸ்தவப் பிரசாரகர் ஓர் ஹரிஜனிடம் சென்று, ஏசுநாதர் ஒருவர்தான் கடவுளுக்குப் பிறந்த புதல்வர் என்று கூறினல், அந்த ஹரிஜன் ஒன்றும் புரியாமல் அவரை வெறித்துப் பார்ப்பார். பின்னர் பிரசாரகர் அவரை மயக்குவதற்காக பலவிதமான ஆசைகள் காட்டுவார். அவையெல்லாம் கிறிஸ்தவ சமயத்தையே இழிவுபடுத்துவதாக இருக்கின்றன.

**டாக்டர் கிரேன் :** *பகுத்தறிவினல் தீர்மானிக்கும் ஆற்றல் ஹரிஜனுக்கு இல்லை என்று நீங்கள் கூறுகிறீர்களா?*

**காந்திஜி :** ஹரிஜனுக்கு பகுத்தறிவு உண்டு. சம்பளம் கொடுக்காமல் அவரிடமிருந்து வேலை வாங்க நீங்கள் முயற்சித்தால், அவர் அதற்கு உடன்படமாட்டார்; நியாய அநியாயங்களை அறிந்துகொள்ளும் சக்தியும் அவருக்கு உண்டு. சமய சம்பந்தமான நம்பிக்கைகளையும், தராதரங்களையும் அறிந்துகொள்ளும்படி நீங்கள் அவரைக் கேட்டால், அவருக்கு ஒன்றுமே புரியாது. எனது 17-ஆவது வயதில் நான் ஓரளவு கல்வியும், பயிற்சியும் பெற்றிருந்தேன். அப்போது கூட என்னல், சமய சம்பந்தமான விஷயங்களை அறிந்துகொள்ள முடியவில்லை. வைதிக ஹிந்துக்கள் ஹரிஜனங்களை பயங்கரமான விதத்தில் அலட்சியம் செய்துவிட்டார்கள். அப்படியிருந்தும் கூட ஹரிஜனங்கள் ஹிந்து சமயத்தில் ஒட்டிக்கொண்டிருப்பதுதான் ஆச்சரியமான விஷயமாகும். எனவே, அவரது சமயத்தில் அவருக்கு உள்ள நம்பிக்கையை மற்றவர்கள் பாழாக்கப் பார்ப்பது அக்கிரமம் என்றே நான் கூறுகிறேன்.

**டாக்டர் கிரேன் :** பலாத்காரத்தில் ஈடுபடும்படி கடவுள் தனக்குக் கட்டளையிட்டிருக்கிறார் என்று கூறும் மனிதனைப் பற்றி உங்களுடைய கருத்து என்ன?

**காந்திஜி :** அதற்காக, அவர் மற்றொரு கடவுளை ஏற்கும்படி நீங்கள் கூறக்கூடாது. நீங்கள் அவரது சமயத்தைக் குழப்ப வேண்டிய அவசியமில்லை. ஆனால் அவர் பகுத்தறிவை உபயோகித்துப் பார்க்கும்படி நீங்கள் செய்யலாம்.

**டாக்டர் கிரேன் :** ஹிட்லரை எடுத்துக்கொள்ளுங்கள். யூதர்களைக் கொடுமைப்படுத்துவதன் மூலமும், பகைவர்களைக் கொல்லுவதன் மூலமும் கடவுளின் கட்டளையையே நிறைவேற்றி வருவதாக அவர் கூறுகிறார்.

**காந்திஜி :** கடவுளின் ஒரு வாக்கியத்திற்குப் போட்டியாக நீங்கள் கடவுளின் மற்றொரு வாக்கியத்தைச் சுட்டிக் காட்டக்கூடாது. நீங்கள் அவருடைய பகுத்தறிவு ஒப்புக்கொள்ளக் கூடிய விதத்தில் நடந்துகொள்ளவேண்டும். அவருக்காக நீங்கள் அற்புதத்தைச் செய்து காட்டவேண்டும். அதாவது, சமயத்தைக் காட்டிலும் அதிக அருமையானதென்று கருதும் ஒன்றைப் பாதுகாப்பதற்காக கிறிஸ்தவர்கள் பிறரைக் கொல்லாமல் தாங்கள் சாகும் கலையைக் கற்றுக்கொள்ளுவதே அந்த அற்புதமாகும். இதுபோல் நாம் முடிவின்றி வாதித்துக்கொண்டே போகலாம். நீங்கள் பேசிக்கொண்டிருக்கும்போதே காலம் கடந்துகொண்டிருக்கிறது.

இவ்விதம் கூறிவிட்டு காந்திஜி தமது கெடியாரத்தைப் பார்த்தார்.

## காந்திஜியின் சமயம்

**டாக்டர் கிரேன் :** அப்படியானால், ஒரே ஒரு கேள்வி. எல்லா மதங்களின் சேர்க்கையே உங்களுடைய மதம் என்று நீங்கள் கூறுவீர்களா?

**காந்திஜி :** ஆமாம், நீங்கள் விரும்பினால். ஆனால், அந்தச் சேர்க்கையை நான் ஹிந்து சமயம் என்று கூறுவேன். நீங்கள் சம்பந்தப்பட்ட வரையில் அந்தச் சேர்க்கை கிறிஸ்தவ சமயமாகும். நான் அவ்விதம் கூறாவிடில், இன்று பல கிறிஸ்தவர்களும் கூறிவருவதைப்போல், 'காந்தி கிறிஸ்தவ சமயத்தை ஏற்றுக்கொண்டால், எவ்வளவு நன்றாக இருக்கும்' என்று நீங்களும் எப்போதும் என்னைத் தட்டிக் கொடுத்துக் கொண்டிருப்பீர்கள். 'காந்தி இஸ்லாமை ஏற்றுக்கொண்டால் எவ்வளவு நேர்த்தியாக இருக்கும்!' என்று முஸ்லிம்களும் அவ்விதமே செய்து கொண்டிருப்பார்கள். அவ்விதம் செய்வது, உடனடியாக உங்களுக்கும் எனக்குமிடையே

ஒரு தடையை ஏற்படுத்திவிடும். உங்களுக்கு இது புரிகிறதா?

**டாக்டர் கிரேன் :** ஆம், எனக்குப் புரிகிறது.

(ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதியது)

—'ஹரிஜன்' - 6—3—1937

# 17

# தொண்டிற்கு வெகுமதியை நாடலாமா?

ஒரு நாள் காலையில் டாக்டர் ஸெரஸோல், முழங்கால் வரையில் இருந்த சேற்றிலும் சகதியிலும் நடந்து சேவாகிராமத்திற்கு வந்து சேர்ந்தார். காந்திஜியின் குடிசையில் அவரைக் கண்டு அவருடன் நீண்ட நேரம் பேசிக்கொண்டிருந்தார். டாக்டர் ஸெரஸோல் ஆன்மிக வேட்கை கொண்ட ஓர் யாத்திரிகர். தமது மனத்திற்கு உகந்த காந்திஜியைப் போன்றவர்களை அவர் சந்திக்கும்போது, அவர்களுடன் சமய சம்பந்தமான கருத்துக்களைப் பரிமாறிக் கொள்ளுவதில் அவருக்கு ஆர்வம் அதிகம்.

அவர் கூறியதாவது: "நம்மை ஒன்றுபடுத்த வேண்டிய சமயமானது, நம்மைப் பிரித்துவைத்திருக்கிறது. பல்வேறு சமயங்களையும் சேர்ந்தவர்கள் நாள் முழுதும் சேர்ந்து வேலை செய்கிறார்கள்; மனப்பூர்வமாக ஒத்துழைக்கிறார்கள்; ஆனால், பிரார்த்தனை நேரம் வந்ததும், அவர்கள் பிரிந்து சென்று விடுகிறார்கள். இது துக்ககரமான ஒரு காட்சி அல்லவா? நம்மிடையே பிளவை உண்டாக்குவதற்காகவா சமயம் ஏற்பட்டிருக்கிறது? தொண்டு செய்ய வேண்டும் என்ற ஆர்வத்திற்குப் பதிலாக, அகங்காரத்திற்கு அடையாளமாக சமயம் இருந்துவருவதை அனுமதிக்கலாமா?"

இவ்விதமாக, டாக்டர் ஸெரஸோல் தமது உள்ளத்தில் உள்ள வேதனையை வெளியிட்டார். இரண்டு பாதிரிப் பெண்மணிகளுடன் அவர் சேவாகிராமத்திற்கு வந்திருந்தார். "வெவ்வேறு சமயங்களைச் சேர்ந்தவர்களிடையே ஏதாவது ஒருவிதமான சமயத் தொடர்பு இருக்க வேண்டுமென நான் விரும்புகிறேன்" என்றார் அவர்.

**காந்திஜி :** ஒருவருக்கொருவர் ஒளிவு மறைவின்றி மனம் விட்டுப் பழகுவதாயின், அது முற்றிலும் சாத்தியமே.

**டாக்டர் :** சிறந்த ஜீவகாருண்யத் தொண்டரான எனது நண்பர் ஒருவர், கிறிஸ்தவ சமய சம்பந்தமான தொண்டைச் செய்வதற்கான சக்தியை ஏசு நாதருடன் தொடர்பு கொள்ளு

வதன்மூலம் தாம் பெறுவதாகக் கூறுகிருர். ஏசு நாதர் எப்போதும் கடவுளுடன் தொடர்பு கொண்டிருந்ததாகவும் அவர் கூறுகிருர்.

**காந்திஜி :** நம்மிடமுள்ள பெரிய தகராறு என்னவெனில், ஒரு கிறிஸ்தவப் பாதிரியார் தமது சொந்த அனுபவத்தில் அதிக நம்பிக்கை வைக்கிருர் என்பதல்ல, ஒரு ஹிந்து பக்தரின் வாழ்க்கையிலிருந்து கிடைக்கும் அத்தாட்சியை அவர் மறுக்கிருர் என்பதுதான். அவருக்குள்ள ஆன்மிக அனுபவத்தையும், ஆன்மிக சம்பந்தமான தொடர்பிஞல் ஏற்படும் ஆனந்தத்தையும் போல் ஹிந்து பக்தருக்கும் அத்தகைய அனுபவமும் ஆனந்தமும் இருக்கும் அல்லவா?

வந்திருந்த பாதிரிமாரில் ஒருவர் கூறியதாவது : "கிறிஸ்தவ சமயத்தைப் பிரசாரம் செய்வதற்கு எனக்கு நேரமில்லே, அதைப் பிரசாரம் செய்ய வேண்டும் என்ற ஆர்வமும் எனக்கு இல்லே. எனினும், எங்களுடைய ஆஸ்பத்திரியின் மூலம் அதிக மக்கள் கிறிஸ்தவ சமய வாழ்க்கையை மேற்கொண்டால், எங்கள் நாட்டில் உள்ள பாதிரிமார் சங்கத்தினர் மகிழ்ச்சி அடைவார்கள்."

**காந்திஜி :** மக்களுக்கு நீங்கள் வைத்திய உதவி செய்யும் அதே சமயத்தில், அதற்கு வெகுமதியாக உங்களுடைய நோயாளிகள் கிறிஸ்தவர்களாக வேண்டும் என்று நீங்கள் எதிர்பார்க்கிறீர்கள்.

**பாதிரியார் :** ஆம், அந்த வெகுமதி எதிர்பார்க்கப்படுகிறது. அவ்விதம் இல்லாவிடில், உலகில் எங்களுடைய தொண்டை நாடும் பல இடங்கள் இருக்கும்போது, அங்கேயெல்லாம் நாங்கள் செல்லாமல், இங்கே எதற்காக வரவேண்டும்?

**காந்திஜி :** அங்கேதான் விசை இருக்கிறது. உங்கள் மனத்தின் ஆழத்தில், தொண்டிற்காகத் தொண்டு செய்ய வேண்டும் என்ற தூய்மையான எண்ணம் இல்லே. கிறிஸ்தவ சமயத்திற்குள் பல மக்களைக் கொண்டுவருவதையே உங்களுடைய தொண்டிற்குப் பலஞக நீங்கள் கருதுகிறீர்கள்.

**பாதிரியார் :** நான் செய்துவரும் தொண்டில் அந்தரங்கமான நோக்கம் எதுவும் இல்லே. நான் மக்களின் துன்பத்தைப் போக்குகிறேன். ஏனெனில், நான் வேறு எதுவும் செய்ய முடியாது. இதற்கெல்லாம் அடிப்படை ஏசு நாதரிடம் எனக்குள்ள பக்திதான். துன்பத்திற்குள்ளான மானிட வர்க்கத்திற்கு அவர் தொண்டு புரிந்தார். ஏசு நாதரிடத்தில் நான் காணும் அதே ஆனந்தத்தை மற்றவர்களும் காணவேண்டும் என்பது என் அந்தரங்கமான விருப்பம் என்பதை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். இதில் விசையோ, தந்திரமோ என்ன இருக்கிறது?

**காந்திஜி :** மக்களிடத்தில் சில குறைகள் இருப்பதாக பாதிரிமார் சங்கம் கருதுகிறது. மக்கள் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் அந்தக் குறைகளைப் போக்க வேண்டுமென நீங்கள் நினைக்கிறீர்கள். 'நாங்கள் கொடுத்த மருந்தை நீங்கள் சாப்பிட்டீர்கள். கடவுள் அருள் புரிந்து உங்கள் நோயைத் தீர்த்துவிட்டார். இனிமேல் மீண்டும் நோயுடன் வராதீர்கள்' என்று நீங்கள் உங்களிடம் சிகிச்சை பெற்றவர்களிடம் கூறினால், உங்கள் கடமையைச் செய்தவராவீர்கள். மேற்கொண்டு நீங்கள், 'எங்களைப் போல் உங்களுக்கும் கிறிஸ்தவ சமயத்தில் நம்பிக்கை இருந்தால் எவ்வளவு நேர்த்தியாக இருக்கும்' என்று கூறினால், நீங்கள் உங்கள் மருந்தை நோயாளிகளுக்கு இலவசமாகக் கொடுக்கவில்லை என்பது வெளியாகிறது.

**பாதிரியார் :** வைத்திய சம்பந்தமாகவும் ஆன்மிக சம்பந்தமாகவும் நான் அவர்களுக்கு உதவிபுரிய முடியும் என்று கருதினால், நான் எப்படி உதவி புரியாமல் இருக்க முடியும்?

**காந்திஜி :** அந்த சங்கடத்திலிருந்து தப்புவதற்கும் வழி இருக்கிறது. உங்களிடம் என்ன சிறப்பு இருக்கிறதோ அதை, உங்களிடம் சிகிச்சை பெறுவதற்கு வந்த நோயாளிகள் வேறு வழியில் பெறமுடியும் என்று நீங்கள் கருத வேண்டும். உங்கள் கல்லூரியின் வழியாகத்தான் அவர் செல்லவேண்டும், வேறு எந்தக் கல்லூரியின் வழியாகவும் செல்லக் கூடாது என்று நீங்கள் ஏன் விரும்பவேண்டும் ?

**பாதிரியார் :** எனது தாயான கல்லூரியிடம் எனக்கு விசேஷ அன்பு இருப்பதே அதற்குக் காரணம்.

**காந்திஜி:** அங்கேதான் எனக்கு சங்கடம் ஏற்படுகிறது. உங்கள் தாயிடம் நீங்கள் அன்பும் பக்தியும் காட்டுகிறீர்கள். அதற்காக நீங்கள், மற்ற எல்லோரும் உங்களுடைய தாயின் குழந்தைகளாக இருக்கவேண்டுமென நீங்கள் விரும்ப முடியாது.

**பாதிரியார் :** அவ்விதம் எல்லாக் குழந்தைகளுக்கும் தாயாக இருப்பது சரீர அசாத்தியமான காரியம்.

**காந்திஜி :** அப்படியாயின், இது ஆன்மிக அசாத்தியமான காரியம். மானிட வர்க்கத்தைச் சேர்ந்த சகலரும் கடவுளின் குழந்தைகளே. அப்படியிருக்க, எனது சிற்றறிவைக் கொண்டு கடவுளின் அருளுக்கு நான் எவ்விதம் எல்லை வகுக்க முடியும்? அவரது அருளைப் பெற இது ஒன்றுதான் வழி என்று எவ்விதம் கூற முடியும் ?

**பாதிரியார்:** இது ஒன்றுதான் வழி என்று நான் கூறவில்லை. இதைக் காட்டிலும் சிறந்த வழி ஒன்று இருக்கலாம்.

**காந்திஜி :** இதைக் காட்டிலும் சிறந்த வழி இருக்கிறது என்பதை நீங்கள் ஒப்புக்கொண்டால், உங்களுடைய வாதம் அடிபட்டுப் போய்விடுகிறது.

**பாதிரியார் :** நல்லது, உங்களுடைய வழியை நீங்கள் கண்டு கொண்டுவிட்டீர்கள் என்றால், நான் அதைப்பற்றி அதிகமாகக் கவலைப்படவில்லை. ஆனால், வழி தெரியாமல் சேற்றில் தத்தளித்துக் கொண்டிருக்கும் ஒருவரை மீட்க நான் முற்படலாம் அல்லவா ?

**காந்திஜி :** சேற்றில் தத்தளித்துக் கொண்டிருப்பவர் என்று தீர்மானிப்பதற்கு நீங்கள் யார் ? உங்களைச் சேர்ந்தவர்கள் சேற்றில் தத்தளித்துக் கொண்டிருக்கவில்லையா ? உங்களுடைய முத்திரையிட்ட சத்தியத்தை நீங்கள் எல்லோரிடமும் ஏன் சமர்ப்பிக்க வேண்டும் ?

**பாதிரியார் :** எனக்குத் தெரிந்த மருந்தை நான் அவர்களுக்குக் கொடுக்கவேண்டும் அல்லவா ?

**காந்திஜி :** அப்படியானல், 'நீங்கள் உங்களுடைய டாக்டரைக் கலந்து ஆலோசித்தீர்களா ?' என்று நீங்கள் அவர்களைக் கேட்கவேண்டும். அவரை அவருடைய டாக்டரிடம் நீங்கள் அனுப்பவேண்டும். நீங்கள் அந்த டாக்டரைக்கூட கலந்து ஆலோசிக்க வேண்டும். நோயின் அடையாளங்களைப் பற்றி அவருடன் நீங்கள் விவாதிக்க வேண்டும். ஒன்று, நீங்கள் அவரைத் திருப்தி செய்யவேண்டும், அல்லது உங்களுக்குத் திருப்தி ஏற்படும்படி செய்ய அவருக்கு இடம்கொடுக்க வேண்டும். இது, துன்பமயமான உடலைப் பற்றிய விஷயம். ஆனல், நாமோ இப்போது ஆன்மிக சம்பந்தமான விஷயத்தைப் பற்றி வாதித்துவருகிறோம். உடல் நோயைப் போல் ஆன்மிக சம்பந்தமான விஷயத்தில் அவ்விதமெல்லாம் நீங்கள் விசாரணைகளை நடத்திக் கொண்டிருக்க முடியாது. மானிட வர்க்கத்தின் சார்பிலேயே இப்போது நான் பேசுகிறேன். கிறிஸ்தவ சமய சங்கத்தினர் போலி வேடத்திலிருந்து விடுதலை பெறவேண்டுமென நீங்கள் கோரவில்லையா ?

**டாக்டர் ஸெரஸோல் :** எங்கள் சமயம்தான் சிறந்தது என்று எங்களில் பெரும்பாலோர் நம்புகின்றனர். மற்ற சமயங்கள் அவற்றைப் பின்பற்றுவோருக்கு என்ன அற்புதங்களை வெளியிட்டிருக்கின்றன என்பது, எங்கள் சமயத்தைச்சேர்ந்த பெரும்பாலோருக்கும் சிறிதளவும் தெரியாது. ஹிந்து வேத நூல்களை டாக்டர்......மிகவும் கவனமாக ஆராய்ச்சி செய்துள்ளார். ஹிந்து சமயம் ஹிந்துக்களுக்கு அளித்துள்ளது என்ன என்பதையும் அவர் கவனித்து வந்துள்ளார்.

**காந்திஜி :** அவர் கீதையையோ, அல்லது குரானையோ வாசிப்பது மாத்திரம் போதாது. ஒரு கிறிஸ்தவரைப் போல் நான்

பைபிளை வாசிக்க வேண்டுமென அவர் எதிர்பார்ப்பார். அதுபோல் அவர் குரானை, ஒரு முஸ்லிமைப் போல் வாசிக்க வேண்டும்; கீதையை ஓர் ஹிந்துவைப் போல் வாசிக்க வேண்டும். 'என்னைப் போல் பய பக்தியுடன் கீதையை நீங்கள் வாசித்தீர்களா? அல்லது நான் பைபிளை எவ்வளவு பயபக்தியுடன் வாசித்தேனோ அப்படியாவது நீங்கள் கீதையை வாசித்தீர்களா?' என்று நான் அவரைக் கேட்பேன். கிறிஸ்தவ சமயத்தைப் பற்றி நான் பல புத்தகங்களை வாசித்திருக்கிறேன். ஹிந்து சமயத்தைப் பற்றிக்கூட நான் அத்தனை புத்தகங்களை வாசித்ததில்லை என்பதை உங்களுக்குக் கூறுகிறேன். அப்படியிருந்தும் கூட, கிறிஸ்தவ சமயமோ அல்லது ஹிந்து சமயமோ ஒன்றுதான் வழி என்ற முடிவுக்கு நான் வரவில்லை.

அப்படியாயின் பாதிரிமாரின் நிலை திட்டவட்டமாக எப்படித்தான் இருக்க வேண்டும் என்று பாதிரி நண்பர்கள் கேட்டனர்.

**காந்திஜி :** நான் தெளிவாக விளக்கியிருப்பதாகவே எண்ணுகிறேன். அந்தக் கருத்தையே நான் மீண்டும் வேறுவிதமாகக் கூறுகிறேன் : வேறு மதத்தைச் சேர்ந்த அஞ்ஞானிகள் அடங்கிய ஒரு தேசத்திற்கு வந்திருக்கிறோம் என்பதை நீங்கள் மறந்துவிடுங்கள். உங்களைப் போல் மற்றவர்களும் கடவுளைக் காணும் முயற்சியில் ஈடுபட்டிருக்கிறார்கள் என்று எண்ணுங்கள். உங்களுடைய ஆன்மிக சரக்குகளை அவர்களுக்குக் கொடுப்பதற்காக நீங்கள் வரவில்லை, உலகத்தில் வாழ்வதற்கான உங்களுடைய சாதனங்களை அவர்களுடன் பகிர்ந்துகொள்ளவே வந்திருப்பதாக எண்ணுங்கள். லௌகிகமான அந்தச் சாதனங்கள் உங்களிடம் ஏராளமாக இருக்கின்றன. அப்போதுதான் மனதில் ரகசிய நோக்கம் எதுவுமின்றி நீங்கள் உங்கள் வேலையைச் செய்ய முடியும். அதன் மூலம் நீங்கள் உங்களுடைய ஆன்மிகப் பொக்கிஷங்களையும் பகிர்ந்து கொள்ளலாம். உங்கள் மனத்தில் வேறு அந்தரங்க நோக்கம் இருக்கிறது என்ற எண்ணமே உங்களுக்கும் எனக்கும் இடையே ஒரு தடையை ஏற்படுத்திவிடுகிறது.

**பாதிரியார் :** நீங்கள் குறிப்பிடும் அந்தரங்க நோக்கம், ஒருவர் நிறைவேற்ற வேண்டிய தொண்டிற்குக் குந்தகத்தை விளைவிக்கும் என நீங்கள் எண்ணுகிறீர்களா?

**காந்திஜி :** ஆம், குந்தகம் ஏற்படும் என்பது எனது நிச்சயமான அபிப்பிராயம். அந்தரங்க நோக்கமின்றி நீங்கள் செய்யும் தொண்டில் பாதிகூட, அந்தரங்க நோக்கத்துடன் இருந்தால் செய்ய முடியாது. அந்தரங்க எண்ணம் என்று நான் குறிப்பிடுவதன் அர்த்தம் என்னவெனில், மற்றவர்களிலிருந்து நீங்கள் வேறானவர்கள் என்றும், உயர்ந்த இனத்தைச் சேர்ந்

தவர்கள் என்றும் எண்ணுவதே. நீங்கள் எல்லா சமயங் களையும் பரிசீலனை செய்துவிடவில்லை. நீங்கள் அவ்விதம் பரிசீலனை செய்திருந்தால் கூட, உங்களுக்குத் தவறே ஏற்ப டாது என்று நீங்கள் சொல்லிக்கொள்ள முடியாது. எல்லா மக்களையும் அறிந்து கொண்டுவிட்டதாக நீங்கள் எண்ணு கிறீர்கள். நீங்கள் கடவுளாக இருந்தால் மாத்திரமே எல்லோரையும் அறிந்துகொள்ள முடியும். நீங்கள் இரட் டிப்புத் தவறு செய்கிறீர்கள் என்பதை நீங்கள் அறிந்து கொள்ள வேண்டும். நீங்கள் உங்களுக்கு எது சிறந்தது என்று எண்ணுகிறீர்களோ அது உண்மையிலேயே சிறந்ததுதான் என நினைக்கிறீர்கள். இரண்டாவதாக, உங்களுக்கு எது சிறந்தது என்று கருதுகிறீர்களோ அது உலகம் முழுவ தற்கும் சிறந்தது என்று எண்ணுகிறீர்கள். தங்களுக்கு எல்லாம் தெரியும், தங்களுக்குத் தவறே ஏற்படாது என்ற இறுமாப்பையே இது காட்டுகிறது. கொஞ்சம் பணிவை மேற்கொள்ளுங்கள் என்றே நான் கேட்டுக்கொள்கிறேன்.

—'ஹரிஜன்' - 18—7—1936

# 18

# பிற சமய நூல்கள்

**கேள்வி:** குரானையும் வாசிக்கும்படி ஹிந்துக்களை நீங்கள் ஏன் கேட்கிறீர்கள்? அவர்கள் அவர்களுடைய சொந்த சமய நூல்களை வாசித்தால் போதாதா?

**பதில்:** தமது சமய நூல்களைத் தவிர பிற சமய நூல்களையும் வாசிக்க வேண்டியது ஒவ்வொருவருடைய கடமையும் ஆகும். அவ்விதம் வாசித்து ஆராய்ச்சி செய்வோருக்கு, தங்களுடைய சமயத்தில் உள்ள குற்றம் குறைகளைக் களைந்து கொள் ளுவதும், தங்கள் சமயத்தைத் தூய்மையாக்கிக் கொள்ளு வதும் சாத்தியமாகும். தவிர, நம்மிடையே கிறிஸ்தவர்கள், முஸ்லிம்கள், பார்சிகள் முதலியோரும், மற்ற சயங்களைப் பின்பற்றுவோரும் இருக்கிறார்கள். மற்ற சமயத்தினரை ஹிந்துக்கள் தங்களுடைய சகோதரர்களைப் போல் கருது வார்களாயின், அவர்கள் மற்ற சமய நூல்களை வாசிக்க வேண்டியதும் அவசியமாகும்.

—'ஹரிஜன்' - 25—5—1947

## 19

# ஹிந்து சமயத்தின் சிறப்பு

கிறிஸ்தவ இளைஞர் சங்க இயக்கத்தின் (Y. M. C. A.) ஸ்தாபகரான டாக்டர் மாட், காந்திஜியைக் கண்டு பல கேள்விகள் கேட்டார். அவற்றிற்கு காந்திஜி அளித்த பதில்களின் சுருக்கம் வருமாறு :

இந்தியாவின் பண்பாட்டிற்கு ஹிந்து சமயம் அளித்துள்ள மிகவும் விசேஷமான, மகத்தான பங்கு அகிம்சைக் கொள்கையே. சென்ற மூவாயிரம் ஆண்டுகளுக்கு மேலாக அது இந்த நாட்டின் சரித்திரத்திற்கே திட்டமான ஒரு திருப்பத்தைக் கொடுத்திருக்கிறது. இன்று கூட இந்தியாவில் உள்ள கோடிக் கணக்கானவர்களின் வாழ்க்கையில் அக்கொள்கை ஒரு ஜீவ சக்தியாகத் திகழ்வது நின்றுவிடவில்லை. அது வளர்ச்சி பெற்று வரும் ஒரு சித்தாந்த மாகும். இந்தியாவில் ஓர் ஆயுதப் புரட்சி ஏற்படுவது அசாத்தியமாக இருக்கக்கூடிய விதத்தில், அகிம்சை உபதேசம் எங்கள் தேச மக்களின் மனத்தில் அவ்வளவு தூரம் ஊடுருவி யிருக்கிறது. நாங்கள் இயல்பாகவே உடல் பலவீன முள்ள ஓர் இனத்தினர் என்று சிலர் எண்ணுவது அதற்குக் காரணம் அல்ல. ஒரு நபரைச் சுட்டுத் தள்ளுவதற்காக துப்பாக்கியின் விசையை அழுத்துவதற்கு அதிக உடல் பலம் எதுவும் தேவை யில்லை; பிசாசைப் போன்ற வெறிதான் அதற்குத் தேவை. எனவே, இந்த நாட்டில் ஆயுதப் புரட்சி அசாத்தியம் என்பதற்குக் காரணம், அகிம்சைத் தத்துவமானது மக்களின் மனத்தில் ஆழ்ந்து வேரூன்றி இருப்பதேயாகும்.

—'எங் இந்தியா' – 21—3—1929

## 20

# இஸ்லாமின் சிறப்பு

இஸ்லாம் சமயத்தைப் பற்றி டாக்டர் மாட் கேட்ட கேள்விகளுக்குப் பதிலாக காந்திஜி கூறியதாவது:

இந்தியாவின் தேசியப் பண்பாட்டிற்கு இஸ்லாம் சமயம் அளித்துள்ள சிறப்புப் பங்கு என்னவெனில், கடவுள் ஒருவரே என்பதில் அதற்குள்ள கலப்பற்ற நம்பிக்கையும், பெயரளவில் அந்த சமயத்திற்கு உட்பட்ட எல்லோரும் சகோதரர்கள் என்ற உண்மையை நடைமுறையில் அனுசரிப்பதும்தான். இந்த இரண்டையும்தான் இஸ்லாமின் சிறப்புப் பங்குகள் என்று நான்

கூறுகிறேன். ஹிந்து சமயத்திலோவெனில், சகோதர உணர்ச்சி மிதமிஞ்சிய தத்துவ ஆராய்ச்சிக்கான விஷயமாக இருந்துவருகிறது. வேதாந்தத்தை அடிப்படையாகக்கொண்ட ஹிந்து சமயம், ஒரே ஒரு கடவுளைத் தவிர வேறு கடவுள் இல்லை என்று விதித்துள்ளது. எனினும், நடைமுறையில் ஹிந்து சமயம் இஸ்லாமைப் போல் அவ்விஷயத்தில் அவ்வளவு கண்டிப்பாகவும் உறுதியாகவும் இல்லை என்பதை மறுப்பதற்கில்லை.

—'எங் இந்தியா' – 12—3—1929

# 21

# கிறிஸ்தவ சமயத்தின் சிறப்பு

**டாக்டர் மாட் :** அப்படியாயின் இந்திய தேசீய வாழ்விற்கு கிறிஸ்தவ சமயம் அளித்துள்ள பங்கு என்ன? அதாவது, கிறிஸ்தவ சமயத்தின் செல்வாக்கையல்ல, ஏசு நாதரின் செல்வாக்கைப்பற்றியே நான் குறிப்பிடுகிறேன். இன்று அவ்விரண்டிற்கும் மிகுந்த வேற்றுமை இருந்துவருகிறதென்று நான் அஞ்சுகிறேன்.

**காந்திஜி :** ஆம், அவ்விஷயமாக ஓர் ஒழுங்கு முறை இருக்கிறது. ஒரு சமய போதகரின் உபதேசத்தை, அதைப் பின்பற்றுவோரின் வாழ்க்கையிலிருந்து பிரித்து தனித்த முறையில் ஆலோசிப்பதென்பது முடியாத காரியம். துரதிருஷ்டவசமாக, இந்தியாவில் கிறிஸ்தவ சமயமானது சென்ற நூற்றைம்பது வருடங்களாக பிரிக்க முடியாதவாறு பிரிட்டிஷ் ஆட்சியுடன் கலந்திருக்கிறது. உலகத்தில் உள்ள பலவீனமான இனத்தினரை பலம் வாய்ந்த வெள்ளை ஏகாதிபத்திய இனத்தினர் சுரண்டுவதும், ஸ்தூல நாகரிகமும்தான் கிறிஸ்தவ சமயமோ என்று நமக்குத் தோன்றுகிறது. எனவே, கிறிஸ்தவ சமயத்தினால் இந்தியாவுக்கு ஏற்பட்டுள்ள நன்மை எதிர்மறையானதே. கிறிஸ்தவ சமயம், அதன் பிரசாரகர்களையும் மீறி சிறிதளவு நன்மை செய்திருக்கிறது. அதாவது, அது எங்களுக்கு அதிர்ச்சியைக் கொடுத்து எங்களது நிலையைச் சீர்திருத்திக்கொள்ளுமாறு செய்திருக்கிறது; எங்களிடையே உள்ள சமய ஊழல்களைத் தெள்ளென எடுத்துக்காட்டி எங்களைச் சிந்தித்துப் பார்க்கும்படியும் செய்திருக்கிறது.

—'எங் இந்தியா' – 21—3—1929



இப்பொழுது ராஷ்டிரபதியாக இருக்கும் டாக்டர் ராதாகிருஷ்ணனுடன் காசியில் மகாத்மா. 1942-இல் மகாத்மாவுக்கு மாலை சூட்டி வரவேற்கிறார்.



1946 மே—சிம்லாவில் மாலைப் பிரார்த்தனைக் கூட்டத்தில் மகாத்மா.

பகுதி பத்து

# பிற சமயங்களிடம் சகிப்புத்தன்மை

## 1

## சமயங்களில் குற்றம் குறைகள்

[எராவ்டா மத்திய சிறையிலிருந்து சாபர்மதி ஆசிரமவாசிகளுக்கு 1930-ஆம் ஆண்டில் காந்திஜி எழுதிய ஒரு வாரக் கடிதத்தின் விவரம் பின்வருமாறு:]

சகிப்புத்தன்மை என்ற சொல்லை நான் விரும்பவில்லை. என்ருலும், அதைக்காட்டிலும் வேறு சிறந்த சொல் எனக்குத் தோன்றவில்லை. தமது சொந்த சமயத்தைக் காட்டிலும் பிற சமயங்கள் தாழ்ந்தவை என்றும், ஏதோ தருமத்திற்காக அவற்றை சகித்துக்கொள்ளவேண்டும் என்றும் சகிப்புத் தன்மைக்குப் பொருள் கூறலாம். ஆனல், அகிம்சையோவெனில், நமது சொந்த சமயத்திற்கு நாம் எவ்வளவு மதிப்பு கொடுக்கிருேமோ அதே மதிப்பு மற்றவர்களுடைய சமயங்களுக்கும் கொடுக்க வேண்டும் என்று நமக்குக் கற்பிக்கின்றது. அகிம்சைக் கொள்கை காரணமாக, நமது சமயத்தில் உள்ள குறைபாடுகளையும் நாம் ஒப்புக்கொள்ளுகிருேம். சத்தியத்தை நாடுவோரும், அன்பு நியதியைப் பின்பற்றுவோரும் அவ்விதம் யாதொரு ஆட்சேபணையுமின்றி ஒப்புக்கொள்ளுவார்கள். சத்தியத்தை நாம் பூரணமாகக் கண்டுகொண்டிருப்போமாயின், சத்தியத்தை தேடுபவர்களாக இருக்கமாட்டோம், கடவுளுடனேயே ஒன்றுபட்டிருப்போம். ஏனெனில், சத்தியம்தான் கடவுள். ஆனல், சத்தியத்தைத் தேடிக்கொண்டிருப்பவர்கள் என்ற முறையில் நாம் நமது குறைகளை அறிந்துகொண்டுள்ளோம். நாமே குற்றம் குறை உள்ளவர்களாக இருப்பதால், நம்மால் உருவாக்கப்பட்ட கடவுளை நாம் அறிந்துகொள்ளாமல் இருப்பதுபோலவே, சமயத்தையும் குற்றம் குறையற்ற அதன் பூரண நிலையில் அறிந்துகொள்ளவில்லை. நாம் எண்ணும் சமயமானது அவ்விதமாகக் குற்றம் குறைகள் உள்ளதாக இருப்பதால், அது எப்போதும் மலர்ச்சி பெறுவதாகவும் புதிய வியாக்கியானத்திற்கு உட்பட்டதாகவும் இருந்துவருகிறது. அத்தகைய மலர்ச்சி ஏற்பட்டால்தான் சத்தியத்தை நோக்கியும், கடவுளை நோக்கியும் முன்னேற்றம் அடைவது சாத்தியமாக இருக்கும். மனிதரால் உருவாக்கப்பட்ட

எல்லா சமயங்களும் குற்றம் குறைகள் உள்ளவையாயின், ஒரு சமயத்தைக் காட்டிலும் மற்ருெரு சமயம் உயர்ந்தது என்ற பிரச்னையே எழுவதற்கில்லை.

எல்லா சமயங்களின் லட்சியமும் சத்தியத்தை வெளிப் படுத்துவதாகவே இருக்கின்றது. எனினும், எல்லா சமயங்களும் குற்றம் குறைகள் உள்ளவையாகவும், தவறுகள் ஏற்படுவதற்குக் காரணமாகவும் இருந்துவருகின்றன. மற்ற சமயங்களில் நமக்கு உள்ள பக்தியானது, அவற்றிலுள்ள குறைகளையொட்டி நமது கண்களை மறைத்துவிடவேண்டிய அவசியமில்லை. நமது சொந்த சமயத்திலுள்ள குறைகளையும் நாம் நன்ருக அறிந்துகொண்டிருக்க வேண்டும். எனினும், குறைகள் இருக்கின்றன என்பதற்காக அதிலிருந்து நாம் விலகிச் சென்றுவிடக்கூடாது; அந்தக் குறை களைத் தீர்க்க முயற்சிக்கவேண்டும். எல்லா சமயங்களையும் சம மான நோக்குடன் ஆராய முற்படுவோமாயின், மற்ற சமயங்களில் உள்ள ஒப்புக்கொள்ளக்கூடிய ஒவ்வோர் அம்சத்தையும் நமது சமயத்தில் சேர்த்துக்கொள்ளத் தயங்கமாட்டோம் என்பது மாத்திரமல்ல, அதை நமது கடமையாகவும் கருதுவோம்.

அப்படியாயின், உலகத்தில் ஏன் பல்வேறு சமயங்கள் இருக்கவேண்டும் என்ற பிரச்னை எழுகின்றது. ஆன்மா ஒன்று தான், ஆனல், அது இயக்கும் உடல்கள் ஏராளமாக இருக்கின் றன. உடல்களின் தொகையை நாம் குறைக்க முடியாது. எனி னும், ஆன்மாவின் ஐக்கியத்தை நாம் அங்கீகரிக்கின்ருேம். ஒரு மரத்திற்கு அடி மரம் ஒன்றுதான்; ஆனல், பல கிளைகளும் இலை களும் இருக்கின்றன. அதுபோலவே, உண்மையான குற்றம் குறை யற்ற ஒரே சமயம்தான் இருக்கிறது. அது மனிதரைக் கருவியாகக் கொண்டு உருவாகும்போது, அது பல சமயங்களாகிவிடுகின்றன. உண்மையான அந்த ஒரு சமயம் பேச்சிற்கெல்லாம் அப்பாற்பட் டது. குற்றம் குறையுள்ள மனிதர்கள் அதைப்பற்றிக் கூறியிருப் பதை, அவர்களைப்போலவே குற்றம் குறையுள்ள மனிதர்கள் வியாக்கியானம் செய்கிருர்கள். அவர்களுடைய வியாக்கியானங் களில் எதை சரியான வியாக்கியானம் என்று கூறுவது? ஒவ் வொருவரும் அவரவர் கோணத்திலிருந்து கூறுவது சரியாக இருக்கலாம். எனினும், ஒவ்வொருவர் கூறுவதும் தவறு என்ப தும் அசாத்தியமானதல்ல. அதனல்தான் சகிப்புத்தன்மை அவசியமாகிறது. எனினும், சகிப்புத்தன்மை என்ருல் ஒருவர் தமது சொந்த சமயத்தில் அக்கறை காட்டாதிருப்பதுதான் என்று அர்த்தமல்ல; ஆனல், அதில் அதிக புத்திசாலித்தனமான, தூய்மையான அன்புகொள்ளுவது என்பதே அதன் பொருளா கும். ஆன்மிக ரீதியாக நம்மை நாமே துருவிப்பார்த்துக்கொள் ளும் சக்தியை சகிப்புத்தன்மை நமக்கு அளிக்கின்றது. சமய வெறி, சகிப்புத்தன்மைக்கு நேர்மாருனது. சகிப்புத் தன்மைக் கும் சமய வெறிக்கும் உள்ள வேற்றுமை, தென் துருவத்திற்கும் வட துருவத்திற்கும் உள்ள வேற்றுமை போன்றது. ஒரு சமயத் திற்கும் மற்ருெரு சமயத்திற்கும் இடையே உள்ள தடைகளைத்

தகர்த்து எறிவதற்கு சமயத்தைப் பற்றிய உண்மையான அறிவு அவசியமாகும். மற்ற சமயங்களிடம் சகிப்புத் தன்மையை வளர்த்துக்கொள்ளுவதால், நமது சொந்த சமயத்தைப் பற்றிய உண்மையான அறிவு நமக்கு ஏற்படும்.

நியாயத்திற்கும் தவறுக்கும் அல்லது நன்மைக்கும் தீமைக்கும் உள்ள வேற்றுமைக்கு சகிப்புத்தன்மையால் எத்தகைய குந்தகமும் ஏற்படுவதில்லை. இதுவரையில் நான் கூறிவந்ததெல்லாம், உலகத்தில் உள்ள முக்கிய சமயங்களைக் குறித்தேயாகும். அவையெல்லாம் பொதுவான, மூலாதாரமான கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டிருக்கின்றன. அவையெல்லாம் பெரிய மகான்களையும் உற்பத்திசெய்திருக்கின்றன.

சகிப்புத்தன்மையைப் பற்றி மேலும் சில விவரங்களைக் கூற விரும்புகிறேன். எனது அனுபவங்களில் சிலவற்றை நான் விவரித்துக் கூறினால், சகிப்புத்தன்மையைப் பற்றிய எனது கருத்து இன்னும் அதிகத் தெளிவாக விளங்கும். சாபர்மதியில் நடப்பது போலவே, போனிக்ஸிலும் தினந்தோறும் பிரார்த்தனைகள் நடந்து வந்தன. ஹிந்துக்களைப் போல், முஸ்லிம்களும் கிறிஸ்தவர்களும் அதில் கலந்து கொண்டனர். காலஞ்சென்ற சேத் ருஸ்தம்ஜியும் தமது குழந்தைகளுடன் அடிக்கடி பிரார்த்தனைக் கூட்டங்களுக்கு வருவார். 'ராம நாமம் எனக்கு மிக மிக அன்பார்ந்ததாகும்' என்ற குஜராத்தி பஜனையை ருஸ்தம்ஜி சேத் மிகவும் விரும்பினர். பல்வேறு சமயத்தினரும் வேற்றுமையின்றி பஜனையிலும், பிரார்த்தனையிலும் கலந்துகொண்டது உண்டு.

எனது திருப்திக்காக, நான் பல்வேறு சமயங்களையும் சேர்ந்த நூல்களை வாசித்தபோது, கிறிஸ்தவ, இஸ்லாம், ஜோராஷ்டிரிய, யூத, ஹிந்து சமயங்களைப் பற்றிய விவரங்களை நான் போதிய அளவு தெரிந்துகொண்டேன். அந்த நூல்களை நான் வாசித்த போது, என் மனம் எவ்வித வேற்றுமையும் பாராட்டாமல் அவற்றில் சமமாக லயித்தது. இந்த உண்மை அப்போது எனக்குப் புலனாகவில்லை. என் சொந்த சமயம் அல்ல என்பதற்காக, பிற சமயங்களைக் கண்டிக்கவேண்டுமென்ற ஆர்வம் எனக்கு ஒரு காலத்திலும் ஏற்பட்டதில்லை. ஒவ்வொரு சமயத்தையும் சேர்ந்த புனித நூலை நான் பயபக்தியுடன் வாசித்தபோது, ஒவ்வொரு நூலிலும் சில மூலாதாரமான ஒழுக்க விதிகள் இருப்பதைக் கண்டேன். அவற்றிலுள்ள சில விஷயங்களை அப்போது நான் அறிந்து கொள்ளவில்லை. இப்போதும் கூட அறிந்து கொள்ள முடியவில்லை. எனினும், நம்மால் அறிந்து கொள்ள முடியவில்லை என்பதற்காக எதையும் நியாயமற்றது என்று அவசரப்பட்டுக் கற்பனை செய்துகொள்ளுவது தவறு என்று, அனுபவமானது என்க்குக் கற்பித்திருக்கிறது. முதலில் நான் அறிந்து கொள்ள முடியாத சில விஷயங்கள், பிறகு பட்டப்பகலைப்போல் தெளிவாகத் தெரியலாயின. சமநோக்குடன் கூடிய மனமானது, பல சங்கடங்களையும் தீர்க்க நமக்கு உதவியாக இருக்கின்றது; நாம் எதையாவது

கண்டித்தால் கூட, பணிவுடனும் மரியாதையுடனும் நமது கண்டனத்தைத் தெரிவிப்பதற்கும் உதவியாக இருக்கிறது. அத்தகைய கண்டனம் யாருக்கும் வேதனையைக் கொடுப்பதில்லை.

சமயங்களின் சமத்துவக் கொள்கையை அங்கீகரிப்பது, சமயத்திற்கும் சமய விரோதமான செய்கைகளுக்கும் உள்ள வேற்றுமையை ரத்து செய்வதாகாது. சமய விரோதமான செய்கைகளையொட்டி சகிப்புத் தன்மை காட்ட வேண்டும் என்பது நமது நோக்கமல்ல. எனவே, எது சமயத்துக்கு உகந்தது, எது சமயத்திற்கு விரோதமானது என்பதை ஒவ்வொருவரும் அவரவர் விருப்பப்படி தீர்மானிக்க முற்பட்டுவிட்டால், சமத்துவ நோக்கிற்கு இடமே இராமற் போய்விடும் என்று சிலர் ஆட்சேபிக்கலாம். அன்பு நியதியை நாம் பின்பற்றுவதாயின், சமய விரோதியான சகோதரரிடத்தில்கூட நாம் துவேஷம் கொள்ளமாட்டோம்.

அதற்கு மாறாக, நாம் அவரிடமும் அன்பு காட்டுவோம்; அவர் தமது தவறை அறிந்துகொள்ளும்படி செய்வோம். அல்லது நமது தவறை அவர் சுட்டிக்காட்ட இடம் கொடுப்போம். ஒவ்வொருவரும் மற்றவரின் கருத்து வேற்றுமையைச் சகித்துக் கொள்ளுவோம். மற்றவர் அன்பு நியதியை அனுசரிக்காவிடில், அவர் நம் மீது ஆத்திரம் கொள்ளலாம். எனினும், நம் மனத்தில் அவரிடம் உண்மையான அன்பு இருந்தால், அந்த அன்பு இறுதியில் அவரது துவேஷத்தை அகற்றிவிடும். தவறு செய்வதாக நாம் கருதுவோரிடம் நாம் பொறுமையிழந்துவிடக் கூடாது. அவசியமாயின், நாம் துன்பத்திற்கு உள்ளாகவும் தயாராக இருக்க வேண்டும். பொன் போன்ற இந்த விதியை மாத்திரம் நாம் அனுசரித்தால், நமது பாதையில் உள்ள எல்லா இடையூறுகளும் அறவே மறைந்துவிடும்.

'எராவ்டா மந்திர்' – 10– 11– ஆவது அத்தியாயங்கள்

## 2

## அவசியமான தேவையை பூர்த்தி செய்கின்றன

முக்கியமான எல்லா சமயங்களும் உண்மையானவை. ஆதலால், நான் அவற்றையெல்லாம் சமமாகவே கருதுகிறேன். மானிட வர்க்கத்தின் ஆன்மிக முன்னேற்றத்தில் உள்ள அவசியமான தேவையை, அவை பூர்த்தி செய்வதாக இருக்கின்றன. எனவே, என் பராமரிப்பில் வளர்ந்துவரும் முஸ்லிம், பார்சி, கிறிஸ்தவக் குழந்தைகளை அவரவர் சொந்த சமயத்தையே அனுசரித்து வரும்படி செய்வதில் எனக்கு கஷ்டம் எதுவும் இல்லை.

விசேஷ நூல்களுக்கு இணங்க, குறிப்பிட்ட வழிபாடு முறைகளை அவர்களுக்குக் கற்பிக்க வேண்டுமென அவர்களுடைய பெற்றோர்கள் விரும்பியபோது, அக் குழந்தைகளுக்காக நான் சில நூல்களை ஆராய்ச்சி செய்ய வேண்டியிருந்தது.

—'ஹரிஜன்' – 6—4—1934

3

# சிறைக்கூடம் அல்ல எனது சமயம்

என் வீட்டைச் சுற்றி எல்லாப் பக்கங்களிலும் சுவர்களை எழுப்பி, ஜன்னல்களையும் அடைத்துக் கொண்டுவிட வேண்டுமென நான் விரும்பவில்லை. எல்லா நாடுகளின் பண்பாடுகளும் யாதொரு தங்குதடையுமின்றி என் வீட்டில் மணம் வீசவேண்டும் என்பதே என் விருப்பமாகும். எனினும், யாரும் என் காலை வாரி விடுவதற்கு நான் அனுமதிக்கமாட்டேன். காரணமின்றி குறுக்கிடுபவனாகவோ, ஒரு பிச்சைக்காரனாகவோ அல்லது ஓர் அடிமையாகவோ மற்றவர்களின் வீடுகளில் வசிக்கவும் நான் இசையமாட்டேன். எனது சமயம் ஒரு சிறைக்கூடம் அல்ல. கடவுளின் சிருஷ்டியில் மிக மிகத் தாழ்ந்தவர்களுக்கும் அதில் இடம் இருக்கிறது. எனினும், அகந்தை, இன இறுமாப்பு, சமய அல்லது நிற வேற்றுமை இவற்றை எதிர்த்து நிற்கும் ஒரு கோட்டையாக எனது சமயம் விளங்குகிறது.

—'எங் இந்தியா'—1—6—1921

4

# பகை எதற்கு?

கருத்து வேற்றுமைக்கு ஒருபோதும் பகை என்று அர்த்தமில்லை. அவ்விதம் இருக்குமாயின், நானும் என் மனைவியும் ஜன்ம விரோதிகளாக இருக்கவேண்டும். கருத்து வேற்றுமை இல்லாத இரண்டு நபர்களைக்கூட உலகில் நான் காணவில்லை. நான் கீதையைப் பின்பற்றுகிறவன். எனவே. என்னிடம் கருத்துவேற்றுமை உள்ளவர்களையும் எனது நெருங்கிய உற்றார் உறவினரைப் போலவும், நண்பர்களைப் போலவுமே நான் எப்போதும் நேசிக்க முயற்சித்துள்ளேன்.

—'எங் இந்தியா' – 17—3—1927

# 5

# சரியான மனப்போக்கு

மற்ற சமயங்களை இகழ்ந்து குற்றம் கூறுவதும், தங்கள் சொந்த சமயம் ஒன்றுதான் கஷ்டங்களிலிருந்து விடுதலை அளிக்கக்கூடியது என்று பெருமையடித்துக் கொள்ளுவதும் வழக்கமாக இருந்துவருகிறது. அத்தகைய மனப்போக்கு அடியோடு மாற வேண்டும். அத்தகையோர் தாங்கள் எப்படி இருக்கிறார்களோ அப்படியே பொதுஜனங்களின் முன்னிலையில் தோன்றவேண்டும்; ஹிந்துக்கள் சிறந்த ஹிந்துக்களாவதையும், முஸ்லிம்கள் சிறந்த முஸ்லிம்களாவதையும் பார்ப்பதில் அவர்கள் மகிழ்ச்சி அடைய முயற்சிக்க வேண்டும்.

—'எங் இந்தியா' – 14—7—1927

# 6

# நல்ல எண்ணம் வேண்டும்

பிரார்த்தனைக் கூட்டம் ஒன்றில் காந்திஜி, தமக்கு ஒரு முஸ்லிமிடமிருந்து வந்த கடிதத்தைப் பற்றிக் குறிப்பிட்டார். அக் கடிதத்தின் சாரம் பின் வருமாறு :

"இஸ்லாமுக்கும் ஹிந்து சமயத்துக்கும் பொதுவான அம்சம் எதுவுமே இல்லை. எனவே, இரண்டு சமயங்களுக்கும் வேற்றுமையில்லை என்று கூறுவது முடியாத காரியம். கடவுள் ஒருவரே என்பதில் ஹிந்துக்களுக்கு நம்பிக்கையில்லை. மனிதனைக் காட்டிலும் பசுக்களும் ஆடுகளும் உயர்ந்தவை என்று ஹிந்துக்கள் கருதுகின்றனர். உயர்ந்தவர்—தாழ்ந்தவர் என்ற பாகுபாட்டிலும் ஹிந்துக்களுக்கு நம்பிக்கை இருக்கிறது. இஸ்லாம் சமயமோ, எல்லோரையும் சகோதரர்களாகக் கருதுகிறது. உயர்ந்தவர்—தாழ்ந்தவர் என்றும் இஸ்லாம் வேற்றுமை பாராட்டுவதில்லை. அல்லா என்ற ஒரே கடவுளிடமே அது நம்பிக்கை வைத்துளது."

ஹிந்து சமயத்தை இந்தக் கடிதம் கேலிசெய்வதாக இருக்கிறது. மனிதனைக் காட்டிலும் பசுவையும் ஆட்டையும் உயர்வாகக் கருதும் ஹிந்து ஒருவர் கூட இல்லை. என்னைப் போன்ற ஒருவர், கடவுளின் சிருஷ்டியிலேயே தாம்தான் மிக மிகத் தாழ்ந்தவர் என்று நம்பினால், அதில் தவறு என்ன இருக்கிறது? அது உண்மையான பணிவிற்கே ஓர் அடையாளமாகும். ஒவ்வொரு ஹிந்துவுக்கும் ஒரே கடவுளிடம்தான் நம்பிக்கை உண்டு. ஹிந்து சமயத்தைச் சுற்றி பாசிகள் படர்ந்திருக்கின்றன என்பதை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். அதன் பக்தர்கள்

தூய்மையான ஹிந்து சமயத்தினிடம் எப்போதும் உண்மையாக நடந்து கொண்டதில்லை என்பதையும் நான் ஒப்புக் கொள்ளு கிறேன். எனவே, என்னைப் போன்ற ஹிந்து சமய பக்தர்கள், ஹிந்து சமயத்தை அறிந்து கொள்ளுவதுபோல், பாரபட்சமற்ற மற்றவர்களும் அறிந்து கொள்ளவேண்டியது கடமையாகும். ஒரு நல்ல முஸ்லிம் இஸ்லாம் சமயத்தை எவ்விதம் அறிந்து கொள்ளு கிருரோ அதுபோலவே பாரபட்சமற்ற ஒரு ஹிந்துவும் அதை (இஸ்லாம் சமயத்தை) அறிந்து கொள்ள வேண்டியது கடமை யாகும். இதுதான், ஒரு சமயத்திற்கு விளக்கம் கூறுவதற்கான சிறந்த வழி என்பது எனது அபிப்பிராயம். அப்போது, எல்லாப் பெரிய சமயங்களும் ஒரே அடிப்படையிலிருந்தே எழுந்துள்ளன என்பதையும், மூலாதாரமான விதிகள் எல்லா வற்றிற்கும் பொதுவானவை என்பதையும் கண்டுகொள்ளலாம்.

—'ஹரிஜன்' – 7—9—1947

# 7
# ஆன்மிக விஷயங்கள்

ஒவ்வொரு வாரமும் காந்திஜியைக் கண்டு பேசுவதற்காக கிறிஸ்தவப் பாதிரிமார் வருவது உண்டு. அவர்கள், ஆன்மிக விஷயங்களைப் பற்றி காந்திஜியை சரமாரியாகக் கேள்விகள் கேட்பதும் வழக்கம். காந்திஜி கொழும்புவில் இருந்த போது ஓர் அன்பர் கேட்டதாவது :

"பாவ மன்னிப்பு சாத்தியம் என்பது பற்றித் தாங்கள் என்ன நினைக்கிறீர்கள்?"

காந்திஜி: கடவுளிடம் நாம் கோரும் மன்னிப்பு, பூமியில் உள்ள ஒரு மன்னரிடமிருந்து ஒரு குற்றவாளி கோரும் மன்னிப் பைப் போன்றதல்ல. செய்த குற்றத்துக்காக உண்மையிலேயே மனம் வருந்தி கடவுளிடம் மன்னிப்புக் கோர வேண்டும். அவ் விதம் கோருவது, குறிப்பிட்டவரின் மனமாற்றத்தையும், மனத் தூய்மைக்காக இடைவிடாது முயற்சி செய்வதையும் காட்டுவ தாக இருக்கவேண்டும். மனிதனின் முயற்சி என்று எதுவுமில்லை என நான் ஒரு சமயம் சந்தித்த பிளிமத் சகோதரர்* வாதித்தார். 'ஏசு நாதர் சிலுவையில் அறையப்பட்ட உண்மையை நீங்கள் ஒப்புக் கொண்டுவிட்டால், பாவமெல்லாம் அடியோடு போய் விடும்' என்று அவர் கூறியதைக் கண்டு நான் பிரமித்துப் போய் விட்டேன். ஏனெனில், தூய்மையடைவதற்காக உறுதியுடன் முயற்சித்துவரும் பல கிறிஸ்தவ நண்பர்களை நான் அறிந்திருந்

* பிளிமத் சகோதரரைப் பற்றி காந்திஜி தமது சுயசரிதையில் குறிப்பிட்டுள்ளார். அவ்விவரங்களை மகாத்மா காந்தி நூல்கள் 3-வது தொகுப்பு 173, 228 பக்கங்களில் காணலாம்.

தேன். 'நீங்கள் பாவம் செய்ய வில்லையா?' என்று அவரை நான் கேட்டேன். 'ஆம் செய்கிறேன். ஆனல், எனக்காக ஏசு நாதர் குறுக்கிட்டு எனது பாவங்களையெல்லாம் களைந்துவிடுகிருர் என்ற உண்மையே எனக்கு பலத்தைக் கொடுக்கிறது' என்று அவர் கூறினர். பிளிமத் சகோதரரை எனக்கு அறிமுகம் செய்து வைத்த நண்பரும் அதைக் கேட்டு பிரமித்துப் போய்விட்டார். மன்னிப்புக் கேட்பதென்ருல் நாம் மீண்டும் பாவம் செய்யக் கூடாது. நமது மன்னிப்புக் கோரிக்கை நிறைவேறிவிட்ட தெனில், பின்னர் யாதொரு பாவமும் செய்யாமல் எதிர்த்து நிற்ப தற்கான சக்தியை நாம் பெற்றிருக்கவேண்டும். இடைவிடா மலும் சலிப்பின்றியும் முயற்சி செய்த பிறகே, கடவுள் நம்மைக் கைதூக்கிவிட முன்வருகிருர். அப்போதுதான் கடவுளின் அருள், பாவத்திலிருந்து நம்மைத் தடுக்கும் பாதுகாப்புச் சுவரைப்போல் இருக்கும். நாம் பாவம் செய்ய மாட்டோம் என்ற உறுதியும் நம் மனத்தில் வளர்ந்துவரும். ஹக்ஸ்லியுடன் கிளாட்ஸ்டன் * நடத்திய பிரபல விவாதத்தில், 'கடவுளின் அருள் நமக்கு நிச் சயமாகக் கிடைத்துவிட்டால், நாம் பாவம் செய்ய இயலாத வர்களாகிவிடுவோம்' என்று கிளாட்ஸ்டன் கூறினர். 'பிறந்ததி லிருந்து ஏசு நாதர் பாவம் செய்ய இயலாதவராக இருந்தார். எனவே, நாமும் இடைவிடாமல் முயற்சி செய்தால், நம்மால் பாவம் செய்ய முடியாது' என்றும் கிளாட்ஸ்டன் கூறினர். நமது மனத்தில் ஒரே ஒரு கெட்ட எண்ணம் ஏற்படும் வரையில் கூட கடவுளின் பூரண மன்னிப்போ அல்லது அருளோ நமக்குக் கிடைக்காதெனநாம் முடிவு செய்து கொள்ளவேண்டும்.

சமயம் சம்பந்தப்பட்ட வரையில் காந்திஜியின் நிலை, அரை குறையாகக் கட்டப்பட்ட வீட்டில் வாழ்வதற்கு ஒப்பாக இல்லையா என்று மற்ரெரு நண்பர் கேட்டார். அதற்குப் பதிலாக காந்திஜி கூறியதாவது :

"இந்தக் கேள்வி கேட்ட நண்பரை நான் நிச்சயமாகப் பாராட்டுகிறேன். எனினும், என் சம்பந்தப்பட்ட வரையில் அரை குறையான வீடு என்ற பேச்சிற்கே இடமில்லை. எதையும் விடாப் பிடியாக பூரணமாக நிறைவேற்றுபவன் என்றே என்னைப் பற்றி புகார் கூறுகிருர்கள். நான் என்னை ஒரு சனுதன ஹிந்து என்று கூறிக் கொள்ளுவதைக் கண்ட நண்பர்கள் குழப்பம் அடை கிருர்கள் என்பதை நான் அறிவேன். ஏனெனில், சாதாரணமாக சனுதனி என்று கூறப்படுவோரிடம் அவர்கள் காணும் அம்சங் களை என்னிடம் அவர்களால் காணமுடியவில்லை. அதற்குக் காரணம் என்னவெனில், நான் உறுதிவாய்ந்த ஓர் ஹிந்துவாக இருந்தும், எனது சமயத்தில் கிறிஸ்தவ, இஸ்லாமிய, ஜொராஷ் டிரிய சமய உபதேசங்களுக்கும் இடம் இருப்பதைக் காண் கிறேன். ஆகையால், எனது ஹிந்து சமயமானது எல்லாம்

---

* வில்லியம் இவார்ட் கிளாட்ஸ்டன் (1809–98) பல ஆண்டுகள் வரையில் பிரிட்டிஷ் பிரதம மந்திரியாக இருந்து உலகப் புகழ் பெற்றவர்

சேர்ந்த ஒரு கதம்பமாக சிலருக்குத் தோன்றுகிறது. சர்வ சமய வாதி என்று கூட எனக்கு சிலர் பெயர் சூட்டியிருக்கிறார்கள். சர்வ சமயவாதி என்றால், எந்த சமயத்தையும் சேராதவன் என்று தான் பொருள்படும். என் சமயமோ பரந்த நோக்கம் உள்ள சமயமாகும். அது கிறிஸ்தவர்களை எதிர்ப்பதில்லை, சமய வெறி கொண்ட முஸ்லிமைக் கூட எதிர்ப்பதில்லை. எனது சமயம், மிகவும் பரந்த சகிப்புத்தன்மையை அடிப்படையாகக் கொண்டிருக்கிறது. ஒரு மனிதர் சமய வெறி பிடித்த செயல்களில் ஈடுபடுவதற்காக அவரை நான் தூற்றுவதில்லை. ஏனெனில், அவரது கோணத்திலிருந்து அவற்றை நான் பார்க்க முயற்சிக்கிறேன். அத்தகைய பரந்த சமயமே என்னைத் தாங்கிவருகிறது. அது எனக்கு அல்ல, மற்றவர்களுக்கு ஓரளவு தருமசங்கடமாக இருக்கிறது என்பதை நான் அறிவேன்!''

''சமய சம்பந்தமான விஷயங்களில் இந்தியா எவ்விதம் இருந்து வரவேண்டுமென நீங்கள் விரும்புகிறீர்கள்?''

இவ்விதம், யாழ்ப்பாணத்தில் நடந்த பாதிரிமார் கூட்டத்தில் ஒருவர் கேட்ட கேள்விக்குப் பதிலாக காந்திஜி கூறியதாவது:

'' தங்களுடைய கூட்டத்தைப் பெருக்கிக் கொள்ளுவதற்காக தீண்டாதாரைப் பிடித்துக்கொள்ள எண்ணும் பாதிரியாரையோ அல்லது முஸ்லிமையோ நான் சகிக்க முடியாது என்பதை மீண்டும் கூறுகிறேன். அவர்களால் முடியுமானால், தீண்டாதவர்களைச் சிறந்த ஹிந்துக்களாக்க முயற்சிக்கட்டும் என்று மைசூர் திவான் கேட்டுக்கொண்டதைப் போல நானும் கேட்டுக்கொள்ளுகிறேன். இந்தியாவில் மாத்திரமல்ல, உலகத்திலுள்ள பல்வேறு சமயங்களையும் சேர்ந்த எல்லோரும் பரஸ்பரம் தொடர்பு கொள்ளுவதால் சிறந்த மனிதர்களாகவேண்டும் என்பதே எனது ஆர்வமாகும். அவ்விதம் நடைபெறுமாயின், வாழ்வதற்கு உலகம் இன்றிருப்பதைக் காட்டிலும் மிகச் சிறந்த இடமாக இருக்கும். மிகப் பரந்த முறையில் சகிப்புத்தன்மை நிலவ வேண்டும் என்றே நான் கேட்டுக்கொள்ளுகிறேன். அந்த லட்சியத்திற்காகவே நான் உழைத்துவருகிறேன். ஒவ்வொரு சமயத்தையும் அந்தந்த சமயத்தைச் சேர்ந்தவர்களின் கோணத்தில் பரிசீலனை செய்யும்படி நான் மக்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன். நான் கனவு காணும் இந்தியா, ஒரே சமயத்தை அபிவிருத்தி செய்துகொள்ளவேண்டுமென நான் எதிர்பார்க்கவில்லை. அதாவது இந்தியா, முற்றிலும் ஹிந்து, முற்றிலும் கிறிஸ்தவ அல்லது முற்றிலும் முஸ்லிம் இந்தியாவாக இருக்கவேண்டும் என நான் விரும்பவில்லை. ஆனால், ஒன்றின் பக்கத்தில் மற்றொன்றாக எல்லா சமயங்களும் செயல்படவேண்டும் என்பதும், எல்லா சமயங்களிடத்திலும் இந்தியா பூரண சகிப்புத் தன்மையுடன் இருந்துவரவேண்டும் என்பதுமே எனது விருப்பமாகும்.''

காந்திஜியைப் பொறுத்தமட்டில், கீதையும் புதிய ஏற்பாடும்* எவ்வளவுக்கு அவருக்கு மன ஆறுதலை அளிக்கும் ஊற்றுக்காலாக இருந்து வருகின்றன என்பதை அவரிடமிருந்து அறிந்துகொள்ள பாதிரிமார் நண்பர்களில் ஒருவர் விரும்பினர். அதற்குப் பதிலாக காந்திஜி, இங்கிலாந்தில் தாம் சமய சம்பந்தமான ஆராய்ச்சிகளை ஆரம்பித்த வரலாற்றை† விவரமாக அந்த நண்பருக்குக் கூறினர். காந்திஜி மேலும் குறிப்பிட்டதாவது:

"நான் மலைப் பிரசங்கத்தை‡ வாசித்தபோது, அதில் புதிதாக நான் எதையும் காணவில்லை. எனது குழந்தைப் பருவத்தில் நான் கற்றுக்கொண்டிருந்த விஷயங்களே, மலைப் பிரசங்கத்தில் மனத்தில் பதியும் விதத்தில் பின்வருமாறு தெளிவாக விவரிக்கப்பட்டிருந்தன: 'உங்களுக்கு ஒரு கோப்பை தண்ணீர் கொடுத்தவருக்கு நீங்கள் திருப்பி ஒரு கோப்பை தண்ணீர் கொடுப்பதிலும், உங்களை வணங்கியவருக்கு நீங்கள் திரும்பவும் வணக்கம் செலுத்துவதிலும் போற்றத் தக்கது எதுவுமில்லை. உங்களுக்குத் தீங்கு செய்தவருக்கு நீங்கள் நன்மை செய்தால் தான் சிறிதளவு புண்ணியம் உண்டு.'

"மலைப் பிரசங்கத்திற்கும் பகவத் கீதைக்கும் நான் எவ்வித வேற்றுமையையும் காணமுடியவில்லை. மலைப் பிரசங்கம் அலங்காரமாக விவரிப்பதையே, பகவத் கீதை சாத்திரீய முறையில் சுருக்கமாகக் கொடுக்கிறது. அன்பு விதியை அதாவது துறவு விதியை பகவத்கீதை சாத்திர முறைப்படி விவாதிக்கிறது. அதே விதியையே மலைப் பிரசங்கம் வியக்கத்தக்க பாஷையில் விளக்குகிறது. பழைய ஏற்பாட்டில் உள்ள சில பாகங்கள் எனக்கு வெறுப்பைக் கொடுத்தன. ஆனல், புதிய ஏற்பாடு எனக்கு மன ஆறுதலையும், எல்லையற்ற ஆனந்தத்தையும் கொடுத்தது. இன்று நான் கீதையை இழந்துவிடுவதாகவும் அதில் அடங்கியுள்ள விஷயங்களை மறந்துவிடுவதாகவும் வைத்துக்கொள்ளுவோம். ஆனல், அப்போது என்னிடம் மலைப் பிரசங்கத்தின் ஒரு பிரதி மாத்திரம் இருந்துவிட்டால் போதுமானது. கீதையிலிருந்து நான் பெறும் அதே ஆனந்தத்தை மலைப் பிரங்கத்திலிருந்து நான் பெறுவேன்.

"என்னிடம் உள்ள ஒரு தன்மையை நீங்கள் அறிவீர்கள். அதாவது, எவ்விஷயங்களிலும் உள்ள ஆட்சேபகரமானதை அல்ல, நல்ல அம்சத்தையே நான் பார்க்க விரும்புகிறேன். அதனல்தான் எந்தச் சிறந்த சமயத்தையும் சேர்ந்த எந்தச்

* பைபிள், பழைய எற்பாடு என்றும் புதிய ஏற்பாடு என்றும் இரண்டு பாகங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளன. காந்திஜி தமது கட்டுரைகளிலும் பிரசங்கங்களிலும் புதிய ஏற்பாட்டின் சிறப்பைப் பற்றி அடிக்கடி குறிப்பிடுவது உண்டு.

† காந்திஜி இங்கிலாந்தில் நடத்திய சமய சம்பந்தமான ஆராய்ச்சியைப் பற்றிய முழு விவரங்களும் அவரது சுய சரிதையான மகாத்மா காந்தி நூல்கள்-3-ஆவது தொகுப்பில் 99-104 பக்கங்களில் வெளியாகியுள்ளன.

‡ பைபிள் புதிய ஏற்பாட்டில் உள்ள சில அத்தியாயங்களே மலைப் பிரசங்கம் என்று குறிப்பிடப்படுகின்றன. ஏசுநாதர் மலை மீது ஏறி திரளான ஜனங்களுக்குச் செய்த அருமையான உபதேசங்கள்தான் அவை.

சிறந்த நூலிலிருந்தும் நான் ஆறுதலும், உற்சாகமும் பெற முடிகிறது.''

—'எங் இந்தியா' - 22—12—1927

# 8

# சகிப்புத்தன்மையின் அவசியம்

பல சமயங்கள் நிலவும் இந்த நாட்டில், பொதுவான எந்த சமய நடவடிக்கையை மேற்கொள்ளுவது என்பது ஒரு தொண்டருக்குக் கஷ்டமாக இருக்கிறது என்பதை ஓர் அன்பர் எடுத்துக் காட்டியுள்ளார். அதன்பின் ஒரு தொண்டர் அனுசரிக்க வேண்டிய சமயம் என்ன என்பதையும் அவர் அலங்காரமான நடையில் இவ்விதம் விவாதித்துள்ளார்:

''சத்தியம், உலகத்தில் உள்ள சமயங்களுக்குச் சமமான நிலையில் இல்லை. அது போலவே தொண்டரின் சமயமும் மற்ற சமயங்களுக்குச் சமமானதல்ல. எல்லா சமயங்களும் சத்தியத்தை உபதேசிக்கின்றன; சத்தியமே அவற்றின் சாரமாகவும் இருக்கிறது. எனினும், அந்த சமயங்களைப் போல் சத்தியமும் ஒரு தனித்த நிலையில் இல்லை. பல்வேறு சமயங்களுள் சத்தியம் ஒன்றல்ல. ஆனல், எல்லா சமயங்களையும் காட்டிலும் அது மிகவும் மேலானதாக இருக்கிறது; அவற்ருல் ஒப்புக்கொள்ளப்பட்ட எஜமானனுகவும் இருக்கிறது. பல சமயங்களுக்கும் அடிப்படையாக இருக்கும் சத்தியத்தை மாத்திரம் எல்லோரும் அங்கீகரித்து, அதைத் தங்கள் வாழ்க்கையில் மேற்கொள்ளுவார்களாயின், பல்வேறு சமயங்களிடையேயும் உள்ள முரண்பாடு அந்த விநாடியிலேயே இருந்த இடம் தெரியாமல் மறைந்துவிடும்; சமயத்தின் பெயரால் அடிக்கடி நடைபெறும் ரத்தக்களரிகளும் ஒழிந்துவிடும். சமயங்களுக்கெல்லாம் சமயமான இந்த சத்தியத்தின் பெருமையை மனித வர்க்கம் அறிந்துகொள்ளும்போது, அதை உடனடியாகவும் ஏகமனதாகவும் மனித வர்க்கம் அங்கீகரித்து சத்தியத்தில் பக்தியும் விசுவாசமும் வைக்கும் என்பதில் ஐயமில்லை. எனினும், அதற்காக தாங்கள் வேறு சமயத்திற்கு மாற்றப்படுவதை மக்கள் ஒரு விநாடி கூட சகிக்க மாட்டார்கள். ஆனல், சத்தியத்தை மேற்கொள்ளும் இத்தகைய மத மாற்றத்தை, இவ்விதம் பிரகாச வெள்ளத்தினல் இருளை அகற்றும் காரியத்தை, அறிவைத் தெளிவு படுத்தும் இம்முறையை ஒவ்வொருவரும் இதய பூர்வமாகப் பாராட்டுகிருர்கள். அதற்காக ஏங்குகிருர்கள். ஓர் ஹிந்து, தாம் இஸ்லாம் சமயத்திற்கு மாறுவதை விரும்பமாட்டார்; எனினும், இஸ்லாம் சமயத்தில் பொதிந்துகிடக்கும் சத்தியத்தை ஆர்வத்துடன் கிரகித்துக்கொள்ள எப்போதுமே தயாராகஇருப்பார் என்பது நிச்சயம். உலகம் முழுவதையும் ஒரே சமயத்தின் கீழ் கொண்டுவர வேண்டும் என்ற கனவு எப்போதாவது நிறைவேறுமாயின், சத்தியத்தின் ஆதிபத்தியத்தை உலக சமயமாக நிலை நிறுத்துவதன் மூலமே அது சாத்தியமாகும். சத்தியமே, பரிபூரணமான சத்தியமே தொண்டரின் சமயமாகும்; சத்தியத்தைத் தவிர வேறு எதுவும் அவரது சமயமாக இருக்க முடியாது. அதன் ஆதிக்கத்தீற்கு மானிடவர்க்கம்

தானுக வலுவில் அடிபணியும் என்று எதிர்பார்ப்பது நடைபெற முடியாத ஒரு விஷயம் அல்ல. இவ்விஷயத்தைத் தெளிவாகத் தெரிந்து கொண்டபின், சத்தியமானது அதன் பக்தனின் மனத்தில் எத்தகைய ஆழ்ந்த உணர்ச்சிகளை உண்டாக்கும் என்பதை நாம் அடுத்தபடியாக பரிசீலனை செய்ய வேண்டும். நீண்ட காலமாகத் தீராமல் இருந்த கர்ம நோய் தீர்ந்துவிட்டது போலவும், குருடனுக இருந்த ஒருவன் கண்களைப் பெற்றுவிட்டது போலவும், முடவனுக்கு திடீரென்று நடக்கும் சக்தி ஏற்பட்டுவிட்டது போலவும், ஆண்மையற்றவன் திடீரென்று ஆண்மையைப் பெற்றது போலவும் அவர் மனத்தில் மகிழ்ச்சி ஏற்படும். சத்தியம், தன் பக்தனுடைய ஆன்மாவின் இருளை மாத்திரம் அல்ல, உடலின் இருளைக்கூட அகற்றி ஒளி வீசும்படி செய்யும். ஆன்மாவை, 'உடலின் கண்' என்று கூறுகிருர்கள். எனவே ஆன்மா, சத்தியம் அல்லது ஒளியினுல் நிறைந்திருந்தால் அது உடலுக்கும் ஒழுங்கான வழிகாட்டியாக இருக்க முடியும்.

''ஏசுநாதர் இவ்விதம் கூறுகிருர்: 'உடலின் ஒளியே கண்; எனவே, உன்னுடைய கண் நேர்மையான வழியில் சென்ருல், உன் உடல் முழுவதும் ஒளிமயமாக இருக்கும். ஆனுல் உன் கண் தீய வழியில் சென்ருல், உன் உடல் முழுவதும் இருள் மயமாக இருக்கும். எனவே, உன்னிடம் உள்ள ஒளி மறைந்து இருளாகிவிடாமல் எச்சரிக்கையாக இரு.' ''

இந்தக் கடிதத்தில் உள்ள அலங்காரச் சொற்களையெல்லாம் நீக்கிவிட்டுப் பார்த்தோமாயின், சத்தியம் என்ற சமயமே, ஹிந்து சமயம், இஸ்லாம், கிறிஸ்தவ சமயம் முதலிய பல்வேறு பாகங்களாகப் பிரிகின்றது என்பது தெரிகிறது. அந்தரங்க சுத்தியுள்ள, மனச்சாட்சிக்கு இணங்க நேர்மையாக நடந்துகொள்ளும் ஹிந்துக்களுக்கும், முஸ்லிம்களுக்கும், கிறிஸ்தவர்களுக்கும், சத்தியமானது முறையே ஹிந்து சமயமாகவும், இஸ்லாம் சமயமாகவும், கிறிஸ்தவ சமயமாகவும் தோன்றும்.

நாம் எல்லோரும் ஒரு காலத்திலும் ஒரேவிதமாகச் சிந்திக்க முடிவதில்லை. நாம் சத்தியத்தை துண்டு துண்டாகவும் பல்வேறு கோணங்களிலிருந்தும் பார்க்கிறோம். எனவே, நாம் பின்பற்றக் கூடிய பொன் போன்ற செயல்முறை பரஸ்பரம் சகிப்புத் தன்மையே. மனச்சாட்சி எல்லோருக்கும் ஒரேவிதமாக இருப்பதில்லை. தனி நபரின் நடத்தையைப் பொறுத்தவரையில், மனச்சாட்சி சரியான வழிகாட்டிதான். ஆனுல், எல்லோரும் மனச்சாட்சியின்படி நடந்துகொள்ளவேண்டும் என்று விதிப்பது, மற்றவரின் மனச்சாட்சி சுதந்திரத்தில் சகிக்க முடியாத விதத்தில் தலையிடுவதாகும். தவிர, மனச்சாட்சி என்ற சொல் மிகவும் துஷ்பிரயோகம் செய்யப்பட்டுவருகிறது. எல்லோருக்கும் மனச்சாட்சி உண்டா? நர மாமிசம் தின்னும் ஒருவருக்கு மனச்சாட்சி இருக்குமா? தனது சக மனிதர்களைக் கொன்று தின்பதே கடமையென்று அவனது மனச்சாட்சி அவனுக்குக் கூறுகிறது. எனவே, அவன் தனது மனச்சாட்சியின் கட்டளைப்படி நடந்து கொள்ள அனுமதிக்கவேண்டுமா? 'நியாயத்திற்கும் அநியாயத்திற்கும் உள்ள வேற்றுமையை ஒருவர் அறிந்து, அதன்படி தமது

நடத்தையைச் சீர்படுத்திக்கொள்ளும் ஆற்றலே' மனச்சாட்சி என்று அந்தச் சொல்லுக்கு அகராதி பொருள் கூறுகிறது. பயிற்சிபெற்ற ஒருவருக்கே அத்தகைய திறன் ஏற்படுவது சாத்தியமாகும். அதாவது, அவர் கட்டுதிட்டத்திற்கு உட்பட்டு, அந்தராத்மாவின் குரலுக்குச் செவிசாய்க்கக் கற்றுக்கொண்டிருக்க வேண்டும். மனச்சாட்சியின்படி சிறிதும் தவருமல் நடந்து கொள்ளுவோரிடையேகூட உண்மையான கருத்து வேற்றுமைக்கு இடம் உண்டு. எனவே, நாகரிகமான விதி பரஸ்பர சகிப்புத் தன்மைதான். எல்லோரும், அவர்கள் எத்தகைய அந்தஸ்து உடையவர்களாயினும், எத்தகைய பயிற்சி பெற்றவர்களாயி னும், யாதொரு வேற்றுமையுமின்றி சகிப்புத்தன்மையைக் கற்றுக் கொள்ளவும் அனுசரிக்கவும் முடியும்.

—'எங் இந்தியா' - 23—9—1926

# 9

# அறிவீனமான தடையுத்தரவு

'சத்தியார்த்த பிரகாச'த்திற்கு அரசாங்கம் விதித்திருந்த தடை நீங்கிவிட்டது என்றும், இனி அதற்கு மீண்டும் தடை விதிக்க மாட்டார்கள் என்றுமே பலரும் நினைத்து வந்தார்கள். ஆனால், அந்த நம்பிக்கை பாழாகிவிட்டது. அந்தத் தடையை அரசாங்கம் புதுப்பித்து பின் வருமாறு உத்தரவு பிறப்பித் துள்ளது :

" 'சத்தியார்த்த பிரகாசம்' என்ற சிந்தி நூலின் 14-வது அத்தியாயத் தில், சக்கரவர்த்தியின் பிரஜைகளான பல்வேறு சமூகத்தினருக்கிடையே பகையையும் துவேஷத்தையும் வளர்ப்பதற்கான விஷயங்கள் அடங்கியிருக் கின்றன என்று சிந்து அரசாங்கம் எண்ணுகிறது. எனவே, 1898-ஆம் வருடத் திய கி.பு.கோ. 99 ஏ பிரிவின் கீழ் அரசாங்கத்திற்கு உள்ள அதிகாரத்திற்கு இணங்க, இந்த நூலின் பிரதிகளையெல்லாம் பறிமுதல் செய்து விடும்படி சிந்து அரசாங்கம் உத்தரவிடுகிறது. அந்த நூலின் மொழிபெயர்ப்புகள், மறுபதிப்புகள் உள்பட அதன் சம்பந்த மான எல்லாப் பிரதிகளும் பறிமுதல் செய்யப்படும். அது, சுவாமி தயானந்த சரஸ்வதியால் எழுதப்பெற்று, பேராசிரியர் தாராசந்த் கஜ்ரா வினல் வெளியிடப்பெற்றது. பிரஸ்தாப நூலின் 14-வது அத்தியாயத்தில் ஆசிரியர், முஸ்லிம்களின் சமய நம்பிக்கைகளைக் கேலி செய்கிருர்; குரானின் உபதேசங்களைத் தூற்றுகிருர்; முகமது நபியின் கட்டளைகளைத் தாக்கி இழிவு படுத்துகிருர். பொதுவாக அந்த நூலில் முஸ்லிம்களின் சமய உணர்ச்சிகளைப் புண்படுத்தக்கூடிய விஷயங்கள் அடங்கியிருக்கின்றன."

முன்னரைக் காட்டிலும் இந்த உத்திரவு அதிகக் கடுமையான தாக இருக்கிறது. 14-ஆவது அத்தியாயம் அடங்கிய நூலை வெளி

யிடுவது மாத்திரமே குற்றம் என்பது காலாவதியான தடைஉத்தரவாகும். ஆனால், இந்தப் புதிய உத்தரவோ, அத்தகைய நூலை வைத்துக்கொள்ளுவதே குற்றம் என்று விதிக்கிறது. இந்தத் தடை உத்தரவு முட்டாள்தனமானது என்றும், உலகம் முழுவதுமுள்ள ஆரிய சமாஜத்தினரின் உணர்ச்சிகளைப் புண்படுத்துவதாக இருக்கிறது என்றும் நான் வருந்தாமல் இருக்க முடியவில்லை. முஸ்லிம்களுக்கு குரான் எப்படியோ, கிறிஸ்தவர்களுக்கு பைபிள் எப்படியோ, அதே உயர்ந்த நிலையில் 40 லட்சம் ஆரிய சமாஜத்தினருக்கும் 'சத்தியார்த்த பிரகாசம்' செல்வாக்குடன் இருந்து வருகிறது. விவாதத்திற்கு இடமான தற்போதைய இலக்கியங்களுக்குத் தடை விதிப்பதை அறிந்து கொள்ளலாம். அந்நிலையில் கூட, ஜனப்பிரதிநிதி அரசாங்கங்கள் தங்களுடைய அதிகாரத்தை உபயோகிக்க விரும்புவதில்லை. அப்படியிருக்க, தரும சாத்திர சம்பந்தமான ஒரு நூலுக்குத் தடை விதிப்பது விஷமத்தனமானது. எனவே, அந்தத் தடையுத்தரவை வாபஸ் செய்து கொள்ளும்படி சிந்து அரசாங்கத்தை நான் வற்புறுத்துகிறேன். 'சத்தியார்த்த பிரகாச'த்தின் சிந்து மொழிபெயர்ப்பு ஒரு புதிய வெளியீடு அல்ல. அதன் பல பதிப்புகள் வெளிவந்துவிட்டன. உலகத்திலுள்ள பெரும்பாலான பாஷைகளிலும் அது மொழி பெயர்க்கப்பட்டிருக்கிறது. அப்படியிருக்க, 'சக்கரவர்த்தியின் பிரஜைகளான பல்வேறு சமூகத்தினரிடையும் பகையையும் துவேஷத்தையும் மூட்டக்கூடிய விஷயங்கள் அதில் அடங்கியிருப்பதாக' இப்போதுதான் கண்டுபிடித்தார்களா? குறிப்பாக, சமய சம்பந்தமான விஷயங்களில் மிகுந்த சகிப்புத் தன்மை காட்டுவதே சிறந்ததாகும். சமய சம்பந்தமான கருத்து வேற்றுமைகள் யுகம் முடியும் வரையில் இருந்து கொண்டுதானிருக்கும். பல்வேறு சமயங்களையும் சேர்ந்தவர்கள் சிறந்த அண்டை அயலாராகவும் நண்பர்களாகவும் வாழ்வதற்கு இன்றியமையாதது, சகிப்புத்தன்மை ஒன்றுதான். நேர்மையான கண்டனத்தினலோ அல்லது இழிவான கண்டனத்தினலோ ஒரு காலத்திலும் மதத்திற்குத் தீங்கு நேர்ந்துவிடுவதில்லை. எந்த சமயத்திற்கும், அதைப் பின்பற்றுவோரின் கண்டிப்பின்மையினலும், அலட்சிய புத்தியினலும்தான் எப்போதும் தீங்கு நேருகிறது.

— ஹரிஜன்' 3—11—1946

# 10

# சகிப்புத்தன்மையின் பெயரால்

பிறரைப் புண்படுத்தும்படியாக எதுவும் கூறுவது தருமத்திற்கும், நிச்சயமாக ஆன்மிகப் பெருமைக்கும் விரோதமாகும் என்பதை மறுக்கமுடியாது. ஆனல், சத்தியத்திற்காக அவ்விதம்

கூறவேண்டியிருந்தால் மாத்திரம் அதை ஆட்சேபிப்பதற்கில்லை. தீர்க்கதரிசிகளுடன் ஒப்பிடுவது விரும்பத்தக்கதல்ல என்றாலும், ஒப்பிட்டுக் கூறியபின் அதை ஆட்சேபிப்பது சகிப்பின்மைக்கு அடையாளமாகும். பேச்சு சுதந்திரத்தின் பெயரால் சிலரது மனம் புண்படும்படி பேசும் உரிமையை நாம் வற்புறுத்தினால், அது சகிப்பின்மையாகிற நெருப்புக்கு எண்ணெய் விட்டது போலாகும். நான் கேட்டுக் கொள்ளுவது என்னவெனில், மற்றவர்களின் உணர்ச்சிகளை மதித்து நடக்கவேண்டும் என்பதுதான். எனினும், சகிப்புத்தன்மையின் பெயரால் ஒரு சமயத்தினர் மற்றொரு சமயத்தினரின் தெய்வங்களைக் கண்டிக்க முற்படுவார்களாயின், நமது நிலை தங்க முட்டையிட்ட வாத்தைக் கொன்ற பேராசைக்காரனின் கதையாக முடிந்துவிடும்.

—'எங் இந்தியா' – 24—4—1924

## 11

# பைபிளை வாசிப்பது குற்றமா?

குஜராத் தேசீயக் கல்லூரி மாணவர்களுக்கு புதிய ஏற்பாட்டை நான் வாசித்துக் காட்டியதை ஆட்சேபித்து பல அன்பர்கள் எனக்குக் கடிதம் எழுதியிருக்கிறார்கள். அவர்களில் ஒருவர் கேட்பதாவது :

"குஜராத் தேசீயக் கல்லூரி மாணவர்களுக்கு நீங்கள் ஏன் பைபிளை வாசித்துக் காட்டுகிறீர்கள் என்பதை தயவு செய்து கூற முடியுமா? நமது இலக்கியங்களில் பலனைக் கொடுக்கக் கூடியது எதுவுமே இல்லையா? உங்களுக்கு பைபிளைக் காட்டிலும் கீதை தாழ்ந்ததாகத் தோன்றுகிறது. நீங்கள் உங்களை ஒரு சனாதன ஹிந்து என்று கூறிக்கொள்ள ஒருபோதும் சலிப்படைவதே இல்லை. நீங்கள் அந்தரங்கத்தில் ஒரு கிறிஸ்தவர் என்பது இப்போது வெளியாகிவிடவில்லையா? ஒருவர் பைபிளை வாசிப்பதால் கிறிஸ்தவராகிவிட மாட்டார் என்று நீங்கள் கூறலாம். ஆனால், மாணவர்களுக்கு அதை வாசித்துக் காட்டுவது, அவர்களை கிறிஸ்தவ சமயத்துக்கு மாற்றுவதற்கான ஒரு வழி அல்லவா? பைபிளை வாசிப்பதால் சிறுவர்களின் மனம் மாறாமல் இருக்குமா? அதை வாசிப்பதால், அவர்கள் கிறிஸ்தவர்களாக மாறுவதற்கு இடம் ஏற்படும் அல்லவா? நமது தெய்விக நூல்களில் இராத விசேஷமான விஷயங்கள் பைபிளில் என்ன இருக்கின்றன? இதற்கு நீங்கள் திருப்திகரமான பதில் அளிப்பீர்கள் என்றும், பைபிளைக் காட்டிலும் வேதங்களுக்கு அதிக சலுகை காட்டுவீர்கள் என்றும் நம்புகிறேன்."

இந்த அன்பரின் இறுதி வேண்டுகோளுக்கு நான் இணங்க முடியாதென அஞ்சுகிறேன். எனது விருப்பமோ அல்லது மற்றவர்களின் நியாயமான விருப்பமோ என்ன என்பது முக்கியமல்ல. மாணவர்களின் நியாயமான விருப்பத்திற்கு நான் சலுகைகாட்ட

வேண்டும். அவர்களின் நன்மைக்காக வாரத்திற்கு ஒரு மணி நேரம் நான் ஏதாவது கூறவேண்டுமென அவர்கள் என்னை அழைத்தார்கள். நான் அவர்களுக்கு கீதையையாவது அல்லது துளசிதாஸ் ராமாயணத்தையாவது வாசித்துக் காட்டுவதாகவும், கேள்விகளுக்கு பதில் அளிப்பதாகவும் கூறினேன். அவர்கள் பெரும்பாலான வாக்குகளின்மீது நான் புதிய ஏற்பாட்டை வாசித்துக்காட்ட வேண்டும் என்றும், கேள்விகளுக்கு பதில் அளிக்க வேண்டும் என்றும் தீர்மானித்தனர்.

அவ்விதம் முடிவு செய்ய மாணவர்களுக்கு உரிமை உண்டு என்பதே எனது அபிப்பிராயமாகும். பைபிளை வாசிக்கவோ அல்லது பிறரைக் கொண்டு தங்களுக்கு பைபிளை வாசித்துக் காட்டும்படி செய்யவோ அவர்களுக்கு எல்லாவித உரிமையும் உண்டு. கீதையையாவது அல்லது ராமாயணத்தையாவது வாசித்துக் காட்டுவதாக அவர்களிடம் கூறினேன். ஏனெனில், ஆசிரம வாசிகளுக்கு இப்போது அவ்விரண்டையும் வாசித்துக் காட்டி வருகிறேன். எனவே, அவற்றில் எதையாவது தேசீயக் கல்லூரியிலும் வாசித்துக் காட்டுவதால் எனக்கு அதிக சிரமம் இராது என்றும், அதற்காக அதிகமான ஏற்பாடு எதுவும் செய்ய வேண்டியிராது என்றும் கருதினேன். ஆனால், மற்றவர்களைக் கொண்டு கீதையையோ அல்லது ராமாயணத்தையோ வாசிக்கும்படி செய்யலாம் என மாணவர்கள் எண்ணினர் போலும். புதிய ஏற்பாட்டை நான் நன்கு ஆராய்ச்சி செய்திருப்பதை அவர்கள் அறிவார்களாதலால், அதன் சம்பந்தமாக எனது விளக்கத்தைக் கேட்க அவர்கள் விரும்பியிருக்கலாம்.

உலகத்தில் உள்ள வேத நூல்களை, பண்பட்ட ஒவ்வோர் ஆடவரும் ஒவ்வொரு பெண்ணும் அனுதாபத்துடன் வாசிக்க வேண்டியது கடமை என்பதே எனது கருத்தாகும். நமது சொந்த சமயத்திற்குப் பிறர் மரியாதை காட்ட வேண்டுமென நாம் விரும்புவதுபோலவே, பிற சமயங்களுக்கு நாமும் மரியாதை காட்ட வேண்டும். அதற்காக நாம் பிற சமயங்களை நட்பு முறையில் ஆராய்ச்சி செய்ய வேண்டியது புனிதமான கடமையாகும். வயது வந்த நமது குழந்தைகளின் மனத்தில் பிற சமய நூல்களினால் ஏற்படும் செல்வாக்கைக் கண்டு நாம் திகில் அடைய வேண்டிய அவசியமில்லை. தூய்மையான எல்லாவற்றையும் சுதந்திரமாக ஆராய்ச்சி செய்ய அவர்களை உற்சாகப்படுத்துவதன் மூலம், வாழ்க்கையில் அவர்கள் தாராள நோக்கம் உடையவர்களாக இருக்கும்படி செய்தவர்களாவோம்.

இளைஞர்களைப் பகிரங்கமாகவோ அல்லது ரகசியமாகவோ தம்முடைய சமயத்திற்கு மாற்றும் நோக்கத்துடன் யாராவது ஒருவர் தமது சொந்த சமய நூல்களை அவர்களுக்கு வாசித்துக் காட்டினால், பயம் ஏற்படுவதற்குக் காரணம் உண்டு. அத்தகைய ஒருவர் தமது சொந்த சமயத்திற்குச் சாதகமாக பாரபட்சமான நோக்கம் கொண்டவராக இருக்கவேண்டும். ஆனால் என்னைப்

பொறுத்தவரையில், பைபிள், குரான் முதலிய மற்ற சமய நூல்களை நான் பக்தியுடன் வாசித்து ஆராய்ச்சி செய்வது, நான் ஓர் உறுதியான சனாதன ஹிந்து என்ற எனது கோரிக்கைக்கு முற்றிலும் பொருத்தமானதே என்று கருதுகிறேன். குறுகிய நோக்கத்துடனும் மூடபக்தியுடனும், பண்டைய காலத்திய வழக்கம் என்றும், ஏதாவதொரு சமஸ்கிருத புத்தகத்தில் அதற்கு ஆதரவு இருப்பதாகவும் கூறி தீமையை நல்லதென்று கருதும் ஒருவர் சனாதன ஹிந்து அல்ல.

நான் என்னை உறுதியான கொள்கையுடைய ஒரு சனாதன ஹிந்து என்று கூறிக் கொள்ளுகிறேன். ஏனென்றால், எனது தார்மிக உணர்ச்சியைப் புண்படுத்தும் எல்லாவற்றையும் நான் நிராகரித்துவிடுகிறேன். என்றாலும், ஆன்மாவின் தேவைகளை ஹிந்து தரும நூல்கள் பூர்த்தி செய்வதை நான் காண்கிறேன். மற்ற சமயங்களை நான் பயபக்தியுடன் ஆராய்ச்சி செய்ததால், ஹிந்து சமய நூல்களில் எனக்குள்ள பக்தியும் நம்பிக்கையும் குன்றிவிட வில்லை; உண்மையில் ஹிந்து சமய நூல்களில் எனக்குள்ள அறிவு இன்னும் அதிகமாகியிருக்கிறது. அத்தகைய ஆராய்ச்சி, வாழ்க்கையில் என்னை மிகவும் பரந்த நோக்கம் உள்ளவனாகவும் செய்திருக்கிறது. அதன் பலனாக, ஹிந்து சமய நூல்களில் அதற்குமுன் எனக்குப் புரியாமல் இருந்த பல பகுதிகளை நான் அதிகத் தெளிவாக அறிந்து கொள்ள முடிந்துளது.

நான் ரகசியத்தில் கிறிஸ்தவ சமயத்தைச் சேர்ந்த ஒருவனே என்ற குற்றச்சாட்டு புதிதல்ல. அத்தகைய குற்றச்சாட்டு ஓர் அவதூறாகும், ஒரு புகழுரையுமாகும். எவ்விதமெனில், எந்தக் காரியமாயினும், நான் பகிரங்கமாகச் செய்வதற்கு அஞ்சி ரகசியமாகச் செய்யக் கூடியவன் என்று நம்புவோர் இருக்கிறார்கள் என்பது அவதூறேயாகும். கிறிஸ்தவ சமயத்திலோ அல்லது வேறு எந்த சமயத்திலோ சேர வேண்டும் என்ற உண்மையை நான் உணர்ந்த விநாடியிலேயே நான் அவ்விதமே செய்ய இந்த உலகத்திலுள்ள எதுவும் என்னைத் தடுக்கமுடியாது. எங்கே பயம் இருக்கிறதோ அங்கே சமயம் இருக்க முடியாது. அந்தக் குற்றச்சாட்டு ஒரு புகழுரையுமாகும் என்று நான் கூறுவதற்குக் காரணம் என்னவெனில், கிறிஸ்தவ சமயத்திலுள்ள அருமை பெருமைகளை உணர்ந்துகொள்ளுவதில் எனக்குள்ள திறமையை அது வேண்டா வெறுப்புடன் ஒப்புக்கொள்ளுவதாகும்.

ஒரு விஷயத்தை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். பைபிளுக்கோ அல்லது குரானுக்கோ என் சொந்த முறையில் விளக்கம் கூறி, என்னை நான் ஒரு கிறிஸ்தவன் என்றோ அல்லது முஸ்லிம் என்றோ கூறிக்கொள்ள முடியுமாயின், நான் அவ்விதமே செய்ய சிறிதும் தயங்கமாட்டேன். அப்போது ஹிந்து, கிறிஸ்தவர், முஸ்லிம் போன்ற வார்த்தைகள் யாவும் எனக்கு ஒன்றாகவே தோன்றும். மறு உலகத்தில் ஹிந்துக்களோ, கிறிஸ்தவர்களோ, முஸ்லிம்களோ இல்லை என்றே நம்புகிறேன். அங்கே எல்லோரும்

அவரவர்களுடைய முத்திரைகளைக் கொண்டோ அல்லது பிரகடனங்களைக் கொண்டோ தீர்மானிக்கப்படுவதில்லை. ஆனால், அவர்கள் தங்களைப்பற்றி எவ்வளவு பறைசாற்றிக் கொண்டாலும், அவர்களுடைய செயல்களைக் கொண்டே தீர்மானிக்கப்படுகிறார்கள். எனினும், நாம் இந்த உலகத்தில் இருக்கும் வரையில், இந்த முத்திரைகள் இருந்துகொண்டுதான் இருக்கும். ஆகையால், எனது மூதாதையரின் முத்திரை எனது வளர்ச்சிக்குத் தடையாக இராத வரையில், மற்ற எல்லா இடங்களிலும் உள்ள நல்ல அம்சங்களை மேற்கொள்ளுவதிலிருந்து என்னைத் தடுக்காமல் இருக்கும்வரையில், நான் அந்த முத்திரையையே வைத்துக் கொண்டிருக்க விரும்புகிறேன்.

மித மிஞ்சி உணர்ச்சி வசப்பட்டுள்ள இந்த அன்பரின் போக்கு, துரதிருஷ்டம் வாய்ந்த இந்த நாட்டில் சகிப்பின்மையாகிய அலைகள் எவ்வளவு தீவிரமாக இருந்துவருகின்றன என்பதையே காட்டுகிறது. யாரால் சாத்தியமோ அவர்கள் அந்த அலைகளுக்கு அடிபணிந்துவிடாமல் இருக்கவேண்டும்.

—'எங் இந்தியா' – 2—9—1926

# 12

# கோழைத்தனத்தை மறைக்கும் அகிம்சை

ஓர் அன்பர் பின் வருமாறு எழுதுகிறார் :

''நான் ஒரு ஹிந்து; மிகவும் உயர்ந்ததான பிராம்மண சமூகத்தைச் சேர்ந்தவன். அதிலும் முன்னேற்றக்கொள்கையுடைய 'ஸோ—ஹம்' பிரிவைச் சேர்ந்தவன். நான் பகுத்தறிவில் நம்பிக்கையுடையவன். பகுத்தறிவு தான் கடவுள், கடவுள்தான் பகுத்தறிவு. ஹிந்துக்களின் வேதாந்தமானது ஸோ–ஹம்* (அவர்தான் நான்) என்ற சித்தாந்தத்தை வற்புறுத்துகிறது. அப்படிப்பட்ட தத்துவமானது இன்று எவரெஸ்ட் சிகரத்தைக் காட்டிலும் பெரிய, ஊடுருவ முடியாத ஒரு தடையை நிர்மாணித்திருக்கிறது. மனத் தூய்மையை அடிப்படையாகக் கொண்டு தன் ஆலயத்தை நிர்மாணித்துக் கொண்டுள்ள ஹிந்து சமயமானது இன்று சடங்குகள் என்ற பயனற்ற புல்பூண்டுகளால் மறைக்கப்பட்டிருக்கிறது. அதன் விளைவாக, உண்மையான ஒளி கண்களுக்குத் தெரிவதில்லை. கடவுளைத் தந்தை என்றும், உலகத்தில் உள்ள எல்லோரையும் சகோதரர்கள் என்றும் வற்புறுத்தும் பண்பாடு, இன்று பிராம்மணர்

---

* பரமாத்மாவுக்கும் ஜீவாத்மாவுக்கும் வேற்றுமை இல்லை என்பதை வற்புறுத்தும் ஹிந்து சமய வேதாந்தத்தின் சாரம் 'அஹம்–ஸ:', 'ஸோ–ஹம்', அதாவது 'நான் தான் அவர், அவர்தான் நான்' என்பதில் அடங்கியிருக்கிறது. இதைத்தான் 'அத்வைதம்' அதாவது 'இரண்டல்ல, ஒன்றுதான்' என்று வேதாந்தம் கூறுகிறது.

களின் சந்ததிகள் கோடிக்கணக்கானவர்களைக் காலால் மிதிக்கும் நிலைக்கு வந்திருக்கிறது. அகிம்சைக் கொள்கை நம்மை இழிவான, மூக்கால் அழும் கோழைகளாகச் செய்திருக்கிறது. ஒரு ஹிந்து மற்றொரு ஹிந்துவுடன் ஒரு போதும் நேர்மையாக நடந்துகொள்ளுவதில்லை. ஒரு முஸ்லிம் மற்றொரு முஸ்லீமுடன் நேர்மையாக நடந்து கொள்ளுகிறார். அது போலவே ஒரு கிறிஸ்தவரும் மற்றொரு கிறிஸ்தவருடன் நேர்மையாக நடந்துகொள்ளுகிறார். மற்ற சமயங்களின் பழக்கவழக்கங்களை யொட்டி ஒரு ஹிந்து அதிக சகிப்புத் தன்மையுடன் நடந்து கொள்கிறார். இவ்விதம் செய்வது கலப்பற்ற கோழைத்தனத்திற்கு மற்றோர் உதாரணமாகும். ஆனால், ஒரு முஸ்லிமோ அல்லது கிறிஸ்தவரோ பிற சமயங்களின் பழக்கவழக்கங்களைச் சகிப்பதில்லை. கற்றறிஞர்களான ஹிந்துக்கள் இந்தப் போலிப் பகட்டு வேலையைத் தொடர்ந்து வரப்போகிறார்களா அல்லது அதற்கு முற்றுப் புள்ளிவைக்க ஆயுதத்தை எடுக்கப்போகிறார்களா?''

இந்த அன்பர் கூறுவதற்குக் காரணங்கள் என்ன என்பது பற்றி எனக்கு எதுவும் தெரியாது. ஆனால், நான் ஆலோசனை கூற முடியும். சீர்திருத்தம் என்பது நம்மிடமிருந்தே ஆரம்பமாக வேண்டும். 'வைத்தியரே, முதலில் உங்களுடைய நோயைக் குணப்படுத்திக் கொள்ளுங்கள்' என்பது ஒரு சிறந்த பழமொழியாகும். ஹிந்துக்களிடையே ஒழுக்கக் குறைவையும், கோழைத்தனத்தையும் உணருவோர் முதலில் தங்களிடமிருந்து சீர்திருத்தத்தை ஆரம்பிக்கலாம். அவர் கூறியுள்ள புகாரில் ஓரளவு உண்மை இருக்கிறது என்பதைப் பொதுவாக ஒப்புக்கொள்ளலாம். எனினும், ஆயுதங்களின் மூலம் அவர் கூறும் தீமையை ஒழித்துவிட முடியுமா? தார்மிக தத்துவம் அடைந்துள்ள தாழ்ந்த நிலையை வாளை வீசுவதன் மூலம் எப்படிச் சீர்திருத்த முடியும்? எண்ணிக்கையற்ற சில்லறைச் சாதிகளையோ, தீண்டாமையையோ அல்லது பெரும்பாலும் அர்த்தமற்ற சடங்குகளையோ பலாத்காரத்தினால் ஒழித்துவிட முடியுமா? அவ்விதம் செய்வது, பலாத்காரத்தினால் சமயத்தைப் புகுத்துவதாகாதா? கடவுள் தான் பகுத்தறிவு எனில், பின்னர் வாளின் உதவியை நாடக் கூடாது, பகுத்தறிவின் உதவியைத்தான் நாடவேண்டும்.

அன்பர் தமது கடிதத்தில் ஹிந்து–முஸ்லிம் பிணக்கைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். அப்பிரச்னையைத் தீர்க்க ஹிந்துக்கள் ஆயுத பலாத்காரத்தில் ஈடுபடவேண்டுமென அவர் விரும்புகிறாரா? ஆழ்ந்து பரிசீலனைசெய்தால், பெரும்பாலான சந்தர்ப்பங்களிலும் ஆயுத பலாத்காரத்தில் ஈடுபடுவது அவசியமல்ல, அபாயமும் ஆகும் என்பது தெரியவரும். தேவையானது என்னவெனில், துன்பத்தை அனுபவிக்கும் கலைதான். அகிம்சை நம்மைக் கோழைகளாகச் செய்துவிடவில்லை; அகிம்சையைக் கைவிட்டதால்தான் நாம் கோழைகளாகிவிட்டோம் என்பது எனது அபிப்பிராயமாகும். நம்மை எதிர்ப்பவர்கள் துன்பத்திற்கு உள்ளாகவேண்டுமென நாம் விரும்பும்படி செய்வது அகிம்சையல்ல, அகிம்சையைப் பற்றிய அறியாமையே ஆகும். ஆயுத பலாத்காரத்தில் ஈடுபடாதவர்கள் அகிம்சைக் கொள்கை காரண

மாக அவ்விதம் ஈடுபடாமல் இருக்கவில்லை; தாங்கள் இறந்துவிடுவோமோ என்ற பயத்தினாலேயே ஆயுத பலாத்காரத்தை மேற்கொள்ளவில்லை. ஆயுத பலாத்காரத்தில் ஈடுபடத் தயங்காதவர்கள் அவ்விதமே செய்யத் துணியலாமென நான் அடிக்கடி கூறியிருக்கிறேன். அவ்விதமாயின், காயமேற்பட்டுவிடுமோ என்று பயந்தும், தங்களுடைய கோழைத்தனத்தை அகிம்சையின் பெயரால் மறைக்க முற்பட்டும் வாழ்க்கையின் மகத்தான உண்மையைப் பாழாக்கும் ''அகிம்சைவாதிகளின்'' தொந்தரவிலிருந்து நாம் விடுதலை பெறுவோம். 'ஸோ-ஹம்' என்பது பற்றியும் அவ்விதமே கூறலாம். அது ஒரு சாத்திரீயமான உண்மையாகும். ஆனால், தீண்டாதார் விஷயத்தில் அந்த உண்மையை நாம் பொய்யாகும்படி செய்துவருகிறோம். அன்பர் தாம் கடைசியாகக் கூறியுள்ள புகாருக்கு ஆதாரம் எதுவும் காட்ட முடியாது. ஹிந்துக்களைப் பொறுத்தமட்டில் எது உண்மையோ, அது மற்ற சமயத்தினர் விஷயத்திலும் பெரிதும் உண்மைதான். மனித இயல்பானது ஒரே விதமான சந்தர்ப்பங்களில் ஒரே விதமாகவே செயல்படுகிறது. முஸ்லிம் ஒருபோதும் சகிப்புத்தன்மையுடன் இருப்பதில்லையா? எனது யாத்திரைகளின் போது நான், ஹிந்துக்களைப் போல் சகிப்புத்தன்மையுள்ள நூற்றுக்கணக்கான முஸ்லிம்களை பார்க்கிறேன். சகிப்புத்தன்மையுள்ள கிறிஸ்தவர்களையும் நான் அடிக்கடி கண்டிருக்கிறேன். அன்பர் கவனித்துப் பார்த்தால் ஒரு விஷயத்தைத் தெரிந்து கொள்ளலாம். அதாவது மற்ற பிரிவினர்களிடம் சகிப்புத்தன்மை காட்டாதவர்கள், தங்களுக்குள்ளேயும் சகிப்புத்தன்மை காட்டமாட்டார்கள்.

'எங் இந்தியா' – 19—11—1925

# 13

# இந்திய கிறிஸ்தவர்களுக்கு புத்திமதி

ஆல்மோடாவில் உள்ள கிறிஸ்தவாலயத்தின் மைதானத்தில், அந் நகரைச் சேர்ந்த கிறிஸ்தவ சமூகத்தினர் காந்திஜிக்கு ஓர் உபசாரப் பத்திரம் வாசித்துக் கொடுத்தார்கள். அதற்குப் பதிலாக காந்திஜி கூறியதாவது:

இந்தியாவிலும், வெளிநாடுகளிலும் எனக்கு ஏராளமான கிறிஸ்தவர்களிடம் தொடர்பு உண்டு. குறிப்பாக, டில்லியில் உள்ள செயின்ட் ஸ்டீபன்ஸ் கல்லூரி தலைமைப் பேராசிரியரான காலஞ்சென்ற ருத்ராவுடன் எனக்கு நெருங்கிய நட்பு இருந்துவந்தது. இந்தியாவின் கொள்கைகளையும் இந்திய தேசீய அபிலாஷைகளையும் பூரணமாக ஆதரிக்கவேண்டும் என்பதே, இந்திய கிறிஸ்தவர்களுக்கு நான் விடுக்கும் வேண்டுகோளாகும். இந்தியாவின் புராதனப் பண்பாட்டையும் நாகரிகத்தையும் காட்டுமிராண்டித்தனத்

தின் சின்னங்கள் என்று அலட்சியம் செய்வதும் இழிவுபடுத்து வதும் கூடாது. அவற்றை பண்டைய சொத்துக்களாக கருதி, பேணி வளர்க்க வேண்டும். இந்தியா ஏராளமாக மகான்களையும் தீர்க்கதரிசிகளையும் உற்பத்தி செய்திருக்கிறது; சைதன்யர், தாகூர் முதலியோரைப் போன்ற பெருமைப்படக் கூடிய தவப் புதல்வர்களைக் கொடுத்திருக்கிறது. பல தூய்மையான ஆன்மாக்க ளின் தவத்தை அடிப்படையாகக் கொண்டு நிர்மாணிக்கப்பட் டுள்ள இந்திய நாகரிகம் முற்றிலும் தீமையாக இருக்க முடியாது.

எல்லா சமயங்களும் உண்மையானவை என்றே நான் கருது கிறேன். எனினும், மனிதனால் விளக்கப்படும் எந்த சமயமும் குற்றம் குறையற்றதாக இருக்க முடியாது. குற்றம் குறையற்ற தன்மை கடவுள் ஒருவருக்குத்தான் உண்டு. அது போலவே, வேறு சமயத்தை அனுசரிக்கும் நமது தேச சகோதரர்களிடம் வேற்றுமை பாராட்டாமல் இருக்க வேண்டியது நமது கடமையாகும். அதற்கு மாறாக, அவர்கள் விஷயத்தில் அனுதாபமும் சகிப்புத்தன்மையும் கூடிய மனப்போக்கை வளர்த்துக் கொள்ள வேண்டும்; அவர் களுடைய கருத்துக்களை அறிந்து பாராட்ட வேண்டும்; அவர்களைத் தங்கள் சமயத்திற்கு மாற்றுவதன் மூலம் அல்ல, ஹிந்துக்களை சிறந்த ஹிந்துக்களாகவும், முஸ்லிம்களை சிறந்த முஸ்லிம்களாக வும், அவர்கள் எல்லோரையும் சிறந்த இந்தியர்களாகவும் செய் வதன் மூலம் அவர்களுக்கு உதவி புரிய வேண்டும்.

—'எங் இந்தியா' - 27—6—1929

# 14

# பைத்தியக்கார வெறி

டில்லியிலிருந்து சுமார் இருபத்தைந்து மைல் தூரத்தில் கான்ஹை என்று ஒரு கிராமம் இருக்கிறது. அங்கே வாழும் ரோமன் கத்தோலிக்கர்களை ஹிந்துக்கள் துன்புறுத்துவதாக காந் திஜிக்குச் செய்தி வந்தது. அவ்விஷயமாக காந்திஜியைப் பார்க்க வந்திருந்த ஓர் இந்திய ரோமன் கத்தோலிக்கப் பாதிரியாரும், கிறிஸ்தவ சமய போதகர் ஒருவரும், அக் கிராமத்திலுள்ள ரோமன் கத்தோலிக்கர்களிடமிருந்து ஒரு கடிதத்தைக் கொண்டு வந்திருந்தார்கள். அவ்விஷயமாக காந்திஜி கூறியதாவது:

கான்ஹை கிராமத்திலிருந்து ரோமன் கத்தோலிக்கர்கள் வெளியேறிப் போகாவிடில், அவர்கள் துன்பத்திற்கு உள்ளாக வேண்டியிருக்குமென அவர்களை ஹிந்துக்கள் பயமுறுத்தியிருக்கிறார் களாம். அது வெறும் மிரட்டலே என்றும், அந்தக் கிராமத்தில் உள்ள கிறிஸ்தவ சகோதர சகோதரிகள் தங்கள் சமயத்தைப் பின்

பற்றவும், தங்கள் தங்களுடைய தொழில்களைச் செய்துவரவும் யாதொரு தடையுமின்றி அனுமதிக்கப்படுவார்கள் என்றும் நான் நம்புகிறேன். இப்போது இந்தியா அரசியல் சுதந்திரம் பெற்றிருக்கிறது. எனவே, பிரிட்டிஷ் ஆட்சியின்போது அந்த கிறிஸ்தவர்களுக்கு எவ்வளவு சுதந்திரம் இருந்ததோ, அதைப் போலவே இப்போதும் அவர்கள் அதே சுதந்திரத்திற்கு உரியவர்களே. இந்தியாவில் ஹிந்துக்களுக்கு மாத்திரம்தான் சுதந்திரம், பாகிஸ்தானில் முஸ்லிம்களுக்கு மாத்திரம்தான் சுதந்திரம் என்ற நிலை ஒருபோதும் இருக்க முடியாது.

முஸ்லிம்களுக்கு விரோதமாக மூண்டுள்ள பைத்தியக்காரத்தனமான வெறி அடங்கியதும், அந்த வெறி பின்னர் வேறு யார் மீதாவது பிரயோகிக்கப்படும் என்று நான் ஏற்கனவே ஒரு சமயம் கூறினேன். ஆனால், அவ்விதம் நான் கூறியபோது, எனது பீதி இவ்வளவு சீக்கிரத்தில் உண்மையாகிவிடும் என்று நான் நினைக்கவில்லை. முஸ்லிம்களுக்கு விரோதமாக எழுந்த வெறி இன்னும் பூரணமாக அடங்கவில்லை. எனக்குத் தெரிந்தவரையில் அந்த கிறிஸ்தவர்கள் யாதொரு குற்றமும் செய்யவில்லை. அவர்களுடைய குற்றம் என்னவெனில், அவர்கள் கிறிஸ்தவர்கள் என்பதும்,அவர்கள் மாட்டிறைச்சியும் பன்றியிறைச்சியும் தின்கிறார்கள் என்பதும்தான். அவர்கள் அவற்றைத் தின்பதை நீண்ட காலத்திற்கு முன்பே விட்டுவிட்டார்கள் என்று என்னைப் பார்க்க வந்துள்ள ரோமன் கத்தோலிக்கர்கள் கூறுகின்றனர். காரணமற்ற இத்தகைய துவேஷம் நீடித்துவருமாயின், சுதந்திர இந்தியாவின் எதிர்காலம் பயங்கரமானதாக இருக்கும். இங்கே வந்துள்ள பாதிரியாருடைய சைக்கிளை ஹிந்துக்கள் எடுத்துக் கொண்டு போய்விட்டதாகவும், அவர் உயிர் தப்பியதே ஆச்சரியம் என்றும் கூறுகிறார். ஹிந்துக்களல்லாதார் யாவரும், சீக்கியரல்லாதார் யாவரும் ஒழிந்தால்தான் இந்த வேதனைக்கு ஒரு முடிவு காலம் ஏற்படுமா?

இந்தியா அவ்விதம் சீர்குலைவதைப் பார்ப்பதற்காக உயிர் வாழ்ந்திருக்க நான் விரும்பவில்லை. இந்தியாவில் உள்ள ஹிந்துக்களுக்கும் சீக்கியர்களுக்கும் நல்ல புத்தி வர வேண்டும் என்பதே எனது விருப்பமும் பிரார்த்தனையும் ஆகும். இதில், கூட்டத்தில் உள்ளவர்களையும் கலந்துகொள்ளும்படி கேட்டுக் கொள்ளுகிறேன்.

—'ஹரிஜன்' - 30—11—1947

பகுதி பதினொன்று

# மத மாற்றம்

## 1

## இஸ்லாம் அனுமதிக்காத செயல்

குல்பர்காவில் காந்திஜி நிகழ்த்திய பிரசங்கத்தின் சாரமே கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

நான் சரண பாசப்பா கோவிலுக்குச் சென்ற போது, விக்கிரகம் அகற்றப்பட்டிருந்த இடத்தை எனக்குக் காட்டினார்கள். நந்தியும் அசுத்தம் செய்யப்பட்டிருந்தது. அந்தக் காட்சி என்னை மிகவும் வேதனைக்கு உள்ளாக்கியது. நீங்கள் விரும்பினால், என்னை விக்கிரக வழிபாடு செய்பவன் என்று கூறலாம். நான் கடவுளை ஒவ்வோரிடத்திலும் ஒவ்வொன்றிலும் காண்கிறேன். அத்தகைய அபசாரமான செயல்களை கடவுள் ஒரு காலத்திலும் அங்கீகரிக்க மாட்டார். எராவ்டா சிறையில் இருந்தபோது, நான் மௌலானா சாகிப் எழுதிய முகமது நபியின் வாழ்க்கை வரலாற்றை வாசித்தேன். நான் உஸ்வ-இ-ஸஹாபாவையும் வாசித்தேன். எனவே, அத்தகைய செயல்களை இஸ்லாம் சமய நூல்கள் ஆதரிக்கவில்லை என்று நான் கூறமுடியும். அவ்விதம் விக்கிரகங்களை அசுத்தப் படுத்தியவர்கள் கடவுள் முன்னிலையிலும், மனிதன் முன்னிலையிலும் குற்றம் செய்தவர்களாவர்.

—'எங் இந்தியா' – 10—3—1927

## 2

## மத மாற்றமும் எனது நிலையும்

மத மாற்றத்தை யொட்டி எனது நிலை என்ன என்பதை இந்தப் பத்திரிகையில் விளக்கும்படி, அன்றொரு நாள் ஸ்ரீ ஏ. ஏ. பால் என்னைக் கேட்டார். ஸ்ரீ பால் சர்வ தேச சகபாடிகள் ஐக்கிய சங்கத்தைச் சேர்ந்தவர். அதன் சம்பந்தமாக திட்டமான கேள்விகள் கேட்டால் நான் அவற்றிற்குப் பதில் அளிப்பதாக அவரிடம் கூறினேன். அதன் பலனாகவே அவர் பல கேள்விகள் கேட்டு பின் வருமாறு ஒரு கடிதம் எழுதியுள்ளார்:

"மத மாற்றம் சம்பந்தமாக உங்களுடைய கருத்துக்களைத் தெரிவிப்பீர்களா என்று கேட்டு ஒரு மாதத்திற்கு முன் நான் உங்களுக்கு எழுதியிருந்தது நினைவிருக்கலாம். அவ்விஷயமாக நாங்கள் கேள்விகள் கேட்டால் பதில் அளிப்பது உங்களுக்கு எளிதாக இருக்கும் என்று நீங்கள் எழுதியிருந்தீர்கள். சர்வதேச சகபாடிகள் சங்கத்தின் சென்னை நிர்வாகக் குழுவின் வேண்டுகோளுக்கு இணங்க, கிறிஸ்தவ உறுப்பினர்களில் ஒருவர் இத்துடன் இணைக்கப்பட்டுள்ள அறிக்கையைத் தயாரித்துள்ளார். இதை உங்களுக்கு அனுப்பும்படியும், இதில் உள்ள கேள்விகளுக்கு 'ஹரிஜனி'ல் பதில் அளிக்குமாறு உங்களை வேண்டிக்கொள்ளும்படியும் நிர்வாகக்குழு என்னைக் கேட்டிருக்கிறது. ஆம், கிறிஸ்தவர்களின் கோணத்திலிருந்தே இந்தக் கேள்விகள் தயாரிக்கப்பட்டுள்ளன என்பதை நீங்கள் கவனிக்கலாம். மத மாற்றத்தில் ஈடுபட்டுள்ள மற்ற சமயங்களைச் சேர்ந்தவர்களுக்கும் இந்தக் கேளவிகள் பொருந்தும் என்று நிர்வாகக் குழு கருதுகிறது. இந்தக் கேள்விகளை யொட்டி உங்கள் நிலைமை என்ன என்பதை விளக்குவது உங்களுக்கு சாத்தியமாக இருக்குமென்று நான் நம்பலாமா?

1. மனம் பாவத்திலிருந்து கடவுளிடம் மாறுவதே மத மாற்றம் ஆகும். அது கடவுளின் வேலையே. பாவம் என்பது கடவுளிடமிருந்து பிரிவதே.

2. கடவுள் மானிடவர்க்கத்தினிடம் தம்மை வெளிப்படுத்திக் கொள்ளுகிறார். இந்த அற்புதம் ஏசு நாதரின் மூலம் நிறைவேறியிருக்கிறது என்பதே கிறிஸ்தவர்களின் நம்பிக்கையாகும். பாவத்திலிருந்து நம்மை ரட்சிப்பவர் அவரே. அவர்தான் பாவியைக் கடவுளிடம் அழைத்துச் சென்று, அவனுக்கு வாழ்வு அளிக்க முடியும்.

3. கடவுள் நிரந்தரமான உண்மை என்பதையும், சக்தி என்பதையும் ஏசு நாதரின் மூலம் கிறிஸ்தவர்கள் அறிந்து கொண்டிருக்கிறார்கள்; ஏசு நாதரைப் பற்றிப் பேசுவதை தமது பாக்கியமாகவும் கடமையாகவும் கருதுகிறார்கள்; அவர் பூமிக்கு வந்து யாதொரு நிபந்தனையுமின்றி அளித்துள்ள வாய்ப்பைப் பிரகடனம் செய்கிறார்கள்.

4. ஏசு நாதரின் இந்தச் செய்தியைக் கேட்டு மனம் உருகி, தங்கள் பாவங்களுக்கு வருந்தி, ஏசு நாதரின் சீடராகப் புதிய வாழ்க்கையை நடத்த விரும்பும் எந்த மனிதரையும், கிறிஸ்தவ சமயத்தில் நம்பிக்கையுள்ள தங்கள் கூட்டத்தில் சேர்த்துக்கொள்ளுவதை கிறிஸ்தவர்கள் தங்களுடைய உரிமையாகக் கருதுகிறார்கள்.

5. அத்தகைய எல்லாச் சந்தர்ப்பங்களிலும், கிறிஸ்தவ சமயத்திற்கு மாற விரும்புவோருடைய அந்தரங்க சுத்தியையும் உறுதியையும் அறிந்து கொள்ள கிறிஸ்தவர்கள் தங்களால் இயன்ற எல்லா முயற்சிகளையும் செய்ய வேண்டும். மாற விரும்புவோருக்கு அத்தகைய செயலின் விளைவுகளைச் சுட்டிக்காட்டுவதுடன், அவர் தமது குடும்பத்திற்குச் செய்ய வேண்டிய கடமையையும் வற்புறுத்திக் கூறவேண்டும்.

6. கிறிஸ்தவ சமயத்திற்கு மாற்றுவோரின் அத்தகைய சுயநல நோக்கத்தையும், மதம் மாறுவோரின் லௌகிக லாப நோக்கத்தையும் தடுக்க கிறிஸ்தவர்கள் தங்கள் சக்திக்கு இயன்றவரையில் எல்லா முயற்சிகளையும் எடுத்துக்கொள்ள வேண்டும்.

7. மனிதனுக்கு பூரண வாழ்வு அளிக்கவே ஏசு நாதர் தோன்றினர். மனிதனின் அந்தஸ்தை உயர்த்துவதே பெரிதும் சமய மாற்றத்தின் நோக்கம் என்பது சரித்திரம் காட்டும் வரலாருகும். எனவே, சமய மாற்றத்தின் பலனை அவ்விதம் மாறுவோரின் சமூக அந்தஸ்து உயர்வடைந்தால், அவர்களுக்கு லோகாயதமான ஆசைகளைக் காட்டி அவ்வாறு மாற்றியதாக கிறிஸ்தவர்கள் மீது குற்றம் சாட்டக் கூடாது. ஒரு லட்சியத்தை அடைவதற்கு லௌகிக விஷயங்களைச் சாதனங்களாகக் கொள்ளக் கூடாது என்பது எப்போதுமே ஒப்புக் கொள்ளப்பட்ட விஷயமாகும்.

8. இதய பூர்வமாக சமயம் மாறுவோருடைய உடல், ஆன்மா, மனம் முதலியவற்றைப் பாதுகாக்க வேண்டும் என்பதை, கிறிஸ்தவர்கள் தங்களுடைய கடமையாக ஒப்புக்கொண்டிருப்பது நியாயமேயாகும்.

9. ஹிந்து சமூகக் கொள்கை சம்பந்தமான சில உண்மைகள் கிறிஸ்தவர்களின் கட்டுப்பாட்டிற்கு அப்பாற்பட்டவை. அவைகளே மதம் மாறும்படி ஹரிஜனங்களைத் தூண்டுவதாக இருக்கின்றன. அப்படியிருக்க, மதமாற்றம் செய்வதற்காக லௌகிக ஆசைகளைத் திருப்தி செய்யும் கிறிஸ்தவர்கள் மீது குற்றம் சாட்டுவது கூடாது.

முற்றிலும் அல்லது பெரும்பாலும் ஹரிஜனங்கள் அடங்கிய ஒரு கிராமத்தை கிறிஸ்தவ சமயத்திற்கு மாற்றுவதன் சம்பந்தமாக எனக்கும் ஸ்ரீ பாலுக்கும் விவாதம் நடந்தது. மேற்கண்ட கேள்விகள் எழுந்திருப்பதற்கு அந்த விவாதம்தான் காரணமாகும்.

மேற்கண்ட சித்தாந்தங்களை நான் பல தடவை வாசித்தேன். அவை, தனி நபரின் தொடர்புகளைப் பற்றிய வரையில்தான் பொருந்துமேயன்றி, ஏராளமானவர்கள் அடங்கிய ஒரு கூட்டத்தின் விஷயத்தில் ஒரு போதும் பொருந்தாது. முதலாவது சித்தாந்தத்தையே எடுத்துக் கொள்ளுங்கள். பாவம், கடவுளினின்றும் தனிப்பட்டது என்று விளக்கப்பட்டிருக்கிறது. ‘இதயமானது பாவத்திலிருந்து கடவுளிடம் மாறுவதே, மத மாற்றமாகும். அது கடவுளின் வேலையே’ என்று மேற்கண்ட சித்தாந்தங்களைத் தயாரித்தவர் கூறுகிறுர். மத மாற்றம் கடவுளுடைய வேலையாயின், அதை அவரிடமிருந்து மனிதர்கள் ஏன் எடுத்துக் கொள்ள வேண்டும்? கடவுளிடமிருந்து எதையும் எடுத்துக்கொள்ள மனிதனுக்கு என்ன அதிகாரம் இருக்கிறது? அவன் கடவுளின் தாழ்மையான கருவியாக இருக்கலாம். அப்போதுகூட அவன் மனிதர்களின் இதயத்தை நிர்ணயிக்க முடியாது. நமது இதயத்தை நாமே நிர்ணயிக்க முடியாதவர்களாக இருக்கிறோம். ‘மனிதனே, உன்னை நீ அறிந்து கொள்’ என்ற முதுரை, நம்பிக்கையிழந்த இதயத்திலிருந்து வேதனையுடன் வெளிப்பட்டிருக்கவேண்டும். நம்மைப் பற்றி நாமே குறைவாகத் தெரிந்து கொண்டிருக்கும்போது, பல்வேறு விஷயங்களை யொட்டியும், மூலாதாரமான சில விஷயங்களை யொட்டியும், நம்முடன் கருத்து வேற்றுமையுள்ள அண்டை அயலாரைப்பற்றியும், அறிமுகம் இல்லாதவர்களைப்பற்றியும் நாம் என்ன தெரிந்துகொள்ள முடியும்?

இரண்டாவது சித்தாந்தம், கிறிஸ்தவ சமய நம்பிக்கையைப் பற்றியது. அந்த நம்பிக்கை தலைமுறை தலைமுறையாகத் தொடர்ந்து வந்துள்ளது. அதன் உண்மையைப் பின்னர் பிறந்துள்ள ஆயிரக்கணக்கான கிறிஸ்தவர்கள் தங்களுக்குத் தாங்களே சோதித்துப் பார்க்கும்படி ஒரு காலத்திலும் கேட்கப்பட்டதில்லை. கேட்கப்படாததும் நியாயம்தான். ஆனால், வேறு சமயத்தைப் பின்பற்றி வந்துள்ளவர்களிடம் அதை சமர்ப்பிக்க முற்படுவது அபாயகரமானது. சோதிக்கப்படாத எனது சமயத்தை வேறொரு சமயத்தினரிடம் சமர்ப்பிக்க முற்படுவது அதிகப் பிரசங்கித்தனமாக எனக்குத் தோன்றுகிறது. எனது சமயத்தைப் போல் அவரது சமயமும் உண்மையானதாக இருக்கலாம். எனது சமயம் எனக்கும், அவரது சமயம் அவருக்கும் நிச்சயமாக நல்லதாக இருக்கலாம். பூமத்திய ரேகைப் பிரதேசத்திற்கு அருகில் வாழும் ஒருவருக்கு இடுப்புத் துண்டு போதுமானது; அது போலவே பூமியில் மிகவும் குளிர்ச்சியான பிரதேசத்தில் வாழும் ஒருவருக்கு தடித்த கம்பளிச் சட்டை தேவையாகும்.

முதலாவது சித்தாந்தத்தைப் போலவே மூன்றாவது சித்தாந்தமும் சமயத்தின் மர்மங்களைப்பற்றியதாகும். நம்பிக்கையின் மீது அவற்றை ஏற்றுக்கொள்ளும் சாதாரண மக்கள் அவற்றைப் பரம்பரையாக புரிந்து கொள்ளுவதில்லை. அந்த சமய நம்பிக்கையில் வாழும் மக்களிடையே அவை நன்றாக செயல்படுகின்றன.

ஆனால் வேறு சமயத்தில் நம்பிக்கையுடையவர்களுக்கு அந்த மர்மங்கள் வெறுப்பை உண்டுபண்ணுகின்றன.

மற்ற ஐந்து சித்தாந்தங்களும், மத மாற்ற அலுவல்களில் ஈடுபட்டுள்ள பாதிரிமாரின் நடத்தையைப் பற்றியவை. அவற்றை நடைமுறையில் கொண்டுவருவது அநேகமாக அசாத்தியம் என்றே எனக்குத் தோன்றுகிறது. ஆரம்பமே தவறாயின், அதைப் பின்பற்றி வரும் எல்லாமே தவறாகத்தான் இருக்கவேண்டும். உதாரணமாக, தாம் கூறுவதைக் கேட்பவர்களின் உறுதியையும் அந்தரங்க சுத்தியையும் கிறிஸ்தவர்கள் எப்படி அறிந்துகொள்ள முடியும்? 'அந்தரங்க சுத்தியுள்ளவர்கள் கைகளைத் தூக்குங்கள்' என்று கூறுவதன் மூலமா? அவர்களுடன் தாம் பேசுவதன் மூலமா? தாற்காலிக சோதனையின் மூலமா? கற்பனைக்கு எட்டிய எத்தகைய சோதனையும் அவ்விஷயத்தில் தோல்வி அடைந்தே தீரும். அத்தகைய சோதனையின் மூலம் ஏதோ நியாயமான ஓரளவுக்குக் கூட எவ்வித முடிவும் செய்ய முடியாது. ஒரு மனிதனின் இதயத்தை, கடவுளைத் தவிர வேறு யாரும் அறிய முடியாது. இதய பூர்வமாக மதம் மாறுவோரின் உடல், ஆன்மா, மனம் இவற்றைப் பாதுகாக்க வேண்டிய கடமை தங்களுக்கு இருப்பதாகக் கருதும் கிறிஸ்தவர்கள், தங்கள் சொந்த உடலும், ஆன்மாவும், மனமும் சரியான நிலைமையில் இருக்கின்றனவா என்பதில் அவ்வளவு உறுதியுடன் இருக்கிறார்களா?

கடைசியாக உள்ள சித்தாந்தம்தான் எல்லாவற்றிற்கும் சிகரமாக இருக்கிறது. அது நம்மைத் திக்குமுக்காடும்படி செய்கிறது. மற்ற எட்டு சித்தாந்தங்களும் ஹரிஜனங்கள் விஷயத்தில் பூரணமாக உபயோகிக்கப்படும் என்பதைத் தெளிவாக்குகின்றது. பெரிய அறிஞர்கள், தத்துவ நிபுணர்கள் முதலியோரின் மூளையைக் கூட, முதலாவது சித்தாந்தமானது குழப்புவதாக இருக்கிறது. முதலாவதாக, செய்த பாவத்தின் தன்மையை யார் அறிய முடியும்? கடவுளிடமிருந்து பிரிவது என்றால் என்ன அர்த்தம்? கடவுளுடன் தொடர்பு கொள்ளுவது என்பதற்கு என்ன பொருள்? கடவுளுடன் தொடர்பு கொண்டுள்ளவர்களின் அடையாளங்கள் யாவை? ஏசு நாதரின் செய்தியை உபதேசிக்கத் துணியும் எல்லோரும், கடவுளுடன் தங்களுக்குத் தொடர்பு இருப்பதாக நிச்சயமாகக் கூற முடியுமா? அவ்விதம் கூற முடியாதெனில், இத்தகைய ஆழ்ந்த கருத்துள்ள விஷயங்களையொட்டி ஹரிஜனங்களுக்குள்ள அறிவை யார் சோதனை செய்வது?

மேற்கண்ட சித்தாந்தங்களையொட்டி எனது நிலை இதுதான். இதை வாசிக்கும் எந்த கிறிஸ்தவரும் மனவேதனை அடையமாட்டார் என நம்புகிறேன். அந்த ஒன்பது சித்தாந்தங்களைக் குறித்து எனது உண்மையான நிலையை நான் மறைத்து வைப்பேனாயின், என்னுடைய ஏராளமான கிறிஸ்தவ நண்பர்களிடம் நான் உண்மையாக நடந்துகொண்டவனாக மாட்டேன்.

அவற்றையொட்டி பற்றற்ற எனது சொந்தக் கருத்து என்ன என்பதை ஒரு சில வார்த்தைகளில் கூறிவிடலாம். எல்லோரும் ஒப்புக்கொண்ட அர்த்தத்தில், ஒரு சமயத்திலிருந்து மற்றொரு சமயத்திற்கு மாறுவது என்ற பேச்சிற்கே இடமில்லை என்பதே எனது நம்பிக்கை. அது, தனி நபருக்கும் கடவுளுக்கும் இடையே உள்ள பிரத்தியேகமான சொந்த விஷயமாகும். என் அண்டை வீட்டுக்காரரின் மதத்தையொட்டி எனக்கு எத்தகைய ரகசிய நோக்கமும் இருக்கக் கூடாது. என்னுடைய சொந்த சமயத்தை நான் கௌரவிப்பதுபோல், அவரது சமயத்தையும் கௌரவிக்க வேண்டும். என் சமயம் எப்படி எனக்கு உண்மையானதோ, அதுபோலவே அந்தந்த மக்களின் சமயங்கள் அவரவர்களுக்கு உண்மையானவை. உலகத்திலுள்ள எல்லாப் பெரிய சமயங்களையும் நான் அவ்விதமே கருதுகிறேன். உலகத்திலுள்ள எல்லா சமய நூல்களையும் நான் பயபக்தியுடன் வாசித்திருக்கிறேன். எனவே, அவை எல்லாவற்றிலும் உள்ள சிறப்புகளை அறிந்து கொள்வதில் எனக்குக் கஷ்டம் எதுவும் இல்லை. என்னுடைய சமயத்தை மாற்றிக்கொள்ள நான் எப்படி மனத்தினாலும் எண்ண முடியாதோ அவ்விதமே, ஒரு கிறிஸ்தவரையோ, முஸ்லிமையோ, ஒரு பார்சியையோ அல்லது ஓர் யூதரையோ அவரது சமயத்தை மாற்றிக் கொள்ளும்படி கேட்பதை நான் மனத்தினாலும் எண்ண முடியாது. எனது சமயத்தைப் பின்பற்றுவோரின் மோசமான குற்றம் குறைகளை மறந்து நான் பேசவில்லை. அது போலவே,

மற்ற சமயங்களைப் பின்பற்றுவோரின் குறைகளையும் நான் மறந்து இவ்விதம் பேசவில்லை. எனது சமயத்தின் உயர்ந்த அளவுக்கு எனது செயல்களைக் கொண்டுவரவும், என் சமயத்தைச் சேர்ந்த மற்றவர்களுக்கு அவற்றை உபதேசிக்கவும் முயற்சிக்க என் சக்தி முழுவதையும் நான் உபயோகிக்க வேண்டியிருக்கிறது. எனவே, மற்ற சமயங்களைப் பின்பற்றுவோருக்கு உபதேசிக்க வேண்டுமென நான் கனவிலும் கருதுவதற்கில்லை. 'நம்மைப்பற்றி பிறர் நினைக்க விரும்பாததை நாமும் பிறரைப்பற்றி நினைக்கக் கூடாது' என்பது ஒரு சிறந்த பழமொழியும் கொள்கையுமாகும். இந்தியாவில் உள்ள பெரிய, பண பலம் வாய்ந்த கிறிஸ்தவ சமய சங்கங்களைச் சேர்ந்தவர்கள், இந்தியர்களை மதம் மாற்றும் அந்தரங்க நோக்கமின்றி ஜீவகாருண்யத் தொண்டில் மாத்திரமே ஈடுபடுவார்களாயின், அவர்கள் இந்தியாவுக்கு உண்மையான தொண்டுசெய்தவர்களாவார்கள். அச்சங்கங்களைச் சேர்ந்தவர்கள் குறைந்த பட்சமாக கள்ளங்கபடமற்ற கிராமவாசிகளையாவது கிறிஸ்தவ சமயத்திற்கு மாற்றுமலும், அவர்களுடைய சமுதாய அமைப்பைச் சீரழிக்காமலும் இருக்கலாம். கிராமவாசிகளின் சமுதாய அமைப்பில் எவ்வளவு குற்றம் குறைகள் இருந்தாலும், எவ்வளவோ காலமாக உள்ளேயிருந்தும் வெளியேயிருந்தும் வந்துள்ள பல தாக்குதல்களையும் அவர்கள் உறுதியுடன் நின்று சமாளித்து வந்திருக்கிறுர்கள். பாதிரிமார்களும் சரி, நாமும் சரி, விரும்பினுலும் விரும்பாவிட்டாலும், ஹிந்து சமயத்தின் உண்மையான அம்சங்கள் நிரந்தரமாக நிலைத்து நிற்கும்; உண்மையல்லாத விஷயங்கள் சின்னுபின்னமாகிச் சிதறுண்டுவிடும். உண்மையான ஒவ்வொரு சமயமும், அது வாழ வேண்டுமாயின், அதன் அகத்தே மீண்டும் இளமைப் பருவத்தை அடையும் சக்தி இருக்க வேண்டும்.

—'ஹரிஜன்' - 28—9—1935

## 3

# நேர்மையான மத மாற்றம்

நான் யாரையும் மத மாற்றம் செய்ய முயற்சிக்க மாட்டேன். அது மாத்திரமல்ல, யாரும் எனது சமயத்தைத் தழுவ வேண்டும் என்று ரகசியமாகக் கூட நான் பிரார்த்திக்க மாட்டேன். உண்மையாகவும், நேர்மையாகவும் மதம் மாற விரும்புவோர் இருக்கலாம். சிலர் அந்தராத்மாவின் திருப்திக்காகவும் தங்களுடைய வளர்ச்சிக்காகவும் தங்களுடைய சமயத்தை மாற்றிக்கொள்ள விரும்பினுல், அவர்கள் அப்படியே செய்துகொள்ளட்டும்.

—'எங் இந்தியா' - 19—1—1928

# 4

# ஆட்சேபகரமான முறைகள்

கோபமோ அல்லது விஷயத்தைத் துருவித் தெரிந்து கொள்ளவேண்டுமென்ற ஆர்வமோ உள்ள அன்பர்கள், பத்திரிகைகளிலிருந்து கத்தரிக்கப்பட்ட செய்திகளையும், அவற்றையொட்டிய விமர்சனங்களையும் எனக்கு அனுப்பியிருக்கிறார்கள். அந்நிய நாட்டுப் பாதிரிமார் சம்பந்தமாக நான் அளித்ததாகக் கூறப்படும் பேட்டி விவரங்கள் சரிவர பிரசுரிக்கப்பட்டிருக்கின்றனவா என்று ஒரே ஒரு அன்பர்தான் என்னைக் கேட்டிருக்கிறார். நான் கூறியதாக வெளியாகியுள்ள செய்தி சரிதானா என்பதை அறிந்து கொள்ள முற்படாமலேயே, எனது முன்னாள் சக ஊழியரும், மதுரைக்கு நான் சென்றிருந்தபோது என்னை வைத்து அன்புடன் உபசரித்தவருமான ஜார்ஜ் ஜோசப் கூட, கோபாவேசத்துடன் அவ்விஷயமாக எனக்கு எழுதியுள்ளார். இது எனக்கு எல்லாவற்றையும் காட்டிலும் அதிக வேதனையைக் கொடுக்கிறது.

நாம் பின் வருமாறு கூறியதாக ஒரு பத்திரிகை நிருபர் குறிப்பிட்டுள்ளார்:

'நோயாளிகளுக்கு ஜீவகாருண்யமான தொண்டும், ஏழைகளுக்கு ஸ்தூலமான உதவியும் செய்வதுடன் நில்லாமல், வைத்திய உதவி, கல்வி முதலியவற்றின் மூலம் அந்நிய நாட்டுப் பாதிரிமார் மத மாற்றத்தில் ஈடுபடுவார்களாயின், அவர்களைத் திரும்பிச் சென்று விடும்படியே நான் நிச்சயமாகக் கூறுவேன். ஒவ்வொரு நாட்டின் சமயமும் மற்ற எந்த சமயத்தையும் போல் சிறந்ததே. இந்திய மக்களுக்கு இந்தியாவில் உள்ள சமயங்களே போதுமானவை. ஆன்மிக மாற்றம் எதுவும் நமக்குத் தேவையில்லை.'

நான் ஏராளமான பேட்டிகள் கொடுத்துள்ளேன். எனவே, எச்சமயத்தில், எந்தச் சந்தர்ப்பத்தில் நான் அவ்விதம் கூறினேன் என்பது எனக்கு ஞாபகமில்லை. எனினும், மேற்கண்ட கூற்று, நான் எப்போதும் கூறிவருவதற்கும், நான் கொண்டுள்ள அபிப்பிராயத்திற்கும் நேர் முரணாக இருக்கிறது. அந்நியப் பாதிரிமார் சங்கங்களைப்பற்றிய எனது கருத்துகள் ரகசியமானவை அல்ல. பாதிரிமார் அடங்கிய கூட்டங்களிலேயே அவற்றை நான் விளக்கிக் கூறியுள்ளேன். எனவே, எனது கருத்துகள் தாறுமாறாகக் கொடுக்கப்பட்டுள்ளன என்பதைத் தெரிந்து கொள்ளலாம். அப்படியிருந்தும், அவற்றைக் குறித்து ஏன் இவ்வளவு ஆத்திரம் ஏற்பட்டிருக்கிறது என்பதை என்னால் அறிந்து கொள்ள முடியவில்லை.

மேற்கண்ட வாசகத்தை என் கருத்துக்கு இணங்க நான் திருத்திக் கூறுகிறேன் :

'கல்வி, வைத்தியத் தொண்டு போன்ற ஏழைகளுக்கு உதவியான கலப்பற்ற ஜீவகாருண்யத் தொண்டுகளில் ஈடுபடுவதற்குப் பதிலாக, அந்நிய நாட்டுப் பாதிரிமார்கள் மத மாற்ற நோக்கத்துடன் அத்தகைய தொண்டுகளை உபயோகப்படுத்துவார்களாயின், அவர்கள் திரும்பிச் சென்று விடவேண்டும் என்றே நான் நிச்சயமாக விரும்புவேன். ஒவ்வொரு நாடும் மற்ற சமயத்தைப் போலவே தன் சமயத்தை சிறந்ததென்று கருதுகிறது. இந்திய மக்கள் பின்பற்றி வரும் சிறந்த சமயங்கள் அவர்களுக்குப் போதுமானவை. ஒரு சமயத்திலிருந்து மற்றொரு சமயத்திற்கு மாற வேண்டிய தேவை எதுவும் இந்தியாவில் இல்லை.'

வெகு சுருக்கமாக உள்ள இந்தக் கருத்தை நான் விளக்கிக் கூறுகிறேன். ஜீவகாருண்யத் தொண்டு என்ற போர்வையில் மதம் மாற்றும் வேலை ஆன்மிக ஆரோக்கியத்திற்கு முரணாகும். இங்கே உள்ள மக்களுக்கும் நிச்சயமாக அது கோபத்தை உண்டாக்கியிருக்கிறது. சமயம் என்பது, முற்றிலும் ஒருவருடைய சொந்த விஷயம். கிறிஸ்தவ சமயத்தைச் சேர்ந்த ஒரு டாக்டர் எனக்கு இருந்த ஏதோ ஒரு நோயைக் குணப்படுத்தினர் என்பதற்காக நான் எனது சமயத்தை ஏன் மாற்றிக் கொள்ளவேண்டும்? நான் டாக்டரின் தயவில் இருக்கும்போது, என்னிடமிருந்து அத்தகைய மத மாற்றத்தை அவர் ஏன் எதிர்பார்க்க வேண்டும், அல்லது ஏன் அவ்விதம் எனக்கு யோசனை கூற வேண்டும்? வைத்திய உதவி புரிவதே அவருக்குக் கிடைக்கும் வெகுமதியும், அவருக்கு ஏற்படும் திருப்தியுமாகும். தவிர, நான் ஒரு கிறிஸ்தவக் கல்வி சாலையில் படிக்கும்போது, கிறிஸ்தவ போதனைகளை என்மீது ஏன் திணிக்கவேண்டும்? இத்தகைய வழக்கங்கள் மனிதனை உயர்த்தும் காரியங்கள் அல்ல என்பதே எனது அபிப்பிராயமாகும். இவற்றால், அந்தரங்கத்தில் எதிர்ப்பு ஏற்படாவிட்டாலும் சந்தேகம் உண்டாகிறது. மத மாற்ற முறைகள் சீசரின் மனைவியைப்போல் எள்ளளவும் சந்தேகத்திற்கு இடம் கொடுக்காதவையாக இருக்கவேண்டும். லௌகிகமான கல்வியைப்போல் சமயக் கல்வி கற்பிக்கப்படுவதில்லை. அது இதய பாஷையின் மூலம் கற்பிக்கப்படவேண்டும். ஒரு மனிதனுக்குத் தன்னிடம் ஜீவநம்பிக்கை இருக்குமாயின், அதன் நறுமணம் ரோஜா புஷ்பத்தின் வாசனையைப்போல எங்கும் பரவி நிற்கும். நறுமணத்தைக் கண்களால் பார்க்க முடியாது. எனவே, அந்தப் புஷ்பத்தினுடைய இதழ்களின் கண்களுக்குத் தெரியும் நிறத்தைக் காட்டிலும், அதன் மணத்தின் செல்வாக்கு வெகு தூரம் பரவுகின்றது.

இந்நிலையில், மதமாற்றத்தையே நான் எதிர்க்கவில்லை. மத மாற்றம் செய்யும் நவீன முறைகளைத்தான் நான் எதிர்க்கிறேன். இப்போதெல்லாம், மற்ற வியாபாரங்களைப்போல் மதமாற்றமும் ஒரு வியாபாரமாகியிருக்கிறது. ஒரு பாதிரியாரின் அறிக்கையை வாசித்த ஞாபகம் எனக்கு இருக்கிறது. ஒருவரை மற்றொரு சமயத்திலிருந்து கிறிஸ்தவ சமயத்திற்கு மாற்ற எவ்வளவு செல

வாயிற்று என்பது அதில் குறிப்பிடப்பட்டிருந்ததுடன், அவ்விஷய மாக அடுத்த பருவத்திற்கான வரவு செலவுத் திட்டமும் அதில் அடங்கியிருந்தது!

ஆமாம், இந்தியாவில் உள்ள மகத்தான சமயங்கள் இந்தியா வுக்கு முற்றிலும் போதுமானவை என்பதே எனது உறுதியான அபிப்பிராயம். கிறிஸ்தவ சமயம், யூத சமயம், ஹிந்து சமயம், அதன் உப பிரிவுகள் முதலியவற்றைத் தவிர, இஸ்லாமும், ஜோராஷ்டிர சமயமும் இந்தியாவிலுள்ள முக்கியமான சமயங்க ளாகும். எந்த ஒரு சமயமும் குற்றம் குறையற்றதல்ல. எல்லா சமயங்களும் அந்தந்த சமய பக்தர்களுக்கு அருமையானவையே. எனவே, இப்போது தேவையானது என்னவெனில், உலகத்தி லுள்ள மகத்தான சமயங்களைப் பின்பற்றுவோருக்கிடையே நிரந் தரமான நட்பும் நல்லுறவும் நிலவவேண்டும். மற்ற சமயங்களை விட தங்களுடைய சமயம்தான் உயர்ந்தது என்பதைக் காட்ட ஒவ்வொரு சமூகமும் போட்டி போடும் பலனற்ற முயற்சியின் விளைவாக மோதல்கள் ஏற்படுவது விரும்பத்தக்கதல்ல. அத் தகைய நட்பு உறவின் மூலம், எல்லோரும் அவரவர் சமயத்தி லுள்ள குறைகளையும் ஊழல்களையும் களைந்துகொள்ளுவது சாத்தியமாகும்.

நான் மேலே கூறியிருப்பதிலிருந்து ஒரு விஷயம் தெளி வாகிறது. அதாவது மேற்கண்ட மத மாற்றத்திற்கு இந்தியாவில் தேவை எதுவும் இல்லை. சுயத் தூய்மையையும், தன்னைத் தானே அறிந்துகொள்ளும் ஆர்வத்தையும் அடிப்படையாகக் கொண்ட மாற்றந்தான் இன்று உடனடியான முக்கிய தேவையாகும். எனினும், அத்தகைய மாற்றத்திற்கும் மத மாற்றத்திற்கும் வெகு தூரமாகும். இந்தியாவில் மதமாற்றம் செய்ய விரும்புவோரிடம், “வைத்தியரே, உமது நோயை முதலில் குணப்படுத்திக் கொள் ளுங்கள்” என்று கூறலாம் அல்லவா?

— 'எங் இந்தியா' - 23—4—1931

# 5

# கடவுளை அணுகுவதற்கு எத்தனையோ வழிகள்

மத மாற்றம் சம்பந்தமாக காந்திஜியின் கருத்துகளை அறிந்துகொள்ள விரும்பிய ஓர் அமெரிக்கப் பாதிரியாருக்குப் பதிலாக காந்திஜி கூறியதாவது:

மனிதரின் முயற்சியால் மத மாற்றம் நடைபெறுவதில் எனக்கு நம்பிக்கையில்லை என்று நான் அடிக்கடி கூறி வந்திருக் கிறேன்; இப்போதும் அதையே திரும்பவும் கூறுகிறேன். சத்தி

யத்தைத் தேடுவோரின் நிலை, குருடர்கள் யானையைப் பார்க்கச் சென்ற கதையாக இருக்கிறது, அதைக் காட்டிலும் மோசமாகவும் இருக்கிறது. கண்கள் குருடாக இருப்போருக்கு மற்ற உறுப்புகளின் சக்தி அதிகமாக இருக்கும். ஆனால், சத்தியத்தைத் தேடுவோர் தங்களுடைய மனக் கண்ணால், இருண்ட கண்ணாடியின் மூலம் பார்ப்பது போலத்தான் பார்க்கமுடியும். எனவே, மற்றவர்களைத் தங்களுடைய சொந்த சமயத்திற்கு மாற்ற முயற்சிப்பது வெறும் இறுமாப்பேயாகும். கடவுளை அணுகுவதற்கு, உலகில் எத்தனை மனிதர்கள் இருக்கிறார்களோ அத்தனை வழிகளும் இருக்கின்றன.

மானிட வர்க்கம் பயபக்தியுடன் வணங்கும் மற்றவர்களையும் ஏசு நாதரையும் ஒப்பிட்டுப் பேசுவது பலனற்ற காரியம். சரித்திரத்தில் காணும் ஏசு நாதருக்கும் கிறிஸ்தவர்கள் வணங்கும் ஏசு நாதருக்கும் வேற்றுமை உண்டு. உங்கள் கற்பனையில் உள்ள ஏசு நாதர் உங்களுக்கு உயிர்க் கடவுளாக இருக்கிறார். அது போலவே என் கற்பனையில் உள்ள கிருஷ்ணனிடமும், அவருக்கும் கடவுளுக்கும் வேற்றுமை இல்லை என்பதில் எனக்கு பூரண நம்பிக்கை இருக்கிறது. எனினும், சரித்திர கிருஷ்ணனிடம் எனக்கு அவ்வளவு நம்பிக்கையில்லை. ஏனெனில், அவரைப் பற்றிய முரண்பாடான சாட்சியங்கள் ஏராளமாக இருக்கின்றன. சரித்திர புருஷர்கள் இறந்துவிட்டார்கள். தெய்வத்தன்மை வாய்ந்த அவதாரங்கள் ஜீவ சக்தியுள்ள கொள்கைகளே. அவை, உலக வாழ்வுகளைக் காட்டிலும் அதிக உண்மையானவை. சமயமானது, ஒரு காலத்திலும் சரித்திரத்தை அடிப்படையாகக் கொண்டிருக்க முடியாது. அது சரித்திரத்தை அடிப்படையாகக் கொண்டிருக்குமாயின், சமயத்தின் மதிப்பு குறைந்துவிடும். அதனாலேயே ராமா என்பதைக் காட்டிலும் நாமா (பெயர்) மகத்தானது என்று, துளசிதாசர் நாமாவை உயர்த்திக் கூறியுள்ளார்.

—'ஹரிஜன்' – 4—5—1934

## 6

# சமய மாற்றம் அனுமதிக்கப்படுவதில்லை

ஆங்கிலப் பத்திரிகைகளிலிருந்து கத்தரித்து எனக்கு பல ருசிகரமான செய்திகளை அனுப்பியிருக்கிறார்கள். ஆசிரமத்தில் மீராபாய் என்றழைக்கப்படும் மிஸ் ஸ்லேடு ஹிந்து சமயத்தில் சேர்ந்துவிட்டார் என்பதும் அச் செய்திகளில் ஒன்றாகும். ஆனால் அவர் ஹிந்து சமயத்தில் சேர்ந்துவிடவில்லை என்பதை நான் கூற விரும்புகிறேன். மீராபாய் நான்கு ஆண்டுகளுக்கு முன் ஆசிரமத்தில் சேர்ந்தபோது இருந்ததைக் காட்டிலும் இப்போது அவர் ஒரு சிறந்த கிறிஸ்தவராகவே

திகழ்கிறார் என்றே நம்புகிறேன். அவர் வயதாகாத இளம் பெண் அல்ல. அவருக்கு முப்பது வயதுக்கு மேல் ஆகிறது. அவர் எகிப்து, பாரசீகம், ஐரோப்பா முதலிய இடங்களுக்குத் தனியாகச் சென்று வந்துள்ளார். வயதுவராத முஸ்லிம், பார்சி, கிறிஸ்தவ இளைஞர்களை மேற்பார்வையிடும் வாய்ப்பு எனக்குக் கிடைத்திருக்கிறது. எனினும்,ஒருபோதும் நான் ஹிந்து சமயத்தை அவர்கள் அங்கீகரிக்கவேண்டுமென்று கூறியதில்லை. அவர்கள் அவரவர்களுடைய சொந்த சமய நூல்களுக்கு மரியாதை காட்டி, அவற்றையே படிக்க வேண்டுமென்று உற்சாகமூட்டப்பட்டு வந்திருக்கிறார்கள்.

ஆசிரமத்தில் ஆடவர்களும், பெண்களும், சிறுவர்களும், சிறுமிகளும் இருந்திருக்கிறார்கள். மற்ற சமயங்களை அனுதாபத்துடனும் மரியாதையுடனும் ஆராய்ச்சி செய்யும்படி அவர்கள் தூண்டப்பட்டார்களெனில், அவர்கள் முன்னரைக் காட்டிலும் தங்களுடைய சொந்த சமயங்களில் அதிக பக்தி கொள்ளும்படியும், அவற்றை நன்கு அறிந்துகொள்ளும்படியும் போதிக்கப்பட்டனர். அதன் சம்பந்தமான பல நிகழ்ச்சிகளையும் நான் நினைவுபடுத்திக் கொள்ளும்போது எனக்கு மகிழ்ச்சி உண்டாகிறது.

இன்று ஆசிரமத்தில் பல சமயங்களைச் சேர்ந்தவர்களும் இருக்கிறார்கள். இங்கே மத மாற்றத்தை அனுசரிப்பதுமில்லை, அங்கீகரிப்பதுமில்லை. இந்த எல்லா சமயங்களும் உண்மையானவை என்பதையும், தெய்விகமானவை என்பதையும் நாங்கள் ஒப்புக்கொண்டுள்ளோம். எல்லா சமயங்களும் குற்றம் குறையுள்ள மனிதர்களால், குற்றம் குறையுள்ள முறைகளின் மூலம் பாதிக்கப்பட்டிருக்கின்றன என்பதையும் நாங்கள் உணர்ந்துள்ளோம். மிஸ் ஸ்லேடு மேற்கொண்டுள்ள மீராபாய் என்ற பெயர் ஹிந்து சமயத் தொடர்பு உடையதல்ல, இந்தியப் பெயரேயாகும். அவரது கோரிக்கைக்கு இணங்கவும், சௌகரியத்திற்காகவுமே அவருக்கு இந்தப் பெயர் இடப்பட்டது. இதைப்போல் ஆசிரமத்தில் இன்னும் பல உதாரணங்களைக் கூறலாம். ரிச்சர்ட் கிரெக் கிறிஸ்தவ சமயத்தை விட்டுவிட்டதாக யாரும் சந்தேகிக்கவில்லை. அவரை நாங்கள் கோவிந்தஜி என்றே அழைப்பது வழக்கம். போனிக்ஸில் கிறிஸ்தவ சகோதரியான ஆடா வெஸ்டை தேவிபென் என்றே நாங்கள் பெயர் வைத்துக் கூப்பிட்டு வந்தோம்.

—'எங் இந்தியா' - 20—2—1930

# 7

# கட்டாய மத மாற்றம்

ஓர் அன்பர் பின்வருமாறு எழுதுகிறார் :

"ஒரு குறிப்பிட்ட பிரதேசம் பாகிஸ்தானில் சேர்க்கப்படுமாயின், அங்கே உள்ள ஹரிஜனங்கள் இஸ்லாம் சமயத்தைத் தழுவுவதைத் தவிர வேறு வழியில்லை."

இந்த அன்பர் சிறந்த கற்றறிஞர்; சட்டசபை அங்கத்தினராகவும் இருக்கிறார். எல்லாப் பிரதேசங்களில் இராமல், பாகிஸ்தானுக்கு உட்பட்ட பிரதேசங்களில் வாழும் ஹரிஜனங்களின் கதி என்ன என்ற உடனடியான கேள்வி இப்போது எழுகின்றது. அவர்கள் எல்லோரும் இஸ்லாம் சமயத்தைத் தழுவும்படி நேருமா? ஒருவர் தமது உடையை மாற்றிக் கொள்ளுவதுபோல் சமயத்தை மாற்றிக் கொள்ளுவாராயின், அவரது சமயம் மிகவும் அற்பமான ஒரு சரக்காகிவிடும் என்று மாத்திரமே கூற முடியும். சமயம் (உறுதியான நம்பிக்கை) சக்தி வாய்ந்த சாதனத்தினால் உருவானது. அது முற்றிலும் சொந்த விஷயம். அது மானத்தைக் காட்டிலும் மேலானது. சமயம் உண்மையானதாக இருக்க வேண்டுமாயின், அது எத்தகைய கடுமையான நிர்ப்பந்தத்தையும் எதிர்த்து நிற்பதாக இருக்கவேண்டும்.

நிர்ப்பந்த மத மாற்றத்தைக் கண்டு அஞ்சுவோருக்கு நான் கூறுவது அவ்வளவுதான். ஆடவர்களுக்கும் பெண்களுக்கும் அத்தகைய பீதி ஏற்படும்படி செய்வோரைப்பற்றியும் கூற விரும்புகிறேன். தாங்களாக மனம் விரும்பி மதம் மாறுவதை, நிர்ப்பந்த மத மாற்றம் என்று அடிக்கடி மக்கள் தப்பெண்ணம் கொள்ளுவதாக உண்மையாகவே விவாதிக்கிறார்கள். அது அர்த்தமற்ற விவாதம் என்றே நான் நினைக்கிறேன். தங்களுடைய நண்பர்களோ, உறவினர்களோ அல்லது அண்டை அயலாரோ நிர்ப்பந்தமாக மத மாற்றம் செய்யப்பட்டிருக்கிறார்கள் என்பதை அறிந்தபோதுதான், மக்கள் எப்போதும் மத மாற்றத்தில் ஈடுபட்டிருக்கிறார்கள். எனவே, எங்கு பார்த்தாலும் சந்தேகம் நிலவும்போது மத மாற்றம் அடியோடு நிறுத்தப்பட்டு விடவேண்டும். சொந்த சமயத்தைப்பற்றி எனது "துணிச்சலான" வார்த்தைகள் சந்நியாசிகளுக்குத்தான் பொருந்துமேயன்றி குடும்பத்தினருக்குப் பொருந்தாது என்றும், அவர்கள் வாழ்க்கையில் பல்வேறு விதத்திலும் ஆசை காட்டப்படுகிறார்கள் என்றும் அன்றொரு நாள் ஓர் அன்பர் வாதித்தது என் ஞாபகத்திற்கு வருகிறது. இந்த வாதத்தை நான் ஒப்புக் கொள்ளவில்லை. ஏனெனில், அந்த வாதம் யாருடைய சார்பில் கூறப்படுகிறதோ அவர்களுடைய நிலையையே அது பலவீனப்படுத்துவதாக இருக்கிறது. இருந்தாலும், அந்த வாதத்திற்கு பலமான ஆதாரம் இருக்கிறதென்று

நான் நினைக்காமல் இருக்கமுடியவில்லை. குறிப்பாக, ஹரிஜனங்கள் விஷயத்தில் அந்த வாதம் பொருத்தமாகவே இருக்கிறது. ஏனெனில், அவர்கள் தான் சக ஹிந்துக்களால் துன்புறுத்தப்படுகிறார்கள். தாங்கள் 'உயர்ந்தவர்கள்' என்று இறுமாப்புக் கொள்ளும் ஹிந்துக்களிடம் துன்பத்திற்கு உள்ளாவதைத் தவிர்க்க முடியும் என்ற நம்பிக்கையினால் அவர்கள் நிர்ப்பந்தத்திற்கு இணங்கிவிடலாம். அத்தகைய நிர்ப்பந்தமானது அடிக்கடி தந்திரமான வழிகளில், அதாவது இலவசமாக நில மான்யங்கள் கொடுப்பது அல்லது தகுதியைக் காட்டிலும் அதிக உயர்ந்த உத்தியோகம் கொடுப்பது போன்ற வழிகளில் பிரயோகிக்கப் படுகிறது.

—'ஹரிஜன்' – 3—8—1947

# 8

# மன மாற்றம் ஏற்படுமா ?

சக்ரதர்பூரிலிருந்து சைபாஸாவுக்கு மிகவும் நேர்த்தியான ஒரு சாலை இருக்கிறது. அதன் மூலம் மோட்டாரில் ஆனந்தமாக சவாரி செய்யலாம். சைபாஸாவில்தான் நான் ஹோ மலைவாசிகளை அறிமுகம் செய்து கொண்டேன். ஆடவர்களும் பெண்களுமான அவர்கள் மனத்தைக் கவரும் ஒரு கூட்டத்தைச் சேர்ந்தவர்கள்; அவர்கள் குழந்தைகளைப்போல் கள்ளம் கபடமற்றவர்கள். அவர்களுடைய நம்பிக்கை எளிதில் அசைக்க முடியாதது. அவர்களில் பலர் ராட்டினத்தில் நூற்கும் வழக்கத்தையும், கதர் உடுத்திக் கொள்ளும் வழக்கத்தையும் மேற்கொண்டிருக்கிறார்கள். அங்கே காங்கிரஸ் தொண்டர்கள் 1921-இல் சீர்திருத்த அலுவல்களை ஆரம்பித்தார்கள். அவர்களில் பலரும் செத்த மாட்டிறைச்சி தின்னும் வழக்கத்தை விட்டுவிட்டார்கள். சிலர் சைவ உணவைக்கூட மேற்கொண்டிருக்கிறார்கள். முண்டர்கள் என்போர் மலைவாசிகளில் மற்றொரு பிரிவினராவர். ராஞ்சிக்குச் செல்லும் வழியில் உள்ள குந்தியில் நான் அவர்களைச் சந்தித்தேன். அவர்களிடையே செய்யவேண்டிய தொண்டிற்கு எல்லையே இல்லை. அவர்களிடையே தலைமுறை தலைமுறைகளாக கிறிஸ்தவப் பாதிரிமார் சிறந்த தொண்டு புரிந்து வருகிறார்கள். எனினும், அவர்களுடைய தொண்டில் குறைகள் இருக்கின்றன. ஏனெனில், கள்ளம் கபட மற்ற இந்த மக்களை இறுதியில் கிறிஸ்தவ சமயத்திற்கு மாற்ற வேண்டுமென அவர்கள் எதிர்பார்ப்பதே அதற்குக் காரணமாகும். அந்த இடங்களில் உள்ள பாதிரிமார் பள்ளிக் கூடங்களில் சிலவற்றைப் பார்த்தேன். அவையெல்லாம் பார்ப்பதற்கு ஆனந்தமாகத்தான் இருக்கின்றன. எனினும், பாதிரிமார்களுக்கும் ஹிந்து தொண்டர்களுக்கும் தகராறு ஏற்படக்கூடிய நிலை இருந்துவருகிறது.

ஹோக்கள், முண்டர்கள் முதலிய மற்றுமுள்ள மக்களுக்குப் போற்றத்தக்க தொண்டு புரிவதில் ஹிந்து தொண்டர்களுக்கு கஷ்டம் எதுவும் இல்லை. உள்ளத்தில் மத மாற்ற நோக்கமின்றி பாதிரிமார் ஜீவகாருண்யத் தொண்டு புரிவார்களாயின் எவ்வளவு மேன்மையாக இருக்கும்! எனினும், கல்கத்தாவில் நடந்த பாதிரிமார் மகாநாட்டிலும், மற்ற கிறிஸ்தவ ஸ்தாபனங்களிலும் நான் கூறிய விஷயங்களை இங்கே திருப்பிக் கூற வேண்டியதில்லை. கிறிஸ்தவர்களுடைய தொண்டில், நான் கூறுவது போன்ற அத்தகைய புரட்சிகரமான மாற்றம், குறிப்பாக வெளியார் கூறும் புத்திமதியின் பலனுக ஏற்பட்டுவிட முடியாது என்பதை நான் அறிவேன். எவ்வளவு நல்ல எண்ணத்துடன் புத்திமதி கூறினுலும் அதனுல் பலன் ஏற்படுவதற்கில்லை. தனி நபரின் திட்டவட்டமான கொள்கை காரணமாகவோ அல்லது கிறிஸ்தவர்களுக்குள்ளேயே ஏற்படும் மக்களின் ஏதாவதொரு பெரிய இயக்கம் காரணமாகவோதான் அத்தகைய மன மாற்றம் ஏற்பட முடியும்.

—'எங் இந்தியா' – 8—10—1925

# 9

# வாழ்ந்து காட்டுவதே சிறந்த பிரசாரம்

காந்திஜியைப் பார்ப்பதற்காக விஜயம் செய்திருந்த ஒரு பாதிரியார் நண்பர் அவரைப் பின்வருமாறு ஒரு கேள்வி கேட்டார்:

"ஏசு நாதரின் திருவாக்கைப் பிரசாரம் செய்வதற்கான பலன் தரத்தக்க சிறந்த வழி என்ன? அதைப் பிரசாரம் செய்வதே எனது லட்சியமாகும்."

அவருக்குப் பதிலாக காந்திஜி கூறியதாவது:

"ஏசு நாதரின் திருவாக்கை வாழ்ந்து காட்டுவதே மிகச் சிறந்த வழியாகும். முதலாவதாகவும், இரண்டாவதாகவும், கடைசியாகவும் அதுதான் பலன் தரத்தக்க சிறந்த வழி. பிரசாரம் செய்ய முற்படும் பாதிரிமார்மீது எனக்குச் சந்தேகம் ஏற்பட்டுவிடுகிறது. அவர்களது உபதேசங்கள் எனக்கு வேதனையையே கொடுக்கின்றன. அவை என் மனத்தைக் கவர்வதில்லை. எனினும், ஒரு போதும் பிரசாரமோ, உபதேசமோ செய்ய முற்படாமல், தங்கள் அறிவுக்கு எட்டியவரையில் அதை வாழ்க்கையில் அனுசரித்துக் காட்டுவோரை நான் நேசிக்கிறேன். அவர்களுடைய வாழ்க்கைதான் மௌனமான, ஆனல், மிகவும் பலன் தரத்தக்க உதாரணங்களாகும். எனவே, எப்படி பிரசாரம் செய்வது என்பதை என்னல் கூற முடியாது. ஆனல், தொண்டு புரி

யும், மிக மிக எளிமையான வாழ்க்கையே பிரசாரம் செய்வதற்கான சிறந்த வழியாகும். ஆகையால், நீங்கள் மக்களுக்கு இடைவிடாது தொண்டு புரிவதுடன், அவர்களையும் தொண்டு புரியும்படி கேட்க வேண்டும். அப்படியாயின், உங்களை அவர்கள் புரிந்து கொள்ளுவார்கள். தொண்டு புரிவதை விட்டு நீங்கள் ஜான் 3-16-ஐ* மேற்கோள் காட்டி அதை நம்பும்படி மக்களைக் கேட்கிறீர்கள். அது என் மனத்திற்கு உகந்ததாக இல்லை. அதை மக்கள் அறிந்து கொள்ள மாட்டார்கள் என்பதும் நிச்சயம். ஏசு நாதரின் வாக்கை பிரசாரத்தின் மூலம் மக்கள் அங்கீகரிக்கும்படி செய்வதில் ஏதோ ரகசிய நோக்கம் இருக்கிறது என்பதே எனது புகாராகும்.

''நாங்களும் அதை அறிந்திருக்கிறோம். அவ்வித புகார் எழாமல் பாதுகாப்பதற்கான முயற்சியை எங்களால் இயன்றவரையில் செய்துவருகிறோம்'' என்றார் பாதிரியார் நண்பர்.

அதற்கு காந்திஜி அளித்த பதில் இதுதான்: ''அவ்விதம் பாதுகாப்பது உங்களால் முடியாத காரியம். உங்கள் பிரசாரம் முழுவதையும் மாசுபடுத்திவருவது ஒரு தீய நோக்கமேயாகும். அது உணவு முழுவதையும் கெடுக்கும் ஒரு துளி விஷத்தைப் போன்றது. எனவே, பிரசாரம் எதுவும் செய்யாமல் இருப்பதையே நான் விரும்புவேன். ஒரு ரோஜாபுஷ்பத்திற்கு தன்னைப் பிரசாரம் செய்து கொள்ளத் தேவையில்லை. அது தனது நறுமணத்தை எங்கும் வியாபிக்கும்படி செய்கிறது. அந்த மணமேதான் அதன் பிரசாரமாகும். ரோஜா புஷ்பத்திற்கு மனித அறிவு இருந்து, அது ஏராளமான பிரசாரகர்களை நியமிக்க முடியுமாயின், அதன் வாசனையைக் காட்டிலும் பிரசாரகர்களால் அதிக புஷ்பங்கள் விற்பனையாகும்படி செய்துவிட முடியாது. ரோஜாவின் நறுமணத்தைக் காட்டிலும் சமயப் பற்றுள்ள ஆன்மிக வாழ்க்கையின் நறுமணம் மிகவும் மேன்மையானது, அதிகமாக ஊடுருவிச் செல்லக் கூடியது.''

எனினும், காந்திஜியின் இந்த விளக்கத்தினால் யாதொரு பலனும் ஏற்படவில்லை. பாதிரியார் சாபம் கொடுத்துவிட்டு அங்கிருந்து வெளியேறினர். ஒரு வேளை அது ஆசீர்வாதம் தானோ, என்னவோ!

''காந்தி அவர்களே, நீங்கள் வயோதிகராகி வருகிறீர்கள். உங்களைப் பற்றிக் கடவுளின் முன்னிலையில் தீர்ப்புக் கூறவேண்டிய நாள் வரும். அத் தீர்ப்பு உங்களுடைய நீதியின் படி இராது, ஏசு நாதருடைய நீதியின் படியே இருக்கும்'' என்றார் பாதிரியார்.

---

* பைபிள் புதிய ஏற்பாட்டில் உள்ள ஜான் 3-ஆவது அத்தியாயம் 16–ஆவது உபதேசத்தின் விவரம் பின்வருமாறு :

"இவ்விதமாக நாம் கடவுளின் பேரன்பைக் காண்கிறோம். அவர் நமக்காக அவரது உயிரையே அர்ப்பணம் செய்தார். எனவே, கடவுளின் புதல்வர்களான நம் சகோதரர்களுக்காக நமது உயிர்களையும் அர்ப்பணம் செய்ய வேண்டியது நமது கடமையாகும்."

தம்மிடம் ஏதாவது நீதியும் நேர்மையும் தூய்மையும் இருக்குமாயின், அதற்கு முற்றிலும் கடவுளின் அருளே காரணம் என்று காந்திஜி கூறிவருவதை பாதிரியார் அறிந்து கொள்ளவில்லை என்பது தெளிவாகியது.

(ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதியது)

—'ஹரிஜன்' - 29—3—1935

# 10

# ஆன்மிக வாழ்க்கையின் சிறப்பு

**கேள்வி:** கீழ்த்திசை நாடுகளுக்கும் மேற்கத்தி நாடுகளுக்கும் இடையே நல்லுறவை ஸ்தாபிப்பதற்கு, கிறிஸ்தவ சமயப் பிரசாரமும் மத மாற்றமும் அவசியமில்லை என்று நீங்கள் கூறுகிறீர்களா?

**பதில்:** அப்படித்தான் கூறுகிறேன். எனினும், இயற்கையான அதாவது ஒழுங்கான பிரசாரத்தையும் மத மாற்றத்தையும் மறுப்பதால் பலனில்லை. அதுவும் கூட எனக்கு மனத் திருப்தியைக் கொடுப்பதில்லை. உங்களுடைய விசேஷ விளக்கத்தின் மூலம் பைபிளிலிருந்து நீங்கள் மனச்சாந்தி பெறுவதாகக் கருதினால், அதை நீங்கள் மற்றவர்களுடனும் பகிர்ந்து கொள்ளுகிறீர்கள். எனினும், அதை நீங்கள் வாயினால் பறைசாற்றிக் கொள்ளவேண்டிய அவசியமில்லை. ஏனெனில், உங்களுடைய வாய்ப் பேச்சைக் காட்டிலும் உங்கள் வாழ்க்கை முழுவதும் அதை அதிக வன்மையுடன் எடுத்துக் காட்டுவதாக இருக்கிறது. எண்ணத்தை குறையின்றி பரிபூரணமாக எடுத்துக் கூறுவதற்கு பாஷை எப்போதுமே ஒரு தடையாக இருந்துவருகிறது. உதாரணமாக, நீங்கள் பைபிளை வாசிப்பது போல் வாசிக்கும்படி மற்றொருவரிடம் நீங்கள் எப்படிக் கூறமுடியும்? நாளுக்கு நாள், நிமிடத்திற்கு நிமிடம் நீங்கள் அதிலிருந்து பெறும் ஒளியை, வாய்ச் சொல்லின் மூலம் மற்றொருவருக்கு எப்படி நீங்கள் மாற்ற முடியும்? அதனால்தான், 'உங்களுடைய வாழ்க்கையே உங்களது பிரசங்கமாகும்" என்று எல்லா சமயங்களும் கூறுகின்றன. போதிய பணிவு உங்களுக்கு இருக்குமாயின், பிரசங்கத்தினாலோ அல்லது பேனாவினாலோ உங்களுடைய சமயத்தை சரிவர எடுத்துக் காட்ட இயலாது என்று நீங்கள் கூறிவிடுவீர்கள்.

**கேள்வி:** இருந்தாலும், எனது வாழ்க்கை லட்சியத்தை எட்டுவதற்கு இன்னும் வெகுதூரம் இருக்கிறது என்பதை நான் அறிவேன். எனினும், எனது லட்சியம் என்ன என்பதை நான் விளக்கலாம் அல்லவா?

**பதில்:** இல்லை. உங்களுடைய வாழ்க்கை பூர்த்திபெறவில்லை; எனவே, பேச்சின் மூலம் அதை நிரப்பவேண்டும் என்று நீங்கள் கூறும் அந்த விநாடியிலேயே பணியைக் கைவிட்டு விட்டவர்களாகிறீர்கள். மானிட வர்க்கத்தினர் மிருகங்களிடம் சென்று, 'நாங்கள் மனிதர்கள்' என்று உரக்கக் கூக்குரலிட வேண்டிய அவசியமில்லை. அவர்கள் மனிதர்கள் என்பதை மிருகங்கள் அறிந்திருக்கின்றன. ஒரு காலத்திலும் வாய்ச் சொற்களால் ஆன்மாவின் பாஷையை விளக்க முடியாது. ஆன்மாவின் பாஷை உடலைக் காட்டிலும் உயர்ந்தது. அதை வாழ்க்கையின் மூலம் தான் காட்ட முடியும்.

**கேள்வி:** வாயால் பேசாமல், தாம்பெற்ற அனுபவத்தை தலைமுறை தலைமுறையாக மக்கள் அறிந்து கொள்ளும்படி எவ்வாறு செய்ய முடியும்?

**பதில்:** வாயால் பேச வேண்டிய அவசியமே இல்லை. வாழ்க்கையே பேசுவது போலத்தான். பல ஆண்டுகளுக்கு முன் நான் கூறிய ரோஜாவின் உவமையையே இப்போது எடுத்துக் காட்டுகிறேன். ரோஜாவின் நறுமணம் நாலாபுறங்களிலும் பரவுகின்றது. அதன்அழகை, கண்கள் உள்ள ஒவ்வொருவரும் காண முடியும். எனவே, தனது நறுமணத்தைப் பற்றியோ அல்லது தனது அழகைப் பற்றியோ ரோஜா ஒரு புத்தகம் எழுத வேண்டிய அவசியமோ அல்லது பிரசாரம் செய்ய வேண்டிய அவசியமோ இல்லை. அழகும், மணமும் நிறைந்த ரோஜாவைக்.காட்டிலும் ஆன்மிக வாழ்க்கை எத்தனையோ மடங்கு உயர்ந்தது. வாழ்க்கையில் ஆன்மிக மணம் வீசத் தொடங்கிய அந்த விநாடியிலேயே, சுற்றுப்புறங்களில் உடனே மாறுதல் ஏற்படும் என்பதை நான் துணிந்து கூற முடியும். பைபிள், கீதை, பாகவதம், குரான் முதலிய நூல்களில் உள்ள பல பகுதிகள் இதை விசேஷமாக எடுத்துக் காட்டுகின்றன. ''கிருஷ்ணன் தோன்றிய இடத்தில் எல்லாம் ஜனங்கள் ஆவேசம் கொண்டவர்களைப் போல் மெய்மறந்து நடந்து கொண்டார்கள்'' என்று நாம் வாசிக்கிறோம். ஏசு நாதரைப் பற்றியும் அவ்விதமே கூறப்படுகிறது. அத்தகைய நிகழ்ச்சியை இப்போது நமக்கு அருகில் நாமே பார்க்கிறோம். ஜவாஹர்லால் எங்கே சென்றாலும் அங்கே மந்திர சக்தியினால் ஏற்பட்டதைப் போல் மக்கள் மிகுந்த உற்சாகம் கொண்டு உணர்ச்சி வசப்பட்டுவிடுகிறார்கள். அவர் வருகிறார் என்ற வெறும் எண்ணமே மக்கள் மனத்தில் திடீரென்று உணர்ச்சி பொங்கும்படி செய்துவிடுகிறது. அவரது ஆன்மிக செல்வாக்கே அதற்குக் காரணம் என்று கூற முடியாவிடினும்,-அதற்கு நீங்கள் என்ன பெயர் கொடுத்தாலும் சரி-ஏதோ இனம் தெரியாத செல்வாக்கே, மக்களின் அத்தகைய மாற்றத்திற்குக் காரணம் என்பதில் சந்தேகமில்லை. மக்கள் அவரது பிரசங்கத்தைக் கேட்க விரும்பவில்லை, அவரைப் பார்க்கவே

விரும்புகிறார்கள். அது இயற்கையே. கோடிக்கணக்கான மக்களை வேறு எந்த விதத்திலும் சமாளிக்க முடியாது. மார்க்கோனியின்* அலைகளைக் காட்டிலும் ஆன்மிக வாழ்க்கை அதிக சக்தி வாய்ந்தது. எனக்கும் எனது கடவுளுக்கும் இடையே தூதர் யாரும் இல்லையாயின், நான் இறைவனின் அருளாகிற செல்வாக்கு பிரவேசிக்கும் மனப் பூர்வமான ஒரு பாத்திரமாகி விடுகிறேன். பின்னர், கங்கை நதியின் மூலஸ்தானத்தில் தண்ணீர் பொங்குவதுபோல், என்னிடமிருந்து அந்த செல்வாக்கு பொங்கத் தொடங்கு கிறது. சத்திய வாழ்க்கையை நடத்தும் ஒருவருக்குப் பேச வேண்டுமென்ற ஆர்வமே இருப்பதில்லை. வார்த்தைகள் சம்பந்தப்பட்ட வரையில் சத்தியம் மிக மிகச் சிக்கன மானது. வாழ்க்கையைக் காட்டிலும் அதிக உண்மையான பிரசாரம் வேறு எதுவுமே இல்லை.

—'ஹரிஜன்' – 12—12—1936

# 11
# வேறு யாரும் இல்லை!

நான் நம்பிக்கையும் பிரார்த்தனை உள்ளமும் படைத்த ஒருவன் என்று கூறிக்கொள்ளுகிறேன். என்னைத் துண்டு துண்டாக வெட்டினாலும் கூட, கடவுளை மறுக்காமல் இருப்பதற் கும், கடவுள் இருக்கிறார் என்பதை உறுதிப்படுத்துவதற்கும் அவசியமான பலத்தைக் கடவுள் எனக்கு அளிப்பார். கடவுள் இருக்கிறார், வேறு யாரும் இல்லை என்று முஸ்லிம் கூறுகிறார். ஒரு கிறிஸ்தவரும் அவ்விதமே கூறுகிறார். ஓர் ஹிந்து கூறுவதும் அது தான். பௌத்த சமயத்தைச் சேர்ந்த ஒருவரும், அதே விஷயத்தை வேறு வார்த்தைகளில் கூறுகிறார். கடவுள் என்ற சொல்லையொட்டி நம்மில் ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமான விளக்கத்தைக் கூறிக்கொண்டிருக்கலாம். கடவுள் மிகச் சிறிய தான இந்த உலகத்தை மாத்திரமல்ல, இதைப் போன்ற கோடி கோடி உலகங்களைத் தழுவிக் கொண்டிருக்கிறார். இப் பூமியில் ஊர்ந்து செல்லும் அற்ப சிருஷ்டிகளான, திக்கற்றவர்களான நாம் கடவுளை எப்படி அளவிடமுடியும்? அவரது மகிமையை, எல்லை யற்ற அவரது அன்பை, முடிவில்லாத அவரது கருணையை, எப்படி

* மார்க்கோனி (1874–1937) மின்சாரத் துறையில் மேதையாகத் திகழ்ந்த ஓர் இத்தாலியர். 1896–இல் அவர் ஆகாச அலைகளின் மூலம் கம்பியில்லாத் தந்திச் செய்தி களை அனுப்புவதிலும், 1902–இல் மகா சமுத்திரங்களைத் தாண்டி செய்திகள் அனுப்புவ திலும் வெற்றி பெற்றார். அட்லாண்டிக் மகாசமுத்திரத்தைக் கடந்து கம்பியில்லாத் தந் திச் செய்திகளை அனுப்புவதற்கு வசதியாக ஆகாயத் தந்தி காரியாலயத்தை ஆரம்பித்த பெருமையும் அவருக்கு உரியது. 1909–இல் மார்க்கோனிக்கு பௌதிக நோபல் பரிசு கிடைத்தது.

அளவிடமுடியும்? அவரது எல்லையற்ற கருணையின் காரணமாக, மனிதன் இறுமாப்புடன் அவரை மறுக்கவும் அவர் அனுமதிக்கிறார்; அவரைப் பற்றி விவாதிக்கவும், ஒருவன் சக மனிதனின் கழுத்தை அறுக்கவும் அவர் அனுமதிக்கிறார்! அவ்வளவு தூரம் மன்னிக்கும், அவ்வளவு தெய்வத்தன்மை வாய்ந்த கடவுளின் மகத்துவத்தை நாம் எப்படி அளவிட இயலும்? நாம் ஒரே விதமான சொற்களையே கூறுகின்றோம்; ஆனால், அந்தச் சொற்கள் நம் எல்லோருக்கும் ஒரே விதமான பொருளைக் கொடுப்பதில்லை. அதனால்தான் பேச்சின் மூலமோ அல்லது எழுத்தின் மூலமோ ஞானஸ்நானம், சுத்தி அல்லது தப்ளிக்* எதுவும் நமக்குத் தேவையில்லை என்று நான் கூறுகிறேன். நமது பிரசங்கங்களும், எழுத்துக்களும் அல்ல, நமது வாழ்க்கை முறைகள்தான் உண்மையான மத மாற்றமாக இருக்க முடியும். எல்லோரும் ஆராய்ச்சி செய்வதற்கு உற்றவாறு நமது வாழ்க்கை பகிரங்கமான நூல்களாக இருக்கவேண்டும். பாதிரி மார் நண்பர்கள் தங்களுடைய லட்சியத்தை யொட்டி இத்தகைய கருத்து உடையவர்களாக இருக்கவேண்டும் என்பதே எனது விருப்பமாகும். அப்படியாயின், அவநம்பிக்கையோ, சந்தேகமோ, பொறாமையோ, வேற்றுமைகளோ ஏற்படுவதற்கு இடமிராது.

—'எங் இந்தியா' – 8—12—1927

* 'ஞான ஸ்நானம்' கிறிஸ்தவர்களின் மத மாற்ற முறையையும், 'சுத்தி' ஆரிய சமாஜத்தினரின் ஹிந்து மத மாற்றத்தையும், 'தப்ளிக்' முஸ்லீம்களின் மதப் பிரசாரத்தையும், மத மாற்ற முறையையும் குறிப்பிடுகின்றன.

பகுதி பன்னிரண்டு

# ஹிந்து சமயம்

## 1

## ஹிந்து மதத்தின் தார்மிக அடிப்படை

[ஹிந்து சமயத்தைப் பற்றிய காந்திஜியின் கட்டுரைகளும், பிரசங்கங்களும் கேள்வி-பதில்களும் மகாத்மா காந்தி நூல்கள் 7–ஆவது, 9–ஆவது தொகுப்புகளில் ஏராளமாக வெளியாகியுள்ளன. அவற்றில் வெளியாகாத விவரங்களே இந்தப்பகுதியில் கொடுக்கப்பட்டுள்ளன:]

பிரார்த்தனைக்குப் பின் காந்திஜி பேசுகையில், கூட்டத்திலிருந்து ஒருவர் அனுப்பிய பின்வரும் கேள்வியைப் பற்றிக் குறிப்பிட்டார்: "ஹிந்து என்றால் யார்? ஹிந்து என்ற சொல் எப்படி உண்டாயிற்று? ஹிந்து சமயம் என்று ஏதாவது இருக்கிறதா?"

அக் கேள்விகளுக்குப் பதிலாக காந்திஜி கூறியதாவது:

"இவை இக்காலத்திற்குப் பொருத்தமான கேள்விகளே. நான் ஒரு சரித்திராசிரியன் அல்ல. 'ஹிந்து' என்ற சொல் வேதத்தில் காணப்படவில்லை என்று ஹிந்து சமய சம்பந்தமான ஆதார பூர்வமான ஒரு நூலில் நான் வாசித்திருக்கிறேன். மகா அலெக்சாண்டர் இந்தியா மீது படையெடுத்தபோது, சிந்துவுக்குக் கிழக்கேயுள்ள மக்கள் ஹிந்துக்கள் என்று குறிப்பிடப்பட்டனர். ஆங்கிலம் பேசும் இந்தியர்கள் சிந்துவை 'இண்டஸ்' (Indus) என்று குறிப்பிடுகிறார்கள். சிந்து (Sindhu) என்ற சொல்லில் உள்ள 'S' கிரேக்க மொழியில் 'H' என்று மாறியது. எனவே, அப்பிரதேசங்களில் வாழ்வோரின் மதம் ஹிந்து (Hindu) சமயமாகியது.

"ஹிந்து சமயம் மிகவும் சகிப்புத்தன்மை வாய்ந்தது. ஆதியில் கொடுமைகளுக்குப் பயந்து கிறிஸ்தவர்கள் ஓடிவந்தபோது அவர்களுக்கு ஹிந்து சமயம் அடைக்கலம் அளித்தது. யூதர்களுக்கும், பார்சிகளுக்கும் கூட அது அடைக்கலம் கொடுத்தது. எல்லாம் அடங்கிய, சகிப்புத்தன்மையே உருவான அத்தகைய ஹிந்து சமயத்தைச் சேர்ந்தவனாக இருப்பதைக் குறித்து நான் பெருமை அடைகிறேன். ஆரிய பண்டிதர்கள் வேத மதத்தையே பிரமாணமாகக் கொண்டிருந்தார்கள். ஹிந்துஸ்தானுக்கு ஆரியாவர்த்தம் என்ற பெயர் வழங்கி வந்தது. எனக்கு

அத்தகைய ஆசை எதுவும் இல்லை. நான் காணும் ஹிந்துஸ்தானமே எனக்கு முற்றிலும் போதுமானது. அந்த ஹிந்துஸ்தானம் நிச்சயமாக வேதங்களும் உள்ளடங்கியதே. அவற்றைக் காட்டிலும் எவ்வளவோ அதிகமான விஷயங்களும் கூட ஹிந்துஸ்தானில் அடங்கியுள்ளன. இஸ்லாம், கிறிஸ்தவ சமயம், ஜோராரோஷ்டிர சமயம், யூதர் சமயம் முதலிய பல சமயங்களிலும் உள்ள சிறந்த அம்சங்களுக்கு நான் வணக்கம் செலுத்துகிறேன். இவ்விதம் நான் பிரகடனம் செய்வதில் முரண்பாடு எதையும் நான் காண வில்லை. இவ்விதம் கூறுவதால் ஹிந்து சமயத்தின் பெருமைக்கும் கண்ணியத்திற்கும் எவ்விதத் தீங்கும் ஏற்பட்டுவிடாது. அத் தகைய ஹிந்து சமயம் சூரியன் ஒளி வீசிக்கொண்டிருக்கும் வரையில் வாழ்ந்துவரும். இந்த தத்துவத்தை துளசிதாசர் பின் வரும் ஒரே பாடலில் பிழிந்து கொடுத்துள்ளார் :

''மதத்தின் ஆணி வேர் கருணை என்பதில்தான் அடங்கியிருக்கிறது. உடலில் உள்ள ஆசையே அகங்காரத்திற்கு ஆணி வேராகும். உடல் அழிவதாக இருந்தால்கூட, கருணையை ஒருபோதும் கைவிடக் கூடாது என்று துளசி சொல்லுகிறான்.''

— 'ஹரிஜன்' – 30—11—1947

## 2

# இரண்டு முக்கிய அம்சங்கள்

ஆகா கான் மாளிகையில் காந்திஜி சிறைப்பட்டிருந்தபோது ஸ்ரீ பியாரிலாலிடம் ஒருநாள் பின்வருமாறு கூறினார் :

''ஹிந்து சமயத்தில் இரண்டு அம்சங்கள் இருக்கின்றன. ஒருபுறம் சரித்திர பூர்வமான ஹிந்து சமயம் இருக்கிறது. அதில் தீண்டாமை, கற்களையும் மரங்களையும் வணங்கும் மூடபக்தி, மிருக பலி போன்ற பல விஷயங்கள் அடங்கியிருக்கின்றன. மற்றொரு புறம், கீதையும், உபநிடதங்களும், பதஞ்சலியின் யோக சூத்திரங்களும் காட்டும் ஹிந்து சமயம் இருக்கிறது. இந்த ஹிந்து சமயம்தான் அகிம்சையின் சிகரமாகத் திகழ்கிறது; அது தான் சிருஷ்டியில் எல்லாம் ஒன்று என்பதைக் காட்டுகிறது; இயற்கையான, உருவமற்ற, அழிவில்லாத கடவுளை வழிபடும் தூய்மையைக் குறிக்கிறது. ஹிந்து சமயத்தின் மகத்தான பெருமை அகிம்சை என்பதே எனது அபிப்பிராயமாகும். அத் தகைய அகிம்சை சந்நியாசிகளுக்கு மாத்திரம்தான் உகந்தது என்று விளக்கம் கூறி முடிவு கட்ட முற்படுகிறார்கள். அந்தக் கருத்தில் நான் பங்கு எடுத்துக் கொள்ளமுடியாது. அகிம்சை தான் வாழும் வழி என்பதும், அதை உலகத்திற்கு எடுத்துக் காட்டவேண்டியது இந்தியாவின் கடமை என்பதும் எனது உறுதியான கொள்கையாகும்.

—'ஹரிஜன்' – 8—12—1946

# 3

# யார் ஹிந்து ?

**கேள்வி :** உங்களை ஓர் 'ஹிந்து' என்றே நீங்கள் எப்போதும் சொல்லிக் கொள்ளுகிறீர்கள். ஆனால், சிசு விவாகம், விதவை விவாகம், தீண்டாமை முதலிய பல விஷயங்களையொட்டியும் ஹிந்து பண்டிதர்களின் கட்டளைகளையோ அல்லது சாத்திரங்களின் கட்டளைகளையோ கூட நீங்கள் ஒப்புக் கொள்ளத் தயாராக இல்லை. ஆகஸ்டு 26-ஆம் தேதி 'எங் இந்தியா' வில் நீங்கள் பின் வருமாறு எழுதியிருக்கிறீர்கள் : "ஸ்மிருதிகளில் முரண்பாடுகள் மலிந்து கிடக்கின்றன. மனிதனுள் இருக்கும் மிருகத்தைத் தூண்டும் சுலோகங்களை எழுதிய அதே பேனா, தன்னடக்கத்தைப் போதிக்கும் தெய்விகமான சுலோகங்களை எழுதியிருக்க முடியாது." ஹிந்துக்களின் பல புராணங்களைப் பற்றியும் அவ்விதமே கூறலாம். இந்த நூல்களின் பிரமாணத்தை மறுக்கும் நீங்கள், உங்களை ஓர் ஹிந்து என்று எப்படிச் சொல்லிக் கொள்ளமுடியும் ? புராணங்களில் சில பகுத்தறிவிற்கு முரண்பாடான, நகைக்கத்தக்க, ஒழுக்கக் கேடான முறைகளை உபதேசிக்கின்றன. எனினும், ஹிந்து என்று தன்னைக் கூறிக் கொள்ளும் ஒருவர் அவற்றில் உறுதியான நம்பிக்கை கொண்டுள்ளார். அவற்றை ஓர் ஹிந்து நம்பவேண்டிய அவசியமில்லை என்று நீங்கள் கருதினால், ஹிந்து சமயத்தைப்பற்றி உங்களுடைய விளக்கம் என்ன என்பதைக் கூறுவதே நீங்கள் சத்தியத்திற்குத் தொண்டு செய்வதாக இருக்கும். உங்களை ஓர் ஹிந்து என்று ஏன் கருதவேண்டும் என்பதும் அப்போது தெளிவாகிவிடும்.

ஹிந்து சமய சித்தாந்தங்களையும், சாத்திரங்களின் கட்டளைகளையும் ஒருவர் பின்பற்றாவிட்டால் கூட, அவர் தம்மை ஓர் ஹிந்து என்று கூறிக் கொள்ளவிரும்பினால் அவர் ஹிந்து தான் என நீங்கள் கூறமாட்டீர்கள். உதாரணமாக, நான் என்னை ஒரு கிறிஸ்தவர் என்று கூறிக் கொண்டு, பைபிளிலும் ஏசு நாதரிடத்திலும் கூட நம்பிக்கை வைக்க வேண்டியது ஓர் உண்மையான கிறிஸ்தவருக்கு அவசியமில்லை என்று நான் சொன்னால், என்னை ஒரு போலி ஆசாமி என்றே குறிப்பிடவேண்டியிருக்கும்.

சாத்திரங்கள் சம்பந்தமாக உங்களுக்கும் ஹிந்துக்களுக்கும் கருத்து வேற்றுமை இருக்கும்போது, உங்களை ஓர் ஹிந்து என்று கூற வேண்டுமென ஏன் விரும்புகிறீர்கள்? இதை நீங்கள் விளக்க வேண்டியது அவசியமாகும். ஹிந்துக்களின் சாத்திரங்களில் கூட ஹிந்து என்ற சொல் காணப்படவில்லை. 'ஆரியர்' என்பது அதைக் காட்டிலும்

சிறந்த சொல்லாகும். அப்படியிருந்தும் உங்களை நீங்கள் ஓர் ஹிந்து என்று ஏன் கூறிக்கொள்ளவேண்டும்? தவிர, ஹிந்து சாத்திரங்களை விளக்கும் உங்களுடைய உபதேசங்களுக்கும் ஆரிய சமாஜத்தினரின் உபதேசங்களுக்கும் அதிக வேற்றுமையில்லை.

பதில்: வேதங்கள், உபநிடதங்கள், புராணங்கள், புனித சீர்திருத்தக்காரர்களால் விட்டுச் செல்லப்பட்டுள்ள நூல்கள் முதலியவற்றில் எனக்கு நம்பிக்கை உண்டு. அதனாலேயே என்னை நான் ஒரு சனாதனி ஹிந்து என்று கூறிக்கொள்ளுகிறேன். எனினும், சாத்திரங்கள் என்று கூறப்படும் எல்லாம் ஆதாரபூர்வமானவை என்பதை இந்த நம்பிக்கை காரணமாக நான் ஒப்புக் கொள்ளவேண்டும் என்பதில்லை. மூலாதாரமான தார்மிகக் கொள்கைகளுக்கு முரணாக இருப்பதையெல்லாம் நான் நிராகரிக்கிறேன். சாத்திரங்களில் இருப்பதையோ, அவற்றையொட்டி பண்டிதர்களின் வியாக்கியானங்களையோ நான் அப்படியே ஒப்புக் கொள்ள வேண்டும் என்பதில்லை. தவிர, பொதுவாக ஹிந்து சமூகம் நான் ஒரு சனாதனி ஹிந்து என்பதை ஒப்புக் கொள்ளும்வரையில் என்னை நான் அவ்விதமே கூறிக் கொள்ளுவேன். கடவுள், ஆன்மாவின் அழிவற்ற தன்மை, மறு பிறப்பு, கர்ம பலன், மோட்சம் முதலியவற்றில் நம்பிக்கையுடையவர் ஹிந்துவேயாவார். மற்றும் ஓர் ஹிந்து தினசரி வாழ்க்கையில் சத்தியத்தையும், அகிம்சையையும் கடைப்பிடிக்க முயற்சிப்பார்; மிகப் பரந்த அர்த்தத்தில் பசுப் பாதுகாப்பை அனுசரிப்பார்; வர்ணாசிரம தருமத்தை அறிந்துகொள்ளவும், அதன்படி நடக்கவும் முயற்சிப்பார்.

—'எங் இந்தியா' – 14—10—1926

## 4

# ஹிந்து சமய விருட்சம்

தம்மை 'சனாதனி ஹிந்து' என்று கூறிக் கொள்ளும் ஓர் அன்பர் பின்வருமாறு எழுதுகிறார்:

"இன்றைய ஹிந்து சமயத்தில் பல விசித்திரமான தீமைகள் படிந்திருக்கின்றன. அதை யாரும் ஆராய்ச்சி செய்ய அக்கறை கொள்ளுவதில்லை. மிகுந்த சமயப் பற்றுள்ளவர்கள் என்று புகழ் பெற்றவர்கள்கூட சாத்திரங்களை நுணுக்கமாகப் பின்பற்றுவதில்லை.

"சனாதன தருமம் என்று குறிப்பிடக் கூடிய, பயபக்தியுடன் அனுசரிக்கக் கூடிய திட்டவட்டமான சித்தாந்தங்களோ அல்லது பழக்கவழக்கங்களோ

இல்லை. ஒவ்வொரு ஹிந்துவும் அவரவருடைய சொந்த மாகாணத்தில் பழக்கத்திலிருக்கும் வழக்கத்தையே சனாதன தருமம் என்று கருதுகிறார்."

இந்தக் கடிதம் ஒரு கட்சியை மாத்திரமே எடுத்துக் கூறுவதாக இருக்கிறது. எனினும், அன்பரின் புகாருக்குக் காரணம் இருக்கிறது. ஹிந்து சமயம் ஜீவ சக்தியுடன் கூடியது. எனவே, அது வளர்ச்சியடையவும், வளர்ச்சி குன்றி நாசமடையவும் இடம் இருக்கிறது. அது இயற்கையின் விதிகளுக்கு உட்பட்டதே. ஹிந்து சமயம் என்ற விருட்சத்தின் அடிமரம் பிரிக்க முடியாத தொன்று. இருந்தாலும், பரந்த அந்த மரத்திற்கு எண்ணிக்கையற்ற கிளைகள் இருக்கின்றன. பருவகால மாறுதல்கள் அவற்றைப் பாதிக்கின்றன. ஹிந்து சமயமாகிய மரத்திற்கும் இலையுதிர் காலம், கோடை காலம், வசந்த காலம், மாரி காலம் முதலிய பருவ காலங்கள் உண்டு. மழையினால் அது செழிப்புற்று, பழங்களையும் கொடுக்கிறது. அது தரும நூல்களை அடிப்படையாகக் கொண்டிருக்கிறது, அடிப்படையாகக் கொள்ளாமலும் இருக்கிறது. அது, ஒரு நூலை மாத்திரம் ஆதாரமாகக் கொண்டதல்ல. கீதை எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்பட்டுள்ளதெனினும், அது ஹிந்து சமயத்திற்கான வழியை மாத்திரமே காட்டுகிறது. அது, பழக்க வழக்கங்களை எவ்விதத்திலும் பாதிக்கவில்லை. ஹிந்து சமயம் கங்கை நதியைப்போல் உற்பத்தி ஸ்தானத்தில் பரிசுத்தமாகவும், மாசு படுத்தப்படாமலும் இருக்கிறது. போகப் போகத்தான் அதில் அசுத்தங்கள் வந்து படிந்துவிட்டன. எனினும், கங்கையைப்போல் அதுவும் மொத்தத்தில் நன்மையைக் கொடுப்பதாகவே இருக்கிறது. அது ஒவ்வொரு மாகாணத்திலும் அந்தந்த மாகாணத்தின் சூழ்நிலைக்குத் தகுந்தவாறு இருந்தாலும், அதன் உள் தத்துவம் எங்கும் ஒரே விதமாகவே இருக்கிறது. பழக்க வழக்கங்கள் மதம் அல்ல. பழக்க வழக்கங்கள் மாறலாம். ஆனால், மதம் யாதொரு மாறுதலுமின்றி என்றென்றும் நிலைத்திருப்பதாகும்.

—'எங் இந்தியா' – 8—4—1926

# 5

# என்ன சாதித்திருக்கிறது?

**கேள்வி:** *நீங்கள் ஹிந்து சமயத்தைப் பற்றிப் பிரமாதமாகப் புகழ்கிறீர்கள். ஹிந்து சமயம் நமக்கு என்ன சாதித்திருக்கிறது என்பதை நாங்கள் அறியலாமா? அது ஆபாசமான, மூட நம்பிக்கையை அடிப்படையாகக் கொண்ட பழக்க வழக்கங்களுடன் கூடிய ஒரு பரம்பரைச் சொத்து அல்லவா?*

காந்திஜி தென்னிந்தியாவில் யாத்திரை செய்தபோது ஓரிடத்தில் அவர் நிகழ்த்திய பிரசங்கத்திற்குப் பிறகு மேற்கண்ட ஒரு கேள்வி அவரிடம் கேட்கப்பட்டது. அதற்குப் பதிலாக அவர் கூறியதாவது :

எனது பேச்சில் இதைப்பற்றி தெளிவுபடுத்தி விட்டதாக நான் நினைத்தேன். ஹிந்து சமயம் உலகத்திற்கு அளித்த ஓர் அற்புதமான அம்சமே வர்ணாசிரம தருமம் ஆகும். பயத்திலிருந்து அதாவது அபாயத்திலிருந்து ஹிந்து சமயம் நம்மைக் காப்பாற்றி யிருக்கிறது. என்னை மீட்க ஹிந்து சமயம் வந்திரா்விட்டால், எனக்குள்ள ஒரே வழி தற்கொலையாகத்தான் இருந்திருக்கும். நான் ஓர் ஹிந்துவாக நிலைத்திருப்பதற்குக் காரணம், ஹிந்து சமயம் ஒரு சொர்க்கமாக இருப்பதே யாகும். நாம் வாழ்வதற்கு இந்த உலகத்தைத் தகுதியாக இருக்கும்படி செய்வது ஹிந்து சமயமே. ஹிந்து சமயத்திலிருந்தே புத்த சமயம் பிறந்தது. இன்று நாம் காண்பது தூய்மையான ஹிந்து சமயம் அல்ல, ஹிந்து சமயத்தைக் கேலி செய்யும் ஒரு நிலையே யாகும். இன்றைய ஹிந்து சமயம் தூய்மையானதாக இருந்தால், அதன் சார்பில் நான் இவ்வளவு தூரம் பரிந்து பேசவேண்டிய அவசியமே இராது. அது தானாகவே உங்களுடைய மனத்தைக் கவர்ந்திருக்கும். அது போலவே, நான் தூய்மையானவனாக இருந்தால், நான் உங்களிடம் பேசவேண்டிய அவசியமே இராது. கடவுள் தன் வாயினால் பேசுவதில்லை. மனிதன் எந்த அளவுக்குக் கடவுளின் அருகில் வருகிறானோ, அந்த அளவுக்கு அவன் கடவுளைப் போலாகிவிடுகிறான்.

மேனாடுகளில் ஸ்தூல விஷயங்களை யொட்டிய பல அற்புதங்களைக் கண்டு பிடித்திருப்பது போலவே, சமய சம்பந்தமான, ஆன்மிக, ஜீவனைப் பற்றிய நம்பமுடியாத அற்புதங்களை ஹிந்து சமயம் கண்டுபிடித்திருக்கிறது. எனினும், அது கண்டு பிடித்துள்ள மகத்தான, நுண்ணிய விஷயங்களை நாம் பார்ப்பதில்லை. மேனாட்டு விஞ்ஞானம் அடைந்துள்ள ஸ்தூலமான முன்னேற்றத்தின் பளபளப்பு, நம் கண்களை மறைத்துவிடுகிறது. அந்த முன்னேற்றத்தைக் கண்டு நான் மயங்கிடவில்லை. உண்மையில், அந்த வழிகளில் இந்தியா முன்னேற முடியாமல் முக்காலத்தையும் உணர்ந்த இறைவனே தடுத்துவைத்திருப்பது போல் தோன்றுகிறது. ஏனெனில் அப்போதுதான் ஸ்தூல வாழ்வின் முன்னேற்ற வேகத்தைத் தடுத்து நிற்கும் உயர்ந்த லட்சியத்தை இந்தியா நிறைவேற்ற முடியும்.

ஹிந்து சமயத்தில் உள்ள ஏதோ ஒன்றுதான், இதுவரை அதை உயிருடன் வைத்திருக்கிறது. பேபிலோனியா, சிரிய, பாரசீக, எகிப்திய நாகரிகங்களெல்லாம் வீழ்ச்சி யடைந்து

விட்டன. உங்களைச் சுற்றிப் பாருங்களேன். இன்று ரோம் எங்கே இருக்கிறது? கிரீஸ் எங்கே இருக்கிறது? கிப்பன் வர்ணித்துள்ள இத்தாலியை இன்று நீங்கள் காண முடியுமா? கிரீஸ் நாட்டுக்குச் செல்லுங்கள். உலகப் புகழ் பெற்று விளங்கிய கிரேக்க நாகரிகம் எங்கே போயிற்று? பின்னர் இந்தியாவுக்கு வந்து, தஸ்தாவேஜுகளை யெல்லாம் துருவிப் பார்த்து, உங்களைச் சுற்றியும் பார்த்துக் கொள்ளுங்கள். 'ஆம், பண்டைய இந்தியா இங்கே இன்னும் வாழ்ந்துவருவதைக் காண்கிறேன்' என்று நீங்கள் சொல்லித் தீரவேண்டியிருக்கும். இந்திய நாகரிகத்தில் இங்கும் அங்கும் குப்பைக் குவியல்கள் இருப்பது உண்மைதான். எனினும், அந்தக் குவியல்களின் கீழ் அரும் பெரும் பொக்கிஷங்கள் புதையுண்டிருக்கின்றன. ஹிந்து சமயம் இவ்வளவு காலம் வரையில் உயிர் வாழ்ந்து வந்திருப்பதற்குக் காரணம், ஹிந்து சமயத்தின் லட்சியம் ஸ்தூல வாழ்வின் வளர்ச்சி யல்ல, ஆன்மிக வாழ்வின் வளர்ச்சியே என்பதுதான்.

ஹிந்து சமயத்தின் கொள்கைகளில், வாயில்லாப்பிராணி களுடன் மனிதனுக்கு உள்ள ஐக்கியத் தன்மை மிகவும் அற்புதமானது. உதாரணமாக, பசுவை வணங்குவது மகத்தான ஒரு கொள்கையாகும். அது இன்னும் விரிவடையக் கூடிய ஆற்றல் பெற்றது. நவீன மதமாற்ற விபரீதத்திலிருந்து ஹிந்து சமயம் விடுதலை பெற்றிருப்பதும், அதன் அரும்பெரும் அம்சங்களில் ஒன்று என்பது எனது கருத்து. ஹிந்து சமயத்திற்கு பிரசாரம் தேவையில்லை. 'வாழ்க்கையை வாழ்ந்துகாட்ட வேண்டும்' என்றே அது கூறுகிறது. அவ்விதம் வாழ்ந்து காட்டவேண்டியது என்னுடைய கடமையும் உங்களது கடமையும் ஆகும். அப்போதுதான் அதன் செல்வாக்கு யுகக் கணக்கில் நிலைத்திருக்கும்படி நாம் செய்தவர்களாவோம். அடுத்தபடியாக, ஹிந்து சமயம் அளித்துள்ள மகான்களை எடுத்துக்கொள்ளுங்கள். ராமானுஜர், சைதன்யர், ராமகிருஷ்ணர் முதலியோரும், நவீன காலத்தில் தோன்றிய மற்றும் பலரும் ஹிந்து சமயம் உயர்வடைவதற்கான தங்கள் பங்கைச் செய்துவிட்டுப் போயிருக்கிறார்கள். எனவே, ஹிந்து சமயம் செயலற்றுப் போய்விட்ட ஒரு சக்தியல்ல, அல்லது செத்துவிட்ட மதமும் அல்ல.

அடுத்தபடியாக, ஹிந்து சமயம் அளித்துள்ள நான்கு வர்ணங்களும் அதன் விசேஷமான அம்சங்களில் ஒன்று. இதைப் போல் உலகத்திலேயே எதுவுமில்லை. நம்மிடையே உள்ள பிரம்மச்சாரிகளைப் போல் கத்தோலிக்கர்களிடையும் விவாகம் செய்து கொள்ளாத பிரம்மச்சாரிகளின் பிரிவு இருக்கிறது. எனினும், அது திட்டவட்டமான ஓர் ஏற்பாடாக இல்லை. இந்தியாவிலே ஒவ்வொரு சிறுவனும் முதலாவதான பிரம்மச்சரிய ஆசிரமத்தை மேற்கொண்டுதான்

மேலே செல்ல வேண்டும். அது எத்தகைய சிறந்த ஓர் ஏற்பாடு! இன்று நமது கண்கள் அசுத்தமானவையாக இருக்கின்றன; எண்ணங்களோ அவற்றைக் காட்டிலும் அசுத்தமானவை; உடல்களோ எல்லாவற்றையும் காட்டிலும் அசுத்தமாக இருக்கின்றன. அத்தகைய நிலைக்குக் காரணம் என்னவெனில், நாம் ஹிந்து சமயத்தை மறுப்பதுதான்.

இன்னும், நான் இதுவரையில் கூறாத மற்றொரு விஷயமும் இருக்கிறது. மறு பிறப்பு ஊகித்துக்கொள்ள வேண்டிய ஒரு விஷயம் அல்ல, ஆனால் அது உண்மையே என்பதை ஐரோப்பா அறிந்துகொண்டு வருகிறது என்று நாற்பது ஆண்டுகளுக்கு முன் மாக்ஸ் முல்லர் கூறினார். அந்த உண்மையை அறிவுறுத்திய பெருமை முற்றிலும் ஹிந்து சமயத்திற்கே உரியது.

இன்று வர்ணாசிரம தருமத்திற்கும், ஹிந்து சமயத்திற்கும் தவறான விளக்கம் கொடுத்து வருகிறார்கள். அவற்றைப் பின்பற்றுவோரே அவற்றை மறுத்து வருகிறார்கள். அந்த நிலைக்குப் பரிகாரம் அழிவு வேலையல்ல, சீர்திருத்தமே யாகும். மீண்டும் நாம் நம்மிடத்தில் உண்மையான ஹிந்து உணர்ச்சியை உற்பத்தி செய்துகொள்வோமாக. அதன்பின், அது நமது ஆன்மாவுக்குத் திருப்தியை அளிக்கிறதா, இல்லையா என்று நம்மை நாமே கேட்டுக்கொள்வோமாக.

—'எங் இந்தியா' – 24—11—1927

# 6

# மதமும் திருமணமும்

**கேள்வி:** ஹிந்து சமயத்தை ஓர் ஹிந்து விடாப்பிடியாகத் தொத்திக் கொண்டிருக்க வேண்டிய அவசியம் என்ன? ஹிந்து சமயத்தில் அப்படி என்ன விசேஷமான அம்சம் இருக்கிறது?

**பதில்:** இது மனத்தைப் புண்படுத்தக் கூடிய ஒரு கேள்வியாகும். இத்தகைய கேள்வியால் பலனும் ஏற்படுவதற்கில்லை. எனினும், சமயம் என்பது பற்றி நான் கொண்டுள்ள கருத்தை எடுத்துக்காட்டுவதற்காகவாவது, நான் இக்கேள்விக்கு பதில் அளிக்க வேண்டும். சமயத்திற்கு ஓரளவு நெருங்கிய உவமையாகத் திருமணத்தைக் கூறலாம். திருமணம் பிரிக்க முடியாத பிணைப்பாக இருக்கிறது, அல்லது இருந்துவந்தது எனலாம். சமயம் அதைக் காட்டிலும் அதிக உறுதியுடன் கூடிய பிணைப்பாகும். கணவன் மனைவியிடமும், மனைவி கணவனிடமும் நம்பிக்கையுடனும் விசுவாசத்துடனும் இருப்

பது போலவே, ஒவ்வொருவரும் தமது சமயத்தினிடம் நம்பிக்கையுடனும், விசுவாசத்துடனும் இருக்கவேண்டும். தன் சொந்த சமயத்தில் உறுதியுடன் இருப்பதன் மூலம் பூரண திருப்தியடைய வேண்டும். நம்பிக்கையுள்ள கணவன், தனது நம்பிக்கை நிலைத்திருப்பதற்காக மற்றப் பெண்கள் தமது மனைவியைக் காட்டிலும் தாழ்ந்தவர்கள் என்று நினைக்கவேண்டிய அவசியமில்லை. அதுபோலவே ஒரு சமயத்தைச் சேர்ந்தவர், தமது சமயத்தைவிட மற்ற சமயங்கள் தாழ்ந்தவை என்று கருதவேண்டிய அவசியமில்லை. இந்த உவமையையே இன்னும் மேற்கொண்டு ஆராய்வோம். தமது மனைவிமீது நம்பிக்கையுடனிருக்கும் ஒரு கணவன் அவளுடைய குறைகளைக் கவனியாமல் கண்களை மூடிக்கொள்ள வேண்டும் என்ற அவசியமில்லை. அதுபோலவே, ஒருவர் தமது சொந்த சமயத்தில் நம்பிக்கையுடனும், விசுவாசத்துடனும் இருப்பதற்காக, அதில் உள்ள குறைகளைக் கவனிக்கக் கூடாது என்பதில்லை. குருட்டுத்தனமான பற்றுதல் அல்ல, விவேகத்துடன் கூடிய நம்பிக்கைதான், அவர் தமது சமயத்தில் உள்ள குறைகளை நுணுக்கமாகக் கவனிக்கும்படி செய்கிறது; அதன் பலனை, அக்குறைகளை அகற்றுவதற்கான ஒழுங்கான பரிகார முறைகளை அவர் உணர்ந்து கொள்ளும்படியும் செய்கிறது.

சமயத்தைப் பற்றி எனது கருத்து இவ்விதம் இருந்து வருகையில், ஹிந்து சமயத்தின் சிறப்புகளை நான் பரிசீலனை செய்யவேண்டிய அவசியமில்லை. அதில் உள்ள சிறப்புகளை உணர்ந்து கொண்டிராவிடில், நான் ஹிந்து சமயத்தில் நிலைத்திருக்கமாட்டேன் என்று வாசகர்கள் உறுதியுடன் இருக்கலாம். என்னைப் பொறுத்தமட்டில், அவை தனிச் சிறப்புகளாக இருக்கவேண்டும் என்ற அவசியம் இல்லை. குற்றம் கண்டுபிடிக்க வேண்டுமென்ற எண்ணத்துடன் நான் மற்ற சமயங்களை ஒருபோதும் அணுகுவதில்லை. ஹிந்து சமயத்தைப் போல் மற்ற சமயங்களிலும் உள்ள சிறப்புகளைக் காணவேண்டும் என்ற ஒரு பக்தனைப் போலவே அவற்றை நான் அணுகுகிறேன். ஹிந்து சமயத்தில் நான் காணாத, மற்ற சமயங்களில் நான் காணும் சிறப்பான அம்சங்களை ஹிந்து சமயத்தில் இணைத்துக்கொள்ளவும் விரும்புகிறேன்.

—'ஹரிஜன்' – 12-8-1933

# 7

# ஹிந்து சமயத்தின் தனிச் சிறப்பு

சமயப் பேராசிரியரான ஓர் அமெரிக்க மாது, இந்தியாவிலுள்ள சமயங்களை ஆராய்ச்சி செய்வதற்காக இந்தியாவுக்கு வந்திருந்த போது காந்திஜியைக் காணவந்தார். ஹிந்து சமயத்தின் தனிச் சிறப்பை சுருக்கமாக எடுத்துக் கூறும்படி அவர் காந்திஜியைக் கேட்டார். "ஹிந்து சமயத்தின் உயிரும் ஆன்மாவும் நீங்கள் தான் என்று நான் கேள்விப்பட்டிருக்கிறேன். நூல்கள் கூறுவதைக் கொண்டு மாத்திரம் திருப்தியடைவது புத்திசாலித்தனமல்ல. ஜீவ சக்தி வாய்ந்த இந்த சமயங்களின் உண்மையான பிரதிநிதி களைச் சந்தித்துப் பேசவேண்டியது அவசியமாகும்" என்றார் அமெரிக்கப் பேராசிரியர்.

அவருக்குப் பதிலாக காந்திஜி கூறியதாவது: எல்லா உயிர்களும் (மனிதர்கள் மாத்திரமல்ல, சகல ஜீவராசிகளும்) ஒன்றே என்ற உறுதியான நம்பிக்கையே ஹிந்து சமயத்தின் தனிச் சிறப்பாகும். எல்லா உயிர்களும் ஒரு கர்த்தரிடமிருந்தே வருகின்றன. அந்தக் கர்த்தரை அல்லா, கடவுள் அல்லது பரமேசுவரன் என்று எப்படி வேண்டுமானாலும் நீங்கள் குறிப்பிட லாம். ஹிந்து சமயத்தில் 'விஷ்ணுசஹஸ்ர நாமம்'* என்ற ஒரு நூல்

---

* மேலே காந்திஜி 'விஷ்ணு சஹஸ்ர நாமத்'தைப் பற்றி குறிப்பிட்டிருப்பதுடன், இதற்கு முன்பும் ஓர் அத்தியாயத்தில் அதைப் பற்றிப் பிரஸ்தாபித்திருக்கிறார். சிறு வயதில் அந்த நூலின் சுலோகங்களைத் தாம் நெட்டுருப் போட்டு வைத்திருந்ததாகவும் காந்திஜி அங்கே குறிப்பிட்டிருக்கிறார். பக்தர்களுக்கு 'விஷ்ணு சஹஸ்ர நாமம்' தனிச் சிறப்பு வாய்ந்தது என்பதைச் சொல்லத் தேவையில்லை. இந்த தோத்திரம் மகாபாரதத்தில் ஆனுசாஸனிக பர்வத்தில் உள்ளது. அதில் மொத்தம் 142 சுலோகங்களே இருக்கின்றன. சகல தருமங்களையும் பீஷ்மரிடமிருந்து தருமபுத்திரர் கேட்டுத் தெரிந்து கொண்டார். கடைசியாக, 'எல்லா தருமங்களுக்குள்ளும் எது சிறந்த தருமம்?' என்றும் கேட்டார். அதற்குப் பதிலாக மகாத்மாவான பீஷ்மர், விஷ்ணு சஹஸ்ர நாமத்தினால் இறைவனைத் துதிப்பதுதான் சிறந்த தருமம் என்று தமக்குத் தோன்றுவதாகக் குறிப்பிட்டார். தாம் மோட்சத்தை அடையப்போகும் தருணத்தில், கிருஷ்ண பரமாத்மாவும், மகரிஷிகளும், மாபெரும் மன்னர்களும் கூடியிருந்த சபையில் பீஷ்மர் அவ்வாறு கூறினார் என்றால் விஷ்ணு சஹஸ்ர நாமத்தின் பெருமையை அறிந்து கொள்ளலாம். ஆதி சங்கராச்சாரிய சுவாமிகள் முதன் முதலாக பாஷ்யம் எழுதியது விஷ்ணு சஹஸ்ர நாமத்திற்குத்தான் என்பதும் குறிப்பிடத்தக்கது. இதன் சம்பந்தமாக சுவையான ஒரு வரலாறு உண்டு. ஸ்ரீ லலிதா சஹஸ்ர நாமத்திற்கு பாஷ்யம் எழுதுவதற்காக உள்ளேயிருந்து அந்த நூலின் சுவடியை எடுத்து வரும்படி ஆதி சங்கரர் தமது சிஷ்யருக்குக் கட்டளையிட்டார். சிஷ்யர் உள்ளே சென்று விஷ்ணு சஹஸ்ர நாமச் சுவடியை எடுத்து வந்தார். சிஷ்யரின் தவறை ஆதி சங்கரர் எடுத்துக் காட்டவே, சிஷ்யர் உள்ளே சென்று மீண்டும் விஷ்ணு சஹஸ்ர நாமச் சுவடியையே எடுத்துக்கொண்டு வெளியேவந்தார். ஆதி சங்கரர் அவரைக் கடிந்துகொண்டு, லலிதா சஹஸ்ர நாமச் சுவடியையே எடுத்து வருமாறு மறுபடியும் கட்டளையிட்டார். சிஷ்யர் மூன்றாவது முறையாகவும் விஷ்ணு சஹஸ்ர

இருக்கிறது. கடவுளின் ஓராயிரம் பெயர்கள் அடங்கியதே அந்த நூலாகும். எனினும், இதிலிருந்து கடவுளின் எல்லை இந்த ஆயிரம் பெயர்களுக்கு உட்பட்டது என்று அர்த்தமில்லை. நீங்கள் அவருக்கு எத்தனை பெயர்கள் கொடுக்க முடியுமோ, அத்தனை பெயர்கள் அவருக்கு உண்டு. நீங்கள் கடவுளுக்கு எத்தனை பெயர்கள் கொடுத்தாலும் கடவுள் ஒருவரே; அவர் பெயரே இல்லாதவர் என்பதும் இதன் அர்த்தமாகும்.

உயிருள்ள எல்லா ஜீவராசிகளின் இந்த ஐக்கியத் தன்மையே ஹிந்து சமயத்தின் விசேஷ அம்சமாகும். மனிதர்களுக்கு மட்டுமல்ல, கடவுளின் சிருஷ்டிகளான எல்லாப் பிராணிகளுக்கும் மோட்சம் கிடைப்பது சாத்தியம் என்பதே ஹிந்து சமயத்தின் சித்தாந்தமாகும். பிராணிகள் மறு ஜன்மத்தில் மனித உருவத்தை அடைந்து, அதன் மூலம்தான் மோட்சம் பெறுவது சாத்தியம் என்றிருக்கலாம். எனினும் அதன் காரணமாக, சிருஷ்டிக்கப் பட்ட பிராணிகளுக்கெல்லாம் மனிதன்தான் எஜமானன் என்றாகி விடாது. அதற்கு மாறாக, அவனைக் கடவுளுடைய சிருஷ்டிகளின் ஊழியனாக அது செய்கிறது.

மனிதனின் சகோதரத்துவம் என்பது பற்றி நாம் பேசும் போது, நாம் அத்துடன் நின்றுவிடுகிறோம். மற்ற சிருஷ்டிகளை யெல்லாம் மனிதன் தனது நலனுக்காக உபயோகப்படுத்திக் கொள்ளலாம் என்று நாம் கருத முற்பட்டுவிடுகிறோம். எந்த ஜீவனையும் மனிதன் சுயநலனுக்காகச் சுரண்டுவதை ஹிந்து சமயம் தவிர்க்கிறது. எல்லா ஜீவராசிகளும் ஒன்று என்ற இந்த ஐக்கியத் தன்மையை அடைவதற்காக ஒருவர் செய்யவேண்டிய தியாகத்திற்கு எல்லையே இல்லை. எனினும் மகத்தான, எல்லை யற்ற இந்தக் கொள்கையின் தீவிரமே, நமது தேவைகளை நாம் கட்டுப்படுத்திக் கொள்ளும்படி செய்கிறது. எனினும், நவீன நாகரிகத்தின் நிலை இதற்கு நேர்மாறாக இருப்பதை நீங்கள் காணலாம். 'உங்களுடைய தேவைகளை அதிகப்படுத்திக் கொள்ளுங்கள்' என்று நவீன நாகரிகம் கூறுகிறது. இதை நம்புவோர், தேவைகளை அதிகப்படுத்திக் கொள்ளுவதன் மூலம் அறிவும் அதிகமாகிறது என்றும், அதன் பலனாக ஆதி அந்தமற்ற கடவுளை நீங்கள் நன்கு அறிந்துகொள்ளலாம் என்றும் எண்ணு

---

நாமச் சுவடியையே எடுத்து வந்தார்! "திரும்பத் திரும்ப ஏன் இப்படிச் செய்கிறாய்?" என்று ஆதி சங்கரர் கேட்கவே. உள்ளே இருக்கும் அழகிய கன்னிகை மூன்று முறையும் வற்புறுத்தி விஷ்ணு சஹஸ்ர நாமச் சுவடியையே தம்மிடம் கொடுத்ததாக சிஷ்யர் கூறினார். அதைக் கேட்ட ஆதி சங்கரர் ஆச்சரியத்துடன் உள்ளே போய் பார்த்தபோது, பராசக்தியான ஸ்ரீ லலிதாம்பிகையே அங்கே நேரில் பிரசன்னமாகியிருப்பதைக் கண்டு பரவசமடைந்து அம்பாளை நமஸ்காரம் செய்தார். விஷ்ணு சஹஸ்ரநாமத்திற்கு சங்கரர் பாஷ்யம் எழுதுவதுதான் பக்தர்களுக்கெல்லாம் உதவியாக இருக்கும் என்றும், தனக்கும் திருப்தியைக் கொடுக்கும் என்றும் அம்பாள் கட்டளையிட்டதன் மீதே ஆதி சங்கரர் அதற்கு பாஷ்யம் எழுதினார் என்றும் கூறப்படுகிறது. இவ்விதமாக, விஷ்ணு சஹஸ்ர நாமம் பல விதத்திலும் மகத்துவம் பெற்று விளங்குகிறது.

கின்றனர். ஆனால், அதற்கு மாறாக, புலனுணர்ச்சிகளுக்கு இடம் கொடுப்பதையும், தேவைகளை அதிகப்படுத்திக் கொள்ளுவதையும் ஹிந்து சமயம் நிராகரிக்கின்றது. ஏனெனில், உலக மயமான ஆன்மாவுடன் இறுதியில் ஐக்கியம் அடைவதற்கான வளர்ச்சிக்கு அவை முட்டுக்கட்டைகளாக இருக்கின்றன.

—'ஹரிஜன்' - 26—12—1936

# 8

# விவேகானந்தர் விளக்கிய ஹிந்து சமயம்

சிறிது காலமாக எனது கட்டில் இருந்துவந்த பின்வரும் கடிதத்தை இப்போது நான் வெளியிட்டிருக்கிறேன் :

''மத மாற்றத்தையொட்டி உங்களுடைய நிலையும், குறிப்பாக ஹிந்து சமயத்தில் உள்ள தாழ்த்தப்பட்டவர்கள் விஷயத்தில் நீங்கள் கொண்டுள்ள நம்பிக்கையும், இந்தியாவில் இன்று நிலவிவரும் ஹிந்து சமயங்களின் பழக்க வழக்கங்களை நீங்கள் அலட்சியம் செய்யும்படி செய்திருக்கின்றன. விவேகானந்தரும், சர் எஸ். ராதாகிருஷ்ணனும் விளக்கியுள்ள ஹிந்து சமயத்தின் அழகையும் மகத்துவத்தையும் ஒப்புக்கொள்ளாமல் இருப்பது முடியாத காரியம். ஆனால், அந்த ஹிந்து சமயமா இன்று இந்திய மக்களுக்கு போதிக்கப்பட்டு வருகிறது? அந்த ஹிந்து சமயமா இன்று ஹிந்து சமயத் தலைவர்களால் அனுசரிக்கப்பட்டு வருகிறது? இந்தியாவில் ஏழு லட்சம் கிராமங்களில் வாழும் கோடிக்கணக்கான ஏழை இந்தியர்கள் கோருவது என்ன? 'பட்டினியால் வாடும் கோடிக்கணக்கான மக்கள்' என்று நீங்களும் அவர்களைப் பற்றிக் குறிப்பிடுகிறீர்கள். அவர்களுடைய முதல் தேவை நியாயமான உணவும், உடையும், இருக்க இடமுமேயாகும். அப்போதுதான் அவர்களை, மிருகங்களுக்குச் சமமான நிலையிலிருந்து உயர்த்த முடியும். இந்நிலையில், தாழ்த்தப்பட்டோர் ஆலயங்களில் பிரவேசிக்க ஆவல் கொண்டிருக்கிறார்களா?

''எந்த சமயத்தையும், அதனால் ஏற்படும் பலன்களைக் கொண்டே நிர்ணயிக்க வேண்டும். இந்த முரண்பாட்டைப் பாருங்கள். ரோமன் கத்தோலிக்கர்களாயினும் ப்ராடெஸ்டண்டுகளாயினும், பொதுவாக கிறிஸ்தவ சமயத்தை எடுத்துக் கொள்ளுங்கள். பணக்காரர்களிடமிருந்தும் ஏழைகளிடமிருந்தும் வசூல் செய்யும் தொகைகளுக்கு அவர்கள் கவனமாகக் கணக்கு வைத்துக் கொள்கிறார்கள். வைத்திய, கல்வித் தொண்டின் உருவத்தில் அத்தொகையை மக்களுக்குக் திருப்பிக் கொடுக்கிறார்கள். கிறிஸ்தவ சமய வழிபாட்டில் எல்லோரும் சமமாகக் கலந்து கொள்ளலாம். கிறிஸ்தவ மத ஸ்தாபனங்கள் ஏற்படுத்தியுள்ள ஏராளமான கல்விச் சாலைகள், கல்லூரிகள், வைத்திய சாலைகள், ஆஸ்பத்திரிகள், அனாதை நிலையங்கள் முதலியவை அவர்களுக்குள்ள சமய நம்பிக்கைக்குச் சிறந்த சான்றாகும். அவர்களிடம் சமய சாத்திரமோ அல்லது தத்துவ சாத்திரமோ இல்லை. ஆனால், எல்லோருக்கும் அவர்கள் புரியும் தன்னலமற்ற அபரிமிதமான தொண்டிற்கும், கோயில்களும்

மடங்களும் செய்யும் தொண்டிற்கும் உள்ள முரண்பாட்டையே குறிப்பிடு கிறேன். கோவில்களிலும் மடங்களிலும் உள்ள செல்வத்தை எப்படி உபயோகிக்கிறார்கள்? கோவில்களும் மடங்களும், மூடநம்பிக்கைக்கும் கொடுமைக்கும் ஏற்ற கருவிகளாக இருந்து வரவில்லையா? இந்த மடங்களின் தலைவர்கள் மகாராஜாக்களைப் போல் வாழ்ந்துவருகிறார்கள். அவர்கள் எப்போதாவது வெளியே புறப்படவேண்டுமென நினைத்தால் பல்லக்குகள், ரதங்கள், யானைகள், ஒட்டகங்கள், ஏராளமான சீடர்கள் முதலிய விருதுகளுடன் மேற்கொண்டு பண வசூல் செய்வதற்காக கிராமங்களின் மீதோ, நகரங்களின் மீதோ வெட்டுக்கிளிக் கூட்டத்தைப் போல் படையெடுத்து வருகிறார்கள். புரோகிதர்களான அவர்களுடைய சீடர்களோ, உளவாளிகளைப் போல் எங்கும் பரவியிருக்கிறார்கள். ஜாதிப்ரஷ்டம் செய்வதாகவோ அல்லது பகிஷ்காரம் செய்வதாகவோ பயமுறுத்தி அவர்கள் எல்லோரிடமும் பணவசூல் செய்து விடுகிறார்கள். இந்த மதத் தலைவர்கள், சுவாமிகள், குருநாதர்கள் முதலியோருக்காக தொகைகளை வசூலிக்க வக்கீல்கள் அமர்த்தப்பட்டிருப்பதாகவும் தெரிகிறது. இவ்விதமாக, மடங்களின் சொத்துக்களும் அவற்றால் வசூலிக்கப் படும் தொகைகளும் சேர்ந்து பல கோடிக் கணக்கில் இருக்கும். எனினும், அந்தத் தொகைகளுக்கு சரியான கணக்குகள் வைத்துக் கொள்ளப்படுவதில்லை. இந்த பயங்கரமான சுரண்டல் முறையை, மக்களின் தலைவர்களான அறிவாளிகள் கூட தொடர்ந்து ஆதரித்துவருகிறார்கள். நடைமுறையில் இது தான் ஹிந்து சமயமாக இருந்துவருகிறது. அப்படியிருக்க. கடவுளை வணங்குவதற்குக் கூட சம உரிமைகள் வழங்க மறுக்கப்படும் தாழ்த்தப்பட்ட வகுப்பினர், அத்தகைய முறையை எதிர்த்துப் புரட்சி செய்வதைக் குறித்து ஏன் ஆச்சரியம் அடையவேண்டும்? வைதிகர்களின் இந்தக் கொடுமைகளையும், யாதொரு தொண்டும் செய்யாமல் வருடந்தோறும் மக்களின் செல்வத்தை இவ்விதம் சுரண்டுவதையும் ஆட்சேபிக்க ஏன் எவரும் துணிவதில்லை? கோடிக்கணக்கான மக்கள் பட்டினியினாலும், அறியாமையினாலும் துன்பத்திற்கு உள்ளாகிவரும் போது அவர்களுடைய துன்பத்தைத் தீர்க்க மடங்கள், கோவில்கள் முதலியவற்றின் சொத்துக்களில் ஒரு சிறு பகுதி கூட செலவு செய்யப்படுவதில்லை. ஏழைகளுடைய கஷ்டங்களைத் தீர்க்க விரும்பாத அளவுக்கு ஹிந்து சமயம் அவ்வளவு 'ஆன்மிக மகத்துவம்' வாய்ந்ததாக இருக்கிறது! ஹிந்து தெய்வங்கள் அவ்வளவு கொடுமையான பசியுள்ளவைகளா? வருடந்தோறும் வசூலாகும் தொகை முழுதும், அவற்றின் பசியைத் தீர்க்கத் தேவையாக இருக்கிறதா? அந்தத் தொகையைக் கொடுக்கும் மக்கள் விஷயத்தில் அந்த தெய்வங்கள் சிறிதும் அக்கறை கொள்ளுவதில்லையா? நான் அவ்விதம் நினைக்கவில்லை!

"நிலத்திலிருந்து கிடைப்பதை, அரசாங்கம் ஒரு புறம் நில வரி என்று கூறிச் சுரண்டிக் கொண்டு போய்விடுகிறது; மற்றொரு புறம் மத ஸ்தாபனங்கள் தண்டிக் கொண்டு போய்விடுகின்றன. இந்நிலையில் கோடிக்கணக்கான மக்கள் அரைப் பட்டினியாகவும், வறுமையில் ஆழ்ந்தும் இருப்பதில் என்ன ஆச்சரியம் இருக்கிறது? நிலைமை இப்படி இருக்கும் போது, மக்கள் இன்னும் கடுமையாகவும், அறுவடைக்குப் பின் அவர்களுக்கு ஓய்வு கிடைக்கும் மாதங்களில் இன்னும் அதிக ஒழுங்காகவும் வேலை செய்ய வேண்டும் என்று கூறுவதால் அவர்களுடைய துன்பங்களுக்கு என்ன பரிகாரம் ஏற்பட முடியும்? அவர்களிடமிருந்து எடுத்துக் கொள்ளப்படும் தொகையும் பொருட்களும் அவர்களுடைய அத்தியாவசியமான தேவைகளைத் திருப்தி செய்யும் விதத்

தில், தொண்டு உருவத்தில், அவர்களுக்குத் திரும்பக் கிடைக்கவேண்டும். கல்வியின்மை, அறியாமை, கரப்பான், மலேரியா, குஷ்டம், சீதபேதி, கொள்ளை நோய் முதலியவற்றினல் அவர்கள் அவதிப்பட்டுவருகிருர்கள். ஏழைகளும் துரதிருஷ்டசாலிகளுமான அந்த மக்களுக்கு அவற்றிலிருந்து விடுதலை கிடைக்க ஹிந்து மடங்களின் செல்வம் உபயோகிக்கப்படவில்லையாயின், இயற்கைச் சாதனங்களை விவேகத்துடன் பெருக்கிக் கொள்ளும் சக்தி அவர்களுக்கு எவ்விதம் ஏற்பட முடியும்? பாதி செத்தும் பாதி வாழ்ந்து கொண்டும் இருக்கும் இந்த மக்களுக்குத் தேவையாக இருப்பது கடுமையான உழைப்பும், குடிசைத் தொழில்களும் அல்ல. தொழிற் கல்விசாலைகள், வைத்திய சாலைகள், மருத்துவ, சிசுப் பாதுகாப்பு விடுதிகள், நல்ல உணவு முதலியவையே அவர்களுக்கு அவசியமான தேவையாக இருக்கின்றன. அந்த வசதிகளைப் பெறுவதற்கான முழுத் தொகையையும் அவர்கள் கொடுத்துவிட்டார்கள். ஆனல், அவர்களுக்கு சமயமும் அரசாங்கமும் செய்ய வேண்டிய தொண்டுகளைச் செய்யாமல் அவர்களை மோசம் செய்துள்ளன. இந்நிலையில், கிராமங்களில் உள்ள குழந்தைகளின் கண்களில் எப்போது ஒளியைக் காண முடியும்? ஹிந்து சமயத்தையும் அரசாங்கத்தையும் சுற்றிப் படர்ந்துள்ள அசுத்தங்கள் ஒழிய வேண்டுமென்று நாம் விரும்புவதால் மாத்திரம் அவை ஒழிந்துவிடா. நீங்கள் எவ்வளவோ மகத்தான முயற்சிகள் செய்தும் கூட அரசாங்கத்தை எளிதில் அசைக்க முடியவில்லை. அப்படியிருக்க, ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக நிலைபெற்றுள்ள ஹிந்து சமயத்திலுள்ள தீமைகளை ஒழிக்க இன்னும் எத்தனையோ மடங்கு அதிகக் கடுமையான முயற்சிகளை மேற்கொள்ள வேண்டும். ஏழை மக்களுக்கு ஒன்றும் செய்யாத இந்த சமயத்தைக் காட்டிலும், தாங்கள் வசூலிக்கும் வரித் தொகைகளுக்குப் பிரதியாக எல்லாவிதத்திலும் தொண்டு செய்யும் அரசாங்கத்தை நான் விரும்புவேன்.

''கிறிஸ்தவ சமயத்தைச் சேர்ந்த பாதிரிமார்களையும் குருமார்களையும் இந்த நாட்டிலும் மற்றும் ஒவ்வொரு நாட்டிலும் கடுமையாகத் தாக்கிவருகிருர்கள். அப்படியிருந்தும் கூட, மற்ற சமயங்களைப் பின்பற்றுவோரைக் காட்டிலும் கிறிஸ்தவ சமயத் தலைவர்கள் சிறந்த ஜீவகாருண்யத் தொண்டு புரிந்து வருகிருர்கள். எல்லா மக்களும்-தங்களை அணுகவும் அவர்கள் இடம் கொடுக்கிருர்கள். கிறிஸ்தவ சமய ஸ்தாபனங்கள் இப்போது ஏழ்மை நிலைமையை அடைந்துவிட்டன; தங்களுக்கு ஆதரவு அளித்து வந்தவர்களையெல்லாம் இழந்துவிட்டன; அவற்றிற்கு ஆதரவு அளித்துவந்தவர்கள் இன்று ஹிந்து சமயத்தின் பெருமையை ஒப்புக்கொண்டுள்ளனர்; கிறிஸ்தவர்கள் தங்கள் சொந்தப் பணத்தைக் கொண்டு தங்கள் சக மனிதர்களுக்குத் தொண்டு புரியட்டும் என்று கூறுகின்றனர். கிறிஸ்தவ சமயத் தலைவர்கள் செய்து வரும் ஜீவகாருண்யத் தொண்டை ஒப்புக்கொள்ளுவதாயின், இப்போது துஷ்பிரயோகம் செய்யப்பட்டுவரும் தொகைகளை அவர்களுக்குக் கொடுப்பதே சிறந்ததாகும். அவற்றைக் கொண்டு கிறிஸ்தவ சமயத் தலைவர்கள் தங்களுடைய நேர்மையான சிறந்த ஸ்தாபனத்தின் மூலம் தாங்கள் செய்துவரும் ஜீவகாருண்யத் தொண்டு மேலும் விரிவடையும்படி செய்ய முடியும். மக்களுக்கு மிகவும் அவசியமான தேவையாக இருப்பது அத்தகைய தொண்டுதான். இந்த உலகிலேயே ஆரோக்கியமற்ற மிகுந்த மோசமான நிலையில் இருந்துவருவது இந்தியாவில் உள்ள கிராமங்களே. அந்த கிராமங்களுக்காக ஹிந்து சமயம் என்ன தொண்டு புரிந்திருக்கிறது? பாதிரிமாரின் ஜீவகாருண்யத் தொண்டை

ஒப்புக் கொள்ளுவதில் உங்களுக்கு ஆட்சேபணையில்லை. ஆனால், கோவில்களிலும் மடங்களிலும் குவிந்துள்ள செல்வத்தைக்கொண்டு ஹிந்து சமயம் என்ன தொண்டு செய்துவருகிறது என்பதைப் பற்றி உங்களுக்குக் கவலையில்லை. இந்த ஏழை மக்களின் மூடநம்பிக்கையைத் தங்களுக்குச் சாதகமாகக் கொண்டு அவர்களைச் சுரண்டுவதைவிட்டுவிட்டு, கோவில்களும் மடங்களும் சாதி, சமய, சமூக வேற்றுமையின்றி ஏழை மக்களுக்குத் தொண்டு புரியும் போதுதான், ஹிந்து சமயம் உண்மையில் புத்துயிர் பெற்று வாழத் தொடங்கியிருக்கிறது என்று கூற முடியும்.''

மற்றவர்கள் நம்மைப் பார்ப்பது போல் நம்மை நாமே பார்த்துக்கொள்வது நல்லதுதான். எவ்வளவு முயற்சி செய்தாலும், நமது உண்மை நிலையை நாம் பூரணமாக அறிந்துகொள்ளுவது, குறிப்பாக நமது தீய குணங்களை அறிந்துகொள்ளுவது ஒருபோதும் முடியாத காரியம். ஆனால், அவ்விதம் அறிந்து கொள்ளுவதற்கு ஒரே ஒரு வழிதான் உண்டு. அதாவது, நம்மைக் கண்டிப்பவர்களிடம் நாம் கோபம் கொள்ளக்கூடாது. அவர்கள் என்ன கூறினாலும் அதை நல்ல முறையில் எடுத்துக்கொள்ள வேண்டும். மேற்கண்ட கண்டனத்தை என்னால் இயன்றவரையில் விருப்பு வெறுப்பின்றி நான் பரிசீலனை செய்ய உத்தேசிக்கிறேன். இன்று நடைமுறையில் காணும் ஹிந்து சமயத்தின் மோசமான குறைகளை நாம் ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். பல மடங்களும், அவற்றின் நிர்வாகமும் ஹிந்து சமயத்திற்கே அவமானமாக இருக்கின்றன என்பதில் ஐயமில்லை. சில மடங்களுக்குக் கொட்டப்படும் தொகை, தொண்டின் மூலம் பக்தர்களுக்குத் திரும்பக் கிடைப்பதில்லை. இந்த நிலையை ஒன்று ஒழித்துக் கட்டவேண்டும், அல்லது சீர்திருத்தவேண்டும்.

கிறிஸ்தவ சமய ஸ்தாபனங்கள் செய்துவரும் ஜீவகாருண்யத் தொண்டையும் ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும்.

எனினும், இவ்விதம் நான் ஒப்புக்கொள்ளுவதிலிருந்து, கடிதம் எழுதியிருப்பவரின் கருத்துகளை நான் அங்கீகரிப்பதாக அர்த்தம் செய்துகொள்ள வேண்டாம். ஹரிஜனங்களைப் போல் மற்ற பெரும்பாலான ஏழை இந்தியர்களுக்கும் பொருளாதார, கல்வி வசதிகள் தேவையாக இருக்கின்றன. ஹரிஜனங்களுக்கு பிரத்தியேகமான கஷ்டங்கள் இருக்கின்றன. அவர்களுக்கு எவை கோபத்தைக் கொடுக்கின்றன என்பது கேள்வியல்ல. ஹரிஜனங்கள் விருப்பத்துடன் தழுவிக்கொண்டிருந்தாலும் கூட, அவர்கள் கட்டுண்டிருக்கும் சங்கிலிகளை உடைத்தெறிய வேண்டியது உயர்ந்தவர்கள் என்று சொல்லப்படும் ஹிந்துக்களின் கடமையாகும். விவேகானந்தராலும் ராதாகிருஷ்ணனாலும் விளக்கப்பட்டுள்ள ஹிந்து சமயத்தின் பெருமையை, கடிதம் எழுதியவர் ஒப்புக்கொள்ளுகிறார். அந்தப் பெருமை மக்களின் மனத்திலும் பதிந்திருக்கிறது என்பதை அந்த அன்பர் அறிந்து கொண்டிருக்கவேண்டும். கிராமவாசிகள் அநாகரிகமாகத் தோன்றினாலும், மனித இயற்கையில் உள்ள நல்ல அம்சங்கள்

சம்பந்தப்பட்ட வரையில், உலகத்தில் உள்ள எந்தக் கிராமவாசிகளுடனும் அவர்களைச் சிறப்பாக ஒப்பிடலாம். ஹுவன் சாங்* காலத்திலிருந்து இன்றுவரையில் இந்தியாவுக்கு விஜயம் செய்த பெரும்பாலான யாத்திரிகர்களும், தங்களுடைய வரலாறுகளில் அதை ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். இந்திய கிராமவாசிகளின் இயல்பான பண்பாடு, ஏழைகளின் வீடுகளில் காணப்படும் கலைத்திறன், கிராமவாசிகள் அடக்கமாக நடந்துகொள்ளும் விதம் முதலியவற்றிற்கு அவர்கள் பின்பற்றும் சமயமே காரணமாகும். சமயமே, அவர்களை நினைவுக்கு எட்டாத பண்டைய காலத்திலிருந்து ஐக்கியப்படுத்தி வந்திருக்கிறது.

ஹிந்து சமயத்தைச் சிறுமைப்படுத்தவேண்டும் என்ற உற்சாகத்தில் இந்த அன்பர் முக்கியமான ஓர் உண்மையைக் கவனிக்கத் தவறிவிட்டார். அதாவது, ஹிந்து சமயம், சீர்திருத்தக்காரர்களின் ஒரு திருக்கூட்டத்தையே உற்பத்தி செய்திருக்கிறது என்பதே அந்த உண்மையாகும். தப்பெண்ணங்கள், மூட நம்பிக்கைகள், துஷ்பிரயோகங்கள் முதலியவற்றை அவர்கள் வெற்றிகரமாக எதிர்த்து நின்றிருக்கிறார்கள். ஏழைகளுக்குப் பரிகாரம் அளிப்பதற்கு, பல அந்நிய நாட்டினரும் பொறாமை கொள்ளும்படியான ஒரு முறையையும் ஹிந்து சமயம் திறமையுடன் வகுத்திருக்கிறது. ஆனால், இதையெல்லாம் குறித்து ஹிந்து சமயம் தம்பட்டம் அடித்துக் கொள்ளுவதில்லை.

ஹிந்து சமயத்தில் பல குறைகள் இருக்கின்றன என்பதை, நானே உணருகிறேன். அதில் தீய அம்சங்களும் இருக்கின்றன. எனினும், மக்களிடம் அன்பு காட்டி அவர்களுக்கு உதவி புரிவதில் அது தனது முக்கியத்துவத்தை நிரூபித்திருக்கிறது. தான் செய்யும் தரும காரியங்களை, அச்சடிக்கப்பட்ட அறிக்கைகள் முதலியவற்றின் மூலம் விளம்பரப்படுத்திக் கொள்ளுவது, இந்தியர்களின் வழக்கம் அல்ல. இந்தியாவின் பண்புக்கு இணங்க, ஏழைகளுக்கு இலவசமாக வைத்திய உதவி செய்யப்படுவதையும், இலவசமாக உணவு அளிக்கப்படுவதையும் கண் உள்ளவர்கள் பார்க்கலாம்.

கிராமத் தொழில்களையும் கடிதம் எழுதியவர் இழிவு படுத்துகிறார். இவரது அறியாமையையே அது முற்றிலும் காட்டுகிறது. மடங்களையும், வரி வசூல் அதிகாரிகளையும் ஒழித்துவிட்டு, இலவசக் கல்விச்சாலைகளை ஏற்படுத்திவிட்டால், மக்களின் சுறுசுறுப்பின்மை தீர்ந்துவிடாது. மடங்களைச் சீர்திருத்தவேண்டும்; அரசாங்க வரிவசூல் முறையிலுள்ள குறைகளையும் களைய வேண்டும். ஒவ்வொரு கிராமத்திலும் இலவச ஆரம்பக் கல்விசாலைகளை

* ஹுவன் சாங் (Huen Tsang) என்ற பிரபல சீன யாத்திரிகர் கி. பி. 648–ஆம் ஆண்டில் இந்தியாவிற்கு வந்து இந்தியா முழுவதும் யாத்திரை செய்தார். அவர் தாம் எழுதிய சரித்திரத்தில் இந்திய மக்களின் சிறப்பான அம்சங்களைப் பற்றி விவரமாகக் குறிப்பிட்டுள்ளார். அக்காலத்தில் உலகப் புகழ் பெற்று விளங்கிய நளந்தா கல்லூரியில் ஹுவன் சாங் பல ஆண்டுகள் இருந்தார் என்பதும் குறிப்பிடத்தக்கது.

ஏற்படுத்தவேண்டும். மக்கள் வரி செலுத்தாமல் இருப்பதாலும், மடங்களை ஒழித்துவிடுவதாலும், ஒவ்வொரு கிராமத்திலும் பள்ளிக்கூடங்கள் ஏற்படுவதாலும் பட்டினிப் பிணி தீர்ந்துவிடாது. நிலங்களிலோ அல்லது கிராமங்கள் சம்பந்தப்பட்ட கைத்தொழில் களிலோ வருடம் முழுவதும் இடைவிடாமல் ஒழுங்காகவும் லாப கரமாகவும் வேலை செய்யக் கற்றுக் கொள்ளும்படியும், வேலை செய்யும்படியும் அவர்களைத் தூண்டவேண்டும். இதுதான் அவர்கள் பெறவேண்டிய மகத்தான கல்வியாகும்.

பாதிரிமார்களின் ஜீவகாருண்யத் தொண்டை நாம் ஏற்றுக் கொள்ளுவதைக் குறித்து அன்பர் ஆத்திரம் அடைகிறார் என்று தோன்றுகிறது. இந்தப் பாதிரிமார் ஸ்தாபனங்களை எதிர்த்துக் கிளர்ச்சி செய்ய வேண்டும் என்று அவர் விரும்புகிறாரா? கிறிஸ் தவரல்லாதாரிடமிருந்து அவர்கள் எதற்காக உதவி பெற வேண்டும்? விவேகானந்தரும் ராதாகிருஷ்ணனும் விளக்கியுள்ள இந்தியர்களுடைய மூதாதையரின் சமயத்தில் இந்தியர்களுக்கு வெறுப்பு ஏற்படும்படி செய்யவே பாதிரிமார் ஸ்தாபனங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. அத்தகைய நோக்கங்களை அவை கைவிட்டால்தான், கிறிஸ்தவரல்லாதாரிடமிருந்து உதவியை அவை எதிர்பார்க்கலாம். இப்போதுகூட அந்த ஸ்தாபனங் கள் கிறிஸ்தவரல்லாதாரிடமிருந்து உதவி பெறுகின்றன என் பதை அன்பர் அறிந்து கொண்டிருக்கவேண்டும். கிறிஸ்தவரல்லா தாரின் உணர்ச்சிக்கு விரோதமான நோக்கம் அந்த ஸ்தாபனங் களுக்கு இருந்துவரும் வரையில், அவை கிறிஸ்தவரல்லாதாரிட மிருந்து உதவி பெறவில்லையாயின், அதைக் குறித்து புகார் கூறக் கூடாது என்றே நான் கூற விரும்புகிறேன்.

—'ஹரிஜன்' – 6—3—1937

## 9

# அணுவில் மலை

"திருவாங்கூர் ஆலயப் பிரவேசப் பிரகடனத்தைப்பற்றி ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதியுள்ள புத்தகத்தில், திருவாங்கூரைச் சேர்ந்த பல இடங்களில் நீங்கள் நிகழ்த்திய பிரசங்கங்களை நான் காண்கிறேன். அவற்றில் ஈசோப நிடதத்தைப் பற்றி* நீங்கள் குறிப்பிட்டிருக்கிறீர்கள். ஹிந்து சமய நூல்கள் முழுவதும் அழிந்து போய், ஈசோபநிடதத்தில் உள்ள முதல் சுலோகம் மாத் திரம் அழியாமல் இருந்துவிட்டால், ஹிந்து சமயம் மறைந்துவிடாமல் பாது

* திருவாங்கூர் மன்னரின் ஆலயப் பிரவேசப் பிரகடனத்தைப் பற்றி காந்திஜி நிகழ்த்திய ஏராளமான பிரசங்கங்கள் 'மகாத்மா காந்தி நூல்கள்' 7–ஆவது தொகுப்பில் விவரமாக வெளியாகியுள்ளன. ஈசோபநிடத சம்பந்தமாக மேற்கண்ட கடிதத்தில் குறிப் பிட்டுள்ள விவரமும் அதே தொகுப்பில் 218-222 பக்கங்களில் வெளியாகியிருக்கிறது.

காக்க முடியும் என்று நீங்கள் கூறியிருக்கிறீர்கள். கவி ரவீந்திரநாத தாகூரின் தந்தையான தேவேந்திரநாத் தாகூரின் வாழ்க்கையில் அந்த ஒரு சுலோகம் தான் பெரிய மாற்றத்தை உண்டாக்கியது என்பதை நீங்கள் ஒருவேளை அறிந்திருப்பீர்கள். தேவேந்திரநாத் இளைஞராக இருந்தபோது அவரது தந்தை இறந்து விட்டார், அப்போது அவரது குடும்பச் சொத்துக்களின் மீது ஏராளமான கடன் இருந்தது. எனவே, தேவேந்திரநாத் மனம் இடிந்துபோய்விட்டார். ஒருநாள் அவர் மிகவும் மனச் சோர்வுடன் உட்கார்ந்து கொண்டிருந்தபோது, ஒரு காகிதத் துண்டு காற்றில் பறந்து அவர் உட்கார்ந்திருந்த இடத்தில் வந்து விழுந்தது. அதை அவர் எடுத்துப் பார்த்தார். அது சமஸ்கிருதத்தில் இருந்தது. அவருக்கு சமஸ்கிருதம் தெரியாததால், அதை அவர் தமது குடும்ப பண்டிதரிடம் எடுத்துச் சென்றார். பண்டிதர் அதை அவருக்கு வாசித்துக் காட்டி, அதன் பொருளையும் விவரித்துக் கூறினர். அதுதான் ஈசோப நிடதத்தின் முதலாவது சுலோகம். 'அந்த சுலோகம் என் மனத்தில் அமுதத்தைப் பொழிவது போல் இருந்தது' என்று தேவேந்திரநாத் மகரிஷி தமது சுயசரிதையில் குறிப்பிட்டுள்ளார்.

''எல்லாவற்றையும் தியாகம் செய்வதன் மூலம் ஒருவன் எப்படி அனுபவித்து மகிழ்ச்சியடைய முடியும் என்பது எனக்கு வெகு காலம் வரையில் ஒரு புதிராக இருந்துவந்தது. ஆனல், அது தினசரி அனுபவமேயாகும் என்பது ஒரு நாள் திடீரென்று என் மனத்திற்குப் புலனாயிற்று. தான் அன்பு வைத்துள்ள ஒருவருக்கு எதையாவது விட்டுக் கொடுப்பதைக் காட்டிலும் அதிக ஆனந்தத்தைக் கொடுக்கக்கூடிய விஷயம் வேறு என்ன இருக்க முடியும்?''

ஸ்ரீ கே. நடராஜன் எழுதிய மேற்கண்ட கடிதம் ஒன்று மூன்று மாதங்களுக்கு முன் எனக்குக் கிடைத்தது. முன்பே இதைப் பற்றிக் குறிப்பிடவேண்டுமென எண்ணியிருந்தேன். ஆனல், அவ்விதம் செய்ய முடியவில்லை. எனினும், இந்தத் தாமதத்தினல் யாதொரு பாதகமும் ஏற்பட்டுவிடவில்லை. ஏனெனில், கடிதத்தில் கண்டுள்ள விஷயம் என்றென்றும் பசுமையாக இருக்கக் கூடியது. ஈசோப நிடதத்தில் உள்ள அந்த சுலோகத்தின் அர்த்தத்திற்கு இணங்க நான் வாழ்ந்துவர என்னல் இயன்ற வரையில் முயற்சித்து வருகிறேன். நான் புத்தகங்களை வாசிப்பதில்லை. எனவே, மகரிஷி தேவேந்திரநாத்தின் வாழ்க்கையில் நிகழ்ந்த அவ்விஷயம் எனக்குத் தெரியவே தெரியாது. அந்த முதல் மந்திரமே, கலப்பற்ற ஹிந்து சமயத்தின் சாரம் என்ற எனது நம்பிக்கையை அது உறுதிப்படுத்தியிருக்கிறது.

கீதையில் உள்ள பதினெட்டு அத்தியாயங்களும் காலைப் பிரார்த்தனையின்போது பாராயணம் செய்யப்பட்டு ஒரு வாரத்தில் முடிவடைந்தது. சில ஆண்டுகளாகவே வாரந்தோறும் அவ்விதமே நிகழ்ந்து வருகிறது. ஈசோபநிடதத்தில் உள்ள முதல் சுலோகத்திற்கு கீதை ஒரு விமர்சனமாக இருக்கிறது. அந்த சுலோகத்தையொட்டி ஸ்ரீ நடராஜனின் மனத்திற்குத் தோன்றிய விளக்கமானது ஓரளவே உண்மையாகும். எல்லோரும் அறிந்த தன்னலமற்ற கொள்கையையே அவரது விளக்கம் குறிப்

பிடுகிறது. அது எல்லோருக்கும் பொதுவான அனுபவமாகும். ஒரே ஓர் உதாரணத்தை மாத்திரம் எடுத்துக் கொள்ளுங்கள். பல தாய்மார்கள் தங்களுடைய குழந்தைகளுக்காக எல்லாவற்றையும் தியாகம் செய்கிறார்கள். ஆனால், இந்த வழக்கத்தின் உண்மையை உறுதிப்படுத்துவதற்காக அந்த மந்திரம் ஏற்படவில்லை. அந்த மந்திரம் ஏற்பட்ட காலத்தில் கூட, குழந்தைகளுக்காக தாய்மார் எல்லாவற்றையும் தியாகம் செய்யும் வழக்கம் இருந்ததை எல்லோரும் அறிவர். புதிய ஏற்பாட்டில் (பைபிள்) உள்ள பிரகடனத்தின்படி புனர் ஜன்மமோ அல்லது ஹிந்து சமயத்தில் கற்பிக்கப்பட்டுள்ள பிரம்ம சமர்ப்பணமோ (கடவுளுக்கு அர்ப்பணம் செய்தல்) அந்த சுலோகத்திற்கு இணங்க வாழ்வதன் அர்த்தமேயாகும். எனவே, அந்த சுலோகம் ஒரே ஒரு விஷயத்தைத்தான் குறிக்கிறது என்று எனக்குத் தோன்றுகிறது. அதாவது, உங்களிடம் இருப்பதாக நீங்கள் எண்ணும் ஒவ்வொன்றும் கடவுளுடையது என்பதையும், அது கடவுளிடமிருந்தே வந்தது என்பதையும் அறிந்து கொள்ளுங்கள். வாழ்க்கைக்கு, உண்மையில் அவசியமாக இருப்பதை மாத்திரம் எடுத்துக்கொள்ளுங்கள். மற்றொரு விதமாகக் கூறுவதாயின், கீதை கூறுவதுபோல் முற்றிலும் பற்றற்ற நிலை என்ற கொள்கையை அது கற்பிக்கிறது. அந்த நிலையில் மாத்திரமே வாழ்க்கை வாழ்வதற்குத் தகுதியாக இருக்கிறது.

—'ஹரிஜன்' – 23—6—1946

# 10

# நான் கண்ட முடிவுகள்

நான் ஒரு சமஸ்கிருத பண்டிதன் அல்ல. எனினும், மொழி பெயர்ப்புகளில் உள்ள தவறுகளைக் கண்டுபிடிப்பதற்குப் போதிய சமஸ்கிருத அறிவு எனக்கு உண்டு. என் மன திருப்திக்காக நான் சாத்திரங்களை வாசித்திருக்கிறேன். சாத்திரங்களின் மூலாதாரமான உபதேசங்களை நடைமுறையில் கொண்டுவர எனது இளமைப் பருவம் முதல் நான் முயற்சித்து வந்திருக்கிறேன். எனவே, ஹிந்து சமயத்தின் சில மூலாதாரமான அம்சங்களையொட்டி நான் கண்டுள்ள முடிவுகளை பூரண நம்பிக்கையுடன் பொதுஜனங்களின் முன் வைக்க நான் சிறிதும் தயங்கவில்லை.

—'ஹரிஜன்' – 12—1—1934

## 11

# ஹிந்துவாக இருப்பதற்குக் காரணம்

தம்மை இந்தியாவின் நீண்டகால நண்பர் என்று கூறிக் கொள்ளும் ஓர் அமெரிக்கப் பெண்மணி பின்வருமாறு எழுது கிறார் :

"கீழ்த்திசை நாடுகளில் உள்ள பிரபல சமயங்களில் ஹிந்து சமயமும் ஒன்றாக இருக்கிறது. கிறிஸ்தவ சமயத்தையும் ஹிந்து சமயத்தையும் நீங்கள் ஆராய்ச்சி செய்திருக்கிறீர்கள். அந்த ஆராய்ச்சியை அடிப் படையாகக்கொண்டு நீங்கள் ஓர் ஹிந்து என்று அறிவித் திருக்கிறீர்கள். அவ்விதம் முடிவு செய்த காரணத்தை தயவு செய்து கூறும்படி உங்களை நான் கேட்டுக்கொள்ளுகிறேன். கடவுளை அறிவ தும், உண்மையாகவும் ஆன்மிக ரீதியாகவும் கடவுளை வழிபடுவதுமே மனித னின் முக்கியமான தேவை என்பதை ஹிந்துக்களும் கிறிஸ்தவர்களும் உணர்ந் திருக்கிறார்கள். ஏசுநாதர் கடவுளின் தூதரே என்று நம்பும் அமெரிக்க கிறிஸ் தவர்கள், அவரைப் பற்றி இந்திய மக்களிடம் எடுத்துக் கூறுவதற்காக ஆயிரக் கணக்கான தங்களுடைய புதல்வர்களையும் புதல்விகளையும் இந்தியாவுக்கு அனுப்பியிருக்கிறார்கள். ஹிந்து சமயத்தைப் பற்றி உங்களுடைய விளக்கத்தை நீங்கள் கொடுத்து ஹிந்து சமயத்தையும் ஏசுநாதரின் உபதேசங்களையும் நீங்கள் ஒப்பிட்டுக் கூறுவீர்களா? இவ்விதம் நீங்கள் செய்தால், நான் மிகவும் நன்றியுடையவளாக இருப்பேன்."

ஆங்கில, அமெரிக்கப் பாதிரிமார்கள், ஏசு நாதரைப்பற்றி இந்திய மக்களிடம் கூறுவதை (பிரசாரம் செய்வதை) விட்டு விட்டு, ஏசு நாதருடைய மலைப் பிரசங்கத்தின் மூலம் விதிக்கப் பட்டுள்ள கட்டளைகளின்படி வாழ்ந்து காட்டுவார்களாயின், இந்திய மக்கள் அவர்கள்மீது சந்தேகம் கொள்ளமாட்டார்கள். இந்திய மக்களிடையே அவர்கள் வாழ்ந்துவருவதைக் குறித்து இந்தியர்கள் அவர்களைப் பாராட்டி, அவர்கள் இங்கே இருப்ப தால் நேரடியான பலனையும் அடைவார்கள். ஏசு நாதரைப்பற்றி அவர்கள் பிரசாரம் செய்வதற்குப் பதிலாக, ஹிந்து சமயத்தைப் பற்றி நான் அமெரிக்க நண்பர்களுக்கு எதுவும் கூறுவதற்கில்லை. குறிப்பாக, மத மாற்ற நோக்கத்துடன் தங்கள் மதத்தைப்பற்றி பிறருக்கு எடுத்துக் 'கூறுவதில்' எனக்கு நம்பிக்கையில்லை. சமயத்தைப் பற்றி சொல்லுவதற்கு என்ன இருக்கிறது? சமயம் வாழ்ந்து காட்டவேண்டியதாகும். அப்போது நம்முடைய வாய்ப் பேச்சின்றி அது தன்னைத் தானே பிரசாரம் செய்து கொள்ளுவ தாகிவிடும்.

ஹிந்து சமயத்திற்கு விளக்கம் கூற நான் தகுதி வாய்ந்தவன் அல்ல என்றே கருதுகிறேன். என் சொந்த வாழ்க்கையின் மூலம்தான் அதை நான் விளக்க முடியும். எழுத்து மூலம் ஹிந்து சமயத்தை நான் விளக்க முடியாவிடில், கிறிஸ்தவ சமயத்துடன்

அதை நான் ஒப்பிடுவதும் இயலாத காரியம். எனவே, நான் செய்யக் கூடியது ஒன்றுதான். அதாவது, நான் ஏன் ஓர் ஹிந்துவாக இருக்கிறேன் என்பதை நான் என்னால் இயன்றவரையில் சுருக்கமாகக் கூற முடியும்.

பரம்பரையின் செல்வாக்கில் எனக்கு நம்பிக்கை உண்டு. எனவே, நான் ஓர் ஹிந்து குடும்பத்தில் பிறந்ததால், நான் ஹிந்துவாக இருந்து வருகிறேன். எனது தார்மிக உணர்ச்சிக்கோ அல்லது ஆன்மிக வளர்ச்சிக்கோ ஹிந்து சமயம் முரணாக இருப்பதை நான் காண்பேனாயின், அதை நிச்சயமாக நிராகரித்து விடுவேன். ஆனால், அதைப் பரிசீலனை செய்ததில், எனக்குத் தெரிந்த எல்லா சமயங்களுக்குள்ளும் ஹிந்து சமயம் ஒன்றுதான் மிகவும் சகிப்புத்தன்மை வாய்ந்தது என்பதை நான் அறிந்து கொண்டிருக்கிறேன். அதில் கண்மூடித்தனமான பிடிவாதத்திற்கு இடமில்லை. இதுதான் என் மனத்தை மிகவும் கவர்ந்திருக்கிறது. ஹிந்து சமயம், தன்னைப் பின்பற்றுவோர் சுய கருத்தை வெளியிடுவதற்கு மிகவும் தாராளமாக இடம் கொடுக்கிறது. ஹிந்து சமயம் தனித்து நிற்க விரும்பும் ஒரு மதம் அல்ல. ஹிந்து சமயவாதிகள் மற்ற எல்லா சமயங்களுக்கும் மரியாதை காட்டுவதுடன், மற்ற சமயங்களைப் போற்றவும், அவற்றில் உள்ள நல்ல அம்சங்களை யெல்லாம் எடுத்துக் கொள்ளவும் ஹிந்து சமயம் இடம் கொடுக்கிறது.

அகிம்சை, எல்லாச் சமயங்களுக்கும் பொதுவானது. என்றாலும், ஹிந்து சமயத்தில்தான் அகிம்சையின் மகோன்னதமான உதாரணங்களைக் காண முடியும். அதில்தான் அகிம்சை நடைமுறையிலும் அனுசரிக்கப்படுகிறது. (ஜைன மதம் அல்லது புத்த மதத்தை ஹிந்து சமயத்திலிருந்து வேறானதாக நான் கருதவில்லை.) மானிடர் மாத்திரமல்ல, உலகில் வாழும் உயிர்ப் பிராணிகள் யாவுமே ஒன்று என்பதில் ஹிந்து சமயத்திற்கு நம்பிக்கை உண்டு. ஹிந்து சமயம் பசுவை வழிபடுவது, ஜீவ கருண்ய மலர்ச்சிக்கே அடிப்படையாகும். எல்லா உயிர்களும் ஒன்று என்பதையும், எனவே எல்லா உயிர்களும் புனிதமானவை என்பதையும் அது செயலில் காட்டுவதாக இருக்கிறது. அந்த நம்பிக்கையின் நேரடியான பலனே, மறு ஜன்மத்தில் உள்ள மகத்தான நம்பிக்கையாகும். மேலும், சத்தியத்தை இடைவிடாது தேடியதன் அற்புதமான பலனாகவே, வர்ணாசிரம தருமம் கிடைத்தது. இதையெல்லாம் பற்றி இக் கட்டுரையில் விளக்கங்கள் கொடுக்க நான் விரும்பவில்லை. ஆனால், ஆதியிலிருந்த பசு வழிபாடும், வர்ணாசிரமமும் இன்று அடியோடு மாறி வெறும் கேலிக்கூத்தாகியிருக்கின்றன என்பதே எனது அபிப்பிராயம் என்று மாத்திரம் கூற விரும்புகிறேன். ஹிந்து சமயத்தில் நான் இருந்து வருவதற்குக் காரணமான சிறந்த அம்சங்கள் என்று எனக்குத் தோன்றியதையே இங்கே மிகவும் சுருக்கமாகக் குறிப்பிட்டிருக்கிறேன்.

—'எங் இந்தியா' – 20—10—1927

பகுதி பதின்மூன்று

# வர்ணாசிரம தருமம்

[ வர்ணாசிரம தருமத்தைப் பற்றிய காந்திஜியின் கட்டுரைகளும் பிரசங்கங்களும் அடங்கிய ஒரு புத்தகத்தை 1934-இல் வெளியிட்டார்கள். 'வர்ணவியவஸ்தை' என்ற தலைப்பில் குஜராத்தி மொழியில் அப் புத்தகம் வெளியாகியது. நவஜீவன் பிரசுராலய மானேஜரின் வேண்டுகோளுக்கிணங்க, அதற்கு காந்திஜி ஒரு முகவுரை எழுதினார். வர்ணாசிரம தருமத்தைப் பற்றி காந்திஜியின் பிற்காலத்திய கருத்துகள் அந்த முகவுரையில் அடங்கியுள்ளன. வர்ணாசிரம தருமத்தைப் பற்றி காந்திஜி எழுதிய கட்டுரைகளும், பிரசங்கங்களும் 'மகாத்மா காந்தி நூல்கள்'-7-ஆவது தொகுப்பில் வெளியாகியிருக்கின்றன. மேற்கண்ட முகவுரையின் மொழி பெயர்ப்பே கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது. ]

1

## வர்ணமும் ஆசிரமமும்

சென்ற பதினைந்து ஆண்டுகளாக, வர்ணாசிரம தருமத்தைப் பற்றி நான் எழுதிய கட்டுரைகள், நிகழ்த்திய பிரசங்கங்கள் எல்லாவற்றையும், இந்த முகவுரையை எழுதுவதற்கு முன் நான் வாசித்திருக்க வேண்டும். எனினும், அவ்விதம் வாசிப்பது சாத்தியமான காரியமாக இல்லை. அவற்றையெல்லாம் என்னால் வாசிக்க முடியாததும் நல்லதுதான். முன்னுக்குப் பின் முரண்பாடு இருக்கக் கூடாது என்பதற்கு நான் ஒருபோதும் அதிக முக்கியத்துவம் கொடுப்பதில்லை. நான் சத்தியத்தைப் பின்பற்றுபவன். எனவே, ஒரு விஷயத்தையொட்டி முன்பு என்ன கூறியிருக்கிறேன் என்பதைப் பொருட்படுத்தாமல், இப்போது அதைப்பற்றி எனது உணர்ச்சியும் எண்ணமும் எப்படி இருக்கின்றன என்பதையே நான் கூறவேண்டும். நான் முன்பு கூறியதற்கும் இப்போது கூறுவதற்கும் எவ்வளவு தூரம் உடன்பாடு இருக்கிறது என்பதைக் கண்டுகொள்ள வேண்டியது வாசகர்களின் கடமையாகும். முன்னர் நான் எழுதியதற்கும் இப்போது எழுதுவதற்கும் முரண்பாடு இருப்பதை அவர்கள் காண்பார்களாயின், நான் முன்பு எழுதியதை அவர்கள் தயக்கமின்றி நிராகரித்துவிட வேண்டும். எனது விவேகம் தெளிவாக ஆக எனது கருத்துகளிலும் தினசரி அனுபவத்தின் பலனாக அதிகத் தெளிவு ஏற்படும். நான் தீர்க்காலோசனையின் மீது வேண்டு

மென்றே அபிப்பிராயத்தை மாற்றிக்கொண்டிருந்தால், அந்த மாறுதல் தெளிவாகத் தெரியும். சிறிது சிறிதாகவும், கண்ணுக்குத் தெரியாமலும் ஏற்பட்டுள்ள அந்த மாறுதலை, ஜாக்கிரதையாக கவனிப்பவர்களே அறிந்துகொள்ள முடியும்.

வர்ணம், ஆசிரமம் என்ற இரண்டு சொற்களும் சேர்ந்தே வர்ணாசிரமம் என்று ஆகிறது. தருமம் என்ற சொல் இரண்டுக்கும் பொதுவானது. எனினும், வர்ணம், ஆசிரமம் என்ற இரண்டு சொற்களும் அநேகமாக தனித்தனியாக உபயோகிக்கப் படுவதில்லை. வர்ணாசிரம தருமம் என்பதற்கு மற்றொரு அரை குறையான பெயரே ஹிந்து சமயமாகும். ஹிந்து என்ற சொல் அந்நியர்களால் உருவாக்கப்பட்டதென்று தெரிகிறது. மற்றெதையும் விட பூகோள அமைப்பை முக்கியமாகக் கொண்டே அந்தச் சொல் ஏற்பட்டிருக்கிறது. ஹிந்துக்கள் அனுசரிப்பதாகக் கூறும் தருமம்தான் (சமயம் அல்லது சட்டம்), வர்ணாசிரம தருமமாகும். ஹிந்துக்களின் தருமம்தான் ஆரிய தருமம் என்று கூறுவதும் சரியாகாது. ஹிந்துக்களோ அல்லது சிந்து பிரதேசத்திற்குக் கிழக்கே வாழ்ந்த மற்றவர்களோதான் தங்களை ஆரியர்கள் என்றும், மற்றவர்களை ஆரியரல்லாதார் என்றும் கூறிக்கொண்டார்கள் என்பதையே ஆரியர் என்ற சொல் குறிக்கிறது. நம்முடைய தருமத்திற்கு இத்தகைய இன முத்திரை வைப்பது தப்பெண்ணத்தை உண்டாக்குவதாக இருக்கிறது என்பதே எனது அபிப்பிராயம். வர்ண, ஆசிரம தருமம் இல்லையெனில் ஹிந்து சமயம் சூன்யமாகிவிடும் என்பதை எல்லோரும் ஒப்புக்கொள்ளுவார்கள். பெரும் பகுதியும் வர்ணாசிரம தருமத்தைப் பற்றிக் குறிப்பிடாத ஸ்மிருதி எதையும் காண்பதே கஷ்டமாகும். மிக மிகப் புராதனமான நமது தரும நூல்களில், அதாவது வேதங்களில், வர்ண, ஆசிரம தருமத்தைப் பற்றிக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. எனவே, தம்மை ஹிந்து என்று கூறிக்கொள்ளும் எவரும் அதை ஆராய்ச்சி செய்யவேண்டியது அவருடைய கடமையாகும். ஆராய்ச்சியின் பலனை அது பலனற்ற வெறும் பூண்டு என்று தோன்றினால், அதை நிராகரித்து விடவேண்டும். அது எல்லோருக்கும் பொதுவான ஒரு தருமம் என்று தோன்றினால், அதைப் பேணிப் பாதுகாத்து, அது ஆதியில் இருந்த தூய்மையான நிலைக்கு அதைப் புனருத்தாரணம் செய்ய வேண்டும்.

ஆசிரம தருமம் சம்பந்தப்பட்ட வரையில் அது பேச்சிலும் சரி, செயலிலும் சரி, மறைந்துவிட்டது. ஹிந்து சமயம் வாழ்க்கையில் நான்கு ஆசிரமங்களை அல்லது கட்டங்களை விதிக்கிறது—பிரம்மச்சாரி (இச்சையை அடக்கும் மாணவர்), கிருகஸ்தர் (குடும்பத்தை நடத்துபவர்), வானப்ரஸ்தர் (குடும்ப வாழ்க்கையிலிருந்து விலகிக் கொள்ளுபவர்), சந்நியாசி (எல்லாவற்றையும் துறந்துவிடுபவர்). தனது வாழ்க்கையின் லட்சியத்தைப் பூர்த்தி செய்ய விரும்பும் ஒவ்வொரு ஹிந்துவும், மேற்கண்ட ஒவ்வொரு கட்டத்தையும் கடந்து செல்லவேண்டும்.

அவற்றில் முதலாவது ஆசிரமமும் மூன்ருவது ஆசிரமமும் இன்று நடைமுறையில் அறவே இல்லை. நான்காவது ஆசிரமம் ஓரளவு பெயருக்காக மாத்திரம் அனுசரிக்கப்படுகிறது. ஆனல், இரண்டாது ஆசிரமம் எல்லோராலும் அனுசரிக்கப்படுகிறது. எனினும், அதுவும் தத்துவ ரீதியாக அல்ல, பெயரளவில்தான் அனுசரிக்கப்படுகிறது.

இன்று நாம் எல்லோரும் கிருகஸ்தர்களாக இருக்கிருேம். கடவுளால் சிருஷ்டிக்கப்பட்ட எல்லா ஜீவராசிகளையும் போல் நாம் சாப்பிடுகிருேம், தண்ணீர் குடிக்கிருேம், இன விருத்தி செய்கிருேம்; அவ்விதமாக நாம் உடல் சம்பந்தமான தருமத்தைப் பூர்த்தி செய்கிருேம். எனினும் ஆன்மிக தருமத்தைப் பூர்த்தி செய்வதில்லை. ஆன்மிக தருமத்தை நிறைவேற்றும் விவாகமான தம்பதிகள் மாத்திரமே கிருகஸ்த ஆசிரம தருமத்தை அனுசரிப்பதாகக் கூற முடியும். வெறும் மிருக வாழ்க்கை நடத்துவோர், கிருகஸ்த ஆசிரம தருமத்தை அனுசரிப்பதாகக் கூற முடியாது. இன்று குடும்பஸ்தர்களின் வாழ்க்கை சுகபோகங்களில் திளைப்பதாக இருக்கிறது. அந்த நான்கு கட்டங்களும் வளர்ச்சிக்கு ஏணிபோலவும், ஒன்றையொன்று சார்ந்ததாகவும் இருக்கின்றன. ஓர் ஆடவரோ அல்லது பெண்ணே முதல் இரண்டு ஆசிரமங்களின் தருமத்தை அதாவது பிரம்மச்சரிய, கிருகஸ்த தருமத்தை நிறைவேற்றிலன்றி, வானப்ரஸ்தம் அல்லது சந்நியாசம் என்ற கட்டத்திற்குப் பாய்ந்துவிட முடியாது. எனவே, ஆசிரம தருமம் இன்று செத்துப்போன ஒரு சட்டமாகிவிட்டது. வர்ண தருமத்தை உயிர்ப்பித்தால் மாத்திரமே, ஆசிரம தருமம் மீண்டும் புத்துயிர் பெறமுடியும்.

வர்ணம் இன்று அமலில் இருந்து வருவதாக நிச்சயமாகக் கூறமுடியும். எனினும், அது சிதைந்த உருவத்திலேயே அமலில் இருந்துவருகிறது. மொத்தம் நான்கு வர்ணங்கள் இருக்கின்றன. ஆனல் இன்ருே, அந்த வர்ணங்கள் எண்ணிக்கையற்ற சாதிகளாகவும், உபசாதிகளாகவும் பிரிந்து கிடக்கின்றன. முதல் மூன்று வர்ணங்களைச் சேர்ந்தவர்கள் தங்களை அந்தந்த வர்ணத்தினர் என்று கூறிக் கொள்ள வெட்கப்படுவதில்லை. ஆனல், நான்காவது வர்ணத்தைச் சேர்ந்தவர்கள் அதாவது சூத்திரர்கள், தங்களுடைய வர்ணத்தை தங்களை அவமதிக்கும் ஒரு பட்டயமாகக் கருதுகிருர்கள்; தங்களுடைய உப சாதி முத்திரையையே பிரகடனம் செய்துகொள்ள விரும்புகிருர்கள்.

ஆனல், முத்திரைகள் ஒரு மனிதனின் நடத்தையை ஒரு போதும் வெளியிடுவதில்லை. ஒரு மனிதன் ஒரு முத்திரையை இறுகப் பற்றிக் கொண்டிருக்கிருன் என்பது, அவன் அதற்குத் தகுதி வாய்ந்தவன் என்பதைக் காட்டுவதாகாது. ஒரு கருப்பு மனிதன், தன்னைச் சிவப்பு மனிதன் என்று திரும்பத் திரும்பக் கூறிக் கொண்டால் கூட, அவன் சிவப்பு மனிதனுகிவிட மாட்டான். அது போலவே, ஒருவன் தன்னை பிராம்மணன் என்று

கூறிக் கொள்ளுவதால் பிராம்மணனாகிவிட மாட்டான். ஒரு பிராம்மணனுக்கு இருக்கவேண்டிய குணங்களைத் தன் வாழ்க்கையில் வெளியிட்டாலொழிய, அவன் பிராம்மணன் என்ற பெயருக்குத் தகுதி வாய்ந்தவனாக மாட்டான். இந்த விளக்கத்தைக் கொண்டு பார்க்கும்போது, இன்று வர்ணம் மறைந்துவிட்டது எனலாம். இன்று நமக்கு ஒரு முத்திரை வேண்டும் என்று நாம் கோரினால், நம்மை நாம் சூத்திரர்கள் என்று கூறிக்கொள்ளலாம். உண்மையில், அந்தப் பெயருக்குக் கூட நாம் உரியவர்கள் அல்ல. ஏனெனில், அந்த வர்ணத்தின் தருமத்தை நாம் அனுசரித்துவரவில்லை. வர்ண தருமம் என்பது ஒருவருடைய பிறப்பின் தருமமாகும். அதை அவர் நிறைவேற்றித் தீரவேண்டியவராக இருக்கிறார். மேலும், அதை நிறைவேற்றுவது நிர்ப்பந்தம் எதுவுமின்றி இதய பூர்வமானதாக இருக்கவேண்டும். அது கௌரவமான அல்லது வெட்கப்பட வேண்டிய ஒரு விஷயம் அல்ல. தருமத்தை, தருமம் என்ற முறையில் இதயபூர்வமாக நிறைவேற்றுவோர் எத்தனை பேர்கள் இருக்கின்றனர்? வேறு வழியில்லாததால் நாம் அதை நிறைவேற்றுகிறோம். வெவ்வேறு வர்ணங்களின் அலுவல்களையெல்லாம் யாராவதோ, எவ்விதமாகவோ நிறைவேற்றி வருகிறார்கள் என்றும், எனவே, வர்ணங்கள் அமலில் இருந்துவருகின்றன என்றும் யாரும் வாதிக்கவேண்டாம். வர்ணத்திற்கும் பிறப்புக்கும் பிரிக்க முடியாத இணைப்பு இராவிட்டாலும், மிகவும் நெருங்கிய தொடர்பு இருந்துவருகிறது. எனவே, வர்ண தருமத்தை நாம் அனுசரித்து வருகிறோம் எனில், நாம் எல்லோரும் நமது மூதாதையர்களின் பரம்பரையான, சம்பிரதாயமான தொழில்களைக் கடமை உணர்ச்சியுடன் பின்பற்றி வருகிறோம் என்பதே அர்த்தமாகும். அவ்விதம் வர்ண தருமத்தை நிறைவேற்றி வருவோரை விரல் விட்டு எண்ணிவிட முடியும். ஒருவருடைய பரம்பரைத் தொழிலின்மூலம் ஜீவனத்திற்கான வருமானம் இயல்பாகக் கிடைக்கிறதெனினும், அது கடமை உணர்ச்சியுடனேயே செய்யப்படுகிறது. உதாரணமாக, பிரம்ம வித்தையை (அல்லது ஆன்மிக உண்மையை) கற்றுக்கொள்ளவேண்டியதும், கற்பிக்கவேண்டியதும் ஒரு பிராம்மணரின் கடமையாகும். அவரது பிறப்பின் தருமம் அதுதான். எனவே, அவர் வேறு எதுவும் செய்யமுடியாது. இதன் மூலம் அவரது ஜீவனத்திற்கும் வழி ஏற்படுகிறது. எனினும், அதை அவர் கடவுளிடமிருந்து இலவசமாகக் கிடைப்பதாகவே கருதவேண்டும். அதே கடமை உணர்ச்சியுடன் மக்களுக்குப் பாதுகாப்பு அளிக்கவேண்டியது ஒரு க்ஷத்திரியரின் கடமையாகும். மக்களின் சக்திக்கு எவ்வளவு இயலுமோ அதை க்ஷத்திரியர் பெற்றுக் கொண்டு தமது ஜீவனத்தை நடத்தவேண்டும். சமூகத்தின் நலனுக்காக, செல்வத்தை உற்பத்தி செய்யும் தொழில்களில் ஒரு வைசியர் ஈடுபடவேண்டும். அவற்றின் மூலம் கிடைக்கும் வருமானத்தில் தமது சொந்த ஜீவனத்திற்குப் போதுமானதை வைத்துக்கொண்டு, மீதியை அவர் ஏதாவதொரு விதத்தில் சமூகத்திற்கு அளித்துவிட வேண்டும். அதே தொண்டு

உணர்ச்சியுடன் ஒரு சூத்திரர் உடல் உழைப்பு சம்பந்தமான அலுவல்களில் ஈடுபடவேண்டும்.

பிறப்பினாலேயே வர்ணம் நிர்ணயிக்கப்படுகிறது. எனினும், அதற்கான கடமைகளைச் சரிவர நிறைவேற்றி வந்தால் மாத்திரமே ஒருவர் அதில் நிலைத்திருக்க முடியும். பிராம்மணப் பெற்றோர்களுக்குப் பிறந்த ஒருவரே பிராம்மணர் என்று அழைக்கப்படுகிறார். எனினும், அவருக்கு வயது வரும்போது அவரிடம் ஒரு பிராம்மணருக்கு இருக்கவேண்டிய குணங்கள் இராவிடில், அவரை ஒரு பிராம்மணர் * என்று கூற முடியாது. அவர், பிராம்மணத்தன்மையிலிருந்து வீழ்ச்சியடைந்தவர் ஆவார். அதற்கு மாறாக, பிராம்மணராகப் பிறவாமல் பிராம்மணருக்குள்ள குணங்களை வெளியிடுவோர் பிராம்மணர் என்ற முத்திரையை நிராகரித்து விடுவாரெனினும், அவர் பிராம்மணராகவே கருதப்படுவார்.

அவ்விதம் உருவாக்கப்பட்ட வர்ணமானது, மனிதனால் சிருஷ்டிக்கப்பட்ட ஓர் ஏற்பாடு அல்ல; எல்லா இடங்களிலும் மனித குலத்தை ஆட்கொண்டிருக்கும் வாழ்க்கை நியதியே அது ஆகும். அந்த தருமத்தை நிறைவேற்றினால் வாழ்க்கை வாழ்வதற்குத் தகுதிவாய்ந்ததாகி, எங்கும் சாந்தியும் மனத்திருப்தியும் பரவி நிற்கும்; பூசல்களும் பிணக்குகளும் மறைந்துவிடும்; பட்டினியும் வறுமையும் ஒழியும்; அது ஜனத்தொகைப் பிரச்னையைக் கூடத் தீர்த்து நோய்களையும் துன்பங்களையும் அகற்றிவிடும். ஒருவருடைய தருமத்தையும், அவர் செய்ய வேண்டிய கடமையையும் வர்ணம் வெளியிடுகிறது எனில், அது அவருக்கு உரிமை எதுவும் அளிப்பதில்லை. உயர்ந்தவர்-தாழ்ந்தவர் என்ற கொள்கையே வர்ணத்திற்கு முற்றிலும் முரண்பாடானது. எல்லா வர்ணங்களும் சமமானவை. ஏனெனில், ஒவ்வொரு சமூகமும் ஒன்றுக்கொன்று துணையாக இருக்கிறது. ஆனால், படிப்படியாக உயர்ந்தவர்-தாழ்ந்தவர் என்பதை இன்று வர்ணங்கள் காட்டுவதாக இருக்கின்றன. இந்த நிலை, வர்ணங்களின் ஆதி நோக்கத்தையே பயங்கரமான முறையில் பாழ்படுத்துவதாகும்.

கண்டிப்பான தவ முறைகளால் நமது மூதாதையர்கள் வர்ண தருமத்தைக் கண்டுபிடித்தார்கள். தங்கள் சக்திக்கு இயன்றவரையில் அவர்கள் அந்த தருமத்தின்படி வாழவும் முயற்சித்தார்கள். இன்று நாம் அதைச் சிதைத்து, உலகத்தின் ஏளனத்திற்கும் நம்மை ஆளாக்கிக்கொண்டிருக்கிறோம். எனவே, வர்ணாசிரம தருமத்தினால் ஹிந்துக்களுக்கு நாசமே ஏற்படும் என்று ஹிந்துக்களிடையே ஒரு பிரிவினர் எண்ணி, அந்த தருமத்தை அழித்து ஒழித்துவிட தங்களுடைய சக்தி முழுவதையும் உபயோகிப்பதைக் குறித்து ஆச்சரியப்படுவதற்கில்லை. ஆனால், உருத்

* பிராம்மணன் யார் என்பதை விளக்கி புத்தர் பிரான் பின்வருமாறு கூறியிருக்கிறார்: ''ஜடை முடி, உயர்ந்த பிறப்பு, சாதி முதலியவற்றினால் ஒருவன் பிராம்மணனாகிவிட முடியாது. சத்தியத்தையும் தருமத்தையும் பின்பற்றுபவன்தான் பிராம்மணன் ஆவான்''

தெரியாமல் விகாரமாக சிதைவுற்றிருக்கும் இன்றைய வர்ணாசிரம தருமத்தின் விஷயத்தில் எவரும் இரக்கம் காட்டவேண்டிய அவசியமில்லை. அது நிச்சயமாக ஹிந்து சமயத்தையே அழித்துவிடும்.

## (2)

உண்பது, தண்ணீர் குடிப்பது, மணவினைத் தொடர்புகள் முதலியவை சம்பந்தமாக கட்டுப்பாடுகளே இருக்கக்கூடாது என்று நான் ஒரு விநாடி கூடக் கூறவில்லை. நான் யாருடன் இருக்கும்படி நேர்ந்தாலும், எனக்கு எந்த உணவு கொடுக்கப் பட்டாலும் அதைச் சாப்பிடவேண்டியது எனது கடமை என்றும் நான் கருதவில்லை. ஒருவருடைய மனம் போனபடி திருமணம் செய்துகொள்ளுவது, அடக்கமின்மையைத் தவிர வேறு எதுவு மில்லை. கண்டிப்பான கட்டுப்பாடுதான் வாழ்க்கையின் நியதி யாகும். எனவே, அந்தத் தொடர்புகளும் மற்றவைகளைப்போல் கட்டுப்பாட்டிற்குள் இருக்கவேண்டும். உணவு சம்பந்தமாக விதிகள் இருக்கின்றன என்றே நான் கூறுகிறேன். மனிதன் தன் விருப்பம்போல் எங்கிருந்தாவது வாழ்க்கைத் துணைவியைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளக்கூடாது. எனினும், மணவினை அல்லது சமூகத் தொடர்புகளை யொட்டிய கட்டுப்பாடுகளுக்கும் வர்ண தருமத்திற்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை. வர்ண தருமம் முற்றிலும் வேறு விஷயமாகும். பல்வேறு வர்ணங்களைச் சேர்ந்தவர்கள் ஒருவருக்கொருவர் மணவினைத் தொடர்பு கொள்ளுவதில் நான் யாதொரு குற்றமும் காணவில்லை. எல்லோ ருக்கும் அனுமதிக்கப்பட்ட உணவை, வெவ்வேறு வர்ணத்தின ரும் சேர்ந்து உட்கார்ந்துகொண்டு சாப்பிடுவதிலும் தவறில்லை. மணவினை, சமூகத் தொடர்புகளைப் பொறுத்தமட்டில், பண்டைய நாட்களில் வர்ணங்களுக்கிடையே தடைகளோ, கட்டுப்பாடு களோ இருந்தன என்பதைக் காட்ட யாதொரு சாட்சியமும் இல்லை. உணவு, பானம், மணவினை முதலியவை சம்பந்தமான வெறும் கட்டுப்பாடுகளே வர்ணம் என்று நாம் நிர்ணயித்ததன் விளைவாக, நாம் ஹிந்து சமயத்திற்கே பெருந் தீங்கு இழைத்திருக் கிறோம் என்பதில் எனக்குச் சிறிதும் ஐயமில்லை.

யாரோ ஒரு ஹிந்து தீர்க்கதரிசியே வர்ண தருமத்தைக் கண்டுபிடித்தார். என்றாலும், உலகம் முழுவதும் அதை அனுசரிப்ப தற்கு இடமிருக்கிறது. ஒவ்வொரு சமயத்திற்கும் சில விசேஷ அம்சங்கள் உண்டு. எனினும், அது ஒரு கொள்கையையோ அல்லது விதியையோ வெளியிட்டால், அது எல்லோரும் அனுசரிப் பதற்குப் பொருத்தமாக இருக்கவேண்டும். வர்ண தருமத்தைப் பற்றிய எனது கருத்து இதுதான். அதை இன்று உலகம் அலட் சியம் செய்யலாம். எனினும், வருங்காலத்தில் அதை உலகம் ஒப்புக்கொள்ளும்படியாகவே இருக்கும்.

அதைப் பற்றி எனது சுருக்கமான விளக்கம் இதுதான்: ஒவ்வொருவரும் தமது மூதாதையரின் தொழிலைப் பின்பற்றுவது

தான் தருமமாகும், கடமையாகும். வர்ணம் என்பதன் பொருள் இதுதான். எனினும், அந்தத் தொழில் மூலாதாரமான ஒழுக்கத்திற்கு முரணின்றி இருக்கவேண்டும். அந்தத் தொழிலைப் பின்பற்றுவதன் மூலமே அவர் தமது ஜீவனத்திற்கான தொகையைச் சம்பாதித்துக் கொள்ளவேண்டும். அவர் செல்வம் திரட்ட முற்படக் கூடாது. தமது ஜீவனத்திற்குத் தேவையானது போக, மீதியை மக்களின் நலனுக்காக அர்ப்பணம் செய்யவேண்டும்.

நான்கு வர்ணங்களும் உடலின் நான்கு உறுப்புகளாக வேதங்களில் வர்ணிக்கப்பட்டுள்ளன. இதைக் காட்டிலும் சிறந்த, பொருத்தமான உவமை இருக்கமுடியாது. அவை ஓர் உடலின் உறுப்புகளாயின், அவற்றில் ஒன்றுக்கொன்று உயர்ந்ததென்றோ அல்லது தாழ்ந்ததென்றோ எப்படிக் கூறமுடியும்? உடலின் உறுப்புகளுக்குப் பேசும் சக்தி இருந்து, அவை ஒவ்வொன்றும் மற்றவைகளை விடச் சிறந்ததென்றும், உயர்ந்ததென்றும் கூறிக்கொண்டால், உடல் சீர்குலைந்து விடும். அதுபோலவே, உயர்ந்தவர்—தாழ்ந்தவர் என்ற புற்று நோயை நிலைத்திருக்கும்படி செய்ய முற்படுவோமாயின், மக்கள் சமுதாயமும், மானிட வர்க்கமும் சீர்குலைந்துவிடும். இன்று பல்வேறு துன்பங்களுக்கும், குறிப்பாக சமூகக் கலகங்களுக்கும் உள்நாட்டுப் பகைக்கும் இந்தப் புற்று நோய்தான் ஆணிவேராகும். வர்ண தருமத்தை அனுசரித்தாலன்றி, அந்தக் கலகங்களையும் பகையையும் ஒழிக்கமுடியாது என்பதை மிக மிக அற்ப அறிவு படைத்தவர்கள் கூட அறிந்துகொள்ளுவது கஷ்டமல்ல. தனது பிறப்பிற்குரிய தருமத்தைக் கடமை உணர்ச்சியுடனும், தொண்டு உணர்ச்சியுடனும் ஒவ்வொருவரும் நிறைவேற்ற வேண்டும் என்றே வர்ண தருமம் விதிக்கின்றது. அதை நிறைவேற்றுவதன் பலனாக ஜீவனத்திற்கான சம்பாத்தியம் கிடைக்கிறதெனினும், கடமையை நிறைவேற்றுவதுதான், வர்ண தருமத்தின் முக்கிய அம்சமாகும். மானிட வர்க்கத்தில் பெரும்பாலோர் அந்த தருமத்தை சரிவர அனுசரித்து வந்தால் முரண்பாடான ஏற்றத் தாழ்வுகள் தீர்ந்து, வேற்றுமையில் சமத்துவம் உண்டாக இடம் ஏற்படும். மந்திரி, வக்கீல், டாக்டர், சக்கிலியர், தச்சர், தோட்டி, சிப்பாய், வியாபாரி, குடியானவர், ஆன்மிக போதகர் முதலியோரின் தொழில்கள் யாவும் அப்போது சமமான கௌரவம் வாய்ந்தவையாக இருக்கும். அத்தகைய சிறந்த லட்சிய நிலை ஏற்படும்போது, மற்ற மூன்று வர்ணத்தினரும் எஜமானர்களைப் போல் சூத்திரர்கள் மீது ஆதிக்கம் செலுத்தும் கொடிய விபரீதத்திற்கு இடம் இராது; க்ஷத்திரியர்களும் வைசியர்களும் தங்களுடைய மாளிகைகளில் சுகபோகங்களை அனுபவித்து வரமாட்டார்கள்; பிராம்மணர் தமது ஆசிரமத்தில் வசிப்பதுடன் திருப்தியடையமாட்டார்; சூத்திரர்கள் மற்றவர்களுக்காக உழைத்துக் கொண்டு குடிசையில் வாழ்ந்துக்கொண்டிருக்க மாட்டார்கள். வர்ண தருமம் செத்துவிட்டது என்பதையே இன்றைய குழப்படியான நிலை காட்டுகிறது.

மேலே குறிப்பிட்ட சிறந்த லட்சிய நிலை இந்தியாவில் எப்போதாவது ஏற்பட்டதா? எப்போது ஏற்பட்டது என்பது பற்றி எனக்குத் தெரியாது. எனினும், அந்த லட்சிய நிலை எளிதில் அடையக்கூடியது என்பதும், அது ஹிந்துக்களுக்கு மாத்திரமல்ல, மானிட வர்க்கம் முழுவதற்குமே ஏற்றது என்பதுமே எனது உறுதியான அபிப்பிராயமாகும்.

அத்தகைய ஓர் அமைப்பின் கீழ், சொத்துக்களின் சொந்தக்காரர்கள் தங்களுடைய சொத்துக்களை சமூகத்தின் தரும சொத்துக்களாகக் கருதி வருவார்கள். யாரும் அந்த சொத்துக்களுக்கு சொந்த உரிமை கொண்டாட முடியாது. மன்னர், தமது அரண்மனையை ஜனங்களின் சொத்தாகவே கருதி வருவார். ஜனங்களின் நலனுக்காக உபயோகிப்பதற்கு மாத்திரமே மன்னர் மக்களிடமிருந்து வரி வசூல் செய்வார். அவரது வாழ்க்கைக்கு எவ்வளவு தேவையோ அதைக் காட்டிலும் அதிகமாக வைத்துக் கொள்ள அவருக்கு உரிமையில்லை. மற்றவை மக்களைச் சேர்ந்தது; மக்களுக்காக மாத்திரமே அவை செலவு செய்யப்படவேண்டும். அவர் மக்களிடமிருந்து வசூல் செய்யும் வரித் தொகைகளை மன்னர் என்ற முறையில் தமது திறமையினாலும், யுக்தியினாலும் பன்மடங்கு பெருக்கி அவை திரும்பவும் மக்களுக்குக் கிடைக்கும் படி செய்வார்.

அதுபோலவே வைசியரும் மக்களின் தருமகர்த்தாவே ஆவார். சமூகத்தில் யாருக்காவது சலுகை காட்டுவதாயின், அந்தச் சலுகைக்கு உரியவர் சூத்திரர்தான். அவர்தான் தொண்டு உணர்ச்சியுடனும், கடமை உணர்ச்சியுடனும் உடலினால் உழைத்து வேலை செய்கிறார். அவருக்கு, தமக்குச் சொந்தம் என்று சொல்லக்கூடிய சொத்து எதுவும் இல்லை. சொந்தக்காரராக இருக்கவேண்டும் என்ற ஆசையும் அவருக்கு இல்லை. உலகமே வணங்குவதற்கு அவர் தகுதி வாய்ந்தவராக இருக்கிறார். அவர் எல்லாருக்கும் எஜமானர்; அதே சமயத்தில் அவர் மாபெரும் ஊழியராகவும் இருக்கிறார். இந்தப் பெருமைகளை அடக்கமும் கீழ்ப்படிதலும் உள்ள சூத்திரர் ஒப்புக்கொள்ளமாட்டார். எனினும், தெய்வங்கள் அவர் மீது அருள் வடிவமான ஆசிகளைப் பொழியும் என்பதில் ஐயமில்லை. ஆனால், இன்றுள்ள சூத்திரர்கள் சம்பந்தப்பட்டவரையில் இவ்விதமெல்லாம் கூறுவதற்கில்லை. அவர்களுக்குச் சொந்தமாக சொத்து இல்லை என்பது உண்மையே. எனினும் சொத்துக்களுக்குச் சொந்தக்காரர்களாக இருக்க வேண்டும் என்ற ஆசை அவர்களுக்கு இருக்கிறது. உடல் உழைப்பையும் தொண்டையும் அவர்கள் மகிழ்ச்சியளிக்கும் கடமையாகக் கருதவில்லை. அவை அவர்களுக்கு வேதனையையே கொடுக்கின்றன. அவர்களின் உடலுக்கு அத்தியாவசியமான தேவைகளைக் கூட அவை திருப்தி செய்யவில்லை. நான் போற்றுவது லட்சியத் தொழிலாளர்களையே. அத்தகைய நிலையை அடைய வேண்டும் என்பதே எனது பேரார்வமாகும். தொழில் புரியும்

இந்தக் கடமை உணர்ச்சி தானுக ஏற்பட வேண்டுமேயன்றி, அதை யார்மீதும் திணிக்கமுடியாது.

மூன்று வர்ணங்கள் இன்று பெயரளவில்தான் இருக்கின்றன. அந்த மூன்று வர்ணங்களைச் சேர்ந்தவர்கள், சூத்திரர்களைக் காட்டிலும் தாங்கள் உயர்ந்த அந்தஸ்தை உடையவர்கள் என்றும், தாங்கள் செய்யவேண்டிய கடமை எதுவும் இல்லை என்றும் எண்ணுகிருர்கள். அத்தகைய நிலையில் மற்றவர்களுடைய உடைமைகளையும் சொத்துக்களையும் கண்டு சூத்திரர்கள் பொருமைப்படுவதுடன், அவற்றில் பங்கு பெறவும் முயற்சிக்கிருர்கள். எனவே, இதைக் குறித்து ஆச்சரியப்படுவதற்கோ அல்லது வருந்துவதற்கோ இடமில்லை. வர்ண தருமத்தைக் கண்டு கொள்ளும்போது, வெளி நிர்ப்பந்தத்திற்கு இடம் இருக்க முடியாது. விருப்பத்துடனும், விசுவாசத்துடனும் அந்த தருமத்தைப் பின்பற்றுவதன் மூலம்தான் உலகம் நிலைத்து நிற்க முடியும்.

போட்டியே வாழ்க்கையின் நியதியென இக்காலத்தில் கருதப்படுகிறது. உலக சாதனங்களை பெரும் அளவுக்கு உடைமைகளாக வைத்துக்கொள்ளுவதே சிறந்தது என்றும் கருதப்படுகிறது. ஒவ்வொருவரும் தமது விருப்பம்போல் எந்தத் தொழிலில் வேண்டுமாயினும் ஈடுபடுவதற்குச் சுதந்திரம் உள்ளவராக இருக்கிருர். எனவே, இக் காலத்தில் வர்ணம்தான் வாழ்க்கையின் தருமம் என்று எடுத்துக் காட்டும் இந்த முயற்சி வெறும் கனவு என்று கருதப்படலாம்; அதை மீண்டும் உயிர்ப்பிக்க முற்படுவது, சிறுபிள்ளைத்தனமான பேதமை என்றும் கருதப்படலாம். எது எப்படியாயினும், அதுதான் உண்மையான 'ஸோஷலிஸம்' என்பது எனது உறுதியான அபிப்பிராயமாகும். கீதை கூறுவதுபோல் அதுதான் ஆன்மிக சமத்துவமாகும். அவ்விதமின்றேல், வேறு எத்தகைய சமத்துவமும் சாத்தியமல்ல. அந்த தருமத்தை அனுசரிப்பது, அது எவ்வளவு அற்பமாயினும், அதை அனுசரிப்பவருக்கும், மானிட வர்க்கத்திற்குமே நன்மை பயக்கும்.

நான் இன்னும் ஒரு விஷயத்தைக் கூறலாம். அதாவது, வர்ணங்கள் நான்கே என்ருலும், அத் தொகை மாற்ற முடியாதது அல்ல என்பதே எனது கருத்து. வருங்கால அமைப்பில் அத் தொகை அதிகமாக இருக்கலாம். அல்லது நாலுக்கும் குறைவாக இருக்கலாம். முக்கியமான விஷயம் என்னவெனில், ஒருவர் பிறவித் தொழிலை அதாவது தமது பரம்பரைத் தொழிலைப் பின்பற்றுவதன் மூலம், ஜீவனத்திற்குப் போதுமானதைத்தான் சம்பாதிக்க முற்படவேண்டும்; அதற்குமேல் அதிகமாக சம்பாதிக்க முயற்சி செய்யக்கூடாது என்பதுதான்.

—'ஹரிஜன்' – 28—9—1934

# 2

# வர்ணத்தின் குழப்ப நிலை

ஒரு வங்காளி எழுதியுள்ள நீண்ட கடிதத்திலிருந்து பின்வரும் பகுதிகளைக் கொடுக்கிறேன் :

"தேசத்தின் சில பாகங்களில் தீண்டாமை இயக்கமானது, பிராம்மணீயத்தையும், அதன் சம்பந்தமான எல்லாக் கொள்கைகளையும் கண்டித்து அற்பத்தனமாகவும், கடுமையாகவும் பிரசாரம் செய்யும் இழி நிலையை அடைந்திருக்கிறது. இதைக் கண்டு நீங்கள் வேதனை அடைவீர்கள். பொது மக்களிடையே பிராம்மண சமூகத்தின் மதிப்பைக் குறைப்பதற்காக தப்பெண்ணத்தை உண்டாக்கும் அரை உண்மைகளையும், மனமறிந்த பொய்களையும் வெகு அக்கறையுடன் பரப்பி வருகிறார்கள். தீண்டாமை வழக்கத்தை, பிரத்தியேகமாக பிராம்மணர்கள் மாத்திரம்தானா பின்பற்றி வருகிறார்கள்? அவர்களைப் போலவே, அதே அளவுக்கு மற்ற சாதி ஹிந்துக்களும் அவ்விஷயத்தில் குற்றவாளிகள் அல்லவா? சாத்திரங்கள் எல்லாம் பிராம்மணர்களால் சிருஷ்டிக்கப்பட்டவை என்ற கூற்றை ஒப்புக்கொண்டாலும் கூட, இன்று இந்தியாவின் சில பாகங்களில் அனுசரிக்கப்பட்டு வரும் வெறித்தனமான தீண்டாமை முறையை சாத்திரங்கள் விதிக்கின்றன என்பதற்கு என்ன ருசு இருக்கிறது?

"இன்றைய தீண்டாமை எதிர்ப்பு இயக்கத்தின் வெற்றிக்கு, பிராம்மணர்கள் மிகப் பெரும் அளவுக்கு தங்கள் பங்கைச் செய்திருக்கிறார்கள் என்பது உண்மையல்லவா? மேலும், ஆலயப் பிரவேச மசோதாக்களையொட்டி, இன்று முட்டுக்கட்டை முறைகளைக் கையாண்டுவரும் கனம் பொருந்திய எம்.எல்,ஏ-க்களில் பெரும்பாலோர் பிராம்மணர்கள் அல்ல என்பதும் உண்மை அல்லவா? அப்படியிருக்க, பிராம்மணர்களுக்கு எதிராக இந்த வசை மாரி ஏன் எழுந்திருக்கிறது? தீண்டாமைப் பீடையினால் ஏற்பட்டுள்ள மோசமான நிலையை மற்றவர்களைக் காட்டிலும் பிராம்மணர்களே நன்கு உணர்ந்திருக்கிறார்கள் அல்லவா?"

நம் நாட்டில் பிராம்மண எதிர்ப்பு இயக்கமானது சில ஆண்டுகளாக நடந்துவருகிறது. தீண்டாமை இயக்கம் தோன்றுவதற்கு நீண்ட காலத்திற்கு முன்பே பிராம்மண எதிர்ப்பு இயக்கம் ஆரம்பமாகிவிட்டது. அதன் சம்பந்தமாக பத்திரிகைகளிலும், சஞ்சிகைகளிலும் வெளியான விவரங்களைத் தவிர, பிராம்மணர்களை எதிர்த்து கடுமையாகவோ, அல்லாமலோ எவ்விதத் தாக்குதல்களையும் நான் பார்க்கவில்லை. அத்தகைய தாக்குதல்களுக்கும் தீண்டாதார் சங்க ஊழியர்களுக்கும் எவ்வித சம்பந்தமும் இல்லை என்பது நிச்சயம். தீண்டாமை எதிர்ப்பு இயக்கம், பிராம்மணீயத்தை கீழ்த்தரமாகவும், கடுமையாகவும் தாக்கும் பிரசாரமாக இழிநிலையை அடைந்திருக்கிறது என்பதை அறிய நான் வேதனை அடைவேன் என்று இந்த அன்பர் கூறியிருப்பது முற்றிலும் சரிதான். எனவே, அவர் கூறியுள்ள கடுமையான

புகாரை ருசுப்பிக்கும் சாட்சியம் அவரிடம் இருந்தால், அதை எனக்குத் தெரிவிக்கும்படி அவரை நான் கேட்டிருக்கிறேன். அது எப்படியாயினும், பிராம்மணீயத்தைப் பற்றியும், பிராம்மணர்களைப் பற்றியும் எனது சொந்தக் கருத்தை மீண்டும் வற்புறுத்திக் கூறுவதற்கு, இந்தக் கடிதம் எனக்குச் சந்தர்ப்பம் அளித்திருக்கிறது.

கலப்பற்ற ஞானமே பிராம்மணீயம் என்பது எனது நம்பிக்கை. பிரம்மத்தை அதாவது கடவுளை அறிந்துகொள்ள அந்த ஞானம் வழிகாட்டியாக இருக்கிறது. நான் அத்தகைய கருத்து உள்ளவனாக இராவிட்டால், என்னை நான் ஓர் ஹிந்து என்றே கூறிக்கொள்ள முடியாது. எனினும், மனிதர் குலத்தைச் சேர்ந்த மற்றவர்களைப் போலவே பிராம்மணர்கள் எல்லோரும், பிராம்மணீயத்தின் உண்மையான பிரதிநிதிகளாக இருக்கவில்லை. ஆனால், உலகத்திலுள்ள எல்லா சமூகங்களுக்குள்ளும், அறிவை அதாவது சத்தியத்தைத் தேடுவதற்காக தங்களுக்குச் சொந்தமான எல்லாவற்றையும் தியாகம் செய்தவர்களில் பிராம்மணர்களுடைய சத விகிதம்தான் அதிகமாக இருக்கும் என்பதை நான் நம்பித்தான் தீரவேண்டும். ஹிந்து சமயத்தைத் தவிர வேறு எதிலும் இத்தகைய முறை இருப்பதாகத் தெரியவில்லை. அதாவது, தெய்விக ஞானத்தை பிரத்தியேகமாக நாடுவதற்காகவும், தாங்களாக வலுவில் ஏழ்மையை மேற்கொள்ளுவதற்காகவும் தலைமுறை தலைமுறைகளாக ஒரு பிரிவினரை ஒதுக்கி வைத்துள்ள முறை, ஹிந்து சமயத்தில் மாத்திரமே இருக்கிறதென நான் அறிகிறேன். தங்களுக்குத் தாங்களே விதித்துக்கொண்டுள்ள அத்தகைய உயர்ந்த நிலையை பிராம்மணர்கள் பாதுகாத்து வரவில்லை என்பது தனித்த முறையில் அவர்கள் மாத்திரம் செய்துள்ள குற்றம் அல்ல. மானிட வர்க்கத்தைச் சேர்ந்த மற்றவர்களைப் போலவே பிராம்மணர்களும் தவறு செய்யும் இயல்பு உடையவர்கள் என்பதையே அவர்களுடைய குற்றம் குறைகள் உள்ள நிலை ருசுப்பிக்கிறது. எனவே, தெய்விக நூல்கள் என்று கூறப்படும் புத்தகங்களில் ஊழல்கள் பிரவேசித்து விட்டன. அதனால் பிராம்மணர்களை ஆட்கொண்டுள்ள சிறிதளவும் தன்னலமற்ற விதிகளின் பக்கத்தில், அவர்களுடைய இனத்திற்கு உதவியாக இருப்பதற்காகச் சிருஷ்டிக்கப்பட்டுள்ள சுயநல விதிகளையும் காண்கிறோம். எனினும், தெய்விக நூல்களில் உள்ள ஊழல்களையும், சுயநல நோக்கத்துடன் கூடிய இடைச் செருகல்களையும் எதிர்த்து எழுந்தவர்கள் பிராம்மணர்கள்தான். அவர்களே, தங்களிடத்திலும் சமூகத்திலும் உள்ள தீமைகளைக் களைந்து சுத்தம் செய்ய அடிக்கடி பெருமுயற்சி செய்தனர்.

பிராம்மணீயத்தில் எனக்கு மகத்தான பக்தியும், பிராம்மணர்களிடத்தில் அந்தரங்க மதிப்பும் உண்டு என்பதை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். பிராம்மணர்கள் என்று கூறப்படுவோர் இன்று சீர்திருத்த இயக்கத்தை எதிர்ப்பதும், சந்தேகத்திற்கு இடமில்லாத அவர்களுடைய திறமையை எதிர்க்கட்சிக்கு ஆதரவாக

உபயோகிப்பதும் சோககரமான காட்சியாகவே எனக்குத் தோன்றுகிறது. ஆனால், பிராம்மணர்களாகப் பிறந்தவர்களா லேயே இன்று சீர்திருத்த இயக்கம் நடத்தப்படுகிறது. அந்த பிராம்மணர்கள் தங்களுடைய பிறப்பைக் குறித்து இறுமாப்பு அடையவில்லை. இந்த உண்மைதான் எனக்கு ஆறுதல் அளிப்ப தாக இருக்கிறது; இதைக் கண்டுதான் பாரபட்சமற்ற ஒவ்வொரு ஹிந்துவும் ஆறுதல் அடையவேண்டும். தீண்டாமைக்கு எதிராக பயபக்தியுடன் வேலை செய்வோரின் தொகையைக் கணக்கு எடுத்தால், யாதொரு ஊதியமும் பெருமலோ, அல்லது உயிர் வாழ்வதற்காக மாத்திரம் போதிய ஊதியத்துடனே தொண்டு புரிவோரில் பெரும்பாலோர் பிராம்மணர்கள்தான் என்பது தெரிய வரும். எனினும், ஒரு பிரிவினர் என்ற முறையில் பிராம்மணர்கள் இழிவான நிலையையே அடைந்திருக்கிறுர்கள் என்பதை நான் ஒத்துக்கொள்ளுகிறேன். அவர்கள் இழிநிலையை அடையாமல் தங்களுடைய தொழில் முறைப்படி வாழ்ந்து வந்திருந்தால், ஹிந்து சமயம் இன்றுள்ள தாழ்ந்த நிலைக்கு வந்திராது. பிராம்மணர்கள் ஒழுங்கான முறையில் வாழ்க்கையை நடத்தி வந்தும் கூட, ஹிந்து சமயம் இன்றுள்ள நிலைக்கு வந்திருக்கிறது என்று கூறமுடியாது. அவ்விதம் கூறினல் அது முரண்பாடான ஒரு கூற்றேயாகும். ஏனெனில், பிராம்மணர்கள்தான் தெய்விக ஞானத்தின் உண்மையான காவலர்கள் என்று நம்பும்படி அவர்கள் நமக்குக் கற்பித்திருக்கிறுர்கள்; தெய்விகமான ஞானம் இருக்கும் இடத்தில் பயத்திற்கோ, கொடிய வறுமைக்கோ, உயர்ந்தவர்-தாழ்ந்தவர் என்ற வேற்றுமைக்கோ, பேராசைக்கோ, பொருமைக்கோ, போருக்கோ, கொள்ளைக்கோ, இவை போன்ற மற்ற விபரீதங்களுக்கோ இடமில்லை என்றும் பிராம்மணர்கள் நமக்குக் கற்பித்திருக்கிறுர்கள். பிராம்மணீயம் வீழ்ச்சியடைந்து விட்டதால், தன்னுடன் ஹிந்துக்கள் அடங்கிய மற்ற எல்லா சமூகங்களையும் தாழ்ந்த நிலையை அடையும்படி அது செய்து விட்டது. பிராம்மணீயம் புத்துயிர் பெருவிடில், ஹிந்து சமயம் அழிந்துவிடும் என்பதில் எனக்கு எள்ளளவும் சந்தேகம் இல்லை. பிராம்மணீயம், அதாவது ஹிந்து சமயம் புத்துயிர் பெற்றுளது என்பதற்கு, தவறு ஏற்படுவதற்கே இடமில்லாத சோதனை என்னவெனில், தீண்டாமையை வேருடன் களைந்து ஒழித்து விடுவதுதான். எவ்வளவுக்கு ஹிந்து தரும நூல்களை நான் அதிக மாக ஆராய்ச்சி செய்கிறேனே, எவ்வளவுக்கு எல்லா விதமான பிராம்மணர்களுடன் நான் அவற்றைப்பற்றி அதிகமாக விவாதிக் கிறேனே, அவ்வளவுக்கு தீண்டாமை ஹிந்து சமயத்தில் உள்ள மாபெரும் களங்கம் என்பதை நான் அதிகமாக உணர்ந்திருக் கிறேன். அந்தரங்கத்தில் கெட்ட எண்ணம் எதுவும் இராத, சத்தியத்தை நாடுவதில் ஈடுபாடுள்ள, தங்களுடைய கருத்தைக் கூறுவதற்காக யாதொரு ஊதியத்தையும், நன்றியைக் கூட எதிர் பார்க்காத மிகுந்த அறிஞர்களான பல பிராம்மணர்கள், மேற் கண்ட என்னுடைய உறுதியான அபிப்பிராயத்தை பூரணமாக ஆதரித்திருக்கிறுர்கள். ஆனல், இன்று பிராம்மணர்கள், க்ஷத்திரி

யர்கள், வைசியர்கள், சூத்திரர்கள் என்பதெல்லாம் வெறும் பட்டங்களாகவே இருக்கின்றன. நான் அறிந்துள்ள, பத்திரிகையில் நான் விளக்கிக் கூறிவந்துள்ள வர்ணமானது இன்று முற்றிலும் குழப்பமான நிலையை அடைந்திருக்கிறது. எனவே, எல்லா ஹிந்துக்களும் தாங்களாகவே வலுவில் தங்களை சூத்திரர்கள் என்று கூறிக்கொள்ளவேண்டும் என்பதே எனது விருப்பமாகும். பிராம்மணீயத்தின் உண்மையை ருசுப்பிப்பதற்கும், உண்மையான தருமம் மீண்டும் புத்துயிர் பெறுவதற்கும் ஒரே வழி அதுதான். எல்லா ஹிந்துக்களையும் சூத்திரர்கள் என்று குறிப்பிடுவதால், விவேகம், அதிகாரம், செல்வம் எதுவும் மறைந்துவிடாது. அவையெல்லாம் ஒரு பிரிவினரின் சமயத் தொண்டிற்காக அல்ல, சத்தியம், மானிட வர்க்கம் இவற்றின் தொண்டிற்காக உபயோகிக்கப்படும். எப்படியிருந்தாலும், தீண்டாமையை எதிர்த்து நான் போராடி வருவதற்கும். அந்தப் போரில் நான் என்னையே அர்ப்பணம் செய்து கொண்டிருப்பதற்கும் முக்கிய காரணம், மானிட வர்க்கத்தை முற்றிலும் புனருத்தாரணம் செய்யவேண்டும் என்ற ஆர்வமேயாகும். அத்தகைய எண்ணம் ஒரு வெறும் கனவாக இருக்கலாம்; கிளிஞ்சலை வெள்ளி என்று நினைப்பது போல் ஒரு பொய்த் தோற்றமாக இருக்கலாம். ஆனால், நான் அதை அப்படி நினைக்கவில்லை. ரொமெயின் ராலண்ட் கூறியதைப் போல், "லட்சியத்தை அடைவதில் வெற்றி அடங்கியில்லை; அலுப்பு சலுப்பின்றி பிடிவாதத்துடன் லட்சியத்தை நாடிச் செல்லுவதில்தான் வெற்றி அடங்கியிருக்கிறது."

—'ஹரிஜன்' – 25—3—1933.

# 3

# சாதி ஒழியவேண்டும்

**சா**திப் பிரச்னை சம்பந்தமாக கோவிந்த ராவ் மத்கௌகார் எழுதியிருந்த கடிதத்திற்கு காந்திஜி அளித்த பதிலின் விவரம் கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது :

வேதங்களில் குறிப்பிடப்பட்டுள்ள வர்ணாசிரம தருமத்தில் எனக்கு நம்பிக்கை உண்டு. எல்லோருக்கும் முற்றிலும் சமமான அந்தஸ்து உண்டு என்பதை அடிப்படையாகக் கொண்டதே வர்ணாசிரம தருமம் என்பது எனது அபிப்பிராயமாகும். எனினும், ஸ்மிருதிகளிலும் மற்ற நூல்களிலும் இந்தக் கருத்துக்கு முரண்பாடான பகுதிகள் இருக்கின்றன என்பது உண்மையே.

'சாத்திரங்கள்' என்று அச்சிடப்பட்ட நூல்கள் யாவும் தெய்வ வாக்கு அல்ல.

ஒப்புக்கொள்ளப்பட்ட சாத்திர நூல்களின் விளக்கம் விரிவு பெற்று வந்திருக்கிறது. மனிதனின் அறிவையும் இதயத்தையும் போல் அது இனியும் எல்லையின்றி விரிவு பெறும் தன்மை வாய்ந்தது.

சாத்திரங்களில், எல்லோரும் அறிந்த உண்மைகளுக்கும் ஒழுக்கங்களுக்கும் வெளிப்படையாக முரணுக இருக்கும் எதுவும் நிலைத்து நிற்க முடியாது.

சாத்திரங்களில் உள்ள, பகுத்தறிவினுல் வாதிக்கக் கூடிய விஷயம் எதுவும் பகுத்தறிவுக்கு முரணுக இருக்குமாயின், அது நீடித்திருக்கமுடியாது.

சாத்திரங்களில் குறிப்பிடப்பட்டுள்ள வர்ணுசிரமம் இன்று வழக்கத்தில் இல்லை.

தற்போதைய சாதி முறை வர்ணுசிரம தருமத்திற்கு நேர் மாருக இருக்கிறது. பொதுஜன அபிப்பிராயம் எவ்வளவு சீக்கிரமாக அதை ரத்து செய்கிறதோ அவ்வளவுக்கு அதிக நன்மையே ஏற்படும்.

வர்ணுசிரமத்தில், கலப்பு மணத்திற்கும் சமபந்தி போஜனத் திற்கும் தடை இருந்ததில்லை, இனியும் இருக்கக் கூடாது. லாப நோக்கத்துடன் ஒருவர் தமது பரம்பரைத் தொழிலை மாற்றிக் கொள்ளுவதை வர்ணுசிரமம் தடுக்கின்றது. எனவே, தற்போ துள்ள வழக்கம் இரட்டிப்புத் தவருகும். முதலாவதாக, கலப்பு மணம், சமபந்தி போஜனம் சம்பந்தமாக அது கொடுமையான கட்டுப்பாடுகளை ஏற்படுத்தியிருக்கிறது. இரண்டாவதாக, விருப்பப்படி தொழிலை மாற்றிக்கொள்ளும் தாறுமாருன குழப்ப நிலையை அது சகித்துக் கொள்ளுகிறது.

கலப்பு மணத்திற்கும், சம பந்தி போஜனத்திற்கும் வர்ணு சிரமத்தில் தடை எதுவும் இல்லையாயினும், அவ்விஷயமாக நிர்ப்பந்தம் இருக்கக் கூடாது. ஓர் ஆடவரோ, ஒரு பெண்ணே அவரவர் விருப்பப்படி திருமணம் செய்து கொள்ளவோ அல்லது சமபந்தி போஜனம் செய்யவோ உரிமை அளிக்கப்படவேண்டும். வர்ணுசிரம தருமம் அனுசரிக்கப்பட்டு வருமாயின், திருமணம் சம்பந்தப்பட்ட வரையில், அவரவருடைய சொந்த வர்ணத்தில் தான் திருமணம் செய்துகொள்ள வேண்டும் என்ற கட்டுப்பாடு இருப்பது இயற்கையேயாகும்.

நான் பல தடவைகளிலும் திரும்பத் திரும்பக் கூறிவந் திருப்பது போல், பிறப்பினுல் தீண்டாமை என்பது சாத்திரங் களில் இல்லை. எனவே, தற்போதைய தீண்டாமை வழக்கத்தை ஒரு பாவம் என்றும், ஹிந்து சமயத்திற்கு மிகப் பெரிய களங்கம் என்றுமே நான் கருதுகிறேன். தீண்டாமை வாழ்வதாயின்,

ஹிந்து சமயம் செத்துவிடும் என்ற என் கருத்து முன்னரைக் காட்டிலும் அதிக உறுதி பெற்றிருக்கிறது.

சீர்திருத்தக்காரர்கள் முதலில் தங்களுக்குள்ளேயே சாதி ஒழிப்பை அமலுக்குக் கொண்டுவரத் தொடங்கவேண்டும். அவசியமாயின், அவர்கள் சமூக பகிஷ்காரத்தின் விளைவுகளையும் ஏற்றுக் கொள்ளவேண்டும். மிகவும் பலன்தரத்தக்க, அதி விரைவான, சிறிதும் படாடோபமில்லாத, அமைதியான வழி அதுதான். வைதிகர்களைத் தூற்றுவதன் மூலம் சீர்திருத்தம் ஏற்பட்டுவிடாது. சிறிது சிறிதாகவும், கண்ணுக்குத் தெரியாமலும் அந்த மாறுதல் ஏற்படவேண்டும். உயர்ந்த வகுப்பினர் என்று கூறப்படுவோர் தங்களுடைய பீடத்திலிருந்து கீழே இறங்கி வரவேண்டும். அப்போதுதான் அவர்கள் தாழ்ந்த வகுப்பினர் என்று கூறப்படுவோரின் மனதில் நல்லெண்ணத்தை உண்டாக்க முடியும். நகரத்தில் வசிப்போருக்கும் கிராமவாசிகளுக்கும் இடையே, உயர்ந்த வகுப்பினருக்கும் தாழ்ந்த வகுப்பினருக்கும் இடையே உள்ள பிளவை இணைப்பது எவ்வளவு கஷ்டமான அலுவல் என்பதை, கிராமத் தொண்டின் அன்றாட அனுபவமானது காட்டுகிறது. உயர்ந்தவர்-தாழ்ந்தவர் என்ற வேற்றுமை நகரங்கள், கிராமங்கள் இரண்டிலுமே இருந்து வருகிறது.

—'ஹரிஜன்' - 16—11—1935

## 4

# ஹிந்து சமயம் புத்துயிர் பெற வழி

**கேள்வி:** சாதி ஒழிய வேண்டும் என்று நீங்கள் கூறுகிறீர்கள். சாதி ஒழிந்தால், ஹிந்து சமயம் புத்துயிர் பெற்றுவிடுமா? கிறிஸ்தவ சமயம் அல்லது இஸ்லாம் போன்ற முன்னேற்றகரமான சமயங்களுடன் ஹிந்து சமயத்தையும் சேர்த்து நீங்கள் ஏன் பேசுகிறீர்கள்?

**பதில்:** ஹிந்து சமயம் வாழவேண்டுமாயின், சாதி ஒழிய வேண்டும். கிறிஸ்தவ, இஸ்லாம் சமயங்கள் முன்னேற்றகரமானவை என்பதையும், ஹிந்து சமயம் ஸ்தம்பித்து நிற்பது, அதாவது பிற்போக்கானது என்பதையும் நான் நம்பவில்லை. உண்மையில், எந்த சமயத்திலும் திட்டமான முன்னேற்றத்தை நான் காணவில்லை. உலகத்தில் உள்ள சமயங்கள் முன்னேற்றகரமானவையாக இருக்குமாயின், உலகம் இன்றுள்ள சீர்குலைந்த நிலையை அடைந்திராது. கடமை என்ற முறையில் வர்ணத்திற்கு உலகில் இடம் இருக்கிறது. வர்ணம் என்பதைத் தவிர வேறு பெயர்

உபயோகிக்கப்பட்டாலும், எல்லா சமயங்களின் விஷயத்திலும் அதுதான் உண்மையாகும். ஒரு முஸ்லிம் மௌல்வியோ அல்லது ஒரு கிறிஸ்தவப் பாதிரியாரோ, அவரவர் சமயத்தை விளக்கும் திறனைப் பெற்றிருக்கிறார் என்பதற்காகப் பணத்தை எதிர்பார்க்காமல் அவரவர் சமயத்தினருக்கு அவரவர்களுடைய கடமையைப் போதித்து வந்தால், அவர் ஒரு பிராம்மணரே யாவார். மற்றப் பிரிவினர் சம்பந்தப்பட்டவரையிலும் கூட இதுவே உண்மையாகும்.

—'ஹரிஜன்' - 16—3—1947

பகுதி பதினான்கு

# சீக்கிய, ஜைன சமயங்கள்

## 1

## ஹிந்து சமயத்தின் ஓர் அம்சம்

அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தில் கலந்து கொள்வதற்காக சர்தார் மங்கள சிங் பாட்னாவுக்கு வந்திருந்த போது, "எனது புரட்சிக்கார நண்பர்" என்ற தலைப்பில் நான் 'எங் இந்தியா'வில் எழுதியிருந்த ஒரு கட்டுரையைப் பற்றிக் குறிப்பிட்டார். அதில் கிருஷ்ண பரமாத்மாவை நான் பிரமாதமாகப் புகழ்ந்திருப்பதாகவும், ஆனால், குரு கோவிந்த சிங்கை* தவறான வழியில் சென்ற தேசபக்தர் என்று குறிப்பிட்டிருப்பதாகவும், இது பல சீக்கிய நண்பர்களின் மனத்தைப் புண்படுத்தியிருக்கிறது என்றும் அவர் என்னிடம் கூறினார். அவர் குறிப்பிட்ட பகுதிகளையொட்டி எனது கருத்து என்ன என்பதை விரைவில் விளக்கி எழுதும்படியும் அவர் என்னைக் கேட்டிருந்தார். அக்

---

*மேலே குறிப்பிடப்பட்டுள்ள குரு கோவிந்த சிங்கை (1666–1708) ஹிந்துக்களின் ரட்சகர் என்று வரலாறு கூறுகிறது. ஔரங்கசீப்பினால் கொடுமைக்கு உள்ளான ஹிந்துக்களுக்கு, இணையற்ற வீரத்தையும் தன்னலமற்ற தியாக உணர்ச்சியையும் ஊட்டிய பெருமை குரு கோவிந்த சிங்கிற்கு உரியதாகும். மொகலாய சக்கரவர்த்தியாக விளங்கிய ஔரங்கசீப்பின் கொடுங்கோன்மையைச் சகிக்க முடியாத காஷ்மீர் பிராம்மணர்களில் சிலர், தங்கள் துன்பம் தீர உதவி புரியவேண்டுமென்று குரு தேஜ் பகதூரை அணுகினர். குரு தேஜ் பகதூர் அப்போது பாட்னாவில் வாழ்ந்து வந்தார். தாம் அவர்களுக்கு எவ்விதம் உதவி புரிவது என்பதைப் பற்றி சோகத்துடன் அவர் சிந்தித்துக்கொண்டிருக்கையில், அவரது புதல்வனும் ஒன்பது வயதுச் சிறுவனுமான கோவிந்த சிங் தந்தையின் வருத்தத்திற்குக் காரணம் என்ன என்று கேட்டான். 'ஔரங்கசீப்பின் கொடுங்கோன்மைக்குப் பலி கொடுக்க ஒரு தூய்மையான மனிதர் எங்கே கிடைப்பார் என்பதே என் கவலை' என்றார் குரு தேஜ் பகதூர். 'தந்தையே, தங்களைக் காட்டிலும் தெய்விகத் தன்மையும் தூய்மையும் வாய்ந்தவர் யார் இருக்கிறார்?' என்று கேட்டான் சிறுவன்! இவ்விதமாக, ஔரங்கசீப்பின் கொடுமையை எதிர்த்து உயிர்த்தியாகம் ஆரம்பமாயிற்று. ஔரங்கசீப்பை எதிர்த்து நடந்த கடுமையான போராட்டங்களில் கோவிந்த சிங் அவ்விதமாக தமது தந்தை, தாய், தம்முடைய நான்கு புதல்வர்கள் முதலியோரைத் தியாகம் செய்தார். கோழைகளாக இருந்த சீக்கியர்களை வீரர்கள் அடங்கிய சமூகமாகச் செய்தவர் சீக்கியர்களின் 10-ஆவது குருவும் கடைசி குருவுமான குரு கோவிந்த சிங் தான். குரு கோவிந்த சிங்கின் அஞ்சா நெஞ்சத்தையும், ஆண்மையையும், தியாகத்தையும் மெச்சி ஔரங்கசீப் தம்மைச் சந்திக்கும்படி அவருக்கு அழைப்பு அனுப்பியிருந்தார். ஆனால், குரு கோவிந்த சிங் தட்சிணத்தை அடையுமுன் ஔரங்கசீப் காலமாகி விட்டார். சீக்கியரின் சமயமான கல்ஸாவை ஸ்தாபித்த சிறப்பும் குரு கோவிந்த சிங்கிற்கே உரியதாகும்.

கட்டுரையை நான் ஜாக்கிரதையாகவே எழுதியுள்ளேன் என்பதை, கவனமுள்ள வாசகர்கள் அறிந்துகொள்ளலாம். அதில் நான் திட்டவட்டமாக எதுவும் கூறிவிடவில்லை. குரு கோவிந்த சிங் உட்பட தேசீய வீரர்களைப் பற்றிக் கூறப்படும் ஒவ்வொரு வரலாற்றையும் உண்மையென்று நம்புவதாயின், அவர்கள் காலத்தில் நான் வாழ்ந்திருந்தால் அவர்களை யெல்லாம் தப்புவழி காட்டிய தேசபக்தர்கள் என்றே குறிப்பிட்டிருப்பேன் என்று மாத்திரமே நான் கூறியிருக்கிறேன். ஆனால், அவர்களைப் பற்றி நான் எதுவும் முடிவு செய்யக் கூடாது என்றும், அந்த வீரர்களின் விவரமான நடவடிக்கைகளைப் பொறுத்தமட்டில் சரித்திரத்தை நான் நம்புகிறேன் என்றும், அதற்கு அடுத்த வாக்கியத்திலேயே நான் சேர்த்திருக்கிறேன். சீக்கிய குருமார்கள் யாவரும் ஆழ்ந்த சமயப் பற்று உடையவர்கள்,சிறந்த மதபோதகர்கள், சீர்திருத்தக் காரர்கள் என்பதே எனது நம்பிக்கையாகும். அவர்கள் யாவரும் ஹிந்துக்களே. ஹிந்து சமயத்தைப் பாதுகாப்பதற்காகப் போராடிய மாபெரும் வீரர்களில் குரு கோவிந்த சிங்கும் ஒருவர். ஹிந்து சமயத்தைப் பாதுகாப்பதற்காக அவர் வாளையும் உருவினர் என்பதை நான் நம்புகிறேன். எனினும், அவரது நடவடிக்கைகளைக் குறித்து நான் தீர்ப்புக் கூற முடியாது. வாளில் அவருக்கிருந்த நம்பிக்கையைப் பொறுத்த மட்டில், நான் அவரை ஓர் உதாரணமாகக் கொள்ள முடியாது. அக் காலத்தில் நான் வாழ்ந்திருந்தால், இப்போது நான் கொண்டுள்ள கருத்துகளே அக்காலத்திலும் எனக்கு இருந்திருந்தால், நான் என்ன செய்திருப்பேன் என்று எனக்குத் தெரியாது. அத்தகைய ஊகங்களிலும், கற்பனைகளிலும் ஈடுபடுவது நேரத்தை முற்றிலும் வீணாக்குவதாகும். சீக்கிய சமயத்தை ஹிந்து சமயத்திற்குப் புறம்பான வேறு ஒரு சமயமென நான் கருதவில்லை. வைஷ்ணவ சமயத்தைப் போலவே சீக்கிய சமயத்தையும் ஹிந்து சமயத்தின் ஓர் அம்சமாகவே கருதுகிறேன். சீக்கியர்கள் சம்பந்தமாக என் கைக்குக் கிடைத்த புத்தகங்களை யெல்லாம் நான் எராவ்டா சிறையில் இருந்தபோது வாசித்தேன். கிரந்த சாகிபின்* சில பகுதிகளையும் நான் வாசித்தேன். ஆழ்ந்த ஆன்மிக சம்பந்தமான, தார்மிகப் பெருமை வாய்ந்த அதன் தொனி, வாசிப்போரை உயர்த்துவதாக இருக்கிறது. ஆசிரமத்தில் நாங்கள் சேகரித்துள்ள சில கீதங்களில் குரு நானக் இயற்றிய சில கீதங்களும் இருக்கின்றன. எனினும், சீக்கிய சமயம் ஹிந்து சமயத்திலிருந்து முற்றிலும் வேறானது என்று கருதும் சீக்கியர்களுடன் வாக்குவாதத்தில் ஈடுபட நான் விரும்பவில்லை. சீக்கிய சமயம் ஹிந்து சமயத்தின் ஓர் அம்சம் என்று கூறியிருந்தேன் அல்லவா? அவ்விதம் நான் கூறியது தங்களுக்கு வருத்தத்தைக் கொடுத்திருப்பதாக, பாஞ்சாலத்திற்கு நான் முதன் முதலாகச் சென்றிருந்தபோது, ஒரு சில

* கிரந்த சாகிப் என்பது சீக்கியரின் வேத நூலாகும். சீக்கியர்களின் முதலாவது குருவான குருநானக் தேவரே அதை இயற்றியவர். பிற்காலத்தில் அந்த நூல் 10-ஆவது சீக்கிய குருவான குரு கோவிந்த சிங் அவர்களால் பூர்த்தி செய்யப்பட்டது.

சீக்கிய நண்பர்கள் என்னிடம் கூறினர்கள். எனவே அதிலிருந்து அவ்விதம் கூறுவதை நான் நிறுத்திவிட்டேன். எனினும், சீக்கிய சமயத்தைப் பற்றி என்னுடைய அபிப்பிராயத்தைக் கேட்டால், நான் எனது உண்மையான கருத்தைத் தெரிவிப்பதைக் குறித்து சீக்கிய நண்பர்கள் என்னை மன்னிக்க வேண்டும்.

இப்போது கிருஷ்ண பரமாத்மாவைப் பற்றிக் கூற வேண்டும். சீக்கிய குருமார்கள் சரித்திர புருஷர்கள் என்ற முறையிலேயே அவர்களைப் பற்றி நான் குறிப்பிட்டிருக்கின்றேன். அவர்களைப் பற்றி நம்பிக்கையான வரலாறுகளும் இருக்கின்றன. ஆனல், கிருஷ்ண பரமாத்மாவைப் பற்றி அவ்விதம் கூற முடியாது. மகாபாரதத்தில் கூறப்பட்டுள்ள கிருஷ்ணன் எப்போதாவது இருந்தாரா என்பது பற்றி எனக்குத் தெரியாது. எனது கிருஷ்ணனுக்கும் வேறு எந்தச் சரித்திர புருஷருக்கும் எவ்வித சம்பந்தமும் இல்லை. தனது பெருமைக்கு பங்கம் நேர்ந்துவிட்டது என்பதற்காக ஒருவரைக் கொல்லும் கிருஷ்ண னுக்கோ அல்லது ஹிந்துக்களல்லாதவர்கள் சித்திரிக்கும் சிற்றின்பப் பிரியனை இளைஞன் கிருஷ்ணனுக்கோ நான் தலை வணங்க மறுத்துவிடுவேன். எனது கற்பனையில் உள்ள கிருஷ்ண னிடமே எனக்கு நம்பிக்கை உண்டு. அவர்தான் குற்றம் குறை யற்ற அவதார புருஷர், அணுவளவும் அப்பழுக்கற்றவர், கீதை யைச் சிருஷ்டித்தவர், கோடிக்கணக்கானவர்களின் வாழ்க்கையில் தெய்விக மணம் வீசும்படி செய்தவர். மற்ற நவீன சரித்திர நூல் களைப் போல் மகாபாரதமும் ஒரு சரித்திரமே; மகாபாரதத்தில் உள்ள ஒவ்வொரு வார்த்தையும் உண்மையே; கிருஷ்ணன் செய்ததாக மகாபாரதத்தில் கூறப்படும் காரியங்களை அவர் செய்ததும் உண்மையே என்பதெல்லாம் எனக்கு நிரூபிக்கப் பட்டால், கிருஷ்ணன் கடவுளின் அவதாரமே என்பதை நிராகரிக்க நான் தயங்கமாட்டேன். அதற்காக ஹிந்து சமயத்தி லிருந்து என்னை பகிஷ்காரம் செய்வதாக இருந்தால் கூட நான் கவலைப்படமாட்டேன். ஆனல், எனக்கு மகாபாரதம் ஆழ்ந்த கருத்துகள் கொண்ட ஒரு சமய நூலேயாகும். அதில் பெரும் பாலும் உவமைகளே அடங்கியிருக்கின்றன. ஒரு சரித்திர நூலாக அது எழுதப்படவில்லை. நம் உள்ளே ஆதி அந்தமின்றி நடைபெற்றுவரும் போராட்டத்தையே அது வருணிக்கிறது. அதில் உள்ள வருணனைகள் மனத்தைக் கவரும் விதத்தில் அமைந்திருப்பதால், அதில் உள்ளவை உண்மையிலேயே மனிதர் களால் செய்யப்பட்ட காரியங்களாக நம்மை நினைக்கும்படி செய்கின்றன. மற்றும், இன்றுள்ள மகாபாரதத்தை, ஆதியில் இருந்த குற்றம் குறையற்ற மகாபாரதத்தின் நகலாகவும் நான் கருதவில்லை. அதற்கு மாருக, அதில் பல மாறுதல்கள் ஏற்பட் டுள்ளன என்றே நான் எண்ணுகிறேன்.

—'எங் இந்தியா' – 16—1—1935

# 2

# சீக்கிய சமயம் வேறல்ல

சீக்கிய சமயத்திற்கும் ஹிந்து சமயத்திற்கும் யாதொரு வேற்றுமையும் இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. அவை ஒரே சமயத்தின் மாறுபாடான அம்சங்களே யாகும். தேவநாகரி லிபியில் எழுதப்பட்ட கிரந்த சாகிபை நான் வாசித்தபோது, அதை அறிந்து கொள்ளுவதில் எனக்குக் கஷ்டம் எதுவும் இருக்கவில்லை. நானக் சாகிபும் மற்ற சீக்கிய குருமார்களும் இயற்றியுள்ள பல்வேறு பஜனைகளும், வேதங்களிலும் புராணங்களிலும் உள்ள கருத்துகள் கொண்டவையே. எனினும், ஹிந்துக்களிலிருந்து தாங்கள் வேறானவர்கள் என்று சீக்கியர்கள் தங்களை எண்ணிக் கொள்ளுவதை நான் ஆட்சேபிக்கவில்லை.

—'ஹரிஜன்' - 13—7—1947

# 3

# கிரந்த சாகிப்

டில்லி சீக்கியர்கள் அடங்கிய கூட்டம் ஒன்றில் காந்திஜி பேசியபோது சீக்கியர் சமய நூலான கிரந்த சாகிபைப் பற்றிப் பின்வருமாறு குறிப்பிட்டார் :

கிரந்த சாகிப் நூலை நான் மிக்க பக்தியுடன் வணங்குகிறேன். அதில் உள்ள பல பகுதிகள் நம்முடைய தினசரிப் பேச்சில் கலந்திருக்கின்றன. நான் அந்த நூலை வாசித்த வரையில், அது விசுவாசம், வீரம், நீதியும் நியாயமும் இறுதியில் வெற்றி பெற்றே தீரும் என்பதில் அசைக்க முடியாத நம்பிக்கை முதலியவற்றைப் போதிக்கின்றது என்பதே எனது கருத்தாகும்.

—'எங் இந்தியா' – 19—3—1931

# 4

# குரு நானக் ஜெயந்தி

குரு நானக் ஜெயந்தி வைபவத்தை யொட்டி காந்திஜி நிகழ்த்திய பிரசங்கத்தின் சில பகுதிகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன :

இன்று காலை பாவா பச்சிதார் சிங் என்னிடம் வந்து, குரு நானக் ஜெயந்தி வைபவத்திற்கு நான் வரவேண்டும் என்று வற்புறுத்தினர். அங்கே ஆடவர்களும், பெண்களுமாக ஒரு லட்சம் பேருக்கு மேல் கூடியிருக்கிறார்கள் என்றும், அவர்களில் பெரும்பாலோர் மேற்கு பாகிஸ்தானிலிருந்து வந்த துரதிருஷ்ட சாலிகளான அகதிகள் என்றும் அவர் என்னிடம் கூறினர். அவரது அழைப்பை ஏற்க நான் தயங்கினேன். ஏனெனில், பல சீக்கியர்களும் என்னிடம் அதிருப்தி அடைந்திருக்கிறார்கள் என்று எனக்குத் தோன்றியது. எனினும், நான் கூட்டத்திற்கு வந்து நான் சொல்ல விரும்புவதைச் சொல்ல வேண்டும் என்று பாவா சாகிப் வற்புறுத்தினர். நானும் ஒப்புக்கொண்டேன். ஒரு தாய் தன் குழந்தைகளுக்கு அடிக்கடி கசப்பான மாத்திரைகளைக் கொடுப்பது போலவே, நானும் கசப்பாகத் தோன்றும் விஷயங்களைக் கூறித்தான் ஆகவேண்டும் என்று எண்ணினேன். உண்மையில், அவ்விதம் நான் கூறுவது உங்களுடைய நன்மைக்காகத்தான். என் தாயார் எனக்கு அடிக்கடி கசப்பான மருந்துகளைக் கொடுப்பது வழக்கம். எனினும், என் தாயின் மடியில் நான் அடைந்த ஆறுதலை நான் வேறு எங்கும் காணமுடியாது. இதுவரையில் நான் உங்களிடம் என்ன கூறியிருந்தாலும் அதைக் குறித்து நான் வருந்தவில்லை. உங்களுடைய இதய பூர்வமான நண்பன் என்ற முறையிலும், ஊழியன் என்ற முறையிலுமே நான் உங்களிடம் பல விஷயங்களைக் கூறியுள்ளேன். சர்தார் தத்தர் சிங்கின் மகன், நான் இருக்கும் இடத்திற்கு வந்திருக்கிறார். தத்தர் சிங்கை நீங்கள் ஒருவேளை அறிந்திருக்கலாம். கிழக்கு பஞ்சாபில் அவர் தனக்கிருந்த சொத்துக்களையெல்லாம் அடியோடு இழந்துவிட்டார். அவர் ஏராளமான நிலங்களுக்கும் நூற்றுக்கணக்கான அருமையான கால்நடைகளுக்கும் சொந்தக்காரராக இருந்தார். மாண்ட்காமெரியில் இருந்த ஏராளமான உறவினர்கள், அன்பார்ந்த நண்பர்கள் முதலியோரையும் அவர் இழந்துவிட்டார். எனினும், அவருக்கு நேர்ந்த துர்ப்பாக்கியத்தைக் குறித்து அவர் ஒரு சொட்டுக் கண்ணீர்கூட விடவில்லை என்பதை உங்களுக்குக் கூற நான் மகிழ்ச்சியடைகிறேன். அதற்காக, முஸ்லிம்களின் மீதும் அவர் துவேஷம் கொள்ளவில்லை. நீங்கள் அவருடைய உதாரணத்தைப் பின்பற்ற வேண்டுமென நான் விரும்புகிறேன். ஒரு சீக்கியர் 1,25,000 மனிதர்களுக்குச் சமமானவர் என்று கருதப்படுவதாக சீக்கிய நண்பர்கள் என்னிடம் கூறியிருக்கிறார்கள். அத்தகைய வீரமும் தீரமும் இன்று எங்கே போயின? சிறுபான்மையோரான முஸ்லிம்கள் உங்களிடையே பத்திரமாக வசிக்க முடியாத அவ்வளவு மோசமான நிலைமை ஏற்பட்டுவிட்டதா?

பாகிஸ்தானில்தான் விஷமம் ஆரம்பமாயிற்று என்பதை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். ஆனல், ஹிந்துக்களும், கிழக்கு பாகிஸ்தானிலும் சுற்றுப்புற ஜில்லாக்களிலும் உள்ள முஸ்லிம்களும் அந்த விஷமத்தைப் பின்பற்றி நடக்கத் தயங்கவில்லை.

வாளை எப்படி உபயோகிப்பது என்பதை சீக்கியர்கள் அறிவர். ஆனால், ஹிந்துக்களுக்கு அவ்வளவு தைரியமில்லை. ஹிந்துக்களுக்கும் சீக்கியர்களுக்கும் உள்ள வேற்றுமை இதுதான்.

இந்தச் சுபதினத்திலிருந்து உங்களுடைய வாழ்க்கையில் ஒரு புது அத்தியாயம் ஆரம்பமாகட்டும். டில்லியிலிருந்து முஸ்லிம்களை விரட்டும் மானக்கேடு இன்றிருந்து நின்று விடட்டும். சாந்தினி சௌக்கில் எப்போதும் ஹிந்துக்கள், சீக்கியர்கள், முஸ்லிம்கள் முதலியோர் ஏராளமாக இருப்பார்கள். ஆனால், இன்று எங்கள் மோட்டார் அவ்வழியாக வந்துகொண்டிருந்தபோது, ஒரு முஸ்லிம் வழிப்போக்கரைக் கூட நான் பார்க்கவில்லை. சிறுபான்மையோரான முஸ்லிம்கள் இந்தியா முழுவதும் பரவலாக இருந்து வருகிறார்கள். அவர்களைக் கண்டு நாம் பயப்படும்படியான அவ்வளவு மோசமான நிலைமை ஏற்பட்டு விடவில்லை என்பது நிச்சயம். முஸ்லிம்களிடையே யாராவது துரோகிகள் இருப்பார்களாயின், அவர்களைச் சமாளிப்பதற்கான போதிய பலம் நமது அரசாங்கத்திற்கு இருக்கிறது. குழந்தைகளுக்கோ, பெண்களுக்கோ அல்லது கிழவர்களுக்கோ துன்பம் இழைக்க நாம் வெட்கமடைய வேண்டும். ஒழுங்காக அமைக்கப்பட்டுள்ள நீதிமன்றத்தினால் குற்றவாளி என்று தீர்ப்பு கூறப்படும் வரையில், ஒவ்வொருவரையும் நிரபராதி என்றே கருதவேண்டும்.

அத்தகைய விபரீதமான செயல்கள் பழங்கதையாகி விடும் என்றே நான் தீவிரமாக நம்புகிறேன். கிர்பானை* புனிதமான ஒரு சின்னமாகக் கருதவேண்டும். திக்கற்றவர்களையும் நிரபராதிகளையும் பாதுகாக்கவே அது உபயோகிக்கப்படவேண்டும். சீக்கியர்களின் 10-ஆவது குரு, வாளை உபயோகித்தார் என்பதில் சந்தேகமில்லை. எனினும், நான் அறிந்தவரையில், பலவீனர்களைத் துன்புறுத்துவதற்காக அவர் அதை உபயோகிக்கவில்லை. அவர், தனக்குத் தானே பல கட்டுப்பாடுகளை விதித்துக் கொண்டிருந்தார். அவரிடம் புகழ்பெற்ற பல முஸ்லிம் சீடர்கள் இருந்தார்கள். நானக் சாகிபிலிருந்து ஒவ்வொரு குருவிடத்திலும் அவ்வாறே முஸ்லிம் சீடர்கள் இருந்தனர். முஸ்லிம்கள் உள்பட பல்வேறு சமயங்களையும் சேர்ந்தவர்கள் உங்களுடைய உண்மையான நண்பர்களாகும்போதுதான், உங்களுடைய தைரியமும் வீரமும் ருசுவாகும்.

போதை தரும் பானங்கள், அபின் முதலியவை, கூத்து, விபசாரம் முதலிய மற்றுமுள்ள பல ஒழுக்கக் கேடுகளுக்கும் நாம் அடிமைகளாகி விடுகிறோம். ஆனால், சீக்கிய குருமார்களையும் கிரந்த சாகிபையும் பின்பற்றுவோருக்கு அவை சிறிதும் ஏற்றவையல்ல. உங்களுடைய இதயங்களைத் தூய்மையாக வைத்துக் கொள்ளும்படி கிரந்த சாகிப் சாட்சியாக உங்களை நான் கேட்டுக்

*கிர்பான் என்பது சீக்கியர்கள் தங்கள் சமய விதியின்படி எப்போதும் இடையில் வைத்துக்கொண்டிருக்கும் வாள்.

கொள்ளுகிறேன். அவ்விதமாயின், மற்ற எல்லா சமூகங்களும் உங்களைப் பின் பற்றுவதை நீங்கள் காண்பீர்கள்.

—'ஹரிஜன்' - 7—12—1947

# 5

# ஏன் இந்த வெறுப்பு?

**கேள்வி :** கள்ளங் கபடமற்ற ஜைனர்கள் உங்களை ஒரு ஜைனராகவே கருதுகிறார்கள். அவ்விதம் அவர்கள் கருதுவதைக் குறித்து நீங்கள் வெட்கப்படவுமில்லை. அப்படியிருந்தும் கூட, 'ஹரிஜன்' பத்திரிகையில் மகாவீரரைப்* பற்றி நீங்கள் வேண்டுமென்றே ஒரு வார்த்தைகூடக் குறிப்பிடாமல் தவிர்த்து வருகிறீர்கள். உங்களைப் போன்ற ஒரு மகாத்மா இவ்விதம் செய்வது நியாயமாகுமா ?

**பதில் :** ஓர் அன்பரின் கேள்வியை என் சொந்த வார்த்தைகளில் சாரமாகக் கொடுத்திருக்கிறேன். இதிலிருந்து, அசல் கேள்வி எப்படி இருக்கும் என்பதை வாசகர்கள் ஊகித்துக் கொள்ள முடியும். நான் ஜைன சமயத்தைச் சேர்ந்தவன் அல்ல என்ற குற்றச்சாட்டை நான் ஒப்புக் கொள்ளுகிறேன். தங்களை ஜைனர்கள் என்று கூறிக் கொள்ளும் பலரையும் விட நான் மகாவீரரைப் பற்றி அதிகமாகத் தெரிந்து கொண்டுள்ள ஒரு பக்தன் எனலாம். எனினும், நான் மகா

* வர்த்தமான மகாவீரர் (கி மு. 599-527) புத்தருக்கு முன் வாழ்ந்தவர் என்று தெரிகிறது. புலன்களை அடக்குவதில் அவர் விசேஷ சக்தியுடையவர் என்று புகழ் பெற்றதால், அவருக்கு 'ஜின்' என்ற பெயர் வழங்கிவந்தது. அதன் காரணமாகவே அவரைப் பின்பற்றியவர்களுக்கு ஜைனர்கள் என்ற பெயர் ஏற்பட்டது. புத்தரைப் போல் மகாவீரரும் ராஜ குடும்பத்தில் பிறந்த க்ஷத்திரியர் ஆவார். எனினும், அவர் உலக வாழ்க்கையை வெறுத்து, சிறந்த துறவியாக விளங்கியதாகவும், அப்போதுதான் புலன்களைக் கட்டுப்படுத்தும் மகத்தான சக்தி அவருக்கு ஏற்பட்டதாகவும் வரலாறு கூறுகிறது.

மகாவீரர் ஒரு புதிய சமயத்தை ஸ்தாபிக்கவில்லை. அவரது காலத்திற்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்பே ஜைன சமயம் தோன்றிவிட்டது. அவருக்கு முன் ஜைன சமயத்தைச் சேர்ந்த 22 முனிவர்கள் இருந்தார்கள். அவர்கள் யாவரையும் காட்டிலும் பார்சுவநாத் (800 கி. மு.) என்ற ஜைன முனிவர்தான் மிகப் பிரபலமாக விளங்கினார். எனினும், ஏற்கனவே அமலில் இருந்து வந்த ஜைன சமயத்தில் மகாவீரர் பல சீர்திருத்தங்களைச் செய்தார். பக்தியையும், தூய்மையையும், ஒழுக்கத்தையும் மகாவீரர் அதிகமாக வற்புறுத்தினார். ஜைனர்கள் கடவுளை மறுக்கின்றார்கள். எனினும், ஆன்மா உண்டு என்பதை ஒப்புக் கொள்கிறார்கள். தங்களுக்குத் தாங்களே உயிர்த்தியாகம் செய்துகொள்ளுவதை அவர்கள் ஒரு புண்ணியமாகக் கருதுகிறார்கள். ஜைன சமயத்தைச் சேர்ந்த சிந்தனையாளர்கள் பல அபூர்வமான தத்துவ நூல்களை எழுதியுள்ளனர்.

வீர சுவாமியின் ஒரு பக்தன் அல்ல எனில், அதனால் அவருக்கோ அல்லது அவரது பக்தர்களுக்கோ யாதொரு நஷ்டமும் ஏற்பட்டுவிடாது; நான்தான் நஷ்டம் அடைந்தவனாவேன். யாரை நாம் பக்தியுடன் வணங்குகிறோமோ அவர்களிடம் நம்மைச் சுற்றியுள்ளவர்கள் அலட்சியமாக இருப்பார்களாயின், அதைக் குறித்து கோபம் அடைவதன் மூலம் நாம் நமது பலவீனத்தையே வெளிப்படுத்துகிறோம் என்றே நான் கூறுகிறேன்.

— 'ஹரிஜன்' - 30—6—1946

பகுதி பதினைந்து

# புத்த சமயமும் பிரம்ம ஞானமும்

## 1

## ஹிந்து சமயத்துடன் தொடர்பு

காந்திஜி 1929-ஆம் ஆண்டில் ரங்கூனுக்கு விஜயம் செய்த போது, ரங்கூன் கார்ப்பொரேஷன் அவருக்கு ஓர் உபசாரப் பத்திரம் வாசித்து அளித்தது. அப்போது காந்திஜி பேசியதன் ஒரு பகுதியே கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது :

"இலங்கையில் உள்ள பல பௌத்தர்கள் இயல்பாகவே, என்னையும் அவர்களில் ஒருவனாகக் கருதுகிறார்கள். நான் ஹிந்துக்களுக்கெல்லாம் ஓர் ஹிந்து என்று எவ்வளவோ ஆட்சேபித்தும்கூட அவர்கள் என்னை பௌத்த சமயத்தைச் சேர்ந்த ஒருவனாகவே கொண்டாடுகிறார்கள். நான் அவர்களில் ஒருவன் என்று அவர்கள் கூறுவதை ஒரு கௌரவமாகவே கருதுகிறேன். இலங்கை, பர்மா, சீனா, ஜப்பான் முதலிய நாடுகளில் உள்ள பௌத்தர்கள், என்னையும் அவர்களைச் சேர்ந்த ஒருவனாகவே கருதுவார்களாயின், அந்த கௌரவத்தை நான் யாதொரு ஆட்சேபணையுமின்றி நிச்சயமாக ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டும். ஏனெனில், ரோமன் கத்தோலிக்கர் சமயத்திற்கும் ப்ராடெஸ்டண்ட் சமயத்திற்கும் எவ்வளவு நெருங்கிய தொடர்பு உண்டோ அவ்வளவு நெருங்கிய தொடர்பு ஹிந்து சமயத்திற்கும் புத்த சமயத்திற்கும் உண்டு என்றே நான் கருதுகிறேன். அதைக் காட்டிலும் கூட, ஹிந்து சமயத்திற்கும் புத்த சமயத்திற்கும் உள்ள தொடர்பு இன்னும் அதிக ஒளியும் பலமும் பொருந்தியதாகும்."

—'எங் இந்தியா' - 28—3—1929

# 2

# புத்த பகவான்

புத்த பகவானிடம்* எனக்கு மகத்தான பக்தி உண்டு. சமாதானத்தை உபதேசித்த மகான்களில் அவரும் ஒருவர். அவரது உபதேசம் அன்பை அடிப்படையாகக் கொண்டதாகும்.

—'ஹரிஜன்'-20—8—1938

# 3

# புத்தரின் உபதேசம்

கொழும்புவில் உள்ள வித்தியோதயா கல்லூரியில் அகில இலங்கை பௌத்தர்கள் சங்க காங்கிரஸ் நடந்தபோது காந்தி

* பிற்காலத்தில் கௌதம புத்தர் (623-543 கி. மு.) என்று உலகப் புகழ் பெற்ற கௌதமர் அல்லது சித்தார்த்தர் கிறிஸ்தவ சகாப்தத்திற்கு முன் ஆருவது நூற்ருண்டில் இமய மலைச் சாரலில் கபிலவஸ்து நகரத்தையடுத்த உலும்பினி வனத்தில் ராஜ குடும்பத்தில் பிறந்தார். அவர் பிறந்த பின் அவரது தாயான மாயா காலமாளுள். எனவே தந்தையே கௌதமரை மிகவும் செல்வமாக வளர்த்து வந்தார். எத்தனையோ போக போக்கியங்களை அனுபவிப்பதற்கு வாய்ப்பும் வசதியும் இருந்தும் கூட, கௌதமரின் மனம் அவற்றை நாடவில்லை. அவர் சிறு பையனாக இருந்த போதே அவரது நெருங்கிய உறவினனான தேவ தத்தனிடமிருந்து ஒரு பறவையைக் காப்பாற்றினார். சிறு வயதிலிருந்தே பிராணிகளிடத்தில் அவருக்கு இருந்த அன்புக்கும் இரக்கத்திற்கும் அது ஓர் உதாரணமாகும். அவர் சிறு வயதிலேயே சிறந்த கல்வியறிவு பெற்று மேதாவியாகத் திகழ்ந்ததுடன், இளவரசர் என்ற முறையில் ஆயுதங்களைக் கையாளுவதிலும் நிபுணராக இருந்தார். யசோதரா என்ற ஓர் அழகான இளவரசியை அவர் மணம் புரிந்து கொண்டார். அவருக்கு ஒரு மகனும் பிறந்தான். எனினும், அவர் தன் மனைவி, குழந்தை உள்பட எல்லோரையும் துறந்து வெளியேறி தவ வாழ்க்கையை மேற் கொண்டார். பல ஆண்டுகள் காடுகளில் அலைந்து திரிந்த பின், இறுதியாக புத்த கயாவில் உள்ள போதி மரத்தின் அடியில் அவருக்கு மெய் ஞானம் உதயமாயிற்று பிறகு அவர் தமக்கு உதயமான ஞானத்தை மக்களிடையே உபதேசம் செய்வதற்காகப் புறப்பட்டார். புத்த பகவான் என்று அழைக்கப்பட்ட அவரது யாத்திரையின் போது பதினுபிரக்கணக்கானவர்கள் அவரது உபதேசங்களைப் பின்பற்றத் தொடங்கினர். நேர்மையான சிந்தனையின், நேர்மையான செயலின் அவசியத்தை புத்தர் வற்புறுத்தினுர். எனினும் அவரது உபதேசங்களில் அகிம்சையே மூலாதாரமானது. புத்தரைக் காட்டிலும் சிறந்த புரட்சிக்காரரும் சீர்திருத்தக்காரரும் யாருமே இல்லை. மிருக பலியையும், மிகுந்த செலவுடன் செய்யப்படும் சடங்குகளையும் அவர் எதிர்த்துப் போராடினுர். அவர் ஸ்தாபித்த சங்கத்தில் உயர்ந்தவர்-தாழ்ந்தவர், பிராம்மணர்-தோட்டி என்ற வேற்றுமை ஒழிக்கப்பட்டது. அவரது உபதேசங்களைக் கொண்ட புத்த சமயம் இலங்கை, இந்தோனேஷ்யா, திபேத், சீனு, சயாம், கொரியா, ஜப்பான் முதலிய பல நாடுகளுக்கும் பரவியது. கௌதம புத்தர் மறைந்து இருநூறு ஆண்டுகள் கழித்து, அசோக சக்கரவர்த்தி கலிங்கத்துப் போரில் ஏராளமானவர்களைக் கொன்று தாம் பெற்ற மகத்தான வெற்றியைக் கண்டு மனம் பதறி, யுத்த முறையையே கைவிட்டு, புத்தர் உபதேசித்த அன்பு வழியைப் பின்பற்றிய சரித்திரப் புகழ் பெற்ற சம்பவம் எல்லோரும் அறிந்ததே.

ஜிக்கு ஓர் உபசாரப் பத்திரம் வாசித்தளித்தனர். அப்போது காந்திஜி நிகழ்த்திய பிரசங்கத்தின் விவரம் பின் வருமாறு:

நீங்கள் எனக்கு உபசாரப் பத்திரம் வாசித்து அளித்ததற்காக நான் இதயபூர்வமாக உங்களுக்கு நன்றி செலுத்துகிறேன். உங்களுடைய உபசாரப் பத்திரத்தின் மொழி பெயர்ப்பை நீங்கள் முன்னதாகவே என்னிடம் கொடுத்தது உங்களுடைய மரியாதையையே காட்டுகிறது. அதற்காக உங்களை நான் பாராட்டுகிறேன். எனக்கு இப்போது ஆசிகள் வழங்கிய குருமார் தலைவருக்கும் மற்ற குருமார்களுக்கும் நான் நன்றியுடையவனாக இருக்கிறேன். நான் பெற்ற ஆசிகளை, எனக்குக் கிடைத்த ஒரு பெரும் பாக்கியமாகவே நான் எப்போதும் கருதிவருவேன். அந்த ஆசிகளுக்குத் தகுதி வாய்ந்தவனாக இருந்துவர நான் எப்போதும் முயற்சித்துவருவேன் என்றும் இங்குள்ள குருமார்கள் யாவருக்கும் உறுதி கூறுகிறேன்.

## நான் ஒரு பௌத்தனா ?

நான் புத்தரைப் பின்பற்றுபவன் என்று எனது மூத்த மகன் என்மீது குற்றம் சாட்டியது உங்களுக்கு ஒருவேளை தெரியாமல் இருக்கலாம். சனாதன ஹிந்து சமயம் என்ற போர்வையில் நான் புத்தரின் உபதேசங்களைப் பரப்பி வருவதாக, இந்தியாவில் உள்ள ஹிந்துக்களில் சிலரும் என்மீது குற்றம் சாட்டத் தயங்குவதில்லை. என் மகனின் குற்றச்சாட்டுகளையும், ஹிந்து நண்பர்களின் குற்றச்சாட்டுகளையும் கண்டு நான் அனுதாபப்படுகிறேன். அத்தகைய குற்றச்சாட்டுகளைக் குறித்து சிற்சில சமயங்களில் நான் பெருமையும் அடைகிறேன். மெய் ஞானத்தைப் பெற்ற புத்த பிரானின் வாழ்க்கையிலிருந்து நான் மகத்தான உத்வேகத்தைப் பெற்றேன் என்று இக் கூட்டத்தின் முன் கூற நான் தயங்கவில்லை. கல்கத்தாவில் நிர்மாணிக்கப்பட்டுள்ள புதிய புத்தர் ஆலயத்தின் வருட விழாவின்போதும் நான் இவ்விதம் கூறினேன். ஸ்ரீ ஏ. தர்மபாலர் அக்கூட்டத்தின் தலைவராக இருந்தார். தாம் விரும்பிய அளவு தமது லட்சியத்திற்கு ஆதரவு கிடைக்கவில்லை என்பதைக் குறித்து அவர் அழுது கொண்டிருந்தார். அவ்விதம் கண்ணீர் விட்டதற்காக அவரை நான் கடிந்து கொண்டேன். பௌத்த சமயம் என்ற பெயரால் நடந்தவை இந்தியாவிற்கு வெளியே துரத்தப்பட்டிருக்கலாம் என்றாலும், புத்தரின் வாழ்க்கையும் அவரது உபதேசங்களும் இந்தியாவிற்கு வெளியே துரத்தப்பட்டுவிடவில்லை என்று நான் அக்கூட்டத்தில் கூறினேன். இச் சம்பவம் மூன்று ஆண்டுகளுக்கு முன் நிகழ்ந்தது. அக்கூட்டத்தில் நான் வெளியிட்ட அந்தக் கருத்தை மாற்றிக் கொள்ளும்படியாக அதன் பின் எதுவும் நேரவில்லை. புத்தருடைய உபதேசங்களின் முக்கிய பகுதி, ஹிந்து சமயத்தின் சாரமான ஓர் அம்சம் என்பதே தீர்க்காலோசனையுடன் கூடிய எனது அபிப்பிராயமாகும். ஹிந்து சமயத்தில் கௌதம புத்தர் மகத்தான சீர்திருத்தத்தை அமலுக்குக் கொண்டுவந்தார். இனி ஹிந்து

இந்தியா அந்தச் சீர்திருத்தத்திலிருந்து பின்வாங்குவது முடியாத காரியம். அவரது எல்லையற்ற தியாகத்தினுலும், மகத்தான துறவினுலும். சிறிதும் மாசற்ற தூய்மையான வாழ்க்கையினுலும் புத்தர், ஹிந்து சமயத்தில் அழிக்க முடியாத அடையாளத்தை விட்டுச் சென்றிருக்கிருர். அந்த மாபெரும் சமய போதகருக்கு ஹிந்து சமயம் என்றென்றும் கடமைப்பட்டிருக்கிறது. நான் கூறப்போகும் விஷயத்திற்காக என்னை நீங்கள் மன்னிப்பீர் களாயின், இவ்விதம் கூற நீங்கள் அனுமதி அளிப்பீர்களாயின், புத்த சமயம் என்று எதை நினைக்கிறீர்களோ அதிலுள்ள அம்சங்களை ஹிந்து சமயம் இணைத்துக் கொள்ளவில்லை; அவை புத்தருடைய வாழ்க்கையின், உபதேசங்களின் முக்கிய அம்சங் கள் அல்ல என்று நான் கூறத் துணிகிறேன்.

## ஹிந்து சமயமும் பௌத்த சமயமும்

புத்த சமயமோ அல்லது புத்தரின் உபதேசங்களோ இந்தியா வில்தான் பூரண பலனை கொடுத்தன என்பது எனது உறுதியான அபிப்பிராயமாகும். அவை பலன் அளிக்காமல் இருந்திருக்க முடியாது. ஏனெனில், புத்தர் ஹிந்துக்களுக்கெல்லாம் ஹிந்து ஆவார். ஹிந்து சமயத்தின் சிறந்த அம்சங்களில் அவர் ஊறித் திளைத்திருந்தார். வேதங்களில் புதையுண்டு, புல் பூண்டுகளால் மறைக்கப்பட்டிருந்த உபதேசங்களில் சிலவற்றிற்கு அவர்தான் உயிரை ஊட்டினுர். வேதங்களில் உள்ள பொன் மயமான சத் தியம், சொற்களாகிய காடுகளால், அர்த்தமற்ற சொற்களால் மறைக்கப்பட்டிருந்தது. அவரது மகத்தான ஹிந்து சக்தி, அவற்றையெல்லாம் வெட்டி வீழ்த்திவிட்டு ஊடுருவிச் சென்று, உண்மையைக் கண்டு கொண்டது. வேதங்களில் உள்ள சில வார்த்தைகளுக்கு புத்தர் புதிய பொருளைக் கண்டார். அவரது தலைமுறையில் வாழ்ந்தவர்கள், அந்த அர்த்தத்தை அறிந்து கொள்ள முடியாதவர்களாக இருந்தார்கள். வேதங்களில் புத்தர் கண்ட உண்மையைப் பரப்புவதற்கு இந்தியா ஏற்ற பூமியாக இருந்தது. புத்தர் சென்றவிடமெல்லாம் அவரைப் பின் தொடர்ந்து ஹிந்துக்கள் அல்லாதார் செல்லவில்லை, அவரை ஹிந் துக்கள் அல்லாதார் சூழ்ந்து கொள்ளவில்லை. வேத தரு மத்தில் திளைத்த ஹிந்துக்களே அவரைப் பின் தொடர்ந்தும் சூழ்ந்து கொண்டும் சென்ருர்கள். ஆனுல், புத்தருடைய உபதேசங்களோ அவரது இதயத்தைப் போல் எல்லாவற்றிற்கும் விரிந்து கொடுப்பதாகவும், எல்லாவற்றையும் தழுவுவதாகவும் இருந்தது. அதனுலேயே, அவரது உடல் மறைந்த பிறகும் அவரது உபதேசங்கள் மறையவில்லை. அவை பூமியில் பிரவாகத்தைப் போல் பல இடங்களிலும் பரவிச் சென்றன. இந்தச் சாதனையை, ஹிந்து சமயத்தின் ஒரு வெற்றி என்றே கூறுவேன். இதற்காக, என்னை புத்தரைப் பின்பற்று கிறவன் என்று கூறுவோர் கூறட்டும். புத்தர் ஹிந்து சமயத்தை நிராகரித்து விடவில்லை; அதன் அடிப்படையையே விரிவாக்கினுர்.

ஹிந்து சமயத்திற்கு அவர் புத்துயிர் அளித்து, புதிய விளக்கம் கொடுத்தார். இங்கே தான் நான் உங்களுடைய மன்னிப்பையும், பெருந்தன்மையையும் கோரும் கட்டம் வருகிறது. அதாவது புத்தரின் உபதேசத்தை இலங்கையிலோ, பர்மாவிலோ, சீனுவிலோ அல்லது திபேத்திலோ உள்ள மக்கள் பூரணமாக கிரகித்துக் கொள்ளவில்லை என்றே நான் உங்களுக்குக்கூற விரும்புகிறேன். என்னிடம் உள்ள குறைபாடுகளை நான் அறிவேன். புத்த தருமத்தில் எனக்கு பாண்டித்தியம் உண்டு என்று நான் கூறிக்கொள்ளவில்லை. நலந்தா வித்தியாலயத்தில் ஒன்பதாவது வகுப்பில் வாசிக்கும் ஒரு பையன் புத்த சமயத்தைப் பற்றிக் கேள்விகள் கேட்டு என்னைத் தோல்வியுறும்படி செய்துவிடலாம். மிகவும் கற்றறிஞர்களான குருமார்களும் மிகவும் கற்றறிஞர்களான பிறரும் அடங்கிய கூட்டத்தில் நான் பேசுகிறேன் என்பதை அறிவேன். எனினும், என் இதயம் எதை நம்புகிறதோ அதை நான் இங்கே பகிரங்கமாகக் கூருவிட்டால், என்னையும் உங்களையும் ஏமாற்றியவன் ஆவேன்.

## கடவுளிடத்தில் நம்பிக்கை

நீங்களும், இந்தியாவிற்கு வெளியே தங்களை பௌத்தர்கள் என்று கூறிக் கொள்ளுவோரும் புத்தருடைய உபதேசத்தில் பெரும் அளவை உண்மையென்று வாழ்க்கையில் ஏற்றுக்கொண்டிருக்கிறீர்கள். ஆனல், உங்களுடைய வாழ்க்கையை நான் பரிசீலனை செய்யும்போது, இலங்கை, பர்மா, சீன அல்லது திபேத்திலிருந்து வரும் நண்பர்களை நான் குறுக்குக் கேள்விகள் கேட்கும் போது, அவர்களிடம் தென்படும் பல முரண்பாடுகளையும் கண்டு நான் குழப்பம் அடைகிறேன். நான் அறிந்த வரையில் புத்தருடைய வாழ்க்கையின் மூலாதாரமான உண்மைக்கும், உங்களுடைய செயலுக்கும் இடையே நான் பல முரண்பாடுகளைக் காண்கிறேன். அதன் சம்பந்தமாக. இப்போது என் மனத்தில் தோன்றிய மூன்று விஷயங்களை உங்களுக்கு மிகச் சுருக்கமாக எடுத்துக் கூறுகிறேன். முதலாவதாக, கடவுள் என்ற சர்வ வியாபியான பரம் பொருளிடம் உள்ள நம்பிக்கையாகும். புத்தருக்குக் கடவுளிடத்தில் நம்பிக்கை இல்லை என்று பௌத்த நூல்கள் பலவற்றிலும் நான் வாசித்திருக்கிறேன். எண்ணிக்கையற்ற தடவைகளில் அவ்விதம் தர்க்கம் செய்யப்படுவதையும் கேட்டிருக்கிறேன். அத்தகைய நம்பிக்கையானது, புத்தருடைய உபதேசத்தின் மூலாதாரமான உண்மைக்கு முரணுக இருக்கிறது என்பதே எனது தாழ்மையான அபிப்பிராயமாகும். கடவுளின் பெயரால் அவரது தலைமுறையில் நடந்த இழிவான காரியங்களை யெல்லாம் அவர் நிராகரித்ததாலேயே, இந்தக் குழப்பம் ஏற்பட்டிருக்கிறது. கடவுளுக்கு வெறுப்பு உண்டு; அவரும் தமது செயல்களைக் குறித்து பின்னர் வருந்துவது உண்டு; பூமியில் உள்ள மன்னர்களைப் போலவே அவரும் கவர்ச்சிகளுக்கும், லஞ்ச ஊழல்களுக்கும் இடம் கொடுப்பவர்; அவரும் குறிப்பிட்டவர்களுக்குச் சலுகை காட்ட

லாம்; -கடவுளைப் பற்றிய இந்த எண்ணங்களையே புத்தர் நிராகரித்தார். மிருக பலியைக் கண்டித்து அவரது ஆன்மா கொதித்தெழுந்தது. கடவுள் என்று கூறப்படும் ஒருவர், தம்முடைய சொந்த சிருஷ்டியான மிருகங்களின் உதிரத்தை விரும்புகிறார் என்ற நம்பிக்கை அவருக்குக் கோபாவேசத்தை உண்டாக்கியது. எனவே, கடவுளை அவர் சரியான ஸ்தானத்தில் நிலைக்கச் செய்து, தாற்காலிகமாக கடவுள் ஸ்தானத்தில் இருப்பதுபோல் தோன்றிய பாசாங்குக்காரரையே அவர் நிராகரித்தார். இந்த உலகில் தார்மிக அரசாங்கம் என்றென்றும் நீடித்திருப்பது என்றும், யாராலும் மாற்ற முடியாதது என்றும் மீண்டும் பிரகடனம் செய்தார். அந்த தார்மிக சட்டம்தான் கடவுள் என்றும் அவர் தயக்கமின்றிக் கூறினார்.

## நிர்வாணம் என்றால் என்ன?

கடவுளின் சட்டங்கள் என்றென்றும் நிரந்தரமாக இருப்பவை, மாற்ற முடியாதவை, கடவுளிடமிருந்தும் பிரிக்க முடியாதவை. இவைதான், கடவுள் முற்றிலும் பரிபூரணமானவர் என்பதைக் காட்டுகின்றன. அதனால்தான், புத்தருக்கு கடவுளிடத்தில் நம்பிக்கை இல்லை என்றும், தார்மிக சட்டத்தில் மாத்திரம்தான் அவருக்கு நம்பிக்கை உண்டு என்றும், பெரும் குழப்பம் ஏற்பட்டிருக்கிறது. கடவுளையே பற்றிய இந்தக் குழப்பத்தின் விளைவாக நிர்வாணம்* என்ற மகத்தான சொல்லை ஒழுங்கான முறையில் அறிந்து கொள்ளுவதிலும் குழப்பம் ஏற்பட்டிருக்கிறது. நிர்வாணம் என்றால் முற்றிலும் அழிதல் என்பது பொருள் அல்ல. புத்தருடைய வாழ்க்கையின் மூலாதார உண்மையை நான் அறிந்த வரையில், நம்மிடத்தில் உள்ள இழிவான குணங்களை யெல்லாம், நம்மிடத்தில் உள்ள தீய ஒழுக்கங்களையெல்லாம், நம்மிடத்தில் உள்ள ஊழல்களையெல்லாம் அடியோடு ஒழித்து விடுவதே நிர்வாணம் என்பதன் பொருளாகும். நிர்வாணம் இருண்ட, கல்லறை அமைதி அல்ல; ஜீவ சக்தியுடன் கூடிய அமைதியாகும், ஆன்மாவின் அழியாத ஆனந்தமாகும்.

## புத்தரின் மாபெரும் கைங்கர்யம்

இந்தியாவிற்கு வெளியில் புத்த சமயத்தைச் சேர்ந்தவர்கள், எல்லா உயிர்களும் புனிதத் தன்மை வாய்ந்தவை என்ற புத்தரின் மூலாதாரமான கொள்கைக்கு மதிப்புக் கொடுப்பதில்லை என்பதே நான் கூற விரும்பும் மூன்றாவது விஷயமாகும். கடவுளை மீண்டும் அவரது நிரந்தரமான ஸ்தானத்தில் புனருத்தாரணம் செய்ததன் மூலம், புத்தர் மானிடவர்க்கத்திற்குச் செய்த கைங்கர்யம் மகத்தானது. எவ்வளவு தாழ்ந்தவையாயினும், எல்லா உயிர்

* நிர்வாணம் என்றால் தன்னைத்தானே அறிந்து கொள்ளுதல் என்று புத்த சமயத்தினர் கூறுகின்றனர். இந்த நிலைதான் சமயப்பற்றும் பக்தியும் நிறைந்த எல்லா பௌத்தர்களும் அடைய விரும்பும் லட்சியமாகும்.

களையும் சமமாக மதித்து நடக்கவேண்டும் என்று உபதேசித்த அவரது கைங்கர்யம் அதைக் காட்டிலும் அதிக மகத்துவம் வாய்ந்தது. அவரது சொந்த நாடான இந்தியாவே, அவர் ஆர்வத்துடன் எதிர்பார்த்த உயர்ந்த நிலையை எட்டவில்லை என்பதை அறிந்துள்ளேன். புத்தருடைய உபதேசங்கள் புத்த சமயமாக மாறி வெளி நாடுகளுக்குச் சென்றபோது, மிருகங்களுடைய உயிர்களின் புனிதத்தன்மையைக் குறித்து ஒரு சாதாரண மனிதர் என்ன கருத்துக் கொண்டிருந்தாரோ அந்தக் கருத்து அங்கேயெல்லாம் பரவவில்லை. இவ்விஷயத்தில் இலங்கையில் உள்ள புத்த சமயத்தின் நம்பிக்கையும் வழக்கமும் என்ன என்பது எனக்கு திட்டவட்டமாகத் தெரியாது. ஆனால், பர்மாவிலும், சீனாவிலும் அது எவ்வித மாக உருவாகியிருக்கிறது என்பதை நான் அறிவேன். குறிப்பாக பர்மாவில், பர்மிய பௌத்தர்கள் ஒரு மிருகத்தைக் கூடக் கொல்ல மாட்டார்கள்; ஆனால், தங்களுக்காக மற்றவர்கள் மிருகங்களைக் கொன்று தங்களுக்கு உணவு தயாரிப்பதை அவர்கள் ஆட்சேபிப்பதில்லை. செயலும், அதன் பலனுமாகிய தவிர்க்கமுடியாத சட்டத்தை வற்புறுத்திய ஒரு சமய போதகர் உலகில் இருந்தார் எனில், அவர் கௌதம புத்தர்தான். அப்படியிருந்தும் இந்தியாவிற்கு வெளியில் உள்ள பௌத்தர்களான எனது நண்பர்கள், தங்களுடைய செயல்களின் பலாபலன்களைத் தவிர்க்கக் கூடுமாயின், தவிர்க்க முற்படுவார்கள்! எனினும், உங்களுடைய பொறுமையை நான் அதிகமாக சோதிக்கக் கூடாது. சில விஷயங்களை நான் மேலெழுந்த வாரியாகவே குறிப்பிட்டிருக்கிறேன். இதை உங்களது கவனத்திற்குக் கொண்டு வரவேண்டியது எனது கடமையென்று நான் நினைத்தேன். நீங்கள் இவ்விஷயத்தை தீர ஆலோசிக்க வேண்டும் என்பதற்காகவே, இதை உங்களிடம் இதய பூர்வமாகவும் பணிவுடனும் கூறியுள்ளேன்.

'எங் இந்தியா' – 24—11—1927

## 4

# ஒரு பௌத்தரின் கேள்விகள்

**கா**ந்திஜி சமீபத்தில் அபட்டாபாத்திற்குச் சென்றிருந்த போது, சிந்திக்கவும் எழுதவும் அவருக்குப் போதிய நேரம் இருந்தது. அவரைச் சந்திக்க வருவோரோ, பேட்டி காண்போரோ அதிகமாக யாரும் இல்லை. இருந்தாலும், அங்கேகூட சிலர் அவரை பேட்டி கண்டு பேசத்தான் செய்தார்கள். சாதாரணமாக அரசியலைப் பற்றியோ இன்றைய முக்கியப் பிரச்னைகளைப் பற்றியோ அவருடன் பேசுவதற்காக யாரும் வரவில்லை. ஆனால், லௌகிக விஷயங்களுக்குப் புறம்பான அசாதாரணமான பிரச்னைகளைப் பற்றி காந்திஜியுடன் பேசவே

வந்தார்கள். அப்பிரதேசத்தில் அத்தகைய பிரச்னைகளைப் பற்றி வாதங்கள் நடப்பது வழக்கம் என்று வரலாறு கூறுகிறது. ஏனெனில் அந்தப் பிரதேசம், பண்டைய காலத்தில் புத்தரின் சீடர்களுடைய காலடிகளால் புனிதமாக்கப்பட்டதாகும். காந்திஜியைப் பேட்டி காண்பதற்காக வந்த நண்பர்களில் ஒருவர், புத்தரைப் பின்பற்றுபவர் என்று தம்மைக் கூறிக்கொண்டார். எனவே, தமது அந்தக் கொள்கை சம்பந்தமான பிரச்னையைப் பற்றி காந்திஜியுடன் வாதித்தார். டாக்டர் பேப்ரி என்ற பெயருள்ள அவர் பண்டைப் பொருள் ஆராய்ச்சி நிபுணர். அவர் பல ஆண்டுகளாக இந்தியாவில் இருந்திருக்கிறார். அவர் பண்டைப் பொருள் ஆராய்ச்சி இலாகாவில் பல வருடங்களாக ஊழியம் செய்திருப்பதுடன், லாகூர் பொருட் காட்சியைப் புனருத்தாரணம் செய்வதற்கும் அவர் உதவியாக இருந்தவர். அவர் ஹங்கேரி நாட்டைச் சேர்ந்தவர். ஏற்கனவே, அவர் காந்திஜியுடன் கடிதப் போக்குவரத்து வைத்துக் கொண்டிருந்தார். காந்திஜிக்காக அவர் அனுதாப உண்ணாவிரதமும் இருந்தது உண்டு. காந்திஜியைப் பார்ப்பதற்கென்றே டாக்டர் பேப்ரி அபட்டாபாத்திற்கு வந்திருந்தார்.

பிரார்த்தனையின் விதமும் அதில் அடங்கியுள்ள விஷயங்களும் அவரது சிந்தனையைக் கிளறின. காந்திஜி எந்த விதமான பிரார்த்தனை செய்கிறார் என்பதை அறிந்துகொள்ள அவர் மிகவும் விரும்பினார். "பிரார்த்தனையினால் தெய்வ சித்தத்தை மாற்ற முடியுமா? அவரது சித்தம் என்ன என்பதைப் பிரார்த்தனையின் மூலம் காணமுடியுமா?"

டாக்டர் பேப்ரி கேட்ட இந்தக் கேள்விகளுக்குப் பதிலாக காந்திஜி கூறியதாவது.

"நான் பிரார்த்தனையில் ஈடுபட்டிருக்கும் போது என்ன செய்கிறேன் என்பதைப் பூரணமாக விளக்கிக் கூறுவது கஷ்டமான காரியமாகும். எனினும், உங்களுடைய கேள்விக்கு விடையளிக்க நான் முயற்சிக்க வேண்டும். தெய்வ சித்தம் மாற்ற முடியாதது. எனினும், தெய்வத் தன்மை உயிருள்ள ஒவ்வொன்றிலும், உயிரற்ற ஒவ்வொரு ஜடப் பொருளிலும் இருக்கிறது. என்னுள் இருக்கும் அந்த தெய்வத் தன்மையைத் தட்டியெழுப்ப நான் விரும்புவதே பிரார்த்தனையின் பொருளாகும். இப்போது அறிவை அடிப்படையாகக் கொண்ட அந்த மன உறுதி இருக்கலாம்; ஆனால், அந்த தெய்வத் தன்மையுடன் ஜீவ சக்தி வாய்ந்த தொடர்பு இல்லை. எனவே, சுயராஜ்யத்திற்காகவோ அல்லது இந்தியாவின் சுயேச்சைக்காகவோ நான் பிரார்த்தனை செய்யும் போது, சுயராஜ்யத்தை அடைவதற்கான போதிய சக்தியை எனக்குக் கடவுள் அருளவேண்டுமென்றே விரும்புகிறேன். எனது பிரார்த்தனைக்குப் பதிலாக, அத்தகைய சக்தியை நான் அடைய முடியும் என்றும் நிச்சயமாகக் கூறுகிறேன்."

"அப்படியாயின், அதை பிரார்த்தனை என்று நீங்கள் கூறுவது நியாயம் அல்ல. பிரார்த்திப்பது என்றால், கெஞ்சிக் கேட்டுக் கொள்வது அல்லது கோருவது என்றே அர்த்தமாகும்" என்றார் டாக்டர்.

**காந்திஜி:** ஆமாம். என்னையே, அதாவது என்னுள் இருக்கும் உயர்ந்த ஒருவரையே, அல்லது உண்மையேயானவரையே நான் கெஞ்சிக் கேட்டுக்கொள்ளுகிறேன். எனவே, எல்லாம் அடங்கிய தெய்வத் தன்மையில் மெய்மறந்து லயித்துவிட வேண்டும் என்ற இடைவிடாத பேரார்வமே பிரார்த்தனை என்று நீங்கள் வர்ணிக்கலாம்.

## தியானமா, கெஞ்சிக் கேட்பதா?

**டாக்டர்:** *இந்த தெய்வத் தன்மையைத் தட்டி யெழுப்புவதற்காகவா நீங்கள் ஒரு பழைய முறையை உபயோகிக்கிறீர்கள்?*

**காந்திஜி:** ஆமாம். ஆயுட்காலம் முழுவதும் அனுசரித்து வந்துள்ள ஒரு வழக்கம் நீடித்து வரத்தான் செய்யும். நான் வெளியிலுள்ள ஒரு சக்தியைக் குறித்து பிரார்த்திக்கிறேன் என்று யாராவது கூறினால், அதை நான் ஆட்சேபிக்க மாட்டேன். நான், எல்லையற்ற அந்த சக்தியின் அணுவைப் போல் மிக மிகச் சிறிய அம்சமேயாவேன். தெய்வத் தன்மையுடன் எனக்குத் தொடர்பு இராவிடில், நான் சூன்யமாகி விடுவதாகவே எனக்குத் தோன்றுகிறது. நான் இதைச் செய்கிறேன், நான் அதைச் செய்கிறேன் என்று நான் சொல்லத் தொடங்கிய உடனேயே, எனது தகுதியின்மையையும் எனது சூன்ய நிலையையும் நான் உணரத் தொடங்குகிறேன். வேறு யாரோ ஒருவர், ஏதோ ஒரு மேலான சக்தி, எனக்கு உதவி புரிய வேண்டியிருக்கிறது என்பதையும் உணருகிறேன்.

**டாக்டர்:** டால்ஸ்டாயும் அவ்விதமேதான் கூறுகிறார். பிரார்த்தனை என்பது உண்மையில், பூரணமான தியானமும், மனம் உருகி ஆன்மாவுடன் ஐக்கியம் அடைவதுமேயாகும். எனினும், சில சமயங்களில் ஒரு குழந்தை தன் தந்தையை மன்றாடிக் கேட்டுக் கொள்வதுபோல் ஒருவர் கடவுளையும் கேட்டுக் கொள்ள முற்படும் தவறைச் செய்துவிடுகிறார்.

**காந்திஜி:** என்னை மன்னியுங்கள். அதை நான் தவறு என்று கூறமாட்டேன். எங்கேயோ மேக மண்டலத்தில் இருக்கும் கடவுளைக் குறித்து நான் பிரார்த்தனை செய்வதாகக் கூறுவது அதிகப் பொருத்தமாக இருக்கும். கடவுள் எவ்வளவுக்கு அதிக தூரத்தில் இருக்கிறாரோ அவ்வளவுக்கு, அவருக்காக நான் ஏங்குவதும் அதிகமாகிறது. சிந்தனையளவில்தான் நான் அவரது சந்நிதியில் இருக்க முடிகின்றது. எனினும்,

ஒளியைக் காட்டிலும் சிந்தனை அதிகமான வேக சக்தி உள்ளது என்பதை நீங்கள் அறிவீர்கள். அந்த நிலையில் எனக்கும் அவருக்கும் இடையே கணக்கிட முடியாதவாறு அவ்வளவு அதிக தூரம் இருந்தாலும், அந்த தூரமானது மறைந்து விடுகிறது. எனவே, கடவுள் வெகு தொலைவில் இருக்கிறார், வெகு சமீபத்திலும் இருக்கிறார்.

## பிரார்த்தனைக்கு கடவுளின் பதில்

**டாக்டர்:** அது நம்பிக்கையைப் பொறுத்த விஷயமாகும். ஆனால், என்னைப் போன்ற சிலருக்கு நுணுக்கமான முறையில் ஆட்சேபிப்பது ஒரு சாபத்தீடாக இருந்து வருகிறது. எனக்கு, புத்தரின் உபதேசத்தைக் காட்டிலும் மேலானது வேறொன்றும் இல்லை; புத்தரைக் காட்டிலும மேலான குருவும் வேறு யாரும் இல்லை. 'நான் என்ன சொல்லு கிறேனோ அதை கண்மூடித்தனமாக நம்பாதே. எந்த சித்தாந்தத்தையும், எந்த நூலையும் தவறே இராதவை என்று ஒப்புக் கொள்ளாதே' என்று உலக சமய போதகர்களில் புத்தர் ஒருவர்தான் கூறினார். என்னைப் பொறுத்தமட்டில் இந்த உலகில் தவறே இராத நூல் ஒன்றுகூட இல்லை. ஏனெனில், தெய்வ சித்தத்தினால் தூண்டப்பட்டதாக இருந்தால்கூட அவை மனிதனால் இயற்றப்பட்டவைதான் அல்லவா? எனவே, பெரிய வெள்ளைச் சிம்மாசனத்தில் உட்கார்ந்து கொண்டு தமது பிரார்த்தனைகளுக்கு செவி கொடுக்கும் ஒரு மகா ராஜாவைப் போல் கடவுள் இருக்கிறார் என்பதை நான் நம்ப முடியாது. எனினும், உங்களுடைய பிரார்த்தனை வேறு நிலையில் இருப்பதைக் குறித்து நான் மகிழ்ச்சி யடைகிறேன்.

அறிஞரான, டாக்டர் பேப்ரி பகவத் கீதையையும் தம்ம பதத்தையும்* பக்தியுடன் வாசிப்பவர். அவ்விரு நூல்களையும் அவர் எங்கு சென்றாலும் தம்முடன் எடுத்துச் செல்லுகிறார். டாக்டரின் மேற்கண்ட தர்க்கவாதத்திற்குப் பதிலாக காந்திஜி கூறியதாவது :

"எனது பிரார்த்தனை வேறு நிலையில் இருக்கிறது என்று நீங்கள் கூறும்போது, நீங்கள் ஓரளவு உண்மையையே கூறியவர்களாகிறீர்கள் என்பதை உங்களுக்கு நினைவூட்டுகிறேன். அறிவை அடிப்படையாகக் கொண்ட எனது உறுதியான கருத்து நிரந்தரமானதல்ல. நிரந்தரமானது என்னவெனில், மிகத் தீவிரமான எனது நம்பிக்கையேயாகும். அதன் காரணமாக, கண்ணுக்குத் தெரியாத சக்தியின் முன் என்னையே நான் மறந்துவிடுகிறேன். எனவே, நான் கடவுளுக்கு ஏதோ செய்தேன் என்பதைக் காட்டிலும் கடவுள் எனக்கு ஏதோ செய்திருக்கிறார் என்பதுதான் அதிக உண்மை

* தம்ம பதம் என்பது புத்தரின் உபதேசங்கள் அடங்கிய நூல்களில் ஒன்று.

யாகும். என் வாழ்க்கையில், நான் மிக மிக ஆர்வத்துடன் எதிர்பார்த்த பல விஷயங்கள் நிகழ்ந்திருக்கின்றன. எனினும், நானாக அவற்றை ஒரு காலத்திலும் சாதித்திருக்க முடியாது. எனது பிரார்த்தனைக்கு பதிலாகவே அவை நிகழ்ந்தன என்று நான் எனது சக ஊழியர்களிடம் அடிக்கடி கூறியிருக்கிறேன். என்னிடத்தில் உள்ள தெய்வத்தன்மையில் நான் எனது அறிவின் உதவியைக் கொண்டு மெய் மறந்து லயித்ததாக நான் எனது சக ஊழியர்களிடம் கூறியதில்லை! 'என்னுடைய கஷ்டம் தீர கடவுள் அருள் புரிந்தார்' என்று நான் கூறுவதே சரியாகும்,எளிதான காரியமுமாகும்."

## கர்மவினை சக்தியற்றது

டாக்டர்: உங்களுடைய கர்ம பலன் காரணமாகவே அவை உங்களுக்குச் சாதகமாக நிகழ்ந்துள்ளன. நீதிதான் கடவுளேயன்றி இரக்கம் கடவுள் அல்ல. நீங்கள் நல்ல மனிதர். எனவே, உங்கள் வாழ்க்கையில் நல்ல விஷயங்கள் நிகழ்ந்தன.

காந்திஜி: அப்படியெல்லாம் ஒன்றுமில்லை. அதுபோல் காரியங்கள் நிகழ்வதற்கு நான் அவ்வளவு நல்லவன் அல்ல. கர்மாவைப்பற்றிய அத்தகைய தத்துவ ஞானத்துடன் நான் சென்றிருந்தால், நான் தோல்வியே அடைந்திருப்பேன். எனது கர்மா என் உதவிக்கு வந்திராது. கர்மாவின் தயவு தாட்சண்யமற்ற விதியில் நான் நம்பிக்கையுடையவன் என்றாலும், நான் பல காரியங்களைச் செய்ய முயற்சி செய்து கொண்டுவருகிறேன். எனது வாழ்க்கையில், ஒவ்வொரு விநாடியும் தீவிர முயற்சியாகவே இருந்துவருகிறது. அது அதிக கர்மாவை உருவாக்கிக் கொள்ளும் முயற்சியே ஆகும்; அதாவது, பழைய கர்ம வினையைத் தகர்த்து, தற்போதைய கர்மாவைப் பெருக்கிக் கொள்ளுவதே. எனவே எனது பழைய கர்ம வினை நல்லதாக இருப்பதால், எனக்கு தற்போது நன்மையே நிகழ்ந்துவருகிறது என்று கூறுவது தவறாகும். சீக்கிரத்தில் பழைய கர்ம வினை தீர்ந்துபோய் விடும். எனவே, பிரார்த்தனையின் மூலம் எதிர்கால கர்ம வினையை நான் உருவாக்கிக்கொள்ள வேண்டியவனாக இருக்கிறேன். கர்ம வினை மாத்திரம் சக்தியற்றது என்பதை உங்களுக்குக் கூறுகிறேன். 'இந்த தீக்குச்சியைப் பற்றவை' என்று எனக்கு நானே சொல்லிக் கொள்ளுகிறேன். எனினும், வெளியிலிருந்து ஒத்துழைப்பு இருந்தாலன்றி, அதை நான் பற்றவைக்க முடியாது. நான் தீக்குச்சியைப் பற்றவைக்குமுன், எனது கை செயலற்றுப் போய்விடுகிறது; அல்லது என்னிடம் ஒரு தீக்குச்சிதான் இருக்கிறது, அல்லது பற்றவைத்ததும் காற்று அதை அணைத்துவிடுகிறது என்று வைத்துக் கொள்ளுவோம். அது தற்செயலாக நேர்ந்ததா

அல்லது அதற்கு கடவுளோ அல்லது மகோன்னத சக்தியோ காரணமா? இந்த இடத்தில் எனது மூதாதையர்களோ அல்லது குழந்தைகளோ கூறுவதையே நானும் கூற விரும்புகிறேன். ஒரு குழந்தையைவிட நான் சிறந்தவன் அல்ல. கற்றறிந்த பண்டிதர்களைப் போலவோ அல்லது பல நூல்களையும் பற்றியோ பிரமாதமாகப் பேச நான் முயற்சிக்கலாம். ஆனல், நமக்கு ஏதாவது துக்கமோ, கஷ்டமோ ஏற்படும் போது நாம் குழந்தைகளைப் போலவே நடந்து கொள்ளுகிருேம்; நாம் அழத் தொடங்குகிருேம்; பிரார்த்தனை செய்கிருேம். அச்சமயத்தில் அறிவை அடிப்படையாகக் கொண்ட நம்பிக்கை நமக்கு ஆறுதலை அளிப்பதில்லை!

## புத்தர் பிரார்த்தனை செய்யவில்லையா?

**டாக்டர்:** மிகுந்த அறிவும் அனுபவமும் உள்ளவர்களுக்கு, கடவுளிடத்தில் உள்ள நம்பிக்கை நம்பமுடியாத ஆறுதலை அளிக்கிறது என்பதையும், அவர்களுடைய ஒழுக்கத்தை உருவாக்குவதற்கு உதவியாக இருக்கிறது என்பதையும் நான் அறிவேன். எனினும், அந்த நம்பிக்கையின்றி வாழக்கூடிய சில சிறந்த ஆன்மாக்களும் இருக்கிருர்கள். அவ்விதம் வாழ்வது சாத்தியம் என்றே புத்த சமயம் போதித்திருக்கிறது.

**காந்திஜி:** ஆனல், புத்த சமயம் என்பது நீடித்த ஒரு பிரார்த்தனையே.

**டாக்டர்:** ஒவ்வொருவரும் அவரவரிடமிருந்தே மோட்சத்தைப் பெற வேண்டுமென புத்தர் கேட்டுக் கொண்டார். அவர் ஒருபோதும் பிரார்த்தனை செய்யவில்லை. அவர் தியானமே செய்தார்.

**காந்திஜி:** உங்கள் விருப்பப்படி அதற்கு என்ன பெயர் கொடுத்தாலும், அது பிரார்த்தனைதான். புத்தரின் சிலைகளைப் பாருங்கள்.

**டாக்டர்:** புத்தரின் சிலைகள் அவரது உருவத்தை உண்மையாக எடுத்துக் காட்டுவதாக இல்லை. புத்தர் காலமான 400 ஆண்டுகளுக்குப் பிறகே அவை உருவாகியுள்ளன.

**காந்திஜி:** நீங்கள் கண்ட புத்தரின் வரலாற்றைத்தான் கூறுங்களேன். புத்தர் பிரார்த்தனைதான் செய்து கொண்டிருக்கிருர் என்பதை நான் நிரூபிக்கிறேன். அறிவை அடிப்படையாகக் கொண்டு நீங்கள் கொடுக்கும் கற்பனை உருவம் எனக்குத் திருப்தி அளிக்கவில்லை. நான்கூட குற்றம் குறையற்ற, பூரணமான விளக்கம் கொடுக்கவில்லை. ஏனெனில், மனத்தில் உள்ள எண்ணத்தை விவரிக்க முடியாது அல்லவா? அது வர்ணனைக்கு உட்படாதது. அதை விவரிக்க முற்படு

வோமாயின், அவநம்பிக்கையைத் தவிர வேறு எதுவும் மிஞ்சாது!

## பணிவுடன் இருங்கள்

டாக்டர்: பிரார்த்தனை செய்ய முடியாதவர்களைப் பற்றி நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்?

காந்திஜி: பணிவை மேற்கொள்ளுங்கள் என்றுதான் அவர்களுக்கு நான் கூறுவேன். புத்தரைப் பற்றிய உங்களுடைய கற்பனையினால் உண்மையான புத்தருக்கு எல்லை கட்டிவிடாதீர்கள். உண்மையான புத்தர் லட்சக்கணக்கான மக்களின் வாழ்க்கையை ஆட்சிபுரிந்தார்; இன்றும் ஆட்சி புரிந்துவருகிறார். பிரார்த்தனை செய்யும் பணிவு அவருக்கு இராவிடில், அவர் அவ்விதம் ஆட்சிபுரிந்திருக்க முடியாது. அறிவைக் காட்டிலும் எத்தனையோ மடங்கு அதிகச் சிறப்பு வாய்ந்த ஏதோ ஒரு தத்துவம் இருக்கிறது. அதுதான் நம்மை, அதுதான் சந்தேகவாதிகளையும்கூட ஆட்சி புரிகின்றது. அவர்களுடைய சந்தேகவாதமும், தத்துவமும் வாழ்க்கையின் நெருக்கடியான கட்டங்களில் அவர்களுக்கு உதவி புரிவதில்லை. அவர்களைக் காப்பாற்ற சிறந்த வேறொன்று, அவர்களுக்குப் புறம்பாக உள்ள ஏதோ ஒன்று தேவையாக இருக்கிறது. எனவே, யாராவது என்னிடம் புதிர் போட்டுப் பேசினால், 'உங்களைச் சூன்யமாகச் செய்து கொண்டாலொழிய, கடவுள் அல்லது பிரார்த்தனையின் அர்த்தத்தை நீங்கள் அறிந்து கொள்ள முடியாது' என்றே அவரிடம் நான் கூறுவேன். நீங்கள் எவ்வளவு பெரியவராக இருந்தாலும், மலை போன்ற அறிவு படைத்தவராக இருந்தாலும், இந்தப் பரந்த உலகில் நீங்கள் ஒரு தூசியைப் போன்றவரே என்பதை அறிந்து கொள்ளும் பணிவு உங்களுக்கு இருக்கவேண்டும். வாழ்க்கையில் உள்ள விஷயங்களுக்கு அறிவை அடிப்படையாகக் கொண்டு உருவம் கொடுப்பது போதாது; ஆன்மிக தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டே உருவம் கொடுக்க வேண்டும். அறிவுக்கு எட்டாத அதுதான் வாழ்க்கையில் ஆனந்தத்தைக் கொடுக்க முடியும். செல்வம் கொழிப்பவர்களுக்குக்கூட, அவர்களுடைய வாழ்க்கையில் நெருக்கடியான கட்டங்கள் ஏற்படுகின்றன. பணத்தினால் பெறக்கூடிய, அன்பினால் கிடைக்கக்கூடிய எல்லா வசதிகளாலும் அவர்கள் சூழப்பட்டுள்ளனர். அப்படியிருந்தும், அவர்களுடைய வாழ்க்கையில் சில சந்தர்ப்பங்களில் அவர்கள் முற்றிலும் திக்குமுக்காடும் நிலைமை ஏற்பட்டுவிடுகிறது. இத்தகைய சந்தர்ப்பங்களில்தான் மின்னலைப் போல் கடவுளின் தோற்றத்தைக் காண்கிறோம்; நமது வாழ்க்கையின் ஒவ்வொரு படியிலும் நம்மை நடத்திச் செல்லும் அவரது சாயலைக் காண்கிறோம். அவ்விதம் நாம் காணும்படி செய்வது பிரார்த்தனையே.

**டாக்டர்:** தெய்வ பக்தியின் காரணமாக ஏற்படும் உண்மையான அனுபவத்தையே தாங்கள் குறிப்பிடுகிறீர்கள். இது, அறிவின் மூலம் எழும் கற்பனையைக் காட்டிலும் அதிக சக்தி வாய்ந்தது. இத்தகைய அனுபவம் எனது வாழ்க்கையில் இரண்டு தடவைகளில் ஏற்பட்டது. ஆனால், அதை நான் இழந்துவிட்டேன். எனினும், இப்போது நான், புத்தரின் ஒன்றிரண்டு உபதேசங்களைப் பின்பற்றுவதன் மூலம் மகத்தான ஆறுதலைப் பெறுகிறேன். 'துக்கத்திற்குக் காரணம் சுயநலம்தான்', 'துறவிகளே, ஒவ்வொன்றும் ஒரு விநாடியில் தோன்றி மறையும் தன்மை வாய்ந்தது என்பதை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள்.' இந்த உபதேசங்களைப் பற்றிச் சிந்திப்பது நம்பிக்கையைப் போன்றதே.

''அதுதான் பிரார்த்தனை'' என்று காந்திஜி அழுத்தம் திருத்தமாகக் கூறினார். காந்திஜி இவ்விதம் கூறியது டாக்டர் பேப்ரியின் மனத்தில் ஆழ்ந்து பதியாமல் இருந்திருக்க முடியாது.

## தற்கொலை உரிமை

**டாக்டர்:** நான் மற்றும் ஒரு கேள்வி கேட்க விரும்புகிறேன். தற்கொலை செய்துகொண்ட சந்நியாசிகளை புத்தர் மன்னித்து விட்டார். மனிதனுக்கு தன் உயிரைத் தன் விருப்பப்படி மாய்த்துக்கொள்ளும் உரிமை சம்பந்தமாக நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்? உயிருக்கு முக்கியத்துவம் எதுவும் இல்லை. அது ஓர் அற்ப விஷயம் என்றே நான் கருதுகிறேன்.

**காந்திஜி:** மனிதனுக்கு, சில சந்தர்ப்பங்களில், தன் உயிரைத் தன் விருப்பப்படி போக்கிக்கொள்ள பூரண உரிமை உண்டு என்றே நான் எண்ணுகிறேன். ஒரு சக ஊழியர் குஷ்ட நோயினால் அவஸ்தைப்பட்டுக் கொண்டிருந்தார். அந்த நோய் தீர்க்க முடியாதது என்பதையும், அவரது வாழ்க்கை அவருக்கும் அவருக்குத் தொண்டு செய்வோருக்கும் மிகுந்த வேதனையாக இருக்கிறது என்பதையும் அவர் அறிந்திருந்தார். எனவே, உணவும் தண்ணீரும் உட்கொள்ளாமல் தமது உயிரை மாய்த்துக் கொள்ளுவதென்று அவர் சமீபத்தில் தீர்மானித்தார். அவரது தீர்மானத்தை நானும் பாராட்டினேன். 'நீங்கள் அந்த சோதனையில் உண்மையிலேயே வெற்றி பெறமுடியும் என்று எண்ணினால், நீங்கள் அவ்விதமே செய்யலாம்' என்று அவரிடம் கூறினேன். ஒருவர் திடீரென்று தண்ணீரில் மூழ்கியோ அல்லது விஷத்தைச் சாப்பிட்டோ தற்கொலை செய்து கொள்வதற்கும், உணவு உட்கொள்ளாமல் அங்குலம் அங்குலமாகச் சாவதற்கும் உள்ள வேற்றுமையை நான் நன்கு அறிந்தே அவரிடம் அவ்விதம் கூறினேன். நான் அவரை எச்சரித்தது நியாயமே

என்பது ருசுவாகிவிட்டது! ஏனெனில், குஷ்ட நோயைக் குணப்படுத்தக் கூடிய ஒருவர் இருப்பதாக அவருக்கு யாரோ நம்பிக்கையூட்டி ஆசை காட்டவே, அவர் மீண்டும் உணவு உட்கொள்ளத் தொடங்கி, அந்த வைத்தியரிடம் அவர் சிகிக்சை பெற்றுவருவதாக இப்போது நான் கேள்விப்படு கிறேன்!

**டாக்டர்:** ஒருவருடைய மனமானது வேதனையினால் மறைக்கப் படுமாயின், நிர்வாணத்தை (மோட்சத்தை) அடைய முயற் சிப்பதே அவருக்குச் சிறந்ததாகும். ஒவ்வொருவரும் இந்த விதியைத்தான் அனுசரிக்கவேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது. ஒருவர் நோயில்லாமல் இருக்கலாம். எனினும், வாழ்க்கைப் போராட்டத்தில் அவருக்குச் சலிப்பு ஏற்பட்டிருக்கலாம் அல்லவா?

**காந்திஜி:** இல்லை, இல்லை. இத்தகைய தற்கொலையை என் மனம் நிராகரிக்கின்றது. ஒருவருக்கு வாழ்க்கையில் சலிப்பு ஏற்படுவதை முக்கியமாகக் கொண்டு தற்கொலையை அனும திக்கக் கூடாது. ஒருவர், தாம் மற்றொருவருக்குச் சுமையாக இருப்பதாகக் கருதி, இந்த உலகத்தைவிட்டுச் செல்ல விரும்பும்போதுதான் அது அனுமதிக்கப்படலாம். ஒருவர் வேதனையிலிருந்து தப்புவதற்காக உயிரைப் போக்கிக் கொள்ளக் கூடாது. தாம் முற்றிலும் மற்றவர்களுக்கு ஒரு பளுவாகிவிட்டபோதுதான் அத்தகைய எண்ணம் அவருக்கு ஏற்படுகிறது. ஏனெனில், ஒருவர் வேதனையிலிருந்து விடுதலை அடைவதற்காக தமது உயிரைப் பலாத்காரமாகப் போக்கிக் கொள்ளும்போது, அவர் இன்னும் அதிக வேத னைக்கு உள்ளாகிறார் அல்லவா? எனக்குப் பிளவை நோய் ஏற் பட்டிருப்பதாகவும், அதன் விளைவாக எனது மரணம் நெருங் கிக் கொண்டிருப்பதாகவும் வைத்துக்கொள்வோம். அப் போது நான் எனக்கு தூக்க மாத்திரைகளைக் கொடுத்து என்னை மீளாத தூக்கத்தில் ஆழ்த்திவிடும்படியும் எனது டாக்டரை நான் கேட்டுக்கொள்ளலாம்.

டாக்டர் பேப்ரி விடை பெற்றுச் செல்வதற்காக எழுந்த தும், இன்னும் பல ஆண்டுகள் மக்களுக்கு உதவியான நடவடிக்கைகளில் காந்திஜி ஈடுபட்டிருக்க வேண்டுமென வாழ்த்துக் கூறினார்.

"இல்லை. உங்களுடைய கொள்கையின்படி பார்க்கும் போது, நான் எனது கடமையை முடித்துவிட்டதாகக் கருதினால், எனக்கு இந்த உலகில் வேலை இல்லை என்றா கிறது. நானும் எனது கடமையை முடித்துவிட்டதாகவே கருதுகிறேன்" என்று காந்திஜி மனம்விட்டு உரக்கச் சிரித்துக் கொண்டே கூறினார்.

**டாக்டர்:** இல்லை. இன்னும் மேற்கொண்டு பல ஆண்டுகள் வரையில் நீங்கள் மானிட வர்க்கத்திற்குத் தொண்டு செய்ய

முடியும் என்பதே எனது நிச்சயமான அபிப்பிராயமாகும். நீங்கள் நீண்ட காலம் வாழ்ந்திருக்க வேண்டுமென கோடிக் கணக்கான மக்கள் பிரார்த்தித்து வருகிறார்கள். நான் பிரார்த்தனை செய்வதோ, எதையும் விரும்புவதோ முடியா தென்றாலும்......

டாக்டர் பேப்ரியை இடைமறித்து காந்திஜி கூறிய தாவது : ஆமாம், இந்தக் கருத்தையே நீங்கள் வேறு வார்த் தைகளில் சொல்லுவதற்கு ஆங்கிலமொழி இடம் கொடுக் குமே.

**டாக்டர்:** ஆம். இன்னும் நீங்கள் பல ஆண்டுகள் வாழ்ந்திருக்க வேண்டுமென நான் தன்னலம் எதுவுமின்றி அபிப்பிராயப் படலாம்.

**காந்திஜி :** அதேதான். நீங்கள் சரியான வார்த்தையைக் கண்டு பிடித்துவிட்டீர்கள்! இங்கேகூட, ஒரு மனிதனால் வாழ இயலவில்லை என்பது முற்றிலும் அறிவை அடிப்படையாகக் கொண்ட கற்பனையேயாகும். ஒரு மனிதனுக்கு உயிர் வாழ விருப்பமில்லை எனில், வாழ்வதற்கு விருப்பம் இராத காரணத்தினாலேயே, உடல் மடிந்துவிடும்.

டாக்டர் புறப்பட்டுச் சென்றபோது, காந்திஜியின் கையெழுத்தைத் தாம் பெறமுடியுமா என்று என்னைக் கேட் டார். "எனக்கு அவரது கையெழுத்தைப் பெற வேண்டும் என்பது நீண்ட கால விருப்பமாகும்" என்றார் அவர். தமக்கு எவ்வித விருப்பமும் இருக்கக் கூடாது என்று கூறும் அவர் இந்த விருப்பத்தைத் தெரிவித்தார்! அறிவின் அடிப்படையில் வாதிப்போர் சகலரிடமும் இத்தகைய முரண்பாடு உண்டு!

"தாம் ஆசையிலிருந்து விடுதலை யடைந்துவிட்டதாக காந்திஜி ஒரு போதும் கூறியதில்லை! அவர் போடும் ஒவ் வொரு கையெழுத்திற்கும், ஐந்து ரூபாய் வாங்கவேண்டும் என்பது அவரது விருப்பம். அந்தத் தொகை ஹரிஜனங் களின் நலனுக்காக செலவு செய்யப்படும்" என்றேன்.

"எனக்குத் தெரியும். அதற்காக நான் ஐந்து ரூபாய் கொடுத்துவிடுகிறேன்" என்று டாக்டர் பேப்ரி சிரித்துக் கொண்டே கூறினார்.

(ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதியது)

—'ஹரிஜன்' – 19—9—1939

# 5

# புத்த சந்நியாசிகளுக்கு வேண்டுகோள்

காந்திஜியின் பர்மா விஜயத்தைப் பற்றி "பர்மாவில் காந்திஜி" என்ற தலைப்பின் கீழ் ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதிய விவரங்களைக் கீழே காணலாம் :

இலங்கையைப் போல் பர்மாவிலும் காந்திஜியை நூற்றுக் கணக்கான பூங்கிகள் (புத்த சந்நியாசிகள்) சந்தித்துப் பேசினர். எனினும், ஓரிடத்திலாவது அவர்கள் காந்திஜியைக் கிளறிக் கேள்விகள் கேட்கவில்லை. ஓரிடத்தில் மாத்திரம் அவர்களுக்குப் பின் வருமாறு ஓர் எச்சரிக்கை விடுத்ததுடன் காந்திஜி திருப்தி யடைந்தார் :

"நீங்கள் புத்தரை உங்கள் சமய போதகராகக் கொண்டிருப்பது நல்ல காரியமாகும். அதுபோலவே, அகிம்சையின் எல்லையற்ற சாத்தியக் கூறுகளை நீங்கள் பரிசீலனை செய்வதால் உங்களுக்கு நன்மையே ஏற்படும். புத்தரின் உபதேசங்களுக்கு ஒவ்வாத சில வழக்கங்கள் உங்களிடம் இருக்கின்றன. எனினும், உங்களுடைய குறைகளை எடுத்துக் காட்டுவதன் மூலம், உங்களுடைய அன்பான உபசரிப்பை துஷ்பிரயோகம் செய்ய நான் விரும்பவில்லை."

கோவில்களும் சந்நியாசி மடங்களும் நிறைந்த மாண்டலேயில், காந்திஜியைச் சந்திப்பதற்காக ஆயிரக்கணக்கான சந்நியாசிகள் கூடினர். அக் கூட்டத்தில் சந்தடி மிகவும் அதிகமாக இருந்ததால், முக்கியமாக எதுவும் அதிக நேரம் பேசுவது சாத்தியமாக இல்லை. அப்போது காந்திஜி சுருக்கமாகப் பின் வருமாறு சில வார்த்தைகளே கூறினார் :

"மானிட வர்க்கத்தின் மாபெரும் போதகர்களில் ஒருவர், உலகிலேயே இதுவரையில் யாரும் கூறாத ஒரு மகத்தான உண்மையை, அதாவது அகிம்சையை உங்களுக்குப் போதித்துள்ளார். சிறிதும் சந்தடியின்றி எல்லோரும் அமைதியாக இருந்தால், சாந்தமான அந்த சித்தாந்தத்தைப்பற்றி நான் மகிழ்ச்சியுடன் பேசியிருப்பேன். சந்தடி அதிகமாக இருப்பதால், அந்த சித்தாந்தத்தை ஆராய்ச்சி செய்யும்படியும், அதை உங்களுடைய வாழ்க்கையின் ஒவ்வொரு செயலிலும் அமலுக்குக் கொண்டு வரும்படியும் மாத்திரமே நான் உங்களைக் கேட்டுக்கொள்ள முடியும். மக்கள் மிகுந்த மதிப்பு வைத்துள்ள விலையுயர்ந்த ரத்தினங்களையும் வைரங்களையும் காட்டிலும் அகிம்சை எத்தனையோ மடங்கு மேலானது. நீங்கள் அதை புத்திசாலித்தனமாக உபயோகித்தால், அதனால் உங்களை மாத்திரமல்ல, மானிட வர்க்கத்தையே காப்பாற்ற முடியும்."

பர்மாவில் தாங்கூ என்ற இடத்திற்குத்தான் காந்திஜி கடைசியாக விஜயம் செய்தார். காந்திஜியை வரவேற்பதற்காக அங்கே ஒரு பெரிய பந்தல் போட்டிருந்தனர். மற்ற இடங்களைப் போல் இல்லாமல் அங்கே நடந்த கூட்டத்தில் அமைதி நிலவியது. மக்கள் சிறிதும் சந்தடி செய்யாமல் இருந்தார்கள். காந்திஜியின் பிரசங்கத்தை தாராவாடி யூ பூ மொழிபெயர்த்துக் கூறியது, பூங்கிகளுக்கு மிகவும் உதவியாக இருந்தது. தாங்கூவில் காந்திஜி நிகழ்த்திய பிரசங்கத்தின் முழு விவரத்தையும் கீழே கொடுக்கிறேன் :

இந்தக் கூட்டத்துடன் பர்மாவில் எனது யாத்திரை முடிவடைகிறது. இந்த யாத்திரை மனத்திற்கு இன்பமாகவும் அறிவூட்டுவதாகவும் இருந்தது. சில ஆண்டுகளுக்குமுன் நான் பர்மாவுக்கு வந்தபோது, பர்மிய மக்களிடையே எனக்கு ஆனந்தத்தைக் கொடுத்த பல அனுபவங்கள் ஏற்பட்டன. இருந்தாலும் அப்போது ரங்கூனுக்கு மாத்திரம்தான் நான் வந்தேன். மோல்மீனில் ஒரே ஒரு நாள்தான் தங்கினேன். ஆனால், இந்த யாத்திரையில் நான் மாண்டலே வரையில் சென்றபோது நான் பெற்ற அனுபவங்கள் எனக்கு மட்டற்ற மகிழ்ச்சியைக் கொடுத்தன. எல்லாக் கூட்டங்களிலும் மஞ்சள் உடை தரித்த ஏராளமான பூங்கிகளையும், ஏராளமான பர்மிய சகோதர சகோதரிகளையும் பார்த்தது எனக்கு மிகவும் ஆனந்தமாக இருந்தது. இது போன்ற ஒரு கூட்டத்தில் நான் பேசுவது இதுதான் கடைசி முறையாகும். என்றென்றும் இல்லாவிட்டாலும், இன்னும் பல வருடங்களுக்கு நான் மறுபடியும் இதுபோன்ற உங்கள் கூட்டத்தில் பேசுவதற்கில்லை. எனவே, என் மனத்திற்கும் உங்களுடைய மனத்திற்கும் மிகவும் உகந்த சில வார்த்தைகளைக் கூற உத்தேசித்திருக்கிறேன்.

அகிம்சையையும், ராட்டினத்தையும்பற்றி நான் அறிவித்த கருத்துகளை, பர்மாவைச் சேர்ந்த எல்லா இடங்களிலும் எனக்கு அளிக்கப்பட்ட உபசாரப் பத்திரங்களில் ஆதரித்து, வாழ்த்தியிருந்தார்கள். எனவே, இந்த உபசாரப் பத்திரங்கள் எல்லாம் யாதொரு நோக்கமும் அற்றவையாக, எவ்வித அர்த்தமும் இல்லாதவையாக இருக்க முடியாது. ஆகையால், அகிம்சையைப் பற்றி நான் அறிந்ததை விளக்கி உங்களுக்குச் சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். என்னைப் பொறுத்தமட்டில், அகிம்சை உலகிலேயே மிகத் தீவிரமாக செயல்படும் சக்திகளில் ஒன்றாகும். அது, நாள்தோறும் சிறிதும் தவறாமல் நம்மீது ஒளிவீசும் சூரியனைப் போன்றது. அதன் தத்துவத்தை மாத்திரம் நாம் அறிந்துகொண்டுவிட்டோமாயின், அது லட்சக்கணக்கான சூரியன்கள் சேர்ந்த ஒரு சக்தியைக் காட்டிலும் எவ்வளவோ அதிக சக்தி பொருந்தியது என்பதை உணர்ந்துகொள்ளுவோம்! உயிரும் ஒளியும், அமைதியும் ஆனந்தமும் நாற்புறமும் வீசும்படி அது செய்கிறது. அகிம்சா தருமத்தைப் பிரகடனம் செய்யும் ஒரு நாட்டில் அந்த உயிரை, அந்த ஒளியை, அந்த அமைதியை, அந்த

ஆனந்தத்தை நாம் ஏன் பார்ப்பதில்லை? மெய் ஞானம் பெற்ற புத்த பிரானின் உபதேசமானது, பர்மாவினுடைய இதயத்தின் மேற்புறத்தை மாத்திரமே தொட்டிருப்பதாக எனக்குத் தோன்று கிறது என்று நேற்றுத்தான் நான் மாண்டலேயில் நடந்த கூட்டத்தில் கூறினேன். நான் ஒன்றிரண்டு பரிசோதனைகளைச் செய்து பார்க்க விரும்புகிறேன். அதாவது, அகிம்சா தருமம் எங்கே மகோன்னதமாக ஆட்சி புரிகின்றதோ, அங்கே பொறு மைக்கோ, தகுதியற்ற ஆசைகளுக்கோ, குற்றத்திற்கோ, பாவத்திற்கோ இடம் இருக்கக் கூடாது. உங்களுடைய குற்றங் களைப்பற்றிய புள்ளி விவரங்களை நான் வாசித்தேன். குற்றங்கள் புரியும் போட்டிப் பந்தயத்தில் நீங்கள் பின்வாங்குபவர்களாக இல்லை என்பதைக் காண்கிறேன். அற்ப காரணத்திற்காகக் கூட கொலைசெய்வது பர்மாவில் மிகவும் சகஜமாக இருப்பதாக எனக்குத் தோன்றுகிறது. ஆகையால், என் இடது புறத்தில் உட்கார்ந்துள்ள நண்பர்களை (பூங்கிகளை) நான் ஒன்று வேண்டிக் கொள்ளுகிறேன். புத்தரிடமிருந்து பரம்பரையாக வந்துள்ள சமயத்தின் நிலைக்களமாக நீங்கள் திகழ்ந்து வருகிறீர்கள் என்று கருதப்படுகிறது. நான் இலங்கையிலும், பர்மாவில் நீண்ட காலமும் யாத்திரை செய்துள்ளேன். இந்த யாத்திரைகளின் பலனை நான் ஒன்று கூறுகிறேன். அதாவது, எங்களுடைய சக்திக்கு இயன்றவரையில் என்று சொல்ல முடியாவிட்டாலும், உங்களைக் காட்டிலும் அதிகமாகவும், பூரணமாகவும் இந்தியாவில் உள்ள நாங்கள் புத்தரின் உபதேசங்களுக்கு விளக்கம் கொடுத் திருக்கிறோம். தவறான காரியங்கள் நடைபெறும்போது நல்ல வர்களும் முனிவர்களும் தவம் செய்ய முற்படுகிறார்கள் என்று எங்களுடைய சாத்திரங்களில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. கௌதமர் கூட அவ்விதமேதான் செய்தார். அவர் தம்மைச் சுற்றிலும் கொடுமை, அநீதி, மரணம் முதலியவற்றைக் கண்ட போது, தம்மைச் சுற்றி முன்னும், பின்னும், இரு பக்கங்களிலும் அந்தகாரத்தைக் கண்டபோது, அவர் ஒளியைத் தேடுவதற்காக காட்டிற்குச் சென்று உண்ணாவிரதத்தையும், பிரார்த்தனையையும் மேற்கொண்டார். நம் எல்லோரையும் காட்டிலும் எத்தனையோ மடங்கு உயர்ந்த புத்த பிரானுக்கே அத்தகைய தவம் செய்ய வேண்டிய அவசியம் நேர்ந்ததெனில், நமக்கு, நாம் எந்த உடையில் இருந்தாலும், மஞ்சள் உடையில் சந்நியாசியாக இருந்தாலும் இராவிட்டாலும், தவம் இன்னும் எத்தனை மடங்கு அதிக அவசியமானது?

எனது நண்பர்களே, அலுப்படைந்துள்ள உலகமானது அகிம்சை லட்சியத்தை நோக்கிச் செல்ல வழிகாட்டும் ஒளிவீசும் தீபங்களாக நீங்கள் வரவேண்டுமாயின், அதற்கு சுயத் தூய்மை யையும் தவத்தையும் தவிர வேறு ஒரு வழியுமில்லை. இன்று இங்கே இத்தனை குருமார்கள் உட்கார்ந்து கொண்டிருக்கிறீர்கள். உங்களில் சிலர், புத்தரின் உபதேசங்களை விளக்கிக் கூறும் தொண்டை மேற்கொள்ளுவீர்களாயின், நீங்கள் மக்களின்

வாழ்க்கையில் புரட்சியை உண்டாக்கியவர்களாவீர்கள். கண்டிப்பான சம்பிரதாயங்களை நீங்கள் உங்களுக்கு வழிகாட்டியாகக் கொள்ளக்கூடாது. நீங்கள் உங்களுடைய இதயங்களையும் உங்களுடைய தரும நூல்களையும் துருவிப்பாருங்கள்; எழுத்துக்களுக்குப் பின்னால் மறைந்திருக்கும் பொருளை, தத்துவத்தை நன்கு உணர்ந்து, உங்களுடைய சுற்றுப்புறங்களுக்குப் புத்துயிர் அளிக்க முற்படுங்கள். உங்களுடைய இதயங்களை நீங்கள் சோதித்துப் பார்த்து, நாவின் ருசிக்காக மிருகங்களைக் கொல்லுவது கூடாது என்பதை உணர்ந்து கொள்ளவேண்டும். அப்போது நீங்கள், எல்லா உயிர்களிடத்திலும் அன்பாக இருக்க வேண்டும் என்ற சித்தாந்தத்திற்கும், நமது வாய்களை புகை போக்கிகளாக மாற்றிக் கொள்ளுவதற்கும் முரண்பாடு இருப்பதையும் அறிந்துகொள்ளுவீர்கள். பர்மியர்கள் கள்ளம் கபடமற்றவர்கள். அப்படியிருக்க, உங்களிடையே மதுபான வழக்கம் அதிகமாகிவருவதாக நான் அறிகிறேன். இங்கேயுள்ள சீதோஷ்ண நிலைக்கு உஷ்ணமான மதுபானம் அவசியமே இல்லை. நீங்கள் மேற்கொண்டு ஆராய்ச்சி செய்ய முற்பட்டால், உயிர் வாழும் எல்லாவற்றினிடமும் அன்பு கொண்ட ஒருவருடைய மனத்தில் பயத்திற்கு இடமே இல்லை என்பதையும் அறிந்து கொள்ளுவீர்கள். பின்னர் நீங்கள் அதிகாரவர்க்கத்தைக் கண்டு பயப்படமாட்டீர்கள்; யாரையும் கண்டு பயப்பட வேண்டாம் என்று நீங்கள் உங்களைச் சுற்றியுள்ள எல்லோருக்கும் போதிப்பீர்கள். மிகுந்த பணிவுடனும், என் இதயத்திலிருந்தும் நான் கூறியுள்ள இந்த சில வார்த்தைகளை, நான் எந்த உணர்ச்சியுடன் கூறினேனே அதே உணர்ச்சியுடன் நீங்கள் அவற்றை ஏற்றுக்கொள்ளுவீர்கள் என்று நம்புகிறேன். நான் அகிம்சையையும் சத்தியத்தையும் பின்பற்றுகிறவன் என்று நீங்கள் எல்லாக் கூட்டங்களிலும் என்னைப் பாராட்டி யிருக்கிறீர்கள். சென்ற நாற்பது ஆண்டுகளாக என்னால் இயன்றவரையில் அகிம்சையையும், சத்தியத்தையும் சிறந்த முறையில் விளக்கிக் கூற நான் முயற்சித்து வந்திருக்கிறேன். நான் கூறிய வார்த்தைகள் உங்கள் இதயத்தில் பதிந்து, அவற்றினால் மிகுந்த பலன் ஏற்படும் என்றும் நம்புகிறேன். அவ்விதம் ஏற்பட்டால். பொதுவான ஒரு லட்சியத்தை அடைய எல்லாப் பிரிவுகளும், எல்லாக் கட்சிகளும் ஒன்று சேருவதில் தடை எதுவும் இருப்பதற்கில்லை. நான் பேசியதை இவ்வளவு பொறுமையுடனும், சிறிதும் சந்தடியின்றி மௌனமாகவும் கேட்டுக்கொண்டிருந்ததற்காக உங்களுக்கு நன்றி செலுத்துகிறேன்.

—'எங் இந்தியா' - 18—4—1929

# 6

# புத்தரும் ஹிந்து சமயமும்

இலங்கையில் பௌத்த இளைஞர்கள் அடங்கிய பெரிய கூட்டம் ஒன்று, 1927 நவம்பர் 25-ஆம் தேதி அவர்களுடைய சங்கக் கட்டிடத்தில் நடந்தது. அப்போது காந்திஜி நிகழ்த்திய பிரசங்கத்தின் விவரங்களே கீழே கொடுக்கப்பட்டுள்ளன :

முதன் முதலாக உங்களுக்கு சகிப்புத் தன்மை வேண்டும் என்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன். நான் என்னை எந்த விதத்திலும் பண்டிதன் என்று கூறிக்கொள்ளவில்லை. ஒரே ஒரு நூலின் மூலமே முதன் முதலாக நான் சமய ஆராய்ச்சியில் ஈடுபட்டேன். அதுதான் சர் எட்வின் அர்னால்டு எழுதிய 'ஆசியாவின் ஜோதி'* என்ற நூலாகும். அது என் இதயத்தை முற்றிலும் கவர்ந்தது. அதிலிருந்து புத்தரின் ஆன்மா என்னை ஆட்கொண்டு விட்டது. எனவே, நான் மாறுவேடத்திலிருக்கும் ஒரு பௌத்தன் என்று என்மீது குற்றம் சாட்டுகிறார்கள். நான் ஏற்கனவே குறிப்பிட்டிருப்பதைப்போல், அந்தக் குற்றச்சாட்டை நான் ஒரு பாராட்டுதலாகவே ஏற்றுக்கொண்டுள்ளேன். எனினும், நான் என்னை புத்த சமயத்தைச் சேர்ந்த ஒருவன் என்று கூறிக்கொண்டால், வைதிக புத்தர்கள் அதை நிராகரித்துவிடுவார்கள் என்பதை நான் அறிவேன். ஆனால், நான் புத்தரின் தத்துவத்தை என் மனத்தில் பதிய வைத்துக் கொண்டிருக்கிறேன். அந்த முறையில், நான் ஏற்கனவே ஒரு சந்தர்ப்பத்தில் என்ன கூறினேனோ அதையே வேறு வார்த்தைகளில் மிகப் பணிவுடனும், தயக்கமின்றியும் கூற விரும்புகிறேன்.

சமயங்களை ஒழுங்கான முறையிலும், பக்தியுடனும் ஆராய்ச்சி செய்வதற்கு ஹிந்து சமயத்தில் சில நிபந்தனைகள் விதிக்கப்பட்டுள்ளன. அவை எல்லோருக்கும் பொருத்தமான தன்மை வாய்ந்தவை. கௌதமர், ஹிந்துக்களுக்கெல்லாம் ஹிந்து என்பதையும் நீங்கள் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். அவர் ஹிந்து சமய உணர்ச்சியில், வேதங்களின் தத்துவத்தில் திளைத்திருந்தார். ஆன்மிக ரீதியில் மனத்திற்கு உற்சாகத்தைக் கொடுக்கும் சூழ்நிலையில் அவர் பிறந்து வளர்ந்தவர். எனக்குத் தெரிந்தவரையில் அவர் ஹிந்து சமயத்தையோ அல்லது வேதங்களின் உபதேசங்களையோ ஒருபோதும் நிராகரிக்கவில்லை. சமயமானது அவரைச் சுற்றிலும் கல்லைப்போல் கடினமாகியிருந்தது. அதை நிரந்தரமாகச் சீர்திருத்த முற்பட்டதே அவர் செய்த காரியமாகும். சமஸ்கிருத நூல்களின் மூலம் புத்தருக்கு தெய்விகமான உத்வேகம் ஏற்பட்டது. எனவே, ஆதிகாரணமான சமஸ்

* எட்வின் அர்னால்டு எழுதிய 'ஆசிய ஜோதி' (Light of Asia) என்ற கவிதை நூலில் புத்தர் பிரானுடைய வரலாறு அற்புதமாக விவரிக்கப்பட்டிருக்கிறது.

கிருதத்தையும் சமஸ்கிருத தரும நூல்களையும் நீங்கள் ஆராய்ச்சி செய்தாலன்றி புத்த சமயத்தைப் பற்றிய உங்களுடைய ஆராய்ச்சி நிறைவு பெற முடியாது என்று நான் துணிந்து கூறுவேன். புத்த சமயத்தின் வெளித்தோற்றத்தையல்ல, உள் தத்துவத்தை நீங்கள் அறிந்து கொள்ளவேண்டுமாயின், சமஸ்கிருத நூல்களை ஆராய்ச்சி செய்வதுடன் உங்களுடைய கடமை முடிந்துவிடாது. அவ்விதம் ஆராய்ச்சி செய்யும் விஷயமாக சில நிபந்தனைகள் இருக்கின்றன. சமய ஆராய்ச்சியில் ஈடுபட விரும்பும் ஓர் ஆடவரோ அல்லது பெண்ணோ முதன் முதலாக ஐந்து யமங்களை அனுசரிக்கவேண்டும். யமங்கள் என்பவை, தன்னடக்கம் பற்றிய ஐந்து விதிகளே. முதலாவதாக பிரம்மச்சரியம்; இரண்டாவதாக சத்தியம்; மூன்றாவதாக அகிம்சை. அதாவது, ஓர் ஈயைக் கூடத் துன்புறுத்தாமல் முற்றிலும் நிரபராதியாக இருக்க வேண்டும். அடுத்த நிபந்தனை அஸ்தேயம், அதாவது திருடாமை; பிறர் பொருளைத் திருடுவது மாத்திரமல்ல, உங்களுக்குச் சொந்தமல்லாத எந்தப் பொருளையாவது அடையவேண்டும் என்று நீங்கள் ஆசையுடன் பார்ப்பதுகூடத் திருடுவதே யாகும். கடைசியாக, அபரிக்ரஹம்; அதாவது, லௌகிகமான செல்வங்களையும் மற்ற உடைமைகளையும் வைத்துக்கொள்ள ஆசைப்படுவதாகும். அவ்விதம் ஆசைப்படுவோர் புத்தரின் தத்துவத்தை உண்மையாக அறிந்துகொள்ளும் தகுதி வாய்ந்தவராக இருக்க மாட்டார். புத்த சமய தத்துவத்தை அறிந்துகொள்ள மேற்கண்ட நிபந்தனைகள் இன்றியமையாதவை. இவ்விஷயமாக மற்றும் சில நிபந்தனைகள் இருக்கின்றன. ஆனால், நான் மேலே மூலாதாரமான நிபந்தனைகளை மாத்திரமே குறிப்பிட்டிருக்கிறேன்.

கௌதமர், தாம் மெய் ஞானத்தை அடைவதற்கு முன் மேற்கண்ட எல்லா விதிகளுக்கும் உட்பட்டு நடந்தார். இந்த விதிகளுக்கு நீங்கள் உட்பட்டு நடந்தாலன்றி, அதன்பின் புத்தருடைய உபதேசங்களின் தத்துவத்தை பக்தியுடன் அறிய முயற்சித்தாலன்றி, புத்த தத்துவத்தை நீங்கள் உணர்ந்து கொள்ள முடியாது என்பதை நான் உங்களுக்குப் பணிவுடன் கூறுகிறேன். புத்த சமய நூல்கள் எல்லாவற்றையும் நீங்கள் வாசித்தால்கூட, அதனால் உங்களுடைய நிலைமையில் எத்தகைய மாறுதலும் ஏற்பட்டுவிடாது. மேலே குறிப்பிட்ட பூர்வாங்கமான நிபந்தனைகளை நீங்கள் அனுசரித்தால், நீங்கள் ஒரு புதிய ஒளி பெற்று அந்த நூல்களை அறிந்துகொள்ளவும், அவற்றின் பொருளை உணர்ந்து கொள்ளவும் முடியுமென நான் உங்களுக்கு உறுதிகூறத் துணிகிறேன். இஸ்லாம் சமயத்தைக் கண்டிக்கும் பலரும் என்ன செய்திருக்கிறார்கள் என்பதைப் பாருங்கள். கோடிக் கணக்கான முஸ்லிம்கள் பூரண நம்பிக்கை வைத்துள்ள நூலை வெகு உக்ரமாகக் கண்டித்து, இஸ்லாமின் உபதேசங்களை ஏளனம் செய்திருக்கிறார்கள். அத்தகைய கண்டனங்களை எழுதியவர்கள் யோக்கியப் பொறுப்பு இல்லாதவர்கள் அல்ல; அவர்கள் யோக்கியர்களே. அவர்கள் உண்மையை ஆராய்ச்சி செய்ய

முயற்சிக்காதவர்களும் அல்ல. ஆனால், எத்தகைய சமய ஆராய்ச்சியிலும் ஈடுபடும் முன்பு நிறைவேற்ற வேண்டிய நிபந்தனைகளை அவர்கள் அறிந்து கொள்ளவில்லை. மற்றும், ஹிந்து சமயத்தைக் கண்டிப்பவர்கள் என்ன செய்திருக்கிறார்கள் என்பதைப் பாருங்கள். அந்தக் கண்டனங்களில் பலவற்றையும் நான் வாசித்தேன். அந்தக் கண்டனவாதிகளின் மன நிலையைத் துருவிப் பார்க்க நான் முயற்சித்தேன். ஆனால் கடைசியாக, அவர்கள் ஹிந்து சமயத்திற்கே முற்றிலும் தவறான விளக்கம் கொடுத்துவருகிறார்கள் என்ற முடிவிற்கு வந்தேன்.

கிறிஸ்தவ சமயத்தையும் எடுத்துக்கொள்ளுங்கள். பல ஹிந்துக்கள் அதற்குத் தவறான விளக்கம் கொடுத்துவருகிறார்கள். பைபிள், பழைய ஏற்பாடு, புதிய ஏற்பாடு முதலியவற்றை, அவர்கள் முன்னதாகவே உருவாகியுள்ள சில எண்ணங்களுடனும் கண்டன உணர்ச்சியுடனும் அணுகுகிறார்கள். ஹிந்துக்களைப்பற்றி ஏன் பேசவேண்டும்? ஆங்கிலேயர்களையே எடுத்துக் கொள்ளுங்கள். தங்களை நாத்திகர்கள் என்று கருதுவதாகப் பாசாங்குசெய்யும் சில ஆங்கிலேயர்கள், பைபிளைத் தலைகீழாகத் திருப்பி வெறி பிடித்துத் தங்கள் விருப்பப்படியெல்லாம் விளக்கங்கள் கொடுத்துள்ளனர். அதனால், அவற்றை வாசிக்கும் கள்ளம் கபடமற்ற மக்களுக்கு மிகுந்த தீமை ஏற்பட்டிருக்கிறது. இலங்கைக்கும், இலங்கையின் மூலம் உலகத்திற்கும் நீங்கள் உண்மையான புத்த சமய தத்துவத்தை விளக்கும் முன்னோடிகளாக இருக்கவேண்டும் என்பதும், உலகத்தின் முன் ஜீவ சக்தி வாய்ந்த ஒரு சமயத்தைச் சமர்ப்பிக்கும் முதல்வர்களாக இருக்கவேண்டும் என்பதுமே எனது ஆர்வமாகும். அதனால்தான், இந்த சங்கத்தின் இளைஞர்களுக்கு இவ்விஷயங்களையெல்லாம் எடுத்துக் கூறியுள்ளேன்.

புத்தர் எவற்றை உபதேசித்தாரோ அவற்றைத்தான் தாங்கள் கூறமுடியும் என்றும், தாங்கள் அவ்விஷயமாக வாதத்தில் ஈடுபட முடியாது என்றும் நான் சந்தித்த புத்த சமய குருமார்கள் கூறினர். அதெல்லாம் சரிதான். எனினும், இன்று எதையும் துருவி விசாரிக்கும் உணர்ச்சி எங்கும் இருந்துவருகிறது. அந்த உணர்ச்சியை நாம் சமாளிக்கவேண்டியவர்களாக இருக்கிறோம். உலகம் உண்மையை நாட முயற்சித்து வருகிறது. இந்த பயங்கரமான பகைமைக்கு இடையே இந்த உலகம் அமைதிக்காகவும் ஏங்கி வருகிறது. சமயத்தை சாத்திரீய முறையில் ஆராய்ச்சி செய்தவர்களும், உண்மையை அறிந்துகொள்வதற்காக தங்களுடைய உயிர்களைத் தியாகம் செய்தவர்களும், யாருடைய எலும்புகள் இமய மலையில் உறையும் பனியுடன் கலந்து அதை வெண்மையாகச் செய்துள்ளனவோ அவர்களும், இந்த விலையிலாப் பொக்கிஷங்களை நமக்கு விட்டுச் சென்றிருக்கிறார்கள். இந்தியாவில் உள்ள முப்பது கோடி மக்களுக்காக மத்திரமல்ல, அந்த பொக்கிஷங்களை அறிந்துகொள்ள அக்கறை கொள்ளும்

ஒவ்வொருவருக்காகவும் அவர்கள் அவற்றை விட்டுச் சென்றிருக்கிருர்கள். 'நாங்கள் உங்களிடம் சத்தியத்தை ஒப்புவித்துவிட முடியாது' என்று அவர்கள் கூறியிருக்கிருர்கள். எழுதுவதன் மூலம் அதை ஒப்புவிக்க முடியாது. வாய்ப் பேச்சுகளால் ஒப்புவிக்க முடியாது; வாழ்க்கையின் மூலம்தான் அதை ஒப்புவிக்க முடியும். அது பகுத்தறிவுக்கு அப்பாற்பட்டது. எனினும், அது அனுபவத்திற்கு அப்பாற்பட்டதல்ல. எனவே, அவர்கள் இவ்விதம் கூறினர்கள் : 'குறிப்பட்ட அது தான் உன்மை என்று நாங்கள் உங்களுக்குக் கூறுகிரேம். எனினும், அதை நீங்களேதான் சோதனே செய்து பார்த்துக் கொள்ளவேண்டும். நீங்கள் உங்களுடைய பகுத்தறிவை உபயோகிக்கலாம். உங்களுடைய பகுத்தறிவை செயலற்றுப் போகும்படி செய்ய வேண்டுமென நாங்கள் விரும்பவில்லே. கடவுள் கொடுத்துள்ள பகுத்தறிவுக்கு எல்லே உண்டு; எல்லேயற்ற ஒன்றை அடைய முடியாது என்ற முடிவுக்கு எங்களேப் போல நீங்களும் உங்களுக்குள்ளேயே சிந்தித்துத்தான் வர வேண்டும். நீங்கள் க்ஷேத்திர கணிதத்தையோ அல்லது பீஜ கணிதத்தையோ ஆராய்ச்சி செய்ய விரும்பினல், எவ்வளவு தொல்லேயாக இருப்பினும், களேப்பைப் கொடுப்பதாக இருப்பினும் நீங்கள் சில பூர்வாங்க முறைகளே அனுசரித்துத்தான் தீர வேண்டும். அதுபோலவே, இதற்கும் நீங்கள் சில பூர்வாங்கமான நிபந்தனேகளுக்கு உட்பட்டுத் தீரவேண்டும். அவற்றை அனுசரியுங்கள். பின்னர், எங்களுடைய அனுபவத்தின் பலஞக நாங்கள் கூறுவதை நீங்களும் அனுபவித்து உணர முடியும்.'

புத்தரின் உபதேசம் இப்போது பின்பற்றப்படுவதில்லே என்பதற்கு, நான் ஒரே ஓர் உதாரணம் மாத்திரம் கூற விரும்புகிறேன்:

மிக மிகத் தாழ்ந்த பிராணிகளேக்கூட தமக்குச் சமமாக நடத்தும்படி கௌதமர் கற்பித்தார் என்பதை நீங்கள் நம்புகிறீர்கள். தமது உயிரைப் போல் பூமியில் ஊர்ந்து செல்லும் பிராணிகளின் உயிர்கள்கூட மிகவும் உயர்ந்தவை என்றே அவர் கருதினர். மனிதர்கள், சிருஷ்டியில் தாழ்ந்த பிராணிகளின் எஜமானர்கள் என்றும், தலேவர்கள் என்றும் கருதுவது இறுமாப்பான எண்ணமேயாகும். அதற்கு மாருக, மனிதர்கள் தாழ்ந்த மிருக வர்க்கத்தின் தரும கர்த்தாக்கள் ஆவர். ஏனெனில், மனிதர்களுக்கு வாழ்க்கையில் சிறந்த சாதனங்களும் வசதிகளும் அளிக்கப்பட்டுள்ளன அல்லவா? மாமுனிவரான புத்தர் அந்த உண்மையைத் தமது சொந்த வாழ்க்கையிலேயே செயலில் காட்டினர். நான் சிறு பையனுக இருந்த போது 'ஆசிய ஜோதி'யிலிருந்த ஒரு பகுதியை வாசித்தேன். இறுமாப்பிலும் அறியாமையிலும் ஆழ்ந்திருந்த பிராம்மணர்கள், நிரபராதிகளான ஆட்டுக் குட்டிகளேப் பலியிட்டு அவற்றின் ரத்தத்தினல் கடவுளேத் திருப்தி செய்யலாமென நினேத்தார்கள். ஆனல், அவர்களுடைய எதிர்ப்பைப் பொருட்படுத்தாமல் புத்தர் ஆட்டுக் குட்டியைத் தமது தோளில் தூக்கிக்

கொண்டு சென்றதுடன், துணிச்சல் இருந்தால் அவர்கள் ஓர் ஆட்டுக் குட்டியையாவது பலியிடட்டும் என்ருர். புத்தர் அந்த இடத்தில் பிரசன்னமாகி யிருந்ததே, பிராம்மணர்களின் கல் நெஞ்சங்களைக் கரைத்துவிட்டது. அவர்கள் புத்த பகவானை அண்ணாந்து பார்த்தார்கள்; கொலைக் கருவிகளான கத்திகளை அப்பால் எறிந்தார்கள். எனவே, அங்கே இருந்த எல்லா மிருகங்களும் காப்பாற்றப்பட்டன. அந்த உபதேசம் பொய்த்துப் போவதற்காகவா அதை அவர் உலகத்திற்கு அளித்தார்? ஆனல், இங்கே அந்த உபதேசம் பொய்த்துப் போகும்படி செய்யப்பட்டிருக்கிறது. நீங்கள் அந்த மாபெரும் சமயத்தின் களஞ்சியங்களாக விளங்கி வருகிறீர்கள். எனவே, கடவுளால் சிருஷ்டிக்கப்பட்ட எல்லா மிருகங்களையும் தெய்விகமானவையாக நீங்கள் எண்ணுதவரையில், புத்த பகவானுடைய உபதேசங்களின் தத்துவத்தை நீங்கள் உண்மையாகப் பின்பற்றியவர்கள் ஆகமாட்டீர்கள். நீங்கள் இறைச்சி உணவைத் தவிர்க்காதவரையில், நீங்கள் அந்த தத்துவத்தை அனுசரிப்பவர்களாக இருக்க முடியாது. உங்களுக்காக வேறு யாரோ மிருகங்களைக் கொல்லுகிருர்கள் என்பதற்காக, நீங்கள் அந்தக் குற்றத்திற்குப் பொறுப்பாளியல்ல என்று நம்பி, உங்களையே நீங்கள் ஏமாற்றிக் கொள்ளக்கூடாது. சம்பிரதாயங்கள் என்ற சுவரை நீங்கள் உங்களுக்குப் பாதுகாப்பாகக் கொண்டிருக்கிறீர்கள்.

இறைச்சி தின்பதை புத்த பகவான் ஒரு காலத்திலும் தடை செய்யவில்லை என்று நீங்கள் கூறுகிறீர்கள். நான் அவ்வாறு நினைக்கவில்லை. நான் குறிப்பிட்ட உணர்ச்சியுடன் நீங்கள் புத்தரின் உபதேசங்களை அணுகுவீர்களாயின், அவற்றின் தோற்றமும் அர்த்தமும் வேறு விதமாக இருப்பதை அறிந்துகொள்ளுவீர்கள். 'இறைச்சி தின்பதிலிருந்து உங்களை நான் தடுக்கவில்லை' என்று புத்தர் கூறியபோது, கடினமான இதயம் படைத்தவர்களுக்கு அவர் உபதேசம் செய்துகொண்டிருந்தார் என்பதை நீங்கள் அறிந்துகொள்ள வேண்டும். அவர்களுடைய பலவீனத்திற்கு அவர் இடம் கொடுக்க விரும்பியதால் அவர்கள் இறைச்சி தின்பதை அனுமதித்தாரே யன்றி, தம்முடைய உபதேசத்திற்கு அது முரண்பாடானது என்பதை அவர் அறியாமல் இல்லை. நமக்கு மேலேயுள்ள கடவுள்களுக்கே மிருகங்களைப் பலிகொடுக்கக்கூடாது எனில், பெரும் சாப்பாட்டுப் பிரியர்களான நமக்காக அவற்றைப் பலி கொடுக்கலாமா? பலிகளை அவர் தடுத்தபோது, தாம் கூறுவதன் கருத்தை அவர் அறிந்திருந்தார். மிருகங்களைப் பலிகொடுப்பது இறுதியில் அவற்றைத் தின்பதற்காகத்தான் என்பது அவருக்குத் தெரியாதா?

கல்கத்தாவில் உள்ள காளி தேவிக்கு ஆயிரக் கணக்கான வெள்ளாடுகளையும், செம்மறியாடுகளையும் ஏன் பலி கொடுக்கிருர்கள்? மிருகபலி கூடாது என்று ஹிந்துக்களுக்கெல்லாம் ஹிந்துவான கௌதமர் தடுத்திருந்தும் கூட, அவ்விதம் மிருகங்களைப் பலி கொடுப்பது அவர்களுக்கும், ஹிந்து சமயத்திற்கும்

அவமானமாகும். மிருகங்களைப் பலி கொடுத்தபின் அவற்றின் உடல்களை ஹூக்ளி நதியில் எறிந்து விடுகிறார்களா? இல்லை. அந்த இறைச்சிகளைச் சிறிதும் விடாமல் தின்றுவிடுகிறார்கள். காளிக்குக் காணிக்கைகளாகக் கொடுத்ததன் பலனாக, அந்த இறைச்சி புனிதமாகி யிருக்கிறது என்றும் எண்ணுகிறார்கள்! புத்தர் கூறியது இதுதான்: 'நீங்கள் கடவுளுக்கு ஏதாவது பலி கொடுக்க விரும்பினால், உங்களை, உங்களுடைய காம இச்சையை, உங்களுடைய ஸ்தூல ஆசைகளை, உலக சம்பந்தமான உங்களுடைய பேராசைகளைப் பலிகொடுத்துவிடுங்கள்.' அவ்விதமான பலி தான் உயர்ந்ததாகும். நான் கூறிய வார்த்தைகளின் கருத்தை நீங்கள் உணர்ந்துகொண்டு, அவற்றை வாழ்க்கையில் அனுசரிக்க, புத்தரின் ஆன்மா இக்கூட்டத்தில் பிரசன்னமாகி உங்களுக்கு உதவியாக இருக்குமாக.

—'எங் இந்தியா' – 8—12—1927

# 7

# பிரம்மஞானமும் எனது நிலையும்

உலகத்தில் உள்ள பெரும்பாலான பத்திரிகைகளும் நின்று விட்டால்கூட, அதனால் உலகத்திற்கு நஷ்டம் எதுவும் ஏற்பட்டு விடாது. ஒருவேளை அதன் காரணமாக, உலகம் பெருமூச்சுவிட்டு ஆறுதலும் அடையலாம். பொதுவாக, பத்திரிகைகள் உண்மைகளைக் கூறுவதில்லை, கட்டுக் கதைகளையே வெளியிடுகின்றன. 'மெஸஞ்சர் ஆப் அமெரிக்கா' என்ற பத்திரிகையில் நான் ஒரு பேட்டி அளித்ததாக வெளியாகியிருக்கிறது. அதை வாசித்ததிலிருந்துதான் மேற்கண்ட சிந்தனை எனக்கு ஏற்பட்டது. அது, அமெரிக்க தத்துவ ஞான சங்கத்தின் சார்பில் அதிகார பூர்வமாக வெளியாகும் பத்திரிகையாகும். ஒரு தத்துவ ஞான சங்கத்தின் பத்திரிகைகூட, ஒரு கட்டுக் கதையை உண்மை என்று ஏன் வெளியிட வேண்டும் என்பதை என்னால் அறிந்துகொள்ள முடியவில்லை.

பிரம்மஞான (Theosophy) தத்துவத்தைப் பற்றி எனது கருத்துகள் சிதைக்கப்பட்டு அதில் வெளியாகியிராவிடில், நான் அதைப் பொருட்படுத்தியிருக்க மாட்டேன். 'நான் கர்நாடகமான ஒரு ராட்டினத்தில் நூற்று வருகிறேன்' என்பதும், 'எனது அறைக்கு வெளியே மாமரங்கள் இருக்கின்றன' என்பதும் அதில் வெளியாகி யுள்ள கட்டுக் கதைகளாகும். இவற்றைக் காட்டிலும் மோசமான ஒரு கட்டுக் கதையும் அதில் வெளியாகி யிருக்கிறது. 'அமெரிக்கா முதலிய மற்ற பெரிய நாடுகளின் அனுதாபம் காரணமாகவும், அந்த நாடுகளை நாம் அறிந்து கொண்டிருப்பதாலும்தான் இந்தியர்களாகிய நாம் தியாகங்களைச் செய்வதற்கான ஆன்மிக

சக்தியைப் பெற்றோம்' என்பதும்தான் அந்தக் கற்பனைக் கதையாகும். இந்தக் கட்டுக்கதைகளை யெல்லாம் நான் பொருட்படுத்தாமல் தள்ளிவிட வேண்டும்.

ஆனால், பிரம்மஞான தத்துவம் சம்பந்தமான எனது நிலையைப்பற்றி அதில் பிரசுரமாகியுள்ள கட்டுக்கதையை நான் அலட்சியமாகத் தள்ளிவிட முடியாது. பிரம்ம ஞான இயக்கத்தில் எனக்கு அனுதாபம் இல்லையாம். நான் இன்றும் ஒரு பிரம்மஞானவாதியாயினும், அந்த இயக்கத்தில் எனக்கு பற்றுதல் இல்லையாம். இது போன்ற கற்பனைக் கதைகள் இப்பத்திரிகையில் இடம் பெற்றிருக்கின்றன. இதெல்லாம் எனது கருத்துக்கு நேர்மாறாக இருக்கின்றன. நான் அவ்விஷயமாக ஏதாவது சொல்லக்கூடுமாயின், அது மேற்கண்ட இதழில் வெளியாகியிருப்பதற்கு நேர் முரணாகவே இருக்கும். ஏனெனில், நான் பிரம்மஞான சங்கத்தில் அங்கம் வகிக்கவில்லை; எக்காலத்திலும் அதில் நான் அங்கத்தினனாக இருந்ததுமில்லை. சர்வ ஜன சகோதரத்துவம், அதன் காரணமாக எழும் சகிப்புத் தன்மை போன்ற அதன் கொள்கைகளில் இன்றும் எனக்கு அனுதாபம் உண்டு. எனக்கு பிரம்மஞான சங்கத்தைச் சேர்ந்த பல நண்பர்கள் இருக்கின்றனர். அவர்களுக்கு நான் மிகவும் கடமைப்பட்டுள்ளேன். பிளவட்ஸ்கி அம்மை, கர்னல் ஆல்காட், டாக்டர் பெசன்ட் அம்மையார் முதலியோருக்கு விரோதமாக கண்டன வாதிகள் என்ன கூறினாலும், அவர்கள் மானிட வர்க்கத்திற்குச் செய்துள்ள பணி என்றென்றும் மிகவும் மேலானது. நான் அச் சங்கத்தில் சேருவதற்குத் தடையாக இருப்பது என்னவெனில், அந்த இயக்கத்தில் உள்ள ரகசிய அம்சமேயாகும். இது மாத்திரம், மேற்கண்ட பத்திரிகைப் பேட்டியில் ஓரளவு சரியாகக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இது ஒரு காலத்திலும் என் மனத்திற்கு உகந்ததாக இருந்ததில்லை. நான் பாமர மக்களைச் சேர்ந்தவனாக இருக்கவே விரும்புகிறேன். எத்தகைய ரகசியமும், உண்மையான ஜனநாயக தத்துவத்திற்கு இடையூறாகும். எனினும், ஒவ்வொரு பிரச்னைக்கும் இரண்டு புறங்கள் உண்டு என்பதை நான் உணருகிறேன். சமயத்தில் ரகசிய தத்துவத்திற்கு ஆதரவாக எவ்வளவோ கூறலாம். அதிலிருந்து ஹிந்து சமயம் விடுதலை பெற்றிருக்கவில்லை என்பதும் நிச்சயம்தான். எனினும், அதற்கு நான் உடன்பட்டுத்தீர வேண்டும் என்பதில்லை.

என்னைப் பேட்டி காண்போருக்கு நான் அடிக்கடி ஒரு வேண்டுகோள் விடுத்திருக்கிறேன். என்னை அவர்கள் பேட்டி கண்டு பேசுவார்களாயின் அல்லது என்னைப்பற்றி அவர்கள் ஏதாவது வெளியிட விரும்புவார்களாயின், நான் கூறியதாக அவர்கள் தயாரிக்கும் விவரங்களைத் திருத்துவதற்காகவும் ஒப்பிட்டுப் பார்ப்பதற்காகவும் என்னிடம் காட்டினால் அவர்கள் எனக்கு உதவி செய்தவர்களாவர்; உண்மையுடனும் நடந்து கொண்டவர்களாவர்.

—'எங் இந்தியா'—9—9—1926

பகுதி பதினாறு

# கிறிஸ்தவ சமயமும் இஸ்லாமும்

## 1

## ஒருவர்தான் கடவுளின் புதல்வரா?

"ஏசு நாதரைப்பற்றி உங்களுடைய மன நிலை என்ன?"

ஒரு கிறிஸ்தவப் பாதிரியார் கேட்ட இந்தக் கேள்விக்குப் பதிலாக காந்திஜி கூறியதாவது: "இவ்விஷயமாக நான் பல தடவைகளிலும் தெளிவாகக் கூறியிருக்கிறேன். ஏசு நாதரை, மானிட வர்க்கத்தின் ஒரு மாபெரும் போதகராகக் கருதுகிறேன். எனினும், அவர் ஒருவர்தான் கடவுளின் புதல்வர் என்று நான் கருதவில்லை. உலகாயதமான ரீதியில், அந்த அடைமொழி சிறிதும் ஒப்புக்கொள்ளத்தக்கது அல்ல. ஒரு விதத்தில் நாம் எல்லோருமே கடவுளின் புதல்வர்கள்தான். எனினும், ஒரு விசேஷ அர்த்தத்தில் நம்மில் ஒவ்வொருவருக்கும் வெவ்வேறான கடவுளின் புதல்வர்கள் இருக்கலாம். உதாரணமாக, * சைதன்யர் ஒருவரை மாத்திரமே நான் கடவுளின் புதல்வராகக் கருதலாம்."

**பாதிரியார்:** மனித இயற்கை, குற்றம் குறையற்ற நிறைவு நிலையை அடைய முடியும் என்பதில் உங்களுக்கு நம்பிக்கை இல்லையா? ஏசுநாதர் அத்தகைய நிறைவு நிலையை எய்தினார் என்பதை நீங்கள் நம்பவில்லையா?

**காந்திஜி:** மனித இயற்கை குற்றம் குறையில்லாத நிறைவு நிலையை அடைய முடியும் என்பதில் எனக்கு நம்பிக்கை உண்டு. ஏசுநாதர் சற்றேறக்குறைய அந்நிலையை அடைந்தார். எனினும், ஏசு நாதர் எள்ளளவும் குறையற்றவர் என்று கூறுவது, கடவுளின் உயர்வை மறுப்பதாகும். தவிர, இவ் விஷயத்தில் எனக்கு ஒரு சொந்தக் கொள்கை உண்டு. இந்த உடல், கட்டுப்பாடுகளுக்கு உட்பட்டுத்தான் தீர

---

* சைதன்ய மகாபிரபு (1485-1533) தீவிர ராதாகிருஷ்ண பக்தர். அவர் வங்காளத்தில் பிறந்தவர். விசுவம்பரா என்ற பெயருள்ள அவருக்கு அவரது வாழ்க்கையின் பிற்காலத்தில்தான் சைதன்யர் என்ற பெயர் வழங்கலாயிற்று. பாகவதமும், கீதகோவிந்தமும் அவரது வாழ்க்கையில் ஒரு பெரும் திருப்பத்தை உண்டாக்கி, அவரை தீவிர பக்தி மார்க்கத்தில் ஈடுபடும்படி செய்தன. அவர் யோகத்தில் இருக்கும்போது தம்மை மறந்து கிருஷ்ண பரமாத்மாவுடன் ஐக்கியம் அடைந்துவிடுவது உண்டு.

வேண்டும். எனவே, இந்த உடல் மறைந்த பின்புதான் நாம் குற்றம் குறையற்ற நிறை நிலையை அடைய முடியும். கடவுள் ஒருவர்தான் சிறிதும் குறையற்றவர், முற்றிலும் பரிபூரண மானவர். அவர் பூமியில் இறங்கும்போதுகூட, அவர் தமக்குத் தாமே சில எல்லைகளை விதித்துக் கொள்ளுகிறார்.

ஏசுநாதர், உடலின் எல்லைகளுக்கு உட்பட்டிருந்ததால் தான் சிலுவையில் மாண்டார். ஒரு சமய போதகர் என்ற முறையில் ஏசுநாதரின் பெருமையை நிலை நிறுத்துவதற்கு, அவரது தீர்க்கதரிசனங்களையோ அல்லது அவர் செய்த அற்புதங்களையோ நான் கவனிக்க வேண்டிய அவசியம் இல்லை. மூன்று வருடகாலம் வரையில் அவர் குருவாக இருந்து தொண்டு புரிந்ததைக் காட்டிலும் அதிக அற்புத மானது எதுவும் இருக்க முடியாது. சில ரொட்டிகளைக் கொண்டு ஒரு பெரிய கூட்டத்தினருக்கு அவர் உணவளித் தார் என்ற கதையிலும் அற்புதம் எதுவும் இல்லை. ஒரு மந்திரவாதி அத்தகைய ஜால வேலையைச் செய்துவிட முடியும். ஆனால், ஒரு மந்திரவாதியை மானிடவர்க்கத்தின் ரட்சகர் என்று கூறிவிட முடியுமா? அவ்விதம் கூறுவது ஒரு கெட்டகாலத்திற்குத்தான் அறிகுறியாகும். ஏசுநாதர், செத்தவரை பிழைக்க வைத்ததாகக் கூறப்படுகிறது. அவ ரால் பிழைக்கவைக்கப்பட்டவர்கள் உண்மையிலேயே இறந்தவர்கள்தானா என்றே நான் சந்தேகப்படுகிறேன். என்னுடைய உறவினரின் குழந்தை யொன்று இறந்து விட்ட தாகக் கருதப்பட்டது. அதை நான் பிழைக்கவைத்தேன். அது எவ்விதமெனில், அக் குழந்தை உண்மையில் இறந்து விடவில்லை. எனினும், நான் அங்கே இருந்திராவிட்டால், அந்தப் பெண் குழந்தையை தகனம் செய்திருப்பார்கள். அதற்கு முற்றிலும் உயிர் போய்விடவில்லை என்பதை நான் கவனித்தேன். எனவே, அதற்கு 'எனிமா' கொடுத்தேன். அதன்பின் அதற்கு உயிர் வந்தது. இதில் அற்புதம் எதுவும் இல்லை. ஏசுநாதர் ஆன்மிக சக்தி வாய்ந்தவர் என்பதை நான் மறுக்கவில்லை. மானிட வர்க்கத்தினிடம் அவர் பூரண அன்பு உள்ளவராகவும் இருந்தார். ஆனால், இறந்த ஜனங் களை அவர் பிழைக்க வைக்கவில்லை; இறந்ததாக மற்றவர் களால் கருதப்பட்டவர்களையே பிழைக்கவைத்தார். இயற் கையின் விதிகள் மாறாதவை, மாற்ற முடியாதவை. எல்லைக்கு உட்பட்ட சக்தியுடைய நாம் பல விதமான விஷயங்களைக் கற்பனை செய்து கொள்ளுகிறோம்; கடவுளின் சக்திகளைக் கூட வரையறுக்க முற்படுகிறோம். நாம் கடவுளைப் பின் பற்றலாம்; ஆனால், கடவுளுக்கு நம்மைப் பின்பற்ற வேண்டிய அவசியமில்லை. அவருக்கு நாம் காலத்தைப் பகிர்ந்து அளிக்க முடியாது. அவரது காலத்திற்கு ஆதியும் இல்லை, முடிவும் இல்லை. நமக்கு சென்ற காலம், நிகழ்

காலம், வருங்காலம் என்று உண்டு. ஆதியந்தமற்ற, எல்லை யற்ற காலத்தில், மானிடரின் ஆயுளான நூறு வருடங்கள் ஒரு தூசியே யாகும்.

—'ஹரிஜன்' – 17—4—1937

## 2

# கிறிஸ்தவ சமயம் என்ருல் என்ன?

காந்திஜி ஐரோப்பாவுக்குச் சென்றிருந்த போது, ஏசுநாத ரையும் கிறிஸ்தவ சமயத்தையும் பற்றிப் பலரும் அவரைக் கேள் விகள் கேட்டனர். ஓரிடத்தில் கேட்கப்பட்ட கேள்விக்கு, "கிறிஸ்தவ சமயம் நல்லதுதான், ஆனல், கிறிஸ்தவர்கள் நல்ல வர்கள் அல்ல" என்று காந்திஜி பதில் அளித்தார்.

பாரிசில் நடந்த கூட்டமொன்றில் ஒருவர் காந்திஜியைப் பின்வருமாறு ஒரு கேள்வி கேட்டார்: "ஏசுநாதர் உங்களை அழைக்கும்போது, நீங்கள் ஏன் தேவாலயத்திற்குள் பிரவேசிக்க மறுக்கிறீர்கள்? இந்தியா ஏன் கிறிஸ்தவ சமயத்தை மேற் கொள்ளக் கூடாது?"

மேற்கண்ட கேள்விக்குப் பதிலாக காந்திஜி கூறியதாவது: "ஏசுநாதர் என்பதற்கு கடவுள் என்று அர்த்தமாயின், நான் கடவுளின் ஆலயத்திற்குள் பிரவேசிக்க ஒருபோதும் மறுத்த தில்லை. உண்மையில், அதற்குள் பிரவேசிக்கவே நான் ஒவ்வொரு விநாடியும் முயற்சி செய்துவருகிறேன். ஏசுநாதர் ஒரு நபர் அல்லவாயின், ஆனல் அவர் அகிம்சைக் கொள்கைக்குப் பிரதி நிதியாக விளங்குபவராயின், பாதுகாக்கும் அதன் சக்தியை இந்தியா ஏற்றுக்கொண்டிருக்கிறது."

காந்திஜி கப்பலில் சென்ற போது நடந்த மாலைப் பிரார்த் தனைகளுக்கு சில கிறிஸ்தவ நண்பர்களும் வந்திருந்தனர். ஒரு சமயம், ஏசுநாதரின் மலைப் பிரசங்கத்தைப் பற்றிப் பேசும்படி அவர்கள் காந்திஜியைக் கேட்டுக் கொண்டனர். "அவ்விதம் எதுவும் செய்யும்படி என்னைக் கேட்காதீர்கள். நீங்கள் விரும் பினல், என்னைக் கேள்விகள் கேட்கலாம். ஆனல், நீண்ட பிரசங்கம் செய்யும்படி என்னைக் கேட்கவேண்டாம்" என்ருர் காந்திஜி.

அமெரிக்காவுக்காக ஒரு கிறிஸ்துமஸ் வாழ்த்துச் செய்தியை அளிக்க வேண்டுமென அமெரிக்கா அசோசியேடெட் பிரஸ்ஸைச் சேர்ந்த ஸ்ரீ மில்ஸ் வற்புறுத்தவே, காந்திஜி விருப்பமின்றி பின் வருமாறு சில வார்த்தைகள் கூறினர்:

"கிறிஸ்துமஸ் விழாவில் நடைபெறும் களியாட்டங்கள் எனக்கு ஒரு போதும் திருப்தியளிப்பதில்லை. அவை, ஏசுநாதரின்

வாழ்க்கைக்கும் உபதேசங்களுக்கும் முரணைகத் தோன்றுகின்றன. தார்மிகத் தொண்டுகளைக் கணக்கு எடுப்பதற்காக கிறிஸ்துமஸ் காலத்தை அர்ப்பணம் செய்வதற்கு அமெரிக்கா வழிகாட்ட வேண்டும் என்பதே எனது விருப்பமாகும். மானிட வர்க்கத்திற்குத் தொண்டு செய்யவே ஏசுநாதர் வாழ்ந்து, சிலுவையிலும் மாண்டார். அதே தொண்டிற்கு இந்தக் காலத்தை அர்ப்பணம் செய்ய வேண்டும் என்பதும் எனது விருப்பம்.''

ஹைதராபாத்தில் (தட்சிணம்) தொண்டு செய்துவரும் பெண் பாதிரியாரான ஸ்ரீமதி பார், இலங்கையிலிருந்து வந்துள்ள ஸ்ரீ பூயல் இருவரும் பிரார்த்தனைக் கூட்டங்களுக்கு விடாமல் வந்து கொண்டிருந்தார்கள். ஸ்ரீமதி பார், விடியற் காலையில் நடக்கும் பிரார்த்தனைகளுக்குக்கூட வந்து மிகுந்த அக்கறையுடன் பிரார்த்தனைகளில் கலந்து கொண்டார். எனவே, கிறிஸ்துமஸ் தினத்தன்று ஒரு கிறிஸ்துமஸ் செய்தி கொடுக்க வேண்டுமென ஸ்ரீ பூயல் காந்திஜியை வற்புறுத்தியதால், அந்த வேண்டுகோளுக்கு காந்திஜி இணங்க நேர்ந்தது.

''ஆனல், எப்போது கொடுப்பது?'' என்று கேட்டார் காந்திஜி.

**ஸ்ரீ பூயல்:** எந்த நேரம் உங்களுக்கு வசதியாக இருக்குமோ, அப்போது கொடுங்கள்.

**காந்திஜி:** நல்லது, அப்படியானல் காலை 4 மணிக்குக் கொடுக்கிறேன்.

இதைக் கேட்டதும் ஸ்ரீ பூயல் திகைத்துப் போய்விட்டார்.

**காந்திஜி:** நீங்கள் விரும்பினல், 4-30 மணிக்கு வைத்துக்கொள்வோம்.

**ஸ்ரீ பூயல்:** அந்த நேரத்தில் வெகு சிலர்தான் வரமுடியும்.

**காந்திஜி:** ஒருவரோ அல்லது இருவரோ வந்தால்கூட போதுமானது.

**ஸ்ரீ பூயல்:** இல்லை, நான் முன்னறிவிப்பு ஒன்றைத் தயாரித்து வைத்துவிடுகிறேன்.

**காந்திஜி:** அப்படி யெல்லாம் ஒன்றும் செய்துவிடாதீர்கள். கிறிஸ்துமஸ் செய்தி கோரி யார் விருப்பத்தைத் தெரிவித்தார்களோ, அவர்கள் 4-30 மணிக்கு வந்துவிடட்டும்.

வெகு நேரம் தயங்கிய பின், ஸ்ரீமதி பாரும் ஸ்ரீ பூயலும் காந்திஜி கூறியதற்கு இணங்கினர். கிறிஸ்துமஸ் நாளன்று குறிப்பிட்ட நேரத்தில் ஆறு பேர்கள் வந்தனர்.

முதலில் ஏசுநாதரின் ஜனனத்தைப் பற்றிய கீதம் பாடப்பட்டது. பிறகு புதிய ஏற்பாட்டிலிருந்து சில பகுதிகளை வாசித்

தார்கள். பின்னர் கிறிஸ்துமஸ் தினத்தைப் பற்றி தமது கருத்து என்ன என்பதை விளக்கி காந்திஜி பேசினார். அவரது பிரசங்கத்தின் முழு விவரமும் கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது :

கிறிஸ்தவ சமயத்திற்கு வெளியிலுள்ள என் போன்ற ஒருவனுக்கு, புதிய ஏற்பாட்டில் உள்ள ஏசுநாதரின் வரலாறு எவ்விதம் மிகுந்த வியப்பைக் கொடுத்தது என்பதை உங்களுக்கு நான் கூறுகிறேன். நாற்பது ஆண்டுகளுக்கு முன் புதிய ஏற்பாட்டின் மூலம்தான் நான் பைபிளை அறிமுகம் செய்து கொண்டேன். அப்போது பழைய ஏற்பாட்டில் எனக்கு அதிக அக்கறை ஏற்படவில்லை. நான் ஒரு ஹோட்டலில் சந்தித்த ஒரு நண்பருக்கு அளித்திருந்த வாக்குறுதியை நிறைவேற்றுவதற்காக மாத்திரமே புதிய ஏற்பாட்டை வாசித்தேன். ஆனால், புதிய ஏற்பாட்டையும் மலைப் பிரசங்கத்தையும் நான் வாசித்தபோது தான், கிறிஸ்தவ சமய உபதேசத்தை என்னால் நன்கு அறிந்து கொள்ள முடிந்தது. மலைப் பிரசங்கத்தில் அடங்கிய உபதேசமானது, நான் சிறு வயதில் கற்றுக்கொண்ட விஷயங்களையே பிரதிபலிப்பதாக இருந்தது; அது என் வாழ்க்கையின் ஓர் அம்சமாகவே தோன்றியது; என்னைச் சுற்றி தினசரி வாழ்க்கையில் அந்த உபதேசம் செயல்பட்டு வருவதாகவும் எனக்குத் தோன்றியது.

தீமையை எதிர்ப்பதோ, எதிர்த்துத் தாக்குவதோ கூடாது என்பதே இந்த உபதேசமாகும். நான் படித்த எல்லாவற்றையும் காட்டிலும் இதுதான் என் மனத்தில் ஆழ்ந்து பதிந்தது. பின்னர் இது என் மனத்தை விட்டு அகலவேயில்லை. ஏசுநாதர் ஒரு புதிய தருமத்தை ஸ்தாபிக்க வந்தார் என்றே எண்ணினேன். ஆனால், ஒரு புதிய தருமத்தை உபதேசிப்பதற்காகத் தாம் வரவில்லை என்றும், பலதரப்பட்ட பழைய தருமத்துடன் ஏதோ ஒன்றை இணைப்பதற்காகவே தாம் வந்திருப்பதாகவுமே அவர் கூறினார். எனினும், அது ஒரு புதிய தருமமாகத் தோன்றும்படி அவர் பழைய தருமத்தை அடியோடு மாற்றிவிட்டார். ஒரு கண்ணுக்குப் பதிலாக ஒரு கண்ணையும், ஒரு பல்லுக்குப் பதிலாக ஒரு பல்லையும் வாங்கிவிட வேண்டும் என்று அவர் கூறவில்லை; பிறர் ஓர் அடிகொடுத்தால் இரண்டு அடிகளை வாங்கிக் கொள்ளத் தயாராக இருக்கவேண்டும் என்றும், பிறர் உங்களை ஒரு மைல் தூரம் செல்லத் தயாராக இருக்க வேண்டும் என்று கூறினால், நீங்கள் இரண்டு மைல் தூரம் செல்லத் தயாராக இருக்கவேண்டும் என்றும் அவர் கூறினார்.

உண்மையான கிறிஸ்தவர்களுடன், அதாவது, கடவுளிடம் பயந்து வாழும் கிறிஸ்தவர்களுடன் எனது தொடர்பு அதிகமாக ஆக, ஒரு கிறிஸ்தவராக வாழ விரும்புவோருக்கு, மலைப் பிரசங்கத்தில் கிறிஸ்தவ சமயம் முழுதும் அடங்கியிருக்கிறது என்பதைக் கண்டேன். அந்த மலைப் பிரசங்கமே, ஏசுநாதர் மீது எனக்கு பக்தி ஏற்படும்படி செய்தது.

சரித்திரம் கூறும் ஏசுநாதர் விஷயத்தில் எனக்கு ஒரு காலத்திலும் அக்கறை ஏற்பட்டதில்லை என்று நான் கூறலாம். ஏசுநாதர் என்ற பெயருள்ள ஒருவர் ஒரு காலத்திலும் வாழ்ந்ததில்லை என்றும், பைபிளில் கூறப்பட்டிருப்பவையெல்லாம் அதை எழுதியவரின் கற்பனையே என்றும் நிரூபிக்கப்பட்டால்கூட, அதைக் குறித்து நான் கவலைப்படமாட்டேன். அப்போதுகூட, மலைப் பிரசங்கத்தை நான் உண்மையானதாகவே கருதுவேன்.

மலைப் பிரசங்கத்தை அடிப்படையாகக் கொண்ட கிறிஸ்தவ சமயம், எல்லா எல்லைகளுக்கும், புத்தக உபதேசங்களுக்கும் அப்பாற்பட்டதாகும். அது விவரிக்க முடியாதது, யாருக்கும் உபதேசிக்க முடியாதது; வாய்ப் பேச்சின்மூலம் ஒருவர் மற்றொருவருக்கு எடுத்துக் கூற முடியாதது. ஆனால், அது ஒருவருடைய இதயத்திலிருந்து மற்றொருவருடைய இதயத்தில் பதியக் கூடியது. எனினும், பொதுவாக இந்த முறையில் கிறிஸ்தவ சமயத்தை யாரும் அறிந்துகொள்ளவில்லை.

எப்படியோ கடவுளின் அருளால், கிறிஸ்தவர்கள் என்று கூறப்படுவோரால் பைபிள் அழிக்கப்பட்டுவிடாமல் காப்பாற்றப் பட்டுளது. பிரிட்டன் முதலிய வெளிநாட்டு பைபிள் சங்கத்தின் முயற்சியால் பைபிள் பல பாஷைகளிலும் மொழிபெயர்க்கப் பட்டுள்ளது. அதெல்லாம் ஒரு காலத்தில் உண்மையான பலனை அளிக்கலாம். ஜீவசக்தி வாய்ந்த ஒரு சமயத்தின் ஆயுளில் இரண்டாயிரம் ஆண்டுகள் பெரிதல்ல. ‘கடவுளின் மகத்துவமும், பூமியில் அமைதியும்’ என்று நாம் பாடுகிறோம். ஆனால், இன்று கடவுளுக்கு மகத்துவமோ, பூமியில் அமைதியோ எதுவும் இல்லை.

உண்மையான அமைதி நிலைநிறுத்தப்படும்போது, ருசுக்கள் எதுவும் தேவையில்லை. அது நமது வாழ்க்கையிலேயே, தனி நபரின் வாழ்க்கையில் மாத்திரமல்ல, சமூக வாழ்க்கையிலும் பிரதிபலிக்கும். அப்போதுதான் ஏசுநாதர் பிறந்துள்ளார் என்று நாம் கூறமுடியும். அப்போது நாம், வருடத்தில் ஒரு குறிப்பிட்ட தினத்தை மாத்திரம் ஏசுநாதர் பிறந்த தினமாகக் கருத மாட்டோம்; எப்போதுமே வாழ்க்கையில் பின்பற்றவேண்டிய ஒரு சம்பவமாகவே கருதுவோம்.

மூலாதாரமான சமயத்தைப்பற்றி நான் எவ்வளவுக்கு அதிகமாகச் சிந்திக்கிறேனோ, தலைமுறை தலைமுறையாக வந்துள்ள பல்வேறு சமய போதகர்களையும் பற்றிய அதிசயமான கற்பனைகளை நான் எவ்வளவுக்கு அதிகமாகச் சிந்திக்கிறேனோ அவ்வளவுக்கு, அவர்களுக்குப் பின் உள்ள மேலே குறிப்பிட்ட நிரந்தரமான உண்மையை நான் காண்கிறேன். அதற்கு, முத்திரையோ அல்லது பிரகடனமோ தேவையில்லை. அமைதியை நோக்கி இடைவிடாமல், எப்போதும் முன்னேறிச்செல்லும் வாழ்க்கையை நடத்துவதிலேயே அது அடங்கியிருக்கிறது.

எனவே, 'கிறிஸ்துமஸ் பண்டிகை மகிழ்ச்சியைக் கொடுக் கட்டும்' என்று அதன் அர்த்தத்தைச் சிந்திக்காமலேயே ஒருவர் வாழ்த்துக் கூறும்போது, அது அர்த்தமற்ற வெறும் சம் பிரதாயப் பேச்சாகிவிடுகிறது. எல்லோரும் சமாதானமாக வாழ வேண்டும் என்று ஒருவர் வாழ்த்துவதாக இருந்தாலொழிய, ஒருவர் தனக்குத் தானே அமைதியை விரும்பமுடியாது. தம்மைச் சுற்றிலும் எங்கும் அமைதி நிலவ வேண்டும் என்ற பேரார்வம் ஒருவருக்கு இருந்தாலொழிய, அவர் அமைதியாக வாழ முடியாது. பகைமைக்கு மத்தியில் நீங்கள் நிச்சயமாக அமைதியை அனுபவிக்க முடியும். ஆனல், பகைமையை ஒழிப்ப தற்காக நீங்கள் உங்களுடைய வாழ்க்கை முழுவதையும் அர்ப்பணம் செய்தால்தான், உங்களை நீங்களே வதைத்துக் கொண்டால்தான் அத்தகைய அமைதி உங்களுக்கு ஏற்பட முடியும்.

இந்தச் சூருவளி வாழ்க்கையில் ஏசுநாதரின் அதிசய மான பிறப்பு நிரந்தரமான ஒரு விசேஷமாகும். எனவே, சிலுவையில் ஏசுநாதரின் மரணத்தைப்பற்றிச் சிந்திக்காமல் ஜனனத்தைப்பற்றிச் சிந்திக்க நாம் துணிவதில்லை. ஜீவசக்தி வாய்ந்த ஏசுநாதர் என்பதற்கு ஜீவ சக்திவாய்ந்த சிலுவை என்பதே பொருளாகும். அவ்விதம் இராவிடில், வாழ்க்கை நடைப் பிணத்திற்கு ஒப்பாகிவிடும்.

—'எங் இந்தியா' - 31—12—1931

# 3

# ஏசுநாதரும் நானும்

**கேள்வி:** ஏசுநாதரின் உபதேசங்கள் சம்பந்தப்பட்டவரையில் உங்களுடைய நிலை என்ன?

**பதில்:** அவரது உபதேசங்களில் எனக்கு மிகுந்த மதிப்பு உண்டு. எனினும், கடவுளைப்பற்றி பைபிளில் கூறப்பட்டுள்ள ஒவ் வொரு வார்த்தையையும் முடிவானதாக நான் கருதவில்லை; தார்மிக ரீதியாக ஒவ்வொரு வார்த்தையும் ஒப்புக்கொள்ளத் தக்கது என்றும் நான் கருதவில்லை. மானிட வர்க்கத்தின் மகத்தான சமய போதகர்களில் ஏசுநாதரும் ஒருவர் என்பதே எனது அபிப்பிராயமாகும். ஆனல், 'அவர் ஒருவர்தான் கடவுளின் புதல்வர்' என்றும் நான் நினைக்க வில்லை. பைபிளில் உள்ள பல பகுதிகள் மர்மமாக இருக் கின்றன. அதில் உள்ள சொற்களைக் காட்டிலும் அவற்றில் பொதிந்து கிடக்கும் தத்துவத்தையே மேலானதாக நான் கருதுகிறேன்.

—'எங் இந்தியா' – 25—2—1926

# 4

# புதிய சமயமல்ல, புதிய வாழ்க்கையே

ரட்சண்ய சேனையின் அலுவல்களை ஆராய்ச்சி செய்த ஒரு நண்பர் பின்வரும் சுவையான குறிப்பை எனக்கு அனுப்பி யிருக்கிறார் :

"ரட்சண்ய சேனை முக்கிய அம்சங்களில் ஒரு சமய ஸ்தாபனமே. தீவிர மாக கிறிஸ்தவ சமயத்தைப் போதித்து மத மாற்றம் செய்வதே அதன் விசேஷ அம்சமாகும். ரட்சண்ய சேனை செய்துவரும் சமுதாயத் தொண்டு, 'மத மாற்றம் செய்வதற்கான வழியைச் செப்பனிடுவதற்காக சமூகத் தீமைகளை எதிர்த்துப் போராடும் ஒரு முறையே என்று அந்த சேனைத் தலைவர்களால் கருதப்படு கிறது'. இவ்விதம் பிரிட்டிஷ் பேரகராதியே (Encyclopaedia Britannica) கூறுகிறது. அது மேலும் கூறுவதாவது: 'குறிப்பாக பெரிய நகரங்களில் வாழும் மக்களில் பலருடைய ஸ்தூலமான நிலைமையும் சுற்றுப்புற நிலைமையும் காரணமாக, சேனை யின் ஆன்மிகச் செய்தியை அறிந்து கொள்ளுவது அவர்களுக்கு மிகவும் கஷ்ட மாக இருக்கிறது. அதனால்தான் பல்வேறு சமுதாயத் தொண்டுகளில் அது ஈடுபட்டிருக்கிறது. அந்தத் தொண்டுகளின் நோக்கம் ஒன்றுதான்.' சமுதாயத் தொண்டு மீனைக் கவரும் ஓர் இரையே என்றும், மீனை இழுப்பதற்கான தூண்டில்தான் ரட்சண்ய சேனை என்றும் ஜெனரல் பூத்* அவரது மகனுக்கு எழுதிய கடிதம் ஒன்றில் கூறியிருக்கிறார்.

" 'கடவுளின்றியும், நம்பிக்கையின்றியும் வாழ்ந்துவரும் ஏழைகளான பாமர மக்களை கிறிஸ்தவ சமயத்திற்கு மாற்றுவதே ரட்சண்ய சேனையின் அலு வலும் லட்சியமும் ஆகும்' என்று அதன் ஸ்தாபகர் கூறுகிறார். 'ரட்சண்ய சேனை யைச் சேர்ந்த ஒவ்வொருவரும் மற்றவர்களின் மோட்சத்திற்கு வழிகாட்ட கட வுளின் முன்னிலையில் பொறுப்பாளியாக இருக்கிறார். நேரடியான தொடர்பு, நேரடியான பேச்சு, நேரடியான முயற்சி முதலியவற்றின் மூலம் சேனையைச் சேர்ந்த ஒவ்வொருவரும் மத மாற்ற முயற்சியில் ஈடுபட வேண்டியது அத்தி யாவசியமான கடமையாகும்' என்று, 1937–ஆம் வருடத்திய ரட்சண்ய சேனை யின் அறிக்கையில் கூறப்பட்டிருக்கிறது. ரட்சண்ய சேனையைச் சேர்ந்த 'ஒவ் வொரு சிப்பாயும் ஆன்மாவை வெற்றிகொள்ள வேண்டும்' அதாவது மத மாற் றம் செய்ய வேண்டும் என்பது அவர்களுடைய சுலோகமாக இருந்து வரு கிறது."

ரட்சண்ய சேனையைப்பற்றிக் கூறப்பட்டுள்ள இந்த விவரம், அநேகமாக எல்லாக் கிறிஸ்தவ சமய சங்கங்கள் சம்பந் தப்பட்டவரையிலும் உண்மையாகும். அவர்கள் செய்யும் சமுதாயத் தொண்டு, மக்களுக்குத் தொண்டு செய்ய வேண்டும் என்பதற்காக மேற்கொள்ளப்படுவதில்லை. அந்தத் தொண்டு யாருக்காக செய்யப்படுகிறதோ, அவர்கள் மதம் மாறவேண்டும்

---

* ஜெனரல் வில்லியம் பூத் (1829–1912). 1878–இல் ரட்சண்ய சேனையை ஸ்தாபித்தார். சமுதாயத் தொண்டுகள் புரிவதும், அவற்றின்மூலம் கிறிஸ்தவ சமயத் தைப் பாமர மக்களிடையே பரப்புவதுமே அந்தச் சேனையின் லட்சியமாகும்.

என்பதே அதன் நோக்கமாகும். கிறிஸ்தவர்கள் நம்மிடையே வாழ்க்கையை வாழ்ந்து காட்டுவதற்காக இந்தியாவுக்கு வந்து, அவர்களுடைய வாழ்க்கையின் நறுமணம், அவ்விதம் ஏதாவது இருந்தால், நம்மிடையே ஊடுருவிப் பரவும்படி செய்திருந்தால், இந்தியாவின் சரித்திரமே வேறுவிதமாக எழுதப்பட்டிருக்கும். அவ்விதமாயின், எள்ளளவும் சந்தேகத்திற்கு இடமின்றி பரஸ்பரம் நல்லெண்ணம் ஏற்பட்டிருக்கும். 'ஏசுநாதர் சம்பந்தமாக நீங்கள் கூறுவது சரியாக இருக்குமாயின், இன்று கிறிஸ்தவர்களே இருக்கமாட்டார்கள்' என்று சிலர் என்னிடம் கூறுகின்றனர். இதற்கு நான் பதில் கூற முற்பட்டால், வாக்குவாதத்தில் இறங்க வேண்டியிருக்கும். அவ்விதம் செய்ய எனக்கு விருப்பமில்லை. எனினும், ஏசுநாதர் ஒரு புதிய வாழ்க்கை முறையை உபதேசித்தாரேயன்றி, ஒரு புதிய சமயத்தை உபதேசிக்கவில்லை. செய்த பாவங்களுக்காக வருந்தும்படி அவர் மானிடரைக் கேட்டுக் கொண்டார். 'ஆண்டவனே, ஆண்டவனே, என்று என்னிடம் கூறும் ஒவ்வொருவரும் சொர்க்கத்திற்குள் பிரவேசிக்க முடியாது; ஆனால், அங்கே உள்ள எனது தந்தையின் கட்டளையை நிறைவேற்றுவோரே சொர்க்கத்திற்குள் பிரவேசிக்கமுடியும்' என்று கூறியவர் ஏசுநாதர்தான்.

—'ஹரிஜன்' – 12—6—1937

## 5

# பைபிள்

ஏசுநாதரின் வாழ்க்கையைப்பற்றி என்னுடைய விளக்கத்தைக் கூறும்படி நீங்கள் என்னைக் கேட்கிறீர்கள். நல்லது. நான் ஒன்று கூறலாம். அதாவது பைபிளில் உள்ள எல்லாம் சரித்திர பூர்வமான உண்மை என்று நான் ஒப்புக்கொள்ள முடியாது. ஏசுநாதர் அவரது மக்களிடையே தொண்டு புரிந்து கொண்டிருந்தார் என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். அழிப்பதற்காகத் தாம் வரவில்லை என்றும், பூர்த்தி செய்யவே தாம் வந்ததாகவும் அவர் கூறினர். மலைப் பிரசங்கத்திற்கும் பால் எழுதிய கடிதங்களுக்கும் மிகுந்த வேற்றுமை உண்டு என்பதே எனது அபிப்பிராயமாகும். அக் கடிதங்கள், ஏசுநாதரின் உபதேசங்களுடன் இணைக்கப்பட்டவை; ஏசுநாதரின் அனுபவத்திற்குப் புறம்பாக பாலின் சொந்த விளக்கத்தை உடையவை.

—'எங் இந்தியா' - 19—1—1928

# 6

# பைபிளை மீண்டும் வாசியுங்கள்

பெங்களூரைச் சேர்ந்த பாதிரியார்களுக்கும் காந்திஜிக்கும் கிறிஸ்தவ சமயத்தைப் பற்றி வாதம் நடந்தபோது, அவர்கள் யாருக்காகத் தொண்டு செய்வதாய்க் கூறுகிறார்களோ அவர்கள் விஷயத்தில் பாதிரிமார் தங்களுடைய போக்கைத் திருத்திக் கொள்ள வேண்டும் என்று காந்திஜி கூறினர். காந்திஜி கூறியதாவது :

"தென்னாப்பிரிக்காவில் பாதிரிமார்களுடன் எனக்கு நெருங்கிய தொடர்பு ஏற்பட்டதிலிருந்து, நான் பாதிரிமார்களின் நண்பனாக இருந்துவருகிறேன். நான் அவர்களுடைய நண்பனாக இருப்பினும், அவர்களுடைய குறைகளை நான் எப்போதுமே எடுத்துக் கூறி வந்திருக்கிறேன். அவர்களைக் குறைகூற வேண்டும் என்பது எனது ஆர்வம் அல்ல. அவர்களுடைய உணர்ச்சிகளைப் புண்படுத்துவதாக இருந்தாலும் கூட, எனது இதயத்தில் உள்ளதை அவர்களிடம் கூறினல்தான் நான் அவர்களுடைய சிறந்த நண்பனாக இருப்பேன் என்று எனக்குத் தோன்றுகிறது. எனது கண்டனங்களைக் குறித்து அவர்கள் ஒருபோதும் கோபம் கொண்டதே இல்லை. அவர்களுடைய மனம் புண்பட்டதாக நான் நினைக்கும்படி அவர்கள் நடந்துகொண்டதே இல்லை. சுதேசி சாதனங்களைப் பற்றியே இந்தியாவிலுள்ள பாதிரிமார்களிடம் நான் முதன் முதலாகப் பேசினேன். அதன் பின் பன்னிரண்டு ஆண்டுகள் உருண்டோடிவிட்டன. இந்தப் பன்னிரண்டு ஆண்டுகளில் அவர்களுடைய கண்களை மறைத்திருந்த மூடுபனியில் பெரும் பகுதியும் விலகிவிட்டது.

"பாதிரிமார்களான உங்களுடைய அலுவல்களுக்கும் என் அலுவல்களுக்கும் முதன் முதலாக உள்ள வேற்றுமையை நான் குறிப்பிட விரும்புகிறேன். மக்களின் நம்பிக்கையை நான் பலப்படுத்தி வருகிறேன். நீங்களோ, அந்த நம்பிக்கையைச் சீர்குலைத்து வருகிறீர்கள். மக்களின் நம்பிக்கைகள் பக்குவ மற்றவையாக இருக்கலாம். எனினும், மக்களுக்கு அவை மிகவும் மதிப்பு வாய்ந்தவையாகவே இருக்கின்றன. அவர்களுடைய நம்பிக்கைகளை நிரந்தரமான உண்மைகளாக நீங்கள் கருதி அவர்களுக்குத் தொண்டுபுரிந்தால், உங்களுடைய தொண்டு மிகவும் சிறப்பு வாய்ந்ததாக இருக்கும். இப்போது நம்மைச் சுற்றிலும் என்ன நிகழ்ந்துகொண்டிருக்கிறது என்பதை முக்கியமாகக் கொண்டு நீங்கள் பைபிளை மறுபடியும் வாசிக்க வேண்டியது அவசியமாகும். அப்போதுதான் நீங்கள், நான் கூறுவதை நன்கு உணர்ந்துகொள்ள முடியும். பைபிளில் உள்ள சொற்கள் ஒரே விதமாகத்தான் இருக்கின்றன. அதன் உட்பொருள் எப்போதும் தீவிரமாகவும், பரந்த முறை

யிலும் விரிவடைந்து வருகிறது. இன்று கண்டுபிடிக்கப்பட்டுள்ள, விஞ்ஞான முறைகளை யல்ல, எல்லா சமயங்களுக்கும் பொதுவான நேரடியான ஆன்மிக அனுபவங்களை முக்கியமாகக் கொண்டு பைபிளில் உள்ள பல விஷயங்களுக்கும் புதிய விளக்கம் கொடுக்க வேண்டியது அவசியமாகும். செயின்ட் ஜானின் முக்கிய வசனங்களை புதிய விளக்கங்களுடன் மீண்டும் வாசிக்க வேண்டியது அவசியமாகும். நம் போன்ற மனிதர்கள், ஒவ்வொரு கட்டத்திலும் பெறும் அனுபவம் காரணமாக வளர்ச்சி யடைவது போலவே, சொற்களில் அடங்கியுள்ள உட்பொருளும் வளர்ச்சி யடைகின்றது. உதாரணமாக, எல்லாவற்றையும் காட்டிலும் மிகச் சிறந்த 'கடவுள்' என்ற சொல்லில் அடங்கியுள்ள பொருள்கள் நம்மில் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு விதமாகத் தோன்றுகின்றன. ஒவ்வொருவருடைய அனுபவத்திலும் அவை வெவ்வேருகத் தோன்றுகின்றன. கடவுளையும், ஹிந்து சமயத்தையும் பற்றி நான் கூறும் விளக்கத்தை சனாதனிகள் நிராகரித்து விடுவார்கள். ஆனால் இறைவனே, எவ்வளவோ காலமாக தூற்றுதல்களையும் தவருன விளக்கங்களையும் பொறுமையுடன் சகித்துக்கொண்டு வருகிருர். ஆன்மிக சம்பந்தமான அனுபவங்களையெல்லாம் ஒன்று சேர்த்து நாம் கவனிப்போமாயின், அவற்றின் பலன் மனித இயற்கையின் அபிலாஷைகளுக்கு விடை அளிப்பதாக இருக்கிறது.

"கிறிஸ்தவ சமயம் தோன்றி 1900 ஆண்டுகளாகின்றன. இஸ்லாம் தோன்றி 1300 வருடங்களாகின்றன. இவற்றினல் என்னென்ன சாத்தியமாகும் என்பதை யார் அறிவார்? வேதங்களை அவற்றின் ஆதி மொழியில் நான் வாசித்ததில்லை. ஆனல், அவற்றின் கருத்தைப் பின்பற்றி நடக்க நான் முயற்சித்து வந்திருக்கிறேன். வேதங்கள் தோன்றி 13,000 ஆண்டுகள் சென்றிருக்கலாம் அல்லது பத்து லட்சம் ஆண்டுகள் கூடச் சென்றிருக்கலாம். ஏனெனில், கடவுள் என்ற சொல் கடவுளைப் போலவே மிகத் தொன்மையானது அல்லவா? அப்படிப்பட்ட வேதங்களுக்குக் கூட நமது அனுபவங்களை முக்கியமாகக் கொண்டு விளக்கம் கொடுக்க வேண்டுமென்று கூற நான் தயங்கியதில்லை. நமது அறிவுக்கு எல்லைகள் உண்டு. எனவே, அதைக்கொண்டு கடவுளின் சக்திக்கும் நாம் எல்லைகள் கட்டிவிடக் கூடாது. எனவே, இந்தியாவுக்கு உபதேசம் செய்வதற்காக வந்துள்ள உங்களுக்கு நான் கூறுவது என்னவெனில், நீங்கள் எடுத்துக் கொள்ளாமல் கொடுக்க முடியாது என்பதுதான். அனுபவங்களாகிய சிறப்பு மிக்க பொக்கிஷங்களை நீங்கள் கொடுப்பதற்காக வந்திருந்தால், இந்த நாட்டிலுள்ள பொக்கிஷங்களையும் ஏற்றுக் கொள்ள நீங்கள் உங்களுடைய இதயத்தைத் திறந்து வையுங்கள். அதன் காரணமாக நீங்கள் ஏமாற்றம் அடையும்படி நேராது. பைபிளின் உபதேசத்தை நீங்கள் தவருக உணர்ந்து கொண்டதாகவும் ஆகாது."

**கேள்வி:** அப்படியானால், இப்போது நாங்கள் என்ன செய்து கொண்டிருக்கிறோம்? நாங்கள் செய்வது சரியா?

**பதில்:** சரியான காரியத்தை நீங்கள் தவறான வழியில் செய்ய முயற்சித்து வருகிறீர்கள். மக்களின் நம்பிக்கையைச் சீர் குலைப்பதற்குப் பதிலாக நீங்கள் அதை நிறைவு பெறும்படி செய்யவேண்டும். ஹிந்து சமயத்தைச் சேர்ந்த ஆதி கர்நாடகர்களைச் சிறந்த ஹிந்துக்களாகச் செய்ய வேண்டும் என்று மைசூர் திவான் அண்மையில் கூறியதைப் போல், எங்களை சிறந்த ஹிந்துக்களாக, அதாவது சிறந்த ஆடவர்களாகவும் பெண்களாகவும் இருக்கும்படி செய்யுங்கள் என்றே நான் உங்களுக்குக் கூறுவேன். ஒருவர் கிறிஸ்தவராக மாறி விட்டால் கூட, அவரை அவரது சுற்றுப் புறங்களிலிருந்து ஏன் பிரித்துச் செல்லவேண்டும்? ஒரு கிறிஸ்தவராக மாற வேண்டுமாயின் ஒரு கையில் பீர் புட்டியும் மற்றொரு கையில் மாட்டிறைச்சியும் வைத்துக்கொள்ள வேண்டும் என்று நான் சிறு பையனாக இருந்தபோது கேள்விப்பட்டேன். ஆனால், இப்போது நிலைமை அபிவிருத்தி யடைந்திருக்கிறது. எனினும், கிறிஸ்தவ சமயம் என்றால் தேசியத் தன்மைக்கு உலைவைப்பதும், ஐரோப்பிய மயமாக்குவதும்தான் என்ற அபிப்பிராயம் சாதாரணமாக இருந்து வருகிறது. நாங்கள் சிறந்த மக்களாவதற்கு எங்களுடைய எளிய வாழ்க்கையை விட்டுவிட வேண்டுமா? எங்களுடைய எளிய வாழ்க்கையை உருக்குலைத்து விடாதீர்கள்.

**கேள்வி:** தொண்டு செய்வது, உபதேசம் செய்வது என்ற இரண்டு பிரச்னைகள் மாத்திரமல்ல, மூன்றாவது பிரச்னையான கிறிஸ்தவ சமயப் பிரசாரமும் இருக்கிறது. அதாவது, ஏசு நாதர் பிறந்த சந்தோஷச் செய்தியையும், நமது பாவங்களி லிருந்து நம்மை மீட்பதற்காக அவர் மரணம் அடைந்த செய்தியையும் பிரகடனம் செய்வதாகும். அந்த நல்ல செய்தியை அறிவிப்பதற்கான நல்ல வழி என்ன? நாங்கள் மக்களின் நம்பிக்கையைத் தகர்க்க வேண்டிய அவசியமில்லை. தரக் குறைவான விஷயங்களில் கொண்டுள்ள உன்னத நம்பிக்கையை மக்கள் இழக்கும்படி நாங்கள் செய்யலாம் அல்லவா?

**பதில்:** அதுதான், விளக்கத்தைப் பற்றி நான் குறிப்பிடும்படி செய்கிறது. 1900 ஆண்டுகளுக்கு முன்தான் கடவுள் சிலு வையைச் சுமந்து சென்றார் என்று நான் கூறமுடியாது. ஆனால், அவர் இன்றும் சிலுவையைச் சுமந்து செல்லுகிறார். 2000 ஆண்டுகளுக்கு முன் இறந்த ஒரு சரித்திர புருஷரான கடவுளை நம்பிக்கொண்டிருப்பதாயின், உலகத்திற்கு அதிக ஆறுதல் எதுவும் ஏற்பட்டுவிடாது. எனவே, சரித்திரம் கூறும் கடவுளைப் பற்றி உபதேசம் செய்யாதீர்கள்; ஆனால், உங்களுடைய வாழ்க்கையின் மூலம் அவர் இன்று வாழ்வது போல் காட்டுங்கள். தென்னாப்பிரிக்காவில் நான் பல

நண்பர்களைச் சந்தித்தேன்; பல புத்தகங்களை வாசித்தேன். பியர்சன், பார்க்கர், பட்லர் முதலியோர் பைபிளுக்கு தங்கள் தங்களுடைய சொந்த விளக்கங்களைக் கொடுத்திருக்கிறார்கள். இந்த முரண்பாடான விளக்கங்களைக் குறித்து என்னை நான் அலட்டிக்கொள்ளக் கூடாது என்று எனக்குள் சொல்லிக் கொண்டேன். நம்முடைய வாய்ச் சொற்களைக் காட்டிலும் நம்முடைய வாழ்க்கை முறைகளையே நமக்காகப் பேசும்படி செய்வது சிறந்தது. ஸ்ரீ சி. எப். ஆண்ட்ரூஸ் ஒருபோதும் உபதேசிப்பதில்லை. அவர் இடைவிடாது அவரது வேலையைச் செய்து வருகிறார். அவருக்குப் போதிய அலுவல்கள் இருக்கின்றன. அலுவல்கள் எங்கே இருக்கின்றனவோ அங்கே அவர் தங்கிவிடுகிறார். நேர்மையுள்ள நூற்றுக்கணக்கான கிறிஸ்தவர்களை நான் அறிவேன். ஆனால், ஆண்ட்ரூசைக் காட்டிலும் சிறந்த ஒருவரை நான் கண்டதில்லை.

**கேள்வி:** ஆனால், மூட நம்பிக்கைகளைக் குறித்து நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்? அவற்றைத் திருத்தவேண்டாமா?

**பதில்:** தீண்டாதார், பிற்போக்கானவர்கள் என்று கூறப்படும் வகுப்பினருடன் நாங்கள் வேலை செய்துவருகிறோம். அவர்களுடைய நம்பிக்கைகளைப் பற்றி, அவை மூட நம்பிக்கைகளாக இருந்தாலும் சரி அல்லது வேறு நம்பிக்கைகளாக இருந்தாலும் சரி, நாங்கள் எங்களை ஒருபோதும் அலட்டிக் கொண்டதில்லை. நாம் சரியான வாழ்க்கையை நடத்த முற்பட்ட உடனேயே மூடநம்பிக்கைகளும், விரும்பத்தகாத விஷயங்களும் மறைந்து விடுகின்றன. அவர்களுடைய நம்பிக்கைகளைப் பற்றி நான் கவலைப்படவில்லை. ஆனால், சரியான காரியத்தைச் செய்ய வேண்டும் என்றே அவர்களை நான் கேட்கிறேன். அவர்கள் அவ்விதம் செய்யத் தொடங்கியதுமே, அவர்களுடைய நம்பிக்கைகள் தாமாகவே சீராகிவிடும்.

**கேள்வி:** எங்களுடைய கிறிஸ்தவ சமய உண்மை மாத்திரம்தான் சத்தியமானது என்று நாங்கள் கருதினால், மற்றவர்களைக் கண்டிக்காமல் இருக்க முடியுமா?

**பதில்:** அப்போதுதான் சகிப்புத்தன்மை என்ற கடமையைப் பற்றி நான் கூற வேண்டியிருக்கிறது. உங்களுடைய சமயம் எவ்வளவு உண்மையோ அதைப் போல் மற்ற சமயங்கள் உண்மையல்ல என்று நீங்கள் கருதினால், மற்றவர்களையாவது உங்களைப் போல் உண்மையானவர்கள் என்று நீங்கள் கருத வேண்டும். சகிப்புத் தன்மையற்ற கிறிஸ்தவப் பாதிரிமார்கள் சில ஆண்டுகளுக்கு முன் நடந்துகொண்டதைப் போல இப்போது அருவருக்கத்தக்க முறையில் நடந்து கொள்ளுவதில்லை. இதைக் குறித்து மகிழ்ச்சி அடைகிறேன். கிறிஸ்தவ சமய இலக்கிய சங்கத்தின் வெளியீடுகளில்

ஹிந்து சமயத்தைக் கேலி செய்து சித்திரித்திருப்பதைப் பாருங்கள். நான் கிறிஸ்தவ சமயத்தைத் தழுவினாலன்றி, எனது தொண்டுகள் யாவும் உதவாக்கரையாகிவிடும் என்று அன்றொரு நாள் ஒரு மாது எனக்கு எழுதியிருந்தார். கிறிஸ்தவ சமயம் என்று அப்பெண் எதை நினைத்துக் கொண்டிருக்கிறாரோ அதுதான் கிறிஸ்தவ சமயமா? அது தவறான ஒரு போக்கு என்பதைத் தவிர நான் வேறு எதுவும் கூற முடியாது.

'எங் இந்தியா' – 11—8—1927

# 7

# ஏசுநாதர் வந்தால் . . .

(கல்கத்தாவில் உள்ள யுவதிகள் சங்கத்தில் சென்ற மாதம் 28-ஆம் தேதி நடந்த பாதிரிமார்கள் அடங்கிய ஒரு கூட்டத்தில் நான் பேசினேன். அவ்விதம் பேசும் வாய்ப்பு எனக்கு மகிழ்ச்சியை அளித்தது. அப்போது எல்லோருக்கும் பொதுவான சில விஷயங்களைப் பற்றியும் நான் கூறியதால், அவற்றைச் சுருக்கமாக இங்கே குறிப்பிடுகிறேன். அப்போது நான் வெளியிட்ட முக்கிய கருத்து எதையும் இங்கே நான் விட்டுவிடவில்லை. நுணுக்கமாக விவரித்த சில பகுதிகளை மாத்திரமே விட்டிருக்கிறேன்.)

—மோ. க. கா.

கிறிஸ்தவர்கள் என்று கூறப்படுவோருடன் அல்ல, உண்மையான கிறிஸ்தவர்களுடன் 1889-ஆம் ஆண்டிலிருந்து எனக்குத் தொடர்பு இருந்துவருகிறது. லண்டனில் நான் சிறுவனாக இருந்ததிலிருந்தே அந்தத் தொடர்பு வளர்ச்சிபெற்று வந்திருக்கிறது. தென்னாப்பிரிக்காவில் அன்பையே காண முடியாத சூழ்நிலையில், நான் நூற்றுக்கணக்கான கிறிஸ்தவர்களுடன் நட்புக் கொண்டேன். தென்னாப்பிரிக்கா கிறிஸ்தவர்கள் பொதுச் சங்க டைரக்டரான காலஞ்சென்ற ஸ்ரீ ஸ்பென்சர் வாட்டன், ரெவரண்ட் ஏ. மர்ரே முதலிய மற்றும் பலருடனும் எனக்குத் தொடர்பு உண்டாயிற்று.

எனவே, இன்று எனக்குப் பல பாதிரிமார்களுடன் அறிமுகம் ஏற்பட்டிருப்பது ஒரு புதிய விஷயம் அல்ல. கிறிஸ்தவ சமய நண்பர்கள் சங்கத்தைச் சேர்ந்த ஒரு நல்ல பிரமுகர், எனக்கு உண்மையான, அந்தரங்க நண்பராகவும் இருந்தார். ஆனால் அவர் என்மீது ஒரு கண் வைத்திருந்தார். (சிரிப்பு). நான் கிறிஸ்தவனாகி விட வேண்டிய அளவுக்கு அவ்வளவு நல்லவன் என்று அவர் எண்ணினார்! எனினும், அவ்விஷயத்தில் அவருக்கு ஏமாற்றம் உண்டாகும்படி நான் நடந்து கொண்டதைக் குறித்து

வருந்துகிறேன். தென்னாப்பிரிக்காவில் உள்ள எனது பாதிரிமார் நண்பர்களில் ஒருவர் இப்போது கூட எனக்குக் கடிதம் எழுது கிறார். 'இப்போது உங்கள் நிலை என்ன?' என்று கேட்கிறார். 'நான் அறிந்தவரையில் எனது நிலை சரியாகத் தான் இருக்கிறது' என்றே இந்த நண்பருக்கு நான் அடிக்கடி கூறிவந்திருக்கிறேன். இந்த நண்பர்கள் என்னிடமிருந்து எதிர்பார்ப்பது பிரார்த்தனையாயின், என் உள்ளத்தில் உள்ள தனி அறையிலிருந்து நான் ஒவ்வொரு நாளும் எல்லாம் வல்ல இறைவனை இதய பூர்வமாகப் பிரார்த்திக் கிறேன் என்று அவர்களுக்கு நான் கூற முடியும். எனக்கு ஒளியைக் காட்டும்படியும், ஞானத்தை அளிக்கும்படியும், அந்த ஒளியைத் தொடர்ந்து செல்லும் தைரியத்தை எனக்குக் கொடுக்க வேண்டும் என்றும் பிரார்த்தனை செய்து வருகிறேன்.

காலஞ்சென்ற காளி சரண் பானர்ஜி ஒரு மாபெரும் கிறிஸ்த வர் என்று இந்த கிறிஸ்தவ நண்பர்கள் என்னிடம் கூறியிருந்தார் கள். அவரை நான் பார்த்துப் பேசுவதாக அவர்களில் ஒருவருக்கு வாக்குறுதியும் கொடுத்திருந்தேன். எனவே அவரைப் பார்க்க வேண்டியது எனது கடமை என்று எண்ணினேன். நான் அவரைப் பார்ப்பதற்காகச் சென்றேன். ஆழ்ந்த பரிசீலனை செய்து உண்மை வழியைக் காண்பதற்கான எல்லா முயற்சிகளையும் நான் செய்து பார்த்தேன் என்பதற்காகவே இதையெல்லாம் உங்களுக்குக் கூறுகிறேன். முற்றிலும் திறந்த மனத்துடனும், அவர் கூறுவது திருப்திகரமாக இருந்தால் அதை ஏற்றுக் கொள்ளவேண்டும் என்ற எண்ணத்துடனும் அவரிடம் சென்றேன். மனத்தை உருக் கும் ஒரு சூழ்நிலையில் அவரை நான் சந்தித்தேன். ஸ்ரீ பானர்ஜிக் கும் எனக்கும் பல விஷயங்களில் ஒற்றுமை இருக்கிறது என் பதையும் கண்டேன். அவரது எளிமை, அவரது பணிவு, அவரது தைரியம், உண்மையாக நடந்துகொள்ளும் அவரது இயல்பு முதலியவற்றை நான் எப்போதுமே வியந்து வந்திருக்கிறேன். அவரது மனைவி மரணப்படுக்கையில் இருந்தபோது அவர் என் னைச் சந்தித்தார். அதைக் காட்டிலும் மனத்தில் ஆழ்ந்து பதியக் கூடிய ஒரு காட்சியை, அதைக் காட்டிலும் மனிதனை உயர்த்தும் ஒரு சம்பவத்தை நீங்கள் கற்பனை செய்து கொள்ளுவதும் முடியாத காரியம். 'உண்மையை நாடி உங்களிடம் வந்திருக்கிறேன். உண்மையான ஒளியைக் காண நான் எல்லாவித முயற்சிகளையும் செய்வதாக எனது அன்பார்ந்த சில கிறிஸ்தவ நண்பர்களுக்கு நான் வாக்குறுதி கொடுத்துள்ளேன். புனிதமான அந்த வாக்குறு தியை நிறைவேற்றவே நான் உங்களிடம் வந்திருக்கிறேன். நான் அந்த ஒளியைக் காண முடியுமாயின், அதைக் காண்பதிலிருந்து எத்தகைய லோகாயதமான ஆசையும் என்னைத் தடுக்க முடியாது என்றும் என் நண்பர்களுக்கு உறுதி கூறியுள்ளேன்'.

இவ்விதம் நான் ஸ்ரீ பானர்ஜியிடம் கூறினேன். இது 1901-இல் நிகழ்ந்தது. எங்களுக்குள் அப்போது நடந்த சிறு வாதத்தை நான் இங்கே விவரித்துக் கூறப் போவதில்லை. அந்த வாதம் சிறந்த முறையிலும், கண்ணியமானதாகவும் இருந்தது. நான்

அவரிடமிருந்து திரும்பியபோது எனக்கு வருத்தமோ, சோர்வோ, ஏமாற்றமோ எதுவுமில்லை. எனினும், ஸ்ரீ பானர்ஜியால்கூட எனக்குத் திருப்தி ஏற்படும்படி செய்ய முடியவில்லை என்பதைக் குறித்து என் மனம் வருந்தியது. கிறிஸ்தவ சமயத்தை நன்கு அறிந்து கொள்ளுவதற்காக இதுதான் நான் கடைசியாகச் செய்த முயற்சியாகும். இன்று எனது நிலைமை இதுதான்: கிறிஸ்தவ சமயத்தில் உள்ள பல அம்சங்களையும் நான் மெச்சுகிறேன். என்றாலும் பாதிரிமார் விளக்கும் கிறிஸ்தவ சமயத்துடன் இணைந்து கொள்ள முடியாதவனாக இருக்கிறேன். நான் அறிந்த ஹிந்து சமயமானது எனது ஆன்மாவுக்கு முற்றிலும் திருப்தியைக் கொடுக்கிறது என்பதை நான் மிகப் பணிவுடன் உங்களுக்குக் கூறவேண்டும். ஹிந்து சமயமானது, என் வாழ்க்கை முழுவதிலும் நிறைந்திருக்கிறது. மலைப் பிரசங்கத்தில் நான் காண முடியாத ஆறுதலை, பகவத் கீதையிலும், உபநிடதங்களிலும் நான் காண்கிறேன். மலைப் பிரசங்கத்தில் உள்ள லட்சியத்தை நான் மிகவும் மதிக்கின்றேன். அதில் உள்ள பொன் போன்ற சில உபதேசங்கள் என் மனத்தில் ஆழ்ந்து பதிந்தும் இருக்கின்றன. இருந்தாலும், சந்தேகங்கள் என் மனத்தை ஆட்கொள்ளும் போது, ஏமாற்றங்கள் என்னை எதிர்நோக்கி நிற்கும் போது, ஒளியையே நான் காணமுடியாமல் எல்லாம் அந்தகாரமாக இருக்கும்போது, நான் பகவத் கீதையின் உதவியையே நாடவேண்டியவனாக இருக்கிறேன். அத்தகைய சந்தர்ப்பங்களில் எனக்கு ஆறுதல் அளிக்கக் கூடிய ஒரு சுலோகத்தை அதில் நான் காண்கிறேன். நான் துக்கத்தில் ஆழ்ந்திருக்கும் அச்சமயத்தில் அந்த சுலோகத்தைக் கண்டவுடன் எனக்கு ஆனந்தம் ஏற்படுகிறது. என் வாழ்க்கையில் ஏராளமான துக்க சம்பவங்கள் நிகழ்ந்திருக்கின்றன. அவற்றின் விளைவாக கண்ணுக்குத் தெரியக் கூடிய, அழிக்க முடியாத அடையாளம் என்னிடம் இராததற்குக் காரணம், பகவத் கீதையின் உபதேசமேயாகும்.

எனது நிலை என்ன என்பதை நீங்கள் முற்றிலும் தெளிவாக அறிந்து கொள்ளும்படி செய்வதற்காகவே இதையெல்லாம் உங்களிடம் நான் கூறியுள்ளேன். இதையெல்லாம் கூறியதன் மூலம், நீங்கள் விரும்பினால், உங்களுடன் நான் நெருங்கிய தொடர்பு வைத்துக்கொள்ளலாம். பைபிளையும், அதன் சம்பந்தமான வியாக்கியானங்களையும், எனது நண்பர்கள் என்னிடம் கொடுத்துள்ள கிறிஸ்தவ சமய சம்பந்தமான மற்ற நூல்களையும் உன்னி வாசிப்பதை நான் நிறுத்திவிடவில்லை என்பதை உங்களுக்குக் கூறவேண்டும். பகுத்தறிவைக் கொண்டு ஒரு முடிவிற்கு வரவேண்டுமாயின், மற்ற சமயங்களைப் பற்றிய நூல்களையும் நான் வாசிக்க வேண்டும் என்று எனக்குள் நானே சொல்லிக்கொண்டேன். பிறகு நான் குரானை வாசிக்கலானேன். கிறிஸ்தவ சமயத்துக்கும் யூதர் சமயத்துக்கும் உள்ள வேற்றுமையை அறிந்துகொள்ள என்னால் இயன்ற வரையில் முயற்சித்தேன். ஜொராஸ்டிர சமயத்தையும் நான் ஆராய்ச்சி செய்தேன். அவற்றையெல்லாம் ஆராய்ச்சி செய்ததன்

பலஞக, அவற்றில் ஒவ்வொன்றும் சரியே, ஆனுல், ஒவ்வொன்றி லும் குற்றம் குறைகள் இருக்கின்றன என்ற முடிவிற்கு வந்தேன். ஒவ்வொரு சமயமும் குற்றம் குறைகள் உள்ளதாக இருப்பது இயல்பே. அது தவிர்க்க முடியாதது என்றும் முடிவு செய்தேன். ஏனெனில், நமது அற்ப அறிவைக் கொண்டும், உறுதியற்ற இதயத்துடனும் நாம் அவற்றிற்கு விளக்கம் கொடுக்கும்போது அது பெரிதும் தவருன விளக்கமாகவே இருக்கிறது. எல்லா சம யங்களிலும், அந்தந்த நூல்களின் சில பகுதிகளுக்கு பல்வேறு விளக்கங்களும், முரண்பாடான விளக்கங்களும்கூடக் கொடுக் கப்பட்டுள்ளன. இதையெல்லாம் நான் கண்டபோது எனக்கு மிகுந்த வேதனை உண்டாயிற்று. நான் பின் வருமாறு எனக்குள் ளேயே கூறிக்கொண்டேன்: ‘இவை யெல்லாம் எனக்கு உகந்தவை யல்ல. என் ஆன்மாவுக்குத் திருப்தி ஏற்படவேண்டுமாயின், எனது வழியை நானே உணர்ந்து கொள்ளவேண்டும். நான் கடவு ளிடம் மௌனமாகக் காத்திருந்து, எனக்கு வழிகாட்டும்படி அவரைப் பிரார்த்திக்க வேண்டும்.’

சமஸ்கிருதத்தில் ஓர் அழகான சுலோகம் இருக்கிறது. ‘மனி தன் தன்னை முற்றிலும் திக்கற்றவன் என்று எண்ணி பூரணமான பணிவை மேற்கொள்ளும்போதுதான் கடவுள் அவனுக்கு அருள் புரிகிருர்’ என்பதே அதன் பொருளாகும். உங்களில் சிலர் தமிழ் நாட்டிலிருந்து வந்திருக்கலாம். நான் தமிழ் கற்றுக் கொண் டிருந்தபோது, டாக்டர் போப் எழுதிய புத்தகங்கள் ஒன்றில் ஒரு முதுமொழியைப் பார்த்தேன். ‘திக்கற்றவருக்கு தெய்வமே துணை’ என்பதே அந்த முதுமொழியாகும். நீங்கள் இதையெல்லாம் நிதானமாகச் சிந்தித்துப் பார்க்கவேண்டும் என்பதற்காகவே, எனது அனுபவங்கள் அடங்கிய இந்த வாழ்க்கை வரலாற்றை உங்களுக்கு எடுத்துக் கூறியுள்ளேன்.

அஞ்ஞானிகளும், விக்கிரக வழிபாடு செய்வோரும், கடவுளை அறியாதவர்களும் அடங்கிய ஒரு நாடு இந்தியா, என்று எண்ணிக் கொண்டு பாதிரிமார்களான நீங்கள் இந்தியாவுக்கு வருகிறீர்கள். ‘இந்தியாவில் ஒவ்வொன்றும் நம்பிக்கையையும், மகிழ்ச்சியையும் அளிப்பதாக இருக்கிறது. ஆனல் அங்கே மனிதன்தான் கெட்டவ ஞக இருக்கிருன்’ என்று புகழ்பெற்ற கிறிஸ்தவ பூஜ்யர்களில் ஒரு வரான ஹெபர் என்ற பாதிரியார் எழுதியுள்ளார். அந்த இரண்டு வரிகளும் முள்ளைப் போல் என் மனத்தை எப்போதும் உறுத்தி வேதனையைக் கொடுத்துவருகின்றன. அந்த வரிகளை அவர் எழு தாமல் இருந்திருக்கக் கூடாதா என்றே எண்ணுகிறேன். ஆனல், இந்தியா முழுவதும் யாத்திரை செய்துள்ள என்னுடைய சொந்த அனுபவம் அதற்கு முற்றிலும் மாருனதாக இருக்கிறது. யாதொரு விருப்பு வெறுப்புமின்றி, சத்தியத்தைத் தேடவேண்டுமென்ற தீவிர உறுதியுடன் நான் இந்த நாட்டில் ஒரு கோடியிலிருந்து மற் ரெரு கோடி வரையில் யாத்திரை செய்துள்ளேன். மகத்தான கங்கை, பிரம்மபுத்ரா, யமுனை நதிகளால் செழுமையடைந்துள்ள இந்த அழகிய நாட்டில் உள்ள மனிதன் கெட்டவனே, இழிவான

வனே அல்ல என்று நான் கூறமுடியும். உங்களையும் என்னையும் போல், ஏன், இன்னும் அதிகமாகக்கூட அவன் சத்தியத்தை நாடிச் செல்லுபவனாக இருக்கிறான்.

இதன் சம்பந்தமான ஒரு பிரெஞ்சு நூல் என் நினைவுக்கு வருகிறது. அந்த நூலை ஒரு பிரெஞ்சு நண்பர் எனக்காக மொழி பெயர்த்துத் தந்தார். அறிவைத் தேடுவதற்காகச் செல்லும் ஒரு கற்பனை யாத்திரையே அந்த நூலில் விவரிக்கப்பட்டிருக்கிறது. ஒரு கோஷ்டியினர் இந்தியாவுக்கு வந்ததாயும், ஒரு பறையரின் சிறிய குடிசையில் சத்தியமும் கடவுளும் உருவெடுத்து விளங்குவதை அவர்கள் கண்டதாயும் குறிப்பிடப்பட்டிருக்கிறது. தீண்டாதாருக்குச் சொந்தமான அத்தகைய பல குடிசைகள் இந்தியாவில் இருக்கின்றன என்று உங்களுக்கு நான் கூறுகிறேன். அந்தக் குடிசைகளில் கடவுளை நீங்கள் நிச்சயமாகக் காண்பீர்கள். அக் குடிசைகளில் வாழ்வோர் பகுத்தறிவைக் கொண்டு வாதிப்பதில்லை; ஆனால், கடவுள் இருக்கிறார் என்ற நம்பிக்கையில் அவர்கள் தீவிர உறுதியுடன் இருந்து வருகிறார்கள். கடவுளின் உதவியையே அவர்கள் நம்பிக்கொண்டிருக்கிறார்கள். அவர்களுக்கு அந்த உதவியும் கிடைக்கின்றது. உயர்ந்த மனம் படைத்த இந்த தாழ்த்தப்பட்டவர்களைப் பற்றி இந்தியா முழுவதும் பல கதைகள் வழங்கி வருகின்றன. அவர்களில் சிலர் கெட்டவர்களாக இருக்கலாம். எனினும், அவர்களின் மத்தியில் மானிட வர்க்கத்திற்குள்ளேயே மிகச் சிறந்தவர்கள் இருக்கிறார்கள். எனது அனுபவம், தாழ்த்தப்பட்டவர்களோடு முடிந்துவிட்டது என்று எண்ணுகிறீர்களா? இல்லை. உலகத்தில் வேறு எந்த இடத்திலும் நீங்கள் காண்பதைப் போன்ற மானிடவர்க்கத்திலேயே மிகச் சிரேஷ்டமானவர்கள் பிராம்மணரல்லாதாரிடையும், பிராம்மணர்களிடையும் இருக்கிறார்கள் என்பதையும் உங்களுக்கு நான் கூறுகிறேன். ஆன்மத் தியாகம், தெய்விகத் தன்மை, பணிவு முதலியவை உருக்கொண்ட பிராம்மணர்கள் இன்று இந்தியாவில் இருக்கிறார்கள். தீண்டாதாருக்குத் தொண்டு செய்வதற்காகத் தங்களுடைய உடலையும் ஆன்மாவையும் அர்ப்பணம் செய்துவரும் பிராம்மணர்கள் இருக்கிறார்கள். தாழ்த்தப்பட்டவர்களிடமிருந்து அவர்கள் எவ்வித வெகுமதியையும் எதிர்பார்க்கவில்லை; வைதிகர்களுடைய சாபத்திற்கும் அவர்கள் ஆளாகியிருக்கிறார்கள். ஆனால், அவர்கள் அதைப் பொருட்படுத்துவதில்லை. ஏனெனில், பறையர்களுக்குத் தொண்டு செய்வதன் மூலம் அவர்கள் கடவுளுக்குத் தொண்டு செய்கிறார்கள். இவ் விஷயமாக, எனது அனுபவத்திலிருந்து நான் பல உதாரணங்கள் கூற முடியும்.

நீங்கள் இந்த நாட்டிற்குத் தொண்டு செய்யவே வந்திருக்கிறீர்கள். எனவே, நீங்கள் இந்த நாட்டை நன்கு அறிந்து கொள்ளவேண்டும் என்பதற்காகவே, நான் மிகப் பணிவுடன் உங்களுக்கு இதையெல்லாம் கூறுகிறேன். இந்திய மக்களின் துன்பத்தை அறிந்து, அதை அகற்றுவதற்காகவே நீங்கள் இந்த

நாட்டில் இருந்து வருகிறீர்கள். நீங்கள் இங்கே உள்ள நல்ல விஷயங்களை ஏற்றுக்கொள்ளும் மன நிலையில் இருப்பீர்கள் என்றும் நம்புகிறேன். இந்தியா உங்களுக்கு ஏதாவது கொடுக்கக் கூடுமாயின், நீங்கள் காதுகளை அடைத்துக் கொண்டுவிடக் கூடாது; கண்களை மூடிக்கொள்ளக் கூடாது; உங்களுடைய இதயங்களைக் கல்லாக்கிக் கொண்டுவிடக் கூடாது. ஆனால், அதற்கு மாருக, இந்த நாட்டில் உள்ள நல்லதையெல்லாம் ஏற்றுக்கொள்ள உங்களுடைய காதுகளையும், கண்களையும், முக்கியமாக உங்களுடைய இதயங்களையும் திறந்து வைத்துக்கொள்ள வேண்டும்.

இந்தியாவில் ஏராளமான நல்ல விஷயங்கள் இருக்கின்றன என்று நான் உங்களுக்கு உறுதி கூறுகிறேன். செயின்ட் ஜானில் உள்ள புகழ் பெற்ற வாக்கியங்களைத் திருப்பித் திருப்பி ஜபம் செய்வதால் மாத்திரம் ஒருவர் கிறிஸ்தவராகி விடுகிருர் என்று நம்பி, நீங்கள் உங்களுக்குள்ளேயே பெருமைப்பட்டுக்கொள்ள வேண்டாம். ஏசுநாதர் என்ற பெயரையே கேள்விப்படாத ஏராளமானவர்கள் இருக்கின்றனர் என்பது எனக்குத் தெரியும். கிறிஸ்தவ சமயத்தைப்பற்றிய அதிகாரபூர்வமான விளக்கத்தை நிராகரித்துவிட்டவர்களும் ஏராளமாக இருக்கிருர்கள். ஆனல், இன்று ஏசுநாதர் தமது சுய உடலுடன் நம்மிடையே வருவாராயின், நம்மில் பலரையும் காட்டிலும் அத்தகையோரையே தமது அன்புக்கு அதிகப் பாத்திரமானவர்கள் என்று ஒப்புக் கொள்ளுவார். ஆகையால், உங்கள் முன் உள்ள பிரச்னையை திறந்த மனத்துடனும் பணிவுடனும் அணுகும்படி உங்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

சில பாதிரிமார்களுடன் இன்று காலையில் நான் நட்புரிமையோடு பேசிக்கொண்டிருந்தேன். அவர்களுடன் பேசியவற்றை உங்களிடம் விவரித்துக் கூற நான் விரும்பவில்லை. ஆனல், அவர்கள் மானிடவர்க்கத்தின் சிறந்த உதாரண புருஷர்கள் என்று மாத்திரம் கூற விரும்புகிறேன். அவர்கள் என்மீது தப்பெண்ணம் கொள்ள விரும்பவில்லை. ஆனல், ஒன்றரை மணி நேரம் வரையில் எனது நிலையை அவர்களுக்கு நான் விளக்கிக் கூற முயற்சித்தேன். ஆங்கிலேயர்கள் மீதுள்ள வெறுப்போ அல்லது துவேஷமோ காரணமாக நான் எதுவும் எழுதவில்லை என்பதை அவர்களுக்கு நான் விளக்க வேண்டியிருந்தது. இவ்விஷயமாக அவர்களுக்குத் திருப்தி ஏற்படும்படி செய்வது எனக்கு மிகவும் கஷ்டமாக இருந்தது. இறுதியில் அவர்களுக்குச் சமாதானம் ஏற்படும்படி நான் செய்தேனு, அல்லவா என்பது எனக்குத் தெரியாது. உப்பு அதன் ருசியை இழந்துவிடுமாயின், பின்னர் அதற்கு எதைக் கொண்டு ருசி ஊட்ட முடியும்? என்னிடம் வந்த அந்த மூன்று பாதிரிமார் நண்பர்களுடைய மனத்திலும் உண்மையைப் பதியவைக்க என்னல் இயலவில்லை எனில், மற்றவர்கள் விஷயத்தில் நான் என்ன செய்ய முடியும்?

சத்தியத்தை நாடிச் செல்லும் ஒருவர் மௌனமாக இருக்க வேண்டும் என்று நான் அடிக்கடி எண்ணுவது உண்டு. மௌனத்தின் ஆச்சரியகரமான சக்தியை நான் அறிவேன். தென்னுப்பிரிக்காவில் உள்ள ஒரு கிறிஸ்தவ மடத்திற்கு நான் சென்றிருந்தேன். அது அழகான இடமாகும். அந்த மடத்தைச் சேர்ந்தவர்களில் பெரும்பாலோரும் மௌன விரதத்தை மேற் கொண்டிருந்தார்கள். அவ்விதம் மௌன விரதத்தை மேற்கொண் டிருப்பதன் நோக்கம் என்ன என்று மடத்தின் பூஜ்யரிடம் விசாரித்தேன். அவர் இவ்விதம் கூறினுர்: 'அதன் நோக்கம் தெளிவானதே. நாம் தவறு செய்யும் இயல்புள்ள மானிட வர்க் கத்தைச் சேர்ந்தவர்கள். நாம் என்ன பேசுகிறோம் என்பதை நாம் பெரும்பாலும் அறிவதில்லை. நம்முள் எப்போதும் பேசிக் கொண்டிருக்கும் சிறிய குரலுக்குச் செவி சாய்க்க நாம் விரும்பு வோமாயின், நாம் இடைவிடாது பேசிக் கொண்டிருந்தால், அந்தக் குரல் நமக்குக் கேட்காது.'

பொன் போன்ற அந்தப் படிப்பினையை நான் உணர்ந்து கொண்டேன். மௌனத்தின் ரகசியத்தை நான் அறிவேன். 'மூடு பனி விலகிவிட்டால் நாம் ஒருவரை யொருவர் நன்கு அறிந்து கொள்ளுவோம்' என்பதற்கு மேல் அந்தப் பாதிரிமார் நண்பர் களிடம் நான் எதுவும் கூருவிடில், புத்திசாலித்தனமாக இருந் திராதா? உங்களுடன் நான் பேசிக் கொண்டிருக்கும் இச் சமயத்தில் அதை நினைத்து நான் வெட்கமடைகிறேன். அந்த நண்பர்களுடன் நான் ஏன் விவாதிக்க முற்பட்டேன் என்று வருந்துகிறேன். முதலாவதாக, இந்தத் தவறை ஒப்புக்கொள் ளவே இதையெல்லாம் உங்களிடம் கூறுகிறேன். இரண்டாவ தாக, மற்றொன்றும் உங்களுக்குக் கூறவிரும்புகிறேன். அதாவது மற்றவர்களுடைய பக்கத்தில் இருக்கும் நியாயத்தைக் காண நீங்கள் மறுத்தால், இந்தியா என்ன எண்ணுகிறது என்பதை அறிந்து கொள்ள நீங்கள் மறுத்தால், தொண்டு செய்வதில் உங்களுக்குள்ள உண்மையான உரிமையையே நீங்கள் மறுத்து விட்டவராவீர்கள். 'நீங்கள் உயர்ந்த நோக்கமுடையவர்களாக இருந்தும், நீங்கள் யாருக்காகத் தொண்டு செய்ய விரும்பு கிறீர்களோ அந்த மக்களிடமிருந்து உங்களை நீங்களே பிரித்தவ ராவீர்கள்' என்று நான் எனது பாதிரிமார் நண்பர்களிடம் கூறினேன்.

இச்சந்தர்ப்பத்தில் ஒரு சம்பவத்தை நான் குறிப்பிடாமல் இருக்க முடியாது. கிறிஸ்தவ சமயத்தைப் பிரசாரம் செய்வதற் காக சீனுவுக்குச் செல்ல விரும்பிய பாதிரியார்கள், கோஷ்டி யாகச் சென்று அப்போது பிரிட்டிஷ் பிரதம மந்திரியாக இருந்த லார்டு சாலிஸ்பரியைப் பேட்டி கண்டனர். சீனுவில் தங்களுக்குப் பாதுகாப்பு அளிக்க வேண்டுமென பிரதம மந்திரியை அவர்கள் கேட்டுக் கொண்டனர். அவர்களின் கோரிக்கைக்கு லார்டு சாலிஸ்பரி அளித்த பதிலின் சாரம் இதுதான்: 'கனவான்களே, கிறிஸ்தவ சமயத்தைப் பிரசாரம் செய்வதற்காக நீங்கள் சீனுவுக்

குச் செல்ல விரும்பினல், அரசாங்கத்தின் லோகாயதமான சக்தியைக் கோராதீர்கள். உங்களுடைய உயிரைக் கையில் பிடித்துக்கொண்டு செல்லுங்கள். சீன மக்கள் உங்களைக் கொன்றுவிட விரும்பினல், கடவுளுக்குத் தொண்டு செய்கையில் நீங்கள் கொல்லப்பட்டதாகக் கற்பனை செய்துகொள்ளுங்கள்.'

லார்டு சாலிஸ்பரி கூறியது சரிதான். நிழலின் கீழ் அதாவது லோகாயதமான ஒரு சக்தியினுடைய பாதுகாப்பின் கீழ் கிறிஸ்தவப் பாதிரிமார்கள் இந்தியாவுக்கு வருகிருர்கள். அது, அவர்களுக்கும் இந்திய மக்களுக்கும் இடையே தாண்ட முடியாத ஒரு தடையைச் சிருஷ்டித்துவிடுகிறது.

பெற்ருேர்கள் இல்லாத இத்தனை அனுதைகளை நாங்கள் மீட்டு, கிறிஸ்தவ சமயத்தில் சேர்த்துக் கொண்டோம் என்று நீங்கள் எனக்கு புள்ளி விவரங்களைக் கொடுத்தால், நான் அவற்றை ஒப்புக்கொள்வேன். எனினும், உங்களுடைய தொண்டின் லட்சியம் அதுதான் என்ற திருப்தி எனக்கு ஏற்படவில்லை. உங்களுடைய லட்சியம் அதைக் காட்டிலும் எவ்வளவோ உயர்ந்தது என்பதே எனது அபிப்பிராயமாகும். நீங்கள் இந்தியாவில் மனிதர்களைக் காண விரும்புகிறீர்கள். நீங்கள் அவ்விதம் விரும்பினல், ஏழைகள் வாழும் குடிசைகளுக்கு நீங்கள் செல்ல வேண்டும். அங்கேயுள்ளவர்களுக்கு ஏதாவது கொடுப்பதற்காகச் செல்லக் கூடாது; அவர்களிடமிருந்து ஏதாவது பெற்றுக் கொள்வதற்காகச் செல்லவேண்டும். நான் ஐரோப்பியர்களின், இந்தியாவில் உள்ள பாதிரிமார்களின் உண்மையான நண்பன் என்று கூறிக் கொள்ளுகிறேன் அல்லவா? அதனுலேயே என் இதயத்தின் ஆழத்தில் நான் என்ன எண்ணுகிறேனே, அதையே மனம் விட்டு உங்களிடம் பேசுகிறேன். இங்கேயுள்ள உயர்ந்த அம்சங்களை ஏற்றுக்கொள்ளும் மனநிலை, பணிவு, இந்தியாவில் உள்ள பாமர மக்களுடன் ஒன்றித்துப் பழகும் விருப்பம் முதலியவற்றை உங்களிடம் நான் காணவில்லை. என் இதயத்தில் உள்ளதை ஒளிவு மறைவின்றி உங்களிடம் கூறியுள்ளேன். இவையெல்லாம் உங்கள் மனத்தில் பதிந்து பலனைக் கொடுக்குமாக.

(தமது பிரசங்கம் முடிந்த பின், கேள்விகள் கேட்கலாம் என்று காந்திஜி கூறினர். அப்போது பாதிரிமார் கேட்ட கேள்விகளில் முக்கியமானவையும், அவற்றிற்கு காந்திஜி அளித்த பதில்களும் கீழே கொடுக்கப்பட்டுள்ளன:)

**கேள்வி :** பாமர மக்களுடன் பாதிரிமார்கள் எவ்விதம் ஒன்றித்துப் பழக வேண்டுமென நீங்கள் நினைக்கிறீர்கள்?

**பதில் :** இது தரும சங்கடமான ஒரு கேள்வி. இருந்தாலும், 'சார்லி ஆண்ட்ரூஸைப் போல் நடந்து கொள்ளுங்கள்' என்றே நான் கூறத் துணிவேன்.

**கேள்வி :** உங்களுக்கு உள்ளே ஜீவ சக்திவாய்ந்த ஏசுநாதர் இருப்பதை நீங்கள் நிச்சயமாக உணருகிறீர்களா?

பதில் : ஏசுநாதர் என்ற பெயருள்ள சரித்திர புருஷரைப் பற்றி நீங்கள் குறிப்பிடுவதாயின், நான் அவ்விதம் உணரவில்லை என்றே கூறவேண்டும். அது, கடவுளின் பெயர்களில் ஒன்றைக் குறிப்பிடும் பண்புச் சொல் என்று நீங்கள் கூறுவதாயின், கடவுள் இருப்பதை உணருகிறேன் என்றே நான் கூற வேண்டும். அந்தக் கடவுளை ஏசுநாதர் என்றோ, கிருஷ்ணன் என்றோ, ராமன் என்றோ, எப்படி வேண்டுமானாலும் அழையுங்கள். கடவுளைக் குறிப்பிடுவதற்கு எங்களிடம் ஆயிரம் பெயர்கள் இருக்கின்றன. இவ்வுலகில் எங்கு பார்த்தாலும் துன்பத்தையும் ஏமாற்றத்தையுமே ஒவ்வொரு நாளும் நான் காண்கிறேன். எனவே, இந்நிலையில் என் உள்ளே கடவுள் இருப்பதை மாத்திரம் நான் உணராவிடில், பிதற்றிக்கொண்டு திரியும் ஒரு பைத்தியக்காரனாகியிருப்பேன்; நான் போய்ச் சேரவேண்டிய இடம் ஹூக்ளி* நதியாகத்தான் இருக்கும்.

—'எங் இந்தியா – 6—8—1925

# 8

# எல்லோரும் கடவுளின் குழந்தைகள்

''அன்பார்ந்த சகோதரரான காந்திக்கு,

உங்களுக்காக நான் பிரார்த்தனை செய்துகொண்டிருந்தபோது தூண்டப்பட்டே, இந்தக் கடிதத்தை உங்களுக்கு எழுதுகிறேன். நாகரிக உலகம் என்று கூறப்படும் இந்த உலகம் முழுவதும் உங்களுடைய பெயர் பிரமாதமாக விளம்பரப்படுத்தப்பட்டிருக்கிறது. நீங்கள் உலகிலேயே மாபெரும் ஞானிகளில் ஒருவர் என்றும், தியாகம் செய்யும் தொண்டர்களில் ஒருவர் என்றும் புகழ் பெற்றிருக்கிறீர்கள். இந்தியாவிலோ, உங்களை மகாத்மா என்று பிரகடனம் செய்திருக்கிறார்கள். ஏன், இந்தியாவில் உள்ள பல தெய்வங்களைப் போல் நீங்களும் ஓர் அவதாரம் என்று உங்களை உண்மையிலேயே வழிபடுகிறார்கள். நீங்கள் தெய்வத்தன்மை வாய்ந்தவர் என்ற இத்தகைய கற்பனைக் கூற்றுகளை யெல்லாம் நீங்கள் ஆதரிக்கவில்லை என்று பிரகடனம் செய்திருக்கிறீர்கள். இருந்தாலும் இந்தக் கூற்றுகளின் காரணமாக சிற்சில சமயங்களில் நீங்கள் இன்பமும் திருப்தியும் அடையவில்லை யெனில், நீங்கள் மனிதராக இருக்க முடியாது, தேவராகத்தான் இருக்கவேண்டும்.

பாவச் செயல் நிகழ்ந்துவிட்டாலும், உங்களுடைய ஆசிரமத்திலோ அல்லது பள்ளிக் கூடங்களிலோ சச்சரவுகள் ஏற்பட்டாலும் உண்ணாவிரதம் இருக்கும் வழக்கமும் உங்களிடம் இருக்கிறது. அதன் காரணமாக நீங்கள் கடவுளின் அருளைப் பெற முடியும் என்றும், அந்த அருளில் மற்றவர்களும் பங்கு எடுத்துக்கொள்ளும்படி செய்ய முடியும் என்றும் இந்தியர்கள் நம்புவதற்கு இடம் ஏற்படுகிறது. ஆனால், நீங்கள் செய்த பாவத்திற்கு நீங்கள் எப்படி பிராயச்சித்தம் செய்துகொள்ளப் போகிறீர்கள் என்று கேட்டு உங்களுக்கு எழுதும் அன்போ அல்லது தைரியமோ யாருக்காவது ஏற்பட்டிருக்கிறதா? உங்களுடைய தன்னலத் தியாகங்களும், உண்ணாவிரதங்களும்,

* ஹூக்ளி, கல்கத்தா வழியாகச் செல்லும் பெரிய நதியாகும்.

பிரார்த்தனைகளும், நல்ல செய்கைகளும் நீங்கள் ஆதி நாட்களில் செய்த ஒரு பாவத்தைத் துடைத்தொழித்துவிட முடியாது.

உங்களுடைய வாழ்க்கையில் முப்பது ஆண்டுகளோ அல்லது அதற்கு மேலாகவோ நீங்கள் சிற்றின்ப, சுயநல வாழ்க்கையை நடத்தி வந்தீர்கள். உங்கள் வாழ்க்கையில் கடவுளின் சித்தம் என்ன என்பதை அறிந்துகொள்ளவோ, அவரது புனிதமான பெயருக்கு மதிப்புக் கொடுக்கவோ முயற்சிக்காமல், உங்களுடைய திட்டங்களையும் ஆசைகளையுமே நீங்கள் பின்பற்றிவந்தீர்கள். உங்களுடைய திறமைக்கெல்லாம் நீங்கள்தான் தருமகர்த்தா. கடவுளின் மகத்துவத்தை விளக்கவும், உங்களுடைய சக மனிதர்களுக்கு நன்மை செய்யவுமே உங்கள் திறமையை நீங்கள் உபயோகித்திருக்கவேண்டும். ஆரம்ப வருடங்களில் நீங்கள் அசட்டையாகவும், அந்த விதிகளுக்குக் கீழ்ப்படியாமலும் இருந்த தவறை, நீங்கள் இப்போது செய்யும் எந்தக் காரியமும் அகற்றிவிட முடியாது. அந்தக் காலத்தில் நீங்கள் கழித்த ஒவ்வொரு மணி நேரமும், ஒவ்வொரு நாளும் உங்களுக்கு எதிராகக் கண்டனக் குரலை எழுப்புகின்றன. எனவே, தெய்விகச் சட்டம் நிறைவேற்றப்பட வேண்டும்; ஏதாவது தண்டனை விதிக்கப்பட வேண்டும். பூமியில்கூட இரக்கம் காட்டுவது மன்னனின் விசேஷ உரிமை என்பது அங்கீகரிக்கப்பட்ட ஒரு கொள்கையாகும். எனினும், இரக்கம் காட்டுவதற்கு நீதியே அடிப்படையாக இருக்க வேண்டும். உலக விதிகள் சிருஷ்டிகர்த்தாவின் பாரபட்சமற்ற நீதியையே பிரகடனம் செய்கின்றன.

கடவுளே அன்புதான். ஒவ்வொரு பிராணியின் ஒவ்வொரு அன்பு நாடியும் கடவுளையே மூலஸ்தானமாகக் கொண்டிருக்கின்றது. பெற்றோர்களின் அன்பு, தாயின் அன்பு முதலிய எல்லா அன்பும், தெய்விக அன்பின் ஊற்றிலிருந்தே பொங்கிவருகின்றது. எந்தவிதமான பாவமும் கடவுளுக்கு எதிராகச் செய்யப்படும் பாவம் எனில், அந்தப் பாவங்களை மன்னிக்கும் விசேஷ உரிமையும் கடவுளுக்குத்தான் உண்டு.

கடவுளின் பல அவதாரங்களில் ஏசுநாதரும் ஓர் அவதாரம் என்றும், கடைசியாக வந்த அவதாரம் என்றும் நம்புவதாக நீங்கள் ஒப்புக்கொள்ளுகிறீர்கள். அப்படியே இருந்தால்கூட, ஏசுநாதர் தெய்விக பரம்பரையில் ஜனித்தார் என்பதை நீங்கள் ஒத்துக்கொள்ள வேண்டும்; இல்லாவிடில் ஏசுநாதர் மனிதரே என்றும், தவறு செய்யும் இயல்பு உடையவரே என்றும் அதை நிராகரித்துவிட வேண்டும். 'நான் கடவுள் இல்லை என்று நீங்கள் நம்பினால், நீங்கள் உங்களுடைய பாவங்களுடன் இறக்கவேண்டியதுதான். உங்களுக்கு மார்க்கம் நான்தான், உங்களுடைய உயிரும் நான்தான், சத்தியமும் நானே. என் வழியாகத்தான் எவரும் தந்தையை அடைய முடியும்' என்று அக்காலத்தில் யூதர்களிடம் ஏசுநாதர் கூறினர். அவர் அவ்விதம் கூறியபோது, அவர் தம்மைத் தாமே ஏமாற்றிக் கொண்டதாகவோ அல்லது வேண்டுமென்றே பொய் கூறியதாகவோ நீங்கள் நம்ப வேண்டும். ஏசுநாதர் தம்முடைய மகத்துவத்தை நீங்கள் அறிந்து கொள்ளும்படி செய்ய வேண்டும் என்றும், இந்த உலகத்தை விட்டு நீங்கள் செல்லுமுன், ஏசுநாதரின் பூஜ்யமான ரத்தத்தின் தியாக சக்தியை நீங்கள் இந்தியாவில் உள்ள கோடிக்கணக்கானவர்களுக்குப் பிரகடனம் செய்ய உங்களை அவர் உபயோகித்துக்கொள்ள வேண்டும் என்றும் நான் தினந்தோறும் பிரார்த்தனை செய்துவருகிறேன். இந்தப் பிரச்னை தீருவதற்கு வேறு எந்த வழியும் எனக்குத் தோன்றவில்லை.

உங்கள் அன்புள்ள,

**ஏசுநாதரின் ஆனந்தத் தொண்டன்.''**

ஒரு பழைய ஆங்கில நண்பர் ஆறு மாதங்களுக்கு ஒருமுறை விடாமல் எனக்கு அத்தகைய கடிதங்கள் எழுதிவருகிறுர். இவர் எழுதும் கடிதங்களுக்கு இது ஓர் உதாரணமாகும். இவர் மிகுந்த அக்கறையும் ஆர்வமும் உள்ளவர். இவரை நான் நன்கு அறிவேன். ஆனால், எனக்குத் தெரியாத ஏராளமானவர்களும் அதே தோரணையில் எனக்குக் கடிதங்கள் எழுதிவருகின்றனர். என் உடல் நிலை காரணமாக, அவர்கள் எல்லோருக்கும் நான் தனித்தனியாக பதில் எழுதுவது இயலாத காரியம். எனவே, அவர்கள் எல்லோருக்கும் பொதுவான பதிலாகவே இக்கடிதத்தை எழுதுகிறேன். அதே சமயத்தில், என்னை வழிகாட்டியாகக் கொண்டுள்ள 'ஹரிஜன்' வாசகர்களும் எனது சமய நம்பிக்கையின் தன்மையை அறிந்து கொள்ளுவதற்கு இந்தக் கடிதம் உதவியாக இருக்கும். இந்தக் கடிதம் எழுதியவர், சொற்களின் பொருளை மேலெழுந்தவாரியாகப் பார்ப்பவர். பைபிளில் உள்ள ஒவ்வொரு வாக்கியத்திற்கும் மேலெழுந்தவாரியாகப் பொருள் கூறுபவர். "சொற் பொருள் கொல்லுகிறது, அதன் உட்கருத்து உயிரைக் கொடுக்கிறது" என்ற தெளிவான பைபிளின் உபதேசத்தை அவர் கவனிக்கவில்லை.

பைபிளில் உள்ள பல வாசகங்களுக்கும் நான் மேலெழுந்தவாரியான சொற் பொருளைக் கொடுக்க முற்படுவேனாயின், அதில் இருக்கும் பல பகுதிகள் எனக்கு வெறுப்பை உண்டாக்கும். இந்த உண்மையை, பைபிளை முதன் முதலாக நான் வாசிக்க முற்பட்ட போதே அறிந்து கொண்டேன். மற்றும், பைபிளில் உள்ள ஒவ்வொரு சொல்லையும் கடவுளின் வாக்கு என்று எடுத்துக் கொள்ளக் கூடாது என்பதையும் தெரிந்து கொண்டேன். பல்வேறு சமய நூல்களையும் நான் ஆராய்ச்சி செய்ய முற்பட்டபோது, வேதங்கள், உபநிடதங்கள் உட்பட ஒவ்வொரு சமய நூல்களையும் அந்த முறையிலேயே ஆராய்ச்சி செய்ய வேண்டும் என்பதைக் கண்டு கொண்டேன். மறை பொருளை முக்கியமாகக் கொண்டே அவை மாசற்ற முறையில் உருவாக்கப்பட்டிருக்கின்றன என்பது எனக்கு வெறுப்பைக் கொடுக்கவில்லை. புனித ஏசுநாதரைப் பற்றி பைபிளில் உள்ள வாக்கியங்களின் மேலெழுந்தவாரியான சொற் பொருளை நான் நம்ப முடியாது. அந்த வாக்கியங்களுக்கு அவ்விதம் நான் பொருள் கொடுக்க முற்படுவேனாயின், ஏசுநாதரின் மீது எனக்கு உள்ள மதிப்பு அதிகமாகிவிடாது.

எனினும் நான் இவ்வாறு எழுதுவதிலிருந்து, பைபிளை எழுதியவர்கள் உண்மையைக் கூருத நபர்கள் என்று அர்த்தம் செய்து கொள்ளக் கூடாது. ஆனந்தத்தினால் பரவசம் அடைந்த நிலையில் அவர்கள் அதை எழுதினர்கள். வேத நூல்களை, அவற்றின் தரும உபதேசங்களை அடிப்படையாகக் கொண்டே மதிப்பிடும் கலையை நான் எனது இளம் பருவத்திலிருந்தே தெரிந்து கொண்டு விட்டேன். மனித சாத்தியமல்லாத அற்புதங்கள் என் மனத்தைக் கவர்வதில்லை. ஏசுநாதர் செய்ததாகக் கூறப்படும் இத்தகைய அற்புதங்கள் அப்படியே நிகழ்ந்தவை என்று நான் நம்பியிருந்

தால் கூட, அவரது உபதேசங்களில் உலக தருமத்துக்கு ஒவ்வாததை நான் ஒப்புக்கொண்டிருக்க மாட்டேன். சமய குருமார்களுடைய வார்த்தைகள் ஒரு ஜீவ சக்தி வாய்த்தவையாக எனக்குத் தோன்றுகின்றன. மற்றும் கோடிக் கணக்கானவர்களுக்கும் அவ்விதமே தோன்றுவதாக நான் எண்ணுகிறேன். இவ்விதம் தோன்றுவதற்குக் காரணம் என்ன என்பதை விவரிக்க இயலாது. ஆனால், அதே வார்த்தைகளை சாதாரண மனிதர்கள் கூறினால், அவற்றிற்கு அத்தகைய சக்தி எதுவும் இராது.

எனவே, மற்றவர்களைப் போல் ஏசுநாதரும் ஒரு பெரிய உலக குரு என்றே நான் கருதுகிறேன். அவரது தலைமுறையில் இருந்த அவரது பக்தர்களுக்கு 'அவர் ஒருவர்தான் கடவுளின் புதல்வர்' என்பதில் சந்தேகமில்லை. ஆனால், அவர்களுடைய நம்பிக்கை எனக்கு இருக்கவேண்டிய அவசியமில்லை. அதற்காக அவர் என் வாழ்க்கையில் இடம் பெறவில்லை என்றும் கூற முடியாது, ஏனெனில், கடவுளின் பல புதல்வர்களைப்போல் ஏசுநாதரையும் ஒரு புதல்வராக நான் கருதுகிறேன். கடவுளுக்குப் 'பிறந்தார்' என்ற சொல்லின் வெளிப்படையான பொருளை நான் அப்படியே எடுத்துக்கொள்ளவில்லை. அதில் ஆழ்ந்த, அதிக மேன்மையான பொருளே அடங்கியிருப்பதாக எனக்குத் தோன்றுகிறது. என்னைப் பொறுத்தவரையில், அது ஆன்மிக ஜனனத்தையே குறிப்பிடுகிறது. ஏசுநாதர் அவரது காலத்தில் கடவுளுக்கு மிகவும் அருகில் இருந்தார்.

ஏசுநாதர், அவரது உபதேசங்களை ஒப்புக்கொண்டவர்களின் பாவங்களுக்கு பிராயச்சித்தம் செய்தார்; அதாவது தாம் தவறுக்கே இடமிராத ஓர் உதாரணமாகத் திகழ்ந்ததன் மூலம் பிராயச்சித்தம் செய்தார். தங்களுடைய வாழ்க்கை முறைகளை மாற்றிக் கொள்ள ஒருபோதும் சிரமம் எடுத்துக்கொள்ளாதவர்களுக்கு, அந்த உதாரணத்தினால் யாதொரு பலனுமில்லை. முதலில் இருந்த தங்கத்தைக் காட்டிலும் சுத்தம் செய்யப்பட்ட தங்கம் அதிகப் பிரகாசத்துடன் விளங்குவது போல, சீர்திருந்திய ஒருவர், முதலில் இருந்த களங்கம் நீங்கி அதிகச்சிறப்புடன் விளங்குகிறார்.

நான் செய்த பல பாவங்களையும் எள்ளளவும் ஒளிவு மறைவின்றி நான் பட்டவர்த்தனமாக ஒப்புக்கொண்டிருக்கிறேன். அவற்றின் பளுவை நான் தோளில் சுமந்து கொண்டு செல்லவில்லை. நான் கருதுவதைப் போல், இறைவனை நோக்கி நான் யாத்திரை செய்துகொண்டிருப்பவனாயின், அந்தச் சுமை பத்திரமாக என்னிடம் இருக்கிறது. அவரது சாந்நித்தியத்தின் ஆனந்தத்தை நான் உணருகிறேன். என்னைச் சீர்திருத்துவதற்காக நான் தவங்களையும், உண்ணாவிரதங்களையும், பிரார்த்தனைகளையும் மேற்கொள்ளவில்லை. அந்த நம்பிக்கையுடன் அவற்றை நான் மேற்கொண்டால், அவை பலனற்றவையாகிவிடும் என்பதை நான் அறிவேன். எனது சிருஷ்டிகர்த்தாவின் மடியில் சோர்ந்து போன என் தலையைச் சாய்க்க வேண்டும் என்ற என் ஆன்மாவின்

தாபங்களேயே அவை பிரதிபலிக்கின்றன என்று நான் நம்பு கிறேன். அவ்விதம் அவை பிரதிபலிப்பதாயின், அந்தத் தவங் களின், உண்ணாவிரதங்களின், பிரார்த்தனைகளின் மதிப்பை அளவிட முடியாது.

உலகத்தில் உள்ள சமய நூல்களின் திறவுகோலாகவே கீதையை நான் கருதுகிறேன். அந்த நூல்களில் உள்ள ஆழம் கண்டுபிடிக்க முடியாத ரகசியப் பொருள்களை கீதை சிக்கறுத்துக் காட்டுகிறது. ஹிந்து சமய நூல்களில் எனக்குள்ள பக்தியைப் போலவே மற்ற சமய நூல்களிலும் எனக்கு பக்தி உண்டு. ஹிந்துக்கள், முஸ்லிம்கள், கிறிஸ்தவர்கள், பார்சிகள், யூதர்கள் என்பவை யெல்லாம் வசதிக்கான முத்திரைகளே. அந்த முத்தி ரைகளை நான் கிழித்தெறிந்துவிட்டால், யார் எந்த சமயத்தினர் என்பதை என்னால் அறிந்துகொள்ள முடியாது. நாம் எல்லோரும் ஒரே கடவுளின் குழந்தைகளே. "உங்களுக்கு நான் உண்மை யாகச் சொல்லுகிறேன், உண்மையாகவே சொல்லுகிறேன்; என்னிடம் ஆண்டவனே, ஆண்டவனே என்று கூறும் ஒவ்வொரு வரும் சொர்க்கத்திற்குள் பிரவேசித்துவிட முடியாது; ஆனால், எனது பிதாவின் சித்தப்படி நடந்துகொள்ளுவோர்தான் சொர்க் கத்தில் உள்ள ஆண்டவனின் சாம்ராஜ்யத்திற்குள் பிரவேசிப் பார்கள்."* இதையே, உலகத்தில் தோன்றிய மாபெரும் சமய குருமார்கள் யாவரும் வெவ்வேறு வார்த்தைகளில் கூறியிருக் கிறார்கள்.

—'ஹரிஜன்' – 18—4—1936

# 9

# வாழ்க்கையில் காட்டுங்கள்

கிறிஸ்தவப் பாதிரிமார்களிடம் உண்மையாகவே பாராட்ட வேண்டிய ஒரு குணம் இருக்குமாயின், அது அவர்களுடைய விடாப்பிடியான உறுதியே யாகும். அவர்கள் கேட்கும் ஒரேவித மான கேள்விகளுக்கு காந்திஜி என்ன பதில் கூறுவார் என்பது அவர்களுக்குத் தெரியும். அப்படி யிருந்தும் அவர்கள் அத்தகைய கேள்விகள் கேட்பதை விடுவதில்லை. காந்திஜியின் மனத்தை மாற்றவேண்டும் என்பதே அவர்கள் அவ்விதம் கேள்வி கேட் பதன் நோக்கமாகும். அன்றொரு நாள் காந்திஜியைக் காண் பதற்காக பாதிரிமார் அடங்கிய ஒரு கோஷ்டியினர் சேவா கிராமத்திற்கு வந்திருந்தனர். ராம்காருக்குச் செல்லுவதற்காக நாங்கள் மூட்டைகளைக் கட்டிக்கொண்டிருந்தோம். யாருடனும்

* மேற் கண்ட வாக்கியம் பைபிளில் உள்ளது. அது மாத்யூ எழுதிய 7–ஆவது அத்தியாயத்தில் உள்ள 21-ஆவது வாக்கியமாகும்.

பேச காந்திஜிக்கு நேரமில்லை. எனினும், அவர்களுடன் ஐந்து நிமிட நேரம் பேசுவதாக காந்திஜி வாக்களித்தார். அவர்களும் அந்த நேரத்தைச் சிறிதும் வீணாக்காமல் உபயோகப்படுத்திக் கொண்டனர்.

"மக்களின் தலைவராக நீங்கள் வருவதற்கு எது காரணமாக அமைந்தது?"

இவ்விதம் அவர்கள் விசித்திரமான ஒரு கேள்வியைக் கேட்டனர். இந்தக் கேள்விக்குப் பதில் அளிப்பது காந்திஜிக்கு தரும சங்கடமாக இருந்தது. அவர் கூறியதாவது:

"நான் அதை நாடிச் செல்லாமலும், கேட்காமலும் அது தானாகவே வந்தது. நான் தலைவரின் எந்த இனத்தைச் சேர்ந்தவன் என்பது எனக்குத் தெரியாது. இப்போது நான் செய்து கொண்டிருப்பது தலைமைப் பதவிக்கான அலுவல்களா அல்லது பொதுஜனத் தொண்டா என்பதும் எனக்குத் தெரியாது. அது எதுவாக இருந்தாலும், அது நான் கேட்காமலேயே எனக்கு வந்ததாகும்."

ஆனால், காந்திஜியைப் பார்க்க வந்த நண்பர்கள் தாங்கள் தலைவர்களே என்று நிச்சயமாகக் கருதினர்! தாங்கள் கிறிஸ்தவர்களின் தலைவர்கள் என்ற முறையில் தங்களுக்கு வழிகாட்ட வேண்டுமென அவர்கள் காந்திஜியைக் கேட்டனர்.

அவர்களுக்குப் பதிலாக காந்திஜி கூறியதாவது: "உங்களுடைய பேச்சிலும் செயலிலும் சமய சாத்திரம் குறைவாகவும் சத்தியம் அதிகமாகவும் இருக்கவேண்டும். உங்களுக்கு நான் சொல்லக்கூடியதெல்லாம் இதுதான்."

"அதை நீங்கள் விளக்கிக் கூறுவீர்களா?"

"தெளிவான விஷயத்தை நான் எப்படி விளக்க முடியும்? உலகத்தில் விளம்பரப்படுத்தப்படும் பல பொய்களுக்கு முக்கிய காரணமாகத் திகழ்வதில் சமய சாத்திரம்தான் முதல் ஸ்தானம் வகிக்கிறது. சமய சாத்திரத்தை யாரும் கோரவில்லை என்று நான் கூறவில்லை. உலகத்தில் பல ஆட்சேபகரமான விஷயங்களையும் தான் கோருகிறார்கள். சமய சாத்திரத்தையே கைவிட்டுவிட்டு, ஏசுநாதரின் உபதேசங்களை வாழ்க்கையில் காட்டுவதென்று தீர்மானித்த இரண்டு கிறிஸ்தவ நண்பர்கள் எனக்கு இருக்கிறார்கள்."

"ஏசுநாதரை நீங்கள் ஆராய்ச்சி செய்ததன் மூலம் மகத்தான பலன் எதுவும் ஏற்படவில்லை என்று நீங்கள் நிச்சயமாகக் கூற முடியுமா?"

"ஏன், மகத்தான பலன் ஏற்பட்டுளது என்பதில் ஐயமில்லை. ஆனால், சமய சாத்திரத்தின் மூலமோ அல்லது சமய

சாத்திர நிபுணர்கள் கொடுக்கும் விளக்கங்களின் மூலமோ அது ஏற்படவில்லை. மலைப் பிரசங்கம் லோகாயதமான விஷயங்களுக்குப் பொருந்தாது என்றும், ஏசுநாதரின் பன்னிரண்டு சீடர்களுக்காக மாத்திரமே அந்தப் பிரசங்கம் நிகழ்த்தப்பட்டது என்றும் சமய சாத்திர நிபுணர்களில் பலரும் வாதிக்கின்றனர். நான் அதை நம்பவில்லை. ஒவ்வொருவருடைய தினசரி வாழ்க்கையிலும் மலைப் பிரசங்கம் முக்கியமான இடம் பெருவிடில், அதில் அடங்கியுள்ள போதனைகள் அனுசரிக்கப்படாவிடில், அதற்கு அர்த்தமேயில்லை என எண்ணுகிறேன்.''

''ஏசுநாதரின் உபதேசத்தில் இன்றுள்ள பிரச்னைகளைத் தீர்ப்பதற்கான பரிகார முறைகள் காணப்படவில்லையா?''

''இப்போது தண்ணீரில் அதிக ஆழமான இடத்தில் என்னை நீங்கள் இழுத்துச் செல்லுகிறீர்கள்; என்னை நீங்கள் மூழ்கடித்து விடுவீர்கள்!'' என்று உரத்த குரலில் கூறினர் காந்திஜி.

(ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதியது)

—'ஹரிஜன்' —23—3—1940

# 10

# எனது கண்ணேட்டத்தில் கிறிஸ்தவ சமயம்

கொழும்புவில் நடந்த கிறிஸ்தவ இளைஞர்கள் அடங்கிய மாபெரும் கூட்டத்தில் காந்திஜி நிகழ்த்திய அருமையான பிரசங்கத்தின் விவரங்களே கீழே கொடுக்கப்பட்டுள்ளன:

''உங்களுடன் நெருங்கிய தொடர்புகொள்ள மற்றொரு சந்தர்ப்பம் கிடைத்திருப்பதை நான் வரவேற்கிறேன். உலகம் முழுவதும் உள்ள கிறிஸ்தவர்களுடன் எனக்குத் தினந்தோறும் தொடர்பு இருந்துவருகிறது. நான் ஒரு கிறிஸ்தவன் அல்ல என்று அடியோடு மறுத்தாலும்கூட, அதை நம்பாத சிலர் இருக்கிருர்கள். கிறிஸ்தவ உலகம் முழுவதற்கும் நான் கூறும் பணிவான செய்தி இதுதான்:

''அதாவது எனக்குத் தெரிந்தவரையில் ஏசுநாதரின் உபதேசங்கள் யாவும் கலப்பற்ற, முழுமையான அவரது மலைப் பிரசங்கத்தில் அடங்கி யிருக்கின்றன. மலைப் பிரசங்கம் சம்பந்தப்பட்ட வரையிலும்கூட, கிறிஸ்தவ வைதிகர்களின் விளக்கத்திற்கும் எனது பணிவான விளக்கத்திற்கும் பல அம்சங்களிலும் வேற்றுமை இருக்கிறது. அப் பிரசங்கத்தின் கருத்தை மேநாடுகளில் சிதைத்திருக்கிருர்கள் என்றே என் மனத்திற்குத்

தோன்றுகிறது. நான் இவ்விதம் கூறுவது துணிகரமான ஒரு புகாராக இருக்கலாம். எனினும், சத்தியத்தின் பக்தன் என்ற முறையில் என் மனத்தில் தோன்றுவதைக் கூற நான் தயங்கக் கூடாது. கிறிஸ்தவ சமயத்தைப் பற்றி எனது கருத்து என்ன என்பதைத் தெரிந்துகொள்ளுவதற்காக உலகம் காத்துக் கொண்டிருக்கவில்லை என்பதையும் நான் அறிவேன்.

“ஒருவருடைய சொந்த மதம், அவருக்கும் அவரைப் படைத்தவருக்கும் இடையே உள்ள ஒரு பிரச்னையாகும். வேறு எவருக்கும் அதில் சம்பந்தமில்லை. எனினும், என்னுடைய சிந்தனைகளை உங்களுடன் அவசியம் பகிர்ந்துகொள்ள வேண்டும் என்று நான் கருதுகிறேன். ஏனென்றால், சத்தியத்தைத் தேடும் எனது முயற்சியில் உங்களுடைய அனுதாபத்தைப் பெறவேண்டும் என்பதே எனது விருப்பமாகும். ஏசுநாதரின் உபதேசங்களைப் பற்றி எனது கருத்துகள் என்ன என்பதை அறிந்துகொள்வதில் பல கிறிஸ்தவ நண்பர்கள் அக்கறை கொண்டிருக்கிறார்கள். மலைப் பிரசங்கத்தையும், அதன் சம்பந்தமான எனது விளக்கத்தையும் மாத்திரம் நான் சமாளிக்க வேண்டியிருக்குமாயின், ‘ஆமாம், ஆமாம், நான் ஒரு கிறிஸ்தவன்தான்’ என்று கூற நான் தயங்க மாட்டேன். தற்போது அவ்விதம் ஏதாவது நான் கூறிவிடுவேனாயின், மோசமான தப்பெண்ணத்திற்கு நான் இடம் கொடுத்தவனாவேன். எனது கருத்துகள் மோசடியான கூற்றுகளே என்ற புகாருக்கும் நான் இடம் கொடுத்தவன் ஆவேன். ஏனெனில் கிறிஸ்தவ சமயம் என்பதற்கு நான் கூறும் அர்த்தம் என்ன என்பதை உங்களுக்கு நான் கூறவேண்டியிருக்கும். ஆனால், கிறிஸ்தவ சமயத்தைப்பற்றி எனது சொந்தக் கருத்தைக் கூற நான் விரும்பவில்லை. எனினும், அவ்விஷயத்தைப்பற்றி எதிர்மறையாக எனது கருத்தை உங்களுக்கு நான் கூற முடியும். அதாவது, இன்று வழங்கப்படும் கிறிஸ்தவ சமயத்தில் பெரும் பகுதியும் மலைப் பிரசங்கத்தையே மறுப்பதாக இருக்கிறது. இன்றைய கிறிஸ்தவ சமயத்தைப்பற்றி இதுதான் எனது பணிவான அபிப்பிராயமாகும். தயவு செய்து எனது வார்த்தைகளை உற்றுக் கவனியுங்கள். கிறிஸ்தவர்களின் நடத்தையைப்பற்றி இப்போது நான் பேசவில்லை. மேனாட்டினர் அறிந்துகொண்டுள்ள ரீதியில் கிறிஸ்தவர்களின் நம்பிக்கையைப் பற்றியும், கிறிஸ்தவ சமயத்தைப் பற்றியுமே பேசிக்கொண்டிருக்கிறேன். ஒவ்வோரிடத்திலும் நம்பிக்கையைக் காட்டிலும் நடத்தையின் தரம் மிகவும் வீழ்ச்சியடைந்திருக்கிறது என்ற உண்மையை நான் அறிந்துள்ளேன். இது எனக்கு வேதனையைக் கொடுக்கிறது. கண்டிக்க வேண்டுமென்ற நோக்கத்துடன் இதை நான் கூறவில்லை. நான் என்னவெல்லாம் கூறுகிறேனே, அவற்றைச் செயலில் காட்ட என் வாழ்க்கையில் ஒவ்வொரு விநாடியும் நான் முயற்சித்து வருகிறேன். அப்படியிருந்தும் நான் கூறுவதைப் போல் வாழ்ந்து காட்ட என்னால் முடியவில்லை. நான் வாயளவில் கூறுவதைப்போல் என் நடத்தையின் தரம் உயர்வாக இருப்ப

தில்லை என்பதை என் சொந்த அனுபவத்திலிருந்து அறிந்து கொண்டிருக்கிறேன். ஆகையால், கண்டிக்கவேண்டும் என்ற நோக்கம் எனக்கு எள்ளளவும் இல்லை. எனினும், எனக்குள்ள மூலாதாரமான கஷ்டங்களையே உங்களிடம் எடுத்துக் கூறிவரு கிறேன். *1893*-ஆம் ஆண்டில் தென்னப்பிரிக்காவில் நான் பய பக்தியுள்ள ஒரு மாணவன் என்ற முறையில் கிறிஸ்தவ சமய இலக்கியத்தைப் பரிசீலனை செய்ய ஆரம்பித்தபோது, 'இது தான் கிறிஸ்தவ சமயமா?' என்று என்னை நானே கேட்டுக் கொண்டேன். அந்தக் கேள்விக்கு, வேதத்தில் உள்ள 'நேதி நேதி' (இது அல்ல, இது அல்ல) என்ற பதிலே எப்போதும் எனக்கு வந்தது. எனவே, எனது நிலை சரியானதே என்று என் உள்ளத்தின் ஆழத்தில் உள்ள ஒன்று எனக்குக் கூறுகிறது.

"நான் நம்பிக்கையையும் பிரார்த்தனையையும் அடிப்படை யாகக் கொண்ட ஒருவன் என்று கூறிக் கொள்ளுகிறேன். என்னைத் துண்டு துண்டாக வெட்டினல் கூட கடவுளை மறுக் காமல் இருப்பதற்கான, கடவுள் இருக்கிருர் என்று கூறுவதற் கான பலத்தை கடவுள் எனக்கு அளிப்பார். கடவுள் இருக்கிருர், வேறு எவரும் இல்லை என்று முஸ்லிம்கள் கூறுகின்றனர். கிறிஸ்தவர்களும் அவ்விதமே கூறுகின்றனர்; ஹிந்துக்களும் அப்படித்தான் கூறுகிருர்கள். பௌத்தர்களும்கூட அதே கருத்தையே வேறு வார்த்தைகளில் கூறுகிருர்கள். கடவுள் என்ற சொல்லைக் குறித்து நாம் ஒவ்வொருவரும் ஒவ்வொருவித மாக விளக்கம் கூறலாம். இந்தச் சிறிய உலகத்தை மாத்திர மல்ல, இதைப் போன்ற கோடி கோடி உலகங்களைக் கடவுள் தழுவிக் கொண்டிருக்கிருர். முற்றிலும் திக்கற்றவர்களாக நம்மை அவர் படைத்திருக்கிருர். ஊர்ந்து செல்லும் சிறிய பிராணிகளான நாம் அவரது மகிமையை, அவரது அளவற்ற அன்பை, அவரது எல்லையற்ற கருணையை எப்படி அளவிட முடியும்? கடவுளை இறு மாப்புடன் நாம் மறுக்கவும், அவரைப்பற்றி தர்க்க வாதம் செய்யவும், ஒருவருக் கொருவர் கழுத்தை நெரித்துக் கொள்ள வும் அவர் அனுமதிக்கிருர். அவர் நமக்கு இப்படியெல்லாம் இடம் கொடுப்பதிலிருந்தே அவரது அளவற்ற அன்பையும், கருணையையும் தெரிந்து கொள்ளலாம். அவ்வளவு தூரம் மன்னிக்கும், அவ்வளவு தெய்வத்தன்மையுடன் கூடிய கடவுளின் மகத்துவத்தை நாம் எப்படி அளவிட இயலும்? அவ்வாருக, நாம் ஒரே விதமான சொற்களைக் கூறினலும், அவை நம் எல்லோ ருக்கும் ஒரே விதமான அர்த்தத்தைக் கொடுப்பதில்லை. அதனல் தான் நமது பேச்சின் மூலமோ அல்லது எழுத்தின் மூலமோ யாரையும் கிறிஸ்தவராகவோ, ஹிந்துவாகவோ அல்லது முஸ்லி மாகவோ மத மாற்றம் செய்ய வேண்டிய அவசியம் இல்லை என்று நான் கூறுகிறேன். உண்மையில் நமது வாழ்க்கையின் மூலமாக மாத்திரமே நாம் அவ்வாறு செய்யமுடியும். நாம் எல்லாச் சமயங்களையும் பரிசீலனை செய்வதற்கு எவ்விதத் தடையும் இருக்க வேண்டியதில்லை. இந்தக் கருத்தை பாதிரிமார்

நண்பர்கள் ஏற்றுக்கொள்ளும்படி செய்யவே நான் விரும்பு கிறேன். அவ்விதம் அவர்கள் ஏற்றுக்கொண்டால் பின்னர் நம்பிக்கையின்மைக்கோ, சந்தேகத்திற்கோ, பொறுமைக்கோ, வேற்றுமைகளுக்கோ இடமிராது.

"பாதிரிமார்கள் விஷயத்தில் நிதானத்தை இழந்துவிடவேண்டாம் என்று நான் இலங்கை மக்களைக் கேட்டுக் கொள்ளு கிறேன். அது போலவே, இலங்கையர்களின் பழக்க வழக்கங்கள், நடையுடை பாவனைகள் முதலியவை மூலாதாரமான தருமத்திற்கும் ஒழுக்கத்திற்கும் முரணாக இராதவரையில், மேநாடுகளிலிருந்து வந்தவர்கள் தெரிந்தோ, தெரியாமலோ அவற்றைத் தகர்க்க முற்பட்டுவிடக் கூடாது. நவீன நாகரிகம் என்று கூறப்படும் ஒரு நிலையுடன் ஏசுநாதரின் உபதேசத்தை இணைத்துக் குழப்பாதீர்கள். நீங்கள் யாருடன் வாழவேண்டியவர்களாக இருக்கிறீர்களோ, அவர்களுக்குத் தீங்கு எதுவும் செய்யாதீர்கள் என்று வேண்டிக்கொள்ளுகிறேன். கீழ்த்திசை நாடுகளில் உள்ள மக்களின் வாழ்க்கையை வேருடன் பறித்துச் சீர்குலைப்பது பாதிரிமார்களின் கடமையல்ல. அந்த மக்களிடம் எது நல்லதாக இருக்கிறதோ அதையெல்லாம் சகித்துக் கொள்ளுங்கள். நீங்கள் முன்னதாகவே உருவாக்கிக் கொண்டுள்ள எண்ணங்களை அடிப்படையாகக் கொண்டு அவர்கள் விஷயத்தில் அவசரமாக ஒரு முடிவுக்கு வந்துவிடாதீர்கள். மேநாட்டு நாகரிகம்தான் சிறந்தது என்று நீங்கள் நம்புகிறீர்கள். உங்களுடைய சாதனைகளைப் பற்றியெல்லாம் நீங்கள் பெருமையடைகிறீர்கள். இருந்தாலும் பணிவை மேற்கொள்ளும்படி உங்களை நான் கேட்டுக்கொள்ளுகிறேன். நம்மில் ஒவ்வொருவரும் அவரவருடைய வாழ்க்கையை நடத்தட்டும். நம்முடையதுதான் சரியான வாழ்க்கையெனில், அவ் விஷயமாக அவசரப்படுவானேன்? அதன் பலன் தானாகவே ஏற்பட்டுவிடும்."

கொழும்பு கிறிஸ்தவ இளைஞர் சங்கத்தில் பௌத்த சமயத்தைச் சேர்ந்தவர்களும் அங்கத்தினர்களாக இருக்கிறார்கள். எனவே, கிறிஸ்தவ, பௌத்த இளைஞர்களுக்குப் புத்திமதியாகச் சில வார்த்தைகள் கூறும்படி கூட்டத் தலைவர் காந்திஜியைக் கேட்டுக் கொண்டார். அவரது கோரிக்கைக்கு இணங்க காந்திஜி கூறியதாவது :

" இலங்கை இளைஞர்களான நண்பர்களுக்கு நான் கூறுவது இதுதான்: மேநாடுகளிலிருந்து வரும் பகட்டுகளைக் கண்டு மயங்கிவிடாதீர்கள். தோன்றி மறையும் தாற்காலிகமான இந்த படாடோபத்தைக் கண்டு நீங்கள் நிலைகுலைந்துவிட வேண்டாம். இந்த அற்ப ஆயுட்காலமானது நிழல் போன்ற நிலையற்ற ஒரு தோற்றமே என்றும், நீர்க்குமிழி போன்றதே என்றும் ஞான ஒளி பெற்ற குரு (புத்தர்) ஒருகாலத்திலும் மறக்க முடியாதவாறு உங்களுக்குக் கூறியுள்ளார். உங்கள் கண்களுக்குமுன் தோன்றும் அனைத்தும் சூன்யமானவை ; நாம் காணும், இடைவிடாது மாறிக்

கொண்டிருக்கும் இந்த ஸ்தூல வாழ்வும் சூன்யமானது என்பதை நீங்கள் உணர்ந்து கொண்டுவிட்டால், மேலே நீங்கள் கிடைப்ப தற்கரிய பொக்கிஷங்களையும், கீழே இந்த உலகில் சாந்தியையும் பெறலாம். அந்த சாந்தி அறிவிற்கெல்லாம் அப்பாற்பட்டது. நாம் இதுவரையில் கண்டிராத ஆனந்தத்தையும் அடையலாம். ஆனால், அதற்கு ஆச்சரியகரமான, தெய்விகமான நம்பிக்கை தேவையாகும். நம் கண் முன் தோன்றும் எல்லாவற்றையும் விட்டுக்கொடுக்கும் உறுதி நமக்கு இருக்கவேண்டும். புத்தர் என்ன செய்தார்? ஏசுநாதர் என்ன செய்தார்? முகமது நபி என்ன செய்தார்? அவர்களுடைய வாழ்க்கை தன்னலத் தியா கத்தையும், துறவையும் அடிப்படையாகக் கொண்டது. உலக இன்பத்தையெல்லாம் புத்தர் துறந்தார். ஏனெனில், அவர் தமது ஆனந்தத்தை உலகத்துடன் பகிர்ந்துகொள்ள விரும்பினர். சத்தியத்தைத் தேடுவதற்காக தியாகம் செய்து, துன்பத்திற்கு உள்ளானவர்களுக்கு அத்தகைய ஆனந்தம் ஏற்பட்டது. பலரும் அருமையான தங்களுடைய உயிரைத் தியாகம் செய்து எவரஸ்ட் சிகரத்தின் உச்சியை அடைய முயற்சிக்கிறார்கள். அங்குள்ள நிலையைக் கண்டுபிடிப்பதற்காகவே அச்சிகரத்தில் ஏறுகிறார்கள். பூமியின் கோடியில் உள்ள துருவப் பிரதேசங்களில் கொடியை நாட்டுவதற்காக ஒருவர் பின் ஒருவராக உயிரை அர்ப்பணம் செய்வதை மிகவும் பெருமையாகக் கருதுகிறார்கள். இதெல் லாம் பெருமை வாய்ந்த காரியங்களாக இருக்குமாயின், அழிக்க முடியாத, மிகவும் சக்தி வாய்ந்த சத்தியத் தைத் தேடுவதற்கான முயற்சியில் ஓர் உயிர் அல்ல, லட்சம் உயிர்கள் அல்ல, கோடிக்கணக்கான உயிர் களைக்கூட அர்ப்பணம் செய்வது எவ்வளவு அதிக மகத் துவம் வாய்ந்ததாக இருக்கும்? எனவே, நிலை குலைவதற்கு நீங்கள் இடம் கொடுத்துவிடாதீர்கள். உங்களுடைய மூதாதை யர்களின் எளிய வாழ்க்கையிலிருந்து நீங்கள் விலகிச் சென்று விடாதீர்கள். இன்று பலர் வெறிபிடித்து தங்களுடைய தேவை களை அவசரம் அவசரமாகப் பெருக்கிக்கொண்டு வருகிறார்கள். அதன் பயனாக தாங்கள் உண்மையான மதிப்பையும், உலகத்தின் உண்மையான அறிவையும் வளர்த்துவருவதாக வீண் எண்ணம் கொண்டுள்ளனர். எனினும் அவர்கள், 'நாம் என்ன செய்திருக் கிறோம்?' என்று தங்களைத் தாங்களே கேட்டுக்கொண்டு தங்களு டைய விபரீதமான போக்கிலிருந்து பின்வாங்கவேண்டிய ஒரு காலம் வந்துகொண்டிருக்கிறது.

''நாகரிகங்கள் வந்திருக்கின்றன, போயுமிருக்கின்றன. நாம் மிகவும் முன்னேற்றம் அடைந்திருப்பதாகப் பெருமையடித்துக் கொள்ளுகிறோம். ஆனால், 'அந்த முன்னேற்றத்தின் நோக்கம் என்ன?' என்று அடிக்கடி கேட்கவேண்டும் என்ற ஆர்வம் எனக்கு ஏற்படுகிறது. டார்வின்* காலத்தில் இருந்த வாலஸ்

* டார்வின் (1809–1882) உலகப் புகழ் பெற்ற விஞ்ஞானியாவார். குரங்கி லிருந்து பிறந்து வளர்ச்சி யடைந்தவனே மனிதன் என்பது அவரது சித்தாந்தமாகும்.

அவ்விதமேதான் கூறியிருக்கிறார். ஐம்பது ஆண்டுகள் வரையில் மகத்தான ஆராய்ச்சிகளின் பலனாகவும், கண்டுபிடிப்புகளின் பலனாகவும் மனிதவர்க்கத்தின் தார்மிக வளர்ச்சி ஓர் அங்குலம் கூட அதிகமாகவில்லை என்று அவர் கூறியிருக்கிறார். கற்பனைச் சிற்பியும் தீர்க்கதரிசியுமான டால்ஸ்டாயும் அவ்விதமே கூறியுள்ளார். ஏசுநாதர், புத்தர், முகமது நபி முதலியோரும் அப்படித் தான் கூறினார்கள்.

“மலைப் பிரசங்கத்தில் உள்ள ஊற்றுகளிலிருந்து உங்கள் விருப்பப்படி ஆழ்ந்து பருகுங்கள். ஆனால், அதில் குறிப்பிட்டுள்ள படி நீங்கள் எளிய வாழ்வை மேற்கொள்ளவேண்டும். நம்மில் ஒவ்வொருவருக்காகவுமே மலைப்பிரசங்கம் ஏற்பட்டிருக்கிறது. கடவுள், செல்வம் இரண்டையும் நீங்கள் வழிபடுவது முடியாத காரியம். கடவுள், கருணையும் இரக்கமும் உள்ளவர்; சகிப்புத்தன்மையே உருவானவர். அவர் செல்வத்திற்கு சில நாள்வாழ்வுதான் அளிக்கிறார். ஆனால், இலங்கை இளைஞர்களான உங்களுக்கு நான் கூறுவது என்னவெனில், ஆன்மாவை அழிக்கும் நாசகரமான செல்வத்தின் பகட்டிலிருந்து அப்பால் ஓடிவிடுங்கள் என்பது தான்.”

—‘எங் இந்தியா’ – 8—12—1927

## 11

# பாதிரிமார்களின் தொண்டு

**கேள்வி:** இந்தியாவில் கிறிஸ்தவப் பாதிரிமார்களின் தொண்டைப்பற்றி உங்களுடைய பட்டவர்த்தனமான மதிப்பீடு என்ன என்பதை நான் அறிய விரும்புகிறேன். நமது தேச மக்களின் வாழ்க்கை உயர்வதற்கு கிறிஸ்தவ சமயம் அளிக்கக்கூடிய உதவி ஏதாவது இருக்கிறதென நீங்கள் நம்புகிறீர்களா?

**பதில்:** கிறிஸ்தவப் பாதிரிமார்கள் நமக்கு மறைமுகமாக நன்மைகளைச் செய்கிறார்கள் என்பதே எனது அபிப்பிராயமாகும். ஆனால், அவர்கள் நேரடியாகச் செய்துள்ள காரியங்கள் நமக்கு அதிகத் தீமையை விளைவித்திருக்கின்றன. மத மாற்றத்திற்காக அனுசரிக்கப்படும் நவீன முறையை நான் எதிர்க்கிறேன். அம்முறை, மதம் மாறுவோருடைய பொதுவான ஒழுக்கத்தை உயர்த்தவில்லை. தென்னாப்பிரிக்காவிலும், இந்தியாவிலும் மத மாற்றம் சம்பந்தமாக பல ஆண்டுகளாக நான் பெற்றுள்ள அனுபவமானது அந்த அபிப்பிராயத்தை உறுதிப்படுத்தியிருக்கிறது. அவ்விதம் மதம் மாறியவர்கள் ஐரோப்பிய நாகரிகத்தின் மேற்பூச்சுகளை மாத்திரம்தான் மேற்கொண்டுள்ளனர்; ஏசுநாதரின் உபதேசங்களை உணர்ந்து

கொள்ள அவர்கள் தவறிவிட்டார்கள். பொதுவாக உள்ள மனப்போக்கைப்பற்றி நான் குறிப்பிடுகிறேனேயன்றி, வேறல்ல. போற்றக்கூடிய விதத்தில் சிலர் அதற்கு விலக்காக இருக்கலாம். அதற்கு மாருக, பாதிரிமார்களின் முயற்சியினல் மறைமுகமாக ஏற்பட்டுள்ள பலன் மகத்தானது. சமய ஆராய்ச்சியில் ஈடுபடும்படி ஹிந்துக்களையும் முஸ்லிம்களை யும் அது தூண்டியிருக்கிறது. நம் சொந்த வீடுகளை ஒழுங்காக வைத்துக்கொள்ளும்படி அது நம்மை வற்புறுத்தியிருக் கிறது. கிறிஸ்தவ சமய சங்கங்களைச் சேர்ந்த சிறந்த கல்வி, வைத்திய ஸ்தாபனங்களையும் மறைமுகமான பலன்க ளாகவே நான் கருதுகிறேன். ஏனெனில், கல்வி அளிக்க வேண்டும் என்பதற்காகவோ, நோயாளிகளுக்குச் சிகிச்சை செய்யவேண்டும் என்பதற்காகவோ அவை ஸ்தாபிக்கப்பட வில்லை. ஆனல், மத மாற்றத்திற்கு உதவியாகவே அவை அமைக்கப்பட்டுள்ளன.

உலகமும், எனவே நாமும், முகமது நபியின், உபநிடதங் களின் உபதேசங்களின்றி எவ்விதம் வாழமுடியாதோ அது போலவே ஏசுநாதரின் உபதேசங்களின்றியும் வாழ முடியாது. அவை ஒன்றையொன்று பூர்த்தி செய்வனவாக இருக்கின்றன. ஒவ்வொன்றும் தனித்து இயங்குவதாக இல்லை என்றே நான் கருதுகிறேன். அவற்றின் உண்மை யான பொருளை, அவை ஒன்றுக்கொன்று ஆதாரமாக இருப் பதை, அவற்றின் பரஸ்பரத் தொடர்பை இன்னும் நாம் அறிந்துகொள்ளவில்லை. நாம் அவரவருக்குச் சொந்தமான மதங்களில் சிரத்தையில்லாதவர்களாக இருக்கிறோம்; பெரும்பாலான சமயங்களிலும் அவை பொய்த்துப் போகும் படியும் நடந்துகொள்ளுகிறோம்.

—'எங் இந்தியா' – 17—12—1925

## 12

# சிறந்த தொண்டு செய்வது எப்படி ?

காந்திஜி வங்காளத்தில் யாத்திரை செய்தபோது மிகவும் முக்கியமான ஒரு கூட்டம் நடந்தது. சில பாதிரிமார்களை அவர் சந்தித்ததே அக் கூட்டமாகும். அங்கே பன்மொழிப் பள்ளிக் கூடம் ஒன்று இருக்கிறது. அதை கன்னி ரௌலண்ட்ஸ் நடத்தி வருகிருர். இந்தியாவில் தொண்டு புரியும் பாதிரிமார்கள் மாத்தி ரம்தான் அதில் சேரலாம். அவர்கள் அடங்கிய ஒரு கூட்டத்தில் பேசும்படி ஒரு நாள் காலையில் காந்திஜி அழைக்கப்பட்டார். அது ஓர் அமைதியான கூட்டமாகும். அங்கே கூடியிருந்தவர்களின் தொகை நூற்றுக்கு மேல் இராது. கன்னி ரௌலண்ட்ஸ்

காந்திஜியை வரவேற்று சுருக்கமாகவும் பொருத்தமாகவும் பேசினர். காந்திஜி என்ன சொல்லவேண்டும் என்பதையும் ஜாடையாகக் கூறினர். கன்னி ரௌலண்ட்ஸ் கூறியதாவது: "தாழ்த்தப்பட்டவர்களுக்காகப் போராடும் தொண்டர் என்ற முறையிலேயே நாங்கள் உங்களை வரவேற்கிறோம். இந்தியாவின் மாபெரும் ஊழியர் என்ற முறையில், நீங்கள் துன்ப வாழ்க்கையை மேற்கொண்டீர்கள். துன்பத்திற்குள்ளாகியிருக்கும் மானிட வர்க்கத்திற்கும் நீங்கள் ஒரு மாபெரும் தொண்டர் எனலாம். எனவே, சிறந்த முறையில் ஏசுநாதருக்குத் தொண்டு செய்வது எப்படி என்பதை தயவு செய்து எங்களுக்குச் சொல்லுங்கள்."

கன்னி ரௌலண்ட்ஸின் பேச்சு காந்திஜியின் இதயத்தைத் தொட்டு, அவரது மனத்தை உருக்கிவிட்டது. எனவே அவரது பேச்சு மனத்தின் அடித்தளத்திலிருந்து வந்தது. முதலில் காந்திஜி தமது வாழ்க்கையின் லட்சியத்தை விரிவாகக் கூறினர். காந்திஜி பேசியதன் சாரம் பின்வருமாறு :

"அரசியல் துறையிலோ அல்லது சமயத் துறையிலோ சுயத் தூய்மையே எனது மூலாதாரமான லட்சியமாகும். இதயத் தூய்மை என்பதற்கு, வாழ்க்கையின் எல்லா அம்சங்களிலும் தூய்மை என்பதே பொருள். ஒன்றுக்கொன்று தொடர்பின்றி பல பிரிவுகளாக வகுக்கப்பட்டிருப்பது வாழ்க்கையல்ல. எல்லாம் சேர்ந்ததே அழகான, பூரணமான வாழ்க்கையாகும். என்னைப் பொறுத்தவரையில், சமயத் தொடர்பு இல்லாத அரசியல் வெறும் தூசிக்குச் சமமானது. அத்தகைய விபரீதத்தை எப்போதுமே தவிர்க்கவேண்டும். அரசியல், தேசங்களைப் பொறுத்த விஷயமாகும். தேசங்களின் நலனைப் பொறுத்த ஒரு விஷயம், சமயத்தையும், வேறு விதமாகக் கூறுவதாயின் கடவுளையும் சத்தியத்தையும் நாடிச் செல்லும் மனிதனையும் பொறுத்ததாகத்தான் இருக்கவேண்டும். கடவுள், சத்தியம் எல்லாம் எனக்கு ஒன்றுதான். கடவுள் பொய்க் கடவுள் என்றும் சித்திரவதைக் கடவுள் என்றும் என்னிடம் யாராவது கூறினல், அத்தகைய கடவுளை வழிபட நான் மறுத்துவிடுவேன். எனவே அரசியலிலும் கூட நாம் சொர்க்க சாம்ராஜ்யத்தை ஸ்தாபிக்க வேண்டியவர்களாக இருக்கிறோம்."

தமது வாழ்க்கை லட்சியத்தின் பொருளை காந்திஜி அவ்விதம் விளக்கிய பின், கன்னி ரௌலண்ட்ஸின் வேண்டுகோளுக்கும் பதிலளிக்க முற்பட்டார். அவர் கூறியதாவது: "ஏசுநாதரின் உபதேசங்களைத் தாங்கிச் செல்லும் உங்களுக்கு, ஏசுநாதருக்குச் சிறந்த முறையில் தொண்டு செய்வது எப்படி என்று நான் கூற முற்படுவது துணிச்சலான செயல் அல்லவா? எனினும், எனது நடவடிக்கைளை மிகுந்த அனுதாபத்துடன் கவனிக்கும் கிறிஸ்தவ நண்பர்கள் இருக்கிறார்கள். அவர்கள் எனது நடவடிக்கைகளை ஆதரிக்கவும் செய்கிறார்கள். எனவே, அவ்விஷயமாக நான் என்ன நினைக்கிறேனே, அதை மிகுந்த பணிவுடன் உங்களுக்குக் கூறுகிறேன். 1916-ஆம் ஆண்டில் சென்னையில் உள்ள ஒரு கிறிஸ்தவ

சங்கத்தின் முன்னிலையில் நான் பேசியது இப்போது என் நினைவுக்கு வருகிறது. எல்லா சமயங்களையும் சேர்ந்தவர்களுடைய மத மாற்ற நடவடிக்கைகளைப்பற்றி அப்போது நான் ஒளிவு மறைவின்றி பட்டவர்த்தனமாக எனது கருத்துகளைத் தெரிவித்தேன். மத மாற்றமானது சிறிதளவு நன்மை செய்திருக்கிறது. எனினும், அதனால் ஏற்பட்ட தீமைதான் மிகவும் அதிகமாகும். நீங்கள் உங்களை எந்த சமயத்தைச் சேர்ந்தவர் என்று கூறிக் கொண்டாலும், அது ஒரு பெரிய விஷயம் அல்ல. நாம் வாயால் என்ன கூறுகிறோம் என்பதல்ல, நாம் இதயத்தில் எதை நம்பு கிறோம் என்பதையே நாம் கூறவேண்டுமென்று கடவுள் விரும்பு கிறார். உலகில் பைபிளையோ, ஏசுநாதரின் பெயரையோ அல்லது அவரது ஆச்சரியமான தியாகத்தையோ அறியாத பதினயிரக் கணக்கான ஆடவர்களும் பெண்களும் இருக்கிறார்கள் என்பதில் ஐயமில்லை. ஆனால் பைபிளை நன்கு அறிந்த, தினந்தோறும் ஒழுங்காகப் பிரார்த்தனை செய்யும், பத்து கட்டளைகளையும் தாம் பின்பற்றுவதாக உண்மையிலேயே நம்பும் பல கிறிஸ்தவர்களை யும்விட, பைபிளையோ, ஏசுநாதரையோ அறியாத மேற்கண்ட பதினயிரக் கணக்கானவர்கள் கடவுளுக்கு அதிகமாக அஞ்சி நடப்பவர்களாக இருக்கிறார்கள். சமயம், மிகவும் கடினமானது. குறிப்பிட்ட சமயத்தைப் பின்பற்றிவருவோரிடம், அவர்கள் வேறொரு சமயத்தைப் பின்பற்றினால் சிறந்ததாக இருக்கும் என்று கூறுவோரின் கருத்து என்ன என்பதையே நம்மைப்போன்ற பலவீனமான, தவறு செய்யும் இயல்புள்ள மானிடர்கள் அறிந்து கொள்ளுவது அசாத்தியமாக இருக்கிறது.

"தென்னாப்பிரிக்காவில் ஒரு பாதிரியாருக்கும் எனக்கும் நடந்த சம்பாஷணை இப்போது என் நினைவுக்கு வருகிறது. அவர் என்னைப் பல கேள்விகளும் குறுக்குக் கேள்விகளும் கேட்டார். 'உங்களை கிறிஸ்தவ மதத்திற்கு மாற்ற நான் இனி விரும்பமாட்டேன்' என்று அவர் கடைசியாக என்னிடம் கூறினார். அவரிடம் நான் பின்வருமாறு சொன்னேன்: 'ஆண்டவனே, ஆண்டவனே என்று வாயால் கூறுபவர் சொர்க்க சாம்ராஜ்யத்திற்குள் பிரவேசிக்க முடியாது. ஆனால், ஆண்டவனின் கட்டளைப்படி நடப்பவரே அதற்குள் பிரவேசிக்க முடியும். எனது குற்றம் குறைகளை நான் உணர்ந்திருக்கிறேன். அவற்றை எதிர்த்துப் போராடவும் முயற்சித்து வருகிறேன். என்னுடைய சொந்த பலத்தைக் கொண்டல்ல, ஆனால் கடவுளின் பலத்தைக் கொண்டே அவற்றை எதிர்த்துப் போராட முயற்சித்து வருகிறேன். அது போதாதா? என்னுடைய எல்லாப் பாவங்களையும் ஏசுநாதர் களைந்து என்னைத் தூய்மை யாக்கிவிட்டார் என்று கிளிப்பிள்ளை போல் நான் திருப்பித் திருப்பிக் கூறவேண்டுமென நீங்கள் விரும்பு கிறீர்களா?'

"இதற்குமேல் பேசுவதற்கு என்னை அவர் விடவில்லை. 'நீங்கள் கூறுவதன் பொருளை நான் புரிந்துகொண்டேன்' என்றார் அவர். எனவே, நான் கூறுவது என்னவெனில், கிறிஸ்தவர்களின்

தொகை எவ்வளவு என்று எண்ண விரும்புவதை விட்டுவிட்டு, சர் கிப்பியைப்போல், மக்களிடையே மௌனமாகத் தொண்டு செய்யுங்கள் என்பதுதான். நீங்கள் செய்யும் தொண்டு உங்களுடைய தகுதியைக் காட்டும் மௌனமான உதாரணமாக விளங்கட்டும். மக்களை நீங்கள் மதம் மாற்றுவது எதற்காக? அவர்களுடன் உங்களுடைய தொடர்பானது அவர்களை உயர்த்துமாயின், பொய்யையும் எல்லாத் தீமைகளையும் அவர்கள் மறந்து ஒளியைக் காணும்படி செய்யுமாயின், அது உங்களுக்குப் போதாதா? அல்லது ஓர் அனாதையை உங்களுடைய மேற்பார்வையில் எடுத்துக் கொண்டு, அவனுக்கு உணவும் உடையும் அளித்துக் காப்பாற்றுவீர்களாயின், அது போதாதா? அவ்விதம் செய்யும் வாய்ப்பே உங்களுக்குக் கிடைக்கும் வெகுமதி அல்லவா? தான் கிறிஸ்தவ சமயத்தைச் சேர்ந்தவன் என்று அவன் யந்திரத்தைப் போல் உங்களிடம் ஒப்புக்கொள்ள வேண்டும் என்று விரும்புகிறீர்களா? தங்கள் தங்கள் சமயத்தில் சேர்ந்திருப்பவர்களின் தொகையைக் குறித்து ஒவ்வொருவரும் பெருமையடித்துக் கொள்ளுவதற்காக, இன்று பல்வேறு சமயங்களிடையேயும் போட்டியும் போராட்டமும் நடந்து வருவதை நாம் காண்கிறோம். இதைக் குறித்து நான் மிகவும் வெட்கமடைகிறேன். நம்முடைய சமயத்திற்கு மக்களை மாற்றியதாக நாம் பெருமைப்பட்டுக்கொள்ளும் சாதனைகள் ஒவ்வொன்றிலும் நாம் கடவுளை மறுக்கிறோம், நமக்கு நாமே துரோகம் செய்கிறோம் என்றே நான் கருதுகிறேன்.''

காந்திஜி தமது பிரசங்கத்தின் பிற்பகுதியில், இந்திய மொழிகளின் இலக்கியத் துறையில் பாதிரிமார்கள் செய்துள்ள அற்புதமான தொண்டை மிகவும் பாராட்டினர்; அந்த இலக்கியங்களில் மறைந்து கிடக்கும் பொக்கிஷங்களை இந்தியர்கள் அனுபவிக்கும்படி செய்ததாகக் கூறினர். டார்ஜிலிங் பன்மொழிக் கல்விசாலை நிர்வாகிகளையும் காந்திஜி பாராட்டினர். மேலும் அவர் கூறியதாவது :

''ஏசுநாதருக்குச் சிறந்த தொண்டு புரிய நீங்கள் விரும்பினல், அது மாத்திரம் போதாது. மானிட வர்க்கத்தில் உள்ள பரம ஏழைகளை நீங்கள் அணுகி, அவர்களுடன் நெருங்கிய தொடர்பு கொள்ளவேண்டும். நீங்கள் ஒருபோதும் அரசாங்கத்தின் பாதுகாப்பை நாடக்கூடாது. கடவுளின் பலத்திலேயே நீங்கள் எப்போதும் பூரண நம்பிக்கை வைக்கவேண்டும். உங்களுடைய உயிரை உள்ளங்கையில் வைத்துக்கொண்டு நீங்கள் பாமர மக்களிடையே ஊடுருவிச் செல்ல வேண்டும்.''

(ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதியது)

—'எங் இந்தியா' – 18—6—1925

## 13

# கடவுளே நமக்கு வழிகாட்டி

சமீப வருடங்களாக, ஆக்ஸ்போர்டு கோஷ்டி இயக்க சம்பந்தமாகவும் அதன் அலுவல்களைப் பற்றியும் ஏராளமான இலக்கியங்கள் எங்களுக்கு வந்துள்ளன. அந்த கோஷ்டியைச் சேர்ந்த பலரையும் நாங்கள் சந்தித்திருக்கிறோம். இங்கிலாந்தில் அவர்களுடைய வீடுகளில் நடக்கும் கூட்டங்கள் பலவற்றிற்கும் அழைப்பின் மீது நான் சென்றிருந்தேன். அக்கோஷ்டியைச் சேர்ந்த ஒரு சில நல்ல மனிதர்களை அபொட்டாபாத்தில் சந்திக்கும் வாய்ப்பும் எனக்குக் கிடைத்தது.

அவர்கள் மனம் விட்டுப் பேசுவது ஆனந்தத்தைக் கொடுக்கிறது. அபொட்டாபாத்தில் காந்திஜியைச் சந்தித்த நண்பர் சில விஷயங்களை ஒப்புக்கொண்டது, அவருக்கு பெருமையளிப்பதாக இருந்தது. அடிப்படையான சில கொள்கைகள் சம்பந்தப்பட்டவரையில், எங்களுக்குள் பூரண கருத்து ஒற்றுமை இருப்பதைக் கண்டோம். உதாரணமாக, ஒருவர் மற்றவர்கள் திருந்த வேண்டும் என்று எதிர்பார்ப்பதைக் காட்டிலும் தம்மைத் தாமே திருத்திக்கொண்டு முன்னேற வேண்டும்; நமது வாழ்க்கையின் ஒவ்வொரு செயலிலும் கடவுளே நமக்கு வழிகாட்டியாக இருப்பாரென்று எதிர்பார்க்கவேண்டும் என்பதை அவர் வற்புறுத்தினர். இந்தக் கருத்து, சத்தியத்திலும் அகிம்சையிலும் நம்பிக்கையுள்ள ஒவ்வொருவரும் ஒப்புக்கொள்ளக் கூடியதே. கடவுளை வழிகாட்டியாகக் கொள்ளும்படி மக்களின் மனத்தை மாற்றுவதன் மூலம் பயத்தை ஒழிப்பதே தங்களுடைய இயக்கத்தின் நோக்கம் என்று காந்திஜியைச் சந்தித்த நண்பர் விவரித்தார்.

காந்திஜி கூறியதாவது: "அது ஒன்றுதான் சரியான நிலையாகும். வேறு எதுவும் சாத்தியமானதல்ல. நான் எழுதியுள்ளவற்றை நீங்கள் கவனித்திருப்பீர்களாயின், கடவுளிடம் ஜீவ நம்பிக்கை இல்லாத எவரும் சத்தியாக்கிரகம் செய்வதற்குத் தகுதி வாய்ந்தவர் அல்ல என்று நான் பிரகடனம் செய்திருப்பதை நீங்கள் அறிந்திருப்பீர்கள். எனது சக ஊழியர்களிடம் முன்பு அவ்விதம் பட்டவர்த்தனமாகக் கூறும் தைரியம் எனக்கு இருக்கவில்லை. இத்தகைய விஷயத்திற்கு இதய பூர்வமான ஆதரவைப் பெறுவது கஷ்டம் என்பதை நான் அறிவேன். ஏனெனில், தங்களுக்குக் கடவுளிடம் ஜீவ நம்பிக்கை இருப்பதாக பலர் கூறுகின்றனர். அப்படியிருந்தும் அவர்களுக்குக் கடவுளிடம் பயபக்தி இல்லை. கடவுளிடம் நம்பிக்கை இருக்க வேண்டும் என்ற கொள்கையை ஏளனம் செய்வோர், அவர்களுடைய இதயத்தில் கடவுளிடம் பயபக்தி உடையவர்களாக இருக்கிறார்கள். அது எவ்வளவு கஷ்டமாக இருப்பினும், அதை

நான் வற்புறுத்தித்தான் தீரவேண்டும் என்றும் என் சக ஊழியர்களிடம் கூறினேன்."

"இந்த நிபந்தனையை வற்புறுத்தவேண்டும் என்ற முடிவிற்கு, நீங்கள் சமீபத்தில்தான் வந்தீர்கள் அல்லவா?"

"ஆமாம். அது இன்றியமையாத ஒரு நிபந்தனையாக இருக்க வேண்டும் என்று நான் கருதினேன். அதை நான் முன்பே அறிந்திருந்தேன். என்னைப் பொறுத்தவரையில் அதை நடைமுறையில் அனுசரித்தும் வந்தேன். எனினும், எல்லோரும் அதை அங்கீகரிக்க வேண்டும் என்று நான் பிரகடனம் செய்யவில்லை. அந்த நிபந்தனையைக் குறித்து சிலர் கோபம் கொண்டார்கள். குறிப்பிட்டவர்கள் அடங்கிய கோஷ்டியிலிருந்து தங்களை விலக்கிவிட வேண்டும் என்ற ரகசிய நோக்கத்துடன் நான் அவ்விதம் செய்வதாகக்கூட அவர்கள் கூறினார்கள். என்மீது தப்பெண்ணம் ஏற்படுவதாக இருந்தாலும் கூட, நான் அதைச் சகித்துத்தான் தீரவேண்டும் என்றும், என்ன நேர்ந்தாலும் நான் உண்மையைப் பிரகடனம் செய்துதான் தீரவேண்டும் என்றும் கூறினேன். எனினும், அதை நடைமுறையில் கொண்டு வருவது எப்படி என்பது எனக்குத் தெரியவில்லை."

நண்பர் கூறினார்: "அது கஷ்டமாக இருப்பதாக நீங்கள் கூறுவதைக் கேட்க பயமாக இருக்கிறது. எனினும், அது எனக்கு உற்சாகத்தைக் கொடுப்பதாகும். உங்களை வணங்கி வழிபடுவோர், உங்களிடம் மனித இயல்பை மீறிய சக்தி இருப்பதாகக் கூறுகிறார்கள். அப்படியிருக்க, நீங்கள் சாதாரண மனிதர்தான் என்றும், உங்களுக்கும் கஷ்டங்கள் இருக்கின்றன என்றும் உங்களிடமிருந்து கேட்பது ஆறுதல் அளிக்கக் கூடியதாக இருக்கிறது. அதன் பலனாக, உங்களுக்கும் எனக்கும் இடையே உறவு இருப்பதை உணருகிறேன். நல்லதை எடுத்துக் கொள்ளாமல் எப்போதும் கொடுப்பதைப் பற்றியே சிந்திக்கக் கூடாது என்று நீங்கள் கூறினீர்கள் அல்லவா? அது என் இதயத்தில் ஆழ்ந்து பதிந்திருக்கிறது."

"அது ஒரு விதத்தில் சரியே. நீங்கள் எடுத்துக் கொள்ளாமல் கொடுக்க முடியாது. எப்போதுமே நீங்கள் கொடுப்பதாகக் கூறிக் கொண்டிருப்பது ஏமாற்றும் வேலையாகும்" என்றார் காந்திஜி.

## அவர்களுடைய சித்தாந்தம்

நண்பர் மேலும் இவ்விதம் கூறினார்: "நேர்மை, தூய்மை, சுயநலமின்மை, அன்பு ஆகிய நான்கும்தான் எங்களுடைய கொள்கைகளாகும். முதலில் கூறப்பட்ட இரண்டும் 'சத்தியம்' என்ற தலைப்பின் கீழ் வருகின்றன. மற்ற இரண்டும் 'அகிம்சை அல்லது தைரியம்' என்ற தலைப்பின் கீழ் வருகின்றன."

ஏசுநாதரின் உபதேசங்களிலிருந்து டால்ஸ்டாய் ஐந்து கட்டளைகளை உருவாக்கினர் என்பது நமக்கு நினைவிருக்கலாம். அவற்றை, அமைதிக்கான கட்டளைகள் என்றும் அவர் குறிப்பிட்டார். இன்று காந்தி சேவா சங்கத்தைச் சேர்ந்த நாங்கள், தினந்தோறும் அனுசரிக்க வேண்டிய விதிகளை பதினேரு பிரதிக்ஞைகளாக உருவகப்படுத்தியுள்ளோம். இறுதியாகப் பார்க்கப் போனால், அவற்றை சத்தியம் என்றும் அகிம்சை என்றும் சுருக்கிக் கூறிவிடலாம். எதையும் வாழ்க்கையில் நடந்து காட்டுவதே முக்கியமாகும். ஒருவர் தமக்கு எவ்வித முத்திரையும் கொடுத்துக் கொள்ளாமலேயே, மாபெரும் உபதேசகர்களின் ஒரே ஒரு வாக்கியத்திலிருந்து ஊக்கத்தையும் உற்சாகத்தையும் பெறலாம். 'யார் தனது உயிரில் பாசம் வைக்கிருனே அவன் அதை இழந்து விடுகிருன். யார் தனது உயிரை இழக்கின்ருனே அவன் அதை ரட்சித்தவனுகிருன்.' 'பொய்யை சத்தியத்திஞலும், துவேஷத்தை அன்பிஞலும் வெற்றி கொள்ளுங்கள்.' 'எல்லாக் கடமைகளையும் விட்டுவிட்டு, என்னிடம்அடைக்கலம் புகுந்து விடுங்கள்'. 'கடவுளிடம் சரணடைந்து விடுங்கள். அவரைக்காட்டிலும் பெரியவர் யாரும் இல்லை.'

ஆக்ஸ்போர்டு கோஷ்டியைச் சேர்ந்த இந்த நண்பர்கள், கடவுளே தங்களுக்கு வழிகாட்டியாக இருக்கிருர் என்று நம்புகிருர்கள். அவர்களுடைய வீடுகளில் நடக்கும் கூட்டங்களுக்கு வரும் ஆடவர்கள், பெண்கள் முதலிய ஏராளமானவர்களும் தங்களுக்கு மனமாற்றம் ஏற்பட்டிருப்பதாக முதலில் அறிவிக்கிருர்கள். அவர்கள் தங்களைத் தாங்களே ஏமாற்றிக் கொள்வதற்குச் சந்தர்ப்பம் இருக்கிறது என்று நான் எனக்குள்ளே சொல்லிக் கொண்டேன். ஏனெனில், பொய்யிலிருந்து சத்தியத்திற்கும், இருளிலிருந்து ஒளிக்கும், மரணத்திலிருந்து அமர நிலைக்கும் கண் சிமிட்டும் நேரத்தில் மாறிவிட முடியாது. குற்றம் குறையற்ற பூரண நிலையை அடைவதற்கு நீண்டகாலமாகப் பெரு முயற்சி செய்யவேண்டும். அவ்விதம் முயற்சித்தால் மாத்திரமே பலன் ஏற்படும். இதயம் தூய்மையாக இருப்பவர்களுக்கு மாத்திரம்தான் கடவுள் வழிகாட்டியாக இருக்க முடியும் என்று, நான் சந்தித்த நண்பர்களிடம் கூறினேன். அத்தகையோர்தான் "கடவுளைக் காண்பார்கள்." தங்களுக்குக் கடவுள் வழிகாட்டுவதாக எல்லோரும் சொல்லிக் கொள்ள முடியாது. நான் எந்த நண்பர்களுடன் இதையெல்லாம்பற்றி விவாதித்தேனே அவர்கள், நான் கூறிய மேற்கண்ட கருத்தை எதிர்க்கவில்லை என்பதைக் கூற மகிழ்ச்சியடைகிறேன்.

## வாழ்க்கையே உரைகல்

நான் ஏற்கனவே குறிப்பிட்டதைப் போல, வாயால் பேசுவதல்ல, வாழ்க்கையில் அனுசரித்துக் காட்டுவதுதான் முக்கியமாகும். காந்திஜி அன்ரெரு நாள் ஓர் ஐ. ஸி. எஸ். அதிகாரி

யுடன் விவாதித்துக் கொண்டிருந்தார். தமக்கு வழிகாட்டும் கடவுளின் அருளால் தாம் ஒரு புதிய அடிப்படையில் மக்களை அறிந்துகொள்ளப் போவதாகவும், உண்மையில் தமது அந்தஸ்தில் ஒரு தீவிர மாறுதல் ஏற்பட்டிருப்பதாகவும், சகோதரர் சகோதரரைச் சந்திப்பது போலவே தாம் ஒவ்வொருவரையும் சந்திக்கப் போவதாகவும் அவர் கூறினர்.

"ஆளப்படுவோரிடம் எவ்வித மனிதத் தொடர்பும் வைத்துக் கொள்ளக் கூடாது என்று பயிற்சி அளிக்கப்பட்டுள்ள ஒரு சிவில் அதிகாரி அந்த விதியை எப்படி நிறைவேற்ற முடியும்? ஒரு வேளை, அவர்கள் அத்தகைய பயிற்சி அளிக்கப்பட்டிருக்கிறார்கள் என்பதை நீங்கள் ஒப்புக்கொள்ளமாட்டீர்கள்" என்றார் காந்திஜி.

"ஆம், ஒப்புக்கொள்ள மாட்டேன்" என்றார் அதிகாரி.

காந்திஜி கூறியதாவது: "நல்லது, நீங்கள் அதை வெகு சீக்கிரத்தில் ஒப்புக்கொள்ளுவீர்கள். அதை நான் ஒரு குற்றச் சாட்டாகக் கூறவில்லை. அவ்விதம் நெருங்கிய தொடர்பு வைத்துக்கொள்ளாமல் இருப்பதுதான் இந்த உலகத்திற்கு புத்திசாலித்தனமாகும். அந்த நோக்கத்துடனேயே 'சிவில் சர்விஸை' அவ்விதம் அமைத்திருக்கிறார்கள். குறிப்பாக, ஆளுவோர் ஒரு சிலராக இருக்கும்போது அவர்கள் ஆளப்படுவோரிடம் நட்புறவு கொண்டு வாழ 'சர்விஸை' உருவாக்கியவர்கள் எப்படி அனுமதிக்க முடியும்? இருந்தாலும், ஆக்ஸ்போர்டு கோஷ்டியின் சித்தாந்தத்தை நீங்கள் ஒப்புக்கொள்ளுவீர்களாயின், நானும் மனிதன் என்ற முறையில் என்னுடன் நீங்கள் தொடர்பு வைத்துக்கொண்டுதான் தீர வேண்டும். நீங்கள் என்னுடன் அத்தகைய தொடர்பு கொண்டால், மற்றவர்களுடனும் நீங்கள் அதே தொடர்பு வைத்துக்கொண்டு தீர வேண்டும். பின்னர் என் மூலம் நீங்கள் இந்திய மக்கள் எல்லோருடனும், உங்கள் மூலம் நான் எல்லா ஆங்கிலேயர்களுடனும் தொடர்பு வைத்துக் கொள்ளவேண்டியிருக்கும். இதுதான் ஆக்ஸ்டுபோர்டு கோஷ்டியின் சித்தாந்தமாக இருக்கவேண்டும். இல்லாவிடில், அக் கோஷ்டியும் அதுபோன்ற மற்றும் பல இயக்கங்களைப் போலவே செயலில் எதுவுமின்றி பேச்சளவில் இயங்கி வருவதாக இருக்கும்."

"நீங்கள் கூறுவது சரிதான். அதனால்தான் தங்கள் சமூக நலனையும் பரஸ்பர உதவியையும் மாத்திரம் முக்கிய கொள்கையாகக் கொண்டுள்ள ரகசிய சங்கத்தில் (Freemasonry) நான் சேரவில்லை. கடவுளின் காலடியில் நாம்கூட வேண்டியவர்களாக இருக்கிறோம். எனவே, கடவுளின் சித்தத்திற்கு முரணாக மற்றொருவரிடமிருந்து வற்புறுத்தி நாம் எதையும் கேட்கக்கூடாது."

"அது எப்படியாயினும், எனது ஆட்சேபணையை நான் தெரிவித்துவிட்டேன்" என்றார் காந்திஜி.

[ ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதியது ]

—'ஹரிஜன்' – 12—8—1939

பகுதி பதினேழு

# பசுப் பாதுகாப்பு

[கோசேவையை, அதாவது பசுவுக்குத் தொண்டு செய்வதை, பசுப் பாதுகாப்பை இந்திய மக்கள் வாழ்க்கையில் முக்கிய கடமைகளில் ஒன்ருகக் கருதவேண்டும் என்று காந்திஜி வற்புறுத்தினர். பசுவுக்கு சேவை செய்வது, பலவீனர்களான, திக்கற்றவர்களான மனிதர்களுக்கு மாத்திரமல்ல, திக்கற்ற, பலவீனமான, எல்லா ஜீவ ராசிகளுக்கும் தொண்டு செய்வதாகும் என்றும் காந்திஜி கருதினர். பசுப் பாதுகாப்பு பற்றியும், ஹிந்துக்கள் பசுவை தெய்விகமான மிருகமாகக் கருதுவதன் தத்துவத்தை விளக்கியும் காந்திஜி எழுதிய கட்டுரைகள் 'மகாத்மா காந்தி நூல்கள்' 9-ஆம் தொகுப்பில் பல அத்தியாயங்களாக வெளியாகியுள்ளன. பசுப் பாதுகாப்பு சம்பந்தமாக அந்தத் தொகுப்பில் வெளிவராத காந்திஜியின் சில கட்டுரைகளே இப் பகுதியில் கொடுக்கப்பட்டுள்ளன.]

## 1

## பசுப் பாதுகாப்பின் தத்துவம்

என்னைப் பொறுத்தவரையில் பசுவைப் பாதுகாக்க வேண்டும் என்பது வெறும் பசுப் பாதுகாப்பு மட்டும் அல்ல; அதைக் காட்டிலும் எவ்வளவோ மடங்கு அதிக மேலானதொரு விஷயமாகும். உயிர் வாழும் எல்லாவற்றிற்கும் பசு ஒரு சின்னமாக விளங்குகிறது. பசுவைப் பாதுகாப்பது என்ருல், பலவீனர்களையும், திக்கற்றவர்களையும், ஊமைகளையும், செவிடர்களையும் பாதுகாப்பதேயாகும். அவ்விதம் பாதுகாக்கும்போது, மனிதன் கடவுளால் சிருஷ்டிக்கப்பட்ட எல்லாவற்றிற்கும் எஜமானனுகி விடுவதில்லை, ஊழியனுகவே இருக்கிருன். பசு, இரக்கத்தை உபதேசிக்கும் ஒரு காவியமாகவே திகழ்கின்றது என்பது எனது அபிப்பிராயமாகும்.

(காந்திஜி 25-4-1925-இல் ஜவாஹர்லால் நேருஜிக்கு எழுதிய கடிதத்திலிருந்து எடுக்கப்பட்டது.)

# 2

# பசுவும் அகிம்சையும்

ஓர் அன்பர் பின்வருமாறு எழுதுகிறார்:

"எப்பாடு பட்டாயினும் பசுவைப் பாதுகாக்கவேண்டும் என்று பெரும்பாலான ஹிந்துக்களும் இயற்கையாகக் கருதுவது போலவே, நானும் கருதுகிறேன். ஆனால் பஞ்சத்தில் அடிபட்ட பிரதேசங்களில் முஸ்லிம் தோல் வியாபாரிகளுக்கு பசுக்கள் கூட்டம் கூட்டமாக விற்கப்பட்டு வருகின்றன. இளம் பருவத்தில் உள்ள பசுக்கள் பட்டினியினால் தோலும் எலும்புமாகி அவ்விதம் விற்கப்படும் பரிதாபமான காட்சியை நான் நேரில் பார்த்திருக்கிறேன்.

"பசுவைப் பாதுகாக்க வேண்டும் என்று, ஹிந்து வேத நூல்கள் மாத்திரமே அவற்றைப் பின்பற்றுவோருக்குக் கட்டளையிட்டிருப்பதாகத் தோன்றுகிறது. அதன் தத்துவம் என்ன என்பதை அறிந்து கொள்ள நான் முயற்சித்து வருகிறேன். பிறந்ததிலிருந்து இறந்த பிறகும்கூட பசு இடைவிடாது பலனைக் கொடுத்துவருகிறது. அதன் காரணமாக, அதாவது கலப்பற்ற சுயநலம் காரணமாக பசுவைப் பாதுகாக்க வேண்டியது அவசியமாயின், ஹிந்துக்களிடையே மாத்திரமின்றி உலகம் முழுவதும் பசுப் பாதுகாப்பு அமலுக்கு வந்திருக்கவேண்டும். ஏனெனில், மனித வர்க்கமே இயற்கையாக சுயநல எண்ணம் கொண்டதல்லவா? அதற்கு மாறாக, பசு சாதுவான, அபாயமற்ற மிருகம் என்பதற்காக அதற்குப் பாதுகாப்பு அளிப்பதாயின், ஆடுகள், மான்கள் போன்ற சாதுவான மற்ற மிருகங்களுக்கும் பாதுகாப்பு அளிக்க வேண்டியது அவசியம் அல்லவா? எனவே, பசுவினிடத்தில் மாத்திரம் விசேஷ மகத்துவம் என்ன இருக்கிறது? மற்ற வீட்டு மிருகங்களைக் காட்டிலும் பசுவை அதிக உபயோகமுள்ளதாக ஹிந்துக்கள் ஏன் கருதவேண்டும்? சைவ உணவு சாப்பிடும் வைதிகப் பிரிவினர் உள்பட எல்லா ஹிந்துக்களுக்கும் எருமைகள், ஆடுகள் முதலியவற்றை உணவுக்காகவோ, அல்லது பலி கொடுப்பதற்காகவோ கொல்ல உரிமை இருக்கும்போது, பலி கொடுப்பதற்காகவோ அல்லது உணவுக்காகவோ பசுவைக் கொல்லும் முஸ்லிம்களின் மீது ஆத்திரம் கொள்ள நமக்கு என்ன உரிமை இருக்கிறது? உணவுக்காகவோ, பலி கொடுப்பதற்காகவோ மிருகங்களைக் கொல்லுவதை ஹிந்துக்களான நாம் கைவிட்டால்தான், பசுவைப் பாதுகாக்கவேண்டும் என்று முஸ்லிம்களுக்கு ஹிந்துக்கள் வேண்டுகோள் விடுப்பது நியாயமாகவும், அதிக பலன் தரத்தக்கதாகவும் இருக்கும்."

இந்த அன்பரின் வாதத்திற்கு ஆதரவாக எவ்வளவோ கூறலாம். மனிதன் தர்க்கத்தினால் தன்னைத் தானே கட்டுப்படுத்திக் கொள்ளுவதில்லை. அவன் சிக்கலான சுபாவம் உள்ளவன். எனவே, எத்தனையோ காரணங்கள் அவனைச் செயல்கள் புரியும்படி இயக்குகின்றன அல்லது செயல்கள் புரியாமல் தடுக்கின்றன. தர்க்க ரீதியாகக் கூறினால், பசுவைப் பாதுகாக்கும் ஓர் ஹிந்து



1940 செப்டம்பர் – அப்பொழுதுதான் பிறந்த பசுங்கன்றை அன்புடன் கவனிக்கிறார் காந்திஜி.



1944 மே மாதம், ஜுகு காந்தி கிராமத்தில் பிரார்த்தனைக் கூட்டத்தில்
மகாத்மா பிரார்த்தனையிலிருக்கிறார்.

ஒவ்வொரு மிருகத்தையும் பாதுகாக்கவேண்டும். எனினும், மனிதன் மற்ற மிருகங்களுக்குப் பாதுகாப்பு அளிப்பதில்லை என்பதற்காக, பசுவைப் பாதுகாப்பது தவறு என்று குற்றம் கண்டுபிடிக்க முற்படக் கூடாது. அவன் பசுவுக்குப் பாதுகாப்பு அளிப்பது சரியா? இந்தக் கேள்வியை மாத்திரமே இப்போது நாம் பரிசீலனை செய்ய வேண்டும்.

அகிம்சையில் நம்பிக்கையுள்ள ஒருவர் பொதுவாக மிருகங்களைக் கொல்லாமல் இருப்பதே கடமை என்று கருதப்படுமாயின், அவர் பசுவுக்குப் பாதுகாப்பு அளிப்பதைத் தவறு என்று கூற முடியாது. ஒவ்வொரு ஹிந்துவும், சமயப்பற்றுள்ள ஒவ்வொரு மனிதரும் அவ்விதமே கருதுகிறார். பொதுவாக மிருகங்களைக் கொல்லாமல் இருக்கும் கடமையையும், அவற்றைப் பாதுகாக்கும் கடமையையும் வாதத்திற்கு இடமில்லாத உண்மையென ஒப்புக்கொள்ள வேண்டும். அப்போது தான், பசுப் பாதுகாப்பை ஒரு கடமையாகக் கொண்டுள்ள ஹிந்துமதத்திற்குப் பெருமை ஏற்படும். ஹிந்து சமயத்தைச் சேர்ந்த ஒருவர் பசுவைப்போல் மற்ற மிருகங்களுக்கும் பாதுகாப்பு அளிக்க முடியும். எனவே, அவர் பசுப் பாதுகாப்புடன் நின்றுவிட்டால், ஹிந்து சமயத்தின் மட்ட ரக உதாரணமாகவே அவர் இருக்க முடியும். பசு ஒரு வெறும் சின்னமாகவே விளங்குகிறது. அப்படியிருக்க, அதற்காவது அவர் பாதுகாப்பு அளிக்க வேண்டாமா? ஆனால், நான் ஏற்கனவே எழுதியுள்ளவற்றில் காட்டியிருப்பதைப்போல், இந்த முதற் கடமையைக் கூடச் செய்ய அவர் தவறி விடுகிறார்.

பசுப் பாதுகாப்பைத் தூண்டும் நோக்கம் 'கலப்பற்ற சுயநலம்' அல்ல. இருந்தாலும் அதில் சுயநல நோக்கமும் இருக்கத்தான் செய்கிறது என்பதில் சந்தேகமில்லை. பசுப் பாதுகாப்பு முற்றிலும் சுயநல நோக்கத்தை அடிப்படையாகக் கொண்டிருக்குமாயின், மற்ற நாடுகளைப்போல் இந்த நாட்டிலும் பசு பூரண பலன் கொடுப்பதை நிறுத்தியதும் கொல்லப்பட்டிருக்கும். பசுவினால் எவ்வித பலனுமின்றி அது ஒரு சுமையாகிவிட்டால் கூட, ஹிந்துக்கள் அதைக் கொல்லமாட்டார்கள். நோயுற்ற, உபயோகம் இல்லாத பசுக்களைப் பராமரிப்பதற்காக, தரும சிந்தனையுள்ளவர்கள் எண்ணிக்கையற்ற கோசாலைகளை ஸ்தாபித்திருக்கிறார்கள். நான் மேலே கூறியிருப்பதற்கு அதுவே சிறந்த உதாரணமாகும். இன்று அந்த ஸ்தாபனங்கள் மிகத் தாழ்ந்த நிலையிலே இருக்கின்றன என்றாலும், அவை ஸ்தாபிக்கப்பட்டுள்ள நோக்கத்தின் பெருமை சிறிதும் குன்றிவிடவில்லை.

எனவே, பசுப் பாதுகாப்பின் தத்துவம் மிகமிகப் பெருமை வாய்ந்தது என்பதே எனது அபிப்பிராயமாகும். மனிதரைப் போல் மிருக சிருஷ்டியையும் அது சம நிலையில் வைப்பதுடன், மிருகங்களுக்கும் வாழும் உரிமை உண்டு என்பதை அது காட்டுகிறது. எனினும், பசுப் பாதுகாப்பில் நம்பிக்கை இராதவர்கள்

அவற்றைக் கொல்லுகிறுர்கள் அல்லவா? அவ்விதம் கொல்லுவதை பலாத்காரமாகத் தடுப்பது ஹிந்து சமயத்தின் கடமை அல்ல . எவ்வளவுக்கு மனித சாத்தியமோ அவ்வளவுக்கு வாழ்க்கையில் முற்றிலும் அகிம்சையை அனுசரிப்பதன் மூலம் மாத்திரமே, முஸ்லிம்களையும், உலகத்தில் உள்ள மற்றவர்களையும் ஹிந்துக்கள் தங்கள் வழிக்குக் கொண்டுவர முடியும். உயர்ந்த கொள்கையான பசுப் பாதுகாப்பை அவர்கள் தங்களுடைய வாழ்க்கையில் கடைப்பிடிப்பதன் மூலம், வெளியுலகத்திலும் அது பலன் தரத்தக்க முறையில் பரவ முடியும் என்பதில் ஹிந்துக்கள் நம்பிக்கை வைக்கவேண்டும். மற்றவர்களின் மனத்தை அவர்கள் ஆயுத பலத்தினுல் மாற்ற முடியாது; அகிம்சையினுல் அவர்கள் நிச்சயமாக மாற்ற முடியும். அகிம்சையைப் பூரணமாகவும் தீவிரமாகவும் நடைமுறையில் கொண்டு வரும்போது, அது எவ்வளவு இணையற்ற சக்தி வாய்ந்ததாகி விடுகிறது என்பதை நாம் சரியாக உணர்ந்து கொள்ளவில்லை.

—'எங் இந்தியா' – 11—11—1926

## 3

# பசுப் பாதுகாப்பின் ஆன்மிக தத்துவம்

பசுப் பாதுகாப்பின் வெளிப்படையான, ஸ்தூலமான அம்சத்தைப்பற்றி மாத்திரமே இதுவரை நான் குறிப்பிட்டுள்ளேன். அதாவது பசு ஒரு மிருகம் என்ற வகையில் மாத்திரமே அதைப்பற்றிக் கூறிவந்திருக்கிறேன். நுண்ணிய, ஆன்மிக ரீதியில் கவனிக்கும்போது, பசுப் பாதுகாப்பு என்பதற்கு ஒவ்வொரு உயிர்ப் பிராணியையும் பாதுகாக்கவேண்டும் என்பதே பொருளாகும். அகிம்சையில் மறைந்து கிடக்கும் சக்தியையும், சாத்தியக் கூறுகளையும் இன்று உலகம் பூரணமாக அறிந்து கொள்ளவில்லை.

கிறிஸ்தவர்கள், முஸ்லிம்கள், ஹிந்துக்கள் முதலியோரின் வேத நூல்களில் அகிம்சையைப் பற்றிய உபதேசங்கள் நிறைந்து கிடக்கின்றன. ஆனுல், அகிம்சையின் முழுக் கருத்தையும், முக்கியத்துவத்தையும் நாம் அறிந்துகொள்ளவில்லை. தெய்விக நூல்களின் சரியான அர்த்தத்தைக் கண்டு பிடிப்பதற்காக பண்டைய காலத்து ரிஷிகள் பயங்கரமான தவங்களையும், விரதங்களையும் அனுஷ்டித்தனர். இன்று காயத்ரி மந்திரத்திற்கு இரண்டு விளக்கங்கள் இருக்கின்றன. அந்த விளக்கங்களில் எது சரி? சனுதனிகளின் விளக்கம் சரியா அல்லது ஆரிய சமாஜத்தினரின் விளக்கம் சரியா? இதை யாரால் கூற முடியும்? நமது ரிஷிகள் பிரமிக்கத்தக்க ஒரு விஷயத்தைக் கண்டுபிடித்தார்கள். அதாவது அகிம்சையையும் சத்தியத்தையும் ஒருவர்

எவ்வளவுக்கு அதிகமாக அனுசரிக்கிறாரோ அவ்வளவுக்கு தெய்விக நூல்களும், தெய்வ அருளால் எழுதப்பட்ட ஏடுகளும், அவர் உண்மைப் பொருளை அறிந்து கொள்ள அதிகமாக உதவி புரிகின்றன என்பதே அவர்கள் கண்டுபிடித்த விஷயமாகும். இது முற்றிலும் உண்மை என்பதை நான் நாளுக்கு நாள் அதிகமாக உணர்ந்து வருகிறேன். ஒருவர் சத்தியத்தையும், அகிம்சையையும் எவ்வளவுக்கு அதிகமாக உணர்ந்துகொள்கிறாரோ அவ்வளவுக்கு அவர் அதிக அறிவொளியைப் பெறுகிறார்.

பசுப் பாதுகாப்பு ஒரு ஹிந்துவின் மகோன்னதமான கடமை என்றும், பசுவைப் பாதுகாத்துவந்தால் மோட்சத்தை அடையலாம் என்றும் அதே ரிஷிகள் பிரகடனம் செய்திருக்கிறார்கள். ஒரு மிருகமான பசுவைப் பாதுகாப்பதால் மாத்திரம் ஒருவர் மோட்சத்தை அடைய முடியும் என்பதை நம்புவதற்கு நான் தயாராக இல்லை. ஒருவர் மோட்சம் அடையவேண்டுமாயின், பாசம், துவேஷம், கோபம், பொறாமை போன்ற கீழ்த்தரமான உணர்ச்சிகளை முற்றிலும் ஒழிக்க வேண்டும். எனவே, பசுவைப் பாதுகாப்பதால் மோட்சம் அடையலாம் என்பதற்கு பரந்த, விரிவான பொருள் இருக்க வேண்டும். ஒருவருக்கு மோட்சத்தைக் கொடுக்கக் கூடிய பசுப் பாதுகாப்பு என்பது இயல்பாகவே உணர்ச்சியுள்ள ஒவ்வொன்றையும் பாதுகாப்பதேயாகும். எனவே கடுமையான பேச்சின் மூலம் ஓர் ஆடவர், பெண் அல்லது குழந்தையின் மனத்தைப் புண்படுத்துவதோ, மிகவும் பலவீனமான, மிகவும் அற்பமான பிராணிக்குத் துன்பம் ஏற்படும்படி செய்வதோ, பசுப் பாதுகாப்புக்கொள்கையை மீறுவதேயாகும். அவ்விதம் செய்வது, மாட்டிறைச்சி தின்னும் பாவத்திற்குச் சமமாகும். எனவே இன்று நமது வெறிக் குணங்களையெல்லாம் அவிழ்த்துவிட்டுள்ள நாம், பசுப் பாதுகாப்புக் கொள்கையைப் பின்பற்றுவதாகக் கூறிக் கொள்ள முடியாது.

—'எங் இந்தியா' – 29—1—1925

# 4

# பசுவும் கடவுள் வழிபாடும்

**நா**ன் ஒரு பசுவைப் பார்க்கும் போது, மனிதன் தின்னக் கூடிய ஒரு மிருகத்தைப் பார்ப்பதாக நான் கருதுவதில்லை. பசு, இரக்கமே உருவான ஒரு காவியமாக எனக்குத் தோன்றுகிறது. நான் அதை வழிபடுகிறேன். உலகம் முழுவதுவே எதிர்த்தாலும் கூட, நான் அதை வழிபடுவதை ஆதரித்து வாதாடுவேன். கடவுள் ஒருவர் தான். எனினும், கல்லிலும், ஓர் ஆங்கிலேயரிடத்திலும், ஒரு துரோகியிடத்திலும் கூட கடவுளை காணவும் வழிபடவும் கடவுள் எனக்கு சக்தியைக் கொடுக்கிறார். எனது மதமானது என்னை அவ்வளவு தூரத்திற்குக் கொண்டு போய்விடுகிறது!

—'எங் இந்தியா' – 1—1—1925

# 5

# பசுப் பாதுகாப்பு சங்கம்

பகுத்தறிவு, விளக்கம் முதலியவற்றின் துணையின்றேல், சமயம் கவைக்குதவாத ஓர் உணர்ச்சியாகிவிடும். பின்னர் அத்தகைய சமயம் உணர்ச்சியற்றும் உயிரற்றும் போய்விடும். அறிவுதான் இறுதியில் மோட்சத்தைக் கொடுக்கின்றது. விவேகமின்றி பசுவிடம் பக்தியுடனிருப்பது, அதை அகால மரணத்திற்கு உள்ளாக்கும் நிச்சயமான வழியாகிவிடும். எனவே, கால்நடைப் பிரச்னையைப் பற்றிய திட்டமான அறிவுள்ள ஒருவருக்கு பசுவிடம் ஈடுபாடு இருக்குமாயின், அவர் ஒருவரே இதுவரையில் அமைக்கப்பட்ட, இனிமேலும் அமைக்கப்படும் பசுப் பாதுகாப்பு சங்கங்களாகத் திகழ்வார்.

—'எங் இந்தியா' – 7—5—1925

# 6

# பசுத் தாய்

நம்மைப் பெற்றெடுத்த தாயைக் காட்டிலும் பசுத் தாய் பல வழிகளிலும் சிறந்தவள். பெற்ற தாய் நமக்கு இரண்டு வருடங்கள் வரையில் பால் கொடுக்கிருள். பின்னர், நமக்கு வயது வந்தபின், நாம் அவளுக்குத் தொண்டு புரிய வேண்டும் என்று எதிர்பார்க்கிருள். நம்மிடமிருந்து புல்லையும் தானியத்தையும் தவிர பசுத் தாய் வேறெதையும் எதிர்பார்ப்பதில்லை. நமது தாய் நோயுற்ருல், நாம் அவளுக்குப் பணிவிடை செய்ய வேண்டும் என்றும் அவன் எதிர்பார்க்கிருள். பசுத் தாய் நோய் வாய்ப் படுவதே இல்லை. பசுத் தாய் இடைவிடாமல் நமக்குத் தொண்டு புரிகிருள். அவளது தொண்டு, அவள் இறந்த பிறகுகூட நின்றுவிடுவதில்லை. நம்மைப் பெற்ற தாய் இறந்தால், தகனம் செய்யவும் ஈமச் சடங்குகள் செய்யவும் நமக்குச் செலவு ஏற்படுகிறது. பசுத் தாய் உயிருடன் இருக்கும்போது நமக்கு உதவி புரிவதைப் போல, இறந்த பிறகும் உதவி புரிகிருள். அவளது மாமிசம், எலும்புகள், குடல்கள், கொம்புகள், தோல் எல்லாம் நமக்கு உபயோகமாக இருக்கின்றன. நம்மைப் பெற்ற தாயின் பெருமையைக் குறைப்பதற்காக நான் இவ்விதம் பேசவில்லை. பசுவை வழிபடுவதற்கான தகுந்த காரணங்களை உங்களுக்கு எடுத்துக் காட்டவே நான் இதையெல்லாம் கூறுகிறேன்.

—'ஹரிஜன்' – 15—9—1940

# 7

# பாம்பையும் தேளையும் கண்டு பயம்

ஓர் அன்பர் பின்வருமாறு எழுதுகிறுர்:

"மனித வர்க்கத்திற்கு அபாயத்தை விளைவிக்கக் கூடிய சிறுத்தைகள், ஓநாய்கள், பாம்புகள், தேள்கள் முதலிய பிராணிகளை அழிப்பதற்கு உங்களுடைய அகிம்சை இடம் கொடுக்கிறது என்று மே 5-ஆம் தேதி வெளியாகியுள்ள 'ஹரிஜன் பந்து'வில் நீங்கள் எழுதியிருக்கிறீர்கள்.

"நாய்கள் முதலியவற்றிற்கு உணவு அளிப்பதிலும் உங்களுக்கு நம்பிக்கையில்லை. குஜராத்திகளைத் தவிர மற்றும் பலரும் நாய்களுக்கு உணவு அளிப்பதை, புண்ணியத்தைக் கொடுக்கும் ஒரு செயலாகக் கருதுகிறுர்கள். உணவுப் பற்ருக்குறை ஏற்பட்டுள்ள இதுபோன்ற சமயங்களில் அத்தகைய நம்பிக்கை நியாயமற்றதாக இருக்கலாம். எனினும், நாய்கள் மனிதனுக்கு மிகவும் உபயோகமாக இருக்கக் கூடும் என்பதை நாம் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். நாம் அவற்றிற்கு உணவளித்து, அவற்றினிடமிருந்து வேலை வாங்கிக் கொள்ள முடியும்.

"டர்பனிலிருந்து நீங்கள் ஸ்ரீ ராய்சந்திரபாயிடம்* 27 கேள்விகள் கேட்டிருந்தீர்கள். அந்தக் கேள்விகளில் ஒன்று பின்வருமாறு: 'கடவுளை நாடும் ஒருவரைப் பாம்பு தாக்கினுல், அவர் என்ன செய்யவேண்டும்?' இதற்கு ராய்சந்திரபாபு அளித்த பதில் இதுதான்: 'அவர் பாம்பைக் கொல்லக் கூடாது. அது அவரைக் கடித்தால், கடிக்கட்டும் என்று அதை விட்டுவிட வேண்டும்'. ஆனுல், இப்போது நீங்கள் வேறுவிதமாகக் கூறுவதேன்?"

இவ்விஷயமாக முன்பு நான் ஏராளமாக எழுதியிருக்கிறேன். அப்போது வெறி பிடித்த நாய்களைக் கொல்லும் பிரச்னையே எழுந்தது. அவ்விஷயமாக மிகுந்த விவாதமும் நடந்தது. அதையெல்லாம் மறந்துவிட்டார்கள் என்றே தோன்றுகிறது.

எனது அகிம்சை, உயிருள்ள எல்லாப் பிராணிகளிடத்திலும் வெறும் அன்பு காட்டுவது மட்டுமல்ல. மனிதரைவிடத் தாழ்ந்த உயிர்களின் தெய்விகத் தன்மையை ஜைன சமயம் வற்புறுத்துவது அறிந்துகொள்ளக் கூடியதே. எனினும், மனிதரைக் காட்டிலும் மற்ற பிராணிகளிடத்தில் அதிக அன்பு காட்டவேண்டும் என்பது ஒருபோதும் அதன் பொருளாக இருக்க முடியாது. அத்தகைய பிராணிகளுடைய உயிரின் தெய்விகத் தன்மையைப்பற்றி எழுதும்போது, மனித உயிரின் தெய்விகத் தன்மை ஏற்கனவே ஒப்புக்கொள்ளப்பட்ட விஷயம் என்றே நான் கருத வேண்டி

* காந்திஜிக்குக் கடிதம் எழுதியுள்ள அன்பர் மேலே குறிப்பிட்டுள்ள ஸ்ரீ ராய் சந்திரபாயைப் பற்றி காந்திஜி தமது சுயசரிதையில் கூறியிருக்கிறுர். அவ்விவரங்களை 'மகாத்மா காந்தி நூல்கள்–'3 ம் தொகுப்பு 123–127 பக்கங்களில் காணலாம். ஸ்ரீ ராய் சந்திரபாயிடம் காந்திஜி கேட்ட கேள்விகளில் பல அதே தொகுப்பில், 190–191 பக்கங்களில் வெளியாகியுள்ளன.

யிருக்கிறது. மற்றப் பிராணிகளின் புனிதத் தன்மை எல்லை மீறி வற்புறுத்தப்பட்டுள்ளது. அது நடை முறையில் அனுசரிக்கப் படும்போது, அக் கொள்கை உருத்தெரியாமல் மாறிவிட்டது. உதாரணமாக, எறும்புகளுக்கு உணவளிப்பதில் பூரண திருப்தி அடைவோர் ஏராளமாக இருக்கின்றனர். பிராணிகளிடத்தில், அன்பு காட்டவேண்டும் என்ற கொள்கை உருமாறி, உணர்ச்சி யற்ற ஒரு சித்தாந்தமாகிவிட்டது. மதம் என்ற பெயரால். போலி வேடமும், பொருட் சிதைவும் மலிந்துவிட்டன.

அகிம்சை மகோன்னதமான ஒரு கொள்கையாகும். அது தைரியசாலிகளுக்காக ஏற்பட்டதேயன்றி, கோழைகளுக்காக அல்ல. மற்றவர்கள் கொல்லுவதன் மூலம் பலனை அடைந்து கொண்டே தாங்கள் மிகவும் சமயப் பற்றுடன் இருந்து வருவ தாக நம்புவது, தங்களைத் தாங்களே ஏமாற்றிக் கொள்ளும் கலப் பற்ற மோசடியாகும்.

அகிம்சைவாதி என்று கூறப்படும் ஒருவன், தினந்தோறும் சிறுத்தை 'விஜயம்' செய்யும் ஒரு கிராமத்தில் தங்கமாட்டான். அவன் அங்கிருந்து ஓடிவிடுவான். யாராவது ஒருவர் சிறுத்தை யைக் கொன்றபின், அவன் தன் வீடுவாசல்களைக் கவனிக்கத் திரும்பி வருவான். இது அகிம்சை அல்ல. இது ஒரு கோழையின் பலாத்காரமாகும். சிறுத்தையைக் கொன்றவன், தனக்குள்ள ஓரளவு தைரியத்தையாவது நிரூபித்திருக்கிறான். அவன் அதைக் கொன்றபின், அதைத் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டவன் ஒரு கோழையே. அவன் ஒரு காலத்திலும் உண்மையான அகிம்சையின் பெருமையை அறிந்து கொள்ள முடியாது.

வாழ்க்கையில் பலாத்காரத்தை அறவே தவிர்ப்பது முடியாத காரியம். எனினும், இதற்கு எல்லைக்கோடு கிழிப்பது எங்கே என்ற கேள்வி எழுகின்றது. அந்தக் கோடு எல்லோருக்கும் ஒரே விதமாக இருக்க முடியாது. முக்கியமான கொள்கை ஒன்றேயாயினும், ஒவ்வொர் ஆடவரும் பெண்ணும் அதை அவரவருடைய சொந்த வழியில் அனுசரிக்கிறார். ஒருவருக்கு எது உணவோ, அது மற்றொருவருக்கு விஷமாக இருக்கக் கூடும். இறைச்சி தின்பதை ஒரு பாவமாக நான் கருதுகிறேன். எனினும், எப்போதும் இறைச்சி தின்றே வாழ்ந்துவரும், அதில் எவ்வித தவறும் இருப்பதாக ஒருபோதும் கருதாத மற்றொருவர், என் னைப் போல் நடக்க வேண்டும் என்பதற்காக இறைச்சி உண வைக் கைவிடுவது ஒரு பாவமாகும்.

நான் ஒரு விவசாயியாக இருக்க விரும்பி காட்டில் தங்கி யிருப்பேனாயின், எனது வயல்களைப் பாதுகாப்பதற்காக நான் தவிர்க்க முடியாத குறைந்த அளவு பலாத்காரத்தை உபயோகிக்க வேண்டியிருக்கும். எனது வயல்களில் உள்ள பயிர்களைத் தின்னும் குரங்குகள், பட்சிகள், புழுபூச்சிகள் முதலியவற்றை நான் கொல்ல வேண்டியிருக்கும். நானே நேரில் அவற்றைக் கொல்ல

விரும்பாவிடில், எனக்காக அவற்றைக் கொல்ல நான் பணம் கொடுத்து யாரையாவது நியமிக்க வேண்டியிருக்கும். இந்த இரண்டு முறைகளுக்குள் அதிக வேற்றுமை எதுவும் இல்லை. நாட்டில் பஞ்சம் தாண்டவமாடும்போது, பயிர்களை மிருகங்கள் தின்றுவிட அகிம்சையின் பெயரால் அனுமதிப்பது நிச்சயமாக ஒரு பாவமே. தீமையும் நன்மையும் ஒன்றுக்கொன்று தொடர்புள்ள சொற்களாகும். சிற்சில நிலைமைகளில் எது நல்லதோ அதுவே, வேறுவிதமான நிலைமைகளில் ஒரு தீமையாகவோ அல்லது ஒரு பாவமாகவோ ஆகிவிடக் கூடும்.

சாத்திரங்களாகிற கிணற்றில் மனிதன் ஒரேயடியாக மூழ்கி விடக் கூடாது. சாத்திரங்களாகிற பரந்த மகா சமுத்திரத்தில் மனிதன் குளித்து முத்துக்களை மேலே கொண்டு வர வேண்டும். எது அகிம்சை, எது இம்சை என்பது பற்றி அவன் ஒவ்வொரு படியிலும் தனது பகுத்தறிவை உபயோகிக்க வேண்டியவனாக இருக்கிறான். இவ்விஷயத்தில் வெட்கத்திற்கோ அல்லது கோழைத்தனத்திற்கோ இடமில்லை. கடவுள் இருக்குமிடத்திற்குச் செல்லும் பாதையில் தைரியசாலிகள்தான் செல்ல முடியுமேயன்றி, ஒரு காலத்திலும் கோழைகள் செல்ல முடியாது.

இறுதியாக, ராய்சந்திரபாய் எனக்குக் கூறிய புத்திமதி இதுதான்: 'உனக்கு தைரியம் இருக்குமாயின், கடவுளை நேருக்கு நேராகப் பார்க்க வேண்டும் என்ற விருப்பம் உனக்கு இருக்குமாயின், பாம்பு உன்னைக் கடிக்கட்டும் என்று நீ விட்டு விட வேண்டுமேயன்றி, அதை நீ கொல்லக் கூடாது.' அதற்கு முன்போ அல்லது அந்தக் கடிதம் எனக்குக் கிடைத்த பிறகோ நான் ஒரு போதும் பாம்பைக் கொன்றதில்லை. எனினும், அது எனக்குப் பெருமையளிக்கக்கூடிய விஷயம் அல்ல. பாம்புகளுடனும் தேள்களுடனும் பயமின்றி விளையாடுவது எனக்குச் சாத்தியமாக இருக்க வேண்டும் என்பதே எனது லட்சியமாகும். ஆனால், இதுவரையில் அது நிறைவேறாத ஒரு வெறும் ஆசையாகவே இருந்து வருகிறது. அந்த ஆசை நிறைவேறுமா என்பதும், எப்போது நிறைவேறும் என்பதும் எனக்குத் தெரியாது. ஒவ்வோரிடத்திலும் என்னைச் சேர்ந்தவர்கள் அவற்றைக் கொல்லும்படி நான் விட்டிருக்கிறேன். நான் விரும்பியிருந்தால், அவற்றைக் கொல்லாமல் இருக்கும்படி அவர்களைத் தடுத்திருக்க முடியும். ஆனால், எப்படித் தடுத்திருக்க முடியும்? பாம்பையும் தேளையும் என் கையில் எடுத்து, அச்சமின்மை என்பது இன்னது என்பதைக் கற்பிக்கும் தைரியம் எனக்கு இல்லை. அவ்விதம் செய்ய முடியாததற்காக நான் வெட்கம் அடைகிறேன். எனினும், எனது வெட்கம் அவர்களுக்கோ அல்லது எனக்கோ பலன் தரத்தக்கதாக இருக்க முடியாது.

ராம நாமத்தின் அருள் இருந்தால், நான் என்றைக்காவது ஒரு நாள் அந்த தைரியத்தைப் பெற முடியும். அதற்கிடையே, நான் மேலே குறிப்பிட்டவாறு நடந்து கொள்ளுவதே எனது

கடமை என்று கருதுகிறேன். சமயம், வாழ்ந்து காட்டவேண்டிய ஒரு விஷயமாகும். அது வெறும் ஏமாற்று வித்தையல்ல.

—'ஹரிஜன்' - 9—6—1946

# 8

# ஹிந்து சமயத்தில் சைத்தான் உண்டா?

ஓர் அன்பர் பின்வருமாறு எழுதுகிறார் :

"சில சமய முறைகள் பற்றியும், கடவுள் நம்பிக்கை பற்றியும் சில மாதங்களுக்கு முன் நான் எழுதியிருந்த கடிதத்தை நீங்கள் 'எங் இந்தியா'வில் வெளியிட்டீர்கள். ஆனால், அதற்கு நீங்கள் கொடுத்துள்ள தலைப்பு, கடிதத்தில் அடங்கியுள்ள விஷயங்களுக்கு அவ்வளவு பொருத்தமானதல்ல. கடவுளின் விரோதியைப் பற்றி உங்களிடம் கேள்வி கேட்க விரும்புகிறேன். அந்த விரோதியான சைத்தானின் பெயரை நீங்கள் உங்களுடைய கட்டுரைகளிலும் பிரசங்கங்களிலும் அடிக்கடி குறிப்பிட்டுவருகிறீர்கள். சைத்தான் இருப்ப தாக நம்பும் மக்களின் பாஷையில் நீங்கள் எழுதியும் பேசியும் வருகிறீர்கள். அவர்களுடைய மனத்தில் பதிய வேண்டும் என்பதற்காக நீங்கள் அவ்விதம் பேசியும் எழுதியும் வருவீர்களாயின், அதைக் குறித்து நான் எதுவும் கூறுவ தற்கில்லை. சைத்தான் இருப்பதில் உங்களுக்கும் நம்பிக்கை இருக்கிற தென்று உங்களுடைய கட்டுரைகளிலிருந்து தோன்றுகிறது. அத்தகைய நம்பிக்கை ஓர் ஹிந்துவுக்குச் சிறிதும் உகந்ததல்ல. மனிதன் எப்போ தும் வீழ்ச்சியடைந்து வருவதற்குக் காரணம் என்ன என்று அர்ஜுனன் கேட்டதற்கு கிருஷ்ண பரமாத்மா 'காம ஏஷ க்ரோத ஏஷ'* (அதற்குக் காரணம் துராசையும் கோபமும்தான்) என்று பதில் அளித்தார். மனிதரை மயக்கும் நபர் நமக்கு வெளியே இல்லை என்பதும், அது ஒரு நபர் அல்ல என் பதுமே ஹிந்து சமயத்தின் நம்பிக்கையாகும். மனிதனுக்கு ஆறு விரோதிகள் இருப்பதாக சாத்திரங்கள் கூறுகின்றன. அவையாவன: காமம் அல்லது சிற்றின்ப ஆசை, க்ரோதம் அல்லது கோபம், லோபம் அல்லது பேராசை, மோகம் அல்லது மன மயக்கம், மதம் அல்லது அகந்தை, மத்சரம் அல்லது பொறாமை. எனவே, ஹிந்து சமயத்தில், வீழ்ச்சியடைந்த தேவனுக்கு அதாவது சைத்தானுக்கு இடம் இல்லை என்று தெளிவாகத் தெரிகிறது. அப்படியிருக்க, ஓர் ஹிந்துவான நீங்கள் சைத்தான் இருப்பதில் நம்பிக்கை யுடையவரைப் போல பேசுவதும் எழுதுவதும் எப்படி நியாயமாகும்?"

---

* காம ஏஷ க்ரோத ஏஷ ரஜோகுண ஸமுத்பவ :
மஹாசனோ மஹா பாப்மா வித்த்யேனமிஹ வைரிணம்
கீதை, அத்தியாயம்-3, சுலோகம்-37

இதன் பொருள்: ரஜோ குணத்திலிருந்து உண்டான இந்த துராசைதான், இந்தக் கோபம்தான் எதையும் கபளீகரம் செய்ய வல்லது; பெரும் பாவத்திற்குக் காரண மானது. ஆகையால் ஆசையையும் கோபத்தையும் விரோதி என்று அறிந்துகொள்.

இந்த அன்பரை 'எங் இந்தியா' வாசகர்கள் நன்கு அறிவர். அவர் மிகவும் விழிப்புடன் இருப்பவர். எனவே, சைத்தான் என்ற சொல்லை நான் எந்த அர்த்தத்தில் உபயோகித்து வந்திருக்கக் கூடும் என்பதை அவர் அறியாமல் இருக்க முடியாது. தப்பெண்ணம் ஏற்படக்கூடிய அல்லது அதிக விளக்கம் தேவை என்று கருதப்படும் பல விஷயங்களையொட்டியும் அவர் என் வாயைக் கிண்டுவது வழக்கம். இதை நான் கவனித்து வந்திருக்கிறேன். ஹிந்து சமயத்தின் அழகு, அது எல்லாம் அடங்கியதாக, எல்லாவற்றையும் தழுவியதாக இருப்பதே. மகா பாரதத்தின் தெய்விக ஆசிரியர் தமது மகத்தான சிருஷ்டியைக் குறித்து என்ன கூறினரோ அது, ஹிந்து சமயத்தைப் பொறுத்த வரையில்கூட உண்மையாகும். மற்ற எந்த மதங்களிலும் அடங்கியுள்ள சாரத்தை ஹிந்து சமயத்தில் காணலாம். ஹிந்து சமயத்தில் எது அடங்கியிருக்கவில்லையோ அது சாரமற்றதாகவும் அவசியமில்லாததாகவுமே இருக்கும்.

ஹிந்து சமயத்தில் சைத்தானுக்கு இடம் இருக்கிறது என்றே நான் நம்புகிறேன். எனவே, பைபிளில் குறிப்பிடப்பட்டுள்ள சைத்தான் புதிய விஷயமல்ல. பைபிள் காலத்துக்கு முன்பும் சைத்தான் இருந்திருக்கிறது. பைபிளில் குறிப்பிட்டிருக்கும் சைத்தான்கூட ஒரு நபர் அல்ல; அல்லது ஹிந்து சமயத்தில் காணப்படும் ராவணன் முதலிய அரக்கர் கூட்டத்தைப் போல சைத்தானையும் ஒரு நபர் என்றே கருதலாம். பத்து தலைகளுடனும் இருபது கைகளுடனும் ராவணன் இருந்ததாக சரித்திரத்தில் கூறப்படுவதை நான் நம்பவில்லை. அது போலவே, சைத்தான் இருந்ததாக சரித்திரத்தில் கூறப்படுவதையும் நான் நம்பவில்லை. சைத்தானையும் அதன் தோழர்களையும் போல் ராவணனையும் அவனது தோழர்களையும் வீழ்ச்சியடைந்த தேவர்களாகக் கருதலாம். ஹிந்து சமயத்தில் தீய வெறிகளுக்கும் சீரிய சிந்தனைகளுக்கும் உருவம் கொடுத்திருக்கிறார்கள். அது ஒரு குற்றமாயின், அந்தக் குற்றத்துக்கு ஹிந்து சமயம் பெரும் அளவுக்கு பொறுப்பாளியாக இருக்க வேண்டும். கடிதம் எழுதியுள்ள அன்பர் குறிப்பிட்டிருக்கும் ஆறு வெறிகளுக்கும், பெயரில்லாத மற்றும் பல குணங்களுக்கும் ஹிந்து சமயத்தில் மனித உருவம் கொடுக்கப்பட்டிருக்கவில்லையா? திருதராஷ்டிரனும் அவனது நூறு புதல்வர்களும் யார்? யுகம் யுகமாக, கற்பனை அதாவது கவிதை, மனித சமூகத்தின் மலர்ச்சியில் பலன் தரத்தக்க, அவசியமான பங்கைச் செய்துதான் வரும். வெறிக் குணங்களை நபர்களைப் போல் கருதி நாம் தொடர்ந்து பேசிக் கொண்டுதான் வருவோம். தீயவர்களைப் போல் அந்த குணங்களும் நம்மைக் கொடுமையாகத் துன்புறுத்தி வரவில்லையா? எனவே, எண்ணிக்கையற்ற பல விஷயங்களையொட்டியும், சொற்களைவிட அவற்றில் பொதிந்துள்ள தத்துவப் பொருளையே கவனிக்க வேண்டும்.

—'எங் இந்தியா' – 17—9—1925

1

# எங்கிருந்து வந்தோம்? எங்கே போகிறோம்?

[1894 நவம்பர் 26-ஆம் தேதி காந்திஜி டர்பனிலிருந்து 'நேட்டால் மர்க்குரி' பத்திரிகையின் ஆசிரியருக்கு எழுதிய கடிதத்தின் விவரமே கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது.]

கிறிஸ்தவ தத்துவ சங்க சம்பந்தமாக உங்கள் பத்திரிகையில் வெளியான விளம்பரத்தை ஊன்றிக் கவனிக்கும்படி நான் உங்கள் பத்திரிகை வாசகர்களைக் கேட்டுக் கொள்ளுகிறேன். விளம்பரப் படுத்தப்பட்டுள்ள நூல்கள் விளக்கும் சிந்தனை முறை புதிதல்ல; பழைய முறையே நவீன காலத்திற்கு உகந்த விதத்தில் விளக்கப்பட்டிருக்கிறது. அது உலக சமத்துவத்தைக் கற்பிக்கும் ஒரு சமய முறையே. அது அற்புதங்களையோ அல்லது வெறும் சரித்திர உண்மைகளையோ அடிப்படையாகக் கொண்டதல்ல; நிரந்தரமான உண்மைகளையே அடிப்படையாகக் கொண்டதாகும். ஏசுநாதரின் உயர்வை நிரூபிப்பதற்காக அதில் முகமது நபியையோ அல்லது புத்தரையோ இகழ்ந்து கூறவில்லை. அதற்கு மாறாக, அந்த சித்தாந்தம் கிறிஸ்தவ சமயத்திற்கும் மற்ற சமயங்களுக்கும் இடையே ஒப்புரவை உண்டாக்குவதாக இருக்கிறது. நிரந்தரமான உண்மைகளை வெளியிடுவதற்குப் பல வழிகள் இருக்கின்றன. அந்த வழிகளில் கிறிஸ்தவ சமயமும் ஒன்று என்பதே அந்த நூல் ஆசிரியர்களின் அபிப்பிராயமாகும். பைபிளின் பழைய ஏற்பாட்டில் உள்ள பல புதிர்களையும் மேற்கண்ட அபிப்பிராயம் பூரணமாகவும் திருப்திகரமாகவும் விளக்குவதாக இருக்கிறது.

உங்களுடைய வாசகர்களில் எவராவது ஒருவர், இன்றைய ஸ்தூல வாழ்க்கையும் அதையொட்டிய எல்லாப் பகட்டுகளும் அவரது ஆன்மாவின் தேவைகளுக்கு ஏற்றவை அல்ல என்று கருதலாம். இன்னும் சிறந்த வாழ்க்கையில் அவருக்கு ஆர்வம் இருக்கலாம். கண்களைப் பறிக்கும் மின்னொளிபோன்ற நவீன நாகரிகத்தின் மேல் மட்டத்திற்குக் கீழே, அவர் எதிர்பார்ப்பதற்கு நேர்மாறான விபரீதங்களை அவர் காணலாம். எல்லாவற்றையும் காட்டிலும் மேலாக, சுக வாழ்வுக்கான நவீன சாதனங்களும், இடைவிடாத, அமைதியற்ற நடவடிக்கைகளும் அவருக்கு ஆறுதல் அளிக்காமல் இருக்கலாம். உங்களுடைய வாசகர்களில் அவ்விதம் யாராவது இருப்பாராயின், அவருக்கு உங்கள் விளம்பரத்தில் கண்டுள்ள நூல்களை நான் சிபாரிசு செய்கிறேன். அவற்றில் உள்ள உபதேசங்களில் அவருக்குப் பூரணமான ஈடுபாடு ஏற்படாவிட்டாலும், அவற்றை வாசித்த பிறகு

அவர் ஒரு சிறந்த மனிதராக விளங்குவார் என்று நான் உறுதி கூறுகிறேன்.

அவ்விஷயமாகப் பேச விரும்புவோர் யாராவது இருந்தால் அவர்களுடன் அபிப்பிராயங்களைப் பரிமாறிக் கொள்ளுவது எனக்கு மிகுந்த மகிழ்ச்சியளிக்கும். அவ்விதமாயின், அவ்விஷயமாக என்னுடன் நேரடியாகக் கடிதப் போக்குவரத்து வைத்துக் கொள்ளும் எந்த கனவானுக்கும் நான் நன்றியுள்ளவனாக இருப்பேன். அந்த நூல்களை விற்பதற்கு பண லாபம் எதுவும் காரணமில்லை என்பதை நான் சொல்லத் தேவையில்லை. அச்சங்கத்தின் தலைவரான ஸ்ரீ மெயிட்லண்டோ அல்லது அதன் பிரதிநிதியோ அந்த நூல்களை இலவசமாக விநியோகிப்பது சாத்தியமாயின், அவர்கள் அவ்விதமே செய்வார்கள். பல சந்தர்ப்பங்களிலும் அந்த நூல்கள் அடக்க விலைக்கும் குறைவாகவே விற்கப்பட்டிருக்கின்றன. சிலருக்கு இலவசமாகவும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. எல்லோருக்கும் இலவசமாகக் கொடுப்பது சாத்தியமல்ல. இரவலாக வாங்கி வாசிப்போருக்கு அவை மகிழ்ச்சியுடன் கொடுக்கப்படும்.

அந்த நூல்களின் ஆசிரியர்களுக்கு காலஞ்சென்ற பாதிரியார் கான்ஸ்டன்ட் ஒரு கடிதம் எழுதியிருந்தார். அதிலிருந்து எடுக்கப்பட்ட கீழ்க்கண்ட மேற்கோளுடன் இக் கடிதத்தை நான் முடிக்கிறேன் :

''மானிட வர்க்கமானது எப்போதும் எந்த இடத்திலும் தன்னைத் தானே கீழ்க்கண்ட மிகவும் சிரேஷ்டமான மூன்று கேள்விகளைக் கேட்டுக் கொண்டுளது: நாம் யார்? நாம் எங்கிருந்து வருகிறோம்? நாம் எங்கே போகிறோம்? இந்த மூன்று கேள்விகளுக்கும் பூரணமான, திருப்திகரமான, ஆறுதல் அளிக்கக் கூடிய விடையை 'அப்பழுக்கற்ற வழி' (The Perfect Way) என்ற நூலில் விவரமாகக் காண்கிறோம்.''

'நேட்டால் மர்க்குரி' – 3—12—1894

இப்படிக்கு
**மோ. க. காந்தி**

# 2

# ஸ்தூல வாழ்க்கையின் பயங்கர நிலை

கிறிஸ்தவ தத்துவ சங்கம், லண்டன் சைவ உணவு சங்கம் முதலியவற்றின் பிரதிநிதி என்ற முறையில் காந்திஜி 1895 ஜனவரி 21–ஆம் தேதி 'நேட்டால் அட்வர்ட்டைஸர்' பத்திரிகை ஆசிரியருக்கு எழுதிய கடிதத்தின் விவரம் பின்வருமாறு :

மேற்கண்ட சங்கங்களைப் பற்றி உங்கள் பத்திரிகையில் வெளியாகியுள்ள விளம்பரத்தை உங்கள் வாசகர்கள் கவனிக்க வேண்டும் என்று கோருகிறேன். கிறிஸ்தவ தத்துவ சங்கம் அனுசரிக்கும் முறை, உலகத்தில் உள்ள பெரிய மதங்களின் சமத்துவ அடிப்படையையும் ஒற்றுமையையும் உறுதிப்படுத்துவதாக இருக்கிறது. இதற்கு முன் உலகமே கண்டிராத ஒரு நாகரிகத்தை ஏற்படுத்தி யிருப்பதாகவும், அந்த நாகரிகம் மானிட வர்க்கத்திற்கு மகத்தான நன்மையை உண்டாக்கியிருப்பதாகவும் லோகாயதமான முறை பெருமையடித்துக் கொள்ளுகிறது. அந்த முறைதான் பயங்கரமான அழிவு ஆயுதங்களைக் கண்டு பிடித்திருக்கிறது; மோசமான முறையில் அராஜகம் வளர்ச்சியடைவதற்கு இடம் கொடுத்திருக்கிறது; முதலாளிகளுக்கும் தொழிலாளிகளுக்கும் இடையே கொடிய தகராறுகளை ஏற்படுத்தியிருக்கிறது; 'விஞ்ஞானத்'தின் பெயரால் நிரபராதிகளான, வாயில்லாத, உயிருள்ள மிருகங்களுக்கு மூர்க்கத்தனமான, அரக்கத்தனமான கொடுமைகளை இழைத்திருக்கிறது.

எனினும், அதற்கு எதிரிடையான அறிகுறிகள் இப்போது தோன்றி வருகின்றன. அந்த அறிகுறிகள் இவைதான்:

பிரம்ம ஞான சங்கத்தின் கொள்கை அற்புதமாக வெற்றி பெற்று வருகிறது. தெய்விகமான சித்தாந்தத்தைப் பாதிரிமார்கள் சிறிது சிறிதாக ஒப்புக்கொண்டு வருகிறார்கள். மறுபிறப்பு சித்தாந்தத்தை பேராசிரியர் மாக்ஸ் முல்லர் ஒப்புக் கொண்டுள்ளார். அந்த சித்தாந்தமானது 'அப்பழுக்கற்ற வழி' என்ற நூலில் திட்டவட்டமாக நிரூபிக்கப்பட்டிருக்கிறது. இங்கிலாந்திலும் மற்ற இடங்களிலும் சிந்திக்கும் ஆற்றல் உள்ளவர்களிடையே அந்த சித்தாந்தமானது வேரூன்றி வருகிறது என்றும் மாக்ஸ் முல்லர் கூறியுள்ளார்.

இவை போன்ற பல உண்மைகளும் நம்மையெல்லாம் கொடிய தன்னலவாதிகளாகச் செய்துள்ள லோகாயதமான போக்கிலிருந்து ஏசுநாதர், புத்தர், ஜொராஷ்டிரர், முகமது நபி முதலியோரின் குற்றம் குறையற்ற தத்துவ உபதேசங்களுக்குத் திரும்பும்படி செய்திருக்கின்றன. அவர்களெல்லாம் போலி தீர்க்கதரிசிகள் என்று நாகரிக உலகம் இப்போதெல்லாம் கண்டிப்பதில்லை; அவர்களுடைய உபதேசங்களும் ஏசு நாதருடைய உபதேசங்களும் ஒன்றுக்கொன்று துணையாக இருக்கின்றன என்றும் ஒப்புக் கொண்டு வருகிறது.

தங்கள்,

மோ. க. காந்தி

3

# இந்தியாவின் மகத்துவம்

தென்னப்பிரிக்காவில் இந்தியர்களின் உரிமைகளை வற்புறுத்தி சட்டசபை அங்கத்தினர்களுக்கு 19—12—1894-இல் காந்திஜி எழுதிய பகிரங்கக் கடிதத்தில், இந்தியாவின் பெருமையைப் பற்றி பல ஐரோப்பிய அறிஞர்களும் கூறியுள்ள விவரங்களை மேற்கோள் காட்டியிருந்தார். இந்தியர்களைப் பற்றி இழிவாகக் கருதிய வெள்ளையர்களுக்குப் பதிலாகவே காந்திஜி பல மேற்கோள்களை எடுத்துக்காட்ட வேண்டிய அவசியம் ஏற்பட்டது. அந்த மேற்கோள்களே கீழே கொடுக்கப்பட்டுள்ளன:

**மாக்ஸ் முல்லர் :**

"மனிதருடைய மனம், எங்கே பூரண வளர்ச்சி பெற்ற அற்புதமான சாதனைகளை நிறைவேற்றியிருக்கிறது? எங்கே வாழ்க்கையின் மகத்தான பிரச்னைகளை ஆழ்ந்து ஆராய்ச்சி செய்திருக்கிறது? அந்தப் பிரச்னைகளைத் தீர்க்கும் வழிகளை எங்கே கண்டுபிடித்திருக்கிறது? இவ்விதம் என்னிடம் கேள்விகள் கேட்டால், நான் இந்தியாவையே சுட்டிக் காட்டுவேன். பிளாடோ *, கான்ட் † முதலியோரின் நூல்களை ஆராய்ச்சி செய்திருப்பவர்கள் கூட இந்தியா காட்டியுள்ள வழிகளில் கவனம் செலுத்த வேண்டும். நமது ஆன்மிக வாழ்க்கை குற்றம் குறையின்றி அதிகச் சிறப்புடன் விளங்க வேண்டுமாயின், உலகம் முழுவதையும் தழுவுவதாக இருக்க வேண்டுமாயின், அதிக அன்புடன் விளங்கவேண்டுமாயின் எந்த இலக்கியத்தை நாடவேண்டும் என்று என்னைக் கேட்டால், அப்போதும் நான் இந்தியாவையே சுட்டிக் காட்டுவேன்."

**ஜெர்மன் ஞானி ஷோபென்ஹாவர் :**

"இந்திய உபநிடதத்தின் ஒவ்வொரு வாக்கியத்திலும் ஆழ்ந்த, சீரிய சிந்தனைகள் அடங்கியிருக்கின்றன. மகோன்னதமான, தெய்விக தத்துவத்தினால் அது வியாபிக்கப்பட்டிருக்கிறது. உலகத்திலேயே உபநிடதத்தைப்போல் பலன் அளிக்கக்கூடிய

---

* பிளாடோ (427-347 கி. மு.) உலகப் புகழ் பெற்ற கிரேக்க ஞானி. அவரது கட்டுரைகளும் பிரசங்கங்களும் இன்றும் புதுமையுடன் விளங்கி வருகின்றன. அவரது 'உரையாடல்கள்', 'குடியரசு' முதலிய நூல்கள் கீர்த்தி வாய்ந்தவை. அவரது உண்மையான பெயர் அரிஸ்டாக்ளிஸ் என்பதாகும். பிளாடோ, சாக்ரடீசின் சீடராகவும், உலகப் புகழ் பெற்ற மற்றொரு கிரேக்க தத்துவ ஞானியான அரிஸ்டாடிலின் குருவாகவும் இருந்தார்.

† இமானுவல் கான்ட் (1724-1804) ஜெர்மனியில் புகழ் வாய்ந்த விஞ்ஞானியாகவும் தத்துவ ஞானியாகவும் திகழ்ந்தார்.

தும், மனிதரை மேன்மையுறச் செய்வதும் வேறெதுவுமே இல்லை. உபநிடதம் என் வாழ்க்கையில் மகத்தான ஆறுதலை அளித்திருக்கிறது. என் மரணத்தின் போதும் அதுதான் ஆறுதலை அளிக்கும்.''

**சரித்திராசிரியர் ஹண்டர் :**

''இந்தியாவில் பௌத்தர்கள் கற்கோயில்களைக் கட்டுவதில் பெரும் நிபுணர்களாகத் திகழ்ந்தார்கள். அவர்கள் நிர்மாணித்த மடங்களும் ஆலயங்களும் இருபத்திரண்டு நூற்றுண்டுகளின் கலைச் சரித்திரக் காட்சிகளாக விளங்குகின்றன. ஹிந்துக்களின் சிற்பக் கலைக் கூடங்கள் நம்மை பிரமிக்க வைப்பதாக இருக்கின்றன. குவாலியரில் உள்ள ஹிந்து மாளிகையும், ஆக்ரா, டில்லி முதலிய இடங்களில் உள்ள முஸ்லிம் சமாதிகளும், தென்னிந்தியாவில் உள்ள கோவில்களும் உலகிலேயே ஈடு இணையற்றவையாக விளங்குகின்றன. சிற்பக் கலையை யொட்டிய அம்சங்களை நாம் இந்தியாவிடமிருந்தே கடன் வாங்கியிருக்கிறோம். ஐரோப்பாவில் நடைபெறும் சர்வ தேசக் காட்சிகளில் இந்தியக் கலைப் பொக்கிஷங்களே முதல் ஸ்தானத்தைப் பெற்றுள்ளன.''

இந்தியாவின் சிறப்பைப்பற்றி மேநாட்டு நிபுணர்கள் கூறியுள்ள மேற்கண்ட விவரங்களைத் தவிர, இந்தியாவின் பாஷைச் சிறப்பு, இலக்கிய இலக்கணச் சிறப்பு, கணிதம், வான சாத்திரம், விஞ்ஞானம், வைத்தியம், சங்கீதம், தொழில் திறன் முதலிய பல துறைகளிலும் இந்தியாவின் மகோன்னத நிலையைக் குறித்து மேநாட்டு நிபுணர்கள் கூறியுள்ள பல விவரங்களையும் காந்திஜி தமது கடிதத்தில் மேற்கோள்களாகக் குறிப்பிட்டிருந்தார்.

## 4

# ராம நாமம் என்ருல் என்ன ?

[ஸ்ரீ பியாரிலால் எழுதியுள்ள 'மகாத்மா காந்தி–இறுதிக் கட்டம்' என்ற நூலிலிருந்தே இந்த அத்தியாயமும், அடுத்துள்ள 5, 6-ஆம் அத்தியாயங்களும் எடுத்துக் கொடுக்கப்பட்டுள்ளன.]

பக்தர்களுள் சிறந்தவராக விளங்கிய துளசிதாஸ் தமது ராமாயணத்தில், யாக்ஞவல்கிய ரிஷியிலிருந்து ஆரம்பித்து பல பாத்திரங்களைக் கொண்டு வந்துள்ளார். கடைசியாக, பார்வதி தேவிக்கும் சிவபெருமானுக்கும் நடந்த சம்பாஷணையைக் குறிப்பிட்டுள்ளார். என்றும் அழியாத் தன்மை வாய்ந்த அந்த சம்பாஷணையின் விவரம் பின் வருமாறு :

பார்வதி தேவி சிவனைக் கேட்கிருள் : '' இந்த ராமன் யார்? நீங்கள் உட்பட ரிஷிகளும், தீர்க்கதரிசிகளும் மகோன்னதமான

ஆனந்தத்தை அடையவும், பிறப்பு, இறப்பு என்ற பந்தத்திலிருந்து விடுதலை பெறவும் ராம நாமத்தையே இடைவிடாது ஜபித்து வருகிறீர்களே, ஏன்? அயோத்தியை ஆட்சிபுரிந்தவனும், தமது மனைவியான சீதையை இழந்ததால் சாதாரண மனிதனைப்போல் துக்கம் தாங்க முடியாமல் கதறியழுதவனும், பிறகு ஆத்திரத்தினால் ராவணனைக் கொன்றவனும் அதே ராமன்தானா, அல்லது வேறு ராமனா?''

சிவ பெருமான் கூறுகிறார்: ''பிரம்மா முதல் தேவதைகள், ரிஷிகள், தீர்க்கதரிசிகள் முதலிய யாவரும் பக்தி பூண்டு வணங்கும் ராமன், சரித்திரத்தில் கூறப்பட்டிருப்பவனும், தசரதனின் குமாரனும், அயோத்தியை ஆட்சிபுரிந்தவனுமான ராமன் அல்ல. இந்த ராமன் ஆதி அந்தமற்றவன், பிறப்பு இல்லாதவன், ஈடு இணை இல்லாதவன், காலத்தைக் கடந்தவன், உருவமற்றவன், எள்ளளவும் களங்கமற்றவன், பரிசுத்தமானவன்.''

காந்திஜியின் ராமனும் அவர்களால் வணங்கப்பட்ட ராமன் தான்.

## 5

## ஐந்து தூண்கள்

ஆன்ம ஞானம் பெற விரும்புவோர், மூலாதாரமான ஐந்து அனுஷ்டானங்களை அல்லது ஒழுக்கங்களைக் கடைப்பிடிக்க வேண்டுமென ஹிந்து சமயம் விதித்திருக்கிறது. அவையாவன: அகிம்சை, சத்தியம், உடைமைகள் வைத்துக் கொள்ளாதிருத்தல், திருடாமை, பிரம்மச்சரியம். இந்த ஐந்து தூண்களையும் அடிப்படையாகக் கொண்டே காந்திஜியின் வாழ்க்கையும், அவரது சத்தியாக்கிரக தத்துவமும் நிர்மாணிக்கப்பட்டிருந்தன. எனினும், அந்தக் கொள்கைகளை அவர் அணுகிய முறை பண்டைய வைதிகர்கள் அனுசரிக்கும் முறை அல்ல; சாத்திர ரீதியாக சத்தியத்தை நாடும் ஒருவரது முறையாகும். அக் கொள்கைகளை யொட்டி காந்திஜி கூறிய அர்த்தமும் விளக்கமும் வைதிகர்களைத் திகைக்க வைத்துத் திக்குமுக்காடும்படி செய்துவிட்டன. உதாரணமாக, ஒரு கன்றுக்குட்டியின் வேதனையைப் போக்குவதற்காக காந்திஜி அதற்கு மரண ஊசி போடும்படி செய்ததும், வெறிபிடித்த நாய்களையும், 'பிளேக்' நோய்க்குக் காரணமாக இருந்த எலிகளையும் கொல்லும்படி செய்ததும் வைதிகர்களுக்குத் திகைப்பை உண்டாக்கின. காந்திஜியின் வாழ்க்கை முழுவதும் அவரது போக்கு புரட்சிகரமாகவே இருந்து வந்திருக்கிறது. தற்போதைய பொருளாதார, அரசியல், சமுதாய, சமய முறைகளுக்குக்கூட அவரது வாழ்க்கை ஒரு சவாலாக அமைந்திருக்கிறது. ஒவ்வொரு விஷயத்தையும் கண்டிப்

பான, நுண்ணிய சோதனைக்கு உட்படுத்தாமல் அவர் விடுவதில்லை. தருமம், ஒழுக்கம், ஆன்மிக அனுபவம் எல்லாவற்றையும் ஆழ்ந்த ஆராய்ச்சிக்கும், சோதனைக்கும் உகந்த விஷயங்களாகவே அவர் கருதிவந்துள்ளார். அதனாலேயே அவரது சத்திய சோதனைகளில் பிரம்மச்சரியமும் இடம் பெற்றது.

காந்திஜி அவரது இளமைப் பருவத்திலிருந்தே பிரம்மச்சரியக் கொள்கையை அனுஷ்டித்து வந்தார். பிரம்மச்சரியம் என்பதற்குச் சரியான பொருள் பிரம்மத்தை அதாவது சத்தியத்தைத் தேடுவது என்பதே. அகிம்சை அல்லது பலாத்காரமின்மை சத்தியத்தின் வெளிப்படையான ஓர் அம்சமேயாகும். வெளிப்படையாகத் தெரியாத அம்சமும் சத்தியத்தில் உண்டு. பற்றற்றவர்களே சத்தியத்தை பூரணமாக அனுசரிக்க முடியும் என்பது காந்திஜியின் அபிப்பிராயம். கோபம், பேராசை, இறுமாப்பு, பயம் முதலியவை சத்தியத்தைத் தேடுவோரின் கண்களை மறைக்கும் ஒரு திரையாக இருக்கின்றன என்று காந்திஜி கூறியுள்ளார். எனவே மனம், உடல், பேச்சு எல்லாவற்றையும், குறிப்பாக பெண் இனம் சம்பந்தப்பட்டவரையில் எல்லாவற்றையும், ஒரே சமயத்தில் கட்டுப்படுத்துவதே பிரம்மச்சரியத்தின் பொருளாகும். அத்தகைய நிலையை அடையும் போதுதான் பிரம்மச்சரியம் பூர்த்தியாகிறது. இந்நிலையில்தான் அதில் சித்தி பெறுவோரின் மனத்தில் விரும்பத்தகாத, எத்தகைய எண்ணமும் ஏற்படுவதில்லை. எனவே, காந்திஜியின் சத்தியாக்கிரகத் திட்டத்தில் பிரம்மச்சரியத்திற்குத்தான் முதல் ஸ்தானம், கௌரவ ஸ்தானம் அளிக்கப்பட்டிருக்கிறது. "பிரம்மச்சரியம் இன்றேல், சத்தியாக்கிரகி ஒளியிழந்து, ஆன்ம சக்தியையும் இழந்துவிடுவார். பின்னர் ஆயுதமின்றி உலகம் முழுவதையுமே எதிர்த்து நிற்கக் கூடிய ஆற்றல் அவருக்கு இராது" என்று காந்திஜி கூறியிருக்கிறார்.

பிரம்மச்சாரி சில விதிகளுக்குக் கட்டுப்பட வேண்டும் என்று சாத்திரங்கள் கட்டளையிட்டுள்ளன. அவருக்குப் பாதுகாப்பாக இருக்க வேண்டிய சுவர் பின்வருமாறு விவரிக்கப்பட்டிருக்கிறது: "பெண்கள், மிருகங்கள், பேடிகள் முதலியோருக்கு மத்தியில் பிரம்மச்சாரி வசிக்கக் கூடாது. அவர் ஒரு பெண்ணுடன் ஒரே பாயில் உட்காரக் கூடாது. ஒரு பெண்ணின் உடலில் எந்த பாகத்தையும் உற்றுப் பார்க்கக் கூடாது. பால், தயிர், நெய் முதலிய கொழுப்புப் பொருள்களில் எதையும் பிரம்மச்சாரி சாப்பிடக் கூடாது. அவர் வெந்நீரிலோ, எண்ணெய் தேய்த்துக் கொண்டோ ஸ்நானம் செய்யக் கூடாது."

சாத்திரத்தில் கூறப்பட்டுள்ள மேற்கண்ட விதிகளையெல்லாம் காந்திஜி தென்னாப்பிரிக்காவில் இருந்தபோது வாசித்தார். ஆனால், காந்திஜி பிரம்மச்சரியக் கொள்கையை அணுகிய முறை முற்றிலும் வேறாகும். அவர் தென்னாப்பிரிக்காவில் பிரம்மச்சரி

யத்தை அனுசரித்தபோது, பல ஆடவர்களுடனும் பெண்களுடனும் தொடர்பு கொள்ளவேண்டியிருந்தது. மேலே குறிப்பிட்ட விதிகளை மேற்கொள்ள வேண்டியது அவசியம் என்று அவருக்குத் தோன்றவில்லை. அந்த விதிகளைப் பின்பற்றாததால் அவரது பிரம்மச்சரியத்திற்குக் களங்கம் எதுவும் ஏற்பட்டுவிடவும் இல்லை. பெண்களுடன் அவர் யாதொரு களங்கமுமின்றி சகஜமாகவே பழகி வந்தார்.

தென்னுப்பிரிக்காவில் காந்திஜியின் பராமரிப்பில் பல சிறுவர்களும் சிறுமிகளும் இருந்தனர். அவர்கள் மற்ற பையன்களுடனும் பெண்களுடனும் பழகுவதற்கு அவர் யாதொரு தடையும் விதிக்கவில்லை. அந்தப் பரிசோதனையின் விளைவாக அபாயங்கள் ஏற்பட்டது உண்டு. என்றாலும், மேற்கண்ட கண்டிப்பான சாத்திர விதிகள் அடங்கிய வாழ்க்கை முறையை மேற்கொண்டாலன்றி பாதுகாக்க முடியாத பிரம்மச்சரியம் கவைக்குதவாதது என்பதே காந்திஜியின் கருத்தாகும்.

# 6

# ராமபிரானின் போர்த் தளவாடங்கள்

துளசி ராமாயணத்தில் விபீஷணன் ராமபிரானைப் பார்த்து இவ்விதம் கேட்கிறுர்: "வெற்றியைக் கொடுக்கும் போர்த் தளவாடங்கள் எவை? தங்களிடம் ரதம் இல்லை, கவசம் இல்லை, கால்களில் பாதரட்சைகள்கூட இல்லை. அப்படியிருக்க, எல்லா விதமான போர்த்தளவாடங்களையும் பெற்றுள்ள ராவணனை எதிர்த்து வெற்றி பெறலாமென்று தாங்கள் எவ்விதம் எதிர்பார்க்கிறீர்கள்?"

அக் கேள்விக்குப் பதிலாக ராமன் சொல்லுகிறுர்: "என் அன்பார்ந்த விபீஷணா, ராமனுக்கு வெற்றியைக் கொடுக்கும் ரதம் மற்ற சாதாரண ரதங்களைப் போல் அல்ல. ஆண்மையும் தைரியமுமே அவனது ரதத்தின் சக்கரங்கள்; உறுதியான சத்தியமும் ஒழுக்கமுமே அதன் கொடிகள்; பலம், பகுத்தறிவு, தன்னடக்கம், தயாள குணம் முதலியவை அதன் குதிரைகள்; மன்னிக்கும் சுபாவம், இரக்கம், சாந்தம் முதலியவை குதிரைகளின் கடிவாளங்கள்; கடவுளிடம் பிரார்த்தனை செய்வதே தவறே செய்யாத சாரதி; பாரபட்சமின்மையும் போது மென்ற மனமும் வாள்; தரும குணம் அவனது கோடரி; அறிவு அவனது ஈட்டி; குற்றம் குறையற்ற சாத்திர அறிவு அவனது உறுதி வாய்ந்த வில்; தூய்மையான, சஞ்சலமற்ற மனமே அவனது அம்புறாத் தூணி; மன அமைதியும், உடல் சம்பந்தமான, மனத்தைப் பொறுத்த ஒழுக்கங்களும் அம்புகள்; பிரம்மத்தை அறிந்தவர்களுக்கும்

குருவுக்கும் அவன் செலுத்தும் வணக்கமே ஊடுருவ முடியாத கவசமும் ஆகும். இவற்றிற்கு இணையாக வெற்றியைக் கொடுக்கும் தளவாடங்கள் வேறு எதுவுமே இல்லை. என் அன்பார்ந்த நண்ப, தருமமாகிய ரதத்தில் நின்று போர் செய்யும் மனிதனை வெற்றி கொள்ளும் பகைவன் யாருமே இல்லை. இதைப் போன்ற சக்தி வாய்ந்த ரதமுள்ள ஒருவன் எவ்வளவு பெரிய படையையும், ஜெயிக்க முடியாத படைகளையும் கூட, அதாவது உலகத்தையே எதிர்த்து வெற்றிபெற முடியும். எனவே, நான் கூறுவதைக் கவனித்துக் கேள். நீ சிறிதும் அஞ்சவேண்டாம்.''

## 7

# ஹிந்து சமயத்தின் முதலாவது கட்டம்

பிரம்ம ஞான சங்கத்தைச் சேர்ந்த ஜோஹன்னஸ்பர்க் கிளையின் ஆதரவில் நடந்த கூட்டத்தில் ஹிந்து சமயத்தைப் பற்றி காந்திஜி பேசினார். 1905 மார்ச்சு 4-ஆம் தேதி மேஜர் பீகாக்கின் தலைமையில் அக்கூட்டம் நடந்தது. மேஜர் பீகாக் அச் சங்கத்தின் உபதலைவர். அப்போது காந்திஜி பேசியதன் சாரமே கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது:

பல்வேறு சமய முறைகளையும் ஆராய்ச்சி செய்வதில் அக்கறையை வளர்க்கும் ஜோஹன்னஸ்பர்க்கின் முயற்சிகள் மிகவும் போற்றத் தக்கவை. அவற்றின் காரணமாக மக்களின் அனுதாபங்களும், நோக்கங்களும், நம்பிக்கைகளும் பரந்த அடிப்படையில் உருவாவதற்கும் இடம் ஏற்பட்டிருக்கிறது. தென்னப்பிரிக்காவில் நான் சென்ற பதினொரு ஆண்டுகளாக இருந்துவருகிறேன். இக்காலத்தில் நானும், நமது மக்கள் சம்பந்தமாக இங்கே ஏற்பட்டுள்ள தப்பெண்ணத்தையும் அறியாமையையும் அகற்ற முயற்சித்து வந்திருக்கிறேன்.

ஆரிய மக்கள் இண்டஸ் ஜில்லாக்களை அடுத்துள்ள பிரதேசங்களுக்குக் குடியேறியதாலேயே அவர்களுக்கு ஹிந்துக்கள் என்ற பெயர் வழங்கலாயிற்று. பின்னர் அவர்கள் இந்தியா முழுவதும் வியாபித்தனர். என் தேச மக்களில் கோடிக்கணக்கானவர்கள் அங்கீகரித்துள்ள சமயத்தை ஹிந்து சமயம் என்று கூறுவதைக் காட்டிலும் ஆரிய சமயம் என்று கூறுவதே பொருத்தமாக இருக்கும். ஹிந்து சமயத்தின் அற்புதமான அம்சங்களில் ஒன்று தன்னல மறுப்பாகும். உலகத்தில் உள்ள எல்லா மதங்களும் அந்தந்த மத ஸ்தாபகர்களான தீர்க்கதரிசிகளின் பெயரிலேயே ஸ்தாபிக்கப்பட்டுள்ளன. ஆனால், ஹிந்து சமயத்தில் ஈடு இணையற்ற எத்தனையோ மகான்களும் தீர்க்கதரிசிகளும் இருந்துள்ளனர். அப்படியிருந்தும் அவர்களில் யாருடைய பெயரிலும் ஹிந்து மதம் ஸ்தாபிக்கப்படவில்லை.

இதற்கு ஓர் உதாரணம் கூற விரும்புகிறேன். சரித்திரப் புகழ்பெற்ற ஆற்காடு முற்றுகை நடந்தபோது, பிரிட்டிஷ் படைகள் பட்டினி கிடந்து மடியும் நிலையில் இருந்தன. அப்போது இந்திய சிப்பாய்கள் அரிசிச் சோற்றையெல்லாம் பிரிட்டிஷ் சிப்பாய்களுக்குக் கொடுத்துவிட்டு, வடித்த கஞ்சியை மாத்திரம் குடித்து வந்தார்கள். சாதாரணமாக, அந்தக் கஞ்சியைக் கீழே கொட்டி விடுவது வழக்கம். இதைப் போல் சமீபகால சரித்திரத்திலிருந்து கூட பல உதாரணங்களைக் கூறமுடியும்.

தங்களுடைய வேதங்கள் கடவுளால் கொடுக்கப்பட்டவை என்றும், எனவே அவை மிக மிகப் பழமையானவை என்றும் ஹிந்துக்கள் கூறுகின்றனர். ஆனால், வேதங்கள் ஏற்பட்டு 3000 அல்லது 4000 ஆண்டுகளுக்கு மேல் ஆகவில்லை என்று ஐரோப்பியர்கள் கூறுகின்றனர். சமஸ்கிருதத்தில் புகழ் பெற்ற இந்திய பண்டிதரான ஸ்ரீ திலகர், வேதங்கள் பத்தாயிரம் ஆண்டுகளுக்கு முன் ஏற்பட்டவை என்றும், எனினும், கிறிஸ்தவ சகாப்தம் ஆரம்பமாகி முந்நூறு ஆண்டுகளுக்குப் பிறகுதான் எழுத்து வடிவில் கொண்டுவரப்பட்டன என்றும் ஆராய்ச்சி செய்து கணக்கிட்டுள்ளார். ஆர்தர் ஷோபென்ஹாவர், மாக்ஸ் முல்லர் போன்ற மேநாட்டு அறிஞர்கள் வேதங்களை ஆராய்ச்சி செய்திருப்பதே அவற்றின் சிறப்புக்கு எடுத்துக்காட்டாகும்.

இருபது கோடிக்கு மேற்பட்ட மக்கள் ஹிந்து சமயத்தை மேற்கொண்டிருக்கிறார்கள். அவர்களுடைய ஒவ்வொரு நடவடிக்கைகளிலும் சமயம் ஊடுருவியிருக்கிறது. ஆன்மிகத் துறையில் ஹிந்து சமயத்தின் இறுதி லட்சியம் மோட்சமேயாகும். அதாவது, ஆன்மாவானது எல்லாப் பொருள்களிலும் வியாபித்து எல்லையற்று விளங்கும் ஆன்மாவுடன் ஐக்கியம் அடைந்து விடுவதே. உலகமும் கடவுளும் ஒன்றே என்பதுதான் ஹிந்து சமயத்தின் தத்துவம். தன்னல மறுப்பு, சகிப்புத் தன்மை முதலியனவும் ஹிந்து சமயத்தின் சிறப்பு அம்சங்களாகும்.

ஹிந்து சமுதாய சம்பந்தமான விஷயங்களில் சாதியின் ஆதிக்கம்தான் முக்கிய அம்சமாகத் திகழ்ந்தது. அது போலவே, மிருக பலியும் ஒரு முக்கியமான சடங்காக இருந்து வந்தது. இச்சந்தர்ப்பத்தில்தான் கௌதம புத்தர் தோன்றினார். மிருகங்களைப் பலியிடும் வழக்கம் ஆன்மிகச் சிறப்பை சீரழித்து விடுகிறது என்றும், ஹிந்து சமயத்தின் ஒரு முக்கியமான சித்தாந்தம் அன்பும் சகிப்புத் தன்மையும்தான் என்றும் உபதேசிக்கத் தொடங்கினார். அன்பு, அகிம்சை என்பது, உயிருள்ள எந்தப் பிராணியையும் கொல்லாதிருப்பதுதான் என்றும் விளக்கினார். கிறிஸ்தவ அல்லது இஸ்லாம் சமயத்தைப் போல் ஹிந்து சமயத்தில் பிற சமயத்தைச் சேர்ந்தவர்களை மத மாற்றம் செய்யும் வழக்கம் ஒருபோதும் இருந்ததில்லை. ஆனால், அசோக மன்னரின் காலத்தில் ஒரு புதிய நம்பிக்கையைப் பிரசாரம் செய்

வதற்காக பௌத்த குருமார் பல நாடுகளுக்கும் அனுப்பப்பட்டனர். கிறிஸ்தவ சமயத்தில் கத்தோலிக்கர்களும் ப்ராடெஸ்டண்டுகளும் இருப்பது போலவே, ஹிந்துக்களும் பௌத்தர்களும் இருந்து வருகிறார்கள். எனினும், கத்தோலிக்கர்களுக்கும் ப்ராடெஸ்டண்டுகளுக்கும் இடையே நிலவிவரும் துவேஷத்தைப் போல், ஹிந்துக்களுக்கும் பௌத்தர்களுக்கும் இடையே துவேஷம் எதுவும் இல்லை.

இந்தியாவில் சிற்சில சமயங்களில் பௌத்த மதம் க்ஷீண தசையை அடைந்ததாகக் கூறப்படுகிறது. ஆனால், உண்மை அப்படியல்ல. பௌத்த குருமார் தங்களுடைய சமயத்தைப் பிரசாரம் செய்வதில் அதிக உற்சாகம் காட்டத் தொடங்கியதால் அவர்கள் மீது பொறாமைகொண்ட ஹிந்து குருமார் அவர்களை நாட்டின் எல்லைக்கு அப்பால் திபேத், சீனா, ஜப்பான், பர்மா, இலங்கை முதலிய இடங்களுக்கு விரட்டிவிட்டார்கள். எனினும், இந்தியாவிலும் பௌத்தர்களின் செல்வாக்கு ஊடுருவியது.

ஜைன சமயம் ருசிகரமான ஒரு மதமாகும். பௌத்த சமயத்திற்கும் ஜைன சமயத்திற்கும் எவ்வித சம்பந்தமும் இல்லை என்றும், அது பௌத்த சமயத்திலிருந்து உண்டாகவில்லை என்றும் ஜைனர்கள் கூறுகின்றனர். ஆனால், மற்ற சமயத்தினரைப் போல் ஜைன சமயத்தினர் தங்களுடைய மதம் தெய்விகமானது என்று கூறுவதில்லை. ஜைன சமயத்தின் புனித நூல்கள் மனிதனால் எழுதப்பட்டவை என்றே அவர்கள் சொல்லுகின்றனர். ஆனால், தர்க்க ரீதியாகப் பார்ப்பவர்களுக்கு, ஜைன மதம்தான் மிகச் சிறந்தது. உயிருள்ள எல்லாப் பிராணிகளிடத்திலும் அன்பு காட்ட வேண்டும் என்பதே ஜைன சமயத்தின் சிறந்த அம்சமாகும்.

'ஸ்டார்' – 10—3—1905

8

## ஹிந்து சமயத்தின் இரண்டாவது கட்டம்

ஹிந்து சமயத்தைப் பற்றி காந்திஜி நிகழ்த்திய இரண்டாவது பிரசங்கத்தைக் கேட்க பிரம்மஞான மண்டபம் நிறைய மக்கள் வந்திருந்தனர். அப்போது காந்திஜி கூறியதாவது:

இப்போது நான், ஹிந்து சமயத்தின் இரண்டாவது கட்டத்தைப் பற்றிக் கூற விரும்புகிறேன். புத்தருடைய உபதேசங்களின் பலனாக ஹிந்து சமயத்தில் சில சீர்திருத்தங்கள் ஏற்பட்டன. அதன் பின் ஹிந்துக்கள் விக்கிரக வழிபாட்டு முறையைத் தீவிரமாக மேற்கொள்ள முற்பட்டார்கள். அதற்குச் சாதகமாக பல விளக்கங்கள் கொடுக்கப்பட்டன. எனினும், ஹிந்துக்கள் மரங்களை

யும் கற்களையும் வழிபடுவதாகவே தோன்றின என்ற உண்மையை மறுக்க முடியாது. கடவுளை குற்றம் குறையற்ற, தூய்மையான ஒரு தத்துவமாகவே ஹிந்து ஞானிகள் வணங்கினர். எல்லாம் கடவுளே என்ற அத்வைத தத்துவமானது, அவர்கள் மகோன்னதமான ஒரு நிலையை அடையும்படி செய்தது. அது போலவே, அறியாமையில் ஆழ்ந்திருந்த பாமர மக்கள் மிக மிகத் தாழ்ந்த நிலையை அடையும் படியும் அது செய்துவிட்டது. கடவுள் உருவமற்ற, தூய்மையான ஒரு தத்துவம் என்பதைப் பாமரர்களின் பக்குவமடையாத மனம் உணர்ந்து கொள்ள இயலவில்லை. எனவே, அது பல்வேறு உரு வங்களிலும் கடவுளை வணங்க முற்பட்டது. சூரியன், சந்திரன், நட்சத்திரங்களின் மூலமாகப் பலர் கடவுளை வணங்குகிறார்கள். பலர் மரங்களின் மூலமும் கற்களின் மூலமும் கடவுளை வணங்கு கிறார்கள். சகிப்புத் தன்மை வாய்ந்த ஹிந்து சமயமானது, அத்த கைய வழிபாட்டு முறையை ஆட்சேபிக்காமல் ஒப்புக்கொள்ளு கிறது.

இவ்விதமாக, ஹிந்துக்களுடைய வாழ்க்கையின் சக்கர மானது யாதொரு தடையுமின்றி உல்லாசமாகச் சுற்றி வருகையில், அராபிய பாலைவனத்தில் ஒரு சக்தி எழுந்தது. அது மக்களின் கொள்கைகளில் நிரந்தரமாக இருக்கக் கூடிய புரட்சிகரமான மாறுதல்களை உண்டாக்கிவிட்டது. முகமது, சிறு பையனாக இருக் கும்போதே தம்மைச் சுற்றி மக்கள் விக்கிரக வழிபாட்டிலும், காம இச்சைகளிலும், குடியிலும் ஈடுபட்டுவருவதைக் கண்டார். அவற்றைக் கண்டு அவரது மனத்தில் ஆத்திரம் பொங்கியது. யூதர் சமயம் வீழ்ச்சியடைந்திருப்பதையும், கிறிஸ்தவ மதம் இழிவு படுத்தப்பட்டிருப்பதையும்கூட அவர் 'கண்டார். மோஸஸும் ஏசுநாதரும் உணர்ந்ததைப் போல் அவரும் தமது வாழ்க் கையில் ஒரு பெரிய லட்சியத்தை நிறைவேற்றவேண்டும் என்பதை உணர்ந்தார். தமது லட்சியத்தை அவர் உலகத்தில் பரப்பத் தீர் மானித்தார். அந்த லட்சியத்தை அவர் முதலில் தமது குடும்பத் தினரிடையே நிறைவேற்ற முற்பட்டார்.

இஸ்லாம், வாளை அடிப்படையாகக் கொண்ட சமயம் என்று பலரும் நம்புகின்றனர். ஆனால், நான் அவ்விதம் நம்பவில்லை. இஸ் லாமைப் பற்றி வாஷிங்டன் இர்விங் எழுதியுள்ள நூலில் நியாய மான ஒருகேள்வி கேட்டிருக்கிறார். "இஸ்லாம் எங்கே முதல் கட்டமாக வாளை உபயோகித்தது?" இதுதான் அவரது கேள்வியா கும். இஸ்லாம் சமயம் வெற்றிபெற்றதற்குக் காரணம் அதன் எளிய முறைகளும், மனிதரின் பலவீனங்களை அது உணர்ந்ததுமே என்பது அவரது கருத்து. கடவுள் ஒருவரே என்றும், தாம் அவ ரது தூதர் என்றும் முகமது நபி கூறினார். மனிதனை உயர்த்துவ தற்கு பிரார்த்தனை அத்தியாவசியம் என்றும் அவர் போதித்தார். தம்மைப் பின்பற்றுவோர் யாவரும் ஓரிடத்தில் கூடவேண்டும் என்பதற்காக அவர் மெக்கா யாத்திரையை ஏற்படுத்தினார். செல்வம் திரட்டுவோர், தங்களுடைய செல்வத்தின் ஒரு பகுதியை தரும காரியங்களுக்காக ஒதுக்கிவைக்க வேண்டும் என்றும் அவர்

கட்டளையிட்டார். இஸ்லாம் சமயத்தைச் சேர்ந்த எல்லோரையும் சமமாகக் கருதுவது இஸ்லாம் மதத்தின் தனிச் சிறப்பாகும். வேறு எந்த சமயமும் அத்தகைய சமத்துவ அந்தஸ்தை அளிக்க வில்லை.

எனவே, ஏசு நாதர் பிறந்த 900 ஆண்டுகளுக்குப் பிறகு, முகமது நபியைப் பின்பற்றுவோர் இந்தியாவில் வந்து இறங்கிய போது, ஹிந்து சமயத்தைச் சேர்ந்தவர்கள் திகைத்துப் போய் விட்டார்கள். இஸ்லாம் சமயப் பிரவாகத்திற்கு எதிரே எதுவும் நிற்க முடியாது என்றே தோன்றியது. இஸ்லாம் சமயத்தின் சமத்துவ சித்தாந்தமானது சாதி முறைகளால் ஆட்கொள்ளப்பட்டிருந்த பாமர மக்களின் மனத்தைக் கவர்ந்தது. அந்த பலத்துடன், வாளின் சக்தியும் சேர்ந்து கொண்டது. இந்தியாவின் மீது அப்போதைக்கப்போது படையெடுத்த சமய வெறியர்கள், வாய்ப் பேச்சினால் மத மாற்றத்திற்கு இணங்காதவர்களை, வாளை உபயோகித்துத் தங்கள் மதத்திற்கு மாற்றத் தயங்கவில்லை. அவர்கள் இந்தியாவிலுள்ள சகல இடங்களையும் சூறையாடினார்கள்; விக்கிரகங்களை யெல்லாம் உடைத்தார்கள். முஸ்லிம்களின் கொடுமைகளுக்கு இலக்காகாமல் ஹிந்து சமயத்தைப் பாதுகாக்க வீரம் வாய்ந்த ரஜபுத்திரர்களால் கூட முடியவில்லை. ஹிந்து சமய தத்துவத்திற்கு முரணின்றி, இரு சமயங்களுக்கும் சமரசம் செய்வதற்கான முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. 13-ஆம் நூற்றாண்டில் காசிமா நகரில் கபீர் என்ற ஒரு மகான் இருந்தார்.ஹிந்து சமயத்திற்கும் முஸ்லிம் சமயத்திற்கும் நெருங்கிய உறவு ஏற்படும்படி செய்வதற்காக அவர் முயற்சித்தார். எனினும், அவரது முயற்சி பூரண வெற்றி பெறவில்லை.

பஞ்சாப் வழியாகத்தான் இந்தியாவுக்குள் முஸ்லிம்கள் ஈசல்களைப் போல் சாரி சாரியாக வந்தார்கள். எனவே, முஸ்லிம்களின் கொடிய பலாத்காரத்திற்கு முதன் முதலாக பஞ்சாப்தான் வழி சொல்லித் தீர வேண்டியிருந்தது. அதன் பலனாகவே குரு நானக் அவதரித்தார். கபீருடைய சித்தாந்தங்களை அவர் மேற்கொண்டதுடன், அவற்றுடன் போர் முரசு கொட்டும் ஹிந்து சமயத்தையும் சேர்த்துக் கொண்டார். முஸ்லிம் உணர்ச்சிகளுக்கும் அவர் மதிப்புக் கொடுத்து, அவர்களுடன் சமாதானம் செய்து கொள்ள விரும்பினார். சமாதானக் கோரிக்கைகளை அவர்கள் அங்கீகரிக்காவிடில், முஸ்லிம்களின் ஆக்கிரமிப்பிலிருந்து ஹிந்து சமயத்தைப் பாதுகாக்கவும் அவர் தயாராக இருந்தார். சீக்கிய மதம் தோன்றியதற்கு இஸ்லாமே நேரடியான காரணமாகும். சீக்கியர்கள் எவ்வளவு தைரியசாலிகள் என்பதும், பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கு அவர்கள் எவ்வளவு தொண்டு புரிந்திருக்கிறார்கள் என்பதும் எல்லோரும் அறிந்த விஷயமாகும். இஸ்லாம் சமயத்தின் விளைவுதான் சீக்கிய மதமாகும். இஸ்லாம் சமயம் காரணமாக சீக்கிய சமயம் ஏற்பட்டதுடன், அதனால் மற்றொரு பலனும் உண்டாயிற்று. ஹிந்து சமயத்தின் முக்கிய அம்சமான சகிப்புத் தன்மை உண்மையான ஒளியுடனும் பூரணமாகவும் திகழ்ந்ததற்கு இஸ்லாம்தான்

காரணம். அரசியல் செல்வாக்குகள் செயல்படாமல் இருந்த போது, ஹிந்துக்களும் முஸ்லிம்களும் முற்றிலும் அமைதியுடனும் அந்நியோன்னியமாகவும் வாழ்ந்துவந்தார்கள். அவர்கள் பரஸ்பரம் உள்ள விருப்பு வெறுப்புகளுக்கு மதிப்புக் கொடுத்துவந்ததுடன், யாதொரு தங்கு தடையுமின்றி அவரவருடைய சமய விதிகளைப் பின்பற்றவும் அனுமதித்து வந்தார்கள்.

இஸ்லாம் சமயத்திற்கு ஓர் அக்பரைக் கொடுத்தது ஹிந்து சமயம்தான். அவர் ஹிந்து சமயத்தின் சகிப்புத்தன்மைத் தத்துவத்தை நன்கு உணர்ந்து, இந்தியாவை ஆட்சி புரியும் விஷயமாக அதே தத்துவத்தை அனுசரிக்க முற்பட்டார். ஹிந்து சமயம் வளைந்து கொடுக்கும் தன்மை வாய்ந்தது. ஆதலால், உக்ரமான சமயப் போராட்டம் நடந்தும்கூட மிகப் பெரும்பாலோரும் அதனால் சிறிதும் பாதிக்கப்படவில்லை. குளிர்ந்த நீரில் நாம் ஸ்நானம் செய்த பின் உற்சாகத்துடனும், ஒளியுடனும் தோன்றுவது போல், ஹிந்து சமயமும் போராட்டத்திற்குப் பிறகு புடம் போட்டு மெருகிடப்பட்டது போல் அதிக சோபையுடன் விளங்கியது. அந்தப் போராட்டத்தின் முதல் அதிர்ச்சி கடுமையாக இருந்ததெனினும், ஹிந்து சமயம் அதைச் சமாளித்துக் கொண்டது. பக்கிரிகளும் யோகிகளும் முறையே இஸ்லாம், ஹிந்து சமயத்தைச் சேர்ந்தவர்களாயினும், யாதொரு தங்கு தடையுமின்றி அவரவர்களுடைய வாழ்க்கை முறைகளையே பின்பற்றி வந்தார்கள்.

—'ஸ்டார்' - 18—3—1905

# 9

# உத்தம குருமார் தோன்றிய காரணம்

ஜோஹன்னஸ்பர்க் பிரம்மஞான சங்கத்தில் காந்திஜி நிகழ்த்திய மூன்றாவது, நான்காவது பிரசங்கங்களின் சாரம் பின்வருமாறு:

சமய சம்பந்தமான பிரசங்கங்களை நிகழ்த்தும்படி பிரம்மஞான சங்கத்தினர் என்னை அழைத்தபோது, இரண்டு காரணங்களை முன்னிட்டு அவர்களுடைய அழைப்பை நான் ஒப்புக்கொண்டேன். சற்றேறக்குறைய சென்ற பன்னிரண்டு வருடங்களாக நான் தென்னாப்பிரிக்காவில் வாழ்ந்து வருகிறேன். இந்த நாட்டில் உள்ள என் தேச சகோதரர்கள் படும் கஷ்ட நஷ்டங்களை ஒவ்வொருவரும் அறிவார். அவர்களுடைய தோலின் நிறத்தைக்கூட இங்கேயுள்ள மக்கள் வெறுக்கின்றனர். இதற்கெல்லாம் காரணம், இந்தியர்களைப் பற்றி மக்கள் சரிவர அறிந்து கொள்ளாததுதான். இந்தத் தப்பெண்ணத்தை அகற்ற சாத்திய

மான வரையில் உதவி புரிய வேண்டும் என்ற நோக்கத்துடன் நான் தென்னுப்பிரிக்காவில் தொடர்ந்து தங்கியிருக்கிறேன். எனவே, இச் சங்கத்தின் அழைப்பை அங்கீகரித்தால், எனது கடமையை ஓரளவு நிறைவேற்ற முடியுமென நான் கருதினேன். இந்தப் பிரசங்கங்களின் மூலம், இந்தியர்களைப் பற்றி நீங்கள் நன்கு அறிந்து கொள்ளும்படி செய்வது எனக்குச் சாத்தியமாயின், என்னை மிகவும் அதிருஷ்டசாலியாக நான் கருதுவேன்.

ஹிந்துக்களைப் பற்றியே இப்போது நான் உங்கள் முன்னிலையில் பேச வேண்டியவனுக இருக்கிறேன். எனினும், ஹிந்துக்களின் பழக்க வழக்கங்களும் மற்ற இந்தியர்களின் பழக்க வழக்கங்களும் ஒரே விதமாகவே இருக்கின்றன. எல்லா இந்தியர்களும் அநேகமாக ஒரே விதமான நற்குணங்களும் தீய குணங்களும் வாய்க்கப் பெற்றவர்களாகவே இருக்கிறார்கள்.

உங்களுடைய அழைப்பை நான் ஒப்புக்கொண்டதற்கு மற்றொரு காரணம், பிரம்மஞான சங்கத்தின் நோக்கமாகும். பல்வேறு மதங்களையும் ஒப்பிட்டுப் பார்ப்பது, அந்த மதங்களின் அடிப்படையான உண்மையைக் கண்டுகொள்ளுவது, அந்த மதங்கள் யாவும் கடவுளைக் காண்பதற்கான பல்வேறு சாலைகளே என்பதை மக்களுக்கு எடுத்துக் காட்டுவது,—இவை போன்ற பல விஷயங்களும் பிரம்மஞான சங்கத்தின் நோக்கங்களாகும். ஆகையால், எந்த மதத்தையும் போலியானது என்று யாரும் கூறக் கூடாது என்பதும் அச்சங்கத்தின் நோக்கங்களில் ஒன்று. எனவே, ஹிந்து சமயத்தைப் பற்றி நான் சில வார்த்தைகள் கூறினால், இந்த நோக்கம் ஓரளவு பூர்த்தியாகும் என்று எண்ணினேன்.

## ஹிந்துக்கள்

ஹிந்துக்கள், இந்தியாவின் ஆதி மக்கள் அல்ல என்றே கருதப்படுகிறார்கள். ஹிந்துக்களும் ஐரோப்பிய மக்களில் பெரும்பாலோரும் ஒரு காலத்தில் மத்திய ஆசியாவில் வசித்து வந்தார்கள் என மேநாட்டு நிபுணர்கள் கூறுகின்றனர். அங்கிருந்து பலர் ஐரோப்பாவுக்கும், வேறு பலர் ஈரானுக்கும், மற்றவர்கள் பஞ்சாப் வழியாக இந்தியாவுக்கும் சென்று குடியேறினார்கள். அப்போதுதான் ஆரிய மதம் பரவியது. இந்தியாவில் இருபது கோடிக்கு மேற்பட்ட ஹிந்துக்கள் இருக்கிறார்கள். அவர்கள் ஒரு காலத்தில் இந்து நதிக்கு அப்பால் வசித்து வந்ததால், அவர்களை ஹிந்துக்கள் என்று அழைக்கலாயினர். வேதங்கள் தெய்விகமானவை என்றும், அனுதியானவை என்றும் தீவிர ஹிந்துக்கள் நம்புகின்றனர்.

புத்தர் பிரான் தோன்றிய பின், ஹிந்து சமயம் முதல் பரிசோதனைக்கு உள்ளாக வேண்டியிருந்தது. புத்தரே ஒரு மன்னரின் புதல்வர். கிறிஸ்தவ சகாப்தத்திற்கு 600 ஆண்டுகளுக்கு

முன் அவர் பிறந்ததாகக் கூறப்படுகிறது. அக்காலத்தில் ஹிந்துக்கள் தங்களுடைய மதத்தின் வெளிப் பகட்டுகளையே முக்கியமாகக் கருதி வந்தார்கள். ஹிந்து மதத்தைப் பாதுகாக்க வேண்டிய தங்களுடைய உண்மையான கடமையை பிராம்மணர்கள் சுயநலம் காரணமாகக் கைவிட்டு விட்டார்கள். தம்முடைய மதம் அவ்வளவு கேவலமான நிலையை அடைந்திருப்பதைக் குறித்து புத்தரின் மனம் உருகியது. எனவே, அவர் உலகத்தையே துறந்துவிட்டுத் தவம் செய்யப் புறப்பட்டார். அவர் பல ஆண்டுகள் வரையில் தியானத்தில் இருந்த பின், இறுதியாக ஹிந்து சமயத்தைச் சீர்திருத்துவதற்கான யோசனையைக் கூறினார். புத்தரின் பக்தி, பிராம்மணர்களுடைய மனத்தை அடியோடு மாற்றியது. அதன் பலனாக, மிருகங்களைப் பலிகொடுக்கும் வழக்கம் நின்றது. எனவே, ஹிந்து மதத்திலிருந்து வேறான ஒரு புதிய மதத்தை புத்தர் ஸ்தாபித்தார் என்று கூற முடியாது. புத்தருக்குப் பிறகு வந்தவர்கள், புத்தரின் உபதேசங்களை ஒரு தனி மதமாகச் செய்து விட்டார்கள். புத்த சமயத்தைப் பரப்புவதற்காக அசோக சக்கரவர்த்தி பல அந்நிய நாடுகளுக்கும் தூதர்களை அனுப்பினார்; இலங்கை, பர்மா, சீனா முதலிய மற்றும் பல தேசங்களிலும் புத்த மதம் பரவும்படி செய்தார். அப்போதுதான் ஹிந்து சமயத்திற்கே உரித்தான ஒரு தனிச் சிறப்பு வெளியாயிற்று. அதாவது, யாரையும் கட்டாயப்படுத்தி புத்த மதத்தில் சேர்க்கவில்லை. வாதித்தும், விளக்கிக் கூறியுமே புத்த மத தத்துவம் மக்களின் மனத்தில் பதியும்படி செய்ய முயற்சித்தனர். புத்த மதப் பிரசாரகர்களின் தூய்மையான நடத்தையும் அவர்களுக்கு முக்கிய துணையாக இருந்தது. அது எப்படியாயினும், இந்தியாவைப் பொறுத்த வரையில் ஹிந்து சமயமும் புத்த சமயமும் ஒன்றுதான். இன்றுகூட அந்த இரண்டு சமயங்களின் மூலாதாரமான கொள்கைகள் ஒரே விதமாகவே இருக்கின்றன.

## முகமது நபியின் பிறப்பு

புத்த சமயம் தோன்றியதன் காரணமாக ஹிந்து சமயம் அடைந்த பலனைப் பார்த்தோம். ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் ஹிந்து சமயம், மேலும் அதி தீவிரமான மற்றொரு செல்வாக்கின் ஆதிக்கத்திற்கு இலக்காக நேர்ந்தது. 1300 ஆண்டுகளுக்கு முன் ஹசரத் முகமது பிறந்தார். அரேபியாவில் எங்கு பார்த்தாலும் மக்களின் ஒழுக்கம் சீர்குலைந்து படுமோசமான நிலையில் இருப்பதைக் கண்டார். யூதர் சமயம் உயிருக்குப் போராடிக் கொண்டிருந்தது. நாட்டில் இடம் பெறுவதற்காக கிறிஸ்தவ சமயம் தவித்துக் கொண்டிருந்தது. மக்கள் கண்டதே காட்சி, கொண்டதே கோலம் என்று மனம் போனபடி நடந்து வந்தார்கள். இதெல்லாம் ஒழுக்கத்திற்கு முரணானவை என்பதை முகமது உணர்ந்தார். அதனால் அவரது மனம் மிகுந்த வேதனைக்குள்ளாயிற்று. அவர்கள் யாவரும் தங்களுடைய மோசமான நிலையை

உணர்ந்து கொள்ளும்படி செய்ய, கடவுளின் பெயரால் உறுதி கொண்டார். அவரது தீவிர உணர்ச்சியின் காரணமாக, தம்மைச் சுற்றியுள்ள மக்களின் மனத்தில் உற்சாக மூட்டுவது அவருக்கு சாத்தியமாயிற்று. அதன் பலனாக, இஸ்லாம் வெகு விரைவில் பரவியது. அக்காலத்தில் உற்சாகமோ அல்லது வெறியோ இஸ்லாம் சமயத்தின் விசேஷ அம்சமாக, மாபெரும் சக்தியாக இருந்தது. அது பல நற்செயல்களுக்குக் காரணமாக இருந்தது; தீச் செயல்களுக்கும் கூடக் காரணமாக இருந்தது.

ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் இஸ்லாமைப் பரப்புவதற்காக கஜ்னியின் படைகள் இந்தியா மீது படையெடுத்தன. ஹிந்துக்களின் கோவில் விக்கிரகங்கள் உடைக்கப்பட்டன. அந்தப் படையெடுப்புகள் சோம்நாத் வரையில் முன்னேறி வந்தன. இஸ்லாம் மதத்தைத் தழுவியவர்கள் யாவரும் சமமே என்ற இஸ்லாமியக் கொள்கை தாழ்ந்த வகுப்பினரின் மனத்தைக் கவர்ந்ததால், லட்சக்கணக்கான ஹிந்துக்கள் இஸ்லாம் மதத்தைத் தழுவினர். இதனால் ஹிந்து சமூகத்திலேயே பெரும் கொந்தளிப்பு ஏற்பட்டது.

கபீர் காசியில் பிறந்தார். ஹிந்து வேதாந்தக் கொள்கையின்படி, ஒரு ஹிந்துவுக்கும் ஒரு முஸ்லிமுக்கும் எவ்வித வேற்றுமையும் இல்லை என்று அவர் எண்ணினார். இரு சமூகத்தினரும் சிறந்த தொண்டு புரிந்தால் சொர்க்கத்தில் இடம் பெறலாம் என்றும் அவர் கருதினார். விக்கிரக வழிபாடு, ஹிந்து சமயத்தின் ஒரு முக்கிய அம்சம் அல்ல. இவ்விதம் கபீர் வாதித்து, ஹிந்து சமயத்திற்கும் இஸ்லாமுக்கும் ஒருமைப்பாட்டை ஏற்படுத்த முயற்சித்தார். ஆனால், அவரது முயற்சி அதிக பலனைக் கொடுக்கவில்லை. எனவே, அவரது கொள்கையே ஒரு தனி இனமாக உருவாகியது. இன்று கூட அந்த இனம் இருந்துவருகிறது.

சில வருடங்களுக்குப்பின், பஞ்சாபில் குரு நானக் பிறந்தார். கபீரின் வாதத்தை அவர் ஒப்புக்கொண்டார். இரு சமயங்களுக்கும் ஐக்கிய பாவத்தை உண்டாக்க அவரும் முயற்சித்தார். எனினும் அவ்விதம் முயற்சி செய்து வருகையில், இஸ்லாமின் தாக்குதலிலிருந்து ஹிந்து சமயத்தைப் பாதுகாக்க, அவசியமாயின் வாளையும் உபயோகிக்க வேண்டுமென அவர் கருதினார். அதன் பலனாகவே சீக்கிய மதம் உருவாயிற்று; அதன்மூலம் சீக்கிய வீரர்களும் உண்டானார்கள். அத்தகைய முயற்சிகளின் பலனாகவே, இன்று இந்தியாவில் உள்ள இரு முக்கிய சமயங்களைச் சேர்ந்த ஹிந்துக்களும் முஸ்லிம்களும் அமைதியாகவும் அந்நியோன்னியமாகவும் வாழ்கிறார்கள். ஒரு சமூகத்தினர் மற்றொரு சமூகத்தினருடைய உணர்ச்சிகளைப் புண்படுத்தக் கூடாது என்பதில் அக்கறை கொண்டவர்களாக இருந்து வருகிறார்கள். எனினும் அவர்களிடையே சிற்சில சமயங்களில் துவேஷம் ஏற்படுவதற்கு அரசியல் சூழ்ச்சிகளும் பரபரப்புமே காரணங்களாகும். ஒரு ஹிந்து யோகிக்கும் ஒரு முஸ்லிம் பக்கிரிக்கும் வேற்றுமை எதுவும் இல்லை.

## தீர்க்கதரிசி ஏசு நாதர்

அவ்விதமாக, ஹிந்து சமயமும் இஸ்லாமும் ஒன்றுக்கொன்று போட்டி போட்டுவருகையில், 500 ஆண்டுகளுக்கு முன் கிறிஸ்தவர்கள் கோவா துறைமுகத்தில் இறங்கினார்கள். பின்னர் அவர்கள் ஹிந்துக்களை கிறிஸ்தவ மதத்திற்கு மாற்றும் காரியத்தில் ஈடுபட்டார்கள். அவர்கள் ஓரளவு பலாத்காரத்தைக் கைக்கொண்டும், ஓரளவு பிரசாரத்தின் மூலமும் மதமாற்றம் செய்ய முற்பட்டார்கள். கிறிஸ்தவப் பாதிரிமார்களில் சிலர் மிகுந்த அன்பும் இரக்க சித்தமும் உடையவர்களாக இருந்தார்கள். அவர்களை முனிவர்கள் என்றே கூறலாம். முஸ்லிம் பக்கிரிகளைப்போல் அவர்களும் ஹிந்து சமுகத்தைச் சேர்ந்த தாழ்ந்த வகுப்பினரின் மனத்தைக் கவர்ந்தனர். பின்னர், கிறிஸ்தவ சமயமும் மேநாட்டு நாகரிகமும் ஒன்று சேர்ந்தபோது, கிறிஸ்தவ சமயத்தில் ஹிந்துக்களுக்கு அதிருப்தி ஏற்படத் தொடங்கியது. அதன் பலனாக, இன்று இந்தியாவை கிறிஸ்தவர்களே ஆட்சி புரிந்து வருகிறார்களெனினும், வெகு சில ஹிந்துக்களே கிறிஸ்தவ மதத்தைத் தழுவுகிறார்கள். இருந்தாலும் ஹிந்து சமயத்தில் கிறிஸ்தவ சமயம் மிகுந்த செல்வாக்கை ஏற்படுத்திக் கொண்டிருக்கிறது என்பதில் ஐயமில்லை. கிறிஸ்தவப் பாதிரிமார்கள் மிகவும் உயர்தரக் கல்வி அளித்தார்கள்; ஹிந்து சமயத்தில் உள்ள குறைகளை பகிரங்கமாக சுட்டிக் காட்டினார்கள். அதன் பலனாக ஹிந்து சமயத்தில் உத்தம குருமார் தோன்றி கிறிஸ்தவ சமயத்தில் உள்ள நல்ல அம்சங்களை ஹிந்துக்களுக்குக் கற்பித்ததுடன், ஹிந்து சமயத்தில் உள்ள குற்றம் குறைகளைக் களைந்துவிடும்படியும் கேட்டுக் கொண்டார்கள். இந்த வகையில் வந்த உத்தம குருக்களே ராஜா ராம் மோஹன் ராய்,* தேவேந்திரநாத் தாகூர்,† கேசவ சந்திர சென்‡ முதலியோராவர்.

---

* ராஜாராம் மோகன் ராய் (1774–1833) வங்காளத்தைச் சேர்ந்த கிராமத்தில் பிறந்தார். அவரது தந்தை ராமகாந்த், சிராஜுத்தௌலாவின் ஆட்சியில் உயர்ந்த பதவியில் இருந்தவர். ராம் மோகன் ராயின் பெற்றோர் மிகவும் சமயப்பற்று உள்ளவர்கள். எனினும், ராம் மோகன் ராய் ஹிந்து சமயத்தில் உள்ள புராதனமான பழக்க வழக்கங்களை அகற்றிவிட்டு புரட்சிகரமான சீர்திருத்தங்களைச் செய்ய முற்பட்டார். இறந்த கணவனுடன் மனைவி உடன்கட்டையேறும் வழக்கத்தை ஒழித்தவர் ராம் மோகன் ராய்தான். தனி நபரின் சுதந்திரத்தில் தலையிடும் சமய சித்தாந்தங்களையும் அவர் எதிர்த்தார். இந்தியர்கள் ஆங்கிலக் கல்வி பெற வேண்டும் என்பதை அவர் ஆதரித்தார். அவர் எழுதிய புரட்சிகரமான நூல்களில் வேதாந்தத்தைப் பற்றி அவர் இயற்றிய நூல் பிரபலமாக விளங்கியது. 1830–இல் ராம் மோகன் ராய் மொகலாய மன்னரின் தூதராக இங்கிலாந்துக்குச் சென்றிருந்தார். 1828-இல் பிரம்ம சமாஜத்தை ஸ்தாபித்தவரும் அவர்தான்.

† ராம் மோகன் ராயின் தொண்டை தூய்மையான ஹிந்து சமயத்தை அடிப்படையாகக் கொண்டு தேவேந்திரநாத் தாகூர் தொடர்ந்து வந்தார். ஆனால், அவரது தொண்டு முற்றிலும் உபநிடதங்களையே அடிப்படையாகக் கொண்டிருந்தது. எனவே, அவரை சமூக சீர்திருத்தக்காரர் என்று கூறுவதைக் காட்டிலும் ஒரு முனிவர் அல்லது

அவர்களைப்போல் மேற்கு இந்தியாவில் தயானந்த சரஸ்வதி § இருந்தார். இன்று இந்தியாவில் ஏற்பட்டுள்ள பிரம்ம சமாஜம், ஆரிய சமாஜம் முதலியவற்றைப் போன்ற ஏராளமான சீர்திருத்த சங்கங்கள் ஏற்பட்டதற்கும், கிறிஸ்தவ சமயத்தின்

ஞானி என்று கூறுவதே பொருந்தும். மகரிஷி தேவேந்திரநாத் தாகூரின் புதல்வரே ரவீந்திரநாத் தாகூர். சாந்தி நிகேதனத்தை ஸ்தாபித்தவரும் மகரிஷி தேவேந்திர நாத் தாகூர்தான்.

‡ தேவேந்திரநாத் தாகூரின் சீடரான கேசவ சந்திர சென் கிறிஸ்தவ சமய தத்துவத்தை முக்கியமாகக் கொண்டு ஹிந்து சமூக சீர்திருத்தங்களில் ஈடுபட்டார். தீண்டாமை, படுதா, சாதி முறைகளை சந்திர சென் தீவிரமாகக் கண்டித்தார்.

§ மகரிஷி தயானந்த சரஸ்வதியை (1824–1883) இந்தியாவில் அவதரித்த முனிவர்களின் வரிசையில் சேர்க்க வேண்டும். அவர் மகா பண்டிதர், ஞானி, வாதத்தில் வல்லவர். ஹிந்துக்களுக்கு வேதங்களில் மீண்டும் அக்கறை ஏற்படும்படி செய்த பெருமை அவருக்கே உரியது. தீண்டாமை, பால்ய விவாகம் போன்ற சமூகத் தீமைகளை எதிர்த்தும் அவர் போராடினார். புராதன இந்தியக் கல்வி முறையை அவர் மிகவும் ஆதரித்தார். பிற்காலத்தில் தயானந்த சரஸ்வதி என்று புகழ் பெற்ற மூல சங்கர் குஜராத்தைச் சேர்ந்த ஒரு பிராம்மண குடும்பத்தில் பிறந்தார். 14 வயது வரையில் விக்கிரக வழிபாட்டு முறையில் ஈடுபட்டிருந்த மூல சங்கர், அம் முறை பலனற்றதென உணர்ந்து சிறு வயதிலேயே அத்வைதவாதியாக மாறிவிட்டார். அவரது 22–வது வயதில் விவாகம் செய்து கொள்ளும்படி அவரை வற்புறுத்தினார்கள். எனவே அவர் வீட்டை விட்டு வெளியேறி தமக்கு சத்திய மார்க்கத்தைக் காட்டக் கூடிய தகுந்த ஒரு குருவை நாடிச் சென்றார்.

அவர் மதுராவுக்குச் சென்றபோது அங்கு விரிஜானந்தர் என்ற மகானை குருவாக அடைந்தார். தயானந்த சரஸ்வதி தமது 39–ஆவது வயதில் தமது குருகுலக் கல்வியைப் பூர்த்தி செய்தார். குருவின் கட்டளைக்கு இணங்க வேத நூல்களின் தத்துவத்தைப் பிரசாரம் செய்வதாக தயானந்தர் பிரதிக்ஞை எடுத்துக் கொண்டார். அவர் பல நகரங்களுக்கும் திக்விஜயம் செய்து புராணங்களில் மக்களுக்கு உள்ள நம்பிக்கையைக் கண்டித்தார். அதனால் அவருக்குப் பல விரோதிகள் ஏற்பட்டனர். கும்ப மேளாவின் போது அவர் அலகாபாத்துக்கு வந்து வேதங்களின் மதத்தைப் பிரசாரம் செய்தார். அவர் கூட்டிய சீர்திருத்தக்காரர்கள் அடங்கிய சபையில் சர் சையது அகமதுகான், கேசவ சந்திர சென் முதலியோரும் இடம் பெற்றிருந்தனர்.

அவர் 'சத்தியார்த்த பிரகாசம்' என்ற பிரபல நூலை வெளியிட்டு அதன் அடிப்படையில் தம்மைப் பின்பற்றுவோர் அடங்கிய ஒரு சமூகத்தை அமைக்க முற்பட்டார். அதற்கு 1875-இல் பம்பாயில் அஸ்திவாரம் அமைக்கப்பட்டது. அதுதான் ஆரிய சமாஜமாகும். பின்னர் சுவாமிஜி சென்ற இடங்களில் எல்லாம் ஆரிய சமாஜத்தின் கிளை ஸ்தாபனங்கள் அமைக்கப்பட்டன.

சுவாமிஜி அஞ்சா நெஞ்சம் படைத்தவர். பல தடவைகளில் அவரைக் கொல்ல முயற்சி நடந்தது. அவரைப் பணிய வைப்பதற்கான முயற்சிகளும் தோல்வியுற்றன. ஆனால், அவர் உதயபுரியில் இருந்தபோது, ஒரு சதிகாரரின் முயற்சி பலித்துவிட்டது. உதயபூர் மன்னரின் வைப்பாட்டி ஒருத்தி, சுவாமிஜிக்கு விஷத்தைக் கொடுத்துவிடும்படி சுவாமிஜியின் சமையற்காரரைத் தூண்டினாள். தமக்கு விஷத்தைக் கொடுத்துவிட்டார்கள் என்பதை சுவாமிஜி அறிந்துகொண்டபோது நிலைமை முற்றிவிட்டது. விஷம் உண்டதால் அவரது உடல் வேதனையடைந்தாலும், அவரது உள்ளம் அமைதியாகவே இருந்தது. அவ்வாறாக அவர் 59–ஆவது வயதில் காலமானார். "எல்லாம் கடவுள்

செல்வாக்கே காரணமாகும். பின்னர் பிளவாட்ஸ்கி ** அம்மையார் இந்தியாவுக்கு வந்து, மேனாட்டு நாகரிகத்தின் தீமைகளை ஹிந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் எடுத்துக் கூறினார்; அந்த நாகரிகத்தின் பகட்டில் மயங்கிவிட வேண்டாம் என்றும் எச்சரித்தார்.

## ஹிந்து சமயத்தின் சித்தாந்தங்கள்

இவ்வாருக, ஹிந்து சமயத்தின்மீது புத்த, இஸ்லாம், கிறிஸ்தவ சமயங்களால் ஏற்பட்ட மூன்று தாக்குதல்களையும், யாதொரு கஷ்ட நஷ்டமுமின்றி ஹிந்து சமயம் எவ்விதம் சமாளித்தது என்பதைப் பார்த்தோம். அந்த மதங்களில்உள்ள நல்லஅம்சங்களையெல்லாம் கிரகித்துக்கொள்ள ஹிந்து சமயம் முயற்சித்தது. ஹிந்து சமயத்தைப் பின்பற்றுவோரின் நம்பிக்கை என்ன என்பதை நாம் அறிந்து கொள்ளவேண்டும். அவர்களின் நம்பிக்கை இதுதான்: 'கடவுள் உண்டு. அவர் ஆதி அந்தமற்றவர்; மாசற்றவர்; குணம் அல்லது உருவம் எதுவும் இல்லாதவர்; கடவுள் எங்கும் இருப்பவர், எல்லாம் வல்லவர். அவரது மூல உருவம் பிரம்மம்தான். அவர் பரமானந்த உருவம். உலகமும் உலகத்தில் உள்ள எல்லாமும் அவராலேயே ரட்சிக்கப் படுகின்றன.'

ஆன்மா உண்டு. உடலிலிருந்து ஆன்மா முற்றிலும் வேருகும். ஆன்மாவும் அனுதியானது, பிறப்பு இல்லாதது. ஆன்மாவின் மூல உருவத்திற்கும் பிரம்மத்திற்கும் யாதொரு வேற்றுமையும் இல்லை. எனினும், கர்ம பலன் காரணமாகவோ அல்லது மாயையின் சக்தியினுலோ ஆன்மா அப்போதைக்கப்போது ஓர் உடலை எடுத்துக் கொள்ளுகிறது. பின்னர் அது செய்யும் நல்ல அல்லது கெட்ட செயல்களுக்குத் தகுந்தவாறு உயர்ந்த அல்லது தாழ்ந்த இனங்களில் அடிக்கடி பிறக்கின்றது.

பிறப்பு—இறப்புச் சுழலிலிருந்து விடுதலை பெற்று பிரம்மத்துடன் ஐக்கியமாவதே மோட்சம் அல்லது விடுதலையாகும். தூய்மையான நல்ல நடவடிக்கைகளில் ஈடுபடுவது, எல்லா உயிர்ப் பிராணிகளிடத்திலும் இரக்கம் காட்டுவது, வாழ்க்கையில் சத்தியத்தைக் கடைப்பிடிப்பது முதலியவைதான் மோட்சம் அடைவதற்கான வழிகளாகும். அந்த நிலையை எட்டிய பிறகு கூட ஒருவருக்கு மோட்சம் கிடைப்பதில்லை. ஒருவர் செய்த நல்வினைகளுக்காக அவர் இந்த உடலுடன் வாழ்க்கை நடத்தித் தீர வேண்டும். எனவே ஒருவர் மோட்சம் அடைய வேண்டுமாயின், அவர் மேற்கொண்டு ஒரு படி முன் செல்ல வேண்டும். நமது

---

சித்தப்படி நடக்கும்'' என்பதே தயானந்த சரஸ்வதி கூறிய கடைசி வார்த்தைகளாகும். காந்திஜி தமது கட்டுரைகளில் பல இடங்களிலும் தயானந்த சரஸ்வதியின் பெருமையைப் பற்றிக் குறிப்பிட்டிருக்கிருர்.

** பிளவாட்ஸ்கி அம்மையாரைப் பற்றிய விவரங்களை இந்தத் தொகுப்பின் 21—ஆம் பக்கத்தில் காணலாம்.

கடமைகளை, பற்றற்ற முறையில் நாம் தொடர்ந்து செய்து வர வேண்டும். பலனை எதிர்பார்த்த வண்ணம் நாம் எதுவும் செய்யக் கூடாது. சுருங்கக் கூறுவதாயின், எந்த நடவடிக்கையும் கடவுளுக்கு அர்ப்பணம் செய்யப்படவேண்டும். நாமே எதையும் செய்கிறோம், எதையும் செய்ய முடியும் என்ற இறுமாப்பு நம் கனவில்கூட ஏற்படக் கூடாது. எல்லோரையும் நாம் சமமாகக் கருதவேண்டும். இவைதான், ஹிந்து சமயத்தைச் சேர்ந்தவர் களின் நம்பிக்கைகள் அல்லது சித்தாந்தங்களாகும். ஹிந்து சமயத்தில் ஒரு சில கட்சிகளும், பிரிவுகளும் இருப்பதைக் குறித்து இப்போது நாம் யோசிக்கவேண்டிய அவசியமில்லை.

### முடிவுரை

இந்தப் பேச்சைக் கேட்டபிறகு, ஹிந்துக்களோ அல்லது இந்தியர்களோ தாழ்ந்த அந்தஸ்து உடையவர்களாக இருக்க முடியாது என்று நீங்கள் கருத முற்பட்டால், நீங்கள் என் தேச மக்களுக்குத் தொண்டு புரிய முடியும். அரசியல் விஷயங்களுடன் எவ்விதத் தொடர்புமின்றியே நீங்கள் உதவி புரிய முடியும். நாம் எல்லோரும் நேசமாகவும், பரஸ்பரம் அன்புடனும் வாழவேண்டும் என்றே எல்லா மதங்களும் நமக்குக் கற்பிக்கின்றன. உங்கள் எல்லோருக்கும் உபதேசம் செய்ய வேண்டும் என்பது எனது நோக்கமல்ல; அதற்கு நான் தகுதியுடையவனும் அல்ல. எனது பேச்சு உங்களுடைய மனத்தில் சாதகமான எண்ணத்தை உண்டாக்கி யிருக்குமானால், அதன் பலனை என் தேச சகோ தரர்கள் அனுபவிக்கும்படி செய்ய வேண்டுமென உங்களை நான் கேட்டுக் கொள்ளுகிறேன். அவர்கள் மீது அவதூறு கூறப்படும் போது அவர்களுக்குப் பாதுகாப்பு அளிக்கும்படி உங்களை நான் கேட்டுக்கொள்ளுகிறேன். அவ்விதம் பாதுகாப்பு அளிப்பதுதான் ஆங்கிலேயர்களின் பெருமைக்கு உகந்ததாகும்.

—'இந்தியன் ஒபினியன்' - 15—4—1905

## 10

# சத்தியமும் ஜார்ஜ் வாஷிங்டனும்

ஜார்ஜ் வாஷிங்டனைப் பற்றிய கதையை ஆங்கிலம் தெரிந்த மாணவர்கள் தங்கள் பாட புத்தகங்களில் வாசித்திருக்கலாம். அவரது தந்தை அன்புடன் வளர்த்து வந்த ஒரு செடியை ஜார்ஜ் தனது குழந்தைப் பருவத்தில் வேடிக்கைக்காக வெட்டிவிட்டார். அந்தச் செடி வெட்டப்பட்டுக் கீழே கிடந்ததைப் பார்த்த அவரது தந்தை கோபத்துடன், 'இந்தச் செடியை வெட்டியது யார்? என்று ஜார்ஜைக் கேட்டார். உடனே ஜார்ஜ், "தந்தையே,

நான் பொய் சொல்ல மாட்டேன். இந்தச் செடியை வெட்டியது நான்தான்'' என்று பதில் அளித்தார். ஜார்ஜின் கண்களில் நீர் ததும்பியது. ஜார்ஜ் வாஷிங்டன் அவ்விதம் யோக்கியமாகப் பதில் கூறியதைக் கண்ட அவருடைய தந்தை கோபம் தணிந்து மகிழ்ச்சியடைந்ததுடன், செடியை வெட்டியதற்காக ஜார்ஜையும் மன்னித்தார்.

சிறு வயதிலேயே அவ்விதம் சத்தியத்தில் உறுதிகொண்ட ஜார்ஜ் வாஷிங்டன், தமது ஐம்பத்தைந்தாவது வயதில் முதலாவது அமெரிக்க ஜனாதிபதியானார். அவர் ஜனாதிபதியான உடன் அமெரிக்காவின் மன்னராக அவருக்கு முடிசூட்ட அமெரிக்க மக்கள் விரும்பினர். ஆனால், முடிசூட்டிக்கொள்ள முடியாது என்று வாஷிங்டன் மறுத்துவிட்டார்.

வர்ஜீனியாவில் வெஸ்ட்மோர்லண்ட் நகரைச் சேர்ந்த ஒரு செல்வக் குடும்பத்தில் வாஷிங்டன் 1732 பிப்ரவரி 22–ஆம் தேதி பிறந்தார். 16 வயது வரையில் அவரது வாழ்க்கையைப் பற்றிய விவரங்கள் யாருக்கும் அதிகமாகத் தெரியாது. அந்த வயது வரையில் அவர் அதிகமாக வாசிக்கவும் இல்லை. அதன் பின்னர் தான் அவர் ஏதோ சொத்திற்கு மானேஜராக நியமிக்கப்பட்டார். அதில் அவர் தமது திறமையையும் தைரியத்தையும் காட்டியதால், 23–ஆவது வயதில் அவரை வர்ஜீனியா ராணுவத்தின் பிரதம தளபதியாக நியமித்தனர்.

அப்போது வட அமெரிக்கா, பிரிட்டிஷாரின் ஆட்சியில் இருந்தது. பிரிட்டிஷ் மக்களுக்கும் அமெரிக்க மக்களுக்கும் சச்சரவுகள் ஏற்பட்டுக்கொண்டிருந்தன. இங்கிலாந்து விதித்த சில வரிகளை அமெரிக்கர்கள் விரும்பவில்லை. மற்றும் பல விஷயங்களும் அமெரிக்கர்களின் மனத்தை உறுத்தி வந்தன. இவ்விதமாக இரு நாடுகளுக்கும் தகராறு முற்றி யுத்தத்தில் வந்து முடிந்தது. பிரிட்டிஷ் படைகள் நன்கு பயிற்சி அளிக்கப்பட்டிருந்தன. அவர்களிடம் தேவையான போர்த் தளவாடங்களும் இருந்தன. ஆனால், அமெரிக்கர்களோ ராணுவப் பயிற்சி இல்லாதவர்கள். போர்த் தளவாடங்களை உபயோகிப்பதையும் அவர்கள் அறிந்துகொள்ளவில்லை. ராணுவத்தைப் போல் கட்டு திட்டங்களுக்கு உட்பட்டு, துன்பங்களைத் தாங்குவதிலும் அவர்களுக்குப் பழக்கமில்லை. எனவே, அத்தகையோரைக் கட்டு திட்டங்களுக்கு உட்படுத்தி அவர்களிடமிருந்து வேலை வாங்கும் பொறுப்பு ஜார்ஜ் வாஷிங்டனிடம் ஒப்படைக்கப்பட்டது. பிரிட்டிஷ் நுகத்தடியிலிருந்து விடுதலை பெற்று அமெரிக்கா சுதந்திரம் அடைய வேண்டும் என்பதற்காகவே, அந்தப் பொறுப்பை அவரிடம் ஒப்படைத்தனர். மேலும் அமெரிக்க மக்கள் அவரைப் பிரதம தளபதி பதவியிலும் நியமித்தனர். அதை வாஷிங்டன் எதிர்த்தார். ''இந்த கௌரவத்திற்கு நான் தகுதி வாய்ந்தவன் அல்ல. எனினும் நீங்கள் என்னை அந்தப் பதவியில் நியமிப்பதால், அதை நான் மக்களுக்குத் தொண்டு புரியும் ஒரு கௌரவ

உத்தியோகமாகக் கருதுகிறேன்" என்றார் வாஷிங்டன். அவர் வாயளவில் அவ்விதம் கூறவில்லை. அந்தப் பதவியை வகிக்கும் திறமை தமக்கு இல்லை என்று அவர் தமது நண்பர்களுக்கு எழுதிய கடிதங்களிலும் குறிப்பிட்டார். எனினும் தம்மிடம் பொறுப்பு ஒப்படைக்கப்பட்ட பிறகு, அவர் அதை நிறைவேற்று வதில் முனைந்தார். எல்லா அபாயங்களையும் அவர் தைரியமாகச் சமாளித்ததுடன், இரவு பகலாக உழைத்துப் பணியாற்றினார். அவர் வாய் திறக்கும் முன்பு, எத்தகைய அபாயங்களையும் லட்சி யம் செய்யாமல் அவர் சொல்படி நடக்க அமெரிக்க மக்கள் முன் வந்தனர். அதன் பலன் என்ன? பிரிட்டிஷ் படைகள் தோல்வி யுற்றன. அமெரிக்கா சுதந்திரம் பெற்றது.

தம்மிடம் ஒப்படைக்கப்பட்ட பொறுப்பை வெற்றிகரமாக நிறைவேற்றிய பின், ஜார்ஜ் வாஷிங்டன் பதவியிலிருந்து விலகத் தீர்மானித்தார். ஆனால், அப்படிப்பட்ட அருமையான தலைவரின் பணியை இழக்க அமெரிக்க மக்கள் விரும்பவில்லை. எனவே, 1787-இல் அமெரிக்கக் குடியரசு ஸ்தாபிக்கப்பட்டபோது, ஜார்ஜ் வாஷிங்டன் அதன் முதலாவது ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுக்கப் பட்டார். அவர் அப்பதவியை ஏற்றுக்கொண்டதில் அவருக்கு எள்ளளவும் சுயநல நோக்கம் இல்லை. யுத்தம் முடிந்தபின் போலி தேசபக்தர்களெல்லாம் தங்களுடைய பைகளை நிரப்பிக்கொள்ள முன்வந்தார்கள். ஆனால், அத்தகைய சுயநலவாதிகளுக்கு வாஷிங்டன் இடம் கொடுக்கவில்லை. வாஷிங்டனைக் கண்டு அவர்கள் நடுங்கினார்கள். பின்னர் 1792-93-இல் அவரை மக்கள் இரண்டாவது தடவையாக ஜனாதிபதி பதவிக்குத் தேர்ந்தெடுத்தார்கள். அப்போதுதான் அவர் தைரியத்துடனும் உறுதியுடனும் அமெரிக்காவில் நிலச் சீர்திருத்தங்களை அமலுக்குக் கொண்டுவந்தார்; நாட்டு மக்களிடையே ஒற்றுமை நிலவும்படி செய்தார்; தேசத்தின் புகழ் ஓங்கும்படியும் செய்தார். "யுத்தம் நடந்தபோதும் வாஷிங்டன் முதல் ஸ்தானத்தில் இருந்தார்; சமாதான காலத்திலும் முதல் ஸ்தானத்தில் இருந்தார்; அமெரிக்க மக்களின் இதயத்திலும் அவர் முதல் ஸ்தானத்தைப் பெற்றார்!" என்று ஒரு நூலாசிரியர் கூறியுள்ளார். மூன்றாவது தடவையாகவும் ஜனாதிபதி பதவியை அங்கீகரிக்கும்படி அவரை வற்புறுத்தியபோது, அவர் அதை ஏற்க மறுத்துவிட்டார்.

இந்த வீரர் 1799 டிசம்பர் 4-ஆம் தேதி திடீரென்று நோய் வாய்ப்பட்டு இறந்தார். அவர் மிகவும் உயரமானவர், கம்பீர மானவர். அவர் 6 அடி 3 அங்குல உயரம் இருந்தார் என்று கூறப் படுகிறது. அவர் எப்போதும் பணிவுடனும் அன்புடனும் இருந் தார். இன்று அமெரிக்கா இவ்வளவு மகோன்னத நிலையை அடைந்திருப்பதற்கு அவரது தேசபக்தியே காரணமாகும். அமெரிக்கா உள்ளளவும் வாஷிங்டனின் பெயரும் இருந்துவரும். இந்தியாவும் அத்தகைய வீரர்களைத் தோற்றுவிக்குமாக.

—'இந்தியன் ஒப்பீனியன்' – 30—9—1905

# 11

# லார்டு கர்ஸானின்* கூற்றுக்குப் பதில்

கல்கத்தா சர்வ கலாசாலையில் லார்டு கர்ஸான் நிகழ்த்திய பட்டமளிப்பு விழாப் பிரசங்கத்தில், அவர் பின்வருமாறு கூறியிருக்கிறார் :

"சத்தியம் என்ற மகோன்னத லட்சியமானது பெரிதும் மேநாடுகளிலிருந்து வந்ததாகும். மேநாட்டினரின் ஒழுக்க விதிகளில் சத்தியத்திற்குத்தான் உயர்ந்த ஸ்தானம் அளிக்கப்பட்டிருந்தது. பின்னர்தான் அந்த லட்சியத்திற்கு கீழ்த் திசை நாடுகள் கௌரவம் அளிக்கத் தொடங்கின. கீழ் நாடுகளில் வஞ்சகமும் ராஜதந்திர சூழ்ச்சியும்தான் பிரபலமாக விளங்கி வந்துள்ளன."

சத்தியத்தைப் பற்றியும் பொய்யைப் பற்றியும் இந்திய வேத நூல்களிலும், புராணங்களிலும், மற்றுமுள்ள சமய நூல்களிலும், தரும நூல்களிலும் என்ன கூறப்பட்டிருக்கின்றன என்பதைக் கவனிக்கும்படி வைஸ்ராய் பிரபு அவர்களைக் கேட்டுக்கொள்ளுகிறோம். இந்திய மக்களிடம் அவருக்கு மதிப்பு உண்டு என்பதில் ஐயமில்லை. இந்திய மக்களிடத்திலும் சத்தியத்திலும் லார்டு கர்ஸானுக்கு ஏதாவது மதிப்பு இருக்குமாயின், வைஸ்ராய் என்ற முறையிலும், கல்கத்தா சர்வ கலாசாலை அத்தியட்சகர் என்ற முறையிலும், ஓர் ஆங்கில கனவான் என்ற முறையிலும் ஆதாரமற்ற, மனத்தைப் புண்படுத்தக் கூடிய அவரது குற்றச்சாட்டுகளை வாபஸ் செய்துகொள்ள அவர் கடமைப்பட்டிருக்கிறார். அவ்விதம் வாபஸ் செய்து கொள்ளுவதுதான் அவருக்கு கௌரவமாகும் :

கடப்பதற்குக் கஷ்டமான பாதைகளைக் கடந்து செல்ல வேண்டும். கோபத்தை சாந்தத்தினாலும், பொய்யை சத்தியத்தினாலும் வெற்றிபெற வேண்டும்.—சாம வேதம், ஆரண்ய கானம், அர்க்க பர்வம்.

பொய் அல்ல, சத்தியமே வெற்றியடைகிறது. ஞானிகள் செல்லும் பாதை சத்தியமேயாகும். முனிவர்கள் சத்திய மார்க்கத்திலேயே சென்று, ஆசைகளைக் கடந்து, எல்லையற்ற சத்திய சமுத்திரமாகிய கடவுளிடம் மோட்சம் அடைந்திருக்கிறார்கள்—'முண்டக உபநிடதம்'

ஒருவன் பூணூல் போட்டுக் கொண்டு கல்வி கற்க முற்படும் போது, அந்தச் சீடனுக்கு இடப்படும் முதல் கட்டளை இதுதான்:

உண்மையே பேசு, கடமையைச் செய், சத்தியத்திலிருந்து வழுவாதே. —தைத்திரீய உபநிடதம்.

---

*லார்டு கர்ஸான் (1859—1925) நிர்வாக நிபுணர் என்றும் ராஜதந்திரி என்றும் புகழ்பெற்றவர். 1899-இலிருந்து 1905 வரையில் இந்தியாவில் வைஸ்ராயாக இருந்தார். 1919—1924-இல் பிரிட்டிஷ் வெளிநாட்டு மந்திரியாகவும் இருந்தார்.

பிரம்மத்தின் சாரமே சத்தியம் என்று ஹிந்து சமயம் கூறுகிறது.

நிரந்தரமான சத்தியமும் எல்லையற்ற அறிவுமே பிரம்மம்.—தைத்திரீய உபநிடதம்.

பேச்சு சத்தியத்தையே அடிப்படையாகக் கொண்டிருக்கிறது. எல்லாம் சத்தியத்தையே அடிப்படையாகக் கொண்டிருக்கின்றன. எனவே, எல்லாவற்றையும்விட மகோன்னதமானது சத்தியமே என்று சொல்லுகிறார்கள்.—மகாநாராயண உபநிடதம்.

சத்தியத்தைக் காட்டிலும் உயர்ந்த கடமை வேறு எதுவும் இல்லை. பொய்யைக் காட்டிலும் கொடிய பாவம் வேறு எதுவும் இல்லை. தருமத்தின் அஸ்திவாரமே சத்தியம்தான்.—மகாபாரதம்.

14 ஆண்டுகள் காட்டில் சென்று வசிப்பதாக ராமபிரான் தமது தந்தைக்கு வாக்குறுதி அளித்தார் அல்லவா? அந்த வாக்குறுதியைக் கைவிட்டுவிடும்படி ராஜாங்க குரு, ராமனை வற்புறுத்தினர். ஆனால், அழியாப் புகழ் பெற்ற ராமன், ராஜகுருவுக்கு பின்வருமாறு பதில் அளித்தார்:

சத்தியமும் இரக்கமுமே தொன்றுதொட்டு மன்னனின் விசேஷ குணங்களாக இருந்துவருகின்றன. ஆகையால், சத்தியமே முடியாட்சியின் சாரமாகும். உலகத்திற்கு சத்தியமே அஸ்திவாரமாக இருந்து வருகிறது. முனிவர்களும் தேவதைகளும் சத்தியத்தையே பெரிதாக மதித்து வந்திருக்கிறார்கள். இந்த உலகில் உண்மையையே பேசும் ஒருவன் எல்லாவற்றையும் விட உயர்ந்த, அழிவற்ற நிலையை அடைகிறான். மனிதர்கள் விஷப் பாம்பைக் கண்டு அஞ்சி அப்பால் ஓடுவதைப் போல் பொய்யனைக் கண்டு நடுங்கி ஓடுகிறார்கள். இந்த உலகில் சத்தியமே தருமத்தின் அஸ்திவாரம் என்று கூறப்படுகிறது. உலகத்தையே ஆட்சி புரிவது சத்தியம்தான். அப்படியிருக்க, நான் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றுவதே எனது முழு முதற் கடமை. எனது தந்தையின் கட்டளையை மனப்பூர்வமாக நிறைவேற்றாமல் நான் ஏன் இருக்கவேண்டும்? பேராசையினாலோ, மதிமயக்கத்தினாலோ அல்லது அறியாமையினாலோ நான் அந்தகாரத்தில் ஆழ்ந்து சத்தியத்தை மீறிச் செல்லமாட்டேன். எனது தந்தைக்கு நான் அளித்த வாக்குறுதியை சத்தியமாக்குவேன். காட்டில் வசிக்கும்படி எனக்கு தந்தை இட்ட கட்டளையை நிறைவேற்றுவதாகக் கூறிவிட்டு, இப்போது அதை மீறி பரதனின் கோரிக்கைக்கு நான் எப்படி இணங்குவேன்?—பேராசிரியர் மாக்ஸ் முல்லரின் ராமாயண மொழிபெயர்ப்பு.

இயற்கையின் விதிகள் சத்தியத்தையே வெளியிடுகின்றன. தருமங்கள் சத்தியத்தின் உருவங்களே. அதுபோல் தீச் செயல்கள் பொய்யின் உருவங்களே. அவற்றை பீஷ்மர் பின்வருமாறு வர்ணித்துள்ளார்:

உண்மையாக நடந்துகொள்ளுதல், சமத்துவ உணர்ச்சி, தன்னடக்கம், படாடோபமின்மை, மன்னிக்கும் சுபாவம், தரும குணம், பிறர் நலனில்

அக்கறை, பணிவு, பொறுமை, பொறுமையின்மை, மன அமைதி, இரக்கம், தீங்கு செய்யாமை–இந்தப் பதின்மூன்றும்தான் நிச்சயமாக சத்தியத்தின் உருவங்களாகும்.—மகாபாரதம், சாந்தி பர்வம்.

எது இருக்கிறதோ அதுதான் சத்தியம், எது இல்லையோ அதுதான் பொய். சத்தியத்தைப் பற்றி பீஷ்மர் மேலும் சொல்லுகிறார் :

சத்தியம் ஆதியந்தமற்ற பிரம்மமே. எல்லாவற்றிற்கும் அடிப்படை சத்தியம்தான்.—மகாபாரதம், சாந்தி பர்வம்.

ஆரிய வீரர்கள் அடிக்கடி இவ்விதம் கூறுவது வழக்கம் :

என் வாயிலிருந்து ஒருபோதும் பொய் வெளிவந்ததில்லை.

அசுவமேத பர்வத்தில் ஸ்ரீ கிருஷ்ணன் பின்வருமாறு திருவாய் மலர்ந்து அருளியுள்ளார் :

சத்தியமும் தருமமும் எப்போதும் என்னிடத்தில் குடிகொண்டிருக்கின்றன.

சத்தியத்தைப் பற்றி பீஷ்மர் கூறுகையில், அதைக் காட்டிலும் பெரிய யாகம் வேறு எதுவுமே இல்லை என்றார். அவர் கூறியதாவது :

ஒரு சமயம் ஆயிரம் குதிரைகளைப் பலி கொடுத்துச் செய்த யாகங்களை தராசின் ஒரு பக்கத்திலும் சத்தியத்தை மற்றொரு புறத்திலும் வைத்து நிறுத்த போது, அந்த யாகங்களைக் காட்டிலும் சத்தியமே அதிக பாரமாக இருந்தது. —மகாபாரதம், சாந்தி பர்வம்.

சத்தியத்தைக் காட்டிலும் மேலானது வேறு எதுவும் இல்லை. எல்லாவற்றையும் காட்டிலும் மிகப் புனிதமானது சத்தியம்தான் என்று கருத வேண்டும்.—ராமாயணம்.

ஒற்றுமையையும் அந்நியோன்னியத்தையும் உண்டாக்கக் கூடிய, அமைதியையும் சாந்தியையும் கொடுக்கக் கூடிய, மனிதன் தனது விதியை நிறைவேற்றுவதற்கு உகந்த குணங்களைப் பற்றி கிருஷ்ண பரமாத்மா பகவத் கீதையில்* குறிப்பிட்டுள்ளார்.

தருமமான பேச்சு என்ன என்பது பகவத் கீதையின் 17–ஆவது அத்தியாயம், 15–ஆவது சுலோகத்தில் குறிப்பிடப்பட்டிருக்கிறது :

பிறர் மனம் நோகாமலும், உண்மையாகவும், இனிமையாகவும், நலன் அளிப்பதாகவும் இருக்கக் கூடிய வார்த்தைகளையே பேசுவதும், வேதம் ஓதுவதும்தான் வாய்ப்பேச்சின் மூலம் செய்யும் தவமாகும்.

ஈசுவரனே சத்தியம்தான் என்று ஹிந்து சமயம் கூறுகிறது. கடவுளிடம் மிக்க பக்தியுள்ள தேவர்கள், ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா

*கீதை 16–ஆவது அத்தியாயத்தில் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா தெய்விகமான குணங்களைப் பற்றிக் குறிப்பிட்டுள்ள 3 சுலோகங்களும் இந்தத் தொகுப்பின் 325, 326 பக்கங்களில் வெளியாகியிருக்கின்றன.

வைக் கண்டதும் பின்வருமாறு தோத்திரம் செய்யத் தொடங்கினர்கள் :

தங்களுடைய வாக்குறுதி சத்தியமே; தங்களுடைய லட்சியமும் சத்தியமே; தாங்கள் முக்காலத்தும் சத்தியமே; தாங்கள் சத்தியத்தின் ஊற்று; தாங்கள் சத்தியத்தில் இருக்கிறீர்கள்; சத்தியத்தின் சத்தியம் தாங்கள்தான்; சத்தியத்தின் தத்துவமும் தாங்களே; தங்களுக்கு தருமமும் சத்தியமும் கண்களாக இருக்கின்றன.—பாகவதம்

கிறிஸ்தவ சகாப்தத்திற்கு 1280 ஆண்டுகளுக்கு முன் மனு தரும சாஸ்திரங்கள் ஏற்பட்டன என்று சர் வில்லியம் ஜோன்ஸ் கூறுகிருர். மனத்தின் ஒழுக்கத்திற்கும், மகோன்னதமான சத்தியத்தை அதாவது ஒரே உண்மையை எட்டவும் சில குணங்கள் அவசியமானவை என்று மனு கூறியுள்ளார். அவையாவன :

பொறுமை, விடா முயற்சி, தன்னடக்கம், யோக்கியப் பொறுப்பு, தூய்மை, புலன்களைக் கட்டுப்படுத்துதல், ஞானம், கல்வி, சத்தியம், கோபமின்மை முதலிய பத்தும் தரும குணத்தின் அடையாளங்களாகும்.—மனு ஸ்மிருதி

மற்ருரிடத்தில் அவை பின்வருமாறு விவரிக்கப்பட்டுள்ளன :

தீங்கு செய்யாமை, சத்தியம், யோக்கியப் பொறுப்பு, தூய்மை, புலன்களைக் கட்டுப்படுத்துதல் ஆகியவை நான்கு சாதிகளும் பின்பற்ற வேண்டிய சுருக்கமான விதிகளாகும்.—மனு ஸ்மிருதி

பேச்சில் யோக்கியப் பொறுப்பு இல்லாதவர்களை மனு பின்வருமாறு கண்டிக்கிருர் :

எல்லா விஷயங்களும் பேச்சினலேயே நடைபெறுகின்றன. பேச்சு எல்லாவற்றிற்கும் வேராக இருக்கிறது. பேச்சிலிருந்தே எல்லாம் உண்டாகின்றன. பேச்சில் யோக்கியப் பொறுப்பு இல்லாதவன், எல்லாவற்றிலும் யோக்கியப் பொறுப்பு இல்லாதவனுகவே இருப்பான் என்பது உண்மை.—மனு ஸ்மிருதி

இடைவிடாது நேர்மையைக் கடைப்பிடிக்க வேண்டும் என்றும், கடமையைச் செய்ய வேண்டும் என்றும் ஆரியர்களின் தெய்விக நூல்கள் உபதேசிக்கின்றன:

நீதி நெறியுடன் நடந்து கொள்ளாதவனே, பொய் பேசி செல்வம் திரட்டுபவனே அல்லது பிறருக்குத் துன்பத்தைக் கொடுப்பதில் எப்போதும் மகிழ்ச்சி அடைபவனே, இந்த உலகத்தில் ஒரு காலத்திலும் சந்தோஷமாக வாழ முடியாது. நேர்மையற்றவர்களால் அவனுக்குத் துன்பம் நேர்ந்தால் கூட, அவனது மனம் நேர்மையான வழியிலிருந்து திரும்பிவிடக் கூடாது. அவ்விதம் இருந்தால், பாவிகளும் நேர்மையற்றவர்களும் வீழ்ச்சியடைவதை அவன் சீக்கிரத்தில் காண்பான். நேர்மையின்மையின் விளை உடனே தெரிந்து விடாது. நேர்மையற்றவர்களின் வம்சத்தையே அது சிறிது சிறிதாக வெட்டி வீழ்த்தி விடும்.—மனு ஸ்மிருதி

ஒருவன் உண்மையையே பேச வேண்டும்; மனத்திற்கு இன்பம் அளிப்பதையே பேச வேண்டும்; ஆனல், மனத்திற்குப் பிடிக்காத உண்மையைப்

பேசக் கூடாது; மனத்திற்கு மகிழ்ச்சி அளிப்பதாயினும் பொய் பேசக் கூடாது;—இதுதான் மூலாதாரமான விதியாகும்.

சத்தியத்திலும், நீதியிலும், போற்றத்தக்க நடவடிக்கைகளிலும், தூய்மையிலும் மனிதன் இடைவிடாது ஆனந்தம் கொள்ள வேண்டும்.

புறம் கூறுவோனிடமிருந்து அல்லது பொய்ச் சாட்சி சொல்லுபவனிடமிருந்து ஒருவன் எக்காலத்திலும் உணவு அருந்தக் கூடாது.

தகுதி வாய்ந்தவர்களிடம் தன்னைப் பற்றி பொய்யான விஷயங்களைக் கூறி பெருமையடித்துக் கொள்ளுபவனைக் காட்டிலும் பெரிய பாவி இந்த உலகில் யாரும் இருக்க முடியாது. திருடர்களுக்குள் படுமோசமானவன் அவன்தான்.—மனு ஸ்மிருதி

உயிர் வாழ்வதற்காக மாத்திரமே உண்பவனும், உண்மையைத் தவிர வேறு எதுவும் பேசாதவனும் எத்தகைய கஷ்டங்களையும் சமாளித்து வெற்றி பெறுவான்.—ஹிதோபதேசம்

பொய் சொல்லுதல், அவதூறு, வசைமொழி, பலனற்ற உரையாடல் ஆகிய நான்கும் பேச்சின் மூலம் ஏற்படும் பாவங்களாகும்.—புத்த சமயத்தின் தரும விதிகள்.

சத்தியத்தை ஒரு கல்லுக்கும், பொய்யை ஒரு மண் பானைக்கும் ஒப்பிடலாம். மண் பானையின் மீது ஒரு கல்லை விட்டெறிந்தால் பானை உடைந்துவிடும். கல்லின் மீது பானை விழுந்தாலும் அது உடைந்துவிடும். எப்படியிருந்தாலும் கஷ்டத்திற்கு உள்ளாவது மண் பானையே.—சீக்கிய உபதேச மொழி

பக்தி பூர்வமான எந்தச் செய்கையும் சத்தியத்திற்கு ஈடாகாது; அதுபோலவே பொய் கூறுவதைப் போன்ற பயங்கரமான குற்றம் வேறு எதுவுமே இல்லை. எந்த இதயத்தில் சத்தியம் நிலைத்திருக்கின்றதோ, அதுதான் நான் இருக்கும் இடமாகும்.—கபீர்

—'இந்தியன் ஒபினியன்' – 1—4—1905

# 12

# தார்மிக மதம்

[சிகாகோவில் நீதி நெறிப் பண்பாடு சங்கத்தை ஸ்தாபித்தவரான வில்லியம் மெகின்டைர் ஸால்டர் எழுதிய 'தார்மிக மதம்' என்ற நூல் 1889-இல் அமெரிக்காவிலும், பின்னர் 1905-இல் இங்கிலாந்திலும் பிரசுரிக்கப்பட்டது. அப்போது காந்திஜி அந்த நூலிலிருந்து 8 அத்தியாயங்களை குஜராத்தியில் சுருக்கமாக மொழி பெயர்த்தார். காந்திஜி எழுதிய அந்தக் கட்டுரைகளே காந்திஜியின் முன்னுரையுடன் பின்வருமாறு தொடர்ச்சியாகக் கொடுக்கப்பட்டுள்ளன: ]

## முன்னுரை

மேற்கண்ட விஷயத்தை யொட்டிய கட்டுரைகளை 'இந்தியன் ஒபினியன்' வாசகர்களுக்காகத் தொடர்ச்சியாக எழுதி வர உத்தேசித்துள்ளோம். இப்போதெல்லாம் உலகில் போலி

வேடம் அதிகமாகியிருக்கிறது. ஒரு மனிதனின் மதம் எதுவாயினும், அவன் அதன் சம்பந்தமான வெளித் தோற்றத்தையே முக்கியமாகக் கருதுகிறுன். அவன் தனது உண்மையான கடமையை நிறைவேற்றத் தவறி விடுகிறுன். செல்வத்தைத் திரட்ட வேண்டும் என்ற வெறியில், நம்மால் பிறருக்கு ஏற்படும் அல்லது ஏற்படக் கூடிய பாதகங்களைப் பற்றி நாம் சிந்திப்பதில்லை. ஐரோப்பாவில் உள்ள பெண்கள் மிருதுவான கையுறைகளை அணிந்து கொள்ளத் தயங்குவதில்லை. குட்டி மிருகங்களைக் கொன்று அவை தயாரிக்கப்படுவதைக் குறித்து அவர்கள் சிறிதும் கவலைப் படுவதில்லை. ராக்பெல்லரை உலகிலேயே பெரிய பணக்காரர் என்று கூறுகிருர்கள். ஒழுக்க சம்பந்தமான பல விதிகளையும் மீறியே அவர் செல்வம் திரட்டினர் என்பதை உலகம் முழுவதும் அறியும். தங்களைச் சுற்றி அத்தகைய நிலைமை இருந்து வருவதால்தான் ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் உள்ள பலர் மதத்தின் விரோதிகளாகி யிருக்கிருர்கள். மதம் என்ற பெயருக்குத் தகுதி வாய்ந்த ஒரு சமயம் உலகில் இருக்குமாயின், நம்மைச் சுற்றி நாம் காணும் மிதமிஞ்சிய இவ்வளவு அக்கிரமங்கள் உலகில் இரா என்று அவர்கள் வாதிக்கிருர்கள். இது ஒரு தவருன கருத்தாகும். ஒரு தொழிலாளி தன்னுடைய குறைகளைக் காண முற்படாமல் தன் கருவிகளின் மீது குறை கூறுவது சகஜம். அது போலவே, தங்களிடமுள்ள தீய குணங்களைப் பற்றிச் சிந்திக்காமல், மனிதர்கள் சமயம் ஒரு வெறும் பகட்டு என்று கூறி, தாங்கள் கொண்டதே கோலம் என்று வாழவும், நடக்கவும் முற்பட்டுவிடுகிருர்கள்.

மனிதரின் இந்தப் போக்கைக் கண்டு பல அமெரிக்கர்களுக்கும் ஐரோப்பியர்களுக்கும் பீதி ஏற்பட்டிருக்கிறது. எல்லா மதங்களும் அழிக்கப்பட்டுவிட்டால், உலகம் பேராபத்திற்கு உள்ளாகும் என்றும், மக்கள் நல்லொழுக்க முறைகளையே அடியோடு கைவிட்டு விடுவார்கள் என்றும் அவர்கள் அஞ்சுகின்றனர். எனவே, மக்களை மீண்டும் நல்வழிக்குக் கொண்டு வர பல விதங்களிலும் முயற்சி செய்ய அவர்கள் முன்வந்திருக்கிருர்கள்.

அந்த நோக்கத்தை அடிப்படையாகக் கொண்டு ஒரு சங்கம் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. எல்லா மதங்களும் ஒழுக்கத்தையே கற்பிக்கின்றன. அது மாத்திரமல்ல, எல்லா சமயங்களும் நீதி நெறியான ஒழுக்க முறைகளையே அடிப்படையாகக் கொண்டிருக்கின்றன. ஒருவர் ஒரு சமயத்தைப் பின்பற்றினுலும் பின்பற்ருவிட்டாலும், பொதுவான தரும விதிகளை அதாவது ஒழுக்க விதிகளை அனுசரித்து நடக்க வேண்டியது ஒவ்வொருவருடைய கடமையும் ஆகும். அந்த விதிகளுக்குக் கீழ்ப்படிந்து நடக்காதவர்கள் இந்த உலகத்திலோ அல்லது மேல் உலகத்திலோ, தங்களுக்கோ அல்லது பிறருக்கோ எவ்வித நன்மையும் செய்ய முடியாது. தற்போது தாண்டவமாடிவரும் போலி வேடம் காரணமாக, எல்லா மதங்களையும் இழிவாகக் கருதுவோரின் மனத்தை மாற்ற வேண்டும் என்பதே இந்தச் சங்கத்தின் நோக்க

மாகும். எல்லா மதங்களுடையவும் மூலாதாரமான கொள்கைகளை அறிந்து, அவற்றிற்குப் பொதுவான தரும முறைகளைப்பற்றி விவாதித்தும், எழுதியும், அவற்றிற்கிணங்க வாழ்ந்தும் காட்ட வேண்டும் என்பதே இச் சங்கத்தின் லட்சியமாக இருந்து வருகிறது. இதைத்தான் அச் சங்கத்தினர் 'தார்மிக மதம்' என்று கூறுகிறார்கள். எந்த சமயத்தையும் கண்டிப்பது அச்சங்கத்தின் கொள்கையல்ல. எல்லா சமயங்களையும் சார்ந்தவர்கள் அச்சங்கத்தில் சேர முடியும், சேர்ந்தும் வருகிறார்கள். அச்சங்கத்தில் சேருவதில் உள்ள ஒரு நன்மை என்னவெனில், அதில் சேரும் பல்வேறு மதத்தினரும் அவரவர் மதத்தில் உறுதியாக இருப்பதுடன், அந்தந்த மதத்தின் ஒழுக்க போதனையிலும் அதிக கவனம் செலுத்திவரலாம். ஒழுக்க விதிகளுக்கு மனிதன் கட்டுப்பட்டுத் தீரவேண்டும் என்பது அவர்களுடைய உறுதியான நம்பிக்கையாகும். அவன் அவ்விதம் கட்டுப்படாவிடில், உலகத்தில் ஒழுங்கே மறைந்து இறுதியில் நாசமே ஏற்படும் என்பது அவர்களுடைய கருத்து.

அமெரிக்க அறிஞரான ஸ்ரீ ஸால்டர் அவ்விஷயமாக ஒரு நூலை வெளியிட்டுள்ளார். அது மிகவும் அருமையான நூலாகும். குறிப்பிட்ட எந்த சமயத்தையும் பற்றி அதில் பரிசீலனை செய்யப் படவில்லை. எனினும், உலகம் முழுவதும் உள்ள எல்லோருக்கும் பொருத்தமான உபதேசங்கள் அதில் அடங்கியிருக்கின்றன. அந்த உபதேசங்களின் சாரத்தை ஒவ்வொரு வாரமும் இந்தப் பத்திரிகையில் நாம் பிரசுரித்து வருவோம். அந்த நூலின் ஆசிரியரைப்பற்றி நாம் கூற விரும்புவதெல்லாம் என்னவெனில், பிறர் என்ன செய்யவேண்டுமென்று அவர் கூறுகிறாரோ அதை அவர் செயலில் காட்டி வருகிறார் என்பதுதான். ஒழுக்க சம்பந்தமான அவரது உபதேசங்களின்படி வாழ்க்கையை நடத்த முயற்சிக்குமாறு வாசகர்களை நாம் கேட்டுக் கொள்ளுகிறோம். அப்போதுதான் நமது முயற்சி பலனைக் கொடுத்ததாக நாம் கருத முடியும்.

## மனிதனின் தார்மிக இயல்பு

மனிதனின் தார்மிக இயல்பே அவனை நல்லொழுக்கமும் உயர்ந்த எண்ணங்களும் உடையவனாகச் செய்கின்றன. பல்வேறு விஞ்ஞான சாத்திரங்களும் உலகம் இருக்கும் நிலையை அப்படியே நமக்குக் காட்டுகின்றன. நீதி நூல்களோ வெனில், உலகம் எப்படி இருக்கவேண்டும் என்பதை நமக்குக் கூறுகின்றன; மனிதன் எவ்விதம் நடந்து கொள்ளவேண்டும் என்பதை அவன் அறிந்து கொள்ளும்படி செய்கின்றன. மனிதனின் மனத்தில் இரண்டு ஜன்னல்கள் இருக்கின்றன. ஒரு ஜன்னலின் வழியாக அவன் தன் உள்ளத்தை உள்ளவாறு தானே பார்த்துக் கொள்ள முடியும். அது எப்படி இருக்கவேண்டும் என்பதை மற்றொரு ஜன்னலின் மூலம் அவன் பார்க்க முடியும். மனிதனின் உடலையும், மூளையையும், மனத்தையும் தனித்தனியாக ஆழ்ந்து பரிசீலனை செய்வதே நமது கடமையாகும்.

எனினும் நாம் அத்துடன் நின்று விட்டால், நமக்கு சாத்திரீயமான அறிவு இருந்தும் கூட அதனுல் நாம் பலனை அடைவதில்லை. ஆகையால் அநீதி, கொடிய குணம், இறுமாப்பு போன்ற தீய குணங்களையும், அந்த மூன்று தீய குணங்களும் சேர்ந்திருப்பதால் ஏற்படக்கூடிய பேரபாயத்தையும் நாம் அறிந்து கொள்ள வேண்டியது அவசியமாகும். அவற்றை அறிந்து கொள்ளுவது மாத்திரம் போதாது; அவற்றைக் களைவதற்கான முறைகளை அனுசரிக்கவும் வேண்டும். ஒரு தார்மிகக் கொள்கை, ஒரு சிற்பியின் திட்டத்தைப் போன்றது. கட்டடத்தை எப்படி நிர்மாணிக்க வேண்டும் என்பதைத் திட்டம் காட்டுகிறது; எனினும் அத்திட்டத்தின்படி கட்டிடத்தை நிர்மாணிக்காவிடில் அது வீணுகிவிடுகிறது. அதுபோலவே, ஒரு தார்மிகக் கொள்கையை நடைமுறையில் அனுசரிக்காவிடில் அது பலனில்லாமல் போய்விடுகிறது. தார்மிக உபதேசங்களை மனப்பாடம் செய்து கொண்டு பிரசங்கம் செய்வோர் ஏராளமாக இருக்கின்றனர். ஆனுல் அவர்கள் அவற்றை நடைமுறையில் அனுசரிப்பதில்லை; நடைமுறையில் கொண்டு வர எண்ணுவதும் இல்லை. தார்மிகக் கொள்கைகள் இந்த உலகில் நடைமுறையில் கொண்டுவருவதற்காக இருக்கவில்லை; மரணத்திற்குப் பிறகு நாம் செல்லும் மறு உலகிற்காகவே இருக்கின்றன என்றும் சிலர் நம்புகிருர்கள்.

"நீங்கள் அப்பழுக்கற்றவர்களாக இருக்க விரும்பினுல், என்ன நேர்ந்தாலும் தார்மிக விதிகளுக்கு முரணின்றி இன்றைய தினத்திலிருந்தே வாழவேண்டும் என்று உறுதி கொள்ள வேண்டும்." இவ்வாறு, புகழ் பெற்ற ஒரு சிந்தனையாளர் கூறியிருக்கிருர். அத்தகைய எண்ணங்களைக் கண்டு நாம் பயந்துவிட வேண்டிய அவசியமே இல்லை. அதற்கு மாருக, தார்மிக விதிகளுக்கு உட்பட்டு நாம் வாழவேண்டியிருப்பதைக் குறித்து மகிழ்ச்சி அடையவேண்டும். யாதொரு ஆட்சேபணையுமின்றி தார்மிகப் பொறுப்பை ஏற்றுக்கொள்ளுவோர்தான் நல்வழியில் செல்லமுடியும்.

கடவுள் எல்லாம் வல்லவர், குற்றம் குறை இல்லாதவர். அவரது கருணைக்கும், மகிமைக்கும், நீதிக்கும் எல்லையே இல்லை. அப்படியிருக்க, அவரது அடிமைகளான நாம் தார்மிக வழியிலிருந்து எவ்விதம் தவற முடியும்? ஒருவர் தார்மிகக் கொள்கைகளை நடைமுறையில் அனுசரிக்கத் தவறிவிடுவாராயின், அது அவரது குற்றமேயொழிய அக்கொள்கைகளின் குற்றமல்ல.

தார்மிகப் பாதையில் செல்லுவோர், தமது ஒழுக்கத்திற்கு வெகுமதியாக எதையும் எதிர்பார்க்கக் கூடாது. ஒருவர் ஏதாவது நல்ல காரியத்தைச் செய்தால், மக்களின் கரகோஷத்தைப் பெறுவதற்காக அவர் அவ்விதம் செய்வதில்லை; அதைச் செய்து தீரவேண்டியது தமது கடமை என்பதற்காகவே செய்கிருர். நற்பணி செய்வது அவருக்கு ஓர் உயர்ந்த உணவைப் போன்றது. பட்டினி கிடக்கும் ஓர் ஏழைக்கு யாராவது உணவைக் கொடுத்

தால், அவ்விதம் கொடுத்தவருக்கு அந்த ஏழை நன்றி செலுத்தி அவரை வாழ்த்துவது போல, நற்பணி செய்ய ஒருவருக்கு யாராவது சந்தர்ப்பம் அளித்தால், அவர் தமக்கு அவ்வித சந்தர்ப்பத்தை அளித்தவருக்கு நன்றி செலுத்துவார்.

இந்த தார்மிக மதத்திற்கு, ஒரு கனவானைப்போல் நடந்து கொள்ளவேண்டும் என்று அர்த்தமல்ல. நாம் இன்னும் அதிக அக்கறை கொள்ளவேண்டும், இன்னும் சிறந்த முறையில் கல்வி பெற வேண்டும், இன்னும் அதிகத் தூய்மையாகவும் அதிக நேர்மையுடனும் இருக்க வேண்டும் என்பதே பொருளாகும். எனினும், தார்மிக மதம் என்பது இவை மாத்திரமல்ல; தார்மிக வழியில் செல்லும் ஒரு மனிதன் இன்னும் பல நற்பணிகளைச் செய்ய வேண்டும். உலகாயதமான லாபத்திற்காக இல்லாமல், அவ்விதம் செய்ய வேண்டியது தனது இயற்கையான கடமை என்ற உணர்ச்சியுடன் செய்ய வேண்டும்.

—'இந்தியன் ஒபினியன்' – 5—1—1907

# 13

# உயர்ந்த ஒழுக்கம்

ஒழுக்கத்தைப்பற்றி இன்று நிலவும் கருத்துகளை மிகவும் உயர்ந்தவை என்று கூற முடியாது. ஒழுக்கம் அவசியமானதல்ல என்று சிலர் கருதுகிறார்கள். மதத்திற்கும் ஒழுக்கத்திற்கும் சம்பந்தம் இல்லை என்று மற்றவர்கள் கருதுகின்றனர். ஆனால், உலகத்தில் உள்ள சமயங்களையெல்லாம் பரிசீலனை செய்ததில், ஒழுக்கமின்றேல் சமயம் நிலைக்க முடியாது என்பது வெளியாகியிருக்கிறது. சமயம் என்பது பெரிதும் ஒழுக்கமேயாகும். சுய நல நோக்கம் எதுவுமின்றி ஒழுக்க விதிகளைப் பின்பற்றுவது தமது கடமை என்று அவற்றைப் பின்பற்றுவோரை, உண்மையான சமயப்பற்றுள்ளவர் என்று கருதலாம். ருஷ்யாவில் தங்களுடைய நாட்டிற்காகத் தங்கள் வாழ்க்கையை அர்ப்பணம் செய்வோர் இருக்கின்றனர். அவர்களை உண்மையான தார்மிக வாதிகள் என்று கூறலாம். ஜெரிமி பெந்தாம்* பிரிட்டனில் சட்டம் இயற்றுவதற்கான பல உயர்ந்த கொள்கைகளை உபதேசித்தார்; ஆங்கிலேயர்களிடையே கல்வி பரவுவதற்கு அரும்பாடுபட்டார்; கைதிகளின் நிலைமை அபிவிருத்தியடைவதற்கான தொண்டில் முக்கிய பங்கு எடுத்துக்கொண்டார். எனவே அவரை உண்மையான தார்மிகவாதி எனலாம்.

உயர்ந்த ஒழுக்கம் என்பது, இதுவரையில் எல்லோரும் சென்ற சிறந்த பாதையில் செல்லுவது மாத்திரமல்ல; இது

* ஜெரிமி பெந்தாம் (1748–1832) பிரிட்டனில் சிறந்த அரசியல் தத்துவக் கொள்கைகளை ஸ்தாபித்தவர்.

வரையில் நாம் அறிந்திருந்தாலும் அறியாவிட்டாலும், உண்மை என்று நமக்குத் தோன்றும் பாதையில் செல்லுவதேயாகும். குறிப்பிட்ட ஒரு பாதைதான் சரியானது என்று நமக்குத் தோன்றினல், அந்தப் பாதையில் நாம் சிறிதும் அச்சமின்றி செல்ல முற்படவேண்டும். இவ்விதமாக தார்மிக விதிகளை அனுசரித்தால் மாத்திரமே நாம் முன்னேற்றமடைய முடியும். அதனல்தான் உண்மையான ஒழுக்கத்தையும், உண்மையான நாகரிகத்தையும், உண்மையான முன்னேற்றத்தையும் நாம் ஒரே இடத்தில் எப்போதும் காணமுடிகின்றது.

நாம் நமது அபிலாஷைகளைப் பரிசீலனை செய்வோமாயின், நம்மிடம் இருப்பதைக் குறித்து நாம் மேலும் ஆசைப்படுவதில்லை என்பதை நாம் தெரிந்துகொள்ளலாம். நம்மிடம் இராததையே நாம் அதிகமாக மதிக்கிறோம். ஆசைகளில் இரு விதங்கள் உண்டு. ஒன்று கலப்பற்ற சுயநல நோக்கமுள்ள ஆசையே. இவ்வித ஆசையை நிறைவேற்ற முயற்சிப்பது ஒழுக்கத்திற்கு முரணாகும். மற்றொரு வித ஆசை, நம்மை நாம் இடைவிடாது அபிவிருத்தி செய்துகொள்ளவும், மற்றவர்களுக்கு நன்மை செய்யவும் நம்மைத் தூண்டுவதாகும். நாம் பிறருக்கு எவ்வளவு நன்மை செய்தாலும் அதைக் குறித்து நாம் இறுமாப்பு அடையக் கூடாது. நாம் செய்யும் நன்மையை மதிப்பிடுவது நமது கடமையல்ல. இன்னும் சிறந்த முறையில் அதிக நன்மை செய்வதற்கே நாம் ஆர்வத்துடன் முயற்சிக்க வேண்டும். அவ்வித ஆர்வத்தை நிறைவேற்ற நாம் முயற்சிப்பதில்தான் உண்மையான ஒழுக்கம் அடங்கியிருக்கிறது.

நமக்குச் சொந்தமாக வீடு வாசலோ அல்லது குடும்பமோ இராவிடில், அதைக் குறித்து நாம் வெட்கப்பட வேண்டிய அவசியமில்லை. நமக்குக் குடும்பம் இருந்து நாம் அதை துரோகம் செய்தாலோ அல்லது நமக்குச் சொந்தமான வியாபாரத்தில் நாம் மோசடியான முறைகளை அனுசரித்தாலோ, நாம் தார்மிகப் பாதையிலிருந்து வழுவியவர்களாகிறோம். நாம் செய்ய வேண்டியதைச் செய்வதே ஒழுக்கம் அல்லது தருமமாகும். சில உதாரணங்களின் மூலம் ஒழுக்கத்தின் அவசியத்தை நாம் ருசுப்பிக்க முடியும். ஒற்றுமையின்மை, பொய் போன்ற ஒழுக்கக் கேடான முறைகளால் மக்களோ அல்ல குடும்பங்களோ அழிவதைத் தவிர வேறு வழியில்லை. சத்தியத்தை அனுசரிக்கக் கூடாது என்று வர்த்தகத்தில் ஈடுபட்டுள்ள ஒருவர் கூடக் கூறியதை நாம் கண்டதில்லை. நீதியுடன் நடந்துகொள்ளுவது, நன்மை செய்வது ஆகியவற்றின் பலனை நாம் வெளியிலிருந்து உணர முடியாது; அவற்றின் பலனை நாம் உள்ளேயேதான் காணமுடியும். நானூறு ஆண்டுகளுக்கு முன் ஐரோப்பாவில் மிகுந்த அநீதியும் பொய்யும் தாண்டவமாடின. எனவே, மக்கள் ஒரு விநாடிகூட அமைதியாக வாழ்க்கை நடத்த முடியவில்லை. அதற்குக் காரணம் என்னவெனில், மக்களிடம் ஒழுக்கம் இராததே. தார்மிக விதிகளின்

சாரம் என்ன என்பதை நாம் கவனிப்போமாயின், மனித வர்க்கத்திற்கு நன்மை செய்ய முயற்சிப்பதுதான் மகோன்னதமான தருமம் என்பதை நாம் காண்போம். இந்த சாவியைக் கொண்டு தார்மிகப் பொக்கிஷ அறையைத் திறப்போமாயின், அதில் மற்றக் கொள்கைகள் எல்லாவற்றையும் காணலாம்.

'இந்தியன் ஒபினியன்' – 12—1—1907

## 14

# தார்மிக நடவடிக்கை எது?

ஒரு குறிப்பிட்ட செயலை தார்மிக நடவடிக்கை என்று எப்போது கூறமுடியும்? நமது நடவடிக்கைகளில் பெரும்பாலானவையும் தார்மிகமில்லாதவை. பெரும்பாலும், தற்போதைய சம்பிரதாயங்களைப் பின்பற்றியே நாம் காரியங்களில் ஈடுபடுகிறோம். அத்தகைய சம்பிரதாயம் அவசியமானதே. அத்தகைய சம்பிரதாய விதிகள் இராவிடில், அராஜகமான நிலை ஏற்பட்டு, சமூகம் ஸ்தம்பித்துவிடும். எனினும் சம்பிரதாயத்தையோ அல்லது பழக்க வழக்கங்களையோ அனுசரிப்பது தார்மிக வழியாகிவிடாது.

ஒரு தார்மிக நடவடிக்கை என்பது நமது சொந்த நடவடிக்கையாக இருக்க வேண்டும். அது நம் உள்ளத்திலிருந்து எழுந்ததாக இருக்கவேண்டும். நாம் யந்திரத்தைப் போல் செயல் புரிவோமாயின், அது தார்மிகப் பணியாகாது. யந்திரத்தைப் போல் செய்வதற்கும் மனப்பூர்வமாகச் செய்வதற்கும் உள்ள வேற்றுமையை நாம் மனத்தில் வைத்துக் கொள்ளவேண்டும். ஒரு குற்றவாளியை மன்னிப்பது, ஒரு மன்னரின் தார்மிகச் செயலாக இருக்கலாம். ஆனால், அந்த மன்னிப்பு உத்தரவை எடுத்துச் செல்லும் ஒருவன், மன்னரின் தார்மிகச் செயலில் யந்திரத்தைப் போல் ஒரு பங்கு எடுத்துக் கொண்டவனாக இருக்கிறான். எனினும், மன்னரின் உத்தரவை எடுத்துச் செல்லுவதை தனது கடமை என்று உணர்ந்து அவன் அவ்விதம் செய்வானாயின், அவனது செயலை ஒரு தார்மிக நடவடிக்கை எனலாம். அறிவோ அல்லது சிந்திக்கும் சக்தியோ இல்லாமல் ஒரு மரக்கட்டையைப் போல் நடந்து கொள்பவன், தார்மிகச் செயலின் பெருமையை எவ்வாறு அறிந்துகொள்ள முடியும்? சிற்சில சமயங்களில் ஒருவர் சம்பிரதாயத்தை மீறி, பிறருக்கு முற்றிலும் நன்மையளிக்கும் காரியத்தை மனப்பூர்வமாகச் செய்கிறார். வெண்டெல் பிலிப்ஸ்* அத்தகைய வீரர்களில்

* வெண்டெல் பிலிப்ஸ் (1811–1884) அமெரிக்காவில் சிறந்த பேச்சாளராகவும், சமூக சீர்திருத்தக்காரராகவும் இருந்ததுடன், நீக்ரோக்களின் நீண்ட கால அடிமைத்தனத்தை ஒழிக்கவும் பாடுபட்டார்.

ஒருவர். அமெரிக்க மக்களின் கூட்டத்தில் அவர் ஒரு சமயம் பின் வருமாறு கூறினார்: "நீங்களே உங்களுடைய சொந்த அபிப் பிராயங்களை உருவாக்கிக் கொள்ளவும், அவற்றை எடுத்துக் கூறவும் கற்றுக்கொண்டா லன்றி, என்னைப் பற்றி நீங்கள் என்ன எண்ணுகிறீர்கள் என்பதைக் குறித்து எனக்குக் கவலையில்லை." நம்முடைய மனச்சாட்சி என்ன கூறுகிறது என்பதில் நாம் அக்கறை கொள்ளும் போதுதான், நாம் தார்மிகப் பாதையில் அடிவைத்தவர்கள் என்று கருத முடியும். நம் உள்ளேயும் எல்லோருடைய உள்ளத்திலும் கடவுள் இருக்கிறார், நம்முடைய எல்லாச் செயல்களையும் அவர் பார்த்துக் கொண்டிருக்கிறார் என்பதில் நமக்கு நம்பிக்கை ஏற்படும் வரையில், நாம் அத்தகைய நிலையை எட்ட முடியாது.

நாம் செய்த ஒரு பணி நல்லதாக இருந்தால் மாத்திரம் போதாது; நன்மை செய்ய வேண்டும் என்ற நோக்கத்துடன் நாம் அதைச் செய்ததாக இருக்கவேண்டும். அதாவது, ஒரு செயல் தார்மிகமானதா, அல்லவா என்பது அதைச் செய்பவரின் நோக்கத்தைப் பொறுத்ததாகும். இரண்டு மனிதர்கள் ஒரே விதமான காரியத்தைச் செய்திருக்கலாம். எனினும், அவர்களில் ஒருவர் செய்தது தார்மிகமானதாகவும், மற்றொருவர் செய்தது அவ்விதம் அல்லாமலும் இருக்கலாம்.

உதாரணமாக, இதை எடுத்துக் கொள்வோம்: ஒருவர் ஏழைகள் மீது இரக்கம் கொண்டு அவர்களுக்கு மனப்பூர்வமாக உணவு அளிக்கிறார். மற்றொருவர், கௌரவத்திற்காகவோ அல்லது வேறு சுயநல நோக்கத்துடனோ ஏழைகளுக்கு உணவு அளிக்கிறார். அவர்கள் செய்யும் காரியம் ஒன்றே யாயினும், ஒருவரது செயல் தார்மிகமானது, மற்றவருடைய செயல் தார்மிக மல்லாதது. தார்மிக மல்லாதது என்பதற்கும் தருமத்திற்கு விரோதமானது என்பதற்கும் உள்ள வேற்றுமையை இங்கே வாச கர்கள் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். தார்மிக மான ஒரு நடவடிக்கையிலிருந்து எப்போதுமே நல்ல பலன்கள் ஏற்படும் என்பதற்கில்லை. எனினும், ஒரு செயல் நல்லதாக இருக்கவேண்டும், நல்ல நோக்கத்துடனும் இருக்க வேண்டும் என்பதில் மாத்திரம் நாம் அக்கறை எடுத்துக்கொள்ள வேண்டும். ஒரு நடவடிக்கையின் மூலம் பலன் ஏற்படுவது நம்மை மீறிய ஒரு விஷயமாகும். பலனைக் கொடுக்கும் சக்தி கடவுள் ஒருவருக்குத் தான் உண்டு. அலெக்சாண்டர் சக்கரவர்த்தியை 'மகா' அலெக் சாண்டர் என்று சரித்திராசிரியர்கள் குறிப்பிட்டுள்ளனர். அவர் திக்விஜயம் செய்து கொண்டு சென்ற இடத்திற் கெல்லாம் அவர் கிரேக்க மொழி, கிரேக்கர் பண்பாடு, கிரேக்கர் கலைகள், பழக்க வழக்கங்கள் எல்லாவற்றையும் கொண்டு சென்றார். அதன் காரணமாக இன்று நாம் கிரேக்க நாகரிகத்தின் சிறந்த பலன் களை அனுபவித்து வருகிறோம். ஆனால், அலெக்சாண்டர் அவ்வித மெல்லாம் செய்ததன் நோக்கம் என்னவெனில், வெற்றியும் புகழும் பெறவேண்டும் என்பதுதான். எனவே, அவரது

செயல்கள் தார்மிகமானவை என்று யார் கூறமுடியும்? அவர் மகா அலெக்சாண்டராக இருக்கலாம். எனினும், அவரது நோக்கம் தார்மிகமானது அல்ல.

மேலும், ஒரு நற்செயலை நல்ல நோக்கத்துடன் செய்வது மாத்திரம் போதாது; யாதொரு நிர்ப்பந்தமுமின்றி அது செய்யப் படவேண்டும். நான் எனது அலுவலகத்திற்கு நேரம் கடந்து சென்றால் என் வேலையை இழந்துவிடுவேன் என்ற பயத்தினால் நான் விடியற்காலம் எழுந்திருந்தால், அது தார்மிகமான ஒரு செயலாகாது. அது போலவே எனக்கு வசதிகள் இராதிருக் கையில், நான் எளிமையாகவும் ஆடம்பரமின்றியும் வாழ்ந்தால், அதில் தார்மிகச் சிறப்பு எதுவும் இல்லை. நான் செல்வவந்தனாக இருந்தும், என்னைச் சுற்றி உலகத்தில் மக்கள் பற்றாக்குறையி னாலும் போதிய வசதிகள் இராமலும் துன்பப்படுகிறார்கள் என்ப தற்காக நான் ஆடம்பரத்தையும் சுகபோகங்களையும் விட்டுவிட்டு எளிய வாழ்க்கையை நடத்தினால், அது தார்மிகமான ஒரு செய லாகும். அவ்விதமாகவே, ஒரு முதலாளி, தம்மிடம் வேலை செய்யும் சிப்பந்திகள் வேலையை விட்டுவிட்டுப் போய்விடுவார் களோ என்று பயந்து அவர்கள் விஷயத்தில் அனுதாபம் காட்டி னாலோ அல்லது அவர்களுக்கு அதிகச் சம்பளம் கொடுத்தாலோ அது சுயநலம் ஆகுமேயன்றி தார்மிகச் செயலாகாது. தாம் சுபிட்சமாகவும் செல்வத்துடனும் வாழ்வதற்கு தமது சிப்பந்திகள் தான் காரணம் என்பதை உணர்ந்து ஒருவர் அவர்களுடைய நலனை முக்கியமாகக் கருதி அவர்களிடம் அன்பு காட்டுவாராயின், அதை தார்மிகச் செயல் என்றே கூறவேண்டும். அதாவது, ஒரு நல்ல செயல் அச்சத்தையோ, நிர்ப்பந்தத்தையோ அடிப்படை யாகக் கொண்டிராமல் இருக்குமாயின், அதை தார்மிகச் செயல் எனலாம். யோக்கியப் பொறுப்புடன் இருப்பதுதான் லாபகர மானது என்பதற்காக அவ்விதம் இருப்பது சிறந்ததல்ல. ஷேக்ஸ்பியர் கூறியிருப்பதைப் போல், லாப நோக்கம் காரண மாக அன்பு காட்டுவது அன்பே அல்ல.

இந்த உலகில் லாப நோக்கத்துடன் செய்யும் ஒரு காரி யத்தை தார்மிகமானது என்று எவ்விதம் கூற முடியாதோ அது போலவே, மறு உலகில் ஆனந்தத்தை அடைய வேண்டும் என்ப தற்காகச் செய்யும் நற்செயலும் தார்மிகமானது அல்ல. நல்ல தைச் செய்ய வேண்டும் என்ற ஒரே நோக்கத்துடன் அதைச் செய்வதுதான் தார்மிகமானது. செயின்ட் பிரான்ஸிஸ் ஸேவியர் என்ற கிறிஸ்தவ மகான், தமது மனம் எப்போதும் தூய்மையாக இருக்க வேண்டும் என்று கடவுளைத் தீவிரமாகப் பிரார்த்தித்து வந்தார். மரணத்திற்குப் பின் உயர்ந்த நிலையை அடைய வேண்டும் என்பதற்காக அவர் கடவுளிடம் பக்தி கொண்டிருக்க வில்லை. கடவுளைப் பிரார்த்திப்பது மனிதனின் கடமை என்பதற் காகவே அவர் பிரார்த்தனை செய்து வந்தார். நரகத்தைக் கண்டு பயப்படக்கூடாது, சொர்க்கத்திற்கு ஆசைப்படவும் கூடாது என்பதே செயின்ட் தெரஸாவின் லட்சியமாகும். அச்சத்துடனோ

அல்லது தடுமாற்றத்துடனே நல்ல காரியங்களைச் செய்வதில் தார்மிகச் சிறப்பு எதுவுமில்லை. நல்ல காரியங்களைச் செய்ய வேண்டியது மனிதனின் கடமை என்ற உணர்ச்சியுடன் அவற்றைச் செய்ய வேண்டும்.

—'இந்தியன் ஒபீனியன்' – 19—1—1907

## 15

# தெய்விகமான சட்டம் உண்டா?

நடவடிக்கைகளின் தராதரத்தைக் குறித்து நாம் அடிக்கடி நமது முடிவுகளைக் கூறுகிறோம். சில நடவடிக்கைகள் நமக்குத் திருப்தியைக் கொடுக்கின்றன; மற்றும் சில அவ்விதம் கொடுப்பதில்லை. ஏதோ ஒரு நடவடிக்கை நல்லதா அல்லது கெட்டதா என்பது, அது நமக்கு பலனை அளிக்கக் கூடியதா அல்லது அபாயத்தை விளைவிக்கக் கூடியதா என்பதைப் பொறுத்ததல்ல. அதைப் பற்றி முடிவு செய்வதில் நாம் முற்றிலும் வேறு முறையை அனுசரிக்கிறோம். நமது மனத்தில் நாம் சில கொள்கைகளை வைத்துக் கொண்டிருக்கிறோம். அவற்றை அடிப்படையாகக் கொண்டே நாம் மற்றவர்களின் நடவடிக்கைகளைத் தீர்மானிக்கிறோம். ஒருவர் மற்றொருவருக்கு இழைக்கும் தவறினால் நமக்கு பாதகம் ஏற்பட்டாலும் ஏற்படாவிட்டாலும், அது தவறு என்பதை நாம் உணருகிறோம். சிற்சில சமயங்களில், தவறு செய்தவரிடம் நம் மனத்தில் அனுதாபத்தின் அறிகுறி தென்படுகிறது. இருப்பினும், அவர் செய்தது தவறு என்பதைப் பிரகடனம் செய்ய நாம் தயங்குவதில்லை. சில சமயங்களில் நமது தீர்ப்பு தவறாக இருக்கலாம்.. ஒரு மனிதரின் நோக்கம் என்ன என்பதை நாம் எப்போதுமே ஆழம் கண்டு பிடிக்க முடிவதில்லை. எனவே, அவரைப் பற்றி நாம் தவறாக முடிவு செய்து விடுகிறோம். சில சமயங்களில் தவறான நடவடிக்கைகளால் நமது சுயநல நோக்கம் நிறைவேறுவதாக இருப்பினும், அவை தவறு என்பதை நம் மனத்திற்குள் நாம் உணருகிறோம். எனவே, ஒரு நடவடிக்கை சரியானதா அல்லது தவறானதா என்பது, ஒரு மனிதனின் சுயநலனைப் பொறுத்ததல்ல என்பது ஒப்புக்கொள்ளப்பட்ட விஷயமாகும். அது அவனது விருப்பத்தைப் பொறுத்த விஷயமும் அல்ல.

தார்மிக சட்டங்கள் மாற்ற முடியாதவை. அபிப்பிராயங்கள் மாறுகின்றன; ஆனால் ஒழுக்கம் அல்லது தருமம் மாறுவதில்லை. நாம் கண்களைத் திறந்துகொண்டிருந்தால், சூரியனைப் பார்க்கிறோம்; கண்களை மூடிக்கொண்டால் சூரியனைப் பார்க்க முடிவதில்லை. எனவே, நமது பார்வையில்தான் மாறுதல் ஏற்படுகிறதே யொழிய, சூரியனைப் பொறுத்தவரையில் எவ்வித மாறு

தலும் இல்லை. தார்மிக சட்டங்கள் சம்பந்தமாகவும் அதுதான் உண்மையாகும். எது தார்மிகமானது என்பதை நாம் தெரிந்து கொள்ளாததற்குக் காரணம், நமது அறியாமையே ஆகும். நமது அறிவுக் கண் திறக்கப்பட்டுவிட்டால், அதை அறிந்துகொள்ளு வதில் நமக்குக் கஷ்டம் இராது. குறிப்பிட்ட நடவடிக்கைகள் சரியா அல்லது தவறா என்பதை மனிதர் பெரும்பாலும் சுயநல நோக்கத்துடனேயே கவனிக்கிறார்கள். அதன் விளைவாக அவர், தருமத்திற்கு விரோதமான, ஒழுக்கக் கேடான ஒரு செயலை தார் மிகமானது என்று கூற முற்படுகிறார்கள். தார்மிகப் பண்பாடு இன்னும் குழந்தைப் பருவத்தில்தான் இருந்து வருகிறது என்றே கூறவேண்டியிருக்கிறது. உண்மையை அறிந்துகொள்ள மனிதர் ஆர்வமுடையவர்களாக இருந்துவருகிறார்கள். எனினும் தார்மிக சட்டங்களை ஆராய்ச்சி செய்வதற்குப் பதிலாக அவர்கள் இது வரையில், பூமி சுற்றுவது போன்ற இயற்கையின் விதிகளை ஆராய் வதில் ஈடுபட்டிருக்கிறார்கள். இயற்கை விதிகளை ஆராய்ச்சி செய்வதில் மனிதருக்குள்ள ஆர்வம், தார்மிக விதிகளை ஆராய்ச்சி செய்வதிலும் ஏற்படுமாயின், தார்மிக சட்டங்கள் சம்பந்தமான பல்வேறு கருத்துகளையும் நாம் ஒன்றுசேர்க்க முடியும். ஆனால், விஞ்ஞான விஷயங்களில் இருந்துவரும் கருத்து வேற்றுமைகளைப் போல், தார்மிக விதிகளையொட்டி அவ்வளவு கருத்து வேற்று மைகள் இருக்க இடமில்லை.

மனிதரின் அபிலாஷைகளும் கருத்துகளும் ஒரு புறமிருக்க, தார்மிக சட்டங்கள் என்று சில விதிகள் இருக்கின்றன என்பதில் ஐயமில்லை. அரசாங்க சட்டங்கள் இருக்கும்போது, தார்மிக சட்டங்கள் ஏன் இருக்கக் கூடாது? தார்மிக சட்டங்கள் உண்டு என்பதை நாம் ஒப்புக்கொண்டுவிட்டால், பின்னர் அரசாங் கத்தின் சட்டங்களுக்குக் கீழ்ப்படிந்து நாம் நடப்பது போல தார்மிக சட்டங்களுக்கும் கீழ்படிந்து நடக்கவேண்டியது நமது கடமையாகிறது. அரசாங்கத்தின் சட்டங்களைக் காட்டிலும், வர்த்தக சட்டங்களைக் காட்டிலும் தார்மிக சட்டங்கள் முற்றிலும் வேறானவை, சிறந்தவை. வர்த்தக விதிகளையோ அல்லது அரசாங்க விதிகளையோ ஒருவர் புறக்கணிக்கலாம்; ஆனால் தார்மிக விதிகளைப் புறக்கணிக்க முடியாது, புறக்கணிக்கக் கூடாது.

தார்மிக விதிகளுக்கும் லௌகிக சட்டங்களுக்கும் இடையே மிகுந்த வேற்றுமை உண்டு. தார்மிக விதிகள் நமது இதயங் களில் நிலைபெற்றிருப்பவை. மனிதர், உண்மையில் தார்மிக விதிகளின்படி நடக்காவிட்டாலும்கூட, அவ்விதிகளை அனுசரித்து நடப்பதாகப் பாசாங்காவது செய்வார்கள். அதுதான் தார்மிக விதிகளின் பெருமையாகும்.

இந்த தார்மிக விதிகள் எங்கேயிருந்து வருகின்றன? இவை அரசாங்கத்தினால் நிர்ணயிக்கப்பட்டுள்ள விதிகள் அல்ல. ஏனெனில், ஒவ்வோர் அரசாங்கத்திலும் ஒவ்வொரு விதமான

விதிகளைக் காண்கிறோம். சாக்ரடீஸ், அவரது காலத்தில் அனுசரித்த தார்மிக விதிகளைப் பலர் எதிர்த்தார்கள். அப்படியிருந்தும் கூட, அவர் பின்பற்றிய தார்மிக விதிகள் அன்றும், இன்றும், என்றென்றும் நிலைத்திருப்பவை என்பதை உலகம் ஒப்புக்கொள்ளுகிறது. 'பொய்யையும் துவேஷத்தையும் உலகத்தின் சட்டமாக சைத்தான் எப்போதாவது பிரகடனம் செய்யுமாயின், அப்போது கூட நீதியும், நற்குணமும், சத்தியமும் தெய்வத்தன்மை வாய்ந்தவையாகவே இருந்துவரும்' என்று ராபர்ட் பிரௌனிங்* கூறுகிறார். இதிலிருந்து தார்மிக விதிகள் தான் மகோன்னதமானவை என்றும், தெய்விகமானவை என்றும் முடிவு செய்து கொள்ளலாம்.

யுகம் முடியும் வரையில் எந்த மக்களும், எந்தத் தனி நபரும் தார்மிக விதிகளைப் புறக்கணிக்க முடியாது. எவ்வளவு பயங்கரமான புயலாக இருந்தாலும், அதற்கு ஒரு முடிவு ஏற்பட்டே தீரும். அதுபோலவே, தார்மிக விதிகளைப் புறக்கணிக்கும் ஒழுக்கக் கேடான மனிதர் இறுதியில் அழிவையே தேடிக்கொள்வார்கள்.

அசைரியாவிலும் பேபிலோனியாவிலும் பாவ மூட்டை நிறைந்துவிட்டதால் அந்த சாம்ராஜ்யங்கள் சிதறுண்டு போயின. ரோம் ஒழுக்கக் கேடான முறைகளைப் பின்பற்ற முற்பட்டதால், மாபெரும் ரோமியத் தலைவர்களில் எவராலும் அதைக் காப்பாற்ற முடியவில்லை. எல்லாக் கலைகளிலும் தத்துவ ஞானத்திலும் சிறந்து விளங்கிய கிரேக்கர்களின் ஒழுக்கம் சீர்குலைந்ததால், அவர்கள் வீழ்ச்சியுற்றார்கள். பிரான்சில் ஒழுக்கச் சீர் கேட்டை எதிர்த்தே பெரும் புரட்சி ஏற்பட்டது. அமெரிக்காவின் கதையும் அப்படித்தான். அதர்மத்தை சிம்மாசனத்தில் ஏற்றி வைத்தால்கூட, அது அங்கே நீடித்திருக்க முடியாது என்று நல்ல மனிதரான வெண்டல் பிலிப்ஸ் அடிக்கடி கூறுவது வழக்கம்.

மர்மமான இந்த தார்மிக விதிகளைப் பின்பற்றும் மனிதன் சுபிட்சமாக வாழ்கிறான்; அவற்றிற்குக் கீழ்ப்படிந்து நடக்கும் குடும்பம் பாதுகாக்கப்படுகிறது; அவற்றிற்கு இணங்க வாழும் சமூகம் செழிப்புடனும் விளங்குகிறது. இந்த மகோன்னத விதிகளுக்குத் தலைவணங்கி நடக்கும் நாட்டில் சுதந்திரமும் ஆனந்தமும் நிலவுகின்றன.

—'இந்தியன் ஒபினியன்' – 26—1—1907

---

*ராபர்ட் பிரௌனிங் (1812–1889) உலகப் புகழ்பெற்ற பிரிட்டிஷ் கவிகளில் ஒருவர். அவர் எழுதிய கவிதைகள் அடங்கிய சிறந்த நூல்கள் இன்றும் பிரபலமாக விளங்கிவருகின்றன.

# 16

# தருமம் ஒரு மதம்

இந்த அத்தியாயத்தில் வரும் விஷயம் விசித்திரமானதாகத் தோன்றலாம். தருமமும் மதமும் ஒன்றுக்கொன்று முற்றிலும் வேறான விஷயங்கள் என்றே பொதுவாகக் கருதப்பட்டு வருகின்றன. அப்படியிருந்தும், இந்த அத்தியாயத்தில் ஒரு மதம் என்ற முறையில் தருமத்தைப்பற்றி குறிப்பிடப்படுகிறது. இதை எழுதியவரின் மனக்குழப்பமே இதற்குக் காரணம் என்று சில வாசகர்கள் நினைக்கலாம். தருமத்தை விட மதம் பெரியது என்று சிலர் கருதுகிறார்கள். தருமம் இருக்கும் இடத்தில் மதத்திற்கு அவசியம் இல்லை என்று மற்றும் சிலர் எண்ணுகிறார்கள். இதை எழுதியவரைப்பற்றி அந்த இரு சாராரும் மேலே குறிப்பிட்ட விதம் நினைக்கலாம். அவ்விரண்டும் நெருங்கிய தொடர்பு உடையவை என்பதைக் காட்டுவதே இதன் ஆசிரியரின் நோக்கமாகும். தார்மிக மதத்தையோ அல்லது மத சம்பந்தமான தருமத்தையோ பரப்பிவரும் சங்கங்கள், 'தருமத்தின் மூலம்தான் மதம்' என்பதில் நம்பிக்கை கொண்டுள்ளன.

மதம் இல்லாத தருமமோ அல்லது தருமம் இல்லாத மதமோ இருக்கலாம் என்பதே பொதுவான எண்ணமாக இருந்து வருகிறது. ஒழுக்கமில்லாத பல மனிதர்களைச் சந்திக்கிறோம். அவர்கள் பாவச் செயல்களைப் புரிந்து வந்தாலும், தாங்கள் சமயப்பற்று உள்ளவர்கள் என்று கூறிக் கொள்ளுகிறார்கள். அதற்கு மாறாக, காலஞ்சென்ற பிராட்லாவைப்* போன்ற ஒழுக்க சீலர்களும் இருக்கிறார்கள். எனினும் அவர்கள் தங்களை நாத்திகர்கள் என்று கூறிக்கொள்ளுவதில் பெருமையடைகிறார்கள்; மதம் என்ற பெயரைக் கண்டே ஓட்டம் பிடிப்பவர்களாக இருக்கிறார்கள். அந்த இரு விதமான கருத்துகளும் தவறானவையே. முதலாவதாகக் கூறப்பட்டவர்கள் செய்வது தவறு என்பதுடன், அவர்கள் அபாயத்தையும் விளைவிக்கக் கூடியவர்கள். ஏனெனில், மதம் என்ற போர்வைக்குள் இருந்து கொண்டு அவர்கள் ஒழுக்கக் கேடான காரியங்களைச் செய்கிறார்கள். எனவே அறிவின் அடிப்படையிலும், சாத்திர ரீதியாகவும், மதமும் ஒழுக்கமும் அதாவது தருமமும் ஒன்றே என்பதையும், ஒன்றாகவே இருக்கவேண்டும் என்பதையும் இந்த அத்தியாயத்தில் எடுத்துக் காட்ட விரும்புகிறோம்.

ஆரம்பத்தில் ஒழுக்கம் என்பது ஒரு சமூகம் பின்பற்றும் சம்பிரதாயமான வழக்கமாக இருந்தது; மனிதர்கள் சேர்ந்து வாழ்வதற்கான நிரந்தரமான வழியாக இருந்தது. நல்ல வழக்கங்கள் நீடித்து நிலைப்பதும், கெட்ட வழக்கங்கள் மறைந்து

*பிராட்லாவைப் பற்றி ஏற்கனவே காந்திஜி குறிப்பிட்டுள்ள விவரங்களை 8, 12, 14. 16, 156–ஆம் பக்கங்களில் காணலாம்.

ஒழிவதுமாக இருந்தன. கெட்ட வழக்கங்கள் மறைந்து ஒழியா விட்டால், அவை சமூகத்தை பலவீனப்படுத்தி இறுதியில் அதன் அழிவுக்கும் காரணமாகிவிடும். இன்றும் இதே நியதி இயங்கி வருவதைக் காண்கிறோம். மக்கள், யோசனையின்றி நல்ல பழக்க வழக்கங்களைப் பின்பற்றி வருவார்களாயின், அதை தருமம் என்றோ அல்லது மதம் என்றோ கூறமுடியாது. எனினும், இன்று உலகில் நல்ல வழக்கங்களையே ஒழுக்கம் என்று கூறிவருகிறார்கள்.

மனிதர்கள் சமயத்தைப்பற்றி, பெரிதும் மேலெழுந்தவாரியாகவே அறிந்து கொண்டிருக்கிறார்கள். மதத்தை, தங்களுக்கு ஏற்படக்கூடிய ஆபத்துகளைத் தடுப்பதற்கான ஒரு வழி என்றே பலரும் கருதுகிறார்கள். எனவே, பயத்தினால் ஏற்படும் பற்றுதல் காரணமாக செய்யப்படும் நற்செயல்களுக்கு மதம் என்ற கண்ணியமான பெயர் பொருந்தாது.

எனினும் நெஞ்சறிந்தும், ஆய்ந்தோய்ந்தும், உறுதியுடனும், லாப நஷ்டங்களையோ, வாழ்வதா வீழ்வதா என்பதையோ கவனியாமலும், தங்களையே தியாகம் செய்துகொள்ளத் தயாராக இருந்துகொண்டும் தருமமான வழியில் செல்லும் காலம் மனிதர்களின் வாழ்க்கையில் வருகிறது. அப்போதுதான் அவர்களுடைய வாழ்க்கையில் உண்மையான தருமமும் ஒழுக்கமும் ஊடுருவியிருக்கின்றன என்று கூற முடியும்.

மதத்தின் ஆதரவின்றேல் தருமம் நிலைத்திருக்க முடியாது. "மற்றொருவருக்கு சிறிதளவு தீங்கு செய்தால் எனக்கு நன்மை ஏற்படுகிறது. அப்படியிருக்க, சிறிதளவு தீங்கு செய்ய நான் ஏன் தயங்க வேண்டும்?" என்று ஒருவர் தனக்குத் தானே கூறிக் கொள்ளலாம். பிறருக்குத் தீங்கு செய்வதன் மூலம் கிடைக்கும் லாபம் லாபமேயல்ல, நிச்சயமாக ஒரு நஷ்டமேயாகும். எனினும், மனத்திற்குப் பிடிக்காத இந்த உண்மையை ஒருவர் எவ்விதம் அறிந்துகொள்ளும்படி செய்வது? ஜெர்மனியின் நலனுக்காகவே பிஸ்மார்க்* பல பயங்கரமான நடவடிக்கைகளில் ஈடுபட்டார். அவர் பிறருக்கு உபதேசித்துவந்த ஒழுக்கமும் தருமமும் அவரது வாழ்க்கையில் மறைந்துவிட்டன. ஏனெனில், கஷ்டங்கள் ஏற்பட்டபோது அவரால் தருமத்தைப் பின்பற்ற முடியவில்லை. அவரது தருமமானது மதத்தை அடிப்படையாகக் கொண்டிராததே அதற்குக் காரணமாகும். மதமாகிற தண்ணீரை ஊற்றினால்தான், தருமத்தின் விதை முளைத்துத் துளிர்விடும். அந்தத் தண்ணீர் இராவிட்டால், அது காய்ந்து கருகி இருந்த இடம் தெரியாமல் அழிந்துவிடும். எனவே, உண்மையான மதத்தில் உண்மையான தருமமும் அடங்கியிருக்கிறது என்ப

---

*பிஸ்மார்க் (1815–1898) ஜெர்மனியில் தோன்றிய ராஜதந்திரிகளிலேயே மிகச் சிறந்தவர். அவர் ஜெர்மனியில் பிரதம மந்திரி, வெளிநாட்டு மந்திரி முதலிய மற்றும் பல்வேறு உயர்ந்த பதவிகளை வகித்தவர். பல ஆண்டுகள் வரையில் ஜெர்மனியின் விதியே அவரது கையில்தான் இருந்தது.

தைப் பார்க்கிறோம். இதையே வேறு விதமாகக் கூறுவதாயின், மதமின்றி தருமத்தை, ஒழுக்கத்தை அனுசரிப்பது முடியாத காரியம். அதாவது, தருமத்தை ஒரு மதத்தைப் போலவே மேற் கொள்ளவேண்டும்.

மேலும், உலகத்தில் உள்ள பெரிய மதங்கள் வகுத்துள்ள தார்மிக அல்லது ஒழுக்க விதிகள் பெரிதும் ஒரே விதமானவையே. மதத்தின் அடிப்படை தருமமே என்று மதங்களை ஸ்தாபித்தவர்களும் விளக்கியிருக்கிறார்கள். அஸ்திவாரத்தை அப்புறப்படுத்திவிட்டால், மேல் கட்டடம் இடிந்துவிடும். அது போலவே ஒழுக்கத்தை அழித்துவிட்டால், அதன்மீது நிர்மாணிக் கப்பட்டுள்ள மதமும் தவிடுபொடியாகிவிடும்.

தருமத்தை மதம் என்று கூறுவதில் தவறே இல்லை. ''எனது கடவுள் நீதிதான், வேறு யாரும் இல்லை'' என்று டாக்டர் காயிட் அவரது பிரார்த்தனையில் கூறுகிறார். நாம் கத்தியை மறைத்து வைத்துக் கொண்டே கடவுளுடைய பெயரை ஜபித்தால், அவர் நமது பிரார்த்தனைக்குச் செவிகொடுத்து நமக்கு உதவி புரிய முன் வரமாட்டார் என்பதை, நாம் சிந்தித்துப் பார்த்தால் உணர்ந்து கொள்ளுவோம். ஒருவர் கடவுள் இருக்கிறார் என்பதில் நம்பிக்கை உள்ளவர்; எனினும் கடவுளின் கட்டளைகளையெல்லாம் மீறி நடந்து கொள்ளுகிறார். மற்றொருவர் கடவுள் என்ற பெயரை ஒப்புக்கொள்ளுவதில்லை; ஆனால், கடவுள் கட்டளைகளின்படி நடந்து கொள்ளுகிறார்; நற்செயல்களின் மூலம் கடவுளை வழிபடு கிறார். இவ்விருவரில் யாரை சமயப்பற்றும் ஒழுக்கமும் உள்ளவர் என்று நாம் கூறுவோம்? இதைப் பற்றி ஒரு விநாடி கூட யோசிக்கமாட்டோம். இரண்டாவதாகக் கூறப்பட்டவரையே சமயப் பற்றும் ஒழுக்கமும் உடையவர் என்று நாம் தயக்கமின்றி கூறுவோம்.

—'இந்தியன் ஒபினியன்' – 2—2—1907

# 17

# சமய ஒழுக்கம்

**நா**மாக வலுவில் நல்ல, நேர்மையான பணிகளைச் செய்வதே சிறந்தது. காற்றினால் கலைக்கப்பட்ட மேகங்கள் அங்குமிங்கும் ஓடுவதைப் போல, சிறந்த மனிதன் தடுமாற மாட்டான். அவன் உறுதியாக நின்று, தனக்கு நியாயமானதென்று தோன்று வதையே செய்வான்.

எனினும், நமது உணர்ச்சிகளுக்கு சூழ்நிலையே காரணம் என் பதை நாம் உணர்ந்து கொள்ளவேண்டும். நமது சொந்த வாழ்க் கையை நடத்தும் விஷயத்தில் நாம் நமக்கு எஜமானர்கள் அல்ல

என்பதை அறிவோம். வெளியே உள்ள நிலைமைக்குத் தகுந்த வாறு நம்மை நாம் சீர்படுத்திக்கொள்ள வேண்டியிருக்கிறது. உதாரணமாக, இமயமலைக் குளிர் தாங்க முடியாமல் இருக்கும் ஒரு பிரதேசத்தில், நாம் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் குளிரி லிருந்து நம்மைப் பாதுகாத்துக் கொள்வதற்காக போதிய உடை கள் உடுத்திக் கொண்டு தீரவேண்டியிருக்கிறது.

இச் சந்தர்ப்பத்தில் இரண்டு கேள்விகள் எழுகின்றன: நாம் ஒழுக்கத்துடன் இருப்பதற்கு சூழ்நிலையின் செல்வாக்கு காரண மாக இருக்கிறதா? அல்லது, நம்மைச் சுற்றியுள்ள சக்திகளுக்கும் ஒழுக்கத்திற்கும் எவ்வித சம்பந்தமும் இல்லையா?

மற்ற ஜீவராசிகளைப் போல் மனிதனுக்கும் தன்னைத்தான் பாதுகாத்துக் கொள்ளவேண்டும் என்ற உணர்ச்சி இயல்பாகவே இருக்கிறது என்று டார்வின் கூறுகிறார். வாழ்க்கைப் போராட் டத்தைச் சமாளிப்பவர்களையே வெற்றிபெற்றவர்களாகக் கருத வேண்டும் என்றும் அவர் கூறுகிறார். அதாவது, வாழ்க்கைப் போராட்டத்தைச் சமாளிக்கத் தகுதியற்றவர்கள், இந்த உலகத் திலிருந்து மறைய வேண்டியதுதான் என்பதே அவரது கருத்தா கும். அப்போராட்டத்தில் வெற்றி பெறுவது, வெறும் உடல் பலத்தை மாத்திரம் பொறுத்ததல்ல என்றும் அவர் கூறுகிறார்.

உதாரணமாக, மனிதனையும் கரடி அல்லது எருமை மாட்டை யும் ஒப்பிட்டுப் பார்ப்போம். உடல் பலத்தில், கரடியும் எருமை மாடும் மனிதனைவிட உயர்ந்தவை. அவற்றிற்கும் மனிதனுக்கும் போர் நடக்குமாயின், மனிதனே நிச்சயமாகத் தோல்வியடை வான். எனினும், அவற்றைவிட மனிதன்தான் உயர்ந்தவன். ஏனெ னில், மனிதன் அறிவு படைத்தவனாக இருப்பதே அதற்குக் காரண மாகும். அதுபோலவே, மனிதர்கள் அடங்கிய பல்வேறு இனத் தினரையும் நாம் ஒப்பிட்டுப் பார்க்கமுடியும். யுத்தத்தில் அதிகத் தொகையோ, அல்லது உடல் வலிமையோ உள்ள சிப்பாய்கள் அடங்கியவர்களின் கட்சி வெற்றி பெறுவதில்லை; சிப்பாய்கள் குறைந்த தொகையினராயினும், போர்த் தந்திரம் வாய்ந்த சிறந்த தளபதிகள் இருக்கும் பக்கமே வெற்றியடைகிறது.

இந்த உதாரணங்களிலிருந்து அறிவே உயர்ந்தது என்பதை நாம் காண்கிறோம்.

உடல் பலத்தையும் அறிவு பலத்தையும் காட்டிலும் கூட, ஆன்மிக பலம் மேலானது என்பதை டார்வின் மேற்கொண்டு எடுத்துக் காட்டியுள்ளார். ஒழுக்கம் இல்லாதவர்களைக் காட்டிலும் ஒழுக்கமுள்ளவர்கள் அதிக காலம் வாழ்வதையும் நாம் காண் கிறோம். உடல் பலம் போதுமானது என்று டார்வின் கற்பித்த தாகச் சிலர் கருதுகின்றனர். மேலெழுந்த வாரியாக சிந்திப்பவர் களே, ஒழுக்கம் உபயோகமற்றது என்பதில் நம்பிக்கை வைப் பார்கள். ஆனால், இது டார்வின் கருத்து அல்ல. மனிதர்களில், ஒழுக்கமில்லாத இனத்தைச் சேர்ந்தவர்கள் இருந்த இடம் தெரி

யாமல் அடியோடு மறைந்துவிட்டார்கள் என்பதை, மனிதனின் ஆரம்ப கால சரித்திரத்திலிருந்து நாம் அறிகிறோம். இன்றுகூட ஒழுக்கமற்ற இனத்தினர் நாளுக்கு நாள் மறைந்துவருவதைக் காண்கிறோம்.

மனித இனத்தைப் பாதுகாக்க சாதாரண ஒழுக்கமாவது அவசியம் என்பதற்குச் சில உதாரணங்களை எடுத்துக் கொள்ளுவோம். சாந்தமான மனநிலை ஒழுக்கத்தின் ஓர் அம்சமாகும். பலாத்காரமான முரட்டுக் குணம் உள்ளவர்கள், வாழ்க்கையில் முன்னேறுவதாகத் தோன்றலாம். ஆனால் சிறிது சிந்தனை செய்வோமாயின், பலாத்காரமாகிய வாள் திரும்பவும் கீழே விழும் போது அத்தகையோருடைய கழுத்திலேயே அது விழும் என்பதை நாம் அறிவோம். தீய பழக்கங்களிலிருந்து விடுதலை பெற்றிருப்பது, ஒழுக்கத்தின் மற்றோர் அம்சமாகும். இங்கிலாந்தில் முப்பது வயதில் மிதமிஞ்சிக் குடிப்பவர்கள், மேலும் பதின்மூன்று அல்லது பதினான்கு ஆண்டுகளுக்குமேல் வாழ்வதில்லை என்று புள்ளி விவரங்களிலிருந்து நமக்குத் தெரிகிறது. ஆனால், வாழ்க்கையில் மதுபானமே அருந்ாதவர்கள் எழுபது வயது வரையில் வாழ்கிறார்கள் என்றும் கணக்கு எடுத்திருக்கிறார்கள்.

புலனடக்கமும் ஒழுக்கத்தின் மற்றோர் அம்சமாகும். துன்மார்க்கத்தில் செல்வோர் அற்பாயுளில் இறந்துவிடுகிறார்கள் என்றும் டார்வின் எடுத்துக் காட்டியுள்ளார். அவ்விதம் நெறி தவறியவர்களுக்குக் குழந்தைகள் பிறப்பதில்லை; குழந்தைகள் பிறந்தாலும் அவை பலவீனமாக இருக்கின்றன. துன்மார்க்கர்கள் மன பலம் குன்றி, நாளாவட்டத்தில் பைத்தியக்காரர்களைப் போல் தோற்றமளிக்கின்றனர்.

பல்வேறு சமூகங்களையும் சேர்ந்தவர்களின் ஒழுக்கங்களைப் பற்றி நாம் பரிசீலனை செய்தால், எல்லா இடங்களிலும் மேலே குறிப்பிட்ட அதே நிலைமையையே காண்கிறோம். அந்தமான் தீவுகளில் உள்ள ஆடவர்கள், ஒரு குழந்தை பிறந்து அது தாய்ப் பாலை மறந்தவுடன் தங்கள் மனைவிமாரைக் கைவிட்டுச் சென்று விடுகிறார்கள். அவர்கள் அவ்வளவு சுயநலம் உள்ளவர்களாக இருக்கின்றனர். அதன் விளைவாக, அவர்களின் இனமே தேய்ந்து மறைந்து வருகிறது. பிறருக்கு உதவி புரியும் குணம் அவர்களிடையே சிறிதும் இல்லை. பிறருக்கு உதவி புரியும் இயல்பு மிருகங்களுக்குக் கூட ஓரளவு இருக்கிறது. மெலிந்த பறவைகள் கூட தங்கள் குஞ்சுகளுக்கு அபாயம் ஏற்படுவதாக இருந்தால், துணிச்சலுடன் நின்று அவற்றைக் காப்பாற்ற முற்படுகின்றன. மிருகங்களிடையே தன்னலத் தியாகம் இராவிடில், உலகில் புற்களையும் விஷப் பூண்டுகளையும் தவிர வேறெந்த உயிர்ப் பிராணியும் இராமற்போய்விடும். மனிதனுக்கும் மற்ற மிருகங்களுக்கும் உள்ள முக்கிய வேற்றுமை என்னவெனில், மிருகங்களைக் காட்டிலும் மனிதனுக்கு தன்னலத் தியாக உணர்ச்சி அதிகமாக இருப்பதே. மனிதன் தன் மனபலத்திற்குத் தகுந்தவாறு பிறருக்காக, அதாவது

தன் குழந்தைகளுக்காக, தன் குடும்பத்திற்காக, தனது சமூகத்திற்காக, தனது தேசத்திற்காக, தனது சொந்த வாழ்க்கையைத் தியாகம் செய்திருக்கிறுன்.

எல்லாவற்றையும் காட்டிலும் ஆன்மிக பலமே உயர்ந்தது என்பதை டார்வின் தெளிவாகக் காட்டியிருக்கிறுர். இன்றைய ஐரோப்பியர்களைக் காட்டிலும் பண்டைய கிரேக்கர்கள் அதிக அறிவு வாய்ந்தவர்களாக இருந்தார்கள். ஆனால், கிரேக்கர்கள் ஒழுக்கத்தைக் கைவிட்டு விட்டதால், அவர்களுடைய அறிவே அவர்களின் விரோதியாகியது. அவர்கள் இருந்த அடையாளம் கூட இன்று தென்படவில்லை. தேசங்கள் செல்வ பலத்தினுலோ அல்லது ராணுவ பலத்தினுலோ நிலைத்திருப்பதில்லை; நீதி ஒன்றினுல்தான் அவை நிலைத்திருக்கின்றன. எனவே, மனிதன் இந்த உண்மையை மனத்திற் கொண்டு தன்னலத் தியாகத்தையும், பிறருக்கு உதவி செய்யும் வழக்கத்தையும் அனுசரிக்கவேண்டும். தன்னலத் தியாகம்தான் தருமத்தின் சிறந்த அம்சமாகும்.

—'இந்தியன் ஒபினியன்' – 9—2—1907

# 18

# தருமமும் அதன் பலன்களும்

தேச பக்தி, உண்மை பேசுதல், அன்பு, பெருந்தன்மை போன்ற மற்ற குணங்கள் ஒரு மனிதனின் சொந்த விஷயங்கள் அல்ல. அவற்றினுல் சமூகத்திற்கும் நன்மை ஏற்படுகிறது. உதாரணமாக, நாம் உண்மை பேசுவதால் பிறருக்குத் தீங்கு நேராமல் தடுக்கிறேம். அது போலவே, பொய் கூறுவதன் மூலம் ஒருவரை வஞ்சித்து அவருக்குத் தீங்கு நேரும்படி செய்கிறேம்.

அது போலவே, ஒருவர் சில சட்டங்களையோ அல்லது வழக்கங்களையோ கண்டித்து சமூகத்திலிருந்து விலகிக் கொள்ளுவாராயின், அப்போதுகூட அவரது செய்கைகள் சமூகத்தைப் பாதிக்கின்றன. அவர் கற்பனைக் கொள்கைகளாகிய உலகத்தில் வாழ்கிறுர். அந்த உலகம் இன்னும் பிறக்கவில்லை என்பதைப் பற்றி அவர் கவலைப்படவில்லை. சமூகத்தின் நிலை தரக் குறைவாக இருக்கிறது என்ற வெறும் எண்ணமே, அதை எதிர்த்து நிற்கும்படி அவரைத் தூண்டுகிறது. மற்றவர்களுடைய வாழ்க்கை முறையைத் தமது வாழ்க்கை முறைக்கு உகந்தவாறு மாற்ற அவர் இடைவிடாது முயற்சிப்பார். இவ்விதமாகத் தான் தீர்க்கதரிசிகள், உலகத்தின் சக்கரங்கள் திசை மாறிச் செல்லும்படி செய்திருக்கிறுர்கள்.

மனிதன் தன்னலம் உள்ளவனாக இருந்து, மற்றவர்களின் நலனைப் பற்றிக் கவலைப்படாவிட்டால், அவன் மிருகத்தைக் காட்டிலும் மேம்பட்டவன் அல்ல; மிருகத்தை விட இழிவான வனே. அவன் தன் குடும்பத்தின் நலனில் அக்கறை கொண்டு அதைப் பராமரிப்பதனாலேயே, அவன் மிருகத்தைக் காட்டிலும் மேலானவனாக இருக்கிறான். குடும்பத்தைப் போலவே தனது தேசம் அல்லது சமூகத்தில் அவன் அக்கறை கொள்ளுவானாயின், இன்னும் அதிகமாக மனிதத் தன்மை உள்ளவனாகிறான். மானிட வர்க்கத்தையே அவன் தனது குடும்பமாகக் கருதும்போது, அவன் மிகவும் உயர்ந்த நிலையை அடைகிறான். எனது மனை வியோ அல்லது என் சமூகத்தைச் சேர்ந்த ஒருவரோ காயமடைந் தால் நான் காட்டும் அனுதாபத்தை, அந்த எல்லைக்கு வெளியில் உள்ளவர் விஷயத்தில் நான் காட்டாவிடில், மானிட வர்க்கத்தினி டம் எனக்கு அனுதாபம் இல்லை என்றே கூற வேண்டும். என் மனைவிக்காகவும், குழந்தைகளுக்காகவும், சமூகத்திற்காகவும் நான் காட்டும் அனுதாப உணர்ச்சி, மற்றவர்கள் சம்பந்தப்பட்ட வரையில் எனக்கு ஏற்படாவிடில், என்னை ஒரு சுயநலக்காரன் என்றே கூறலாம்.

ஒவ்வொரு மனிதரிடத்திலும் நமக்கு அனுதாபம் ஏற்படா விடில், தார்மிக மதத்தை நாம் அனுசரிக்கவில்லை, அறிந்து கொள் ளவுமில்லை என்றே கூறவேண்டும். உயர்ந்த தருமம் என்பது எல்லா மனிதர்களையும் தழுவியதாக இருக்க வேண்டும். நம் மிடம் உறவு கொண்டாட ஒவ்வொரு மனிதருக்கும் உரிமை யுண்டு. அது போலவே ஒவ்வொரு மனிதருக்கும் தொண்டு செய்ய வேண்டியது நமது கடமையாகும். மற்றவர்களிடமிருந்து எவ்வித உரிமையும் கோர நமக்கு அதிகாரமில்லை என்ற எண்ணத் துடன் நாம் நடந்துகொள்ள வேண்டும். உலகப் போராட் டத்தில் அவ்விதம் நடந்துகொள்ளுவோர், காலால் மிதிக்கப் பட்டுவிடுவார்கள் என்று வாதிக்கலாம். ஆனால், அவ்விதம் வாதிப்பது அறியாமையேயாகும். ஏனெனில், மற்றவர்களுக்குத் தொண்டு செய்வதற்காகத் தம்மை மனப்பூர்வமாக அர்ப்பணம் செய்து கொள்ளுவோரை, கடவுள் எப்போதும் காப்பாற்றுகிறார் என்பதே உலகமெங்கும் ஏற்பட்டுள்ள அனுபவமாகும்.

தார்மிக நிலையை அடிப்படையாகக் கொண்டு கவனித்தால், எல்லோரும் சமமானவர்களே. எனினும், எல்லோரும் சமம் என் றால், எல்லோருக்கும் ஒரே விதமான அந்தஸ்தும் கடமையும் உண்டு என்று பொருள் கொள்ளக் கூடாது. நான் ஓர் உயர்ந்த பதவியை வகித்தால், அதன் சம்பந்தமான கடமைகளையும் பொறுப்புகளையும் வகிக்கும் திறமையும் எனக்கு உண்டு என் பதே அதன் அர்த்தமாகும். எனவே, உயர்ந்த பதவியை வகிக் கிறேன் என்பதற்காக நான் இறுமாப்பு அடைந்து, சிறிய பொறுப்புகளை வகிப்போர் என்னைவிடத் தாழ்ந்தவர்கள் என்று நான் எண்ணக் கூடாது. சமத்துவம் என்பது மனத்தைப்

பொறுத்த விஷயமாகும். நமது மனம் அத்தகைய நிலையை அடையும் வரையில், நாம் பிற்போக்கான நிலையிலேயே இருப்போம்.

இந்த தார்மிக நிலையின்படி பார்ப்போமாயின், எந்த ஒரு தேசமும் சுயநல நோக்கத்துடன் மற்றொரு தேசத்தை ஆட்சி புரியக் கூடாது. அமெரிக்கர்கள் அந்த நாட்டில் உள்ள ஆதிகுடிகளை தாழ்ந்த ஒரு நிலைக்குக் கொண்டு வந்து அவர்களை ஆட்சி புரிவது தருமத்திற்கு விரோதமாகும். நாகரிக இனத்தைச் சேர்ந்தவர்கள் நாகரிகமற்ற காட்டுமிராண்டிகளுடன் தொடர்பு கொள்ளுவார்களாயின், அவர்களையும் தங்களுடைய அந்தஸ்திற்கு உயர்த்தக் கடமைப்பட்டிருக்கிறார்கள். மன்னர், மக்களின் ஊழியரேயன்றி எஜமானர் அல்ல. அது போலவே, அதிகாரிகள் மக்கள் மீது அதிகாரம் செலுத்துவதற்காகப் பதவி வதிக்கவில்லை; மக்கள் மகிழ்ச்சியுடன் வாழும்படி செய்வதே அவர்களுடைய கடமையாகும். ஒரு ஜனநாயக அரசாங்கத்தைச் சேர்ந்தவர்கள் சுயநலவாதிகளாக இருப்பார்களாயின், அந்த நாடு நலன் பெற்று விளங்க முடியாது.

இந்த நியதியின்படி, ஓர் அரசாங்கத்தில் அல்லது சமூகத்தில் பலம் வாய்ந்தவர்களாக இருப்போர் பலவீனர்களைப் பாதுகாக்க வேண்டுமேயன்றி கொடுமைப்படுத்தக் கூடாது. அத்தகைய ஓர் அரசாங்கத்தின் கீழ் யாரும் பட்டினி கிடக்கும்படி நேராது; செல்வம் சிலரிடம் மாத்திரம் அதிகமாகக் குவிந்து கிடக்காது. நமது அண்டை அயலார் துன்பத்தில் ஆழ்ந்திருக்கும்போது, நாம் மாத்திரம் ஒருபோதும் இன்ப வாழ்வு நடத்த முடியாது. இந்த உயர்ந்த தருமத்தைப் பின்பற்றுவோர் ஒரு போதும் அதிகமான செல்வத்தைத் திரட்ட முடியாது. இந்த உயர்ந்த தருமத்தை ஒரு சிலர்தான் பின்பற்ற முடியுமென்று எண்ணி, தருமத்தில் பற்றுடையவர் அஞ்ச வேண்டிய அவசியமில்லை. தருமத்திற்குத்தான் அவர் எஜமானரேயன்றி, தருமத்தின் பலன்களுக்கு அவர் எஜமானர் அல்ல. தருமத்தை அவர் அனுசரிக்காவிடில், அவர் குற்றவாளி என்று கருதப்படுவார். அவரது ஒழுங்கீனமான நடத்தையால் சமூகத்திற்கு எவ்விதத் தீங்கும் நேராவிடில், அவர் மீது யாரும் குற்றம் கண்டு பிடிக்க மாட்டார்கள்.

—'இந்தியன் ஒபினியன்' – 16—2—1907

# 19

# மர்மமான எதிரொலி

'இதற்கு நான்தான் பொறுப்பாளி' என்பதோ அல்லது "இது எனது கடமை' என்பதோ, மனத்தை உருக்கும் ஆச்சரிய கரமான ஓர் எண்ணமாகும். ஒரு மர்மமான எதிரொலி பின்வருமாறு கூறுவதுபோல் தோன்றுகிறது :

'மனிதப் பிறவி எடுத்த உனக்கே இந்தக் கடமை அளிக்கப் பட்டிருக்கிறது. தோல்வியாயினும் வெற்றியாயினும், இரண்டும் உன்னையே சேரும். உன்னைப் போல் உலகத்திலேயே யாருமில்லை. ஏனெனில், ஒரேவிதமான இரண்டு பொருட்களை உலகில் எவ் விடத்திலும் இயற்கை சிருஷ்டித்ததில்லை. உலகில் வேறு எவரும் செய்ய முடியாத கடமை உனக்கு இருக்கிறது. நீ அதைச் செய்யாவிடில், உனது நஷ்டக் கணக்கிலேயே அது சேர்க்கப் படும்.'

'நான் செய்ய வேண்டிய கடமை என்ன?' இந்தக் கேள்விக் குப் பதிலாக யாராவது கீழ்க்கண்ட மேற்கோளை எடுத்துக் கூற லாம் : 'மனிதனை, கடவுள் என்று கூருதே. ஏனெனில், மனிதன் கடவுள் அல்ல. இருந்தாலும் கடவுளின் மகத்துவத்திலிருந்து மனிதன் வேருனவன் அல்ல.'

அவர் மேலும் இவ்விதம் பதில் அளிக்கலாம் : 'ஆண்டவனின் அருள் ஒளியில் நான் ஒரு கதிர் என்ற நம்பிக்கையில் உறுதியுடன் நிலைத்திருப்பதே எனது கடமை.' மற்றவர்கள் விஷயத்தில் அனுதாபம் கொள்ளுவதும், அவர்களைச் சகோதரர்களைப் போல் எண்ணுவதுமே மனிதனின் கடமை என்று மற்ருெருவர் பதில் கூறலாம். பெற்ருேரைப் பேணுவதும், மனைவியையும் குழந்தை களையும் பராமரிப்பதும், சகோதரன் சகோதரி அல்லது நண்பன் முதலியோரிடத்தில்அன்புடன் நடந்து கொள்ளுவதுமே மனிதனின் கடமை என்று வேருெருவர் கூறலாம். இந்த உயர்ந்த குணங்களு டன் திகழ்வதும், நான் பிறருக்கு மரியாதை காட்டுவதைப் போல எனக்கு நானே மரியாதை காட்டுவதும் எனது கடமையாகும். என்னை நானே அறிந்து கொள்ளாதவரையில், மற்றவர்களை நான் எவ்வாறு அறிந்து கொள்ள முடியும்? நான் அறியாதவர்களுக்கு நான் எவ்விதம் மதிப்புக் கொடுக்க முடியும்? பிறருடன் தொடர் புள்ள விஷயங்கள் சம்பந்தப்பட்டவரையில் மாத்திரமே நாம் ஒழுங்காக நடந்து கொள்ளவேண்டுமேயன்றி, நம் சொந்த விஷ யத்தில் நாம் எப்படி வேண்டுமாயினும் நடந்து கொள்ளலாம் என்று பலரும் கருதுகின்றனர். இது தவருன கருத்தாகும். இந்த உலகில் யாரும் தமது விருப்பப்படி நடந்துகொள்ள முடியாது. ஏனெனில், அவ்விதம் நடந்து கொள்ளுவோர் தண்டனையிலிருந்து தப்ப முடியாது.

நமக்கு நாமே செய்ய வேண்டிய கடமை என்ன என்பதை இப்போது பார்ப்போம். முதலில் நமது சொந்தப் பழக்க வழக்கங்களை எடுத்துக் கொள்ளுவோம். நமது பழக்க வழக்கங்கள் நம்மைத் தவிர வேறு யாருக்கும் தெரியாது. அவற்றிற்கு நாம்தான் பொறுப்பாளி. ஏனெனில், அவை நமது ஒழுக்கத்தைத் தான் பாதிக்கின்றன. அது மாத்திரமல்ல. அவை பிறரையும் பாதிக்கின்றன. ஒவ்வொருவரும் தமது சொந்த உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்தி, ஆன்மாவையும் உடலையும் பரிசுத்தமாக வைத்துக் கொள்ளவேண்டியது கடமையாகும். 'ஒரு மனிதனின் சொந்தப் பழக்க வழக்கங்கள் என்ன என்பதை எனக்குத் கூறுங்கள். அவர் இன்றிருக்கும் நிலையையும், எதிர்காலத்தில் அவர் எப்படி இருப்பார் என்பதையும் உங்களுக்கு நான் கூறுகிறேன்' என்று ஒரு பிரமுகர் கூறியிருக்கிறார். எனவே நாம் நமது ஆசைகளையெல்லாம் கட்டுப்படுத்திக் கொள்ளவேண்டும். நாம் அளவுக்கு அதிகமாகக் குடிக்கவோ அல்லது சாப்பிடவோ கூடாது. அவ்விதம் நாம் செய்வோமாயின் நாம் நமது பலத்தையும் நற்பெயரையும் இழந்துவிடுவோம். சிற்றின்ப ஆசைகளைத் தவிர்க்காதவர்கள் உலகத்தில் ஒரு காலத்திலும் வெற்றி பெற முடியாது; அவர்கள் தமது உடல், மனம், அறிவு, ஆன்மா ஆகியவற்றைக் காப்பாற்றிக்கொள்ளவும் முடியாது.

ஒருவர் தமது உணர்ச்சிகளைத் தூய்மையாக வைத்துக் கொள்ள வேண்டியதுடன், அவற்றை எவ்விதம் பலன் தரத்தக்க முறையில் உபயோகிப்பது என்பதையும் ஆலோசிக்க வேண்டும். எவரும் வாழ்க்கையில் ஓர் உறுதியான லட்சியமுடையவராக இருக்க வேண்டும். நமது வாழ்க்கையின் லட்சியத்தை நாம் கண்டு கொண்டு, அதற்கிணங்க உறுதியுடன் நடந்து கொள்ளவில்லையாயின், நடுக்கடலில் சுக்கான் இல்லாத கப்பலைப்போல் நாம் தத்தளிக்க நேரும். பின்னர் நாம் தார்மிகப் பாதையில் தடுமாறுவோம். மானிட வர்க்கத்திற்குத் தொண்டு புரிவதும், அதன் நிலையை அபிவிருத்தி செய்வதில் பங்கு எடுத்துக் கொள்ளுவதுமே வாழ்க்கையில் மனிதனின் மகோன்னதமான கடமையாகும். இது தான் உண்மையான வழிபாடு, உண்மையான பிரார்த்தனை. கடவுள் விதித்த வேலையைச் செய்பவனே தெய்வத்தன்மை வாய்ந்த மனிதனாவான். கடவுளின் பெயரை ஜபித்துக் கொண்டு மோசடி செய்யும் போலி வேடதாரிகள் ஏராளமாக இருக்கிறார்கள். ஒரு கிளிப்பிள்ளை கடவுளின் பெயரை அடிக்கடி கூறுகிறது என்பதற்காக, அது தெய்வத்தன்மை வாய்ந்தது என்று யாரும் கூறமாட்டார்கள். மனித வாழ்க்கையின் உயர்ந்த ஒழுங்கிற்கு ஒவ்வொருவரும் தங்கள் பங்கைச் செய்ய முடியும். இந்த லட்சியத்தை மனத்திற் கொண்டே ஒரு தாய் தன் குழந்தையை நியாயமான முறையில் பேணி வளர்க்கலாம்; ஒரு வக்கீல் தமது தொழிலைச் செய்து வரலாம்; ஒரு வர்த்தகர் தமது வியாபாரத்தைச் செய்யலாம்; ஒரு தொழிலாளி தனது தொழிலைச் செய்யலாம். அத்தகைய உறுதியான லட்சியமுள்ள ஒருவர் தரும மார்க்கத்தி

லிருந்து ஒரு காலத்திலும் பிறழமாட்டார். அவர் அப்பாதையி லிருந்து பிறழ்வாராயின், மானிட வர்க்கத்தை உத்தாரணம் செய்ய வேண்டும் என்ற லட்சியத்தை அவரால் நிறைவேற்ற முடியாது.

இவ்விஷயத்தை இன்னும் சிறிது விரிவாக நாம் ஆலோசிப் போம். நமது வாழ்க்கை முறை, மானிட வர்க்கத்தின் வாழ்க் கையை அபிவிருத்தி செய்வதாக இருக்கிறதா அல்லது மேலும் மோசமாக்கிவிடுவதாக இருக்கிறதா என்பதை இடைவிடாது பரிசீலனை செய்ய வேண்டியது நமது கடமையாகும். உதாரண மாக, வியாபாரத்தில் தம்மையோ அல்லது பிறரையோ மோசம் செய்கிறேனா என்று ஒரு வியாபாரி தன்னைத் தானே கேட்டுக் கொள்ள வேண்டும். இந்த முறையைப் பின்பற்றுவதாயின், வக்கீல் தமது கட்சிக்காரர் கொடுக்கும் பணத்தைக் காட்டிலும் கட்சிக்காரரின் நலனிலேயே அதிக அக்கறை கொள்ள வேண் டும்; ஒரு வைத்தியர், நோயாளி கொடுக்கும் பணத்தைவிட நோயாளி குணமடைய வேண்டும் என்பதில் அதிக கவனம் செலுத்த வேண்டும். தாயார், தன் குழந்தையைப் பேணி வளர்க் கும் விஷயத்தில் மிகவும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். முறை தவறி அன்பு காட்டுவதாலோ அல்லது ஏதோ சுயநல நோக்கத்துடன் நடந்து கொள்ளுவதாலோ அவள் குழந்தையைக் கெடுத்துவிடக் கூடாது. தொழிலாளியும் இதே சிந்தனைகளை மனத்திற் கொண்டு அவரது கடமையைச் செய்யவேண்டும். இதன் பலன் என்ன? தார்மிகக் கொள்கைக்கு இணங்க தன் கடமையை நிறைவேற்றும் ஒரு தொழிலாளி ஒழுக்கமின்றி வாழும் செல்வந்த ரான வியாபாரி, வைத்தியர் அல்லது வக்கீலைவிட மேலானவரா கவும் சிறந்தவராகவும் கருதப்படுவார். அத்தகைய தொழிலாளி தான் உண்மையான நாணயத்துக்கு ஒப்பாவார்; மற்றவர்கள் போலி நாணயத்துக்குச் சமமானவர்களே. இதிலிருந்து மற்றொரு விஷயமும் தெரிகிறது. வாழ்க்கையில் ஒருவருடைய அந்தஸ்து எதுவாயினும் அவருக்கும் மேற்கண்ட லட்சியத்தை நிறைவேற்றும் சக்தி உண்டு. ஒரு மனிதனின் மதிப்பு அவனது வாழ்க்கை முறை யையே பொறுத்திருக்கிறது; அவனது அந்தஸ்தைப் பொறுத் திருக்கவில்லை. ஒருவரது வாழ்க்கை முறையை அவரது வெளிப் படையான நடவடிக்கைகளைக் கொண்டல்ல, அவரது மனப் போக்கைக் கொண்டே தீர்மானிக்க வேண்டும். உதாரணமாக, இரண்டு நபர்கள் இருக்கிறார்கள். அவர்களில் ஒருவர் ஓர் ஏழைக்கு, அவரை அந்த இடத்திலிருந்து போய் விடும்படி செய்வ தற்காக ஒரு டாலர் கொடுக்கிறார். மற்றொருவர் உண்மையான அன்புடனும் இரக்க உள்ளத்துடனும் அரை டாலர் கொடுக் கிறார். அவ்விருவரில் அரை டாலர் கொடுத்தவரே உண்மையான தரும சிந்தனை உள்ளவர். ஒரு டாலர் கொடுத்த மற்றொருவர் பாவம் செய்தவராகிறார்.

யார் தமக்குத் தாமே அந்தரங்க சுத்தியுடன் நடந்து கொள்ளு கிறாரோ, யாருக்கு துவேஷ உணர்ச்சி இல்லையோ, யார் பிறரைச்

சுரண்டாமல் எப்போதும் தூய உள்ளத்துடன் நடந்து கொள்ளுகிருரோ அவர்தான் சமயப்பற்று உள்ளவர், அவர்தான் ஆனந்த வாழ்க்கை நடத்துபவர், அவர்தான் செல்வம் படைத்தவர். அத் தகையோரால் மாத்திரமே மானிட வர்க்கத்திற்குத் தொண்டு புரிய முடியும். நனைந்த தீக்குச்சியைக் கொண்டு ஒரு மரக்கட்டையை எவ்வாறு பற்ற வைக்க முடியும்? தருமத்தை நடைமுறையில் அனுசரிக்காதவர்கள் பிறருக்கு தருமத்தை எவ்வாறு போதிக்க முடியும்? தண்ணீரில் மூழ்கிக் கொண்டிருக்கும் ஒரு மனிதன், மற்றொருவன் மூழ்கிவிடாமல் எப்படிக் காப்பாற்ற முடியும்? தரும வாழ்க்கை நடத்துபவன், உலகத்திற்கு எப்படித் தொண்டு புரிவது என்ற கேள்வியை எழுப்பவே மாட்டான். ஏனெனில், அவ்விஷயமாக அவனுக்கு ஒரு காலத்திலும் சந்தேகம் எழுவதற்கில்லை. 'வறுமையே உயர்ந்தவர்களின் செல்வம்' என்று எமர்சன் கூறுகிருர். இழிவானவர்களின் செல்வமும் புகழும் அவர்களுக்கும் உலகத்திற்கும் துன்பத்தையே கொடுக்கின்றன.*

—'இந்தியன் ஒபினியன்' – 23—2—1907

# 20

# நாத்திக நண்பருக்குப் பதில்

தம்மை நாத்திகவாதி என்று கூறிக் கொண்ட ஒரு நண்பர் கேட்ட கேள்விகளும், அவற்றிற்கு காந்திஜி அளித்த பதில்களும் கீழே கொடுக்கப்பட்டுள்ளன:

**கேள்வி :** நீங்கள் கடவுள் என்ற சொல்லை அடிக்கடி உபயோகிக்கிறீர்கள். அதன் பொருள் என்ன என்பதையும், நடைமுறை வாழ்க்கைக்கு அது எவ்வளவு தூரம் பொருத்தமாக இருக்கிறது என்பதையும் நான் அறிந்து கொள்ளலாமா?

**பதில் :** கடவுள், மனிதனின் அறிவுக்கும் வியாக்கியானத்திற்கும் அப்பாற்பட்டவர்.

**கேள்வி:** நாத்திகக் கொள்கையுடன் நாங்கள் தீண்டாமைப் பிரச்னையைத் தீர்க்க முற்பட்டுவருகிருேம். அதாவது, ஹிந்துக்கள், கிறிஸ்தவர்கள், முஸ்லிம்கள் என்ற முத்திரைகள் எதுவுமின்றி மனிதனுக்கு மனிதன் தாழ்ந்தவன் அல்ல என்ற கொள்கையுடன் நாங்கள் அப் பிரச்னையை அணுகி, அதில் வெற்றியும் பெற்று வருகிருேம்.

---

* 'தார்மிக மதம்' என்ற தலைப்பின் கீழ் அமெரிக்க அறிஞரான ஸ்ரீ ஸால்டர் எழுதிய நூலை காந்திஜி குஜராத்தி மொழியில் சுருக்கமாக மொழி பெயர்த்திருந்தார். அந்த மொழி பெயர்ப்பு இந்த அத்தியாயத்துடன் முடிவடைந்தது.

**பதில் :** நாத்திகக் கொள்கை தன்னைத் தானே மறுத்துக் கொள்ளுவதாகும். நாத்திகத்தைப் பிரசாரம் செய்வதில் இதுவரையில் யாரும் வெற்றி பெற்றதில்லை, உங்களுடைய வெற்றிக்குக் காரணம் மனப்பூர்வமான உங்களது தொண்டேயாகும்.

**கேள்வி :** 'ஹரிஜனி'லும் 'எங் இந்தியா'விலும் நீங்கள் எழுதும் கட்டுரைகளை நான் கவனமாக வாசித்து வருகிறேன். உங்களுடைய வாழ்க்கை முறை என் மனத்தை மிகவும் கவருகின்றது. தனி நபரின் விருப்பத்திற்கு அது இடம் கொடுக்கிறது. என்றாலும், கடவுள் இருக்கிறார் என்ற கொள்கை மனிதனின் தங்கு தடையற்ற விருப்பத்தில் குறுக்கிடுவதாக இருக்கிறது.

**பதில் :** தங்கு தடையற்ற விருப்பம் என ஒன்று இருக்கிறதா? அது எங்கே இருக்கிறது? கடவுளின் கையில் நாம் எல்லோரும் விளையாட்டுப் பொம்மை போன்றவர்களே.

**கேள்வி :** கடவுளுக்கும் மனிதனுக்கும் இடையே, சத்தியத்திற்கும் கடவுளுக்கும் இடையே உள்ள உறவுகள் என்ன?

**பதில் :** 'கடவுள் தான் சத்தியம்' என்று நான் கூறுவது வழக்கம். அவ்விதம் கூறுவது எனக்கு பூரண திருப்தியை அளிக்கவில்லை. எனவே, 'சத்தியம்தான் கடவுள்' என்றேன். கடவுள் வேறு, கடவுளின் சட்டம் வேறு அல்ல. கடவுளின் சட்டம் கடவுளேதான். அதை விளக்க வேண்டுமாயின், மனிதன் தீவிர பிரார்த்தனையில் ஈடுபடவேண்டும். கடவுளிடத்தில் ஐக்கியமாக வேண்டும். ஒவ்வொருவரும், அவரவருடைய சொந்த வழியில் விளக்கம் கூறலாம். மனிதனுக்கும் கடவுளுக்கும் இடையே உள்ள உறவைப்பற்றிப் பேச முற்படுவோமாயின், மனிதன் தனக்கு இரண்டு கைகள் இருப்பதால் மனிதனாகிவிடுவதில்லை; தான் கடவுள் குடிகொண்ட ஆலயமாக இருப்பதன் மூலமே அவன் மனிதனாகிறான்.

**கேள்வி :** கடவுளைப்பற்றிய எனது கொள்கையே தெளிவாக இராதபோது, கடவுளின் ஆலயமாக மனிதன் இருக்க வேண்டும் என்று நீங்கள் கூறுவது இன்னும் அதிகக் குழப்பத்தை உண்டாக்குவதாக இருக்கிறது.

**பதில் :** இந்த உடல் கடவுளின் ஆலயம் என்பதை நாம் உணர்ந்து கொண்டாலொழிய, நாம் மனிதர் என்ற அந்தஸ்தை அடைய முடியாது. அந்த அந்தஸ்துக்குக் குறைந்தவர்களாகவே நாம் இருக்க முடியும். சத்தியத்தைக் கடவுள் என்று கருதுவதில் குழப்பமோ அல்லது கஷ்டமோ என்ன இருக்க முடியும்? நம்மிடத்தில் அசத்தியம் குடிகொண்டிருக்கக் கூடாது என்பதை நீங்கள் ஒப்புக்கொள்ளுகிறீர்கள். நாம் சத்தியத்திற்கே ஆலயங்களாக இருக்கிறோம்.

உண்மையான வாழ்க்கையை நடத்த விரும்புவோர், வாழ்க்கையில் ஏற்படும் கஷ்டங்களைச் சமாளித்துத் தீரவேண்டும். சில, சமாளிக்க முடியாத கஷ்டங்களாகத் தோன்றும். அத்தகைய சந்தர்ப்பங்களில் கடவுளிடத்தில், அதாவது சத்தியத்தில் உங்களுக்குள்ள நம்பிக்கையே உங்களுக்குப் பாதுகாப்பளிக்கும். மற்றொருவருடைய துன்பத்தைக் கண்டு நீங்கள் மனம் துடித்தால், அத்தகைய சகோதர உணர்ச்சி தான் தெய்வத்தன்மையாகும். நீங்கள் உங்களை ஒரு நாத்திக வாதி என்று கூறிக் கொள்ளலாம். மானிட வர்க்கத்துடன் உங்களுக்கு உறவு இருப்பதை நீங்கள் உணர்ந்தால், நீங்கள் நடைமுறையில் கடவுளை ஒப்புக் கொண்டவராகிறீர்கள். கடவுளிடத்தில், சத்தியத்தில் நிரந்தரமான நம்பிக்கையுடன் நீங்கள் திரும்பிச் சென்றால், உங்களுடைய தொண்டு வெற்றிபெறும் என்பதில் எனக்குச் சிறிதும் ஐயமில்லை. கடவுளைக் காணும் வரையில் உங்களுக்கு எதிலும் திருப்தி உண்டாகவில்லையாயின், நீங்கள் கடவுளைக் காண்பீர்கள்.

# 21

# மனமும் குரங்கும்

**1905**-ஆம் ஆண்டில் காந்திஜி ஜோகன்னஸ்பர்க்கில் நிகழ்த்திய பிரசங்கம் ஒன்றில் ஹிந்து சமயத்திற்கும் பிரம்ம ஞான இயக்கத்திற்கும் உள்ள தொடர்பைப் பற்றிக் குறிப்பிட்டார். அவர் கூறியதாவது :

பிரம்ம ஞான இயக்கம் கொள்கையளவில் ஹிந்து சமயம் தான். ஹிந்து சமயம் நடைமுறையில் பிரம்ம ஞான சங்கத்தின் கொள்கையேயாகும். பிரம்ம ஞான இயக்கத்தில் அருமையான பல நூல்கள் இருக்கின்றன. அவற்றை வாசிப்பவர்கள் அளவற்ற பலனை அடைவார்கள். மன, அறிவு சம்பந்தமான ஆராய்ச்சிகளையும், வாதத்தையும், சூட்சுமமான சக்திகளை அபிவிருத்தி செய்துகொள்ளுவதையும் பிரம்ம ஞான இயக்கம் அளவுக்கு மேல் வற்புறுத்துகிறது. அதன் விளைவாக, இந்த இயக்கத்தின் மூலாதாரமான கொள்கை, அதாவது மனிதர்கள் யாவரும் சகோதரர்கள் என்பதும், மனிதனின் ஆன்மிக வளர்ச்சியும் கவனிக்கப்படுவதில்லை. மனிதனின் வாழ்க்கையில் அத்தகைய ஆராய்ச்சிகளுக்கு இடமில்லை என்று நான் கூறவில்லை. எனினும், மூலாதாரமான கொள்கைக்கே முதலிடம் கொடுக்கவேண்டும். உலகத்தில் உள்ள மாபெரும் வேதநூல்களை நாம் பின்பற்றுமுன், வாழ்க்கையின் சில சித்தாந்தங்கள் நம் உள்ளத்தில் ஊடுருவியிருக்க வேண்டும்.

ஒரு மனிதன் ஏதாவதொரு துறையில் நிபுணனாக வர விரும்பினால், அவன் முதன் முதலாக பிரவேச பரீட்சையில் தேறவேண்டி

யிருக்கிறது. ஆனல் ஒரு சமய நூலை ஆராய்ச்சி செய்ய முற்படும் போது, அதற்கு முன்னேற்பாடு எதுவும் அவசியமில்லை என்று பலரும் கருதுவதாகத் தோன்றுகிறது. யாரும் போதிக்காமலேயே அந்த நூல்களைத் தாங்கள் வாசிக்கவும், தாங்களே அவற்றிற்கு விளக்கம் கூறவும் முடியும் என்று எண்ணுகிருர்கள். அத்தகைய மனப்போக்குதான் உண்மையான சுதந்திர உணர்ச்சியைக் காட்டுவதாகும் என்றும் கருதப்படுகிறது. தான் சிறிதும் அறியாத விஷயத்தையொட்டி முடிவு செய்வது முற்றிலும் தான் தோன்றித்தனமேயாகும். பூஜிக்கத் தகுந்த அந்த நூல்களைக் கையாளுவதற்குமுன் நாம் முற்றிலும் தூய்மையான, உண்மையான வாழ்க்கையை நடத்துவதற்குப் பயிற்சிபெற்றிருக்க வேண்டும்; வெறிக் குணங்களைக் கட்டுப்படுத்திக் கொள்ள முயற்சிக்க வேண்டும் என்று ஹிந்து வேத நூல்கள் எல்லாவற்றிலும் கூறப்பட்டிருக்கிறது.

மனம், கள்ளைக் குடித்த ஒரு குரங்கிற்கு ஒப்பிடப்பட்டிருக்கிறது. அது உண்மைதான். நமது மனத்தை நாம் பரிசீலனை செய்வோமாயின், நாம் பிறருக்குத் தீங்கு நினைக்க எவ்வித காரணமும் இல்லை என்பதை அறிந்து கொள்ளுவோம்; நம்மை நாமே கேவலமாக எண்ண முற்படுவோம். ஏனெனில், உள்ளே நாம் கொள்ளைக்காரர்களுக்கும் கொலைகாரர்களுக்கும் இடம் கொடுத்திருக்கிருேம். அப்படியிருந்தும் பிறரை, கொள்ளைக்காரர்கள் என்றும், கொலைகாரர்கள் என்றும் எளிதாகக் கூறி விடுகிருேம். எனவே, வேத நூல்களை ஆராய்ச்சி செய்யும் விஷயமாக ஓர் எல்லை இருக்கிறது என்பதை நாம் உணர்ந்து கொள்ள வேண்டும். அவ்விதம் உணர்ந்து கொள்ளுவதால் நமது அலுவல்கள் தடைப்படா; அதற்கு மாருக நமது சக்தி அதிகமாகி, நாம் உயர்ந்த நிலையை அடைவதற்கும் அது உதவியாக இருக்கும்.

தெய்வத்தன்மை வாய்ந்த விஷயங்களை அறிந்து கொள்ளுவதைக் காட்டிலும், அவற்றில் ஓர் அம்சத்தையாவது நடைமுறையில் வாழ்ந்து காட்டுவதே மிகச் சிறந்ததாகும். ஒவ்வொன்ருக, படிப்படியாக அவை நமது வாழ்க்கையில் ஊடுருவ வேண்டும். அப்போதுதான் தெய்விகமான உபதேசங்களை நாம் மனத்தில் வாங்கிக்கொள்ள முடியும். உண்மையான வாழ்க்கையை நடத்துவதென்பது, இந்த மண்டபத்திலோ அல்லது பிரம்மஞான புத்தகசாலைகளிலோ வாழ்வது என்பதல்ல. நம்மைச் சுற்றியுள்ள உலகத்துடன் நாம் வாழவேண்டும்.

# 22

# தீனபந்துவின் கேள்விகளுக்குப் பதில்

ஆண்ட்ரூஸ் (தீனபந்து): ஒருவர் பிரார்த்தனையும் தீர்க்காலோசனையும் செய்தபின், தாம் ஒரு கிறிஸ்தவராக மாறினாலன்றி தாம் சாந்தியையோ அல்லது மோட்சத்தையோ அடைய முடியாது என்று கூறினால், நீங்கள் அவருக்கு என்ன பதில் சொல்லுவீர்கள்?

காந்திஜி: கிறிஸ்தவரல்லாத ஒருவர் (ஒரு ஹிந்து என்று வைத்துக்கொள்ளுங்கள்) ஒரு கிறிஸ்தவரிடம் வந்து அவ்விதம் கூறினால், அந்த கிறிஸ்தவர் அவரை மதம் மாறும்படி கூறக் கூடாது; அவரை ஒரு நல்ல ஹிந்துவாக இருக்கும்படி கேட்டுக்கொள்ள வேண்டும்.

ஆ: இவ்விஷயமாக எனது நிலை என்ன என்பதைத் தாங்கள் அறிவீர்கள். இருந்தாலும், நீங்கள் செல்லுவது போல் அவ்வளவு தூரத்திற்கு என்னால் செல்ல முடியாது. ஆக்ஸ்போர்டு கோஷ்டி இயக்கத்தைச் சேர்ந்த கிறிஸ்தவர்கள் உங்களுடைய புதல்வரின் வாழ்க்கையை மாற்றுவதாகவும், உங்களுடைய புதல்வரும் மதம் மாற விரும்புவதாகவும் வைத்துக்கொள்வோம். அப்போது நீங்கள் என்ன சொல்லுவீர்கள்.

கா: ஆக்ஸ்போர்டு கோஷ்டியினர் எத்தனை பேருடைய வாழ்க்கையை வேண்டுமாயினும் மாற்றட்டும்; ஆனால் அவர்களுடைய மதத்தை அக்கோஷ்டியினர் மாற்றக் கூடாது. அவரவருடைய மதத்திலுள்ள சிறந்த அம்சங்களை அவர்கள் எடுத்துக்காட்டி, அவற்றிற்கிணங்க வாழ்க்கை முறைகளை மாற்றிக்கொள்ளும்படி கூறவேண்டும். ஒரு சமயம் பிராம்மணர் ஒருவர் என்னிடம் வந்தார். உங்களுடைய நூலை வாசித்ததன் பலனாக அவர் கிறிஸ்தவ மதத்தைத் தழுவி விட்டதாகக் கூறினார். 'உங்களுடைய மூதாதையரின் மதம் தவறானது என்று நீங்கள் நினைத்தீர்களா?' என்று நான் கேட்டேன். அவர், 'இல்லை' என்று கூறினார். பிறகு நான் அவரிடம் பின்வருமாறு சொன்னேன்: 'உலகத்திலுள்ள மத நூல்களில் பைபிள் ஒன்று என்பதையும், உலகத்தில் இருந்த மத போதகர்களில் ஏசுநாதர் ஒருவர் என்பதையும் நீங்கள் அங்கீகரிப்பதில் ஏதாவது கஷ்டம் இருக்கிறதா? பைபிளை வாசிக்கவேண்டும் என்றும், கிறிஸ்தவ மதத்தைத் தழுவ வேண்டும் என்றும் தீனபந்து ஆன்ட்ரூஸ் அவரது நூல்களின் மூலம் இந்தியர்களை ஒரு போதும் கேட்டுக்கொண்டதில்லையே. நீங்கள் அவரது நூலில் உள்ள விஷயங்களைத் தவறாக எடுத்துக் கொண்டிருக்கிறீர்கள்.'

'இஸ்லாம் மதத்தில் நம்பிக்கையுள்ள ஒரு முஸ்லிம் எவ்வளவு கெட்டவராயினும், ஒரு நல்ல ஹிந்துவைக் காட்டிலும் அவர் சிறந்தவரே' என்று மௌலானா முகமது அலி கூறினர். உங்களுடைய நிலைமையும் அவ்விதம் இருந்தாலொழிய, உங்களுடைய நூலை அந்த பிராம்மணர் சரியாகப் புரிந்துகொள்ள வில்லை என்பதே எனது அபிப்பிராயமாகும்.

ஆ: மௌலானா முகமது அலியின் கூற்றை நான் ஒப்புக்கொள்ளவே முடியாது. நான் கூறுவது என்னவெனில், ஒருவர் உண்மையாகவே மதம் மாற விரும்பினுல். அவரது விருப்பத்திற்கு நான் குறுக்கே நிற்கக் கூடாது என்பதுதான்.

கா: ஆனல், நீங்கள் அவருக்கு ஒரு சந்தர்ப்பம் கொடுக்க வேண்டாமா? நீங்கள் அவரைக் குறுக்குக் கேள்விகள் கேட்க வேண்டாமா? ஒரு கிறிஸ்தவர் என்னிடம் வந்து பாகவதத்தை வாசித்ததால் அவரது மனமே வசீகரிக்கப் பட்டுவிட்டதாகவும், எனவே அவர் தம்மை ஓர் ஹிந்துவாகப் பிரகடனம் செய்துகொள்ள விரும்புவதாகவும் என்னிடம் கூறுவதாக வைத்துக்கொள்ளுவோம். அப்போது நான் அவரிடம் இவ்வாறு சொல்லவேண்டும்: 'கூடாது. பாகவதம் உங்களுக்கு எதை அளிக்கிறதோ அதையே பைபிளும் அளிக்கிறது. அந்த உண்மையைக் காண நீங்கள் இன்னும் முயற்சி எடுத்துக் கொள்ளவில்லை. அவ்விதம் முயற்சி செய்து ஒரு நல்ல கிறிஸ்தவராக இருங்கள்.'

ஆ: அதெல்லாம் எனக்குத் தெரியாது. யாராவது ஒருவர் தாம் ஒரு நல்ல கிறிஸ்தவராக வர மனப்பூர்வமாக விரும்பினுல், 'நீங்கள் ஒரு கிறிஸ்தவராகலாம்' என்றே நான் கூறுவேன். எனினும் கிறிஸ்தவர்களாக மாறவேண்டும் என்று தீவிர உற்சாகத்துடன் என்னிடம் வந்தவர்களைக்கூட அவ்விதம் மாறக்கூடாது என்று நான் பலமாகக் தடுத்துவிட்டேன் என்பதை நீங்கள் அறிவீர்கள். 'எனக்காக நீங்கள் அவ்விதம் நிச்சயமாக மதம் மாறக்கூடாது' என்று அவர்களிடம் கூறினேன். எனினும், உருவான ஒரு சமய நம்பிக்கை மனித இயல்புக்குத் தேவையாக இருக்கிறது.

கா: ஒருவர் பைபிளில் நம்பிக்கை வைக்க விரும்பினுல், தாராளமாக அவ்விதமே செய்யட்டும். அதற்காக அவர் தமது சொந்த மதத்தை ஏன் புறக்கணிக்க வேண்டும்? இந்த மதமாற்றத்திற்கு இடம் கொடுத்தால், உலகத்தில் அமைதியே இராது. மதம் ஒரு சொந்த விஷயமாகும். பரஸ்பர சகிப்புத் தன்மையையோ அல்லது சமயங்களின் சமத்துவத்தையோ இரண்டிற்குள் ஒன்றை அங்கீகரிப்பது பற்றி நீங்கள் யோசிக்க வேண்டும். எல்லாப் பெரிய மதங்களும் அடிப்படையில் சம நிலையில் உள்ளவை என்பதே எனது

அபிப்பிராயமாகும். நம் சொந்த மதத்திற்கு நாம் மரியாதை காட்டுவது போலவே, மற்ற மதங்களுக்கும் மனப்பூர்வமாக மாரியாதை காட்டவேண்டும். பரஸ்பரம் சகிப்புத்தன்மை யல்ல, சமமான மரியாதை காட்டவேண்டும் என்பதை மனத்தில் வைத்துக்கொள்ளுங்கள்.

# 23

# தொண்டு செய்வதே எனது மதம்

[இந்த அத்தியாயத்திலிருந்து ஆரம்பமாகித் தொடர்ந்து வெளியாகி யுள்ள காந்திஜியின் கருத்துகள் யாவும் 'மகாதேவ தேசா யின் குறிப்பு' என்ற நூலிலிருந்து எடுக்கப்பட்டவை :]

"உங்களுடைய சமயம் என்ன? இந்தியாவின் எதிர்கால சமயம் எந்த உருவத்தில் இருக்கக் கூடும்?" என்று அமெரிக்கப் பாதிரியார் ஒரு சமயம் காந்திஜியைக் கேட்டார்.

அவருக்கு காந்திஜி அளித்த பதில் இரண்டே வாக்கியங் களில் மிகவும் சுருக்கமாக இருந்தது. அறையிலிருந்த இரண்டு நோயாளிகளைச் சுட்டிக்காட்டி காந்திஜி கூறியதாவது: "தொண்டு செய்வதே எனது மதம். எதிர்காலத்தைப் பற்றி நான் கவலைப் படவில்லை."

# 24

# சத்தியமே சக்தி

**காந்திஜி :** கடவுளால் குறிப்பிடப்படும் இயக்கங்களையே, கடவுள் அனுப்பும் தொகையைக்கொண்டே, கடவுள் நம்பிக்கையுள்ள ஒருவன் நடத்திவருவான். கடவுளே எல்லாவற்றையும் செய்கிறார். ஆனல், அதை நாம் பார்க்கவோ அல்லது அறிந்துகொள்ளவோ அவர் நம்மை விடுவதில்லை. அவர் மனிதருக்கு உத்வேகத்தை அளித்து, மனிதன் மூலம் தமது நோக்கங்களை நிறைவேற்றுகிறார்.

**கேள்வி :** சத்தியம்தான் கடவுள் என்று நீங்கள் கூறுகிறீர்கள். மேலே கடவுள் என்ற சொல் இருக்கும் இடங்களிலெல் லாம் சத்தியம் என்ற சொல்லை உபயோகித்தால் பொருத்த மாக இருக்குமா? சத்தியம் எதையோ செய்கிறது, மனிதனைத் தூண்டுகிறது, இயக்குகிறது என்றெல்லாம் நான் எப்படிக் கூறமுடியும்?

**காந்திஜி :** நிச்சயமாக நாம் அவ்விதம் கூறமுடியும். இங்கே சத்தியம் என்பதைக் குறுகிய அர்த்தத்தில் எடுத்துக்கொள்ளக்கூடாது; அது நிரந்தரமானது என்ற பரந்த அர்த்தத்தில் எடுத்துக்கொள்ள வேண்டும். கடவுளிடம் நம்பிக்கை என்ருல், அந்த நம்பிக்கை எல்லாவற்றையும் ஆட்சி புரிகிறது என்றே பொருளாகும். நிரந்தரமான சத்தியமே எல்லாவற்றையும் இயங்கச் செய்கிறது; மனிதர் பல பணிகளிலும் ஈடுபடுவதற்கான சக்தியையும் கொடுக்கிறது.

# 25

# கடவுளை எப்படிக் காண முடியும்?

"நாம் கடவுளை எப்படிக் காண முடியும்?" என்று ஒரு நாள் ஸ்ரீ பியாரிலாலின் தாயார் காந்திஜியைக் கேட்டார். அந்தக் கேள்விக்குப் பதிலாக காந்திஜி கூறியதாவது : "இந்தக் கண்களுடன் நாம் கடவுளைக் காணமுடியாது. கடவுள் உடலற்றவர், உருவமற்றவர். எனவே, நம்பிக்கை என்ற கண்களின் மூலம் தான் அவரை நாம் காணமுடியும். நமது மனம் தீய எண்ணங்களால் குழப்பமடையாவிடில், நம் மனத்தில் அச்சம் இராவிடில், நமது இதயத்தில் எப்போதும் ஆனந்தம் நிறைந்திருக்குமாயின், இதெல்லாம் நம்மிடம் கடவுள் இருக்கிருர் என்பதற்கு அறிகுறிகளாகும். நம்முள் எப்போதுமே கடவுள் இருக்கிருர். நமக்கு நம்பிக்கை இராததால், அவர் இருப்பதைக் காண நம்மால் முடிவதில்லை. அதன் விளைவாக நாம் மிகுந்த துன்பத்திற்கு ஆளாகிரோம். உண்மையான நம்பிக்கையை நாம் பயிற்சி செய்து கொள்ளுவோமாயின், கஷ்டங்களைக் கண்டு நாம் கலங்கமாட்டோம்."

பிராணுயாமத்தைப் பற்றி மற்ருெருவர் கேட்ட கேள்விக்குப் பதிலாக காந்திஜி கூறியதாவது :

"எனக்கு பிராணுயாமத்தில் அனுபவம் இல்லை. எனவே, அதைப் பற்றி நான் எதுவும் கூற இயலாதவனுக இருக்கிறேன். அது எப்படியாயினும், உடல் சம்பந்தமான ஸ்தூல நடவடிக்கைகளால் நாம் கடவுளுக்கு அருகில் சென்றுவிட முடியாது; பக்தியின் மூலமும், பக்தியை அடிப்படையாகக் கொண்ட நடத்தையின் மூலமும்தான் நாம் கடவுளுக்கு அருகில் செல்ல முடியும். பிராணுயாமம் போன்றவை நம் உடலைச் சுத்தம் செய்வதற்கான கருவிகளாகும். உடல் சுத்தமாக இருப்பதால் மனத்திற்கு ஓரளவு அமைதி உண்டாகிறது. அவ்வளவுதான்."

"என்ன நேர்ந்தாலும் ஒரு காலத்திலும் மனங் கலங்காதுயாரையாவது தாங்கள் சந்தித்தது உண்டா?" இந்தக் கேள்விக்கு காந்திஜி அளித்த பதில் இதுதான்:

"மனக் கலக்கமோ, சங்கடமோ இராத வாழ்க்கை சாரமற்ற மிகவும் மந்தமான ஒரு வாழ்க்கையாகிவிடும். வாழ்க்கை இவ்விதம் இருக்குமென எதிர்பார்ப்பதற்கில்லை. எனவே, வாழ்க்கையின் கரடுமுரடுகளையெல்லாம் எதிர்த்து நின்று சமாளிப்பதே விவேக மாகும். ராமாயணத்திலிருந்து நாம் தெரிந்து கொள்ளும் அரிய படிப்பினைகளில் இதுவும் ஒன்று."

## 26

## நாமே சிருஷ்டிக்கும் நரகம்

ஓர் அன்பருக்கு காந்திஜி எழுதிய கடிதம் ஒன்றில் பின்வருமாறு குறிப்பிட்டிருந்தார்:

மனத்தில் தீய எண்ணங்கள் ஆக்கிரமிப்பதற்கு இடம் கொடுத்துவிட்டு, பின்னர் கவலைப்படுவது, நமக்கு நாமே சிருஷ்டித்துக்கொள்ளும் நரகமாகும். இந்த உண்மையை நீங்கள் அறிந்து கொண்டுவிட்டால், அதிலிருந்து வெளியேறுவதற்கான முறைகளைக் கைக்கொள்ளுவது எளிதாகும். உங்கள் மனத்தில் எழுந்த தீய எண்ணங்களைப் பற்றி மீண்டும் மீண்டும் நினைத்துக் கொண்டிராதீர்கள். அத்தகைய எண்ணங்கள் உங்கள் மனத்தில் ஒரு காலத்திலும் எழுந்ததில்லை என்ற எண்ணத்துடன், மேற்கொண்டு உங்களுடைய அலுவல்களைக் கவனிக்க முற்படுங்கள். ஒரு மனிதர் தவறு செய்யலாம். ஆனால், அந்தத் தவறு எப்படி நேர்ந்தது என்பதைப் பற்றியும், அதன் விளைவாக என்ன நேருமோ என்பது பற்றியும் சிந்தித்த வண்ணம் உட்கார்ந்து விடக் கூடாது. அத்தகைய சிந்தனையை உதறித் தள்ளிவிட்டு அவர் முன்னால் செல்லவேண்டும். அப்போதுதான் அவர் தாம் செய்த தவறை மறக்க முடியும். அவரது முன்னேற்றத்தினால் அவரது சக்தி அதிகமாகும். அவரது சக்தி அதிகமாவதற்கு உகந்தவாறு, அவர் மீண்டும் தவறு செய்யும் சந்தர்ப்பங்கள் குறைந்துவிடும்.

## 27

## சத்தியமும் சூழ்நிலையும்

பிரார்த்தனையின் போது விக்கிரகங்களை வைத்துக்கொள்ளுவதை நான் தடுப்பதில்லை. ஆனால், உருவமற்ற கடவுளையே நான் வழிபட விரும்புகிறேன். ஒரு முறை ஒருவருக்கு உகந்ததாக இருக்கலாம். மற்றொரு முறை மற்றொருவருக்கு உகந்ததாக

இருக்கும். எனவே, அந்த இரு முறைகளையும் ஒப்பிட்டுப் பார்க்கக்கூடாது. சத்தியத்தை நாடுவோர் சூழ்நிலையால் பாதிக்கப்படக்கூடாது; சூழ் நிலையைப் பொருட்படுத்தாமல் அவர் தமது கடமையைச் செய்ய வேண்டும். சூழ் நிலையை அடிப்படையாகக் கொண்ட கருத்துகள் பற்பல சமயங்களிலும் தவருக இருப்பதைக் காண்கிரேம். உதாரணமாக, உடலையும் ஆன்மாவையும் எடுத்துக் கொள்ளுங்கள். தற்போது ஆன்மா உடலுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருக்கிறது. எனவே, உடலிலிருந்து ஆன்மா வேறு என்பதை நாம் உடனடியாக உணர்ந்து கொள்ள முடிவதில்லை. எனினும், ஆன்மா என்பது இந்த உடல் அல்ல என்று ஒரு மகான் கூறியுள்ளார். பண்டரிபுரத்திலுள்ள விக்கிரகத்திலேயே துகாராம் கடவுளைக் கண்டார் என்று கூறுகிறீர்கள். துகாராமைப் போன்ற முனிவர்களின் வாக்குகளுக்கு அப்படியே மேலெழுந்தவாரியாகப் பொருள் கொள்ளக் கூடாது. மகான்கள் கூறும் வார்த்தைகளில் பொதிந்து கிடக்கும் தத்துவத்தையே நாம் கவனிக்கவேண்டும். ஓர் உருவத்தில் அவர்கள் கடவுளை வழிபட்டாலும், அதே சமயத்தில் உருவமற்ற கடவுளையும் அவர்கள் வழிபட்டிருக்கலாம். அவர்களுடைய உபதேசங்களின் ஆழ்ந்த அர்த்தத்தை நாம் கவனித்து நடந்துகொள்ள வேண்டும்.

## 28

# ஜவுளிக் கடைச் சிப்பந்தியின் கஷ்டம்

ஒரு ஜவுளிக் கடையில் வேலை செய்து கொண்டிருந்த குமாஸ்தா ஒருவர் காந்திஜிக்கு எழுதிய கடிதம் ஒன்றில் குறிப்பிட்டிருந்ததாவது: ''பொய் சொல்லாமல் வியாபாரம் செய்வது எங்களுக்கு அசாத்தியமாக இருக்கிறது. இதற்கு நான் என்ன செய்வது? எனக்குத் தகுதியான வேறு ஒரு தொழிலையும் தேடிக் கொள்ள முடியாதவனாக இருக்கிறேன்.''

அவருக்கு பதிலாக காந்திஜி எழுதிய கடிதத்தில் பின்வருமாறு குறிப்பிட்டிருந்தார். ''சத்தியமே பேசுபவர் எந்தச் சந்தர்ப்பத்திலும் பொய் சொல்லக் கூடாது, உண்மையைத்தான் கூற வேண்டும். வியாபாரத்திலோ அல்லது உத்தியோகத்திலோ யாரும் பொய் சொல்ல வேண்டும் என்ற கட்டாயமில்லை. எங்கேயாவது பொய் சொல்லும்படி நாம் கட்டாயப்படுத்தப்பட்டால், நாம் அத்தகைய வேலையை ஒப்புக்கொள்ளக் கூடாது. வேறு வேலை கிடைக்காவிடில் நாம் பட்டினிகிடப்பதாக இருந்தால் கூட, நாம் அதைப் பொருட்படுத்தக்கூடாது.''

# 29

# இளவரசிக்கு ஆறுதல்

அரிஸ்டார்ச்சி இளவரசியின் கடிதத்திற்கு காந்திஜி அனுப்பிய பதிலில் பின்வருமாறு குறிப்பிட்டிருந்தார்:

உங்களுடைய அன்பார்ந்த கடிதங்கள் வந்து கொண்டிருக்கின்றன. கடைசியாக நீங்கள் எழுதியுள்ள கடிதத்தில் உங்களுடைய பணக்கஷ்டத்தைப் பற்றிக் குறிப்பிட்டிருக்கிறீர்கள். உங்களுக்காக நான் பிரார்த்தனைகள் செய்து வருகிறேன். கடவுளிடம் பயந்து வாழ்க்கை நடத்துவோர், பணக் கஷ்டத்தையோ அல்லது வேறு கஷ்டங்களையோ கண்டு அஞ்சமாட்டார்கள். கஷ்டப்படும் அத்தகையோருக்கு அவை பெரிதும் நன்மையாகவே முடிகின்றன. இந்தக் கஷ்டமும் உங்களுக்கு நன்மையாக முடியட்டும். உங்களுடைய நம்பிக்கையும் மன உறுதியும் வயோதிகரான உங்களுடைய தாயாருக்கு ஆறுதல் அளிக்குமாக.

# 30

# ஆரோக்கியம் நல்லதா, நோய் நல்லதா?

அப்பாஸ் தயாப்ஜியின் புதல்வி ரெய்ஹானா நோய்வாய்ப்பட்டிருந்தபோது அவருக்கு காந்திஜி பின் வருமாறு ஒரு கடிதம் எழுதியிருந்தார்:

ஆரோக்கியமாக இருப்பது நல்லதா அல்லது நோயாளியாக இருப்பது நல்லதா என்பதை யார் சொல்ல முடியும்? நளன்-தமயந்தி கதையை நீ கேள்விப்பட்டிருப்பாய். நளன் மிகவும் அழகு வாய்ந்தவன். அவனைக் காப்பாற்றுவதற்காக, அவனைக் கடித்து அவனது அழகிய உருவத்தைக் கெடுத்துவிடும்படி கார்க்கோடகன் என்ற நாகப்பாம்புக்கு கடவுள் கட்டளையிட்டார். நளனை அது கடித்ததும், நளன் துக்கத்தில் ஆழ்ந்தான். எனினும் பாம்பு கடித்தது கடவுளின் ஒரு வரப்பிரசாதமே என்பதை அவன் பின்னர் அறிந்துகொண்டான். உனது நிலையும் அதுபோன்றதே என்பது எனது நிச்சயமான அபிப்பிராயம். எனினும், அவசியமான சிகிச்சை செய்து கொண்டிரு. ஆரோக்கியமாக இருந்தாலும் நோயுற்றிருந்தாலும் ஒரு போதும் நீ கவலைப்பட வேண்டியதில்லை. எத்தகைய நிலைமையாயினும் நீ ஆடிக்கொண்டும் பாடிக்கொண்டும் சந்தோஷமாக இருந்து, உன் தாய்க்குப் பணிவிடை செய்ய வேண்டும். என்ன நேர்ந்தாலும் உன் முகத்தில் புன்முறுவல் தவழ்ந்து கொண்டிருக்க வேண்டும். நீ எல்லாவற்றையும் கடவுளின் பாதங்களில் அர்ப்பணம் செய்துவிட்டால், உனது உடல் அவருக்குச் சொந்தமாகிவிடுகிறது; பின்னர் நோய்

அவரைத் தான் பாதிக்கும், உன்னைப் பாதிக்காது. அப்படியாயின், வேதனைப்படுவதற்குக் காரணம் ஏது?

# 31

# இதயமும் வீடும்

உணர்ச்சி இதயத்திலிருந்து எழுவதாகும். எனவே நமது உள்ளத்தைத் தூய்மையாக வைத்துக் கொண்டாலன்றி, உணர்ச்சி நம்மைத் தீய வழியில் கொண்டு போய் விட்டுவிடும். வீட்டையும் வீட்டிலுள்ள சாதனங்களையும் சுத்தமாக வைத்துக் கொள்வது போலவே, இதயத்தையும் சுத்தமாக வைத்துக் கொள்ள வேண்டும். இதயத்தை அடிப்படையாகக் கொண்டு தான் கடவுளைப் பற்றிய ஞானம் ஏற்படுகிறது. அஸ்திவாரமே அசுத்தமாக இருக்குமாயின், மற்ற எந்தப் பரிகார முறையும் பலனற்றதாகிவிடும். அஸ்திவாரம் சுத்தமாக இருக்குமாயின், மற்ற விஷயங்களைப் பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை.

# 32

# தியானத்திற்கு உருவம் அவசியம்?

விநோபாவின் சக ஊழியரான பாவுக்கு காந்திஜி எழுதிய கடிதமொன்றில் பின்வருமாறு குறிப்பிட்டிருந்தார்: உயிருடன் இருப்பவரின் உருவத்தை தியானம் செய்வது போற்றத் தக்கதல்ல. நாம் யாரை தியானம் செய்கிறோமோ அவர் எள்ளளவும் அப்பழுக்கற்றவராக இருக்க வேண்டும். ஜீவதசையிலுள்ள எவரும் அப்பழுக்கற்றவராக இருக்க முடியாது. நீங்கள் தியானம் செய்வதற்கு ஓர் உருவம் இருக்க வேண்டியது அவசியமா? கடவுளுக்கு உருவமோ, குணவேறுபாடுகளோ எதுவுமில்லை. அந்தக் கடவுளை நீங்கள் ஏன் தியானம் செய்யக் கூடாது? அது சாத்தியமில்லையாயின், ஓங்காரத்தின் உருவத்தையோ அல்லது வேறு ஏதாவது கற்பனை உருவத்தையோ தியானம் செய்யலாம். கீதை அன்னையை ஏன் தியானம் செய்யக் கூடாது? அது காமதேனுவுடன் ஒப்பிட்டுக் கூறப்படுகிறது. நாம் கீதையாகிற பசுவை தியானம் செய்யலாம். ஜீவதசையில் இருப்பவர்களின் உருவத்தை தியானம் செய்வதால், தீங்கு நேரக் கூடும். எனவே அதை நாம் தவிர்க்க வேண்டும்.

# 33

# ஆன்மிக அழுக்குகளைக் களைய வேண்டும்

ஒருவர் பிரார்த்தனை செய்யும் போது ஆன்மிக சம்பந்தமான அழுக்காறுகளையெல்லாம் களைந்து விடவேண்டும். மற்றவர்களின் முன்னிலையில் ஒழுங்கீனமான காரியங்களைச் செய்ய அவர் வெட்கப்படுவது போலவே, கடவுளின் முன்னிலையிலும் ஒழுங்கீனமான காரியங்களைச் செய்ய அவர் வெட்கப்படவேண்டும். நம்முடைய ஒவ்வொரு செயலையும், ஒவ்வொரு எண்ணத்தையும் கடவுள் அறிகிறார். ஒரு விநாடி கூட அவருக்குத் தெரியாமல் நாம் எதையும் செய்ய முடியாது, எதையும் நினைக்கவும் முடியாது. எனவே, இதய பூர்வமாக பிரார்த்திப்போர் கடவுளுடன் லயித்து பாவமற்றவராக விளங்குவார்

# 34

# உரக்கப் பிரார்த்தனை செய்வதேன்?

காந்திஜி ஒருவருக்கு எழுதிய கடிதம்: ஒருவரைக் குறித்தோ அல்லது ஒரு பொருளைக் குறித்தோ நாம் பிரார்த்தனை செய்யலாம். அந்தப் பிரார்த்தனைக்கு கடவுள் செவி கொடுத்து அருள் புரியலாம். எனினும், குறிப்பிட்ட பலன் எதையும் எதிர்பாராமல் பிரார்த்தனை செய்வதுதான் சிறந்ததாகும். அதனால் நமக்கும் சரி, உலகத்திற்கும் சரி, அதிக நன்மையே உண்டாகும். நாம் செய்யும் பிரார்த்தனை நமது மனத்தையே மாற்ற வல்லதாக இருக்கிறது. பிரார்த்தனையின் பலனை நமது ஆன்மா அதிகக் கண்காணிப்புடன் இருக்க முற்படுகிறது. பிரார்த்தனை, இதயத்தின் செயலாகும். இதயத்தை தூக்கத்திலிருந்து எழுப்பவே நாம் உரத்த குரலில் பிரார்த்தனை செய்கிறோம். உலகம் முழுவதும் வியாபித்துள்ள சக்தியானது, மனிதனின் உள்ளத்திலும் வியாபித்திருக்கிறது. அதற்கு உடல் எத்தகைய முட்டுக்கட்டையும் போடுவதில்லை. நமக்கு நாமேதான் முட்டுக்கட்டையைச் சிருஷ்டித்துக் கொள்ளுகிறோம். பிரார்த்தனையால் அந்த முட்டுக் கட்டை அகற்றப்படுகிறது. ஒரு பிரார்த்தனை பலனைக் கொடுத்ததா, அல்லவா என்பதை நாம் ஒருகாலத்திலும் அறிந்துகொள்ள முடியாது.

# 35

# காந்திஜியின் விருப்பம்

ஈச உபநிடதம் முழுவதையும் காந்திஜி தமது கையினலேயே எழுதி முடித்தார். அதற்குக் காரணம் என்ன என்று அவரைக் கேட்டபோது காந்திஜி கூறியதாவது:

“நான் அதை மனப்பாடம் செய்து கொள்ள விரும்புகிறேன். உபநிடதங்கள் எல்லாம் அடங்கிய பெரிய புத்தகத்தை ஒவ்வோரிடத்திற்கும் தூக்கிக் கொண்டுபோக முடியாது. ஆனல், இந்தச் சிறு பிரதியை எளிதாக எடுத்துச் செல்லலாம்.”

சுவேதாசுவதர உபநிடதத்திலிருந்து பாபு ஒரு சுலோகத்தை என்னிடம் (ஸ்ரீ மகா தேவ தேசாயிடம்) காட்டினர். அந்த சுலோகம் இதுதான்:

**யதா சர்மவதாகாசம் வேஷ்டயிஷ்யந்தி மானவா :|**
**ததா தேவமவிக்ஞாய துக்கஸ்யாந்தோ பவிஷ்யதி||**

இந்த சுலோகத்தைக் குறித்து காந்திஜி கூறியதாவது: “பண்டைய காலத்தில் நமது ஜனங்கள் எவ்வளவு ஆச்சரியகரமான அறிவு படைத்திருந்தார்கள் என்பது இதிலிருந்து தெரிகிறது. மனிதன் மகோன்னதமான ஆன்மாவை அறிந்து கொண்டாலன்றி, அவனுடைய துக்கங்களுக்கு முடிவு ஏற்படுவதில்லே. இதை விளக்குவதற்காகக் கொடுக்கப்பட்டுள்ள உவமை அற்புதமானதாகும். அதாவது, ஒருவன் மான் தோலே எடுத்து உடலில் சுற்றிக் கொள்ளுவதைப் போல் ஆகாயத்தை எடுத்து சுற்றிக் கொள்ள முடியாது என்பதே அந்த உவமையாகும். இந்த சுலோகத்திற்கு பல்வேறு பொருள்கள் கூறலாம். எனினும், அதன் மேலெழுந்தவாரியான அர்த்தம் கூட அற்புதமானதாக இருக்கிறது.”

இந்த இரண்டு உபநிடதங்களிலும் ஆன்மாவைப் பற்றியே விளக்கப்பட்டிருக்கிறது. இவற்றிற்குச் சமமான நூல் உலகில் வேறு எங்குமே இல்லே.

# 36

# பொய் கூறுவோர் கடவுளேக் காண முடியுமா?

**கேள்வி:** பொய் சொல்லும் ஒருவர் கடவுளேக் காண முடியுமா? அல்லது சத்தியமாகிய நியதியைப் பின்பற்றுவதற்காக எல்லா நடவடிக்கைகளேயும் கைவிடுவோர்தான், 'பேரின்பத்தை அளிக்கக்கூடிய கடவுளின் தோற்றத்தைக் காண முடியுமா?

**பதில்:** பொய் கூறுவோரின் நோக்கம் நல்லதாயினும், கெட்டதாயினும் அவரும், விருப்பு வெறுப்பு உள்ளவரும் ஒரு போதும் கடவுளை அடைய முடியாது. இரண்டாவது கேள்வி நடக்கக் கூடாத ஒரு விஷயமாகும். சத்திய வழியில் செல்லுவோர் எல்லா அலுவல்களையும் கைவிடுவது என்பது முரண்பாடானது. ஒரு மனிதர் யாதொரு அலுவலும் செய்யாவிடில், அவரது நடவடிக்கையைக் குறித்து நாம் என்ன சொல்ல முடியும்? எனவே, ஒருவர் சத்திய மார்க்கத்தில் செல்ல வேண்டுமாயின், அவர் இந்த உலகத்தில் சுறுசுறுப்பாக தீவிர நடவடிக்கைகளில் ஈடுபட்டுத்தான் தீரவேண்டும். அவர் அத்தகைய நடவடிக்கைகளில் ஈடுபடாவிடில், சத்தியத்தைப் பின்பற்றி நடப்பதற்கோ அல்லது சத்தியத்திலிருந்து வழுவுவதற்கோ அவருக்கு சந்தர்ப்பம் இருக்க முடியாது. ஒருவர் யாதொரு நடவடிக்கையிலும் ஈடுபடாமல் ஒரு விநாடிகூட இருக்க முடியாது என கீதை தெளிவாகக் கூறுகிறது. கடவுளிடம் பக்தியுள்ளவருக்கும் பக்தி இராதவருக்கும் உள்ள வேற்றுமை இதுதான்: பக்தர், பிறருக்குத் தொண்டு புரிவதில் எப்போதும் சுறுசுறுப்பாக இருந்துவருவார்; அவர் எத்தனை நடவடிக்கைகளில் ஈடுபட்டிருந்தாலும், சத்தியத்தை ஒரு போதும் கைவிடமாட்டார்; தமது விருப்பு, வெறுப்புகளிலிருந்தும் நாளாவட்டத்தில் அவர் விடுதலை பெறுவார். கடவுளிடம் பக்தி இராதவரோவெனில், சுயநல நோக்கத்துடனேயே எல்லா அலுவல்களிலும் ஈடுபடுவார்; தமது சுயநலன்களை நிறைவேற்றிக் கொள்ளுவதற்காக எத்தகைய முறைகளையும் கைக்கொள்ளத் தயங்க மாட்டார். தீமை நிறைந்திருப்பது இந்த உலகத்தின் இயல்பு அல்ல. கடவுளை அறிந்து கொள்ள வேண்டும் என்ற லட்சியத்தில் வெற்றி பெறுவதற்கு, சுறுசுறுப்பான வாழ்க்கை உதவியாக இருக்கும். எனினும் நமது நடவடிக்கைகள் பிறரின் நன்மைக்காகவே மேற்கொள்ளப் படவேண்டும். சுயநல நடவடிக்கைகள் கண்டிப்பதற்கு உரியவை; அவை கைவிடப்படவேண்டும்.

## 37

# வானத்தின் அற்புத வனப்பு

**வா**னத்தை நாம் பார்க்கும்போது, எல்லையற்ற பரம்பொருளையும், தூய்மையையும், ஒழுங்கையும், காம்பீர்யத்தையும் அது நமக்கு உணர்த்துவதாக இருக்கிறது. மனிதன் வானவெளியில் சென்று கிரகங்களிலும், நட்சத்திரங்களிலும் போய் இறங்கலாம். பூமியில் இருப்பது போலவே அவ்விடங்களிலும் வாழ்க்கை நடந்துவருவதை அவன் காணலாம். எனினும் அவற்றின் அழகு,

வர்ணிக்க முடியாத சாந்தியை எங்கும் நிலவச் செய்கிறது. வானத்தைப் பார்த்த வண்ணம் நாம் அதில் ஐக்கியமடைந்து விட்டால், பின்னர் பூமியில் உள்ள சூழ்நிலையை அறவே மறந்து விடுகிறோம். எப்போதும் நமக்கு மேலே வானம் இருப்பது, கங்கையே நம் எதிரில் பொங்கிப் பிரவாகம் செய்வதுபோல் இருக்கிறது. அதனாலேயே ஆகாயத்தை உற்றுப்பார்த்த வண்ணம் அதில் லயித்துவிடும் வழக்கம் எனக்கு ஏற்பட்டிருக்கிறது.

## 38

## துன்பங்கள், துன்பங்கள் அல்ல!

விமான விபத்தில் மாண்ட ஒரு விமானியின் சகோதரி காந்திஜிக்கு தனது துக்கத்தையும், 72 வயதான தன் தாயாரின் சோகத்தையும் தெரிவித்து ஒரு கடிதம் எழுதியிருந்தார். அவர்களுக்கு ஆறுதலாக காந்திஜி எழுதிய கடிதம் பின்வருமாறு :

"என் அன்பார்ந்த சகோதரிக்கு, உங்களுடைய சோகக் கடிதம் இன்றுதான் கிடைத்தது. சிறையில் எந்தக் கடிதமும் பல கைகளைத் தாண்டித்தான் வரவேண்டியிருக்கிறது. உங்களுக்காகவும் உங்களுடைய தாயாருக்காகவும் என் இதயம் வருந்துகிறது. கடவுள்மீது குற்றம் கூறவும், அவர்மீது கோபம் கொள்ளவும், அவரை மறுக்கவும் அவர் நம்மை அனுமதிக்கிறார். நம்முடைய அறியாமையினாலேயே நாம் அவ்விதமெல்லாம் செய்கிறோம். மிகவும் அழகான ஒரு சுலோகத்தை தினந்தோறும் காலைப் பிரார்த்தனையின்போது நாங்கள் கூறுகிறோம். அந்த சுலோகத்தின் அர்த்தம் இதுதான் : 'துன்பங்கள், துன்பங்கள் அல்ல; ஆனந்தமும் உண்மையான ஆனந்தமல்ல. கடவுளை மறப்பதுதான் உண்மையான துன்பமாகும். கடவுளை எப்போதும் நினைத்தவண்ணம் அவரை நமது இதய சிம்மாசனத்தில் வீற்றிருக்கச் செய்வதுதான் உண்மையான ஆனந்தமாகும்.'* 'விஷயங்கள் நம் கண்களுக்கு எப்படித் தோன்றுகின்றனவோ அப்படி இருப்பதில்லை' என்று ஒரு பிரபல ஆங்கிலக் கவியும் கூறியிருக்கிறார் அல்லவா? உண்மை என்னவெனில், கடவுளுடைய சட்டங்களையெல்லாம் நாம் அறிந்துகொள்ளுவோமாயின், நமக்குப் புரியாத பல விஷயங்களையும் நாம் புரிந்துகொள்ள முடியும். நம்மிடையே இருந்த உங்கள் சகோதரர் மறைந்துவிட்டதை நாம் ஏன் ஒரு துன்பமாகக் கருதவேண்டும்? அதற்குக் காரணம் நமக்கே தெரியாது. எனினும் கடவுள் நன்மையே அளிப்பவர், முற்றிலும் நீதியே உருவானவர் என்பதை நாம் அறிவோம், அல்லது அறிந்து

---

* காந்திஜி மேலே குறிப்பிட்டுள்ள பொருளுக்கான சுலோகம் பின்வருமாறு :

விபதோ நைவ விபத : ஸம்பதோ நைவ ஸம்பத :|
விபத் விஸ்மரணம் விஷ்ணோ : ஸம்பத் நாராயண ஸ்மிருதி :||

கொள்ளக் கடமைப்பட்டிருக்கிறோம். உங்களுடைய மற்றொரு சகோதரரின் நோயைக்கூட ஒரு துரதிருஷ்டம் என்று கூற முடியாது. வாழ்க்கை ஓர் ஒழுங்கு நிலையேயாகும். துன்பமாகிய தீயினூடே நாம் செல்ல வேண்டியவர்களாக இருக்கிறோம். உங்களுடைய துக்கத்தை உண்மையில் ஆனந்தமாகக் கருதும் சக்தி உங்களுக்கு இருக்க வேண்டும் என்பதே எனது விருப்பம். உங்கள் மனத்திற்கு சாந்தி ஏற்படுமாக."

# 39

# டால்ஸ்டாய் கண்ட தெய்வங்கள்

டால்ஸ்டாய் பின்வருமாறு எழுதியிருக்கிறார்: 'உலகில் இரண்டு கடவுள்கள் இருக்கின்றனர். அவர்களில் ஒருவர், மக்கள் பொதுவாக நம்பிக்கை வைத்துள்ள கடவுள். அவர் மக்களுக்கு மன அமைதியைக் கொடுப்பதன்மூலம் அவர்களுக்குத் தொண்டு செய்ய வேண்டியவராக இருக்கிறார். ஆனால், உண்மையில் இந்தக் கடவுள் இல்லை. நாம் எல்லோரும் தொண்டு புரிய வேண்டியிருக்கும் கடவுள்தான் இருக்கிறார். நாம் இந்த உலகில் இருப்பதற்கும், நாம் காணும் எல்லாப் பொருள்களும் இருப்பதற்கும் மூலகாரணம் இந்தக் கடவுள்தான்.'

அந்த இரண்டு கடவுள்களில் காந்திஜிக்கு எந்தக் கடவுளிடம் நம்பிக்கை உண்டு என்று கேட்ட ஒரு கேள்விக்குப் பதிலாக அவர் கூறியதாவது: "இரண்டு கடவுள்களிடத்திலும், அதாவது நமக்குத் தொண்டு செய்யும் கடவுளிடத்திலும், நாம் தொண்டு புரியும் கடவுளிடத்திலும் எனக்கு நம்பிக்கை உண்டு. நாம் தொண்டு புரிந்தால், அதற்குப் பிரதியாக நமக்கு ஏதாவது கிடைக்கத்தான் வேண்டும். எனினும் உண்மையில் அந்த இரண்டு கடவுள்களும் கற்பனைக் கடவுள்களே. உண்மையான கடவுள் மனிதனின் கற்பனைக்கு எட்டாதவர். அவர் தொண்டு புரிவதுமில்லை; அவருக்கு யாரும் தொண்டு செய்வதுமில்லை. எந்தப் பண்புச் சொல்லும் அவருக்குப் பொருந்தாது. அவர் அதற்கெல்லாம் அப்பாற்பட்டவர். அவர் வெளியே இருக்கும் ஒரு பொருள் அல்ல. அவர் மனிதனின் இதயத்தில் உறைபவர். கடவுள் எவ்விதம் செயல் புரிகிறார் என்பதை நாம் அறியோம். நம் மனம் அவரை எட்ட முடியாது என்பதையும் நாம் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். நாம் அவரைப்பற்றி எண்ணும் போது, நமது கற்பனையானது அவருக்கு ஓர் உருவம் கொடுக்க முற்படுகிறது. உண்மையில் கடவுள் உண்டு என்ற கொள்கை, மனிதரின் அறிவை அடிப்படையாகக் கொண்டதல்ல, நம்பிக்கையையே அடிப்படையாகக் கொண்டது. இவ்விஷயத்தில் அறிவு சிறிதும் பயன்படாது. கடவுளிடம் நமக்கு நம்பிக்கை ஏற்பட்டு விட்டால், உலகத்தின் நிலையைப்பற்றி நாம் கவலைப்பட

வேண்டிய அவசியமே இல்லை. ஏனெனில், நமக்குக் கடவுளிடம் நம்பிக்கை இருப்பதால், அவரது சிருஷ்டியில் எதுவும் காரண மில்லாமல் இருக்க முடியாது என்பதிலும் நமக்கு நம்பிக்கை இருக்கவேண்டும்.''

# 40

# மௌனமாக இருப்பது கடினமா?

மாலைப் பிரார்த்தனையின்போது ஐந்து நிமிட நேரம் மௌன மாக இருக்க வேண்டுமென நான் கூறினேன். காலைப் பிரார்த் தனையின் போதும் ஐந்து நிமிட நேரம் மௌனமாக இருப்பது சிறந்ததாகும். கூட்டத்தில் உள்ளவர்களின் இதயம் பிரார்த் தனையில் லயித்துவிடுமாயின், சந்தடியெல்லாம் நின்றுவிடும். பின்னர் குழந்தைகள் கூட ஒத்துழைக்கக் கற்றுக் கொள்ளு வார்கள். இங்கிலாந்தில் நடந்த கூட்டங்களுக்கு நான் சென்றது உண்டு. அங்கே அரை மணி நேரத்திற்கு மேலும் எல்லோரும் பூரண மௌனத்தை அனுசரிப்பார்கள். நமது ஜனங்களும் மௌனத்தை மிகவும் முக்கியமானதாகக் கருதுகின்றனர். சமாதி என்பதற்கு மௌனம் என்பதே பொருளாகும். முனி, மௌனம் என்பவை ஒரே தாதுவிலிருந்தே வந்த சொற்களாகும். முதன் முதலாக மௌனத்தை நாம் பயிற்சி செய்யும்போது, நம் மனத்தில் பல்வேறு எண்ணங்கள் உண்டாகும். நாம் தூங்கவும் ஆரம்பிப்போம். இந்தக் குறைகளை யெல்லாம் அகற்றுவதற் காகவே மௌனம் விதிக்கப்பட்டிருக்கிறது. நாம் அதிகமாகப் பேசவும், உரத்த சப்தங்களைக் கேட்கவும் பழக்கப்படுத்திக் கொண்டிருக்கிறோம். எனவே மௌனத்தை அனுசரிப்பது கஷ்டமாக இருக்கிறது. எனினும் சிறிது பயிற்சி செய்வோ மாயின், மௌனத்தை நாம் விரும்புவோம். அதில் நமக்கு விருப்பம் ஏற்படும்போது, அது நமக்கு விவரிக்க முடியாத மன அமைதியைக் கொடுக்கும்.

நாம் சத்தியத்தை நாடுபவர்களாக இருக்கிறோம். எனவே மௌனத்தின் தத்துவம் என்ன என்பதை நாம் அறிந்துகொண்டு அதை மேற்கொள்ளவும் வேண்டும். மௌனயாக இருக்கும் போது நாம் ராம நாம ஜபம்செய்யலாம். முக்கியமான விஷயம் என்னவெனில், அதையொட்டி நமது மனத்தை நாம் பக்குவப் படுத்திக் கொள்ளவேண்டும். அதில் சிறிது சிந்தனையைச் செலுத்துவோமாயின், அதன் சிறப்பை நாம் உணர்ந்து கொள்ளு வோம். கூட்டத்தில் ஐந்து நிமிடநேரம் நம்மால் அமைதியாக உட்கார்ந்திருக்க முடியாதா?

நீங்கள் எப்போதாவது நாடகத்துக்குச் சென்றிருக்கிறீர் களா? பல தியேட்டர்களிலும் பேசக் கூடாது என்று தடை



1929–சபர்மதி ஆசிரமத்தில் பிரார்த்தனை நேரத்தில் மகாத்மா.



1928-ஆசிரமத்தில் பிரார்த்தனையிலிருக்கிறார் காந்திஜி.

செய்திருக்கிறுர்கள். என்னைப் போன்ற உற்சாகிகள் நாடகம் ஆரம்பமாவதற்கு ஒரு மணிக்கு முன்பே நாடக சாலைக்குச் சென்று விடுவோம். உற்சாகம் காரணமாக மக்கள் ஒரு மணி நேரம் மௌனமாக உட்கார்ந்திருப்பதைப் பொருட்படுத்துவதில்லை. அது மாத்திரமல்ல; நாடகம் முடிய 4 அல்லது 5 மணி நேரம் செல்லும். அவ்வளவு நேரம் மௌனமாக உட்கார்ந்திருப்பதிலும் கஷ்டம் இராது. நாடகத்தில் மனம் லயித்து விடுவதால், மௌனமாக இருப்பது கஷ்டமாகத் தோன்றுவதில்லை. அப்படியிருக்க, கடவுளைப் பிரார்த்தனை செய்வதற்காக நாம் ஏன் ஐந்து நிமிட நேரம் மௌனமாக இருக்க முடியாது? இந்த வாதத்தில் ஏதாவது தவறு இருந்தால், அதை என்னிடம் எடுத்துக் கூறுங்கள். நான் கூறுவது சரியாயின், மௌனத்தை அனுசரிக்க முற்படுங்கள்.''

# 41

# பரிசுத்தமான பெண்

ஒரு பெண்மணி எழுதியிருந்த கடிதத்திற்கு காந்திஜி அனுப்பிய பதிலே கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது :

*கொடிய பேய்க் குணமுள்ள மனிதர்களைக் கூட எதிர்த்து நின்று வெற்றி பெறுவதற்கான பலத்தை -கடவுள் உங்களுக்கு அளிப்பார் என்ற நம்பிக்கையுடன் இருங்கள். ஒருபோதும் அஞ்சாதீர்கள். நெருக்கடியான சமயத்தில் உங்களுக்குள்ள முழு பலத்தையும் உபயோகியுங்கள். அதை பாலத்காரம் என்று கூற முடியாது. ஒரு பூனையின் மீது எலி பலாத்காரத்தைப் பிரயோகிக்க முடியாது. எலி விரும்பினுல், பூனை தன்னை உயிருடன் தின்ன முடியாதபடி செய்யக் கூடும். அவ்விதம் பூனையின் நோக்கத்தைச் சிதறடிக்கும் எலி பலாத்காரத்தில் ஈடுபட்டதாகாது. கெட்ட நோக்கம் உள்ளவன் இயல்பாகவே பலவீனனுகத்தான் இருப்பான் என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுங்கள். பரிசுத்தமான ஒரு பெண்மணியிடமிருந்து வீசும் பயங்கரமான ஒளியை அவனுல் தாங்க முடியாது. அவளது கர்ஜனையைக் கண்டு அவன் பீதியினுல் நடுநடுங்கிப் போய்விடுவான்.*

# 42

# உண்மை நண்பர் யார்?

ஒவ்வொரு கட்டத்திலும் எங்கே கோபித்துக் கொண்டுவிடுவாரோ என்று நீங்கள் அஞ்சவேண்டியிருக்கும் நபரை நேசிக்காதீர்கள். நம்முடைய நடத்தையினுல் ஒருபோதும் கோபித்துக்

கொள்ளமாட்டார் என்று யாரிடம் நமக்கு நம்பிக்கை இருக்கிறதோ, அவர்தான் நமது அன்புக்குப் பாத்திரமான, உண்மையான நண்பராவார்.

# 43
# கீழே இறங்கி வாருங்கள்

ஸ்ரீமதி சத்தியவதி சிதம்பர் ஓர் இந்திய கிறிஸ்தவர். அவர் காந்திஜிக்கு எழுதிய கடிதம் ஒன்றில், காந்திஜி ஏசுநாதரை ஒப்புக்கொண்டு தமது இதயத்திலும் வாழ்க்கையிலும் அவருக்கு (ஏசுநாதருக்கு) ஒரு சந்தர்ப்பம் கொடுக்க வேண்டும் என்றும், ஒருவர் வைதிக ஹிந்துவாக இருந்து கொண்டு ஏசுநாதரின் மலைப் பிரசங்கத்தில் அடங்கியுள்ள கொள்கைகளைப் பின்பற்றுவது முடியாத காரியம் என்றும் குறிப்பிட்டிருந்தார். ஒரே உலக ரட்சகர் ஏசுநாதர்தான் என்றும் அக் கடிதத்தில், அந்தப் பெண் கூறியிருந்தார். அப் பெண்மணிக்குப் பதில் அளித்து காந்திஜி எழுதிய கடிதம் பின் வருமாறு:

அன்பார்ந்த சகோதரி,

உங்கள் கடிதம் கிடைத்தது. உங்களைப் போல் எல்லோரும் ஏசுநாதரிடத்தில் நம்பிக்கை வைப்பதுதான் சத்தியத்தைப் பின்பற்றுவதாகும் என நீங்கள் ஏன் எண்ணுகிறீர்கள்? ஒரு வைதிக ஹிந்து, மலைப் பிரசங்கத்தில் உள்ள உபதேசங்களைப் பின்பற்ற முடியாதென்றும் நீங்கள் ஏன் நினைக்கிறீர்கள்? வைதிக ஹிந்துக்களைப் பற்றி நீங்கள் சந்தேகத்துக்கு இடமின்றி அறிந்துகொண்டிருக்கிறீர்களா? ஏசுநாதரையும் அவரது உபதேசங்களையும் பற்றியாவது நீங்கள் நிச்சயமாக அறிந்து கொண்டிருக்கிறீர்களா? உங்களுடைய உற்சாகத்தை நான் போற்றுகிறேன் என்றாலும், உங்களுடைய விவேகத்தை நான் பாராட்ட முடியாது. நான் சென்ற நாற்பத்தைந்து ஆண்டுகளாக தியானமும் பிரார்த்தனையும் செய்து வருகிறேன். அப்படியிருந்தும் கூட உங்களைப் போன்ற நிச்சய புத்தி ஏற்படவில்லை. அவை என்னை மேலும் அதிகப் பணிவு உள்ளவனாகச் செய்திருக்கின்றன. எனது பிரார்த்தனைக்குக் கிடைத்துள்ள பதில் தெளிவாகவும் உறுதியாகவும் இருக்கிறது. அதாவது, கடவுள் ஓர் இரும்புப் பெட்டியில் அடைக்கப்பட்டிருக்கவில்லை. அதில் உள்ள ஒரே ஒரு சிறு துவாரத்தின் வழியாகத்தான் அவரை அணுக முடியும் என்பதும் இல்லை. பணிவுடனும் தூய்மையான இதயத்துடனும் இருப்போர், கோடிக்கணக்கான வழிகளின் மூலம் அவரை அணுக முடியும். நீங்கள் உட்கார்ந்து கொண்டிருக்கும் உயர்ந்த பீடத்தில் உங்களைத் தவிர வேறு

யாருக்கும் நீங்கள் இடம் கொடுக்கவில்லை. அந்த உயர்ந்த பீடத்திலிருந்து கீழே இறங்கிவரும்படி உங்களை நான் அழைக்கிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி.

## 44

# எல்லாம் அடங்கிய மந்திரம்

'கிருஷ்ணர்ப்பணம் அஸ்து ஸர்வம்' (எல்லாம் கிருஷ்ணனுக்கே அர்ப்பணம்) என்று பாகவதம் கூறுகிறது. பாகவத தருமத்தில் நம்பிக்கையுள்ள ஒவ்வொருவரும் தினந்தோறும் காலையில் எழுந்ததும் தனது எண்ணங்கள், வார்த்தைகள், செயல்கள் எல்லாவற்றையும் கிருஷ்ண பரமாத்மாவுக்கு அர்ப்பணம் செய்ய வேண்டும். தினந்தோறும் எல்லாவற்றையும் கடவுளுக்கு அர்ப்பணம் செய்யுமுன் ஒருவருக்கு எதையும் தொடுவதற்கும், ஒரு கோப்பை தண்ணீர் கூடக் குடிப்பதற்கும் உரிமையில்லை. அவ்விதம் முதலில் அர்ப்பணம் செய்தவருக்குத்தான் சாப்பிடவும், தண்ணீர் குடிக்கவும், உடை உடுத்திக்கொள்ளவும், வீட்டில் வசிக்கவும் உரிமை கிடைக்கிறது. எல்லாவற்றையும் அர்ப்பணம் செய்வதற்கு வெகுமதியாகத்தான் வாழ்க்கையில் இன்பம் ஏற்படுகிறது என்றோ, தியாகம்தான் இன்பம் பெறுவதற்கான நிபந்தனை என்றோ உங்கள் விருப்பப்படி வைத்துக்கொள்ளுங்கள். நமது வாழ்விற்கே, நமது ஆன்மாவுக்கே தியாகம் அல்லது துறவு அத்தியாவசியமாகும். அது போதாதென்று, 'பிறருக்குச் சொந்தமானதைக் குறித்து ஆசைப்படாதே' என்றும் பாகவதத்தை எழுதிய ரிஷி கூறியுள்ளார். உலகத்தில் உள்ள எல்லாத் தத்துவங்களும், சமயங்களும் இந்த மந்திரத்தில் அடங்கியிருக்கின்றன என்பதே எனது அபிப்பிராயம்.

இந்த அற்புதமான மந்திரத்தை உபதேசித்துள்ள ரிஷி அத்துடன் திருப்தியடையவில்லை. அவர் மேலும் கூறுவதாவது: 'கடவுள் எல்லா இடங்களிலும் வியாபித்திருப்பதால், உலகில் உங்களுக்குச் சொந்தமானது எதுவுமே இல்லை. உங்களுடைய சொந்த உடல்கூட உங்களுக்குச் சொந்தமானது அல்ல. உங்களுடைய உடைமைகளுக்கெல்லாம் யாரும் ஆட்சேபிக்க முடியாத, எதிர்க்க முடியாத எஜமானர் கடவுள்தான்.'

இவ்விதமாக, கடவுளின் கருணையினாலேயே நம்மிடம் உள்ள உடைமைகளை நாம் அனுபவிக்கிறோம் என்ற மனநிலை ஏற்பட வேண்டும். ஓய்வு ஒழிவு இல்லாத இந்த உலகில், அந்த உண்மையை நாம் ஒருபோதும் மறந்துவிடக் கூடாது என்பதற்காகவே தினந்தோறும் கிருஷ்ண பரமாத்மாவுக்கு எல்லாவற்

றையும் அர்ப்பணம் செய்ய வேண்டும். இதெல்லாவற்றிற்கும் சிகரம் வைத்தாற்போல் ரிஷி மேலும், 'யாருடைய செல்வத்திற்கும் ஆசைப்படாதே' என்றும் சொல்லுகிறார். சுருக்கமான இந்த மந்திரத்தில் அடங்கியுள்ள உண்மை மானிடராகப் பிறந்த ஒவ்வொருவருடைய இந்த உலக ஆசையையும், மறு உலக ஆசையையும்கூட பூர்த்தி செய்வதாக இருக்கிறது. உலகத்திலுள்ள சமய நூல்களையெல்லாம் நான் ஆராய்ச்சி செய்ததில், இந்த மந்திரத்தைக் காட்டிலும் சிறந்த தருமம் வேறு எதுவுமே இல்லை என்பதை நான் அறிந்து கொண்டுள்ளேன். எல்லா சமய நூல்களிலும் உள்ள சிறந்த அம்சங்கள் யாவும் இந்த ஒரு மந்திரத்தையே அடிப்படையாகக் கொண்டுள்ளன. மானிடருடன் மாத்திரமல்ல, எல்லா ஜீவராசிகளுடனும் சகோதர உறவு கொள்ளும் உயர்ந்த கொள்கை இந்த மந்திரத்தில் அடங்கியிருக்கிறது. கடவுளிடம், கர்த்தரிடம் அசைக்கமுடியாத நம்பிக்கை இருக்க வேண்டும் என்பதும் இந்த மந்திரத்திலேயே அடங்கியிருக்கிறது. கடவுளே நமக்கு முற்றிலும் கதி என்பதும், நமக்குத் தேவையானதையெல்லாம் அவரே கொடுப்பார் என்ற நம்பிக்கையும்கூட இந்த மந்திரத்தில் அடங்கியிருக்கின்றன. எனது ஒவ்வொரு நரம்பிலும் கடவுள் வியாபித்திருக்கிறார், உங்கள் எல்லோரிடத்திலும் வியாபித்திருக்கிறார் என்ற ஞானமே, உலகிலுள்ள எல்லோரும் சமமானவர்கள், சகோதரர்கள் என்ற சித்தாந்தத்தை நமக்குப் போதிக்கிறது. கடவுளுக்குச் சொந்தமான எதையும் நான் என்னுடையது என்று கூறமுடியாது என்றும், எனவே நமது சக மனிதர்களுக்கும் பிராணிகளுக்கும் இடைவிடாது தொண்டு செய்வதே நமது கடமை என்றும் இந்த மந்திரம் எனக்குக் கூறுகிறது.

இதுதான் எனது நம்பிக்கையாகும். இதுதான், ஹிந்துக்கள் என்று தங்களைக் கூறிக்கொள்ளுவோரின் நம்பிக்கையாக இருக்க வேண்டும். எனது கிறிஸ்தவ, முஸ்லிம் நண்பர்கள் அவர்களுடைய சமய நூல்களை ஆராய்ச்சி செய்வார்களாயின், அவற்றில் மேற்கண்ட மந்திரத்தைக் காட்டிலும் அதிகமாக அவர்கள் எதையும் காணமுடியாது.

(ஏற்கனவே குறிப்பிட்டுள்ள அத்தியாயத்திலிருந்து இது வரையில் 'மகாதேவ தேசாயின் குறிப்புகள்' என்ற நூலிலிருந்து எடுக்கப்பட்டவை.)

# 45

# கிறிஸ்தவர்களின் மனமாற்றம்

[காந்திஜி 26-8-1905-இல் வெளியான 'இந்தியன் ஒபினியன்' பத்திரிகையில் 'உலகத்தின் மதம்' என்ற தலைப்பில் எழுதிய கட்டுரையே கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது.)

எங்களுடைய சமயம் ஒன்றுதான் உண்மையான சமயமாகும்; மற்றவையெல்லாம் போலி சமயங்களாகும் என இன்று

யாரும் கூற முடியாது. அவ்விதம் கூறும் காலம் மலையேறிவிட்டது. எல்லா சமயங்களிடத்திலும் இப்போது மக்களுக்கு சகிப்புத் தன்மை வளர்ந்து வருகிறது. இது, எதிர்காலத்தையொட்டி நம்பிக்கையளிக்கும் ஒரு நற்சகுனமே. லண்டனிலிருந்து வெளியாகும் 'கிறிஸ்டியன் வொரல்டு' என்ற சமய சம்பந்தமான வாரப் பத்திரிகையில் ஒரு கட்டுரை வெளியாகியிருந்தது. அப்பத்திரிகையில் அடிக்கடி எழுதும் 'ஜே. பி' என்பவரே அக்கட்டுரையின் ஆசிரியராவார். அதிலிருந்தே சில முக்கியமான பகுதிகளைச் சுருக்கமாகக் கொடுக்க உத்தேசித்துள்ளேன்.

அக் கட்டுரையை எழுதியவர், கிறிஸ்தவரின் கோணத்திலிருந்து மிகவும் தாராள மனப்பான்மையுடனும் பெருந்தன்மையுடனும் சமயப் பிரச்னையை ஆராய்ந்துள்ளார். உலகத்திலுள்ள சமயங்களுக்குள் பரஸ்பரம் தொடர்பு இருக்கிறது என்பதையும், ஒவ்வொரு சமயத்திலும் மற்ற எல்லாவற்றிற்கும் பொதுவான சில அம்சங்கள் இருக்கின்றன என்பதையும் அவர் எடுத்துக் காட்டியுள்ளார். ஒரு கிறிஸ்தவ சமயப் பத்திரிகையில் அத்தகைய ஒரு கட்டுரை வெளியாகியிருப்பது குறிப்பிடத்தக்கதாகும். அப்பத்திரிகை, காலத்தை அனுசரித்து நடக்க முற்பட்டிருப்பதையும் அதுகாட்டுகிறது. சில ஆண்டுகளுக்கு முன் அத்தகைய கட்டுரை வெளியாகியிருந்தால், அது சமய விரோதமான உபதேசம் என்று கருதப்பட்டிருக்கும்; அதன் ஆசிரியர் சமய துரோகி என்றும் கண்டிக்கப்பட்டிருப்பார்.

பல்வேறு போலி மதங்களுக்கும் இடையே கிறிஸ்தவ சமயம் ஒன்றுதான் உண்மையான சமயமாகத் திகழ்கிறது என்ற கொள்கை சில ஆண்டுகளுக்கு முன் நிலவி வந்தது என்பதை அவர் சுட்டிக் காட்டியிருப்பதுடன், மற்ற மதங்கள் விஷயத்தில் கிறிஸ்தவர்களுடைய மன நிலை இப்போது மாறியிருக்கிறது என்றும் குறிப்பிட்டுள்ளார். அவர் கூறுவதாவது :

"இப்போது கிறிஸ்தவர்கள் பின்பற்றிவரும் சித்தாந்தமானது, பண்டைய கால கிறிஸ்தவர்களின் உபதேசங்களுக்கு முற்றிலும் மாறுபாடாக இருக்கிறது. மற்ற மதங்களிடம் பண்டைய காலத்திலிருந்த சிறந்த கிறிஸ்தவர்கள் கொண்டிருந்த கருத்துக்கும், பண்டைய கால கிறிஸ்தவர்களின் கருத்தைப் பற்றி இன்றைய கிறிஸ்தவர்கள் எண்ணுவதற்கும் முற்றிலும் வேற்றுமை இருக்கிறது. மற்ற மதத்தினருடன் இலக்கியங்களின் மூலமோ அல்லது நேருக்கு நேராகவோ தொடர்பு கொள்ளும்போதுதான், ஒரு மதத்திற்கும் மற்றொரு மதத்திற்கும் இடையே கடக்க முடியாததாகத் தோன்றும் 'பிளவு' வெறும் போலித் தோற்றமே என்பதும், அத்தகைய வேற்றுமை மனோபாவம் வாழ்க்கைக்கும் ஆன்மாவுக்கும் முரணானது என்பதும் தெரிகிறது. மதம் நூறு விதமான பெயர்களுடனும் உருவங்களுடனும் இருந்தாலும், அது மனிதரின் இதயத்தில் ஒரே விதையையே விதைக்கிறது; மனிதரின் மனத்திற்கு ஒரே உண்மையையே காட்டுகிறது."

பல கிறிஸ்தவ ஸ்தாபனங்களும், கிறிஸ்தவ சித்தாந்தங்களும் மற்ற சமயங்களைப்பற்றிய அறிவை அடிப்படையாகக் கொண்டே உருவாகியுள்ளன என்பதையும் 'ஜே. பி.' காட்டியுள்ளார். பல முறைகளும் பண்டைய காலத்தின் சின்னங்களாகவே இருக்கின்றன என்பதையும் அவர் பின்வருமாறு எடுத்துக் காட்டியுள்ளார் :

"பாரசீகத்தில் மித்ரர்கள் அடங்கிய வகுப்பினரின் பண்டைய சமயமானது எவ்வளவு அற்புதமானது? இதைப் பற்றி ஸ்ரீ கியூமாண்ட் கூறுவதாவது: 'கிறிஸ்தவர்களைப் போலவே பாரசீகத்திலுள்ள மித்ரர்களும் நெருங்கிய ஐக்கியத்தன்மை வாய்ந்த சமூகங்களில் வாழ்ந்து வந்தார்கள்; ஒருவரையொருவர் தந்தை என்றும் சகோதரர் என்றும் அழைத்துவந்தார்கள். கிறிஸ்தவர்களைப் போலவே மித்ரர்களும் ஞான ஸ்நானம் முதலிய பல்வேறு சடங்குகளை அனுசரித்ததுடன், ஒழுக்கம், புலனடக்கம், பதிவிரதா தருமம், தன்னல மறுப்பு முதலிய சீரிய முறைகளையும் உபதேசித்து வந்தார்கள்; ஆன்மாவின் அழிவற்ற நிலை, மறுபிறப்பு முதலியவற்றிலும் நம்பிக்கை கொண்டிருந்தார்கள்.' "

கிறிஸ்தவ சமயத்திற்குத்தான் உயர்ந்த ஸ்தானம் கொடுக்க வேண்டும் என்று அவர்கள் கூறுவதைக் குறித்து ஆச்சரியப்படுவதற்கில்லையெனினும், கிறிஸ்தவ எழுத்தாளர்களும் கிறிஸ்தவப் பத்திரிகைகளும் அத்தகைய தாராளமான கொள்கையை மேற்கொண்டிருப்பது மகிழ்ச்சிக்குரியது.

பொதுவான நலனுக்காகத் தொண்டுபுரிந்து வரும் ஐரோப்பியர்களுக்கும் இந்தியர்களுக்கும், அக் கொள்கை விசேஷ முக்கியத்துவம் வாய்ந்தது. புராதன மதங்கள் அடங்கிய இந்தியா, பிறருக்கு அளிக்கக் கூடிய விஷயங்கள் எத்தனையோ இருக்கின்றன. நம்மிடையே உள்ள ஐக்கியத் தொடர்பை, மனப்பூர்வமான அனுதாபத்தினாலும், பரஸ்பரம் அவரவர் சமய முறைகளுக்கு மதிப்புக் கொடுப்பதாலும் வளர்த்துக் கொள்ளலாம். இந்த முக்கிய விஷயத்தை யொட்டி அதிகமான சகிப்புத் தன்மையை அனுசரிப்பதாயின், பரஸ்பரம் அன்புடன் நடந்து கொள்ளவேண்டும். அவ்விதம் நடந்து கொண்டால், தற்போதுள்ள தப்பெண்ணங்கள் எல்லாம் ஒழிந்துவிடும். முஸ்லிம்களுக்கும் ஹிந்துக்களுக்கும் இடையே இந்த சகிப்புத்தன்மை அதிகத் தேவையாக இருக்கிறது என்பது உண்மை அல்லவா? கீழ்த் திசை நாட்டினருக்கும் மேநாட்டினருக்கும் இடையே இந்த சகிப்புத்தன்மை மேலும் அதிகத் தேவையாக இருக்கிறது. இந்தியர்களுக்குள்ளேயே இருந்துவரும் ஒற்றுமையும் அந்நியோன்னியமும்கூட துவேஷம் காரணமாக அழிந்துவிடக்கூடாது.

# காந்திஜியிடம் மத மாற்ற முயற்சி!

தம்மை கிறிஸ்தவ மதத்திற்கு மாற்ற பலர் முயற்சித்ததாக காந்திஜி சில இடங்களில் குறிப்பிட்டிருக்கிறார். அதை யொட்டிய சுவையான ஒரு நிகழ்ச்சியை அவர் பின்வருமாறு விவரித்திருக் கிறார் :

கிறிஸ்தவ மதத்திற்கு என்னை மாற்றுவதற்காக ஸ்ரீ பேக்கர் என்னை வெல்லிங்டன் (தென்னாப்பிரிக்கா) கன்வென்ஷனுக்கு அழைத்துச் சென்றார். கிறிஸ்தவ சமயத்தின் பெருமையைப் பற்றி அவர் அடிக்கடி என்னுடன் விவாதிப்பது வழக்கம். 'எனக்கு கிறிஸ்தவ மதத்தில் நம்பிக்கை ஏற்படும்படி செய்யுங்களேன்' என்று அவரிடம் நான் கூறுவேன். என் மனத்தை மாற்ற அவர் செய்யும் முயற்சிக்கு நான் உட்பட விரும்புவதாகவும் அவரிடம் கூறினேன். அதன்மீது அவர் கிறிஸ்தவர் கன்வென்ஷனுக்கு வரும்படி என்னைக் கேட்டுக் கொண்டார். கிறிஸ்தவ சமயத்தின் உண்மையில் எனக்குத் திருப்தி ஏற்படும்படி செய்யக் கூடிய நிபுணர்களை அங்கே நான் சந்திக்கலாம் என்றும் அவர் கூறினார். நானும் புறப்பட்டேன். நான் சென்ற வண்டி முழுவதும் வெள்ளையர்களே நிறைந்திருந்தார்கள். எனவே நான் மேல் 'பர்த்'திலேயே படுத்துக் கொண்டேன். காலையில் என்னைக் கீழே இறங்கி வந்து வண்டியின் ஜன்னலுக்கு வெளியே தெரியும் அற்புதமான இயற்கைக் காட்சிகளையும், சூரியோதயத்தின் அழகையும் கண்டு களிக்கும்படி அவர்கள் என்னை அழைத்தனர். ஆனால், அவர்களுடைய முயற்சி பலிக்கவில்லை. அச்சமயம் நான் கீதையின் 11-ஆவது அத்தியாயத்தை வாசித்துக் கொண்டிருந்தேன். 'நீங்கள் என்ன வாசித்துக் கொண்டிருக்கிறீர்கள்?' என்று ஸ்ரீ பேக்கர் என்னைக் கேட்டார். 'கீதையை வாசித்துக் கொண்டிருக்கிறேன்' என்று அவருக்குப் பதில் அளித்தேன். பைபிளை வாசிப்பதற்குப் பதிலாக நான் கீதையை வாசித்துக் கொண்டிருந்ததால், அவர் என்னை ஒரு முட்டாள் என எண்ணியிருக்க வேண்டும். எனினும், அவர் என்ன செய்ய முடியும்? என்னை வற்புறுத்தி பலாத்காரம் செய்யும் நோக்கம் அவருக்கு இல்லை. கன்வென்ஷனில் எனக்காக விசேஷ பிரார்த்தனையும் நடந்தது. எனினும், நான் போனபடியே யாதொரு மாறுதலுமின்றி திரும்பிவந்து சேர்ந்தேன் !

# 47

## தியானம் செய்வது எப்படி ?

ஓர் அன்பருக்கு காந்திஜி எழுதிய கடிதத்தில் 'தியானம் செய்வது எப்படி?' என்பது பற்றி பின்வருமாறு விவரித்திருந்தார்:

நீங்கள் உங்களுடைய சொந்தக் கற்பனையினால் ஓர் உருவத்தை வடித்து, அதை தியானம் செய்வதில் யாதொரு தவறும் இல்லை. எனினும், கீதை அன்னையைத் தியானம் செய்வதைக் காட்டிலும் சிறந்தது வேறு ஒன்றுமில்லை. காலஞ் சென்ற தாயாரை, கீதையின் சின்னமாக நினைத்துக்கொண்டோ அல்லது கற்பனையினால் வேறு ஓர் உருவத்தைச் சிருஷ்டித்துக்கொண்டோ தியானம் செய்ய முடியும். உதாரணமாக, பசுத் தாயை நினைத்த வண்ணம் தியானம் செய்யலாம். கீதையிலுள்ள ஏதாவது ஒரு சுலோகத்தையோ அல்லது அதிலுள்ள ஒரே ஒரு சொல்லையோ நினைத்தவண்ணம் தியானம் செய்யலாம். கீதையில் உள்ள ஒவ்வொரு சொல்லும் பசுத் தாய்க்கு உகந்த ஆபரணமே யாகும். இவற்றைத் தவிர ஒருவர், மூன்றாவதான ஒரு முறையை தமக்குத் தாமே வகுத்துக் கொள்ளலாம். ஒவ்வொருவருடைய மூளையும் ஒவ்வொரு விதமாகச் செயல்படுகிறது. எந்த இரண்டு நபர்களும் ஒரே சாதனத்தைப் பற்றி ஒரே விதமாகச் சிந்திப்பதில்லை. அவர்களுடைய வர்ணனைகளுக்கும் கற்பனைகளுக்கும் இடையே ஏதாவது வேற்றுமை இருக்கத்தான் செய்யும்.

சிறிதளவு சாதனை (ஆன்மிக முயற்சி) கூட வீண் போவதில்லை என்று கீதையின் ஆறாவது அத்தியாயம் நமக்கு உறுதி அளிக்கிறது. அந்தச் சாதனை இந்த ஜன்மத்தில் அடிப்படையாக அமைகிறது. அதில் ஈடுபடுவோர் அடுத்த ஜன்மத்தில் மேற்கொண்டு செல்லுவார். ஆன்மிக முன்னேற்றத்திற்கான மன உறுதி ஒருவருக்கு இருந்து அதற்கான திறமை இல்லாவிடில், அந்த மன உறுதியை மேலும் பலப்படுத்துவதற்கு உகந்த சூழ்நிலை மறுஜன்மத்தில் அவருக்கு ஏற்படும். எனினும், அதை மனதிற்கொண்டு இந்த ஜன்மத்தில் முயற்சியைத் தளரவிட்டுவிடக் கூடாது. அவ்விதம் தளரவிட்டால் மன உறுதி அறிவை அடிப்படையாகக் கொண்டதாக இருக்குமே யன்றி, இதய பூர்வமானதாக இராது. அறிவை அடிப்படையாகக் கொண்ட விருப்பத்தினால் யாதொரு பலனும் ஏற்படாது. ஏனெனில், அத்தகைய உறுதியும் விருப்பமும் மரணத்திற்குப் பிறகு தொடருவதில்லை. தவிர, அது இதயபூர்வமானதாக இராவிடில், உடல் சம்பந்தமான பலவீனங்களும் சூழ்நிலையும் அதற்கு முட்டுக்கட்டையாகி விடலாம். ஆன்மா உடலைவிட்டு வெளியேறும்போது, அதனுடன் நல்ல எண்ணத்தையும் கொண்டு செல்லுகிறது. அது அடுத்த ஜன்மத்தில், சந்தர்ப்பங்கள் அதிகச் சாதகமாக இருக்கும்போது பலனைக் கொடுக்கிறது. அவ்விதமாக ஒருவர் செய்யும் நல்வினை வளர்ச்சிபெறுமே யன்றி, எக்காலத்திலும் வீண்போவதில்லை.

# 48

# தேவதாஸுக்கு எழுதிய கடிதம்

கோரக்பூர் சிறையில் தேவதாஸ் காந்தி நோயுற்றிருந்த போது, அவ்விஷயமாக காந்திஜிக்கு ஒரு தந்தி வந்தது. அதைக் குறித்து காந்திஜி தேவதாஸ் காந்திக்கு எழுதிய கடிதத்தில் பின் வருமாறு குறிப்பிட்டிருந்தார் :

ஒரு விசித்திரமான பீதியினல் என் மனம் வேதனைப்பட்டுக் கொண்டிருந்தது. எனவே, இத்தகைய செய்தி ஏதாவது வருமென எனக்குத் தோன்றியது. அதற்குத் தகுந்தாற்போல் நேற்று உனது உடல் நிலை பற்றிய தந்தி கிடைத்தது. கோரக்பூரைப் போன்ற ஓரிடத்தில் ஜுரம் வராமல் தடுத்துக்கொள்வது முடியாத காரியம். ஆனல், இந்தக் கடிதம் உனக்குக் கிடைப்பதற்குள் நீ குணமடைந்திருப்பாய் என்று நம்புகிறேன். இதைப் போன்ற ஒரு சந்தர்ப்பத்தில் உன் அருகில் நண்பர்களும் உறவினர்களும் இருப்பதை நீ விரும்புவாய். ஏனெனில், நீ பலருக்கும் இதுபோன்ற சந்தர்ப்பங்களில் தொண்டு புரிந்திருக்கிருய். ஆனல், எனது நெஞ்சம் கல்லைப் போன்றது. கோரக்பூரைப் போன்ற தொலைவில் உள்ள இடத்திற்குப் போகும்படி இங்குள்ள யாரையும் நான் கேட்பது முடியாத காரியம். அங்கே செல்வதற்கு யாராவது ஆயத்தம் செய்தாலும், செல்லக் கூடாது என்று அவரை நான் தடுத்துவிடுவேன். உன்னிடம் நடந்துகொள்ளும் விஷயமாக தத்துவ ஞானம் எனக்கு உதவியாக இராவிடில், அந்த தத்துவ ஞானத்தினல் யாதொரு பலனுமில்லை. இதை உணர்ந்துகொள். அதாவது, உனக்கு ஏற்படும் கஷ்டங்களைப் பொறுமையுடன் சகித்துக்கொண்டு உற்சாகத்துடன் இரு. உண்மையான தந்தையும் தாயும் உறவினரும் நண்பரும் கடவுள்தான். மற்றவர்கள் பெயரளவில்தான் தந்தையும் தாயும் உறவினரும் நண்பரும் ஆவர். அவர்களே திக்கற்ற நிலையில் இருக்கிருர்கள். அவர்கள் விரும்பினல்கூட யாதொரு உதவியும் செய்ய முடியாது. எனவே அவர்களை நீ நம்பவேண்டாம். எல்லாவிடத்திலும் நிறைந்திருக்கும் கடவுளையே நம்பு. அவர் தகுதியானதென்று கருதும் உதவியை உனக்குச் செய்வார்.

# 49

# பூனையாகப் பிறக்க விருப்பம்!

சிறையில் இருந்த பூனையிடமும் அதன் குட்டிகளிடமும் காந்திஜி மிகவும் அன்பும் அக்கறையும் காட்டி வந்ததைக் கேள்விப்பட்ட ஒரு சிறுமி, தானும் ஒரு பூனையாகப் பிறக்க ஆசைப்படுவதாக காந்திஜிக்கு எழுதினள். அதற்குப் பதிலாக காந்திஜி

எழுதியதாவது: நான் பூனைக் குட்டிகளைக் கொஞ்சுவதுபோல குழந்தைகளையும் கொஞ்சுகிறேன். எனினும் நம்மைப்போல் பூனை பகுத்தறிவுள்ள ஒரு பிராணியல்ல. ஆதலால் பூனையாகப் பிறப்பது நல்லதல்ல.

# 50

# பேரின்பத் தோற்றம்

உலகத்தை கடவுளின் பல்வேறு அம்சங்களாகக் காண்போருக்கு, அது நிச்சயமாக பேரின்பத்தைக் கொடுக்கும் ஒரு தோற்றமாகவே இருக்கும். எனினும், அந்தத் தோற்றம் அவரது சொந்தக் கற்பனையின் சிருஷ்டியே யன்றி, உண்மையானதல்ல. இந்த உலகத்தைக் கடவுளாகக் காணும் ஒரு கிறிஸ்தவருக்கு, அது ஏசுநாதரைப் போன்ற உருவத்தில் இருப்பதாகவே தோன்றும். எந்த மனிதரும், தாம் கடவுளை எப்படி வழிபடுகிறரோ அப்படியே கடவுளைக் காண்பார். ஒரு ஹிந்துவுக்கு கீதையின் 11-ஆவது அத்தியாயமே* ஒரு புதிய உணர்ச்சியையும் உத்வேகத்தையும் கொடுக்கிறது. ஒரு ஹிந்து பக்தன், அந்த அத்தியாயத்தில் விவரிக்கப் பட்டிருப்பதைப் போலவே கடவுளைக் காண்பான். எனினும், அவன் காணும் தோற்றம் கற்பனையே யன்றி வேறல்ல. ஏனெனில், கடவுள் உருவம் இல்லாதவர். ஆனால், தமது பக்தனுக்காக கடவுள் உருவத்தை மேற்கொள்ளுகிறார். அதுதான் அவரது மாயையாகும். இவ்விஷயத்தையெல்லாம் சுருக்கமாகக் கூறுவதாயின் பின்வருமாறு குறிப்பிடலாம்: 'திருடனிடத்திலும் கொள்ளைக் காரனிடத்திலும் நாம் கடவுளைக் காண்வேண்டியவர்களா யிருக்கிறோம். இவ்விதமாக அவனிடத்தில் நாம் கடவுளைக் காண்போமாயின், அவன் திருடும் வழக்கத்தையே கைவிட்டுவிடுவான். நமது மனம் அத்தகைய பக்குவமான நிலையை அடையும் வரையில், அதாவது திருடனிடத்திலும் கொள்ளைக்காரனிடத்திலும் நாம் கடவுளைக் காண்பது சாத்தியமாகும் வரையில், நமது அறிவினாலும் ஆன்மிகப் பயிற்சிகளாலும் யாதொரு பலனும் ஏற்பட முடியாது.

# 51

# மயிலும் மரணமும்

"ஆசிரமத்தில் இருந்த மயில் இறந்துவிட்டது. உயிருடன் இருந்தபோது அது எவ்வளவு அழகாக இருந்ததோ அதற்கு நேர்

* அர்ஜுனன் கண்ட கிருஷ்ண பரமாத்மாவின் விசுவரூபத்தையே கீதையின் 11-ஆவது அத்தியாயம் விவரிக்கிறது.

மாருக அது இறந்தபின் பார்ப்பதற்கே சகிக்கமுடியாதவாறு அவ்வளவு விகாரமடைந்துவிட்டது." இவ்விதம் சாரதா தேவி எழுதியிருந்த கடிதத்திற்குப் பதிலாக காந்திஜி பின்வருமாறு குறிப்பிட்டிருந்தார்: "நமது நிலைமையும் மயிலைப் போன்றது தான். உயிருடன் இருக்கும்போது ஒருவர் எவ்வளவு அழகாக இருப்பினும், அவர் இறந்தபின் அவரைப் பார்ப்பதற்குக் கூட நாம் விரும்புவதில்லை. அதுமாத்திரமல்ல, அவரை எரித்தும் விடுகிறோம். ஆகையால், அத்தகையதான இந்த உடலில் நாம் பற்றுதல் வைக்கக் கூடாது."

## 52

## விக்கிரக வழிபாடு இருந்தே தீரும்

விக்கிரக வழிபாட்டைக் குறித்து ஒருவர் எழுதியிருந்த கடிதத்திற்கு காந்திஜியின் பதில்:

விக்கிரக வழிபாடு அவசியமா, அல்லவா? இந்தக் கேள்வியே எழுவதற்கு இடமில்லை. ஏனெனில், இந்தியாவில் விக்கிரக வழிபாடு வெகு காலமாக வழக்கத்தில் இருந்து வந்திருக்கிறது, இன்னும் நீண்ட காலம் அது வழக்கத்தில் இருந்துதான் தீரும். மனிதராகப் பிறந்தவர்கள், விக்கிரக வழிபாடு செய்பவர்களாகத் தான் இருக்க முடியும். கடவுள் எங்கும் இருக்கிறார். எனவே, அவர் விக்கிரகத்திலும் இருக்கிறார். ஆகையால் விக்கிரக வழிபாட்டை ஒழிப்பதென்பது முடியாத காரியம்.

## 53

## பற்றற்ற நிலை

தன்னிடமும், உற்றார் உறவினர், நண்பர்களிடமும் சிறிதும் பற்றுதலின்றி இருப்பதே 'அனாஸக்தி' என்ற சொல்லுக்குப் பொருளாகும். இது மாத்திரம் அல்ல; 'பரத்தில்' கூட அதாவது சத்தியம் அல்லது கடவுளிடத்தில் கூட பற்று இருக்கக் கூடாது. யாதொரு பற்றுமின்றி கடவுளுடன் இரண்டறக் கலந்துவிடுவதே அனாஸக்தியாகும். இந்த அர்த்தத்தை அறிந்து கொள்ளாததாலேயே மக்கள் மன அமைதியின்றித் தவிக்கிறார்கள்.

## 54

# சூன்யமாகச் செய்துகொள்ளுதல்

"நம்மை நாமே சூன்யமாகச் செய்து கொள்ள வேண்டும்" என்று காந்திஜி அடிக்கடி கூறுவது வழக்கம். "அப்படியென்றால் என்ன?" என்று ஒருவர் கேட்ட கேள்விக்குப் பதிலாக காந்திஜி கூறியதாவது: "தம்மை சூன்யமாகச் செய்துகொள்ளுவோர் நன்மைகளைப் பெற முந்திக்கொள்ள மாட்டார்கள்; எல்லோருக்கும் தொண்டு புரிந்து வருவர்; யாரிடமிருந்தும் நன்றியை எதிர்பார்க்க மாட்டார்கள்; துன்பத்தை ஏற்றுக் கொள்ளுவதில் முதல் ஸ்தானத்தை வகிப்பர்; அவ்விதம் தம்மை சூன்யமாகச் செய்துகொள்ளுவோரின் மனம் எப்போதும் தொண்டு செய்வதிலேயே லயித்திருக்கும்."

## 55

# நல்லதும் கெட்டதும்

வர்தா ஆசிரமத்திற்கு ஒரு சமயம் விஜயம் செய்த டாக்டர் காங்கர், கடவுளைப் பற்றியும் சமயத்தைப்பற்றியும் காந்திஜியைப் பல கேள்விகள் கேட்டார். அவரது கேள்விகளும், அவற்றிற்கு காந்திஜி அளித்த பதில்களும் கீழே கொடுக்கப்பட்டுள்ளன:

**கேள்வி:** கடவுளின் கட்டளையால் நல்லது மாத்திரம்தான் நடக்கிறதா? அல்லது தீமை ஏற்படுவதற்குக் கூட அவர்தான் பொறுப்பாளியா?

**பதில்:** கடவுளின் கட்டளையால் நன்மை ஏற்படுகிறது. ஆனால் அதை வெறும் நன்மை என்று கூறிவிட முடியாது. தீமை ஏற்படுவதற்கும் கடவுள்தான் காரணம். ஆனால், அதை தீமை என்று கூற முடியாது. நமது பாஷை குற்றம் குறைகள் உள்ளதாக இருப்பதால், அதை 'நன்மை' என்றும், 'தீமை' என்றும் குறிப்பிடுகிறோம். எனினும் நன்மை, தீமை இரண்டிற்கும் கடவுள் அப்பாற்பட்டவர்.

**கே:** நமது செயல்கள் ஒவ்வொன்றுக்கும் கடவுளின் சித்தமே காரணம் அல்லவா?

**ப:** ஒவ்வொரு செயலுக்கும் கடவுளின் சித்தமே காரணம் என்று வைத்துக்கொண்டாலும் கூட, சில காரியங்களைத் தான் கடவுள் அனுமதிக்கிறார்; சில காரியங்களுக்குத் தடை விதிக்கிறார். இதெல்லாம் அவரது சித்தமேயாகும்.

கே: உங்களுடைய 21 நாள் உண்ணாவிரதத்திற்கு கடவுளின் கட்டளையே காரணம் என்று நீங்கள் கூறினீர்கள். கடவுளுடன் 'போராடியதாகவும்' அவரிடமிருந்து 'வற்புறுத்தி' வாங்கிக் கொண்டதாகவும்' நீங்கள் குறிப்பிட்டிருக்கிறீர்கள். நீங்கள் அவ்விதம் கூறியிருப்பதன் திட்டவட்டமான பொருள் என்ன?

ப: இதெல்லாம் குற்றம் குறைகள் உள்ள ஒரு மனிதனின் பிதற்றல்களே. மனிதன் கடவுளுடன் போராடுவது என்பது, ஒரு குழந்தை தாயுடன் போராடுவதற்கு ஒப்பாகும். குழந்தை தாயுடன் போராடுகிறது. தாய் அதற்குப் பால் கொடுத்ததும், நான் 'வற்புறுத்திப் பிடுங்கிக் கொண்டேன்' என்று குழந்தை கூறுகிறது. அதுபோலவே, கடவுள் ஏதாவதொன்றைக் கொடுத்தால் மகிழ்ச்சியுடனேயே கொடுக்கிறார். மகிழ்ச்சியும் வேதனையும் கடவுளுக்கு உண்டா என்பது வேறு விஷயமாகும். கடவுளின் பாதங்களில் எல்லாவற்றையும் அர்ப்பணம் செய்யும் ஒருவர், 'குறிப்பிட்ட ஒரு பொருளை எனக்குக் கொடுக்காவிடில், நான் உயிர் துறப்பேன்' என்று கடவுளிடம் கூறுகிறார். அவர் கடவுளை எதிர்த்து சவால் விடுகிறார். அத்தகையோர் மரணமடையும் தறுவாய்க்கு வரும் வரையில் கடவுள் எதுவும் செய்வதில்லை. இதற்கு எத்தனை எத்தனையோ உதாரணங்கள் கூற முடியும். அப்போதுதான் அவரைக் கடவுள் முற்றிலும் சோதித்துவிட்டார் என்று நாம் கூறுகிறோம். நமது மனத்தில் தோன்றுவது அத்தகைய உணர்ச்சிதான். கடவுளின் வழியை மனிதன் அறிய இயலாது. அறிந்தால் அவன் என்ன சொல்லுவான் என்று எனக்குத் தெரியாது. கடவுளுடன் போராடுவதில் நமது பலத்தையெல்லாம் இழந்து நாம் சோர்வடைந்துவிட்டதாக நினைப்பது மடத்தனமாகும். கடவுள் நீதியுடன் நடந்துகொள்ளுபவராயின், அவர் தமது பக்தரைச் சித்திரவதை செய்யமாட்டார்.

கே: கடவுள் நீதி நெறியுள்ளவரா, இல்லையா?

ப: கடவுள் நீதி நெறியுள்ளவரே. ஆனால் அவர் நீதி நெறியுள்ளவர் அல்ல, கருணையுள்ளவர் என்று கூறுவதே சரியாகும். அவர் கருணையுள்ளவராக இருப்பதால்தான் நீதி நெறியுள்ளவராக இருக்கிறார். கடவுளுக்கு தான் கொடுக்க வேண்டிய கடனைக் கொடுப்பதாக மனிதன் சிற்சில சமயங்களில் கூறுகிறான். ஆனால், ஓர் அடிமை எஜமானனுக்கு என்ன கொடுக்கமுடியும்? மனிதன் எப்போதும் கடவுளுக்குக் கடன்பட்டவனாகவே இருக்கிறான்; ஒருபோதும் அவரைத் தனக்குக் கடன் பட்டவராகச் செய்வதில்லை.

கே: எது அவசியமானது? நம்பிக்கையா அல்லது முயற்சியா?

ப: உண்மையில் நம்பிக்கை, முயற்சி இரண்டும் அவசிய மானவையே.

கே: தன் விருப்பம் என்பது மனிதனுக்கு உண்டா?

ப: உண்டு. ஆனால் அதற்கு எல்லை இருக்கிறது. ஒரு கப்பலில் செல்லும் பிரயாணிக்கு எவ்வளவு விருப்பம் இருக்க முடியுமோ அவ்வளவுதான் மனிதனுக்கும் இருக்க முடியும். அந்த எல்லையை மீறுவோமாயின், நாம் இறந்தவர்களைப் போலத்தான்.

கே: கடவுள் இந்த உலகில் தமது நோக்கத்தை நிறைவேற்றிவருகிறார். அப்படித்தானே?

ப: இவ்விதம் நீங்கள் கூறுவது மனிதன் பேசுகிற பேச்சாகும். கடவுளின் நோக்கம் என்ன என்பது எனக்குத் தெரியாது. ஏனெனில், நான் கடவுள் அல்ல. நான் ஒரு மனிதனே. எனவே, கடவுளையும் கடவுளின் நோக்கத்தையும் பேச்சினால் அல்ல, வாழ்க்கையின் மூலம் அறிந்து கொள்ள நான் முயற்சிக்கிறேன். உலகில் உள்ள கோடிக் கணக்கானவர்களுடன் நான் தொடர்பு வைத்துக் கொள்ள முடியாது. அவர்கள் ஒவ்வொருவருடைய இதயத்தையும் நான் அறிந்து கொள்ள முடியாது. ஏனெனில், அவர்களுடைய தொகை எல்லையற்றது அல்லவா? ஆனால், கடவுள் எல்லாம் வல்லவர், எல்லாவற்றையும் அறிந்தவர். அவர் ஒரு நோக்கத்துடன் இந்த உலகத்தையே படைத்திருப்பது போல், மனிதனிலிருந்து எறும்பு வரையில் ஒவ்வோர் உயிரையும் படைத்திருப்பதிலும் அவருக்கு ஒரு நோக்கம் உண்டு.

கே: அது நல்ல நோக்கம் தானா?

ப: ஆமாம், நல்ல நோக்கம்தான். எனினும் மனிதனுடைய பாஷையில் 'நல்ல' என்பது எல்லைக்கு உட்பட்டதே.

கே: தேசபக்தி, ஹிந்து–முஸ்லிம் ஒற்றுமைக்கு அடிப்படை யானது அல்லவா?

ப: ஹிந்து - முஸ்லிம் ஒற்றுமைக்கு தேசபக்தி மாத்திரமே ஆதாரம் என்று கூறமுடியாது. அதற்கு வேறு ஆதாரங்களும் இருக்கின்றன. உதாரணமாக, கடவுளின் ஐக்கியத்தை எடுத்துக்கொள்ளுங்கள். கடவுள் ஒருவரே என்ற கொள்கையில் முஸ்லிம்களுக்கு நம்பிக்கை இருக்கிறது. ஹிந்துக்களுக்கும் அதில் நம்பிக்கை இருக்கிறது. ஹிந்துக்களுக்கு ஒரே கடவுளிடத்தில்தான் நம்பிக்கை உண்டு. பல கடவுள்களிடம் நம்பிக்கையுள்ளவர் ஹிந்து சமயத்தில் ஒருவர்கூட இல்லை. எல்லா இடங்களிலும் வியாபித்துள்ள ஒரே கடவுளிடத்தில்தான் ஹிந்துக்களுக்கு

நம்பிக்கை. எனினும் ஹிந்து சமயத்தில் தேவர்களுக்கும் கடவுளின் அவதாரங்களுக்கும் எண்ணிக்கையே இல்லை. ஆகையால், கடவுள் ஒருவரே என்பதில் ஹிந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் வேற்றுமை இல்லை. விக்கிரக வழிபாடு சம்பந்தமாகத்தான் இரு சமூகங்களுக்கும் மூலாதாரமான வேற்றுமை இருந்துவருகிறது. கல்லை, கடவுளின் சின்னமாக ஹிந்துக்கள் வழிபடுகிறார்கள். ஒவ்வோர் ஹிந்துவின் வீட்டிலும் அத்தகைய சின்னம் இருக்கிறது. அந்த சின்னத்தில் கடவுள் இருப்பதாக ஹிந்துக்கள் நம்புகிறார்கள். கடவுளுக்கும் அவர்கள் வழிபடும் சின்னத்திற்கும் ஐக்கியபாவம் இருப்பதாக ஹிந்துக்கள் கருதுகின்றனர். ஆனால், இந்தக் கொள்கை, முஸ்லிம்களின் மனத்தைப் புண்படுத்துவதாக இருக்கிறது. 'கல் கடவுளாக இருக்க முடியாது' என்று முஸ்லிம்கள் கூறுகின்றனர். அவர்களின் கோணத்திலிருந்து அவர்கள் கூறுவது சரியே. 'இந்தக் கல்லினுள் கடவுள் இருக்கிறார். அவரைத்தான் நாங்கள் வழிபடுகிறோம். கல்லை வழிபடவில்லை' என்று ஹிந்துக்கள் கூறுகின்றனர். இவ்விதம் ஹிந்துக்கள் கூறுவது என் பகுத்தறிவுக்கு உகந்ததாக இருக்கிறது. இந்த முறையில் எதை வேண்டுமாயினும் கடவுளாக வழிபடுவதற்கு இயலும். ஆனால், கடவுளை ஓர் உருவமாக வழிபடுவதை இஸ்லாம் அனுமதிக்கவில்லை.

ஹிந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் உள்ள முக்கியமான வேற்றுமை என்னவெனில், ஹிந்துக்களுக்கு கடவுளின் படமோ அல்லது விக்கிரகமோ புனிதமானது. அதற்குச் சேதம் விளைவித்தால், அவர்களுடைய மனம் புண்படுகிறது. இரு சமூகங்களையும் சேர்ந்த 'அறிஞர்களும்' 'கற்றறிஞர்களும்', பாமர ஹிந்துக்களும் முஸ்லிம்களும் சச்சரவிடும்படி செய்திருக்கிறார்கள். எல்லோரும் கடவுளுடைய குழந்தைகளே என்று அந்த 'அறிஞர்கள்' கூறுவார்களாயின், சண்டை நிற்பதற்கு வழி ஏற்படும். ஒவ்வொரு மதத்தினரும் தங்கள் தங்கள் சொந்த மதத்தைப் பிரசாரம் செய்யலாமேயன்றி, ஆயுத பலாத்காரத்தினால் மதமாற்றம் செய்யக் கூடாது.

கே: இரு சமூகங்களும் ஒற்றுமையுடன் இருக்க வேண்டும் என்ற வேண்டுகோளில், தேச பக்தியைக் காட்டிலும் சமய சம்பந்தமான நோக்கமே அதிக பலம் வாய்ந்ததாக இருக்கிறது. அப்படியல்லவா?

ப: எனது அபிப்பிராயம் அதுதான். ஆனால் பலரும் இந்தக் கருத்தை ஆதரிக்காமல் இருக்கலாம். நாம் அரசியல் ரீதியாகச் சச்சரவிடுகிறோம். ஹிந்து மதம், சத்தியத்தை அடிப்படையாகக் கொண்ட ஒரு சமயம் என்பதே எனது நம்பிக்கை. இஸ்லாம், கிறிஸ்தவ சமயங்களும்கூட அப்

படியேதான். உங்களுடைய கோணத்திலிருந்து கிறிஸ்தவ சமயம் சத்தியமானது; எனது கோணத்திலிருந்து ஹிந்து சமயம் சத்தியமானது.

கே: விக்கிரக வழிபாடு சம்பந்தமாக என்ன சொல்லுகிறீர்கள்?

ப: விக்கிரக வழிபாடு மனிதருடைய இதயத்தில் பதிந்திருக்கிறது. குரானில்கூட உருவ வழிபாடு இருக்கிறது-மசூதியும் ஒரு விதமான உருவ வழிபாடுதானே. விக்கிரகம் அல்லது உருவம் என்ற சொல், மனிதரின் உருவத்தை மாத்திரம் குறிப்பதில்லை. கண்ணால் பார்க்கக் கூடியது எல்லாமே உருவம்தான். மசூதியில் அல்லா வசிக்கிறார் என்ற நம்பிக்கையும், தொழுகையின்போது மெக்கா இருக்கும் திசையை நோக்குவதும் ஒரு விதமான உருவ வழிபாடு தான். 'எங்கள் தொழுகை உருவ வழிபாடாக இருக்கலாம். ஆனால், நீங்கள் அனுசரிக்கும் உருவ வழிபாடு முற்றிலும் வேறாகும்.' என்று முஸ்லிம்கள் கூறலாம். எனினும், நாம் எல்லோரும் உருவ வழிபாட்டை அனுசரிப்பவர்களே என்பது அடிப்படையான உண்மையாகும்.

கே: கிறிஸ்தவ சமயத்திற்கும் ஹிந்து சமயத்திற்கும் இடையே எத்தகைய தொடர்பு சிறந்ததாக இருக்கும்?

ப: இஸ்லாமுக்கும் ஹிந்து சமயத்திற்கும் இடையே உள்ள தொடர்பைப் போலவே, கிறிஸ்தவ, ஹிந்து சமயங்களுக்குள்ள தொடர்பு இருக்க வேண்டும். எல்லா சமயங்களின் சாரமும் ஒன்றுதான். நாம் அவற்றை அணுகும் முறைகள் தான் வெவ்வேறாக இருக்கின்றன.

கே: 'ஏசுநாதரின் உபதேசத்தை நடைமுறையில் அனுசரிப்பதில் காந்தி தான் தலைசிறந்த உதாரணமாவார்' என்று மேனாடுகளில் கூறப்படுகிறது. அவ்விஷயமாகத் தாங்கள் என்ன கூறுகிறீர்கள்?

ப: சத்தியத்தை நாடுபவன் என்ற முறையில், முகமது நபியைக் காட்டிலும் ஏசுநாதருக்கே நான் அதிகக் கடன்பட்டுள்ளேன். இஸ்லாமிலிருந்தும் கிறிஸ்தவ சமயத்திலிருந்தும் நான் அடிக்கடி உவமைகளை எடுத்துக் கூறுகிறேன். என்றாலும், பைபிளின் புதிய ஏற்பாட்டிலிருந்தே என்னால் அகிம்சை உணர்ச்சியைப் பெற முடிகிறது; ஆனால் குரானிலிருந்து அந்த உணர்ச்சியைப் பெற முடிவதில்லை. ஏசுநாதரின் மலைப் பிரசங்கம் என் மனத்தில் ஆழ்ந்த உணர்ச்சியை உண்டாக்கியது. மலைப் பிரசங்கம் இருக்கும் கட்டத்திற்கு வரும்வரையில் பைபிள் வரண்ட ஒரு பாலைவனத்தைப்போல் எனக்குத் தோன்றியது. ஆனால், இன்று பழைய ஏற்பாட்டிலிருந்தும் நான் மிகுந்த பலனை அடைந்துள்ளேன். பழைய ஏற்பாட்டில் உள்ள பல விஷயங்களி

லும் மறைந்து கிடக்கும் உட்பொருளை இன்று நான் உணருகிறேன்.

கே: இஸ்லாம் சமயத்தின் சிறப்பு எதில் அடங்கியிருக்கிறது என்று நீங்கள் கருதுகிறீர்கள்?

ப: இஸ்லாமைப்போல் சகோதரத்துவக் கொள்கையை வற்புறுத்தும் சமயம் வேறு எதுவுமே இல்லை. அது முஸ்லிம்களிடையே மாத்திரம்தான் அக் கொள்கையை வற்புறுத்துகிறது என்பது உண்மையே. எல்லோரையும் சமமாக்கும் சமயமும் இஸ்லாமைப்போல் உலகில் வேறு எதுவுமே இல்லை. உலகத்தில் உள்ள எல்லோருமே சகோதரர்கள் என்று இஸ்லாமைப் பின்பற்றுவோர் கூறுவார்களாயின், எவ்வளவோ மேன்மையாக இருக்கும்.

கே: தீமைகூடக் கடவுளால் சிருஷ்டிக்கப்படுகிறது அல்லவா?

ப: கடவுள் அனுமதியின்றி எதுவுமே உண்டாவதில்லை. எனினும், தீமையை நாம் மாற்றி சீர்படுத்திக் கொள்ள வேண்டும். கடவுள் நமக்கு மனச்சாட்சியைக் கொடுத்திருக்கிறார். நேர்மையான காரியத்தைச் செய்யும் சக்தியையும் கடவுள் நமக்குக் கொடுத்திருக்கிறார். உங்களிடம் அனுமதி பெற்று உங்களுடைய பொருளை எடுத்துக் கொண்டால் அது நேர்மையானது. உங்களுடைய அனுமதியின்றி அதை நான் எடுத்துக் கொண்டால், அதுதான் திருடுவதாகும். எனவே, அந்தப் பொருளை இருந்த இடத்திலேயே நான் திரும்பவும் வைத்துவிட வேண்டும்.

கே: சத்தியம், வெவ்வேறு மனிதருக்கும் வெவ்வேறு விதமானதா?

ப: தர்க்க ரீதியாகப் பார்த்தால், அப்படி இல்லை. சத்தியமே உலகம் முழுதும் வியாபித்திருக்கிறது. அதனால்தான் மனிதரின் சிந்தனை ஒரே விதமானதாக இருக்கிறது. சில்லறை விஷயங்களில் நாம் வேறுபட்ட கருத்துள்ளவர்களாக இருக்கிறோம்; ஆனால் மூலாதாரமான விஷயங்களில் நம்மிடையே கருத்து வேற்றுமை இருப்பதில்லை. இன்று நமது போக்கும், எண்ணங்களும் வெவ்வேறாக இருப்பினும், நாம் எல்லோரும் ஒரே விதமாகச் சிந்திக்கும் காலம் வரும்.

கே: நம்பிக்கைக்கும், கண்களால் காண்பதற்கும் வேற்றுமை உண்டு அல்லவா?

ப: நம்பிக்கையுடன் ஆரம்பித்தால், நம்பிக்கைக்குக் காரணமான பொருளை இறுதியில் காணலாம். எவ்விதம் பரிசோதனை செய்துபார்ப்பது என்பதை அறியாததாலேயே, ஒருவர் நம்பிக்கையுடன் ஆரம்பிக்க வேண்டியிருக்கிறது. இதன் சம்பந்தமாக, நமக்கு முன் சென்றவர்களின் அனுபவம்

நமக்குத் துணையாக இருக்கவேண்டும். அத்தகைய அனுபவம் இராமல் நாம் நம்பிக்கையைப் பயிற்சி செய்து கொள்ளுவது முடியாத காரியம்.

கே: சத்தியத்திற்கு வேறு அறிகுறி ஏதாவது உண்டா?

ப: உண்மையில் சத்தியம்தான் நம்மைத் தாங்குகிறது. மற்றும் பல விஷயங்கள் தாற்காலிகமாக நம்மைத் தாங்கலாம். ஆனால், சத்தியம் மாத்திரமே நம்மை நிரந்தரமாக தாங்குகிறது. அதுதான் நிரந்தரமான ஆனந்தத்தையும் கொடுக்கிறது. சமஸ்கிருதத்தில் ஸத், சித், ஆனந்தம் என்று கூறுகிறோம். சச்சிதானந்தம் என்ற மூன்று சொற்களும் அற்புதமான ஒரு சேர்க்கையாகும். சத்தியம்தான் ஞானம். சத்தியம்தான் உயிர். உங்களிடம் சத்தியம் இருந்தால், உங்களுக்கு ஜீவ சக்தி இருப்பதுபோல் தோன்றுகிறது. மேலும் பேரானந்தத்தை அளிப்பதும் சத்தியமே. உங்களுக்கு சத்தியத்தினுல் ஏற்படும் சக்தியை யாரும் கொள்ளையடித்துச் செல்ல முடியாது. நீங்கள் தூக்கு மேடை ஏறும்படி நேரலாம்; சித்திரவதைக்கு உள்ளாகும்படி நேரலாம். ஆனுல் உங்களிடம் சத்தியம் இருந்தால், அப்போதுகூட உங்கள் இதயத்தில் ஆனந்தமே ஏற்படும்.

# 56

# பலி கொடுப்பது மதம் அல்ல

மிருகங்களைப் பலி கொடுப்பதால் கடவுளுக்கு திருப்தி ஏற்படுகிறது என்ற எண்ணமே உங்களுக்கு இருக்கக் கூடாது. மிருகங்களையோ அல்லது வேறு யாரையோ பலி கொடுப்பது மதமே அல்ல என்பதை உலகம் முழுவதும் உணர்ந்து கொண்டிருக்கிருர்கள். காளியையோ, தேவனையோ அல்லது வேறு ஏதாவதொரு தேவதையையோ திருப்தி செய்வதற்காக மிருகங்களைப் பலி கொடுப்பதில் புண்ணியம் எதுவும் இருக்க முடியாது. ஒரே கடவுளைத் தான் காளி என்றோ, விஷ்ணு, கிருஷ்ணன், சிவன் அல்லது பிரம்மா என்றோ நாம் பூஜிக்கிறோம். ஒரே ஒருவர்தான் கடவுள், வேறு யாரும் அல்ல. அந்தக் கடவுள்தான் சத்திய உருவான அன்பு உருவான, கடவுள்; பழி வாங்கும் கடவுள் அல்ல.

# 57

# நோயிலிருந்து படிப்பினை

அன்னை கஸ்தூரிபாயின் உடல் நிலையைப்பற்றி தேவதாஸ் காந்திக்கு காந்திஜி எழுதிய கடிதம் ஒன்றில் குறிப்பிட்டிருந்ததாவது :

"கஸ்தூரிபாயின் உடல் நிலை மோசமாகி வருகிறது. டாக்டர் கொடுத்த மருந்தினால் விபரீதமான பலனே ஏற்பட்டிருக்கிறது. தனக்கு டாக்டர் சிகிச்சை செய்ய வேண்டுமென அவள்தான் விரும்பினாள். மரணத்தைக் கண்டு அஞ்சுவதில்லை என்று நாங்கள் எல்லோரும் தீர்மானித்திருக்கிறோம். எனவே, கவலைப்பட வேண்டிய அவசியமில்லை. இந்த உடல் அழியாததல்ல. ஒவ்வொருவரும் குறிப்பிட்ட காலத்தில் மரணம் அடைந்துதான் தீர வேண்டும். ஆன்மாதான் அழிவில்லாதது. இந்த உடலின் தன்மையை அறிந்த நாம் முனிவரைப் போன்ற நிலையை, பற்றின்மையை வளர்த்துக் கொள்ளவேண்டும். முனிவரைப் போன்ற நிலை எனில், சாதுவின் அரைகுறையான துறவறம் அல்ல. பற்றின்மை என்றால், இன்பங்களையும் உடைமைகளையும் விரும்பக்கூடாது. கஸ்தூரிபாயின் நோயிலிருந்து நீ இதையெல்லாம் தெரிந்துகொண்டால், நீ அவளிடம் உண்மையான அன்புள்ளவன் எனலாம்."

# 58

# கடவுளை அறிய ஆர்வம் உள்ளவர்

சத்தியத்தை, அதாவது கடவுளை அறிய ஆர்வம் உள்ளவரின் அடையாளங்கள் என்ன என்பதைத் தெரிந்து கொள்ள நீங்கள் விரும்புவீர்கள். கடவுளை அறிய விரும்பும் ஒருவர், கோபம், காமம், பேராசை, பற்றுதல், கர்வம், அச்சம் ஆகியவற்றிலிருந்து பூரண விடுதலை பெற்றிருக்கவேண்டும்; அவர் தம்மை சூன்யமாகச் செய்துகொள்ள வேண்டும்; அவர் முதன் முதலாக வயிற்றையும் நாக்கையும் அடக்கிக் கொள்ளவேண்டும்; பிறகு எல்லாப் புலன்களையும் முற்றிலும் அடக்கியாளக் கூடியவராக இருக்கவேண்டும். நாக்கினால் பேசுகிறோம், சுவையை அறிகிறோம். நாக்கினால்தான் மிகைபடக் கூறுதல், பொய் சொல்லுதல், பிறர் மனத்தைப் புண்படுத்தும்படியாகப் பேசுதல் முதலிய விபரீதமான செயல்களில் ஈடுபடுகிறோம். சுவையான பண்டங்களைத் தின்பதில் நமக்குள்ள ஆசையானது, வயிற்றிற்கு நம்மை அடிமைகளாகும்படி செய்து விடுகிறது. எனவே, மிருகங்களைப்

போல் நாம் சாப்பிடுவதற்காக வாழ முற்படுகிறோம். ஆனால், நாம் கட்டுதிட்டங்களுடன் நடந்து கொள்ளுவோமாயின், தேவர்களுக்கு அடுத்தபடியான நிலையை நாம் எய்த முடியும். புலன்களைக் கட்டுப்படுத்திய ஒருவர்தான் மனிதர்களிடையே முதல் வரும் சிறந்தவருமாவார். அவரிடம் உயர்ந்த குணங்கள் யாவும் இருக்கும். அவர் மூலமாகவே கடவுள் காட்சியளிப்பார். சுயக் கட்டுப்பாட்டிற்கோ அல்லது சுயத் தூய்மைக்கோ அத்தகைய சக்தி உண்டு.

## 59

## உடலை மறந்தால்...

கடவுளைத் தேடுவதற்காக ஒருவர் புண்ணிய ஸ்தலங்களுக்கு யாத்திரை செல்ல வேண்டாம்; தீபங்களை ஏற்றிவைக்க வேண்டாம்; விக்கிரகத்திற்கு அபிஷேகம் செய்வித்து, சாம்பிராணி போட்டு தூபம் காட்ட வேண்டாம். ஏனெனில், கடவுள் நம்முடைய இதயங்களில் வசிக்கிறார். உடலைப் பற்றிய உணர்ச்சியே நமக்கு அறவே இராமற் போய்விடுமாயின், நாம் கடவுளை நேருக்கு நேரில் காண்போம்.

## 60

## உண்மையான ஞானம் எது?

நிச்சயமாக ஏற்படக்கூடிய ஆபத்தைத் தெரிந்து கொண்ட பிறகும் கூட, அதைப்பற்றிச் சிறிதும் கவலைப்படாமல் கடவுளின் கருணையில் நம்பிக்கை வைப்பதே உண்மையான ஞானமாகும். மிருக பலத்தினாலும், கொடுங்கோன்மையினாலும் நமக்குத் துன்பம் ஏற்படாமல் நமக்குக் கடவுள் பாதுகாப்பு அளிப்பார் என்பதில் நமக்கு உறுதியான நம்பிக்கை இருக்க வேண்டும். பல்வேறு துறைகளிலும் தன்னையே தியாகம் செய்துகொள்ளும் உயர்ந்த கலையை நமக்குக் கற்பிக்கும் முதற் பாடமும் கடைசியான பாடமும் பிரார்த்தனையே. பிரார்த்தனை, வேலை எதுவும் இல்லாத ஓர் அத்தைப்பாட்டியின் பொழுது போக்கு அல்ல. அதைச் சரிவர உணர்ந்து உபயோகிப்போமாயின், அதுதான் இணையற்ற சக்தியாக விளங்கும். கடவுள் எல்லோருடைய இதயத்திலும் வசிக்கிறார் என்பதிலும், அவரது முன்னிலையில் எதற்கும் அஞ்சவேண்டியதில்லை என்பதிலும் நமக்கு என்றென்றும் குன்றாத ஜீவ நம்பிக்கை இருக்கவேண்டும். கடவுள் எங்கும் இருக்கிறார், அவர் இராத இடமே இல்லை என்ற ஞானம் நமக்கு ஏற்படும்போது நாம் எல்லோரையும், நமது எதிரிகளைக்

கூட சமமாகக் கருத முற்படுகிறோம். கோபம், துவேஷம் போன்ற இழிவான வெறிக்குணங்களை எதிர்த்து வெற்றி பெறுவதே, பிரார்த்தனையின் மூலம் நமக்குக் கிடைக்கும் பலனாகும்.

# 61

# அவர்களின் ஏகபோக பாத்தியம்!

[உண்மை பேசும் கொள்கை மேனாட்டினரின் ஏகபோக பாத்தியம் என்றும், வஞ்சகத்திலும் மோசடியிலும் தேர்ந்த கீழ்த் திசை நாடுகள் உண்மை பேசும் கொள்கையின் பெருமையை மேனாட்டினரிடமிருந்தே அறிந்து கொண்டதாகவும் இந்தியா வைஸ்ராயாக இருந்த லார்டு கர்சான் கூறியதை, காந்திஜி ஏராளமான ஆதாரங்களுடன் மறுத்த விவரங்கள் முந்திய அத்தியாயம் ஒன்றில் வெளியாகியிருக்கின்றன. உண்மை பேசுதல் போன்ற உயர்ந்த பண்புகள் சம்பந்தப்பட்டவரையில், மேனாட்டினரைக் காட்டிலும் இந்தியர்களே மேம்பட்டவர்கள் என்பதை ஆங்கிலப் பிரமுகர்களே ஒப்புக்கொண்டனர். காந்திஜி அவர்கள் கூறியவற்றிலிருந்து மேற்கோள்களுடன் 1905-இல் 'இந்தியன் ஒபினியன்' பத்திரிகையில் எழுதிய கட்டுரையே கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது.]

நிரந்தரமாக சத்தியத்தைத் தேடும் ஒருவரது புற அடையாளமானது, உண்மை பேசுவதேயாகும். ஆனால், உண்மை பேசுவது இந்திய மக்களின் இயல்புக்கு நேர்மாறானது என்ற அபிப்பிராயம் பொதுவாக இருந்துவருகிறது. அந்தக் கருத்து தவறாக இருக்கலாம், தப்பெண்ணத்தை அடிப்படையாகக் கொண்டதாக இருக்கலாம் என்ற சந்தேகம்கூட யாருக்கும் ஏற்படுவதில்லை. எனவே இந்தியன் ஒரு வஞ்சகனாகவும், போக்கிரியாகவும், பொய் சொல்லித் திரிபவனாகவும்தான் இருக்க வேண்டும் என்று கருதுகிறார்கள். மொத்தத்தில் இந்தியனுக்கு கௌரவ உணர்ச்சியே சூன்யம் என்ற அபிப்பிராயம் நிலவி வருகிறது.

இந்த நாட்டிற்கு வந்துள்ள இந்தியர்கள் யாவரும் அதே ரகத்தைச் சேர்ந்தவர்களே என்று எண்ணுகிறார்கள். பாகுபாடு எதுவுமின்றி எல்லா இந்தியர்களையும் 'கூலிகள்' அல்லது 'அராபியர்கள்' என்று கருதுகிறார்கள். அவர்கள் யாவரும் பொய்யர்கள் என்ற பழிச் சொல்லுக்கு ஆளாகியிருக்கிறார்கள். தென்னாப்பிரிக்காவில் உள்ள இந்தியர்களை இரண்டு பிரிவுகளாகப் பிரிக்கலாம். ஒரு பிரிவினர் ஒப்பந்தத் தொழிலாளர்கள்; மற்றொரு பிரிவினர் வர்த்தகர்கள் ஆவர். ஒப்பந்தத் தொழிலாளர்கள் தாழ்ந்த வகுப்பைச் சேர்ந்தவர்கள். இந்தியாவில் இருப்பதுபோல் இங்கே அவர்களுக்கு ஒழுக்க சம்பந்தமான கட்டுப்பாடுகள் எவையும் இல்லை. எனவே, மானிடராகப் பிறந்த எவரையும் போல் அவர்களும் உயர்த ஒழுக்கத்திலிருந்து வீழ்ச்சியடைவதற்கான சந்தர்ப்பங்கள் இருக்கின்றன.

ஆப்பிரிக்காவில் நான் சந்தித்த ஒவ்வொருவரும், இந்தியர்கள் உண்மையுடன் நடந்து கொள்ளுபவர்கள் அல்ல என்றே கூறுகிறார். இவ்விஷயத்தில் இந்தியத் தொழிலாளர்களைப் போன்ற நிலையில் உள்ள எவரும், அவர்களைக் காட்டிலும் யோக்கியமாக நடந்து கொள்ளுவதில்லை. மேற்கண்ட ஆட்சேபணைக்கு இவ்விதம் நான் பதில் அளிப்பது எனக்கு மகிழ்ச்சியை அளிக்காது. என்றாலும், அந்த வாதத்தின் உதவியைத்தான் நான் நாட வேண்டியிருக்கிறது. இந்தியத் தொழிலாளர்கள் வேறு விதமாக நடந்து கொள்ளவேண்டும் என்பதே எனது விருப்பமாகும். இன்று அவர்கள் சராசரி மனிதர்களைக் காட்டிலும் மேலானவர்கள் என்று ருசுப்பிக்க நான் இயலாதவனாக இருக்கிறேன்.

ஒப்பந்தத் தொழிலாளர்கள் இந்தியாவிலிருந்து, பட்டினி கிடப்பதற்கு ஒப்பான சம்பளத்தில் இங்கே வருகிறார்கள். இது அவர்களுக்கு முற்றிலும் ஓர் அந்நியப் பிரதேசமாகும். இங்கே உள்ள சூழ்நிலையும் அவர்களுக்கு உகந்ததாக இல்லை. அவர்கள் இந்தியாவிலிருந்து புறப்பட்ட விநாடியிலிருந்து அவர்களுடைய வாழ்க்கை முழுவதும் ஒழுக்க சம்பந்தமான போதனை எதுவுமின்றி அவர்கள் காலம் தள்ள வேண்டியிருக்கிறது. அவர்கள் ஹிந்துக்களாயினும் அல்லது முஸ்லிம்களாயினும், அவர்கள் ஒழுக்க சம்பந்தமான கல்வியோ அல்லது சமய சம்பந்தமான கல்வியோ எதுவும் இல்லாமல் இருக்கிறார்கள். வெளி உதவியின்றி கல்வியறிவை அபிவிருத்தி செய்து கொள்ளுவதற்குப் போதிய படிப்பும் அவர்களுக்கு இல்லை. அத்தகைய நிலையில் உள்ள அவர்கள், பொய்சொல்லுவதற்கான அற்ப சந்தர்ப்பம் ஏற்பட்டாலும் அதற்கு பலியாகிவிடுகிறார்கள். சிறிது காலத்திற்குப் பிறகு, பொய் சொல்லுதல் அவர்களுக்கு ஒரு வழக்கமாகவும் நோயாகவும் அமைந்து விடுகிறது. அப்போது அவர்கள் யாதொரு காரணமுமின்றி பொய் சொல்லத் தொடங்கிவிடுகிறார்கள். தங்களுடைய ஸ்தூல வாழ்க்கை முன்னேற்றம் அடைவதற்காக அவர்கள் பொய் சொல்லுவதாகவும் கூறுவதற்கில்லை. ஏனெனில், தாங்கள் என்ன செய்கிறோம் என்பதை அவர்கள் அறிந்துகொள்ளாமலேயே பொய் சொல்லுகிறார்கள். அசட்டை காரணமாக, வாழ்க்கையில் ஒழுக்க சம்பந்தமான விவேகத்தை அவர்கள் அறவே இழந்துவிடும் ஒரு நிலையை அடைகிறார்கள். இந்நிலையில், அவர்களிடம் அனுதாபம் காட்ட வேண்டுமா அல்லது அவர்களை வெறுக்க வேண்டுமா? இரக்கம் காட்டுவதற்குத் தகுதியற்ற போக்கிரிகளைப்போல் அவர்களை நடத்துவதா அல்லது திக்கற்றவர்களான அவர்கள் அனுதாபத்திற்குப் பாத்திரமானவர்கள் என்று கருதுவதா? அதுபோன்ற சந்தர்ப்பங்களில் அவர்களைப் போலவே நடந்து கொள்ளாத ஒரு பிரிவினர் உலகில் எங்கேயாவது இருக்கிறார்களா?

வர்த்தகர்களான இந்தியர்கள் சம்பந்தப்பட்ட மட்டில், வேறு எந்த நாட்டிலும் உள்ள எந்த வர்த்தகர்களையும் காட்டிலும் இந்திய வர்த்தகர்கள் அதிகமாகப் பொய் கூறுபவர்கள் அல்ல

என்பது உறுதியாகும். மற்ற வர்த்தகர்களைக் காட்டிலும் அவர்களிடம் பொய் சொல்லும் வழக்கம் அதிகமாக இல்லை. ஏனெனில், சிக்கலான நவீன நாகரிகத்தில் ஆழ்ந்துள்ள மற்றவர்களைப் போல் இந்திய வர்த்தகர்கள் சொகுசான பழக்க வழக்கங்களுக்கு உட்பட்டவர்கள் அல்ல. எனவே, அதிகமாகப் பொய் கூற வேண்டும் என்ற அவசியம் இந்திய வர்த்தகர்களுக்கு இல்லை.

பண்பாடு குறைவான ஆங்கிலேயர்களிடம் துரதிருஷ்டவசமாக ஒரு தீய குணம் உண்டு. அதாவது, முன்பின் பழக்கமில்லாத ஓரிடத்தில் தொடர்பு கொள்ளும்படியான அவசியம் அவர்களுக்கு ஏற்படும் போது, அவர்கள் அந்தச் சூழ்நிலையை வெறுப்பதும், அதைக் கண்டு ஆத்திரப்படுவதும் வழக்கம்; அதைக்குறித்து கற்பனையான புகார்களை யெல்லாம் கூறுவதும் அவர்களுடைய வழக்கமாகும்.

எனவே இச் சந்தர்ப்பத்தில், இந்தியர்களின் உண்மை பேசும் சுபாவத்தைக் குறித்து மிகப பிரபல வெள்ளையர்களில் சிலர் ப்கிரங்கமாக என்ன சொல்லியிருக்கிறார்கள் என்பதைக் கவனிப்பது பலன் தரத்தக்கதாக இருக்கும்.

மிகவும் அனுபவம் வாய்ந்த ஆங்கிலோ-இந்தியரான சர் ஜார்ஜ் பர்ட்வுட் கூறுகிறார்:

"ஐரோப்பாவைச் சேர்ந்த சில உயர்ந்த வகுப்பினரைப் போலவே உயர்ந்த வகுப்பைச் சேர்ந்த இந்தியர்களும், ஒழுக்கத்திலும் உண்மை பேசுவதிலும் சிறந்தவராவர். நமக்கு இயல்பாகவே சில உயர்ந்த ஒழுக்கங்கள் இருப்பதாக நாம் பாசாங்கு செய்கிறோம். ஆனால் உண்மையிலேயே அத்தகைய ஒழுக்கங்கள் சம்பந்தப்பட்ட வரையில் நம்மைக் காட்டிலும் இந்திய மக்கள் மிகச் சிறந்தவர்கள்."

ஸ்ரீ பின்காட் கூறுகிறார்:

"சமூக சம்பந்தமான எல்லா விஷயங்களிலும் ஆங்கிலேயர்கள் ஹிந்துக்களின் காலடியில் அவர்களுடைய சீடர்களாக உட்கார்ந்துகொண்டு கற்றுக் கொள்ளுவதற்குத்தான் தகுதியானவர்களேயன்றி, அவர்களுடைய (ஹிந்துக்களுடைய) எஜமானர்களாக இருப்பதற்குத் தகுதி வாய்ந்தவர்கள் அல்ல."

சமூகத்தின் சிறப்பியல்புகளுள் உண்மை பேசுவதும் ஒன்று என்பதில் சந்தேகமில்லை.

சர் ஜான் மெல்காம் கூறுகிறார்:

"இந்தியர்களுடைய மொழியை அறிந்து, அவர்களுடன் அமைதியான தொடர்பு வைத்துக்கொண்டால், நல்ல பலனே ஏற்படும். அவர்கள் பொய் கூறுவதற்கு பீதியோ அல்லது தப்பெண்ணமோதான் காரணம் என்பதும் தெரியும். எனினும் நமது இந்திய பிரஜைகள் அதே அந்தஸ்தில் உள்ள மற்ற தேசத்தினரைக் காட்டிலும் சிறந்தவர்கள் என்றோ, இந்தியர்கள் பொய்யே சொல்லாதவர்கள் என்றோ நான் கூறவில்லை. பொய் சொல்லுவதில் மற்றவர்களைவிட இந்தியர்கள் அதிகமாகத் தங்களைக் கெடுத்துக் கொண்டுவிடவில்லை என்பதே எனது நிச்சயமான அபிப்பிராயமாகும்."

ஸ்ரீ. எல்பிஸ்டன் கூறுகிறார் :

"ஹிந்துக்களிடையே உள்ள எந்தப் பிரிவினரும், நமக்குச் சொந்தமான பெரிய நகரங்களில் உள்ள அடி வண்டல் நபர்களைக் காட்டிலும் அவ்வளவு இழிவானவர்கள் அல்ல."

வங்காள லெப்டனன்ட் கவர்னரான சர். ஸி. ஈ. எலியட், கே. ஸி. எஸ். ஐ. எழுதியுள்ள 'இந்திய மக்கள்' என்ற நூலில் அவர் பின்வருமாறு கூறியுள்ளார் :

"இந்திய சுதேசிகள், உண்மை என்றால் என்ன என்பதையே அறியாதவர்கள் என்று அடிக்கடி கூறப்படுகிறது. நான் கண்டவரையில் அப்படி எதுவும் இல்லை. இந்தியர், தங்கள் சொந்த கிராமத்தில் உள்ள பொது மக்கள் இருக்கும் இடத்திலிருந்து வெகு தொலைவில் உள்ள கோர்ட்டில் திடுக்கிடத் தக்க விதத்தில் பொய் சாட்சியங்கள் கூறுகிறார்கள் என்பது உண்மையே. பண ஆசையினாலோ அல்லது சுயநலம் காரணமாகவோதான் அவர்கள் அப்படிச் செய்கிறார்கள். எனினும், அவர்கள் தங்களுடைய சொந்த கிராமங்களில் கிராம மக்களுக்கு மத்தியில் ஒரு போதும் பொய் கூறுவதில்லை. அத்தகைய சந்தர்ப்பங்களில் உண்மை கூறுவது தங்களுக்கு பாதகமாக இருக்கும் என்பது தெரிந்திருந்தும்கூட, அவர்கள் உண்மையே பேசுவது வழக்கமாக இருந்து வருகிறது."

'மற்ற எந்த நாட்டையும் விட இந்தியாவில் வர்த்தகர்கள் அதிக கௌரவம் வாய்ந்தவர்களாக இருக்கிறார்கள். அவர்கள் கொடுக்கும் உண்டியல் ஒரு காலத்திலும் செல்லாமற் போனதில்லை' என்று ஆங்கில வியாபாரிகள் தம்மிடம் அடிக்கடி கூறியதாக பேராசிரியர் மாக்ஸ் முல்லர் குறிப்பிட்டுள்ளார். அவர் மற்றோரிடத்தில் பின் வருமாறு கூறியிருக்கிறார் :

"இந்தியர்களின் பஞ்சாயத்து சபைகளில் அவர்கள் உண்மை கூறுவதையே வழக்கமாகவும் மத சம்பந்தமான கடமையாகவும் கொண்டிருக்கிறார்கள். ஒருவருடைய சொத்து, சுதந்திரம், உயிர் ஆகியவை, அவர் பொய் கூறினால்தான் பாதுகாக்கப்படும் என்ற நிலை இருந்தது. அப்படியிருந்தும் அவர் பொய் கூற மறுத்துவிட்டார். இது போன்ற நூற்றுக்கணக்கான சம்பவங்களை நான் அறிவேன் என்று கர்னல் ஸ்லீமன் கூறியுள்ளார். ஆனால் ஆங்கிலேயர்களைப் பற்றி ஓர் ஆங்கில நீதிபதி மேற்கண்ட விதம் உறுதி கூற முடியுமா?"

இந்தியாவிலுள்ள கிராம மக்களின் வாழ்க்கையைப் பற்றி பெரும்பாலான ஆங்கிலேயர்களுக்கு எதுவுமே தெரியாது. அப்படியிருக்க இந்தியர்களின் சமூக, தார்மிக ஒழுக்கங்களைப் பற்றி அபிப்பிராயம் கூற ஆங்கிலேயர்களுக்கு என்ன தகுதி இருக்கிறது? ஹிந்துக்களின் ஒழுக்கமும் பண்புகளும் அவர்களுடைய கிராம வாழ்க்கையுடன் இறுகப் பிணைக்கப்பட்டிருக்கின்றன.

எனவே, இந்தியர்கள் உண்மை பேசுபவர்கள் அல்ல என்ற குற்றச்சாட்டு முற்றிலும் பொய் என்பதை ருசுப்பிக்க மேற்

கண்ட பிரமுகர்களின் கருத்துகளை மேற்கோள் காட்டியிருப்பதே போதுமானது. அவர்கள் யாவரும் அவ்விஷயமாக உறுதியான அபிப்பிராயம் கூறுவதற்குத் தகுதி வாய்ந்தவர்கள், அனுபவம் உள்ளவர்கள். தார்மிகக் கட்டுப்பாடு எதுவுமே இல்லாத இடங்களுக்குப் போக நேர்ந்த இந்தியர்கள் மாத்திரமே உண்மை பேசுவதிலிருந்து ஓரளவு வழுவும்படி நேர்ந்திருக்கிறது.

சமீபத்தில் நடந்த பொதுக்கூட்டம் ஒன்றில் பேசிய ஸ்ரீ லவ்டே, இந்தியர்களின் வஞ்சகம், பொய், தந்திரம் ஆகியவற்றைப்பற்றி வெகுவாகக் குறிப்பிட்டார். இந்தியர்களின் வஞ்சக புத்தி, கிளிவையும் தொத்திக் கொண்டது என்று லார்டு மெகாலே கூறியிருப்பதை லவ்டே மேற்கோளாக எடுத்துக் காட்டினர். மெகாலே எழுதியுள்ள சரித்திரத்தை, அதில் உண்மை விவரங்கள் அடங்கியுள்ளன என்பதற்காக யாரும் வாசிப்பதில்லை; அதன் இலக்கியச் சிறப்புக்காகவே வாசிக்கிருர்கள். அதே மெகாலே இந்தியர்களைப்பற்றி பின் வருமாறு கூறியிருக்கிருர் என்பதும் குறிப்பிடத்தக்கதாகும்:

"இந்தியப் பெருமக்களை நம்முடைய நிர்வாகத்தில் கடவுள் ஒப்படைத்திருக்கிருர். எனவே நம்முடைய நிர்வாக ஊழலால் அத்தகைய மக்களை உணர்ச்சியற்றுப் போகும்படி நாம் செய்துவிடக் கூடாது. தீமை, அறியாமை, துன்பம் ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்ட அதிகாரத்தினுல் என்ன பெருமை ஏற்பட முடியும்? அறிவொளி பொருந்திய இந்திய மக்களுக்கு நாம் செய்ய வேண்டிய மிகப் புனிதமான கடமைகளிலிருந்து நாம் வழுவிவிடக் கூடாது. மானிட வர்க்கத்தின் ஒரு பகுதியினரான இந்திய மக்களுக்கு சமத்துவமான சுதந்திரத்தையும் நாகரிகத்தையும் நாம் அளிக்காவிடில், நாம் சுதந்திரமாக இருப்பதற்கும் நாகரிகத்துடன் இருப்பதற்கும் பொருளில்லாமற் போய்விடும்."

## 62

# உடலும் உலகமும்

ஆசிரமத்தில் இருந்த சகோதரிகளுக்கு ஒரு சமயம் காந்திஜி எழுதிய நீண்ட கடிதத்தின் விவரம் வருமாறு:

பிண்டம் என்பது நமது உடல்; பிரம்மாண்டம் என்பது இந்த உலகமாகும். உடலில் அடங்கியுள்ளவையெல்லாம் உலகத்திலும் அடங்கியுள்ளன. உடலில் இல்லாதது உலகத்திலும் இல்லை. நமது உடல் மண்ணுல் உருவானது. பூமியில் பஞ்ச பூதங்கள் அதாவது மண், தண்ணீர், நெருப்பு, வாயு, ஆகாசம் இருக்கின்றன. இதே பூதங்கள் உடலிலும் இருக்கின்றன. பூமியில் பல்வேறு ஜீவ பிராணிகள் உள்ளன. உடலிலும் பல்வேறு ஜீவ அணுக்கள் இருக்கின்றன. உடல் இறந்து மீண்டும் பிறக்கிறது. அது போலவே பூமியும் மாறுதலுக்கு உட்பட்டிருக்

கிறது. இவ்விதமே கூறிக் கொண்டு போகலாம். உடலைப் பற்றிய உண்மையான அறிவு நமக்கு இருக்குமாயின், உலகத்தைப் பற்றிய உண்மையான அறிவும் நமக்கு ஏற்படும். பின்னர் அதையொட்டி ஆராய்ச்சி செய்ய நாம் வெகு தூரத்துக்குச் செல்ல வேண்டிய அவசியமில்லை. உடல் அருகிலேயே இருக்கிறது. எனவே, உடலைப்பற்றி நன்கு அறிந்து கொண்டுவிட்டால், நாம் நமது லட்சியத்தை அடைந்தவர்களாவோம். உடலைப் பற்றிய உண்மையை அறிந்துகொள்ளாமல் நாம் உலகத்தைப் பற்றி அறிந்துகொள்ள முற்படுவோமாயின், நமது அறிவு பூர்த்தியடைந்ததாகாது. அதனுல்தான், உடலில் இராதது உலகத்தில் இல்லை என்றும், எனவே நம்மைப்பற்றி நாம் தெரிந்து கொண்டு விட்டால், பின்னர் நாம் எல்லாவற்றையும் தெரிந்து கொண்டவர்களாவோம் என்றும் ஞானிகள் கூறியிருக்கிருர்கள். நம்மைப்பற்றி நாம் அறிந்து கொள்ளும்போது, நாம் மற்றும் பல விஷயங்களைப் பற்றியும் தெரிந்து கொள்ளுகிறோம். அதுவும் நம்மைப்பற்றிய அறிவின் ஓர் அம்சமேயாகும்.

சரித்திர புருஷரான கிருஷ்ணனை கீதாச்சாரியாரான கிருஷ்ணனுடன் நாம் குழப்பக்கூடாது. கீதாச்சாரியாரான கிருஷ்ணன், அர்ஜுனனுடன் பலாத்காரத்தையும் அகிம்சையையும் பற்றி விவாதிக்கவில்லை. பொதுவாக விரோதிகளைக் கொல்லுவதை அர்ஜுனன் வெறுக்கவில்லை; ஆனுல், தன் உறவினர்களைக் கொல்ல வேண்டியிருக்கிறதே என்றுதான் அவன் வேதனையடைந்தான். ஒருவர் தமது கடமையைச் செய்யும்போது உறவினர் என்றும், மற்றவர்கள் என்றும் வேற்றுமை பாராட்டக் கூடாது என்று கிருஷ்ணன் கூறினர். கீதை ஏற்பட்ட காலத்தில், யுத்தம் செய்வதா, வேண்டாமா என்ற பிரச்னையை முக்கிய ஸ்தானத்தில் இருந்த எவரும் எழுப்பவில்லை. சமீப காலத்தில் தான் அப் பிரச்னை எழுந்திருப்பதாகத் தோன்றுகிறது. அந்த நாட்களில் ஹிந்துக்கள் யாவரும் அகிம்சையில் நம்பிக்கை வைத்திருந்தார்கள். ஆனுல், எது இம்சை, எது அகிம்சை என்பது பற்றியே அப்போதும் விவாதம் நடந்தது, இப்போதும் விவாதம் நடந்துவருகிறது. இன்று நாம் அகிம்சையானவை என்று எண்ணும் பல விஷயங்களையும் இம்சையானவை என்று எதிர் கால சந்ததிகள் நினைக்கலாம். ஏனெனில், நாம் பாலையோ அல்லது தானியங்களையோ உணவாக உபயோகிக்கும்போது, நாம் உயிர்ப் பிராணிகளை அழிக்கிறோம். எனவே, நமது சந்ததிகள் பால் உற்பத்தியையும் உணவு தானியங்களின் உற்பத்தியையும் கைவிட்டு விடலாம். இப்போது நாம் பாலையும் உணவு தானியங்களையும் உட்கொண்டு வந்தாலும் கூட, நம்மை நாம் அகிம்சை வாதிகள் என்றே கருதுகிறோம். அது போலவே கீதை தோன்றிய யுகத்தில், யுத்தமானது சர்வ சாதாரணமாக நிகழும் சம்பவமாக இருந்தது. எனவே, அதை அகிம்சைக்கு முரணனது என்று யாரும் கருதவில்லை. ஆகையால், கீதையில் யுத்தம் உவமையாகக் கூறப்பட்டிருப்பதில் தவறு எதுவும்

இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. எனினும், கீதை முழுவதையும் நாம் ஆராய்ச்சி செய்தால், ஸ்திதப்ரக்ஞன், பிரம்மபூதன், பக்தன், யோகி முதலியோரைப்பற்றி அதில் உள்ள வர்ணனைகளை நாம் பரிசீலனை செய்தால், நாம் கீழ்க்கண்ட ஒரே முடிவிற்குத் தான் வர முடியும்: கீதையை உபதேசித்த கிருஷ்ணன் அகிம்சையே உருவான அவதார மூர்த்தி. யுத்தம் செய்ய வேண்டுமென அவர் அர்ஜுனனுக்கு உபதேசம் செய்ததன் காரணமாக அவரது பெருமை எள்ளளவும் குன்றிவிடவில்லை. அதற்கு மாருக, கிருஷ்ணன் அர்ஜுனனுக்கு வேறுவிதமான ஆலோசனை கூறியிருந்தால், அவரது ஞானம் பூரணமானதல்ல என்பது ருசுவாகியிருக்கும்; யோகீசுவரன் (யோகிகளுக்கெல்லாம் மன்னன்) என்ற பெயருக்கு அவர் தகுதியற்றவராகியிருப்பார்; அப்பழுக்கற்ற பூரண அவதார மூர்த்தி என்று அவரைத் துதிப்பதற்கும் இடமிராமற் போயிருக்கும்.

# 63

# நம்பிக்கை வளர்ந்த வரலாறு

“கடவுளிடத்தில் உங்களுக்குள்ள நம்பிக்கையைப் பலப்படுத்துவதற்கான குறிப்பிட்ட சம்பவங்கள் உங்களுடைய வாழ்க்கையில் நிகழ்ந்தது உண்டா?”

இவ்விதம் ‘கல்யாண்’ பத்திரிகாசிரியர் கேட்ட கேள்விக்குப் பதிலாக காந்திஜி கூறியதாவது:

“அத்தகைய சம்பவங்கள் எவையும் நிகழ்ந்ததாக எனக்கு நினைவில்லை. ஆதியில் நான் நம்பிக்கை குன்றியவனுகவே இருந்தேன். எனினும், தியானத்தின் மூலமும், சமயங்களை ஆராய்ச்சி செய்ததன் பலனுகவும் எனக்கு நம்பிக்கை உண்டாயிற்று அந்த நம்பிக்கை நாளுக்கு நாள் வளர்ச்சியடைந்து வருகிறது. அதன் பலனுக, என் இதயத்தில் கடவுள் இருக்கிறுர் என்ற உண்மையை நாளுக்கு நாள் அதிகமாக நான் உணர்ந்து வருகிறேன். எனினும் இந்தக் கேள்வியை நீங்கள் ஏன் கேட்டீர்கள்? எனது பதிலை ‘கல்யாண்’ பத்திரிகையில் நீங்கள் வெளியிட உத்தேசித்தால், அதனுல் யாதொரு பலனும் ஏற்படாது. உங்களுக்காக நீங்கள் இந்தக் கேள்வியைக் கேட்டிருந்தால், இவ்விஷயத்தில் ஒருவருடைய அனுபவமானது மற்றொருவருக்கு பலன் அளிப்பதாக இராது என்பதை உங்களுக்கு நான் கூற விரும்புகிறேன். நம்பிக்கையை அடிப்படையாகக் கொண்ட இடைவிடாத முயற்சியின்மீதே நம்பிக்கை வளர்ந்து பலம் பெற முடியும்.”

## 64

# உடலைப் பேண வேண்டிய அவசியம்

ஹேமப்ரபா தேவியின் மகனை அருண் நோயுற்றிருந்தான். அச்சமயத்தில் கூட அவன் ஓய்வு எடுத்துக்கொள்ள மறுத்துவிட்டான். எனவே, அவ்விஷயமாக அவனுக்கு எழுதிய கடிதத்தில் காந்திஜி குறிப்பிட்டிருந்ததாவது: நீ நோயுற்றிருப்பதாகவும், அப்படியிருந்தும் நீ வாசிப்பதையும் வேலைசெய்வதையும் விடாமல் இருந்து வருவதாகவும் உன் தாயார் எனக்கு எழுதியிருக்கிறார். நீ ஓய்வு எடுத்துக்கொண்டு, நோயிலிருந்து குணமடைய உன் உடலுக்கு ஒரு சந்தர்ப்பம் அளிக்கமாட்டாயா? வாழ்வும் மரணமும் ஒரே நாணயத்தின் இரண்டு புறங்களே. நாம் உற்சாகத்துடன் வாழ்வதைப் போலவே, உற்சாகத்துடன் இறக்கவும் வேண்டும். என்றாலும், உயிர் இருக்கும்வரையில் இந்த உடலுக்கு நாம் கொடுக்க வேண்டியதைக் கொடுத்துத் தீர வேண்டியது அவசியமாகும். அவ்விதம் செய்யவேண்டிய பொறுப்பை கடவுள் நம்மிடம் விட்டிருக்கிறார். அவ்விஷயமாக நியாயமான முறையில் எல்லாவிதமான அக்கறையும் நாம் எடுத்துக் கொள்ள வேண்டியவர்களாக இருக்கிறோம். கடவுள் உனக்கு அருள் புரிவாராக.

## 65

# வாழ்க்கைப் போராட்டம்

ஸ்ரீமதி ஈஸ்தருக்கு காந்திஜி எழுதிய கடிதத்தின் ஒரு பகுதி பின்வருமாறு: "நீங்கள் செய்வதை யெல்லாம் நான் நன்கு உணர்ந்துள்ளேன். இருந்தாலும் நீங்கள் மனக் கவலைக்கு இடம் கொடுத்துவிடக்கூடாது. கடவுள் சித்தத்தின் கருவிகளாக நம்மை நாம் செய்துகொண்டு விடுவோமாயின், நாம் ஒரு விநாடி கூடக் கவலைப்பட வேண்டிய அவசியம் இராது. புயலின்றி அமைதி இல்லை. போராட்டம் இல்லாமல் சமாதானம் இல்லை. சமாதானத்தில் போராட்டம் அடங்கி யிருக்கிறது. உள்ளேயோ அல்லது வெளியிலோ போராட்டத்தை இடைவிடாது எதிர்த்து நிற்பதே வாழ்க்கையாகும். அதனால்தான் போராட்டத்தினிடையே அமைதியை நாடவேண்டிய அவசியம் ஏற்படுகிறது."

## 66

# பிரார்த்தனைக்கு எவ்வளவு நேரம்?

பிரார்த்தனைக்காகச் செலவு செய்யப்படும் நேரத்தைக் குறித்து பண்டித காரேய்க்கு காந்திஜி எழுதிய கடிதத்தில் பின்வருமாறு குறிப்பிட்டிருந்தார்·

பிரார்த்தனைக்காக ஆகும் நேரத்தைக் குறித்து நாம் முணு முணுக்கக் கூடாது. தினந்தோறும் 5 தடவை பிரார்த்தனை கள் செய்ய வேண்டுமென இஸ்லாம் கட்டளையிடுகிறது. ஒவ்வொரு தடவையும் முஸ்லிம்கள் பிரார்த்தனையைச் செய்து முடிக்க 15 நிமிடங்கள் செல்லுகின்றன. ஒவ்வொரு தடவையும் ஒரேவித மான வாக்கியங்களையே அவர்கள் கூறுகின்றனர். கிறிஸ்தவர் களும் ஒவ்வொரு தடவையும் 15 நிமிட நேரம் பிரார்த்தனை செய் கின்றனர். கத்தோலிக்கருக்குச் சொந்தமான கிறிஸ்தவாலயங் களிலும், இங்கிலாந்தில் உள்ள சில 'சர்ச்'களிலும் காலையிலும், மத்தியானத்திலும், மாலையிலும் பிரார்த்தனைகள் நடக்கின்றன. ஒவ்வொரு தடவையும் பிரார்த்தனை முடிய அரைமணி நேரம் ஆகிறது. ஒரு பக்தருக்கு இது ஒரு பெரிய காரியம் அல்ல. எனவே, நம்முடைய பிரார்த்தனை நேரத்தில் எவ்வித மாறுதலும் செய்வதற்கில்லை. அவ்விஷயத்தை நன்கு ஆலோசித்தே முடிவு செய்துள்ளோம். இனி அதை மாற்றுவதற்கில்லை. நமது பிரார்த் தனைகளின் பெருமையை அறிந்துகொள்ள நாம் கற்றுக்கொள்ள வேண்டும். நாம் பேரின்பத் தோற்றத்தைக் காண, பிரார்த்தனையை ஒரு கருவியாகச் செய்துகொள்ள வேண்டும். தினசரி நமக்குத் தேவையான ஆன்மிக ஊட்டத்தை, பிரார்த்தனைகளிலிருந்துதான் நாம் பெறுகிறோம். எனவே, பிரார்த்தனைகளில் மாறுதல் செய்ய வேண்டும் என்பது பற்றி நாம் எண்ணவே கூடாது. அதற்கு மாறாக, இப்போது நடைபெற்று வரும் பிரார்த்தனைகளில் முழு மனத்துடன் ஈடுபடவேண்டும்.

# 67

# விவேகமும் பாசமும்

மணிலாலின்* உடல் நிலை குணமடைய வேண்டும் என்பதற் காக நான் பிரார்த்தனை செய்தேன். அவ்விதம் நான் பிரார்த்தனை செய்தது விவேகத்தின் அறிகுறி அல்ல, ஒரு தந்தையினுடைய பாசத்தின் அறிகுறியே ஆகும். உண்மையில் நாம் செய்யக்கூடிய ஒரே பிரார்த்தனை இதுதான்: 'தங்கள் சித்தப்படி நடக்கட்டும்.' இவ்விதம் பிரார்த்தனை செய்வதால் என்ன பலன் என்று சிலர் கேட்கலாம். பிரார்த்தனைக்கு லோகாயதமான முறையில் அர்த் தம் செய்துகொள்ளக் கூடாது. நம்முடைய இதயத்தில் கடவுள் இருப்பதை நாம் உணருகிறோம். பாசத்தை உதறித் தள்ளுவதற் காகவே, கடவுளை நமக்குப் புறம்பாக இருக்கும் ஒருவராகக் கருதி பிரார்த்தனை செய்கிறோம். தான்தோன்றித் தனமுள்ள நமது சித்தம் எங்கே நம்மைக் கொண்டு செல்லுகிறதோ அங்கே செல்ல நாம் விரும்பவில்லை; கடவுள் எங்கே நமக்கு வழிகாட்டுகிறாரோ அங்கே செல்லவே நாம் விரும்புகிறோம் என்பதுதான் பிரார்த்

* மணிலால் காந்தி, காந்திஜியின் இரண்டாவது புதல்வர்.

தனையாகும். வாழ்வது நல்லதா அல்லது இறப்பது நல்லதா என்பது நமக்குத் தெரியவில்லை. எனவே, உயிர் வாழ்வதைக் குறித்து நாம் ஆனந்தம் அடையக் கூடாது. அதுபோலவே மரணத்தைப் பற்றிய எண்ணமானது நமக்கு நடுக்கத்தை உண்டாக்கக் கூடாது. வாழ்வு அல்லது மரணம் இரண்டையும் ஒன்றாகவே கருத வேண்டும். இதுதான் சிறந்த கொள்கையாகும். நாம் அத்தகைய நிலையை அடைய வெகு காலமாகும். நம்மில் வெகு சிலர்தான் அதை அடைய முடியும். எனினும், அந்த நிலையை அடைவதற்கான முயற்சியை நாம் தளரவிடக் கூடாது. அதை அடைவதற்கு எவ்வளவுக்கு கஷ்டமாக இருக்கிறதோ அவ்வளவுக்கு நமது முயற்சியும் தீவிர மாக இருக்க வேண்டும்.

மனிதனின் ஆயுட்காலம் நூறு ஆண்டுகளாக இருக்கலாம்; அல்லது அதற்கு அதிகமாகவும் இருக்கலாம். அவன் எவ்வளவு நீண்ட காலம் வாழ்ந்தாலும் சரி, அவனது ஆயுட்காலம் ஆதி அந்தமற்ற கால சமுத்திரத் துளியின் கோடியில் ஒரு பகுதியே யாகும். எனவே, அதில் பற்றுதல் வைப்பதும், அதைப்பற்றிய புள்ளி விவரங்களைக் கணக்கிடுவதும் அர்த்தமற்றது. ஒரு மனிதன் எவ்வளவு காலம் வாழக் கூடும் என்பதை நாம் ஊகிக்கலாமே யன்றி, அதை யொட்டி நாம் எதுவும் நிச்சயமாகக் கூறிவிட முடியாது. மிகவும் ஆரோக்கியமான குழந்தைகள் கூட இறந்து விடுவதை நாம் காண்கிறோம். வாழ்க்கை இன்பங்களில் ஈடுபட்டுள்ள ஒருவன் அதிக காலம் உயிர்வாழ முடியாது என்றும் நாம் நிச்சயமாகக் கூற முடியாது. ஒழுக்கத்துடனும் எளிமையாகவும் வாழும் ஒருவன், ஒருவேளை நீண்ட காலம் உயிர்வாழலாம் என்று மாத்திரமே நாம் கூற முடியும், எனினும், நீண்ட காலம் உயிர் வாழ்வதற்காக ஒருவன் தன்னடக்கத்தைப் பயிற்சி செய்து கொள்வது, மலையைக் கெல்லி எலி பிடிப்பதற்கு ஒப்பாகும். நம்மை நாமே அறிந்து கொள்வதற்காகவே நாம் வெறிக் குணங்களைக் கட்டுப்படுத்திக் கொள்ளவேண்டும். அவ்விதம் ஒழுக்கத்துடன் இருந்தும் நம் ஆயுள் விருத்தியடையவில்லை எனில், அதை நாம் பொருட்படுத்தக் கூடாது. தன்னடக்கத்தினால் பெறக் கூடிய முக்கிய பலன், ஆரோக்கியமும் நீண்ட ஆயுளும் அல்ல.

## 68

## சமய உரிமையும் கடமையும்

பார்சிகள் தங்களுடைய ஜொராஷ்டிர மதத்திற்கு அடையாளமாக புனித 'பெல்டு'ம் ஷர்ட்டும் அணிவது வழக்கம். ஆனால், அச் சமூகத்தைச் சேர்ந்த தர்பாரி சாது அவ்விரண்டையும் கை விட்டுவிட்டது, அவரது உறவினர்களுக்கு மனவேதனையைக்

கொடுத்தது. எனவே, அவர்களுக்கு எழுதிய கடிதத்தில் காந்திஜி குறிப்பிட்டிருந்ததாவது:

தர்பாரி சாது அவற்றைக் கைவிட வேண்டிய அவசியமில்லை. அவர் வீட்டுக்குத் திரும்பிவந்தபின் மீண்டும் அவற்றை அணிந்து கொள்வார் என்றே நம்புகிறேன். அவற்றை அணிவதில் மூட நம்பிக்கையோ அல்லது பாவமோ எதுவும் இல்லை. அவற்றை அணிந்துகொள்வதால் யாதொரு அபாயமும் ஏற்படுவதில்லை. அவற்றைக் கைவிடுவது பார்சிகளுக்கு அதிர்ச்சியைக் கொடுக்கிறது. மக்களின் ஊழியர், அவர்களுக்கு அவ்விதம் காரணமின்றி அதிர்ச்சியைக் கொடுப்பது சரியல்ல. அவ்விதம் செய்வது அகிம்சைக் கொள்கைக்கும் முரணகும். அவற்றிற்கு அதிக முக்கியத்துவம் கொடுக்காமல் இருப்பதே போதுமானது. தர்பாரி சாதுவுக்கு, பார்சி சமய நூல்களைக் கொண்டுபோய்க் கொடுக்கும்படி நான் தயாபாயைக் கேட்டிருக்கிறேன்.

ஜொராஸ்டிர சமயம் மிகப் புராதனமானது. எனவே அதன் நூல்களில் பல இப்போது நடை முறையில் இல்லை. இப்போது இருக்கும் பகுதிகளிலும் உபநிடதங்களைப் போன்ற பாகங்கள் எதுவுமில்லை. தர்பாரி அவற்றையெல்லாம் வாசித்து சிந்திக்க வேண்டும். அவர்களுடைய சமய நூல்களும் ஹிந்து வேதங்களும் நெருங்கிய தொடர்பு உள்ளவை. பார்சி வேத நூல்களில் இராததை ஜொராஸ்டிர சமயத்தினர் வேதங்களிலிருந்தும், உபநிடதங்களிலிருந்தும் எடுத்துக்கொள்ளலாம். அவ்விதம் எடுத்துக்கொள்வதில் கௌரவக்குறைவு எதுவும் இல்லை. நாம் நமது சொந்த மதத்தில் உறுதியாக இருக்கவேண்டும். அதே சமயத்தில், மற்ற எந்த மதத்திலிருந்தும் ஒப்புக்கொள்ளக் கூடிய அம்சங்களை எடுத்துக் கொள்ள நமக்கு எல்லாவித உரிமையும் உண்டு. அவ்விதம் எடுத்துக்கொள்ளுவது உரிமை மாத்திரமல்ல, கடமையுமாகும். அந்தக் கடமையை நாம் நிறைவேற்றியே தீர வேண்டும். மற்ற சமயங் களிலிருந்து எதையும் அங்கீகரிக்க முடியாது என்று கற்பனை செய்துகொள்வது சமய வெறியேயாகும். கடவுளின் அருளால் அத்தகைய வெறி நம்மை ஆட்கொண்டு விடவில்லை.

## 69

# எதை தியானம் செய்வது?

"கடவுள்தான் சத்தியம் என்றல், எந்த சின்னத்தைக் கொண்டு மனிதன் அதை தியானம் செய்வது? அவன் ராம நாமத்தை ஜபிக்கலாம். ஆனல், ராமன் என்பவர் யார்?" இவ்வாறு பிரபுதாஸ் கேட்ட கேள்விக்குப் பதிலாகக் காந்திஜி கூறியதாவது:

"சத்திய நாராயணனின் தாமரை போன்ற பாதங்களைப் பற்றி கவி வர்ணித்திருக்கிறார். சத்திய நாராயணன் என்றால் சத்தியமாகிய கடவுள் என்பதேயாகும். சத்தியத்திற்கு உருவம் இல்லை. எனவே, ஒவ்வொருவரும் தமக்கு விருப்பமான ஓர் உருவத்தைத்தான் கற்பனை செய்து கொள்ளவேண்டும். ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமாக சத்தியத்தின் உருவத்தைக் கற்பனை செய்துகொள்ளலாம். மனிதன், தான் விரும்புவதையெல்லாம் அந்த உருவத்தின் மூலம் பெற முடியும். பிரம்மா, விஷ்ணு, ஈசுவரன், பகவான் முதலிய பெயர்களைக் காட்டிலும் சத்தியம் என்பதுதான் கடவுளுக்கு மிகமிகப் பொருத்தமான பெயராகும். கடவுளுக்காக ஒருவர் தமது உயிரையும் விடத் தயாராக இருப்பதாகக் கூறினால், அதன் பொருளை பிறர் தெளிவாக அறிந்து கொள்ள முடியாமல் இருக்கும். ஆனால் சத்தியத்திற்காகத் தாம் உயிரையும் விடத் தயாராக இருப்பதாக ஒருவர் கூறினால், அதை எவரும் எளிதில் அறிந்துகொள்ளுவார்கள்.

"ராமன் யார் என்று நீங்கள் கேட்கிறீர்கள். அந்தச் சொல்லின் பொருளை உங்களுக்கு நான் விளக்கிக் கூறமுடியும். எனினும், அந்தப் பொருளை மனத்தில் வைத்துக்கொண்டு, அந்தப் பெயரை நீங்கள் திரும்பத் திரும்பக் கூறுவதால் பலன் எதுவும் ஏற்படாது. நீங்கள் வழிபட உத்தேசிக்கும் தெய்வமே ராமன் என்ற எண்ணத்துடன் நீங்கள் அந்தப் பெயரை ஜபித்தால், உங்களுக்கு நன்மைகள் ஏற்படும். அந்த எண்ணத்துடன் கிளிப்பிள்ளையைப் போல் அதை நீங்கள் திரும்பத் திரும்பக் கூறினால் கூட உங்களுக்கு அது உதவியாகவே இருக்கும். ஏனெனில், நீங்கள் ஒரு குறிப்பிட்ட நோக்கத்துடன் அந்தப் பெயரை ஜபம் செய்கிறீர்கள் அல்லவா? அப்போது உங்களுக்கு சின்னம் எதுவும் தேவையில்லை. ஆனால், அவ்விதம் ஜபிக்கும் பக்தன் ஒரே ஒரு நிபந்தனையை நிறைவேற்ற வேண்டும். அதாவது, பகட்டுக்காகவோ அல்லது பிறரை ஏமாற்றுவதற்காகவோ ராம நாம ஜபம் செய்யக் கூடாது; உறுதியுடனும் நம்பிக்கையுடனும் ஜபம் செய்ய வேண்டும். அவ்விதம் ஒருவர் உறுதியுடனும் நம்பிக்கையுடனும் ஜபம் செய்தால், அவர் கோரியதெல்லாம் கிடைக்கும் என்பதில் எனக்குச் சிறிதும் சந்தேகமில்லை. போதிய அளவு பொறுமையுள்ள எவரும், தமது சொந்த வாழ்க்கையில் அவ்விதம் தமது கோரிக்கைகள் எல்லாம் நிறைவேறுவதைக் காணலாம்.

"அவ்விதம் ஜபிக்கும் போது பல நாட்கள் வரையில், சிலர் விஷயத்தில் பல ஆண்டுகள் வரையில் கூட, மனம் நிலையின்றித் தடுமாறிக்கொண்டிருக்கும். ராம நாம ஜபம் செய்யும் போது அயர்ந்த தூக்கம் வரும். அதைக் காட்டிலும் மோசமான இடையூறுகளும் குறுக்கிடும். எனினும் ராம நாம பக்தர் உறுதியாக ஜபம் செய்வாராயின், இறுதியில் அதனால் நிச்சயமாகப் பலன் ஏற்படும். நூற்கக் கற்றுக் கொள்ளுவதற்கே மிகுந்த

பொறுமை தேவையாக இருக்கிறது. அப்படியிருக்க நூற்பதைக் காட்டிலும் எத்தனையோ மடங்கு அதிகக் கஷ்டமான ஒரு விஷயத்தில் வெற்றிபெற எத்தனையோ மடங்கு அதிகமான பொறுமை தேவை யல்லவா? எனவே, கடவுளை அடைய நீண்ட காலம் அவசியமான ஒழுங்கு முறையைக் கடைபிடிக்க வேண்டியது அத்தியாவசியமாகும். உங்களுக்கு ராம நாமத்தில் நம்பிக்கை இருக்குமாயின், எப்போதும் அந்த நாமத்தை ஜபம் செய்யுங்கள். நீங்கள் உட்கார்ந்திருக்கும் போதும், நின்றுகொண்டிருக்கும் போதும், படுத்துக்கொண்டிருக்கும் போதும், தண்ணீர் குடிக்கும் போதும், சாப்பிடும் போதும் அந்த நாமத்தை திரும்பத் திரும்பக் கூறுங்கள். அதற்காக உங்கள் ஆயுட்காலம் முழுவதையும் செலவு செய்ய வேண்டியிருந்தால் கூட நீங்கள் சோர்வடையக் கூடாது. அவ்விதம் நீங்கள் முயற்சி செய்தால், நாளுக்கு நாள் உங்கள் மனத்தில் அதிக அமைதியும் ஆனந்தமும் உண்டாகும்."

# 70

# இதயமே ஆலயம்

வெரீர் எல்வின் என்ற பாதிரியார் இந்தியாவின் சுதந்திரப் போராட்டத்தில் அனுதாபம் காட்டியதற்காக, அவர் ஏசுநாதருக்கு துரோகம் செய்தவர் என்று ஒரு பிஷப் அவர் மீது குற்றம் சாட்டியதுடன், கிறிஸ்தவ ஆலயங்களில் அவர் பிரசாரம் செய்வதற்கும் அனுமதிக்க மறுத்துவிட்டார். பாதிரியார் எல்வின் காந்திஜிக்கு எழுதிய கடிதத்தில் அவ்விவரங்களைக் குறிப்பிட்டிருந்தார். அப்பாதிரியாருக்கு பதிலாக காந்திஜி அனுப்பிய கடிதத்தில் பின்வருமாறு தமது கருத்தைத் தெரிவித்திருந்தார்:

"பிஷப் கூறுவதைக் குறித்து நீங்கள் மன வேதனை அடையக் கூடாது என்பதே எனது விருப்பம். உங்களுடைய ஆலயம் உங்களுடைய இதயத்தில் இருக்கிறது. இந்த உலகம் முழுவதும் நீங்கள் சமயப் பிரசாரம் செய்யும் மேடையே யாகும். உங்களுடைய ஆலயத்தின் கூரை நீல வானம்தான். கத்தோலிக்கர் என்ற சொல்லுக்கே விரிந்த மனம் படைத்தவர் என்பதுதானே பொருள்? எனவே, கத்தோலிக்கக் கொள்கை இதயத்தைப் பொறுத்ததே. பைபிளில் வெளியாகியுள்ளபடி ஏசுநாதரின் உபதேசங்களுக்கு விளக்கம் கூற எனக்கு ஏதாவது உரிமை உண்டு என்றால், அந்த உபதேசங்கள் கிறிஸ்தவ ஆலயங்களில் மறுக்கப்பட்டுள்ளன என்பதைக் குறித்து என் மனத்தில் சந்தேகமே இல்லை. உங்களை அவர்கள் பகிஷ்காரம் செய்திருப்பது, உங்களிடம் சத்தியம் இருக்கிறது என்பதற்கு நிச்சயமான ஓர் அடையாளமாகும். நீங்கள் தனியாக இருக்கும் போது, 'நீ சரியான வழியில் போய்க்கொண்டிருக்கிறாய்' என்று உங்களைச் சிருஷ்டித்தவரின்

குரல் உங்களுக்குக் கேட்க வேண்டும். அவ்விதம் கேட்கவில்லை யாயின், உங்களுக்கு நான் வழங்கும் பாராட்டுதல் அர்த்தமற்ற தாகும்."

## 71

## சிங்கத்தைப் போல் எதிர்த்து நில்லுங்கள்

தாவுத்பாய் சிறிது காலம் ஆசிரமத்தில் தங்கியிருந்தார். அவரது நலனில் அக்கறைகொண்ட காந்திஜி அவரிடம் கூறிய தாவது : "தீய எண்ணங்களையும் நோக்கங்களையும் சிங்கத்தைப் போல் எதிர்த்துப் போராட வேண்டும். போரிடுவதுதான் நமது கடமை. ஆனால், வெற்றி கடவுளின் கையில் இருக்கிறது. மனப் பூர்வமாக முயற்சிப்பதுடன் நாம் திருப்தியடைய வேண்டும். நல்ல நண்பர்களை நாடவேண்டும். பம்பாயைப் போன்ற நகரில் ஒரு நல்ல புத்தகம்தான் சிறந்த நண்பன்''.

## 72

## தெவிட்டாத ஆனந்தம்

பிரேம பென்னுக்கு காந்திஜி எழுதிய ஒரு கடிதமே கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது : அந்தராத்மாவின் குரலை விவரித்துக் கூறுவது முடியாத காரியம். சிற்சில சமயங்களில் நம் உள்ளிருந்து ஏதோ உத்வேகம் ஏற்படுவது போல் நமக்குத் தோன்றுகிறது. 1906-ஆம் ஆண்டில் நான் பிரார்த்தனை செய்து கொண்டிருந்த போதுதான் முதன் முதலாக அந்தராத்மாவின் குரலை நான் அறிந்துகொண்டேன். அச் சம்பவம் எனக்கு இன்னும் நினைவில் இருக்கிறது. தலையில் ரோமம் வளருவது போலவே எனது ஆன்மிக வளர்ச்சி கண்ணுக்குத் தெரியாமல் நாளுக்கு நாள் அதிக மாக வளர்ந்து வந்திருக்கிறது.

பாவத்தைப் போக்கிக்கொள்ள நமக்கு நாம ஜபம் உதவியாக இருக்கிறது. தூய உள்ளத்துடன் நாம ஜபம் செய்வோர், பாவத்தை எதிர்த்து வெற்றி பெறுவதற்கு அது உதவியாக இருக்கிறது என்பதில் பூரண நம்பிக்கை யுடையவராக இருக் கிறார்கள். பாவத்தைப் போக்கிக்கொள்ளுவது என்பதற்கு, சுயத் தூய்மை அடைவது என்பதே பொருளாகும். நம்பிக்கையுடன் நாமத்தைத் திரும்பத் திரும்பக் கூறுவோருக்கு ஒரு போதும் சலிப்பு ஏற்படுவதில்லை. ஆரம்பத்தில் நாவில் இருக்கும் அந்த

நாமம், பின்னர் இதயத்தில் பிரவேசித்து அதைத் தூய்மைப்படுத்துகிறது. இது யாதொரு விதிவிலக்கு மின்றி உலகம் முழுவதும் கண்ட அனுபவமாகும். ஒரு மனிதன் எப்படி சிந்திக்கிருனே அப்படியே ஆகிவிடுகிருன் என்று மனேதத்துவ நிபுணர்கள் கூடக் கூறுகின்றனர். இந்தக் கொள்கை ராம நாமத்திற்கும் பொருந்தும். நாம ஜபத்தில் எனக்கு பூரண நம்பிக்கை உண்டு. அதைக் கண்டுபிடித்த மகான் மிகுந்த அனுபவசாலியாவார். அவர் கண்டுபிடித்த நாம ஜப முறை மிகவும் முக்கியமானது. கல்வியறிவற்றவர்கள் கூட அதன் மூலம் மனத் தூய்மையை அடைய முடியும். நாம ஜபத்தின் போது ஜப மாலையை உபயோகிப்பது, மனத்தைக் கட்டுப்படுத்தி ஒரே இடத்தில் லயிக்கும்படி செய்வதற்கு உதவியாக இருக்கிறது. தொண்டு செய்யும் நோக்கத்துடன் மாத்திரமே கல்வி கற்கவேண்டும். தெவிட்டாத ஆனந்தம் தொண்டு செய்வதில் தான் இருக்கிறது. எனவே, பேரின்பத்தைப் பெற கல்வி உதவியாக இருக்கிறது என்று நாம் கூறலாம். தொண்டு செய்யாமல் வெறும் கல்வியினுல் மாத்திரம் யாரும் பேரின்பத்தை அடைந்ததாகத் தெரியவில்லை.

# 73

# உலகம் ஒரேவிதமாக இருப்பதேன்?

“இந்த உலகம் எப்போதும் ஒரே விதமாகவே இருந்து வருகிறது. உலகம் எப்போது அபிவிருத்தி அடையும்?” இவ்விதம் ஓர் அன்பர் கேட்டதற்குப் பதிலாக காந்திஜி கூறியதாவது: “உலகத்தை அபிவிருத்தி செய்யும் விஷயமாக சிந்திப்பதை நாம் விட்டுவிட்டு, நம்மை நாமே அபிவிருத்தி செய்துகொள்ளுவதில் முழு கவனத்தையும் செலுத்த வேண்டும். உலகம் சரியான பாதையில் சென்று வருகிறதா அல்லது தவருன பாதையில் சென்று வருகிறதா என்பதை நாம் கண்டுகொள்ளவே முடியாது. நாம் நேர்மையான பாதையில் சென்ருல், மற்றவர்களும் நம்மைப் பின் தொடருவதை நாம் காண்போம், அல்லது மற்றவர்களையும் நேர்மையான பாதையில் செலுத்துவதற்கான முறையை நாம் கண்டுகொள்ளுவோம். ஒருவர் தம்மைத் தாமே அறிந்து கொள்ளவேண்டுமாயின், இந்த உடலை மறந்துவிட வேண்டும்.”

## 74

# உடல் இருப்பது தொண்டிற்காக

ஓர் அன்பரிடம் காந்திஜி கூறியதாவது: உயிர் பிரிந்த பின் அந்த நண்பரின் உடலை நீங்கள் பார்த்தது நன்மையே யாகும். ஒரு நாள் நாமும் அதே நிலையை அடைவோம் என்பது நிச்சயம். அந்தக் காலம் வரும்போது, நாம் மகிழ்ச்சியுடன் உயிரை விட்டு விடத் தயாராக இருக்க வேண்டும். மண்ணாலான இந்த உடலை நாம் வைத்துக்கொண்டிருக்கும் வரையில், இதைச் சுத்தமாகவும், களங்க மின்றியும், ஆரோக்கியமாகவும் வைத்துக்கொண்டிருக்க வேண்டும். இதை நாம் உதறித் தள்ளவேண்டிய நேரம் வரும் போது, யாதொரு வருத்தமுமின்றி இதை உதறித் தள்ளிவிட வேண்டும். உபயோகத்திற்காக இந்த உடல் நமக்குக் கொடுக் கப்பட்டது. இதை நமக்குக் கொடுத்தவர், இதை விரும்பும் போது எடுத்துக் கொள்ளட்டுமே. ஆனால், இந்த உடலை நாம் தொண்டிற்காக மாத்திரமே உபயோகிக்க வேண்டும்; இன்பம் அனுபவிப்பதற்காக உபயோகிக்கக் கூடாது.

## 75

# வேதனையிலிருந்து விடுதலை

மற்றோர் அன்பருக்கு காந்திஜி எழுதிய கடிதமாவது: உங்க ளுடைய மனைவி காலமானதைக் குறித்து உங்களுடைய துக்கத் தில் நான் பங்கு எடுத்துக்கொள்ள முடியாது. ஏனெனில், உங் கள் மனைவி வேதனையிலிருந்து விடுதலை பெற்றுவிட்டாள். அவள் இறந்த விதமும் காலமும் அவள்மீது நாம் பொறாமை கொள்ளும் படி செய்வதாக இருக்கின்றன. உங்களைப் பராமரிக்க இப்போது யாருமே இல்லையென்று நீங்கள் எண்ணுவது அறியாமையே. நம் எல்லோரையும் பராமரிப்பவர் கடவுள் அல்லவா? உங்களுக்குப் பாதுகாப்பளிக்கும் கவசமாக இருந்தது மணியோ அல்லது உங்க ளுடைய மனைவியோ அல்ல. கடவுளிடம் நமக்கு உள்ள நம்பிக் கையே நமது உண்மையான கவசமாகும். ஒரு கண்ணாடி வளைய லைக் காட்டிலும் கூட இந்த உடல் விரைவில் அழியக் கூடியது. கண்ணாடி வளையலை ஜாக்கிரதையாகக் காப்பாற்றி வந்தால், நூற் றுக்கணக்கான ஆண்டுகள் கூட அப்படியே இருக்கும். ஆனால், நமது உடல்களை எவ்வளவு ஜாக்கிரதையாகக் காப்பாற்றினாலும், ஒரு குறிப்பிட்ட காலத்திற்குமேல் அவை நீடிக்க முடியாது. அந் தக் காலத்திற்குள்ளேயே எந்தச் சமயத்திலும் நமது உடல்கள் அழிந்து விடவும் கூடும். எனவே, நமது உடல்களில் நாம் நம்

யிக்கை வைக்கக் கூடாது. நீங்கள் மற்றக் கவலைகளை யெல்லாம் விட்டு விட்டு ஆசிரம அலுவல்களில் முழு கவனத்தையும் செலுத்த வேண்டும்.

# 76

# சகோதரத்துவ உணர்ச்சி

ஸ்ரீமதி ஈஸ்தர் மேனன் கேட்ட கேள்விக்குப் பதிலாக காந்திஜி கூறியதாவது: நமக்கு சகோதரத்துவ உணர்ச்சி என்பது இப்போது தொலைவில் உள்ள ஓர் அபிலாஷையாகவே இருந்து வருகிறது. என்னைப் பொறுத்த வரையில், உண்மையான ஆன்மிகச் சிறப்பிற்கு அதுதான் உரைகல் ஆகும். எல்லாப் பிராணிகளிடத்திலும் உறவு உணர்ச்சி நமக்கு இல்லையாயின், நமது பிரார்த்தனைகள், உண்ணாவிரதங்கள், தவங்கள் எல்லாம் அர்த்தமற்ற வெறும் சடங்குகளாகிவிடும். இதய பூர்வமாக அத்தகைய உணர்ச்சி நமக்கு ஏற்படுவது ஒரு புறம் இருக்கட்டும்; அறிவை அடிப்படையாகக் கொண்டு கூட அத்தகைய நம்பிக்கை நமக்கு ஏற்படவில்லை. நாம் குறிப்பிட்டவர்களை மாத்திரமே சகோதரர்களாகக் கருதுகிறோம். அவ்விதம் கருதுவது சுயநலமேயாகும். நாம் பிறரை சகோதரராகக் கருதும்போது, அவர் நம்மிடம் அதே உணர்ச்சியுடன் நடந்துகொள்ளுகிறாரா, அல்லவா என்பதை நாம் கவனிக்கக் கூடாது. அப்படி கவனிக்க முற்படுவோமாயின், தீய ஆடவர்கள் மீதும் பெண்கள் மீதும் நாம் அன்பு செலுத்த முடியாது. துவேஷத்திற்கும் பொறாமைக்கும் இடையே அவ்விதம் அன்பு காட்டுவதுதான் உண்மையான சமயமாகும். இந்த உண்மையை உணர்ந்து கொள்ள நம்மில் ஒவ்வொருவரும் முயற்சிக்க வேண்டும். இவ்விதம் முயற்சிக்கும்போது, மற்றவர்கள் என்ன செய்கிறார்கள் என்பதைப் பற்றி நாம் கவலைப் படக் கூடாது.

# 77

# கடவுளே எழுதச் செய்கிறார்

நான் என்ன எழுதுகிறேனோ அதை நான் சுயமாக எழுதுவதில்லை. கடவுளே அதை நான் எழுதும்படி செய்கிறார். இது முற்றிலும் உண்மை. 'எங் இந்தியா' வில் நான் எழுதிய கட்டுரைகளை மறுபடியும் வாசித்தால், எனக்கு மீண்டும் அவ்விதம் எழுத முடியாது என்றே தோன்றுகிறது.

# 78

## சுற்றித் திரியும் சிந்தனைகள்

தர்பாரி சாதுவுக்கு காந்திஜி எழுதிய கடிதத்தின் விவரம் பின் வருமாறு:

ஆன்மிக வளர்ச்சியில், சுற்றித் திரியும் சிந்தனைகள் ஒரு கட்டமாக இருக்க முடியாது. நம்மில் பெரும்பாலோருக்கும் அத்தகைய சிந்தனைகள்தான் துன்பத்தைக் கொடுக்கின்றன. அதனால் தான் மனத்தை ஒரே இடத்தில் லயிக்கச் செய்ய வேண்டும் என்பது வற்புறுத்தப்படுகிறது. இதன் சம்பந்தமாக ஒரு விஷயத்தை மனத்தில் பதிய வைத்துக் கொள்ளவேண்டும். சிற்றின்ப நுகர்ச்சியினால் உடலின் மூலாதார சக்தி வீணாவதுபோல, நம் மனத்தில் எழும் சிந்தனைக் கூட்டங்களால் நம் மனோசக்தி வீணாகிவிடுகிறது. உடலின் பலவீனம் மனத்தைப் பாதிப்பதுபோல், மனத்தின் பலவீனம் உடலைப் பாதிக்கிறது. குறுகிய அர்த்தத்தில் கவனிப்பதாலேயே பிரம்மச்சரியத்தை அனுசரிப்பது நமக்கு மிகவும் கஷ்டமாக இருக்கிறது. அதன் சம்பந்தமான பரந்த அர்த்தத்தை நாம் ஒப்புக் கொண்டு, பதினொரு புலன்களையும் கட்டுப் படுத்த முயற்சித்தால், மிருக இச்சையை அடக்குவது மிகவும் எளிதாகி விடும். எப்போதும் புற நடவடிக்கைகளில் ஈடுபட்டிருப்பதால், மனத் தூய்மையைப் பரிசீலனை செய்ய நேரமில்லை என்று நீங்கள் எண்ணுவது போல் தோன்றுகிறது. ஆனால், எனது அனுபவம் அதற்கு நேர்மாறாகும். அதாவது, மனத் தூய்மை இன்றேல், புற நடவடிக்கைகளில் சுயநல உணர்ச்சியின்றி ஈடுபடமுடியாது. எனவே, புற நடவடிக்கைகளின் தூய்மையை அடிப்படையாகக் கொண்டுதான் மனத் தூய்மையை அளவிட முடியும். புற நடவடிக்கைகளில் தூய்மையின்றி மனத் தூய்மையை அடைய முயற்சிக்கும் ஒருவர், வழிதவறிப் போகும்படி நேரும்.

இதன் சம்பந்தமாக ஒரு சாதாரண உதாரணத்தை எடுத்துக் கொள்ளுவோம். சிறையில் பல்வேறு நல்ல தீர்மானங்களைச் செய்து கொள்ளும் பல சக ஊழியர்களை நான் பார்த்திருக்கிறேன். ஆனால், அவர்கள் சிறைக்கு வெளியில் வந்த உடனேயே, அத் தீர்மானங்களைப் புறக்கணித்துவிடுகிறார்கள்.

தங்களுக்கு மனத் தூய்மை ஏற்பட்டுவிட்டது என்றும், பிரார்த்தனையில் தங்கள் மனம் அலையாமல் லயித்துவிடுகிறது என்றும் அவர்கள் உறுதியாகக் கூறினர். தாங்கள் செய்துள்ள தீர்மானத்திலிருந்து ஒருபோதும் வழுவப் போவதில்லை என்றும் அவர்கள் திட்டவட்டமாகக் கூறினர். ஆனால் அவர்கள் சிறையிலிருந்து வெளியே வந்த உடனேயே, அவர்கள் செய்திருந்த தீர்மானம் தவிடு பொடியாகிவிட்டது. கீதையில் உள்ள அற்புதமான

ஒரு சுலோகம் ஒரு விதியைக் குறிப்பிடுகிறது. அந்த விதி, உலகம் முழுவதற்குமே பொருந்துமென பௌத்த சாத்திர நிபுணர்களும் கூறுகின்றனர். யாதொரு வேலையும் செய்யாமல் ஒரு விநாடி கூட எவரும் சும்மா இருக்க முடியாது என்பதே அந்த சுலோகமாகும்.* இந்த விதியை சுயநல மற்ற முறையில் நிறைவேற்றுவது மனிதனிடத்தில் உள்ள விசேஷமாகும். இதே அர்த்தத்தில் ஈச உபநிடதத்திலும் இரண்டு சுலோகங்கள் இருக்கின்றன. ஆனால், புத்த சங்கத்தைச் சேர்ந்தவர்கள் யாதொரு செயலுமின்றி சோம்பேறிகளாக இருந்துவருகிறார்கள். இலங்கை, பர்மா, திபேத் முதலிய நாடுகளில் உள்ள புத்த குருமார்களில் பெரும் பாலோரும் இன்று கூட விவேகமற்ற சோம்பேறிகளாக இருந்து வருகிறார்கள். இந்தியாவிலும் சந்நியாசிகளில் பெரும்பாலோரும் யாதொரு செயலிலும் ஈடுபடுவதில்லை. எனவே, இடைவிடாத செயலின் மூலம் தான் உண்மையான, நிரந்தரமான மனத் தூய்மையை அடைய முடியும் என்பது எனது அபிப்பிராயம். செயலில் செயலற்ற நிலையையும், செயலற்ற நிலையில் செயலையும் எவன் காண்கிறானோ அவன் தான் விவேகி, அவன் தான் எல்லா அலுவல்களையும் நிறைவுறச் செய்தவன், அவன் தான் யோகி† என்று கீதை கூறுகிறது. இதெல்லாம் எனது அனுபவங்களின் ஒரு பகுதியே யாகும். கீதையின் சுலோகம் எனது அனுபவத்திற்கு ஒத்ததாக இருப்பதாலேயே நான் இதைக் கூறுகிறேன். என் சொந்த அனுபவத்தில் நான் சோதனை செய்து பார்க்காமல், வேத நூல்களில் உள்ள எதையும் நான் எடுத்துக் காட்டுவதில்லை. மற்றவர்களின் அனுபவம் எனது அனுபவத்திலிருந்து வேறானதாக இருக்கலாம். அவர்களும் கீதையிலிருந்து ஒரு சுலோகத்தை தங்களுக்கு ஆதாரமாகக் காட்டலாம். எனவே, எனது அனுபவம்தான் சரி என்று ஒப்புக்கொள்ளும்படி நான் யாரையும் வற்புறுத்துவதில்லை.

---

* நஹி கச்சித் க்ஷணமபி ஜாது திஷ்டத்யகர்மக்ருத் |
கார்யதே ஹ்யவச: கர்ம ஸர்வ: ப்ரகிருதிஜைர்குணை: ||

—கீதை, 3-ஆம் அத்தியாயம், சுலோகம்-5

இதன் பொருள் : யாரும் ஒரு கணம் கூட ஏதாவது செயலாற்றாமல் இருப்பதில்லை. ஏனென்றால், இயற்கையினின்று உதித்த குணங்களால் ஒவ்வோர் உயிரும் தன்னை யறியாமலேயே செயலில் ஈடுபட்ட வண்ணம் இருக்கிறது.

† கர்மண்யகர்ம ய: பச்யேத் அகர்மணிச கர்ம ய: |
ஸ புத்திமான் மனுஷ்யேஷு ஸ யுக்த: க்ருத்ஸ்ன கர்மக்ருத் ||

கீதை, 4-ஆவது அத்தியாயம், சுலோகம்-18

இதன் கருத்து : பல்வேறு அலுவல்களுக்கிடையே எவனுடைய மனம் அமைதியாக இருக்கிறதோ (செயலில் செயலற்ற நிலை), வெளிப் பார்வைக்கு செயலற்ற நிலையில் இருக்கும் எவனது மனம் இடையறாது இறைவனை நாடிச் செல்லுகிறதோ (செயலற்ற நிலையில் செயல்), அவன் தான் மக்களுள் மேதாவி, அவனே யோகி, அவனே எல்லாவற்றையும் செய்து முடித்தவன்.

## 79

# 'நான்தான் கடவுள்'

பாவ் : 'நான்தான் கடவுள்' என்ற கருத்துள்ள சுலோகத்தை* தினந்தோறும் காலைப் பிரார்த்தனையின் போது நாம் கூறு கிறோம். நாள் முழுதும் இந்த ஸ்தூலமான உடல்தான் நாம் என்று எண்ணி நடந்து கொண்டுவரும்போது, நாள்தோறும் அந்த சுலோகத்தை நாம் கூறுவது போலி வேடம் அல்லவா ?

காந்திஜி : ஆமாம். எனக்குக் கூட சில காலம் வரையில் அந்த சுலோகம் பொருத்தமற்றதாகவே தோன்றியது. ஆனால், அதன் கருத்தை அதிகமாக ஆழ்ந்து யோசித்தபோது, விவேகத்துடன் அந்த சுலோகத்தைக் கூறுவதில் தவறு எதுவும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. மனிதன் வெறும் மண் அல்ல, மண்ணில் வாழும் ஒரு மகானே என்று நமது அறிவு நிச்சயமாகக் கூறுகிறது. இந்த சுலோகத்தில் அந்த மகானைப் பற்றியே விவரிக்கப்பட்டிருக்கிறது. சுலோ கத்தைப் பாராயணம் செய்வோர், 'நான்தான் பிரம்மம்' என்று உறுதி கூறுகிறார். அந்த நிலையை அடைய நாள் தோறும் விடாமல் முயற்சி செய்வோர் மாத்திரமே, இந்த உடலில் உள்ள தொடர்பை நழுவவிட விரும்புவோர் மாத் திரமே அவ்விதம் உறுதி கூறமுடியும். அச்சத்தினாலும், விருப்பு வெறுப்புகளாலும் சூழப்பட்ட போதெல்லாம், அவர்கள் பிரம்மத்தின் (கடவுளின்) மகோன்னதமான குணங்களை நினைவுபடுத்திக் கொள்கிறார்கள்; தகுதியற்ற அந்த உணர்ச்சிகளால் தாங்கள் ஆட்கொள்ளப்படாமல் இருக்க முயற்சிக்கிறார்கள். அவர்கள் இந்த வழியில் முன் னேறிச் சென்று, இறுதியில் தாங்கள் தியானித்து வரும் பரம்பொருளுடன் ஐக்கியமடைந்து ஒன்றாகிவிடுகிறார்கள். எனவே, நாம் ஒவ்வொரு நாளும் பனிவுடன், ஆனால் உறுதி யுடன் இந்த சுலோகத்தை நினைவுபடுத்திக் கொண்டு, அதன் படி நடக்க ஒவ்வொரு விநாடியும் முயற்சிப்போமாக.

---

* ப்ராத ஸ்மராமி ஹ்ருதி ஸம்ஸ்புர தாத்ம தத்வம்
ஸச்சித் ஸுகம் பரமஹம்ஸகதிம் துரீயம்
யத் ஸ்வப்ன ஜாகர ஸுஷுப்திம் அவைதி நித்யம்
தத் ப்ரம்ம நிஷ்களமஹம் ந ச பூதஸங்க:

இதன் கருத்து : பரமஹம்சர்களால் அடையக் கூடியதும், பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆகிய மூவரையும் காட்டிலும் நான்காவதும், ஸத்தாகவும், சித்தாகவும், ஆனந்த மாகவும் விளங்கும் ஆத்ம தத்துவத்தை காலையில் இதயத்தில் வழிபடுகிறேன். விழித் திருக்கும் நிலை, கனவு நிலை, தூங்கும் நிலை ஆகிய மூன்று நிலைகளுக்கும் சாட்சியான தும், அழிவில்லாததுமான களங்கமற்ற ப்ரும்மம் எதுவோ அதுதான் நான். நான் பூதக் கூட்டங்களைச் சேர்ந்தவன் அல்ல.

## 80

# பொறுமையின்மையும் நோயும்

உடலின் நோய்களுக்கான காரணங்களில் ஒன்று பொறுமையின்மையே. முதலில் மனம் பொறுமையை இழந்துவிடுகிறது. பின்னர் உடலும் அதைத் தொடர்ந்து செல்லுகிறது. எப்போதும் அவசரம் நஷ்டத்திற்கே காரணமாகிறது. உலகத்தில் தீ மூண்டால், நாம் அதை பொறுமையின்மையால் அணைத்துவிட முடியாது. உண்மையில் அதை நம்மால் அணைக்கவும் முடியாது. பெரிய தீ விபத்து ஏற்பட்டால், தீயை அணைப்பவர்கள் அதை அணைப்பதற்காகத் தண்ணீரை வீணுக்க மாட்டார்கள். முதலில் அவர்கள் அண்டையில் உள்ளவர்களைக் காப்பாற்றவே முயற்சிப்பார்கள். அண்டையில் இருப்பவர்களைக் காப்பாற்றுவதில் அவர்கள் வெற்றி பெறுவார்களாயின், அவர்கள்தான் (தீயணைப்போர்) கர்ம யோகிகள் ஆவர். நம்மில் ஒவ்வொருவரும் அவரவர் கடமையைச் செய்துவிட்டால், தீ முழுவதையுமே அணைத்ததற்கு ஒப்பாகும். சத்தியத்தை நாடும் முயற்சியில் நான் கண்டதெல்லாம் இதுதான்.

## 81

# மோட்சத்திற்கு வழி என்ன?

ஓர் அன்பர் கேட்ட கேள்விகளும் அவற்றிற்கு காந்திஜி அளித்த பதில்களும் கீழே கொடுக்கப்பட்டுள்ளன :

**கேள்வி :** கட்டுண்டு கிடப்பவர் யார்?

**பதில் :** தான் என்ற அகங்காரத்தில் நம்பிக்கையுடையவர்.

**கேள்வி :** மோட்சம் (முக்தி) என்ருல் என்ன?

**பதில் :** விருப்பு வெறுப்புகளிலிருந்து (ராக-துவேஷம்) விடுதலை அடைவதே.

**கேள்வி :** நரகம் என்ருல் என்ன?

**பதில் :** பொய் கூறுதல்.

**கேள்வி :** மோட்சத்திற்கு வழி என்ன?

**பதில் :** அகிம்சை.

# கடல் கடந்தும் வேற்றுமையா?

தென்னுப்பிரிக்காவில் உள்ள பிரிட்டிஷ் இந்தியர்கள் நாலா புறங்களிலும் கடுமையான கட்டுப்பாடுகளால் சூழப்பட்டிருக் கிருர்கள். போதாக் குறைக்கு, அவர்கள் மிகுந்த தப்பெண்ணத் திற்கும் இலக்காகியிருக்கிருர்கள். இந்தப் பத்திரிகையைக் கவ னத்துடன் படித்து வரும் வாசகர்கள், அவ்விதம் கூறுவதற்கு ஏராளமான ஆதாரங்கள் இருக்கின்றன என்பதை அறிந்து கொண்டிருக்கலாம். இந்தியர்களுக்கு விரோதமான இத்தகைய சந்தர்ப்பங்களிலிருந்து சில படிப்பினைகளை எடுத்துக் காட்ட வேண்டும் என்பதே இந்தக் கட்டுரையின் நோக்கமாகும். கஷ் டத்திலும் இன்பங்கள் இருக்கின்றன என்று கூறப்படுகிறது. கஷ்ட காலத்திலிருந்தே- புத்திசாலிகள் பல விஷயங்களைத் தெரிந்து கொள்ளுகிருர்கள். கஷ்டத்திலிருந்து நாம் ஏதாவது தெரிந்து கொண்டிருக்கிறேமா என்பதை இப்போது பார்ப் போம்.

இந்தியாவில் உள்ள பல்வேறு சமூகத்தினரிடையேயும் கடு மையான வேற்றுமைகள் இருந்து வருகின்றன. வட இந்தியா வில் உள்ள சில மாகாணங்களைச் சேர்ந்தவர்களை இங்கே 'கல்கத் தாக்காரர்கள்' எனறு குறிப்பிடுகிருர்கள். இங்கேயுள்ள தமிழர் கள், 'கல்கத்தாக்காரர்கள்', பஞ்சாபியர்கள், குஜராத்தியர்கள் முதலியோரிடையே வேற்றுமைகள் இருந்து வருகின்றன. முஸ் லிம்கள், ஹிந்துக்கள், பார்சிகள், மற்றவர்கள் முதலியோருக் கிடையே மத சம்பந்தமான வேற்றுமைகளும் இருந்து வருகின் றன. ஹிந்துக்களிடையே பிராம்மணர்கள், க்ஷத்திரியர்கள், வைசிரியர்கள் முதலிய மற்றவர்களும் இருக்கிருர்கள். இந்த வேற்றுமைகளையும் பிரிவுகளையும் ஏதோ விலையுயர்ந்த சரக்கு களைப்போல் நாம் தொலைவில் உள்ள இந்த நாட்டிற்குக் கொண்டு வருவோமாயின், அவை ஒவ்வொரு கட்டத்திலும் நமது முன்னேற்றத்திற்கு முட்டுக்கட்டைகளாகவே இருந்துவரும்.

தென்னுப்பிரிக்கா, பிரிட்டிஷ் இந்தியர்களுக்கு பூரி* மாநக ரைப் போல் இருக்கவேண்டும். இங்கே நாம் தமிழர்களோ, 'கல்கத்தாக்காரர்களோ', முஸ்லிம்களோ, ஹிந்துக்களோ, பிராம்மணர்களோ அல்லது வைசியர்களோ அல்ல; அவ்விதம் இருக்கவும் கூடாது. இங்கே நாம் யாவரும் யாதொரு வேற்று மையுமின்றி பிரிட்டிஷ் இந்தியர்களே. இங்கே இந்தியாவி லிருந்து வந்துள்ள எல்லாப் பிரிவினரின் நலன்களும் ஒரே வித

---

* பூரி, ஒரிஸ்ஸாவில் உள்ள நகரம். புகழ்பெற்ற ஜகன்னுதர் ஆலயம் அந்நகரில் தான் இருக்கிறது. அங்கே எல்லோரும் சமமாகவே கருதப்படுகிருர்கள்; சாதி வேற்று மைகள் அனுசரிக்கப்படுவதில்லை.

மானவை என்பதை யாரும் மறுக்க முடியாது. எனவே, நம்மிடையேயுள்ள மேற்கண்ட வேற்றுமைகளை ஒழித்து விடுவதே நமது கடமை என்பதில் கருத்து வேற்றுமைக்கு இடமில்லை. இது தான் நாம் கைக்கொள்ள வேண்டிய பூர்வாங்கமான, அத்தியாவசியமான முறையாகும். இந்தப் பாதையில் இந்தியர்கள் மிகவும் முன்னேற்றம் அடைந்திருக்கிறார்கள் என்பதை நாம் அறிவோம். இருந்தாலும், இவ்விஷயத்தில் நமது முயற்சிகளைத் தளரவிடாமல் எச்சரிக்கையுடன் இருக்க வேண்டியது அவசியமாகும்.

ஒவ்வோர் இந்தியரும் அவருக்கும் அவரது குடும்பத்திற்கும் போதிய உணவையும், உடையையும் சம்பாதித்துக் கொள்ளுவதுடன் திருப்தியடைந்துவிடக் கூடாது; பொது மக்களின் நல்வாழ்வுக்காகவும் நிறைய பண உதவி செய்யத் தயாராக இருக்க வேண்டும். இவ்விஷயத்திலும், தென்னாப்பிரிக்காவில் உள்ள இந்திய சமூகத்தினர் தங்களது கடமையை நிறைவேற்ற முற்றிலும் தவறிவிடவில்லை என்பதையும் நாம் அறிவோம். எனினும். அவர்கள் இன்னும் அதிக உதவி செய்திருக்கலாம் என்று கூற நாம் தயங்கவில்லை.

மிகவும் கஷ்டமான சந்தர்ப்பங்களில் ஒருவருக்கு அத்தியாவசியமான தேவையாக இருப்பது தைரியமும் பொறுமையுமே. சென்ற யுத்தத்தின் போது, தென்னாப்பிரிக்காவில் உள்ள ஆங்கிலேயர்களிடம் மேற்கண்ட இரண்டு குணங்களும் சிறந்து விளங்கியதைக் காணும் அரிய சந்தர்ப்பம் நமக்குக் கிடைத்தது. லேடிஸ்மித்† முற்றுகையும், அது மீட்கப்பட்டதும் ஆங்கிலேயர்களின் மகத்தான தைரியத்துக்கும், எல்லையற்ற பொறுமைக்கும் உதாரணமாக விளங்குகின்றன. அப்போது பல இடங்களிலும் பணி புரிந்த இந்தியர்கள் கண்ட காட்சிகள் அவர்களுக்கு நினைவில் இருக்கும். எத்தனையோ கஷ்ட நஷ்டங்களும் தோல்விகளும் ஏற்பட்டும்கூட ஆங்கிலேயர்கள் விட்டுக் கொடுக்கவில்லை. வெற்றி பெறுவது இயலாத காரியம் என்று ஜெனரல் புல்லர் கருத முற்பட்டபோதுகூட, ஒரே ஒரு சிப்பாய் பாக்கியிருக்கும் வரையிலும் விட்டுக் கொடுக்கக் கூடாது என்று அவருக்குக் கட்டளை வந்தது. அவ்விதம் உறுதியுடன் நின்றதால் அவர்களுக்கு ஏற்பட்ட மகத்தான பலனை நாம் அறிவோம்.

நம்முடைய போராட்டமோ அவ்வளவு கஷ்டமானதல்ல. எனினும், அது நமக்கு தைரியத்தையும் பொறுமையையும் கற்பிப்பதாக இருக்கிறது. அந்தப் பாடத்தைக் கற்றுக் கொள்ள வேண்டியது நமது கடமையாகும். லேடிஸ்மித் நகரில் அகப்பட்டுக் கொண்ட ஒரு சிலரைக் காப்பாற்றுவதற்காக பிரிட்டிஷார் எவ்வளவு அதிகமான தொகையும் செலவழிக்கத் தயாராக இருந்தார்கள்; எவ்வளவு அதிகமான ரத்தம் சிந்தவும், எவ்வளவு

† லேடிஸ்மித் தென்னாப்பிரிக்காவில் உள்ள ஒரு நகரம். அங்கு நிகழ்ந்த யுத்த சம்பந்தமான விவரங்கள் 'மகாத்மா காந்தி நூல்கள்', 1-ஆம் தொகுப்பில் வெளியாகியுள்ளன.

காலமாயினும் போரிடவும் தயங்கவில்லை. அவர்களைக் காப்பாற்றுவதில்தான் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் கௌரவமே அடங்கியிருக்கிறது என்றும் கருதினர்கள். நமது சுதந்திர உரிமைகளுக்காகப் போராடும் நாமும் அதுபோலவே நினைக்க வேண்டாமா? தாற்காலிகமான கஷ்டத்தைக் கடந்து செல்ல நமக்கு தைரியமும் பொறுமையும் வேண்டும் என்ற முடிவிற்கு வரவேண்டாமா? 'மனிதனின் தரத்தைக் காட்டும் உண்மையான உரைகல் கஷ்ட காலம் தான்' என்பதையும், புலம்பிக் கொண்டிருப்பதால் கஷ்டங்கள் தீர்ந்து விடாது என்பதையும் நாம் மறந்துவிடக் கூடாது.

லோகாயதமான வசதிகள் விஷயத்தில் நாம் தத்துவ ஞானிகளைப் போல் அலட்சியமாக இருப்பதாயும், வாழ்க்கையின் தின சரி வசதிகளை நாம் பொருட்படுத்துவதில்லை என்றும் கூறப்படுகிறது. இத்தகைய மன நிலை மிகவும் போற்றுதற்கு உரியதே. எனினும், தென்னப்பிரிக்காவில் உள்ள இந்தியர்களின் மனம் அத்தகைய நிலையில் இருப்பது சிறிதும் பொருந்தாத விஷயமாகும். அவ்விதம் இருப்பது ஸ்தூலமான லாபத்தை நாடாதவர்களுக்குப் பெருமையளிக்கக் கூடியதே. ஆனல், தனம் திரட்ட வேண்டுமென முயற்சிப்பவர்களுக்கு அத்தகைய மன நிலை சிறிதும் பொருந்தாது. தங்களுடைய செல்வ நிலையை அபிவிருத்தி செய்து கொள்ள வேண்டும் என்பதற்காகத்தான் பல இந்தியர்களும் தென்னப்பிரிக்காவுக்குக் குடியேறி வந்திருக்கிறார்கள். வேறு எந்த ஆசையுடனும் அவர்கள் இங்கே வரவில்லை. அவர்கள் தங்களுடைய வருமானத்திற்குத் தகுந்தவாறு செலவழிக்கத் தயாராக இருப்பதுதான், அவர்களுடைய வேதாந்த மன நிலைக்கும் உகந்ததாக இருக்கும். அப்போதுதான், ஒரு செலவும் இல்லாமலேயே இந்தியர்கள் வருடம் முழுவதும் காலம் கடத்தி விடுவார்கள் என்ற குற்றச் சாட்டிற்கும் இடமிராமற் போகும்.

ஒரு சமூகம் என்ற முறையில், இந்தியர்கள் இன்ப வாழ்வில் லயித்துவிட வேண்டும் என்ற எண்ணம் நமக்கு சிறிதளவும் இல்லை. நமது பற்றற்ற மன நிலையை விட்டுவிட வேண்டும் என்பதில்லை. ரோமில் ரோமியர்கள் எப்படி வாழ்கிறார்களோ அது போலவே, அந்தந்த இடத்தில் உள்ளவர்களைப் பின்பற்றி நாமும் வாழ வேண்டும் என்ற உண்மையை வற்புறுத்தவே நாம் விரும்புகிறோம். அவர்களைப் போன்ற வசதிகள் நமக்குக் இருக்குமாயின், மிகவும் நல்லதே; அத்தகைய வசதிகள் நமக்கு இராவிடில் அதுவும் நல்லதுதான்.

மற்றவர்களால் மிகவும் மோசமான முறையில் நடத்தப்பட்டு வரும் ஒரு சமூகத்திற்கு அத்தியாவசியமான தேவை என்னவெனில், அன்பும் தாராள மனமும்தான். மனிதர், சந்தர்ப்பங்களால் ஆட்டி வைக்கப்படுபவர்கள் என்பதை யாவரும் அறிவர். அவர்கள் தாங்கள் அறியாமலேயே அநீதியான செயல்களில் ஈடு

பட்டுவிடுவார்கள். சந்தர்ப்பங்களாலும் சூழ்நிலையினாலும் அவர்கள் கட்டுண்டு கிடப்பதே அதற்குக் காரணமாகும். எனவே, அத்தகையோரைப் பற்றி முடிவு செய்வதில் நாம் தாராள மனப்போக்குடன் இருக்க வேண்டியது அவசியம் அல்லவா?

இந்தியர்களின் இனத்தைச் சேர்ந்த நாம் சமயப் பற்று உடையவர்கள்; எதிர்க்காமல் விட்டுக் கொடுக்க வேண்டும் என்ற சித்தாந்தத்தை அனுசரிப்பவர்கள்; தீமை செய்தவர்களுக்குப் பிரதியாக நன்மை செய்ய வேண்டும் என்பதில் ஈடுபாடு உடையவர்கள். ஒருவரைப் பற்றிய நமது எண்ணமானது, அவரது செயலுக்குக் காரணமாக இருக்கிறது என்ற உண்மையில் நாம் உறுதியான நம்பிக்கை கொண்டிருக்கிறோம். இதற்கு தினசரி வாழ்க்கையில் எத்தனையோ உதாரணங்களைக் காண்கிறோம். ஒரு மனிதன் செய்த பெரும் குற்றமானது அவனது முகத் தோற்றத்தையே அடியோடு மாற்றி விடுகிறது. அதன் காரணமாக, அவன் செய்த குற்றம் அவனது முகத்தில் முத்திரை வைத்திருப்பது போல் தோன்றுகிறது. அது போலவே மகத்தான ஒரு நல்ல காரியத்தைச் செய்தவரின் முகத் தோற்றம், குற்றம் செய்தவரின் முகத் தோற்றத்திற்கு நேர்மாறாக இருக்கிறது. அதன் பலனாக, நல்ல செயலைப் புரிந்தவர் மக்களின் மனத்தைக் கவர்ந்து விடுகிறார்: குற்றம் செய்தவரோ மக்களின் வெறுப்புக்கு ஆளாகிறார். எனவே, நம்மிடம் யார் அநீதியாக நடந்து கொள்ளுகிறார்கள் என நாம் கருதுகிறோமோ அவர்கள் விஷயத்தில், நாம் எத்தகைய தீய எண்ணமும் கொள்ளாமல் இருக்க வேண்டியது நமது மூலாதாரமான கடமையாகும். நமக்கு நன்மை செய்தவர்களுக்கு நாம் திருப்பி நன்மை செய்வதில் புண்ணியம் எதுவும் இல்லை. குற்றம் செய்யும் கொடியவர்கள் கூட அவ்விதம் நடந்து கொள்ளுகிறார்கள். ஆனால், பகைவருக்கு நன்மை செய்வதில்தான் சிறப்பு அடங்கியிருக்கிறது. இந்த சாதாரண விஷயத்தை மனத்திற் கொண்டு நாம் செயல் புரிவோமாயின், நாம் கற்பனை செய்வதைக் காட்டிலும் அதிக விரைவில் நாம் வெற்றி பெறுவோம். நமது தேச மக்கள் இவ்விஷயத்தை நன்கு ஆலோசனை செய்து பார்க்க வேண்டும். இவ்விஷயத்தில் நாம் எப்போதும் விழிப்புடன் இருந்து வரவேண்டும். இல்லாவிடில் சூறாவளியில் அகப்பட்டுக் கொண்டிருக்கும் நம்மை, திடீரென்று ஓர் அலை பொங்கி எழுந்து மூழ்கும்படி செய்துவிடும். அப்போது காலம் கடந்து விடுமாதலால், நாம் விரும்பும் நடவடிக்கை எதையும் எடுத்துக்கொள்ள முடியாது.

—'இந்தியன் ஒப்பீனியன்' – 20—8—1903

# பொருட் குறிப்பு அகர வரிசை

( எண் - பக்கத்தைக் குறிக்கும் )

எ



ஏ



ஔ



க



கா

கி

கோ



ச



சா



சி



சீ



சு



சூ



செ



சே



சை

ஞா



ட



டா



டெ



டே



டை



த



தா



தி



து



தெ

## தே



## தை



## த்



## ந



## நா



## நி



## நீ



## நே



## ப



## பா

பி



பீ



பு



பூ



பே

ரு



ரூ



ரெ



ரௌ



ல



லா



லை



லோ



வ



வா

**ஹூ**



**ஹெ**



**ஹே**



**ஹோ**





